ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்.

## துரோணபர்வம்.

திரிசிரபுரம்

செயின்ட் ஜோஸப் காலேஜ் ஸம்ஸ்கிருத தலைமைப்பண்டிதர்,

மஹாவித்வான், ஸாரஸ்வதஸாராஜ்ஞர், கவிசிகாமணி,

**ஸ்ரீ - உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசார்யர்**

அவர்களால்

மொழிபெயர்க்கப்பெற்று,

திருப்பனந்தாள் மடாதிகர்த்தர்களாக இருக்கும்

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சோமசுந்தரத்தம்பிரான்

அவர்களுடைய பொருளுதவியைக்கொண்டு

கும்பகோணம் காலேஜ் ரிடையர்ட் தமிழ்ப்பண்டிதர்

[illegible] வீரவல்லி

**இராமாநுஜாசாரியரால்**

சென்னை

கணேச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

---

விலை ரூபா [illegible] தபால்கூலி வேறு.

---

1922

ஸ்ரீ

# முகவுரை.

ஸ்ரீமஹாபாரதம், துரோணபர்வம், வெளிவரத் தொடங்கி இரண்டு வருஷத்திற்கு மேலாகியும் பலகாரணங்களால் இதுவரை பூர்த்தியாகாமலிருந்தது, ஸ்ரீ கண்ணபிரானுடைய திருவருளால் இப்பொழுதாவது பூர்த்தியானதில் அன்பர்களுக்கெல்லாம் பெருமகிழ்ச்சி உண்டாகுமென்பதில் ஸந்தேகமில்லை.

பலவகையான தர்மங்களும் நீதிகளும் சரித்திரங்களும் பிறவும் இந்த இதிஹாஸத்தில் கூறப்பெற்றிருப்பினும் மிகுதியாகக் கூறப்படுவது யுத்தச்சிறப்பேயாகும். இக்காரணம்பற்றியே ஸ்ரீமஹாபாரதத்தைப் 'பெரும்போர்' என்று பொருள்படும் 'Great war' என்னும் பெயரால் ஆங்கிலபாஷையில் வழங்குவர். இந்நூலில், வேறு சிலபர்வங்களிலும் இடையிடையே யுத்தநிகழ்ச்சி கூறப்படுவதன்றி, ஐந்துபர்வங்கள் யுத்தத்தைப்பற்றி மட்டுமே கூறுவன. பதினெட்டுநாட்போரில் இடைப்பட்ட ஐந்துநாட்களில் நிகழ்ந்த கடும்போரைப்பற்றிக் கூறுவது இந்தத் துரோணபர்வம்.

பாரதவீரர்கள் வில்வித்தையில் சிறந்து விளங்கியதற்குக் காரணமான துரோணாசார்யர் படைத்தலைமைபூண்டு நடத்தியதும், அபிமன்யு பகதத்தன் கடோத்கசன் முதலானவர்களுடைய பெரும்போரும் ஸம்சப்தகயுத்தமும் ஜயத்ரதவதமும் ராத்ரியுத்தமுமாகிய அருமையான பலவிஷயங்களை விவரித்துக்கூறுவதுமான இந்தப்பர்வத்தில் அடங்கியகதைகள் படிப்பவர் மனத்தைக் கவராமலிரா. 'ஸௌதபாரதம்' என்று சொல்லப்படுகிற பர்வஸங்க்ரஹ அத்யாயத்தில், 'இதில் துரோணாபிஷேகபர்வமும், ஸம்சப்தகவதபர்வமும், அபிமன்யுவதபர்வமும், கடோத்கசவதபர்வமும், மயிர்க்கூச்சமெடுக்கத்தக்கதாகிய துரோணவதபர்வமும், நாராயணாஸ்திர மோக்ஷபர்வமும் உள்ளன' என்றும், 'அதன்பின் அநேகவிஷயங்கள் அடங்கினதும் விசித்திரமுமாகிய துரோணபர்வம் சொல்லப்படுகின்றது. அதில், பீஷ்மருக்குப் பின் பராக்கிரமசாலியாகிய துரோணாசாரியர் ஸேனாதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டதும், சிறந்த அஸ்திரங்களை அறிந்தவரான

அவர் துரியோதனனை உத்ஸாஹப்படுத்தும்பொருட்டுப் புத்திமானாகிய தர்மராஜரைப் பிடிப்பதாக வாக்குத்தத்தம் செய்ததும், ஸம்சப்தகர்கள் அர்ஜுனனை யுத்தகளத்தினின்றும் தூரத்திற்கொண்டுபோனதும், யுத்தத்தில் இந்திரனுக்குச் சமானமாகிய பகதத்தமகாராஜன் ஸுப்ரதீகமென்னும் யானையோடுகூட அர்ஜுனனாற் கொல்லப்பட்டதும், யௌவனத்தை அடையாத பாலனும் சூரனுமாகிய அபிமன்யு ஒருவனை ஜயத்ரதன்முதலிய மகாரதர்கள் அநேகர்கள் சேர்ந்து கொன்றதும், அபிமன்யுவதத்தினாற் கோபங்கொண்ட அர்ஜுனன் யுத்தத்தில் ஏழ் அக்ஷௌஹிணிகளைக்கொன்று ஜயத்ரதராஜனையுங் கொன்றதும், சிறந்த கைகளுள்ள பீமனும் பெருந்தோளியாகிய ஸாத்யகியும் தர்மராஜரின் ஆஜ்ஞையினால் அர்ஜுனனைத் தேடுவதற்காகத் தேவர்களாலும் கலக்கமுடியாத கௌரவசேனையில் ப்ரவேசித்ததும், ஸம்சப்தகர்களில் மிஞ்சியவர்களையும் யுத்தத்தில் மிச்சமில்லாமற் செய்ததும் சொல்லப்பட்டன. அர்ஜுனன் சேனையைவிட்டு வெளியேபோய் மகாத்மாக்களும் வீரர்களுமாகிய ஒன்பதுகோடி ஸம்சப்தகர்களை யமன்வீட்டுக்கு அனுப்பினதும், கற்களினாற் சண்டைசெய்கிற திருதராஷ்டிரபுத்திரர்களும், யுத்தத்தில் விசித்திரமாகச் சண்டைசெய்யும் நாராயணர்களென்று சொல்லப்பட்ட கோபாலர்களும், அலம்புஸனும், ச்ருதாயுவும், வீரனாகிய ஜலஸந்தனும், ஸௌமதத்தியும், விராடனும், மகாரதனாகிய துருபதனும், கடோத்கசன்முதலான மற்றவர்களும் கொல்லப்பட்டார்களென்பதும் துரோணபர்வத்தில் சொல்லப்பட்டன; துரோணர் யுத்தத்திற் கொல்லப்பட்டபோது, அச்வத்தாமாவும் கோபங்கொண்டவராகி உக்கிரமான நாராயணாஸ்த்ரத்தைப் பிரயோகித்ததும், ஆக்நேயமென்பதாகிய உத்தமமான ருத்திர மாகாத்மியம் சொன்னதும், வியாஸருடைய வரவும், கிருஷ்ணார்ஜுனர்களின் மகிமையும் சொல்லப்பட்டன; இது மஹாபாரதத்தில் சிறந்ததாகிய ஏழாவதுபருவமென்று சொல்லப்படுகிறது' என்றும் ஸூத புராணிகரே பாராட்டிக் கூறியிருத்தலால், இந்தப் பர்வத்தின்பெருமை நன்குவிளங்கும்.

கடும்போர் நிகழும்போது, முட்டுப்பாடான சமயங்களில் இரு திறத்து வீரர்களும் மந்திராலோசனைசெய்வதும் சமயங்களுக்கேற்றபடி கார்யங்களை நிச்சயித்து நடத்துவதும் அவரவர்களுடைய வீரவாதங்களும் வீரச்செயல்களும் ஸல்லாபங்களும் ஒருவரையொருவர் புகழ்தலும் இகழ்தலும் நேரில் அனுபவிப்பதுபோல மனத்தில் பதியும்படி மிகவும் அழகாகக் கூறப்பெற்றுள்ளன.

ஸ்ரீகண்ணபிரான் பாண்டவர்களுக்காகத் தூதுசென்றானென்றும் பிரதிஜ்ஞைதவறிச் சக்கரத்தை ப்ரயோகித்தானென்றும் சிறப்பித்துக் கூறுவர். அவை முறையே அவனுடைய அரசுரிமைக்கும் நிரங்குச ஸ்வாதந்திரியமுடைமைக்கும் பொருத்தமானவை. ஆனால், பதினான்காவது நாட்போரில், ஸூர்யாஸ்தமனத்திற்குள் ஜயத்ரதனைக் கொல்ல வேண்டும்; சூரியன் மேற்கேசாய்ந்துவிட்டான்; அர்ஜுனனுடைய குதிரைகள் களைப்படைந்து நடக்கச் சக்தியற்றவைகளாயின. அப்போது அர்ஜுனனாலுண்டாக்கப்பட்ட தடாகத்தில் குதிரைகளுக்குத் தண்ணீர்காட்டிக் களைப்பாற்றித் தேய்த்துப் புண்களுக்குச் சிகித்ஸைசெய்து அவைகளை மணலில் புரளவிட்டுத் தேரிற்பூட்டி அர்ஜுனனைத் தேரிலேற்றிக்கொண்டு அதிவேகமாகத் தேரைச் செலுத்தினானென்பதே அவனுடைய அடியார்க்கெளியனாந்தன்மையை நன்குவெளியிடுவது. அவனுடைய ஆச்ரிதபக்ஷமுதலிய பலகல்யாணகுணங்கள் வெளியாவது இந்தப்பர்வத்திலேதான். கொள்கைவேறுபாடுபற்றிப் பகைமை கூடாதென்பதை விளக்கும் ஸ்ரீக்ருஷ்ணார்ஜுனர்கள் கைலாஸம்சென்று மீண்டதும், வியாஸர் அச்வத்தாமாவுக்கும் அர்ஜுனனுக்கும் சந்தேகம் தெளிவித்ததுமாகிய சில ரகசியங்கள் வெளியாவதும் இந்தப்பர்வத்திலேதான். இந்தப்பர்வத்தின் சிறப்பியல்புகளையெல்லாம் தனித்தனி எழுதப்புகின் மிகவிரியுமாதலால் இம்மட்டோடே நிறுத்துகிறேன்.

இந்தப் பர்வத்தையும் மற்றமுந்தபர்வங்களையும் மொழிபெயர்த்து உதவிய கவிசிகாமணி, ஸாரஸ்வதஸார்வஜ்ஞர், ஸ்ரீமான். T. V. ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமியினுடைய தகுதியையும் பேருபகாரத்தையும் பற்றிப் பீஷ்மபர்வத்தின் முகவுரையில் விவரமாகத் தெரிவித்துள்ளேன். பலநாள் மிகவும் சிரமப்பட்டு வேலைசெய்ததின் பயனாக இந்தப் பர்வம் பூர்த்தியாகி வெளிவந்ததைப் பார்க்கும்பொழுது, 'வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும், கவானுள் மகற்கண்டு தாய்மறந் தாங்கு' தமது சிரமங்களையெல்லாம் மறந்து அவர்கள் பரமஸந்தோஷத்தை அடைவார்கள்.

ஸ்ரீமஹாபாரதத்திற்குச் சரியான தமிழ்மொழிபெயர்ப்பு இதுவரை யில்லாமையால் இது வெளிவந்தபோது, இதனை விரும்பிப்படிக்கத் தொடங்கியவர்களுள் மிகவும் முக்கியமானவர்கள் திருப்பனந்தாள் ஆதீனத்தலைவர்களாயிருந்த மஹாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ காசிவாஸி, சோமசுந்தரத்தம்பிரானவர்கள். சில ஸஞ்சிகைகளைத் தொடர்ச்சியாகப் படிக்கத்தொடங்கினவுடன், அவர்களுக்கு இதில் மிக்க சுவை

உண்டாயிற்று ரயிலில் யாத்திரைசெய்யும்பொழுதும் பல்லக்கில் சவாரிசெய்யும்பொழுதும் மற்றநேரங்களிலும், அவர்கள் இந்த மஹா பாரதத்தையே படித்துக்கொண்டிருப்பார்கள். யாரிடத்தும் இதன் பெருமையையே பாராட்டிக் கூறிக்கொண்டிருப்பார்கள். ஸஞ்சிகைகள் விரைவில் வெளிவரவேண்டுமென்று நேரிலும் கடிதமூலமாகவும் என்னை அடிக்கடி தூண்டுவார்கள். வெயில் மிக்க கோடைக்காலத்தில் நீலகிரியில் வஸித்தால் வேலை மிகவிரைவாக நடக்குமென்று வற்புறுத்திக்கூறி நானும் எனக்கு உதவியாக வேலைசெய்பவர்களும் சில வருஷங்களில் அங்கேபோய் வஸிக்கும்படி வேண்டிய ஸௌகர்யங்கள் செய்வித்தார்கள். மஹாபாரதம் பூர்த்தியானால் வடமொழியிலுள்ள பதினெண்புராணங்களையும் இந்தமாதிரியே தமிழில் வசனமாக மொழிபெயர்த்து வெளியிடத்தக்க ஏற்பாடு செய்வதாக அவர்கள் சிலபெரியோர்களிடத்துப் பலமுறை வெளியிட்டதுண்டு. இந்தப்பர்வம் வெளிவருகையில் அவர்கள் படித்து ஆனந்திப்பதற்கில்லையே யென்னும் வருத்தம் எனக்கு மிகுதியாயிருக்கிறது. அவர்களுக்குப்பின் அந்த ஸ்தானத்திற்குவந்த மஹாகனம் பொருந்திய ஸ்ரீலஸ்ரீ காசிவாஸி, சொக்கலிங்கத்தம்பிரானவர்கள் தமக்கு முன்னிருந்தவர்கள் இந்த மஹாபாரதத்தில் அதிக அபிமானம் வைத்திருந்ததை நேரில் பார்த்தவர்களாதலால் அவர்களைப்போலவே இதனை ஆதரித்துவந்தார்கள். இவர்கள் ஆதரித்தவிவரத்தைப் பின்னர்க் கர்ணபர்வத்தின் முகவுரையில் கூறுவேன்

அவர்களுக்குப்பின், இப்பொழுது மடத்து ஆதீனத் தலைவர்களாயிருப்பவர்களும், வடமொழி தென்மொழிகளில் சிறந்த பாண்டித்தியமுடையவர்களும் இளமைமுதலாக என்னிடத்து மிக்க அன்புடையவர்களுமான மஹாகனம்பொருந்திய ஸ்ரீலஸ்ரீ காசிவாஸி சொக்கலிங்கத்தம்பிரானவர்களும், அவர்களால் மடத்து ஆதீனத்திற்கு இளவரசாக நியமிக்கப் பெற்றிருப்பவர்களும் திருப்பணிவினையில் தலைநின்று செய்து ஆலயகாரியங்களை நிர்வகித்து நடத்துபவர்களும் திருவிடைமருதூர்ப்புராணம் கோடீச்சுரக்கோவை தஞ்சைப்பெருவுடையாருலா முதலிய பல அரிய நூல்களையும் சிறந்த பல தனிப்பாடல்களையும் இயற்றியும் திருவாசகத்தை முதல்முதலில் அச்சிட்டு வெளியிட்டும் சென்னை ப்ரஸிடென்ஸி காலேஜிலும் தஞ்சை ஸம்ஸ்தானத்திலும் தமிழ்ப்பண்டிதராயிருந்தும் புகழ்பெற்றுவிளங்கிய ஸ்ரீமத்கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரவர்கள்மரபில் தோன்றியவர்களுமான மஹாகனம் பொருந்திய ஸ்ரீலஸ்ரீ காசிவாஸி சாமிநாதத்தம்பிரானவர்களும்,

தங்கள் ஆதீனத்தில் பரம்பரையாகவருகிற வழக்கப்படி மஹாபாரத விஷயத்தில் மிக்க அபிமானத்தைச்செலுத்தி ஆதரித்துவருகிறார்கள். இதுவரையில் வெளிவராத அரிய பெரிய பலவிஷயங்கள் தமிழில் வெளிவருதற்குக் காரணமான இந்தத் தமிழ்மஹாபாரதம் பூர்த்தியாவதற்கு வேண்டிய ஸௌகர்யங்களைச்செய்து ஆதரித்துவருகிற திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர்களுக்குத் தமிழ் உலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது. தக்க ஸமயங்களில் இந்த ஆதீனத்தின் உதவி கிடைத்திராவிட்டால் இந்த மஹாபாரதகைங்கர்யத்தை இந்தமட்டிலாவது நான் நடத்திவந்திருக்க மாட்டேன்.

இந்த நற்காரியம், தக்க உதவியில்லாமையால், நான் எண்ணியபடி விரைவில் நடைபெறாமலிருப்பதைப்பற்றி ஸஞ்சிகைகளிலும் ஸமாசாரபத்திரிகைகளிலும் பலமுறை தெரிவித்துக் கொண்டிருக்கிறேன். மிக்க செல்வர்களும் ஸ்ரீ மஹாபாரதஸஞ்சிகைகளைப் பலவருஷங்களாக விரும்பிவாங்கிக்கொண்டுவருபவர்களுமான பலதனவான்கள் விசேஷ உதவிகளைச்செய்து ஆதரியாவிட்டாலும் வாங்கிக்கொண்ட புஸ்தகங்களின் விலையையாவது கொடாமலிருப்பதை நினைக்கும்போது எனக்கு மனவூக்கம் மிகக்குறைகின்றது. இதனைப்பார்த்த பிறகாவது, மேற்கூறிய தனவான்கள் தங்கள் கடமையைச் செலுத்துவார்களானால் புதியஸஞ்சிகைகள் வெளிவருதற்குப் பேருதவியாகும். அவர்கள் செய்யும் உதவியை நான் என்றும் மறவேன்.

மற்றப்பர்வங்களையும் விரைவில் வெளிப்படுத்த விரும்பி நான் சிலகாலமாகச் சோம்பலில்லாது உழைக்கிறேன். என்னுடைய விருப்பத்தை நிறைவேற்றியருளுமாறு எல்லாம்வல்ல ஸர்வேஸ்வரனுடைய திருவடித்தாமரைகளை எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன்.

மயிலாப்பூர், சென்னை.
15—1—1922

இங்ஙனம்;
ம. வீ. இராமானுஜாசாரியன்

## இப்பொழுது ஸித்தமாயிருப்பவை.

| | | | |
|---|---|---|---|
| ஆதிபர்வம் | (காலிகோ பவுண்ட்) | 6 | 0 |
| ஸபாபர்வம். | ,, | 2 | 0 |
| விராடபர்வம். | ,, | 2 | 8 |
| பீஷ்மபர்வம். | ,, | 4 | 0 |
| துரோணபர்வம் | ,, | 5 | 0 |
| சாந்திபர்வம்:— | ,, | | |
| (முதற்பாகம்) | ,, | 4 | 0 |
| ஷை (இரண்டாம்பாகம்) | ,, | 4 | 8 |
| அநுசாஸனபர்வம். | ,, | 6 | 0 |

இதுவரையில் வெளிவந்துள்ள 27 ஸஞ்சிகைகளும் தனித்தனியே கிடைக்கும். ஒவ்வொன்றின் விலை ரூபா. .. . 1 0

### ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாமம்

(ஸம்ஸ்கிருதமூலமும், தமிழ் உரையும்) அணா 12

ஒவ்வொன்றிற்கு தபாற்கூலி வேறு.

ம. வீ. இராமாநுஜாசாரியன்
பதிப்பாசிரியர்

மயிலாப்பூர் 1—2—1922
கும்ப. மஹாபாரதம்.
4-வடக்குமாட செல்வவிநாயககோயில் தெரு,
மயிலாப்பூர் - சென்னை.

ஸ்ரீ:

# ஸ்ரீ மஹாபாரதம்

# துரோணபர்வம்.

## விஷயஸூசிகை.

---

### துரோணாபிஷேகபர்வம்.

அத்யாயம். பக்கம்.



## அபிமன்யுவத பர்வம்

# விஷயஸூசிகை.

| அத்யாயம். | | பக்கம். |
|---|---|---|

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

அத்யாயம். பக்கம்.

## துரோணவதபர்வம்.

அத்யாயம். பக்கம்.



## நாராயணாஸ்த்ர மோக்ஷபர்வம்.

# திருத்தம்

---

146-வது பக்கம் முதலாவது வரி, 'கொன்றான்' என்பதை 'அடித்தான்' என்றும், 161-வது பக்கம் 28-29 வது வரிகளில், 'விந்தாநுவிந்தர்களையும் உம்முடைய குமாரனை ஸுவர்மாவையும்' என்பதை 'உம்முடைய குமாரர்களான விந்தனையும் அநுவிந்தனையும் ஸுவர்மாவையும்' என்றும், 678-வது பக்கம் 23-வது வரியில், 'கூறினேன்' என்பதை 'கூறினை' என்றும் மாற்றிக் கொள்க.

50-வது அத்யாயமுடிவில், 'பதின்மூன்றாவதுநாள் யுத்தம் முடிந்தது' என்பதையும், 153-வது அத்யாயமுடிவில், 'பதினான்காவது நாள் பகல்யுத்தம் முடிந்தது' என்பதையும் சேர்த்துக்கொள்க.



ஸ்ரீ:

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஸ்ரீ க்ருஷ்ணத்வைபாயனாய நம:.

# ஸ்ரீ மஹாபாரதம்.

## த்ரோணபர்வம்.

---

### முதலாவது அத்யாயம்.

### த்ரோணாபிஷேகபர்வம்.

[1] நாராயணம் நமஸ்க்ருத்ய நரஞ்சைவ நரோத்தமம் |
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் |

(பீஷ்மர் விழுந்தபின், துர்யோதனாதியர்கள் செய்ததென்னவென்று
திருதராஷ்டிரன் விசாரிக்க, ஸஞ்சயன் அந்தவீரனைக்
காப்பதற்காகக் கர்ணன் வந்ததைக் கூறியது,
திருதராஷ்டிரன் கர்ணனுடைய விருத்தாந்தத்தை
விசாரித்தல்.)

ஜநமேஜயர், "ப்ரம்மர்ஷியே! ஸ்ரீமானும், பீஷ்மர் த்ரோணர் முதலானரதிகர்களால் மஹாவில்லாளிகளான பாண்டவர்களைத்தோல்வியடையச்செய்து ராஜ்யத்தையடைய விரும்புகிற துர்யோதனனைப் புத்ரனாகவுடையவனும், வீர்யமுடையவனுமான அந்தத் திருதராஷ்டிரமஹாராஜன், கோபமுடையவராயும், மனோபலம், தேகபலம், வீர்யம், பகைவர்களை அவமதிக்குந்திறமை இவைகளையுமுடையவரும் தன் பிதாவுமான அந்தப்பீஷ்மர் பாஞ்சாலராஜகுமாரனான சிகண்டியினால் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு, துயரத்தினால் கண்கள் கலங்கி, அவர்கொல்லப்பட்டபிறகு என்னசெய்தான்? மஹாமுனே! தபோதனரே! எல்லாவில்லாளிகளுள்ளும் ப்ரஸித்திபெற்றவரான அந்தப்பீஷ்மர்கொல்லப்பட்டவுடன் துர்யோதனன் என்னசெய்தான்? அவற்றை எனக்குச் சொல்வீராக" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"குருவம்சத்தில்தோன்றிய திருதராஷ்டிரமஹாராஜன் பிதா கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு மனக்கவலையையும் சோகத்தையும் அடைந்து ஆறுதலடையாதவனானான். அந்தத்துக்கத்துக்குக் காரணத்தை அந்த அரசன் இடைவிடாமல் சிந்தித்துக்கொண்டே

[1] இதன் உரைவிசேஷங்களை ஆதிபர்வம் முதற்பக்கத்திற்காண்க.

யிருக்கையில் பரிசுத்தமான மனமுள்ளவனும் கவல்கணனுடைய குமாரனான ஸஞ்சயன் அப்பொழுது மறுபடியும் வந்தான். மஹாராஜரே! இரண்டுஸேனைகளிலுமுள்ள எல்லாவீரர்களுடைய சிறந்தவரலாறு முழுமையையும் வியாஸருடைய அருளால் நன்றாகவுணர்ந்து அப்பொழுது கௌரவபாண்டவர்களுடைய ஸேனைகள் தங்கியிருக்குமிடமான குருக்ஷேத்திரத்தினின்று இரவில் ஹஸ்தினாபட்டணத்திற்கு வந்த ஸஞ்சயனை நோக்கி அம்பிகாகுமாரனான திருதராஷ்டிரன் வினவினன். பீஷ்மருடைய மரணத்தைக் கேட்டு மிக்க மனவருத்தத்தையடைந்த அரசன் புத்திரர்களுடைய ஜயத்தைக் குறித்து வியாதியினால் வருந்துகிறவன்போல் பின்வருமாறு புலம்பலானான்.

“ஸஞ்சய! பயங்கரமான பராக்ரமத்தையுடையவரும் மஹாத்மாவுமான பீஷ்மரைப் பற்றி விதித்துக்கொண்டு காலனால் தூண்டப்பட்டவர்களான கௌரவர்கள் என்ன செய்தார்கள்? எவ்விதத்தினாலும் ஜயிக்கமுடியாதவரும் மஹானுபாவருமான அந்தச்சூரர் கொல்லப்பட்டபிறகு, துயரக்கடலில் மூழ்கின கௌரவர்கள் யாதுசெய்தனர்? ஸஞ்சய! அதிகமான யுத்தமுயற்சியுள்ளதும் பெரியதும் மஹாத்மாக்களான பாண்டவர்களுடையதுமான அந்தப் பெருஞ்ஸேனையானது மூவுலகங்களுக்கும் உக்கிரமான பயத்தை யுண்டுபண்ணும்படி நேர்ந்திருக்கும் ஸமயத்தில் யுத்தத்தில் வீரர்கள் பின்வாங்காமல் பயத்தையடையாமலிருக்கக்கூடிய மஹாரதனான மனிதன் துர்யோதனனுடைய படையில் எவன் இருந்தான்? ஸஞ்சய! கௌரவசிரேஷ்டரான தேவவிரதர் கொல்லப்பட்டவுடன் அரசர்கள் என்னசெய்தார்கள்? அதனை எனக்குச் சொல்லவேண்டும்” என்றுவினவ, ஸஞ்சயன் கூறலானான்.

“ராஜரே! யுத்தகளத்தில் தேவவிரதர் மரணமாக்கப்பட்டபிறகு உம்முடைய புத்திரர்கள் அப்பொழுது இன்னதுசெய்தார்களென்பதை யான் சொல்லுகிறேன். ஒருமனத்துடன் கேளும். ராஜரே! ஸத்தியமான பராக்ரமமுள்ள பீஷ்மர் கொல்லப்பட்டபிறகு, உம்மைச்சேர்ந்தவர்களும் பாண்டவர்களைச்சேர்ந்தவர்களும் (சிலர் தோற்றோமென்றும் மற்றவர்கள் வென்றோமென்றும்) தனித்தனியாகச் சிந்தித்தார்கள். புருஷசிரேஷ்டரே! அந்தக்ஷத்திரியர்கள் க்ஷத்திரியதர்மத்தைப்பார்த்து ஆச்சர்யத்தையும் ஸந்தோஷத்தையும் அடைந்து ஸ்வதர்மத்தைநிந்தித்துக்கொண்டு மஹாத்மாவான பீஷ்மரை நமஸ்கரித்து அளவிடமுடியாத பெருங்காரியத்தைச்செய்தவராகிய அவருக்குப் பதிந்தகணுக்களுள்ள அம்புகளால் தலையணையையும் சயனத்தையும் அமைத்தார்கள். அவருக்கு ரக்ஷணத்தை ஏற்படுத்தி ஒருவரோடொருவர்பேசிக்கொண்டு

அவரிடம்விடைபெற்று அவரைப் பிரதக்ஷிணமும்செய்து அவர்கள் காலனால்தூண்டப்பட்டவர்களாகிக் கோபத்தினால் கண்கள் மிகச் சிவந்து ஒருவரோடொருவர் சேர்ந்து மறுபடியும் யுத்தத்துக்குச்சென்றார்கள். பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களுடையசேனைகளும் பகைவர்களுடையசேனைகளும் தூரியவாத்தியங்களுடையசப்தங்களோடும் பேரிவாத்தியங்களுடைய முழக்கத்தோடும்வெளிப்பட்டன. ராஜசிரேஷ்டரே! சூரியன்போன்றவொளியுடையவரும், சந்தநுகுமாரரான பீஷ்மர்சாயவும், பரதசிரேஷ்டர்களானகௌரவர்கள் மிகத்துக்கத்திற்குவசப்பட்டுக் காலத்தினால்கெடுக்கப்பட்டமனத்தையுடையவர்களாகி மஹாத்மாவான காங்கேயருடைய பத்யமானவார்த்தையை அலட்சியஞ்செய்துவிட்டு ஆயுதங்களையெடுத்துக்கொண்டு விரைவுடன் வெளிப்பட்டார்கள். உம்முடைய புத்திரனுக்கும் உமக்குமுள்ள மோஹத்தாலும் பீஷ்மருடைய வதத்தினாலும் எல்லாஅரசர்களுடனும்கூடினகௌரவர்கள் மிருத்யுவினால் அழைக்கப்பட்டவர்கள். பாரதரே! மிச்சமான அந்தஅரசர்கள் தேவவிரதரால்விடப்பட்டு மிக்கபயமுற்ற மனத்தையுடையவர்களாகி, கொடியமிருகங்கள் நிறைந்துள்ள வனத்தில் இடையனையிழந்தவெள்ளாடுகளையும் செம்மறியாடுகளையும்போல, "கர்ணா! கர்ணா!" என்று அலறினார்கள். பரதசிரேஷ்டரான பீஷ்மர்சாய்ந்தவுடனே கௌரவஸேனையானது நக்ஷத்திரங்களை இழந்தவானம்போலவும் காற்றையிழந்தஆகாயம்போலவும் பயிரையிழந்தநிலம்போலவும் வியாகரணத்தினால் திருத்தமடையாதவார்த்தைபோலவும் பலியென்கிறஅரசன் தோல்வியடையச்செய்யப்பட்டவுடனிருந்த அசுரசேனையைப்போலவும் கணவனையிழந்தகற்பிற்சிறந்தபெண்போலவும் ஜலம்வற்றிப்போன ஆறுபோலவும் கூட்டத்தலைவன் கொல்லப்பட்டதும் காட்டில் செந்நாய்களால் தடுக்கப்பட்டதுமான பெண்மான்போலவும் சரபத்தால் கொல்லப்பட்டசிங்கத்தையுடைய பெரியமலையின்குகைபோலவுமிருந்தது. பரதசிரேஷ்டரானகாங்கேயர் வீழ்ந்தவுடனே, அந்தச்சேனையானது பலசாலிகளும் வீரர்களும் தகுந்தபடி) வாய்த்திருக்கிறலட்சியத்தையுடையவர்களுமான பாண்டவர்களால் மிகவும்பீடிக்கப்பட்டுப் பெரியகடலில் அலைப்பாக்கத்திலும் காற்றுப்போவதால் தத்தளிக்கச் செய்யப்பட்ட மரக்கலம்போலிருந்தது. அப்பொழுது அந்தச்சேனையானது மிகவும்கலக்கமுற்றகுதிரைகளையும் தேர்களையும் யானைகளையுமுடையதும் பலபோர்வீரர்களழிந்ததும் தைரியத்தைவிட்டதும் மனக்கலக்கமுற்றதுமாயிற்று. அந்தஸேனையிலுள்ள அரசர்களும் பலவகையான போர்வீரர்களும் தேவவிரதரையிழந்து அச்சத்தையடைந்து

பாதாளத்தில் அமிழ்கின்றவர்கள்போலானார்கள். கௌரவர்கள் [1]கர்ணனை நினைத்தார்கள். ஏனென்றால், அவன் தேவவிரதருக்கொப்பானவனல்லனோ? ஆயுததாரிகளெல்லாருள்ளும் சிறந்தவனும் வித்தையினாலும்தவத்தினாலும் விளங்குகின்ற [2]அதிதிபோன்றவனுமான அந்தக்கர்ணனையே எல்லாருடையமனங்களும், ஆபத்தை அடைந்தவனுடையமனமானது பந்துவைநாடுவதுபோல நாடின. பாரதரே! அங்கிருந்தஅரசர்கள் நமக்குநன்மைசெய்பவனும் சரீரத்தையும் விடத்துணிந்தவனும் ஸூதபுத்திரனுமான ராதேயனைக்குறித்து, 'கர்ண! கர்ண!' என்று அழைத்தார்கள். பெரியபுகழுள்ளவனான அந்தக் கர்ணன் மந்திரிகளுடனும்பந்துக்களுடனும் அப்பொழுது பத்துநாட்கள்வரையில் யுத்தம்செய்யாமலேயிருந்து [3]சேனையைமாத்திரம் (யுத்தத்தில்) ஏவிக்கொண்டிருந்தான். சூரர்களால் நன்குமதிக்கப்பட்டவனும் ரதிகர்கள், அதிரதர்கள் இவர்களுடையஎண்ணிக்கையில் முந்தியவனும் யுத்தத்தில்அசுரர்களுடன்கூடினதேவசிரேஷ்டர்களோடும்போர்புரியவல்லமையுள்ளவனும் இருமடங்குஸாமர்த்தியமுள்ளவனும்புருஷசிரேஷ்டனும் மிக்கபுஜபலமுள்ளவனுமாயிருந்தும் அந்தக்கர்ணன் எல்லா அரசர்களின் முன்னிலையிலும் தேகபலத்தையும் பராக்ரமத்தையுமுடையரதிகர்கள் எண்ணப்படுங்காலத்தில் பீஷ்மரால் அர்த்தரதனாக எண்ணப்பட்டான். ராஜரே! அந்தக்கோபத்தினாலேயே அந்தக்கர்ணன் கங்காபுத்திரரைப்பார்த்து, 'கௌரவ்யரே! நீர்ஜீவித்திருக்கும்வரையில் யான் ஒருபொழுதும் போர்புரியேன். உம்மால் பெரியயுத்தத்தில் பாண்டவர்கள் கொல்லப்பட்டார்களானால் துரியோதனனை அனுமதி கொடுக்கும்படிசெய்துகொண்டு யான் கானகம்செல்வேன். கௌரவரே! அல்லது பாண்டவர்களால் யுத்தரங்கத்தில் நீர்கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தையடைவீரானால் எவர்களை நீர் ரதிகர்களென்று நினைக்கிறீரோ அவர்களனைவரையும் ஒருரதத்தோடிருந்தே கொல்வேன்' என்றுசொன்னான். இவ்விதம்சொல்லிவிட்டு மிக்கபுஜபலத்தையுடைய அவன்ஒருவனே உம்முடையபுத்திரனதுஸம்மதத்தின்மேல் பத்துநாள் யுத்தம்செய்யாமலிருந்தான். பாரதரே! யுத்தத்தில்வல்லமைபொருந்தியவரும் அளவிடமுடியாதபராக்ரமமுள்ளவருமானபீஷ்மர் யுத்தத்தில் பாண்டுபுத்திரனைச்சேர்ந்த யுத்தவீரர்களைக் கொன்றார். ஸத்யஸந்தரும் மிக்கவலிமையுள்ளவரும் சூரருமான அந்தப்பீஷ்மர் கொல்லப்பட்டவுடன் உம்முடையகுமாரர்கள் (நதியைத்)தாண்டஎண்ணங்கொண்டவர்கள் தெப்பத்தைநினைப்பதுபோலக் கர்ணனை நினைத்

---

[1] வேறுபாடம். [2]. விருந்தினன். [3]. வேறுபாடம்.

தார்கள். உம்மைச்சேர்ந்தவர்களும் உம்முடைய குமாரர்களும் எல்லா அரசர்களுடனும்சேர்ந்து, 'ஓ!கர்ண!' என்று அழைத்தார்கள். 'இது தான் ஸமயம்' என்றும் சொன்னார்கள். இவ்வாறு ஆங்காங்குள்ள மகா பலசாலிகளானயுத்தவீரர்கள் ஒன்றுசேர்ந்து சரீரத்தைவிடத்துணிந்த ஸூதபுத்திரனை ராதேயனை அழைத்தார்கள். அஸ்திரவித்தையில் ஜமதக்னியின்குமாரரான பரசுராமராலே கற்பிக்கப்பட்டவனும் (எவ் விதத்தினாலும்) தடுக்கமுடியாத ஆண்மையுள்ளவனுமான அவனை நம்மைச்சேர்ந்தவர்களுடைய மனமானது ஆபத்துக்காலங்களில் பந்துவைநாடுவதுபோல் நாடியது. ராஜேந்த்ர! கோவிந்தர், தேவர்களை மிருத்யுபயத்தினின்றும் எப்பொழுதும் காப்பதுபோல அந்தக்கர்ணன், யுத்தத்தில் மஹாபயத்தினின்றும் நம்மைக் காப்பாற்றச்சக்தியுள்ளவன்' என்று சொன்னான்.

இவ்வாறு அடிக்கடி கர்ணனைப்புகழ்ந்துபேசுகின்ற ஸஞ்சயனைக் குறித்துத் திருதராஷ்டிரன் ஸர்ப்பம்போலப்பெருமூச்சைவிட்டுக் கொண்டு பின்வருமாறு இந்தவார்த்தையைக் கூறலானான். "அத்தகைய உங்களுடைய மனமானது அப்பொழுது ஸூர்யகுமாரனை கர்ணனையடைந்ததன்றோ? ஸூதபுத்திரனை அந்தராதேயன் சரீரத்தையிழப்பவர்களைக் காப்பாற்றினனா? ஸத்தியபராக்கிரமனான அவன் அப்பொழுது பரபரப்புள்ளவர்களும் பயத்தையடைந்தவர்களும் நடுக்கமுற்று ரக்ஷணத்தை விரும்புகின்றவர்களுமான ஸைனிகர்கள் விஷயத்தில் நம்மைச்சேர்ந்தவர்களுடையஎண்ணத்தைப் பொய்யாக்காமல் இருந்தானா? பீஷ்மர்கொல்லப்பட்டவுடன், கௌரவர்களுக்கு நேர்ந்தகுறையை வில்லாளிகளுள்சிறந்த கர்ணன் யுத்தரங்கத்தில் பூர்த்திசெய்தானா? ஸஞ்சய! அப்படிப்பட்ட குறையைப்பூர்த்திசெய்கின்றவனும் பகைவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகின்றவனுமான அந்தக்கர்ணனன்றோ உலகத்தில் புருஷஸ்ரேஷ்டனென்று சொல்லப்படுகிறான். ரணகளத்தில் துன்பமடைந்து அதிகமாக அலறுகின்ற பந்துக்களைக்காக்கும்பொருட்டுத் தன் உயிரையும் சுகத்தையும்விட்டு என்புத்திரர்களுக்கு ஜயத்தில் உண்டானவிருப்பத்தைக் கர்ணன் பயனுள்ளதாகச்செய்தானா?" என்று வினவினன்.

---

## இரண்டாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன், பாண்டவர்களை அழித்துத் துரியோதனனுக்கு ராஜ்யத்தைத் தருவதாகப் பிரதிஜ்ஞைசெய்து யுத்தத்துக்குப் புறப்பட்டது.)

ஸஞ்சயன், "ராஜரே! பிறகு பகைவர்களையழிப்பவனும் வில்லாளிகளுள் மிகவும் சிறந்தவனும் அதிரதனென்னும் ஸூதனுடையகுமாரனுமான கர்ணன், புருஷர்களுள் சிறந்தவரும் விரதம்தவறாதவரும் மஹாரதரும் சந்தனுவின்புதல்வருமான பீஷ்மர் அடித்துத்தள்ளப்பட்டாரென்பதைக்கேட்டு மிக ஆழ்ந்தகடலில் உடைபட்டமரக்கலம் போன்ற உமது புத்திரனுடையசேனையைத் துயரத்தினின்று கரையேற்றிவிடுவதற்காக அப்பொழுது ஸஹோதரன்போல விரைவாக அருகில் வந்தான்.

பிறகு, ரதிகர்களுள்சிறந்தவரான பீஷ்மர் சத்துருக்களால் வதஞ்செய்யப்பட்டவுடன், கர்ணன் கடலில் முழ்குகின்ற கப்பலைப் போன்ற உமது புத்திரனுடைய சேனையைக் கரையேற்றப்போகிறவனாகப் பிதா புத்திரர்களிடம் வருவதுபோலக் கௌரவர்களிடம் விரைந்துவந்தான். சத்துருக்கூட்டங்களையழிக்கிற இயற்கையுள்ள கர்ணன், பரசுராமரால் கொடுக்கப்பட்ட திவ்யமானவில்லை நன்றாகத் துடைத்து நாணேற்றிப் பிரளயகாலநெருப்புக்கும் காற்றுக்கும்ஒப்பான அம்புகளையும் அதிகமாகப்பிரகாசிக்கச்செய்துகொண்டு இந்த வார்த்தையைச் சொல்லலானான்.

'எப்பொழுதும் நன்றியறிவுள்ளவரும் ப்ரம்மத்வேஷிகளைக் கொல்லுகிறவரும் பகைவரையழிப்பவருமான எந்தப்பீஷ்மரிடத்தில் தைரியமும், புத்தியும், பராக்கிரமமும், மனோபலமும், ஸத்யமும், ஞாபகசக்தியும், வீரர்களுக்குரிய எல்லாக்குணங்களும், திவ்யமான அஸ்திரங்களும், வணக்கமும், (அகார்யத்தில்) வெட்கமும், இனிய சொல்லும், அஸூயையின்மையும், சந்திரனிடத்தில் ஒளியிருப்பது போல் ஸ்திரமாக இருக்கின்றனவோ அவரே தோல்வியடைந்தார். ஆதலால், எல்லா வீரர்களையும் மாண்டவர்களாகவே நினைக்கிறேன். இவ்வுலகத்தில் வினையின்பயன் நிலையற்றிருப்பதால் ஒருவஸ்துவாவது ஒருபொழுதும் நிலையுள்ளதன்று. பூஜிக்கத்தக்கவரும் திடமானபிரம்மசர்ய விரதமுள்ளவருமான பீஷ்மரே கொல்லப்பட்டாரானால் சூரியன் உதிக்குமென்று எவன்தான் நிச்சயத்தோடிருப்பான்? வஸுக்

களின் பிரபாவமுடையவரும் வஸுக்களின் வீர்யம்போன்ற வீர்ய முள்ளசந்தனுவினிடம் தோன்றியவரும் பூமிக்குநாதருமான பீஷ்மர் வஸுக்களையே அடைந்தபிறகு (ஜனங்களே!) பொருள்கள், புத்திரர் கள், பூமி, கௌரவர்கள், இந்தஸேனை இவைகளைக்குறித்துத் துயர மடையுங்கள்' என்றான்.

(ராஜரே!) மிக்கபெருமைவாய்ந்தவரும் வரன்களைக்கொடுக்கின்ற வரும் லோகநாதரும் சிக்ஷிக்கின்றவரும் அளவற்ற வல்லமைபொருந் தியவருமான பீஷ்மர் தள்ளப்பட்டும் பாரதர்கள் தோல்வியடைவிக் கப்பட்டுமிருக்கையில், கர்ணன் மனவருத்தமுற்றுக் கண்ணீர்சொரி ந்து மிகுந்த பெருமூச்சுவிட்டான். ராஜரே! ராதேயனுடைய இந்த வார்த்தையைக்கேட்டு உம்முடைய குமாரர்களும் படைவீரர்களும் ஒருவரையொருவர் அலறியழைத்தார்கள்; அடிக்கடி அழுகைக்குர லோடுகூடவே துக்கத்தினாலுண்டான கண்ணீரையும் கண்களால் அப் பொழுது வடித்தார்கள். மஹாயுத்தமானது மறுபடியும் தொடங்கி, அரசர்கள் சேனைகளில் பிரவேசித்தவுடன், எல்லாமஹாரதர்களுள்ளும் சிறந்தகர்ணன் ரதிகசிரேஷ்டர்களைக்குறித்து அப்பொழுது ஸந்தோ ஷத்தையுண்டுபண்ணக்கூடியவார்த்தையைச் சொல்லலானான்.

'உலகமானது அநித்யமாக எப்பொழுதும் ஓடிக்கொண்டிருப் பதை ஆலோசிக்குமிடத்து (எல்லாவற்றையும்) இப்பொழுது நிலை யற்றனவாகவே யான் காண்கிறேன். இங்கு நீங்கள் இருக்குங்காலத் திலேயே மலைபோலப்பிரகாசித்துவந்த குருசிரேஷ்டரானபீஷ்மர் ரண களத்தில் எங்ஙனம் தள்ளப்பட்டார்? பூமியில் வந்திருக்கும் சூரியனைப் போன்றவரும் மஹாரதருமான அவர் விழும்படி செய்யப்பட்டபிறகு மலையைத் தூக்கிக்கொண்டுபோகிறகாற்றை மரங்கள் தாங்கமுடியா ததுபோல அரசர்கள் தனஞ்சயனைத் தாங்கச்சக்தியற்றவர்களே. தலை வரையிழந்ததும் மிக்கஎளிமையுற்றதும் பகைவர்களால் மனவூக்க மழிக்கப்பெற்றதும் நாதனற்றதுமான இந்தக்கௌரவசேனையானது யுத்தகளத்தில் அந்தமகாத்மாவானபீஷ்மரால் காக்கப்பட்டதுபோல வே என்னால் இப்பொழுது காக்கப்படத்தக்கது. போரில்வல்லவரான பீஷ்மரும் வீழ்த்தப்பட்டு இப்படிப்பட்டபாரமும் என்னிடத்தில் சுமத்தப்பட்டகாரணத்தினால் இந்தஉலகத்தை அநித்யமென்று யான் காண்கிறேன் ; இவ்விதமானயுத்தத்தில் எவ்வாறு பயத்தைப்பாராட்டு வேன்? நான் யுத்தத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு குருகுலத்திற்பிறந்த வர்களுட்சிறந்தவர்களான அந்தப்பாண்டவர்களை அம்புகளாலே யம னுடையவீட்டை அடையச்செய்து உத்தமமானகீர்த்தியை உலகத்தில்

நிலைநிறுத்தி வஸிப்பேன்; அல்லது சத்துருக்களால்கொல்லப்பட்டு, யுத்தபூமியில்படுப்பேன். யுதிஷ்டிரன், தைர்யமும் புத்தியும் ஸத்யமும் வல்லமையுமுள்ளவன்; விருகோதரன் அனேகயானைகளுக்குஸமமான பலமுடையவன். அவ்வாறே, தேவராஜகுமாரனை அர்ஜுனனும் யௌவனமுடையவன். ஆதலால், அந்தப்பாண்டவஸேனையானது தேவர்களாலும் ஸுலபமாக இப்பொழுது ஜயிக்க ஸாத்தியப்படாதது. எந்தச்சேனையில் நகுலஸஹதேவர்கள் யுத்தத்தில் யமனுக்கு ஒப்பானவர்களாக இருக்கிறார்களோ, மேலும் எந்தச்சேனையில் தேவகிகுமாரனை கிருஷ்ணன் ஸாத்யகியுடன் சேர்ந்திருக்கிறானே அந்தச் சேனையை எதிர்த்த அல்பமனிதன் மிருத்யுவினுடைய வாயிலகப்பட்ட பிராணிபோல் திரும்பமாட்டான். மிகவும் விருத்தியடைந்திருக்கின்ற தவமானது தவத்தினுலேயே தடுக்கப்படும். அவ்வாறே, வல்லமையும் வீரர்களால் வல்லமையினுலேயே அழிக்கப்படும். என்மனமானது சத்துருக்களைத்தடுப்பதிலும் நம்மவரைக்காப்பதிலும் மலைபோல அசையாமல் உறுதியுற்றிருக்கிறது. ஸூத! ஆகையால், நானே சென்று இவர்களுடைய வல்லமையை அழித்து இவர்களை இப்பொழுது ஜயிக்கிறேன். இந்த மித்ரத்ரோகமானது என்னால் பொறுக்கத்தக்கதன்று. ஸைனியமானது தோற்றோடும்தருணத்தில் எவன் உதவிசெய்யவருவானே அவனே மித்திரன். நான் ஸத்புருஷர்களுக்குரிய இந்த உத்தமகாரியத்தைச் செய்யப்போகின்றேன்; உயிரையிழந்து பீஷ்மரைப் பின்தொடருவேன்; யுத்தகளத்தில் சத்துருக்களுடைய கூட்டங்களனைத்தையும் கொல்வேன்; அல்லது, அவர்களாலே கொல்லப்பட்டு வீரர்களுக்குரிய உலகத்தை அடைவேன். ஸூதனே! ஸ்திரீகளும் பாலர்களும் உரத்தசப்தத்துடன் [1]ரோதனம்செய்வதினுலும் துரியோதனனிடத்திலிருந்த ஆண்மையும் நாசஞ் செய்யப்பட்டதினுலும் இனி செய்யத்தக்ககார்யம் என்னைச் சார்ந்ததென்றே எண்ணுகிறேன். ஆதலால் இப்பொழுதே பகைவர்களான அரசர்களை ஜயிக்கப்போகிறேன். மிக்ககோரமான இந்த யுத்தத்தில் கௌரவர்களை நான் பாதுகாத்துக்கொண்டு பாண்டுபுத்திரர்களைக் கொல்லக்கருதிப் பிராணனைவிட்டாவது எல்லாச்சத்துருக்களுடைய கூட்டங்களையும் யுத்தத்தில் கொன்று திருதராஷ்டிரகுமாரனுக்கு ராஜ்யத்தைக் கொடுப்பேன். தங்கத்தினால் செய்யப்பட்டதும் நிர்மலமானதும் மணிகளாலும் ரத்னங்களாலும் விளங்குகின்றதும் விசித்திரமாயுள்ளதுமான கவசமும், ஸூர்யனுக்குநிகரான ஒளியை

[1] இங்கு 'ருதி' என்கிற பாடம் கொள்ளப்பட்டது.

யுடைய கிரீடமும் எனக்கு அணியப்படலாம். வில்லையும், நெருப்புக் கும் விஷமுள்ளஸர்ப்பங்களுக்கும் ஒப்பான அம்புகளையும், பதினாறு அம்புப்பெட்டிகளையும் கொண்டுவந்து சேருங்கள்; அவ்வாறே, திவ்ய மானவிற்களையும், வாள்களையும், சக்திகளையும், பெரியகதாயுதங்களை யும், பொன்னால் சித்திரவேலைசெய்யப்பட்ட பிடியுள்ள சங்கத்தையும், கொண்டுவாருங்கள். ஸ்வர்ணமயமும் விசித்திரமுமான கருநெய்தல் புஷ்பங்களை அலங்காரமாகக்கொண்டதும் ஜயத்தைத்தருவதும் ஸர் வோத்தமமுமான இந்த யானைகட்டும் சங்கிலிவடிவமான கொடியை மெல்லிய பளபளப்பான வஸ்திரங்களால் துடைத்து [1] அதில் வலை போன்ற இடைவெளியுள்ள விசித்திரமான மாலையைக்கட்டிக் கொண்டு வாருங்கள். ஸூதபுத்திர! வெண்மைநிறமுள்ள மேகம்போலப் பிர காசிக்கின்றவைகளும் புஷ்டியுள்ளவைகளும் மந்திரத்தினால் பரிசுத்த மான தீர்த்தங்களால் ஸ்நானம்செய்விக்கப்பட்டவைகளும் மெரு கிடப்பட்ட பொன்னாபரணங்களையணிந்தவைகளும் சீக்கிரமாகச் செல்லுகின்றவைகளும் சிறந்தவைகளுமான குதிரைகளை விரைவில் கொண்டுவா. சிறந்ததும் பொன்மாலைகட்டப்பட்டதும் சூரியசந்திரர் களுக்கொப்பான காந்தியுள்ள ரத்தினங்களால் சித்திரவேலை செய்யப் பட்டதும் யுத்தத்துக்குரிய வஸ்துக்களோடுகூடியதுமான ரதத்தைக் குதிரைகளைப்பூட்டிச் சீக்கிரமாகக் கொண்டுவா. வீரர்களே! விசித்திர மானவையும் வேகமுள்ளவையுமான விற்களையும் நல்லமுடிச்சுக்க ளுள்ள சிறந்தநாண்களையும் அம்புகளால் நிறைந்த பெரியஅம்புப்பெட் டிகளையும் கவசங்களையும் காந்தியினால் நிறைந்ததும் வெண்கலத்தா லானதும் பொன்னாலானதுமான யுத்தப்ரயாணத்திற்கேற்ற எல்லா வஸ்துவையும் சீக்கிரமாகக் கொண்டுவாருங்கள். மாலையைக்கொண்டு வந்து அங்கத்தில் சூட்டிவிட்டுச் சீக்கிரமாக ஜயத்தின்பொருட்டுப் பேரீவாத்தியங்களை முழக்குங்கள் ஸூத! எந்த இடத்தில் அர்ஜுன னும் பீமஸேனனும் தர்மபுத்திரனும் நகுலனும் ஸகதேவனும் இருக் கிறார்களோ அந்தஇடத்திற்கு வேகமாகச்செல். யுத்தத்தில் எதிர்த்துச் சத்ருக்களையாவது கொல்வேன்; அல்லது நானாவது அவர்களால் கொல்லப்பட்டுப் பீஷ்மரைப்போலச் செல்வேன். எந்தச்சேனையில் ஸத்தியத்தில் உறுதியுள்ள யுதிஷ்டிரராஜனும் பீமஸேனனும் அர்ஜுன னும் கிருஷ்ணனும் ஸாத்யகியும் ஸ்ருஞ்சயர்களும் உறுதியாக நிற்கின் றார்களோ அந்தச்சேனையானது, அரசர்களால ஜயிக்கமுடியாததென்று எண்ணுகிறேன். எல்லாரையும் அபஹரிக்கிற யமனை எப்பொழுதும்

---

[1] வேறுபாடம் கொள்ளப்பட்டது.

ஜாக்கிரதையுடன் யுத்தரங்கத்தில் அந்த அர்ஜுனனைக் காப்பாற்று வதாயிருந்தாலும், யான் யுத்தத்தில் எதிர்த்து (அர்ஜுனனைக்)கொல்லு வேன்; அல்லது, பீஷ்மரைமுன்னிட்டு யமனையாவது அடைவேன். நான் அந்தச்சூரர்களுடைய மத்தியில போகாமலிரேன். அவ்விஷயத் தில் மித்ரத்ரோகிகளும் உறுதியான பக்தியில்லாதவர்களும் கெட்ட எண்ணமுள்ளவர்களும் எனக்கு ஸஹாயர்களல்லவென்று நான் சொல்லுகிறேன்' என்று கூறினான்.

போர்க்கருவிகள் நிறைந்ததும் உறுதியானதும் நல்ல வர்க்கா லுள்ளதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் மங்களகரமானதும் கொடித்துணிகளுள்ளதும் காற்றின்வேகம்போன்றவேகமுள்ள சிறந்த குதிரைகள் பூட்டப்பட்டதுமான சிறந்த தேரின்மீது ஏறிக் கர்ணன் (யுத்தபூமியை நோக்கி) ஜயத்தைக்கருதிச் சென்றான். மகாத்மாவும் ரதிகஸ்ரேஷ்டனுமான கர்ணன், தேவர்களுடைய கூட்டங்களால் இந் திரன் பூஜிக்கப்படுவதுபோலக் கௌரவர்களால் நன்றாகப் பூஜிக்கப் பட்டு உக்கிரமான வில்லைக் கையில் தாங்கி எந்தயுத்தகளத்தில் பரத ஸ்ரேஷ்டரான பீஷ்மருக்கு முடிவுநேர்ந்ததோ அவ்விடத்திற்குச் சென்றான். [1]வரூதத்தையுடையதும் பொன்னும் முத்தும் மணிகளும் ரத்தினங்களும் சேர்ந்த மாலைகளுள்ளதும் த்வஜமுள்ளதும் நல்லகுதி ரைகள்கட்டப்பெற்றதும், மேகத்தின்சப்தம்போன்ற சப்தமுள்ளதும் பெரிதுமானரதத்தினால் கர்ணன் சூரியனைப்போல் அதிகதேஜஸுள் ளவனாகவிளங்கினான். நெருப்புப்போன்ற காந்தியையுடையவனும் மங் களகரனும் வில்லைக்கையிலேந்தியவனும் அதிரதனுடைய புத்திரனும் மகாரதனுமான அந்தக்கர்ணன், நெருப்புப்போல் ஜ்வலிக்கின்ற மங்கள கரமான தன்னுடைய ரதத்தில் வீற்றிருந்து, விமானத்தில் வீற்றிருக் கிற ஸாக்ஷாத் தேவராஜன்போல விளங்கினான்.

---

## மூன்றாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன் பீஷ்மரிடம்சென்று போர்செய்ய அனுமதிகேட்டது.)

அம்புப்படுக்கையில் படுத்தவரும் மஹாத்மாவும் அளவுகடந்த பராக்ரமமுள்ளவரும் எல்லாக்ஷத்திரியர்களுக்கும் அந்தகராகவிருப்ப

---

[1] தேருக்கு மற்றொன்றோடு மோதலால் தீங்கு நேராமலிருத்தற்காக அதனைச்சுற்றி மரத்தால் அமைக்கப்பெற்ற பாதுகாப்பு.

வரும் குருவும் பெரியவில்லையேந்தியவரும் ஸவ்யஸாசியினாலே திவ்யாஸ்திரங்களினால் வீழ்த்தப்பட்டவரும் பிதாமஹருமான பீஷ்மரை, மிகுந்தபெருங்காற்றினால் வற்றச்செய்யப்பட்ட கடலைப்போலக்கண்டு, உம்முடைய குமாரர்களுக்கு ஜயத்தி லுண்டான விருப்பமும் ஸுகமும் கவசமும் உடைந்தன. கரைகாணாமல் ஆழத்திலகப்பட்டு மேடான தரையை விரும்புகின்றவர்களுக்குத் திட்டுப்போலிருக்கின்றவரும், யமுனாப்ரவாகம்போன்ற அம்புக்கூட்டத்தால் நான்குபக்கமும் சூழப்பட்டவரும், பூமியில்தள்ளப்பட்ட பெரிய மைநாகம்என்றமலைபோன்றவரும், ஆகாயத்தினின்று நழுவிப் [1] பூமியில் வீழ்ந்திருக்கின்ற சூரியன்போன்றவரும், முன்பு விருத்திராசுரனால் ஜயிக்கப்பட்டவனும் மனத்தினால் நினைத்தற்கரியபலபராக்ரமங்களுள்ளவனுமான மகேந்திரனைப்போன்றவரும், யுத்தகளத்தில் எல்லாச்சேனைகளையும் மோகிக்கச்செய்கின்றவரும், கீழேதள்ளப்பட்டவரும், எல்லாஸைனிகர்களுள்ளும் சிறந்தவரும், எல்லாவில்லாளிகளுக்கும் கொடிபோன்றவரும், தனஞ்சயனுடைய அம்புகளினால் மூடப்பட்டவரும், உமக்குப்பிதாவும், பெரியவிரதத்தையனுஷ்டித்தவரும், பாரதர்களுக்குப் பிதாமஹரும், வீரசயனத்தில்படுத்திருக்கின்றவரும், புருஷசிரேஷ்டரும், வீரருமான அந்தப்பீஷ்மரை அதிரதபுத்திரனாகிய கர்ணன் பார்த்து விரைவாக ரதத்தினின்றுகுதித்துத் துயரத்தாலும் மோகத்தாலும் திரம்பியவனாகவும் தீனனாகவும் கண்ணீரினால் கலக்கமுற்ற கண்களையுடையவனாகவும் கால்நடையாகவே அவரிடம்சென்று நமஸ்கரித்து அபிவாதனம்பண்ணிக் கைகளைக்குவித்துக்கொண்டு கூறலானான்.

'பாரதரே! நான் கர்ணன். உமக்கு மங்களமுண்டாகுக. என்னை நோக்கிப் பரிசுத்தமும் க்ஷேமகரமுமான வாக்கினாலே பேசும். கண்ணாலும் பாரும். தர்மத்தையேமுக்கியமாகக்கொண்டவரும் முதிர்ந்தவருமான தேவரீரே இந்தயுத்தபூமியில் படுத்திருத்தலால் நிச்சயமாக இவ்வுலகில் ஒருவனும் புண்ணியபலனை அடையமாட்டான். குருபுங்கவரே! பொக்கசங்களைநிரப்புவதிலும் ஆலோசனைசெய்வதிலும் சேனைகளை அணிவகுப்பதிலும் யுத்தங்களிலும் கௌரவர்களுள் (உம்மைத்தவிர) வேறொருவரையும் (வல்லவராக) யான் காணவில்லை. தெளிந்தஅறிவுடன் கௌரவர்களைப் பயத்திலிருந்துகாக்கும் நீர் போர்வீரர்களைத் தெய்வமில்லாத (பயமாகிறகடலில்) விட்டுவிட்டுப் பிதிர்லோகம் போகப்போகிறீர். பரதஸ்ரேஷ்டரே! கோபங்கொண்டபுலிகள் மான்களையழிப்பதுபோல் இன்றுமுதல் பாண்டவர்கள் கௌரவர்

[1] வேறுபாடம்.

களுக்கு நாசத்தை உண்டுபண்ணப்போகிறார்கள். ஸவ்யஸாசியி னுடைய வீரியத்தை அறிந்தவர்களான கௌரவர்கள், அசுரர்கள் வஜ்ராயுதத்தின்சப்தத்தினால் பயத்தையடைவதுபோலக் காண்டீவத்தி னுடையசப்தத்தினால் இன்று பயத்தையடையப்போகிறார்கள். இப் பொழுது காண்டீவத்தினின்று விடுபடும் அம்புகளுடையசப்தமானது இடிகளுடையசப்தம்போலக் கௌரவர்களையும், மற்றுமுள்ள அரசர் களையும் பயமுறுத்தப்போகின்றது. வீரரே! பெரியஜ்வாலையோடு நன்றாகப்பிரகாசிக்கின்ற நெருப்பானது மரங்களை எரிப்பதுபோலக் கிரீடியினுடையபாணங்கள் தார்த்தராஷ்டிரர்களை எரிக்கப்போகின்றன. காட்டில் காற்றும்நெருப்பும் ஒன்றுகூடி எந்தஎந்தவழியாகச் செல்லு கின்றனவோ அந்த அந்தவழிகளிலுள்ள அநேகம்புதர்களையும், திரணங் களையும் மரங்களையும்(அவை) எரிக்கின்றன. நரஸ்ரேஷ்டரே! அர்ஜு னன் நன்குபற்றியெரிகின்ற நெருப்புப்போன்றவனே; ஸம்சயமில்லை; காற்று எவ்விதமோ அவ்விதமே கிருஷ்ணன்; ஸந்தேகமில்லை. பாரு தரே! முழங்குகின்ற பாஞ்சஜந்யம் ஒலிக்கின்றகாண்டீவம் இவற்றி னுடையசப்தத்தைக்கேட்டு எல்லாச்சைனியங்களும் பயத்தைஅடை யப்போகின்றன. வீரரே! வானரக்கொடியையுடையதும் பகைவர்களை அழிக்குந்தன்மையுள்ளதும் எதிர்த்து வருகின்றதுமான அர்ஜுனன ரதத்தினுடைய சப்தத்தை ஸஹிக்கத் தேவரீரைத்தவிர மற்றஅரசர் கள் சக்தியுள்ளவர்களாகார்கள். கற்றறிந்தவர்கள் எவனுடைய அத்புத மானகாரியங்களையும், நிவாதகவசர்கள்முதலானவர்களோடும் முக் கண்ணரும் மஹாத்மாவுமான பரமேச்வரரோடும்நடந்த யுத்தங்களை யும் புகழ்கிறார்களோ அப்படிப்பட்ட அர்ஜுனனைத் தேவரீரைத்தவிர வேறு எந்தஅரசன் எதிர்த்துயுத்தஞ்செய்யத்தகுந்தவன்? புண்யம் செய்யாதவர்களால் அடையமுடியாத வரத்தையும் அந்தஈஸ்வர ரிடத்திலிருந்தே அர்ஜுனன் பெற்றிருக்கிறான். எவன் முன்பு உம் மாலேயே ஜயிக்கப்படவில்லையோ அவனை வேறுஎவன் யுத்தத்தில் ஜயிக்க வல்லமையுடையவன்? க்ஷத்திரியர்களுக்கு நாசத்தைஉண்டு பண்ணுகிறவரும் கோரரூபியும் தேவாஸுரர்களுடையமதத்தை அழிப்பவருமான பரசுராமரை ரணகளத்தில்ஜயித்தவரும் வீர்யமுள்ள வருமான நீரும் சிகண்டியினால்அடிக்கப்பட்டவராகவும் அம்புகளால் கோக்கப்பட்டவராகவும் இப்பொழுது (யுத்தபூமியில்) படுத்திருக் கிறீர். கோபமுடையவனுனநான் உம்மாலும் கட்டளையிடப்பட்டு யுத்தத்தில் மிகுந்தஸாமர்த்தியமுள்ளவனும் பார்வையினாலேயே உயிரைக்கவர்கின்ற மிகக்கொடிய ஸர்ப்பம்போன்றவனும் சூரனும்

பாண்டுகுமாரனுமான அந்த அர்ஜுனனை இப்பொழுது அஸ்திரபலத்தினால் நாசஞ்செய்யவல்லமையுடையவனாவேன்' என்று சொன்னான்.

---

## நான்காவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம். (தொடர்ச்சி.)

(கர்ணன் பீஷ்மரிடம் அனுமதிபெற்றுப் போருக்குவந்தது.)

அந்தக்கர்ணன் அடிக்கடி சொல்லும்போது, கௌரவர்களுள் முதிர்ந்தவரும் பிதாமஹருமான பீஷ்மர் மனமகிழ்ச்சியோடு தேசகாலங்களுக்கு உசிதமான ஒருவார்த்தையைச் சொல்லலானார்:—(ஓ! கர்ண!) நீ நதிகளுக்கு ஸமுத்ரம்போலவும், ஒளிகளுக்குச் சூரியன்போலவும், ஸத்தியத்திற்கு ஸாதுக்கள்போலவும், விதைகளுக்கு க்ஷேத்திரம்போலவும், பிராணிகளுக்கு மேகம்போலவும் ஸ்நேகிதர்களுக்கு ஆதாரமாக இருக்கிறாய். இனியகனியுள்ளமரத்தை அண்டிப் பக்ஷிகள்பிழைப்பதுபோலப் பந்துக்கள் உன்னையண்டிப் பிழைக்கட்டும்; நீ சத்துருக்களுடையகர்வத்தை அழிப்பவனும், மித்திரர்களுக்குஸந்தோஷத்தை விருத்திபண்ணுகிறவனுமாகக்கடவாய். தேவர்களுக்கு விஷ்ணுவைப்போல, நீ கௌரவர்களுக்குக் கதியாகக்கடவாய் ஓ! கர்ண! துரியோதனனுக்குப் பிரியத்தைச்செய்யவிருப்பமுள்ள உன்னாலே உன்னுடையபுஜபலத்தினாலும் வீர்யத்தினாலும் ராஜபுரத்தை அடைந்து காம்போஜர்கள் ஜயிக்கப்பட்டார்கள். (அவ்வாறே) உன்னால் கிரிவ்ரஜதேசவாஸிகளான நக்னஜித்முதலான அரசர்களும் அம்பஷ்டர்களும் விதேஹர்களும் காந்தாரர்களும் ஜயிக்கப்பட்டார்கள். கர்ண! இமயமலையினுடைய துர்க்கங்களை வாஸஸ்தானமாகவுடையவர்களும் யுத்தத்தில்குரூரர்களுமான கிராதர்களும், முன்பு உன்னால் துரியோதனனுக்கு வசப்பட்டவர்களாகச்செய்யப்பட்டார்கள். உன்னால் யுத்தத்தில் உத்கலர்களும் மேகலர்களும் பௌண்ட்ரர்களும் கலிங்கர்களும் ஆந்திரர்களும் நிஷாதர்களும் த்ரிகர்த்தர்களும் பாஹ்லீகர்களும் ஜயிக்கப்பட்டார்கள். கர்ண! துரியோதனனுக்கு ஹிதத்தை விரும்புகிற ஸ்வபாவமுடையவனும் மகாபராக்ரமசாலியுமான உன்னாலே அந்த அந்தயுத்தத்தில் அநேகவீரர்கள் ஜயிக்கப்பட்டார்கள். அப்பா! ஞாதிவர்க்கங்களோடும் பந்துக்களோடுங்கூடிய துரியோதனன் எப்படியோ அப்படியே நீயும் எல்லாக்கௌரவர்களுக்கும் ரக்ஷகனாயிருப்பாயாக. உனக்கு மங்களமுண்டாகவேண்டுமென்று நான் ஆசீர்வதிக்கின்றேன்; போ: சத்துருக்களோடுயுத்தம்செய்: எல்லாக்

கௌரவர்களையும் அடக்கியாண்டுகொண்டு துரியோதனனுக்கு ஜயத்
தையுண்டுபண்ணு. நீ எங்களுக்குத் துர்யோதனனைப்போலப் பேர
னுக்குழைப்பானவன். நாங்களெல்லோரும் அந்தத்துரியோதனனுக்கு
முறையினால்எப்படியோ அப்படியே உனக்குமாகிறோம். உலகத்
தின்கண் ரக்தஸம்பந்தத்தைக்காட்டிலும் நல்லோர்களுடையஸ்நேக
ஸம்பந்தமே மேலானது; ஆகலால், கற்றறிந்தவர்கள் பகைவர்களா
யிருந்தாலும் நல்லோர்களோடு சேர்க்கையை விரும்புகிறார்கள். அப்
படிப்பட்ட நீ ஸத்தியப்பிரதிஜ்ஞையையுடையவனாகஇருந்துகொண்டு,
‘இதுஎன்னுடையது’ என்றுநிச்சயம்கொண்டு துரியோதனன்போலக்
கௌரவர்களுடையஸேனையைப் பாதுகாப்பாயாக. ஓ! கர்ண! கௌர
வர்கள் ரணகளத்தில் பாண்டவர்களோடு போர்புரிந்ததுபோலவே,
துரியோதனனுக்கு நன்மையைப்பயக்கஎண்ணங்கொண்டநீயும் யுத்
தம்செய்யவேண்டும்’ என்றுகூறினர்.

சூரியகுமாரனானகர்ணன் அவருடைய வார்த்தையைக்கேட்டு
அவர்சரணங்களில்நமஸ்கரித்து யுத்தபூமியைக்குறித்துச் சீக்கிரமாகச்
சென்றான். அவன் மனிதர்களுடையகூட்டங்களுக்கு இருப்பிடமும்
ஒப்பற்றதும் பெரிதும் ஆயுதங்களைத்தரித்ததும் அகன்றமார்புள்ளது
மான அந்தச்சேனையைப்பார்த்து உத்ஸாஹம்விருத்தியடையும்படி
செய்தான். துரியோதனன்முதலான எல்லாக்கௌரவர்களும் ஸந்தோஷ
மடைந்தார்கள். மிக்கபுஜபலமுள்ளவனும், எல்லாச்சேனைகளுக்கும்
முந்திச்செல்லுகின்றவனும் அதிகமான மனோதைரியத்தையுடைய
வனும் யுத்தஸன்னத்தனாக அருகில்வந்திருக்கின்றவனுமானகர்ணனைக்
கண்டு,கௌரவர்கள் கர்ஜனைகளாலும் தோள்தட்டுகிற சப்தங்களாலும்
ஸிம்மநாதத்தினுடைய ஒலிகளாலும் பலவிதமான விற்களுடைய
டங்காரத்வனிகளாலும் நன்கு பூஜித்தார்கள்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் கர்ணனைக் கேட்டுக்கொண்டதும், கர்ணன்
துரோணருக்கு ஸேனாபதிப்பட்டமளிக்க ஏற்பாடுசெய்ததும்.)

அரசரே! தேரின்மீதேறி யுத்தஸன்னத்தனாயிருக்கின்ற புருஷ
சிரேஷ்டனான கர்ணனைக்கண்டு துர்யோதனன் களிப்புற்று, ஓ!கர்ண!
உன்னால் காக்கப்பட்ட இந்தஸேனையை நான் நாதனோடுகூடியதாக

எண்ணுகிறேன். இந்த ஸமயத்தில் எது சிறந்ததோ, எது ஹிதமோ அதை நன்கு நிச்சயிக்கவேண்டும்' என்று இந்த வார்த்தையைச் சொன்னான். கர்ணன், 'புருஷசிரேஷ்டனே! மனிதர்களுள் நீயல்லவோ மஹாபுத்திசாலி; நீ எங்களுக்குச் சொல். முக்கியனான தலைவன், செய்யவேண்டிய காரியத்தை அறிவதுபோல மற்றவன் அறியமாட்டான். ராஜனே! அப்படிப்பட்ட நாங்களனைவரும் உன்னுடைய வார்த்தையைக் கேட்கப் பிரியமுள்ளவர்களாயிருக்கிறோம். நீ நீதிதவறின வார்த்தையைச் சொல்லமாட்டாயென்பது என்னுடைய எண்ணம்' என்று சொன்னான்.

துர்யோதனன், 'கர்ண! பிராயமுதிர்ச்சியும் பராக்கிரமமும் சாஸ்திரஞானமும் அவ்வாறே யுத்தவீரர்களுக்குரிய எல்லாக்குணங்களுமமைந்த பீஷ்மர் சேனாபதியாக இருந்தார். மிகுந்த கீர்த்தியையுடையவரும் என்சத்துருக்களினுடைய கூட்டங்களைக் கொல்லுகின்றவரும் மகாத்மாவுமான அந்தப்பீஷ்மரால் சிறந்த யுத்தத்தில் பத்துநாள் முழுமையும் ரக்ஷிக்கப்பட்டோம். செய்தற்கரிய செய்கையைச் செய்தவரான அந்தப்பீஷ்மர் ஸ்வர்க்கத்தையடைந்தபிறகு அவருக்குப்பின் எவரை ஸேனாபதியாக நீ எண்ணுகிறாய்? யுத்தத்தில் சிறந்தவனே! தலைவனில்லாவிட்டால் ஸேனையானது கரைகின்றதண்ணீர் விட்டமைபோலவும் ஜலத்தில் மாலுமியையிழந்தமரக்கலம்போலவும் போர்க்களங்களில் ஒரு முகூர்த்தகாலங்கூட நில்லாது; மாலுமியையிழந்த மரக்கலம்போலவும் ஸாரதியையிழந்த ரதம்போலவும் ஸேனாபதியில்லாத சேனையானது தன்னிஷ்டப்படி ஓடும். தலைவனற்ற கூட்டம் முழுமையும் கஷ்டத்தையடைவதுபோலவே தலைவனையிழந்த சேனையானது எல்லாத்தோஷங்களையும் அடையும். (ஆகையால்) நீ மஹாத்மாக்களாயுள்ள நம்மைச்சேர்ந்த அனைவருள்ளும் இப்பொழுது பீஷ்மருக்குப்பிறகு தகுந்தவனான எவனைத் தேர்ந்தெடுத்து, யுத்தரங்கத்தில் ஸேனாபதியாகச்சொல்வாயோ அவனை நாமெல்லோரும் ஒன்றுசேர்ந்து சேனாபதியாகச்செய்வோம். சம்சயமில்லை' என்றான்.

கர்ணன், 'மகாத்மாக்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான இவர்களெல்லோருமே ஸேனாபதியாகவிருக்கும் நிலைமையை அடையத்தகுந்தவர்கள். இந்தவிஷயத்தில் ஆலோசனை செய்யத்தக்கதில்லை. இவர்களெல்லோரும் சிறந்தகுலம், தேகம், ஞானம், பலம், பராக்ரமம், புத்தி இவைகளையுடையவர்களும் சாஸ்திரங்களை அறிந்தவர்களும் புத்திசாலிகளும் யுத்தங்களில் திரும்பாதவர்களுமாயிருக்கிறார்கள்.

ஆனால், ஒரேஸமயத்தில் அவர்களெல்லோரும் தலைவர்களாக ஏற்படுத் தத் தகுந்தவர்களாகார். எந்தமனிதனிடத்தில் விசேஷமான குணங் களிருக்கின்றனவோ அப்படிப்பட்ட ஒருவனே தலைவனாக ஏற்படுத் தத்தக்கவன். ஒருவரையொருவர் முந்துபவர்களான இவர்களுள் ஒரு வனை நீ தலைவனாக ஏற்படுத்துவாயானால் உனக்கு நன்மையைத்தேடு கிறவர்களான மற்றவர்கள் மனவெறுப்புற்றவர்களாகி நிச்சயமாக யுத் தம் செய்யமாட்டார்கள். எல்லா யுத்தவீரர்களுக்கும் ஆசார்யரும் பிராயமுதிர்ந்தவரும் குருவும் சஸ்திரங்களைத்தரித்தவர்களுள் சிரேஷ் டருமான இந்தத்துரோணர் ஸேனாதிபதியாக ஏற்படுத்தத் தகுந்தவர். ஜயிக்கமுடியாதவரும் சஸ்திரதாரிகளுள் சிறந்தவருமான துரோணா சார்யரிருக்கும்பொழுது சுக்கிரனுக்கும் பிருஹஸ்பதிக்கும் ஸமமான இந்தத்துரோணரைக்காட்டிலும் வேறெவன் ஸேனாபதியாகலாம்? ஓ! பாரத! யுத்தபூமியில் ஸஞ்சாரஞ்செய்கின்ற துரோணரை யுத்தத் தில் பின்தொடர்ந்து செல்லக்கூடிய மனிதன்கூட உன்னுடைய எல்லா அரசர்களுள்ளும் இல்லை ராஜனே! உனக்கு ஆசாரியராயிருக் கிற இந்தத்துரோணர் ஸேனாபதிகளும் வில்லாளிகளும் புத்திமான் களுமாகிய எல்லாருள்ளும் சிறந்தவர். துரியோதன! யுத்தத்தில் அசுரர்களை ஜயிக்க எண்ணங்கொண்ட தேவர்கள் ஸுப்ரம்மண்ய ரை ஸேனாபதியாக ஏற்படுத்தியதுபோல ஆசார்யரான துரோணரைச் சீக்கிரமாக ஸேனாபதியாக ஏற்படுத்திவிடு' என்றான்.

---

ஆறாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)



(துரியோதனன் துரோணரிடம் சென்று ஸேனாபதித் தன்மையை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினது.)

கர்ணனுடைய வார்த்தையைக்கேட்டுத் துரியோதனராஜன், அப் பொழுது, சேனையின் நடுவிலிருக்கின்ற துரோணரைநோக்கி இந்த வார்த்தையைச்சொல்லலானான். குருவே! ஜாதியின்மேன்மையினாலும் உயர்குலப்பிறப்பினாலும் சாஸ்திரஞானத்தினாலும் வயதினாலும் புத்தி யினாலும் வீர்யத்தினாலும் ஸாமர்த்தியத்தினாலும் பிறரால் ஜயிக்க முடியாததன்மையாலும் அர்த்தசாஸ்திரத்திலுள்ள அறிவினாலும் நீதியினாலும் ஜயத்தினாலும் தவத்தினாலும் நன்றியறிவினாலும் சிறந்தவரும் எல்லாக்குணங்களுமமைந்தவருமான உமக்கொப்பான

ரக்ஷகர் அரசர்களுள் வேறுயாருமில்லை. பிராம்மணோத்தமரே! அப்படிப்பட்டநீர் எல்லாத்தேவர்களையும் இந்திரன் பாதுகாப்பதுபோல எங்களைப் பாதுகாக்கவேண்டும். உம்மைச் சேனாபதியாகக்கொண்டு சத்துருக்களை ஜயிக்கவிரும்புகிறோம். ருத்திரர்களுக்குக் காபாலிபோலவும், வஸுக்களுக்குப் பாவகன்போலவும், யக்ஷர்களுக்குக் குபேரன்போலவும், தேவதைகளுக்கு இந்திரன்போலவும், பிராம்மணர்களுக்கு வஸிஷ்டர்போலவும், தேஜஸுகளுக்குச் சூரியன்போலவும், பித்ருக்களுக்குத் தர்மராஜன்போலவும், ஜலஜந்துக்களுக்கு வருணன்போலவும், நக்ஷத்திரங்களுக்குச் சந்திரன்போலவும், அசுரர்களுக்குச் சுக்கிரன்போலவும், எல்லா உலகங்களுக்கும் எல்லா வஸ்துக்களுக்கும் [1] எல்லாவற்றினுடைய படைப்பையும் காப்பையும் அழிப்பையும் செய்வதில்வல்ல பிரபுவான நாராயணர்போலவும் இவ்விதமான என்னுடைய ஸேனாபதிகளுக்கெல்லாம் நீர் தலைவராயிரும். தோஷமற்றவரே! பதினோர் அக்ஷௌஹிணிகளும் உம்முடைய வசத்தையடைந்திருக்கட்டும். அணிவகுத்து எதிரணிவகுத்து அசுரர்களை இந்திரன் நாசஞ்செய்ததுபோலச் சத்துருக்களை நாசஞ்செய்யும். தேவர்களுக்கு முன்னிலையில் ஸுப்ரம்மண்யர் செல்வதுபோல நீர் எங்களுக்குமுந்திச் செல்லவேண்டும். பசுவின் கன்றுகள் விருஷபத்தைத் தொடர்ந்து செல்வதுபோல் யுத்தத்தில் உம்மைப் பின்தொடருவோம். உக்கிரமான வில்லைக் கையிலேந்தியவனும் சிறந்த வில்லாளியும் திவ்யமான காண்டீவத்தை ஒலிக்கும்படிசெய்பவனுமான அர்ஜுனன், யுத்தரங்கத்தில் உம்மைப்பார்த்துவிட்டுப் பாணப்பிரயோகம் செய்யமாட்டான். புருஷோத்தமரே! நீர் ஸேனாபதியாயிருந்தால் பந்துக்களோடும் மித்திரர்களோடும்கூடிய யுதிஷ்டிரனை யுத்தத்தில் நிச்சயமாக ஜயிப்பேன்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட பிறகு அரசர்கள் உரத்தஸிம்மநாதத்தினாலே உம்முடையகுமாரனை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு துரோணரைப் பார்த்து, 'ஜய ஜய' என்று சொன்னார்கள். ஸைனிகர்களும் ஸந்தோஷத்தோடு துரியோதனனை முன்னிட்டுக்கொண்டு மிக்ககீர்த்தியை விரும்பித் துரோணரை விருத்தியடையச்செய்தார்கள். ராஜனே! பிறகு, துரோணர் துரியோதனனைநோக்கி இந்த வார்த்தையைச் சொல்லலானார்.

---

[1] ஒருசொல் விடப்பட்டது.

## ஏழாவது அத்யாயம்.

## த்ரோணாபிஷேகபர்வம். (தொடர்ச்சி.)

(துரியோதனன் துரோணரை ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்வித்ததும், துரோணருடைய யுத்தவர்ணனையும்.)

துரோணர், 'ராஜனே! நான் ஆறு அங்கங்களோடுகூடியவேதத்தையும், மனுதர்மசாஸ்திரத்தில்சொல்லப்பட்ட தண்டநீதியையும், முக்கண்ணரைத்தேவதையாகக்கொண்ட அம்புகளையும், அஸ்திரங்களையும் பலவிதசஸ்திரங்களையும் அறிவேன். ஜயத்தில்விருப்பமுள்ளவர்களான உங்களால் என்னிடத்தில் எந்தக்குணங்கள் கூறப்பட்டனவோ அவைகளெல்லாவற்றையும் நான் வெளியிடஎண்ணிப் பாண்டவர்களோடு போர்புரிவேன். ராஜனே! பார்ஷதனானத்ருஷ்டத்யும்னனை யுத்தத்தில் நான் எவ்விதத்திலும் கொல்லேன்; புருஷஸ்ரேஷ்டனான அந்தத்ருஷ்டத்யும்னன் என்னைக்கொல்வதற்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக்கிறானல்லனோ? (பாண்டவ)ஸைன்யங்களை நாசஞ்செய்து கொண்டு எல்லாஸோமகர்களோடும் நான் போர்புரிவேன். பாண்டவர்கள் யுத்தரங்கத்தில் என்னையெதிர்த்துச் சந்தோஷத்தோடு போர்புரியப்போவதில்லை' என்றுசொன்னார். அரசரே! இவ்வாறு அனுமதி கொடுக்கப்பட்ட உம்முடையகுமாரனான அந்தத்துர்யோதனன், பிறகு, சாஸ்திரங்களில்காணப்பட்டமுறைப்படி துரோணரைச் சேனாபதியாகச்செய்தான். பிறகு, துர்யோதனன்முதலாகிய அரசர்கள் ஸ்வஸ்திவாசனத்வனிகளோடும், ரமணீயங்களும் மனத்துக்கினியவைகளுமான மற்ற (மங்களத்வனிகளோடும்) முற்காலத்தில் இந்திரன்முதலானதேவர்கள் ஸ்கந்தரைத் தேவஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகம் செய்ததுபோலத் துரோணரை ஸேனாபதிஸ்தானத்தில் அபிஷேகஞ் செய்தார்கள். அப்பொழுது, துரோணர்ஸேனாபதியாகச்செய்யப்பட்டவுடன், நான்குவிதவாத்யகோஷத்தாலும் சங்கங்களினுடையபெருமுழக்கத்தாலும் சேனைகளுக்கு ஆனந்தமுண்டாயிற்று. பிறகு, ஆசீர்வாதத்வனிகளாலும் புண்யாஹகோஷத்தாலும் ஸ்தோத்திரங்களாலும் [1] ஸூதர்கள், [2] மாகதர்கள், [3] வந்திகள் இவர்களுடைய கானத்வனிகளாலும் பிராமணோத்தமர்களின் ஜயசப்தங்களினாலும் அவ்வாறே மடந்தையரின் நாட்டியங்களாலும் விதிப்படி துரோணரைக் கௌரவித்து (அவரால்) பாண்டவர்கள் ஜயிக்கப்பட்டார்களென்று

1,2,3. ஆதிபர்வம் 354-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

எண்ணினார்கள். மஹாரதரான பாரத்வாஜர் ஸேனாபதிஸ்தானத்தைப் பெற்று யுத்தஞ்செய்ய எண்ணங்கொண்டு ஸைனிகர்களை அணிவகுத்து உம்முடைய குமாரர்களோடுசேர்ந்து யுத்தத்திற்குச்சென்றார். ஸிந்துதேசத்தரசன் கலிங்கதேசத்தரசன் உமது குமாரனான விகர்ணன் ஆகிய இவர்கள் கவசங்களைப்பூண்டு துரோணருடைய வலப்பக்கத்தை அடைந்து நல்லமுயற்சியுடன் நின்றார்கள். சகுனியானவன் மிகச் சிறந்த குதிரைவீரர்களுடனும் பளபளப்புள்ள ஈட்டிகளால் யுத்தம் செய்கின்ற காந்தாரர்களுடனும்சேர்ந்து அவர்களுக்கு முன்னிலையில் சென்றான். கிருபர் கிருதவர்மா சித்ரஸேனன் விவிம்சதி துச்சாஸனன் முதலானமற்றவர்களும் ஸன்னத்தர்களாக இடப்பக்கத்தைக் காத்தார்கள். ஸுதக்ஷிணர்களை முன்னிட்டவர்களான காம்போஜர்களும் யவனர்களும் சகர்களும் மிக்கவேகமுள்ள குதிரைகளோடு அவர்களுக்கு முன் சென்றார்கள். மத்ரர்களும், அம்பஷ்டர்களும், த்ரிகர்த்தர்களும், மேனாட்டுவடநாட்டரசர்களும், மாலவர்களும், சிபிகளும், சூரஸேனர்களும், மலதர்களுடன்கூடின சூத்ரர்களும், ஸௌவீரர்களும், கீழ்நாட்டிலும் தென்னாட்டிலுமுள்ள எல்லாக்கிதவர்களும், உம்முடைய குமாரனை துர்யோதனனை முன்னிட்டுக்கொண்டு ஸூதபுத்திரனை கர்ணனுக்குப்பின் உம்முடையகுமாரர்களோடுசேர்ந்து தங்களுடைய ஸைன்யங்களை உத்ஸாஹப்படுத்திக்கொண்டு சென்றார்கள். எல்லா யுத்தவீரர்களுக்கும் சிரேஷ்டனும் சூரியபுத்திரனுமான கர்ணன் ஸேனைகளில்பலத்தையுண்டுபண்ணிக்கொண்டு எல்லாவில்லாளிகளுக்கும் முதலில் சென்றான். ஜ்வலிக்கின்றதும் பெரிதானஉருவமுள்ளதுமான அந்தக்கர்ணனுடைய கச்சைவடிவமானபெரியகொடியானது தன்னுடையஸைனியங்களை ஸந்தோஷிக்கும்படிசெய்துகொண்டு சூரியனுக்கொப்பானஒளியோடு விளங்கியது. கர்ணனைப்பார்த்தபிறகு ஒருவனாவது பீஷ்மருடையதுக்கத்தை நினைக்கவில்லை. எல்லா அரசர்களும் கௌரவர்களோடுசேர்ந்து துக்கத்தைவிட்டவர்களுமானார்கள். அவ்விடத்திலுள்ள அநேகயுத்தவீரர்கள் ஸந்தோஷமுள்ளவர்களாக, 'பாண்டவர்கள் ரணகளத்தில் கர்ணனைப்பார்த்துவிட்டு யுத்தத்தில் நிற்கப் போகிறதில்லை. கர்ணனோ ரணகளத்தில் இந்திரனோடுகூடின தேவர்களையும் ஜயிக்கவல்லவன். அவ்வாறிருக்க, மிகக்குறைந்தபலபராக்கிரமங்களையுடைய பாண்டுகுமாரர்களை யுத்தத்தில்ஜயிப்பானென்பதில் ஸந்தேகமென்ன?' என்று விரைவாகப்பேசிக்கொண்டார்கள். ராஜரே! 'பாகுபலமுள்ளவரானபீஷ்மராலே பார்த்தர்கள் யுத்தத்தில் காக்கப்பட்டார்கள். கர்ணனோ அவர்களை யுத்தத்தில் கூர்மையானஅம்புகளால்

நாசஞ்செய்யப்போகிறான்' என்று இவ்வாறு அவர்கள் பரஸ்பரம்பேசிக்கொண்டு மிக்கஸந்தோஷமுள்ளவர்களாக ராதேயனைப் பூஜித்துக்கொண்டும் புகழ்ந்துகொண்டும் புறப்பட்டார்கள். த்ரோணராலே நம்முடைய ஸேனையில் சகடவ்யூகமானது அமைக்கப்பட்டிருந்தது. பாரதரே! ராஜரே! மஹாத்மாக்களான சத்துருக்களுடைய ஸேனையில் அன்புடன்கூடின தர்மராஜராலே க்ரௌஞ்சவ்யூஹமே ஏற்படுத்தப்பட்டிருந்தது. அவர்களுடைய வ்யூஹத்திற்கு முன்னால் புருஷசிரேஷ்டர்களான கிருஷ்ணார்ஜுனரிருவரும் வானரக்கொடியைத் தூக்கிநிறுத்திக்கொண்டு நின்றார்கள். எல்லாச்சேனைகளுள்ளுஞ்சிறந்ததும் எல்லாவில்லாளிகளுக்கும் இருப்பிடமும் சூரியனுடையமார்க்கத்தை அடைந்ததுமான, மகாதேஜஸ்வியும் பாண்டுபுத்ரனும் மகாத்மாவும் புத்திசாலியுமான அர்ஜுனனுடைய கொடியானது, யுகாந்தகாலத்தில் மிகவும்ஜ்வலிக்கின்ற சூரியன் பூமியைவிளங்கச்செய்வதுபோல, அந்தச்சேனையை விளக்கிக்கொண்டு எங்கும்காணப்பட்டது. யுத்தவீரர்களுள் அர்ஜுனன் சிறந்தவன்; விற்களுள் காண்டீவம் சிறந்தது; பிராணிகளுள் வாஸுதேவர் சிறந்தவர்; சக்ரங்களுள் ஸுதர்சனம் சிறந்தது. இந்தநான்குதேஜஸுகளையும்வஹிப்பதும் வெண்மையான குதிரைகளோடுகூடியதுமான அர்ஜுனனுடையரதமானது, எடுக்கப்பட்டகாலசக்ரம்போலச் சத்துருக்களுக்குமுன்னிலையில் நின்றது. உம்மைச்சேர்ந்தவர்களுடையமுன்னிலையில் கர்ணனும் சத்துருவீரர்களின்முன்னிலையில் தனஞ்சயனுமாக இவ்விதம் மிக்கபலசாலிகளான அந்தஇருவரும் பகைமுள்ள ஸேனைகளுக்குமுன் சென்றார்கள். பிறகு, ஜயத்தில்அதிகஆவலுடையவர்களான கர்ணன் பாண்டவன் இருவரும் ஒருவரையொருவர்கொல்ல எண்ணங்கொண்டு அப்பொழுது யுத்தகளத்தில் ஒருவரையொருவர் பார்த்தார்கள். பிறகு, மகாரதிகரானபாரதவாஜர், சீக்கிரமாகப்புறப்பட்டவுடன், கோரமானஸிம்மநாதத்தினாலே பூமி மிகநடுங்கியது. பிறகு, காற்றினால் தூற்றப்பட்டதும் பட்டாடைக்குவியல்போன்றதும், அடர்ந்ததுமான புழுதியானது சூரியனுடன்கூடிய ஆகாயத்தை இடைவெளியில்லாமல் மறைத்தது. ஆகாயமானது மேகமில்லாமலிருந்தும் இறைச்சிகளையும் எலும்புகளையும் ரக்தங்களையும் பொழிந்தது. ஓ! ராஜரே! அப்பொழுது உமதுஸேனையின்மேல் கிருத்ரங்களும் ஸ்யேனங்களும் கொக்குகளும் பருந்துகளும் ஆயிரக்கணக்கான காக்கைகளும் நான்குபக்கங்களிலுமிருந்துவிழுந்தன. நரிகளும், பயத்தைக்கொடுக்கக்கூடிய குரூரமானசப்தங்களைவெளியிட்டு ஊளையிட்டன. அவை

கள் மாம்ஸங்களைப்பக்ஷிக்கவும் ரக்தத்தைப்பானம்பண்ணவும் விருப்ப முள்ளவைகளாகிப் பலவாறு உம்முடையசேனையை அப்பிரதக்ஷிண மாகச் சுற்றிவந்தன. இடியோடும் நடுக்கத்தோடுங்கூடியதும் ஜ்வலிக் கின்றதுமான எரிநக்ஷத்திரமானது வாஸினுமேல எல்லாஇடத்தையும் சூழ்ந்துகொண்டு பிரகாசத்துடனே யுத்தகளத்தில் விழுந்தது. ஓ! ராஜரே! ஸேனாபதியானதுரோணர் புறப்பட்டவுடன், மின்னலுள்ள மேகத்துடன்கூடின ஒருபெரியவட்டமானரேகையானது ஸூர்ய னுக்கு உண்டாயிற்று. யுத்தகளத்தில் வீரர்களுக்கு உயிர்ச்சேதத்தை யுண்டுபண்ணக்கூடிய இவ்விதமானஉத்பாதங்களும் மற்றும் மிக்க பயங்கரமான அநேகஉத்பாதங்களும் தோன்றின. பிறகு, ஒருவரை யொருவர் கொல்வதில் எண்ணங்கொண்ட குருபாண்டவஸைன்யங் களுக்குச் சப்தத்தால் உலகத்தை நிரப்புகின்றதான போர்நடந்தது. ஜயத்தில் ஆவலுடையவர்களும் நன்றாயடிக்குந்தன்மையுள்ளவர் களுமான அந்தப்பாண்டவர்களும் கௌரவர்களும் எதிர்த்துப் பரஸ் பரம் மிகுந்தகோபத்துடன் கூர்மையானசஸ்திரங்களாலே அடித்துக் கொண்டார்கள். உறுதியானவில்லைக் கையில்பிடித்தவரும், மிகுந்த காந்தியுள்ளவருமான அந்தத்துரோணாசார்யர் கூர்மையான அம்புகளை இறைத்துக்கொண்டு வேகத்தோடு பெரிதானபாண்டவசேனையை எதிர்த்துவந்தார். வேந்தரே! அந்தஸமயத்தில் துரோணர் எதிர் நோக்கிவருகின்றதைக்கண்டு, பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்களுடன் கூடித் தனித்தனியாக அம்புமழைகளால் அவரை எதிர்த்தார்கள். துரோணராலே நன்றாகக்கலக்கப்படுவதும் உடைக்கப்படுவதுமான அந்தப்பெரியஸேனையானது, பாஞ்சாலர்களோடுகூடக் காற்றினால் மேகங்கள் சிதறஅடிக்கப்படுவதுபோலச் சிதறஅடிக்கப்பட்டது. துரோணர் இந்தயுத்தத்தில் நொடிப்பொழுதுக்குள் பலவிதமிவ்யாஸ் திரங்களைவெளிப்படுத்திப் பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் ஹிம்ஸித்தார். இந்திரனால் அசுரர்கள் அடிக்கப்படுவதுபோலத் துரோணராலே அடிக்கப்படுகின்றவர்களான த்ருஷ்டத்யும்னன்முத லான அந்தப் பாஞ்சாலர்கள் மிகநடுக்கமுற்றார்கள். பிறகு, திவ் யாஸ்திரங்களையறிந்தவனும் சூரனும் மகாரதனுமான த்ருஷ்டத் யும்னனும் துரோணருடைய ஸேனையை அம்புமழையினாலே அநேகவிதமாகப் பிளந்தான். பிறகு, பலசாலியான அவன் அம்பு மழையினாலே துரோணருடைய அம்புமழைகளைத் தடுத்து எல்லாக் கௌரவர்களையும் கொன்றான். பிறகு மகாவில்லாளியான துரோணர் ரணகளத்தில் தம்ஸேனையை அடக்கி நன்றாக நிலைபெற்றிருக்கும்படி

செய்து த்ருஷ்டத்யும்னனைக்குறித்து எதிர்த்து அருகிற்சென்றார். அவர், கோபமூண்ட இந்திரனானவன் வேகமாக அசுரர்களின்மீது அம்புகளைப் பொழிவதுபோல் த்ருஷ்டத்யும்னன்மீது மிகவும் பெரிதான அம்புமழையைப் பொழிந்தார். துரோணராலே அம்புகளால் நடுங்கும்படி செய்யப்படுகின்ற அந்தப்பாண்டவர்களும், ஸ்ருஞ்சயர்களும், ஸிம்மத்தினாலே மற்றமிருகங்கள் அடிக்கப்படுவதுபோல அடிக்கடி அடிக்கப்பட்டார்கள். அரசரே! பலமுள்ளவரான துரோணர் பாண்டவர்களுடைய ஸேனையின்மீது கொள்ளிவட்டம்போலச் சுற்றிச்சுற்றித் தாக்கினார். அஃது ஆச்சரியமாயிருந்தது. கந்தர்வநகரத்துக்கு ஒப்பானதும், சாஸ்திரத்தில்கண்டபடி அமைக்கப்பட்டதும், காற்றினாலசைகின்ற கொடித்துணிகளையுடையதும், ஸந்தோஷத்தையுண்டுபண்ணக்கூடியதும், நர்த்தனஞ்செய்கின்ற குதிரைகளுள்ளதும், ஸ்படிகம்போல மாசற்றகொடிமரமுள்ளதும், பகைவர்களுக்கு நடுக்கத்தையுண்டுபண்ணக்கூடியதுமான சிறந்ததேரின்மீதேறிக்கொண்டு துரோணர் சத்துருக்களுடைய ஸேனையை ஸம்ஹாரம்செய்தார்.

---

## எட்டாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருடைய பராக்ரமமும் மரணமும்.)

குதிரைகளையும் ஸாரதிகளையும் தேர்களையும் யானைகளையும் அவ்வாறு துரோணர் வதஞ்செய்வதைக்கண்ட பாண்டவர்கள் மனவருத்தத்தையடைந்தார்கள்; அவரை நான்குபக்கங்களிலும்சூழ்ந்துநின்று தடுக்கவில்லை. பிறகு, யுதிஷ்டிரராஜர், 'முயற்சியுடன் துரோணரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்து தடுக்கவேண்டும்' என்று த்ருஷ்டத்யும்னனையும் அர்ஜுனனையும்நோக்கிச் சொன்னார். ராஜரே! அந்த யுத்தகளத்தில் அர்ஜுனனும் பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனும் பாண்டவனை அனுஸரித்துவந்த ஸைநிகர்களும் மற்றுமுள்ள மஹாரதர்களான அரசர்களும் அங்கு அருகில்வந்து துரோணரை எதிர்த்தார்கள். ராஜரே! கேகயர்களும் பீமஸேனனும் அபிமன்யுவும் கடோத்கசனும் யுதிஷ்டிரரும் நகுலஸகதேவர்களும் விராடராஜனும் த்ருபதனும் அவனுடையகுமாரர்களும் மிக்களிப்புள்ள த்ரௌபதீகுமாரர்களும்

ஸாத்யகியும் த்ருஷ்டகேதுவும் மிக்ககோபமுண்ட சேகிதானனும் மஹாரதனனையுயுத்ஸுவும் பாண்டவனையனுஸரித்துச்செல்லுகின்ற மற்றஅரசர்களும் தங்கள்வம்சத்திற்கும் வீர்யத்துக்கும் தகுந்த செய்கைகளைப் பலவாறாகச்செய்தார்கள். பாரத்வாஜர், ரணகளத்தில் பாண்டவர்களாலே நன்றாகப்பிளக்கப்படுகின்ற அந்தஸேனையைக் கண்டு கோபத்தினால் கண்களைஉருட்டிவிழித்துப் பார்த்தார். யுத்தத்தில் ஒருவராலும்ஜயிக்கமுடியாத அந்தத்துரோணர் ரதத்தின்மேலிருந்து கடுங்கோபத்தையடைந்து காற்றானது பெரியமேகங்களைச் சிதறஅடிப்பதுபோலப் பாண்டவசேனையைச் சிதறஅடித்தார். துரோணர் முதியவராயிருந்தும் யௌவனமுள்ளவர்போல ரதங்களுக்கும், குதிரைகளுக்கும், யுத்தவீரர்களுக்கும், யானைகளுக்கும் நான்கு பக்கத்திலும் இங்குமங்குமாக ஓடிக்கொண்டு உன்மத்தன்போல் ஸஞ்சாரம்பண்ணினார். ராஜரே! இரத்தத்தினாற்பூசப்பட்ட மேனியையுடையவைகளும் சிவந்தநிறமுள்ளவைகளும் காற்றைப்போன்றவேகமுடையவைகளுமான துரோணருடைய அந்த உத்தமஜாதிக்குதிரைகள் களைப்படையாமல் ஸுகமாகச்சென்றன. யமன்போலக்கோபித்து எதிர்த்துவருகின்றவரும் விரதங்களை அனுஷ்டித்தவருமான அந்தத் துரோணரைக்கண்டு பாண்டவனுடையயுத்தவீரர்கள் ஆங்காங்கு ஓடினார்கள். அதிகமாகஓடுகின்றவர்களும், மீண்டும் திரும்பிவருகின்றவர்களும், பார்க்கின்றவர்களும், நிற்கின்றவர்களுமான அந்தப்பாண்டவனைச்சேர்ந்த யுத்தவீரர்களுடைய பயங்கரமானசப்தமானது அதியுக்கிரமாயிருந்தது. சூரர்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணக்கூடியதும் பயந்தவர்களுக்குப் பயத்தைவிருத்திபண்ணக்கூடியதுமான (அந்தச்சப்தமானது) நான்குபக்கங்களிலும் ஆகாசம், பூமிஇவைகளினுடைய இடைவெளியைநிரப்பியது. பிறகு, மறுபடியும் துரோணர் யுத்தகளத்தில் (தம்) பெயரைச்சொல்லிக்கொண்டும் நூற்றுக்கணக்கான அம்புகளைச் சத்துருக்களின்மீது இறைத்துக்கொண்டும் தம் ஸ்வரூபத்தை அதிபயங்கரமாகக்காட்டினார். பலமுடையவரும் வயது சென்றவருமான அந்தத்துரோணர் யௌவனமுடையவர்போலப் பாண்டுபுத்திரனுடைய அந்தச்சேனைகளில் யமன்போல ஸஞ்சாரம் செய்தார். துரோணர் உக்ரஸ்வரூபத்தோடுகூடியவராக (சத்துருக்களின்) தலைகளையும் பூஷணங்களையணிந்த கைகளையும் அறுத்துத் தேர்களின்நடுவிடங்களைச் சூன்யமாக்கிப் பெரியஆரவாரஞ்செய்தார். பிரபுவே! அவருடையஸந்தோஷத்தினாலுண்டான உரத்தசப்தத்தினாலும் அம்புமழையினாலும், யுத்தவீரர்கள், குளிரினால்பீடிக்கப்பட்ட

பசுக்கள்போல யுத்தத்தில் அதிகநடுக்கமுற்றார்கள். துரோணருடைய தேரொலியினாலும் நாண்உரைதலாலும், வில்லோசையினாலும் ஆகாயத்தில் பெரியசப்தமுண்டாயிற்று. பிறகு, ஆயிரமாயிரமாக அவருடையவில்லினின்று வெளிப்படுகின்ற அம்புகள் எல்லாத்திக்குக்களையும் வியாபித்துக்கொண்டு யானைகள், குதிரைகள், தேர்கள், காலாட்படைகள் இவைகளின்மீது விழுந்தன. மிக்கவேகமுள்ளவில்லையேந்தியவரும், அஸ்திரங்களாகிற ஜ்வாலையுள்ளநெருப்புப்போன்றவருமான அந்தத்துரோணரைப் பாஞ்சாலர்கள் பாண்டவர்களோடுசேர்ந்து அருகில்நெருங்கினார்கள். துரோணர் யானைகளையும், தேர்களையும், காலாட்களையும், குதிரைகளையும், யமனுடையவீட்டுக்கு அனுப்பினார். அதிசீக்கிரமாகப் பூமியை ரக்தச்சேறுள்ளதாகச் செய்தார். உத்தமமான அஸ்திரங்களைச் சொரிகின்றவரும், அம்புகளை எப்பொழுதும் எய்கின்றவருமான துரோணராலே ஏற்படுத்தப்பட்ட அம்புக்கூட்டங்களே திக்குக்களில் காணப்பட்டன. காலாட்படைகள் தேர்கள் குதிரைகள் யானைகள் இவைகளுக்கு நான்குபக்கத்திலும் ஸஞ்சாரம்செய்கின்ற அவருடையகொடியானது மேகங்களில் மின்னல்போலக் காணப்பட்டது. ஆண்மையிற்சிறந்தவரும் வில்லையும் அம்புகளையும் கையில்கொண்டவருமான அந்தத்துரோணர் கேகயதேசத்தரசர்களுள் முக்கியமான ஐவர்களையும் பாஞ்சாலராஜனையும் அம்புகளாலடித்து யுதிஷ்டிரருடைய படையை எதிர்த்துவந்தார். பீமஸேனனும் தனஞ்சயனும் சினியினுடைய பேரனான ஸாத்யகியும் த்ருபதனுடையகுமாரனும் சைப்யனுடையகுமாரனும் காசிராஜனும சிபியும் அந்தத்துரோணரைப்பார்த்து ஸிம்மநாதஞ்செய்து அம்புத்திரள்களை நன்றாகஇறைத்தார்கள். வரிசையாய்விடப்படும் அவர்களுடையஅம்புகள் துரோணருடையஅம்புகளால் அழுக்கப்பட்டு யுத்தத்தில் பயனற்றவேகத்தையுடையவைகளாகவும் பூமியில்புரளுகின்றவைகளாகவும் நதிகளுடைய திட்டிலுள்ள நாணல்முளைகள்போலக் காணப்பட்டன. துரோணருடையவில்லினின்றுவிடப்பட்டனவும்,பொன்னாலசித்திரவேலைசெய்யப்பட்ட கனுக்களுள்ளனவுமான அந்தஅம்புகளானவை யானைகள் குதிரைகள் இவற்றினசரீரங்களையும் யௌவனமுள்ள யுத்தவீரர்களுடையசரீரங்களையும பிளந்து ரக்ததினாற்பூசப்பட்ட இறகுகளுள்ளனவாகப் பூமியையடைந்தன. அந்தயுத்தபூமியானது அம்புகளாற் பிளக்கப்பட்டு வீழ்ந்திருக்கின்ற யுத்தவீரர்களுடைய கூட்டங்களாலும், ரதங்களாலும், யானைகளாலும், குதிரைகளாலும் நன்றாகமூடப்பட்டு, கார்மேகங்களால்சூழப்பட்ட ஆகாயம்போலாயிற்று. உம்மு

டையபுத்திரர்களுக்கு ஐசுவரியத்தையுண்டுபண்ணுவதில் விருப்பமுள்ள துரோணர், ஸாத்யகியையும் பீமனையும் அர்ஜுனனையும் ஸேனுபதியான (த்ருஷ்டத்யும்னனையும், அபிமன்யுவையும் பாஞ்சாலராஜனையும் காசிராஜனையும் மற்றுமுள்ளவீரர்களையும் யுத்தத்தில் அடித்தார். கௌரவர்களுக்குத்தலைவரே! அரசரே! மஹாத்மாவான துரோணர் யுத்தத்தில் இந்தக்காரியங்களையும் இன்னும்மற்றக்காரியங்களையும் செய்து பிரளயகாலத்துச் சூரியன்போல ஜனங்களை நன்ருகத்தவிக்கச் செய்துவிட்டு இம்மண்ணுலகினின்று விண்ணுலகை அடைந்தார். பொற்றேருள்ளவரும் சூரருமான அந்தத்துரோணர் யுத்தத்தில் பாண்டவர்களுடைய யுத்தவீரர்களை, இவ்வாறு லக்ஷம் லக்ஷமாகக்கொன்றுவிட்டு (முடிவில்) த்ருஷ்டத்யும்னனுல் வீழ்த்தப்பட்டார். தைரியசாலியான துரோணர் (யுத்தத்தில்) திரும்பாத அக்ஷௌஹிணிக்குமேற்பட்ட சூரர்களுடைய சேனையைக் கொன்றுவிட்டுப் பிறகு உத்தமமான கதியையடைந்தார். மன்னரே! பொன்னுலாகிய தேருள்ள அவர், ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்து அமங்களகரர்களும் கொடியசெய்கைகளையுடையவர்களும் பாஞ்சாலனேடு கூடியவர்களுமான பாண்டவர்களாலே கொல்லப்பட்டார். ராஜரே! பிறகு யுத்தத்தில் ஆசார்யர் கொல்லப்பட்டவுடனே, பிராணிகள் ஸைனியங்கள் இவற்றின் சப்தமானது ஆகாயத்தில் தோன்றியது. 'ஆ! ஆ! இது நிந்திக்கத்தக்கது' என்கிற பிராணிகளுடைய சப்தமானது ஸ்வர்க்கத்தையும் பூமியையும் ஆகாசத்தையும் திக்குக்களையும் திக்கோணங்களையும் எதிரொலியிடும்படி செய்து அதிகமாகத் தோன்றியது. அவ்விடத்தில் மகாரதரான பாரத்வாஜர் கொல்லப்பட்டதைத் தேவதைகளும் பிதிருக்களும் அந்தத்துரோணருடைய முந்தியபந்துக்களும் கண்டார்கள். பாண்டவர்களோ ஜயத்தையடைந்து ஸிம்மநாதங்களைச் செய்தார்கள். பெரிதான ஸிம்மநாதத்தினுலே பூமி மிக நடுக்கமுற்றது. விசித்திரமானதும் தங்கத்தாலலங்கரிக்கப்பட்டதுமான கொடியையுடையவரும் பொற்றேருள்ளவரும் மகாரதருமான துரோணர் யுத்தத்தில் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு (யுத்தரங்கத்தில்) ஸ்ருஞ்சயர்களையும் துருபதகுமாரர்களையும்தவிர வேறு ஒருவரும் ஸந்தோஷமடையவில்லை" என்றுன்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் துரோணரது குணங்களைச்சொல்லித் துக்கித்தது.)

திருதராஷ்டிரன், "ஆயுதம்பிடித்த எல்லாவீரர்களுள்ளும் அஸ்திரங்களில் அவ்விதமான ஸாமர்த்தியமுள்ள துரோணர் எதைச் செய்துகொண்டிருக்கும்தருணத்தில் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் யுத்தத்தில் அவரை வதஞ்செய்தார்கள்? துரோணர் எதனால் மரணமடைந்தார்? அவருடைய தேர் சாய்ந்ததா? அம்புகளை எய்யும் காலத்தில் வில் முறிந்ததா? அஜாக்ரதையாயிருந்தாரா? அப்பா! சத்துருக்களால் தோல்வியடையும்படி செய்யமுடியாதவரும் தங்கக்கட்டுகளுள்ள அம்புத்திரள்களைப் பலவாறு இறைக்கின்றவரும் ஹஸ்தலாகவமுள்ளவரும் ஸமர்த்தரும் விசித்திரமாக யுத்தம் செய்கின்றவரும் அதிதூரத்திலிருந்தே அம்புகளால் லட்சியத்தை அடிக்கும் திறமையுடையவரும் ஐம்பொறிகளையும் அடக்கினவரும் அஸ்திரயுத்தங்களில் கரைகண்டவரும் திவ்யாஸ்திரங்களைத் தரித்தவரும் தவறாத வீரவ்ரதத்தையுடையவரும் யுத்தகளத்தில் முயற்சியோடு குரூரமான செய்கையைச்செய்கின்றவரும் மகாரதிகரும் பிராம்மண ப்ரேஷ்டருமான அந்தத்துரோணரைப் பாஞ்சால ராஜகுமாரனை பார்ஷதன் எங்ஙனம் கொன்றான்? சூரரான துரோணர் மஹாத்மாவான பார்ஷதனால் கொல்லப்பட்டதனால் மனிதனுடைய வல்லமையைக்காட்டிலும் தெய்வமே பலமுள்ளதென்பது எனது நிச்சயமான எண்ணம். எந்த வீரரிடத்தில் நான்குவித[1] அஸ்திரங்களும் நிலைபெற்றிருந்தனவோ அம்புகளையும் அஸ்திரங்களையும் தரித்தவர்களுக்கு ஆசார்யரான அந்தத் துரோணர் கொல்லப்பட்டாரென்று எனக்குச் சொல்லுகிறாய். புலித்தோலால் நாற்புறமும் மூடப்பட்டதும் பொன்னாலலங்கரிக்கப்பட்டதுமான பொற்றேரையுடைய துரோணர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு நான் இப்பொழுது துயரத்தைப் போக்கச் சக்தியற்றவனாயிருக்கிறேன். ஸஞ்சய! மந்தபுத்தியுள்ளவனான நான் துரோணர் கொல்லப்பட்டதைக் கேட்டும் உயிரோடிருந்ததனால் ஒருவனும் பிறனுடைய துயரத்தினால் இறப்பதில்லையென்றும் தெய்வமே சிறந்ததென்றும் யான் நிச்சயமாக நினைக்கிறேன். (மனி

---

[1] ஸந்தானம் ஸம்சோஷணம் ஸம்மோஹனம் ஸம்மாரணம் என நான்கு விதம்.

த்துடைய) முயற்சியானது பிரயோஜனமற்றதன்றோ? துரோணர் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டும் நூறுதுண்டாகச்சிதறாமலிருந்ததலால் மிக்கதிடமான என்மனமானது நிச்சயமாக உருக்கினாலானதுதான். பிரம்மஸம்பந்தம்பெற்றவைகளும் தேவஸம்பந்தம்பெற்றவைகளுமான அம்புகளிலும் அஸ்திரங்களிலும் மேன்மை அடைவதில் விருப்பமுள்ள பிராம்மணர்களும் ராஜகுமாரர்களும் எவரை உபாஸித்தார்களோ அந்தத் துரோணர் மிருத்யுவினால் எவ்வாறு கவரப்பட்டார்? ஸமுத்திரத்தினுடைய வறட்சியைப்போலவும் மேருபர்வதத்தின் சிதறுதலைப்போலவும் சூரியனுடைய வீழ்தலைப்போலவும் துரோணருடையமரணத்தை நான் ஸஹிக்கவில்லை. எவர் துஷ்டர்களுக்குச்சிக்ஷகராகவும் தார்மிகர்களுக்கு ரக்ஷகராகவுமிருந்தாரோ, சத்துருக்களைத்தவிக்கச்செய்பவரானஎவர் பகுத்தறிவில்லாத துர்யோதனன்விஷயமாகப் பிராணனையும் இழந்தாரோ, எவருடைய பராக்கிரமத்தினால் மூடர்களான என்புத்திரர்களுக்கு ஜயத்தில் ஆசையானது இருந்ததோ, புத்தியினால் பிருஹஸ்பதியையும் சுக்கிரனையும் ஒத்த அந்தத் துரோணர் எவ்வாறு கொல்லப்பட்டார்? மஹாதேஜஸ்வியான எந்தத் துரோணர் தமக்குக் கீழ்ப்பட்டவர்களான எல்லா யுத்தவீரர்களும் நிலைத்திருப்பதற்குக் காரணமாக இருந்தாரோ, மிருத்யுவானவன் எவருக்கு வசப்பட்டிருந்தானோ, அவர் மிருத்யுவினால் எவ்வாறு கொல்லப்பட்டார்? சிவப்புநிறமுள்ளவைகளும் பெரிய உருவமுள்ளவைகளும் பொன்வலைகளால் மூடப்பட்டவைகளும் ரதத்தில் பூட்டப்பட்டவைகளும் காற்றின் வேகம்போன்ற வேகமுள்ளவைகளும் யுத்தத்தில் எல்லாச் சஸ்திரங்களையுந்தாண்டிச்செல்லுகின்றவைகளும் பலமுள்ளவைகளும் கனைக்கின்றவைகளும் பழக்கப்பட்டவைகளும் ஸிந்துதேசத்தில் தோன்றியவைகளும் நன்றாகப்பாரத்தைத் தாங்குகின்றவைகளும் உறுதியாக நிற்கின்றவைகளுமான அந்தக் குதிரைகள் போரினிடையில் மனத்தளர்ச்சியடையாமல் நின்றனவா? ஐயனே! சங்கதுந்துபிகோஷங்களால் யுத்தத்தில் கர்ஜிக்கின்ற யானைகளையும் நாணொலியினின்று விடப்படுகின்ற அம்புமழைகளையும் சஸ்திரங்களையும் தாங்குகின்றவைகளும் பகைவர்களை ஜயிப்பதற்கு விருப்பமுற்றவைகளும் சுவாஸத்தை அடக்கியவைகளும் துன்பத்தைப் பாராட்டாமலிருப்பவைகளும் சத்துருக்களால் ஜயிக்கப்படாதவைகளும் விரைவாகச்செல்பவைகளும் பாரத்வாஜருடைய ரதத்தை நன்றாக இழுக்கின்றவைகளும் பொற்றேரில் பூட்டப்பட்டவைகளும் நரவீரரான துரோணரால் (தம் தேரில் இருந்து) நடத்தப்பெற்றவை

ளுமான அந்தக்குதிரைகள் பாண்டவர்களுடைய ஸேனையை என் எதிர்த்துத்தாண்டவில்லை? ஸத்யபராக்கிரமமான பாரத்வாஜர் பொன்னலங்காரமுள்ள உத்தமமானரதத்தின்மீதேறி யுத்தத்தில் என்ன செய்தார்? உலகத்திலுள்ள எல்லா வில்லாளிகளும் எவருடையவித்தையை ஆச்ரயித்துப் பிழைக்கிறார்களோ அந்த ஸத்யஸந்தரும் பலசாலியுமான துரோணர் யுத்தத்தில் யாதுசெய்தார்? ஸ்வர்க்கத்தில் சிறந்தவனை மஹேந்திரனைப்போல வில்லாளிகளுள் தலைமைபெற்றவரும் பிறர் அஞ்சத்தக்கசெய்கையுள்ளவருமான அந்தத்துரோணரை யுத்தத்தில் எந்தரதிகர்கள் எதிர்த்துச்சென்றார்கள்? அந்தயுத்தத்தில் மிகுந்த பலமுள்ளவரும் திவ்யாஸ்திரங்களைப்பிரயோகிக்கின்றவரும் பொற்றேருள்ளவருமான அந்தத்துரோணரைக்கண்டு பாண்டவர்கள் ஓடினார்களா? அல்லது, தர்மபுத்திரன் தன் தம்பிகளுடனும் எல்லாச்சேனைகளுடனும் சேர்ந்து த்ருஷ்டத்யும்னனாகிற கட்டுக்கயிற்றை ஸாதனமாகக் கொண்டு நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டானா? அர்ஜுனனானவன் மற்றரதிகர்களை அம்புகளாலேநிச்சயமாகத்தடுத்திருக்கவேண்டும். ஆதலாலேதான், பாபகாரியத்தைச்செய்கிறவனான த்ருஷ்டத்யும்னன் துரோணரை ஸம்ஹாரஞ்செய்தான். அந்தத்துரோணரைக்கொல்லும் விஷயத்தில், தேஜஸ்வியும் பயங்கரனும் அர்ஜுனனால்ரக்ஷிக்கப்படுகின்றவனுமான த்ருஷ்டத்யும்னனைத்தவிர வேறொருவனையும் நான் காணவில்லை. * ஆகையால் அவன் மிக்க அற்பர்களான அந்தப்பாஞ்சாலர்களால் சூழப்பட்டவனாகி, கேகயர்களாலும் சேதிதேசத்தார்களாலும் கரூசர்களாலும் மத்ஸ்யர்களாலும் மற்றவேந்தர்களாலும் எறும்புகளால் (மொய்க்கப்பெற்ற) ஸர்ப்பம்போலத் துன்பமடையும்படிசெய்யப்பட்டவரும் செய்யமுடியாதகாரியத்தில் பற்றுதலுள்ளவருமான துரோணரைக் கொன்றுவிட்டானென்பது என்னுடையஎண்ணம். அங்கங்களோடுகூடியவைகளும் புராணமுதலியவற்றை ஐந்தாவதாகவுடையவைகளுமான நான்குவேதங்களையும் அத்யயனம்பண்ணி நதிகளுக்கு ஸமுத்திரம்போலப் பிராம்மணர்களுக்குத் தஞ்சமாயிருந்தவரும் சத்துருக்களைவாட்டுகின்றவரும் க்ஷத்திரியத்தன்மையையும் பிராம்மண்யத்தையும் இவ்வுலகில் அனுஷ்டித்தவரும் கர்வமடைந்தவர்களைச்சிக்ஷிக்கின்றவரும் கண்ணில்லாதவர்களுக்குக்கண்போன்றவரும் பொறுமையுள்ளவர்களிடம் கோபமுள்ளவரும் தார்மிகர்விஷயத்தில் தார்மிகராயிருந்தவரும் முதியவருமான அந்தப்பிராம்மணர் சஸ்திரத்தினாலே எவ்வாறு வதத்தையடைந்தார்? கோபமுள்ளஎன்னால்

* அதிகபாடமான ஒருசுலோகம் விடப்பட்டது.

எப்பொழுதும் வருத்தப்படுகின்றவர்களும் தகுதியற்றவர்களு மான குந்திபுத்திரர்களை அந்தத்துரோணர் பொறுத்துக்கொண் டிருந்தார். அச்செய்கையின்பயன் அதுதான். உலகத்தில் எல்லா வில்லாளிகளும், எவருடையசெய்கையை அண்டிப்பிழைக்கின்றார் களோ ஸத்யஸந்தரும் புண்யவானுமான அந்தத்துரோணர் ஐசு வர்யத்தில் விருப்பமுள்ளவர்களால் எவ்வாறு கொல்லப்பட்டார்? ஸ்வர்க்கத்தில் இந்திரன்போலச்சிறப்புற்றவரும் அதிகமனோதைரிய மும் அதிகபலமுமுள்ளவருமான அந்தத்துரோணர் சிறியமீன்களால் திமி[1] கொல்லப்படுவதுபோல, பார்த்தர்களால் எவ்வாறுகொல்ல பட்டார்? கைதேர்ந்தவரும் சிறந்தபலமுள்ளவரும் உறுதியானவில்லை யுடையவரும் சத்துருக்களைப்பீடிப்பவரும் ஜயத்தைவிரும்பித் தம் மையெதிர்த்தவனை உயிரோடிருக்கவிடாதவரும் ஜீவித்திருக்கையில் வேதத்தில் விருப்பமுள்ளவர்களுடைய வேதகோஷமும் வில்லாளிக ளுடையநாணொலியுமாகிய இரண்டும் ஒருகாலும் தம்மைவிட்டுவிலகா தவரும் கம்பீரஸ்வபாவமுள்ளவரும் புருஷச்ரேஷ்டரும் (அகாரியத் தில்) வெட்கமுடையவரும் சத்துருக்களால் ஜயிக்கப்படாதவரும் தனுர்வேதத்தில் சிறந்தஆசார்யருமான அந்தத்துரோணரை ரதிகர் கள் எவ்வாறுகொன்றார்கள்? நான் துரோணரை மாண்டவராக நினைக்கவில்லை. அவர் உலகத்தையெதிர்த்து யுத்தம்செய்வாரன்றோ? எவர் பிரம்மவர்ச்சஸில் நான்முகனுக்கொப்பானவரோ, க்ஷத்திரியதர் மத்தில் நாராயணருக்குஸமானவரோ, ஸம்பூர்ணமானபிரம்மக்ஷத்திரிய தேஜஸுகள் ஈசுவரருக்கு வசப்பட்டிருந்ததுபோல எவருக்குவசப்பட் டிருந்தனவோ கீழ்ப்படுத்தமுடியாதகீர்த்தியும் பலமுமுள்ளவரான அந் தத்துரோணரை யுத்தத்தில் ஜயிப்பதற்கு எவன் வல்லமையுடை யவன்? யுதிஷ்டிரனுடையதவத்தினால் என்னைச்சேர்ந்த எல்லாக்குரு வீரர்களும் குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடும் கொல் லப்பட்டார்களென்று எண்ணுகிறேன். ஸஞ்சய! ஜயிக்கமுடியாதவ ரும் அவமதிக்கமுடியாதகீர்த்தியையும் பலத்தையுமுடையவருமான துரோணரைப் புருஷச்ரேஷ்டர்கள்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது யுத்தகளத்தில் த்ருபதகுமாரன் எவ்வாறு கொன்றான்? அருகில் துரோணரைக்காப்பாற்றிக்கொண்டு முன்னிலையில் எவர்கள் போர் புரிந்தார்கள்? (ஒருவராலும்) நாடமுடியாத யுத்தகதியைநாடிச் சென்று கொண்டிருக்கும் துரோணருக்குப்பின்புறத்தில் எவர்களிருந்தார்கள்? யுத்தகளத்தில் யுத்தம்செய்பவரும் வீரரும் மஹாத்மாவுமான துரோ

[1] பெரிய மத்ஸ்யம்.

ணருடைய வலப்பக்கத்திலுள்ள சக்ரத்தை எவர்கள் ரக்ஷித்தார்கள்? இடப்பக்கத்திலுள்ள சக்ரத்தை எவர்கள் காத்தார்கள்? முன்னிருக்கிற சேனையை எவர்கள் பாதுகாத்தார்கள்? எவர்கள் அந்தச்சண்டையில் சரீரங்களைவிட்டு விரும்பத்தகாத மரணத்தை அடைந்தார்கள்? எந்த வீரர்கள் துரோணருடைய யுத்தத்தில் அதிகதைரியத்தைப் பாராட்டினார்கள்? யுத்தகளத்தில் ரக்ஷகர்களானக்ஷத்திரியர்கள் பயத்தினால் மந்தர்களாகி இவரைவிட்டுவிலகாமலிருந்தார்களா? அங்ஙனம் விலகினதனால், சூன்யமானரணகளத்தில் அந்தப்பகைவர்களாலே (துரோணர்) கொல்லப்படாமலிருந்தாரா? சூரராகஇருத்தலால், அவர் அதிக ஆபத்தையடைந்தாலும் யுத்தத்தில்பயத்தினால் சத்ருருவுக்குப் புறங்காட்டமாட்டார். துரோணர் எவ்வண்ணம் சத்ருருக்களால் கொல்லப்பட்டார்? ஸஞ்சய! கஷ்டமானஆபத்துக்களில் தனக்குச்சக்தியுள்ளமட்டில் பகைவர்களை எதிர்த்துப் போர்புரிவதென்பது உத்தமபுருஷனால் செய்யத்தக்கது. அதுவும் அவரிடம் நிலைபெற்றிருந்தது. எவர் தம்மைச்சேர்ந்தவர்களைக் காப்பாற்றிக்கொண்டு தம்சக்திக்குத் தக்கபடி சத்ருருக்களோடு போர்புரிவரோ அப்படிப்பட்ட துரோணரை அற்பர்கள் பயத்தினால் பாண்டவர்களிடம் விட்டுவிடாமலிருந்தார்களா? இவர் அந்த ரக்ஷகர்களால்விடப்பட்டுச் சத்ருருக்களால் கொல்லப்படாமலிருந்தாரா? ஐயா! யுத்தத்தில் பிராமணரைக்கொல்லமுயலுகின்ற த்ருஷ்டத்யும்னனை மகாதேஜஸ்வியானஅஶ்வத்தாமா தடுத்திருப்பாரென்று யான்நினைக்கிறேன். அப்பா! என்மனம் மயங்குகிறது. கதையை முழுதும் நிறுத்து. ஸஞ்சய! புத்தியானது நல்லநிலைமையைஅடைந்தபிறகு மறுபடியும் உன்னிடம்கேட்கிறேன்'' என்றுகூறினான்.

---

### பத்தாவது அத்யாயம்.

## த்ரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரன் மயக்கமுற்றதும் தாதிகள் சைத்யோபசாரத்தால் தெளிவித்ததும், திருதராஷ்டிரன் ஸஞ்சயனைப் போர்கூற ஏவியதும்.)

திருதராஷ்டிரன் இவ்வாறு ஸஞ்சயனைவினவி மனத்துயரத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டுக் குமாரர்களுடையஜயத்தில் ஆசையற்றவனாகிப் பூமியில்விழுந்தான். பிரஜ்ஞையையிழந்து விழுந்த அவன்மீது

தாதிகள் மிகவும் குளிர்ந்ததும் நல்லவாஸனையுள்ளதுமான ஜலத்தைத் தெளித்து* விசிறினார்கள். விழுந்திருக்கின்ற அந்தமஹாராஜனைப்பார்த்துக் கௌரவமாதர்கள் எல்லோரும் நான்குபக்கமும் சூழ்ந்துகொண்டு கைகளால்தடவிக்கொடுத்தார்கள். கண்ணீரால்தடைப்பட்டகுரலுடன் அந்த ஸ்திரீகள் பூதலத்திலிருந்து அவ்வரசனை மெல்லத்தூக்கி ஆஸனத்திலிருக்கும்படி செய்தார்கள். அரசனோ ஆஸனத்தையடைந்து மூர்ச்சையையடைந்தவனாகவும் நாற்புறங்களிலும் (விசிறிகளால்) விசிறப்பட்டவனாகவும் அப்பொழுது அசைவற்றிருந்தான். அவ்வரசன் மெதுவாகப்பிரஜ்ஞையையடைந்து நடுக்கமுற்றவனாக மறுபடியும் ஸூதனான ஸஞ்சயனைப்பார்த்து நடந்தவண்ணம் (கூறும்படி) கேட்கத்தொடங்கினான்.

"இருளைப்போக்கிக்கொண்டு உதிக்கும் சூரியன்போன்றவனும் கோபங்கொண்டமதயானைபோன்றபலமுள்ளவனும்பெண்யானையோடு சேரும்விஷயத்தில் விரோதியானையை எதிர்த்துச்செல்லும் மதயானை போலச் சத்ருஸேனாபதிகளால் ஜயிக்கமுடியாதவனும் எதிர்த்துவருபவனுமான தர்மபுத்திரனைத் துரோணரிடத்தினின்று எவன்தடுத்தான்? புருஷசிரேஷ்டனும் மஹாவீர்யமுடையவனும் வீரனுமான எவன் ஒருவனாகவே யுத்தத்தில் வீரர்களை நாசம்செய்தானோ, தைர்யசாலியும் ஸத்யப்ரதிஜ்ஞையையுடையவனுமான எவன் குரூரமானகண்ணாலே துர்யோதனனுடையசேனை முழுவதையும் கொளுத்துவனோ, கண்ணாலேயே (பகைவர்களை) அழிப்பவனும் ஜயத்தில பற்றுதலுள்ளவனும் வில்லைக்கைக்கொண்டவனும் தவறாதவிரதத்தையுடையவனும் மனத்தை அடக்கினவனும் உலகத்தில் நன்குமதிக்கப்பெற்றவனுமான அந்தத்தர்மநந்தனனை (யுத்தத்தில்) எந்தச்சூரர்கள் நாற்புறத்திலும்சூழ்ந்துகொண்டார்கள்? (எவ்விதத்தாலும்) அவமதிக்கமுடியாதவனும் வில்லைத்தரித்தவனும் (சத்துருஸம்ஹாரவிரதத்தினின்று) தவறாதவனும் புருஷசிரேஷ்டனும் குந்தியின்புதல்வனுமான யுதிஷ்டிரராஜனை அந்த யுத்தத்தில் என்னைச்சேர்ந்தவர்களில் எவர்கள் எதிர்த்தார்கள்? பலத்தினாலேயே துரோணரை எதிர்த்து அருகில் விரைவாகவந்தவனும் மஹாபலசாலியும் பகைவர்களிடத்தில் பெரியகாரியத்தைச்செய்கிறவனும் பருத்ததேகமுடையவனும் அதிக உத்ஸாஹமுள்ளவனும் பலத்தில் பதினாயிரம்யானைக்கு ஒப்பானவனுமான அந்தப்பீமஸேனன் எதிர்த்துவருங்கால் எந்தச்சூரர்கள் தடுத்தார்கள்? மேகம்போல

---

* வேறு பாடம்.

விளங்குபவனும் ரதிகனும் சிறந்தவீரியமுள்ளவனும் | கையுறை தேரு ருளை இவைகளின் ஓசையால் எல்லாத்திசைகளையும் முழங்கச்செய் பவனும் மின்னல்போலவிளங்கும் வில்லுள்ளவனும் பயங்கரனும் மேகங்கள்போன்ற தேர்க்கூட்டமுள்ளவனும் | மேகமுழக்கம்போன்ற தேருருளையின்ஒலியுள்ளவனும் அம்புகளின்ஒலியால் அதிபயங்கரனு யிருப்பவனும் | கோபத்தால் மேகத்தைஜயித்தவனும் மனத்தினினை விலும் விரைந்துசெல்பவனும் (பகைவரின்) உயிர்நிலைகளைப்பிளப்பவ னும் அம்புகளைத்தரித்தவனும் நெருங்கியபடையுள்ளவனும் இரத்த மாகிறநீரால் திசையனைத்தையும் நனைக்கிறவனும் மனிதர்களால் பூமியைப்பரப்புகிறவனும் பயங்கரமாய்க் கர்ஜிப்பவனும் அஞ்சத்தக்க தோற்றமுள்ளவனும் காண்டீவம்பிடித்தவனும் புத்திசாலியும் வெற்றி பெறுபவனுமான அர்ஜுனன் வந்து மேகத்தின்பேரிடிபோலக் கர் ஜித்து இந்திரன் மழைபொழிவதுபோல அம்புத்திரள்களைப்பொழி ந்து யுத்தத்தில் துரியோதனன்முதலானவர்கள்மீது சாணையில்தீட் டிக் கழுகிறகுகட்டிய பாணங்களை வர்ஷித்தபொழுது உங்கள்மனம் எப்படியிருந்தது? உத்தமமான வானரத்வஜத்தையுடைய அர்ஜுனன் ஆகாயத்தை அம்புகளால் நெருங்கியதாகச் செய்துகொண்டுவந்தபொ ழுது அவனைப்பார்க்கின்றவர்களுடைய மனமானது எவ்வாறிருந்தது? அந்த அர்ஜுனன் காண்டீவத்தினுடைய சப்தத்தினாலே மிக்கபயத்தை உண்டுபண்ணிக்கொண்டு அருகில் வந்தபொழுது உங்களுடைய படை அழியாமலிருந்ததா? காற்றானது மேகங்களை வேகத்தால் சிதறும்படி செய்வதுபோல அரசர்களை அம்புக்கூட்டங்களால் அடிக்கின்ற தனஞ் சயன் அம்புகளால் உங்களுடைய உயிர்களைப் போக்காமலிருந்தானா? படைமுகத்தில் எவன் பெயரைக்கேட்டால் எல்லாஜனங்களும் (பயத் தினால்) பிளக்கப்படுகிறார்களோ காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அந்த அர்ஜுனனை யுத்தகளத்தில் எந்தமனிதன் ஸஹிப்பதற்குத்தகுதி யுள்ளவன்? யாருடைய சேனைகள் நடுங்கின? எந்த வீரர்களைப் பயம் அணுகியது? எவர்கள் அந்தயுத்தத்தில் துரோணரை விடாமலிருந்தார் கள்? அற்பர்களான எவர்கள் பயத்தினால் ஓடினார்கள்? யுத்தங்களில் தேவாசுரர்களையுங்கூட ஜயிப்பவனான தனஞ்சயனை எதிர்த்து எவர்கள் அந்த யுத்தகளத்தில் சரீரங்களைவிட்டு மரணத்தை யடைந்தார்கள்? என் னைச்சேர்ந்தவர்கள் வெள்ளைக்குதிரையுடையவனான அர்ஜுனனு டைய வேகத்தையும் வர்ஷாகாலத்து மேகத்தினுடைய முழக்கத்தைப் போன்ற காண்டீவத்தினுடைய சப்தத்தையும் பொறுக்கமாட்டார்கள். எந்தரதத்திற்குக் கண்ணபிரான் ஸாரதியோ, எந்த ரதத்திற்குத்தனஞ்

சயன் போர்புரியும் வீரனோ அந்த ரதமானது, தேவாஸுரர்களாலும் கூட ஜயிக்கமுடியாததென்று எண்ணுகிறேன். மென்மையான சரீரமுள்ளவனும் யௌவனமுடையவனும் சௌர்யமுள்ளவனும் பார்க்கத்தக்கவனும் மேதாவியும் ஸமர்த்தனும்சிறந்தபுத்தியுள்ளவனும் யுத்தத்தில் ஸத்யமானபராக்ரமத்தையுடையவனும் பாண்டுகுமாரனுமான நகுலன் உரத்தசப்தத்தைச் செய்துகொண்டும் எல்லாவைனிகர்களையும் துன்பமடையும்படி செய்துகொண்டும் துரோணரிடம் வந்தபொழுது அவனை எந்தச் சூரர்கள் சூழ்ந்து தடுத்தார்கள்? வல்லமையினால் யுத்தத்தில் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவனான ஸஹதேவன், சத்ருக்களையழிப்பதற்காக ஸர்ப்பம்போலக் கோபங்கொண்டு(கௌரவர்களை) எதிர்த்துவந்தபொழுது அவனை எவர்கள் எதிர்த்தார்கள். உத்தமமானவிரதத்தையுடையவனும் வீணாகாத அம்புகளையுடையவனும்(அகாரியத்தில்)வெட்கமுள்ளவனும் பகைவர்களால் ஜயிக்கமுடியாதவனும் எதிர்த்துவருகின்றவனுமான அந்த ஸஹதேவனை எந்தச் சூரர்கள் தடுத்தனர்? ஸௌவீரராஜனுடையபெரியசேனையை அழித்து,விரும்பத்தக்கவளும் ஸர்வாங்கஸுந்தரியுமானபோஜையைப் பட்டமஹிஷியாகப்பெற்றுக்கொண்டவனும் புருஷஸ்ரேஷ்டனும் ஸத்யம், தைரியம், சௌர்யம், சுத்தமானபிரம்மசர்யம் ஆகியஇவைகளையெல்லாம் நித்யமாகக்கொண்டவனும் பலமுடையவனும் ஸத்யமான செய்கையையுடையவனும் கம்பீரமானவனும் பகைவர்களால்ஜயிக்கப்படாதவனும் யுத்தத்தில்கிருஷ்ணனுக்கொப்பானவனும் கிருஷ்ணனை அடுத்துப்பிறந்தவனும் தனஞ்சயனுடையஉபதேசத்தினால் பாணங்களையும் அஸ்திரங்களையும் பிரயோகிக்குங்காரியத்தில் மேன்மைபெற்றவனும் அஸ்திரங்களில் அர்ஜுனனுக்கொப்பானவனும் விருஷ்ணிகளுள்மிகச்சிறந்தவனும் வீர்யமுள்ளவனும் எல்லாவில்லாளிகளுள்ளும் சூரனும் அஸ்திரவித்தைகளில் கீர்த்தியினாலும் பராக்கிரமத்தினாலும் [1] பரசுராமருக்கொப்பானவனுமான அந்த ஸாத்யகியைத் துரோணரிடத்தினின்று எவன் தடுத்தான்? ஸாத்யகியிடத்தில் ஸத்யமும் தைரியமும் புத்தியும் சௌர்யமும் ஸ்ரேஷ்டமானபிரம்மாஸ்திரமுமாகிய இவைகளனைத்தும் கேசவனிடத்தில் மூவுலகங்களும் நிலைபெற்றிருப்பதுபோல் நிலைபெற்றிருக்கின்றன. இவ்விதமானகுணங்களுள்ளவனும் தேவர்களாலும் தடுக்கமுடியாதவனும் மகாவில்லாளியுமான அந்தஸாத்யகியை எந்தச்சூரர்கள் அருகிற்சென்று தடுத்தனர்?

பாஞ்சாலர்களுள் உத்தமனும் வீரனும் உத்தமகுலத்திற்பிறந்தவர்

[1] 'ராமேண' என்பது மூலம்.

னிடத்தில் ப்ரீதியுள்ளவனும் எப்பொழுதும் யுத்தத்தில்உத்தமமான காரியத்தைச்செய்கின்றவனும் தனஞ்சயனுக்கு நன்மையைத்தேடுவதில் பற்றுதலுள்ளவனும் என்னுடைய அனர்த்தத்தின்பொருட்டுத் தோன்றியவனும் யமனுக்கும் குபேரனுக்கும் ஸூர்யனுக்கும்மஹேந்திரனுக்கும் வருணனுக்கும் ஒப்பானவனும் மகாரதனென்றெண்ணப் பட்டவனும் யுத்தத்தில்துரோணரைவெல்லமுயற்சிக்கின்றவனும் நெருங்கின யுத்தத்தில் பிராணனைவிடத்துணிந்தவனுமான உத்தமௌஜனை எந்தச்சூரர்கள் நன்றாகத்தடுத்துப் போர்புரிந்தார்கள்? எவன் சேதி தேசத்தினின்று ஒருவனாகவெளிப்பட்டுப் பாண்டவர்களை அடுத்தானோ அந்தத்திருஷ்டகேது துரோணரைநோக்கி (எதிர்த்து) வரும் காலத்தில் அவனை எவன் தடுத்தான்? அபராந்ததேசத்தில் கிரித்வார நகரத்தில் (எவ்விதத்தினாலும்) நெருங்கமுடியாத ராஜகுமாரனைக் கொன்ற கேதுமானென்னும்வீரனைத் துரோணரிடம்நாடாமல் எவன் தடுத்தான்? ஸ்திரீபுருஷர்களுடைய குணாகுணங்களை அறிந்தபுருஷ ஸ்ரேஷ்டனும் யுத்தத்தில் வாடாதமனமுள்ளவனும் மகாத்மாவான பீஷ்மருடையமரணத்திற்கு யுத்தத்தில்காரணமாயிருந்தவனும் (போர் புரிவதற்காக) துரோணரைக்குறித்து எதிரில்வருகின்றவனும் யஜ்ஞஸேனகுமாரனுமான சிகண்டியை எந்தச்சூரர்கள் நாற்புறத்திலும் தடுத்தார்கள்? அர்ஜுனனைக்காட்டிலும் அதிகமானகுணங்களைத்துமுள்ளவனும் எப்பொழுதும் அஸ்திரங்களும் ஸத்தியமும் பிரம்மசரியமும்நிலைபெற்றிருப்பவனும் வீர்யத்தில் வாஸுதேவருக்கொப்பானவனும் பலத்தில்தனஞ்சயனுக்கொப்பானவனும் தேஜஸினால்சூரியனைப் போன்றவனும் புத்தியில் ப்ருகஸ்பதிக்கொப்பானவனும் மகாத்மாவுமான அந்தஅபிமன்யு வாயைத்திறந்திருக்கும் யமன்போலத் துரோணரைஎதிர்த்துவருங்காலத்தில் எந்தச்சூரர்கள் நன்றாகத்தடுத்தார்கள்? யௌவனமுள்ளவனும் திடமானபிரஜ்ஞையையுடையவனும் சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனுமான அவன் துரோணரைஎதிர்த்து ஓடினபொழுது உங்கள்மனம் எப்படியிருந்தது? நரஸ்ரேஷ்டர்களான த்ரௌபதீபுத்திரர்கள் ஸமுத்திரத்தை நதிகள்எதிர்த்துச்செல்வதுபோல யுத்தரங்கத்தில் துரோணரைஎதிர்த்துவந்தபொழுது அவர்களை எந்தச் சூரர்கள் தடுத்தார்கள்? பாலகர்களான இந்தத்ரௌபதிபுத்திரர்கள் (பாலர்களுக்குரிய) லீலையைவிட்டு உத்தமமானவிரதத்தைக்கைக்கொண்டு அஸ்திரவித்தியாப்யாஸத்தின்பொருட்டுப் பன்னிரண்டு வருஷகாலம் பீஷ்மரிடத்தில் வாஸஞ்செய்தார்கள். க்ஷத்ரஞ்சயன், க்ஷத்ரதேவன், கர்வத்தைப்போக்குகிறவனான க்ஷத்ரவர்மா இவர்கள்

திருஷ்டத்யும்னனுடையகுமாரர்கள். அவர்களைத் துரோணரிடமிருந்து எந்த வீரர்கள் தடுத்தார்கள்? விருஷ்ணிகள் எவனை யுத்தரங்கத்தில் நூறுபேரைக்காட்டிலும் அதிகனென்று நன்றாக எண்ணினார்களோ மகா வில்லாளியான அந்தச்சேகிதானனைத் துரோணரிடத்தினின்று எவன் தடுத்தான்? ஜயிக்கமுடியாதவனும் உதாரஸ்வபாவமுள்ளவனும் கலிங்கர்களின்கன்னியைப் போரில்கவர்ந்தவனுமான [1]வார்த்தக்ஷேமியைத் துரோணரிடத்தினின்று எவன் தடுத்தான்? தார்மிகர்களும் ஸத்திய பராக்ரமமுள்ளவர்களும் சிவப்பானகவசங்களையும் ஆயுதங்களையும் த்வஜங்களையுமுடையவர்களும் இந்திரகோபமென்னும் பூச்சிபோன்ற நிறமுள்ளவர்களும் பாண்டவர்களுக்குச்சிறியதாயார்குமாரர்களும் வீர்யமுள்ளவர்களும் பாண்டவர்களுடையஜயத்தில் விருப்பமுள்ளவர்களும் கேகயராஜகுமாரர்களுமான ஐந்துபிராதாக்கள் துரோணரைக் கொல்லவந்தபோது எந்தவீரர்கள் தடுத்தார்கள்? யுத்தம்செய்பவர்களுக்குத்தலைவனும் வில்லாளிகளுள்சிறந்தவனும் சௌர்யமுள்ளவனும் ஸத்யஸந்தனும் மஹாபலமுடையவனுமான எவனை வாரணாவதத்தில் கொல்லஎண்ணங்கொண்டு மிகுந்தகோபமுள்ளவர்களாக அரசர்கள் ஆறுமாதகாலம்போர்புரிந்தும் ஜயிக்கவில்லையோ, அப்படிப்பட்ட புருஷ சிரேஷ்டனான யுயுத்ஸுவைத் துரோணரிடத்திலிருந்து எவன் தடுத்தான்? காசியில் மகாரதிகனும் ஸ்திரீகளிடத்தில் ஆசைகொண்டவனுமான காசிராஜகுமாரனை யுத்தத்தில் பல்லத்தினால் ரதத்திலிருந்து அறுத்துத்தள்ளினவனும் சிறந்தவில்லாளியும் பாண்டவர்களுக்குமந்திராலோசனையைச்செய்கிறவனும் துரியோதனனுக்கு அனர்த்தத்தை விளைவிப்பதில் ஊக்கமுள்ளவனும் துரோணரைக்கொல்வதற்காகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டவனும் யுத்தத்தில்போர்வீரர்களைக்கொளுத்துகின்றவனும் நான்குபக்கங்களிலும் (சத்துருக்களைப்) பிளக்கின்றவனுமான த்ருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்துவந்தகாலத்தில் அவனை எந்தச்சூரர்கள் தடுத்தார்கள்? துருபதனுடையமடியிலே வளர்ந்தவனும் அஸ்திரங்களை நன்கு அறிந்தவனும் (அர்ஜுனனுடைய) ஆயுதங்களால் காக்கப்பட்டவனுமான [2]சிகண்டியைத் துரோணரிடத்திலிருந்து எவர்கள் தடுத்தார்கள்? இந்தப்பூமிமுழுவதையும் தோல்போல நன்றாகச்சுருட்டினவனும் பெரியரதத்தினொலியினாலே பிரதானர்களான சத்துருக்களைக்கொன்றவனும் மகாரதனும் சிலாக்யமான அன்னபானங்களும் ஸம்பூர்ணதக்ஷிணைகளுமுள்ள பத்து அச்வமேதங்களைச்செய்தவனும் பிரஜைகளைப் பிள்ளைகளைப்போலப் பரிபாலனம்செய்துகொண்டு தடையற்ற எல்லாயாகங்களையும்செய்தவனும்

---

ஸுசர்மா. [2]'சைகண்டினம்' என்பது மூலம்.

கங்காஜலத்தைத்தடுக்கும்படியான தக்ஷிணைகளைக்கொடுத்தவனும் வீர னுமான அந்த உசீநரராஜகுமாரன், கங்காப்ரவாகத்தில் முழுதி லும் எவ்வளவுமணல்களுண்டோ அவ்வளவுபசுக்களை யாகத்தில் தானஞ்செய்தான். செய்யமுடியாதகார்யம் செய்யப்பட்டவுடன், தேவர்கள், 'மனிதர்களுள் முன்னோர்கள்யாரும் இக்தக்காரியத்தைச் செய்ததில்லை; பின்னோர்கள்யாரும் செய்யப்போவதுமில்லை; உசீந ராஜகுமாரனுஞ்சைப்யனைத்தவிரக் கார்யபாரத்தைவஹிக்கச்சக்தியுள்ள வேறு இரண்டாம்மனிதனை ஸ்தாவரஜங்கமஸ்வரூபமான மூவுலகங்க ளுள்ளும் முன்பு பிறந்திருந்தவனாகவாவது இனிப்பிறக்கப்போகி றவனாகவாவது இப்பொழுது இருப்பவனாகவாவது நாங்கள் காணோம்' என்று உரத்தசப்தத்துடன் புகழ்ந்தார்கள். எவ னுடையகதியை உலகின்கண் வாஸஞ்செய்கின்றமனிதர்கள் அடை யமாட்டார்களோ, அவனுடையபேரனும், வாயைத்திறந்திருக்கும் யமன்போலத் துரோணரை எதிர்த்துவருகின்றவனும் முயற்சி யுள்ளவனுமான சைப்யனை யுத்தத்திற்குவந்தபோது எவன் தடுத் தான்? சத்ருக்களைக்கொல்லுந்தன்மையையுடையவனும், மத்ஸ்ய தேசாதிபதியுமான விராடனுடையதும் துரோணரைப்போரில்கவர்ந்து கொள்ளவிருப்பங்கொண்டதுமான தேர்ப்படையை எந்தவீரர்கள் தடுத்தார்கள்? பீமஸேனனிடத்தில் உடனே பிறந்தவனும் அதிகமான தேகபலமும்வீர்யமுமுள்ளவனும் மாயாசக்தியையுடையவனும் பாண் டவர்களுடையஜயத்தில் விருப்பமுள்ளவனும் என்பிள்ளைகளுக்குச் சத்துருவும் மஹாபலிஷ்டனும் வீரனுமான எந்தராக்ஷஸனிடத்தி லிருந்து எனக்கு மிக்கபயமுண்டோ அந்தக்கடோத்கசனைத் துரோண ரிடமிருந்து எவன் தடுத்தான்? ஸஞ்சய! எவர்களுடையபிரயோஜ னத்தின்பொருட்டு இவர்களும் மற்றுமுள்ள அனேகர்களும் ரண களத்தில் பிராணனைவிட ஸன்னத்தர்களாயிருக்கிறார்களோ அவர் களுக்கு யுத்தகளத்தில் ஜயிக்கக்கூடாதது யாதிருக்கின்றது? சார்ங்க மென்கிறவில்லையுடைய புருஷோத்தமர் எவர்களுக்கு ஆதாரமும் ஹிதத் தைத்தேடுகிறவருமாயிருக்கிறாரோ அந்தப்பார்த்தர்களுக்குத் தோல்வி எப்படியுண்டாகும்? உலகங்களுக்குச் சிறந்தஆசார்யரும் லோகநாத ரும் அழிவற்றவரும் திவ்யரும் திவ்யாத்மஸ்வரூபமுமுடையவரும் பிரபுவுமான ஸ்ரீமந்நாராயணரே யுத்தகளத்தில் நாதராகவிளங்குகிறார். அவருடைய அத்புதமானகாரியங்களை ஞானிகள் நன்றாகச்சொல்லு கின்றார்களோ அவருடைய அப்படிப்பட்டசெய்கைகளைப் பக்தி யோடு மனம்கிலைபெறுவதின்பொருட்டு யான் சொல்லப்போகிறேன்.

## பதினோராவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)



(திருதராஷ்டிரன் அதிக பக்தியினால் கிருஷ்ண சரித்திரத்தைக்கூறிப் பலவாறு ஆலோசித்துப் பின் யுத்தத்தைச் சொல்லும்படி ஸஞ்சயனை ஏவியது.)

ஸஞ்சய! வாஸுதேவன் செய்த திவ்யமான செய்கைகளைக் கேள். (அந்த) கோவிந்தன் எவ்விடத்திலும் வேறு எந்த மனிதனாலும் செய்யமுடியாத கார்யங்களைச் செய்தான். ஸஞ்சய! இடையர்வீட்டில் வளர்கின்ற மஹாபுருஷனான ஸ்ரீவாஸுதேவன் பாலனாயிருக்கும் பொழுதே தன்கைவன்மையை மூவுலகங்களிலும் பிரஸித்திபெறும் படி செய்தான். மிக்கபுஜபலமுள்ளவனும் தாமரைமலர்போன்ற கண்களையுடையவனுமான ஸ்ரீ கிருஷ்ணன், பூதனையையும் சகடனையும் குதிரைவடிவங்கொண்ட கேசியையும் ரிஷபனையும் தேனுகனையும் மஹாபலிஷ்டனான அரிஷ்டனையும் கொன்று காட்டுத்தீயினின்று (கோபர்களை) விடுவித்துக் கோவர்த்தனமென்கிற மலையைத்தூக்கி மல்லரங்கினிடையில் சாணூரனையும் முஷ்டிகனையும் கொன்று பிரலம்பன் நரகன் ஜம்பன் மகாஸுரனான பீடன் யமனுக்கொப்பான முரன் இவர்களையுங் கொன்றான். அவ்வாறே மிக்ககாந்தியுள்ளவனும் ஜராஸந்தனால் காக்கப்பட்டவனுமான கம்ஸன், ஸ்ரீகிருஷ்ணனால் பராக்ரமத்தினாலேயே பரிவாரங்களுடன் யுத்தகளத்தில் மாய்க்கப்பட்டான். யுத்தத்தில் மிக்கவல்லமையுடையவனும் பூர்ணமான அக்ஷௌஹிணிசேனைக்குத் தலைவனும் போஜர்களுக்கு ராஜனான கம்ஸனுடைய ஸஹோதரர்களுள் நடுவானவனும் வீர்யமுள்ளவனும் வேகமுள்ளவனும் சூரஸேன தேசாதிபனுமான ஸுநாமா என்பவன், சத்துருக்களைக்கொல்கிற சுவபாவமுள்ளவனும் பலதேவனை ஸஹாயமாகக்கொண்டவனுமான ஸ்ரீகிருஷ்ணனாலே சைன்யங்களோடு யுத்தத்தில் எரிக்கப்பட்டான். அவ்வாறே மஹா கோபமுள்ளவரான துர்வாஸஸ் என்கிற பிரம்மரிஷியும் மனைவியுடன் கூடின ஸ்ரீ கிருஷ்ணனால் ஆராதிக்கப்பட்டார். அவரும் இவனுக்கு வரங்களைக்கொடுத்தார். அவ்வாறே வீரனும் தாமரைமலர்போன்ற

கண்களையுடையவனுமான ஸ்ரீ கிருஷ்ணன் அரசர்களைஜயித்துக் காந்தாரராஜனுடைய குமாரியை ஸ்வயம்வரத்தில் கைப்பற்றினன். கோபங்கொண்ட அவன் அந்த அரசர்களைக் குதிரைகளைப்போலத் தன்னுடைய கல்யாண ரதத்தில் பூட்டிச் சாட்டையாலடித்துக் காயப்படுத்தினன். ஸ்ரீ ஜநார்த்தனன் மஹாபாகுபலமுள்ளவனும் பூர்ணமான அக்ஷௌஹிணிகளுக்கு நாதனுமான ஜராஸந்தனையும் சிறந்த உபாயத்தினல் கொல்வித்தான். பலவானன ஸ்ரீ கிருஷ்ணன், சௌரியமுள்ளவனும் ராஜஸேனபதியாயிருப்பவனும் பூஜாவிஷயத்தில் விவாதப்படுகின்றவனும் சேதிதேசத்தரசனுமான சிசுபாலனையும் அக்காலத்தில் பசுவைப்போலக் கொன்றான். லக்ஷ்மீநாதனன ஸ்ரீ வாஸுதேவன், ஆகாயத்திலுள்ளதும் சால்வனல் காக்கப்பட்டதும் நாடமுடியாததுமான 'ஸௌபம்' என்கிற அஸுரபட்டணத்தைத் தன் பராக்கிரமத்தினல் (இடித்து) கடலினிடையில் தள்ளினன். மேலும், அங்கம், வங்கம், களிங்கம், மாகதம், காசி, கோஸலம், வாத்ஸ்யம், கார்க்யம், கரூஷம், பௌண்ட்ரம் ஆகிய தேசங்களையும் யுத்தத்தில் ஜயித்தான். ஸஞ்சய! அவந்திதேசத்தையும் தக்ஷிணதேசங்களையும் மலைநாடுகளையும் தசேரகதேசங்களையும் காஶ்மீரங்களையும் ஔரஸிகதேசங்களையும் முத்கலதேசங்களோடுகூடிய பிசாசதேசங்களையும் காம்போஜதேசங்களையும் வாடதானங்களையும் சோளபாண்டிய தேசங்களையும் திரிகர்த்தம், மாலவம், மிகவும் ஜயிக்கமுடியாத தரதம் ஆகிய தேசங்களையும் ஜயித்தான். தாமரைபோன்ற கண்களையுடைய ஸ்ரீ கிருஷ்ணன், பலதிக்குகளினின்று (யுத்தத்துக்கு) வந்திருக்கின்ற கசர்களையும் சகர்களையும் உதவிப்படைகளுடன்கூடிய யவனரையும் ஜயித்தான். முற்காலத்தில் ஜலஜந்துக்களுடைய கூட்டங்களால் நிறைந்திருக்கின்ற கடலில் புகுந்து ஜலத்திலுள்ளிருந்தவருணனை யுத்தத்தில் ஜயித்தான். இந்திரியங்களுக்கு அதிஷ்டான தேவதையாயிருக்கிற அந்த ஸ்ரீ கிருஷ்ணன் பாதாளத்தில் வஸிப்பவனன பஞ்சஜனனென்கிற அஸுரனை யுத்தத்தில் கொன்று பாஞ்சஜன்யமென்கிற திவ்யசங்கத்தை அடைந்தான். மகாபலவானன அந்தக் கிருஷ்ணன் அர்ஜுனனேடு சேர்ந்து காண்டவவனத்தில் அக்னியை மனம் களிக்கச்செய்து தடுக்கமுடியாத ஆக்னேயாஸ்திரத்தையும் சக்ரத்தையும் பெற்றான். சூரனன ஸ்ரீபகவான் கருடன்மீதேறி அமராவதியைப் பயமுறுத்தி மஹேந்திரனுடைய அரண்மனையினின்று பாரிஜாத விருக்ஷத்தைக் கொண்டுவந்தான். அந்த ஸ்ரீ கிருஷ்ணனுடைய பராக்

கிரமத்தையறிந்தவனான இந்திரன் அதனையும் பொறுத்தான். இவ்வுலகத்தில், ஸ்ரீகிருஷ்ணனால் அரசர்களுள் ஜயிக்கப்படாதவொருவனையும் நான் கேட்டதில்லை. ஸஞ்சய! என் ஸபையில் புண்டரீகாக்ஷனாகிய ஸ்ரீ கிருஷ்ணன்செய்த அவ்விதமான பெரிய ஆச்சரியமான காரியத்தை அவனைத்தவிர இவ்வுலகத்தில் வேறெவன் செய்யத்தகுதியுள்ளவன்? நான் பக்தியினால் சரணமடைந்து ஈசுவரனானவாஸுதேவனைக்கண்ட காரணத்தினால் எல்லாம் என்னால் நன்றாக அறியப்பட்டது. கண்ணெதிரில்நிற்பதுபோலவும் அறிந்தேன். ஸஞ்சய! விக்ரமத்தையும் புத்தியையுமுடையவனான ஹ்ருஷீகேசனுடைய செய்கைகளின் எல்லை காடமுடியாதது. அவ்வாறே கதன், ஸாம்பன், பிரத்யும்னன், விதூரதன், அகாவஹன், அனிருத்தன், சாருதேஷ்ணன், ஸாரணன், உல்முகன், நிசடன், ஜில்லி, வீர்யமுள்ளவனான பப்ரு, பிருது, விபிருது, சமீகன், அரிமேஜயன் ஆகிய இவர்களும், பலமுடையவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான மற்ற விருஷ்ணிவீரர்களும், மகாத்மாவும் விருஷ்ணிகளுள் வீரனுமான கேசவனால் அழைக்கப்பட்டு யுத்தத்தில் நிற்க எவ்விதத்தாலாவது பாண்டவசேனையை அடைவார்கள். அப்பொழுது, (என்பக்ஷம்) முழுமையும் ஸம்சயத்துக்குள்ளாகும் என்பதே என்னுடைய நிச்சயம். எந்த இடத்தில் ஜனார்த்தனனான ஸ்ரீ கிருஷ்ணன் இருக்கிறானோ அந்த இடத்தில் பதினாயிரம் யானை பலமுடையவரும் வீர்யமுள்ளவரும் கைலாஸ சிகரத்துக்கொப்பானவரும் வனமாலையணிந்தவரும் கலப்பையையுடையவருமான பலராமர் இருப்பார். ஸஞ்சய! எல்லோருக்கும் பிதாவென்றும் வாஸுதேவனென்றும் பிராம்மணர்களால் சொல்லப்படுகிற அப்படிப்பட்ட இந்தக்கிருஷ்ணன் பாண்டவர்களின் பிரயோஜனத்தைக்கருதி யுத்தம் பண்ணுவனோ? அப்பா! ஸஞ்சய! அவன் எப்பொழுது பாண்டவர்களுடைய பிரயோஜனத்தைக்கருதி ஸன்னத்தப்படுவனோ அப்பொழுது அவ்விடத்தில் ஒருவனாவது எதிர்த்து யுத்தஞ்செய்கிறவனாகான். ஒருகால் எல்லாக்கௌரவர்களும் பாண்டவர்களை ஜயித்துவிடுவார்களானால் அப்பொழுது விருஷ்ணிகுலத்தில் தோன்றிய இந்தக்கிருஷ்ணன் அந்தப்பாண்டவர்களுடைய பிரயோஜனத்தின் பொருட்டு உத்தமமான சஸ்திரத்தைக் கையிலெடுத்தாலுமெடுப்பான். பிறகு, மிக்க புஜபலமுடையவனும் நரஸ்ரேஷ்டனுமான அந்த வாஸுதேவன் எல்லா அரசர்களையும் கௌரவர்களையும் ரணகளத்தில் கொன்று குந்தியின்பொருட்டுப் பூமியைக்கொடுப்பான். ஹ்ருஷீகேசன் ஸாரதியும் தனஞ்சயன் யுத்தம் செய்கிற போர்வீரனு

மான அக்ஷாதத்துக்கு எந்த ரதம் யுத்தத்தில் எதிராக நிற்கும்? ஒரு வித உபாயத்தினாலும் கௌரவர்களுக்கு ஜயம் காணப்படவில்லை. ஆதலால், எவ்வாறு யுத்தம் நடந்ததென்பதை முழுதும் எனக்குச்சொல். அர்ஜுனன் வாஸுதேவனுக்கு உயிர்; வாஸுதேவனும் அர்ஜுனனுக்கு உயிர். அர்ஜுனனிடத்தில எப்பொழுதும் விஜயம் நிலைபெற்றிருக்கிறது. கிருஷ்ணனிடத்திலும் கீர்த்தி சாஸ்வதமாயிருக்கிறது எல்லாவுலகங்களிலும் அர்ஜுனன் சத்ருருக்களால் ஜயிக்கப்படாதவன். கேசவனிடத்தில் முக்கியமாகவே மனத்தினால் எண்ணமுடியாத அனேக குணங்களிருக்கின்றன. இப்போது துரியோதனன் அறியாமையினாலே ஸ்ரீகிருஷ்ணனை (ஸாக்ஷாத்) நாராயணஸ்வரூபியென்றறியவில்லை; தெய்வவசத்தினாலே புத்திமயக்கங்கொண்டு யமபாசத்தால் முன்னிடப்பட்டவனாகித்தாசார்ஹனான கிருஷ்ணனையும்பாண்டுபுத்திரனான அர்ஜுனனையும் அறியவில்லை. மகாத்மாக்களான அவ்விருவரும் ஆதிதேவர்களானநரநாராயணர்கள். அவ்விருவரும் மனத்தினாலொன்றுபட்டவர்கள். (உருவத்தினால்) இருவர்களாகப் பூமியில மனிதர்களால் காணப்படுகிறார்கள். கீர்த்தியுடையவர்களான அவ்விருவரும் மனத்தினாலும் பிறரால் அவமதிக்கமுடியாதவர்கள். விரும்புவார்களேயானால் இந்தக்குருசேனை முழுமையையும் நாசஞ்செய்வார்கள். ஆனால், மனிதபாவனையினால் (அவ்விதம்செய்ய) விரும்பாமலிருக்கிறார்கள். அப்பா! பீஷ்மர் மகாத்மாவான துரோணர் இவர்களுடையவதமானது யுகத்தினுடைய மாறுபட்டம போலவும், உலகங்களுக்கே மோகத்தையுண்டு பண்ணுவதுபோலவுமாகியது. (உலகத்தில) ஒருவனாவது பிரம்மசர்யத்தினாலும் வேதாத்தியயனத்தினாலும் கர்மங்களினாலும் அஸ்திர வித்தையினாலும் மிருத்யுவினிடத்தினின்று தடுக்கப்படான். ஸஞ்சய! உலகங்களாலகௌரவிக்கப்பட்டவர்களும் வீரர்களும் அஸ்திரவித்தையில் தேர்ச்சிபெற்றவர்களும், யுத்தத்தில் அடங்காதமதமுடையவர்களுமான பீஷ்மதுரோணர்கள் கொல்லப்பட்டார்களென்பதைக் கேட்டும் நான் ஏன் உயிரோடிருக்கிறேன்? முற்காலத்தில் யுதிஷ்டிரனிடத்திலிருந்த அவ்விதமான எந்த ஸம்பத்தைக்கண்டு அஸூயைப் பட்டோமோ அந்த ஸம்பத்தை இப்பொழுது பீஷ்மதுரோணர்களுடையவதத்தினாலே (அவனிடமேயிருக்க) அனுமதி கொடுக்கிறோம். என்னிமித்தமாகக் கௌரவர்களுக்கு இப்படிப்பட்ட நாசம் வந்துவிட்டது. ஸூத! காலத்தினாலே பக்குவம்செய்யப்பட்ட மனிதர்களைக்கொல்லும் விஷயத்தில் புல்லுகள்கூட வஜ்ராயுதம்போலாகின்றன. எவனுடைய கோபத்தினாலே மகாத்மாக்களான பீஷ்மதுரோ

ணர்கள் கொல்லப்பட்டார்களோ அந்த யுதிஷ்டிரன் உலகத்தில் முடி வற்றதான இந்த ஐசுவரியத்தைப் பெற்றான். ஸ்வபாவத்தினால் தர்மம் (அவனை) அடைந்திருக்கிறது. நம்மைச்சேர்ந்தவர்களிடம் தர்மமில்லை. எல்லாவற்றையும் அழிக்கவந்த குரூரமான இந்தக்கால மானது செல்வதாயில்லை. அப்பா! புத்திமான்களான மனிதர்களாலே ஒருவிதமாகநினைக்கப்பட்டவிஷயங்களும் தெய்வத்தினாலே வேறுவித மாக ஏற்படுகின்றன என்பது என்னுடையஎண்ணம். ஆதலால், பரி ஹரிக்கமுடியாததும் தாண்டமுடியாததும் நினைக்கமுடியாததும் ஸங் கடத்தைஉண்டுபண்ணக்கூடியதும் பெரிதுமான இப்படிப்பட்டகார் யம் நேர்ந்திருக்கும்காலத்தில் உண்மையை எனக்குச்சொல்" என்று வினவினன்.

---

## பன்னிரண்டாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(துரியோதனன் தர்மபுத்திரரை உயிரோடுபிடித்துத்தரவேண்டினதும், துரோணர் அர்ஜுனனில்லாதஸமயத்தில் தர்மபுத்திரரைப்பிடிப்பதாகப் பிரதிஜ்ஞைசெய்ததும், துரியோதனன் அந்தப் பிரதிஜ்ஞையை வெளியிட்டதும்.)

ஸஞ்சயன், "ஓ! பாரதரே! உறுதியுள்ளவராகஇருந்து, சொல்லு கின்ற என்னுடைய வார்த்தையை விருப்பத்துடன் கேளும். துக்ககர மான விஷயத்தை உமக்கு நான் சொல்லப்போகிறேன். ஸத்யத்தைப் பிரதானமாகக்கொண்ட துரோணர் பாண்டுகுமாரர்களாலும் ஸ்ருஞ் சயர்களாலும் நாசஞ்செய்யப்பட்ட விதமுழுமையும் நேரில்கண்டிருக் கிறேன். மகாரதரான பாரத்வாஜர் ஸேனாபதியாயிருத்தலைப்பெற்று எல்லாச்சேனைகளுக்குமிடையில் உம்முடைய புத்திரனை நோக்கி, 'பரதகுலத்தில் பிறந்தமன்ன! நீ, கௌரவர்களுள் சிறந்தவரான பீஷ் மருக்குப்பிறகு ஸேனாபதிஸ்தானத்தில் இப்பொழுது என்னை வைத் துக் கௌரவித்த செய்கைக்குத் தகுந்தபயனை நீ அடைவாயாக. நான் உனக்கு எந்த விருப்பத்தை நிறைவேற்றக்கடவேன்? எதனை விரும்பு கிறாயோ அதனை இப்பொழுது நீ பெற்றுக்கொள்' என்று சொன் னார். பிறகு, துர்யோதனராஜன், கர்ணன் துச்சாஸனன்முதலிய வர்களோடு ஆலோசித்து, ஜயிக்கமுடியாதவரும் ஜயசீலர்களுள் உத்த மருமான ஆசாரியரைக்குறித்து, 'எனக்குத் தேவரீர் வரம்கொடுப்பீ

ராகில், ரதிகர்களுள் உத்தமனான யுதிஷ்டிரனை உயிரோடு பிடித்து இங்கு என்ஸமீபத்தில் கொண்டுவாரும். பிராம்மணரே! மஹாத்மா வும் தர்மாத்மாவும் ரதிகர்களுள் ச்ரேஷ்டனுமான யுதிஷ்டிரனை (அவ னுடைய) ஸஹோதரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே எனக் காக உயிரோடுபிடித்து என்பக்கத்தில் இங்குகொண்டுவாரும். இதைத் தான் விரும்புகிறேன். இந்தக் காரியத்தினால் ஸ்நேகிதர்களோடும், பந்துக்களோடும் யான் திருப்தியடைவேன்' என்று வேண்டினான். பிறகு, கௌரவர்களுக்கு ஆசார்யரானதுரோணர் உமதுகுமார னுடைய வார்த்தையைக்கேட்டு எல்லாச்சேனையையும் ஸந்தோஷிக் கச்செய்துகொண்டு இந்தவார்த்தையைக் கூறலானார்.

'எவ்விதத்தினாலும் அவமதிக்கமுடியாதவனே! ஓ! ராஜனே! எவனுடைய வதத்தை இப்பொழுது வேண்டாமல் உயிரோடுபிடித் துத்தருதலாகிறவரத்தை விரும்புகிறாயோ அந்தக் குந்திபுத்திரனான யுதிஷ்டிரன் பாக்கியசாலி; புருஷசிரேஷ்டனே! ஏன் அந்தத் தர்மஜ்ஞ னுடைய வதத்தை நீ விரும்பவில்லை? துர்யோதன! என்னி டத்தினின்று நிச்சயமாய் இந்தச்செய்கையை நீ விரும்பாததனால், தர்மராஜனுக்குப் பகைவன் ஒருவனுமில்லை. தர்மபுத்திரன் உயிரோ டிருக்க விரும்புகிறாயாதலால் உன்குலத்தைப் பாதுகாப்பவனாகிறாய். பரதசிரேஷ்டனே! அல்லது, யுத்தத்தில் பாண்டவர்களை ஜயித்து ராஜ்யபாகத்தை அவர்களுக்கு மீண்டும் கொடுத்து ஸஹோதரநேசத் தைக் காப்பாற்ற விரும்புகிறாயா? நீ நேசிக்கிறாயாதலால், குந்திபுத்ர னான தர்மராஜனே பாக்கியசாலி. புத்திமானான இந்தத் தர்மபுத்திர னுடைய பிறப்பே நற்பிறப்பு. அவன் [1] அஜாதசத்துரு என்பது உண் மை' என்றார். பாரதரே! துரோணர் இவ்வாறு உரைத்ததைக்கேட்ட வுடன், உமதுகுமாரனது உள்ளத்தில் எப்பொழுதும்குடிகொண்டிருந்த எண்ணமானது விரைவாகவெளிப்பட்டுவிட்டது. அரசரே! பிருஹஸ் பதிக்கொப்பானவர்களாலும் [2] ஆகாரமானது மறைக்கமுடியாது; ஆதலால், உம்முடைய குமாரன் மிக்க ஸந்தோஷத்தோடு உரைக்க லானான். 'ஆசாரியரே! ரணகளத்தில் குந்திபுத்திரனான தர்மபுத்திர னைக்கொன்றால் எனக்கு வெற்றிகிடையாது. யுதிஷ்டிரன் கொல்லப் பட்டால் பார்த்தர்கள் எங்களனைவரையும் நிச்சயமாகக் கொல்லுவார் கள். பார்த்தர்களெல்லோரும் யுத்தத்தில் தேவர்களாலேகூடக் கொல்ல

---

[1] பகைவரேயில்லாதவர்; அல்லது, காமம், குரோதமுதலிய பகையை அடக்கினவர். [2] உட்கருத்தைத் தெரிவிக்கும் முகக்குறி.

முடியாதவர்கள்; பாண்டவர்களனைவரும், புத்திரர்களோடு யுத்தத்தில் கொல்லப்படுவார்களாகில் அப்பொழுது எல்லா அரசர்களுடைய கூட்டத்தையும் மிச்சமின்றித் தன்வசப்படுத்திக்கொண்டு ஸமுத்திரங்களையும் அரண்யங்களையுமுடையதும் செழிப்புள்ளதுமான இந்தப் பூமியை ஜயித்துப் புருஷோத்தமனான கிருஷ்ணன் திரௌபதிக்காவது குந்திக்காவது கொடுத்துவிடுவான்; அந்தப்பாண்டவர்களுள் இந்தக் கிருஷ்ணன் மிச்சமாக இருப்பானாகில் இவனே நம்மை மிஞ்சும்படி செய்யமாட்டான். ஸத்யபிரதிஜ்ஞையுள்ளவனான அந்த யுதிஷ்டிரன் நம்மால் செய்யப்பட்ட பலவித உபாயங்களால் உயிரோடு இங்கு கொண்டுவரப்பட்டு மறுபடியும் சூதாட்டத்தினால் ஜயிக்கப்பட்டால், அவனை அனுஸரித்தே பாண்டவர்களும் மறுபடியும் காட்டுக்குச்செல்வார்கள். அவ்விதமாக எனக்கு ஏற்படும் ஜயமானது நிச்சயமாக நெடுங்காலம் இருக்கும். ஆதலால், ஒரு ஸமயத்திலாவது தர்மராஜனுடைய வதத்தை இச்சிக்கவேமாட்டேன்' என்று கூறினான். அர்த்த தத்வங்களை அறிந்தவரும் புத்திமானுமான துரோணர் துர்யோதனனுடைய குடிலமான அந்தக் கருத்தை அறிந்து நன்றாக ஆலோசித்து அவனுக்கு அந்த வரத்தை [1] இழுக்கோடு அளிக்கலானார். யுத்தரங்கத்தில் வீரனான அர்ஜுனன் யுதிஷ்டிரனைப் பாதுகாவாமலிருந்தால், பாண்டவஸ்ரேஷ்டனான தர்மபுத்திரனை உன்வசம் கொண்டுவரப் பட்டவனாக நீ எண்ணு. அர்ஜுனன் போர்க்களத்தில் இந்திரனோடு கூடின தேவாஸுரர்களாலும் எதிர்க்கமுடியாதவன். அப்பா! ஆதலால், நான் அவனைத் தோல்வியடையும்படி செய்யமுடியாது. அவன் என்னுடைய சிஷ்யன்; ஸம்சயமில்லை; அஸ்திரவித்தையில் என்னைக் குருவாகவுடையவன்; யௌவனமுள்ளவன்; புண்யவான்; முயற்சியுடையவன்; (ஜயம் அல்லது மரணம் இவ்விரண்டில்) ஒன்றை நிச்சயமாகக்கொண்டவன்; இந்திரனிடத்திலிருந்தும், ருத்திரரிடத்திலிருந்தும் அனேகமான அஸ்திரங்களைப் பெற்றவன். ராஜனே! (அவன்) உன்னிடத்தில் கோபங்கொண்டவன். ஆதலால், நான் அவனைக் கோபமூட்டமாட்டேன். எந்த உபாயத்தினால் முடியுமோ அந்த உபாயத்தினால் அவன் யுத்தத்தினின்று விலகிப்போகும்படி செய்யப்படவேண்டும். பிருதையின் குமாரனான அர்ஜுனன் விலக்கப்பட்டால் தர்மராஜன் உன்னால் ஜயிக்கப்பட்டவனே. புருஷர்களில் சிறந்தவனே! 'அவனைப் பிடித்தால் ஜயம், கொன்றால் அபஜயம்' என்றிருத்தலால், அந்தத் தர்ம

---

[1] 'ஸாந்தரம்' என்பது மூலம்.

ராஜனுடைய வதத்தைவிட்டு அவனைப் பிடித்தலையே கருதுகிறாய்? இந்த உபாயத்தினாலேயே அவனைப்பிடித்தலைப் பெறுவாய். ராஜனே! நரஸ்ரேஷ்டனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயன் விலக்கப்பட்ட பிறகு, யுத்தகளத்தில் என்முன்னிலையில் ஒருமுகூர்த்தகாலமாவது தர்மபுத்திரன் நின்றால், ஸத்யம் தர்மம் இவைகளைப் பிரதானமாகக் கொண்ட அவ்வரசனைப் பிடித்து உன்வசத்தில் உடனே கொண்டுவருவேன். ஸந்தேகமில்லை. ராஜனே! யுதிஷ்டிரன் பல்குனனுக்கு ஸமீபத்தில் யுத்தத்தில் இந்திரனோடுகூடின தேவாஸுரர்களாலும் பிடிக்கமுடியாதவன்' என்று கூறினார். தேவாஸுரர்களுடைய யுத்தத்துக்குச்சமமான அந்த யுத்தத்தில் துரோணராலே தர்மராஜனைப்பிடித்தலானது அப்பொழுது ஓர்இழுக்கோடு பிரதிஜ்ஞைபண்ணப்பட்டது; உடனே மிக்க அல்பபுத்தியுடையவர்களான உம்முடைய குமாரர்கள் தர்மராஜனைப் பிடிபட்டவனாகவே எண்ணினார்கள். சத்துருக்களை அடக்குபவரே! பிறகு, துரியோதனனாலேயும் தர்மபுத்திரரைப்பிடித்தலானது அந்த அந்த இடங்களிலுள்ள ஸமஸ்தமான ஸேனைகளிலும் போர்வீரர்கள் தங்கியிருக்கின்ற எல்லாஇடங்களிலும் நன்றாக வெளியிடப்பட்டது. உம்முடைய குமாரன் துரோணரைப் பாண்டவர்களிடத்தில் அன்புள்ளவரென்று அறிந்துகொண்டிருக்கிறான். ஆதலால், துரோணருடைய பிரதிஜ்ஞையானது ஸ்திரப்படுவதற்காக அந்த மந்திராலோசனையானது எங்கும் பரவினதாகச் செய்யப்பட்டது.

---

## பதின்மூன்றாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் துரோணருடைய சபதத்தைக்கேட்டுப் பயந்த தர்மபுத்ரரைத் தேற்றியதும், யுத்தத்தின் தொடக்கமும், துரோணருடைய பராக்ரமமும்.)

துரோணராலே அரசனைப் பிடித்தலானது இழுக்கோடு பிரதிஜ்ஞைபண்ணப்பட்டபிறகு, உம்முடைய படைவீரர்களெல்லாரும் அந்த யுதிஷ்டிரரைப் பிடிப்பதைக்கேட்டுக் கர்ஜித்துக் கைகொட்டினார்கள். பாரதரே! துரோணர் நீதியோடு செய்யக்கருதிய அந்த விஷயமுழுமையையும் தர்மபுத்திரர் ஆப்தர்களான சாரர்களால் அறிந்தார். அவர் பிறகு எல்லா ஸகோதரர்களையும் மற்றவர்களையும் எல்லா இடங்களி

னின்றும் அழைத்துத் தனஞ்சயனை நோக்கி, 'புருஷஸ்ரேஷ்டனே! இப்பொழுது துரோணர் செய்யவிரும்பிய விஷயத்தை நீகேட்டாயா? நீ அது மெய்யாகாவண்ணம் உபாயம் செய்யவேண்டும். சத்துருக்களைக் கொல்லுகின்ற துரோணராலே ஓர் இழுக்கோடன்றோ பிரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிறது. அந்த இழுக்கானது அந்தத்துரோணராலே விஞ்ஞாத அம்புகளுள்ள உன்னிடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றது. மிக்க புஜபலமுள்ளவனே! ஆகையால், துரியோதனன் துரோணரிடத்திலிருந்து இந்த மனோரதத்தை அடையாதபடி நீ இப்பொழுது என்பக்கத்திலிருந்து யுத்தஞ்செய்வாயாக' என்று சொல்லினர். அர்ஜுனன், 'அரசரே! எவ்விதத்திலும் நான் ஆசார்யரைக் கொல்வது தகாததுபோல உம்மை விட்டு விலகுவதும் எனக்கு விருப்பமில்லை. பாண்டவரே! இவ்விதமாக நான் யுத்தத்தில் பிராணனை இழந்தாலுமிழப்பேன்; ஆசாரியரை எதிர்ப்பேன்; எவ்விதத்தாலும் உம்மைக் கைவிடேன். வேந்தரே! யுத்தத்தில் உம்மை ஜயித்துத் திருதராஷ்டிரருடைய குமாரன் விரும்பியவிருப்பத்தை அவன் இந்த ஜீவலோகத்தில் எவ்விதத்தாலும் அடையப்போகிறதில்லை. நக்ஷத்திரங்களுடன்கூடிய ஆகாயமும் கீழேவிழும்; பூமியும் துண்டுதுண்டாகும்; நான் உயிரோடிருக்கும்வரையில் உம்மைத் துரோணர் பிடிக்கமுடியாது; இது நிச்சயம். யுத்தத்தில் அந்தத் துரோணருக்கு வஜ்ரத்தைத் தரித்த இந்திரனே உதவிசெய்தாலும் அல்லது விஷ்ணுவானவர் தேவர்களோடுகூடி உதவிசெய்தாலும் அந்தத் துரோணர் உம்மைப் போரில் பிடிக்க முடியாது. ராஜஸ்ரேஷ்டரே! நான் உயிரோடிருக்கையில் அஸ்திரசஸ்திரங்களைத் தரித்தவர்களான எல்லா வீரர்களுக்கும் ஸ்ரேஷ்டரான துரோணரிடத்திலிருந்து நீர் பயத்தைப் பாராட்ட வேண்டாம். ராஜேந்திரரே! மேலும், என்பிரதிஜ்ஞையானது தவறாததென்று சொல்வேன். நான் பொய்யையே நினைக்கிறதில்லை. அபஜயத்தையும் ஸ்மரிக்கிறதில்லை. ஒன்றைப் பிரதிஜ்ஞை செய்துவிட்டு, மறந்தாவது, அதனைச் செய்யாமலிருந்ததாக என் மனத்தில் ஞாபகமில்லை' என்று கூறினன். மகாராஜரே! பிறகு, பாண்டவர்களுடைய ஸேனை தங்கியிருக்குமிடத்தில் சங்கவாத்யங்களும் பேரீவாத்யங்களும் படகவாத்தியங்களோடுகூடின மிருதங்கங்களும் நன்றாக வாசிக்கப்பட்டன. மகாத்மாக்களான பாண்டவர்களுடைய ஸிம்மநாதமும் நன்றாகத் தோன்றியது. மிகவும் பயங்கரமான வில்லினுடைய நாணொலியும் தலத்வனியும் ஆகாயத்தை அளாவின. மகாதேஜஸ்வியான பாண்டவனுடைய சங்கத்தினோசையைக் கேட்டு உம்மைச்

சேர்ந்த சேனைகளிலும் வாத்யங்கள் அடிக்கப்பட்டன. பாரதரே! பிறகு உம்முடையதும் அவர்களுடையதுமான ஸேனைகள் அணி வகுக்கப்பட்டன. அவை யுத்தம்செய்வதற்காக ரணகளத்தில் ஒன்றோடொன்று மெதுவாக நெருங்கின. பிறகு, பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும், திருஷ்டத்யும்னனுக்கும் துரோணருக்கும் (பார்த்தவர்களுக்கு) மயிர்க்கூச்சமுண்டாகும்படியான கைகலந்த யுத்தம்நேர்ந்தது. ஸ்ருஞ்சயர்கள் மிகுந்த முயற்சியோடு துரோணருடைய ஸேனையை நாசப்படுத்துவதில் ஊக்கமுள்ளவர்களாயிருந்தும் (அதை நிறைவேற்றுவதில்) சக்தியற்றவர்களானார்கள். ஏனெனில், அது துரோணரால் காக்கப்பட்டது. அவ்வாறே, (பகைவர்களை) அடிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களான உம்முடைய புத்திரனைச்சேர்ந்த சிறந்த ரதிகர்கள் கிரீடியினால் காப்பாற்றப்படும் பாண்டவஸேனையை (நாடுவதற்குச்) சக்தியற்றவர்களானார்கள். பரஸ்பரம் ரக்ஷிக்கப்படுகின்ற அந்தஇரண்டு ஸேனைகளும், நன்றாகப்பூத்தவைகளும் இரவில் நன்றாக உறங்குகின்றவைகளுமான இரண்டு வனவரிசைகள்போல அசைவற்றிருந்தன. வேந்தரே! பிறகு, சேனையின் முனையில் [1]தங்கத்தேராளியான துரோணர் சூரியனைப்போல் விளங்குகின்ற ரதகுப்தியுடன்கூடின ரதத்தோடு வெளிப்பட்டு ஸஞ்சரித்தார். முயற்சியுள்ளவரும் யுத்தத்தில் சுறுசுறுப்பாகக் கார்யத்தைச்செய்கின்றவருமான அந்தத்துரோணர் ஒருவரைப் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் பயத்தினால் பலரைப்போல நினைத்தார்கள். மஹாராஜரே! அந்தத் துரோணரால் விடப்படும் குரூரமான அம்புகள் எல்லாத்திக்குக்களிலும் பாண்டுபுத்திரனுடைய சேனையைப் பயமுறுத்திக்கொண்டு ஸஞ்சாரம் செய்தன. துரோணரும் அநேக கிரணங்களால் சூழப்பட்டு மத்தியான்னத்தை அடைந்த சூரியன் காணப்படுவதுபோலக் காணப்பட்டார். பாரதரே! யுத்தத்தில் கோபத்தையுடைய மஹேந்திரனை அஸுரர்கள் பார்க்கவும் சக்தியுள்ளவர்களாகாததுபோல் இந்தத் துரோணரைப் பாண்டவர்களுள் ஒருவனாவது பார்ப்பதற்குக்கூடச் சக்தியுள்ளவனாகவில்லை. பிறகு, பிரதாபசாலியானபாரத்வாஜர் பாண்டவ ஸைந்யத்தை மோகிக்கச்செய்துவிட்டுக் கூர்மையுள்ள பாணங்களால் திருஷ்டத்யும்னனுடைய ஸைன்யத்தை விரைவில் நாசஞ்செய்தார். அந்தத் துரோணர் திக்குக்களை நான்குபக்கங்களிலும் தடுத்துக்கொண்டும் ஆகாயத்தை அம்புகளால் மறைத்துக்கொண்டும் திருஷ்டத்யும்னன் இருந்தவிடத்தில் பாண்டவசேனையைப் பிளந்தார்.

---

[1] 'ருக்மரத:' என்பது மூலம். இது துரோணருக்கு ஒரு பெயர்.

## பதினொன்காவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருடைய யுத்தமும், இரண்டு ரதிகர்களுடைய யுத்தமும், அபிமன்யுவினுடைய பராக்கிரமமும்.)

பிறகு, அந்தத் துரோணர் பாண்டவர்களுடைய சேனையில் அதிகமான பயத்தையுண்டுபண்ணிக்கொண்டு நெருப்பானது உலர்ந்தகாட்டைக் கொளுத்துவதுபோலச் சேனையைக்கொளுத்திக்கொண்டு ஸஞ்சரித்தார். ஸ்ருஞ்சயர்கள், கோபமுள்ளவரும் சைனியங்களைத் தகிக்கிறவரும் பிரத்தியக்ஷமாயுண்டான நெருப்புப்போன்றவரும் பொற்றேரையுடைவருமான துரோணரைப்பார்த்து மிக நடுங்கினார்கள். எப்பொழுதும் யுத்தத்தில் வில்லை இழுக்கின்றவரும் சுறுசுறுப்பாகச் சண்டைசெய்பவருமான அந்தத்துரோணருடைய நாணொலியானது இடியொலிபோல உரக்கக்கேட்கப்பட்டது. ஹஸ்தலாகவமுள்ள துரோணராலே விடப்படும் பயங்கரமான அம்புகள் தேராளிகளையும் குதிரைக்காரர்களையும் யானைகளையும் குதிரைகளையும் காலாட்படைகளையும் அழித்தன. வேனிற்காலத்தின் முடிவில் அதிகமாகக் கர்ஜித்துக்கொண்டு விருத்தியடைகின்ற மேகமானது ஆலங்கட்டியைப் பொழிவதுபோலத் துரோணர் பகைவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணிக்கொண்டு (அம்புமழையைப்) பொழிந்தார். ஸேனாபதியான அவர் எல்லாத்திக்குக்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டும் சேனையை மிகக்கலங்கும்படி செய்துகொண்டும் சத்துருக்களுக்கு அமானுஷமான பயத்தை விருத்தியடையச் செய்தார். பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் விளங்குகின்றதும் மகாபயங்கரமாயுள்ளதுமான அந்தத் துரோணருடைய வில்லானது மேகங்களில் மின்னல்போல் அந்த ரதத்தில் காணப்பட்டது. வீரரும் ஸத்தியஸந்தரும் கற்றறிந்தவரும் எப்பொழுதும் தர்மத்தில் நிலைபெற்றவருமான அந்தத் துரோணர் யுகத்தின்முடிவில் காலன்போல் கோரமாயும் பயங்கரமாயுமுள்ள ஒருநதியை எப்பொழுதும் பெருகச் செய்தார். ராஜஸ்ரேஷ்டரே! அரசரே! துரோணர், கோபவேகத்தைக் காரணமாகக்கொண்டதும், மாம்ஸங்களைத்தின்னும் ஜந்துக்களின் கூட்டங்களினால் நிரம்பியதும், படைக்கூட்டங்களால் நான்கு பக்கமும்நிறைந்ததும், த்வஜங்களாகிற மரங்களைப்பெயர்த்துக்கொண்டு போகிறதும், இரத்தமாகிற ஜலமுள்ளதும், தேர்களாகிய சுழல்களுள்

ளதும், யானைகளாலும் குதிரைகளாலும் ஏற்படுத்தப்பட்ட கரைகளுள்ளதும், கவசங்களாகிற தெப்பங்களோடுகூடியதும், மாம்ஸங்களாகிற சேற்றால் நெருங்கியதும், கொழுப்பும் மஜ்ஜையும் எலும்புமாகிற மணல்களுள்ளதும், தலைப்பாகைகளுடைய கூட்டங்களாகிற நுரைகளுள்ளதும், யுத்தமாகிற மேகத்தினாலே நான்குபக்கமும் நிறைந்ததும், ப்ராஸங்களாகிற மீன்களால் சூழப்பட்டதும், மனிதர்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் வியாபிக்கப்பட்டதும், அம்புகளுடைய வேகமாகிற வெள்ளத்தினால் பெருகுகின்றதும், சரீரங்களாகிற கட்டுமரங்களுள்ளதும், ரதங்களாகிற ஆமைகளாற்சூழப்பட்டதும், தலைகளாகிறதாமரைமலருள்ளதும், நீண்டகத்திகளாகிற மீன்களாலே சூழப்பட்டதும், ரதங்களும் யானைகளுமாகிற மடுக்களோடுகூடியதும், பலவித ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதும், நூற்றுக்கணக்கான பெரியரதங்களாகிற நீர்ச்சுழல்களுள்ளதும், பூமியிலுள்ள புழுதிகளாகிற அலைவரிசைகளுள்ளதும், சிறந்த வீர்யமுள்ளவர்களாலேயே எளிதில்தாண்டக்கூடியதும், பயமுள்ளவர்களால் எவ்விதத்தாலும் தாண்டமுடியாததும், அனேக சரீரங்களாலே நெருக்கமுள்ளதும், கழுகுகளாலும் பருந்துகளாலுமடையப்பட்டதும், ஆயிரம்மகாரதர்களை யமனுடையவீட்டுக்குக் கொண்டுபோகின்றதும், நாற்புறங்களிலும் இறைந்திருக்கின்ற சூலங்களாகிற ஸர்ப்பங்களால் எங்கும் நிறைந்ததும், பிராணிகளாகிற பக்ஷிகளாலே அடையப்பட்டதும், அறுக்கப்பட்ட அரசர்களாகிய சிறந்த அன்னப்பறவைகளுள்ளதும், கிரீடங்களாகிற பக்ஷிகளால் அடையப்பட்டதும், சக்ரங்களாகிற ஆமைகளுள்ளதும், கதைகளாகிற முதலைகளுள்ளதும், அம்புகளாகிற சிறுமீன்களால் நிறைந்ததும், கொக்குகள் கழுகுகள் நரிகள் இவைகளினுடைய கோரமான கூட்டங்களால் அடையப்பட்டதும், போரில் பலசாலியான துரோணரால் யுத்தத்தில் கொல்லப்பட்டபிராணிகளை நூற்றுக்கணக்காகப் பிதிருலோகத்துக்குக் கொண்டுபோகின்றதும், அனேக சரீரங்களால் நிறைந்ததும், மயிர்களாகிற பாசிகளும் புல்தரைகளுமுள்ளதும், பயந்தவர்களுக்குப் பயத்தைவிருத்திபண்ணக்கூடியதுமான இரத்தநதியை உண்டுபண்ணினார். அந்த அந்தச்சேனைகளைப் பயமுறுத்துகின்ற மகாரதரான துரோணரைக்குறித்து யுதிஷ்டிரர்முதலானவர்கள் நான்குபக்கங்களிலும் எதிர்த்து ஓடிவந்தார்கள். எதிரில் ஓடிவருகின்ற அந்தச் சூரர்களை உறுதியான பராக்கிரமமுள்ள உம்முடையயுத்தவீரர்கள் நான்குபக்கமும் எதிர்த்தார்கள். அது புளகத்தையுண்டுபண்ணத்தக்கதாயிருந்தது. அனேகமாயைக

னுள்ள சகுனியானவன் ஸஹதேவனை எதிர்த்தோடி வந்தான். அவன் கூர்மையான அம்புகளாலே ஸாரதியையும் கொடிமரத்தையும் தேரை யும் பிளந்தான். மாத்ரீபுத்திரனான ஸஹதேவனும் அதிககோபத் தைப்பாராட்டாமலே அந்தச்சகுனியினுடைய கொடிமரத்தையும் வில்லை யும் ஸாரதியையும் குதிரைகளையும் அம்புகளாலறுத்துவிட்டு அறுபது பாணங்களாலே அவனையும் அடித்தான்; அம்புமழையினால் சகுனி யைப் பிளந்து தடுத்தான். சகுனியானவன் கதையையெடுத்துச் சிறந்த தேரினின்று கீழேகுதித்தான். ராஜரே! அந்தச் சகுனி கதாயுதத்தினா லே அந்த ஸஹதேவனுடைய ரதத்தினின்று ஸாரதியைக் கீழேதள்ளி னான். அரசரே! பிறகு, மகாபலசாலிகளும் சூரர்களுமான அவ்விரு வரும், ரதத்தையிழந்து கதையைக்கையில்கொண்டு கொடுமுடிகளோடு கூடிய இரண்டு மலைகள்போல யுத்தத்தில் விளையாடினார்கள். துரோணர் கூர்மையான அம்புகளாலே பாஞ்சாலராஜகுமாரனை அடித்தார். மகா ராஜரே! புருஷச்ரேஷ்டரே! அந்த யுத்தகளத்தில் அவ்விருவருடைய அம்புமழைகளாலும் ஆகாயமானது இரவில் மின்மினிப்பூச்சிகளால் பிரகாசிப்பதுபோலப் பிரகாசித்தது. வீரனான பீமஸேனன், விவிம்சதி யைக் கூர்மையான இருபதுபாணங்களாலடித்தும் அசைவுறச்செய்தா னில்லை. அஃது ஆச்சரியமாயிருந்தது. மகாராஜரே! விவிம்சதியோ விரைவாகப் பீமனை, குதிரைகளையும் கொடிமரத்தையும் வில்லையும் இழந்தவனாகச்செய்தான். பிறகு, ஸைன்யங்கள் கொண்டாடின. வீர னான அந்தப்பீமன் ரணகளத்தில் சத்துருவினுடைய அந்த விக்கிரமத் தைப் பொறுக்கவில்லை. பிறகு, அந்தப்பீமன் தன் கதாயுதத்தினாலே, விவிம்சதியினுடைய நன்கு பழக்கப்பட்ட எல்லாக்குதிரைகளையும் அடித்துக் கீழேதள்ளினான். அரசரே! அந்த மகாபலசாலியான விவிம் சதியானவன் குதிரைகளையிழந்த ரதத்தினின்று கேடகத்தைக்கையி லெடுத்துக்கொண்டு மதங்கொண்டயானையை மதங்கொண்டயானை எதிர்ப்பதுபோலப் பீமஸேனனை எதிர்த்துச்சென்றான். சூரனான சல்ய னோ ஸகோதரியின் குமாரனும் தனக்குப்பிரியனுமான நகுலனை லால னம்செய்கிறவன்போலவும் கோபத்தையுண்டுபண்ணுகிறவன்போல வும் உரக்கச்சிரித்துக்கொண்டு அம்புகளாலடித்தான். சிறந்த பிரதாப சாலியான நகுலன் யுத்தத்தில் அந்தச்சல்யனுடைய குதிரைகளையும் குடையையும் கொடியையும் ஸாரதியையும் வில்லையும் கீழேதள்ளிச் சங்கத்தை ஊதினான். திருஷ்டகேதுவானவன் கிருபராலே தொடுக்கப் படும் பலவித அம்புகளையறுத்து எழுபது பாணங்களால் அவரைப் பிளந்தான்; மூன்றுபாணங்களாலே அவருடைய கொடியையும்

அறுத்தான். பிராம்மணரான கிருபாசாரியர் கோபமுள்ள அந்தத் திருஷ்டகேதுவை யுத்தகளத்தில் பெரிதான அம்புமழையினால் தடுத்து அடித்தார். ஸாத்யகியானவன் கிருதவர்மாவை மார்பில் அம்பினலடித்து மறுபடியும் நகைத்துக்கொண்டு வேறு எழுபது பாணங்களாலும் அடித்தான். போஜனானவன் ஸாத்யகியைக் கூர்மையுள்ள எழுபத்தேழு பாணங்களாலே விரைவாக அடித்தும் வேகமுள்ள காற்றானது மலையை அசைக்கமுடியாததுபோல அவனை அசைக்கமுடியவில்லை. ஸேனாபதியான த்ருஷ்டத்யும்னன் ஸுசர்மாவை மர்மஸ்தானங்களில் மிகவும் அடித்தான். அவனும் அவனைத் தோமராயுதத்தினாலே தோள்பூட்டில் அடித்தான். விராடன் யுத்தத்தில் மகாவீர்யமுள்ள மச்சநாடர்களோடுகூடி ஸூர்யகுமாரனான கர்ணனை எதிர்த்தான். அது ஆச்சரியம்போலிருந்தது. அப்பொழுது கர்ணனுக்குப் பயங்கரமான பௌருஷம் ஏற்பட்டது. அதனால், அவன் பதிவான கணுக்களுள்ள கணைகளால் எதிரியின் படையைத் தடுத்தான். துருபதராஜனோ பகதத்தனோடு தானே நெருங்கினான். மகாராஜரே! அவ்விருவருடைய யுத்தமானது மிக்க ஆச்சரியகரமாயிருந்தது. ஆண்மையிற் சிறந்தவனான பகதத்தனோ படிந்த கணுக்களுள்ள அம்புகளாலே ஸாரதியோடும் கொடியோடும் தேரோடும் துருபதராஜனை அடித்தான். பிறகு, துருபதனும் கோபங்கொண்டு மகாரதனான பகதத்தனைக் கணுக்கள் பதிவான அம்பினாலே விரைவாக மார்பிலடித்தான். உலகத்தில் யுத்தவீரர்களுள் சிறந்தவர்களும் அஸ்திரவித்தையில் ஸமர்த்தர்களுமான ஸோமதத்தனுடைய குமாரனும் பூரிஸ்ரவஸும் சிகண்டியும் பிராணிகளுக்குப் பயத்தையுண்டுபண்ணக்கூடிய போர்புரிந்தார்கள். வேந்தரே! வீரியவானான பூரிஸ்ரவஸ் மகாரதனான சிகண்டியை யுத்தகளத்தில் பெரிதான அம்புவெள்ளத்தால் மூடினான். பரதகுலத்திலுதித்த மன்னரே! பிறகு, சிகண்டியும் கோபங்கொண்டு பூரிஸ்ரவஸைத் தொண்ணூறு பாணங்களால் நடுங்கச்செய்தான். பயங்கரமான செய்கையுள்ள ஹிடிம்பாபுத்திரனும் அலம்புஸனுமாகிய இரண்டு ராக்ஷஸர்களும், ஒருவரையொருவர் ஜயிக்க எண்ணங்கொண்டு மிகவும் ஆச்சரியகரமான யுத்தஞ் செய்தார்கள். கொழுப்புள்ளவர்களான அவ்விருவரும் அனேகமாயைகளையுண்டுபண்ணிக்கொண்டும் ஒருவருக்கொருவர் மாயைகளால் மறைந்துகொண்டும் மிக்க ஆச்சரியத்தையுண்டுபண்ணிக்கொண்டும் ஸஞ்சாரஞ் செய்தார்கள். சேகிதானனும் அனுவிந்தனும் (எதிர்த்து) தேவாஸுரயுத்தத்தில் மிக்கபலமுள்ள பலனும் இந்திரனும்போல மிக்கபயங்கரமாகப் போர்புரிந்தார்கள். அரசரே! லக்ஷ்மணன் க்ஷத்ர

தேவனோடு எதிர்த்து, முற்காலத்தில் ஹிரண்யாக்ஷனோடு யுத்தரங்கத்தில் மகாவிஷ்ணு யுத்தஞ்செய்ததுபோல, கொடியபோர்புரிந்தான். வேந்தரே! பிறகு, பௌரவன், அதிவேகமாகச் செல்லுகின்ற குதிரைகளுள்ளதும், (யுத்தத்தின்) முறைப்படி அமைக்கப்பட்டதுமான ரதத்தோடு ஸுபத்திராபுத்திரனை அபிமன்யுவைக் கர்ஜித்துக்கொண்டு எதிர்த்துச்சென்றான். பிறகு, மிக்கவலிமையுள்ளவனும் பகைவர்களை அடக்குகிறவனுமான அந்த அபிமன்யுவானவன், யுத்தஞ்செய்ய விருப்பங்கொண்டு வேகத்தோடு எதிர்த்துவந்து அவனோடு பெரும்போர்புரிந்தான். பௌரவனும் ஸுபத்திராபுத்திரன்மீது அம்புக்கூட்டங்களை இறைத்தான். அர்ஜுனபுத்திரனை அபிமன்யு அந்தப்பௌரவனுடைய கொடிமரத்தையும் குடையையும் வில்லையும் பூமியில் விழும்படி செய்தான். அவன் பௌரவனை வேறு ஏழுபாணங்களாலே அடித்து ஐந்துபாணங்களாலே அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் அடித்தான். பிறகு, அவன் அடிக்கடி ஸிம்மம்போலக் கர்ஜித்துத் தன் சேனையை மகிழ்வித்துக்கொண்டு பௌரவனுக்கு நாசத்தையுண்டு பண்ணத்தக்க அம்பை வேகமாக எடுத்தான். ஹ்ருதிக குமாரனை கிருதவர்மா, பார்க்கப்பயங்கரமான தோற்றமுள்ள அந்தப்பாணமானது நாணில்பூட்டப்பட்டதையறிந்து, இரண்டுபாணங்களாலே அம்போடு கூடின (அபிமன்யுவினுடைய) வில்லை அறுத்தான். சத்துருவீரர்களைக் கொல்லுகிறவனை ஸௌபத்ரன் அறுக்கப்பட்ட அந்தவில்லை எறிந்துவிட்டுக் கேடகத்தையுதக் கையில் ஏந்திக் கூர்மையுள்ள கத்தியை உருவிக்கொண்டான். அந்த அபிமன்யுவானவன் ஹஸ்தலாகவத்துக்குத் தக்கபடியாக அனேகம்புள்ளிகளுள்ள அப்படிப்பட்ட கேடகத்தோடும் சுற்றப்பட்ட கத்தியோடும் தன்வீரியத்தைக் காண்பித்துக்கொண்டு பலவித கதிகளோடு ஸஞ்சரஞ்செய்தான். ராஜரே! கேடகத்தையும் கத்தியையும் சுழற்றலும் மறுபடி மேலே சுழற்றலும் நான்குபக்கத்திலும் உதறலும் மறுபடி மேலே தூக்கி நிறுத்தலும் பேதமின்றிக்காணப்பட்டன. அந்த அபிமன்யுவானவன் பௌரவனுடைய ரதத்தைச் சேர்ந்த ஏர்க்காலில் சீக்கிரமாகப் பாய்ந்து கர்ஜித்துக்கொண்டு அவனுடைய ரதத்திலுள் பிரவேசித்து அவனது தலைமயிரைப்பிடித்தான். காலால் அவனுடைய ஸாரதியைக்கொன்று கத்தியினால் கொடிமரத்தை அறுத்துக் கீழேதள்ளி, ஸமுத்திரத்தைக்கலக்கி அதிலுள்ள ஸர்ப்பத்தைக் கருடன் கவர்வதுபோல, அந்தப் பௌரவனைப் பிடித்துக்கொண்டான். நான்குபக்கங்களிலும் தொங்கிக்கொண்டிருக்கின்ற நுனிமயிர்களுள்ளவனும் பிரஜ்ஞையற்றவனுமான அந்தப்பௌரவனை ஸிம்மத்தினாலே

கீழே தள்ளப்படும் விருஷபத்தைப்போல எல்லா அரசர்களும் கண்டார்கள். அபிமன்யுவின் வசத்திலகப்பட்டு அறுதன்போல இழுக்கப்பட்டும் தள்ளப்பட்டுமிருக்கின்ற அந்தப்பௌரவனைக்கண்டு ஜயத்ரதன் பொறுக்கவில்லை. அந்த ஜயத்ரதனென்பவன் மயில்தோகைகள்கட்டப்பட்டதும் அனேககிண்கிணிகளுடைய ஸமூகங்களுள்ளதுமான கேடகத்தையும் கத்தியையும் எடுத்துக்கொண்டு ஸிம்மநாதத்துடன் தேரிலிருந்து குதித்தான். பிறகு, அபிமன்யுவானவன், ஸிந்துதேசாதிபனான ஜயத்ரதனைப்பார்த்துப் பௌரவனைவிட்டுவிட்டு ரதத்திலிருந்து வேகமாகப் பருந்துபோல உயரக்கிளம்பிக் குதித்தான். அர்ஜுனகுமாரனான அவன் சத்துருக்களால் பிரயோகிக்கப்படும் ஈட்டிகளையும் பட்டிசங்களையும் கத்திகளையும் கத்தியினால் துண்டித்தான்; கேடகத்தாலும் தடுத்தான். பலசாலியும் சூரனுமான அந்த அபிமன்யு தன்னுடைய பாகுபலத்தை ஸைன்யங்களுக்குக் காண்பித்து மறுபடியும் அந்தப்பெரிய கத்தியையும் கேடகத்தையும் கையில்எடுத்துக்கொண்டு யானையைப் புலிஎதிர்ப்பதுபோல, தன்பிதாவுக்கு மிக்கவிரோதியாயிருக்கிற விருத்தக்ஷத்திரன்குமாரனான ஜயத்ரதனை நேரில் எதிர்த்துச்சென்றான். புலியையும் சிங்கத்தையும்போன்ற அவ்விருவரும் கத்தியையும் பற்களையும் நகங்களையும் ஆயுதங்களாகக்கொண்டு ஒருவரையொருவர் தாக்கி மனக்களிப்புடையவர்களாகி நன்றாகயுத்தஞ்செய்தார்கள். கத்திகேடகங்களுடைய [1] ஸம்பாதங்களிலும் [2] அபிகாதங்களிலும் [3] நிபாதங்களிலும் புருஷச்ரேஷ்டர்களான அவ்விருவருக்குமுள்ள வித்தியாஸத்தை ஒருவருங்காணவில்லை. உதறுதலும் கத்தியைச்சுழற்றுவதால் சப்தத்தையுண்டுபண்ணுதலும் சஸ்திரத்திற்குரிய காலத்தைப் பார்த்தலும் வெளிப்புறத்திலும் உட்புறத்திலும் எதிரியைத்தாக்குதலும் (இருவரிடத்தும்) வேற்றுமையின்றியே காணப்பட்டன. உள்ளிலும் வெளியிலுமுள்ள உத்தமமானயுத்தமார்க்கத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு மகாத்மாக்களான அவ்விருவரும் சிறகுகளுள்ள இரண்டுமலைகள்போலக் காணப்பட்டார்கள். பிறகு, கத்தியை நான்குபக்கங்களிலும் சுழற்றுகின்றவனும் கீர்த்தியுடையவனுமான சுபத்ராபுத்திரனுடைய கத்தியை ஜயத்ரதன் தன்கேடகத்தினுடைய ஒருபக்கத்துநுனியினால் தாக்கினான். ஸ்வர்ணமயமானபத்திரங்களை இடையில்கொண்டு பிரகாசிக்கின்ற அந்தக்கேடகத்தில் அகப்பட்டு ஜயத்ரதனுடையபலத்தினால் உதறப்பட்ட அந்தப்பெரியகத்தியானது ஒடிந்துவிட்டது. கத்தி

---

[1] எதிராக வீசுதல். [2] நான்குபக்கத்திலும் சுழற்றியடித்தல். [3] பதுங்கி அல்லது சாய்ந்து வீசுதல்.

ஓடிந்ததை அறிந்து அபிமன்யுவானவன் ஆறு அடி தூரம் தாண்டி ஒரு நிமிஷத்துக்குள் மறுபடியும் தன் ரதத்தை அடைந்தவனைக் காணப் பட்டான். யுத்தத்திலிருந்து விடுபட்டு உத்தமமான ரதத்தை அடைந்த அந்த அபிமன்யுவை எல்லா அரசர்களும் ஒன்றுசேர்ந்து நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு மகாபலமுள்ளவனான அர்ஜுன குமாரன் கத்தியையும் கேடகத்தையும் கையிலெடுத்துக்கொண்டு ஜயத்ரதனைப்பார்த்து ஸிம்மநாதஞ்செய்தான். சத்துருவீரர்களை ஸம்ஹரிக்கிறவனான அவன் சிந்துராஜனான ஜயத்ரதனைவிட்டுவிட்டு, உலகத்தைச் சூரியன் தபிக்கச்செய்வதுபோல அவனுடைய சைனியத்தைத் தவிக்கச் செய்தான். அவன்மீது சல்லியன் முழுதும்இரும்பினால்செய்யப்பட்டதும் பொன்னாலலங்கரிக்கப்பட்டதும் ஜ்வலிக்கின்ற அக்னிஜ்வாலை போல அச்சந்தருவதுமான சக்திபாயுதத்தை யுத்தத்தில் பிரயோகம் செய்தான். அந்தச்சக்தியை அபிமன்யுவானவன், கீழேவிழுகின்ற உத்தமமான ஸர்ப்பத்தைக் கருடன்பிடிப்பதுபோல் வேகமாகப்பாய்ந்து பிடித்தான்; உறையைவிட்டுக் கத்தியையும் உருவிக்கொண்டான். பிறகு, அளவற்ற சௌர்யமுள்ள அந்த அபிமன்யுவினுடைய லாகவத்தையும் பௌருஷத்தையும்அறிந்து எல்லா அரசர்களும் ஒன்றுகூடி ஸிம்மநாதஞ்செய்தார்கள். பிறகு, பகைவர்களான வீரர்களைக்கொல்லுகின்ற ஸௌபத்ரன் வைடூர்யத்தினால் சித்ரவேலைசெய்யப்பட்டதும் கூர்மையுள்ளதுமான அந்தச்சல்லியனுடைய சக்திபாயுதத்தையே தன் பாகுபலத்தினால் (சல்லியனைக்குறித்தே) பிரயோகஞ்செய்தான். அந்தச் சக்தியானது சட்டையுரித்தபாம்புபோல வேகமாகச் சல்லியனுடைய தேரையடைந்து அவனுடைய ஸாரதியைக்கொன்று ரதத்தினின்று அவனையும் விழும்படிசெய்தது. பிறகு, விராடனும் துருபதனும் திருஷ்டகேதுவும் யுதிஷ்டிரரும் ஸாத்யகியும் கேகயர்களும் பீமஸேனனும் திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் நகுலஸஹதேவர்களும் த்ரௌபதீகுமாரர்களும், 'நல்லது; நல்லது' என்று ஆரவாரஞ்செய்தார்கள். பலவிதமான பாணங்களுடைய ஒலிகளும் உரத்தஸிம்மநாதங்களும் (புறங்காட்டி) ஓடாதவனான அபிமன்யுவை ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு தோன்றின. உம்முடைய குமாரர்கள் சத்துருவினுடைய வெற்றிக்கு அடையாளமான அந்தவிஷயத்தைப் பொறுக்கவில்லை. மகாராஜரே! பிறகு, எல்லோரும் சீக்கிரமாக நான்குபக்கங்களிலும் அந்தஅபிமன்யுவின்மீது கூர்மையான அம்புகளை மேகங்கள்பர்வதத்தின்மீது பொழிவதுபோலப் பொழிந்தார்கள். பகைவர்களைக் கொல்பவனும் ரிதாயனகுமாரனுமானசல்யன் கோபங்கொண்டு ஸாரதிக்குநேர்ந்த

அவமானத்தைக்கண்டு அந்தவீரர்களுக்கும்பிரியத்தைச்செய்யவிரும்பி அபிமன்யுவை எதிர்த்துவந்தான்" என்று கூறினன்.

---

## பதினைந்தாவது அத்யாயம்.

## துரோணாபிஷேக பர்வம் (தொடர்ச்சி.)

(பீமன் கதாயுத்தத்தில் சல்யனைத் தோற்கச்செய்தது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! உன்னால்சொல்லப்பட்ட மிக்க ஆச்சரியமான பலவித த்வந்துவயுத்தங்களைக்கேட்டுக் கண்ணுள்ளவனாயிருத்தலை யான் விரும்புகிறேன். ஸஞ்சய! இந்தக்கோரமான யுத்தங்களைக் கேட்டபிறகு, (முன்புநடந்த) தேவாஸுரயுத்தங்கூட இவ்விதமிராதென்றெண்ணுகிறேன். மனிதர்கள் தேவாஸுரயுத்தத்துக்கொப்பான கௌரவபாண்டவர்களுடைய இந்தயுத்தத்தை உலகங்களில் மிக்கஆச்சரியகரமென்று சொல்லப்போகிறார்கள். இந்தஸமயத்தில் உத்தமமான யுத்தத்தைக் கேட்கின்றஎனக்குப் போதுமென்கிறஎண்ணம் உண்டாகவில்லை. ஆதலால், சல்யனுக்கும் அபிமன்யுவுக்கும்நடந்த யுத்தத்தை எனக்குச்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத் தொடங்கினன்.

"ஓ! ராஜரே! ஸாரதிகொல்லப்பட்டதைக்கண்டு சல்யன் முழுமையும் இரும்பினாலான கதையைத்தூக்கிக்கொண்டு ஸிம்மநாதஞ்செய்து கோபத்தோடு உத்தமமானதேரினின்று கீழேகுதித்து ஓடிவந்தான். ஜ்வலிக்கின்ற பிரளயகாலநெருப்பைப்போன்றவனும் தண்டத்தைக் கையில்கொண்ட யமனைப்போன்றவனுமான அந்தச்சல்யனைக்குறித்துப் பீமஸேனன் பெரிதானகதையைஎடுத்துக்கொண்டு வேகத்தோடு எதிர்த்துச்சென்றான். அபிமன்யுவும் வஜ்ராயுதத்துக்கொப்பான பெரிய கதாயுதத்தைஎடுத்துக்கொண்டு சல்யனை, 'வா; வா' என்றுகூறினன்; அவனைப் பீமஸேனன் முயன்றுதடுத்தான். பிரதாபசாலியான பீமஸேனனே அபிமன்யுவைத்தடுத்துவிட்டு யுத்தத்தில் சல்யனைஎதிர்த்து மலைபோல அசைவற்றுநின்றான். அவ்வாறே மத்ரராஜனும் மகாபலசாலியானபீமனைக்கண்டு புலியானது யானையையெதிர்ப்பதுபோல வேகமாகஎதிர்த்து வந்தான். விளங்குகின்றகாலாக்னியைப்போலவும் பாசாயுதத்தைக் கையில்கொண்ட யமனைப்போலவுமிருக்கிற அந்தச்சல்யனைநோக்கிப் பீமன் பெரிதானகதாயுதத்தை எடுத்துக்கொண்டு வேகமாக எதிர்த்து

வந்தான். பிறகு, ஆயிரக்கணக்கான தூர்யவாத்யகோஷங்களும் சங்க முழக்கங்களும் ஸிம்மநாதங்களும் பேரீவாத்யங்களுடையபேரொலி களும் நன்றாகத்தோன்றின. ஒருவரைஒருவர்பார்ப்பவர்களும் எதிர்த்து ஓடிவருபவர்களுமான நூற்றுக்கணக்கானபாண்டவகௌரவர்களுடைய 'நல்லது; நல்லது' என்கிறஒலியானது உண்டாயிற்று. பாரதரே! எல்லா அரசர்களுள்ளும் மத்திரதேசாதிபதியானசல்யனைத்தவிர வேறொருவ னும் யுத்தத்தில் பீமஸேனனுடையவேகத்தைச் சகிக்கச் சக்தியுள்ளவ னல்லன். அவ்வாறாகவே மகாத்மாவான மத்ரராஜனுடையகதையின் வேகத்தையும் யுத்தத்தில் விருகோதரனைத்தவிர (உலகத்தில்) வேறெ வன் தாங்கச்சக்தியுள்ளவன்? பொற்பூண்கள்கட்டியதும் ஜனங்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிறதுமான பெரியகதையானது பீமனால் அப்பொழுது சுழற்றப்பட்டு மிகவிளங்கியது. அக்னியினாலேஜ்வலிக் கின்றதும் மகாபயங்கரமுமான அந்தக்கதாயுதமானது அப்பொழுது பிரகாசித்தது. அவ்வாறே பலவிதமானயுத்தகதிகளிலும் மண்டலாகார மானகதிகளிலும்செல்லுகின்ற சல்யனுடையகதாயுதமானது பெரிய மின்னலுக்கொப்பாக விளங்கியது. அந்தச்சல்யன் விருகோதரன் இரு வரும் கதைகளாகிறகொம்புகளைச்சுழற்றுகிற இரண்டுகாளைகள்போலக் கர்ஜித்துக்கொண்டு மண்டலகதிகளோடு ஸஞ்சரித்தார்கள். கோபத்தி னால் சிவந்தகண்களையுடையவர்களும் வீரர்களும் சத்துருக்களுடைய கூட்டத்தை அடிக்கின்றவர்களும் பிரதானர்களும் மிக்கஊக்கமுள்ள வர்களுமான அவ்விருவரும் கதாயுத்தத்தில் ஸமர்த்தர்களாகக் காணப் பட்டார்கள். ஆண்மையிற்சிறந்தவர்களான அவ்விருவருக்கும் சுழல் போன்ற மண்டலகதிகளிலும் கதைசுழற்றும் விளையாட்டுக்களிலும் வேற்றுமையில்லாமல் யுத்தம்நடந்தது. அக்னிஜ்வாலையோடுகூடியதும் மஹாபயங்கரமுமான சல்யனுடையபெரியகதையானது பீமஸேனனால் அடிக்கப்பட்டு அப்பொழுது விரைவாகச்சிதறியது. அவ்வாறே சத் துருவினாலடிக்கப்பட்ட பீமஸேனனுடையகதையும் மழைக்காலத்து ராத்திரியில் மின்மினிப்பூச்சிகளால்சூழப்பட்டமரம்போல விளங்கியது. பாரதரே! யுத்தத்தில் மத்ரராஜனாலே எறியப்பட்டகதை ஆகாசத் தைப்பிரகாசிக்கச்செய்துகொண்டுஅடிக்கடி நெருப்பைக்கக்கியது. அவ் வாறே பீமஸேனனால் சத்துருவைநோக்கி எறியப்பட்டகதையானது கீழேவிழுகின்ற பெருங்கொள்ளிக்கட்டைபோல அந்த (சத்துரு) ஸைனியத்தைத்தவிக்கச்செய்தது. [1] கதாயுதங்களுட்சிறந்த அந்த இரண்டுகதைகளும் ஒன்றோடொன்றுதாக்கி, சீறுகின்ற இரண்டு

---

[1] 'கதிநாՐ' என்பது மூலம்.

பெண்ணுகங்கள்போல நெருப்பைக்கக்கின. அவ்விருவரும் நகங்க ளாலே இரண்டுபெரும்புலிகள்போலவும், தந்தங்களாலே இரண்டு பெரியயானைகள்போலவும் சிறந்தகதைகளோடு ஒருவரையொருவர் எதிர்த்துப் பற்பலவிதமாக ஸஞ்சரித்தார்கள். பிறகு,ஒருக்ஷணத்துக் குள் கதையின்நுனியினால்அடிக்கப்பட்டு ரத்தத்தால் நனைக்கப்பட்ட வர்களாகி மகாத்மாக்களான அவ்விருவரும் பூத்திருக்கின்ற இரண்டு பலாசவிருக்ஷங்கள்போலக் காணப்பட்டார்கள். புருஷஶ்ரேஷ்டர்க ளான அவ்விருவருடைய கதாயுதங்களினடியினாலுண்டான ஓசையா னது இந்திரனுடைய வஜ்ராயுதத்தின்ஒலிக்கொப்பாக எல்லாத்திக்குக் களிலும் கேட்கப்பட்டது. மத்ரராஜனாலே கதாயுதத்தினால் இடப் பக்கத்திலும் வலப்பக்கத்திலும் அடிக்கப்பட்டபீமஸேனன் பிளக்கப் படுகின்றமலைபோல அப்பொழுது நடுக்கமின்றிநின்றான். அவ்வாறே பீமனுடையகதையின்வேகங்களாலே அடிக்கப்படுகின்ற மகாபலசாலி யான சல்யனும் வஜ்ராயுதங்களால் அடிக்கப்பட்டமலைபோலத் தைரி யத்தோடுநின்றான். மஹாவேகமுள்ளவர்களும் நன்றாகத்தூக்கப்பட்ட கதைகளையுடையவர்களுமான இருவரும் நெருங்கியெதிர்த்தார்கள். மறு படியும் (ஒருவருக்கொருவர்) துன்பம்விளைவிக்கும்வழியைத்தேடுவதில் நிலைபெற்றவர்களாக மண்டலாகாரமானகதிகளோடு ஸஞ்சரித்தார்கள். பிறகு, துள்ளி எட்டடிபாய்ந்து கிட்டநெருங்கி இருவரும் யானைகள் போல இரும்புத்தடிகளாலே ஒருவரையொருவர் வேகமாக அடித்தார் கள். கதைகளால் பரஸ்பரம் வேகத்தோடு மிகவுமடிக்கப்பட்ட அந்த வீரர்களிருவரும் ஒரேசமயத்தில் இரண்டு [1] இந்திரத்வஜங்கள் போலப் பூமியில் விழுந்தார்கள். பிறகு, மெய்ம்மறந்தவனும் அடிக் கடி பெருமூச்சுவிடுகின்றவனுமான அந்தச் சல்யனைக்குறித்து மஹாரதனான க்ருதவர்மா வேகமாக ஸமீபத்தில் வந்தான். மஹாராஜ ரே! பிறகு,மஹாரதனானகிருதவர்மா,கதையினால்மிக்கதுன்பத்தையடை விக்கப்பட்டவனும் மூர்ச்சையினால் கவரப்பட்டவனும் பாம்புபோலப் புரளுகின்றவனும் மத்ரதேசாதிபதியுமான அந்தச் சல்யனைப்பார்த்து ரணகளத்தில் அவனைத் தன்தேரின்மீதேற்றிவைத்துக்கொண்டு யுத்த களத்தைவிட்டு விரைவாக விலக்கிக்கொண்டு சென்றான். வீரனும் மிகச் சிறந்தகைகளுள்ளவனுமான பீமனும் மதங்கொண்டவன்போல மெய்ம் மறந்தவனாகி மறுபடியும் நிமிஷநேரத்திற்குள் எழுந்திருந்து கதாயுதத் தைக் கையிலேந்தியவனாகக் காணப்பட்டான். பிறகு, யுத்தகளத்தி னின்று விலகின மத்ரதேசாதிபதியான சல்யனைக்கண்டு உம்முடைய

[1] ஆதிபர்வம் 218-ம் பக்கம் பார்க்க.

புத்திரர்கள் தேர்களோடும் யானைகளோடும் குதிரைகளோடும் காலாட்களோடும் மிகநடுங்கினார்கள். உம்மைச்சேர்ந்தவர்களான அவர்கள், ஜயத்தால் விளங்குகின்ற பாண்டவர்களால் பீடிக்கப்பட்டுப் பயந்து காற்றினால் தள்ளப்பட்ட மேகங்கள்போலத் திக்குக்களில் ஓடினார்கள். ஓ! ராஜரே! மகாரதர்களான பாண்டவர்கள் கௌரவர்களை ஜயித்து, விளங்குகின்ற நெருப்புக்கள்போல ரணகளத்தில் விசேஷமாக விளங்கினார்கள். நரஸ்ரேஷ்டரே! பிறகு, மட்டுகங்களும் பேரிகைகளும் பெரிய முரசங்களும் பணவமும் ஆனகமும் துந்துபியும் நிர்ஜரியும் சங்கொலிகளோடுகூடின பலவித ஸிம்மநாதங்களும் மிக ஒலித்தன.

---

## பதினாறாவது அத்யாயம்.

## துரோணாபிஷேகபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணர் யுதிஷ்டிரரை உயிரோடு பிடிக்கமுயன்றதும், அதனை அர்ஜுனன் தடுத்ததும்.)

உம்மைச்சேர்ந்ததும் மிகப்பெரிதுமான அந்தச்சேனையானது பிளக்கப்பட்டதைக்கண்டு, வீரியமுள்ளவனான விருஷஸேனன் யுத்தகளத்தில் ஒருவனாகவே அஸ்திரஸாமர்த்தியத்தினாலே பாண்டவர்களை எதிர்த்தான். யுத்தத்தில் விருஷஸேனனாலே விடப்படும் அம்புகள் காலாட்களையும் குதிரைகளையும் தேர்களையும் யானைகளையும் பிளந்துகொண்டு பத்துத்திசைகளிலும் ஸஞ்சரித்தன. மகாராஜரே! வெயிற்காலத்தில் சூரியனுடைய கிரணங்கள்போலப் பிரகாசிக்கின்ற அந்த விருஷஸேனனுடைய பெரியபாணங்கள் ஆயிரக்கணக்காக வெளிப்பட்டன. மகாராஜரே! அந்தவிருஷஸேனனாலே துன்புறுத்தப்படும் ரதிகர்களும் குதிரைவீரர்களும் காற்றினால்முறிக்கப்பட்டமரங்கள்போல விரைவாகப்பூமியில்விழுந்தார்கள். மன்னரே! மகாரதனானவிருஷஸேனன் குதிரைக்கூட்டங்களையும் தேர்க்கூட்டங்களையும் யானைக்கூட்டங்களையும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் யுத்தத்தில் சாய்த்தான். பயமற்றவன்போல் ஸகாயமற்றவனாக யுத்தத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற அந்தவிருஷஸேனனைக்கண்டு எல்லாஅரசர்களும் ஒன்றுசேர்ந்து நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். நகுலனுடைய குமாரனான சதானீகன் விருஷஸேனனையெதிர்த்துவந்து மர்மஸ்தானங்

க்ளேப்பிளக்கின்ற பாணங்களாலே அவனையடித்தான். கர்ணகுமாரனை விருஷஸேனன் அந்தச்சதானீகனுடையவில்லையறுத்துக் கொடிமரத்தையும் கீழேதள்ளினான். பிராதாவான அந்தச்சதானீகனைப் பாதுகாக்க விரும்பி த்ரௌபதீகுமாரர்கள் எதிராகஓடிவந்தார்கள். அம்புக்கூட்டங்களாலே சீக்கிரமாகக் கர்ணகுமாரனைவிருஷஸேனனைக் கண்ணுக்குத் தெரியாமற்செய்தார்கள். அவர்களைக்குறித்துத் துரோணபுத்திரர்முதலானரதிகர்கள் ஸிம்மநாதஞ்செய்துகொண்டு எதிர்த்துவந்தார்கள். மகாராஜரே! பலவிதஅம்புகளாலே மகாரதிகர்களான த்ரௌபதீபுத்திரர்களை, மலைகளை மேகங்கள்மூடுவதுபோலச் சீக்கிரமாக மூடிவிட்டார்கள். புத்திரர்களிடத்தில்அன்புள்ளவர்களான பாண்டவர்களும் ஆயுதங்களை எடுத்துக்கொண்டவர்களான பாஞ்சாலர்களும் கேகயர்களும் மத்ஸ்யதேசத்தரசர்களும் ஸ்ருஞ்சயர்களும் விரைவுடன் அந்தக் குருவீரர்களை எதிர்த்தார்கள். அசுரர்களோடு தேவர்களுக்கு யுத்தம் நடந்ததுபோல் உம்மைச்சேர்ந்தவர்களோடு பாண்டுபுத்திரர்களுக்குக் கோரமானதும் மிகப்பெரிதும் மயிர்க்கூச்சமடையும்படிசெய்யத்தக்கதுமான அந்தயுத்தம் நடந்தது. பரஸ்பரம்அபராதிகளானகௌரவபாண்டவர்கள் ரோஷத்தோடு ஒருவரையொருவர்பார்த்துக்கொண்டே இவ்வாறுயுத்தஞ்செய்தார்கள். கோபத்தினால் அளவற்றதேஜஸுள்ள அந்தக்கௌரவபாண்டவர்களுடையதேகங்கள் ஆகாயத்தில் யுத்தம் செய்யஎண்ணங்கொண்டிருக்கின்ற கருடன்கள் ஸர்ப்பங்கள் இவைகளினுடையதேகங்கள்போலக் காணப்பட்டன. பீமன், கர்ணன், கிருபர், துரோணர், அஸ்வத்தாமா, த்ருஷ்டத்யும்னன், ஸாத்யகி ஆகியஇவர்களால் அந்தயுத்தபூமியானது பிரளயகாலத்தில் உதித்த (அநேகம்) ஸூர்யர்களால் விளங்குவதுபோல் விளங்கியது. புருஷஶ்ரேஷ்டரே! [1] அப்பொழுது, பரஸ்பரம்அடித்துக்கொள்ளுகின்ற மஹாபலசாலிகளானவீரர்களுக்குப் பலமுள்ளசூரர்களோடு, தேவர்களோடு அசுரர்களுக்கு யுத்தம்நேர்ந்ததுபோலக் கைகலந்தயுத்தமுண்டாயிற்று. பிறகு, (காற்றினால்) கொந்தளிப்புற்றகடலினுடைய ஒலிக்குச்சமமான சப்தமுள்ள அந்தயுதிஷ்டிரருடையசேனையானது நன்றாகஓடுகின்றமகாரதிகர்களுள்ள உம்முடையஸைன்யத்தைக் கொன்றது. சத்துருக்களாலே மிகவும்பீடிக்கப்பட்டும்அதிகமாகநாசம்பண்ணப்பட்டுமிருக்கின்றஅந்த ஸைன்யத்தைக்கண்டு துரோணர் எதிர்நின்று, 'சூரர்களே! நீங்கள் ஓடவேண்டாம்' என்றுகூறினார். துரோணருக்குக் கோபமும் விக்கிரம

---

[1] அதிகபாடமான ஒருசுலோகம் விடப்பட்டது.

மும் மேலிட்டன. அவர் அம்புப்பெட்டியிலிருந்து (அம்பை) எடுத்து வில்லின்நாணைஉருவித் துடைத்துப் பெரிதானஅம்பையும் வில்லையும்கையில்கொண்டு ஸாரதியைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார். 'ஸாரதியே! பிரகாசமான வெள்ளைக்குடைபிடிக்கப்பெற்ற அரசனிருக்குமிடத்திற்குப்போ. துரியோதனனைச்சேர்ந்ததான இந்த ஸேனையானது பலவாறுபிளக்கப்படுகிறது. நான் யுதிஷ்டிரனைத்தடுத்து இந்தஸைனியத்தை நிலைநிறுத்துவேன். அப்பா! யுத்தத்தில் (பாணங்களை) நான்குபக்கங்களிலும் வர்ஷிக்கின்றஎன்னை, பாண்டவர்களும் ஸோமகர்களோடுகூடின மத்ஸ்யதேசத்தரசரனைவரும் பாஞ்சாலமன்னர்களும், (எதிர்க்கச்)சக்தியுள்ளவர்களாகார். அர்ஜுனன் என் அனுக்கிரஹத்தினால் மகாஸ்திரங்களைப்பெற்றானல்லனோ? அப்பா! பீமனாவது, ஸாத்யகியாவது என்னைஎதிர்க்கஉத்ஸாஹமுள்ளவர்களாகார். [1]பீபத்ஸுவானவன் என் அனுக்ரஹத்தினாலல்லவோ வில்லாளிகளுள் சிறந்திருக்கும்நிலைமையைப்பெற்றான்? பார்ஷதனானத்ருஷ்டத்யும்னனும் என்னுடையஅஸ்திரத்தை அறிந்திருக்கிறான். அப்பா! ஜயத்தில்விருப்பமுள்ளவனால் பிராணனைக்காப்பாற்றுவதற்கு இதுஸமயமன்று. ஸ்வர்க்கத்தைமுன்னிட்டுக்கொண்டு கீர்த்திக்காகவும் ஜயத்துக்காகவும் செல்' என்றார்.

இவ்வாறு தூண்டப்பட்டஸாரதியானவன் உடனே அப்ஸவஹ்ருதயமென்கிறமந்திரத்தினால் அப்பொழுது குதிரைகளைமந்திரித்துச் சீக்கிரமாக ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு [1]வரூதத்தோடுகூடினதும் காந்திபொருந்தியதும் மிக்கபிரகாசமுள்ளதுமானரதத்தினால் துரோணரைக் கொண்டுசென்றான். அந்தத்துரோணாசாரியரைக்கரூசர்களும் மத்ஸ்யதேசத்து அரசர்களும் ஸாத்வதர்களோடுகூடின சேதிதேசத்தரசர்களும் பாஞ்சாலர்களோடுகூடினபாண்டவர்களும் ஒன்றுசேர்ந்து சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, சிவப்புக்குதிரைகளுள்ளதுரோணர், கோபமுண்டு நான்குதந்தங்களுள்ளயானைபோலப் பாண்டவஸேனையில் பிரவேசித்து யுதிஷ்டிரருக்குஅருகில் விரைவாகச்சென்றார். யுதிஷ்டிரர் கழுகிறகுகள்பூண்ட கூர்மையான அம்புகளால் அந்தத்துரோணரை அடித்தார். துரோணர் தர்மபுத்திரருடையவில்லையறுத்துச் சீக்கிரமாக அவரைஎதிர்த்து அருகில்விரைவாகச்சென்றார். பாஞ்சாலர்களுக்குக் கீர்த்தியுண்டுபண்ணுகிறவனும் (பாண்டவ) ஸேனாரக்ஷகனுமான [2]குமாரனோ வேகமாகவருகின்றதுரோணரை ஸமுத்திரத்தைக்கரை

---

[1]. பீஷ்மபர்வம் 412-ம் பக்கம் குறிப்பிற்காண்க. [2]. திருஷ்டத்யும்னன்.

தாங்குவதுபோலத் தாங்கினான். குமாரனாலே பிராம்மணோத்தமரான துரோணர் தடுக்கப்பட்டதைக்கண்டு அங்குள்ளவீரர்களுடைய ஸிம்ம நாதசப்தமும், 'நல்லது ; நல்லது' என்கிறவார்த்தையும் உண்டாயின. பிறகு, குமாரனே மகாயுத்தத்தில் அதிககோபங்கொண்டு ஸிம்மம்போல் அடிக்கடிகர்ஜித்துக்கொண்டு ஒருபாணத்தினால் துரோணரை மார்பில் அடித்தான். மகாபலமுள்ளவனும் கைப்பழக்கமுள்ளவனும் ச்ரமத்தை ஜயித்தவனுமானகுமாரன் அனேகஆயிரம்அம்புகளாலே யுத்தபூமியில் துரோணரைத் தடுத்துநின்றான். சூரனும் சிறந்தவிரதமுள்ளவனும் மந்திரங்களுடன்சேர்ந்த அஸ்திரங்களில் மிக்க பயிற்சியுள்ளவனும் ஸேனாரக்ஷகனுமான அந்தக்குமாரனைப் பிராம்மணச்ரேஷ்டரான துரோணர் நன்றாகஅடித்தார். அந்தப் பிராம்மணோத்தமரான பாரத்வாஜர் ஸைனியங்களுடைய மத்தியத்தையடைந்து எல்லாத்திக்குகளிலும் ஸஞ்சாரஞ்செய்துகொண்டு உமதுஸைன்யத்திற்கு ரக்ஷகராயிருந்தார். சிகண்டியைப் பன்னிரண்டுஅம்புகளாலும், உத்தமௌஜஸை இருபது அம்புகளாலும், நகுலனை ஐந்துபாணங்களாலும், ஸஹதேவனை ஏழு பாணங்களாலும், யுதிஷ்டிரரைப் பன்னிரண்டுபாணங்களாலும், த்ரௌபதிபுத்திரர்களைமும்மூன்றுபாணங்களாலும்,ஸாத்யகியை ஐந்துபாணங்களாலும்,விராடனைப் பத்துப்பாணங்களாலும் அடித்து யுத்தகளத்தில் தலைவர்களான யுத்தவீரர்களைஎதிர்த்து மிகக்கலங்கச்செய்தார். குந்தீபுத்திரரானயுதிஷ்டிரரைப்பிடிக்கஎண்ணி (அவரை) எதிர்த்துவந்தார். அரசரே! பிறகு,[1] யுகந்தரனென்பவன் மிகவும்கோபங்கொண்டவரும் காற்றினால்கொந்தளிப்புற்ற கடல்போன்றவரும் மஹாரதருமான துரோணரைத்தடுத்தான். அந்தத்துரோணர்பதிவான்கணுக்களுள்ள அம்புகளால் யுதிஷ்டிரரைஅடித்து யுகந்தரனைப் பல்லத்தினால் தேர்த்தட்டினின்று கீழேவிழும்படிசெய்தார். மிக்ககாந்தியுள்ளவரும் பெரியமனமுள்ளவருமான அவர் அந்தயுகந்தரனைஜயித்துக் குந்தீபுத்திரரான்யுதிஷ்டிரரைப் பிடிக்க எண்ணங்கொண்டு அவரை எதிர்த்துவந்தார். பிறகு, விராடன், துருபதன், கேகயர்கள், ஸாத்யகி, சிபி, பாஞ்சாலதேசத்தானான வியாக்ரதத்தன், வீர்யவானானஸிம்மஸேனன் ஆகிய இவர்களும் மற்றுமுள்ள அனேகவீரர்களும் யுதிஷ்டிரரைக் காக்கஎண்ணி அனேகபாணங்களை இறைத்துக்கொண்டு துரோணருடையமார்க்கத்தை நாற்புறங்களிலும் தடுத்தார்கள். வேந்தரே! பாஞ்சாலகுமாரனானவியாக்ரதத்தனே கூர்மையான ஐம்பதுபாணங்களினால் துரோணரை அடித்தான். பிறகு

---

[1]. ஸாத்யகியின் குமாரன்.

ஜனங்கள் பெருங்கூச்சலிட்டார்கள். ஸிம்மஸேனனோ மகாரதரான துரோணரை விரைவாக அடித்து மனக்களிப்புற்று மகாரதர்களைப் பயப்படும்படி செய்துகொண்டு சீக்கிரமாக அட்டஹாஸம் பண்ணினான். பிறகு, துரோணர் கண்களைப் புரட்டிவிழித்து வில்லிலுள்ள நாண்கயிற்றை உருவிப் பெரிதான தலத்வனியை உண்டுபண்ணிக் கொண்டு அந்த ஸிம்மஸேனனைநோக்கி ஸமீபத்தில் விரைவாகச் சென்றார். பிறகு, பலவானான துரோணர் பலாத்காரித்து இரண்டு அர்த்த சந்திரபாணங்களினால் குண்டலங்களை அணிந்த ஸிம்மஸேனன் வியாக்கிரதத்தன் இவர்களுடைய தலையையும் சரீரத்தினின்று கீழே தள்ளினார். பாண்டவர்களைச்சேர்ந்த அந்த மகாரதர்களை அம்புக்கூட்டங்களாலே நன்றாக நாசம்செய்து யுதிஷ்டிரருடைய ரதத்தின் ஸமீபத்தில் பிராணிகளின் உயிரை வாங்குகின்ற யமன்போல் நின்றார். அரசரே! பிறகு, தவறாத விரதமுள்ள துரோணர் ஸமீபத்தில் வந்துநின்றவுடன் யுதிஷ்டிரருடைய சேனையில், 'அரசர் பிடிக்கப்பட்டார்' என்னும் யுத்தவீரர்களுடைய பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. அங்குள்ள ஸைனிகர்கள் துரோணருடைய பராக்கிரமத்தைக்கண்டு, 'இப்பொழுது திருதராஷ்டிரபுத்திரனான துர்யோதனராஜன் கிருதார்த்தனாகப் போகிறான். துரோணரோ இந்த முகூர்த்தத்தில் தர்மபுத்திரரைப்பிடித்துக்கொண்டு மனக்களிப்புடன் யுத்தகளத்தில் நம்முடைய துரியோதனனிடம் நிச்சயமாக வரப்போகிறார்' என்று சொன்னார்கள். இவ்வாறாக உம்மைச்சேர்ந்த அந்த யுத்தவீரர்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுது மஹாரதனும் குந்தீபுத்ரனுமான கிரீடியானவன் தேரினுடைய சப்தத்தினாலே (திசைகளை) ஒலியிடும்படி செய்துகொண்டு வேகமாக வந்தான். பாண்டுகுமாரனான அந்தக்கிரீடியானவன் ரக்தமாகிற ஜலமுள்ளதும் ரதங்களாகிற சுழல்களுள்ளதுமான நதியை யுத்தகளத்தில் உண்டுபண்ணி, பிறகு சூரர்களுடைய எலும்புக்கூட்டங்கள் பரவியதும், பிணங்களாகிற கரைகளை அறுத்துக்கொண்டு செல்லுகின்றதும், அம்புக்கூட்டங்களாகிற பெரியநுரைகளுள்ளதும், ஈட்டிகளாகிற மீன்களால் வியாபிக்கப்பட்டதுமான அந்த நதியை வேகத்துடன் தாண்டிக் கௌரவர்களைத்துரத்தியடித்து அதிகமான பாணக்கூட்டத்தினால் துரோணருடைய ஸேனையை மூடி அதனை மோகமடையும்படி செய்கின்றவன்போல ஸமீபத்தில் ஓடிவந்தான். சீக்கிரமாக அம்புகளைத்தொடுக்கின்றவனும் எப்பொழுதும் ஸந்தானம் செய்கின்றவனும் கீர்த்திசாலியுமான கௌந்தேயனுடைய தொடுத்தல் விடுத்தல்களுடைய மத்தியகாலத்தை ஒருவரும் காணவில்லை

மகாராஜரே! திக்குக்களும் இடைவெளியும் ஆகாயமும் பூமியும் காணப்படவில்லை. (எங்கும்) பாணமயமாகவே இருந்தன. அரசரே! காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனாலே பெரிதான பாணாந்தகாரம் உண்டுபண்ணப்பட்டிருக்குங்கால் அந்த யுத்தபூமியில் அப்பொழுது ஒன்றும் காணப்படவில்லை. சூரியனும் அஸ்தமித்து இருளால் நான்குபக்கமும் மூடப்படவே அப்பொழுது சத்துருவாவது மித்ரனாவது ஒருவனும் அறியப்படவில்லை. பிறகு, துரோணர் துரியோதனன்முதலானவர்கள் யுத்தத்தை நிறுத்தினார்கள். பீபத்ஸுவானவன், அந்தச்சத்துருக்களைப் பயந்தவர்களாகவும், யுத்தம் செய்ய மனமற்றவர்களாகவுமறிந்து தன்ஸேனைகளை மெதுவாக யுத்தத்தினின்று விலகும்படி செய்தான். பிறகு, ஸந்தோஷமடைந்தவர்களான பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் பாஞ்சாலர்களும் அர்ஜுனனை இன்பமான சொற்களால், சூரியனை ரிஷிகள் துதிப்பதுபோலத் துதித்தார்கள். தனஞ்சயன் இவ்வாறு சத்துருக்களை ஜயித்து ஸந்தோஷமடைந்து கேசவரோடு எல்லாச்சைனியங்களுக்கும்பின் நடந்து தன் பாசறைக்குச் சென்றான். இந்திரநீலம், பத்மராகம், சிறந்த தங்கம் இவைகளாலும் சிறந்த வஜ்ரங்களாலும் பவழங்களாலும் படிகங்களாலும் சித்திரிக்கப்பட்ட ரதத்தில் பாண்டுபுத்திரனான அர்ஜுனன் நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட ஆகாயத்தில் சந்திரன் விளங்குவதுபோல் விளங்கினான்.

பதினோராவதுநாள் யுத்தம் முடிந்தது.

**துரோணாபிஷேகபர்வம் முற்றிற்று.**

---

## பதினேழாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம்.

(¹ ஸம்சப்தகர்கள் அர்ஜுனனைப் போருக்கழைத்ததும், அர்ஜுனன் ஸத்யஜித்தை யுதிஷ்டிரரைக் காக்கும்படி வைத்துத் தான் போருக்குச் சென்றதும்.)

அரசரே! அந்த இரண்டு சேனைகளும் பாசறையை அடைந்து நான்குபக்கங்களிலும், எந்தப்படைவகுப்பில் எந்தப்பிரிவில் எந்த நியாயத்தோடு இருக்கவேண்டுமோ அங்ஙனமே இருந்தன. துரோணர்

---

[1] ப்ரதிஜ்ஞை செய்து, யுத்தத்தினின்று திரும்பாதவர்கள்.

ஸைனிகர்களுக்கு யுத்தத்தின் நிறுத்தலை ஏற்படுத்தி மிக்கமனவருத்த முற்றுத் துரியோதனனைப்பார்த்து வெட்கத்துடன் பின்வருமாறு கூறலானார். 'தனஞ்சயன் நிற்கும்பொழுது யுத்தத்தில் தேவர்களாலும் யுதிஷ்டிரன் பிடிக்கமுடியாதவன் என்கிறவிஷயம் முன்னமே என்னால் சொல்லப்பட்டிருக்கிறது. நீங்கள் பிரயத்தனஞ் செய்துகொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் அர்ஜுனனால் அந்தக்காரியம் செய்யப்பட்டது. என் வசனத்தில் நீ ஸந்தேகிக்கவேண்டாம். கிருஷ்ணனும் பாண்டவனும் ஜயிக்கத்தகாதவர்கள். ராஜனே! ஏதாவது ஓர் உபாயத்தினாலே வெள்ளைக்குதிரைகளையுடைய அர்ஜுனன் விலக்கப்படுவானாகில் பிறகு இந்த யுதிஷ்டிரன் உன்வசத்தை யடைவான். ஒருவன் யுத்தத்திற்காக அந்த அர்ஜுனனை அழைத்து வேறிடத்திற்கு இழுத்துக் கொண்டு போகவேண்டும். கௌந்தேயன் அவனை ஜயிக்காமல் எவ்விதத்தாலும் திரும்பமாட்டான். ராஜனே! அர்ஜுனன் இல்லாமலிருக்கிற அந்தச் சமயத்தில் நான் திருஷ்டத்யும்னன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே ஸேனையைப்பிளந்து தர்மராஜனைப் பிடிப்பேன். அர்ஜுனனால் விடப்பட்ட அந்தத் தருமராஜன் பக்கத்திற்செல்லுகின்ற என்னைப்பார்த்துப் பயத்தினால் ஓடாமலிருந்தால், பாண்டுபுத்ரனான அவனைப் பிடிபட்டவனென்றே நீ அறிந்துகொள். மகாராஜனே! இவ்வாறு நான் தர்மராஜகுமாரனான யுதிஷ்டிரன் ஒருநிமிஷநேரமாவது யுத்தத்தில் எனக்கு எதிரில் நிற்பானானால், அவனைப் பரிவாரத்துடன் இப்பொழுதே உன்வசத்தில் கொண்டுவந்து சேர்ப்பேன்; ஸம்சயமில்லை. (என்பராக்கிரமத்தைஸஹிக்கமுடியாமல்) யுத்தபூமியிலிருந்து ஓடிப்போய்விடுவானானால், அது (நாம் அடையும்) வெற்றியைக் காட்டிலும் மேலானது' என்றுகூறினார்.

அரசரே! துரோணருடைய அந்தவார்த்தையைக்கேட்டுத் திரிகர்த்ததேசாதிபதியும் ஸஹோதரர்களுடன்கூடினவனுமான ஸுசர்மாவானவன் அப்போது (அரசனைநோக்கி) பின்வரும்வார்த்தையைச் சொல்லலானான். 'அரசனே! காண்டீவத்தைத்தனுஸாகக்கொண்ட அர்ஜுனனாலே நாங்கள் எப்பொழுதும் அவமதிக்கப்பட்டிருக்கிறோம். குற்றமில்லாதவர்களாயிருந்தும் எங்களிடத்தில் அந்தஅர்ஜுனனால் அவ்விதமானதீங்கு செய்யப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்டநாங்கள் அந்தப்பலவிதமான அவமானங்களையும்நினைத்து இரவில் எப்பொழுதும் கோபாக்கினியால் எரிக்கப்படுகின்றவர்களாகிப் படுத்திருந்தோம். அஸ்திரவித்தையில்மிக்கதேர்ச்சியுள்ள அந்த அர்ஜுனன்,பாக்கியவிசே

ஷத்திஞல் எங்கள்கண்களுக்குளதிராக வந்துவிட்டான். நாங்கள் மனத்தில்செய்ய எண்ணிக்கொண்டிருப்பதும் உமக்கும்பிரியமானதும் எங்களுக்கும் கீர்த்தியைஉண்டுபண்ணக்கூடியதுமான காரியத்தை நாங்கள் செய்யப்போகிறோம். நாங்கள் யுத்தகளத்தினின்று வெளியில்இழுத்து இவனைக் கொல்லப்போகிறோம். இன்று பூமியானது அர்ஜுனனில்லாததாகவாவது அல்லது திரிகர்த்தர்களில்லாததாகவாவது ஆகுக. உண்மையாக உம்மிடம்பிரதிஜ்ஞைசெய்கிறோம். இது பொய்யாகப்போகிறதில்லை' என்றான். பரதகுலத்தில்உதித்தவரே! மஹாராஜரே! இவ்வாறு ஸத்தியரதன், ஸத்தியவர்மா, ஸத்தியவிரதன், ஸத்தியேஷு, ஸத்தியகர்மா என்கிற ஐந்துஸஹோதரர்களும் ஒன்றுசேர்ந்து சொல்லிவிட்டு யுத்தவிஷயத்தில் பிரதிஜ்ஞையைச்செய்துகொண்டு பதிஞயிரம்ரதங்களோடு (யுத்தத்துக்கு) திரும்பினார்கள். மாலவர்களும் துண்டிகேரர்களும் முப்பதிஞயிரம்ரதங்களோடு யுத்தத்துக்குத்திரும்பினார்கள். திரிகர்த்ததேசத்துக்கும் பிரஸ்தலதேசத்துக்கும் அதிபதியும் புருஷஸ்ரேஷ்டனுமான ஸுசர்மாவானவன் மாவேல்லகர்களோடும் லலித்தர்களோடும் மத்திரகர்களோடும் ஸஹோதரர்களோடும்சேர்ந்து பதிஞயிரம்ரதங்களோடு யுத்தத்துக்குச்சென்றான். (யுத்தத்தில்) பலதேசங்களிலிருந்துவந்திருந்த மஹாஸமர்த்தர்களான பதிஞயிரம்தேராளிகள் சபதம்செய்வதின்பொருட்டு அருகில் வந்துசேர்ந்தார்கள். பிறகு, எல்லோரும் தனித்தனியாக அக்கினியைஅர்ச்சித்து ஹோமம்செய்து குசப்புல்லாலாகியஉடைகளையும் விசித்ரமானகவசங்களையும் எடுத்துக்கொண்டார்கள். கவசங்களை அணிந்தவர்களும் நெய்யிஞல் நனைக்கப்பட்டவர்களும் குசத்தாலாகியஆடைகளைத் தரித்தவர்களும் நாண்கயிற்றை அரைஞாணகத்தரித்தவர்களும் லக்ஷக்கணக்கான திரவியங்களைத் தக்ஷிணையாகக்கொடுத்து யாகஞ்செய்தவர்களும் புத்திரர்களையுடையவர்களும் புண்ணியலோகவாஸத்திற்குத்தகுந்தவர்களும் செய்யவேண்டியகாரியங்களைச்செய்துமுடித்தவர்களும் சரீரத்தைவிட ஸன்னத்தர்களுமான அந்தச்சூரர்கள், அப்பொழுது தங்களைக் கீர்த்தியோடும் வெற்றியோடும் சேர்க்கப்போகிறவர்களாகவும் ப்ரம்மசர்யத்திஞலும் வேதாத்தியயனமுதலியவைகளாலும் ஸம்பூர்ண தக்ஷிணைகளுள்ள யாகங்களாலும் அடையத்தக்கலோகங்களை நல்லயுத்தத்திஞல் சீக்கிரமாகவே அடைய எண்ணங்கொண்டவர்களாகவும் பிராம்மணர்களைத் திருப்திசெய்வித்துத் தனித்தனியாக ஸ்வர்ணங்களையும் மீண்டும்பசுக்களையும் வஸ்திரங்களையும் கொடுத்து ஒருவரோடொருவர் ஸம்பாஷித்துக்கொண்டு ஒன்றுசேர்ந்திருக்கின்றபிராம்மணேத்தமர்களால்செய்யப்

பட்ட க்ஷேமகரமான ஆசீர்வாதங்களைப்பெற்றவர்களாகவும் உத்ஸா ஹத்தையும் ஸந்தோஷத்தையும் அடைந்தவர்களாகவும் நிர்மலமான ஜலத்தைஎடுத்து ஆசமனஞ்செய்து அக்நியைநன்றாகவளர்த்து யுத்த விரதத்தைநாடி அவ்வக்னிஸாக்ஷிகமாக உறுதியான நிச்சயத்தோடு அப்பொழுது ஒருபிரதிஜ்ஞைசெய்தார்கள். எல்லாப்பிராணிகளும்கேட் கும்படியாக உரத்தவார்த்தைகளைச் சொன்னார்கள். எல்லோரும்(ஒன்று கூடி) அர்ஜுனனைக்கொல்வதில் பிரதிஜ்ஞையையும்செய்தார்கள். 'நாங் கள், யுத்தத்தில் தனஞ்சயனைக்கொல்லாமல் திரும்பினாலும் அல்லது அந்தஅர்ஜுனனால்பீடிக்கப்பட்டுப் பயந்து புறங்காட்டிஓடிவந்தாலும் அப்பொழுது விரதங்களை அனுஷ்டிக்காதவர்களுக்கு எந்தஉலகங் களோ, பிரம்மஹத்திசெய்தவர்களுக்கு எந்தலோகங்களோ, மதுபானம் பண்ணினவனுக்கும் குருவினுடையபத்தினியிடம்ஆசைவைத்தவனுக் கும் எந்தலோகங்களோ, பிராம்மணனுடையபொருளை அபஹரித்தவ னுக்கும் அரசனுடையஅன்னத்தை அபஹரித்தவனுக்கும் சரண மடைந்தவனைக் கைவிட்டவனுக்கும் யாசிக்கிறவனைக்கொல்லுகிறவ னுக்கும் வீட்டைக்கொளுத்துகிறவர்களுக்கும் பசுவைக்கொல்லுகின் றவர்களுக்கும் எந்தலோகங்களுண்டோ, அபகாரம்செய்கிறவர்களுக் கும் பிராம்மணர்களை விரோதிப்பவர்களுக்கும் எந்தலோகங்களோ, தங்கள்மனைவியினிடத்தில் ருதுகாலங்களில் அஜ்ஞானத்தினாலே சேரா தவர்களுக்கும் சிராத்ததினத்தில் ஸ்திரீயோடு சேருகிறவர்களுக்கும் தம்ஜாதியைமறைக்கிறவர்களுக்கும் எந்தலோகங்களோ, பிறர் அடைக் கலமாகக்கொடுத்தபொருளை அபகரிக்கிறவர்களுக்கும் பிரதிஜ்ஞை செய்யப்பட்டதை அழிப்பவர்களுக்கும் எந்தலோகங்களோ, ஆண்மை யற்றவனோடு யுத்தம்செய்கிறவர்களுக்கும் நீசனை அண்டுகின்றவர்க ளுக்கும் எந்தலோகங்களோ, நாஸ்திகர்களுக்கும் அக்னியையும் தாயையும் தகப்பனையும் கைவிடுகிறவர்களுக்கும் பாபங்களைச்செய்த வர்களுக்கும் எந்தலோகங்களோ அந்தலோகங்களை நாங்கள் அடை யக்கடவோம். இப்பொழுது ரணகளத்தில் நாம் உலகத்தில் (ஒருவ ராலும்) செய்யமுடியாதகாரியத்தைச் செய்வோமாகில் இஷ்டமான லோகங்களை அடைவோம்; ஸம்சயமில்லை' என்றனர்.

அரசரே! அப்பொழுது இவ்வாறுசொல்லிவிட்டு யுத்தகளத்தில் அந்தச்சூரர்கள் பிதிருக்களால் அடையப்பட்ட திக்கைக்குறித்து யுத் தத்துக்காக அர்ஜுனனை அழைத்துக்கொண்டு (ரணகளத்தை) நோக்கி வந்தார்கள். புருஷஶ்ரேஷ்டர்களான அந்த ஸம்சப்தகர்களாலே அழைக் கப்பட்டவனும் சத்துருபட்டணங்களை ஜயிக்கிறவனுமான அர்ஜுனன்

தர்மராஜரைநோக்கி, 'ராஜரே! யுத்தத்திற்கு அழைக்கப்பட்டால், நான் (பின்வாங்கித்) திரும்புவதில்லை' என்கிறவிரதம் என்னால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. பெரியயுத்தத்திற்காக ஸம்சப்தகர்கள் என்னை அழைக்கிறார்கள். இதோ ஸுசர்மாவானவன் ஸஹோதரர்களோடுகூடி என்னை யுத்தத்துக்கு அழைக்கிறான். பரிவாரங்களுடன் கூடின இந்த ஸுசர்மாவைக் கொல்வதின்பொருட்டு நீர் எனக்கு அனுமதிகொடுக்கவேண்டும். புருஷஸ்ரேஷ்டரே! இவ்வாறுயுத்தத்துக்கு அழைத்தலை நான் ஸகிப்பதற்குச் சக்தனல்லேன். உண்மையாகவே உம்மிடத்தில் பிரதிஜ்ஞைபண்ணுகிறேன். யுத்தத்தில் சத்துருக்களைக் கொல்லப்பட்டவர்களாகவே நீர் அறியும்' என்கிற வாக்கியத்தை உடனே கூறினான். யுதிஷ்டிரர், 'அப்பா! துரோணர் செய்யவிரும்பியவிஷயம் யதார்த்தமாக உன்னால் கேட்கப்பட்டிருக்கிறது. அவருடைய அந்தஎண்ணமானது பொய்யாகும்படி நீ நடந்துகொள். மகாரதனே! துரோணரோ பலமுள்ளவர்; சௌர்யமுள்ளவர்; அஸ்திரவித்தையில் நல்ல பாண்டித்யமுள்ளவர்; யுத்தஸ்ரமத்தைப்பொறுக்கும் சக்தியுடையவர்; அந்தத்துரோணராலே என்னைப்பிடிப்பதானது பிரதிஜ்ஞை பண்ணப்பட்டிருக்கிறது' என்று சொல்ல, அர்ஜுனன், 'ஓ! அரசரே! இந்த ஸத்யஜித்தானவன் யுத்தத்தில் இப்பொழுது உம்மைக் காப்பாற்றுவான். பாஞ்சால ராஜகுமாரன் உயிரோடிருக்குங்காலத்தில் ஆசாரியர் தம்மனோரதத்தையடையப்போகிறதில்லை. பிரபுவே! புருஷஸ்ரேஷ்டனான ஸத்யஜித்தானவன் யுத்தத்தில் கொல்லப்படுவானானால் அனைவரும் ஒன்று சேர்ந்தும் எவ்விதத்திலும் (போரில்) நிற்கமுடியாது' என்று கூறினான்.

பிறகு, அர்ஜுனன் தர்மராஜராலே அனுமதிகொடுக்கப்பட்டவனும் ஆலிங்கனம் செய்துகொள்ளப்பட்டவனும் அன்பினாலே பலவாறு பார்க்கப்பட்டவனுமானான். அர்ஜுனனுக்கு ஆசீர்வாதங்களும் செய்யப்பட்டன. பிறகு, பலசாலியானபார்த்தன் இந்தத்தர்மபுத்திரரைவிட்டுத் திரிகர்த்தர்களைக்குறித்துப் பசிகொண்டசிங்கமானது பசியைத்தீர்த்துக்கொள்வதற்காக மான்களுடைய கூட்டங்களைக்குறித்துச்செல்வதுபோல எதிர்த்துச்சென்றான். பிறகு, துரியோதனனுடைய சேனையானது மிக்கசந்தோஷத்தோடுகூடி, அர்ஜுனனால் விடுபட்டிருக்கிற தர்மராஜரைப்பிடிக்கும் விஷயத்தில் மிக்க கோபங்கொண்டது. பிறகு, அவ்விருஸேனைகளும் வர்ஷாகாலத்தில் அதிகமானஜலமுள்ள கங்கையும் ஸரயுவும்போல ஒன்றை ஒன்று பராக்ரமத்தோடு வேகமாக எதிர்த்தன.

## பதினெட்டாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ஸம்சப்தகர்களோடு போர்புரிந்தது.)

மன்னரே! பிறகு ஸம்சப்தகர்கள் சந்தோஷத்தோடு அர்த்தசந்திரன் என்றுபெயருள்ளதாக அணிவகுக்கப்பட்ட ரதங்களோடு ஸமமான இடத்தில் (யுத்தத்திற்கு) உறுதியாக நின்றார்கள். அவர்கள், (யுத்தத்திற்குச்) சந்தோஷத்தோடுவருகின்ற அர்ஜுனனைக்கண்டு [1]அதிகஸந்தோஷத்தையடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டர்களான திரிகர்த்தர்கள் அப்பொழுது பெரிய சப்தத்தோடு கர்ஜித்தார்கள். அந்தச்சப்தமானது எல்லாத்திக்குக்களையும் திக்குக்களின்மத்திகளையும் ஆகாயத்தையும் நன்குசூழ்ந்துகொண்டது. உலகமானது மூடப்பட்டிருப்பதினால் அந்தஸமயத்தில் எதிரொலியுண்டாகவில்லை. அந்த அர்ஜுனனவன் அந்த ஸம்சப்தகர்களை மிகவும் ஸந்தோஷமடைந்தவர்களாகக்கண்டு சிறிது புன்னகைகொண்டு கிருஷ்ணனைப்பார்த்து, 'தேவகீநந்தனரே! இப்பொழுது யுத்தகளத்தில் பிராணனை விடப்போகிறவர்களும் ஸகோதரர்களுமான இந்தத்திரிகர்த்தர்கள் அழவேண்டியஸமயத்தில் மிகுந்தமனக்களிப்புடனிருக்கிறார்கள்; பாரும்! அல்லது, இது அவர்களுக்கு ஸந்தோஷிக்கும் காலமே; ஸம்சயமில்லை. ஏனெனில், அற்பர்களால் அடையமுடியாத உலகங்களைப் போரில்அடையப்போகிறார்களன்றோ? யுத்தரங்கத்தில் இவர்கள் என்னால் கொல்லப்பட்டு உத்தமலோகங்களையடையப்போகிறார்கள்' என்று இவ்விதமானவார்த்தையைக்கூறினான். இவ்வாறு ஹ்ருஷீகேசரை நோக்கிச் சொல்லிவிட்டுப் பிறகு, மிக்கபுஜபலமுள்ளவனான அர்ஜுனன் யுத்தத்தில் அணிவகுக்கப்பட்டிருக்கின்ற திரிகர்த்தர்களுடைய ஸேனையை அணுகினான். அவன் ஸ்வர்ணத்தாலலங்கரிக்கப்பட்ட தேவதத்தம் என்கிறசங்கத்தை யெடுத்துப் பெரியகோஷத்தினாலே திக்குக்களை நிரப்பிக்கொண்டு வேகமாக ஊதினான். அந்தச்சப்தத்தினாலேபயந்த ஸம்சப்தகசேனையானது யுத்தகளத்தில் இரும்பினால் செய்யப்பட்ட பிரதிமைபோல் அசைவற்று நின்றது. பரதஸ்ரேஷ்டரே! அப்பொழுது, அசைவற்ற அந்தச்சேனையானது ஸமர்த்தர்களான சிற்பிகளாலே சித்திரப்படத்திலெழுதப்பட்டதுபோல விளங்கியது. அப்பொழுது ஸைனிகர்களுடைய ஆகாயத்தைமறைக்கின்ற அந்தச்சப்தத்

[1] இங்கு கூறியதுகூறலால் இரண்டுபதங்கள் விடப்பட்டன.

தினலே பூமிமுழுவதும் மகாஸமுத்திரமும் எதிரொலிகொண்டன. போர்வீரர்களுடைய அந்தச்சப்தத்தினலே காதுகள் செவிடுபடும்படி செய்யப்பட்டன. அவர்களுடையகுதிரைகள் கண்களைப்புரட்டி விழித்துக்கொண்டு அசைவற்றிருக்கிறகாதும் கழுத்தும் காலுமுள்ளவைகளாக மூத்திரத்தையும் ரத்தத்தையும் பெருகவிட்டன. பிறகு சப்தம் அடங்கியது. அதனல் அவர்கள் ஸந்தோஷத்தையடைந்தவர்களானார்கள். பிறகு அந்தஸம்சப்தகர்கள் பிரஜ்ஞையையடைந்து, படையையும் நிலைநிறுத்தி ஒரேஸமயத்தில் கழுகிறகுகள்பூண்ட அம்புகளை அர்ஜுனன்மீது பிரயோகித்தார்கள். பராக்கிரமசாலியான அர்ஜுனன் ஆயிரக்கணக்கான அவ்வம்புகளைத் தன்னிடம்வருதற்குள்ளாகவே விரைவாகச்செல்லுகின்ற ஐம்பதுபாணங்களால் சீக்கிரமாக அறுத்தான். பிறகு, அவர்கள் மறுபடியும் அர்ஜுனனைக் கூர்மையான பப்பத்துக்கணைகளால் நன்றாக அடித்தார்கள். பிறகு பார்த்தன் அவர்களை மும்மூன்றுபாணங்களால் அடித்தான். அரசரே! பிறகு ஒவ்வொருவரும் பார்த்தனை ஐந்துஐந்துபாணங்களால் அடித்தார்கள். பராக்கிரமசாலியான அந்த அர்ஜுனனும் அவர்களை இரண்டு இரண்டு பாணங்களால் திருப்பியடித்தான். திரும்பவும், கோபமூண்ட அந்த ஸம்சப்தகர்கள், கேசவரோடிருக்கும் அர்ஜுனனை, தடாகத்தை மழைகளால் நிரப்புவதுபோலக் கூர்மையான அம்புகளால் நிரப்பினார்கள். பிறகு காட்டில் பூத்தமரங்களுடைய கூட்டத்தைநோக்கி வண்டுக்கூட்டங்கள்வந்து விழுவதுபோல அர்ஜுனன்மீது லக்ஷம்பாணங்கள் வந்துவிழுந்தன. பிறகு ஸுபாகுவானவன் உருக்கினலாகியமுப்பது பாணங்களாலே ஸவ்யஸாசியைக் கிரீடத்தில்[1] நன்றாக அடித்தான். கிரீடியானவன் கிரீடத்தில் இருப்பனவகளும் பொற்கட்டுக்களுள்ளவைகளுமான அந்தப்பாணங்களாலே பொன்மயமானதலைஅலங்காரமுள்ளதும் உயரத்தூக்கிநிறுத்தப்பட்டதுமான யூபஸ்தம்பம்போல் விளங்கினன். பாண்டவன் யுத்தத்தில் அர்த்தசந்திரபாணத்தினல் ஸுபாகுவினுடைய கையுறையையறுத்து மீண்டும் அவன்மீதும் அம்புமழைகளைப் பொழிந்தான். பிறகு, ஸுசர்மாவும் ஸுரதனும் ஸுதர்மாவும் ஸுதனுவும் ஸுபாகுவும் பத்துப்பத்துப்பாணங்களால் கிரீடியை அடித்தார்கள். சிறந்தவானரத்தைத்துவஜமாகக்கொண்ட அர்ஜுனன் அவர்களெல்லோரையும் தனித்தனியாக அம்புகளால் திருப்பி அடித்து அவர்களுடையகொடிகளையும் பாணங்களையும் பல்லங்களால் அறுத்தான்; அம்புகளாலே ஸுதன்வாவினுடையதனுஸையறுத்து

[1] ஒருசொல் விடப்பட்டது.

அவனுடையகுதிரைகளையும் கொன்றான்; பிறகு தலைப்பாகையோடு கூடிய அவனுடையதலையையும் சரீரத்தினின்று கீழேதள்ளினான். அவன் (சத்துரு) ஸைனியங்களில் இரண்டாயிரம் யுத்தவீரர்களைக் கொன்றான். அந்தவீரன்விழுந்தவுடன் அவனைத்தொடர்ந்துவந்திருந்தவர்கள் பயந்தார்கள். கொடியயுத்தவீரர்களால் அதிகமாகத் தடுக்கப்பட்டவர்களும் புகழ்பெற்றவர்களுமாகிய அவர்கள் துரியோதனனுடைய ஸைன்யமிருக்குமிடத்திற்குப் பயந்துநடுங்கி ஓடினார்கள். பிறகு, கோபமூண்ட இந்திரகுமாரனான அர்ஜுனன் அந்தப் பெரியஸேனையை, ஸூர்யன் கிரணங்களால் இருளையழிப்பதுபோலத் தொடர்ச்சியான அம்புக்கூட்டங்களால் அழித்தான். பிறகு ஸவ்யஸாசி மிக்ககோபத்தையடைந்ததனால், அந்தஸைன்யமானது தோல்வியடைந்து நான்குபக்கங்களிலும்பதுங்கவே த்ரிகர்த்தர்களைப் பயம்வந்து அடைந்தது. அவர்கள் அர்ஜுனனாலே பதிவானகணுக்களுள்ள அம்புகளால் துன்பமடைந்து பயந்தமான்கூட்டங்கள்போல் ஆங்காங்கு மயக்கமுற்றார்கள். பிறகு, த்ரிகர்த்தராஜன் கோபங்கொண்டு அந்த மகாரதர்களைப்பார்த்து, 'ஓ! சூரர்களே! நீங்கள் ஓடவேண்டாம். பயத்தைப்பாராட்டுவதற்கு நீங்கள் தகுதியுள்ளவர்களல்லீர். எல்லா ஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது கோரமானசபதங்களைச்செய்துவிட்டு, பிறகு துரியோதனனுடைய ஸைன்யத்தையடைந்து முக்கியமாக என்னசொல்லப்போகிறீர்கள்? யுத்தத்தில் நேர்ந்தஇச்செய்கையினாலே உலகத்தில் நீங்கள் ஏன் பரிஹஸிக்கப்படமாட்டீர்கள்? நாமெல்லோரும் ஒன்றுசேர்வோம். அவரவருடைய பலத்துக்குத்தகுந்தபடி (யுத்தஞ்செய்யத்) திரும்புங்கள்' என்றுசொன்னான். வேந்தரே! இவ்வாறுசொல்லியதைக்கேட்ட அவர்கள் அடிக்கடி உரத்த ஸிம்மநாதம்செய்தார்கள். அந்தவீரர்கள் ஒருவரை ஒருவர் ஸந்தோஷப்படும்படிசெய்துகொண்டு சங்கங்களையும் முழக்கினார்கள். பிறகு அந்த ஸம்சப்தகர்களுடையகூட்டங்களும் [1] நாராயணர்களும் கோபாலர்களும் மிருத்யுவை எப்பொழுதும் தடுக்கமுடியாதென்று எண்ணி (யுத்தத்திற்கு) மறுபடியும் திரும்பினார்கள்.

---

[1] 'கோபாலர்களான நாராயணர்களும், என்றுமாம்.'

## பத்தொன்பதாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி).



(அர்ஜுனன் ஸம்சப்தகர்களோடுபோர்புரிந்தது.)

பிறகு அர்ஜுனன், திரும்பிவந்த அந்தஸம்சப்தகர்களுடைய கூட்டங்களைக்கண்டு மகாத்மாவானவாஸுதேவரைப்பார்த்து, 'ஹ்ருஷீகேசரே! ஸம்சப்தகர்களுடைய கூட்டங்களைக்குறித்துக் குதிரைகளை நடத்தும்; இவர்கள் உயிரோடிருக்குமளவும் யுத்தத்தைவிட்டு விலகார்களென்பது என்னெண்ணம். பயங்கரமான என்னுடைய அஸ்திர பலத்தையும் கைகளின்பலத்தையும் தனுஸின்பலத்தையும்பாரும். இப்பொழுது கோபங்கொண்ட ருத்திரர் பசுக்களைவீழ்த்துவதுபோல இவர்களைவீழ்த்தப்போகிறேன்' என்றுசொன்னான். பிறகு கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு மங்களவசனத்தாலே அவனைஸந்தோஷப்படுத்தி ஒருவராலும் ஜயிக்கமுடியாத அர்ஜுனனனவன் (யுத்தகளத்தில்) எங்கெங்கு (செல்ல) விரும்பினானோ அங்கங்கு அவனைப் பிரவேசிக்கச் செய்தார். அப்பொழுது வெண்மையானகுதிரைகளாலே யுத்தத்தில் இழுக்கப்படுகின்ற அந்தரதமானது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற விமானம்போல் மிகவும்பிரகாசித்தது. மன்னரே! பிறகு அந்தரதமானது முன்பு தேவாஸுரயுத்தத்தில் இந்திரனுடையரதம்போல மண்டலகதிகளையும் (பலவிதமான) போக்குவரவுகளையும் செய்தது. பிறகு நாராயணர்கள் கோபங்கொண்டு பலவித ஆயுதங்களைக்கையிலெடுத்து அம்புக்கூட்டங்களாலே அர்ஜுனனை மறைத்துக்கொண்டு நான்குபக்கமும் சூழ்ந்து கொண்டார்கள். பரதஸ்ரேஷ்டரே! அவர்கள் யுத்தகளத்தில் கிருஷ்ணனோடுகூடின குந்திபுத்திரனானதனஞ்சயனை ஒரு முகூர்த்த காலத்திற்குள் கண்ணுக்குப்புலப்படாதவனாகச் செய்தார்கள். பல்குனன் கோபங்கொண்டு யுத்தத்தில் இருமடங்கு அதிகரித்த பராக்கிரமமுள்ளவனாகக் காண்டீவம் என்னும்வில்லைஉருவித் துடைத்து யுத்தஞ்செய்வதற்காகச் சீக்கிரமாக எடுத்தான். அவன் கோபத்துக் கடையாளமானபுருவநெறித்தலை முகத்தில் உண்டுபண்ணிக்கொண்டு தேவதத்தமென்கிற பெரியசங்கத்தை ஊதினான். பிறகு, அவன் சத்துருக்கூட்டங்களைக்கொல்லக்கூடியதும் த்வஷ்டாவைத்தேவதையாகக்கொண்டதுமான அஸ்திரமந்திரத்தை மனத்தினால் ஜபித்தான். பிறகு (அந்தமந்திரசக்தியினால்) ஆயிரக்கணக்கான அர்ஜுனஸ்வரூபங்கள் தனித்தனியாகத் தோன்றின. பலவிதரூபங்களோடுகூடின அந்த

அர்ஜுனனுடையபிரதிரூபங்களாலே அந்தநாராயணர்கள் மோகித்து ஒருவரையொருவர் அர்ஜுனனென்றெண்ணித் தங்களைத் தாங்களே கொன்றுகொண்டார்கள். 'இவன் அர்ஜுனன்; இவன் கோவிந்தன்; இவர்கள் கிருஷ்ணார்ஜுனர்கள்' என்றுசொல்லிக்கொண்டு மிக்க புத்தி மயக்கங்கொண்டு யுத்தத்தில் ஒருவரையொருவர் கொன்றார்கள். பரத ஶ்ரேஷ்டரே! யுத்தகளத்தில் உம்மைச்சேர்ந்தவர்கள் (இப்படி) ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். உத்தமமான அஸ்திரத்தினாலே மோகத்தையடைந்து ஒருவரால் ஒருவர் நாசமடைந்தார்கள். அவர்கள் ரக்தத்தினால்நனைக்கப்பட்ட சரீரமுள்ளவர்களாக ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள். யுத்தவீரர்கள் ரணகளத்தில் பூத்திருக்கின்றபலாசவிருக்ஷங்கள்போல விளங்கினார்கள். அந்தவீரர்கள் இரத்தப்பெருக்குப்பெருகுகின்றவர்களும் இரத்தத்தால் நன்குநனைக்கப் பட்டவர்களுமாகி யுத்தபூமியில் செஞ்சந்தனக்குழம்பினால் பூசப்பட்டவர்கள்போல விளங்கினார்கள். பிறகு பீபத்ஸுவானவன் காண்டீவமென்கிறவில்லை வலிமையுடன் அசைவுறச் செய்து, சூரியன் கிரணங்களால் இருளை அடிப்பதுபோலக் கூர்மையான அம்புகளாலே அவர்களை அடித்தான். மாண்டவர்கள்போக மிகுந்திருக்கின்ற அந்தப்போர்வீரர்கள் மறுபடியும் தனஞ்சயனைச்சூழ்ந்துகொண்டு அம்புமழைகளாலே அவனைக் குதிரைகளோடும் கொடிமரத்தோடும் தேரோடும்கூடக் கண்ணுக்குப்புலப்படாதபடிசெய்தார்கள். அர்ஜுனன் அவர்களால் விடப்பட்ட ஆயிரக்கணக்கான அம்புகளையும் அவர்களுடைய அஸ்திரத்தையும் சாம்பலாகச்செய்து அந்தவீரர்களை யமலோகத்திற்கு அனுப்பினான். பிறகு அவன், பெருநகைசெய்து, லலித்தர்களையும் மாலவர்களையும் மாவேல்லகர்களையும் திரிகர்த்தர்களையும் யௌதேயர்களையும் அம்புகளால் அடித்தான். அந்தவீரனாலே கொல்லப்படுகின்ற அந்தக்ஷத்திரியர்கள் காலனால்தூண்டப்பட்டுப் பார்த்தன்மீது நானாவிதமான பாணஸமூகங்களைப் பிரயோகித்தார்கள். அந்தரணகளத்தில் கோரமான அம்புமழையினாலே நன்றுகமூடப்பட்டுக் கொடிமரமும் அர்ஜுனனும் தேரும் வாஸுதேவரும் காணப்படவில்லை. பிறகு அவர்கள் லக்ஷ்யத்தினின்று தவறாதபாணங்களையுடையவர்களாயிருத்தலால் ஒருவரைஒருவர்எதிரில் (வீரவாதத்தால்) அழைத்தார்கள். கிருஷ்ணார்ஜுனர்கள் கொல்லப்பட்டார்களென்று அப்பொழுது மகிழ்ச்சியினால் வஸ்திரங்களை வீசினார்கள். அந்தயுத்தபூமியில் வீரர்கள் ஆயிரக்கணக்காகப் பேரீவாத்யங்களையும் மிருதங்கங்களையும் அடித்துச் சங்கங்களையும் ஊதினார்கள்; உக்கிரமான ஸிம்மநாதசப்

தங்களையும் செய்தார்கள். பிறகு வாஸுதேவர் ஶ்ரமத்தையடைந்து வேர்வையுடையவராகி, அர்ஜுனனைப்பார்த்து, 'பார்த்த! நீ எங்கு இருக்கிறாய்? உன்னை நான் காணவில்லை. சத்துருக்களை அழிப்பவனே! நீ பிழைத்திருக்கிறாயா?' என்று கேட்டார். அவருடைய அந்தவார்த்தையைக்கேட்டுத் தனஞ்சயன் விரைவுடன் வாயவ்யாஸ்திரத்தினால், அவர்களால் பொழியப்படும் அம்புமழையை விலக்கினான். பிறகு வாயுபகவான் உலர்ந்த இலைச்சருகுகளுடையகூட்டங்களைப் போல ஸம்சப்தகர்களுடையகூட்டங்களைக் குதிரைகளோடும் யானைகளோடும் தேர்களோடும் ஆயுதங்களோடும் அடித்துக்கொண்டுபோனான். மன்னரே! காற்றினாலே கொண்டுபோகப்படுகின்ற அந்தச்சத்துரு வீரர்கள் ஒரேகாலத்தில் மரங்களினின்றுபறந்துபோகின்றபக்ஷிகள் போல மிகவும்பிரகாசித்தனர். தனஞ்சயன் அவர்களை அவ்வாறு வியாகுலமடைந்தவர்களாகச்செய்துவிட்டுக் கூர்மையானபாணங்களினாலே லக்ஷம்வீரர்களையும் விரைந்து கொன்றான்; பல்லங்களாலே அவர்களுடையதலைகளையும் ஆயுதங்களோடுகூடியகைகளையும் அறுத்தான். யானையின்துதிக்கைகளுக்கொப்பானதொடைகளையும் அம்புகளால் பூமியில் தள்ளினான். தனஞ்சயன் சத்துருக்களைப் புறமுதுபட்டவர்களாகவும் கால், தலை, கண், விரல்கள் இவைகளை இழந்தவர்களாகவும் அனேக அங்கங்களும் அவயவங்களும் குறைந்தவர்களாகவும் செய்தான். [1] கந்தர்வ நகரம்போன்றவைகளும், முறைப்படி ஏற்படுத்தப்பட்டவைகளுமான தேர்களை அம்புகளால் துண்டித்துக்கொண்டு சத்துருக்களைக் குதிரைகளும் தேர்களும் யானைகளுமற்றவர்களாகச் செய்தான். அந்தயுத்தபூமியில் ஒவ்வோரிடத்தில் அறுக்கப்பட்டிருக்கின்ற ரதங்களிலுள்ள சிலகொடிமரங்களுடையகூட்டங்கள் தலையில்லாத பனங்காடுகள்போல ஆங்காங்கு பிரகாசித்தன. மேலேறியிருக்கின்ற யுத்தவீரர்களுடன்கூடினயானைகள் கொடித்துணிகளோடும் அங்குசங்களோடும் கொடிமரங்களோடும்கூட இந்திரனுடையவஜ்ராயுதத்தினாலடிக்கப்பட்ட மரங்களோடுகூடினமலைகள்போலக் கீழேவிழுந்தன.

...ரைகள் பார்த்தனுடைய அம்புகளாலடிக்கப்பட்டுத் தலை அலங்காரமானசாமரங்களோடும் கவசங்களோடும் நரம்புகளும் கண்களும் சரிய ஸாதிகள்நழுவப் பூமியில் வீழ்ந்தன. காலாட்கள், கத்திகளும் அம்புகளும் ஒடிக்கப்பட்டும் [2] கவசங்களும் ரிஷ்டிகளும் சக்தி

[1] பீஷ்மபர்வம் 402-ம்பக்கம் குறிப்பிற்காண்க.

[2] கூறியது கூறலால் ஒருசொல் விடப்பட்டது.

களும் அறுக்கப்பட்டும் அடிபட்டு மிக்கவாட்டத்துடன் கிடந்தார்கள். கொல்லப்பட்டவர்களாலும் கொல்லப்படுகின்றவர்களாலும் விழுகின்றவர்களாலும் விழுந்தவர்களாலும் சுற்றுகின்றவர்களாலும் ஸிம்மநாதம் செய்கின்றவர்களாலும் யுத்தமானது பயங்கரமாக விளங்கியது. மிருதியாகத்தோன்றினபுழுதியும் உதிரமழைகளால் தணிந்தது. பூமியும் அனேகாந்தலையில்லாமுண்டங்களாலேநெருங்கியதும் பிரவேசிக்க முடியாததுமாயிற்று. யுத்தகளத்தில் பயங்காமும் அருவருக்கத்தக்கதுமாயிருக்கின்ற பீபத்ஸுசெல்லும் அந்தவழியானது பிரளயகாலத்தில் பிராணிகளைக்கொல்லுகின்ற ருத்ரருடைய உத்தியானம்போல விளங்கியது. பார்த்தனாலே அடிக்கப்படுகின்ற அந்தயுத்தவீரர்கள், குதிரைகளும் தேர்களும் யானைகளும் நிலைதவறியோட, அவனுக்கெதிராகவே பிராணனைவிட்டு இந்திரனுக்கு விருந்தினரானார்கள். பரதஸ்ரேஷ்டரே! அடிக்கப்பட்டுப் பிராணனைஇழந்த அந்தமகாரதர்களாலே அந்தப்பூமி முழுதும் நான்குபக்கத்திலும் பரப்பப்பட்டு விளங்கியது. ஸவ்யஸாசியானவன் அஜாக்கிரதையோடிருக்கும் இந்தஸமயத்தில், துரோணர் அணிவகுக்கப்பட்ட ஸேனையுடன் யுதிஷ்டிரருக்குஅருகில் வந்தார். யுதிஷ்டிரரைப் பிடிக்க எண்ணங்கொண்டவர்களும் நன்றாக அடிக்க வல்லமையுள்ளவர்களுமான போர்வீரர்கள், அணிவகுக்கப்பட்டஸேனையுடன் வேகத்தோடு அந்தத்தர்மபுத்திரரை எதிர்த்தார்கள். அப்பொழுது கைகலந்த பெரும்போர் நேர்ந்தது.

---

## இருபதாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தவர்ணனம்.)

பரதஸ்ரேஷ்டரே! ராஜேந்திரரே! அப்பொழுது மகாரதிகரும் பரத்வாஜபுத்ரருமான துரோணர் அந்தஇரவைக்கழித்துத் துரியோதனனைநோக்கிப் பலவாறானவார்த்தைகளைக் கூறினார். அர்ஜுனன் தர்மபுத்திரருக்குக் காவல்களை ஏற்படுத்திவிட்டு ஸம்சப்தகர்களைக் கொல்வதற்காக அந்தக்கூட்டங்களோடு (போர்புரியப்) போனவுடன் துரோணர் தம்சேனையை அணிவகுத்துக்கொண்டு தர்மராஜரைப் பிடிக்க விரும்பிப் பாண்டவர்களுடைய பெரிய சேனையை எதிர்த்துச் சென்றார். யுதிஷ்டிரர், கருடவடிவமாக வகுக்கப்பட்ட பாரத்வாஜருடைய அந்தச் சேனையைக்கண்டு, அர்த்தசந்திராகாரமாக எதிர்

அணிவகுத்தார். மகாரதரானபாரத்வாஜர் அந்தக் கருடவ்யூகத்திற்கு முகமாகவிருந்தார். துரியோதனராஜன் பரிவாரங்களாலும் ஸகோதரர்களாலும் சூழப்பட்டு (அந்தக்கருட வ்யூஹத்திற்குத்) தலையாயிருந்தான். கிருதவர்மாவும் கணைதொடுப்பவர்களுள் மிகச்சிறந்த கிருபரும் கண்களானார்கள். பூதசர்மா, க்ஷேமசர்மா, வீர்யவானான கரகாக்ஷன், களிங்கர்கள், ஸிம்மலர்கள், கீழ்நாட்டிலுள்ள சூரர்கள், ஆபீரர்கள், தசேரகர்கள், சகர்கள், யவனர்கள், காம்போஜர்கள், ஹம்ஸபதர்கள், சூரஸேனர்கள், தரதர்கள், மத்திரதேசத்துவீரர்கள், கேகயர்கள் ஆகிய இவர்கள் நன்குகவசம் பூண்டு, யானைகள் குதிரைகள் தேர்கள் காலாட்படைகள் இவைகளுடைய கூட்டங்களோடுகூடி (அந்தக்கருடவ்யூகத்தினுடைய) கழுத்தில் நின்றார்கள். பூரிஸ்ரவஸ், சல்லியன், ஸோமதத்தன், பாஹ்லிகன் இந்தவீரர்கள் ஓர் அக்ஷௌஹிணி சேனையினால் சூழப்பட்டு (அந்தக்கருடவ்யூஹத்தினுடைய) வலப்பக்கத்தில் நின்றார்கள். அவந்திதேசத்தரசர்களான விந்தானுவிந்தர்களும் காம்போஜனும் ஸுதக்ஷிணனும் (வ்யூககருடனுடைய) இடப்பக்கத்தை அடைந்து துரோணபுத்திரரான அஸ்வத்தாமாவுக்குமுன் நின்றார்கள். அம்பஷ்டர்களும் களிங்கர்களும் மாகதர்களும் பௌண்டர்களும் மத்ரகர்களும் காந்தாரர்களும் சகுனர்களும் கீழ்நாட்டு வீரர்களும் மலைநாட்டு வீரர்களும் வஸாதிகளும் (வ்யூககருடனுடைய) பின்புறத்தில் நின்றார்கள். ஸூர்யகுமாரனானகர்ணன் புத்திரர்களோடும் ஞாதிகளோடும் பந்துக்களோடும்சேர்ந்து பலதேசங்களிலிருந்து வந்திருக்கின்ற பெரியசேனையோடு (அந்தவ்யூஹகருடனுடைய) வாலில்நின்றான். அரசரே! யுத்தத்தில் ஸமர்த்தர்களான ஜயத்ரதனும் பீமரதனும் ஸம்யாதியும் ரிஷபனும் ஜயனும் பூமிஞ்சயனும் விருஷனும் க்ராதனும் மஹாபலமுள்ள நைஷதனும் பெரிய சேனையினால் சூழப்பட்டவர்களாகவும், பிரம்மலோகத்தை முன்னிட்டவர்களாகவும் உமது கருடவ்யூஹத்தினுடைய மார்பில் நின்றார்கள். துரோணரால், காலாட்களாலும் குதிரைகளாலும் தேர்களாலும் யானைகளாலும் ஏற்படுத்தப்பட்ட வ்யூஹமானது, காற்றினால் அதிகமாகக்கொந்தளிக்கின்ற ஸமுத்திரம்போல நிலைதவறினதாகக் காணப்பட்டது. வெயிற்காலத்தினுடையமுடிவில் மின்னலுடனும் இடியுடனும் கூடிய மேகங்கள் எல்லாத்திக்குக்களினின்றும் புறப்படுவதுபோல, யுத்தம் செய்ய எண்ணங்கொண்டவீரர்கள் அந்தவ்யூககருடனுடைய சிறகுகளினின்றும் சிறகு ஓரங்களினின்றும் வெளிவந்தார்கள். அரசரே! அந்த வ்யூகத்தின் மத்தியில் பிராக்ஜ்யோதிஷதேசாதிபதியானவன் முறைப்

படி ஸித்தம்செய்யப்பட்டிருக்கிற யானையின்மீதேறி உதயபர்வதத்தில் ஸூரியன்போல விளங்கினான்; அரசரே! மாலைகளோடும் முத்து ஸரங்களோடும்கூடியதும் தூக்கிப்பிடிக்கப்பட்டதும் பௌர்ணமாஸியில் க்ருத்திகையோடுசேர்ந்த சந்திரன்போல விளங்குவதுமான வெண்குடையினாலும் விளங்கினான். கறுத்த மைக்குவியலைப்போன்றதும் மதமயக்கமுள்ளதுமான யானையானது மகாமேகங்களாலே மிகுந்தமழைபொழியப்பட்ட பெரியமலைபோல விளங்கியது. பற்பல ஆயுதங்களைப் பூஷணமாகக்கொண்டவர்களும் மலைநாட்டில்வஸிக்கின்றவர்களும் சூரர்களுமான பலவித அரசர்களோடுகூடி, தேவர்களுடைய கூட்டங்களோடுகூடியஇந்திரன்போல (பிராக்ஜ்யோதிஷாதிபதியானவன்) விளங்கினான். பிறகு யுதிஷ்டிரர் மனிதர்களால்வகுக்கமுடியாத அந்தவ்யூஹத்தைச் சத்துருக்களால் ஜயிக்கத்தகாததென்றுகண்டு, யுத்தகளத்தில் திருஷ்டத்யும்னனைப்பார்த்து, 'பிரபுவே! புறாவின்நிறத்திற்கொப்பானநிறமுள்ள குதிரைகளையுடையவனே! நான் பிராம்மணருடைய வசத்தை இப்பொழுது அடையாவண்ணம் (சேனைகளுக்குக்) கட்டளையிடு' என்றுசொன்னார். திருஷ்டத்யும்னன், 'நல்ல விரதமுடையவரே! முயற்சிக்கின்ற துரோணருடைய வசத்தை நீர் அடையமாட்டீர்; நான் இப்பொழுது பரிவாரங்களோடுகூடின துரோணரைத் தடுக்கப்போகின்றேன். குருகுலத்தில் உதித்தவரே! நான் உயிரோடிருக்குமளவும் நீர் மனக்கவலையடைதல் தகாது. துரோணர் யுத்தத்தில் என்னை எவ்விதத்தாலும் ஜயிக்கச்சக்தியுள்ளவராக மாட்டாரன்றோ?' என்றுசொன்னான். பலமுள்ளவனும் புறாநிறமுள்ள குதிரைகளையுடையவனும் துருபதகுமாரனுமான திருஷ்டத்யும்னன் இவ்வாறுசொல்லிவிட்டுத் தான் பாணங்களை இறைத்துக்கொண்டு துரோணரைநோக்கி அவர் ஸமீபத்திலோடிவந்தான். (தமக்கு) விருப்பமில்லாத தோற்றமுள்ளவனும் (யுத்தத்திற்குமுன்வந்து) நிற்கின்றவனுமான திருஷ்டத்யும்னனைக்கண்டு, துரோணர் ஒருக்ஷணத்திற்குள் அதிகஸந்தோஷமற்ற மனத்தையுடையவரானார். மகாராஜரே! அந்தத்திருஷ்டத்யும்னன் துரோணரைக்கொல்வதற்காகவே பிறந்தவன். அவனிடத்திலிருந்து மரணத்தை அடையவேண்டியவராயிருப்பதால் துரோணர் மதிமயங்கினார்; அந்தயுத்தகளத்தில் அந்தச்சேனையை எதிரில் பார்ப்பதற்குச் சிறிதும் சக்தியற்றவரானார். பிறகு, அவர் யுத்தகளத்தில் திருஷ்டத்யும்னனை விட்டுவிட்டுத் துருபதனுடைய சேனையின்மீது கூர்மையான அம்புகளை இறைத்துக்கொண்டு சீக்கிரமாகச்சென்றார். அந்தப் பிராம்மணரான துரோணர் துருபதனுடைய பெரியசேனையைப் பிளந்தார்.

சத்துருக்களை அழிப்பவனும் உம்முடைய குமாரனுமான துர்முகன் அந்தத்ருஷ்டத்யும்னனைப்பார்த்துத் துரோணருக்குப் பிரியத்தைச் செய்யவிரும்பி அவனைத் தடுத்தான். பரதகுலத்திற்பிறந்தவரே! சூரனானபார்ஷதனுக்கும் துர்முகனுக்கும் மிக்கபயங்கரமான கைகலந்த யுத்தம் நேர்ந்தது. பார்ஷதன் அம்புக்கூட்டத்தினாலே துர்முகனைச் சீக்கிரமாகமறைத்துத் துரோணரைப் பெரிதான அம்புப்பிரவாஹத்தினால் தடுத்தான். துரோணர் நாற்புறமும் தடுக்கப்பட்டதைக்கண்டு உம்முடைய குமாரன் மிகுந்த முயற்சியுள்ளவனாகிப் பலவித அடையாளங் கொண்ட அம்புக்கூட்டங்களால் பார்ஷதனை நன்றாக மோஹிக்கச்செய்தான். பாஞ்சாலர்களுக்கும் கௌரவர்களுக்கும் தலைவர்களான அவ்விருவரும் யுத்தத்தில் எதிர்த்துநிற்குங்காலத்தில் துரோணர் யுதிஷ்டிரருடைய ஸேனையைப் பாணங்களால் பலவாறாக அடித்தார். காற்றினால் மேகங்கள் நான்குபக்கங்களிலும் சிதறஅடிக்கப்படுவதுபோலப் பார்த்தனுடையபடைகள் ஓரோரிடத்தில் அதிகமாகப் பிளக்கப்பட்டன. வேந்தரே! ஒரு முகூர்த்தகாலம் அந்தயுத்தம் பார்க்க இன்பமாக இருந்தது. பிறகு, பயித்தியம்பிடித்ததுபோல் வரம்புகடந்திருந்தது. ஆகாயமும் திக்குக்களும் பூமியும் சூரியனும் பிரகாசிக்கவேயில்லை. அரசரே! தமரும் பிறரும் ஒருவராலொருவர் அறியப்படவில்லை. அனுமானத்தினாலும் குறிப்புக்களாலும் அந்தயுத்தம் நடந்தது; அந்த யுத்தவீரர்களுடைய சூடாரத்னங்களிலும் பொன் ஆபரணங்களிலும் கவசங்களிலும் சூரியனுடைய காந்திக்குச்சமமாக விளங்கும் கிரணங்கள் பிரகாசித்தன. யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் சிதறியிருக்கின்ற கொடிகளுள்ளரதங்கள் யானைகள் குதிரைகள் இவற்றின் அந்த உருவமானது கொக்குக்களுடன்கலந்த மேகம்போலக் காந்தியுள்ளதாகக் காணப்பட்டது. மனிதர்கள் மனிதர்களையே கொன்றார்கள். பலமுள்ளகுதிரைகள் குதிரைகளைக் கொன்றன. தேராளிகள் தேராளிகளை வதஞ்செய்தார்கள். யானைகள் சிறந்தயானைகளைக் கொன்றன. உயரத் தூக்கி நிறுத்தப்பட்ட கொடிகளுள்ள யானைகளுக்கு உத்தமமான யானைகளோடு க்ஷணத்தில் நெருங்கியதும் பயங்கரமுமான யுத்தம் நேர்ந்தது. சரீரத்தோடு சரீரத்தைச்சேர்த்து ஒன்றைமற்றொன்று இழுக்கின்ற அந்தயானைகளுடைய தந்தஸமூகங்களின் உரைதலினாலே புகையுடன்கூடின நெருப்பு உண்டாயிற்று. அதிகமாக அசையும்பதாகைகளுள்ளவையும் தந்தங்களால் உண்டுபண்ணப்பட்ட நெருப்புக்களையுடையவையுமான அந்தயானைகள் ஆகாசத்தையடைந்து மின்னலுடன்கூடிய மேகங்கள்போல இருந்தன. தள்ளுகின்றவைகளும்

கர்ஜிக்கின்றவைகளும் கீழே விழுகின்றவைகளுமான யானைகளாலே வியாபிக்கப்பட்ட பூமியானது மேகங்களாலேசூழப்பட்ட கார்காலத்து ஆகாயம் போலாயிற்று. அம்புகளாலும் தோமரங்களாலும் ரிஷ்டிகளாலும் அடிக்கப்பட்ட அந்தயானைகளுடைய சப்தமானது பிரளயகாலத்து மேகங்களுடைய சப்தம்போலத் தோன்றியது. எல்லாயானைகளுள்ளும் சிலயானைகள் தோமரங்களால் அடிக்கப்பட்டன; உத்தமகஜங்கள் பாணங்களால் பிளக்கப்பட்டு அதிகமாகப்பயந்தன. மற்றவைகள் சப்தத்தையே உண்டுபண்ணின. அப்பொழுது சிலயானைகள் யானைகளால் கொம்புகளால்அடிக்கப்பட்டு உத்பாதமேகங்கள்போலக் கோரமான தீனஸ்வரத்தை வெளியிட்டன. உத்தமமான யானைகளாலே (யுத்தரங்கத்தினின்று) தோற்கச்செய்யப்பட்ட யானைகள் சிறந்த அங்குசங்களையுடையமாவுத்தர்களால் நன்றாக அடித்துத்தூண்டப்பட்டு மறுபடியும் வந்தன. யானைவீரர்களால் யானைவீரர்கள் அம்புகளாலும் தோமரங்களாலும் அடிக்கப்பட்டு ஆயுதங்களையும் அங்குசங்களையும் விட்டுவிட்டு யானைகளினின்று பூமியில்விழுந்தார்கள். வீரர்களையிழந்தயானைகள் ஆங்காங்கு கத்திக்கொண்டும் ஒன்றோடொன்று மோதிக்கொண்டும் சிதறினமேகங்கள்போல விழுந்தன. தோமரங்களாலும் ஈட்டிகளாலும் கோடாலிகளாலும் அடிக்கப்பட்டவையும் அடிக்கப்படுகின்றவையுமான யானைகள் தீனஸ்வரத்தை வெளியிட்டுக்கொண்டு விழுந்தன. நான்குபக்கங்களிலும்விழுகின்ற அந்தயானைகளுடைய மலைபோன்ற சரீரங்களால் தாக்கப்பட்டபூமியானது உடனே நடுங்கிற்று; அலறவும் அலறியது. யானைக்காரர்களோடும் பதாகைகளோடும்கூடி நான்குபக்கங்களிலும் நாசஞ்செய்யப்பட்டிருக்கிற யானைகளாலே பூமியானது சிதறியிருக்கின்றமலைகளால் விளங்குவதுபோலவிளங்கியது. யுத்தத்தில் யானையின்மீதிருந்த வீரர்கள், தேராளிகளால் பல்லங்களால் பிளக்கப்பட்ட மார்பையுடையவர்களும் சிதறின அங்குசங்களும் தோமரங்களுமுள்ளவர்களுமாகக் கீழேதள்ளப்பட்டார்கள். மற்றும்சில யானைகள் அம்புகளாலடிக்கப்பட்டு க்ரௌஞ்சபக்ஷிகள்போல் அலறிக்கொண்டும் சத்துருக்களையும் தம்மைச்சேர்ந்தவர்களையும் அடித்துக்கொண்டும் பத்துத்திக்குக்களிலும் ஓடின. அரசரே! பூமியானது (கொல்லப்பட்ட) யானைகள் குதிரைகள் ரதவீரர்கள் இவற்றின் சரீரங்களுடைய கூட்டங்களால் நன்றாய் மூடப்பட்டதும் மாம்ஸத்தினாலும் இரத்தத்தினாலும் சேறுள்ளதுமாகிவிட்டது. யானைகளாலே நொருக்கி நுனிக்கொம்புகளாலே உயரத்தூக்கி எறியப்பட்ட பெரியரதங்கள் சக்ரமுள்ளவைகளாயிருந்தும் ரதங்களாலேயே சக்ரமற்றவைகளாயின. ரதங்கள் ரதிகர்

களை இழந்தவையாகவும் குதிரைகள் குதிரைவீரர்களையிழந்தவையாக வும் யானைகள் யானைவீரர்களையிழந்தவையாகவும் பயத்தினால் துன்ப முற்றவைகளாகித் திக்குக்களில் ஓடின. இந்தயுத்தத்தில் தகப்பன் புத்திரனைக் கொன்றான். அவ்வாறே புத்திரனும் தகப்பனைக் கொன் றான். இவ்விதமாக நெருங்கினயுத்தமானது நேர்ந்தது; ஒன்றுமறியப் படவில்லை. யுத்தவீரர்கள் கணுக்கால்வரையில் புதைகின்றரக்தச் சேறுகளால், ஜ்வலிக்கின்ற காட்டுத்தீக்களாலே நாற்புறங்களிலும் சூழப்பட்ட பெரியமரங்கள்போல் வாட்டமுற்றார்கள். வஸ்திரங்களும் கவசங்களும் குடைகளும் பதாகைகளும் இரத்தங்களால் நனைக்கப் பட்டன. எல்லாம் ரக்தமாகவே காணப்பட்டன. கீழேதள்ளப்பட்ட குதிரைக்கூட்டங்களும் தேர்க்கூட்டங்களும் காலாட்களுடையகூட்டங் களும் பலவாறாகத் தேருருளைகளின் நுனிகளாலே பலமுறைதிரும்பி வந்து நன்றாகப் பொடிபண்ணப்பட்டன. யானைக்கூட்டமாகிறமகாவேக முள்ளதும் மரித்தமனிதர்களாகிறபாசிக்கொத்துக்களுள்ளதும் ரதங் களுடைய கூட்டமாகிற நெருங்கினசுழல்களுள்ளதுமான அந்த ஸைன் யமாகிற ஸமுத்திரம் நன்றாகவிளங்கிற்று. ஜயமாகிறதனத்தை விரும் பினவர்களான யுத்தவீரர்கள் வாகனங்களாகிறமரக்கலங்களால் அந்த ஸேனாஸமுத்திரத்தில் பிரவேசித்துப் பின்புமூழ்கினவர்களாயிருந்தும் மோகத்தையடையவேஇல்லை. அழகானகொடிகளுள்ளவர்களும் அம்பு மழைகளால் பொழியப்பட்டவர்களுமான அந்தயுத்தவீரர்களுள் ஒரு வனாவது கொடியையிழக்கவுமில்லை; மூர்ச்சையடையவுமில்லை. அவ் வாறு கோரரூபமாகவும் பயங்கரமாகவுமுள்ள யுத்தம் நிகழுங்காலத்தில் துரோணர் சத்துருக்களை மயக்கமடையும்படிசெய்துகொண்டு வேகமாக யுதிஷ்டிரரை எதிர்த்து வந்தார்.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரரைப் பிடிக்கக்கருதிய துரோணரை ஸத்யஜித்து தடுத்ததும், துரோணர் அவனைக் கொன்றதும், யுதிஷ்டிரர் பயந்தோடியதும், துரோணர் மறுபடியும் அவரைப் பிடிக்கக்கருதிப் பாஞ்சால்யன்முதலானவர்களைக் கொன்றதும்.)

பிறகு, யுதிஷ்டிரர், பக்கத்தில்வந்த துரோணரைக்கண்டு பயப் படாதவர்போலப் பெரிதான அம்புமழையினால் அவரைத்தடுத்தார்.

பின்பு, யுதிஷ்டிருடையசேனையில் பெரியஸிம்மமானது கஜயூதபதி யைப்பிடிக்க யத்தனிக்கும்பொழுது யானைக்கூட்டத்தில் சப்தமுண்டா வதுபோல ஹலஹலாசப்தமுண்டாயிற்று. பிறகு, உண்மையானபராக் கிரமம்பொருந்திய சூரனான ஸத்யஜித்தானவன் யுதிஷ்டிரரைப்பாது காக்கஎண்ணங்கொண்டு ஆசார்யரான துரோணரைநோக்கி எதிர்த்தோடி வந்தான். பிறகு, மகாபலசாலிகளான ஆசார்யரும் பாஞ்சால்யனான ஸத்யஜித்தும் அந்தஸேனையைக்குழப்பிக்கொண்டு இந்திரனும் மகாபலி யும்போல யுத்தஞ்செய்தார்கள். பிறகு, பெரியவில்லுள்ளவனும் உண் மையானபராக்ரமமுள்ளவனுமான ஸத்யஜித்தானவன் உத்தமமான அஸ்திரத்தை வெளிப்படுத்திக்கொண்டு கூர்மையான அம்புநுனியி னாலே துரோணரை அடித்தான்; அவ்வாறே ஸர்ப்பங்களுடையவிஷங் களுக்கொப்பானவைகளும் அந்தகன்போன்றவைகளுமான ஐந்து பாணங்களை அவருடையஸாரதியின்மீது பிரயோகித்தான். அவரு டையஸாரதி மூர்ச்சையடைந்தான். பிறகு, பத்துப்பாணங்களாலே அவருடையகுதிரைகளை விரைவாக அடித்தான். கோபங்கொண்டு பத்துப்பத்துப்பாணங்களால் இரண்டுபக்கங்களிலுமுள்ள ஸாரதிகளை யும் அடித்தான். சத்துருக்களை வதஞ்செய்யும் ஸத்யஜித்து கோபம் மூண்டு ஸேனாமுகத்தில் வட்டமாகச்சுற்றி ஸஞ்சரித்துக்கொண்டு, துரோணருடையகொடியை அறுத்தான். சத்துருக்களை அடக்குபவ ரான துரோணரோ யுத்தத்தில் அவனுடைய அந்தச்செய்கையை நன்கு பார்த்து அந்தச்சமயத்துக்குரியகார்யத்தை மனத்தினால் சிந்தித்தார். பிறகு, அவர் இந்த ஸத்யஜித்தினுடைய அம்பையும் வில்லையும்அறுத்து மர்மஸ்தானத்தைப்பிளக்கின்ற கூர்மையுள்ள பத்துப்பாணங்களாலே அவனையும் விரைவாகஅடித்தார். அரசரே! பிரதாபசாலியானஅவன் அதிசீக்கிரமாக வேறுவில்லையெடுத்துக் கழுகிறகுகள் பூண்ட முப்பது பாணங்களாலே துரோணரை அடித்தான். யுத்தத்தில் ஸத்யஜித்தினால் விழுங்கப்படுகிறவர்போலிருக்கும் துரோணரைப்பார்த்துப் பாஞ்சால ராஜகுமாரனான விருகனானவன் கூர்மையுள்ள நூறு அம்புகளாலே அவரையடித்தான். வேந்தரே! யுத்தத்தில் மகாரதரானதுரோணரை (அம்புகளால்) மூடப்பட்டவராகக்கண்டு பாண்டவர்கள் ஸிம்மநாதஞ் செய்தார்கள்; வஸ்திரங்களையும் வீசினார்கள். மன்னரே! பலசாலியான விருகனோ மிக்ககோபமூண்டு துரோணரை நடுமார்பில் அறுபதுபாணங்க ளால் அடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. மகாரதரும் மகா வேகமுள்ளவருமான துரோணாசாரியரோ அம்புமழையினால் மூடப் பட்டுக் கோபத்தினால் கண்களைப்புரட்டிவிழித்து வேகத்தைச் செய்

தார். பிறகு, அவர் ஸத்யஜித்து விருகன் இவர்களுடைய விற்களையும் அறுத்து ஆறுபாணங்களாலே ஸாரதியோடும்குதிரைகளோடுங்கூட விருகனைக்கொன்றார். பிறகு, ஸத்யஜித்தானவன் மிக்கஉறுதியுள்ள வேறொருவில்லை எடுத்துக்கொண்டு அம்புகளாலே குதிரைகளோடும் ஸாரதியோடும் த்வஜத்தோடும்கூடின துரோணரைத் துன்பமடையும்படி அடித்தான். அந்தத்துரோணர், யுத்தத்தில் பாஞ்சாலராஜகுமாரனை ஸத்யஜித்தினலடிக்கப்பட்டு அதைப் பொறுக்கவில்லை. பிறகு, அவர், அவனை நாசம்பண்ணுவதின்பொருட்டு அதிவேகத்தோடு அம்புகளைப் பிரயோகித்தார். ஆயிரக்கணக்கான அம்புமழைகளைக் குதிரைகளின்மீதும் கொடியின்மீதும் விற்பிடியின்மீதும் பக்கங்களிலுள்ள இரண்டுஸாரதிகள்மீதும் இறைத்தார். அவ்விதமாக விற்கள் அடிக்கடி அறுக்கப்படும்பொழுது உத்தமமான அஸ்திரங்களை அறிந்த பாஞ்சால ராஜகுமாரனை ஸத்யஜித்து, சிவப்பானகுதிரைகளுள்ள துரோணரை நன்றாக எதிர்த்துப் போர்புரிந்தான். அந்தத்துரோணர் மகாயுத்தத்தில் அவ்வாறுபராக்கிரமிக்கின்ற ஸத்யஜித்தைக்கண்டு அர்த்தசந்திரபாணத்தினலே மகாத்மாவான அவனுடையதலையை அறுத்தார். பாஞ்சாலர்களுள் தலைவனும் மகாரதனுமான அந்த ஸத்யஜித்து கொல்லப்பட்டவுடனே, யுதிஷ்டிரர் துரோணரிடத்திலிருந்து பயந்து வேகமுள்ளகுதிரைகளோடு விலகிச்சென்றார். பாஞ்சாலர்களும் கேகயர்களும் மச்சதேசத்துஅரசர்களும் சேதிதேசத்துவீரர்களும் காரூசர்களும் கோஸலர்களும் யுதிஷ்டிரரைப்பாதுகாக்க எண்ணித் துரோணரைநோக்கி ஸமீபத்திலோடிவந்தார்கள். பிறகு, சத்துருக்களுடையகூட்டத்தைக் கொல்பவரான ஆசாரியர் யுதிஷ்டிரரைப்பிடிக்கக்கருதி நெருப்பானது பஞ்சுக்குவியலை எரிப்பதுபோல அந்தஸேனைகளை எரித்தார். அந்த அந்த ஸேனைகளை அடிக்கடி அதிகமாகஎரிக்கின்ற துரோணரை விராடராஜனுடைய இளையஸகோதரனை சதானீகன் எதிர்த்தான். சிற்பியினல் நன்றாகச்சாணைபிடிக்கப்பட்டவையும் சூரியகிரணங்களுக்கொப்பானவையுமான ஆறுபாணங்களாலே துரோணரை ஸாரதியோடும் குதிரைகளோடும் அடித்து உரக்கஸிம்மநாதஞ்செய்தான். குரூரமானசெய்கையின்பொருட்டு முயன்றவனும் (ஒருவராலும்) செய்யமுடியாதகாரியத்தைச் செய்யஎண்ணங்கொண்டவனுமான அவன் மகாரதரான துரோணரின்மீது அனேக அம்புகளைப் பொழிந்தான். துரோணர் மிகவும் ஆரவாரம்செய்கின்ற அந்தச்சதானீகனுடையதலையைக் குண்டலங்களோடு கத்தியினலே சரீரத்திலிருந்து அறுத்தார். பிறகு, மச்சதேசத்தார்கள் (யுத்தபூமியைவிட்டு) அதிவேகமாய் ஓடிவிட்டார்கள். துரோணர்

மாத்ஸ்யர்களைஜயித்து அடிக்கடி சேதிதேசத்துவீரர்களையும் கரூசர்களை யும் கேகயர்களையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் பாண்டவர் களையும் ஜயித்தார். காட்டை நெருப்பு எரிப்பதுபோலக் கோபத்தோடு ஸேனைகளைக்கொளுத்துகின்ற ஸ்வர்ணத்தேராளியான அந்தவீரரைக் கண்டு ஸ்ருஞ்சயர்கள் மிகநடுங்கினார்கள். இரண்டுகைகளாலும் வில்லில் அம்புகளைப்பூட்டுகிறவரும் மிக்கசுறுசுறுப்புள்ளவரும் சத்துருக்களைக் கொல்லுகின்றவருமான இந்தத்துரோணருடையநாணொசையானது எல் லாத்திக்குக்களிலும் கேட்கப்பட்டது. கைத்தேர்ச்சியுள்ள துரோண ராலேவிடப்பட்ட பயங்கரமான அம்புகள், யானைகளையும் குதிரைகளை யும் காலாட்களையும் தேராளிகளையும் யானைவீரர்களையும் நாசம்செய் தன. பனிக்காலத்தினுடையமுடிவில் பெரிதான இடிமுழக்கத்தோடு சேர்ந்து சுழல்காற்றுடன்கூடின மேகமானது கல்மாரியைப்பொழிவது போல (த்ரோணர்) பகைவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணிக்கொண்டு சரமாரியைப் பொழிந்தார். மித்திரர்களுக்கு அபயம்கொடுப்பவரும் பலவானும் சூரரும் சிறந்தவில்லாளியுமான அவர் ஸைன்யங்களை விசே ஷமாகக் கொந்தளிக்கச்செய்துகொண்டு எல்லாத்திசைகளிலும் ஸஞ்சா ரம் செய்தார். மகாதேஜஸ்வியான அந்தத்துரோணருடைய ஸ்வர்ணத்தா லலங்கரிக்கப்பட்டவில்லை மேகங்களில் மின்னலைப்போல எல்லாத்திக் குக்களிலும் கண்டோம். பாரதரே! யுத்தபூமியில் அதிகமாகஸஞ்சரித் துக்கொண்டிருக்கிற அந்தத்துரோணருடையகொடியில் இமயமலையின் சிகரம்போலவிளங்குகின்றவேதியையும் கண்டோம். தேவாஸுரர்க ளாலே நமஸ்கரிக்கப்பட்ட விஷ்ணுவானவர் எவ்வாறு தைத்யர்களுடைய கூட்டத்தை நாசம்பண்ணினாரோ அவ்வாறே துரோணர் பாண்டவஸேனை யில் அதிகநாசத்தை உண்டுபண்ணினார். சௌர்யமுள்ளவரும் ஸத்திய மானவாக்கையுடையவரும் மிகக்கற்றறிந்தவரும் பலமுள்ளவரும் ஸத்ய விக்கிரமரும் மகானுபாவருமான அந்தத்துரோணாசாரியர், கவசங்களா கிற அலைகளும் துவஜங்களாகிற நீர்ச்சுழல்களுமுள்ளதும் மனிதர்களா கிறகரைகளையிடிக்கின்றதும் யானைகள்குதிரைகளாகிற பெரியமுதலை களையுடையதும் கத்திகளாகிற மீன்களையுடையதும் வீரர்களுடைய எலும்புகளாகிற பாறகற்களுள்ளதும் பேரீமுரஜங்களாகிற ஆமைகளை யுடையதும் கவசங்களுங்கேடகங்களுமாகிற தெப்பங்களையுடையதும் மயிர்களாகிற பாசியும்புல்தரையுமுள்ளதும் அம்புகளாகிற நீரோட்டத் தையுடையதும் விற்களாகிற பிரவாகமுள்ளதும் கைகளாகிற நாகங்க ளால் சூழப்பட்டதும் மனிதர்களுடைய தலைகளாகிற கற்களையுடைய தும் சக்திகளாகிற மீன்களுள்ளதும் கதைகளாகிற தெப்பங்களுள்ள

தும் தலைப்பாகைகளாகிற நுரைகள்பரவியதும் சிதறியிருக்கின்றகுடல்களாகிற ஸர்ப்பங்களுள்ளதும் உக்ரமான மாம்ஸத்தோடுகலந்த உதிரமாகிற சேறுள்ளதும் யானைகளாகிற முதலைகளையுடையதும் கொடிகளாகிற மரங்களையுடையதும் சரீரங்களாகிற கட்டுமரங்களையுடையதும் யானைவீரர்களும் குதிரைவீரர்களுமாகிற சுறாமீன்களுள்ளதும் கல்பாந்தத்திற்போலக்கோரமாயிருப்பதும் பயந்தவர்களுக்கு மிக்க பயத்தையுண்டுபண்ணுவதும் (ஒருவராலும்) நெருங்கமுடியாததும் பயங்கரமானதும் கோரமாயுள்ளதும் போர்க்களத்தில் பெருகுகின்றதும் வேகமுள்ளதும் கௌரவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் இழுத்துச்செல்லுகின்றதும் சூரர்களை அடித்துக்கொண்டு போகின்றதும் க்ஷத்ரியர்களை முழுகச்செய்கின்றதும் குரூரமானதும் (ஒருவராலும்) தாண்டமுடியாததும் யமனுடையசமீபத்தைக் குறித்துச்செல்லுகின்றதும் மாம்ஸாசிகளின் கூட்டங்களாலடையப்பட்டதும் நாய்நரிகளுடைய கூட்டங்களோடுகூடியதும் நாற்புறமும் மிக்கபயங்கரர்களான ராக்ஷஸர்களாலடையப்பட்டதுமான அந்தயுத்தபூமியில் ஒருரக்தநதி பெருகியோடும்படி செய்தார். யமன்போல ஸைனியங்களை எரிக்கின்றவரும் ரதத்தில் பிரகாசிக்கின்றவருமான அந்தத்துரோணரை யுதிஷ்டிரரைமுதன்மையாகக்கொண்ட வீரர்கள் நாற்புறங்களிலும் எதிர்த்தார்கள். சூரர்களான அவர்கள் ஒன்றுகூடி, கிரணங்களாலே உலகத்தைத் தபிக்கச்செய்கின்ற சூரியன்போன்ற துரோணரை நாற்புறங்களிலும் எதிர்த்தார்கள். மகிமைதங்கியவில்லையுடைய அந்தச்சூரரான துரோணரை, உம்மைச்சேர்ந்தவர்களான அரசர்களும் ராஜபுத்திரர்களும் ஆயுதங்களைக் கையிலெடுத்து நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, சிகண்டியானவன் பதிவானகணுக்களுள்ள ஐந்துபாணங்களாலே துரோணரை அடித்தான்; க்ஷத்திரவர்மா இருபதுபாணங்களாலும் வஸுதானன் ஐந்துபாணங்களாலும் உத்தமௌஜஸ் மூன்றுபாணங்களாலும் க்ஷத்ரதேவன் ஏழுபாணங்களாலும் ஸாத்யகி நூறுபாணங்களாலும் யுதாமன்யு எட்டுப்பாணங்களாலும் யுத்தபூமியில் அடித்தார்கள். யுதிஷ்டிரர் பன்னிரண்டுபாணங்களால் துரோணரை அடித்தார்; திருஷ்டத்யும்னன் பத்துப்பாணங்களாலும் சேகிதானன் மூன்றுபாணங்களாலும் அடித்தார்கள். பிறகு ஸத்யஸந்தரான துரோணர், மதங்கொண்டயானைபோலத் தேர்ப்படையை எதிர்த்துத்தாண்டி. த்ருடஸேனனை அடித்துத் தள்ளினார். பிறகு பயப்படாதவன்போல அடிக்கின்ற க்ஷேமனென்னும் அரசனைக்குறித்து ஒன்பதுபாணங்களால் அடித்தார். அவன் உயிரையிழந்து தேரினின்று கீழேவிழுந்தான். அந்தத் துரோணர்

ஸைனிகர்களுடைய மத்தியைநாடி எல்லாத்திக்குக்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டு மற்றவர்களுக்கும் ரக்ஷகரானார். (பிறரால்) எவ்விதத்தாலும் அவர் ரக்ஷிக்கப்படத்தக்கவராகவில்லை. சிகண்டியைப் பன்னிரண்டுபாணங்களாலும் உத்தமௌஜஸை இருபதுபாணங்களாலும் (அடித்து) வஸுதானனை ஒருபல்லத்தால் யமலோகத்திற்கு அனுப்பினார். க்ஷத்ரவர்மாவை எண்பதுபாணங்களாலும் ஸுதக்ஷிணனை இருபத்தாறுபாணங்களாலும் (அடித்து) க்ஷத்ரதேவனை ஒருபல்லத்தால் ரதமத்தியத்திலிருந்து கீழேதள்ளினார். ருக்மரதரான துரோணர் யுதாமன்யுவை அறுபத்துநான்குபாணங்களாலும் ஸாத்யகியை முப்பதுபாணங்களாலும் அடித்துவிட்டு வேகமாக யுதிஷ்டிரருடைய ஸமீபத்தில் வந்தார். பிறகு, ராஜஸ்ரேஷ்டரான யுதிஷ்டிரர் வேகமுள்ள குதிரைகளோடு குருவானதுரோணரிடமிருந்து விரைவாக ஓடிவிட்டார். பாஞ்சால்யன் துரோணரை எதிர்த்தான். துரோணர் வில்லையும் குதிரைகளையும் ஸாரதியையுமுடைய அந்தப்பாஞ்சால்யனை அடித்தார். அடிக்கப்பட்ட அந்தப்பாஞ்சால்யன் ஆகாயத்தினின்று நக்ஷத்திரம் விழுவதுபோலத் தேரினின்று பூமியில்வீழ்ந்தான். துரோணர் அவனைக்கொன்று கௌரவர்களாலே சூழப்பட்டு மிகவிளங்கினார். விருஷ்ணிகுலத்தில் பிறந்தவனும் அரசனுமான வார்த்தக்ஷேமியோ அவரைச் சிறந்த ஒன்பதுபாணங்களாலே அடித்துத் திரும்பவும் ஐந்துபாணங்களால் அடித்தான். அரசரே! ஸாத்யகி அந்தத் துரோணரை அறுபத்துநான்கு பாணங்களினாலே அடித்தான். பலமுள்ளவனான ஸுசித்ரன் துரோணரைப் பத்துப்பாணங்களாலடித்துக் கர்ஜித்தான். மன்னரே! யுத்தத்தில் துரோணர் அந்தஸுசித்ரன்மீது அம்புமழைகளைப் பொழிந்தார். வேந்தரே! பிறகு, அவர் ஸுசித்ரனை ஸாரதியோடும் குதிரைகளோடும் விழும்படிசெய்தார். அவன் யுத்தத்தில் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தான். மகாராஜரே! தள்ளப்படுகின்ற அந்த ஸுசித்ரன் ஆகாயத்தினின்று கீழேவிழுகின்ற நக்ஷத்திரம்போல விளங்கினான். பாஞ்சாலர்களுக்குக் கீர்த்தியுண்டுபண்ணுகிறவனான அந்த ராஜகுமாரன் கொல்லப்பட்டவுடன், 'துரோணரைக்கொல்லுங்கள்; துரோணரைக் கொல்லுங்கள்' என்கிற பெரியசப்தமானது உண்டாயிற்று. பலமுள்ளவரான துரோணர் அவ்வாறு மிகுந்தபராக்ரமுள்ளவர்களான அந்தப்பாஞ்சாலர்களையும்மாத்ஸ்யர்களையும் கேகயர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் பாண்டவர்களையும் கலங்கச்செய்தார். யுத்தத்தில் கௌரவர்களால் சூழப்பட்ட துரோணர் ஸாத்யகி, சேகிதானன், த்ருஷ்டத்யும்னன், சிகண்டி, வார்த்தக்ஷேமி, சைத்ரஸேனி, ஸேனாபிந்து, ஸுவர்ச்சஸ் ஆகிய இவர்களையும்

பற்பலதேசங்களுக்கு அரசர்களான மற்றும் அனேகர்களையும் ஜயித்தார். மகாராஜரே! அந்தமகாயுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்கள் ஜயம்பெற்று, யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் ஓடுகின்ற பாண்டவஸேனையிலுள்ளவீரர்களைக் கொன்றார்கள். பாரதரே! இந்திரனாலே அசுரர்கள் கொல்லப்படுவதுபோல மகாத்மாவான துரோணராலே கொல்லப்படுகின்ற பாஞ்சாலர்களும் கேகயர்களும் மாத்ஸ்யர்களும் மிகநடுங்கினார்கள்" என்று கூறினான்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரியோதனன் துரோணரது பராக்கிரமத்துக்கு மகிழ்ந்து பாண்டவர்களை அவமதித்ததும், கர்ணன், அவர்கள் அவமதிக்கத்தகாதவர்களென்று புகழ்ந்துகூறியதும்.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! மகாயுத்தத்தில் துரோணரால் பாண்டவர்களும் எல்லாப்பாஞ்சாலர்களும் தோற்கச்செய்யப்பட்டபிறகு, அற்பர்களால் அனுஷ்டிக்கப்படாததும் புருஷஸ்ரேஷ்டர்களால் அனுஷ்டிக்கப்பட்டதும் க்ஷத்திரியர்களுக்குக் கீர்த்தியை உண்டுபண்ணக்கூடியதும் உத்தமமுமான எண்ணத்தைச் செலுத்தி யுத்தத்தில் யாராவது ஒருவன் அவரை எதிர்த்தானா? எவன் (எல்லோரும்) வெல்லப்பட்ட ஸமயத்தில் (சத்ருவை) எதிர்க்கிறானோ அந்தச்சூரனல்லவோ வீரர்களுள் சிறந்தவன். அந்தோ! ஸந்நத்தராக இருக்கிற துரோணரைப்பார்த்து அவரை எதிர்ப்பவன் ஒருவனுமில்லையா? கொட்டாவிவிடுகின்றபுலியைப்போலவும் மதப்பெருக்குக்கொண்டயானையைப்போலவும் இருப்பவரும் யுத்தத்தில் பிராணனைவிட ஸன்னத்தராயிருக்கின்றவரும் விசித்ரமாக யுத்தம்பண்ணுகிறவரும் பெரியவில்லுள்ளவரும் புருஷஸ்ரேஷ்டரும் சத்துருக்களுக்குப் பயத்தைவிருத்திபண்ணுகிறவரும் நன்றியறிவுள்ளவரும் ஸத்யத்தில் நிலைபெற்றவரும் துரியோதனனுடைய நன்மையை விரும்புகின்றவரும் அவ்வாறே ஸேனையில் நிலைபெற்றிருக்கின்றவரும் சூரருமான அந்தத்ரோணரைக்கண்டு எந்தச்சூரர்கள் (யுத்தம்செய்வதற்காகத்) திரும்பினார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்றுவினவ, ஸஞ்சயன் கூறுகிறான்.

"யுத்தத்தில் துரோணருடைய அம்புகளால் நன்குதள்ளப்பட்டவர்களும், நிலைதவறினவர்களும், நதியினுடைய பெருவெள்ளத்தினால்

இழுத்துக்கொண்டு போகப்படுகின்ற ஓடங்களைப்போலத் துரோண ருடையவில்லினின்று விடுபடுவதும் (பகைவர்களுடைய உயிர்களை) விரைவாக வாங்குந்தன்மையுள்ளதுமான பாணஸமூஹத்தினால் கவ ரப்படுகின்றவர்களுமான அந்தப்பாஞ்சாலர்களையும் பாண்டவர்களை யும் மாத்ஸ்யர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் சைத்யர்களையும் கேகயர் களையும் பார்த்துக் கௌரவர்கள் ஸிம்மநாதத்தோடும் பற்பலவாத்ய கோஷத்தோடும் சேர்ந்து தேர்களையும் யானைகளையும் யுத்தவீரர்களை யும் நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். துர்யோதனராஜன் படைகளுடைய மத்தியிலிருந்துகொண்டு தன்ஜனங்களால் சூழப் பட்டவனாக அவர்களைக்கண்டு மிக்க ஸந்தோஷமடைந்து நகைக்கின்ற வன்போலக் கர்ணனைப்பார்த்து, 'ராதேய! பாஞ்சாலர்கள் ஸிம்மத்தினால் காட்டிலுள்ளமிருகங்கள் பயமுறுத்தப்படுவதுபோல உறுதியான வில் லுள்ள துரோணரால் பயமுறுத்தப்படுவதையும் அவருடையபாணங்க ளால் அதிகமாகவிலக்கித்தள்ளப்படுவதையும் பார். காற்றினால் முறிக்கப்பட்ட பெரியமரங்கள்போலத் துரோணராலே தோற்கச்செய் யப்பட்டஇவர்கள் ஒருபோதும் திரும்ப யுத்தத்தை விரும்பமாட்டார்க ளென்பது என்னுடைய எண்ணம். மஹாத்மாவான துரோணராலே பொற்கட்டுக்களுள்ள அம்புகளாலே துன்பமடைகிற இவர்கள் ஆங் காங்கு சுழன்றுகொண்டு பலவழிகளால் செல்லுகிறார்கள். காட்டுத் தீயினால் யானைகள் தடுக்கப்படுவதுபோலக் கௌரவர்களாலும் மகாத் மாவானதுரோணராலும் நன்றாகத்தடுக்கப்பட்டு இதோ சிலர் மண்ட லாகாரமாகச் சுழலுகிறார்கள். வண்டுகளால் மொய்க்கப்படுவதுபோ லத் துரோணருடைய கூர்மையானஅம்புகளால் மொய்க்கப்பட்ட இந் தச்சத்துருவீரர்கள் ஓடுவதில் நோக்கமுள்ளவர்களாக ஒருவருக்கொரு வர் பதுங்குகிறார்கள். ஓ! கர்ண! இதோ பீமன் அதிககோபங் கொண்டு பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களாலும் விடுபட்டும் என் னுடைய யுத்தவீரர்களாற்சூழப்பட்டும் என்னை ஆனந்தப்படுத்துகிற வன்போல இருக்கிறான். துர்ப்புத்தியுள்ளவனான இந்தப் பீமஸேனன் இப்பொழுது உலகத்தைத் துரோணமயமாகவே காண்கிறானென்பது நிச்சயம். இந்தப்பாண்டவன் இப்பொழுது நிச்சயமாகத் தன்னுயிரி லும் ராஜ்யத்திலும் ஆசையை விட்டுவிட்டான்' என்றான்.

கர்ணன், 'புருஷஶ்ரேஷ்டனே! ஒருபோதும் இந்த மிக்கபுஜபல முள்ளவனான பீமஸேனன் தான்உயிரோடிருந்துகொண்டு யுத்தத்தை விட்டுவிலகான்; இந்த(க் கௌரவவீரர்களுடைய) ஸிம்மநாதங்களையும் பொறான். பாண்டவர்கள் யுத்தத்தில் தோல்வியடைய மாட்டார்க

ளென்பது என்னுடையஎண்ணம். சூரர்களும் பலசாலிகளும் அஸ்திரத்திலப்யிற்சியுள்ளவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான பாண்டவர்கள் விஷத்தினாலும் நெருப்பினாலும் சூதாட்டத்தாலுமுண்டான துன்பங்களையும் வனவாஸத்தையும் நினைத்து யுத்தத்தை விட்டுவிலகமாட்டார்களென்பது என்னுடைய எண்ணம். மிகுந்தபுஜபலமுள்ளவனும் அளவற்றபராக்ரமமுள்ளவனும் செந்நாயினுடைய வயிறுபோன்றவயிற்றையுடையவனும் குந்தியின் புத்திரனுமான பீமஸேனன் ரதிகசிரேஷ்டர்களான சிறந்தயுத்தவீரர்களனைவரையும் கொல்லப்போகிறான்; கத்தியினாலும் வில்லினாலும் சக்தியினாலும் குதிரைகளாலும் யானைகளாலும் காலாட்களாலும் ரதங்களாலும் இருப்புத்தடியினாலும் கூட்டங்கூட்டமாகக் கொல்லப்போகிறான். அப்படிப்பட்ட இந்தப்பீமஸேனனை ஸாத்யகிமுதலானரதிகர்களும் பாஞ்சாலர்களும் கேகயர்களும் மாத்ஸ்யர்களும் விசேஷித்துப் பாண்டவர்களும் அநுஸரிக்கிறார்கள். சூரர்களும் பலமுள்ளவர்களும் விக்ரமமுள்ளவர்களும் (சத்துருஸைன்யங்களைப்) பீடிக்கிறவர்களுமான மகாரதர்கள் கோபங்கொண்டபீமனால் எதிர்த்துஓட்டப்பட்டார்கள். அந்தக்கௌரவசிரேஷ்டர்கள் பீமஸேனனைக் கவர்ந்துகொள்ளவிரும்பிச் சூரியனை மேகங்களுடையகூட்டங்கள் சூழ்வதுபோலத் துரோணரை நான்குபக்கமும் சூழ்ந்துகொண்டார்கள். பாண்டவர்கள் யுத்தங்களில் கிருஷ்ணனைப் பந்துவாக உடையவர்களாகச் சொல்லப்படுகின்றார்கள். பாஞ்சாலர்களும் கேகயர்களும் மாத்ஸ்யர்களும் பாண்டவர்களும் எல்லாவிதத்தாலும் சூரர்கள் ; பலசாலிகள் ; விக்கிரமமுடையவர்கள் ; மகாரதர்கள்; (அகாரியத்தில்) வெட்கமுடையவர்கள் ; சத்துருக்களைக்கொல்வதில் ஸமர்த்தர்கள்; பரிசுத்தமான லக்ஷணம்பொருந்தியவர்கள். அரசனே! அனேக அரசர்கள் யுத்தத்தில் அவர்களுக்கு வசப்பட்டிருக்கிறார்கள். நாராயணனைத்தலைவனாகக்கொண்ட பாண்டவர்களை நீ அவமதியாதே. சாகப்போகிறவிட்டிற்பூச்சிகள் விளக்கைத்தாக்கி அவிப்பதுபோல் ஓரேவழியில்செல்லும் இந்தப்பாண்டவர்கள் விரதம்தவறாத துரோணரை, அவர்காக்கப்படாமலிருந்தால், கொன்றுவிடுவார்கள். இந்தப் பாண்டவர்கள் அஸ்திரத்தில்பழக்கமுள்ளவர்கள்; தடுப்பதில் ஸமர்த்தர்கள்; ஸம்சயமில்லை. பாரத்வாஜரிடத்தில் பெரியபாரமானது வைக்கப்பட்டிருக்கின்றதென்று நான் நினைக்கிறேன். எந்த இடத்தில் அவரிருக்கிறாரோ அந்தவிடத்துக்குச்சீக்கிரமாக நாம் போவோம், ஓநாய்கள் பெரியயானையைக்கொல்வதுபோல அந்தப்பாண்டவர்கள் தவறாதவிரதத்தையுடைய துரோணரை வதம்செய்யவேண்டாம்'

என்றுகூறினான். அரசரே! பிறகு துர்யோதனராஜன் ராதாபுத்ரனான கர்ணனுடையவார்த்தையைக்கேட்டு ஸகோதரர்களுடன் துரோணருடையரதத்தைநோக்கிச் சென்றான். அவ்விடத்தில் பற்பலநிறங்களுள்ள உத்தமமான குதிரைகள் பூட்டின ரதங்களின்மீது ஏறிவந்திருக்கின்றவர்களும் ஸஹாயமற்றிருக்கிற துரோணரைக்கொல்ல எண்ணங்கொண்டவர்களுமான பாண்டவர்களுடைய பெரிய (ஸிம்மநாதத்தின்) ஒலியானது தோன்றியது" என்றான்.

---

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(ரதங்களில்பூட்டப்பட்டிருக்கின்ற குதிரைகளையும் கொடிகளையும் வர்ணித்தது.)

த்ருதராஷ்ட்டிரன், "ஸஞ்சய! பீமன்முதலான எந்தயுத்த வீரர்கள் கோபங்கொண்டு துரோணாசார்யரை எதிர்த்தார்களோ, அந்த எல்லாவீரர்களுடையரதங்களிலுமுள்ள குதிரைகளையும் த்வஜங்களையும் எனக்குச் சொல்வாயாக. நான் அவைகளைத் தனித்தனி விஸ்தாரமாகக் கேட்கவிரும்புகிறேன். அப்பா! பீஷ்மருடையவதத்தைக் கேட்டு, அவ்விதமாகவே இதுவும் நேர்ந்துவிடுமோவென்று சத்துருக்களைத் தவிக்கச்செய்பவரான துரோணரைக்குறித்து என்மனம்வருந்துகிறது" என்று கேட்க, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

[1] "கரடிநிறமுள்ள குதிரைகளுடன் திரும்பிவருகின்ற விருகோதரனைக்கண்டு பிறகு வெள்ளிபோன்றகுதிரைகளையுடைய சூரனும் சினியின்பேரனுமான ஸாத்யகியும் யுத்தத்துக்குத் திரும்பினான். வெண்மைநிறமும் நீலநிறமும் சிவப்புநிறமுமுள்ள குதிரைகளையுடையவனும் எதிர்க்கமுடியாதவனுமான யுதாமன்யு கோபத்துடன் தானே குதிரைகளை வேகமாக நடத்திக்கொண்டு துரோணருடைய தேரைக்குறித்து எதிர்த்துவந்தான். பாஞ்சாலராஜகுமாரனான த்ருஷ்டத்யும்னன் வெண்மைநிறமும் கருமைநிறமுமுள்ளவைகளும் பொற்கலன்களை அணிந்தவைகளும் மிகுந்தவேகமுள்ளவைகளுமான குதிரைகளோடு திரும்பினான். தவறாதவிரதத்தை அனுஷ்டித்தவனும் சிவந்தகுதிரைகளுள்ளவனுமான க்ஷத்ரதர்மாவென்பவன் தன்பிதாவைப் பாதுகாக்கஎண்ணியும் அவனுக்கு உத்தமமான ஜயஸித்தியைவிரும்பியும் திரும்பினான்.

[1] 'ரிக்ஷ' என்பது மூலம்; நக்ஷத்திரம் முதலிய பல பொருள்களுண்டு.

சிகண்டியின் குமாரனான க்ஷத்ரதேவனை தாமரையிலைபோன்ற நிற முள்ளவைகளும் நிர்மலமானகண்களையுடையவைகளும் நன்கு அலங் கரிக்கப்பட்டவைகளுமான குதிரைகளைத் தானே வேகமாகநடத்திக் கொண்டு சென்றான். கிளியிறகுநிறமான ரோமங்களுள்ளவைகளும் பார்க்க அழகியவைகளுமான காம்போஜதேசத்துக்குதிரைகள் நகு லனைச்சுமந்துகொண்டு விரைவாக உம்மைச்சேர்ந்தவர்களை எதிர்த்து வந்தன. பாரதரே! மேகம்போன்றநிறமுள்ள கறுப்புக்குதிரைகள் பகைவர்களுடையசெய்கையை நினைத்து ஒருவராலும் செய்யமுடியாத யுத்தத்தின்பொருட்டுக் கோபங்கொண்டிருக்கிற உத்தமௌஜஸைச் சுமந்துவந்தன. அவ்வாறே தித்திரிப்பக்ஷிபோல நானாவிதமானநிற முள்ளவையும் வேகத்தில் காற்றுக்கொப்பானவையுமான குதிரைகள் ஸங்குலமான யுத்தத்தில் ஆயுதபாணியான ஸஹதேவனை வகித்தன. தந்தம்போன்றநிறமுடையவைகளும் கறுத்தவாலுள்ளவைகளும் பயங் கரமானவேகமுடையவைகளும் காற்றுப்போன்ற வேகமுடையவைகளு மான குதிரைகள் நரஸ்ரேஷ்டரான யுதிஷ்டிரராஜரைத்தாங்கின. உத்தம மான பொன்னாலலங்கரிக்கப்பட்டவையும் வேகத்தில் காற்றுப்போன்ற வையுமான குதிரைகளோடு எல்லாஸைனிகர்களும், யுதிஷ்டிரருக்கு எதிரில் நின்றார்கள். பாஞ்சாலதேசத்தரசனான துருபதன் பொற்குடை யுள்ளவனாக அந்த எல்லாஸைனிகர்களாலும் நான்குபக்கங்களிலும் காக்கப்பட்டு யுதிஷ்டிரராஜரை அடுத்துநின்றான். சிறந்தவில்லாளி யான துருபதன் நெற்றியில் வெள்ளைச்சுட்டிகளோடுகூடியவைகளும் பொன்மயமான பிடரிமயிர்களுடனும் ரோமங்களுடனும்கூடியவை களும் மஞ்சள்பட்டுக்கொப்பான நிறமுள்ளவைகளும் யுத்தத்தில் எல்லாச்சப்தங்களையும் பொறுக்கின்றவைகளுமான குதிரைகளோடு அரசர்களுடைய மத்தியில் பயமற்றவனாக எதிர்த்துநின்றான். விராடன் அவனை எல்லாமகாரதர்களோடும் சீக்கிரமாகப் பின்தொடர்ந்தான். கேகயர்களும் சிகண்டியும் திருஷ்டகேதுவும் தங்கள்தங்கள்படைகளாற் சூழப்பட்டு மச்சதேசத்தரசனான விராடனைப் பின்தொடர்ந்தார்கள். பகைவரை அழிப்பவனானவிராடனுடைய பாதிரிப்புஷ்பங்களுக்கொப் பான காந்தியையுடைய சிறந்த குதிரைகள் அவனைச்சுமந்துகொண்டு மிகவும் விளங்கின. மஞ்சளுக்கு ஸமமானநிறமுள்ளவைகளும் வேக முள்ளவைகளும் பொன்மாலைகளை அணிந்தவைகளுமான குதிரைகள் விராடராஜகுமாரனான உத்தரனை அதிவேகமாகச்சுமந்து வந்தன. எல் லாரும் பொன்போன்றகாந்தியுள்ளவர்களும் சிவப்பானகொடிமரங்க ளுள்ளவர்களும் ஸுவர்ணமாலையையுடையவர்களும் சௌர்யமுள்ளவர்

க்ளும் [1] யுத்தத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்களும் கவசம்பூண்டவர்களும் ஸகோதரர்களுமான ஐந்துகேகயர்களும் இந்திரகோபமென்னும் பூச்சி நிறமுள்ள குதிரைகளோடு வர்ஷிக்கின்றமேகங்கள்போலக் காணப்பட்டார்கள். சுடப்படாதமண்பாண்டங்கள்போன்ற நிறமுடையவைகளும் தும்புருவினாற்கொடுக்கப்பட்டவைகளுமான திவ்யாச்வங்கள் மகாதேஜஸ்வியும் பாஞ்சாலராஜகுமாரனுமான சிகண்டியைச் சுமந்தன. பாஞ்சாலர்களுள் மகாரதர்கள் பன்னிராயிரம்பேர்கள்; அவர்களுள் ஆறாயிரவர் சிகண்டியைப் பின்தொடர்ந்தார்கள். ஐயா! மான்போன்ற பலவித நிறமுடைய குதிரைகள் உற்சாகத்தோடு துள்ளிக்கொண்டு நரச்ரேஷ்டனான சிசுபாலனுடைய புத்திரனைச் சுமந்தன. சேதிதேசத்துவீரர்களுட்சிறந்தவனும் மிக்கபலத்தோடு தோன்றினவனும் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவனுமான திருஷ்டகேதுவானவன் நானாவிதநிறமுள்ள காம்போஜதேசத்துக்குதிரைகளோடு எதிர்த்துவந்தான். வைக்கோலும் புகையும்போன்றநிறமுள்ளவைகளும் ஸிந்துதேசத்திற்பிறந்தவைகளுமான உத்தமமான குதிரைகள் ஸுகுமாரனும் கேகயதேசத்தரசனுமான பிருஹத்க்ஷத்ரனைச் சீக்கிரமாகத் தாங்கின. நிர்மலமானகண்களுள்ளவைகளும் தாமரைப்புஷ்பம்போன்ற நிறமுடையவைகளும் நன்றாயலங்கரிக்கப்பட்டவைகளுமான பாஹ்லிகதேசத்துக்குதிரைகள் சூரனான ரிக்ஷதேவனென்கிற சிகண்டியினுடையகுமாரனைச் சுமந்து சென்றன. பொன்னாபரணங்களால்மூடப்பட்டவைகளும் வெண்பட்டுக்கு ஸமமான நிறமுடையவைகளும் யுத்தத்தில் நன்றாகப்பழக்கப்பட்டவைகளுமானகுதிரைகள் பகைவர்களை அடக்குகிறவனான ஸேனாபிந்துவை வகித்தன. க்ரௌஞ்சபக்ஷியினுடைய நிறம்போன்ற நிறமுள்ள சிறந்த குதிரைகள் யுத்தகளத்தில் யௌவனமுள்ளவனும் ஸுகுமாரனும் மகாரதிகனுமான காசிதேசத்தரசனாகிய அபிபூவின்குமாரனை வகித்தன. மன்னரே! வெண்மைநிறமுடையவைகளும் கறுத்தகழுத்தையுடையவைகளும் மனம்போன்றவேகமுள்ளவைகளும் ஸாரதியினுடைய இச்சையை அனுஸரிக்கின்றவைகளுமான குதிரைகள் அந்தப் பிரதிவிந்தியனென்ற ராஜகுமாரனை வகித்தன. உளுந்துப்பூவுக்குச்சமமான நிறமுள்ளகுதிரைகள் யுத்தரங்கத்தில் மகாபலமுள்ளவனும் யுத்தவீரர்களுள் தலைவனும் பீமஸேனபுத்திரனுமான அந்தஸுதஸோமனை வகித்தன. கௌரவர்களுடைய உதயேந்துஎன்னும்பெயர்பூண்ட அந்தப்பட்டணத்தில் ஸோமலதையைப்பிழியும்பொழுது ஆயிரம்சந்திரனுக்கொப்பானவனாகத் தோன்றினகாரணத்தினால் அந்தப்பீமகுமாரன் ஸுதஸோமன்

[1] ஒருசொல் விடப்பட்டது.

என்கிற பெயருள்ளவனுடன். காலபுஷ்பம்போலச் சிவப்பும்மஞ்சளு மான நிறமுள்ளவைகளும் பாலஸூரியனைப்போலப் பிரகாசிக்கின்றவை களுமான குதிரைகள் புகழத்தக்க நகுலகுமாரனான சதானீகனை வகித் தன. மரகதவிசேஷத்துக்கொப்பான நிறமுடையகுதிரைகள் தங் கத்தினால் மூடப்பட்டிருக்கிறவார்களோடு யுத்தகளத்தில் புருஷ ஸ்ரேஷ்டனும் திரௌபதிகுமாரனுமான சுருதகர்மாவைத் தாங்கிநின் றன. காடையின் இறகுபோன்றநிறமுள்ள சிறந்தகுதிரைகள் யுத்தத் தில் பார்த்தனுக்குச்சமமானவனும் திரௌபதிகுமாரனும் சாஸ்திரங் களுக்குநிதியாயிருப்பவனுமான சுருதகீர்த்தியைச் சுமந்தன. யுத்தத் தில், கிருஷ்ணனையும் அர்ஜுனனையும்காட்டிலும் அரைமடங்கு அதி கரித்தவனென்று சொல்லப்படுகிறவனான அந்த அபிமன்யுவென்னும் குமாரனை யுத்தகளத்தில் மஞ்சள்நிறமுள்ள குதிரைகள் பொறுத்தன. உத்தமமான தாமரைப்புஷ்பம்போன்ற நிறமுள்ளவைகளும் பருத்த சரீரங்களையுடையவைகளுமான சிறந்த பெரியகுதிரைகள் ஏகாகியாகி உம்மவர்களைவிட்டுப் பாண்டவர்களையடுத்த யுயுத்ஸுவை யுத்தத்தில் வகித்தன. வைக்கோலின் அடித்தண்டுக்குஸமமான நிறமுடையவை களும் நன்கு அலங்கரிக்கப்பட்டவைகளுமான குதிரைகள் மனக்களிப் புடன் மிகநெருங்கியயுத்தத்தில் பலமுள்ளவனான வார்த்தக்ஷேமியைச் சுமந்தன. கறுப்பானகால்களையுடையவைகளும் ஸ்வர்ணத்தினால் சித்திரவேலைசெய்யப்பட்ட கவசங்களுள்ளவைகளும் ஸாரதியின் நோக் கம்போல நடப்பவைகளுமான குதிரைகள் யுத்தகளத்தில் ஸௌசித்தி யென்கிற ராஜகுமாரனை வகித்தன. [1] பொன்னிறமான முதுகுள்ளவை களும் வெண்பட்டுப்போன்றநிறமுள்ளவைகளும் பொன்மாலையணிந்த வைகளும் பழக்கமுள்ளவைகளுமான குதிரைகள் ஸ்ரேணிமானென் பவனை வகித்தன. பொன்மாலைகளணிந்தவைகளும் சௌர்யமுள்ள வைகளும் [2] பொற்சேணங்கட்டினவைகளும் நன்கு அலங்கரிக்கப்பட் டவைகளுமான குதிரைகள், புகழத்தக்கவனும் நரஸ்ரேஷ்டனுமான காசிராஜனைத் தாங்கின. அஸ்திரமந்திரங்களை வெளியிடுகின்ற தனுர் வேதத்திலும் பிராம்மவேதத்திலும் கரைகண்டவனும் எதிர்த்துவரு கின்றவனுமான அந்த ஸத்யத்ருதியை அப்பிரகாசமான சிவப்புநிற முள்ள குதிரைகள் தாங்கின. பாஞ்சாலஸேனைக்குத்தலைவனான எவன் துரோணரைத் தனக்குப்பாகமாகச்செய்துகொண்டானோ அந்தத்திரு

---

[1] 'ருக்மபீட' என்பது மூலம்; 'பொற்கவசம்' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

[2] 'பொன்மயமானமுதுகுள்ளவைகளும்' என்பது பழைய உரை.

ஷ்டத்யும்னனைப் புறாப்போன்ற நிறமுள்ளகுதிரைகள் தாங்கின. அந்தத்திருஷ்டத்யும்னனை ஸத்யத்ருதியும் யுத்தத்தில் கொடியமதங்கொண்டவனான ஸௌசித்தியும் ச்ரேணிமானும் வஸுதானனும் காசிராஜனுடையகுமாரனான அபிபூவும் பின்தொடர்ந்தார்கள். பூட்டப்பட்டவைகளும் வேகமுடையவைகளும் தங்கமயமானமாலைகளையுடையவைகளும் சிறந்தவைகளுமான காம்போஜதேசத்துக்குதிரைகளாலே சத்துருக்களுடையஸேனையைப் பயப்படும்படி செய்கின்றவர்களும் யமனுக்கும்குபேரனுக்கும் ஒப்பானவர்களும் மிக்கஅழகுள்ள தலையுடையவர்களும் ஆயுதங்களைக்கையில்பிடித்தவர்களும் ஸ்வர்ணமயமான தேர்களையும் கொடிமரங்களையுமுடையவர்களும் காம்போஜதேசவாஸிகளுமான ஆறாயிரம் பிரபத்ரகர்கள் பலவிதவர்ணமுள்ள சிறந்தகுதிரைகளோடுகூடினவர்களாக விற்களைவளைத்து அம்புக்கூட்டங்களால் பகைவர்களைச் சிதறிவிழும்படி அடித்துக்கொண்டு ஒரேகாலத்தில் உயிரைவிடத்துணிந்தவர்களாகி த்ருஷ்டத்யும்னனைப் பின்தொடர்ந்தார்கள். மஞ்சள்கலந்த வெண்ணிறமுடையவைகளும் தங்கமயமான சிறந்தமாலையை அணிந்தவைகளும் தளராத மனத்தையுடையவைகளுமான சிறந்த குதிரைகள் சேகிதானனைத் தாங்கின. [1] குந்திபோஜன் இந்திராயுதத்துக்குஸமமான நிறமுள்ள உத்தமமான குதிரைகளோடு வந்தான். ஸவ்யஸாசிக்கு மாதுலனான புருஜித்தும் நல்லகுதிரைகளோடு வந்தான். வானம்போன்ற நிறமுடையவைகளும் நட்சத்திரங்களால் சித்திரிக்கப்பட்டவைபோன்றவைகளுமான அந்தக்குதிரைகள் யுத்தபூமியில் ரோசமானனென்கிறஅரசனை வகித்தன. நானாவிதவர்ணமுடையவைகளும் கறுத்தகால்களையுடையவைகளும் ஸ்வர்ணமயமானவலைபோன்றவிரிப்புள்ளவைகளும் சிறந்தவைகளுமான குதிரைகள், ஜராஸந்தனுடைய குமாரனான ஸஹதேவனைச் சுமந்தன. தாமரைத்தண்டையொத்தநிறமுடையவையும் வேகத்தில் பருந்துக்குஒப்பானவைகளுமான விசித்திரமான சிறந்தகுதிரைகள் ஸுதர்மாவைச் சுமந்தன. முயல்ரத்தத்துக்கு ஸமமான நிறமுள்ளவைகளும் வெண்மையாக மேல்நோக்கிவந்திருக்கும்ரோமமுள்ளவைகளுமான குதிரைகள் பாஞ்சாலதேசத்தில் பிறந்தவனும் கோபதியினுடையகுமாரனுமான ஸிம்மஸேனனைத் தாங்கின. புருஷச்ரேஷ்டனும் பாஞ்சாலர்களுள் பிரசித்திபெற்றவனுமான ஜனமேஜயனுடைய சிறந்தகுதிரைகள் எள்ளுப்பூவுக்குச்சமமான நிறமுள்ளவைகளாயிருந்தன. உளுந்து நிறமுள்ளவைகளும் வேகமுள்ளவைகளும் பெரியவைகளும் பொன்மாலைகளை அணிந்த

[1] 'குந்திபோஜனென்னும்புருஜித்' என்பது இங்கிலிஷ்மொழிபெயர்ப்பு

வைகளும் தயிர்நிறமானமுதுகுகளையுடையவைகளும் பற்பலவித மான முகமுள்ளவைகளுமான குதிரைகள் பாஞ்சால்யனை விரைவாக வகித்தன. சௌரியமுள்ளவைகளும் அழகியதலையுள்ளவைகளும் நாணல்தண்டுக்கொப்பானவைகளும் தாமரைப்புஷ்பத்தின் கிஞ்சல்கம் போன்றநிறமுடையவைகளுமான குதிரைகள் தண்டதாரனைச் சுமந் தன. கழுதைநிறம்போலச் சிவப்பாகவும் மலினமாகவுமிருக்கின்றநிற முள்ளவைகளும் முதுகில் எலியின் நிறம்போல மங்கலானவெண்மை நிறமுள்ளவைகளும் துள்ளுகின்றவைகளுமான குதிரைகள் மிக்க முயற்சியுள்ளவைகளாக வியாக்கிரதத்தனைத் தாங்கின. கறுத்ததலை யையுடையவைகளும் பற்பலநிறமுடையவைகளும் நானாவிதமானமாலை களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான குதிரைகள் புருஷர்களுள் சிறந்த பாஞ்சாலராஜகுமாரனை ஸுதன்வாவை நன்றாகவகித்தன. இந்திரனுடைய வஜ்ராயுதத்துக்குச்சமமான ஸ்பர்சமுள்ளவைகளும் இந்திரகோபமென்னும் பூச்சிநிறமுள்ளவைகளும் சரீரத்தில்விசித்ரமான புள்ளிகளுள்ளவைகளும் ஆச்சர்யகரமானதோற்றத்தையுடையவைகளு மானகுதிரைகள் சித்ராயுதனைச் சுமந்தன. பொன்மாலைகளை அணிந்த வைகளும் சக்கரவாகப்புள்ளின் நிறம்போன்ற நிறமுள்ளவயிற்றை யுடையவைகளுமான குதிரைகள் கோஸலதேசத்துராஜகுமாரனாகிய ஸுக்ஷத்திரனை வகித்தன. பற்பலநிறமுள்ளவைகளும் பெரியஉருவ முள்ளவைகளும் பழக்கப்பட்டவைகளும் ஸுவர்ணமாலைகளை அணிந்த வைகளும் உயர்ந்தவைகளும் மங்களகரமாயுள்ளவைகளுமான குதிரை கள் யுத்தத்தில் ஸத்தியத்ருதியையும் க்ஷேமியையும் பொறுத்தன. சுக்ல னென்பவன், முழுதும் ஒரேவெண்ணிறமான கொடியோடும் கவசத்தோ டும் குதிரைகளோடும் வில்லோடும் (யுத்தத்துக்குத்) திரும்பினான். கடற் கரையில்பிறந்தவைகளும் சந்திரனைப்போன்ற நிறமுள்ளவைகளுமான குதிரைகள் ஸமுத்ரஸேனபுத்ரனும் பயங்கரமானசக்தியுள்ளவனுமான சந்திரஸேனனைத்தாங்கின. கருநெய்தல்போன்ற நிறமுள்ளவைகளும் பொன்னாலலங்கரிக்கப்பட்டவைகளும் விசித்திரமானமாலைகளை அணிந்த வைகளுமானகுதிரைகள், யுத்தகளத்தில் சிபியினுடையகுமாரனை சித் ரரதனைத்தாங்கின. கலாயபுஷ்பம்போலக் கலந்தகறுப்புநிறமுள்ளவைக ளும் வெண்மையாயும்சிவப்பாயுமுள்ள மயிர்வரிசைகளையுடையவைகளு மான சிறந்தகுதிரைகள் யுத்தத்தில் கெட்டமதத்தோடுகூடின ரதஸே னனை நன்றாகத்தாங்கின. எல்லாமனிதர்களையுங்காட்டிலும் மிக்கசௌர்ய முள்ள அரசனென்று. சொல்லப்படுகின்றவனும் படச்சரர்களென்கிற அஸுரர்களைக்கொன்றவனுமான சிறந்தஅரசனைக் கிளியின்நிறம்

போன்றநிறமுடைய குதிரைகள் தாங்கின. விசித்திரமானமாலைகளையணி ந்தவனும் சித்திரமானகவசங்களும் ஆயுதங்களும் கொடியுமுள்ளவனு மானசித்ராயுதனைப் பலாசபுஷ்பங்களுக்கொப்பான நிறமுள்ள உத்தம மான அசுவங்கள் தாங்கின. நீலன் ஒரேகறுப்பாயிருக்கின்ற கொடிமரத் தோடும் கவசத்தோடும் வில்லோடும் தேரில்பூட்டப்பட்டுள்ளகுதிரைக ளோடும் எதிர்த்துவந்தான். சித்ரனென்பவன் பற்பலரூபமுள்ளவை களும் ரத்னங்களையடையாளமாகக்கொண்டவைகளும் ஆச்சர்யகரமா யுள்ளவைகளுமான வரூதத்தோடும் ரதத்தோடும் வில்லோடும் குதிரை களோடும் கொடிகளோடும் கொடிச்சீலைகளோடும் எதிர்த்துவந்தான். தாமரைப்பூவுக்குச்சமமான நிறமுள்ள சிறந்தகுதிரைகள், ரோசமான னுடையகுமாரனை ஹேமவர்ணனைத்தாங்கின. யுத்தத்தில் ஸாமர்த்திய முள்ளவைகளும் மங்களகரமான செய்கையுள்ளவைகளும் நாணல்தண் டுக்குஸமமான முதுகெலும்பையுடையவைகளும் வெண்மையான அண் டங்களையுடையவைகளும்கோழிமுட்டைபோலப்பிரகாசிக்கின்றவைகளு மானகுதிரைகள் தண்டகேதுவை வகித்தன. கேசவனாலே அரசனான தன் பிதாவும் யுத்தத்தில்கொல்லப்பட்டுப் பிறகு பாண்டியர்களுடைய[1]கபாட புரமும்பிளக்கப்பட்டு உறவினர்களும் தங்கள்தங்கள்ஸ்தானத்தைவிட்டு ஓடிப்போனஸமயத்தில், பீஷ்மரிடத்திலிருந்தும் அவ்வாறே துரோண ரிடத்தினின்றும் பரசுராமரிடத்தினின்றும் கிருபாசாரியரிடத்தினின் றும் அஸ்திரங்களைப்பெற்று அந்த அஸ்திரங்களாலே ருக்மிகர்ணன், அர்ஜுனன், அச்சுதன் இவர்களோடு ஒப்புமையைப்பெற்றுத் துவாரகை யை நாசம்பண்ணுவதற்கும் பூமிமுழுதையும் ஜயிப்பதற்கும் விரும்பி னவனும் கற்றறிந்தவர்களான ஸ்நேகிதர்களால் நன்மையைக்கருதி அவ் விதமுயற்சியிலிருந்து தடுக்கப்பட்டுத் தொடர்ச்சியானவைரத்தை விட்டுத் தன்ராஜ்யத்தைஆண்டுவருகிறவனும் பலசாலியுமான ஸாகரத் வஜபாண்டியன் சந்திரகிரணங்கள்போன்ற நிறமுள்ளவைகளும் வைடூர் யமிழைத்த விரிப்புக்களால் மூடப்பட்டவைகளுமான குதிரைகளோடு பராக்கிரமமென்கிறபொருளைக்கைப்பற்றித் திவ்யமானதனுஸை நாணே ற்றிசெய்துகொண்டு துரோணரை எதிர்த்துவந்தான். பித்தளைபோன்ற நிறமுடையகுதிரைகள், பாண்டியனைப் பின்தொடர்ந்துவருகின்ற லக்ஷத்துநாற்பதினாயிரம் சிறந்ததேராளிகளைத் தாங்கின. நானாவித வர்ணமுள்ள உருவமுடையவைகளும் பற்பலமாதிரியான முகத்தை யுடையவைகளுமான குதிரைகள், ரதத்தினுடையசக்கரத்தையே கொடி

[1] தமிழ்நூல்களில் பாண்டியனுக்கு இந்தக் கபாடபுரம் ராஜதானியாக இருந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

யாகக்கொண்டவீரனை கடோத்கசனைத் தாங்கின. ஒன்றுசேர்ந்தவர்களானகௌரவர்களுடைய அபிப்பிராயங்களை அலக்ஷ்யஞ்செய்து எல்லா இஷ்டங்களையும்விட்டு ஒருவனாகவே பக்தியோடு யுதிஷ்டிரரை அடைந்தவனும் சிவப்பானகண்களையுடையவனும் மிக்கபுஜபலமுடையவனும் மகரத்தை த்வஜமாகக்கொண்டவனும் பொற்றேரிலிருக்கின்றவனுமான அந்தயுயுத்ஸுவை அதிகபலமுள்ளவைகளும் பருத்தசரீரத்தையுடையவைகளுமான குதிரைகள் தாங்கின. தர்மங்களையறிந்தவரும் யுத்தாங்கத்தில் நிற்கின்றவரும் ராஜஶ்ரேஷ்டருமான யுதிஷ்டிரரைப் பொன்னிறமுள்ள சிறந்தகுதிரைகள் நான்குபக்கத்திலும் பின்தொடர்ந்து சென்றன. தேவதைபோன்றரூபத்தையுடையவர்களும் அனேகர்களுமான ப்ரபத்ரகர்கள் பலவிதநிறமுள்ள அனேக உத்தமஜாதிக்குதிரைகளோடு யுத்தத்தின்பொருட்டுத் திரும்பினார்கள். ராஜஶ்ரேஷ்டரே! ஸுவர்ணமயமானகொடிகளுள்ளவர்களான அந்தயுத்தவீரர்கள், பீமஸேனனோடுகூடி முயற்சியுள்ளவர்களாக, இந்திரனோடுகூடின தேவர்கள் போலக் காணப்பட்டார்கள். ஒன்றுகூடியிருக்கின்ற அந்தஎல்லா வீரர்களையும்காட்டிலும் த்ருஷ்டத்யும்னன் அதிகமாக விளங்கினான். துரோணரும் எல்லாஸைனிகர்களையும்விட அதிகமாகப் பிரகாசித்தார். மகாராஜரே! கிருஷ்ணாஜினத்தினால் மேலேமூடப்பட்டதும் மங்களகரமானதும் ஸ்வர்ணமயமானதும் கமண்டலுவடிவமுள்ளதுமான அவருடையகொடியானது மிகவும் விளங்கியது. வேந்தரே! வைடூர்யரத்னத்தால் கண்களையுடையதும் பிரகாசிக்கின்றதுமான மகாஸிம்மஸ்வரூபமான பீமஸேனனுடையத்வஜத்தை யான்கண்டேன். மிக்கதேஜஸையுடையவரும் கௌரவர்களுக்கு அரசருமான யுதிஷ்டிரருக்குக் கொடியாயிருக்கின்றதும் கிரஹங்களுடைய கூட்டங்களோடுகூடியதும் பொன்மயமாயிருப்பதுமான சந்திரனை யான்கண்டேன். அந்தயுத்தகளத்தில் யந்திரத்தினாலடிக்கப்பட்டு நல்லொலியுள்ளவைகளும் ஸந்தோஷத்தைவிருத்திபண்ணுகின்றவைகளுமான நந்தம் உபநந்தம் என்றுபெயர் கொண்ட திவ்வியமான இரண்டுபெரிய மிருதங்கங்களையும் நான்கண்டேன். பொன்மயமான முதுகுள்ளதும் அத்யுக்ரமானதும் பயங்கரமாயிருப்பதுமான நகுலனுடையரதத்திலுள்ள சரபரூபமான பெரியத்வஜத்தையும் நாங்கள்கண்டோம். வெள்ளிமயமானதும் மிக்ககாந்தியுள்ளதும் வீரகண்டைகளும் பதாகைகளுமுள்ளதும் பகைவர்களுக்குச் சோகத்தைவிருத்திபண்ணக்கூடியதும் பகைவர்களால் அவமதிக்கமுடியாததுமான ஹம்ஸமானது ஸகதேவனுடையத்வஜத்தில் காணப்பட்டது. த்ரௌபதியின்குமாரர்களான ஐவர்களுடைய துவஜங்களிலும் தர்

மாராஜன், மாருதன், இந்திரன், மஹாத்மாக்களான அஸ்வினிதேவர்கள இவர்களுடையப்ரதிமைகளே பூஷணமாயிருந்தன. மன்னரே! குமாரனுன அபிமன்யுவினுடையரதத்தில் புடமிடப்பட்டதங்கத்தினுல் ஜ்வலிக்கின்ற பொன்மயமான சார்ங்கபக்ஷியானது சிறந்தத்வஜமாகவிளங்கிற்று. ராஜஸ்ரேஷ்டரே! கடோத்கசனுடையத்வஜத்தில் கழுகு அதிகமாகவிளங்கிற்று. அவனுடையகுதிரைகள் முற்காலத்தில் ராவணனுடைய குதிரைகள்போல நினைத்தபடி ஸஞ்சரிக்கின்றனவாயிருந்தன. தர்மாராஜரான யுதிஷ்டிரரிடத்தில் மஹேந்திரனுலேகொடுக்கப்பட்ட திவ்யமானதனுஸானது விளங்கிற்று. மன்னரே! பீமஸேனனிடத்தில் வாயுவைத்தேவதையாகக்கொண்ட அத்புதமானவில்லானது இருந்தது. மூவுலகங்களையும் ரக்ஷிப்பதற்காக ப்ரம்மதேவனுல் உண்டுபண்ணப்பட்டதும் முடிந்துப்போகாத ஆயுதமுமான அந்தச்சிறந்தவில்லானது அர்ஜுனனுடையபிரயோஜனத்தின்பொருட்டு விளங்கியது. பாரதரே! நகுலனுக்கு விஷ்ணுவைத் தேவதையாகக்கொண்டதனுஸும், ஸஹதேவனுக்கு அஸ்வினிதேவர்களைத் தேவதையாகக்கொண்டதனுஸும், கடோத்கசனுக்குப் பயங்கரமும் அத்புதமுமானதும் புலஸ்த்யரைத் தேவதையாகக்கொண்டதுமான தனுஸும், த்ரௌபதீகுமாரர்களான ஐவர்களுக்கும் முறையே [1] ருத்திரன், அக்னி, குபேரன், யமன், [2] கிரிசன் இவர்களைத்தேவதைகளாகக்கொண்ட உத்தமமான விற்களும் இருந்தன. ரோஹிணீபுத்திரரான பலராமர் தாம்பெற்றிருந்த ருத்திரனைத்தேவதையாகக்கொண்ட உத்தமமான சிறந்ததனுஸை மிக்கவலிமையுள்ளவனுன அபிமன்யுவுக்கு ஸந்தோஷத்துடன்கொடுத்தார். பொன்னுலலங்கரிக்கப்பட்ட பலவிதமான இந்தத்வஜங்களும் இன்னும் மற்றுமுள்ளசூரர்களுடைய அனேகமானகொடிகளும் அந்தயுத்தகளத்தில் பகைவர்களுக்குத் துக்கத்தைவிருத்திபண்ணுவனவாகவே காணப்பட்டன. மகாராஜரே! நெருக்கமானத்வஜங்களுள்ளதும் உத்தமவீரர்களால் அடையப்பட்டதுமான அந்தத்துரோணருடைய ஸேனையானது படத்தில் எழுதப்பட்ட சித்திரம்போலிருந்தது. அரசரே! யுத்தகளத்தில் அப்பொழுது துரோணரைக்குறித்து யுத்தத்திற்காக எதிர்த்துவருகின்றவீரர்களுடைய பெயர்களும் கோத்திரங்களும் ஸ்வயம்வரஸபையில்போலக் கேட்கப்பட்டன" என்றான்.

---

[1] [2] அதிகாரபேதமுள்ள மூர்த்திகள.

## இருபத்துநான்காவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் தன்புத்திரர்களைக்குறித்துத் துக்கித்ததும் ஸஞ்சயனை யுத்தவிஷயத்தைச்சொல்லக் கட்டளையிட்டதும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! விருகோதரனைத் தலைமையாகக் கொண்டு யுத்தம்செய்யவந்த இந்த அரசர்கள் தேவர்களுடையசேனையையும் துன்பமடையும்படி செய்வார்கள். மனிதன் அதிர்ஷ்டங்களுடன் கூடியவனாகப் பிறக்கிறான். அந்த அதிர்ஷ்டத்திலேயே பற்பலவிதமான எல்லாப் பிரயோஜனங்களும் காணப்படுகின்றன. யுதிஷ்டிரன் நாட்டை விட்டுத்துரத்தப்பட்டு நீண்டகாலம் சடையும் மான்தோலும்தரித்து வனத்தில் திரிந்துகொண்டிருந்தான்; பின்பு உலகத்தாலறியப்படவுமில்லை. அந்தயுதிஷ்டிரனே என்பிள்ளைகளுடையநாசத்தின்பொருட்டுப் பெரியசேனையையும் யுத்தகளத்திற்குத் திருப்பிக்கொண்டு வந்துவிட்டான். (இது) தெய்வச்செயலேதவிர வேறென்ன? மனிதன் பாக்யத் தோடுசேர்ந்தே பிறக்கிறானென்பது நிச்சயம். அந்தமனிதன் தான் விரும்பாமலே அந்தப்பாக்யத்தினால் இழுக்கப்படுகிறான். சூதாட்டமாகிறவியஸனத்தையடைந்து யுதிஷ்டிரன் துன்பப்படுத்தப்பட்டானல்லவா? அந்தயுதிஷ்டிரனே மறுபடியும் அதிர்ஷ்டத்தினால் ஸகாயர்களைப் பெற்றான். ஸூத! முற்காலத்தில் புத்தியில்லாதவனான துர்யோதனன் என்னைநோக்கி, 'ஐயா! கேகயதேசத்தார்களிற்பாதியும் காசிதேசத்தார்களும் கோஸலதேசத்தார்களும் சேதிதேசத்தார்களில் பாதியும் இன்னும்மற்றுமுள்ள நாட்டார்களும் என்னையே அடைந்துவிட்டனர். எனக்கு மிகுதியான பூமி யிருக்கிறது. அவ்வளவு தர்மபுத்திரனுக்கில்லை' என்றுசொன்னான். அந்த ஸேனாஸமூகத்தினிடையில் நன்றாகக் காக்கப்பட்ட துரோணர் போர்க்களத்தில் த்ருஷ்டத்யும்னனால் கொல்லப்பட்டார். அதிர்ஷ்டத்தைக்காட்டிலும் வேறென்னவிருக்கின்றது? மிக்ககைவன்மையுள்ளவரும் எப்பொழுதும் போரைக்கொண்டாடுகிறவரும் எல்லாஅஸ்திரவித்தைகளின் கரையையும் கண்டவருமான துரோணரை அரசர்களினிடையில் எவ்விதமாக மிருத்யுவானவன் அடைந்தான்? மிக்ககஷ்டத்தையடைந்தநான் மிக்கமோகத்தையடைந்தேன். பீஷ்மரும் துரோணரும் கொல்லப்பட்டார்களென்பதைக்கேட்டு நான் உயிரோடிருப்பதற்கு விரும்பவில்லை. அப்பா! ஸூத! என்னைப் புத்திரனிடத்தில் பேராசையுள்ளவனென்று நன்கு அறிந்து விதுரன்

சொன்னவையெல்லாம் என்னாலும் துர்யோதனனாலும் அடையப்பட்டன. அப்பா! குரூரனான துரியோதனனைமாத்திரம் இழந்து மற்றப்புத்திரர்களை நிச்சமாக்க விரும்புவேனாகில் எல்லாரும் மாணமடையமாட்டார்கள். எந்தமனிதன் தர்மத்தைவிட்டுப் பொருளைப் பிரதானமாகக்கொள்வனோ அவன் இவ்வுலகத்தில் குறைவை அடைகிறான்; அல்பத்தன்மையையும் அடைகிறான். ஸஞ்சய! இப்பொழுதும் நாசம்பண்ணப்பட்ட இந்தத்தேசமானது, ஸ்ரேஷ்டரான துரோணர் கொல்லப்பட்டுங்கூட மிகுந்திருக்கப்போகிறதாக நான் எண்ணவில்லை. பொறுமையுடையவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான எவர்களை எப்பொழுதும் அண்டிப்பிழைக்கிறோமோ அப்படிப்பட்ட பொறுப்புள்ள துரோணரும் பீஷ்மரும் காலஞ்சென்றபிறகு, (நம்மவர்கள்) எவ்விதமாக மிகுந்திருப்பார்கள்? எவ்வாறு யுத்தம்நடந்ததென்பதை விளக்கமாகவே எனக்குச்சொல். எவர்கள் யுத்தஞ்செய்தார்கள்? எவர்கள் தடுத்தார்கள்? எந்த அற்பர்கள் பயத்தால் ஓடினார்கள்? ரதிகஸ்ரேஷ்டனான தனஞ்சயன் எவைகளைச்செய்தானோ அதை அதையும் எனக்குச்சொல். சத்துருவாயிருக்கின்ற அந்த அர்ஜுனனிடத்தினின்றும் அந்த விருகோதானிடத்தினின்றும் நமக்கு அதிகபயமுண்டு. ஸஞ்சய! பாண்டவர்கள் (யுத்தத்திற்குத்) திரும்பிவந்தவுடன் மிகுந்திருக்கிற என்னுடைய ஸைனியத்திற்கு மிகவும்பயங்கரமாக அனர்த்தம் எவ்விதம் விளைந்ததோ அதையும் எனக்குச்சொல். அப்பா! அப்பொழுது (பகைவர்கள்) திரும்பிவந்திருக்குங்காலத்தில் உங்களுடையமனம் எவ்விதமிருந்தது? நம்மைச்சேர்ந்தவர்களுள் சூரர்களானஎவர்கள், அங்கே அவர்களை எதிர்த்தனர்?" என்று வினவினான்.

---

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி)

(த்வந்த்வ யுத்தவர்ணனை)

ஸஞ்சயன், "பாண்டவர்கள் யுத்தத்திற்குத் திரும்பிவந்தவுடன், மேகங்களாலே ஸூர்யன் மறைக்கப்படுவதுபோல அந்தப்பாண்டவவீரர்களாலே துரோணர்மறைக்கப்படுவதுகண்டு எங்களுக்குப் பெரிய பயமுண்டாயிற்று. மேலும், அவர்களால் மேலேஎழுப்பிவிடப்பட்ட அதிகமான தூளியானது உம்முடைய சேனையை மறைத்துவிட்டது. பிறகு, பார்வையானதுதடைப்பட்டபொழுது துரோணரை மாண்டவ

ராகவே நாங்கள் எண்ணினோம். குரூரமான காரியத்தைச்செய்ய எண்ணங்கொண்டவர்களும் பெரியவில்லையுடையவர்களும் சூரர்களுமான அந்தப்பாண்டவவீரர்களைக்கண்டு துர்யோதனன்,'அரசர்களே! நீங்கள் உங்களுடைய ஆற்றலுக்கும் ஊக்கத்துக்கும் ஆண்மைக்கும்தக்கபடி பாண்டவர்களுடையசேனையைத் தகுந்தஉபாயத்தோடு தடுத்து யுத்தம்செய்யுங்கள்' என்று சொல்லிச் சீக்கிரமாகத் தன்சேனையை ஏவினான். பிறகு, உம்முடையகுமாரனான துர்மர்ஷணன், தூரத்தில் பீமஸேனனைக்கண்டு துரோணருடைய உயிரைக்காப்பாற்ற விரும்பினவனாக (அவன்மீது) அம்புகளை இறைத்துக்கொண்டு எதிர்த்துவந்து யுத்தகளத்தில் யமன்போலக் கோபங்கொண்டு அம்புகளாலே அவனையும் மூடினான். அந்தத் துர்மர்ஷணனையும் பீமன் அம்புகளால் துன்பமடையும்படி செய்தான். அப்பொழுது கைகலந்த பெரியயுத்தம் நடந்தது. கற்றறிந்தவர்களும் அடிக்கும்திறமையுள்ளவர்களுமான அந்தச்சூரர்கள் அரசனான துரியோதனனால் கட்டளையிடப்பட்டு ராஜ்யத்தையும் மரணபயத்தையும்விட்டு யுத்தபூமியில் சத்துருக்களை எதிர்த்துநின்றார்கள். ஓ! அரசரே! க்ருதவர்மாவானவன், துரோணரை எதிர்க்க எண்ணங்கொண்டுவருகின்றவனும் சௌர்யமுடையவனும் யுத்தத்தில் விளங்குகின்றவனும் சினியினுடைய பௌத்ரனுமான ஸாத்யகியைத் தடுத்தான். கோபங்கொண்டவனும் சினியின்பேரனுமான ஸாத்யகி, கோபங்கொண்ட அந்தக்ருதவர்மாவைப் பாணஸமூகங்களாலே தடுத்தான். மதங்கொண்டயானை மதங்கொண்டயானையை எதிர்ப்பதுபோல, கிருதவர்மாவும், ஸாத்யகியை எதிர்த்தான். பயங்கரமானவில்லையுடைய ஸிந்துராஜனை ஜயத்ரதன், முயற்சியுள்ளவனாகவருகின்ற மகாவில்லாளியான க்ஷத்ரவர்மாவைக் கூர்மையான அம்புகளாலே துரோணரிடத்தில் செல்லவொட்டாமல் தடுத்தான். க்ஷத்ரவர்மாவானவன் ஸிந்துராஜனுடையகொடியையும் வில்லையும் அறுத்துக் கோபங்கொண்டு பத்துக்கணைகளாலே எல்லாமர்மஸ்தானங்களிலும் அடித்தான். பிறகு, ஸைந்தவனானவன் கைத்தேர்ச்சியுள்ளவன்போல வேறுவில்லையெடுத்து ரணகளத்தில் முழுதும் இரும்பினாற்செய்த அம்புகளாலே க்ஷத்ரவர்மாவை அடித்தான். பாண்டவர்களின் நன்மைக்காக முயற்சிசெய்பவனும் மகாரதனும் பரதகுலத்தில் தோன்றியவனும் சூரனுமானயுயுத்ஸுவை ஸுபாகு முயற்சியோடு துரோணரிடத்தினின்று தடுத்தான். யுயுத்ஸு, பிரயோகம்செய்கின்ற ஸுபாகுவினுடைய வில்லோடும் அம்புகளோடுங் கூடியவைகளும் பரிகாயுதம்போன்றவைகளுமான இரண்டுகைகளையும் அராவித் தலைவந்தவைகளான இரண்டுபாணங்களால் வெட்டினான்.

பாண்டவர்களுள் ஸ்ரேஷ்டரும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரராஜரை மத்ரராஜனுனசல்யன், பொங்கிவருகின்ற ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோலத் தடுத்தான். தர்மராஜர் மர்மஸ்தானங்களைப்பிளக்கின்ற அனேகபாணங்களை அவன்மீது இறைத்தார். மத்ரராஜனுனவன் அறுபத்துநான்கு பாணங்களாலே அந்தத் தர்மபுத்திரரை அடித்து அதிகமாக ஸிம்மநாதஞ்செய்தான். பாண்டவர்களுள் மூத்தவரான தர்மராஜர் அடிக்கடி ஸிம்மநாதஞ்செய்கின்ற மத்ரதேசத்தரசனுடைய கொடிமரத்தையும் வில்லையும் இரண்டுபாணங்களாலே அறுத்தார். பிறகு, ஜனங்கள் உரக்கச்சப்தித்தார்கள். அவ்வாறே பாஹ்லிகதேசத்தரசனுனவன், சேனையோடு சேர்ந்து, ஸேனையோடுகூடி ஓடிவருகின்ற துருபதராஜனை அம்புகளால் தடுத்தான். ஸேனையையுடையவர்களும் வயதில்முதிர்ந்தவர்களுமான அவ்விருவருக்கும் மதப்பெருக்குள்ளவைகளும் பெரியயூதபதிகளுமான இரண்டு யானைகளுக்கு யுத்தம்நேருவதுபோலக் கோரமான அவ்விதயுத்தம் நடந்தது. ஸைன்யங்களையுடையவர்களும் அவந்திதேசத்தரசர்களுமான விந்தன் அநுவிந்தன் இருவரும், இந்திரனும் அக்னியும் எவ்வாறு பலியை முற்காலத்தில் எதிர்த்தார்களோ அவ்வாறே ஸேனையுடன்கூடின மத்ஸ்யதேசாதிபதியான விராடனை எதிர்த்தார்கள். மத்ஸ்யர்களுக்குக் கேகயர்களுடன் போர்நேர்ந்தது. அதில் குதிரைகளும் ரதிகர்களும் யானைகளும் பயமற்று மிகநெருங்கி யுத்தம் செய்தார்கள். அது தேவாஸுரயுத்தத்திற்கொப்பானதாக இருந்தது. பாணஸமூகங்களைப் பிரயோகம்செய்துகொண்டு செல்லுகின்ற நகுலகுமாரனை சதானீகனை ஸபாபதியென்று (மறுபெயருள்ள) பூதகர்மாவானவன் துரோணரிடத்தினின்றும் தடுத்தான். பிறகு, நகுலபுத்ரனை சதானீகன் நன்குதீட்டப்பட்டுக் கூர்மையுள்ள மூன்று அர்த்தசந்திரபாணங்களாலே யுத்தகளத்தில் பூதகர்மாவைக் கைகளையும்தலையையும் இழந்தவனாகச் செய்தான். சௌர்யமுள்ளவனும் பாணசமூகங்களுள்ளவனும் துரோணரைநோக்கிவருகின்ற வீரனுமான [1] ஸுதஸோமனைச் சால்வன் அம்புகளால்தடுத்தான். பயங்கரமானரதமுள்ளவனான அந்தஸுதஸோமன் இரும்பினாலானவையும் தீட்டப்பட்டவையுமான ஆறுபாணங்களாலே சால்வனைக் குதிரைகளோடும் சாரதியோடும் யமலோகத்துக்கு அனுப்பினான். மகாராஜரே! மயிலுக்கொப்பான நிறமுள்ளகுதிரைகளோடு யுத்தத்திற்குவருகின்ற உம்முடையபௌத்ரனை ஸ்ருதகீர்த்தியைச் சித்ரஸேனன் தடுத்தான். தன்பிதாவுக்குச் சகோதரமுறையிலிருக்கின்ற அந்

---

[1] ஒருசொல் விடப்பட்டது.

தச்சித்ரஸேனனை அர்ஜுனகுமாரனானவன் அம்புகளாலே ஒளியை இழந்தவனாகச்செய்தான். சித்ரஸேனன், த்ரௌபதீபுத்ரனை அம்புகளால் நன்றாகமறைத்தான். அம்புக்கூட்டங்களையிறைக்கின்றவனும், மதங்கொண்டிருக்கிறயானைபோல் (யுத்தத்திற்கு) வருகின்றவனுமான ஸ்ருதகர்மாவைத் துச்சாஸனகுமாரன் தடுத்தான். ஜயிக்கமுடியாதவர்களும் உமக்குப்பேரர்களுமான அவ்விருவரும் ஒருவனையொருவன்கொல்ல விரும்பித் தன் தன் தகப்பன்மார்களுடைய காரியஸித்தியின்பொருட்டுக் கடும்போர்செய்தார்கள். மகாயுத்தத்தில் முதலில்நிற்கின்ற அந்தப் பிரதிவிந்தியனைக்கண்டு, அஸ்வத்தாமா தமது பிதாவான துரோணருக்குக் கௌரவத்தைச்செய்துகொண்டு, பாணங்களால் நன்றாகத்தடுத்தார். தம்பிதாவைக் காக்கும்விஷயத்தில் உறுதியாய்நிற்பவரும் ஸிம்மத்தினுடையவாலை த்வஜமாகக்கொண்டவரும் கோபமுள்ளவருமான அந்த அஸ்வத்தாமாவைப் பிரதிவிந்தியன் கூர்மையானஅம்புகளாலே திருப்பியடித்தான். பயிர்செய்பவன் விதைவிதைக்கக்கூடியகாலத்தில் விதைகளைவிதைப்பதுபோல அஸ்வத்தாமா பிரதிவிந்தியன்மீது பாணமழைகளைப்பொழிந்தார். அரசரே! இரண்டுசேனைகளிலும் மிகுந்த சூரனென்று கருதப்பட்டவனும் [1] பட்சரர்களைக்கொன்றவனுமான அந்தச்சூரனை லக்ஷ்மணன் தடுத்தான். பாரதரே! அவன் லக்ஷ்மணனுடையவில்லையும் கொடியையும் அறுத்து அவன்மீது அம்புமழைகளைப்பொழிந்துகொண்டு மிகவும்பிரகாசித்தான். பிறகு, அர்ஜுனகுமாரனை அபிமன்யுவானவன், குரூரமானகாரியங்களைச்செய்கின்றவனும் விசித்திரமாகப்போர்புரிகிறவனும் திறமையுள்ளவனும் சௌர்யமுடையவனுமான லக்ஷ்மணனையெதிர்த்து யுத்தஞ்செய்தான். கேட்கிறவர்களுக்கும் பார்க்கிறவர்களுக்கும் மிக்கபிரீதியை உண்டுபண்ணுகிறதும் நெருங்கினதுமான அந்தயுத்தமானது மிக்கவலிமையுள்ளவர்களான அவ்விருவர்களுக்கும் உண்டாயிற்று. மிகக்கற்றறிந்தவனும் யுவாவுமான விகர்ணனோ, எதிர்த்துவருகின்றவனும் யௌவனமுடையவனும் யாகஸேனகுமாரனுமான சிகண்டியை யுத்தத்தில் எதிர்த்தான். பிறகு, சிகண்டியானவன் அந்தவிகர்ணனை அம்புக்கூட்டத்தினால் மூடினான். பலமுள்ளவனான உம்முடையகுமாரன் அந்தப் பாணசமூகத்தை உதறியெறிந்து பிரகாசித்தான். அங்கதன் யுத்தகளத்தில் துரோணரைக்குறித்து எதிர்த்துவருகின்ற சூரனான உத்தமௌஜஸைப் பாணவெள்ளத்தால் தடுத்தான். புருஷஸிம்மங்களான அவ்விருவர்

[1] ஒருதேசத்து ஜனங்கள்; திருடர்கள் என்றும் பொருள்உண்டு.

களுக்கும் உண்டான அந்தநெருங்கியயுத்தமானது, அவ்விருவர்களுக்கும் மற்றஸைனிகர்களுக்கும் மகிழ்ச்சியைவிளைவித்தது. பெரியவில்லையுடையவனும் பலசாலியுமான துர்முகனே துரோணருக்கு எதிராக வருகின்ற சூரனை புருஜித்தை வத்ஸதந்தங்களாலே தடுத்தான். அவன் துர்முகனைப் புருவங்களுடையமத்தியில் அம்பினால் அடித்தான். அவனுடைய அந்தமுகமானது காம்புடன்கூடிய தாமரைப்புஷ்பம்போல் விளங்கியது. கர்ணனே சிவப்பானகொடியுடையவர்களும், துரோணரைஎதிர்த்துச் செல்லுகின்றவர்களும், ஸகோதரர்களுமான ஐந்துகேகயர்களையும் அம்புமழைகளால் தடுத்தான். அவர்களும், மிகவும் சந்தாபத்தை அடைந்து அவன்மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். அவனும், அடிக்கடி அவர்களை அம்புக்கூட்டங்களால் மூடினான். குதிரைகளோடும் சாரதிகளோடும் கொடிகளோடும் தேர்களோடுங்கூடச்சேர்ந்து பரஸ்பரம் அம்புகளால் நிறைக்கப்பட்டு அவைகளால் மூடப்பட்டவர்களான அந்த ஐந்துகேகயர்களாவது கர்ணனாவது காணப்படவில்லை. உம்முடைய புத்திரர்களான துர்ஜயன் ஜயன் விஜயன் என்கிற மூவர்களும், நீலன், காஸ்யன், ஜயத்ஸேனன் என்கிற மூன்றுபேர்களையும் தடுத்தார்கள். ஸிம்மம், புலி, சிறுத்தை இவைகளுக்கு, கரடி, எருமைக்கடா, காளை இவைகளோடு யுத்தம் நேர்ந்ததுபோலப் பார்க்கிறவர்களுக்குப் பிரீதியை விருத்திபண்ணக்கூடிய அவ்விதகோரமானயுத்தம் நேர்ந்தது. ஸகோதரர்களான க்ஷேமதூர்த்தி ப்ருஹந்தன் என்கிறஇருவரும் யுத்தரங்கத்தில் துரோணரைக் குறித்து எதிர்த்துச் செல்லுகின்ற [1] ஸாத்வதனைக் கூர்மையான அம்புகளால் செதுக்கினார்கள். மதப்பெருக்குள்ளசிறந்த இரண்டுயானைகளோடு காட்டில் ஒரு ஸிம்மத்துக்கு (யுத்தம்நேர்ந்தது) போல அவ்விருவர்களுக்கும் அந்த ஸாத்வதனுக்கும், அத்யாச்சர்யகரமான அவ்விதயுத்தம் நேர்ந்தது. கோபங்கொண்டவனும் அம்புகளைத்தொடுக்கிறவனுமான சேதிராஜன், யுத்தத்தினால் சந்தோஷமடைகிறவனும் ஏகாகியாயிருப்பவனுமான அம்பஷ்டராஜனைத் துரோணரிடத்திலிருந்து தடுத்தான். பிறகு, அம்பஷ்டனைவன் எலும்பைப்பிளக்கின்ற முனையினால் அவனைப்பிளந்தான். அவன் அம்புகளோடுகூட வில்லை எறிந்துவிட்டுத் தேரினின்று பூமியில்விழுந்தான். சரத்வானுடைய குமாரரும் மகாத்மாவுமான கிருபாசார்யர், அதிககோபங்கொண்டவனும் விருஷ்ணிகுலத்தில் பிறந்தவனுமான வார்த்தக்ஷேமியை அம்புகளால்தடுத்தார். விசித்ரமாகப்போர்புரிகின்ற கிருபரையும் வார்த்த

[1] ஸாத்யகி.

க்ஷேமியையும் கண்டவர்கள் யுத்தத்தில் மனம்பற்றி வேறுகார்யத்தை அறியவில்லை. ஸௌமதத்தியோ, வருகின்றவனும் ஆலஸ்யமில்லாதவனுமான மணிமான்என்கிற அரசனை, துரோணருக்குக் கீர்த்தியை விருத்திசெய்துகொண்டு தடுத்தான். அந்தமணிமானனவன் வேகத்தோடு ஸௌமதத்தியுடைய விசித்ரமானவில்லையும் கொடியையும் கொடித்துணியையும் சாரதியையும் குடையையும் ரதத்தினின்று கிழேதள்ளினான். பிறகு, சத்துருக்களைக்கொல்லுகிற யூபகேதுவானவன் தேரினின்று சீக்கிரமாகப்பாய்ந்து சிறந்த கத்தியினாலே குதிரைகளோடும் சாரதியோடும் கொடியோடும் ரதத்தோடும் அந்தமணிமானை அறுத்தான். அரசரே! அவன் தன்னுடையரதத்தை அடைந்து வேறு வில்லையும் கையிலெடுத்துக் குதிரைகளையும் தானேநடத்திக்கொண்டு பாண்டவர்களுடையசேனையை அடித்தான். அஸுரர்களைக்குறித்து வருகின்ற இந்திரனைப்போன்றவனும் எவராலும் ஜயிக்கமுடியாதவனுமான பாண்டியனை வல்லமையுடைய [1] விருஷஸேனன் அம்புக்கூட்டங்களால் தடுத்தான். பிறகு, பெரியமாயையையுடையவனும் அதிகபலமுள்ளவனும் ஹிடிம்பியின்குமாரனுமான கடோத்கசன் தகப்பன்மார்களுக்கு ஹிதத்தைக்கருதிக் கௌரவர்களுடைய சேனையை எரித்துக்கொண்டும் துரோணரைப் பிடிக்க எண்ணி, கதாயுதங்களாலும் பரிகங்களாலும், நிஸ்த்ரிம்சங்களாலும், பட்டசங்களாலும், அயோகனங்களாலும், கற்களாலும், தடிகளாலும், புசுண்டிகளாலும், பிராசங்களாலும், தோமரங்களாலும், அம்புகளாலும், முசலங்களாலும், முத்கரங்களாலும், சக்கரங்களாலும், பிண்டிபாலங்களாலும், கோடாலிகளாலும், புழுதிகளாலும், காற்றினாலும், நெருப்பினாலும், தண்ணீராலும், சாம்பலாலும், மண்ணாங்கட்டிகளாலும், திருணங்களாலும், மரங்களாலும், துன்பத்தை யுண்டுபண்ணிக்கொண்டும், அடித்துக்கொண்டும், துகைத்துக்கொண்டும், நாசஞ்செய்துகொண்டும், ஓடும்படிசெய்துகொண்டும், விலக்கிக்கொண்டும், கௌரவசேனையைப் பயப்படுத்திக்கொண்டும்வந்தான். அப்படிப்பட்டராக்ஷஸனை, அலம்புஸன்என்கிற ராக்ஷஸன் கோபங்கொண்டு பற்பலயுத்தங்களில் உபயோகிக்கப்படுகின்ற பற்பலஆயுதங்களினாலே நன்றாகஅடித்தான். முற்காலத்தில் சம்பரனுக்கும் தேவராஜனுக்கும் நடந்ததுபோல, அரக்கர்களுள் மிகச்சிறந்தவர்களான அவ்விருவருக்கும் யுத்தம்நடந்தது. உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நேர்ந்தமஹாயுத்தத்தில், தேராளிகளுக்கும், யானைகளுக்கும், குதிரைகளுக்கும், காலாட்களுக்கும், இவ்வாறு அநேகத்வந்துவயுத்தங்

[1] கர்ணனுடைய குமாரன்.

கள் நேர்ந்தன. உமக்குமங்களம் உண்டாகவேண்டும். துரோணரை நாசம் செய்யும்விஷயத்திலும் ரக்ஷிக்கும்விஷயத்திலும் ஒருவரோடு ஒருவர் முயற்சிசெய்த சைனிகர்களுக்குநேர்ந்த இவ்விதயுத்தமானது பார்க்கப் பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. பிரபுவே! 'இது குரூரமானது; இது ஆச்சரியகரமானது; இது பயங்கரமானது' என்றுசொல்லப்பட்ட மிக்கவிரிவான பலயுத்தங்கள் அங்கு காணப்பட்டன" என்று கூறினான்.

---

## இருபத்தாறுவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி)

(பகதத்தனுடைய பராக்கிரமத்தை வர்ணித்தல்.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! அவர்கள் இவ்வாறுயுத்தத்திற்குத் திரும்பி (தனித்தனி) வகுப்பாக எதிர்த்தபொழுது, பலசாலிகளான பார்த்தர்களும் நம்மைச்சேர்ந்தவர்களும் எவ்விதமாக யுத்தஞ்செய்தார்கள்? அர்ஜுனன் ஸம்சப்தகர்களுடைய சேனையைக்குறித்து என்ன செய்தான்? ஸம்சப்தகர்களும் அர்ஜுனனைக்குறித்து என்னசெய்தார்கள்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அவ்வாறு அவர்கள் திரும்பி வகுப்பு வகுப்பாக எதிர்க்கும் காலத்தில் உம்முடையகுமாரனான துர்யோதனன் யானைச்சேனையோடு பீமஸேனனைத் தானே எதிர்த்துச்சென்றான். யானையினால் யானையும் காளையினால் காளையும் அழைக்கப்பட்டதுபோல, துர்யோதனராஜனால் வலியஅழைக்கப்பட்ட அந்தப்பீமஸேனன் யானைப்படையைக் குறித்து அருகில் விரைவாகவந்தான். ஐயா! யுத்தஞ்செய்வதில் ஸாமர்த்தியமுள்ள அந்தப்பீமஸேனன் பாகுபலத்தோடு விரைவில் யானைப்படையைப் பிளந்தான். நான்குபக்கங்களிலும் மதஜலத்தைப் பெருக்குகின்றவைகளும் மலைகளுக்கொப்பானவைகளுமான அந்த யானைகள் பீமஸேனனுடைய அம்புகளாலே மதத்தையிழந்தவைகளாகச் செய்யப்பட்டுத் திரும்பிஓடின. பெரியகாற்றானது மேகக் கூட்டங்களைச் சிதறஅடிப்பதுபோல (வாயுகுமாரனான) பீமஸேனன் அந்தப்படைகளைச் சிதறஅடித்தான். அந்த யானைகளின்மீது அம்புகளைவிடுகின்ற அந்தப்பீமஸேனன், கிரணங்களை எல்லாவுலகங்களின் மீதும் (பரப்புகின்ற) உதித்தசூரியன்போல் விளங்கினான். பீமனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டு நன்கு தைக்கப்பட்டிருக்கின்ற அந்தயானைகள், ஆகாயத்தில் சூரியனுடையகிரணங்களாலே வியாபிக்

கப்பட்ட பற்பலமேகங்கள்போல விளங்கின. அவ்வாறு யானைகளுக்கு நாசத்தையுண்டாக்குகின்ற பீமஸேனனைத் துர்யோதனன் கோபங் கொண்டு எதிர்த்துவந்து, கூர்மையுள்ள அம்புகளால் அடித்தான். பிறகு, ரக்தத்துக்கொப்பான சிவந்தகண்களையுடைய பீமன் ஒரு க்ஷணத்தில் துர்யோதனராஜனை அழிக்கக்கருதிக் கூர்மையான அம்பு களால் அடித்தான். அந்தத்துர்யோதனன், அம்புகளால் எல்லா அங் கங்களும் நாற்புறமும் நிறைக்கப்பட்டுக் கோபமூண்டு சிரிப்பவன்போல, சூரியனுடையகிரணம்போல விளங்குகின்ற அம்புகளாலே பாண்டு குமாரனை பீமஸேனனை அடித்தான். பாண்டவன் அந்தத்துர்யோ தனனுடைய இரத்தினத்தினால் சித்ரிக்கப்பட்ட கொடிமரத்திலுள்ள மணிமயமான அரவத்தையும் வில்லையும் இரண்டு அர்த்தசந்திரபாணங் களாலே சீக்கிரமாக அறுத்தான். துர்யோதனன் பீமனாலே பீடிக்கப் படுதலைக்கண்டு, அங்கன், (பீமனை) கலங்கச்செய்யக்கருதி யானைமீதேறி எதிர்த்துவந்தான். மேகத்திற்கொப்பான ஒலியோடுவருகின்ற உத் தமமானயானையைப் பீமஸேனன் கும்பஸ்தலங்களுக்கிடையில் நாராசங் களாலே அதிகமாக அடித்தான். அந்தநாராசங்கள் அந்தயானையின் தேகத்தைப்பிளந்து பூமியில்பாய்ந்தன. பிறகு, அந்தயானையானது வஜ் ராயுதத்தினாலடிக்கப்பட்ட மலைபோலக் கீழேவிழுந்தது. கீழேவிழு கின்ற யானையிலிருந்து கீழேவிழப்போகிறவனும் மிலேச்சனுமான அங்கனுடையதலையைச் சுறுசுறுப்புள்ள பீமஸேனன் அர்த்தசந்திர பாணத்தினால் அறுத்தான். அவன் கீழேவிழுந்தவுடன் அச்சேனையா னது பரபரப்புள்ள குதிரைகளோடும் யானைகளோடும் ரதங்களோடும் காலாட்களைமிதித்து நாசம்செய்துகொண்டு விரைவாக ஓடியது.

பிறகு, அந்தச்சேனைகள் முறிபட்டு நான்குபக்கத்திலும் ஓடும் போது பிராக்ஜ்யோதிஷதேசாதிபதியானவன் யானையோடுபீமஸேனனை எதிர்த்துவந்தான். தேவராஜாவானவன், எந்தயானையினால் தைத்தியர்க ளையும் தானவர்களையும் வென்றானோ அந்தயானையின் வம்சத்தில்தோன் றினயானையோடு பீமஸேனனைக்குறித்து எதிர்த்து அருகில்வந்தான். அந்தஉத்தமமானயானையானது சுருக்கப்பட்டிருக்கிறதுதிக்கையோடும் இரண்டு [1] காதுகளோடும் பீமஸேனனைக்குறித்தெதிர்த்து வேகமாக ஓடிவந்தது. கண்களைப்புரட்டிவிழிக்கும அந்தயானையானது கோபங் கொண்டு பாண்டவனை நாசஞ்செய்வதுபோல் அவனுடைய ரதத்தைக் குதிரைகளோடு மிச்சமின்றிப் பொடியாகச்செய்தது. பிறகு, பீமனும்

---

[1] 'கால்களோடும்' என்பது பேதபாடம்.

கால்களால்ஓடி அந்தயானையின் அங்கங்களிலேயே பதுங்கினான்.[1] அஞ்சலிகர்வேதத்தை அறிந்த பாண்டவன் விலகவில்லை; சரீரமத்தியத்தை அடைந்து அடிக்கடி கையினால் அந்தயானையை அடித்தான்; (தன்னைக்) கொல்ல எண்ணங்கொண்டதும் அழிவற்றதுமான அந்தயானையை உத்ஸாஹப்படுத்தினான். பதினாயிரம்யானையின் பலமுடையதும் காந்தியுள்ளதுமான அந்தயானையானது அப்பொழுது விருகோதரனைத் தூக்கியடிக்க எண்ணங்கொண்டு குயவனுடைய சக்கரம்போல் வேகமாகச் சுழன்றது. பீமனும், அந்தயானையினிடத்திலிருந்து வெளிப்பட்டு ஸுப்ரதீகமென்னும் அதன்எதிரில் நின்றான். அது பீமனைத் துதிக்கையினால்வளைத்து இரண்டுமுழங்கால்களாலும் அடித்துக் கழுத்தைச்சுற்றி அவனைக்கொல்வதற்கு விரும்பியது. செந்நாயின் உடல்போன்ற உடலையுடையவனான பீமஸேனன் சுழன்று துதிக்கைச்சுழற்சியிலிருந்து தன்னைவிடுவித்துக்கொண்டு, மறுபடியும் அதனுடைய அங்கங்களில் பிரவேசித்தான். தன்ஸைனியத்தில் பிரதிகஜத்தினுடைய வரவைமுழுதும் எதிர்பார்த்தான். அவன்யானையினுடைய அங்கங்களினின்று வெளிப்பட்டு வேகமாக ஓடினான். ஐயா! பிறகு, 'ஐயோ! கஷ்டம்! பீமஸேனன் யானையினால் கொல்லப்பட்டான்' என்று எல்லா ஸைனியங்களும் பெருங்கூச்சலிட்டன. அரசரே! அந்த யானையினாலே பாண்டவஸேனையானது மிகவும் பயத்தையடைந்து, வ்ருகோதரனிருக்குமிடத்திற்குச் சீக்கிரமாக ஓடிவந்தது. பிறகு, யுதிஷ்டிரராஜர் பீமஸேனனை மாண்டவனாகவே எண்ணிப் பாஞ்சால்யனோடு சேர்ந்து பகதத்தனை நான்குபக்கமும் சூழ்ந்துகொண்டு எதிர்த்தார். அந்தப் பகதத்தனைச் சத்துருக்களைத் நவிக்கச்செய்கிறவர்களும் தேராளிகளுள் சிறந்தவர்களுமான வீரர்கள் தேர்களால் சூழ்ந்துகொண்டு நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் கூர்மையான அம்புகளைப் பொழிந்தார்கள். மலைநாட்டுக்குத்தலைவனான அந்தப்பகதத்தன் அங்குசத்தினால் அம்புகளுடைய அடியை நாசஞ்செய்து க்ஷணத்திற்குள் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் சிதறும்படி அடித்தான். அரசரே! அப்படியே யுத்தகளத்தில் கிழவனான பகதத்தனுடைய யானையினால் செய்யப்பட்ட அந்த ஆச்சர்யத்தையும் கண்டோம். பிறகு, தசார்ணதேசத்தரசன், குறுக்காகச் செல்லுகின்றதும் மதமுடையதும் வேகமாகச்செல்லுகிற ஸ்வபாவமுள்ளதுமான யானையோடு ப்ராக்ஜ்யோதிஷ தேசாதிபதியை எதிர்த்து வந்தான். முற்காலத்தில் மரங்களோடும் சிறகுகளோடும்கூடிய மலைகளுக்கு யுத்தம் நேர்ந்தாற்

---

[1] யானையின் மர்மஸ்தானங்களை அறிந்து அடித்தல்.

போலப் பயங்கரமான உருவமுள்ள அந்த இரண்டு யானைகளுக்கும் யுத்தம் நேர்ந்தது. பிராக்ஜ்யோதிஷபதியினுடைய யானையானது திரும்பி விலகிவந்து, தசார்ணதேசாதிபதியினுடைய யானையை விலாப்பக்கத்தில் பிளந்து கீழேதள்ளியது. பிறகு, பகதத்தன் ஸூர்யகிரணங்கள் போல் பிரகாசிக்கின்ற ஏழுதோமராயுதங்களால் யானையின்மீதுள்ள அந்தச்சத்துருவை இருப்பிடத்தைவிட்டு நகரும்படி அடித்தான். பின்பு யுதிஷ்டிரர் பகதத்தராஜனை யடித்துப் பெரிய தேராளிகளினுடைய ஸேனையோடு நான்குபுறமும் சூழ்ந்துகொண்டார். தேராளிகளால் நான்குபுறமும் சூழப்பட்டு, யானையின்மீதேறி யிருக்கின்ற அந்தப் பகதத்தனனவன், மலையிலுள்ள காட்டின்நடுவில் ஜ்வலிக்கின்ற அக்னிபோல ஜ்வலித்தான். பயங்கரமான வில்லையுடையவர்களும் அம்புமழைகளைப் பொழிகின்றவர்களுமான ரதிகர்களுடைய எல்லாப்பக்கத்திலும் நெருங்கி ஒன்றுசேர்ந்திருக்கிற மண்டலத்தை அந்த யானையானது சுற்றிவந்தது. பிறகு, பிராக்ஜ்யோதிஷதேசத்தரசனனவன், மகாகஜத்தைத் திருப்பி யுயுதானனுடைய ரதத்தைக் குறித்து வேகமாக நடத்தினன். ஸாத்வதர்களுள் சிறந்த அந்த யுயுதானனும், நேரில் வருகின்ற அந்த யானையைக்கண்டு, கூர்மையுள்ளவையும் ஸர்ப்பங்கள்போன்றவையுமான ஐந்து பாணங்களால் அடித்தான். பெரிய யானையானது சினியின்பேரனை யுயுதானனுடைய ரதத்தைப் பிடித்து வேகமாக எதிரில் தூக்கி எறிந்தது. யுயுதானனே விலகிவிட்டான். பிறகு, ஸாரதியானவன் அந்த ரதத்தின்மீது துள்ளிக்குதித்து ஸிந்து தேசத்தில் பிறந்தவைகளும் பெரியவைகளுமான அக்குதிரைகளை எழுப்பிக்கொண்டு ஸாத்யகியை அடைந்துநின்றான். அந்த யானையோ, ஸமயம் வாய்த்தமையால், வேகத்தோடு ரதஸமூகத்தினின்றும் வெளிப்பட்டு எல்லா அரசர்களையும் இடைவிடாமல் நான்கு பக்கங்களிலும் எறிந்தது. அதிவேகமாகச் செல்லுகிற அந்த யானையினாலே பயப்படுத்தப்படுகின்ற அந்தப் புருஷஶ்ரேஷ்டர்கள் யுத்தகளத்தில் அந்த ஒருயானையையே நூறுயானையாக எண்ணினர்கள். யானையின்மீதுள்ள பகதத்தனலே அந்த அரசர்கள் ஐராவதத்தின்மீதேறின தேவராஜனலே அஸுரர்கள்போலத் துரத்தப்பட்டார்கள். இங்கும் அங்குமாக ஓடுகின்ற அந்தப்பாஞ்சாலர்களுடைய யானைகளாலும் குதிரைகளாலும் உண்டுபண்ணப்பட்ட சப்தமானது மிகப்பெரிதாகத் தோன்றிற்று. பாண்டவர்கள் யுத்தத்தில் பகதத்தனலே துரத்தப்படுமளவில் பீமன் மறுபடியும் கோபங்கொண்டு பகதத்தனைக்குறித்து எதிர்த்துவந்தான். எதிர்த்துவருகின்ற அந்தப்பீமஸேனனுடைய குதி

ரைகளை அந்தயானையானது துதிக்கையினால்விடப்பட்ட நீரால் நனைத்து அதிக பயமடையும்படி செய்தது. அக்குதிரைகள் அவ்விடத்தினின்று பீமனை வேறிடத்திற்கு இழுத்துச்சென்றன. பிறகு, யமனுக்கொப்பான வனும் கிருதியின் குமாரனுமான ருசிபர்வாவானவன் ரதத்தின்மீதிருந்துகொண்டு அம்புமழையினாலே ஹிம்ஸித்துக்கொண்டு அவனைச் சீக்கிரமாக எதிர்த்து வந்தான். பிறகு, பர்வதபதியான அந்த ஸுபர்வாவானவன் ருசிபர்வாவைப் பதிவான கணுக்களுள்ள அம்பினால் யமனுடைய வீட்டை அடையச்செய்தான். சூரனான அவன் வீழ்ந்தவுடனே, அபிமன்யுவும் த்ரௌபதிபுத்திரனான பிரதிவிந்தியனும் சேகிதானனும் திருஷ்டகேதுவும் யுயுத்ஸுவும் அந்த யானையை அடித்தார்கள். பயங்கரமான ஸிம்மநாதங்களைச் செய்கின்றவர்களும் கொல்ல எண்ணங்கொண்டவர்களுமான அவர்கள், மேகங்கள் வர்ஷதாரைகளாலே நனைப்பதுபோலச் சரதாரைகளாலே இந்த யானையை நனைத்தார்கள். பிறகு, ஸமர்த்தனான பகதத்தனாலே குதிகாலாலும் மாவெட்டிகளாலும் கால்கட்டைவிரல்களாலும் தூண்டப்பட்ட யானையானது துதிக்கையை நீட்டிக்கொண்டு அசைவற்றிருக்கின்ற காதுகளோடும், கண்களோடும் விரைவாக ஓடிற்று. அந்தயானை யுயுத்ஸுவினுடைய குதிரைகளைக் காலினால் மிதித்துக்கொண்டு ஸாரதியைக் கொன்றுவிட்டது. மன்னரே! யுயுத்ஸுவோ வேகத்துடன் ரதத்தினின்று விலகிவிட்டான். பிறகு, அந்தப்பாண்டவவீரர்கள் பயங்கரமான ஸிம்மநாதத்தைச் செய்துகொண்டு, அந்தச் சிறந்தயானையைக்கொல்ல எண்ணி விரைவாக அம்புமழைகளால் நனைத்தார்கள். உம்முடைய குமாரனோ பரபரப்புள்ளவனாக அபிமன்யுவினுடைய ரதத்தின்மேல் பாய்ந்தான். யானையின்மீதுள்ள அந்தப் பிராக்ஜ்யோதிஷராஜன் உலகங்களின்மீது கிரணங்களைப் பரப்புகின்ற சூரியன்போலச் சத்துருக்களின்மீது அம்புகளைப் பொழிந்துகொண்டு பிரகாசித்தான். அவனை அர்ஜுன குமாரன் பன்னிரண்டு பாணங்களாலும் யுயுத்ஸு பத்துப்பாணங்களாலும் த்ரௌபதீகுமாரர்களும் திருஷ்டகேதுவும் மும்மூன்று பாணங்களாலும் அடித்தார்கள். சேகிதானன் மறுபடியும் மேன்மேலும் ஆயுதப்ரயோகம் செய்கின்ற பகதத்தனை அறுபத்துநான்கு பாணங்களால் அடித்தான். பிறகு, பகதத்தன் எல்லோரையும் மும்மூன்று பாணங்களால் திருப்பியடித்தான். மிக்கமுயற்சியோடு தொடுக்கப்படும் அம்புகளாலே நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்ட அந்த யானையானது ஸூர்யகிரணங்களாலே கோக்கப்பட்ட பெரியமேகம்போல விளங்கியது. சத்துருபாணங்களாற்பீடிக்கப்பட்ட அந்தயானையானது ஏறிடத்துகிற

வனுடைய திறமையினாலும் முயற்சியினாலும் தூண்டப்பட்டு, அந்தப் பகைவர்களை இடப்புறமாகவும் வலப்புறமாகவும் எறிந்தது. காட்டில் இடையன் பசுக்கூட்டங்களைத் தடியினாலோட்டுவதுபோலப் பகதத்தன் அடிக்கடி அந்தச்சேனையை ஓடும்படி செய்தான். கழுகுகளால் விரைவாக எதிர்க்கப்பட்ட காக்கைகளினுடைய சப்தம்போல மிகவேகமாயோடுகின்ற பாண்டவர்களைச்சேர்ந்த வீரர்களுடைய சப்தமானது தோன்றியது. அரசரே! முற்காலத்தில் சிறகுகளுடனிருந்த சிறந்தமலை போலிருப்பதும் சிறந்த அங்குசத்தினால் அடிக்கப்பட்டதுமான அந்தச் சிறந்த யானையானது கொந்தளிப்புற்ற ஸமுத்திரமானது வியாபாரிகளுக்குப் பயத்தை யுண்டுபண்ணுவதுபோலச் சத்துருக்களுக்கு அப்பொழுது அதிகமாகப் பயத்தை யுண்டுபண்ணிற்று. அரசரே! பிறகு, பயத்தாலோடுகின்ற யானைகளாலும் தேர்களாலும் குதிரைகளாலும் அரசர்களாலும் உண்டுபண்ணப்பட்டதும் மிக்க பயங்கரமுமான ஒலியானது யுத்தத்தில் பூமியையும் ஆகாயத்தையும் ஸ்வர்க்கத்தையும் திக்கோணங்களையும் அவ்வாறே திக்குக்களையும் சூழ்ந்துகொண்டது. முற்காலத்தில் யுத்தத்தில் தேவர்களால் நன்கு காக்கப்பட்ட தேவஸேனையில் விரோசனன்போல அந்த உத்தமமான யானையோடு பகதத்தராஜன் சத்துருக்களுடைய ஸேனையில் புகுந்தான். நெருப்புக்குத் தோழனான காற்றானது அதிகமாக வீசியது. ஆகாயத்தையும் ஸைனிகர்களையும் புழுதியானது அடிக்கடி மூடியது. பிறகு, ஜனங்கள் நான்கு பக்கங்களிலும் வேகமாக ஓடிவரும் அந்த ஒருயானையையே கூட்டம் கூட்டமான யானைகளைப்போல எண்ணினார்கள்.

---

## இருபத்தேழாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

### (அர்ஜுனன் ஸம்சப்தகர்களைக் கொன்றது.)

சிறந்த கைகளுள்ளவரே! யுத்தத்தில் பார்த்தனுடைய செய்கைகளைப்பற்றி என்னை நீர் வினவியதால், அவன் யுத்தத்திற்செய்த காரியத்தை நீர் கேளும். பகதத்தனானவன் பலவிதமான கார்யங்களைச்செய்கையில், உயர எழும்பின புழுதியைக்கண்டும் யானையினுடைய சப்தத்தைக்கேட்டும் குந்திபுத்திரன், கிருஷ்ணனைப்பார்த்து, 'ஓ! மதுஸூதனரே! பிராக்ஜ்யோதிஷ ராஜனானவன் யானையோடுகூட விரைவுள்ளவனாக எதிரில் புறப்பட்டுவிட்டான்போலிருக்கிறது. இந்த அந்த யானை

யினுடைய சப்தம்; நிச்சயமே. இவன் யுத்தத்தில் இந்திரனிலும் குறைந்தவனல்லன்; யானையை நடத்துவதில் ஸமர்த்தன்; பூமியில் கஜத்திலுல் யுத்தம் செய்கிறவர்களுள் இவன் முதன்மையானவனென்பது என தெண்ணம். தோஷமற்றவரே! அந்த உத்தமமானயானை, யுத்தத்தில் எப்பொழுதும் ஒப்பில்லாதது. யுத்தத்தில் எல்லாச் சஸ்திரங்களையும் மீறிச்செல்லக்கூடியது; பெரிய கார்யங்களைச் செய்திருக்கிறது; சிரமத்தை அடையாதது; ஆயுதங்களின் வீழ்ச்சியையும் அக்னி ஸ்பர்சத்தையும் பொறுக்கக்கூடியது. அந்த யானையானது ஒன்றியாயிருந்துகொண்டு இப்பொழுது பாண்டவஸேனை முழுமையையும் நாசஞ்செய்யப்போகிறது. விற்கள் அம்புகள் இவற்றினுடைய சப்தங்களோடு பெரிய ஸிம்மநாதத்தைச்செய்து துரத்தப்படுகின்றதும், பெரும்பான்மையாகத் தலைவர்கள் கொல்லப்படுகிறதுமான இந்தச்சேனையைப் பாரும். என்ஸேனையைக்கண்டு கர்ஜித்துச் சீக்கிரமாக நாசம்செய்கிறது. அந்த யானையைத் திருப்பியடிப்பதற்கு நம்மிருவரைத்தவிர வேறொருவனும் சக்தியுள்ளவனல்லன். ஆதலால், பிராக்ஜ்யோதிஷாதிபதியிருக்குமிடத்திற்கு வேகமாகச்செல்லும். யுத்தத்தில் யானையின் பலத்தினுல் கொழுப்படைந்தவனும் வயதினுலே விசேஷமாகக்கர்வங்கொண்டவனுமான இந்தப்பகதத்தனை இப்பொழுது [1] பலாஸுரனைக் கொன்ற இந்திரனுக்குப் பிரியமுள்ள விருந்தினனுக அனுப்பப்போகிறேன்' என்று சொன்னுன். பிறகு, அர்ஜுனனுடைய வசனத்தினுல் கிருஷ்ணன், பாண்டவ ஸேனையானது பகதத்தனுல் பிளக்கப்படுகின்றவிடம் சென்றுர். செல்லுகின்ற அந்த அர்ஜுனனை மகாரதிகர்களான பதினுலாயிரம் ஸம்சப்தகர்கள் பின்பக்கத்திலிருந்து அழைத்துக்கொண்டு நெருங்கிவந்தனர். அவர்களுள் பதினுயிரம் திரிகர்த்த மஹாரதிகர்கள் அர்ஜுனனையும், நாலாயிரம் மஹாரதர்கள் கிருஷ்ணனையும் அழைத்துக்கொண்டு பின்தொடர்ந்தனர். ஐயா! பகதத்தனுல் பிளக்கப்படுகின்ற ஸேனையைக்கண்டு அவர்களால் கூப்பிடப்படுகின்ற அர்ஜுனனுடைய மனமானது இரண்டாயிற்று. 'நான் இங்கு திரும்பலாமா? அன்றி யுதிஷ்டிரரிடம் செல்லலாமா? எந்தச்செய்கை நமக்கு இப்பொழுது நன்மையைப் பயக்கக்கூடியது?' என்று ஆலோசித்தான். கௌரவர்களுள் சிறந்தவரே! இவ்வாறு புத்தியினுல் ஆலோசிக்கின்ற அந்த அர்ஜுனனுக்கு ஸம்சப்தகர்களைக் கொல்லும் விஷயத்திலேயே ஸ்திரமான பெரிய சித்தவிருத்தி ஏற்பட்டது. சிறந்த வானரத்வஜமுள்ளவனும் இந்திரகுமாரனுமான அந்த அர்ஜுனன் யுத்தரங்கத்தில்

---

[1] இவனை வலனென்றும் சொல்வதுண்டு.

ஒருவனுகவே ஆயிரக்கணக்கான ரதிகர்களைக்கொல்வதின்பொருட்டுச் சீக்ரம் திரும்பினுன். அர்ஜுனனைக்கொல்லும் உபாயத்தில் துரியோதனன் கர்ணனுகிய இருவரும் செய்த ஆலோசனையானது, அர்ஜுனனுக்கு ஸந்தோஷத்தை யுண்டாக்கியது. அந்த ஆலோசனையை அர்ஜுனன் அப்பொழுது சிறந்த மனிதர்களுடைய வதத்தினுல் வீணுகச்செய்தான். அரசரே! பிறகு, மகாரதிகர்களான ஸம்சப்தகர்கள் அர்ஜுனன்மீது பதிவானகணுக்களுள்ள லக்ஷம் பாணங்களைப் பொழிந்தார்கள். மன்னரே! அம்புகளால் மூடப்பட்ட குந்திபுத்திரனை பார்த்தனுவது ஜநார்த்தனரான ஸ்ரீ கிருஷ்ணராவது காணப்படவில்லை. குதிரைகளும் தேரும் கண்ணுக்குப் புலப்படவேயில்லை. அப்பொழுது ஸ்ரீ ஜநார்த்தநர் மோகமடைந்தார்; வேர்த்தவருமானுர். பிறகு, பார்த்தன் அவர்களைப் பெரும்பாலும் பிரம்மாஸ்திரத்தினுல் கொன்ருன். அம்புகளையும் நாண்கயிறுகளையும் விரலுறைகளையும் விற்களையுமுடைய கைகளும் கொடிமரங்களும் குதிரைகளும் நூற்றுக்கணக்காக அறுக்கப்பட்டுக் கீழேவிழுந்தன. ஸாரதிகளும் ரதிகர்களும் பூமியில் விழுந்தார்கள். மரங்களுக்கும் மலையின் சிகரங்களுக்கும் மேகங்களுக்கும் ஒப்பான சரீரத்தையுடையவைகளும் நன்ருகப் பழக்கப்பட்டவைகளுமான யானைகள் அர்ஜுனனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டிருக்கின்ற மாவுத்தர்களோடு பூமியில் விழுந்தன. மேல்விரிப்புக்கள் புரட்டித்தள்ளப்பட்டவைகளும் அணிகலன்கள் அறுக்கப்பட்டவைகளுமான யானைகள் பாணங்களாலே மிகவும் அடிக்கப்பட்டுப் பாகர்களோடு உயிரையிழந்து யுத்தபூமியில் விழுந்தன. கிரீடியினுல் அர்த்தசந்திர பாணங்களாலே யறுக்கப்பட்ட மனிதர்களுடைய கைகள், ரிஷ்டிகள் பிராஸங்கள் கத்திகள் நகங்கள் முத்கரம் கோடாலி இவைகளையுடையவைகளாக விழுந்தன. ஐயா! அர்ஜுனனுடைய பாணங்களால் அறுக்கப்பட்ட தலைகள், பாலசூரியனையும் செந்தாமரைமலரையும் சந்திரனையும்ஒத்த ரூபத்தையுடையவைகளாகப் பூமியையடைந்தன. அர்ஜுனன் கோபங்கொண்டு சத்துருக்களைக்கொல்லுங் காலத்தில் அந்தஸேனையானது அப்பொழுது பற்பலரூபமுள்ளவைகளும் பிராணிகளைத்தின்பவைகளுமான பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்டு விளங்கியது. அப்பொழுது தாமரைஓடையைக் கலக்குகின்ற ஒருயானைபோல ஸேனையைக்கலக்குகின்ற அர்ஜுனனைப் பூதகணங்கள், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தன. மாதவர், இந்திரனுடைய செய்கையைப்போலிருக்கின்ற அர்ஜுனனுடைய அச்செய்கையைக்கண்டு மிகுந்தஆச்சரியத்தையடைந்து அஞ்சலிபந்தத்துடன் அவனைப்பார்த்து, 'பார்த்தனே!

இப்பொழுது யுத்தத்தில் நீசெய்த இக்காரியமானது இந்திரனாலும் யமனாலும் குபேரனாலும் செய்யமுடியாததென்றே என்னுடைய அபிப்பிராயம். யுத்தத்தில் மகாரதிகர்களான ஸம்சப்தகர்கள் நூறுநூறாகவும், ஆயிரமாயிரமாகவும், ஒரேதடவையில் விழுந்தவர்களாகவே என்னால் காணப்பட்டார்கள்' என்று சொன்னார். பிறகு, 'மிக்க உறுதியுடன் நின்ற ஸம்சப்தகர்களைக் கொன்றுவிட்டு, பகதத்தனைக் குறித்துச் செல்லும்' என்று கிருஷ்ணனை அர்ஜுனன் தூண்டினான்.

---

## இருபத்தேட்டாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(பகதத்தனும் அர்ஜுனனும் போருக்கு எதிர்த்தது.)

பிறகு, வாஸுதேவர், எதிர்க்கக்கருதிய அர்ஜுனனுடைய மனோவேகம்போன்ற வேகமுடையவைகளும் ஸ்வர்ணாலங்காரங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான குதிரைகளைத் துரோணருடைய படையை நோக்கி வேகமாக நடத்தினார். துரோணராலே தவிக்கும்படி செய்யப்பட்ட தன்னுடைய ஸைனிகர்களைக் காப்பாற்றுவதற்காகச் செல்லுகின்ற அந்தக்குருசிரேஷ்டனை அர்ஜுனனோடு யுத்தஞ்செய்ய விரும்பி, ஸுசர்மாவானவன் ஸகோதரர்களோடு அவனைப் பின் தொடர்ந்தான். பிறகு, வெண்மையான குதிரைகளையுடையவனும், ஜயிக்கமுடியாதவர்களை ஜயிக்கின்றவனுமான அர்ஜுனன், கிருஷ்ணனைப்பார்த்து, 'ஓ! அச்சுதரே! இந்த ஸுசர்மாவானவன் தன்ஸகோதரர்களோடு என்னை யுத்தத்திற்கு அழைக்கிறான். மதுஸூதனரே! வடபுறத்தில் (நம்முடைய) அந்த ஸைனியமானது பிளக்கப்படுகிறது. இப்பொழுது என்மனமானது ஸம்சப்தகர்களாலே இரண்டுபட்டதாகச் செய்யப்பட்டது. 'ஸம்சப்தகர்களைக் கொல்லலாமா, அன்றிச் சத்துருக்களால் பீடிக்கப்பட்ட நம்மைச்சேர்ந்தவர்களைக் காப்பாற்றலாமா?' என்னும் என்னுடைய எண்ணத்தை நீர் அறிந்திருக்கிறீர். அவற்றுள் எது நற்காரியமாகும்?' என்று கேட்டான்.

இவ்வாறு கேட்கப்பட்ட வாஸுதேவர், திரிகர்த்ததேசாதிபதியானவன் பாண்டுகுமாரனாகிய அர்ஜுனனைப் போருக்கழைத்தவிடத்திற்கு ரதத்தைத்திருப்பினார். பிறகு, அர்ஜுனன் ஸுசர்மாவை ஏழம்புகளாலடித்து அவ்வாறே இரண்டு க்ஷுரங்களால் அவனுடைய

கொடியையும் வில்லையும் அறுத்தான். அர்ஜுனன் விரைந்து ஆறு பாணங்களாலே திரிகர்த்ததேசாதிபனுடைய ஸகோதரனைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் யமலோகத்திற்கு அனுப்பினான். பிறகு, ஸுசர்மா, ஸர்ப்பத்திற்கொப்பானதும் இரும்பினால் செய்யப்பட்டதுமான சக்தியாயுதத்தை அர்ஜுனனைக்குறித்தும், தோமரத்தை வாஸுதேவரைக்குறித்தும் பிரயோகித்தான். அர்ஜுனன் மூன்று பாணங்களாலே சக்தியையும் மூன்று பாணங்களால் தோமரத்தையும் அறுத்து அம்புக்கூட்டங்களாலே ஸுசர்மாவை மோகமடையும்படிசெய்து திரும்பும்படி செய்தான். வேந்தரே! அதிகமாக வர்ஷிக்கின்ற இந்திரன் போல வருகின்றவனும் பாணஸமூகங்களுள்ளவனும் உக்கிரமாயிருப்பவனுமான அந்த அர்ஜுனனை உம்முடைய ஸைனிகர்களுள் ஒருவனாவது தடுக்கவில்லை. பிறகு, தனஞ்சயன் உலர்ந்த காட்டை நெருப்பு எரிப்பதுபோலக் கௌரவஸேனையிலுள்ள எல்லா மகாரதிகர்களையும் பாணங்களால் அடித்துக்கொண்டு வந்தான். குந்திகுமாரனும் புத்திமானுமான அந்த அர்ஜுனனுடைய ஸகிக்கத்தகாத அந்த வேகத்தை நெருப்பினுடைய தொடுதலைப் பிராணிகள் தாங்கமாட்டாததுபோல அந்தச்சத்துருவீரர்கள் தாங்கச்சக்தியற்றவர்களானார்கள். அர்ஜுனன், ஸேனைகளை அம்புமழையினால் சூழ்ந்துகொண்டு, கருடன் பெரிய ஸர்ப்பத்தை எதிர்த்துச்செல்வதுபோல, ப்ராக்ஜ்யோதிஷதேசத் தரசனைக் குறித்து எதிர்த்துச்சென்றான். ராஜரே! அர்ஜுனன் பாபமற்ற பரதர்களுக்கு க்ஷேமத்தை உண்டுபண்ணுகிறதும் யுத்தத்தில் சத்துருக்களுக்குக் கண்ணீரைவிருத்திபண்ணுகிறதுமான எந்தவில்லை முந்தி வளைத்தானோ அந்தவில்லையே கெட்ட சூதாட்டத்தை விளையாட்டாகவுடையவனான உம்முடைய புத்திரன்நிமித்தமும் எல்லா அரசர்களுடைய விநாசத்தின்பொருட்டும் கையில் பிடித்தான். மகாராஜரே! அர்ஜுனனாலே அவ்வாறு கலக்கப்படுகின்ற உம்முடைய அந்த ஸேனையானது, மலையில்மோதிய கப்பல்போலச் சிதறியது. பிறகு, வீரர்களான பதினாயிரம் வில்லாளிகள் யுத்தரங்கத்தில் வெற்றிதோல்விகளில் குரூரமான புத்தியைச் செலுத்தினவர்களாகத் திரும்பினார்கள். மஹாரதர்கள் மனத்தில் பயத்தைவிட்டு அந்த அர்ஜுனனை நாற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். யுத்தரங்கத்தில் எல்லாப்பாரத்தையும் தாங்கவல்லமையுள்ள பார்த்தன் பெரியபாரத்தை அடைந்தான். கோபங்கொண்டிருக்கின்றதும் மதப்பெருக்குள்ளதும் அறுபதுபிராயமுள்ளதுமானயானை எவ்வாறு கோரைக்காட்டை அழிக்குமோ அவ்வாறே சிரமத்தைமேற்கொண்டு பார்த்தன் உம்முடையஸேனையை அழித்தான்.

அந்த ஸேனையானது நன்றாக நாசம்பண்ணப்பட்டபோது, ராஜாவான பகதத்தன் அந்த யானையோடு சீக்கிரமாக அர்ஜுனனுக்கு அருகில்வந்தான். புருஷஸ்ரேஷ்டனான தனஞ்சயன் அந்தப்பகதத்தனைத் தேருடன் எதிர்த்தான். நரஸ்ரேஷ்டர்களான அவ்விருவருக்கும் அவ்விதமான நெருங்கிய யுத்தம் நேர்ந்தது. சூரர்களான பகதத்தனும் அர்ஜுனனும் சாஸ்திரப்படி பழக்கப்பட்ட யானையோடும் ரதத்தோடும் யுத்தத்தில் ஸஞ்சரித்தார்கள். பிறகு, பகதத்தனானவன் மேகத்துக்கொப்பான யானையின்மீதிருந்துகொண்டு பிரபுவான இந்திரன்போல அர்ஜுனன் மீது அம்புக்கூட்டத்தினால் பொழிந்தான். வீர்யமுள்ளவனும் இந்திர குமாரனுமான அந்த அர்ஜுனனும்,பகதத்தனுடைய அந்த அம்புமழையை அருகில்நாடாதபடி அம்புமழையினால் விலக்கினான். பிறகு, பிராக்ஜ்யோதிஷ தேசத்தரசன், தனது அம்புமழையானது தடுக்கப்பட்டவுடன் கோபத்தால் கண்கள் மிகச்சிவந்து மறுபடியும் பார்த்தன் மீது அம்புகளை இறைத்தான். அந்தப்பகதத்தன் அம்புமழையினால் பார்த்தனை அவ்வாறு நன்றாக அடித்துக் கிருஷ்ணார்ஜுனர்களைக் கொல்லும்பொருட்டு அந்தயானையைத் தூண்டினான். கோபங்கொண்ட அந்தகன்போலவருகின்ற அந்த யானையைக்கண்டு ஸ்ரீ ஜநார்த்தனர் தேரினாலே அதிவேகத்தோடே அதனை அபஸவ்யமாகச் சுற்றினார். தனஞ்சயன் யுத்ததர்மத்தை நினைத்து யுத்தத்திற்காக வந்திருந்தாலும், திரும்பிய அந்தப்பெரியயானையை அதன்மீதுள்ள பகதத்தனோடு மரணத்துக்கு உட்படுத்த விரும்பவில்லை. ஐயா! அந்த யானையோ, யானைகளையும் ரதங்களையும் குதிரைகளையும் நாசஞ்செய்து யமலோகத்திற்கனுப்பியது. பிறகு, அர்ஜுனன் கோபமடைந்தான்" என்று கூறினான்.

---

## இருபத்தோன்பதாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன், யானையோடு பகதத்தனைக்கொன்றது.)

திருதராஷ்டிரன், "அவ்வாறு கோபங்கொண்ட பாண்டவன், பகதத்தன்விஷயத்தில் என்ன செய்தான்? அல்லது பகதத்தனாவது அர்ஜுனன்விஷயத்தில் என்னசெய்தான்? அதனை எனக்கு உள்ளபடி உரைக்கவேண்டும்" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பிராக்ஜ்யோதிஷதேசத்தரசனோடு எதிர்த்தவர்களான கிருஷ்ணார்ஜுனரிருவரையும் மிருத்யுவின் கோரப்பற்களின் ஸமீபத்தையடைந்தவர்களாக எல்லாப்பிராணிகளும் எண்ணின. அந்தப்பகதத்தன் யானையின் பிடரின்மீதிருந்துகொண்டு, ரதத்தின்மீதுள்ள கிருஷ்ணார்ஜுனர்களின்மேல் அவ்வாறு அம்புமழைகளை ஓயாமற்பொழிந்தான். மகாராஜரே! பிறகு, உருக்கினால் செய்யப்பட்டவைகளும் நன்றாக வளைக்கப்பட்ட வில்லிலிருந்து வெளிப்பட்டவைகளும் பொற்கட்டுக்களையுடையவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளாலே தேவகீகுமாரரான கிருஷ்ணபகவானை அடித்தான். அக்னிஸ்பர்சத்துக்குச்சமமாயிருப்பவைகளும் கூர்மையுள்ளவைகளும் நல்ல இறகுகளுள்ளவைகளுமான அம்புகள் பகதத்தனால் விடப்பட்டுத் தேவகீகுமாரரைப் பிளந்து பூமியில் பிரவேசித்தன. அர்ஜுனன் அந்தப்பகதத்தனுடைய வில்லையும் அறுத்து அவன்பரிவாரத்தையும் கொன்று பகதத்தராஜனை லாலனம் செய்கிறவன்போலிருந்துகொண்டு போர்புரிந்தான். அந்தப்பகதத்தன் ஸூர்யகிரணத்துக்கொப்பானதும் கூர்மையுள்ளதுமான பதினான்குதோமரங்களைப் பிரயோகஞ்செய்தான். பிறகு, ஸவ்யஸாசி ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகத் துண்டாக்கினான். இந்திரகுமாரனான அர்ஜுனன் யானையினுடைய கவசத்தைப் பெரிய பாணசமூகத்தால் உடைத்தான். அது பூமியில் சிதறிவிழுந்தது. சிதறின கவசத்தையுடைய அந்தயானையானது அம்புகளால் மிகப்பீடிக்கப்பட்டு, வர்ஷதாரையினால் நனைக்கப்பட்டும் மேகமில்லாமலுமிருக்கின்ற பர்வதராஜன்போல விளங்கியது. பிறகு, பிராக்ஜ்யோதிஷ தேசத்தரசன் பொற்காம்புள்ளதும் இரும்பினால் செய்ததுமான சக்தியாயுதத்தை வாஸுதேவர்மீது பிரயோகம்செய்தான். அதனை அர்ஜுனன் இரண்டாகவெட்டினான். பிறகு, அர்ஜுனன் பகதத்தராஜனுடைய குடையையும் கொடியையும் அம்புகளால்அறுத்து அதிகமான கர்வங்கொண்டு பத்துப்பாணங்களாலே சீக்கிரமாகப் பர்வதேசுவரனைப் பிளந்தான். பின்பு ,அந்தப் பகதத்தராஜன் நல்லகணுக்களையுடையவைகளும் கழுகிறகுகளுள்ளவைகளுமான அர்ஜுனனுடைய அம்புகளாலே அதிகமாக அடிக்கப்பட்டுக் கோபங்கொண்டு வெள்ளைக்குதிரைகளையுடைய அர்ஜுனனுடையமுடியில் தோமரங்களைப்பிரயோகித்து ஸிம்மநாதம் செய்தான். அந்தத்தோமரங்களாலே யுத்தகளத்தில் அர்ஜுனனுடைய கிரீடமானது பின்புறம் திருப்பப்பட்டது. அர்ஜுனன், திரும்பின அந்தக்கிரீடத்தை ஸரியாகவைத்துக்கொண்டே பகதத்தராஜனை நோக்கி, 'பகதத்த! உலகத்தை நீ நன்றாகப்பார்' என்று சொன்னான்.

இவ்வாறு சொல்லக்கேட்ட பகதத்தனே மிகுந்தகோபங்கொண்டு ஜ்வலிக்கின்ற வில்லையெடுத்துப் பாண்டவன்மீதும் கிருஷ்ணன்மீதும் அம்புமழையைப்பொழிந்தான். அர்ஜுனன், அந்தப்பகதத்தனுடைய வில்லையும்அறுத்து அவன்அம்புப்பெட்டிகளையுமுடைத்து அதிவேகத்தோடு எழுபத்திரண்டுபாணங்களால் எல்லாமர்மஸ்தானங்களிலும் அடித்தான். அடிக்கப்பட்டவனும் அதனால் அதிகமானதுன்பத்தை அடைவிக்கப்பட்டவனுமான பகதத்தன் கோபங்கொண்டு வைஷ்ணவாஸ்திரமந்திரத்தை உச்சரித்து அங்குசத்தை அபிமந்திரணஞ்செய்து பாண்டவனுடைய மார்பில் பிரயோகித்தான். பகதத்தனால் விடப்பட்டதும் எல்லோரையும் கொல்லுந்தன்மையுள்ளதுமான அந்த அஸ்திரத்தைக் கேசவர் பார்த்தனை மறைத்துக்கொண்டு தமதுமார்பினால் ஏற்றுக்கொண்டார். அந்தஅஸ்திரமானது ஸ்ரீகிருஷ்ணருடைய மார்பில் தாமரைமொட்டுக்களால் விசித்திரமானதும் எல்லாருதுக்களிலுமுண்டாகிற புஷ்பஸமூகங்களையுடையதும் அக்னி, ஸூர்யன், சந்திரன் இவர்களின் காந்திபோன்றகாந்தியுள்ளதும் நெருப்புப்போல் மிகவிளங்குகின்ற தளிர்களுள்ளதுமான வைஜயந்தியென்னும் மாலையாகியது. காயாம்பூவுக்கொப்பானவரும் சூரகுலத்தில்தோன்றியவருமான ஸ்ரீகிருஷ்ணபகவான் தாமரையிதழ்களுள்ளதும் காற்றினால் அசைவுற்ற தளிர்களுள்ளதுமான அந்தவனமாலையால் மிகப்பிரகாசித்தார். பிறகு, அர்ஜுனன் மனம்வாடி ஸ்ரீகேசவரைப்பார்த்து, 'ஜநார்த்தனரே! புண்டரீகாக்ஷரே! நான் யுத்தஞ்செய்யாமல் குதிரையைநடத்துவேன்' என்றுசொல்லிவிட்டு, உம்முடையபிரதிஜ்ஞையை நீர்காப்பாற்றுகிறீரில்லை. யான் விசனத்தை அடைந்திருந்தாலாவது, அன்றி, அடக்கும்விஷயத்தில் சக்தியற்றிருந்தாலாவது, நீர் இவ்வாறுசெய்யத்தகும். யான் யுத்தத்தில் ஸன்னத்தனயிருக்கும்பொழுது இவ்விதகார்யம் (உம்மால்) செய்யத்தக்கதன்று. அம்பையும் வில்லையுமுடைய நான் தேவர்கள், அஸுரர்கள், மனிதர்கள் இவர்களோடுகூடிய இவ்வுலகங்களைஜயிக்கத் திறமையுள்ளவன்; அதுவும் உமக்குத்தெரிந்தவிஷயம்" என்றுசொன்னான்.

பிறகு, வாஸுதேவர் அர்ஜுனனைநோக்கி, 'குற்றமற்றபார்த்த! முற்காலத்தில்நடந்ததும் இரகசியமுமான இதனைக்கேள்:— பிராணிகளைத்தரிப்பவளும் ஸர்வப்பிராணிகளையும் போஷிக்கின்றவளுமான பூதேவியானவள் காமமுடையவளாக லோககர்த்தாவான ஸ்ரீமந்நாராயணனை அடைந்தாள். அந்தப்பகவான் அவளுடன்சேர்ந்து பிரீதியை

ந்து அவனுக்கு வரத்தையும் கொடுக்கஆரம்பித்தார். அந்தப்பூதேவி, விஷ்ணுதுல்யனான புத்திரனையும் வைஷ்ணவாஸ்திரத்தையும் வேண்டினாள். அந்தப்பூதேவிக்கு நரகனென்று பிரஸித்தனான ஒருபுத்ரன் பிறந்தான். அந்தநரகனுக்கு நாராயணர் தாமாகவே வைஷ்ணவாஸ்திரத்தையும் கொடுத்தார். இவ்வாறு ஸர்வசத்ருநாசகமான இந்தநாராயணாஸ்திரமானது நரகாஸுரனுக்குக்கிடைத்திருந்தது. எல்லாஆயுதங்களையும் நாசம்பண்ணக்கூடிய அந்தவைஷ்ணவாஸ்திரமானது அந்தநரகாசுரனிடத்தினின்று பகதத்தனை அடைந்தது. அர்ஜுன! இந்தலோகத்தில் என்னைத்தவிர வேறொருவனும் இந்த வைஷ்ணவாஸ்திரத்திற்குக் கொல்லத்தகாதவனல்லன். ஆதலால்,என்னால் இந்தக்காரியம்செய்யப்பட்டது. உனக்கு வேறுவிதமான எண்ணம் உண்டாகவேண்டாம்' என்று அர்த்தமுள்ளவார்த்தையைச் சொன்னார். ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ஜுனனை ஸமாதானஞ்செய்து, 'பிராக்ஜ்யோதிஷபதியைச் சீக்கிரமாகக்கொல்; மிச்சமிருக்கிற என்வார்த்தையையும் கேள். நான் நான்குமூர்த்தியுள்ளவனாக அடிக்கடி உலகத்தைக்காப்பதற்காக முயற்சிசெய்கிறேன். இவ்வுலகத்தில் என்ஸ்வரூபத்தைப்பிரித்து உலகங்களுக்கு ஹிதத்தைச்செய்கிறேன். என்னுடைய [1] ஒருமூர்த்தியானது இப்புவியிலிருந்துகொண்டு தபோனுஷ்டானத்தைச்செய்கிறது. மற்றொருமூர்த்தியானது ஸாக்ஷியாயிருந்து நன்மைதீமைகளைச்செய்கின்ற உலகத்தைப் பார்க்கிறது; [2] மற்றொரு மூர்த்தியானது மானிடவுலகத்தை அடைந்து கர்மத்தைச் செய்கின்றது. [3] மற்றொன்றான நான்காவது மூர்த்தியானது ஆயிரம் வருஷமாயுள்ள நித்திரையைச் செய்கின்றது. ஆயிரம்வருஷத்தின் முடிவில் எழுந்திருப்பதான என்னுடைய அந்த மூர்த்தியானது அக்காலத்தில் வரன்பெற்றுக்கொள்பவர்களுக்குச் சிறந்தவரன்களைக் கொடுக்கிறது. அந்த ஸமயம் நேர்ந்திருப்பதை அறிந்து பூமியானவள் அப்பொழுது நரகாஸுரனுக்காக என்னிடம் எந்த வரனை வேண்டினாளென்பதைக்கேள். 'என்குமாரன் தேவர்களாலும் அஸுரர்களாலும் கொல்லத்தகாதவனாயிருக்கவேண்டும்; வைஷ்ணவாஸ்திரத்தையடைந்தவனும் ஆகவேண்டும். தேவரீர் எனக்கு இந்த வரத்தை அளிக்கவேண்டும்' என்றாள். அப்போது இவ்விதமாக விரும்பிய வரனைக்கேட்டு, பூமியின் புத்திரனான நரகாஸுரனுக்கு முற்காலத்தில் பயனற்றதாகாத சிறந்த வைஷ்ணவாஸ்திரத்தைக் கொடுத்தேன். நான் அவனை

---

[1] 'பதரிகாச்ரமத்திலுள்ள நாராயணன்' என்பது பழையஉரை. [2] 'ராமன் கிருஷ்ணன்முதலான ஸ்வரூபமாயுள்ளது' என்பது பழையவுரை. [3] 'ஜலத்தில் சயனித்திருக்கும் மூர்த்தி' என்பது பழையவுரை.

நோக்கி, 'பூமியே! இந்த அஸ்திரம் பழுதாகாமல் நரகனைக்காத்துக்கொண்டிருக்கட்டும். இவனை ஒருவனும் கொல்லப்போகிறதில்லை. இந்த அஸ்திரத்தினால் காக்கப்பட்ட உன்னுடைய குமாரன் சத்துருஸேனையை நாசம்பண்ணுகிறவனும் எப்பொழுதும் எல்லாவுலகங்களிலும் (யாராலும்) ஜயிக்கமுடியாதவனுமாவான்' என்றும் சொன்னேன். நல்லமனமுள்ள பூதேவியும், 'அது அவ்விதமே ஆகுக' என்று சொல்லிவிட்டு, விருப்பம் நிறைவேறினவளாகிச் சென்றாள். அந்த நரகாஸுரனும், சத்துருக்களைவாட்டுகிறவனும் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவனுமானான். பார்த்த! என்னுடைய அந்த அஸ்திரமானது நரகனிடத்தினின்று பகதத்தனை அடைந்தது. இந்திரன், ருத்ரன் இவர்களோடு கூடின உலகங்களில் இந்த அஸ்திரத்தினால் கொல்லத்தகாதவன் ஒருவனும் இல்லை. ஆதலால், இந்த அஸ்திரமானது உன்னிமித்தமாக என்னால் வேறுவிதமாகச் செய்யப்பட்டது. பார்த்தனே! உத்தமமான இந்த அஸ்திரத்தை இழந்திருக்கிற மகாஸுரனைக்கொல். இந்தப்பகதத்தன் இந்த மகாஸ்திரஸம்பந்தத்தினாலே தேவாஸுரர்களாலும் கொல்லத்தகாதவனாயிருக்கிறான். யான் முற்காலத்தில் நன்மையின்பொருட்டு நரகாசுரனைக்கொன்றதுபோலவே நீயும், தேவசத்துருவும் ஜயிக்கமுடியாதவனும் விரோதியுமான பகதத்தனைக்கொல்' என்று விரைவுடன் கூறினார்.

மகாத்மாவான கேசவர் அப்பொழுது இவ்வாறு சொல்ல, அர்ஜுனன் பகதத்தன்மீது கூர்மையான அம்புகளை வேகமாக இறைத்தான். பிறகு, மிக்கபுஜபலமுள்ளவனும் உதாரமான மனத்தையுடையவனுமான அந்தப்பார்த்தன் பரபரப்பில்லாதவனாகி யானையை அம்பினால் இரண்டு கும்பஸ்தலங்களுக்குமிடையில் அடித்தான். அந்தப்பாணமானது வஜ்ராயுதம் மலையை அடைவதுபோல அந்தயானையை அடைந்து புற்றினுள் பாம்புசெல்வதுபோலக் கணுவுடன் சென்றது. பகதத்தனாலே அடிக்கடி தூண்டப்பட்டும், தரித்ரனுடைய வார்த்தையை மனைவி அனுஷ்டியாததுபோல, அந்தயானையானது அவனுடைய வார்த்தையை அனுஷ்டிக்கவில்லை. அந்தப்பெரியயானையோ அங்கங்களை ஸ்தம்பனஞ் செய்துகொண்டும் தந்தங்களால் பூமியைமுட்டிக்கொண்டும் தீனமான ஸ்வரத்துடன் அலறிக்கொண்டும் பிராணனை விட்டது. பிறகு, கேசவர் காண்டீவத்தைத் தனுஸாகக்கொண்ட அர்ஜுனனை நோக்கி, 'பார்த்த! இவன் மேன்மைபெற்றவன்; நரையினால் நன்குமூடப்பட்டவன்; மடித்தசதையினாலே நன்றாகமறைக்கப்பட்ட கண்களுள்ள

வன்; சூரன்; எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவன். இவ்வரசன் கண்கள் திறந்திருப்பதற்காகப் பட்டுவஸ்திரத்தால் (தூக்கிக்) கட்டிக்கொண்டிருக்கிறான்' என்று சொன்னார். அர்ஜுனன் கிருஷ்ணனுடைய வாக்யத்தைக் கேட்டு அம்பினாலே அந்தவஸ்திரத்தை நன்றாக அறுத்தான். அது அறுக்கப்பட்டவுடன் அந்தப்பகதத்தன் கண்கள் மறைக்கப்பட்டவனானான். பிரதாபசாலியான பகதத்தன் உலகத்தை இருள்மயமாக எண்ணினான். பிறகு, பாண்டவன் பதிந்தகணுக்களுள்ளதும் பிறைவடிவமாயிருப்பதுமான அம்பினாலே பகதத்தராஜனுடைய மார்பைப் பிளந்தான். கிரீடியினால் மார்புபிளக்கப்பட்ட அந்தப்பகதத்தராஜன் உயிரை இழந்து வில்லையும் அம்புகளையும் நழுவவிட்டான். காம்பைத்தட்டினவுடன் தாமரைப்பூவினின்று இதழ் உதிர்கின்றதுபோல அந்தப்பகதத்தனுடைய தலையிலிருந்து சிறந்த வஸ்திரம் நழுவிவிழுந்தது. பொன்மாலையையணிந்த அந்தப்பகதத்தனானவன் பொன்னாபரணங்களுள்ளதும் மலைபோன்றதுமான யானையிலிருந்து நன்குபூத்தகர்ணிகாரமரமானது மலையுச்சியிலிருந்து காற்றின் வேகத்தினாலொடிக்கப்பட்டு விழுவதுபோல விழுந்தான்; இந்திரகுமாரனான அர்ஜுனன் அப்பொழுது ரணகளத்தில் இந்திரனுடைய வல்லமைபோன்ற வல்லமைபொருந்தியவனும் இந்திரனுக்குநண்பனுமான அந்தப்பகதத்தனென்னும் அரசனைக் கொன்ற பிறகு, உமக்கு ஜயத்தை விரும்புகின்றவர்களான மற்ற வீரர்களையும் பெருங்காற்றானது மரங்களை ஒடிப்பதுபோல நாசஞ்செய்தான்.

---

## முப்பதாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனனுடைய யுத்தத்தை வர்ணித்தது.)

அர்ஜுனன், எப்பொழுதும் இந்திரனுக்குப்பிரியநண்பனும் அளவற்றவல்லமையுள்ளவனுமான அந்தப் பிராக்ஜ்யோதிஷாதிபதியைக்கொன்றுவிட்டு வலமாக வந்தான். பிறகு, சத்துருபட்டணங்களை ஜயிப்பவர்களும் ஸகோதரர்களும் காந்தார ராஜகுமாரர்களுமான விருஷகன், அசலன் என்கிற இருவரும் அர்ஜுனனை யுத்தத்தில் துன்பஞ்செய்தார்கள். அந்தச்சூரர்கள் ஒன்றுசேர்ந்து விற்களைத்தாங்கி மகாவேகமுள்ளவையும், கூர்மையுள்ளவையுமான அம்புகளாலே அர்ஜுனனை

முன்புறத்திலும் பின்புறத்திலும் அதிகமாக அடித்தார்கள். அர்ஜுனன் கூர்மையான அம்புகளாலே ஸௌபலனுடைய விருஷகனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் வில்லையும் குடையையும் ரதத்தையும் துவஜத்தையும் எள்ளளவெள்ளளவாக நாசஞ்செய்தான். பிறகு அவன், அம்புக்கூட்டங்களாலும் பலவித ஆயுதங்களாலும் ஸௌபலனை முதன்மையாகக்கொண்ட காந்தாரர்களையும் கலக்கமுள்ளவர்களாகச் செய்தான். பிறகு, தனஞ்சயன், கோபங்கொண்டு, ஆயுதங்களைக்கையில் எடுத்த சூரர்களான ஐந்நூறு காந்தாரர்களை அம்புகளால் யமலோகத்திற்கனுப்பினான். மிக்கபுஜபலமுள்ளவனான விருஷகன் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று சீக்கிரம் இறங்கித் தன் ஸகோதரனான அசலனுடைய ரதத்திலேறி வேறு தனுஸையும் எடுத்தான். ஒரே ரதத்தின் மீதேறின ஸகோதரர்களான அந்த விருஷகனும் அசலனும் அம்புமழையினாலே அடிக்கடி பீபத்ஸுவை அடித்தார்கள். உமக்கு மைத்துனர்களும் மகாபலசாலிகளும் அரசர்களுமான அவர்கள் இந்திரனை, விருத்ரனும் பலனும் அடித்ததுபோலப் பார்த்தனை மிக அடித்தார்கள். கிரீஷ்மருதுவைச்சேர்ந்த மாஸங்கள் உஷ்ணமான கிரணங்களால் எவ்வாறு உலகத்தைத்தபிக்கும்படிசெய்யுமோ அவ்விதமே லக்ஷ்யத்தையறிந்தவர்களான காந்தாரராஜர்களிருவரும் பாண்டவனை அடிக்கடி அடித்தார்கள். மன்னரே! ஒரே ரதத்தின்மீதேறித் தேகத்தோடு தேகமுரைந்து சேர்ந்துநிற்கின்ற புருஷஸ்ரேஷ்டர்களான விருஷகன் அசலன் என்கிற அந்த அரசரிருவரையும் அர்ஜுனன் ஒரே பாணத்தினால் கொன்றான். வேந்தரே! சௌர்யமுள்ளவர்களும் ஒரேமாதிரியான லக்ஷணமுள்ளவர்களும் ஸிம்மத்துக்கொப்பானவர்களும் சிவந்தகண்களையுடையவர்களும் பெரிய புஜங்களையுடையவர்களும் ஸகோதரர்களுமான அவ்விருவரும் ரதத்தினின்று கீழேவிழுந்தார்கள். தேரினின்று பூமியை அடைந்தவையும் பந்துஜனங்களுக்குப் பிரியமாயிருக்கின்றவையுமான அவ்விருவருடைய சரீரங்களும் பரிசுத்தமான கீர்த்தியைப் பத்துத்திக்குக்களையும் அடையும்படி செய்வித்துக்கொண்டு கிடந்தன. அரசரே! (யுத்தத்தைவிட்டு) ஓடாதவர்களான தம் மாமன்மார்களிருவரும் யுத்தத்தில் கொல்லப்பட்டது கண்டு, உம்முடைய குமாரர்கள் மிகுந்த கண்ணீரைச்சொரிந்தார்கள். பிறகு, பிராதாக்கள் கொல்லப்பட்டதைக்கண்டு, அனேகமாயைகளில் ஸமர்த்தனான சகுனியானவன், கிருஷ்ணார்ஜுனர்களை மோகிக்கச்செய்துகொண்டு மாயையை உண்டுபண்ணினான். (மாயையினால்) அர்ஜுனன்மீது திக்குக்களினின்றும் திக்கோணங்களினின்றும் நூற்றுக்கணக்காகத் தடிகளும் இருப்

புலக்கைகளும் கற்களும் சக்திகளோடுகூடின சதக்னிகளும் கதாயுதங்களும் பரிகங்களும் ரீண்டகத்திகளும் சூலங்களும் முத்கரங்களும் பட்டஸங்களும் கம்பனங்களும் ரிஷ்டிகளும் நகரங்களும் உலக்கைகளும் கோடாலிகளும் க்ஷுரங்களும் க்ஷுரப்ரங்களும் நாளீகங்களும் வத்ஸதந்தங்களும் அஸ்திஸந்திகளும் சக்ரங்களும் பாணங்களும் பிராஸங்களும் இன்னும் அனேகமான ஆயுதங்களும் விழுந்தன. கழுதைகளும் ஒட்டகங்களும் கடாமாடுகளும் ஸிம்மங்களும் வேங்கைகளும் கவயங்களும் புலிகளும் கரடிகளும் நாய்களும் கழுகுகளும் குரங்குகளும் பாம்புகளும் பசியுள்ள பலவிதமான ராக்ஷஸர்களும பலவகைப் பக்ஷிகளும் மிக்ககோபங்கொண்டு அர்ஜுனனைக்குறித்து எதிர்த்து ஓடிவந்தன. பிறகு, திவ்யாஸ்திரங்களை யறிந்தவனும் சௌர்யமுடையவனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயன் அம்புக்கூட்டங்களைத் தொடுத்துக்கொண்டு சீக்கிரமாக அவைகளை யடித்தான். சூரனான அவனால் சிறந்த உறுதியான அம்புகளால் பீடிக்கப்படுகின்ற அந்தப்பிராணிகள் நான்குபக்கங்களிலும் அடிக்கப்பட்டுப் பெருங்கூச்சலிட்டு அலறிக்கொண்டு நாசமடைந்தன. பிறகு, அர்ஜுனனுடைய ரதத்தைநோக்கி இருள்தோன்றியது. அந்த இருளினிடத்தினின்று குரூரமான வாக்குகள்தோன்றி அவனை வெருட்டின. அர்ஜுனன், பயங்கரமானதும் கோரஸ்வரூபமுள்ளதும் மஹாயுத்தத்தில் பயத்தை உண்டுபண்ணுகின்றதுமான அந்த இருளை மகிமைபொருந்திய சோதிமயமான உத்தமாஸ்திரத்தினால் நாசம் செய்தான். அவ்விருள் நாசம் பண்ணப்பட்டபின், பயங்கரமான ஜலப்பிரவாகங்கள் தோன்றின. அந்த ஜலத்தை நாசம்செய்யும்பொருட்டு உடனே அர்ஜுனன் ஸௌர்யாஸ்திரத்தைப் பிரயோகஞ் செய்தான். பிறகு, அந்த அஸ்திரத்தினாலே தண்ணீரானது பெரும்பான்மையும் வற்றச்செய்யப்பட்டது. இவ்வாறு ஸௌபலனான சகுனியினாலே அடிக்கடி உண்டுபண்ணப்பட்ட பலவித மாயைகளை அர்ஜுனன் தன் அஸ்த்ரபலத்தினால் விரைவாக நாசஞ் செய்து சிரித்துக்கொண்டு (சகுனியை நோக்கி,) 'ஓ! கெட்ட சூதாட்டக்கார! காந்தாராதிபதியே! இக்காண்டீவமானது சொக்கட்டான்காய்களைப் போடாது; இக்காண்டீவமோ ஜ்வலிக்கின்றவையும் தீட்டப்பட்டவையும் கூர்மையுள்ளவையுமான அம்புகளைப் பிரயோகிக்கும்'என்று சொன்னான். அப்பொழுது மாயைகள் நாசம் செய்யப்பட்டவுடன், பயந்த சகுனியானவன், அர்ஜுனனுடைய பாணங்களாலடிக்கப்பட்டு, வேகமான குதிரைகளோடு அற்பன்போலச் சென்றான். பிறகு, அஸ்திரங்களை யறிந்தவனான அர்ஜுனன் தன் சுறுசுறுப்பைச் சத்துருக்களின்

மீது காண்பித்துக்கொண்டு கௌரவர்களுடைய ஸேனையில் அம்புமழை யைப் பொழிந்தான். மகாராஜரே! பார்த்தனாலே அடிக்கப்படுகின்ற உமது புத்திரனுடைய அந்த ஸேனையானது மலையை அடைந்த கங்கா பிரவாகம்போல இரண்டாகப்பிரிந்தது. அரசரே! அந்தச்சேனையில் கிரீடியினால் ஹிம்ஸிக்கப்படுகின்ற சில நரஶ்ரேஷ்டர்கள் துரோணரையே தொடர்ந்து சென்றார்கள். சிலர் துரியோதனனைத் தொடர்ந்தார்கள். பிறகு, சேனையானது புழுதியினால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்ட பொழுது அந்தக்கிரீடியை நாங்கள் காணவில்லை. காண்டீவத்தினுடைய இடிமுழக்கம்போன்ற ஒலி என்னால் தென்பக்கத்தில் கேட்கப்பட்டது. காண்டீவத்தின் ஒலியோ சங்குகள் துந்துபிகள் இவைகளுடைய ஓசையையும் நான்குவிதமான வாத்யங்களுடைய ஒலியையும்தாண்டி ஆகாயத்தை அளாவியது. பிறகு, சித்ரயுத்தம் பண்ணுகிறவர்களுக்கும் அர்ஜுனனுக்கும் மறுபடியும் தென்புறத்தில் நல்ல யுத்தம் நேர்ந்தது. நானோ துரோணரைப் பின்தொடர்ந்தேன். பாரதரே! ஆங்காங்கு யுதிஷ்டிரருடைய படைகளை அடிக்கின்ற உமது புத்ரர்களின் பலவிதமான படைகளை அர்ஜுனன் ஆகாயத்தில் மழைக்காலத்து மேகங்களைக் காற்றுச் சிதறஅடிப்பதுபோலச் சிதறஅடித்தான். இந்திரனைப்போல (யுத்தத்தில்)வருகின்றவனும் அளவில்லாத பாணவர்ஷங்களைப்பொழிகின்றவனும் உக்கிரஸ்வரூபியுமான அந்த அர்ஜுனனை மகாவில்லாளிகளும் புருஷஶ்ரேஷ்டர்களுமான யுத்தவீரருள் எவரும் தடுக்கவில்லை. அர்ஜுனனாலே உம்மைச்சேர்ந்தவர்கள் அடிக்கப்பட்டு மிகுந்ததுன்பத்தை யடைந்து ஆங்காங்கு ஓடுகின்றவர்களாகித் தம்மைச்சேர்ந்தவர்களையே பலர் கொன்றார்கள். அர்ஜுனனாலே விடப்பட்ட கழுகிறகுகள்பூண்ட அவ்வம்புகள் சரீரங்களைப்பிளந்துகொண்டு விட்டிற்பூச்சிகள்போலப் பத்துத்திக்குக்களையும் மூடிக்கொண்டு விழுந்தன. பெரியவரே! அவைகள், குதிரையையும் ரதிகனையும் யானையையும் காலாளையும் பிளந்துகொண்டு புற்றில் ஸர்ப்பங்கள் பிரவேசிப்பதுபோலப் பூமியில்பிரவேசித்தன. அந்த அர்ஜுனன், யானைகளின்மீதும் குதிரைகளின்மீதும் மனிதர்களின்மீதும் இரண்டாவதுபாணத்தை விடவேயில்லை. தனித்தனியாக அவைகள் ஒவ்வொரு பாணத்தாலடிக்கப்பட்டு உயிரிழந்து விழுந்தன. கொல்லப்பட்ட மனிதர்களாலும் யானைகளாலும் நான்குபக்கங்களிலும் பாணங்களாலடித்துத் தள்ளப்பட்ட குதிரைகளாலும், விசித்ரமான அந்தப்போர்க்களமானது அப்பொழுது நாய் நரிகளின் கூட்டங்களால் ஒலியுள்ளதாகியது. அம்பினாலே பீடிக்கப்பட்டுத் தகப்பன் பிள்ளையை யிழந்தான். ஸ்நேகிதன் உத்தமஸ்நேகிதனை இழந்தான்,

அவ்விதமாகவே புத்ரன் பிதாவைவிழந்தான். அப்பொழுது, பார்த்தனால் பீடிக்கப்பட்ட வீரர்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்வதில் எண்ணங்கொண்டவர்களாக வாகனங்களையும் விட்டுவிட்டார்கள்" என்று கூறினான்.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(அச்வத்தாமா நீலனைக்கொன்றது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பாண்டுகுமாரனான அர்ஜுனனாலே அந்தப்படைகள் அடிக்கப்பட்டபொழுது, நிலைமைதப்பினவர்களும் ஓடியவர்களுமான உங்கள் மனங்கள் எவ்வாறிருந்தன? ஸஞ்சய! தோல்வியடைவிக்கப்பட்டு நிலைகாணாமலிருக்கிற ஸைனிகர்களை மீண்டும் நிலைபெறும்படி செய்வது அஸாத்தியமே. அதனை எனக்குச்சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! அவ்வாறிருந்தும் சிறந்த வீரர்கள் உம்முடைய குமாரனுக்குப் பிரியத்தைச்செய்ய எண்ணங்கொண்டு உலகங்களில் கீர்த்தியைப் பாதுகாக்கின்றவர்களாகத் துரோணரைப்பின்தொடர்ந்தார்கள். அவர்கள், (பாண்டவசேனைகள்) அஸ்திரங்களை எடுக்கவும் யுதிஷ்டிரரும் (ஸமீபத்தில்) வந்திருக்கவும் பயம்நேர்ந்திருக்கும்பொழுது, பயமற்றவர்கள்போலவே உத்தமமான காரியங்களைச்செய்தார்கள். விபுவே! அளவுகடந்த வீர்யமுள்ளவர்களான கௌரவ வீரர்கள், பீமஸேனனும் வீரனான ஸாத்யகியும் திருஷ்டத்யும்னனும் தவறும் ஸமயத்தை எதிர்பார்த்து வந்தார்கள். கொடியவர்களான பாஞ்சாலர்கள், 'துரோணரைக் கொல்லுங்கள், துரோணரைக் கொல்லுங்கள்' என்று ஏவினார்கள். உம்முடைய குமாரர்கள், 'துரோணரைக் கொல்லப்படும்படி விடவேண்டாம்' என்று எல்லாக்கௌரவர்களையும் தூண்டினார்கள். சிலர், 'துரோணரைக் கொல்லுங்கள்; துரோணரைக் கொல்லுங்கள்' என்றார்கள். மற்றவர்கள், 'துரோணரைக் கொல்லப்படும்படிவிடவேண்டாம்' என்றார்கள். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் துரோணத்யூதமானது நேர்ந்தது. துரோணர் பாஞ்சாலர்களுடைய தேர்க்கூட்டத்தை நாசம்பண்ணும் இடந்தோறும் பாஞ்சாலகுமாரனான திருஷ்டத்யும்னன் எதிர்த்தான். அவர்களுடைய பாக்யக்குறைவால் பயங்கரமான யுத்தம் நேர்ந்தபொ

ழுது, வீரர்கள் பயங்கரமான ஸிம்மநாதத்தைச் செய்துகொண்டு வீரர்களை எதிர்த்தார்கள். அந்தயுத்தத்தில் பாண்டவர்கள் சத்துருக்களால் நடுக்கமடையும்படி செய்யத்தகாதவர்களானார்கள். அவர்கள் தங்களுடைய கிலேசங்களை நினைத்துக்கொண்டு ஸைன்யங்களை நடுங்கும்படி செய்தார்கள். அவர்கள் மஹாயுத்தத்தில் கோபத்திற்கு வசப்பட்டவர்களாகவும் வெட்கப்பட்டவர்களாகவும் பலத்தினால் தூண்டப்பட்டவர்களாகவும் பிராணனை இழக்கத்துணிந்து, துரோணரை அம்புகளாலடித்துக்கொண்டு (பயத்தினின்று) திரும்பினார்கள். நெருங்கிய யுத்தத்தில், உயிரைப் பந்தயப்பொருளாகக்கொண்ட விளையாட்டைச்செய்கின்ற அளவற்ற பலமுள்ளவர்களுக்கு இரும்புகளுக்கு மோதுதல் உண்டாவதுபோலவும் கற்களுக்கு மோதுதல் உண்டாவதுபோலவும் மோதுதல் உண்டாயிற்று. அஸுரர்களோடு தேவர்களுக்கு நேர்ந்த அத்புதமான யுத்தத்தைக்கண்டிருக்கிற அந்தமுதியோர்கள், அப்படிப்பட்ட யுத்தத்தையும் நினைக்கவில்லை. வீரர்கள் மடியும்படியான அந்த யுத்தத்தில் திரும்பிவருகின்ற பெரிய ஸேனாஸமூகத்தினுடைய பாரத்தினால் பீடிக்கப்பட்டுப் பூமியானது மிகநடுங்கியதுபோலாயிற்று. சுழலுகின்றபெரிய ஸேனையினுடைய மிக்கபயங்கரமான சப்தமானது, ஆகாயத்தை நிரப்பியதுபோல அஜாதசத்துருவான யுதிஷ்டிரருடைய அந்தச்சேனையில் பிரவேசித்தது. யுத்தரங்கத்தில் ஸஞ்சரிக்கின்ற துரோணராலே பாண்டவர்களுடைய சேனைகளை எதிர்த்துக் கூர்மையான அம்புகளால் ஆயிரக்கணக்கான படைவீரர்கள் கொல்லப்பட்டார்கள். ஆச்சரியமான செய்கையையுடைய துரோணராலே அந்தப்பாண்டவசேனைகள் நாசம்பண்ணப்படும்பொழுது, ஸேனாபதியான திருஷ்டத்யும்னன் தானே அருகில் நெருங்கித் துரோணரைத்தடுத்தான். அவ்வாறு துரோணருக்கும் பாஞ்சாலகுமாரனான திருஷ்டத்யும்னனுக்கும் அவ்வித ஆச்சரியகரமான யுத்தம் நேர்ந்தது. அவ்விதமான யுத்தத்திற்கு ஒருவிதமான உவமையும் இல்லையென்றே என்னுடைய நிச்சயமானஎண்ணம். பிறகு,உலர்ந்த காட்டை நெருப்பு எரிப்பதுபோலப் பொறிகள்போன்ற அம்புகளோடும் ஜ்வாலைபோன்ற வில்லோடும்கூடி நெருப்புப்போல் ஜ்வலிக்கின்ற நீலன் கௌரவசேனையை எரித்தான். முந்திப்பேசுந்தன்மையுள்ளவரும் பிரதாபசாலியும் துரோணபுத்திரருமான அஸ்வத்தாமா ஸைனியங்களை எரிக்கின்ற அந்த நீலனைப்பார்த்துச் சிரித்துக்கொண்டு, 'ஓ! நீல! அம்புகளுடைய ஜ்வாலையினால் அனேகயுத்தவீரர்களை எரிப்பதால் உனக்கு என்னபயன்? நீ என்னொருவனோடேயே போர்புரி; கோபங்கொண்டவனான நீ விரைவாக என்னை அடி.' என்று மிகநயமாக மொழிந்

தார். பத்மங்களுடைய குவியல்போன்ற மேனியையுடையவரும், தாம ரை இதழுக்கொப்பான கண்களையுடையவருமான அந்த அஸ்வத்தாமா வை, மலர்ந்ததாமரைபோல விளங்கும் முகத்தையுடைய நீலன் அம்பு களாலடித்தான். அந்த நீலனால் அடிக்கப்பட்ட அஸ்வத்தாமா சீக்கிர மாக மூன்றுபல்லங்களால் சத்துருவினுடைய வில்லையும் கொடியையும் குடையையும் நன்குஅறுத்தார். அந்தநீலன் அந்தத்தேரினின்று குதித் துக் கேடகத்தையும் உத்தமமான கத்தியையும் பிடித்துப் பக்ஷிபோல அஸ்வத்தாமாவுடைய தலையை உடலிலிருந்து கவர்ந்துகொள்ள விரும் பினான். குற்றமற்றவரே! கத்தியையெடுத்த அந்தநீலனுடைய அழகிய மூக்கையும் குண்டலத்தையுமுடைய தலையை அஸ்வத்தாமா சிரிப்பவர் போல ஓர் அர்த்தசந்திரபாணத்தினாலே அவன்சரீரத்தினின்று அறுத் துத்தள்ளினார். பூர்ணசந்திரன்போல விளங்குகிற முகத்தையுடைய வனும் தாமரையிதழ்போன்ற கண்களையுடையவனும் உயர்ந்தவனும் உத்பலதளம்போன்ற காந்தியையுடையவனுமான நீலன் கொல்லப்பட் டுப் பூமியில் விழுந்தான். பிறகு, ஆசார்யபுத்திரரான அஸ்வத்தாமாவி னாலே ஜ்வலிக்கின்ற தேஜஸுள்ள நீலன் கொல்லப்பட்டவுடன், பாண் டவஸேனையானது மிக்கமனக்கலக்கமுற்றுத் துன்பமடைந்தது. ஐயா! பாண்டவர்களைச்சேர்ந்த அந்த மகாரதர்களெல்லாம், 'மலசாலியும் இந் திரகுமாரனுமான அர்ஜுனன் ஸேனைக்குத் தென்புறமாகவிருந்து கொண்டு, மிச்சமிருக்கின்ற ஸம்சப்தகர்களுக்கும் நாராயணர்களுடைய ஸேனைக்கும் துன்பத்தை உண்டுபண்ணுகிறான். அவன் நம்மையும் பகைவர்களிடமிருந்து எவ்வாறு பாதுகாப்பான்?' என்று எண்ணினார் கள்.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஸம்சப்தகவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தத்தை வர்ணித்தது.)

அவ்வாறு ஸேனையடிபடுவதைப் பீமஸேனன் பொறுக்கவில்லை. அவன் ஆசார்யரான துரோணரை அறுபதுபாணங்களாலும் கர்ணனைப் பத்துப்பாணங்களாலும் அடித்தான். துரோணர் பீமஸேனனுடைய உயிரை மாய்க்கஎண்ணி, தீட்டப்பட்டவைகளும் கூர்மையான நுனி களையுடையவைகளுமான அம்புகளால் பீமஸேனனை மர்மஸ்தானத்தில்

சீக்ரமாக அடித்தார். அவர் தொடர்ச்சியாக அடிக்கவிரும்பி இருபத்தாறுபாணங்களைப் பிரயோகம்செய்தார். பிறகு, கர்ணன் பன்னிரண்டு பாணங்களையும் அஸ்வத்தாமா ஏழுபாணங்களையும் துர்யோதனராஜன் ஆறுபாணங்களையும் பீமஸேனன்மீது இறைத்தார்கள். மகாபலசாலியான பீமஸேனனும் அவர்களெல்லோரையும் திருப்பியடித்தான். அவன் ஐம்பதுபாணங்களால் துரோணரையும், பத்துப்பாணங்களால் கர்ணனையும், பன்னிரண்டுபாணங்களால் துரியோதனனையும், எட்டுப்பாணங்களால் அஸ்வத்தாமாவையும் அடித்து மிக்க ஸிம்மநாதத்தைச் செய்துகொண்டு யுத்தகளத்தில் அவர்களை எதிர்த்தான். அந்தப் பீமஸேனன் மரணவஸ்தைக்கு ஸமமான அவஸ்தையை அடைவிக்கப்பட்டுப் பிராணனையிழக்கும்படியான நிலைமையிலிருக்கும்ஸமயத்தில் யுதிஷ்டிரர், 'பீமனைக் காப்பாற்றுங்கள்' என்று அந்த யுத்தவீரர்களை ஏவினர். அளவற்ற பராக்ரமமுள்ளவர்களான யுயுதானன்முதலான வீரர்களும் மாத்திரிகுமாரர்களான நகுலஸகதேவர்களும் பீமஸேனனுடைய பக்கத்தை அடைந்தார்கள். புருஷஸ்ரேஷ்டர்களும் மகாவீர்யசாலிகளுமான ரதிகர்கள் ஒன்றுசேர்ந்து மிக்க கோபமுள்ளவர்களும் மகாவில்லாளிகளால் காக்கப்பட்டவர்களும் துரோணருடைய ஸேனையைப்பிளக்க எண்ணினவர்களுமாகிப் பீமஸேனனைமுன்னிட்டுக்கொண்டு யுத்தத்திற்கு ஏகினார்கள். ரதிகர்களுள்சிறந்த துரோணரும் மனம்கலங்காமல், மகாரதிகர்களும் அதிபலசாலிகளும் வீர்யமுள்ளவர்களும் போர்புரியும்திறமையுடையவர்களுமான அந்தப்பாண்டவவீரர்களை எதிர்த்தார். பாண்டவர்கள் மரணபயத்தை வெகுதூரத்தில் விலக்கித்தள்ளி உம்மைச்சேர்ந்தவர்களை எதிர்த்தார்கள். குதிரைவீரர்கள் குதிரைவீரர்களையும் அவ்வாறே தேராளிகள் தேராளிகளையும் அடித்தார்கள். கத்திகள் சக்திகள் ரிஷ்டிகள் இவைகளுடைய கூட்டங்களாலும் கோடாலிகளாலும் யுத்தம்நேர்ந்தது. கொடுமைவிளையக்கூடிய உத்தமமான கத்திச்சண்டையும் நேர்ந்தது. போர்க்களத்தில் யானைகளுக்கும் மிக்கபயங்கரமான யுத்தம் நேர்ந்தது. இறைவரே! ஒருவன் யானையினின்று விழுந்தான். மற்றொருவன் குதிரையின்மீதிருந்து தலைகீழாகவிழுந்தான். வேறொருவன் பாணத்தினால்பிளக்கப்பட்டு ரதத்தினின்று விழுந்தான். அந்தமகாயுத்தத்தில் கவசமுடைந்து கீழே விழுந்திருக்கின்ற ஒருவனுடையதலையை யானையானது மார்பில் மிதித்துக்கொண்டு நாசஞ்செய்தது. மற்றயானைகள் கீழேவீழ்ந்திருக்கின்ற மற்றமனிதர்களை நாசஞ்செய்தன. கொம்புகளால் பூமியைத்தாக்கி அனேகம் தேராளிகளையும் பிளந்தன. மற்றுஞ்சிலயானைகள் கொம்பு

களின் நுனியில் சுற்றிக்கொண்டிருக்கிற மனிதர்களுடைய நரம்புக ளோடு யுத்தகளத்தில் மனிதர்களை நூற்றுக்கணக்காக நாசஞ்செய்து கொண்டு சுற்றிவந்தன. சிலயானைகள் உருக்குமயமானகவசங்கள்பூண்டு கீழேவிழுந்திருக்கின்ற யுத்தவீரர்களையும் குதிரைகளையும் ரதங்களை யும் யானைகளையும் பெரியகோரைகளைப்போல மிதித்தழுத்தின. அரசர் கள் வெட்கமடைந்து மிக்கவிசனப்படத்தக்கவையும் கழுகிறகுக ளாகிற மேல்விரிப்புள்ளவைகளுமான படுக்கைகளில் காலம்நேர்ந்து விட்டமையால் படுத்தார்கள். அந்தயுத்தகளத்தில் தேரோடெதிர்த்து வந்து தகப்பன் பிள்ளையைக்கொன்றான்; பிள்ளையும் தகப்பனை மதி மயக்கத்தால் கொன்றான். வரம்புகடந்து யுத்தம்நடந்தது. தேர் உடைக் கப்பட்டது; கொடி அறுக்கப்பட்டது; குடை பூமியில்தள்ளப்பட்டது. அவ்வாறே குதிரையானது ஒடிக்கப்பட்ட நுகத்தடியின்பாதியை இழுத்துக்கொண்டு விரைவாக ஓடியது. கையானது கத்தியுடன் கீழே விழுந்தது. குண்டலங்களுடன் தலை அறுக்கப்பட்டது. பலமுள்ள யானையினால் ரதமானது தூக்கி எறியப்பட்டுப் பூமியில் மிகப்பொடி யாக்கப்பட்டது. ரதிகனால் அம்பினாலடிக்கப்பட்ட யானையானது பூமி யில் வீழ்ந்தது. யானையினால் அதிகமாக எதிர்த்துத் தாக்கப்பட்ட குதிரையானது தன்மீதேறியிருக்கின்ற வீரனுடனே கீழே வீழ்ந்தது. வரம்புகடந்த பெரியயுத்தமானது மிக்கபயங்கரமாயிருந்தது. 'ஆ! ஐயா! ஆ! புத்திர! ஓ! மித்ர! எங்கிருக்கிறாய்? நில்; எங்கு ஓடு கிறாய்? கொல்; கொண்டுவா; இவனைக்கொல்' என்று இவ்விதமாகப் பலவிதமானவார்த்தைகள் சிரிப்போடும் ஸிம்மநாதங்களோடும் கர் ஜனங்களோடுங்கூடி உரக்க மிகவும் கேட்கப்பட்டன. மனிதர், குதிரை, யானை இவர்களின் இரத்தமானது உறைந்துபோயிற்று. அதனால், பூமியிலுள்ள புழுதி அடங்கியது. பயமுள்ளவர்களை மயக்கம் வந்தடைந் தது. யுத்தத்தில் ஒருவீரன் தன்சேனையோடு மற்றொருவீரனுடைய சேனையை எதிர்த்து அம்புநுழையமுடியாத ஸமயத்தில் அவன்தலை யைக் கதையினால் கவர்ந்தான். நிராதாரமான யுத்தத்தில் ஆதாரத்தை விரும்புகின்றவர்களான சூரர்களுக்கு மயிர்பிடிசண்டையும் கைக்குத் துச்சண்டையும் நகங்களாலும் பற்களாலும் பயங்கரமான சண்டையும் நேர்ந்தன. அந்தயுத்தகளத்தில், கத்தியுடன் ஓங்கப்பட்ட சூரனுடைய கையானது அறுக்கப்பட்டது. அவ்வாறே வில்லையும் அம்பையும் அங் குசத்தையுமுடைய மற்றொருவனுடைய கையும் அறுக்கப்பட்டது. இந்த யுத்தத்தில் ஒருவன் மற்றொருவனை அழைத்தான். அவ்வாறே மற்றொருவன் புறங்காட்டியோடினான். வேறொருவன் பக்கத்தில் வந்

திருக்கின்ற ஒருவனுடையதலையைச் சரீரத்திலிருந்து கொய்தான் ஒருவன் அலறிக்கொண்டு ஓடினான். மற்றொருவன் சப்தத்தினால் மிகவும்பயந்தான். பிறகு ஒருவன் கூர்மையானஅம்புகளால் தன்னைச் சேர்ந்தவர்களையே அடித்தான். மற்றொருவன் பிறர்களை அடித்தான். இந்தயுத்தபூமியில் மலையினுடைய கொடுமுடிபோன்ற யானை அம்பினாலடிக்கப்பட்டு மழைக்காலத்தில் நதிகளுடையகரை இடிந்துவிழுகிறது போல விழுந்தது. அவ்வாறே மதஜலப்பெருக்குள்ளதும் மலைபோன்றதுமான யானையானது ரதிகளையும் குதிரைகளையும் ஸாரதியையும் தேரையும் காலால் மிதித்து நாசஞ்செய்துகொண்டு யுத்தபூமியில் எதிர்த்து நின்றது. அஸ்திரங்களில் தேர்ச்சியுள்ளவர்களும் அடிக்கின்றவர்களும் ரக்தத்தால் நனைக்கப்பட்டவர்களுமான சூரர்களைக்கண்டு பயப்படுகிறவர்களும் மனோபலத்தையிழந்தவர்களுமான பலரை மோகம்வந்தடைந்தது. எல்லாம் பயமடைந்தன. ஒன்றும் அறியப்படவில்லை. சேனையினாலுண்டுபண்ணப்பட்ட புழுதியினாலே நாசம்செய்யப்பட்ட அந்தச் சேனைமுழுவதும் வரம்புகடந்திருந்தது. பிறகு,சேனாபதியானவன், 'இதுதான் ஸமயம்' என்று சொல்லிக்கொண்டு எப்பொழுதுமே பகைவர்களைநோக்கிச் செல்வதில் வேகமுள்ளவர்களான பாண்டவர்களைச் சீக்கிரமாக (துரோணரை எதிர்க்கும்படி) தூண்டினான். புஜபலமுள்ளபாண்டவர்கள் அவனுடைய கட்டளையை அநுஷ்டிக்கின்றவர்களாக அன்னப்க்ஷிகள் தடாகத்தைச் சூழ்வதுபோலத் துரோணருடையரதத்தை நான்குபக்கங்களிலும் அடித்துக்கொண்டு சூழ்ந்தார்கள். (எவ்விதத்தாலும்) ஜயிக்கமுடியாதவரான துரோணருடைய தேரிருக்குமிடத்தில், 'பிடியுங்கள்; நான்குபக்கங்களிலும் ஓடிவளையுங்கள்; பயமற்றவர்களாக வெட்டுங்கள்' என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொள்ளுகிற இடைவெளியற்ற சப்தமானது உண்டாயிற்று. பிறகு, துரோணரும் கிருபரும் கர்ணனும் அஸ்வத்தாமாவும் துரியோதனனும் ஜயத்ரதனும் அவந்திதேசத்தரசர்களான விந்தாநுவிந்தர்களும் சல்யனும் அந்தப் பாண்டவர்களைத் தடுத்தார்கள். உத்தமமான யுத்ததர்மத்தில் மிகுந்த ஆவேசங்கொண்டவர்களும் தடுக்கவும் நெருங்கவும் முடியாதவர்களுமான அந்தப் பாஞ்சாலர்கள் பாண்டவர்களோடுசேர்ந்து பாணங்களாலேபீடிக்கப்பட்டும் துரோணரை விடவில்லை. பிறகு, துரோணர் மிக்ககோபமுண்டு நூற்றுக்கணக்காக அம்புகளைத்தொடுத்துக்கொண்டு, சேதிதேசத்தரசர்களுக்கும் பாஞ்சாலர்களுக்கும் பாண்டவர்களுக்கும் மிக்கதுன்பத்தைச்செய்தார். பெரியவரே! இடிமுழக்கத்துக்கொப்பான அந்தத் துரோணருடைய

நாணொலியும் கையுறையினொலியும் அனேகமனிதர்களைப் பயப்படும்படிசெய்துகொண்டு திக்குக்களில் கேட்கப்பட்டன. இந்தச்சமயத்தில் அர்ஜுனன் அனேகம் ஸம்சப்தகர்களைவென்றுவிட்டு, அந்தத்துரோணர் பாண்டவர்களை அடிக்குமிடத்திற்கு எதிர்த்துவந்தான். பல்குனன் ஸம்சப்தகர்களைக்கொன்று அம்புகளாகிற வெள்ளமுள்ளவைகளும் பெரியசுழல்களையுடையவைகளும் ரக்தஜலமுள்ளவைகளுமான பெரிய மடுக்களைத் தாண்டினவனுகக் காணப்பட்டான். ஸூர்யனுக்கு ஒப்பான காந்தியுடையவனும் கீர்த்தியுடையவனுமான அந்த அர்ஜுனனுக்கு அடையாளமாகவுள்ளதும் தேஜஸினாலே பிரகாசிக்கின்றதுமான வானரக்கொடியைக்கண்டோம். அந்தப்பாண்டவனென்னும் யுகாந்தஸூரியன், அஸ்திரங்களாகிற கிரணங்களாலே அந்தஸம்சப்தகர்களாகிற ஸமுத்திரத்தை வற்றிப்போகும்படிசெய்துவிட்டுக் கௌரவர்களையும் தபிக்கும்படிசெய்தான். யுகாந்தத்தில்தோன்றும் நெருப்பானது எல்லாப்பிராணிகளையும் எரிப்பதுபோல அர்ஜுனன் சஸ்திரங்களுடையதேஜஸினாலே எல்லாக்கௌரவர்களையும் நன்றாகஎரித்தான். அவனால், ஆயிரக்கணக்கான பாணஸமூகங்களால் அடிக்கப்படுகின்றவர்களும் யானைகளோடும் குதிரைகளோடும் ரதங்களோடும் போர்புரிகின்றவர்களுமான வீரர்கள், அவிழ்ந்த தலைமயிருள்ளவர்களாகிப் பூமியில்விழுந்தார்கள். பார்த்தனுடைய பாணங்களால் அடிக்கப்பட்ட சிலர் தீனஸ்வரத்தை வெளியிட்டார்கள். மற்றவர்கள் மறைந்துகொண்டார்கள்; சிலர் உயிரை இழந்து கீழேவிழுந்தார்கள். அர்ஜுனன் யுத்தவீரர்களுக்குரிய விரதத்தைநினைத்து அவர்களுள் விழுந்தெழுந்தசிலரையும், வீழ்ந்தவர்களான சிலரையும், புறங்காட்டியோடுகிற போர்வீரர்களையும் அடிக்கவில்லை. சிதறின தேர்களையுடையவர்களும் பெரும்பான்மையாகத் திரும்பினவர்களுமான அந்தக்கௌரவர்கள் நானாவிதமான ஸ்வபாவத்தையுடையவர்களாகி, 'கர்ண! கர்ண!!' என்றும், 'ஆ! ஆ!!' என்றும் அலறினார்கள். அதிரதபுத்திரனான கர்ணன், அடைக்கலம்வேண்டுபவர்களுடைய அந்த அழுகுரலை அறிந்து, 'பயப்படாதீர்கள்' என்று தேறுதல் சொல்லிக்கொண்டு, அர்ஜுனனை எதிர்த்துச்சென்றான். பாரதகுலத்தில் தோன்றிய ரதிகர்களுள் சிறந்தவனும் எல்லாப்பாரதர்களையும் ஸந்தோஷிக்கச்செய்கிறவனும் அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவனுமான அந்தக்கர்ணன் அப்பொழுது ஆக்னேயாஸ்திரத்தை வெளிப்படுத்தினன். பிரகாசிக்கின்ற பாணஸமூகத்தையுடையவனும் ஜ்வலிக்கின்ற வில்லைக் கையிற்பிடித்தவனுமான அந்தக்கர்ணனுடைய ஆக்நேயாஸ்திரத்தை அர்ஜுனன் வாருணாஸ்திரத்தினால் நிலைகுலையும்படிசெய்து,

பிறகு, அவனுடைய பாணஸமூகங்களைத் தன் பாணஸமூகத்தால் நாசஞ்செய்தான். அவ்வாறே கர்ணனும், ஜ்வலிக்கின்றதேஜஸுள்ள அந்தஅர்ஜுனனுடைய பாணங்களையும் அஸ்திரத்தையும் அஸ்திரத்தால்தடுத்து அம்புகளைப்பொழிந்துகொண்டு ஸிம்மநாதஞ்செய்தான். திருஷ்டத்யும்னனும் பீமனும் மகாரதனான ஸாத்யகியும் கர்ணனை எதிர்த்து மும்மூன்றுபாணங்களால் அடித்தார்கள். கர்ணனும் அம்புமழைகளாலே அர்ஜுனனுடைய அஸ்திரத்தைத் தடுத்து,மூன்றுபாணங்களாலே அம்மூவர்களுடைய விற்களையும் அறுத்தான். சூரர்களான அவர்கள் ஆயுதங்கள் அறுக்கப்பட்டு விஷத்தையிழந்த ஸர்ப்பங்கள் போல, ரதத்திலிருக்கிற சக்தியாயுதங்களைக் கையில்தூக்கிக்கொண்டு ஸிம்மங்கள்போலஉரக்கக்கர்ஜித்தார்கள். ஸர்ப்பங்களுக்கொப்பானமிக்க வேகமுள்ளவையும் பிரகாசிக்கின்றவையுமான அம்மகாசக்திகள் கைநுனிகளால் எறியப்பட்டுக் கர்ணனைநோக்கிச்சென்றன. பலசாலியானகர்ணன் நேரேசெல்லுகின்றவைகளும் மும்மூன்றுநகர்சேர்ந்தவைகளுமான அம்புக்கூட்டங்களால்அந்தச்சக்திகளை அறுத்து அர்ஜுனன்மீது அம்புகளையெய்துகொண்டு கர்ஜித்தான். அர்ஜுனனும் ராதேயனை விரைந்து செல்லும் ஏழுபாணங்களாலடித்து அவனுடைய இளையஸகோதரனைக் கூர்மையான அம்புகளால் அடித்தான். பிறகு,அர்ஜுனன் ஆறுபாணங்களால்சத்ருஞ்சயனைக்கொன்று உடனே ஓர் அர்த்தசந்திரபாணத்தினாலே ரதத்திலிருக்கிற விபாடனுடையதலையை அறுத்தான். உடன்மைச்சேர்ந்தவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஒருவனாயிருக்கின்ற கிரீடியினால் ஸூதபுத்திரனானகர்ணனுக்கெதிரில் மூன்றுஸகோதரர்கள்கொல்லப்பட்டார்கள். பிறகு, பீமன் கருடன்போலத் தன்தேரினின்றுகிளம்பி உத்தமமானகத்தியினாலே கர்ணனுடையபக்கத்தைச் சேர்ந்தவர்களான பதினைந்துபேர்களைக்கொன்றான்; மீண்டும் தன்ரதத்தையடைந்து வேறு வில்லை எடுத்து, பத்து அம்புகளாலே கர்ணனையும், ஐந்து அம்புகளாலே ஸாரதியையும் குதிரைகளையும் அடித்தான். திருஷ்டத்யும்னனும், ஜ்வலிக்கின்றகேடகத்தையும் சிறந்தகத்தியையும் எடுத்துக்கொண்டு சந்திரவர்மாவையும் நிஷததேசாதிபதியான பிருஹத்க்ஷத்ரனையும் கொன்றான். பிறகு, த்ருஷ்டத்யும்னன் தன்ரதத்தை அடைந்து வேறுவில்லையெடுத்து ரணகளத்தில் கர்ஜித்துக்கொண்டு எழுபத்துமூன்றுபாணங்களால் கர்ணனை அடித்தான். சந்திரன்போன்றகாந்தியுள்ள ஸாத்யகியும் வேறுவில்லையெடுத்து,ஸூதபுத்ரனானகர்ணனை அறுபத்துநாலுபாணங்களால் அடித்து, ஸிம்மம்போலக்கர்ஜித்தான். நன்றாகவிடப்பட்ட இரண்டு அர்த்தசந்திரபாணங்களாலே கர்ணனுடையவில்லை அறுத்து மறுபடியும்

மூன்றுபாணங்களாலே அவனைக் கைகளிலும் மார்பிலும் அடித்தான். பிறகு, துர்யோதனனும் துரோணரும் ஜயத்ரதராஜனும், ஸாத்யகியாகிற ஸமுத்திரத்தில் முழுகுகின்றகர்ணனைக் கரையேற்றினார்கள். சத்துருக் களை அடிக்கிறஸ்வபாவமுடையவைகளான உம்மைச்சேர்ந்த காலாட் படைகளும் குதிரைகளும் தேர்களும் யானைகளும் நூற்றுக்கணக்கான மற்றவர்களும் பயமடையும்படி செய்யப்படுகிறவர்களாகிக் கர்ணனை நோக்கியே ஓடினார்கள். த்ருஷ்டத்யும்னனும் பீமனும் அபிமன்யுவும் அர்ஜுனனும் நகுலனும் ஸஹதேவனும் யுத்தகளத்தில் ஸாத்யகியைக் காப்பாற்றினார்கள். இவ்வாறாக உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்ருக்க ளுக்கும் பிராணனை இழக்கத்தக்கதும் மகாபயங்கரமுமான அவ்வித யுத்தமானது எல்லாவில்லாளிகளினுடைய நாசத்தின்பொருட்டும் உண் டாயிற்று. காலாட்களும் தேர்களும் யானைகளும் குதிரைகளும், யானை களோடும் குதிரைகளோடும் தேர்களோடும் காலாட்களோடும் எதிர்த் தன; தேராளிகள் யானைகளோடும் காலாட்களோடும் குதிரைகளோடும் எதிர்த்தார்கள். ரதங்கள் ரதங்களோடும், காலாட்கள் யானைகளோடும், குதிரைகள் குதிரைகளோடும், யானைகள் யானைகளோடும், தேராளிகள் தேராளிகளோடும், காலாட்கள் காலாட்களோடும் எதிர்த்ததாகக் காணப் பட்டார்கள். இவ்வாறு பயப்படாதவர்களான ஸைனிகர்களுக்குச் சிறந்த அந்த வீரர்களோடு யமனுடைய ராஜ்யத்தை விருத்திபண்ணக் கூடியதும், மாம்ஸத்தைத்தின்னும்பக்ஷிகளை ஸந்தோஷிக்கச்செய்வது மான மிகவும் கைகலந்தபோர்நடந்தது. பிறகு, ரதங்களாலும் யானைக ளாலும் குதிரைகளாலும் மனிதர்களாலும், அனேகரதங்களும் யானை களும் குதிரைகளும் காலாட்களும், யானைகளாலே யானைகளும், தே ராளிகளாலே ஆயுதபாணிகளான தேராளிகளும், குதிரைகளால் குதி ரைகளும், காலாட்களுடையகூட்டங்களால் காலாட்களும் கொல்லப்பட் டனர். தேர்களாலே யானைகளும், சிறந்த யானைகளாலே உத்தம ஜாதிக்குதிரைகளும், குதிரைகளாலே மனிதர்களும், உத்தமமான ரதி கர்களாலே குதிரைகளும், நாக்களும் பற்களும் கண்களும் சிதறிக் கவசங்களும் பூஷணங்களும் நன்குபொடிசெய்யப்பட்டுப் பூமியில் விழுந்து பிராணனைவிட்டன அவ்வாறே பலவித உபகரணங்களுள் ளவர்களும் சிறந்த ஆயுதங்களையுடையவர்களுமான பகைவர்களாலே அடிக்கப்பட்டு ஸைன்யங்கள் பயங்கரமான உருவத்துடன் யுத்தபூமியை அடைந்தன. குதிரைகளாலும் யானைக்கால்களாலும் அடிக்கப்பட்டுச் சின்னபின்னமாக்கப்பட்ட சேனைகள், சிறந்தரதங்களுடைய சக்கரங் களின் ஓரத்தினாலே நசுக்கப்பட்டு மிக்கதுன்பங்களையடைந்தன. அந்த

ரணகளத்தில், துஷ்டமிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் ராக்ஷஸர்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டுபண்ணுவதும் அச்சந்தருவதுமான ஜனங்களின்நாசம் நேர்ந்திருக்கையில், மிக்கபலசாலிகளான அந்தயுத்தவீரர்கள் கோபமுற்றுப் பராக்கிரமத்தினால் ஒருவரையொருவர் நாசஞ்செய்துகொண்டு ஸஞ்சாரஞ்செய்தார்கள். பாரதரே! பிறகு, இருதிறத்துச்சேனைகளும் மிகவும்அடிக்கப்பட்டும், ரக்தவெள்ளத்தினால் நனைக்கப்பட்டும், ஒன்றை மற்றொன்று பார்த்துக்கொண்டும் ஸூர்யன்அஸ்தகிரியை அடைந்தவுடன், தங்கியிருக்குமிடத்துக்கு மெள்ளச் சென்றன.

பன்னிரண்டாவதுநாள்யுத்தம் முடிந்தது.

ஸம்சப்தகவதபர்வம் முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம்.

(யுதிஷ்டிரனைப்பிடிக்காததினால், துர்யோதனன் வருத்தமடையத் துரோணர் ஒரு மஹாரதனைக்கொல்லுவதாக ப்ரதிஜ்ஞைசெய்ததும், அபிமன்யு வதச்சுருக்கமும்.)

அதிகமான வீர்யமுள்ள பல்குனனாலே முதலில் நாங்கள் தோல்வி அடைவிக்கப்பட்டுத் துரோணருடையபிரதிஜ்ஞை பயனற்றதாக யுதிஷ்டிரரும்காப்பாற்றப்பட்டபொழுது, உம்மைச்சேர்ந்தவர்களான எல்லா யுத்தவீரர்களும், கவசமுடைந்தவர்களும் ரணகளத்தில்ஜயிக்கப்பட்டவர்களும் புழுதியடர்ந்தமேனியையுடையவர்களும் மிகுந்ததுயரத்தை அடைந்தவர்களும் பத்துத்திக்குகளையும் பார்க்கின்றவர்களுமாகித் துரோணருடையஸம்மதத்தின்மேல் யுத்தத்தைநிறுத்தி, (சத்துருக்களுடைய) குறிதவறாதஅம்புகளால் பிளக்கப்பட்டு யுத்தகளத்தில் பகைவர்களால் மிக நிந்திக்கப்பட்டார்கள். பிராணிகள் பல்குனனுடைய அளவற்றகுணங்களைப்புகழவும் அவனிடத்திலிருக்கின்ற கிருஷ்ணனுடைய நேசமானது சொல்லப்படவும் உம்மைச்சேர்ந்தவர்களெல்லோரும் (பிரம்மஹத்திமுதலான தோஷத்தினால்) நிந்திக்கப்பட்டவர்கள்போலத் தியானத்தினால் ஊமைத்தன்மையையடைந்தார்கள். பிறகு, மறுநாள் விடிந்தவுடன் பேசுவதில் திறமையுள்ள துர்யோதனன், மிகுந்தகோபத்துடன் துரோணரைநோக்கி, அன்பினாலும் அபிமானத்தினாலும் பகை

வர்களுடைய அபிவிருத்தியினாலும் மனவருத்தத்துடன் எல்லாயுதத வீரர்களும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே பின்வருமாறு கூற லானான்:—

'பிராம்மணோத்தமரே! அருகில்வந்திருந்த யுதிஷ்டிரனை நீர் இப் பொழுது பிடியாமையால், நிச்சயமாக நாங்கள் கொல்லத்தக்கவர்க ளுடையகூட்டத்தில் உம்மால் சேர்க்கப்பட்டுவிட்டோம். சத்துருவான வன் ரணகளத்தில் தேவர்களோடுகூடின பாண்டவர்களால் காப்பாற்றப் பட்டாலும், நீர் பிடிக்கக்கருதினால் 'உம்முடையகண்ணுக்கெதிர்ப்பட்டு அவன் தப்பமுடியாது. எனக்குத் தேவரீர் அன்போடு வரனைக்கொடுத் துப் பிறகு வேறுவிதமாகச்செய்கிறீர். பெரியோர்கள் எவ்விதத்தினாலும் பக்தர்களுடையவிருப்பத்தை வீணாகச்செய்யமாட்டார்கள்' என்றான். பிறகு, அவ்வாறு சொலலக்கேட்ட அந்தத்துரோணாசாரியர் பிரீதி யற்றவராகித் துர்யோதனராஜனைநோக்கி, 'உனக்குப்பிரியத்தைத்தேடு வதில் முயற்சியையுடைய என்னை நீ அவ்வாறெண்ணுவது தகாது. அர்ஜுனனாலே காக்கப்படுகின்றவனை, அசுரர்கள், தேவர்கள், கந்தர் வர்கள், யக்ஷர்கள், நாகர்கள், ராக்ஷஸர்கள் இவர்களுடன் சேர்ந்திருந்தா லும் உலகத்திலுள்ளஜனங்கள் ரணகளத்தில் ஜயிக்க ஸாமர்த்தியமற் றவர்களே. எந்தவிடத்தில் உலகத்தைப்படைப்பவரான கோவிந்தரும் அர்ஜுனனும் ஸேனாநாயகர்களாகவிளங்குகிறார்களோ அவ்விடத்தில் பிரபுவான முக்கண்ணரைத்தவிர வேறுஎவனுடையபராக்கிரமம் செல் லும்? ஐயா! இப்பொழுது யான் உண்மையைப்பேசுகிறேன். இது ஒரு காலும் வேறாகமாறாது. இப்பொழுது உத்தமனான ஒருமஹாரதனைச் சாய்க்கப்போகிறேன். தேவர்களாலும் உடைக்கமுடியாத சக்கரவியூ கத்தை ஏற்படுத்தப்போகிறேன். அரசனே! ஏதாவது ஒருபாயத்தி னாலே அர்ஜுனன் விலக்கப்படவேண்டும். யுத்தகளத்தில் அவனால் அறியப்படாததும் நிறைவேற்றத்தகாததும் ஒன்றுமில்லை. அந்த அர் ஜுனன் பற்பல ஆசாரியர்களிடமிருந்து எல்லாவிஷயங்களிலும் அறி வைப் பூர்ணமாக அடைந்திருக்கிறான்' என்றுசொன்னார். இவ்வாறு துரோணர்சொல்லியவுடனே மீண்டும் ஸம்சப்தகர்களுடையகூட்டங்கள் யுத்தகளத்தில் அர்ஜுனனை யுத்தத்திற்காகத் தென்திக்கிலிருந்து அழைத்தன. பிறகு, அர்ஜுனனுக்குச் சத்துருக்களோடு நேர்ந்ததது போன்ற வேறுயுத்தமானது ஓரிடத்திலும் கேட்கப்பட்டதுமில்லை; பார்க்கப்பட்டதுமில்லை. அரசரே! அவ்விடத்தில் துரோணராலே ஏற் படுத்தப்பட்ட வியூகமானது நடுப்பகலில் ஸஞ்சரிக்கின்றவனும் நன்கு

எரிக்கின்றவனுமான ஸூர்யனைப்போலப் பார்க்கமுடியாததாக விளங்கிற்று. பாரதரே! யுத்தத்தில் உடைக்கமுடியாத அந்தச்சக்கரவியூகத்தையும் மூத்ததந்தையரான தர்மபுத்திரருடைய வாக்கியத்தினாலே அபிமன்யுவானவன் பலவாறு உடைத்தான். சத்துருக்களைத் தவிக்கச்செய்பவரே! பூமியைக்காப்பவரே! அந்தஸுபத்ராபுத்ரன் ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச்செய்து சூரர்களை ஆயிரக்கணக்காகக் கொன்று, அநேகராஜகுமாரர்களையும் கோஸலதேசாதிபதியான பிருஹத்பலனையும் மஹாரதனான சல்யபுத்திரனையும் அவ்வாறே உம்முடையபேரனான லக்ஷ்மணனையும் கொன்று, ஆறுவீரர்களோடு எதிர்த்துச் சண்டைசெய்து, துச்சாஸனனுடையகுமாரன் வசத்தையடைந்து பிராணனையிழந்தான். மன்னரே! ஸுபத்ராபுத்திரன் கொல்லப்பட்டவுடனே, நாங்கள் மிகுந்த ஆனந்தத்தையடைந்தோம். பாண்டவர்கள் சோகத்தால் பீடிக்கப்பட்டார்கள். நாங்கள் யுத்தத்தை நிறுத்தினோம்" என்று கூறினான்" என்றார்.

ஜனமேஜயர், "யுத்தத்தில் விடாமுயற்சியுடையவர்களும் செய்கைகளாலே சிரமத்தைத்தெரிவிக்கின்றவர்களும் கிருஷ்ணனோடுகூடினவர்களுமான பாண்டவர்களைவரும் தேவர்களாலும் அணுகமுடியாதவர்கள். அடிக்கடி தொடர்ச்சியான உத்தமகார்யங்களாலும் புத்தியினாலும் ஸ்வபாவத்தினாலும் கீர்த்தியினாலும் ஐஸ்வரியத்தினாலும் கிருஷ்ணருக்குநிகரான ஒருமனிதன் உண்டானதுமில்லை; உண்டாகப்போகிறதுமில்லை. யுதிஷ்டிரராஜர், ஸத்யம் தர்மம் தவம் தானம் பிராம்மணபூஜைமுதலான குணங்களாலே தேகத்துடனே ஸ்வர்க்கமடைந்தாராம். ஊழிக்காலத்து அந்தகன், கீர்த்தியுடைய ஜமதக்நிகுமாரரானபரசுராமர், யுத்தரங்கத்தில் நிற்கின்றபீமஸேனர் ஆகியமூவரும் ஸமானர்களாகச் சொல்லப்படுகிறார்கள். பிரதிஜ்ஞைசெய்தகாரியத்தை நிறைவேற்றுவதில் ஸாமர்த்தியமுள்ளவரும், ரணகளத்தில் காண்டீவத்தைவில்லாகவுடையவருமான பார்த்தருக்குச்சமமானஉவமையை இப்புவியில் யான் அறிகிறேனில்லை. நகுலரிடத்தில் அதிகமான குருபக்தி, செய்யப்பட்டதையும் செய்யத்தக்கதையும் வெளியிடாமலிருத்தல், வணக்கம், மனஅடக்கம், ஸௌந்தரியம், வல்லமை ஆகியஆறும் நிலைபெற்றிருந்தன. வீரரானஸகதேவர் கல்வி, இனிமை, காம்பீர்யம், தைரியம், ரூபம், பராக்கிரமம் இவைகளால் அச்வினீதேவதைகளுக்கு ஒப்பானவர். கிருஷ்ணனிடத்திலும் பாண்டவர்களிடத்திலும் அதிகமான எந்தக்குணங்களுண்டோ மங்களகரங்களான அந்தக்குணங்கள் அபிமன்யு ஒருவ

ரிடத்திலிருக்கின்றவையாகக் காணப்பட்டனவாம். பிராம்மணோத்தமரே! வல்லமையினால் யுதிஷ்டிரருக்கும், ஒழுக்கத்தினால் கிருஷ்ணருக்கும், செய்கையினால் பயங்கரமான செய்கையுடைய பீமசேனருக்கும், வடிவத்தினாலும் மங்களகரமான பராக்ரமத்தினாலும் தனஞ்சயருக்கும், வணக்கத்தில் ஸஹதேவருக்கும் நகுலருக்கும் ஒப்பாயிருக்கின்றவரும், பகைவர்களால் தோல்வியடைவிக்கத்தகாதவரும், சுபத்ராபுத்திரருமாகிய அபிமன்யுவைப்பற்றிய விருத்தாந்தத்தை யான் முழுதும் கேட்க விரும்புகிறேன். அவர் யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்பட்டார்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார்.

"மஹாராஜரே! திருதராஷ்டிர ராஜன், அபிமன்யு கொல்லப்பட்டதைக் கேட்டு ஸஞ்சயனைக்குறித்து (அபிமன்யுவினுடைய விருத்தாந்தத்தை) விஸ்தாரமாக (ச்சொல்லவேண்டுமென்று) வினவினான். அவன், "ஸஞ்சய! புருஷஸிம்மனுக்குக் குமாரனும் யௌவனத்தை அடையாதவனுமான அபிமன்யுவானவன் யுத்தத்தில் கொல்லப்பட்டதைக்கேட்டு என்மனம் மிகவும் பிளக்கப்படுகிறது. தர்மகர்த்தாக்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற இந்த க்ஷத்திரிய தர்மம் குரூரமானது. கவல்கணகுமார! எந்தத்தர்மத்தில் (கட்டுப்பட்டு நின்று) சூரர்கள் ராஜ்யத்தை அடைய விருப்பங்கொண்டு பாலன்மீது சஸ்திரத்தைப் பிரயோகித்தார்களோ? பாலனும், மிகவும் ஸுகியும், பயமற்றவனுக (ரணகளத்தில்) ஸஞ்சாரம் செய்பவனுமான அபிமன்யுவை அஸ்திரத்தில் தேர்ச்சியுள்ள அநேகசூரர்கள் எவ்வாறு கொன்றார்கள்? ஸஞ்சய! எனக்குச் சொல்வாயாக? தேராளிகளுடைய படையைப் பிளக்க எண்ணியவனும், அளவற்றவல்லமையுடையவனுமான ஸுபத்திராபுத்திரன் யுத்தகளத்தில் விளையாடின விதத்தை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ராஜசிரேஷ்டரே! அபிமன்யுவினுடைய வதத்தைப்பற்றி என்னை நீர் கேட்கிறீர். மன்னரே! அதனை உமக்கு முழுமையும் உரைப்பேன்; கவனத்துடன்கேட்பீராக. சத்ருஸேனையைப்பிளக்க எண்ணங்கொண்ட பாலனை அபிமன்யு எவ்வாறு விளையாடினனென்பதையும், யுத்தகளத்தில் ஒருவராலும் ஜயிக்கமுடியாத வீரர்களை அவன் எவ்வாறு நாசஞ்செய்தானென்பதையும் சொல்வேன். அதிகமான புதர்களாலும் திருணங்களாலும் மரங்களாலும் அடர்ந்த காட்டில், காட்டுத்தீயினால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டவனத்தில் வஸிக்கும் ஜந்துக்களுக்

குப் பயமுண்டாவதுபோல உம்மைச்சேர்ந்தவர்களுக்குப் பயம் உண்டாயிற்று.

---

## முப்பத்துநான்காவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணர் பத்மவியூகம் அமைத்தது.)

மஹாராஜரே! உறுதியுடனிரும். பொறுக்கமுடியாத சோகத்தைப் பொறுத்துக்கொள்ளும். பெரிதான பந்துக்களின் நாசத்தை உமக்கு யான் உரைப்பேன்; அதைக்கேளும். மஹாராஜரே! ஆசார்யரால் (அந்த ரணகளத்தில்) பத்மவ்யூஹம் அமைக்கப்பட்டது. அந்தப்பத்மவியூகத்தில் எல்லா அரசர்களும் தாமரைப்பூப்போலவும், ராஜவர்க்கத்தைச்சேர்ந்த குமாரர்கள் தாதுக்கள்போலவும் அமைக்கப்பட்டார்கள். மஹாராஜரே! அந்தப் பத்மவ்யூகத்துக்குத் துர்யோதனன் [1] கர்ணிகை ஸ்தானத்தில் நிற்பவனானன். எல்லாரும் செய்யப்பட்ட பிரதிஜ்ஞையுடையவர்கள்;எல்லாரும் ஸ்வர்ணத்தினால் சித்திரவேலை செய்யப்பட்ட த்வஜத்தையுடையவர்கள்; எல்லாரும் சிவப்பு வஸ்திரம் தரித்தவர்கள்; எல்லாரும் சிவப்பான ஆபரணங்களையுடையவர்கள்; எல்லாரும் சிவந்த கொடித்துணியுள்ளவர்கள்; எல்லாரும் ஸ்வர்ணமாலை அணிந்தவர்கள். அவர்கள் சந்தனக்குழம்பினாலும் காரகில்சாந்தினாலும் பூசப்பட்ட மேனியுடையவர்களும் பூமாலையை அணிந்தவர்களும் மெல்லிய ஆடையையுடையவர்களும் ஒன்றுகூடினவர்களுமாகி அபிமன்யுவை எதிர்த்துப் போர்புரியக்கருதி நான்குபக்கமும் ஓடினார்கள். திடமான விற்களையுடைய அந்த வீரர்கள் பதினாயிரவர் இருந்தனர். இனியதோற்றமுள்ளவனும் உமக்குப்பேரனுமான லக்ஷ்மணனை முன்னிட்டுக்கொண்டு அவர்கள் ஒருவருக்கொருவர் ஸமமாகத் துக்கத்தைப்பாராட்டினவர்களும் ஒருவருக்கொருவர் ஸமமான ஸாஹஸத்தையுடையவர்களும் ஒருவருக்கொருவர் ஸ்பர்த்தையுள்ளவர்களும் ஒருவருக்கொருவர் நன்மையைச்செய்வதில் பற்றுள்ளவர்களுமாயிருந்தார்கள். ராஜஸ்ரேஷ்டரே! துரியோதனராஜனோ சேனைநடுவில் நின்றுகொண்டு, மஹாரதர்களான கர்ணனாலும் துச்சாஸனனாலும் கிருபராலும் சூழப்பட்டிருந்தான். தேவராஜனுக்கொப்பானவனும் மஹாதேஜஸுள்ளவனுமான

---

[1] தாமரைப் பூவிலிருக்கும் காய்.

துரியோதனன், வெண்குடையினால் நான்குபக்கங்களிலும் மூடப்பட்டுச் சாமரங்களாலும் விசிறிகளாலும் வீசப்பெற்று, உதிக்கின்ற ஸூர்யன்போலப் பிரகாசித்தான். அந்தச்சேனையின்முன்னிலையில் துரோணர் நாயகராக நின்றார். அவ்வாறே ஸிந்துதேசத்தரசனான ஜயத்ரதன் மிக்க காந்தியுள்ள மேருபர்வதம்போல் நின்றான். மஹாராஜரே! தேவர்களுக்கொப்பான உம்முடைய முப்பதுகுமாரர்கள் அஸ்வத்தாமாவை முன்னிட்டுக்கொண்டு ஸிந்துராஜனுடைய விலாப்புறங்களில் நின்றார்கள். சூதாடியான காந்தார தேசாதிபதியும் சல்யனும் பூரிஸ்ரவஸூம் ஆகிய மஹாரதர்கள் ஸிந்துராஜனுடைய பக்கத்தில் விளங்கினார்கள். பிறகு, மிருத்யுவை மீறமுடியாதென்றெண்ணி உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் சத்ருக்களுக்கும் மயிர்பொடித்தலை உண்டாக்கக்கூடிய கைகலந்த யுத்தம் நடந்தது.

---

### முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் அபிமன்யுவைப் பத்மவியூகத்தை உடைப்பதற்காக ஏவியது.)

துரோணராலே காக்கப்பட்டதும், ஜயிக்கமுடியாததுமான அந்தச்சேனையைப் பார்த்தர்கள், பீமஸேனனை முன்னிட்டவர்களாகி எதிர்த்தார்கள். ஸாத்யகி, சேகிதானன், பார்ஷதனான த்ருஷ்டத்யும்னன், சூரனான குந்திபோஜன், மஹாரதனான துருபதன், அர்ஜுனகுமாரனான அபிமன்யு, க்ஷத்ரதர்மா, வீர்யமுள்ள பிருஹத்க்ஷத்ரன், சேதி தேசத்தரசன், திருஷ்டகேது, மாத்ரீகுமாரர்களான நகுல ஸஹதேவர்கள், கடோத்கசன், பராக்ரமசாலியான யுதாமன்யு, சத்ருக்களால் ஜயிக்கமுடியாதவனான சிகண்டி, ஒருவராலும் அவமதிக்கமுடியாத உத்தமௌஜஸ், மகாரதனான விராடன், கோபங்கொண்டவர்களான த்ரௌபதிபுத்திரர்கள், வீர்யமுள்ளவனான சிசுபாலபுத்திரன், மகாவீர்யமுள்ளவர்களான கேகயர்கள், ஆயிரக்கணக்கான ஸ்ருஞ்சயர்கள் ஆகிய இவர்களும், அஸ்திரப்பயிற்சியுள்ளவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான இன்னும் மற்றவீரர்களும் சேனைக்கூட்டங்களோடுகூடிப் போர்புரியக்கருதித் துரோணரை எதிர்த்து விரைவாகச் சென்றார்கள். அதிக வீர்யமுடைய துரோணர் பரபரப்பில்லாதவராகி, ஸமீபத்திலிருக்கின்ற அவர்களைப் பெரிதான அம்புவெள்ளத்

தால் தடுத்தார். பெரிய வெள்ளமானது உடைக்கமுடியாத மலையை அடுத்துத் தடைப்பட்டு நிற்பதுபோலவும், நீர்நிலைகள் கரையை அடைந்து தடைப்பட்டு நிற்பதுபோலவும், துரோணரை நாடி அந்த யுத்தவீரர்கள் அவரை எதிர்க்கவில்லை. வேந்தரே! துரோணருடைய வில்லினின்று விடுபடும் அம்புகளால் பீடிக்கப்படும் பாண்டவர்கள் அவருக்கு எதிரில் நிற்கமாட்டாதவராயினர். ஸ்ருஞ்சயர்களோடுகூடின பாஞ்சாலர்கள் அந்தத் துரோணரை எதிர்க்கமாட்டாமற்போனமையால் அவருடைய புஜபலத்தை ஆச்சர்யமாகக்கண்டோம். மிகுந்த கோபத் தோடு எதிர்த்துவருகின்ற அந்தத்துரோணரைக்கண்டு யுதிஷ்டிரர் அவரைத் தடுப்பதைப்பற்றிப் பலவாறு ஆலோசித்தார். யுதிஷ்டிரரான வர் துரோணர் மற்றவனால் எதிர்க்கமுடியாதவரென்றுஎண்ணித் தாங்க முடியாத பெரும்பாரத்தை அபிமன்யுவிடம் வைத்தார். கிருஷ்ணார் ஜுனர்களைக்காட்டிலும் குறைவற்றவனும் அதிக பராக்கிரமமுடைய வனும் சத்ருவீரர்களைக் கொல்பவனுமான அபிமன்யுவைப்பார்த்துப் பின்வரும் வசனத்தைக்கூறினார். 'அப்பா! அர்ஜுனன் வந்து நம்மை நிந்திக்காமலிருக்கத்தக்க காரியத்தை நீ செய். நாங்கள் எவ்விதத்தி னாலும் துரோணருடைய ஸேனையை உடைக்கும்விதத்தை அறியோம். மிக்கபுஜபலமுடையவனே! துரோணருடைய வியூகத்தை நீயாவது அர் ஜுனனாவது கிருஷ்ணனாவது பிரத்யும்னனாவது உடைக்கச்சக்தி யுள்ளவர்கள். ஐந்தாமவன் (உடைப்பானென்பது) பொருந்தாது. அப்பா! அபிமன்யுவே! வரத்தை நான் உன்னிடமிருந்து வேண்டுகிறேன். தகப்பன்மார்களுக்கும் மாமன்மார்களுக்கும் எல்லா ஸைன்யங்களுக் கும் இந்த வரத்தை நீ கொடுக்கவேண்டும். ஐயா! தனஞ்சயனே யுத்தரங்கத்தினின்று மீண்டும்வந்து நம்மனைவர்களையும் நிந்திப்பான். சீக்கிரமாக அஸ்திரத்தை எடுத்துத் துரோணருடைய ஸேனையை நாசம் செய்' என்று சொன்னார். அபிமன்யு, 'யுத்தத்தில் மிகவும் உக்ர மாயும் உறுதியாயுமிருக்கிற துரோணருடைய உத்தமமான சேனையில் தந்தையர்களுக்கு ஜயத்தைவிரும்பிக் காலவிளம்பமின்றிப் பிரவேசிக் கிறேன். என் பிதாவினால் வியூகத்தையுடைத்து நாசம் செய்வதில் யான் உபதேசிக்கப்பட்டிருக்கிறேன். ஓர் ஆபத்து நேரிடும் காலத்தில் வெளிப் படுவதற்கு நான் சக்தியற்றவனாயிருக்கிறேன்' என்று சொன்னான். யுதிஷ்டிரர், 'யுத்தவீரர்களுள் சிறந்தவனே! வியூகத்தை உடைத்துவிடு; எங்களுக்கு வழியையுண்டுபண்ணு. அப்பா! நீ செல்லும் வழியினா லே நாங்கள் உன்னைப் பின்தொடருவோம். ஐயா! யுத்தத்தில் அர்ஜுன னுக்கு ஸமானனான உன்னை நாங்கள் யுத்தரங்கத்தில் பிரவேசிக்கச்

செய்து நான்குபக்கங்களிலும் தடையுற்றவர்களாகப் பின்தொடர்ந்து வருவோம்' என்று சொன்னார். பீமஸேனன், 'யான் உன்னைப் பின் தொடர்ந்து வருவேன்;மேலும் திருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் பாஞ் சாலர்களும் கேகயர்களும் மச்சதேசத்தார்களும் எல்லாப்பிரபத்திரகர் களும் உன்னைப் பின்தொடரப்போகிறார்கள். அந்த வியூகத்தை ஒரு முறை நீ உடைத்துவிட்டால் நாங்கள் ஆங்காங்கு சிறந்தவர்களை எல் லாம் திரும்பத்திரும்ப அடித்து அழிப்போம்' என்று சொன்னான். அபிமன்யு, 'யான் மிகுந்த கோபம் கொண்டவனாகி, நெருங்கமுடியாத தான இந்தத்துரோணருடைய சேனையில், விட்டிற்பூச்சியானது எரிந்துகொண்டிருக்கிற நெருப்பில் பிரவேசிப்பதுபோலப் பிரவேசிக் கப்போகிறேன். இரண்டு வம்சங்களுக்கும் எது நன்மையோ, எந்தச் செய்கையானது என்மாதுலருக்கும் என்பிதாவுக்கும் பிரீதியை உண்டு பண்ணுமோ அந்தச்செய்கையை யான் இப்பொழுது செய்யப்போ கிறேன். சிசுவான என்னொருவனாலே யுத்தகளத்தில் கூட்டம்கூட்ட மாகத் தோல்வியடைவிக்கப்படப்போகிற பகைவர்சேனைகளை எல்லாப் பிராணிகளும் பார்க்கப்போகின்றன. யுத்தகளத்தில் இப்பொழுது ஒரு வனாவது உயிரோடு என்னாலேவிடப்படுவானாகில் நான் அர்ஜுனனால் உண்டுபண்ணப்பட்டவனுமல்லேன்; ஸுபத்ராதேவியின் புத்ரனுமல் லேன். நான் ஒருரதத்தினாலே எல்லாக்ஷத்ரியர்களுடைய கூட்டத்தை யும் எட்டுத்துண்டாகச் செய்யாமல்போவேனேயாகில், நான் அர்ஜுன ருக்குப் பிள்ளையல்லேன்' என்றுசொன்னான். யுதிஷ்டிரர், 'ஸுபத்ராபுத் திரனே! சிறந்தவில்லாளிகளும், மிக்கபலசாலிகளும், ஸாத்யர்களையும் ருத்ரர்களையும் மருத்துக்களையும் போன்றவர்களும், வஸு அக்நி சூரி யன் இவர்களைப்போன்ற பராக்ரமத்தையுடையவர்களுமான புருஷ ஸ்ரேஷ்டர்களால்காக்கப்பட்டு அணுகமுடியாததாயிருக்கின்ற துரோண ருடையசேனையைப்பிளப்பதற்கு நீ ஊக்கமுள்ளவனாயிருத்தலால், இவ் வாறு பேசும் உனக்குப் பலம் விருத்தியடைக' என்றுசொன்னார். அந்த அபிமன்யு அந்தத்தர்மபுத்திரருடைய வார்த்தையைக்கேட்டு, ஸாரதி யைநோக்கி, 'ஸுமித்ர! யுத்தகளத்தில் துரோணருடைய படையைக் குறித்துச் சீக்கிரமாகக் குதிரைகளைநடத்து' என்றுசொன்னான்.

---

## முப்பத்தாறுவது அத்யாயம்.

# அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவினுடைய யுத்தத்தை வர்ணித்தது.)

பாரதரே! புத்திமானான தர்மராஜருடைய அந்தவார்த்தையைக் கேட்டு, ஸுபத்ராகுமாரனான அபிமன்யு துரோணருடைய சேனையை நோக்கி, (தேரைச்செலுத்தும்படி) ஸாரதியை ஏவினான். ராஜரே! அந்த அபிமன்யுவினாலே, 'போ; போ' என்று நன்றாகத்தூண்டப்படும் ஸாரதி அபிமன்யுவைநோக்கி, [1] 'ஆயுஷ்மன்! பாண்டவர்களாலே உம்மிடத்தில் இந்தப்பெரும்பாரம் வைக்கப்பட்டுவிட்டது. புத்தியினால் க்ஷணகாலம் (ஆலோசித்து) நிச்சயம்செய்துகொண்டு, பிறகு, நீர் யுத்தம்செய்யவேண்டும். ஆசாரியரான துரோணரோ ஸமர்த்தர்; சிறந்த அஸ்திரங்களில் விசேஷமாகப்பயின்றவர்; நீரோ பாலர்: அவரோ பலசாலி; நீர் யுத்தங்களை அறியாதவர்'என்றுகூறினான். பிறகு,அபிமன்யு சிரித்துக்கொண்டு ஸாரதியைநோக்கி, 'ஸாரதியே! இந்தத்துரோணர் எவ்வளவு? எல்லா க்ஷத்ரியர்களும் எவ்வளவு? எனக்கு யுத்தம்செய்வதற்குமுயற்சியானது, இந்த யுத்தமஹோத்ஸவத்திலுண்டாயிருக்கிறது. யான், தேவகணங்களோடு ஐராவதமென்கிறயானையின்மீதேறிய இந்திரனையும், அல்லது எல்லாப்பூதகணங்களாலும் பூஜிக்கப்பட்ட ஈச்வரரானருத்ரரையும் யுத்தமுனையில் எதிர்த்துப் போர்புரிவேன். எனக்கு இப்பொழுது க்ஷத்ரியர்கள்விஷயத்தில் ஆச்சரியமில்லை. ஸூதனே! யுத்தவீரர்களோடும் குதிரைகளோடும் தேர்களோடும் யானைகளோடும்கூடி எதிரில் காணப்படும் இந்தச்சத்ருஸைன்யமானது, இப்பொழுது எனக்குப் பதினாறில் ஒருபாகத்துக்குத் தகுதியுள்ளது. ஸூதபுத்ர! உலகமனைத்தையும் ஜயித்த விஷ்ணுவை மாதுலராகவும், அர்ஜுனனைத் தந்தையாகவும் அடைந்தஎன்னைப் பூமியில் பயம்நாடாது' என்றுசொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்டும், அந்தஸாரதியானவன் ஸுபத்ராபுத்திரனான அபிமன்யுவைநோக்கி, 'வீரரே! உமக்கு, அந்தத்துரோணரோடு யுத்தம் வேண்டாம்'என்றேஅடிக்கடிகூறினான். அபிமன்யுவோஸாரதியினுடைய அந்த வார்த்தையை அலக்ஷியம்செய்து அந்தஸாரதியைநோக்கி, 'துரோணருடையஸேனையைக் குறித்துக் காலதாமதமின்றிப்போ' என்றே சொன்னான். பிறகு, ஸாரதியானவன் மிகவும் ஸந்தோஷமற்ற மனத்தை

---

[1] 'நீண்டஆயுளுள்ளவனே!' என்பதுபொருள்;ஸாரதி தலைவனை இங்ஙனம் அழைப்பது வழக்கம்.

யுடையவனாகிப் பொன்மயமான அலங்காரங்களும் மேல்விரிப்புக்களு
முள்ள மூன்றுவயதுள்ளகுதிரைகளை வேகமாகவோட்டினான். அரசரே!
ஸுமித்திரனாலே, துரோணருடையஸேனையைக்குறித்து ஓட்டப்பட்ட
வையும் மஹாவேகமுள்ளவையும் மிக்கபலமுள்ளவையுமான அந்தக்
குதிரைகள் துரோணரை எதிர்த்துச்சென்றன. அவ்வாறு எதிர்த்துவரு
கின்ற அந்தஅபிமன்யுவைப்பார்த்து, துரோணரைமுன்னிட்டுக்கொண்
டவர்களான எல்லாக்கௌரவர்களும் அவனையெதிர்த்தார்கள். பாண்ட
வர்களும் அவனைப் பின்தொடர்ந்தார்கள். தூக்கிக்கட்டப்பட்டஉயர்ந்த
கோங்குமரத்தை த்வஜமாகவுடையவனும் பொற்கவசத்தைப்பூண்டவ
னும் அர்ஜுனனைக்காட்டிலும் மேலானவனுமான அந்தஅபிமன்யு
யுத்தஞ்செய்யும்விருப்பத்துடன் ஸிம்மத்தின்குட்டி யானைகளையெதிர்ப்
பதுபோலத் துரோணர்முதலான மஹாரதர்களை எதிர்த்தான். வியூகத்
தைக்காப்பாற்றுவதில் முயற்சியுள்ள அந்தக்கௌரவர்கள் போர்புரிந்
தார்கள். ஸமுத்திரத்தில் கங்காப்ரவாஹத்தின்சுழல் உண்டாவதுபோல
ஒருமுகூர்த்தகாலம் சுழலுண்டாயிற்று. அரசரே! யுத்தம்செய்கின்ற
வர்களும் பரஸ்பரம் பீடிக்கின்றவர்களுமான அந்தச்சூரர்களுக்கு மிக்க
பயங்கரமானதும் இடைவெளியில்லாததுமான யுத்தம் தொடங்கிற்று.
மிக்கபயங்கரமான அவ்விதயுத்தம்நடந்துகொண்டிருக்கையில், அர்ஜுன
குமாரனானஅபிமன்யு துரோணர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே
வியூகத்தைஉடைத்து உள்ளேபுகுந்தான். எண்ணமுடியாதபராக்கிரம
முள்ளவனான அர்ஜுனகுமாரன் அவஸரப்படாமல், உடைக்கமுடியாத
தும் அவமதிக்கமுடியாததும் ஜயிக்கமுடியாததுமான அந்தத்துரோ
ணருடைய வியூகத்தைப்பிளந்து உள்ளே பிரவேசித்தான். உள்ளே
நுழைந்து, பகைவர்களுடைய கூட்டங்களை வதஞ்செய்கின்ற மஹா
பலசாலியான அந்தஅபிமன்யுவை நான்குபக்கங்களிலும் உயர்த்திப்
பிடிக்கப்பட்ட ஆயுதங்களையுடைய யானைகளும் குதிரைகளும் தேராளி
களும் காலாட்கூட்டங்களும் சூழ்ந்துகொண்டன. நானாவித வாத்ய
கோஷங்களாலும் கொக்கரிப்புக்களாலும் போர்க்குஅழைக்கும் ஒலிக
ளாலும் கர்ஜனங்களாலும் ஹுங்காரங்களாலும் ஸிம்மநாதங்களாலும்,
'நில், நில்' என்ற சப்தங்களாலும் கோரமான கூக்குரல்களாலும்
'போகாதே; நில்; என்னைநோக்கிவா' என்கிற சப்தங்களாலும், 'பகை
வனே! இதோ நான் இருக்கிறேன்' என்கிற உரத்தபேச்சுக்களாலும்
யானைகளுடைய சப்தங்களாலும் பூஷணங்களுடைய சப்தங்களாலும்
அட்டஹாஸங்களாலும் கைக்கொட்டுக்களாலும் தேருருளையொலிகளா
லும் பூமியை அதிரும்படிசெய்துகொண்டு, அந்தக்கௌரவர்கள் அர்

ஜுனகுமாரனை எதிர்த்துச்சென்றார்கள். மன்னரே! எதிர்த்துவரு கின்ற அந்தயுத்தவீரர்களை, சுறுசுறுப்புடன் யுத்தஞ்செய்யும் தன்மையுள்ளவனும் மிக்கவலிமையுள்ளவனும் சீக்கிரமாகஅஸ்த்ரப்பிரயோகம் செய்கின்றவனும் மர்மஸ்தானங்களை அறிந்தவனும் வீரனுமான அந்த அபிமன்யு மர்மஸ்தானங்களைப் பிளக்குந்தன்மையுள்ள அம்புகளாலே அடித்தான். பற்பலஅடையாளங்களுள்ள கூரியஅம்புகளாலே அடிக்கப்பட்டு மெய்ம்மறந்தவர்களான அந்தயுத்தவீரர்கள், கூட்டம்கூட்டமாக விட்டிற்பூச்சிகள் நெருப்பைநோக்கிவந்து விழுவதுபோல அபிமன்யுவையெதிர்த்துவந்து விழுந்தார்கள். பிறகு, அந்தஅபிமன்யு, யாகத்தில் தர்ப்பங்களால்[1] வேதியைப்பரப்புவதுபோல அவர்களுடைய சரீரங்களாலும் சரீரத்தின்உறுப்புக்களாலும் சீக்கிரமாக யுத்தபூமியைப் பரப்பினான். அவன் உடும்புத்தோல்விரலுறைகட்டப்பெற்றவைகளும் விற்கள், அம்புகள், கத்திகள், கேடகங்கள், அங்குசங்கள், கடிவாளங்கள், தோமரங்கள், கோடாலிகள், கதைகள், இருப்புலக்கைகள், ஈட்டிகள், ரிஷ்டிகள், தோமரங்கள், பட்டாக்கத்திகள், பிண்டிபாலங்கள், பரிகங்கள், சக்திகள், சிறந்தகம்பனங்கள், சாட்டைகள், மஹாசங்கங்கள், குந்தங்கள் இவைகளையுடையவைகளும் அங்குசத்தையுடையவைகளும் முத்கரங்கள், க்ஷேபணீயங்கள், பாசங்கள், பரிகங்கள், கற்கள் இவைகளையுடையவைகளும் தோள்வளைகளை அணிந்தவைகளும் ஸுகந்தமானசந்தனப்பூச்சுள்ளவைகளும் உருண்டிருக்கின்றவைகளுமான உம்மைச்சேர்ந்த வீரர்களுடையகைகளை ஆயிரக்கணக்காக அறுத்தெறிந்தான். மஹாராஜரே! ஐயா! கருடனாலே துண்டாக்கப்பட்ட ஐந்துதலைநாகங்கள்போல அபிமன்யுவினால் துண்டாக்கப்பட்டவையும் மிகச்சிவந்தவையும் துடிக்கின்றவையுமான அந்தக்கைகளால் யுத்தபூமியானது விளங்கியது. பல்குனகுமாரனான அந்தஅபிமன்யு,நல்லமூக்குக்களாலும் முகங்களாலும் மயிர்களாலும் அழகுள்ளவையும் காயமில்லாதவையும் அழகியகுண்டலங்களுள்ளவையும் கோபமுண்டு பற்களால் உதடுகளைக்கடித்தவையும் அதிகமாக ரக்தத்தைப்பெருக்குகின்றவையும் அழகியகிரீடங்களும் தலைப்பாகைகளுமுள்ளவையும் மணிகளாலும் ரத்நங்களாலும் அலங்கரிக்கப்பட்டவையும் தண்டைஇழந்ததாமரைப்பூப்போன்றவையும் சூரியசந்திரர்களுக்கு ஸமமானகாந்தியுள்ளவையும் காலத்தில் ஹிதத்தையும் பிரியத்தையும் சொன்னவையும் பரிசுத்தமான வாஸனையுள்ளவையும் அநேகங்களுமான சத்ருக்களுடைய தலைகளாலே பூமியைப்பரப்பினான். அந்தஅபிமன்யு, சிறந்தயுத்தவீரர்

[1] யாகம்செய்யும் மேடை.

கள் வீற்றிருப்பவைகளும் நன்றாகப்பழக்கப்பட்ட குதிரைகளையுடைய வைகளும் நல்லஸாரதிகளையுடையவைகளும் கந்தர்வநகரத்துக்கொப் பானவைகளும் யுத்தத்தின்முறைப்படி அமைக்கப்பட்டவைகளுமான தேர்களை, ஏர்க்கால்களின்முன்பாகங்கள் ஸாரதிஉட்கார்ந்திருக்கும் மூன்றுமூங்கில்சட்டங்கள் அழகிய தண்டங்கள் ஏர்க்காலைத்தாங்கும் அண்டைமரங்கள் சக்கரங்களின்விளிம்பு, ஆரக்கால், சக்கரங்களி லுள்ள குடம் வட்டைமுதலானஸாமக்ரிகள் தேரின்நடுவிடம் இவை களையிழந்தவைகளும், எல்லாஉபகரணங்களும் உடைக்கப்பெற்ற வைகளும், பதாகைகளையும் கொடிமரங்களையும் குடைகளையும் இழந்த வைகளும், அம்பறாத்தூணி ஆயுதங்கள் இவைகளை இழந்தவைகளும், விரிப்புக்கள் புரட்டித்தள்ளப்பட்டவைகளும், யுத்தவீரர்கள் கொல்லப் பட்டவைகளுமாகும்படி ஆயிரக்கணக்கான அம்புகளால் துண்டித்துக் கொண்டு எல்லாத்திக்குக்களிலும் காணப்பட்டான். பிறகு, அந்த அபி மன்யு சத்ருக்களுடையயானைகளையும், யானைமீதுஏறியிருக்கின்ற வீரர் களையும் கொடிகளையும் அங்குசங்களையும் கொடிமரங்களையும் அம்புத் தூணிகளையும் கவசங்களையும் யானைகட்டியிருக்கிற கச்சைகளையும் கம்பளங்களுடன்கூடின கழுத்தணிகளையும் மணிகளையும் துதிக்கை நுனிகளையும் கொம்புநுனிகளையும் குடைகளின் வரிசைகளையும் அவற் றைத்தொடர்ந்துவரும் காலாட்படைகளையும் கூர்மையான முனைக ளுள்ள அம்புகளால் நாசஞ்செய்தான். பிறகு, அந்தஅபிமன்யு வனாயு தேசத்திலும் மலைநாடுகளிலும் காம்போஜதேசத்திலும் பாஹ்லிக தேசத்திலும் பிறந்தவைகளும், உறுதியான வாலும் காதும் கண்களு முள்ளவைகளும் வேகமுடையவைகளும் நன்குபொறுத்து இழுக்கும் தன்மையுள்ளவைகளும் நன்கு பழக்கப்பட்டவர்களும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் ப்ராஸங்களாலும் போர்புரிகின்றவர்களுமான யுத்த வீரர்களாலே ஏறப்பட்டவைகளுமான குதிரைகளை, சாமரங்கள் நாசம் செய்யப்பட்ட முகத்தையுடையவைகளும் சாமரங்கள் சிதறினவை களும் நாக்குக்களும் கண்களும் தெறித்துப்போனவைகளும் வெளி யில் பிதுங்கிவந்திருக்கின்ற நரம்புகளாலும் கறுத்த ஈரல்களாலும் நெருங்கியவைகளும் குதிரைக்காரர்கள் கொல்லப்பட்டவைகளும் கண் களறுக்கப்பட்டவைகளும் புலாலுண்ணுங் கூட்டங்களுக்கு ஆனந் தத்தை யுண்டுபண்ணுகின்றவைகளும் தோல்வார்களும் கவசங்களும் அறுக்கப்பட்டவைகளும் மலங்களாலும் மூத்திரங்களாலும் ரக்தங்க ளாலும் நனைக்கப்பட்டவைகளும் ஆகும்படிசெய்தான். உமது சேனை யிலுள்ள எல்லாஉயர்ந்த குதிரைகளையும் நாசஞ்செய்கின்ற அந்த அபி

மன்யு, செய்யமுடியாததும் எண்ணமுடியாததுமான காரியத்தைச் செய்து, விஷ்ணுவைப்போல நிகரற்றவனாக விளங்கினான். மிக்க தேஜஸுள்ள பரமசிவனால் கோரமான அஸுரர்சேனையானது எவ்வாறு நாசஞ்செய்யப்பட்டதோ அவ்வாறே அந்த அபிமன்யுவினாலே பெரிதான அந்தச்சதுரங்கசேனையானது நாசஞ்செய்யப்பட்டது. அர்ஜுன குமாரனான அபிமன்யு யுத்தத்தில் சத்ருக்களாலே தாங்கமுடியாததான காரியத்தைச் செய்துவிட்டு, உம்மைச்சேர்ந்த காலாட்படைக்கூட்டங்களையே முழுதும் பிளந்தான். ஸுப்ரம்மண்யராலே நாசஞ்செய்யப்பட்ட அஸுரஸேனையைப்போல, சுபத்ராகுமாரனான அபிமன்யு ஒருவனாலே கூர்மையான அம்புகளால் இவ்விதம் மிகுந்த நாசத்தை அடைவிக்கப்பட்ட அந்தச்சேனையைப் பார்த்து உம்மைச்சேர்ந்தவர்களும் உம்முடைய குமாரர்களும் பத்துத்திக்குக்களையும் நோக்கி, மிகவாய் வரண்டவர்களும், சஞ்சலிக்கின்ற கண்களையுடையவர்களும், மிகுந்த வேர்வையுடையவர்களும், மயிர்சிலிர்த்தலையுடையவர்களும், ஓடுவதில் உத்ஸாகமுள்ளவர்களும், சத்ருக்களை ஜயிப்பதில் உற்சாகமற்றவர்களும், ஒருவரையொருவர் கோத்ரநாமங்களாலே அழைக்கின்றவர்களும் பிழைப்பதில் ஆசையுள்ளவர்களுமாகிக் கொல்லப்பட்ட பிள்ளைகளையும் தகப்பன்களையும் ஸஹோதரர்களையும் பந்துக்களையும் ஸம்பந்திகளையும் விட்டுவிட்டுக் குதிரைகளையும் யானைகளையும் வேகமாக நடத்திக்கொண்டு சென்றார்கள்.

---

## முப்பத்தேழாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவினுடைய பராக்கிரமத்தை வர்ணித்தது.)

அளவற்ற பராக்ரமமுள்ள அபிமன்யுவினாலே அந்தச்சேனை நாசம்பண்ணப்பட்டதுகண்டு, துர்யோதனன் மிகுந்த கோபம்கொண்டு தானே அபிமன்யுவை எதிர்த்தான். பிறகு, யுத்தகளத்தில் அபிமன்யுவை நோக்கி அரசன் திரும்பிவருகின்றதைக்கண்டு, துரோணர் யுத்தவீரர்களைப்பார்த்து, 'அரசனை நான்குபக்கங்களிலும் காப்பாற்றுங்கள். வீர்யமுள்ள அபிமன்யு, நாம் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, லக்ஷம் யுத்தவீரர்களைக் கொல்லுவான். அவனை எதிர்த்தோடுங்கள்; பயத்தையடையாதீர்கள்; சீக்கிரமாகத் துரியோதனனைக் காக்கக்கடவீர்' என்று சொன்னார். அன்புள்ளவர்களும் வெற்றியோடு விளங்குகின்றவர்

களுமான வீரர்கள் சிறந்த புத்தியுடையவரான அந்தத்துரோணர் இவ்வாறு சொல்லியதைக்கேட்டு, விருத்திபண்ணப்பட்ட ஞானத்தையும் பலத்தையுமுடையவர்களாகி வீரனான உம்முடைய குமாரனைப் பயத்தினின்று ரக்ஷிப்பதற்காகச் சூழ்ந்துகொண்டார்கள். துரோணர், அஸ்வத்தாமா, கிருபர், கர்ணன், கிருதவர்மா, சகுனி, ப்ருஹத்பலன், சல்யன் பூரி, பூரிஸ்ரவஸ், சலன், பௌரவன், விருஷஸேனன் இவர்கள் கூர்மையான அம்புகளைத்தொடுத்து, அபிமன்யுவின்மீது பெரிய அம்புமழையைப் பொழிந்து, அவனை மோகிக்கச்செய்து, பிறகு துரியோதனனை விடுவித்தார்கள். அர்ஜுனகுமாரனான அபிமன்யு, உட்கொள்ளக்கூடிய ஆகாரத்தை வாயிலிருந்து பிடுங்கினதுபோல ஸஹிக்கவில்லை. அவன் அந்த மகாரதர்களைப் பெரியஅம்புமழையினால் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் புறங்காட்டி ஓடும்படி செய்து, பிறகு, ஸிம்மநாதஞ் செய்தான். பிறகு, மாம்ஸத்தில் விருப்பங்கொண்ட ஸிம்மத்தினுடைய கர்ஜனம்போன்ற அந்த அபிமன்யுவினுடைய கர்ஜனத்தைக்கேட்டு மிக்ககோபமுள்ளவர்களான துரோணர்முதலான ரதிகர்கள் மீண்டும் அதைப் பொறுக்கவில்லை. ஐயா! அவர்கள் அந்த அபிமன்யுவை ரதஸமூஹத்தால் சூழ்ந்துகொண்டு பலவித அடையாளங்களுள்ள பாணஸமூகங்களைக் கூட்டம் கூட்டமாகப் பிரயோகித்தார்கள். உம்முடைய பௌத்ரன் கூர்மையான அம்புகளாலே ஆகாயத்திலேயே அந்தப்பாணங்களை அறுத்து, அவர்களையும் திருப்பியடித்தான். அது ஆச்சர்யம்போலிருந்தது. பிறகு, அந்தச்சூரனாலே ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளால் கோபமூட்டப்பட்ட ரதிகர்கள் காலாட்கள் இவர்களுடைய கூட்டங்களும் யானைகளும் குதிரைக்காரர்களும் சத்ருக்களாலே ஜயிக்கமுடியாத அபிமன்யுவைக் கொல்லஎண்ணி நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். ஸமுத்ரம்போலக் கரைபுரண்டுவருகின்ற உம்முடைய அந்த ஸேனாஸமுத்ரத்தை அர்ஜுனகுமாரனான அபிமன்யு, ஒருவனாயிருந்துகொண்டு, பொங்கிவரும் ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோல, அம்புகளால் தடுத்தான். ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு யுத்தஞ்செய்கின்ற சூரர்களான சத்ருக்கள், அபிமன்யு இவர்களுள் ஒருவராவது புறங்காட்டவில்லை. பயங்கரமாயும்கோரமாயுமிருக்கின்ற அந்தயுத்தமானது நடந்துகொண்டிருக்கும்பொழுது துஸ்ஸஹன் ஒன்பது பாணங்களால் அபிமன்யுவை அடித்தான். துச்சாஸனன் பன்னிரண்டுபாணங்களினாலும், சாரத்வதரான கிருபாசார்யர் மூன்று பாணங்களினாலும், துரோணர் ஸர்ப்பத்துக்கொப்பான பதினேழு பாணங்களினாலும், விவிம்சதி எழுபதுபாணங்களினா

லும், கிருதவர்மா ஏழுபாணங்களினாலும், அவ்வாறே ப்ருஹத்பலன் எட்டுப்பாணங்களினாலும், அஸ்வத்தாமா ஏழுபாணங்களினாலும், பூரிஸ்ரவஸ் மூன்றுபாணங்களினாலும், மத்ரதேசாதிபதியான சல்யன் ஆறுபாணங்களினாலும், சகுனி இரண்டுபாணங்களினாலும், துரியோதனராஜன் மூன்றுபாணங்களினாலும் அபிமன்யுவை அடித்தார்கள். ஓ! மஹாராஜரே! ப்ரதாபசாலியான அந்த அபிமன்யுவோ வில்லைக் கைக்கொண்டு நர்த்தனம் செய்கின்றவன்போல அவர்களை மும்மூன்று பாணங்களால் திருப்பி அடித்தான். பிறகு, உம்முடைய குமாரர்களாலே பயப்படுத்தப்படுகிற அபிமன்யு மிகுந்தகோபம்கொண்டு சிக்ஷையினாலும் இயற்கையாகவும் ஏற்பட்டிருக்கும் மிகச்சிறந்த பலத்தைக் காண்பித்தான். அஸ்மகராஜன் கருடனுக்கும் காற்றிற்கும் சமமான வேகமுள்ளவையும் ஸாரதி சொல்வதைச்செய்கின்றவையுமான குதிரைகளோடு அந்த அபிமன்யுவை விரைவுடன் எதிர்த்து வந்தான். குதிரைகளும் அஸ்மகனை வகித்துக்கொண்டு அதிவேகத்துடன் அபிமன்யுவை எதிர்த்தோடி வந்தன. அவன் அபிமன்யுவைப் பத்துப்பாணங்களால் அடித்து, 'நில்,நில்' என்றும் சொன்னான். அபிமன்யு சிரித்துக்கொண்டு பத்துப்பாணங்களாலே அந்த அஸ்மகனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொடிமரத்தையும் இரண்டு கைகளையும் வில்லையும் தலையையும் அறுத்துப் பூமியில் தள்ளினான். சூரனான அந்த அஸ்மகேந்திரன் அபிமன்யுவினால் கொல்லப்பட்டவுடனே, எல்லாச்சேனையும் ஓடுவதில் நோக்கங்கொண்டு மிகச்சலித்தது. பிறகு, கர்ணன், கிருபர், துரோணர், அஸ்வத்தாமா, காந்தாரராஜன், சலன், சல்யன், பூரிஸ்ரவஸ், க்ராதன், ஸோமதத்தன், விவிம்சதி, விருஷஸேனன், ஸுஷேணன், குண்டபேதி, பிரதர்த்தனன், பிருந்தாரகன், லலித்தன், ப்ரபாகு, தீர்க்கலோசனன், கோபம்மூண்ட துரியோதனன் இவர்கள் அம்புமழைகளைப் பொழிந்தார்கள். சிறந்த வில்லாளிகளால் அம்புகளாலே மிகவும் அடிக்கப்பட்ட அந்த அபிமன்யு கர்ணனைக் கொல்வதின்பொருட்டுக் கவசத்தையும் சரீரத்தையும் பிளக்கக்கூடிய பாணத்தை எடுத்தான். அந்த அம்பானது அந்தக்கர்ணனுடைய கவசத்தையுடைத்துத் தேகத்தைப்பிளந்து வேகத்தோடு பாம்பு புற்றில்நுழைவதுபோலப் பூமியில் உருவிச்சென்றது. அந்தக்கர்ணன் அதிதீவ்ரமான அந்த அடியினாலே துன்பமுற்று மனத்தளர்ச்சியடைந்தவன்போல் ரணகளத்தில், பூமி அசையும் பொழுது மலையசைவதுபோல அசைவுற்றான். பலசாலியான அபிமன்யு மிக்ககோபமுள்ளவனாகிக் கூர்மையுள்ள வேறுமூன்றுபாணங்களினாலே ஸுஷேணன், தீர்க்கலோசனன், குண்டபேதி ஆகிய மூன்று

பேர்களையும் கொன்றான். கர்ணன் அந்த அபிமன்யுவின்மீது இருபத்தைந்துபாணங்களைப் பிரயோகஞ்செய்தான். அஸ்வத்தாமா இருபதுபாணங்களாலும் கிருதவர்மா ஏழுபாணங்களாலும் அபிமன்யுவை அடித்தார்கள். எல்லா அங்கங்களிலும் அம்புதைத்திருப்பவனும் இந்திரபுத்திரனுக்குப் புத்ரனுமான அந்த அபிமன்யு கோபங்கொண்டவனாகச் சேனையில் ஸஞ்சரித்துக்கொண்டு, பாசாயுதத்தைக் கையிற்கொண்ட யமன்போலக் காணப்பட்டான்; ஸமீபத்திலிருக்கின்ற சல்யன்மீது அம்புமழையைப் பொழிந்தான். மிக்கபுஜபலமுள்ள அபிமன்யு உம்முடைய சேனைகளைப் பயப்படும்படி செய்துகொண்டு உரத்த ஸிம்மநாதஞ் செய்தான். அரசரே! பிறகு, அஸ்த்ரங்களை அறிந்தவனான அபிமன்யுவினாலே மர்மஸ்தானங்களைப் பிளக்கின்ற அம்புகளாலே அடிக்கப்பட்ட அந்தச் சல்யன் தேரின்மத்தியில் உட்கார்ந்தான்; மூர்ச்சையுமடைந்தான். கீர்த்தியுடையவனான அபிமன்யுவினால் அந்தச்சல்யன் அவ்வாறு அடிக்கப்பட்டதைக்கண்டு சேனைமுழுவதும் துரோணர்பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஓடியது. ஸ்வர்ணமயமான கணுக்களுள்ள அம்புகளாலே நான்குபக்கங்களிலும் மூடப்பட்டிருக்கிற அந்த மிக்க புஜபலமுள்ளவனான சல்யனைக்கண்டு, யுத்தத்தில் தேவர்கள்போன்ற பராக்ரமமுள்ளவர்களும் உம்மைச்சேர்ந்தவர்களுமான யுத்தவீரர்கள் அபிமன்யுவினுடைய அம்புகளாலே நன்றாக அடிக்கப்பட்டு, சிங்கத்தினால் பீடிக்கப்பட்ட மிருகங்கள்போல ஓடினார்கள். பாரதரே! இவ்வாறு உம்முடைய பேரனால் சல்யன் அடிக்கப்பட்டான். அந்த அபிமன்யுவோ யுத்தகளத்திலுண்டான கீர்த்தியினால் பிதிர்க்கள், தேவர்கள், சாரணர்கள், ஸித்தர்கள், யக்ஷர்கள் இவர்களுடைய கூட்டங்களாலும் பூமியிலுள்ள பிராணிக்கூட்டங்களாலும் நான்குபக்கங்களிலும் கொண்டாடப்பட்டு, நெய்யினால் ஹோமம் செய்யப்பட்ட அக்னிபோல மிகவும் விளங்கினான்" என்று கூறினான்.

---

### முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி)

(அபிமன்யுவின் பராக்கிரமத்தை வர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "மஹாவில்லாளிகளை அம்புகளாலே அவ்வாறு நாசம்பண்ணுகின்ற அந்த அர்ச்சுனகுமாரனை யுத்தகளத்தில் என்னைச் சேர்ந்தவர்களில் எவர்கள் எதிர்த்தார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அரசரே! துரோணராலே காக்கப்பட்ட தேர்ப்படையைப் பிளக்க எண்ணங்கொண்ட பாலனான அபிமன்யுவினுடைய பெரிதான யுத்த விளையாட்டைக் கேளும். யுத்தகளத்தில், மத்ரராஜன் அபிமன்யுவின் பாணங்களால் களைப்படைந்திருப்பதுகண்டு, அவனுடைய இளைய ஸஹோதரன் கோபங்கொண்டு பாணங்களை இறைத்துக்கொண்டு எதிர்த்துச்சென்றான். அவன் பத்துப்பாணங்களாலே குதிரைகளோடும் ஸாரதியோடும் அர்ஜுனகுமாரனை அடித்து உரக்க ஸிம்மநாதஞ்செய்தான்; 'நில், நில்' என்றும் சொன்னான். கைச்சுறுசுறுப்புள்ள அர்ஜுன குமாரன் அம்புகளாலே அவனுடையதலையையும் கழுத்தையும் கைகால்களையும் வில்லையும் குதிரைகளையும் குடையையும் கொடிமரத்தையும் ஸாரதியையும் த்ரிவேணுவையும் தேரின் மற்றஉறுப்புக்களையும் சக்கரத்தையும் நுகத்தையும் அம்புத்தூணியையும் ஏர்க்காலுக்குக்கீழே இருக்கிற அண்டைமரத்தையும் கொடித்துணியையும் சக்ரரக்ஷகர்கள் இருவர்களையும் எல்லா உபகரணங்களையும் நன்றாக அறுத்தான். அவனை ஒருவனும் பார்க்கவில்லை. அந்தச்சல்யஸஹோதரன் நன்றாக அடிக்கப்பட்ட ஆபரணங்களும் ஆடையுமுள்ளவனாக நாசமடைந்து காற்றினால் வேரோடும் விசித்திரமான மேடையோடும் விழுகின்ற பெரிய சைத்யவிருக்ஷம்போலப் பூமியில் விழுந்தான். அவனைப் பின் தொடர்ந்து வந்திருந்த சேனைகளும் மிக்க பயமுற்று எல்லாத்திக்குக்களிலும் ஓடின. பாரதரே! அபிமன்யுவினுடைய அந்தச்செய்கையைக் கண்டு நான்குபக்கங்களிலும் எல்லாப்ராணிகளும், 'நல்லது! நல்லது!' என்று உரக்க அட்டஹாஸஞ் செய்தன. இவ்வாறு சல்யஸஹோதரன் நாசஞ்செய்யப்பட்டவுடன், அவனுடைய சேனையிலுள்ள வலிமை மிக்க பலவீரர்கள் மிக்ககோபங்கொண்டு பலவிதமான ஆயுதங்களைக் கையில் எடுத்துச் சிலர் ரதங்களோடும் குதிரைகளோடும் யானைகளோடும், பலத்தினால் மேற்பட்டிருக்கிற மற்றவர்கள் கால்நடையோடும் பாணங்களுடைய சப்தத்தோடும் பெரிய ரதங்களுடைய சக்கரங்களின் விளிம்பினின்றுண்டாகிற ஒலியோடும் ஹுங்காரங்களோடும் அட்டஹாஸங்களால் அதிகரித்தவையும் கர்ஜனைகளுடன்கூடியவையுமான ஸிம்மநாதங்களோடும், சிலர் நாணொலிகளோடும் தலத்வனிகளோடும் அர்ஜுனகுமாரனைப் பார்த்துக் கர்ஜித்து, 'நீ இனி உயிரோடு எங்களிடமிருந்து விடுதலையடையப் போகிறதில்லை' என்று சொல்லித் தங்களுடைய வம்சம் இருப்பிடம் பெயர் முதலியவைகளை அவன் காதில் விழும்படி செய்துகொண்டு அவனை எதிர்த்தார்கள். அவ்வாறு சொல்லுகின்ற அவர்களைப்பார்த்து, அபிமன்யு, நகைக்கின்றவன்போல எவனெ

வன் தன்னை முந்தி அடித்தானோ அவனவனை அம்புகளால் அடித்தான். சூரனான அபிமன்யு போரில் விசித்ரமான வேகமுள்ள அஸ்திரங்களைக் காண்பிக்கப்போகிறவனாகித் தொடக்கத்தில் மிருதுவாக யுத்தஞ் செய்தான். வாஸுதேவரிடத்திலிருந்தும் அர்ஜுனனிடத்திலிருந்தும் எந்தஎந்த அஸ்திரங்களைப்பெற்றானோ, அந்தஅந்த அஸ்திரங்களை அபிமன்யுவானவன் அந்த வாஸுதேவரையும் அர்ஜுனனையும் போலவே காண்பித்தான். பெரிய பாரத்தையும் பயத்தையும் அடிக்கடி தூரத்தில் விலக்கிவிட்டுப் பாணங்களைத்தொடுத்துக்கொண்டும் விடுத்துக்கொண்டும் அக்காரியங்களில் காலபேதமின்றிக் காணப்பட்டான். சரத்காலத்தில் மிகப்பிரகாசிக்கின்ற சூரியமண்டலம்போல அந்த அபிமன்யுவினுடைய வில்மாத்ரம் ப்ரகாசித்துக்கொண்டு திக்குக்களில் காணப்பட்டது. அந்த அபிமன்யுவினுடைய நாணொலியும் குரூரமான தலத்வனியும் ப்ரளயகாலத்தில் பேரிடியைத்தள்ளுகின்ற மேகத்தினுடைய சப்தம்போலக்கேட்கப்பட்டன. (அகாரியத்தினின்று) வெட்குகிறவனும் கோபமுள்ளவனும் [1] பகைவர்களுடைய அகங்காரத்தை அழிக்கிறவனும் காட்சிக்கினியவனுமான அபிமன்யு வீரர்களை ஸம்மானிக்க எண்ணி அம்புகளாலும் அஸ்திரங்களாலும் யுத்தம் செய்தான். ஓ! மஹாராஜரே! அவன் வர்ஷாகாலத்தைத் தாண்டியிருக்கின்ற சரத்காலத்திய ஸூர்யபகவான்போல மிருதுவாயிருந்து, பிறகு, அதிகஉக்கிரனானான். ஸூர்யன் கிரணங்களை விடுவதுபோலக் கோபங்கொண்ட அபிமன்யு விசித்ரமானவைகளும் கணக்கில் அடங்காதவைகளும் தங்கமயமான கணுக்களுள்ளவைகளும் சாணையினால் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளை நூறுநூறாகத் தொடுத்தான். மிகுந்த கீர்த்தியையுடைய அபிமன்யு, பாரத்வாஜர் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, க்ஷுரப்ரங்களாலும் வத்ஸதந்தங்களாலும் விபாடங்களாலும் அர்த்தசந்திரன்போல் விளங்குகின்ற பாணங்களாலும் பல்லங்களாலும் அஞ்சலிகங்களாலும் தேராளிகளுடைய படையைச் சிதற அடித்தான். பிறகு, அந்தச்சேனையானது அம்புகளால் பீடிக்கப்பட்டுப் புறங்காட்டி ஓடியது" என்று கூறினான்.

---

[1] 'பெரியோர்களைப் பூஜிப்பவன்' என்றுமாம்.

## முப்பத்தோன்பதாவது அத்யாயம்.

# அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)



(துச்சாஸனனும் அபிமன்யுவும் ஒருவரையொருவர் எதிர்த்தது.)

த்ருதராஷ்டிரன், "ஸஞ்சய! அபிமன்யு என்புத்ரனுடைய சேனையைத்தடுத்தானென்பதனால் என்மனம் துக்கத்தாலும் ஸந்தோஷத்தாலும் இரண்டுபட்டிருக்கிறது. கவல்கணகுமாரனே! அஸுரர்களோடு ஸுப்ரம்மண்யர் செய்த விளையாட்டைப்போன்ற அபிமன்யுவினுடைய விளையாட்டையெல்லாம் விஸ்தாரமாகவே மறுபடியும் எனக்குச்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"ஒருவீரனுக்கும் அநேக வீரர்களுக்கும் கைகலந்து நடந்ததும் அதிபயங்கரமும் ஆச்சரியகரமுமான அந்த யுத்தத்தை நான் உமக்குக் கூறுவேன். அபிமன்யு உத்ஸாஹத்துடன் ரதத்திலிருந்துகொண்டு ஊக்கமுடையவர்களும் சத்ருக்களை அடக்குகிறவர்களுமான உம்மைச் சேர்ந்த எல்லாத்தேராளிகளின்மீதும் (அம்புகளைப்) பொழிந்தான். அவன் கொள்ளிவட்டம்போலச் சுழன்று ஸஞ்சரித்துக்கொண்டு துரோணர், கர்ணன், கிருபர், சல்யன், அஸ்வத்தாமா, போஜன், ப்ருஹத்பலன், துர்யோதனன், ஸௌமதத்தி, மஹாபலமுள்ளவனான சகுனி, அநேக அரசர்கள், ராஜகுமாரர்கள், பற்பலசேனைகள் ஆகிய எல்லாரையும் அம்புகளால் அடித்தான். பாரதரே! ப்ரதாபசாலியும் தேஜஸுள்ளவனுமான அவன் சிறந்த அஸ்திரங்களாலே சத்ருக்களை ஸம்ஹாரஞ் செய்துகொண்டு எல்லாத்திக்குக்களிலும் காணப்பட்டான். அளவற்ற பராக்ரமமுள்ள அந்த அபிமன்யுவினுடைய அந்த நடக்கையைப்பார்த்த ஆயிரக்கணக்கான உம்முடைய சேனைகள் நடுங்கின. பாரதரே! பிறகு, மஹாபுத்தியுள்ளவரும் ப்ரதாபசாலியுமான பாரத்வாஜர் ஸந்தோஷத்தால் கண்கள் மலர்ந்து யுத்தத்தில் ஸமர்த்தனான அபிமன்யுவை அப்பொழுது ரணகளத்தில் பார்த்து உமது புத்திரனுடைய எல்லா அபீஷ்டங்களையும் சேர்ப்பிக்கிறவர்போல விரைவோடு கிருபரை அழைத்துப் பின்வருமாறு சொல்லலானார்.

'பார்த்தர்களுள் ப்ரஸித்திபெற்றவனும் யௌவனமுள்ளவனுமான இந்த அபிமன்யு எல்லா ஸ்நேஹிதர்களையும் யுதிஷ்டிராராஜனையும்

நகுலனையும் ஸஹதேவனையும் பாண்டுநந்தனனான பீமஸேனனையும் பந்துக்களையும் ஸம்பந்திகளையும் அன்னியர்களையும் (நண்பர்களல்லாமலும் பகைவர்களல்லாமலும் இருக்கிற) மத்யஸ்தர்களையும் நண்பர்களையும் மகிழ்வித்துக்கொண்டு செல்லுகிறான். வேறு ஒரு வில்லாளியையும் யுத்தத்தில் இவனுக்கு நிகராக நான் நினைக்கவில்லை. இவன் விரும்பினால் இந்தச்சேனையை நாசஞ்செய்துவிடுவான். என்ன காரணத்தினாலோ விரும்பவில்லை' என்று கூறினார். பிறகு, உம்முடைய குமாரனான துரியோதனராஜன் ப்ரீதியுள்ள துரோணருடைய வாக்கியத்தைக்கேட்டு அபிமன்யுவைக்குறித்து மிகுந்த கோபங்கொண்டு துரோணரைப் பார்த்து நகைத்து, கர்ணனையும் பாஹ்லிகனையும் துச்சாஸனனையும் மத்ரராஜனையும் அவ்வாறே இன்னும் மற்ற மஹாரதர்களையும் பார்த்து, 'முடிசூடின எல்லா அரசர்களுக்கும் ஆசார்யரும் ப்ரம்மவித்துக்களுள் சிறந்தவருமான இந்தத்துரோணாசாரியர் மூடனான அர்ஜுனகுமாரனை இப்பொழுது கொல்லவிரும்பவில்லை. போர்க்களத்தில் ஆயுதபாணியான இவருடன் யமனும் போர்புரியான். அவ்வாறிருக்க, ஸாமான்யனான வேறு மனிதன்விஷயத்தில் கேட்கவும் வேண்டுமா? உண்மையாக உங்களுக்கு நான் சொல்லுகிறேன். இந்தத்துரோணர் தமக்குச் சிஷ்யனாயிருப்பதினால் அர்ஜுனகுமாரனைக் காக்கிறார். தார்மிகர்களுக்குச் சிஷ்யர்களும் புத்ரர்களும் அவர்களுடைய குழந்தைகளும் அன்புக்குரியவர்களாகிறார்கள். மூடனான இந்த அபிமன்யு துரோணராலே நன்றாக ரக்ஷிக்கப்பட்டு, 'நானே சிறந்தவன்' என்கிற எண்ணங்கொண்டு தனக்கு வீர்யமிருப்பதாக எண்ணுகிறான். காலதாமதமின்றி இவனைக் கொல்லுங்கள்'என்று சொன்னான். இவ்வாறு அரசன் சொல்ல,அதனைக் கேட்டவர்களான அவர்கள், மிக்ககோபம்கொண்டவர்களாகி, பாரத்வாஜர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, கொல்லக்கருதி ஸுபத்ராபுத்ரனை எதிர்த்தார்கள். குருஶ்ரேஷ்டரே! துச்சாஸனனோ அப்பொழுது துர்யோதனனுடைய அவ்வார்த்தையைக்கேட்டு, அவனை நோக்கி, 'மகாராஜரே! பாண்டுபுத்திரர்களும் பாஞ்சாலர்களும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே யான் இவனைக் கொல்லப்போகிறேன்; உமக்கு நான்(நிச்சயமாகச்)சொல்லுகிறேன். ராகு சூரியனைவிழுங்குவதுபோல இப்பொழுது நான் அபிமன்யுவை விழுங்கப்போகிறேன்' என்று சொல்லிவிட்டு, மறுபடியும் குருராஜனான அவனை நோக்கி, 'வேந்தரே! மிக்ககர்வமுள்ளவர்களான கிருஷ்ணார்ஜுனர் இருவர்களும் ஸுபத்ராகுமாரன் என்னால் விழுங்கப்பட்டானென்பதைக் கேட்டு இம்மண்ணுலகத்தைவிட்டு யமலோகம் போவார்கள். ஸம்சயமில்லை. அவ்விரு

வர்களும் மாண்டார்களென்பதைக்கேட்டுப் பாண்டுவினுடைய [1]க்ஷேத்திரஜர்களான பிள்ளைகள் மித்திரவர்க்கங்களுடன் அதைர்யத்தினால் வெளிப்படையாக ஒரேதினத்தில் உயிரை இழப்பார்கள். ஆதலால், பகைவனான இவன் கொல்லப்பட்டால் உம்முடைய பகைவர்களெல்லோரும் கொல்லப்பட்டவர்களே. அரசரே! எனக்கு நன்மையை விரும்பும். இதோ நான் உம்முடைய பகைவர்களைக் கொல்லுகிறேன்' என்று இவ்வாறான வாக்கியத்தை இரைந்து சொன்னான். மன்னரே! உம்முடைய புத்திரனான துச்சாஸனன் இவ்வாறுகூறி ஸிம்மநாதஞ் செய்தான்; கோபங்கொண்டு அபிமன்யுவை எதிர்த்தான்; அம்புமழைகளாலும் பொழிந்தான். அதிக கோபத்தோடு எதிர்த்து வருகின்ற அவ்விதமான உம்முடைய புத்திரனை, பகைவர்களை அடக்குபவனான அபிமன்யு கூர்மையுள்ள இருபத்தாறு அம்புகளால் அடித்தான். துச்சாஸனன் மதப்பெருக்குள்ள யானைபோலக் கோபங்கொண்டு அபிமன்யுவோடு யுத்தஞ்செய்தான். அபிமன்யுவும் யுத்தகளத்தில் அவனோடு போர்புரிந்தான். ரதத்தை நடத்துவதில் திறமையுடையவர்களான அவ்விருவர்களும் ரதங்களால் இடமும்வலமுமாக நானாவித மண்டலகதிகளோடு ஸஞ்சரித்துக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள். பிறகு, வீரர்கள் சங்கவாத்யங்களோடும் ஸிம்மநாதத்தோடுங்கலந்த பணவங்கள், ம்ருதங்கங்கள், துந்துமிகள், க்ரகசங்கள், பெரியவையான ஆனகங்கள், பேரீவாத்யங்கள், ஜர்ஜரங்கள் இவைகளுடைய நாதத்தை அதிகமாக முழக்கினார்கள்.

---

## நாற்பதாவது அத்யாயம்.

# அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

### (அபிமன்யு கர்ணனையும் துச்சாஸனனையும் தோற்கச்செய்தது.)

பிறகு, புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவர்களுக்கும் யுத்தம் நடந்தது. அந்தஸமயத்தில், மிக்கபுஜபலமுள்ளவனும் சத்ருவீரர்களைக் கொல்லுகிறவனுமான அபிமன்யுவானவன் ஹஸ்தலாகவத்தினால் அம்புகளோடுகூடியவில்லை அறுத்துக் கீழேதள்ளித் துச்சாஸனனைக் கூர்மையான அம்புகளாலே நான்குபக்கங்களிலும் செதுக்கினான். அம்புகளாலே

---

[1] ஒருவனுடைய பார்யையினிடத்தில் வேறொருவனால் உண்டுபண்ணப்படும் புத்திரர்கள்.

மிகப்புண்படுத்தப்பட்ட சரீரத்தையுடையவனும் பகைவனுக்கு எதிரில்நிற்பவனுமான துச்சாஸனனைநோக்கி, புத்திமானான அபிமன்யு நகைத்துக்கொண்டு, 'கர்வமுள்ளவனும் குரூரனும் தர்மத்தையிழந்தவனும் பரநிந்தையிலேயே பற்றுதலுள்ளவனும் யுத்தத்திற்காக வந்தவனுமான சூரனை யுத்தத்தில் பாக்யவிசேஷத்தால் பார்க்கிறேன். த்ருதராஷ்டிரமஹாராஜர் ஸபையில் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது, உன்னால் கடுமையானசொற்களினாலே தர்மராஜரானயுதிஷ்டிரர் கோபமூட்டப்பட்டதனாலும், சகுனியினுடைய கபடமானசூதாட்டத்தை உனக்குப் பலமாகஅடைந்து ஜயத்தினால் மதம்கொண்ட உன்னால் பீமஸேனரும் பொருத்தமில்லாமல் பலவாறாக நிந்திக்கப்பட்டதனாலும், அந்த மஹாத்மாக்களுடையகோபத்தினாலே இந்தஆபத்தை நீ அடைந்தாய். பிறருடையபொருளை அபகரித்ததற்கும் கோபத்திற்கும் பொறாமைக்கும் பேராசைக்கும் அறிவின்மைக்கும் துரோஹத்திற்கும் உயிரையும் லக்ஷியம்செய்யாமலிருக்கிற செய்கைக்கும் உக்ரமானவில்லைக்கையில்பிடித்தவர்களான என்தகப்பன்மார்களுடைய ராஜ்யத்தைக் கவர்ந்ததற்கும் எதுதகுந்ததோ அது அந்தமஹாத்மாக்களுடைய கோபத்தினாலேயே இப்பொழுது உன்னால் அடையப்பட்டுவிட்டது. துர்ப்புத்தியுள்ளவனே ! அப்படிப்பட்ட நீ என்னால் முன்கூறப்பட்ட அவ்வித அதர்மத்தினுடைய உக்கிரமானபயனை அடைவாயாக. எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே இப்பொழுது பாணங்களினால் உன்னை யான் சிக்ஷிக்கப்போகிறேன். நான் இப்பொழுது யுத்தத்தில் அந்தக்கோபத்தின் கடனைத் தீர்ப்பவனாகப்போகிறேன். குருகுலத்தில்பிறந்தவனே! இப்பொழுது நான் இந்தயுத்தத்தில், கோபமூட்டப்பட்டவளான த்ரௌபதி, என்பிதாவான பார்த்தர், பீமராஜர் ஆகிய இவர்களுடைய விருப்பத்தைநிறைவேற்றலாகிற கடனைத்தீர்த்தவனாகப்போகிறேன். நீ, யுத்தகளத்தைவிட்டு விலகாமலிருப்பாயாகில் உன்னை உயிரோடு யான் விடமாட்டேன்'என்றுகூறினான். மிக்கபுஜபலமுள்ளவனும் சத்ருவீரர்களைக்கொல்லுகிறவனுமான அபிமன்யு இவ்வாறுசொல்லிவிட்டு, ப்ரளயகாலநெருப்புக்கும் காற்றிற்கும் ஸமமான தேஜஸும் வேகமுமுள்ளதும் துச்சாஸனனுடைய பிராணனை வாங்கக்கூடியதுமான ஓர் அம்பைத்தொடுத்தான். அந்தஅம்பானது வேகமாக அவனுடையமார்பை அடைந்து தோளின் ஸந்திஸ்தானத்தில் அவனைப் பிளந்து புற்றில்பாம்புநுழைவதுபோலக் கனுவோடுகூட நுழைந்தது. பிறகு, அக்நிக்குஸமமான ஸ்பர்சமுள்ளவைகளும் காதளவுஇழுத்துவிடப்பட்டவைகளுமான இருபத்தைந்து அம்புகளாலே இந்தத்துச்சா

ஸனனை மறுபடியும் அடித்தான். மஹாராஜரே! நன்றாக அடிக்கப்பட்டு அந்தத்துச்சாஸனன் துன்பமுற்றுத் தேரினிடையில் உட்கார்ந்தான்; மிக்கமூர்ச்சையையும் அடைந்தான். ஸாரதியோ, அபிமன்யுவினுடைய பாணத்தினால் பீடிக்கப்பட்டு ப்ரஜ்ஞையற்றவனாயிருக்கிற துச்சாஸனனை ரணகளத்தின் நடுவிலிருந்து விரைவில் விலக்கிச்சென்றான். பிறகு, பாண்டவர்களும் த்ரௌபதியின் குமாரர்களும் விராடராஜனும் பாஞ்சாலர்களும் கேகயர்களும் அவனைக்கண்டு ஸிம்மநாதஞ்செய்தார்கள். அந்தரணகளத்திலுள்ள பாண்டவஸைனிகர்கள் ஸந்தோஷமடைந்தவர்களாகப் பற்பலசின்னங்களுள்ள எல்லாவாத்யங்களையும் எங்கும் முழக்கினார்கள். அபிமன்யுவினுடையசெய்கையையும் பரமவிரோதியும் கொழுப்புடையவனும் சத்துருவுமான துச்சாஸனன் தோல்வியடைவிக்கப்பட்டதையுங்கண்டு நகைக்கவும் நகைத்தார்கள். தர்மராஜன், மாருதன், இந்திரன், அச்வினீதேவதைகள் ஆகியஇவர்களின்ப்ரதிமைகளை த்வஜத்தின்நுனிகளில் தரிப்பவர்களும் மஹாரதர்களுமான திரௌபதிகுமாரர்களும் ஸாத்யகியும் சேகிதானனும் த்ருஷ்டத்யும்னனும் சிகண்டியும் கேகயர்களும் த்ருஷ்டகேதுவும் மாத்ஸ்யர்களும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் யுதிஷ்டிரரை முதன்மையாகக் கொண்ட பாண்டவர்களும் ஸந்தோஷத்தோடு விரைவாகத் துரோணருடையபடையை உடைக்க எண்ணி எதிர்த்துச்சென்றார்கள். பிறகு, ஜயத்தைவிரும்புகிறவர்களும் சூரர்களும் திரும்பாதவர்களுமான உம்மைச்சேர்ந்தவர்களுக்குச் சத்ருக்களோடு பெரியயுத்தம்நேர்ந்தது. மஹாராஜரே! மிக்கபயங்கரமானயுத்தம் அவ்வாறு நடக்கையில், துர்யோதனன் கர்ணனைப்பார்த்து, 'கர்ண! ஜ்வலிக்கின்ற ஸூர்யனைப்போன்றவனும் ரணகளத்தில் பகைவர்களைக்கொல்லுகிறவனும் வீரனுமான அபிமன்யுவின் வசத்தை அடைந்தவனான துச்சாஸனனைப் பார். மேலும், பலத்தினால் அதிகரித்திருக்கின்ற சிங்கங்கள்போன்ற இந்தப்பாண்டவர்கள் மிகுந்தகோபமுள்ளவர்களும் அபிமன்யுவைரக்ஷிப்பதில் முயற்சியுள்ளவர்களுமாக எதிர்முகமாக ஓடிவருகிறார்கள்' என்றுகூறினான். பிறகு, உமதுபுத்ரனுக்கு ஹிதத்தைச்செய்கின்ற கர்ணன், மிகுந்த கோபங்கொண்டு கூர்மையுள்ள அம்புகளை அருகில் நாடமுடியாத அபிமன்யுவின்மீது வர்ஷித்தான். சூரனான கர்ணன் யுத்தகளத்தில் அவமதிப்பை முன்னிட்டுக் கூர்மையுள்ள சிறந்தஅம்புகளால் அந்தஅபிமன்யுவைப் பின்தொடர்ந்துவருகின்ற யுத்தவீரர்களையும் அடித்தான். வேந்தரே! அதிகமான மனோதைரியமுள்ள அபிமன்யுவோ, துரோணரை எதிர்க்க எண்ணங்கொண்டு, ராதாபுத்ரனான கர்ணனை எழுபத்துமூன்று பாணங்

சரங்களால் விரைந்து அடித்தான். அவ்வாறு ரதிகர்களுடையகூட்டங்களை நான்குபக்கங்களிலும் ஹிம்ஸிக்கின்ற வஜ்ரபாணியினுடைய புத்ரனுக்குப்புத்ரனான அந்த அபிமன்யுவைத் துரோணரிடத்திலிருந்து தடுப்பதற்கு ஒருரதிகனாவது சக்தியுள்ளவனாகவில்லை. பிறகு, எல்லாவில்லாளிகளுள்ளும் கர்வமுடையவனானகர்ணன் ஜயத்தையடையஎண்ணிச் சிறந்த அஸ்திரங்களைக்காண்பித்துக்கொண்டு அபிமன்யுவைப் பலவாறு அடித்தான். அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவனும், பரசுராமருக்குச் சிஷ்யனும் ப்ரதாபசாலியுமான அந்தக்கர்ணன் யுத்தத்தில் சத்ருக்களால் அவமதிக்கமுடியாத அபிமன்யுவைப்பீடித்தான். ராதாபுத்ரனான கர்ணனால் சரமாரிகளால் அவ்வாறு பீடிக்கப்படுகின்றவனும் தேவனுக்கொப்பானவனுமான அந்தஸுபத்ராபுத்திரனோ யுத்தத்தில் தளர்ச்சி அடையவில்லை. பிறகு, அபிமன்யு, சாணைக்கல்லில் தீட்டப்பட்டுக் கூர்மையுள்ளவையும் படிந்தகணுக்களுள்ளவையுமான அர்த்தசந்திரபாணங்களாலே சூரர்களுடைய விற்களையறுத்துப் புன்னகையுடையவன்போல வட்டமானவில்லிலிருந்து விடப்பட்ட ஸர்ப்பங்கள்போன்ற அம்புகளாலே கர்ணனைக் குடையோடும் கொடிமரத்தோடும் ஸாரதியோடும் குதிரைகளோடும் சேர்த்து விரைவாக அடித்தான். கர்ணனும் வணங்கினகணுக்களுள்ள அம்புகளை அந்தஅபிமன்யுவின்மீது பிரயோகித்தான். பல்குனகுமாரனும் பரபரப்பில்லாமல்அவைகளெல்லாவற்றையும்ஏற்றுக்கொண்டான். பிறகு, சிறந்த வீர்யமுள்ளவனான அந்தவீரன் ஒருமுகூர்த்தகாலத்திற்குள் த்வஜத்தோடுகூடக் கர்ணனுடையவில்லை ஒருபாணத்தால் அறுத்துப் பூமியில்விழும்படிசெய்தான். பிறகு, விபத்தையடைந்த கர்ணனைக்கண்டு அவனுடையஇளையஸஹோதரன் உறுதியான ஒருவில்லைக்கையில்கொண்டு வேகமாக அபிமன்யுவை எதிர்த்தான். பிறகு, பார்த்தர்களும் அவர்களைப் பின்தொடர்ந்துவந்திருக்கின்ற ஜனங்களும் உரக்கக்கூவினார்கள்; நான்குவித வாத்யங்களையும் முழக்கினார்கள்; அபிமன்யுவையும் புகழ்ந்தார்கள்.

---

நாற்பத்தோராவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவின் பராக்கிரமத்தை வர்ணித்தது.)

அந்தக்கர்ணனுடைய ஸஹோதரன் வில்லைக்கையில்பிடித்து அடிக்கடி நாண்கயிற்றை இழுத்துக்கொண்டு அபிமன்யுவை எதிர்த்

தான். மகாத்மாக்களான அவ்விருவர்களுடைய தேர்களும் சீக்கிரமாக யுத்தஞ்செய்வதற்குப் போதுமான அவகாசத்தைப் பெற்றன. கர்ண னுடைய ஸஹோதரன் புன்சிரிப்புடையவன்போலப் பத்துப்பாணங்க ளால், அணுகமுடியாத அபிமன்யுவைக் குடையோடும் கொடிமரத்தோ டும் ஸாரதியோடும் குதிரைகளோடும் விரைவாக அடித்தான். தகப்பன் பாட்டன்மார்களுடைய செய்கையைச் செய்கின்றவனும் மனுஷ்யபலத் தைக்காட்டிலும் அதிகரித்திருக்கிற பலத்தையுடையவனுமான அபி மன்யு பாணங்களால் அடிக்கப்படுவதைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் மனக்களிப்புற்றவர்களானார்கள். அந்த அபிமன்யு, வில்லைவளைத்துப் புன்சிரிப்புடன் ஒரே அம்பினால் அந்தக்கர்ணனது ஸஹோதரனுடைய தலையை பூமியில்விழும்படி செய்தான். அந்தத்தலையானது ரதத்தினின் றும் பூமியில் விழுந்தது. காற்றினாலே நான்குபக்கத்திலும் அசைக்கப் பட்டு மலையினின்று தள்ளப்பட்ட கோங்குமரம்போன்ற கர்ணனுடைய இளையஸஹோதரனைக்கண்டு, உம்மைச்சேர்ந்தவர்கள் மனவருத்தமுற்ற வர்களானார்கள். கர்ணனும், கொல்லப்பட்ட ஸஹோதரனைக்கண்டு திரு ம்பினான். ஸுபத்ராகுமாரனான அபிமன்யு கழுகிறகுகள் அணிந்த அம் புகளாலே கர்ணனைப் புறங்காட்டியோடும்படிசெய்து, மற்றச்சிறந்தவில் லாளிகளையும் சீக்கிரமாகவே எதிர்த்துச்சென்றான். உக்ரமானதேஜ ஸுடையவனும் மஹாரதனுமான அந்த அபிமன்யுவானவன், விஸ்தார மாகப்பரவியிருக்கின்றதும் யானைகளும் குதிரைகளும் தேர்களும் காலாட்களுமுள்ளதுமான அந்தக்கர்ணனுடையசேனையைக் கோபத் துடன் பிளந்தான். கர்ணனோ அபிமன்யுவினாலே அநேகஅம்புகளால் பீடிக்கப்பட்டு வேகமுள்ளகுதிரைகளோடு யுத்தரங்கத்தைவிட்டு விலகி னான். பிறகு, அந்தச்சேனையும் நாற்புறத்திலும் ஓடிவிட்டது. அர சரே! துரோணாசாரியர், 'மஹாவில்லாளியான கர்ண! கிருபரே! துரி யோதன! நில்லுங்கள்' என்று அழைத்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்தச்சேனையானது நாசம்பண்ணப்பட்டது. விட்டிற்பூச்சிகளாலே ஆகாயமும்,வர்ஷதாரைகளாலே மலையும் மூடப்படுவதுபோல அபிமன்யு வினுடைய அம்புகளாலேமூடப்பட்ட அந்தச்சேனையில் யாதொன்றும் காணப்படவில்லை. மன்னரே! கூர்மையுள்ளஅம்புகளாலே வதைக்கப் படுகின்ற உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களுள் ஸிந்துராஜனைத்தவிர வேறொருவனும் எதிர்த்துநிற்கவில்லை. பரதச்ரேஷ்டரே! பிறகு, ஆண் மையிற்சிறந்தவனான அபிமன்யுவோ சங்கமுழக்கஞ்செய்து சீக்கிர மாகப் பாரதசேனையை எதிர்த்தான். அந்த அர்ஜுனகுமாரன், உலர்ந்த காட்டில்வைக்கப்பட்ட நெருப்புப்போலப் பகைவர்களைப் பலத்தினாலே

எதிர்த்துப் பாரதசேனைகளினிடையில் நான்குபக்கங்களிலும் ஸஞ்சரித்தான். கூர்மையுள்ள அம்புகளாலே தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையும் அடித்துக்கொண்டு நன்றாகப்பிரவேசித்து யுத்தபூமியைத் தலையில்லாதமுண்டங்களுடைய கூட்டங்களாலே வியாபிக்கச்செய்தான். அவனுடைய வில்லிலிருந்து விடுபடும் சிறந்த அம்புகளாலே அறுக்கப்பட்டவர்கள் உயிரைவிரும்பினவர்களாக எதிர்ப்படுகின்ற தங்களைச்சேர்ந்தவர்களையே கொன்றுகொண்டு ஓடினார்கள். கோரமானவையும் பயங்கரமான செய்கைகளுள்ளவையும் கூர்மையுள்ளவையுமான அந்த அநேகவிபாடங்கள், தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் நாசஞ்செய்துகொண்டு பூமியில் விரைவாகப் பிரவேசித்தன. ரணகளத்தில் அறுக்கப்பட்டவைகளும் ஆயுதங்களையும் விரலுறைகளையும் கதைகளையும் தோள்வளைகளையுமுடையவைகளும் பொன்னணிகளால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான கைகள் காணப்பட்டன. அம்புகளும் விற்களும் கத்திகளும் சரீரங்களும் குண்டலங்களையும் பூமாலைகளையும்அணிந்ததலைகளும் பூமியில் ஆயிரக்கணக்காகக்கிடந்தன. அரசரே! உபகரணங்களோடுகூடியவையும் ஏர்க்கால்களாலே அழகியவையுமான ஆஸனபீடங்களாலும் ஒடிக்கப்பட்டஅச்சுக்களாலும் சக்கரங்களாலும் பலவாறாகவிழுந்திருக்கின்ற நுகத்தடிகளாலும் விழுந்திருக்கின்ற சக்திகள், விற்கள், கத்திகள், பெரியகொடிமரங்களாகிய இவைகளாலும் நான்குபக்கங்களிலும் சிதறியிருக்கின்ற கேடகங்களாலும் விற்களாலும் அம்புகளாலும் கொல்லப்பட்டிருக்கிற க்ஷத்ரியர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் யுத்தபூமியானது க்ஷணத்திற்குள் செல்லத்தகாத தன்மையுள்ளதாகவும் மிக்கபயங்கரமாகவும் இருந்தது. கொல்லப்படுகின்றவர்களும் ஒருவரைமற்றொருவர் அழைக்கின்றவர்களுமான ராஜகுமாரர்களுடைய பெரியசப்தமானது பயப்படுகிறவர்களுக்குப் பயத்தைவிருத்திசெய்துகொண்டு தோன்றியது. பரதஶ்ரேஷ்டரே! அவ்வொலியானது எல்லாத்திக்குக்களையும் எதிரொலியடையும்படிசெய்தது. பிறகு, ஸௌபத்ராபுத்திரன் சிறந்தகுதிரைகளையும தேர்களையும் யானைகளையும் நாசஞ்செய்துகொண்டு கௌரவசேனையைக்குறித்துச் சென்றான். அவன் பாரதஸைன்யங்களுடையநடுவில் உலர்ந்தகாட்டில் வைக்கப்பட்ட நெருப்புப்போலப் பலத்தினால் சத்துருக்களையெரிப்பவனாகக் காணப்பட்டான். பாரதரே! ஸைன்யமானது புழுதியினால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டிருக்கையில் எல்லாத்திக்குக்களிலும் திக்கோணங்களிலும் ஸஞ்சரிக்கின்ற அந்தஅபிமன்யுவை அப்பொழுது நாங்கள் பார்க்கவில்லை. பாரதரே! மஹாராஜரே!

யானைகள், குதிரைகள், மனிதர்கள் இவர்களின் உயிர்களைவாங்கிக் கொண்டு, பகைவர்களுடையகூட்டங்களை எரிக்கின்ற அபிமன்யுவை உச்சிப்போதிலுள்ள ஸூர்யனைப்போல் மறுபடியும் க்ஷணகாலங்கண்டோம். மஹாராஜரே! யுத்தத்தில் இந்திரனையொத்தவனும் இந்திரகுமாரனுக்குக்குமாரனுமான அந்தஅபிமன்யுவானவன், வீர்யமுள்ளவரும் அக்னிபுத்ரருமான ஸுப்ரம்மண்யர் முற்காலத்தில் தேவஸைன்யங்களில் எவ்வாறுவிளங்கினரோ அவ்வாறே ஸைன்யத்தினுடையமத்தியத்தில் விளங்கினன்" என்றுகூறினன்.

---

## நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

### (ஜயத்ரதன், அபிமன்யுவைத்தொடர்ந்த தர்மபுத்ராதியரைத்தடுத்ததும் ஜயத்ரதன் ருத்ரரிடம் வரம்பெற்றவாலாறும்.)

திருதராஷ்டிரன், "பாலனும் அத்தியந்தம் ஸுகியும், தன்புஜபலத்தால் இறுமாப்புடையவனும் யுத்தங்களில் அதிகப்பழக்கமில்லாதவனும் வீரனும் மகாகுலத்தில்பிறந்தவனும் சரீரத்தை இழக்கத்துணிந்தவனும் மூன்றுவயதுள்ள நல்லகுதிரைகளோடு படைகளில் புகுகின்றவனுமான அபிமன்யுவை, பலசாலியான எவனாவது யுதிஷ்டிரனுடையசேனையிலிருந்து பின்தொடர்ந்துவந்தானா?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானன்.

"யுதிஷ்டிரரும் பீமஸேனனும் சிகண்டியும் ஸாத்யகியும் நகுலனும் ஸஹதேவனும் த்ருஷ்டத்யும்னனும் விராடனும் கேகயர்களோடுகூடின துருபதனும் கோபமுள்ளவனை த்ருஷ்டகேதுவும் மாத்ஸ்யர்களும் யுத்தத்தில் எதிர்த்துச்சென்றார்கள். அணிவகுக்கப்பட்ட சேனையையுடையவர்களும் அடிக்கும்ஸ்வபாவமுள்ளவர்களுமான(அபிமன்யுவின்) தகப்பன்மார்கள்,(அவனுடைய)மாமன்மார்களோடு, பாதுகாக்கஎண்ணம்கொண்டு அவ்வழியினலேயே செல்லஎண்ணமுள்ளவர்களாக எதிர்த்துச்சென்றார்கள். ஓடிவருகின்ற அந்தச்சூரர்களைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் திரும்பிவிட்டார்கள். மஹாராஜரே! பிறகு, திரும்பிவிட்ட உமதுகுமாரனுடைய பெரிதான அந்தச்சேனையைக்கண்டு, உமக்குமருமகனும் பராக்கிரமசாலியும் ஸிந்துதேசராஜகுமாரனுமான ஜயத்ரதராஜன் அந்தச்சேனையை நிலைநிறுத்தஎண்ணி அருகில்வந்தான். அவன், புத்திரனை அபிமன்யுவினிடத்தில் அன்புள்ளவர்களும் சேனை

கலையுடையவர்களுமான பார்த்தர்களைத் தடுத்தான். உக்கிரமானவில்லை யுடையவனும் வில்வித்தையிற் சிறந்தவனுமான விருத்தக்ஷத்திர னுடையகுமாரன், சிறந்த அஸ்திரத்தைப் பிரயோகித்துக்கொண்டு பள் ளத்தாக்கைஅடைந்து யானைவருவதுபோல அருகில்எதிர்த்துவந்தான்" என்றுகூறினன்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! புத்திரனைக்காக்க எண்ணம்கொண்டு கோபத்துடன் வருகின்ற பாண்டவர்களை ஜயத்ரதன் ஒருவனாகவே யிருந்து தடுத்ததனால் அவனிடத்தில் [1] அதிகமான காரியபாரம்வைக் கப்பட்டதென்றே நான்நினைக்கிறேன். ஸைந்தவனிடத்தில் அத்யாச்சர்ய கரமான தேகபலமும் சௌர்யமும் இருக்கின்றனவென்றும் நான் எண்ணுகிறேன். மிக்கபலவானன அந்தஜயத்ரதனுடைய வீர்யத்தை யும் உத்தமமானசெய்கையையும் எனக்கு நீ சொல்லு. அந்தஜயத்ரதன் என்னஜபம், ஹோமம், அல்லது யாகம் செய்தான்? என்னதவம் செய் தான்? உத்தமனே! ஐம்பொறிஅடக்கலா? பிரம்மசர்யமா? அல்லது இவன் வேறுஎன்னசெய்தான்? விஷ்ணு, ஈசானர், ப்ரம்மா (இம்மூவர் களுள்) எந்தத்தேவதையைஆராதித்து, ஸிந்துராஜன், புத்ரனிடத் தில்பற்றுதலுள்ளவர்களும் கோபமுள்ளவர்களுமான பார்த்தர்களைத் தடுத்தான்? அவன் ஒருவனாகவேயிருந்துகொண்டு பாண்டவர்களைத் தடுத்ததுபோன்ற பெரியகார்யமானது, பீஷ்மராலும் அவ்வாறு செய் யப்படவில்லை; நான் அறிவேன்" என்றுசொல்ல, ஸஞ்சயன் சொல்ல லானன்.

"திரௌபதியை அவன்அபகரித்தகாலத்தில் பீமஸேனனால் வெல்லப்பட்டான்; அதனாலுண்டானமானத்தினால் அந்தஜயத்ரதராஜன் வரத்தைப்பெறவிரும்பி மிக்கபெரியதவம் புரிந்தான். அவன் இந்திரி யங்களைப் பிரியமான விஷயங்களிலிருந்து நன்றாகத்திருப்பிப் பசி தாகம் வெயில் இவைகளைப்பொறுத்தவனாகவும் இளைத்தவனாகவும் நரம்புகள் நிறைந்த தேகமுள்ளவனாகவுமிருந்துகொண்டு, ஸநாதநமான வேதமந்திரத்தை யுச்சரித்துத் தேவரான ஈச்வரரை ஆராதித்தான். பிறகு, பக்தர்களிடத்தில் தயையுள்ளவரானபகவான் அவனுக்கு அருள்செய்தார். பிறகு, அவர் ஸிந்துராஜகுமாரனுடைய ஸ்வப்னத்தின் முடிவில் அவனை நோக்கி, 'ஜயத்ரத! ஸந்தோஷமடைந்தேன்; எந்த வரனை விரும்புகிறாயோ அதனைப்பெற்றுக்கொள்' என்று சொன்னார். பாரதரே! ருத்ரராலே இவ்வாறு சொல்லப்பட்ட ஸிந்துராஜனை ஜயத்

[1] வேறுபாடம்.

ரதன் வணங்கிக் கைகளைக்குவித்துக்கொண்டு, நன்றாக அடக்கப்பட்ட சித்தவிருத்தியுள்ளவனாக, அவரைக்குறித்து, 'ரணகளத்தில் பயங்கர மான வீர்யமும்,பராக்ரமமுமுள்ளவர்களான பாண்டவர்களை நானொருவ னாகவே ஒரே ரதத்துடன் தடுக்கச்சக்தியுள்ளவனாகவேண்டும்' என்று வேண்டினான். இவ்வாறு வேண்ட, தேவேசரானருத்ரர், பிறகு ஜயத்ர தனைக்குறித்து, 'ஸௌம்ய! பிருதையின்குமாரனை தனஞ்சயனைத் தவிர மற்றப்பாண்டவர்கள் நால்வர்களையும் யுத்தத்தில் ஒருதினம் நீ தடுப்பாய்; இந்த வரத்தை உனக்கு யான் கொடுக்கிறேன்' என்று சொல்லி, அந்த இடத்திலேயே மறைந்தார். ராஜேந்த்ரரே! ஸிந்து ராஜன், 'அவ்விதமே ஆகட்டும்' என்று அவரைப் பார்த்துச்சொல்லி விட்டு விழித்துக்கொண்டான். அந்த வரதானத்தாலும் திவ்யமான அஸ்திரபலத்தினாலும் அந்த ஜயத்ரதன் ஒருவனாகவே பாண்டவர்க ளுடைய சேனையைத் தடுத்தான். அவனுடைய நாணோசையினாலும் தலத்வனியினாலும் சத்துருக்களான க்ஷத்ரியர்கள் பயமடைந்தனர். உமது ஸைன்யத்துக்கு அதிகமான ஸந்தோஷம் உண்டாயிற்று. அர சரே! க்ஷத்ரியர்கள் ஸைந்தவனிடத்தில் எல்லாப் பாரமும் சுமத்தப் பட்டதைக்கண்டு, யுதிஷ்டிராருடைய ஸேனையிருக்குமிடத்திற்கு உரத்த சப்தம் செய்துகொண்டு ஓடிவந்தார்கள்.

---

## நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஜயத்ரதன் ருத்ரனுடைய வரத்தினாலே வ்யூகமார்க்கத்தை மூடிப் பாண்டவர்களைத் தடுத்தது.)

ராஜஶ்ரேஷ்டரே! ஸிந்துராஜனுடைய பராக்கிரமத்தைக்குறித்து என்னை நீர்கேட்கிறீர்: அவன் பாண்டவர்களை எதிர்த்துப் போர்புரிந்த விதமனைத்தையும் நான் சொல்வேன்;கேளும். அடங்கினவைகளும் நன் றாக (ரதத்தை)இழுக்கும் தன்மையுள்ளவைகளும் ஸந்தோஷமுள்ளவை களும் பெரியவைகளும் வாயுவேகமுள்ளவைகளும் ஸிந்துதேசத்தில் பிறந்தவைகளுமான வேகமுள்ளகுதிரைகள் கந்தர்வநகரம்போன்றதும் விதிப்படி அமைக்கப்பட்டுள்ளதுமான ஸிந்துராஜனுடைய ரதத்தை இழுத்துச்சென்றன. வெள்ளிமயமான பெரிய பன்றிக்கொடியானது அவனுடைய ரதத்தை விளங்கச்செய்தது. ராஜசின்னங்களான அந்த வெண்குடையினாலும் கொடித்துணிகளாலும் சாமரங்களாலும் விசிறி

யினாலும் அந்த ஜயத்ரதனானவன், ஆகாயத்தில் சந்திரன் விளங்குவது போல விளங்கினான். முத்துக்களாலும் வஜ்ரங்களாலும் ரத்னங்களாலும் ஸ்வர்ணங்களாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளதும், இரும்பினாலாகியதுமான அவனுடைய அந்த [1] வரூதமானது நக்ஷத்ரங்களாலே சூழப்பட்ட ஆகாயம்போல விளங்கியது. அந்த ஜயத்ரதன், பெரிய வில்லில் நாணொலியை உண்டுபண்ணி அநேக அம்புக்கூட்டங்களை இறைத்துக்கொண்டு, எந்த ஸேனையின் பாகத்தை அர்ஜுனகுமாரன் உடைத்தானோ அந்த ஸேனாபாகத்தைப் பூர்த்திசெய்தான். அந்த ஜயத்ரதனானவன் ஸாத்யகியை மூன்று பாணங்களாலும், பீமஸேனனை எட்டுப் பாணங்களாலும், அவ்வாறே த்ருஷ்டத்யும்னனை அறுபதுபாணங்களாலும், விராடனைப் பத்துப்பாணங்களாலும், த்ருபதனைக் கூர்மையுள்ள ஐந்துபாணங்களாலும், சிகண்டியை ஏழுபாணங்களாலும், கேகயராஜர்களை இருபத்தைந்துபாணங்களாலும், திரௌபதிகுமாரர்களை மும்மூன்றுபாணங்களாலும், யுதிஷ்டிரரை எழுபதுபாணங்களாலும் அடித்துப் பிறகு, மற்றவர்களையும் பெரிய அம்புக்கூட்டத்தால் விலக்கித்தள்ளினான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, ப்ரதாபசாலியும் அரசருமான தர்மநந்தனர் சிரித்துக்கொண்டு, 'இதோ அறுக்கிறேன்'' என்று சொல்லித் தீட்டித்துவைத்திருக்கின்ற பல்லத்தினால் அவனுடைய வில்லை அறுத்தார். அந்த ஜயத்ரதன், கண்களைக்கொட்டுவதற்குள் வேறுவில்லை எடுத்துப் பத்துப்பாணங்களாலே தர்மபுத்திரரை அடித்தான்; மற்றவர்களையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான். அவனுடைய அந்த லாகவத்தையறிந்து பீமன் மும்மூன்று பல்லங்களாலே அவனுடைய வில்லையும் கொடியையும் குடையையும் விரைவாகப் பூமியில் தள்ளினான். ஐயா! பலவானான அந்த ஜயத்ரதன் வேறுவில்லை யெடுத்து ஸஜ்ஜம்செய்து பீமனுடைய கொடியையும் வில்லையும் குதிரைகளையும் அறுத்துத்தள்ளினான். வில்அறுக்கப்பட்ட அந்தப்பீமன் குதிரையையிழந்த உத்தமமான ரதத்திலிருந்து கீழே குதித்து ஸாத்யகியினுடைய ரதத்தில் சிங்கமானது மலையுச்சியில் பாய்வதுபோலப் பாய்ந்தான். பிறகு, ஸிந்துராஜனுடைய ஆச்சரியகரமானதும் நம்பத்தகாததுமான அந்தச்செய்கையைக்கண்டு, உம்மைச்சேர்ந்தவர்கள்; 'நல்லது, நல்லது' என்று சொல்லிக்கொண்டு ஸந்தோஷமடைந்தார்கள். ஸிந்துராஜன் ஒருவனாகவேயிருந்துகொண்டு மிக்ககோபமுண்டவர்களான பாண்டவர்களை அஸ்திர தேஜஸினால் தடுத்ததாகிய அவனுடைய அவ்விதமான செய்கையை எல்லாப்ராணிகளுமே புகழ்ந்தன.

[1] பீஷ்மபர்வம், 412-ஆம் பக்கம்குறிப்பிற் காண்க.

மேலேறி யுத்தஞ் செய்கின்ற போர்வீரர்களோடு அபிமன்யுவினால் முன் திக்கொல்லப்பட்ட யானைகளாலே பாண்டவர்களுக்குக் காட்டப்பட்ட வழியானது ஸைந்தவனால் தடுக்கப்பட்டது. சூரர்களான மச்சதேசத்தார்களும் பாஞ்சாலர்களும் கேகயர்களும் பாண்டவர்களும் முயற்சியுள்ளவர்களாக அநுஸரித்துச் சென்றார்கள்; ஸைந்தவனை எதிர்க்கச் சக்தியற்றவர்களானார்கள். எந்தஎந்த உம்முடைய பகைவன் துரோணருடைய சேனையை உடைக்கமுயல்கிறானோ, அந்தஅந்தச்சூரனை ஸைந்தவன் வரத்தைப்பெற்றமையால் தடுத்தான்.

---

நாற்பத்துநான்காவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவின் பராக்ரமத்தை வர்ணித்தது.)

ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான பாண்டவர்கள், ஸைந்தவனால் தடுக்கப்பட்டவுடன், உம்மைச்சேர்ந்தவர்களுக்குச் சத்ருக்களோடு மிக்க பயங்கரமான யுத்தம் நேர்ந்தது. பிறகு, ஸத்யஸந்தனும் (ஒருவராலும்) அணுகமுடியாதவனும் காந்தியுள்ளவனுமான அர்ஜுனகுமாரன் கௌரவ ஸேனையில் புகுந்து மகரமானது ஸமுத்ரத்தைக் கலக்குவதுபோலக் கலக்கினான். அம்புமழையினாலே அவ்வாறு மூடுகின்றவனும் பகைவர்களைக்கொல்லுகின்றவனுமான அந்த ஸுபத்ராபுத்ரனை, ப்ரதானர்களான குருஶ்ரேஷ்டர்கள் வரிசைமுறைப்படியே எதிர்த்தார்கள். அம்புமழைகளைத் தொடர்ச்சியாகப்பொழிகின்றவர்களும் அளவற்ற பராக்ரமமுள்ளவர்களுமான அந்தச்சத்ருவீரர்களுக்கும் அபிமன்யுவுக்கும் பயங்கரமான யுத்தம் நேர்ந்தது. அர்ஜுனகுமாரன் அந்தச் சத்ருக்களால் தேர்களுடையகூட்டத்தினால் அவ்வாறு தடுக்கப்பட்டு விருஷஸேனனுடைய ஸாரதியைக்கொன்று அவன் வில்லையும் அறுத்தான். பலசாலியான அந்த அபிமன்யு அம்புகளாலே அவனையும் அவன் குதிரைகளையும் அடித்தான். ப்ரஜ்ஞை இழந்தவனான அந்த விருஷஸேனன், வாயுவின் வேகம்போன்ற வேகமுள்ள அந்தக் குதிரைகளாலே யுத்தபூமியிலிருந்து வேறிடத்துக்குக் கொண்டுபோகப்பட்டான். அதனிடையில் அபிமன்யுவினுடைய ஸாரதியானவன் ரதத்தை விலக்கிச்சென்றான். பிறகு, ரதிகர்களுடைய கூட்டங்களெல்லாம் ஸந்தோஷமடைந்து, 'நல்லது, நல்லது' என்று ஆரவாரஞ்செய்தன. ஸிம்

மிம்போல் மிகுந்த கோபங்கொண்டும், அம்புகளால் பகைவர்களை நாசஞ் செய்துகொண்டும் ஸமீபத்தில் வருகின்ற அந்த அபிமன்யுவைநோக்கி, வஸாதீயன் சீக்ரமாக நெருங்கி எதிர்த்தான். அவன் அபிமன்யுவின் மீது ஸ்வர்ணமயமான கணுக்களுள்ள அறுபதுபாணங்களை இறைத் தான்; 'யுத்தபூமியில் யான் உயிரோடிருக்குங்காலத்தில், நீ உயிரோடு விடப்படமாட்டாய்' என்றும் சொன்னான். உருக்குமயமான கவசம் பூண்ட அந்த வஸாதீயனை ஸுபத்ராபுத்ரன் தூரத்திலிருக்கும் லக்ஷ்யத்தை வீழ்த்தக்கூடிய அம்பினாலே மார்பிலடித்தான். (உடனே)அவன் பிராணனை இழந்து பூமியில் விழுந்தான். ராஜரே! வஸாதீயன் கொல்லப்பட்டதுகண்டு க்ஷத்ரியசிரேஷ்டர்கள் கோபமூண்டு உமதுபேரனைக் கொல்லஎண்ணிப் பலவிதஉருவங்களுள்ளவிற்களைப்பலவாறுகநாணொலி இடும்படிசெய்துகொண்டு அப்பொழுது நான்குபக்கங்களிலும் சூழ்ந்து கொண்டார்கள். ஸுபத்ராபுத்ரனுக்குப் பகைவர்களோடு பயங்கரமான அந்த யுத்தம் உண்டாயிற்று. பல்குனகுமாரன் கோபமூண்டவனாக அந்தச்சத்ருக்களுடைய விற்களையும் அம்புகளையும் சரீரங்களையும் குண்டலங்களையுடையவைகளும் மாலைகளையணிந்தவைகளுமான தலைகளையும் அறுத்தான். கத்திகளோடும் அங்குளிரக்ஷகங்களான தோல்களோடும் பட்டாக்கத்திகளோடும் கோடாலிகளோடும்கூடினவைகளும் ஸ்வர்ணபூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான கைகள் அறுக்கப்பட்டவைகளாகக் காணப்பட்டன. மாலைகளாலும் ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலும் விழுந்திருக்கின்ற பலவிதமான கொடிகளாலும் கவசங்களாலும் கேடகங்களாலும் ஆரங்களாலும் கிரீடங்களாலும் குடைகளாலும் சாமரங்களாலும் மற்ற உபகரணங்களாலும் ரதிகள்வீற்றிருக்கும் பீடங்களாலும் அழகிய ஏர்க்கால்களாலும் ஒடிக்கப்பட்ட அச்சுக்களாலும் சக்கரங்களாலும் பலவாறுக ஒடிக்கப்பட்ட நுகத்தடிகளாலும் அண்டைமரங்களாலும் கொடித் துணிகளாலும் ஸாரதிகளாலும் குதிரைகளாலும் உடைக்கப்பட்ட ரதங்களாலும் கொல்லப்பட்ட யானைகளாலும் யுத்தபூமியானது வியாபிக்கப்பட்டதாயிற்று. சூரர்களும் பலவிததேசங்களுக்கு அரசர்களும் ஜயத்தில் ஆவலுள்ளவர்களும் கொல்லப்பட்டவர்களுமான க்ஷத்திரியர்களால் சூழப்பட்டுப் பூமியானது அதிபயங்கரமாகியது. எல்லாத் திக்குக்களிலும் அவ்வாறே மூலைத்திக்குக்களிலும் ஸஞ்சரிக்கின்றவனும் கோபம்கொண்டவனுமான அந்தஅபிமன்யுவினுடைய ஸ்வரூபமானது ரணகளத்தில் மறைந்துவிட்டது. பொன்னாலானகவசம், ஆபரணங்கள், விற்கள், அம்புகள் இவைகளைமாத்திரம் கண்டோம். அப்பொ

ழுது அம்புகளால் யுத்தவீரர்களைக்கவருகின்றவனும் நடுப்பகலிலுள்ள ஸூர்யன்போன்றவனுமான அந்தஅபிமன்யுவைக் கண்களால் எதிர்த்துப்பார்ப்பதற்கும் ஒருவனாவது சக்தியுள்ளவனாகவில்லை.

---

## நாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவின் பராக்கிரமத்தினால் துர்யோதனன் தோல்வியடைந்தது.)

மகாராஜரே! சூரர்களுடைய ஆயுளைக்கவர்கின்றவனான அர்ஜுன குமாரன் பிரளயகாலம்வந்திருக்கும்பொழுது எல்லாப்பிராணிகளுடைய உயிரையும்வாங்குகிற யமன்போலிருந்தான். இந்திரனுக்கொப்பான பராக்கிரமமுடையவனும் அதிகபலமுள்ளவனும் இந்திரகுமாரனுக்குக் குமாரனுமான அபிமன்யு, அப்பொழுது சேனையைக்கலக்குகிறவனாகக் காணப்பட்டான். ராஜேந்திரரே! க்ஷத்திரியஸ்ரேஷ்டர்களுக்கு யமன் போன்றவனான அந்தஅபிமன்யு சத்துருஸேனையில் நுழைந்து, பலமுள்ள புலியானது மானைக்கவர்வதுபோல் ஸத்யஸ்ரவஸைக் கவர்ந்து கொண்டான். ஸத்யஸ்ரவன், பகைவனால் பிடிக்கப்பட்டவுடன், மகாரதிகர்கள் விரைவுடன் பெரிதான சஸ்திரத்தைக்கையிலெடுத்து அபிமன்யுவின் அருகில் சென்றார்கள். குருசேனையிலுள்ள க்ஷத்ரியஸ்ரேஷ்டர்கள் அர்ஜுனகுமாரனைக்கொல்லக்கருதி,'நான்முன்னே;நான்முன்னே'என்று ஒருவரைஒருவர் மிஞ்சுமெண்ணத்துடன் வந்தார்கள். நான்குபக்கங்களிலும் எதிர்த்துஓடிவருகின்ற க்ஷத்திரியர்களுடைய சேனைகளை அபிமன்யு கடலில் திமியானது சிறியமீன்களை நாடிப்பிடிப்பதுபோலக் கவர்ந்துகொண்டான். பின்னிட்டோடாமல் அந்தஅபிமன்யுவைநெருங்கினவர்கள், ஸமுத்திரத்தை அடைந்தநதிகள்போலத் திரும்பாமலே போயினர். அந்தக்கௌரவசேனையானது ஸமுத்திரத்தில் திசைதப்பினதும் காற்றின்வேகத்தினாலே பயத்தை யடைவிக்கப்பட்டதும் பெரியதிமிங்கிலத்தினாலே பிடிக்கப்பட்டதுமான கப்பல்போல மிக நடுக்கமுற்றது. பிறகு, பலசாலியான ருக்மரதனென்கிற மத்ரராஜகுமாரன் பயமற்றவனாகிப் பயமுற்றசேனையைத் தேறுதலடையும்படி செய்துகொண்டு, 'சூரர்களே! உங்களுக்குப்பயம்வேண்டாம்; நானிருக்கும்பொழுது இந்தஅபிமன்யு ஒருவீரனாகான். யான் இவனை உயிரோடு பிடிக்கப்போகிறேன்; ஸம்சயமில்லை' என்கிறவாக்கியத்தைச்சொன்னான்.

இவ்வாறுசொல்லிவிட்டு, வீர்யமுள்ளவனுனருக்மரதன் நன்ருக அமைக்கப்பட்டதும் பிரகாசிக்கின்றதுமானரதத்திஞலே செலுத்தப்படுகின்றவனுகி ஸுபத்ராபுத்திரனை எதிர்த்தோடிவந்தான். அவன் அபிமன்யுவை மூன்றுபாணங்களிஞல் மார்பிலும் மூன்றுபாணங்களிஞல் வலக்கையிலும் கூர்மையுள்ளமூன்றுபாணங்களிஞல் இடக்கையிலும் அடித்துப் பிறகு ஸிம்மநாதஞ்செய்தான். அந்தப்பல்குனகுமாரன், அவனுடையவில்லையும் இடக்கைவலக்கைகளையும் அழகியகண்களோடும் புருவங்களோடுங்கூடின தலையையும் சீக்கிரமாக அறுத்துப் பூமியில்விழும்படிசெய்தான். அபிமன்யுவை உயிரோடுபிடிக்க எண்ணங்கொண்டவனும் கர்வமுள்ளவனும் சல்யகுமாரனுமான ருக்மரதன் கீர்த்தியுடையவனுன ஸுபத்ராபுத்திரனுலே கொல்லப்பட்டதைக்கண்டு, யுத்தத்தில்அடங்காதமதமுடையவர்களும் பகைவர்களைக்கொல்லும் தன்மையுடையவர்களும், பொன்னுலிழைக்கப்பட்ட கொடிகளுள்ளவர்களும் மிக்கபலசாலிகளும், சல்யகுமாரனுக்குச் சிநேகிதர்களுமான ராஜகுமாரர்கள், பனைமரவுயாமுள்ளவிற்களை நன்ருகஇழுத்துக்கொண்டு அம்புமழையோடு அர்ஜுனகுமாரனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அஸ்த்ரவித்தையில் பழகித்தேர்ந்தவர்களும் யௌவனமுடையவர்களும் அஸாத்தியமான கோபமுடையவர்களுமான சூரர்களால் அம்புக்கூட்டங்களால் மூடப்படுகின்றவனும் பகைவர்களால் வெல்லக்கூடாதவனும் சூரனுமான ஸுபத்ராகுமாரனை யுத்தகளத்தில் ஸஹாயமற்றவனுகக்கண்டு துர்யோதனன் களிப்புற்ருன்; இந்தஅபிமன்யுவை யமனுடையவீட்டையடைந்தவனுகவும் எண்ணினுன். ஐயா! அந்தராஜகுமாரர்கள் பொற்கணுக்களுடையவைவயும் பலவிதஅடையாளங்களுள்ளவையும் நன்குதீட்டப்பட்டவையுமான அம்புகளாலே அர்ஜுனகுமாரனையும் ஸாரதியோடும் குதிரைகளோடும் கொடியோடுங்கூடின அவனுடையஅந்தத்தேரையும் ஒருநிமிஷத்திற்குள் கண்ணுக்குப்புலப்படாதபடி செய்தார்கள். (அம்புகளால்) நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்டிருக்கிற அந்தஅபிமன்யுவை முட்களாலே நான்குபக்கங்களிலும் வியாபிக்கப்பட்டிருக்கிற காட்டுப்பன்றியைப்போலக் கண்டோம். பாரதரே! நன்ருக அடிக்கப்பட்ட அந்தஅபிமன்யு அங்குசங்களாலே குத்தப்பட்ட யானையைப்போலக் கோபங்கொண்டு காந்தர்வாஸ்திரத்தையும் ரதஸம்பந்தமானமாயையையும் பிரயோகித்தான். தவம்புரிந்து அர்ஜுனனுல்தும்புருமுதலானகந்தர்வர்களிடமிருந்துபெற்றுக்கொள்ளப்பட்ட அந்தஅஸ்திரத்திஞலே சத்ருக்களை மயக்கிஞன். மன்னரே! யுத்தகளத்தில் கொள்ளிவட்டம்போல் அஸ்திரங்களைச் சீக்கிரமா

கக்காண்பிக்கின்ற அபிமன்யு,ஒன்றாகவும் நூறுவிதங்களாகவும் ஆயிரம் விதங்களாகவுங் காணப்பட்டான். வேந்தரே! சத்ருக்களைவாட்டுகின்றவ னான அந்தஅபிமன்யு தேரைத் திறமையோடுநடத்துவதனாலும் அஸ் திரமூாயைகளாலும் மயங்கச்செய்துகொண்டு, அரசர்களுடையசரீரங் களை நூறாகப்பிளந்தான். அரசரே! யுத்தகளத்தில் கூர்மையான அம்பு களாலே சரீரத்தினிடமிருந்து போக்கப்பட்ட பிராணிகளுடைய பிரா ணன்கள் பரலோகத்தையடைந்தன; சரீரங்கள் பூமியைஅடைந்தன. பல்குனகுமாரன் அவர்களுடைய விற்களையும் குதிரைகளையும் ஸாரதி களையும் கொடிகளையும் தோள்வளைகளுடன்கூடினகைகளையும் தலைகளை யும் கூர்மையானபாணங்களால் அறுத்தான். பழங்களடர்ந்ததும் ஐந்து வருஷங்கள் சென்றதுமான மாந்தோப்பு அழிக்கப்பட்டாற்போல அநேகராஜகுமாரர்கள் ஸுபத்ராபுத்திரனால் வீழ்த்தப்பட்டார்கள். கோபங்கொண்ட ஸர்ப்பத்திற்கொப்பானவர்களும் மென்மைக்குணமுள் ளவர்களும் ஸுகம்பெறத்தக்கவர்களுமானவீரர்கள் அபிமன்யுஒருவ னாலே கொல்லப்பட்டார்களென்பதைக்கண்டு, துர்யோதனன் பயமுற்ற வனானான். தேராளிகளும் யானைகளும் குதிரைகளும் காலாட்களும் அபிமன்யுவினால் நாசம்பண்ணப்பட்டதாகக்கண்டு, துர்யோதனன், கோபங்கொண்டு சீக்கிரமாக அபிமன்யுவை நெருங்கிஎதிர்த்தான். அவ் விருவர்களுக்கும் க்ஷணகாலம்போல அபூர்வமானயுத்தம் நேர்ந்தது. பிறகு, உம்முடையகுமாரன் அபிமன்யுவினுடைய அநேகஅம்புகளால் அடிக்கப்பட்டுப் புறங்காட்டியோடினான்" என்றுகூறினான்.

---

### நாற்பத்தாறாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யு துர்யோதனகுமாரனை லக்ஷ்மணனையும் க்ராதபுத்ரனையும் கொன்றது.)

த்ருதராஷ்டிரன், ஓ! ஸூத! ஒருவனான அபிமன்யுவுக்கு அநே கர்களோடு கைகலந்தபயங்கரமானயுத்தம் நடந்ததாகச்சொல்லுகிறாய். மஹாத்மாவான ஸுபத்ராபுத்திரனுடைய ஜயத்தையும் நம்பத்தகாத தும் ஆச்சரியகரமுமான பராக்ரமத்தையும்பற்றிப் பேசுகிறாய்; ஆனால், எவர்களுக்குத் தர்மம்ஆதாரமோ அவர்களுக்கு இவை ஆச் சரியமல்ல. துர்யோதனனும் புறங்காட்டிஓட அநேகராஜகுமாரர்களும் கொல்லப்பட்டிருக்குமளவில், என்னைச்சேர்ந்தவர்கள் ஸுபத்ராபுத்

திரன்விஷயத்தில் எவ்விதபரிஹாரத்தைத்தேடினார்கள்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"சத்துருவுக்கு ஜயம்உண்டாகவே, உம்மைச்சேர்ந்தவர்கள், வாய் வரண்டவர்களாகவும் சஞ்சலமான கண்களுள்ளவர்களாகவும் மிக்க வேர்வையுடையவர்களாகவும் மயிர்க்கூச்சமுற்றவர்களாகவும் ஓடுவதில் ஊக்கமுள்ளவர்களாகவும் சத்ருவைஜயிப்பதில் உற்சாகமற்றவர்களாக வும் கொல்லப்பட்டவர்களான ஸஹோதரர்களையும் தந்தைகளையும் புத்திரர்களையும் நண்பர்களையும் ஸம்பந்திகளையும் பந்துக்களையும்விட்டு விட்டுக் குதிரைகளையும் யானைகளையும் வேகத்துடன்நடத்திக்கொண்டு சென்றனர். அவ்வாறு அபிமன்யுவினால் போர்வீரர்கள் தோல்வியடை விக்கப்பட்டதுகண்டு, துரோணரும் துரோணபுத்ரரும் ப்ருஹத் பலனும் கிருபரும் துர்யோதனனும் கர்ணனும் க்ருதவர்மாவும் ஸௌபலனும் மிகுந்தகோபங்கொண்டு பகைவர்களால் ஜயிக்கப் படாத ஸுபத்ராகுமாரனைக்குறித்து எதிர்த்துவந்தார்கள். மன் னரே! மஹாராஜரே! இந்திரனுக்கொப்பான வல்லமைபொருந்திய வனும் உமக்குப்பேரனுமான ஸுபத்ராபுத்திரனே அவர்களைப் பெரும் பான்மையாகப் புறங்காட்டியோடச் செய்தான். ஸுகியாக வளர்ந்தவ னும் பாணங்களையும் அஸ்திரங்களையும் அறிந்தவனும் மிக்ககாந்தியுள் ளவனுமான லக்ஷ்மணனொருவனே பாலனாயிருப்பதினாலும் கொழுப்பி னாலும் பயமில்லாமல் அர்ஜுனகுமாரனை எதிர்த்தான். புத்திரனிடத் தில் மிகுந்த அன்புடையவனான அவனுடைய பிதா அவனைப்பின் தொடர்ந்து திரும்பிவந்தான். துர்யோதனனையடுத்து மற்றமஹாரதர் களும் திரும்பினார்கள். மேகங்கள் நீரினால் மலையை நனைப்பதுபோல அவர்கள் அம்புகளால் அந்த அபிமன்யுவை அபிஷேகஞ்செய்தார்கள். அந்த அபிமன்யுவோ ஒருவனாகவே எல்லாத்திக்குக்களிலுமுண்டான காற்றானது மேகங்களைச் சிதற அடிப்பதுபோல அவர்களைச் சின்ன பின்னமாக அடித்தான். யுத்தகளத்தில், அர்ஜுனகுமாரன், உமக்குப் பேரனும் ஜயிக்கமுடியாதவனும் பார்ப்பதற்கு இனியவனும் பிதாவின் அருகில் நிற்கின்றவனும் சூரனும் வில்லைக் கையில்பிடித்தவனும் மிக்கஸுகத்தோடு வளர்ந்தவனும் குபேரனுடைய புத்திரன்போன்ற வனுமான லக்ஷ்மணனை, ஒரு மதயானை மற்றொருமதயானையை எதிர்த் ததுபோல எதிர்த்தான். காட்டில் ஒரு ஸிம்மக்குட்டியானது அடிக்கடி ஒரு புலிக்குட்டியை எதிர்த்ததுபோலச் சத்துருவீரர்களைக்கொல்லு கின்றவனான ஸுபத்ராகுமாரன் லக்ஷ்மணனோடு எதிர்த்து, நன்

றாகத்தீட்டப்பட்டுக் கூர்மையுள்ள அம்புகளாலே அவனுடைய இருகைகளிலும் மார்பிலும் அடித்தான்.[1] மஹாராஜரே! தடியினால் அடிக்கப்பட்ட ஸர்ப்பம்போல, மிகுந்த கோபமுண்ட உமது பேரனை அபிமன்யு, உம்முடைய பேரனை லக்ஷ்மணனைப்பார்த்து, 'உலகத்தை நன்றாகப்பார்; பரலோகத்தை அடையப்போகிறாய். பந்துக்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உன்னை யமலோகத்தையடையும்படி செய்யப்போகிறேன்' என்று சொன்னான். சத்ருவீரர்களைக் கொல்லுபவனும், மிக்கபுஜபலமுள்ளவனுமான ஸுபத்ராகுமாரன் இவ்வாறு சொல்லிவிட்டுச் சட்டையுரித்த பாம்புக்கொப்பான ஒரு பல்லத்தைப் பிரயோகித்தான். அந்த அபிமன்யுவினுடைய கையிலிருந்து விடுபட்ட அந்த அம்பானது, பார்க்கஅழகியதும் அழகிய மூக்கும் அழகிய புருவங்களுமுள்ளதும் கூந்தல்களால் அழகியதும் குண்டலங்களையுடையதுமான லக்ஷ்மணனுடைய தலையை அறுத்தது. உம்முடைய பௌத்திரனை அபிமன்யு, ஜயிக்கமுடியாதவனும் காட்சிக்கினியவனும் பிதாவினுடைய பக்கத்தில் நிற்கின்றவனும் மிக்கஸுகத்தோடு வளர்ந்தவனும் குபேரனுடையகுமாரனுக்கொப்பானவனுமான லக்ஷ்மணனை யமலோகத்திற்கனுப்பினான். லக்ஷ்மணன் கொல்லப்பட்டதைக்கண்டு ஜனங்கள், 'ஆ! ஆ!!' என்கிறஒலியோடு உரக்கக்கூச்சலிட்டார்கள். பிறகு, க்ஷத்ரிய ஸ்ரேஷ்டனான துர்யோதனன், பிரியனான தன்புத்திரன் கொல்லப்பட்டவுடன், கோபமுண்டு, 'இந்த அபிமன்யுவைக்கொல்லுங்கள்' என்று க்ஷத்ரியர்களை நோக்கி உரக்கச்சொன்னான். பிறகு, துரோணர், கிருபர், கர்ணன், துரோணபுத்திரர், ப்ருஹத்பலன், ஹ்ருதிகனுடைய குமாரனை கிருதவர்மா என இந்தஆறு ரதிகர்களும்(அபிமன்யுவைச்)சூழ்ந்துகொண்டார்கள். அர்ஜுனகுமாரன் கோபங்கொண்டு கூர்மையான அம்புகளாலே அவர்களைப்புறங்காட்டி ஓடும்படி யடித்து, வேகத்தோடு ஸைந்தவனுடைய பெரிய சேனையை எதிர்த்தான். அவனுடைய வழியை, கவசம்பூண்டவர்களான களிங்கர்களும் நிஷாதர்களும் வீர்யமுள்ளவனான க்ராதபுத்திரனும் யானைப்படையோடு சூழ்ந்துகொண்டார்கள். அரசரே! அப்பொழுது மிகவும் நெருங்கிய யுத்தம் நேர்ந்தது. பிறகு, எப்பொழுதும் வீசிக்கொண்டிருக்கின்ற காற்றானது ஆகாயத்தில் மேகங்களை எவ்வாறு நூறுதுணுக்குக்களாகச் செய்யுமோ அவ்வாறே அர்ஜுனகுமாரன் அந்த யானைப்படையைத் தைர்யத்துடன் சிதற அடித்தான். பிறகு, அரசர்கள் கோபங்கொண்டு அம்புக்கூட்டங்களால் (அபிமன்யுவை) நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள்.

[1] ஒருசொல் விடப்பட்டது.

பிறகு, துரோணர்முதலான மற்ற ரதிகர்கள் மறுபடியும் திரும்பிச் சிறந்த அஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு ஸுபத்ராபுத்திரனை எதிர்த்துச்சென்றனர். அர்ஜுனகுமாரன் அம்புகளால் அவர்களைத் தடுத்து விரைவுள்ளவனுகக் கொல்லும் எண்ணத்துடன், நினைக்கமுடியாத அம்புவெள்ளத்தினாலே க்ராதபுத்திரனோடு போர்புரிந்தான். அந்த அபிமன்யு (க்ராதபுத்திரனுடைய) விற்கள், அம்புகள், தோள்வளைகள் இவைகளுடன்கூடிய இரண்டு கைகளையும் கிரீடத்தோடுகூடின தலையையும் குடை கொடிமரம் ஸாரதி இவைகளுடன்கூடின தேரையும், குதிரைகளையும் அறுத்துத்தள்ளினான். குலம், சீலம், கல்வி, தேகபலம், கீர்த்தி, அஸ்திரபலம் இவைகளையுடைய அந்த க்ராதபுத்திரன் கொல்லப்பட்டவுடனே, வீரர்கள் பெரும்பாலும் (யுத்தபூமியைவிட்டு) ஓடினார்கள்" என்று கூறினான்.

---

## நாற்பத்தேழாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவின் பராக்ரமத்தை வர்ணித்தது.)

த்ருதராஷ்டிரன், "அவ்வாறு (பத்மவ்யூகத்தில்) நுழைந்தவனும் யௌவனமுள்ளவனும் பகைவர்களால் ஜயிக்கப்படாதவனும் குலத்திற்குத்தக்கபடி யுத்தங்களில் கார்யத்தைச்செய்கிறவனும் தோல்வியடையாதவனும் நல்லபலமுடையவைகளும் மூன்று வயதுள்ளவைகளுமான ஜாதிக்குதிரைகளோடே ஆகாயத்தில் பாய்கின்றவன்போல ஸஞ்சாரம் செய்கின்றவனுமான ஸுபத்ராகுமாரனை எந்தச்சூரர்கள் தடுத்தார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"பாண்டுநந்தனனான அபிமன்யு (உமது சேனைகளில்) நுழைந்து கூர்மையுள்ள அம்புகளால், உம்மைச்சேர்ந்தவர்களான இந்த எல்லா அரசர்களையும் புறங்காட்டி ஓடும்படி செய்தான். அவனைத் துரோணர், கிருபர், கர்ணன், ப்ருஹத்பலன், அச்வத்தாமா, ஹ்ருதிகனுடைய குமாரனான கிருதவர்மா ஆகிய ஆறு ரதிகர்களும் சூழ்ந்துகொண்டார்கள். மஹாராஜரே! ஸைந்தவனிடத்தில் அஸாத்தியமான பாரமானது வைக்கப்பட்டிருப்பதைக்கண்டு, உம்முடைய ஸைன்யமானது யுதிஷ்டிரரை எதிர்த்து அருகில் சென்றது. மிக்கபலமுள்ளவர்களான மற்றவர்கள் பனைமரவளவுள்ள விற்களை நன்றாக இழுத்துக்கொண்டு அம்புகளாகிற

ஜலங்களை வீரனுன ஸுபத்ராபுத்திரன்மீது வர்ஷித்தார்கள். சத்ருவீரர் களைக்கொல்பவனுன ஸுபத்ராபுத்திரன் பெரிய வில்லையுடையவர் களும் எல்லா வித்தைகளிலும் பூர்ணமான தேர்ச்சியுடையவர்களுமான அவர்களெல்லோரையும் ரணகளத்தில் அம்புகளாலே அசைவற்றிருக் கும்படி செய்தான். அவன் ஐம்பதுபாணங்களால் துரோணரையும் இரு பதுபாணங்களால் ப்ருஹத்பலனையும் எண்பதுபாணங்களால் கிருத வர்மாவையும் அறுபதுபாணங்களால் கிருபரையும் அடித்தான். அஶ் வத்தாமாவைப் பொற்கணுக்களுள்ளவையும் மிகுந்த வேகமுடையவை யும் காதுவரையில் நன்றாக இழுத்துவிடப்பட்டவையுமான பத்துப் பாணங்களினுல் அடித்தான். பல்குனகுமாரன் துவைக்கப்பட்டதும் தீட்டப்பட்டதுமான கர்ணி என்கிற சிறந்த பாணத்தால் சத்துருக் களின் மத்தியில் கர்ணனைக் காதில் அடித்தான். பிறகு, கிருபருடைய குதிரைகளையும் இருபக்கங்களிலுமுள்ள ஸாரதிகளையும் கீழேவிழும் படிசெய்து அவரைப் பத்துப்பாணங்களால் மார்பிலடித்தான். பின்பு, பலமுள்ளவனுன அவன், சூரர்களான உம்முடைய புத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில், கௌரவர்களுக்குக் கீர்த்தியை விர்த்தி பண்ணுகிறவனுன பிருந்தாரகனென்கிற வீரனைக் கொன்றான். துரோணகுமாரர், சத்ருக்களுள் சிறந்தவர்களையெல்லாம் பயமற்றவ னுகி நாசஞ்செய்கிற அந்த அபிமன்யுவை இருபத்தைந்து க்ஷுத்ரக பாணங்களினுல் அடித்தார். ஐயா! அந்த அர்ஜுன குமாரனே உம்மு டைய புத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, கூர்மையுள்ள அம்புகளாலே சீக்கிரமாக அஶ்வத்தாமாவைத் திருப்பியடித்தான். அவர், கூர்மையான நுனியுள்ளவையும் நன்குதீட்டப்பட்டவையும் அச்சந்தருபவையுமான அறுபதுபாணங்களினுலே மைநாகபர்வதம் போலிருக்கின்ற அபிமன்யுவை அடித்தும் அவனை அசைவுறச்செய்ய வில்லை. மஹாதேஜஸுடையவனும் பலசாலியுமான அந்த அபிமன்யு அபகாரியான துரோணபுத்திரரைப் பொற்கட்டுக்களுள்ள எழுபத்து மூன்று பாணங்களாலே திருப்பியடித்தான். புத்திரனிடத்தில் அன்புள் ளவரான துரோணர் அந்த அபிமன்யுவின்மீது நூறுகணைகளைத்தொடுத் தார். அவ்வாறே அஶ்வத்தாமாவும் யுத்தத்தில் பிதாவைப்பாதுகாக்க எண்ணங்கொண்டு அவன்மீது எட்டுப்பாணங்களைப் பிரயோகித்தார். கர்ணன் இருபத்திரண்டு அர்த்தசந்திரபாணங்களையும் கிருதவர்மா இருபதுபல்லங்களையும் ப்ருஹத்பலன் ஐம்பதுபாணங்களையும் சாரத் வதரான கிருபர் பத்துக்கணைகளையும் பிரயோகித்தார்கள். நான்கு பக்கங்களிலும் அந்தச்சூரர்களாலே கூர்மையுள்ள அம்புகளாலடிக்கப்

படுகின்ற அந்த ஸுபத்ராபுத்திரன் அவர்களெல்லோரையும் பத்துப் பத்துப்பாணங்களால் திருப்பியடித்தான். கோஸல தேசாதிபதியானவன், அந்த அபிமன்யுவைக் கர்ணியென்கிறபாணத்தினால் மார்பில் அடித்தான். அந்தஅபிமன்யு அந்தக் கோஸலராஜனுடைய குதிரைகளையும் கொடியையும் வில்லையும் ஸாரதியையும் அறுத்துப் பூமியில் தள்ளினான். பிறகு, கோஸலராஜனே தேரையிழந்து கத்தியையும் கேடகத்தையும் கையில்கொண்டு, பல்குனகுமாரனுடைய குண்டலங்களோடுகூடினதலையைத் தேகத்திலிருந்து கொய்வதற்கு விரும்பினான். அந்தஅபிமன்யு, கோஸலதேசாதிபனும் ராஜகுமாரனுமான ப்ருஹத்பலனைப் பாணத்தினால் மார்பிலடித்தான். உடனே மார்புபிளந்து அவன் கீழேவிழுந்தான். அமங்களமானவார்த்தைகளை வெளியிடுகிறவர்களும் கத்திகளையும் விற்களையும் கையிற்பிடித்தவர்களும் மஹாத்மாக்களுமான பதினாயிரம்அரசர்களை அபிமன்யு முறியஅடித்தான். அவ்வாறே, மஹாவில்லாளியான ஸுபத்ராகுமாரன் யுத்தகளத்தில் ப்ருஹத்பலனைக்கொன்றுவிட்டு, ஸஞ்சாரஞ்செய்தான். உம்முடையயுத்தவீரர்களையும் அம்புமழைகளால் அசைவற்றிருக்கும்படிசெய்தான்.

---

## நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொ. ???)

(துரோணர்முதலான ஆறுவீரர்கள் அபிமன்யுவைத் தேரிழக்கச்செய்தது.)

அந்தப்பல்குனகுமாரன் மறுபடியும் கர்ணனைக் கர்ணியென்கிற அம்பினால் கர்ணத்தில் அடித்து அவனுக்கு மிக்ககோபமூட்டிக் கொண்டு ஐம்பதுபாணங்களாலும்அடித்தான். பாரதரே! பிறகு, எல்லா அங்கங்களிலும் அம்புகள்தைத்த அந்தஅங்கராஜன் அவ்வளவுபாணங்களால் அவனைத்திருப்பியடித்து மிகவும்பிரகாசித்தான். அந்த அபிமன்யு,கோபம்கொண்டு கர்ணனை இரத்தவெள்ளத்தைப்பெருக்குகின்றவனாகச்செய்தான். சூரனானகர்ணனும் அம்புகளால் அறுக்கப்பட்டு இரத்தத்தினால் தேகமெங்கும் நனைக்கப்பட்டுச் சரத்காலத்தில் ஸந்தியையினால்சூழப்பட்ட ஸூர்யன்போலப் பிரகாசித்தான். பலவிதஅம்புகளால் விசித்ரமானமேனியுடையவர்களும் இரத்தத்தால் நன்றாகநனைக்கப்பட்டவர்களும் மஹாபலசாலிகளுமான அவ்விருவர்களும் பூத்திருக்கின்ற புலாசமரங்கள்போலிருந்தார்கள். பிறகு, ஸுபத்ராபுத்திரன் விசித்திர

மானயுத்தம்பண்ணுகிறவர்களும் சூரர்களுமான கர்ணனுடைய ஆறு மந்திரிகளை, குதிரைகளோடும் ஸாரதிகளோடும் கொடிகளோடும் ரதங்களோடும்கொன்றான். அவ்வாறே அந்தஅபிமன்யு பரபரப்பற்றவனாகச் சிறந்தவில்லாளிகளான மற்றப்போர்வீரர்களைப் பத்துப்பத்துப்பாணங்களாலே திருப்பியடித்தான். அது ஆச்சரியம்போலிருந்தது. அவ்வாறு மகததேசாதிபதியின்புத்திரனும் யௌவனமுள்ளவனுமான அச்வகேதுவைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் ஆறுபாணங்களால்கொன்றுதள்ளினான். பிறகு, யானையைக் கொடியாகக்கொண்டவனும் போஜகுலத்தில்தோன்றியவனுமான மார்த்திகாவதகனை க்ஷுரப்ரம்என்கிற அம்பினாலே அடித்தும் அம்புகளைப்பொழிந்துகொண்டும் ஆரவாரஞ்செய்தான். துச்சாஸனகுமாரன் நான்குபாணங்களாலே அபிமன்யுவினுடைய நான்குகுதிரைகளையும்,ஒருபாணத்தினால் ஸாரதியையும்,பத்துப்பாணங்களால் அவனையும் அடித்தான். பிறகு, அபிமன்யு, ஏழு அம்புகளாலே துச்சாஸனகுமாரனை அடித்து ரோஷத்தினால் கண்கள்சிவந்து பிறகு, கம்பீரமான சப்தத்தோடு, 'உன்தகப்பன் யுத்தத்தை விட்டுவிட்டு அற்பன்போல ஓடிவிட்டான். பாக்யவிசேஷத்தினாலே நீயும் யுத்தம் செய்யத் தெரிந்துகொண்டிருக்கிறாய். நீ இப்பொழுது விடப்படப்போகிறதில்லை' என்றவாக்யத்தைச் சொன்னான். இவ்வளவு வார்த்தையைச்சொல்லிவிட்டு, சிற்பியினால் நன்றாகச்சாணைபிடிக்கப்பட்ட பாணத்தை அவன்மீது பிரயோகித்தான். அந்த அம்பைத் துரோணகுமாரர் மூன்று அம்புகளால் அறுத்தார். அர்ஜுனகுமாரன் அந்தத்துரோணகுமாருடைய கொடியை அறுத்துச் சல்யனை மூன்று பாணங்களால் அடித்தான். சல்யன் கோபமில்லாதவன்போலவே அந்த அபிமன்யுவைக் கழுகிறகுகள் கட்டின ஒன்பதுபாணங்களால் மார்பிலடித்தான். அரசரே! அது ஆச்சரியம்போலிருந்தது. அர்ஜுனகுமாரன் அவனுடைய கொடியை அறுத்துப் பக்கங்களிலுள்ள இரண்டு ஸாரதிகளையுங்கொன்று உருக்கினாற்செய்த ஆறுபாணங்களால் அவனையும் அடித்தான். பிறகு, அவன் வேறுரதத்தைக்குறித்துச் சென்றான். அபிமன்யு, சத்ருஞ்சயன் சந்திரகேது மேகவேகன் ஸுவர்ச்சஸ் ஸூர்யபாஸன் என்கிற இந்த ஐந்து வீரர்களையும் கொன்று ஸௌபலனையும் அடித்தான். அவனை ஸௌபலன் மூன்றுபாணங்களாலடித்துப் பிறகு, துர்யோதனனைப்பார்த்து, 'நாமெல்லோரும் இவனைக்கொல்வோம். (இல்லையாயின்) இவன் நம்மை ஒவ்வொருவராகக் கொல்லுவான்' என்று சொன்னான். பிறகு, ஸூர்யகுமாரனான கர்ணன் யுத்தகளத்தில் துரோணரைப் பார்த்து, 'எல்லோரையும் இவன் கொன்றுவிடுவான்; இவனைக்

கொல்லுதற்குரியஉபாயத்தை எங்களுக்குவிரைவாகச்சொல்லும்'என்று சொன்னன். பிறகு, மஹாவில்லாளியான துரோணர் அவர்களெல்லோரையும் பார்த்து, 'பிதாவான அர்ஜுனன்போலவே எல்லாத்திசைகளிலும் ஸஞ்சாரம்செய்கின்ற இந்தப்பர்லனை அபிமன்யுவுக்கு. இப்பொழுது சிறிதாவது தவறுதல் உண்டா? பாருங்கள். நரசிரேஷ்டனை பாண்டவபுத்திரனுடைய சுறுசுறுப்பைப் பாருங்கள். ரதம்போகும் வழிகளில் அம்புகளைப்பூட்டி விரைந்துவிடுக்கின்ற இந்த அபிமன்யுவினுடையவில்லானது மண்டலாகாரமாகவே காணப்படுகிறது. சத்ருவீரர்களைக்கொல்லுகிற ஸுபத்ராபுத்திரன் என்பிராணனைத் துடிக்கச்செய்தாலும் அம்புகளால் என்னை மயக்கினலும் மறுபடியும் மிகுந்த ஸந்தோஷத்தையடையச் செய்கிறன். ரணகளத்தில் ஸஞ்சரிக்கின்ற இந்த ஸுபத்ராபுத்திரன் அதிகமானகர்வத்தைக்கொண்டிருக்கிறன். கோபமுள்ளவர்களான மகாரதர்கள் கைத்தேர்ச்சியுள்ளவனும் எல்லாத்திக்குக்களிலும் கணைகளை அளவில்லாமல்தொடுப்பவனுமானஅபிமன்யுவுக்குத் தீங்கைவிளைவிக்கக்கூடிய ஸமயத்தைக்காணவில்லை. அபிமன்யுவுக்கும் காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனுக்கும் யுத்தத்தில் வேற்றுமையை நான் காணவில்லை' என்று மறுமொழிகூறினர். பிறகு, அர்ஜுனகுமாரனுடைய பாணங்களால் அடிக்கப்பட்டகர்ணன் மறுபடியும் துரோணரைப்பார்த்து, 'யான் அபிமன்யுவினல் பீடிக்கப்பட்டும் நிற்கவேண்டுமென்று நிற்கிறேன். அதிகபயங்கரமானவையும் க்ரூரமானவையும் நெருப்புக்குச்சமமான தேஜஸுள்ளவையுமான வல்லமையுள்ள அபிமன்யுவினுடையபாணங்கள் இப்பொழுது என்இதயத்தைப் பிளக்கின்றன' என்றுசொல்ல, ஆசார்யரான துரோணர் அந்தக் கர்ணனைப்பார்த்து மெள்ளச்சிரிக்கின்றவர்போல,'இவன்கவசம் உடைக்க முடியாதது. இவனும் யௌவனமுள்ளவன்; கடுமையானவன்மையுள்ளவன்; என்றல் இவனுடையதந்தைக்குக் கவசத்தைத்தரிக்கும்விதமானது உபதேசிக்கப்பட்டிருக்கிறது. சத்துருபட்டணங்களை ஜயிப்பவனை இந்தஅபிமன்யு அவைஎல்லாவற்றையும் நிச்சயமாக அறிந்திருக்கிறன். குறிப்புத்தவருதபாணங்களால இவனுடையவில்லையும் நாண்கயிற்றையும் கடிவாளங்களையும் குதிரைகளையும் இருபக்கத்திலுமுள்ள இரண்டுஸாரதிகளையும் அறுத்தெறிவதற்கு முடியும். பெரியவில்லைத் தாங்கிய ராதேய! முடியுமானல் இதனை நீசெய். பிறகு, இவனைநேரில் நிற்காமல்செய்து பின்புறத்தில்ஆயுதப்பிரயோகம்செய்;இவன்வில்லோடு கூடியிருப்பானகில் தேவாஸுரர்களாலும் ஜயிக்கமுடியாதவன்; உனக்கு இஷ்டமிருக்குமானல் இவனை ரதத்தையும் வில்லையும் இழந்தவ

ளுகச்செய்; இந்தஅர்ஜுனகுமாரன் முன்னிலையில்நிற்கின்ற ஒருவனு லும் ஜயிக்கக்கூடாதவன்' என்றுசொன்னார்.

அந்த ஆசாரியருடையவார்த்தையைக்கேட்டு, ஸூர்யகுமாரனுன கர்ணன் விரைந்துகணைதொடுப்பவனும் ஹஸ்தலாகவமுள்ளவனுமான அபிமன்யுவினுடையவில்லைப் பின்புறத்திலிருந்து அறுத்தான். [1]துரோணர் அவனுடைய குதிரைகளையும் க்ருபர்அவனுடையஇருபக்கங்களி லுமுள்ளஸாரதிகளையும்கொன்றார்கள். மற்றவர்கள்அறுக்கப்பட்டவில்லை யுடையவனுன அபிமன்யுவின்மீது அம்புமழைகளைப்பொழிந்தார்கள். ஆறுமஹாரதர்களும், விரைந்துசெய்யவேண்டியகாலத்தில் விரைவுள்ள வர்களாகவும் தயையற்றவர்களாகவுமிருந்துகொண்டு ரதத்தைஇழந்த வனும் பாலனும் (வேறுஸகாயர்களின்றி) ஒருவனுமான அபிமன்யுவின் மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். வில்லற்றவனும் தேரிழந்த வனுமான அந்தஅபிமன்யு தனக்குரிய தர்மத்தைப் பாதுகாப்பவனுகக் கத்தியையும் கேடகத்தையும் கையில்கொண்டு மிக்ககாந்தியுடன் ஆகா சத்தில் கிளம்பினுன். அந்தஅர்ஜுனகுமாரன் [2] ஸர்வதோபத்ரம் முத லானமார்க்கங்களாலும் லாகவத்தினுலும் பலத்தினுலும் ஆகாயத்தில் கருடன்போல மிகவேகமாக ஸஞ்சாரஞ்செய்தான். போர்க்களத்தில் கேடுவிளைவிப்பதற்குரியகாலத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறவீரர் கள், 'கத்தியோடுகூடிய இந்தஅபிமன்யு என்மேலேயே விழப்போகிறுன்' என்று மேலேநோக்கின கண்களையுடையவர்களாகச் சிறந்தவில்லாளி யானஅவனை அடித்தார்கள். அவனுடையகைப்பிடியிலுள்ள இரத்தின மயமான பிடியுள்ளகத்தியை, மஹாதேஜஸ்வியும் சத்ருக்களைஜயிப்ப வருமான துரோணர் விரைந்து க்ஷுரப்ரம்என்கிறஆயுதத்தினுல் வெட் டினுர். ராதேயன் கூர்மையானஅம்புகளால் உத்தமமானகேடகத்தைச் சிதறஅடித்தான். கத்தியையும் கேடகத்தையுமிழந்து அம்புகளாலே நிறைந்தமேனியையுடையவனுன அந்தஅபிமன்யு மறுபடியும் ஆகாயத் திலிருந்து பூமியையடைந்து கோபமுண்டு சக்கரத்தைக் கையில்எடுத் துக்கொண்டு துரோணரைக்குறித்து எதிர்த்துவந்தான். சக்கரத்தி னுல்உண்டுபண்ணப்பட்ட புழுதிபடிந்து மிகவும்விளங்குகின்ற மேனி யையுடையவனும் விளங்குகின்ற சக்ராயுதத்தைக் கையில்கொண்ட வனுமான அந்தஅபிமன்யு மிகவும்பிரகாசித்தான். வாஸுதேவர்போ லக் காரியங்களைச்செய்கின்ற அந்தஅபிமன்யு யுத்தத்தில் க்ஷணகாலம் பயங்கரனுயிருந்தான். பெருகிக்கொண்டிருக்கின்ற இரத்தத்தினுலே

---

[1] 'போஜன்' என்பது வேறுபாடம். [2] 'கௌசிகம்' என்பது மூலம்.

முழுதும்சிவப்பான வஸ்திரத்தையுடையவனும் புருவநெறித்தலுள்ளவனும் மனக்குழப்பமுள்ளவனும் அதிகமான ஸிம்மநாதத்தைச்செய்பவனும் அளவற்றபலமுடையவனும் பிரபுவுமான அபிமன்யு யுத்தகளத்தில் சிறந்த அரசர்களுடையமத்தியையடைந்து மிகவும்விளங்கினான்.

---

## நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(அபிமன்யுவினுடைய வதம்)

விஷ்ணுவினுடைய ஸஹோதரியான ஸுபத்ராதேவிக்கு ஆனந்தத்தை யுண்டுபண்ணுகிறவனும் விஷ்ணுவினுடைய ஆயுதமானசக்ரத்தைப் பூஷணமாகவுடையவனும் அதிரதனுமான அந்தஅபிமன்யு யுத்தத்தில் வேறுஜனார்த்தனன்போலவே விளங்கினான். காற்றினாலே அலைக்கப்பட்ட நுனிமயிருள்ளதும் கையிலெடுக்கப்பட்ட சிறந்தசக்ராயுதத்தையுடையதும் தேவர்களாலேயும் பார்க்கமுடியாததுமான அந்தஅபிமன்யுவின் சரீரத்தை அரசர்கள்பார்த்து, 'பல்குனகுமாரன், கையிலிருந்து இந்தச்சக்கரத்தை எறிவானாகில் அம்மானானவிஷ்ணுவினுடைய வரதானத்தினாலே விஷ்ணுசக்ரம்போலவே விழும்' என்று மிகவும்மனக்கலக்கமுற்றவர்களாகி அந்தச்சக்ராயுதத்தைப் பலவாறு துண்டாடினார்கள். பிறகு, மஹாரதனான அந்தஅபிமன்யு பெரியகதாயுதத்தைஎடுத்தான். அந்தச்சத்ருக்களாலே, வில்,தேர்,கத்தி,சக்ரம்இவைகளை இழந்தவனாகச்செய்யப்பட்ட அபிமன்யு கதையைக்கையில்எடுத்து அஸ்வத்தாமாவை அடிக்கத்தொடங்கினான். நரஸ்ரேஷ்டரான அந்த அஸ்வத்தாமா உயரத்தூக்கப்பட்டுள்ளதும் ஜ்வலிக்கின்ற வஜ்ராயுதம்போன்றதுமான அந்தக்கதையைக்கண்டு, ரதத்தினுடைய மத்தியத்திலிருந்து மூன்று அடி விலகினார். அவருடையகுதிரைகளையும் அவ்வாறே பின்பக்கத்திலுள்ள இரண்டுஸாரதிகளையும் கதாயுதத்தினால்கொன்று ஸுபத்ராபுத்திரன் அம்புகளால் நான்குபக்கங்களிலும் தைக்கப்பட்ட மேனியையுடையவனாகி முள்ளம்பன்றியைப்போலக் காணப்பட்டான்; பிறகு, ஸுபலனுடையகுமாரனான காளிகேயனையும் கொன்றான்; அவனுக்கு உதவியாகவந்திருந்த எழுபத்தேழுகாந்தாரர்களையும் கொன்றான்; மறுபடியும், தேராளிகளானபத்துவஸாதீயர்களையும் கொன்றான். கேகயர்களுடைய எழுரதங்களையும் பத்துயானைகளையும் நாசஞ்செய்து, துச்சா

ஸனகுமாரனுடையரதத்தையும் குதிரைகளையும் கதாயுதத்தினால் சூர்ணம்பண்ணினான். ஐயா! பிறகு, துச்சாஸனபுத்திரன் கோபங்கொண்டு கதையைத்தூக்கிக்கொண்டு ஸுபத்ராபுத்திரனை எதிர்த்தோடிவந்து, 'நில், நில்' என்றுசொன்னான். கதையைக்கையில் கொண்டவர்களும் வீரர்களும் ஒருவரையொருவர் கொல்லுவதில் விருப்பமுள்ளவர்களும் பகைவர்களுமான அவ்விருவர்களும், முற்காலத்தில் முக்கண்ணரும் அந்தகாஸுரனும் யுத்தஞ்செய்ததுபோல யுத்தஞ்செய்தார்கள். சத்துருக்களைத்தபிக்கும்படி செய்கின்றவர்களான அவ்விருவர்களும் ஒருவரையொருவர் கதைநுனிகளால் அடித்துக்கொண்டு கீழேதள்ளப்பட்ட இந்திரத்வஜங்கள்போல ரணகளத்தின்மத்தியபூமியில் விழுந்தார்கள். பிறகு, கௌரவர்களுக்குக் கீர்த்தியை விருத்திபண்ணுகிறவனான துச்சாஸனகுமாரன் உடனேஎழுந்திருந்து, எழுந்திருக்கின்ற ஸுபத்திராபுத்திரனைக் கதையினால் தலையில்அடித்தான். சத்துருவீரர்களை ஸம்ஹரிக்கின்ற ஸுபத்ராபுத்திரன் கதையினுடைய மிக்கவேகத்தினாலும் யுத்தஞ்செய்த சிரமத்தினாலும் மயக்கமடைந்து உயிரைஇழந்து பூமியில் விழுந்தான். அரசரே! தாமரைஓடையை யானைகலக்குவதுபோல எல்லாக்கௌரவஸேனையையுங்கலக்கி ஸஹாயமற்ற அபிமன்யுவானவன் அநேகர்களாலே யுத்தத்தில் இவ்வாறுகொல்லப்பட்டான். சத்துருக்களால் கொல்லப்பட்ட சூரனான அபிமன்யு, வேடர்களால்கொல்லப்பட்ட காட்டுயானைபோல் விளங்கினான். அவ்வாறு சாய்ந்திருக்கிற அந்தச்சூரனை உம்மைச்சேர்ந்தவர்கள் சூழ்ந்துகொண்டார்கள். வஸந்தகாலத்தில் காட்டைஎரித்துத் தணிந்திருக்கின்றநெருப்பைப்போலவும், மரத்தின் நுனிகளை அதிகமாகஒடித்துத் தணிந்திருக்கின்ற காற்றைப்போலவும், பாரதசேனையைஎரித்துவிட்டு, ஸூர்யனைப்போல அஸ்தமயத்தை அடைந்தவனும், ராகுவினால்பீடிக்கப்பட்டிருக்கிற சந்திரனைப்போன்றவனும், வற்றிப்போனஸமுத்திரம்போன்றவனும், பூர்ணசந்திரன்போல் விளங்கும் முகத்தையுடையவனும், பக்கக்குடுமியினாலே மூடப்பட்டிருக்கிற நெற்றியையுடையவனும், பூமியில் விழுந்திருக்கிறவனுமான அந்த அபிமன்யுவைப்பார்த்து உம்மைச்சேர்ந்த அந்தமஹாரதர்கள் அதிகமனக்களிப்புற்று அடிக்கடி ஸிம்மம்போலக் கர்ச்சித்தார்கள். அரசரே! உம்மைச்சேர்ந்தவர்களுக்கு அதிகமானஸந்தோஷமுண்டாயிற்று. மற்றவீரர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர்விழுந்தது. மன்னரே! ஆகாயத்திலிருந்து நழுவினசந்திரன்போல விழுந்திருக்கின்ற அந்த வீரனைக்கண்டு ஆகாயத்திலுள்ள பிராணிகள் 'ஸஹாயமற்ற இந்த அபிமன்யு, துர்யோதனனைச் சேர்ந்தவர்களான துரோணர் கர்ணன்முதலான

ஆறும் ஹூரர்களாலே அடிக்கப்பட்டுப் படுத்திருக்கிறான். இது தர்மம் அன்றென்று நாங்கள் எண்ணுகிறோம்' என்று அலறி அழுதன. அந்தச் சூரன் கொல்லப்பட்டவுடனே, பூமியானது நக்ஷத்திரகணங்களுடைய வரிசையுடன்கூடிய ஆகாயம் பூர்ணசந்திரனால் எவ்வாறு விளங்குமோ அவ்வாறே மிகவிளங்கியது. ஸ்வர்ணமயமானகட்டுக்களுள்ள அம்புகளால்நிறைந்தும் இரத்தவெள்ளத்தினால் நான்குபக்கங்களிலும் நனைக்கப்பட்டும் விளங்குகின்றவைகளும் குண்டலங்களோடுகூடியவைகளுமான சூரர்களுடைய தலைகளாலும் விசித்திரமான யானைகளினுடைய மேல்விரிப்புக்களாலும் கொடிகளாலும் நன்றாகமூடப்பட்டும், சாமரங்களாலும் விரிப்புக்களாலும் தள்ளப்பட்டிருக்கின்ற சிறந்தவஸ்திரங்களாலும் நல்லஒளியுள்ள தேர், யானை, குதிரை, மனிதன் இவைகளினுடைய அலங்காரங்களினாலும் நல்லகூர்மையுள்ளவைகளும் துவைந்தவைகளும் சட்டையுரித்த ஸர்ப்பம்போன்றவைகளுமான கத்திகளாலும் அறுக்கப்பட்ட பலவிதவிற்களாலும் சக்திகளாலும் ரிஷ்டிகளாலும் பிராஸங்களாலும் கம்பனங்களாலும் மற்றும்பலவித ஆயுதங்களாலும் நன்றாக மூடப்பட்டும் யுத்தபூமி விளங்கியது. அலறுகின்றவர்களும் மிகப்பெருகுகிற ரக்தவெள்ளமுள்ளவர்களும் விழுகின்றவர்களும் விழுந்தவர்களுமான மற்றப்போர்வீரர்களாலே யுத்தபூமியானது மிகவும்விளங்கியது. ஸுபத்திராபுத்திரனாலே தள்ளப்பட்டு ஜீவனை இழந்தவைகளும் பெருமூச்சுவிடுகின்றவைகளும் இரத்தத்தால் நனைக்கப்பட்டவைகளும் [1] ஸாதிகளோடுகூடினவைகளுமான குதிரைகளாலும், அம்புகளால் அடிக்கப்பட்டவைகளும் அங்குசங்களோடும் [2] மஹாமாத்ரர்களோடும் எல்லாஆயுதங்களோடும் கொடிகளோடுங்கூடியவைகளும் நாசஞ்செய்யப்பட்ட மலைகள்போன்றவைகளுமான யானைகளாலும், அந்த யுத்தபூமியானது முழுதும் மேடுபள்ளமுள்ளதாகச் செய்யப்பட்டது. பூமியில் சிதறிக்கிடக்கின்ற குதிரை, ஸாரதி, யுத்தவீரன் இவர்களையுடையவைகளும் மிகக்கலக்கப்பட்டு ஸர்ப்பங்களை இழந்த மடுக்கள்போன்றவைகளுமான உத்தமமான ரதங்களாலும், கொல்லப்பட்டவர்களும் பற்பலவித ஆயுதங்களையும் பூஷணங்களையுமுடையவர்களுமான காலாட்களுடைய கூட்டங்களாலும் கோரமான ஸ்வரூபமுள்ள அந்த யுத்தபூமியானது பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணுகிறதாயிற்று. யுத்தபூமியில் விழுந்தவனும் சந்திரஸூர்யர்களுக்குஸமமான காந்தியையுடையவனுமான அந்த அபிமன்யுவைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்களுக்கு அதிகமானமகிழ்ச்சி

---

[1] குதிரைவீரர்.    [2] யானைவீரர்.

உண்டாயிற்று; பாண்டவர்களுக்குத் துக்கமுண்டாயிற்று. ஓ! அரசரே! யௌவனத்தையடையாதவனும் தயைபாராட்டத்தக்க இளமைப் பருவத்திலிருப்பவனுமான அபிமன்யு கொல்லப்பட்டவுடன், தர்மபுத்திரர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, எல்லாப்பாண்டவசேனையும் ஓடியது. ஸுபத்திராபுத்திரன் நாசம்பண்ணப்பட்டவுடன், பிளக்கப்படுகின்ற சேனையைக்கண்டு, அஜாதசத்ருவானவர் அந்த வீரர்களைக் குறித்து, 'திரும்பாமல் நின்று கொல்லப்பட்ட அந்த வீரன் ஸ்வர்க்கத்தையடைந்து விட்டான்; நீங்கள் பயப்படாதீர்கள்; மனத்தை நிலை நிறுத்திக்கொள்ளுங்கள்; யுத்தத்தில் சத்ருக்களை ஜயிப்போம்' என்று இந்தவார்த்தையைச் சொன்னார். மிக்கதேஜஸ்வியும் மஹாபராக்கிரமசாலியும் யுத்தம்பண்ணுகிறவர்களுள் சிறந்தவருமான அந்தத்தர்மராஜர் துக்கமடைந்திருக்கின்றவர்களுக்கு இவ்வண்ணம் சொல்லித் துக்கத்தைவிலக்கினார். யுத்தத்தில் ஸர்ப்பம்போன்றவர்களான சத்துருராஜகுமாரர்களை முந்தி ரணகளத்திற்கொன்று பிறகு அர்ஜுனகுமாரன் யுத்தத்தில் பகைவர்களை எதிர்த்தான். கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஒப்பான அபிமன்யு பதினாயிரம் போர்வீரர்களையும் மஹாரதனை கோஸலதேசத்தரசனையும் கொன்று இந்திரலோகத்தை நிச்சயமாக அடைந்துவிட்டான். ஆயிரக்கணக்காகத் தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் மனிதர்களையும் கொன்றும் யுத்தத்தில் திருப்தியடையாதவனும் புண்ணியகரமான கார்யங்களைச்செய்தவனும் துக்கிக்கத்தகாதவனுமான அந்த அபிமன்யு, அழிவற்றவைகளும் புண்ணியங்களாலே ஜயிக்கப்பட்டவைகளுமான புண்ணியராசிகளுடைய உலகங்களை அடைந்தான்.

---

## ஐம்பதாவது அத்யாயம்.

# அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுத்தபூமியை வர்ணித்தது.)

நாங்களோ உத்தமனான வீரனைக்கொன்று அந்தச்சத்துருவீரர்களுடைய அம்புகளாலே துன்பமடைவிக்கப்பட்டவர்களும் ரக்தத்தினால் நனைக்கப்பட்டவர்களுமாக ஸாயங்காலத்தில் தங்கியிருக்குமிடம் போய்ச்சேர்ந்தோம். மஹாராஜரே! வாட்டத்தையடைந்தவர்களும் பிரஜ்ஞையை யிழந்தவர்களுமான நாங்களும் மற்றவர்களும் யுத்தபூமி

யைப்பார்த்துக்கொண்டே மெள்ள விலகிச்சென்றோம். பிறகு, தாம ரைப்புஷ்பத்தாலான தலையணிபோல விளங்கிக்கொண்டு ஸூர்யன் அஸ்தகிரியையடைந்து சாய்ந்திருக்குந்தருணத்தில் பகலிரவுகளுடைய ஸந்தியானது, குள்ளநரிகளுடைய கூச்சல்களாலே அமங்களகரமாயும் ஆச்சரியகரமாயுமிருந்தது; சிறந்தவைகளான கத்திகள், சக்திகள், ரிஷ்டிகள், வரூதங்கள், கேடகங்கள், ஆபரணங்கள் இவைகளுடைய காந்திகளைக்கவர்ந்துகொண்டு ஆகாயத்தையும் பூமியையும் ஸமமாகச் செய்கிறவன்போல ஸூர்யன் தனக்குப்பிரியமான அக்னிஸ்வரூபமான சரீரத்தை அடைந்தான். வஜ்ராயுதத்தினால் வீழ்த்தப்பட்ட பெரிய மேகங்களடர்ந்த மலைகளுடைய சிகரங்கள்போன்றவைகளும் கொடிகள், அங்குசங்கள், கவசங்கள், யானைப்பாகர்கள் இவைகளோடு தள்ளப்பட்டவைகளுமான அநேக யானைகளாலே வியாபிக்கப்பட்ட அந்த யுத்தபூமியானது நடப்பதற்கு இடமில்லாததாகியது. அரசரே! கொல்லப்பட்ட நாதனையுடையவைகளும், சக்கரங்களும் ஏர்க்கால்களும் நொறுக்கப்பட்டவைகளும், குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பட்டவைகளும், கொடித்துணிகளும் கொடிகளுமற்றவைகளும், நன்றாகப்பொடிபண்ணப்பட்டவைகளுமான பெரிய தேர்களால் யுத்தபூமியானது, சத்துருக்களாலே நாசம்பண்ணப்பட்ட நகரங்களால் (பூமிவிளங்குவது)போல விளங்கிற்று. குதிரைக்காரர்களோடு கொல்லப்பட்டவைகளும் சேணங்களும் ஆபரணங்களும் சிதறினவைகளும் வெவ்வேறுவிதமானவைகளும் நாக்குக்களும் பற்களும் நரம்புகளும் கண்களும் தெறித்துப்போனவைகளுமான தேரிற்பூட்டியிருந்த குதிரைகளுடைய கூட்டங்களாலே யுத்தபூமியானது கோரமாயும் அவலக்ஷணமாயுமுள்ள காட்சியுள்ளதாக விளங்கிற்று. மிகச்சிறந்த படுக்கையின்மேல் விரிப்பில் படுக்கத்தகுந்தவர்களான மனிதர்கள், கவசங்களும் ஆபரணங்களும் வஸ்திரங்களும் ஆயுதங்களும் நொறுக்கப்பட்டவர்களும் யானைகளும் குதிரைகளும் தேர்களும் காலாட்களும் நாசமுற்றவர்களுமாக அப்பொழுது கொல்லப்பட்டு நாதனற்றவர்கள் போலப் பூமியில் படுத்தார்கள். பிறகு, யுத்தரங்கத்தில் நாய்களும் நரிகளும் காக்கைகளும் கொக்குக்களும் பருந்துகளும் செந்நாய்களும் சிறுத்தைகளும் ரக்தத்தைப்பானம்பண்ணுகிற பக்ஷிகளும் ராக்ஷதர்களுடைய கூட்டங்களும், மிக்கபயங்கரமான பிசாசங்களினுடைய கூட்டங்களும் மிகுந்தஸந்தோஷத்தையடைந்து தோல்களை நன்றாகப்பிளந்து கொழுப்பையும் இரத்தத்தையும் குடித்து அவ்வாறே மூளைகளையும் மாம்ஸங்களையும் பக்ஷித்தன அவைகள், பிணங்களைப் பலவாறாக இழுத்

துக்கொண்டு ஈரலைப்பிடுங்கின; சிரித்தன; பாடின. அப்பொழுது சிறந்த யுத்தவீரர்களாலே, சரீரங்களாகிற தெப்பங்களை இழுத்துச்செல்வதும், ரக்தமாகிற ஜலமுள்ளதும், ரதங்களாகிற ஓடங்களுள்ளதும், யானைகளாகிறமலைகளாலே நெருங்கியதும், மனிதர்களுடைய தலைகளாகிறகற்களை யுடையதும், மாம்ஸங்களாகிற சேற்றையுடையதும், நன்றாக அடித்துத் தள்ளப்பட்ட பலவித ஆயுதங்களுடைய திரளுள்ளதும், வைதரணீநதி போலப் பயங்கரமும், தாண்டமுடியாததும், மிகவும் பயத்தை உண்டு பண்ணக்கூடியதும், சைன்யத்துடன் பிராணனைவிட்ட ஜந்துக்களை அடித்துக்கொண்டு போகின்றதுமான ஒரு இரத்த நதியானது உண்டு பண்ணப்பட்டு யுத்தகளத்தின் நடுவில் பெருகிற்று. அந்த நதியில் பார்க்கமுடியாத பயங்கரமான பிசாசுக்கூட்டங்கள் (ரக்தங்களைக்) குடித்து ஸ்நானஞ்செய்து கூச்சலிட்டன. பிராணிகளுக்கு க்ஷயத்தை உண்டுபண்ணுகின்ற நாய்களும் நரிகளும் பக்ஷிகளும் மிக்க ஆனந்தம்கொண்டு சேர்ந்து பக்ஷித்தன. அவ்வாறு பயங்கரமான காட்சியுள்ளதும் யமனுடைய நாட்டைவிருத்திசெய்கின்றதும் கூத்தாடுகின்ற தலையில்லா முண்டங்களால் சூழப்பட்டதுமான அந்தயுத்தகளத்தை ஸாயங்காலத்தில் மெள்ளப் பார்த்துக்கொண்டே யுத்தவீரர்கள் கிளம்பிச்சென்றார்கள். அப்பொழுது, ஜனங்கள், சிதறினவையும் நாசஞ்செய்யப்பட்டவையுமான மிகச்சிறந்த பூஷணங்களுள்ளவனும் மகாபலசாலியும் இந்திரனுக்கொப்பானவனும் ரணகளத்தில் வீழ்த்தப் பட்டிருக்கின்றவனுமான அபிமன்யுவை, பலிபீடத்தில் ஹவ்யங்களை இழந்திருக்கிற அக்னியைப்போலக் கண்டார்கள்.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர், அபிமன்யுவைப்பற்றித் துக்கித்துப் புலம்பியது.)

மஹா பராக்கிரமசாலியும் தேர்ப்படைகளைக் காப்பாற்றுகின்றவனுமான அந்த ஸௌபத்திராபுத்திரன் கொல்லப்பட்டவுடனே, எல்லா வீரர்களும், ரதஸன்னாகத்தை இழந்தவர்களும் விற்களைக்கீழேவைத்தவர்களும் அந்தயுத்தத்தையே தியானிப்பவர்களும் ஸௌபத்திராபுத்திரனை நாடினமனமுள்ளவர்களுமாக யுதிஷ்டிராராஜரைச்சூழ்ந்துகொண்டு ஸமீபத்தில் உட்கார்ந்தார்கள். பிறகு, யுதிஷ்டிரமஹாராஜர், சூரனும் மஹாரதனும் தமது பிராதாவான அர்ஜுனனுடைய குமாரனுமான

அந்த அபிமன்யு கொல்லப்பட்டவுடனே, மிகுந்த துக்கமடைந்து புலம்பலானார்.

'மகாரதனான இந்த அபிமன்யுவானவன், கிருபரையும் சல்யனை யும் ராஜாவான துர்யோதனனையும் துரோணரையும் பெரியவில்லை யுடைய துரோணபுத்திரரையும் அவ்வாறே மற்றமஹாரதிகர்களையும் ஜயித்து எனக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணத்தி னால் துரோணருடைய படையைத் தடையில்லாமல் (எதிர்த்து) அஸ் திரவித்தையில் தேர்ச்சியடைந்தவையும் யுத்தத்தில் சாமர்த்திய முடையவையும் பெரியவிற்களுள்ளவையும் மிக்கபலமுள்ளவையும் குலம், சீலம், குணங்கள் இவைகளோடுகூடியவையும் சௌர்யமுள்ள வையும் வீர்யமுள்ளவையும் பிரஸித்தமான பௌருஷமுடையவையு மான சத்துருக்கூட்டங்களைக் கொன்றுவிட்டுப் படுத்திருக்கிறான். தேவர்களாலும் உடைக்கமுடியாததும் நம்மால் இதற்குமுன் பார்க்கப் படாததும் துரோணராலே ஏற்படுத்தப்பட்டதுமான பத்மவியூகத்தைச் சக்ரபாணியான ஸ்ரீ கிருஷ்ணனுக்குப்பிரியனான இந்த அபிமன்யு பிளந்து பசுக்களினிடையில் சிங்கம் நுழைவதுபோல வியூகத்தி னிடையில் நுழைந்தான். உத்தமர்களான சத்ருக்களைக்கொல்லுகின்ற அந்த அபிமன்யு யுத்தகளத்தில் விளையாடினான். சௌர்யமுள்ளவர் களும் மஹாவில்லாளிகளும் அஸ்திரத்தில் தேர்ச்சியுள்ளவர்களும் யுத் தத்தில் அடங்காதமதங்கொண்டவர்களுமான சத்துருசேனையிலுள்ள வீரர்கள், ரணகளத்தில் அபிமன்யுவினாலே தோல்வியை அடைந்து திரும்பினார்கள். நமக்குப்பரமசத்துருவும் யுத்தத்தில் விரைந்து எதிர்த்து வந்தவனுமான துச்சாஸனனை அம்புகளால் மதிமயங்கிப் புறங்காட்டி ஓடச்செய்த வீரனான அபிமன்யு, தாண்டமுடியாத துரோ ணருடைய சேனையாகிற மஹாஸமுத்திரத்தைத் தாண்டித் துச்சாஸன புத்திரனை எதிர்த்து நாசத்தையடைந்தான். ஸுபத்திராபுத்திரன் கொல்லப்பட்டபிறகு, குந்திபுத்திரனான அர்ஜுனனை யான் எவ்வாறு பார்ப்பேன்? மஹாபாக்யவதியும், கன்றையிழந்தபசுவைப்போலப் பிரிய னான தன்புத்திரனைக்காணாதவளும், அவனைப்பார்ப்பதில் நோக்கமுள்ள வளுமான ஸுபத்திரையையாவது பார்த்து நான் அர்த்தமில்லாத தும் மிக்கவருத்தத்தைச் செய்வதும் பொருத்தமில்லாததுமான வார்த் தையை எவ்வாறு சொல்வேன்? கிருஷ்ணன் தனஞ்சயன் இருவரையும் பார்த்து நான் என்னமறுமொழி சொல்வேன்? ஸுபத்திரைக்கும் கிருஷ் ணார்ஜுனர்களுக்கும் பிரியத்தைச்செய்வதில் விருப்பமுள்ள நானே ஜய

த்தைவிரும்பி இப்படிப்பட்ட அப்பிரியமான காரியத்தைச் செய்தேன். பேராசை கொண்டவன் தோஷங்களை அறியான். அவன் பேராசையினு லும் அஜ்ஞானத்தினாலும் பிரவிர்த்திக்கிறான். தேனில் ஆசைகொண் டவனாகிய நான் இவ்விதமான பெரும்பள்ளமிருப்பதைப் பார்க்கவில்லை. ஆகாரத்திலும் வாகனங்களிலும் படுக்கைகளிலும் ஆபரணங்களிலும் முன்னிட்டுக்கொள்ளத்தக்க பாலன், நம்மால் யுத்தத்தில் முற்படுத்தப் பட்டான். பாலனும் நல்லயௌவனமுள்ளவனும் யுத்தங்களில் தேர்ச்சி யடையாதவனுமான அந்த அபிமன்யு, நெருக்கமும் மேடுபள்ளமுமான இடத்தில் உத்தமமான குதிரைபோல, ஸங்கடமான யுத்தத்தில் எவ் வாறு க்ஷேமத்தையடையத்தக்கவனாவான்? நாமும் இந்தயுத்தரங்கத் தில் இந்தஅபிமன்யுவுடன் படுக்காமல்போவோமாகில் கோபத்தினால் ஜ்வலிக்கின்ற அர்ஜுனனுடைய வாட்டமுற்ற கண்ணால்எரிக்கப்படு வோம். அந்த்அர்ஜுனனோ லோபமற்றவன்; புத்திசாலி; லஜ்ஜையுள்ள வன்; பொறுமையுடையவன்; ஸௌந்தரியமுள்ளவன்; பலசாலி; நல்ல தேகமுள்ளவன்; கௌரவத்தைப்பாராட்டுகிறவன்; வீரன்; பிரியன்; ஸத்தியமான பராக்கிரமத்தையுடையவன்; காரியங்களை உறுதியாகச் செய்பவனை எவனுடையசெய்கைகளைத் தேவர்களும் புகழுகிறார்க ளோ, வீரியமுள்ளஎவன் நிவாதகவசர்களையும் காலகேயர்களையும் கொன்றானோ, எவனாலே ஹிரண்யபுரவாஸிகளும் மஹேந்திரனுக்குச் சத்துருக்களுமான பௌலோமர்கள் கண்ணிமைப்பொழுதினுள் கூட் டத்தோடு கொல்லப்பட்டார்களோ, பிரபுவானஎவன் அபயத்தை விரு ம்புகின்றசத்துருக்களுக்கும் அபயத்தைக்கொடுக்கிறானோ, அந்த அர் ஜுனனுடைய பலசாலியான புத்திரன் நம்மால் காப்பாற்றுவதற்குக் கூட முடியாதவனானான். மஹாபலசாலிகளான தார்த்தராஷ்டிரர்களைப் பெரியபயம்வந்தடைந்தது. புத்திரனைக்கொன்றதினால் கோபங்கொண் டவனான பார்த்தன் கௌரவர்களை வரட்சியடையச்செய்யப்போகிறான். அல்பனும் அல்பர்களைஉதவியாகக்கொண்டவனும் தன்னைச்சேர்ந்தவர் களுக்கு க்ஷயத்தைவிளைவிக்கின்றவனுமான துரியோதனன் பார்த்துத் துக்கித்துக்கொண்டு உயிரையிழக்கப்போகிறானென்பது வெளிப்படை. ஒப்பற்றவீரியமும் ஆண்மையுமுள்ளவனும் தேவர்களுள் சிறந்த இந் திரனுடைய குமாரனுக்குக்குமாரனும் யுத்தத்தில் பகைவனால் வீழ்த் தப்பட்டவனுமான இந்தஅபிமன்யுவைப்பார்த்து,எனக்கு ஜயமும் ராஜ் யமும் தேவத்தன்மையும் தேவர்களோடு ஓர் உலகத்தில் சேர்ந்துவாழ்த லும் பிரீதியை உண்டுபண்ணா' என்றுகூறினார்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

# அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)



(யுதிஷ்டிரரைத் தேற்றுவதற்காக வியாஸர் அகம்பனன் கதையைச்சொல்லத் தொடங்கியது.)

இவ்வாறு குந்தீபுத்திரரானயுதிஷ்டிரர் புலம்பும்பொழுது, அவ்விடத்திற்குக் கிருஷ்ணத்வைபாயன மஹரிஷியானவர் வந்தனர். பிறகு, அந்தமஹாத்மாவைக்கண்டு, பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரர், வாடிய மனத்துடன் அவருக்குத் தகுந்த ஆஸனம்கொடுத்துப் பூஜைசெய்தார். முறைப்படி பூஜைசெய்யப்பெற்று வீற்றிருக்கின்ற மஹரிஷியைநோக்கி யுதிஷ்டிரர், தமதுபிராதாவான் அர்ஜுனனுடையகுமாரனை அபிமன்யுவின்வதத்தினாலுண்டானசோகத்தினால் தபிக்கப்பட்டவராகிச் சொல்லலானார். 'அதர்மத்தில் பற்றுள்ளவர்களும் பெரியவில்லைக்கையில்தாங்கினவர்களுமான அநேகமஹாரதர்களாலே நான்குபக்கங்களிலும் சூழப்பட்டு யுத்தஞ்செய்கின்ற ஸுபத்திராபுத்திரன் யுத்தத்தில் கொல்லப்பட்டான்; பாலனும் பாலபுத்தியுள்ளவனும் சத்ருவீரர்களைக்கொல்லுகிறவனும் வீர்யமுடையவனும் உபாயத்தோடு யுத்தமசெய்யாதவனுமான அபிமன்யு கொல்லப்பட்டான். யுத்தகளத்தில் அந்தஅபிமன்யு, 'எங்களுக்கு வழியை உண்டுபண்ணு'என்று என்னால் சொல்லப்பட்டு வியூகத்தில் நுழைந்தான். அநதஸமயத்தில் நாங்கள் ஸைந்தவனால் தடுக்கப்பட்டோம; யுத்தஞ்செய்துஜீவிக்கின்ற அரசர்களாலே ஸமமான யுத்தமல்லவோ தேடத்தக்கது? சத்ருக்களாலே செய்யப்பட்ட இந்த யுத்தம் சரியானதன்று. அதனால், யான் மிக்கவருத்தத்தையடைந்து சோகத்தினாலுண்டான கண்ணீரோடு கலக்கமுற்றிருக்கிறேன்; அடிக்கடி ஆலோசித்தும் நான் ஆறுதலையடையவில்லை' என்று கூறினார். சோகத்தினாலேமனம்கலங்கி அவ்வாறுபுலம்புகின்ற அந்தயுதிஷ்டிரரை வியாஸர் ஸமாதானஞ்செய்வதற்காகப் பின்வரும் வார்த்தையைச்சொல்லலானார்:—

'யுதிஷ்டிர! மிகுந்த புத்தியையுடையவனே! எல்லாச்சாஸ்திரங்களிலும் தேர்ச்சியுடையவனே' பரதர்களுள்ஸ்ரேஷ்டனே! உன்னைப்போன்றவர்கள் வியஸனங்களில் மயங்கார்கள்; சூரனும் புருஷஸ்ரேஷ்டனுமான இந்தஅபிமன்யு யுத்தத்தில் பாலனுக்குத்தகாததான காரியத்தைச்செய்து அநேகசத்ருக்களைக்கொன்று ஸ்வர்க்கத்தையடைந்

தான். யுதிஷ்டிர! இந்தவிதியானது தாண்டமுடியாதது; பாரத! மிரு த்யுவானவன், தேவர்களையும் அஸுரர்களையும் கந்தர்வர்களையும் கவர் கிறுன்' என்றுசொல்லினர். யுதிஷ்டிரர், 'மஹாபலசாலிகளான இந்த அரசர்கள் அடிக்கப்பட்டு இறந்தவர்கள் என்கிறபெயருள்ளவர்களாகிச் சேனையினிடையில் பூமியில்படுத்திருக்கிறுர்கள்; சிலர் பதினுயிரம் யானைபலமுடையவர்கள்; அவ்வாறே காற்றின்வேகமும்பலமும்போன்ற வேகத்தையும் பலத்தையுமுடையவர்கள்; ஒரேவிதமான உருவமுள்ள அப்படிப்பட்ட இந்தமனிதர்கள் யுத்தத்தில் மனிதர்களால் கொல்லப் பட்டார்கள்; பிராணிகளுள் ஒருயுத்தத்திலாவது இவர்களைக்கொல்ப வனை நான்காணவில்லை. இவர்கள் விக்கிரமமுள்ளவர்கள்; தபோபலமுள் ளவர்கள். மேலும், மனத்தில் எக்காலத்திலும் ஒருவரையொருவர்ஜயிக்க எண்ணியிருந்த இந்தஅறிஞர்கள், ஆயுளையிழந்து படுத்திருக்கிறுர்கள்; ம்ருதர்கள்என்கிற இந்தச்சப்தமானது அர்த்தமுள்ளதாயிருக்கிறது. பயங்கரமான பராக்கிரமத்தையுடையவர்களான இவ்வரசர்கள் பெரும் பான்மையாகமாண்டார்கள்; சூரர்களும் ரோஷமுள்ளவர்களுமான ராஜ புத்திரர்களும் கைகால்அசைவற்றும் அபிமானத்தைஇழந்தும் சத்து ருவுக்குவசப்பட்டு அக்னியின்முகத்தைஅடைந்தார்கள். எக்காரணத்தி னலே இவர்களுக்கு ம்ருதர்களென்றபெயர் வாய்த்தது? இவ்விஷயத் தில் எனக்கு ஸம்சயம்உண்டாயிருக்கிறது. தேவருக்கொப்பானவரே! பிதாமஹரே! யாருக்கு மிருத்யுவருகிறது? எங்கிருந்து மிருத்யுவரு கிறது? மிருத்யு யாதுகாரணத்திஞலே இந்தப்பிரஜைகளைக் கவர்கிறது? அதனை எனக்குச்சொல்வீராக' என்றுவினவினுர். அவ்வாறுகேட்கின்ற குந்தீபுத்திரரான அந்தயுதிஷ்டிரரைக்குறித்து, பகவானுனவியாஸமஹ ரிஷி தேறுதலடையக்கூடிய வாக்கியத்தைப் பின்வருமாறு கூறலானுர்.

'ஓ! ராஜனே! முற்காலத்தில் நாரதராலே அகம்பனனுக்குச்சொல் லப்பட்டுள்ள புராதனமாயிருக்கிற இந்தஇதிஹாஸத்தை இவ்விஷயத் திலும் உதாஹரிக்கிறுர்கள். ராஜஸ்ரேஷ்டனே! அந்தஅரசனும் உலகத் தில் கொஞ்சமும் தாங்கமுடியாத மிகப்பெரிய புத்திரசோகத்தை அடைந்தானென்று நாம்கேட்டிருக்கிறோம். ஆதலால், நான் மிருத்யுவி னுடைய உத்தமமான உற்பத்தியைச் சொல்லப்போகிறேன். பிறகு, நீ ஸ்நேகபாசத்தை ஆதாரமாகக்கொண்ட துக்கத்தினின்று விடு படுவாய். எல்லாப்பாபராசிகளையும் நாசம்பண்ணுகின்றதும் சிறந்ததும் ஆயுளை விர்த்திபண்ணக்கூடியதும் துக்கத்தைப்போக்குவதும் புஷ் டியை விர்த்திபண்ணுகிறதுமான இந்தஉபாக்யானத்தைச் சொல்லு

கிறேன். அதனை என்னிடத்தினின்று கேள். இந்தஉபாக்யானம் வேதாத்யயனம்போலப் பரிசுத்தமானது; சத்துருக்களுடைய கூட்டத்தை நாசம்செய்வது. மங்களங்களுள் மங்களமானது; மஹாராஜனே! தீர்க்காயுளையுடைய பிள்ளைகளையும் ராஜ்யத்தையும் அவ்வாறே ஐசுவரியத்தையும் விரும்புகின்ற ராஜஸ்ரேஷ்டர்களாலே காலையில் தினந்தோறும் இந்தஉபாக்யானம் கேட்கத்தக்கது; அப்பா! முற்காலத்தில் கிருதயுகத்தில் அகம்பனனென்கிற ஓர் அரசன் இருந்தான். அவ்வரசன் போர்முனையின்மத்தியில் பகைவர்கள் வசத்தைபடைந்தான். பலவானான அவன் யுத்தஞ்செய்து கட்டப்பட்டவனானான். அவனுக்குப் பலத்தில் ஸ்ரீமந்நாராயணருக்கொப்பானவனும் மிகுந்தகாந்தியையுடையவனும் அஸ்திரவித்தையில் தேர்ச்சியுடையவனும் மேதாவியும் போரில்இந்திரனையொத்தவனும் பலசாலியுமான, 'ஹரி'என்னும் பிரஸித்தனான ஒரு புத்திரன் இருந்தான். மிக்ககாந்தியுள்ள அந்தஹரியானவன் யுத்தத்தில் அவ்விதநிலைமையைஅடைந்திருக்கின்ற பிதாவைப்பார்த்து,பிறகு மரணத்தைஆலோசிக்காமலே சத்துருக்களினிடையில் நுழைந்தான். எல்லாஅஸ்திரங்களிலும் ஸாமர்த்தியமுடையவனும் பலசாலியுமான அந்தஹரி போர்முனையில் சத்துருக்களால் பலவாறு சூழப்பட்டு எல்லாப்பகைவர்களோடும் போர்புரிந்தான். அபரிமிதமான பராக்ரமத்தையுடையவனும் மஹாபலசாலியுமான ஹரியானவன், சத்துருக்களின் மீது ஆயிரக்கணக்கான அம்புகளைப்பொழிந்துகொண்டு, காலாட்கள் ரதங்கள் யானைகள் குதிரைகள் இவைகளை நாசம்பண்ணினான். சத்துருக்களினுடைய மத்தியையடைந்த பலசாலியான அந்தஹரி, அம்புகளாலே நான்குபக்கமும் நிறைக்கப்பட்டுச் சக்கரங்களாலும் கதைகளாலும் உலக்கைகளாலும் ஆயிரக்கணக்கான தேர்களையும் காலாட்களையும் குதிரைகளையும் யானைகளையும் பொடியாக்கி, யுத்தத்தில் சத்துருசேனையைப்பிளந்து அந்தஅரசனையும் விடுவித்து மறுபடியும் யுத்தஞ்செய்தான். பிறகு, அந்த எல்லாத்தேராளிகளும் மறுபடியும் யுத்தத்தில் ஒன்றுசேர்ந்து கிட்டநெருங்கி உதவியற்றவனானஅவனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு, தோமரங்களால் யானையை அடிப்பதுபோல அடித்தார்கள். யுதிஷ்டிர! யுத்தத்தில் சத்துருக்களைவாட்டுகிறவனான அந்தஹரி யுத்தகளத்தில் ஒருவராலும் செய்யமுடியாததகாரியத்தைச் செய்து சத்துருக்களால் யுத்தபூமியில் சேனையினிடையில் கொல்லப்பட்டான். அகம்பனன் தனக்குப்பிரியமானபுத்திரன் பகைவர்களால் கொல்லப்பட்டானென்பதைக்கண்டு பொறுமையினால் கோபம்கொண்டு சீக்கிரமாக யுத்தத்தினின்றும் திரும்பிவந்துவிட்டான். அந்தஅரசன்

துக்கத்துடன் அந்தப்புத்திரனுக்குச்செய்யவேண்டிய உத்தரக்கிரியை களைச்செய்து, இரவும்பகலும் துக்கித்துக்கொண்டு மனத்தில் ஸௌக்கியத்தை அடையாமலிருந்தான். பிறகு, புத்திரனதுபிரிவினாலுண்டான அந்த அகம்பனனுடைய சோகத்தையறிந்து தேவரிஷியானநாரதர் அவன்பக்கத்தில் வந்தார். மஹாபாக்யசாலியான அந்த அரசன் தேவரிஷிகளுள் உத்தமரானநாரதரைக்கண்டு, முறைப்படி அவரைப்பூஜை செய்து அப்பொழுது தன்கதையைச்சொன்னான். யுதிஷ்டிர! அந்தநாரதரிடத்தில் யுத்தத்தில் சத்துருக்களின்விஜயத்தையும் அவ்வாறே தன் புத்திரனுடையவதத்தையும் எல்லாஸங்கதியையும் நடந்தபடிசொல்லினன். அவன், 'மஹாவீர்யமுள்ளவனும் இந்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் ஸமமான காந்தியையுடையவனும் பலசாலியுமான என்குமாரன், யுத்தத்தில் பகைவர்கள் அநேகர்களாலே பராக்கிரமத்தை வெளியிட்டுக் கொல்லப்பட்டான். பகவானே! கேளும். மிருத்யுவானது பிராணிகளுக்கு ஸம்பவிக்கின்றதல்லவோ? இந்தமிருத்யுவென்பவன் யார்? அவன் எவ்விதமான வீர்யமும் பலமும் பௌருஷமுமுள்ளவன்? புத்திசாலிகளுள்சிறந்த நாரதரிஷியே! இதனை உண்மையாகக்கேட்க இச்சிக்கிறேன்'என்றுவேண்டினான். அவனுடைய அந்தவார்த்தையைக்கேட்டுப் பிரபுவும் வரங்கொடுப்பவருமானநாரதர் புத்திரசோகத்தைப் போக்கக் கூடியதும் பெரிதுமான இந்தஆக்யானத்தைச் சொல்லலானார்.

'ராஜனே! நீண்டகைகளையுடையவனே! மிகவும்விஸ்தாரமான இந்த உபாக்யானத்தைக்கேள். ராஜனே! நானும் இதனை நடந்தபடி கேட்டிருக்கிறேன். ஆதிஸிருஷ்டிகாலத்தில், மஹாதேஜஸ்வியும் பிரபுவும் பிதாமஹருமான பிரம்மதேவர் பிரஜைகளைஉண்டுபண்ணினார். பிறகு, இவ்வுலகமானது, ஸம்ஹாரம் செய்யப்படாமலிருப்பதைக்கண்டு அப்பொழுது அந்தப்பிரம்மதேவருக்கு அதன்ஸம்ஹாரத்தைப்பற்றிஆலோசனை யுண்டாயிற்று. பூபதியே! அந்தப்பிரம்மதேவர் ஆலோசித்தும் ஸம்ஹாரத்தைஅறிபவில்லை. மஹாராஜனே! ரோஷத்தினாலே அவருடைய முகங்களிலிருந்து நெருப்புண்டாயிற்று. தகிக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்ட அந்தஅக்னியினாலே, மத்தியப்பிரதேசங்களோடுகூடின எல்லாத்திக்குக்களும வியாபிக்கப்பட்டன. பிறகு, பகவானும் பிரபுவுமான அந்தப்பிரம்மதேவர், ஆகாயத்தையும் பூமியையும் ஜ்வாலைவரிசைகளாலே சூழப்பட்டிருக்கின்ற சராசராத்மகமான எல்லா உலகங்களையும் எரித்தார். பிறகு, ஜங்கமஸ்தாவரரூபங்களான பிராணிகளெல்லாம் நாசஞ்செய்யப்பட்டன. வீர்யமுள்ளவரான பிரம்மதேவர் பெரிய

கோபவேகத்தினாலே நடுங்கச்செய்கிறவர்போல விளங்கினார். பிறகு, சடைமுடியுள்ளவரும் ஸ்திரரும் பூதகணங்களுக்குப்பதியும் ஹரருமான அந்த ருத்திரர் ஸத்தியலோக வாஸியான பிரம்மதேவரைச்சரணமடைந்தார். பிரஜைகளுடைய நன்மையை விரும்பி அந்த ஸ்தாணுவானவர் வந்திருக்கையில், தேவர்களுள் சிறந்தவரும் ரிஷிகளுள் உத்தமருமான அந்தப்பிரம்மதேவர், ஜ்வலிக்கின்றவர்போலவிருந்துகொண்டு, 'குழந்தாய்! நீ காமத்தினால் உண்டானவனாயிருக்கிறாய். விரும்பியவற்றை அடைவதற்குத்தகுந்தவனே! நீ விரும்பியகார்யம் யாது? ஸ்தாணுவே! விரும்பியதைச்சொல். உனக்குப்பிரியமான எல்லாவற்றையும் யான் செய்வேன்' என்று கூறினார்.

---

## ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(பிரம்மாவுக்கும் ருத்ரருக்கும் ஸம்வாதமும் பிரம்மதேவர் மிருத்யுவைப்படைத்ததும்.)

உருத்திரர், 'விபுவே! நீர் பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கவன்றோ முயற்சி செய்தீர்? நீர் வெவ்வேறுவிதமான அநேகபிராணிவர்க்கங்களைப்படைத்து விருத்தியும் செய்தீர். பகவானே! பிரபுவே! அந்தப்பிரஜைகள் மறுபடியும் தேவரீருடைய கோபத்தினாலே முழுதும் நாசமடைகின்றன. அவைகளைப்பார்த்து எனக்குக் கருணையுண்டாகியது. தயைசெய்யும்' என்று வேண்டிக்கொள்ள, பிரம்மதேவர் சொல்லலானார்.

'பிரஜைகளை ஸம்ஹாரம் பண்ணுவதற்கு எனக்கு விருப்பமில்லை. இவ்வுலகு இவ்வாறாக இருக்கவேண்டுமென்று பூமிக்கு ஹிதத்தைத்தேடுவதில் விருப்பமுள்ளவனான என்னைப் பிறகு கோபம்வந்தடைந்தது; மஹாதேவ! பாரத்தினாலே பீடிக்கப்பட்டு அமிழ்கின்ற இந்தப் பூதேவி சுமையினால் துன்புற்று ஸம்ஹாரத்தின்பொருட்டு என்னை ஏவினாள். பிறகு, எண்ணமுடியாததான இவ்வுலகத்தினுடைய ஸம்ஹாரத்தைப் பலவாறு புத்தியினால் ஆலோசித்தும் நான் அறியவில்லை. பிறகு, என்னைக்கோபம் வந்தடைந்தது' என்று சொன்னார். ருத்திரர், 'பூபதியே! தேவரீர் தயைசெய்யவேண்டும்; ஜகத்ஸம்ஹாரத்தின் பொருட்டுக் கோபிக்கக்கூடாது; ஸ்தாவரஜங்கமங்களான பிரஜைகளை நீர் நாசஞ்செய்யவேண்டாம். பகவானே! தேவரீருடைய அநுக்கிரஹத்

திலுலே இவ்வுலகமானது வருவதும், சென்றதும், தற்காலத்தில் நிலைத் திருக்கிறதுமாக மூன்றுவிதமாக இருக்கட்டும். பகவானே! கோபத்தி லுலே ஜ்வலிக்கின்ற தேவரீர் கோபத்திலிருந்து அக்நியை ஸிருஷ்டித் தீர். அந்த நெருப்பானது, மலைகளினுடைய சிகரங்களையும் மரங்களை யும் அவ்வாறே நதிகளையும் எல்லாச்சிறியகுளங்களையும் ஸமஸ்தமான புற்களையும் பூண்டுகளையும் எரிக்கிறது; ஸ்தாவரஜங்கமரூபமான உல கத்தை மிச்சமில்லாததாகச்செய்கிறது; ஸ்தாவரஜங்கமரூபமான இந்த உலகம் சாம்பலாகிவிட்டது பகவானே! தேவரீர் கிருபை செய்யும்; ரோஷம் உண்டாகக்கூடாது. இஃது எனக்கு வரமாகும். தேவரே! உம்மால் படைக்கப்பட்ட எல்லாஜந்துக்களும் மிக்க துன்பமுற்று நாசமடைகின்றன. ஆதலால், அக்னியைத் தேவரீர் திருப்பவேண்டும்; இந்தத்தேஜஸானது தேவரீரிடத்திலேயே லயமடையவேண்டும்; பிர ஜைகளுக்கு ஹிதத்தைச் செய்யும் விருப்பத்தோடு வேறு உபாயத்தை நன்றுகப்பாரும்: இந்தப்பிராணிகளெல்லாம் மீளும்படி செய்யும்; பிரஜை கள் ஸந்ததிகளையிழந்து இப்பொழுது நாசமடையவேண்டாம். விபுவே! நான் உம்மால் பிரஜைகளை ரக்ஷிக்கும்விஷயத்தில் ஏற்படுத்தப்பட்ட வன். தேவநாதரே! பிரஜைகளிடத்தில் உமக்குத்தயை உண்டாகவில்லை. ஜகந்நாதரே! ஸ்தாவரஜங்கமமான உலகமானது அழியவேண்டாம். ஆதலால், தேவரீர் கருணையில் நோக்கமுள்ளவராகவேண்டும் என்று நான் இவ்வாறு சொல்லுகிறேன்' என்று கூறினர். பிரம்மதேவர், அவ் வசனத்தைக்கேட்டு, பிரஜைகளுக்கு நன்மையைச்செய்யக்கருதித் தம் அந்தராத்மாவிடத்தில் திரும்பவும் தேஜஸை அடக்கிக்கொண்டார். உலகங்களால் பூஜிக்கப்பட்டவரும் பிரபுவுமான அந்தப்பகவான், பிறகு அந்த அக்னியை உபஸம்ஹாரஞ்செய்து, ஸ்ருஷ்டிக்கும் மோக்ஷத் திற்கும் காரணமான கர்மாவை உண்டுபண்ணினர். அவ்வாறு கோபத் திலுண்டான அந்த அக்நியை உபஸம்ஹாரஞ்செய்கின்றவரும் மஹாத்மாவுமான அந்தப்பிரம்மதேவருடைய எல்லா இந்திரியங்களின் துவாரங்களிலிருந்தும் ஒருஸ்திரீ தோன்றினள். ராஜஸ்ரேஷ்டனே! கறுப்பும் சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறமுடையவளும், நாவும் முக மும் கண்களும் சிவந்தவளும், ஜ்வலிக்கின்ற குண்டலங்களையும் பிர காசிக்கின்ற பூஷணங்களையுமுடையவளுமான அந்தப்பெண் பிரம்ம தேவருடைய இந்திரியங்களிலிருந்து அவ்விதமாகவெளிப்பட்டுத் தெற் குத்திக்கை அடைந்து லோகநாதர்களான அவ்விருதேவர்களையும் பார்த்துப் புன்னகை செய்தாள். ராஜனே! அப்பொழுது உலகங்களுக் குப்பிதாமஹரான பிரம்மதேவர் அந்தஇடத்திலுள்ள அந்தத்தேவியை.

'மிருத்யுவே' என்று அடிக்கடி இன்சொல்சொல்லி 'இந்தப்பிரஜைகளை ஸம்ஹாரம்செய். நீயோ என்னுடைய கோபத்திலிருந்து ஸம்ஹார புத்தியுடன் தோன்றினாய். ஆதலால், நீ பாமரர்களும் பண்டிதர்களு மான எல்லாப்பிரஜைகளையும் ஸம்ஹாரம் செய். கோபமுள்ளவளே! நீ ப்ரஜைகளை என்னுடைய ஆஜ்ஞையினால் பேதமில்லாமலே நாசஞ் செய். அதனால், நீ நன்மையடைவாய்' என்று மதுரமானவாக்கியத் தைச் சொன்னார். இவ்வாறு அந்தப்பிரம்மதேவரால் சொல்லப்பட்டவ ளும் கமலம்போன்ற கண்களையுடையவளுமான அந்த மிருத்யுதேவி யானவள் மிக்கமனவருத்தமுற்று அழுதாள். கண்ணீர்த்துளிகள் விழுந்தன. பிதாமஹர் அந்தக்கண்ணீரை இரண்டுகைகளாலும் ஏந்தி னார். அப்பொழுது எல்லாப்பிராணிகளின் நன்மையின்பொருட்டும் அவளை ஸமாதானம் பண்ணினார்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் மிருத்யுவுக்கும் பிரம்மாவுக்கும் நடந்த ஸம்வாதத்தைச்சொல்லி அகம்பனனுடைய துக்கத்தை விலக்கியதும் வியாஸர் அகம்பனனுடைய உபாக்கியானத்தைச் சொல்லி யுதிஷ்டிரனுடைய துக்கத்தை விலக்கியதும்.)

மிருத்யுவானவள் துக்கத்தை மனத்திலேயே அடக்கிக்கொண்டு பிரம்மதேவரைப் பார்த்துக் கொடிபோல் வணங்கிக் கைகளைக்குவித் துக்கொண்டு திரும்பவும் சொல்லலானாள்: 'பேசுகிறவருள்சிறந்தவரே! உம்மால் ஸிருஷ்டிக்கப்பட்டிருக்கிற இவ்விதமான ஸ்திரீயான நான் தெரிந்திருந்தும் மூடஸ்திரீயைப்போலக் குரூரமாகவும் அஹிதமாகவு முள்ள இந்தக்காரியத்தை எவ்வாறு செய்வேன் ? பகவானே ! பிரபுவே! நான் அதர்மத்தில் பயப்படுகிறேன் ; கிருபைசெய்யும். தேவரே ! மரித்திருக்கின்ற இஷ்டர்களையும் புத்திரர்களையும் ஸ்நேகிதர்களையும் பிராதாக்களையும் மாதாக்களையும் பிதாக்களையும் பர்த்தாக்களையும் குறித்துத்துயரப்படுபவர்களிடம் யான் பயப்படுகிறேன். பகவானே! புலம்புகின்ற தீனர்களுடைய விழுகின்ற கண்ணீர்த்திவலைகளினால் பயந்து யான் உம்மைச்சரணமடைந்தேன்; தேவதைகளுள் உத்த மரே! தேவரே! யமனுடைய வீட்டுக்கு நான் போகவேமாட்டேன்.

உலகங்களுக்குப் பிதாமஹரே! நான் வினயத்துடன் சரீரத்தி லும் அஞ்சலிபந்தத்தோடுகூடின முடியினாலும் வணங்கி உம் மிடத்திலிருந்து இந்த வரத்தை விரும்புகிறேன். பிரஜைகளுக்கு ஈச் வரரே! உம்முடைய அனுக்கிரஹத்தினாலே தவத்தைச் செய்யவிரும்பு கிறேன். பகவானே! பிரபுவே! தேவரே! எனக்குத் தேவரீர் இந்த வரத்தைக்கொடும். உம்முடைய சொற்படி நான் உத்தமமான தேனு காச்ரமத்தை அடைவேன். அவ்விடத்தில், உம்மை ஆராதிப்பதிலேயே பற்றுதலுள்ளவளாகிக் கடுந்தவம் புரிவேன். தேவேசரே! ரோதனம் பண்ணுகின்ற பிராணிகளினுடைய பிரியமான பிராணன்களைக் கவர் வதற்கு நான் சக்தியுள்ளவளல்லேன். அதர்மத்திலிருந்து என்னைக்காப் பாற்றுவீராக' என்று வேண்ட, பிரம்மதேவர், 'மிருத்யுவே! பிரஜைகளை ஸம்ஹரிப்பதற்காகவே நீ படைக்கப்பட்டவளாயிருக்கிறாய். செல்; எல் லாப்பிராணிகளையும் வதஞ்செய். உனக்கு ஆலோசனை வேண்டாம். இது இவ்விதமாகத்தான் ஆகவேண்டும்; ஒருபோதும் இது வேறுவித மாகாது. நீ உலகத்தில் நிந்திக்கப்படாதவளாவாய். என்சொற்படிசெய், என்று சொன்னார். பகவானான பிரம்மதேவர் இவ்வாறுசொல்ல, அந்த மிருத்யு தேவியானவள் அஞ்சலிபந்தம்செய்து தலைகுனிந்து பிரஜை களுக்கு நன்மைசெய்யவிரும்பி ஸம்ஹாரம்செய்வதில் புத்தியைச் செலுத்தவில்லை. பிரஜைகளுடைய தலைவர்களுக்கெல்லாம் நாதரும் பிரஜைகளுக்கெல்லாம் பதியும் தேவதைகளுக்கு ஈசருமான பிரம்ம தேவர் அப்பொழுது பேசாமலிருந்து, சீக்கிரமாகத் தாமாகவே மனத் தெளிவைப்பெற்று, எல்லா உலகங்களையும் பார்த்து மந்தஹாஸம் பண் ணினார். பிறகு, கோபத்தைவிட்ட அந்தப்பிரம்மதேவராலே பார்க்கப் பட்ட உலகங்கள் முன்போலாகிவிட்டன. சத்துருக்களாலே ஜயிக்கப் படாதவரான அந்தப்பகவான், கோபத்தைவிட்டபிறகு, அந்தக்கன்னி கையும் சிறந்த புத்தியையுடைய அவர்பக்கத்திலிருந்து சென்றாள். ராஜ ச்ரேஷ்டனே! அப்பொழுது அந்தமிருத்யுதேவி பிராணிவதத்தை ஏற் றுக்கொள்ளாமல் விரைந்துவிலகித் தேனுகாச்ரமம்சென்று, அந்தஆச் ரமத்தில் மிக்கஉக்கிரமும் உத்தமமுமானவிரதத்தை அனுஷ்டித்துக் கொண்டு கருணையினாலே பிரஜைகளுக்கு நன்மையை விரும்பி விரும் பப்படும் புலன்களிலிருந்து பொறிகளைத்திருப்பி இருபத்தொருபத்ம ஸங்கியையுள்ளவருஷங்கள் ஒருகாலால்நின்றாள். ராஜனே! மறுபடியும் மற்றொருகாலால் இருபத்தொருபத்மகாலம் நின்றாள். அப்பா! பிறகு, அந்தக்கன்னிகையானவள் மிருகங்களோடு பதினாயிரம்பத்மகாலம் வரையில் ஸஞ்சாரஞ்செய்தாள்; பிறகு, குளிர்ந்ததும் நிர்மலமுமான

தீர்த்தமுள்ள பரிசுத்தமான கங்கையென்கிற நதியை அடைந்து அதன் ஜலத்தில் எண்ணாயிரம்வருஷங்களைத் தவத்தினால்கழித்தாள். அந்த கங்கையில் நியமத்தைமேற்கொண்டு கல்மஷத்தைப்போக்கினவளான அந்தமிருத்யுதேவி நியமங்களாலே விருத்திசெய்யப்பட்டவளாகி முந்தவில் பரிசுத்தமான கௌசிகீநதியை அடைந்தாள். அவ்விடத்தில் வாயுவையும் ஜலத்தையும் உணவாகக்கொண்டு மீண்டும் நியமத்தை அநுஷ்டித்தாள். புண்ணியவதியான அந்தக்கன்னிகை ஏழுகங்கைகளிலும் வேதஸகங்களென்கிற தீர்த்தங்களிலும் பலவிதமான தபோவிசேஷங்களாலே தன்னுடையதேகத்தை இளைக்கச்செய்தாள். பிறகு, அந்தக்கன்னிகை கங்கையையும் மஹாமேருவையும் அடைந்து பிராணாயாமத்தைச்செய்துகொண்டு கல்லைப்போல் அசைவற்றிருந்தாள். மறுபடியும், நற்குணமுள்ள அந்தஉத்தமகன்னிகை முன்பு தேவதைகள் யாகஞ்செய்த இடமாகிய இமயமலையின்சிகரத்தில் தன்காலின் பெருவிரலால் ஒரு நிகர்வகாலம் நின்றாள். மேலும், அவள் புஷ்கரத்திலும் கோகர்ணத்திலும் நைமிசாரணியத்திலும் அவ்வாறே மலயபர்வதத்திலும் மனத்திற்குப் பிரியமான நியமங்களை அநுஷ்டித்துத் தன்உடம்பை இளைக்கச்செய்தாள். வேறுஒருதேவதையையும் மனத்தினாலெண்ணாமல் பிதாமஹரிடத்திலேயே எப்பொழுதும் திடமான பக்தியைச் செலுத்தித் தர்மத்தால் அவரை ஸந்தோஷிக்கச்செய்தாள். அரசனே! உலகங்களுக்கெல்லாம் உற்பத்திஸ்தானமாயிருப்பவரும் அழிவற்றவருமான அந்தப்பிரம்மதேவர் அப்பொழுது பிரீதியுள்ளவராகவும் பிரீதியுள்ளமனமுள்ளவராகவும் அந்தக்கன்னிகையைப்பார்த்து, 'மிருத்தியுவே! இதென்ன? மிக்கதவங்களைச்செய்கிறாய்' என்றுவினவினார். பிறகு,மிருத்யுதேவி பகவானானபிதாமஹரைநோக்கி, 'தேவரே! பிராணிகள் நன்னிலைமையிலிருக்கின்றன. வாயினாலும் பிறருக்குத் தீங்கிழைக்காமலிருக்கின்றன. அவைகளை நான் கொல்லமாட்டேன்; ஸர்வேசரே! பிரபுவே! நான் உம்மிடத்திலிருந்து இந்தவரத்தை விரும்புகிறேன்; நான் அதர்மத்தில் பயந்தவளாயிருக்கிறேன்; அதனாலேயே யான் தவத்தில் நிலைபெற்றிருக்கிறேன். மஹாபாக்கியமுள்ளவரே! குறைவற்றவரே! பயந்தவளானஎனக்கு அபயம்கொடுக்கவேண்டும்; துக்கமடைந்தவளும் குற்றமற்றவளும் ஸ்திரீயுமான நான் வேண்டுகிறேன்; எனக்குத் தேவரீர் கதியாகவேண்டும்' என்றுசொல்ல, இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் வருங்காலத்தையும் அறிந்தவரான அந்தப்பிரம்மதேவர், பிறகு அவளைப்பார்த்து, 'மிருத்யுவே! இந்தப்பிரஜைகளை ஸம்ஹரிக்கின்றஉனக்கு அதர்மம்உண்டாகாது. பெண்ணே! நான் சொல்லி

யது எவ்விதத்தாலும் பொய்யாகாது; கல்யாணி! ஆதலால், நான்குவித மான எல்லாப்பிரஜைகளையும் ஸம்ஹாரம்செய்; ஸநாதனமான தர்மமும் எவ்விதத்திலும் உன்னைப்பரிசுத்தமாக்கும்; லோகபாலனையமனும் வியாதிகளும் உனக்குத்துணையாயிருப்பார்கள்; நீ பாவத்தினின்றுவிடு பட்டு ரஜோகுணமற்றவளாகிப் பிரஸித்தியை அடையும்வண்ணம் நானும் தேவர்களும் உனக்கு மீண்டும்வரனைக்கொடுப்போம்' என்று கூறினார்.

மஹாராஜனே! இவ்வாறுசொல்லக்கேட்ட அந்தக்கன்னிகை விபு வானபிரம்மதேவரைப்பார்த்து, கைகளைக்குவித்துக்கொண்டு அப்பொழுது முடியினால்வணங்கி, அவரைஅருள்புரியும்படிசெய்து பின்வரும் வார்த்தையைத் திரும்பவும் சொல்லலானாள். 'இது இவ்விதமாகத் தர்மத்தினால் செய்யத்தக்கதாயிருந்தால் இதிலிருந்து பயமில்லை. உம்முடையகட்டளையானது என்னுடையசிரஸில் வைக்கப்பட்டது. ஆனாலும், நான் உம்மிடத்தில் சொல்வதைக்கேளும். லோபம், குரோதம், அஸூயை, பொறாமை, துரோகம், மோகம், வெட்கமில்லாமை, ஒருவரையொருவர் குரூரமாகச்சொல்லுதல் ஆகியஇவைகள் தனித்தனிவிதமாகிப் பிராணிகளுடையதேகத்தைப் பேதிக்கட்டும்' என்றுவேண்டினாள். பிரம்மதேவர், 'மிருத்யுவே' அவ்வாறே ஆகட்டும்; பிரஜைகளை நன்றாகஸம்ஹாரம்செய்; கல்யாணி! உனக்கு அதர்மம்உண்டாகாது. நான்உனக்குக்கேடுநினைக்கமாட்டேன்; எந்தக்கண்ணீர்த்திவலைகள் என் கையில்விழுந்தனவோ அவைகள் பிராணிகளுடைய தேகத்திலுண்டான வியாதிகள்; அவைகள் பிராணிகளை உயிரிழக்கும்படி கொல்லப்போகின்றன; உனக்கு அதர்மம்உண்டாகாது; நீ பயப்படாதே; பிராணிகளின் அதர்மம் உனக்குஉண்டாகாது: நீயே தர்மம்; நீயன்றோ தர்மத்திற்குத் தலைவியாயிருப்பவள். நீ தர்மத்தை விட்டுவிலகாமல் எப்பொழுதும் தர்மத்திலேயே பற்றுதலுள்ளவளாயும் அதைப்போஷிக்கிறவளாயுமிரு. ஸர்வவிதத்தினாலும் இந்தப்பிராணிகளை உயிரைவாங்கு. அதற்காகவந்தநீ ஒருபொழுதும் அவ்வாறு செய்யாமலிருக்கமுடியாது. என்னால் நீ இப்பொழுதே ஏவப்படுகிறாய். காமத்தையும் ரோஷத்தையும் விட்டு இவ்வுலகில் எல்லாப்பிராணிகளினுடைய உயிர்களையும் வாங்கு. [1] இவ்வாறு நீ செய்தால் அனந்தமான தர்மங்கள் உனக்குஉண்டாகும். அதர்மமானது துராசாரமுள்ளவர்களைக் கொல்லப்போகிறது; அதனால் நீ உன்னைத்தானே பரிசுத்தஞ்செய்துகொள். பிராணிகள் அஸத்தியத்தி

[1] வேறுபாடம்.

ஹல் பாவத்தில் தம்மை அமிழ்த்தப்போகின்றன. ஆதலாலே, உன் மனத்தில்தோன்றிய காமத்தையும் கோபத்தையும்விட்டு, ஜீவன்களை ஸம்ஹாரம்செய்' என்றுகூறினர். பயந்தவளான மிருத்யுஎன்று பெயருள்ள அந்தப்பெண் சாபத்தினின்றுபயந்தவளாகி உபதேசத்தினுல் அந்தப்பிரம்மதேவரைப்பார்த்து, 'அப்படியேஆகுக'என்று சொன்னுள். அந்தமிருத்யுதேவி பற்றுதலற்றவளாகிக் காமக்குரோதங்களை விட்டு முடிவுக்காலத்தில் பிராணிகளினுடைய பிராணனைவாங்குகிறுள். இந்தப்பிராணிகளுக்குத்தான் மிருத்யுஉண்டாகிறது. வியாதிகளும் அவற்றினிடத்திலிருந்தே உண்டாகின்றன. எல்லாப்பிராணிகளுக்கும் முடிவுக்காலத்தில் விபரீதமானவியாதி உண்டாகின்றது. அதனுல் அவை துன்பப்படுகின்றன. ஆதலால், நீ வீணே சோகத்தை அடையாதே. ஆயுள்முடிவில் எல்லாஇந்திரியங்களும் [1] ஜீவன்களோடுசென்று பரலோகத்தில் நிலைபெற்றிருந்து அப்படியே திரும்பிவந்துவிடுகின்றன. அரசரிற்சிறந்தவனே! இம்மாதிரி எல்லாப்பிராணிகளும் [2] மனிதர்களைப்போலவே அந்தப்பரலோகத்தைஅடைந்து அவ்விடத்தில் இந்திராதிதேவர்களாக நிலைபெற்று நிற்கின்றன. பயங்கரமானதும் பயங்கரமான நாதமுள்ளதும் மஹாபலமுள்ளதும் எங்கும்செல்லுகிறதுமான அந்தப்பிராணவாயுவானது பிராணிகளுடையதேகங்களை உடைக்கிறது. உக்ரமானதும் அளவில்லாத தேஜஸுள்ளதுமான வாயுவானது ஒருபொழுதும் ஓரிடத்திலாவது நிலையையும் நிலையில்லாமையையும் அடைகிறதில்லை. ராஜசிரேஷ்டனே! எல்லாத்தேவர்களும் மர்த்யர்களென்று பெயருள்ளவர்களே. ஆதலால், புத்திரனைக்குறித்து நீ துயரப்படாதே. உன்னுடைய குமாரன் ஸ்வர்க்கத்தை அடைந்து மனேஹரமான வீரலோகங்களையடைந்து துக்கத்தைவிட்டுப் புண்ணியவான்களோடு சேர்ந்து நித்யமான ஆனந்தத்தை அடைந்துகொண்டிருக்கிறுன். இந்த மிருத்யுவானது பிரஜைகளுக்குத் தேவரால் ஏறபடுத்தப்பட்டது. பிரஜைகளுடைய பிராணன்களை அபஹரிக்கின்ற மிருத்யுவானது காலம் வந்தவுடன், உள்ளபடி ப்ரஜைகளாலேயே ஏற்படுத்தப்பட்டு அவைகளின்உயிரை வாங்குகிறது. எல்லாப்பிராணிகளும் தங்களைக் கொன்றுகொள்ளுகின்றன. தண்டபாணியான மிருத்யு இவர்களைக் கொல்லுகிறதில்லை. ஆதலால், விவேகிகள் மிருத்யுவானது பிரம்மதேவராலே ஏற்படுத்தப்பட்டிருக்கிறதென்று நிச்சயமாக அறிந்து மரித்தவர்களைப்பற்றி வியஸனப்படுகிறதில்லை. இவ்வாறு இந்த மிருத்யுஸ்ருஷ்டியா

[1] கர்மதேவர்கள்; இவர்களுக்குப் புனராவர்த்தி உண்டு.

[2] ஆஜானதேவர்கள்; இவர்களுக்குப் புனராவர்த்தி யில்லை.

னது தேவராலே ஏற்படுத்தப்பட்டதென்றறிந்து, புத்ரநாசத்தினு லுண்டான சோகத்தைவிட்டுவிடு' என்று கூறினர்.

நாரதரால் வெளியிடப்பட்டதும் அர்த்தத்தோடுகூடியதுமான இந்த வாக்கியத்தைக்கேட்டு அகம்பனராஜன், ஸகாவான அந்த நாரதரைப்பார்த்து, 'பகவானே! ரிஷிஸ்ரேஷ்டரே! துக்கத்தை விட்டேன்; பிரீதியையுடையவனுகிறேன். தேவரீர்களிடத்திலிருந்து இதிஹாஸத்தைக்கேட்டுக் கிருதார்த்தனுகிறேன். உமக்கு நமஸ்காரம்பண்ணுகிறேன்' என்று சொன்னன். அவ்வரசனுலே அவ்வாறு சொல்லப்பட்ட தேவரிஷிகளுள் சிரேஷ்டரானநாரதர் சந்தோஷகரமான தம்முடைய அசோக வனத்தைக்குறித்து விரைவாகச் சென்றர். இந்த இதிஹாஸத்தை எப்பொழுதும் கேட்டாலும் பிறர்களைக்கேட்பித்தாலும், புண்ணியமும் கீர்த்தியும் ஸ்வர்க்கமும் தனமும் ஆயுளும் விர்த்தியடையும். யுதிஷ்டிர! அப்பொழுது இவ்வித அர்த்தங்களுள்ள சொற்களைக்கேட்டு, மஹாவீர்யமுள்ளவனும் மஹாரதனுமான அந்த அகம்பனராஜன் க்ஷத்ரிய தர்மத்தையும் சூரர்களுடைய உத்தமமானகதியையும்அறிந்து ஸ்வர்க்கத்தையடைந்தான். பெரியவில்லைக் கையில்பிடித்தவனை அபிமன்யு எல்லாவில்லாளிகளுக்கும் முன்னிலையில் யுத்தஞ்செய்து பகைவர்களைக் கொன்று யுத்தத்தில் எதிர்முகமாகவே கொல்லப்பட்டான். [1] சந்திரனுக்குக் குமாரனும் மஹாரதனும் ரஜோகுணமற்றவனுமான அந்த அபிமன்யு கத்தியினுலும் கதையினுலும் சக்தியினுலும் வில்லாலும் மீண்டும் அந்தசசந்திரனிடத்தில் லயமடைந்தான். ஓ! பாண்டவ! ஆதலால், நீ சிறந்த மனைதைர்யத்தைப்பெற்று ஸஹோதரர்களோடுகூடி ஊக்கத்துடனும் நல்லஸன்னகத்துடனும் விரைவாக யுத்தம்செய்வதற்குத் தொடங்கு' என்று கூறினர்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(வியாஸர் யுதிஷ்டிரருக்குச் சொல்லிய ஷோடசராஜகீயத்தில் நாரதர் ஸ்ருஞ்சயனுக்குச்சொல்லிய மருத்தன்கதை.)

ம்ருத்யுவினுடைய உத்பத்தியையும் நிகரில்லாத செய்கைகளையும் கேட்டுத் தர்மராஜர் அந்த வியாஸமஹரிஷிக்கு அருள்வரச்செய்து

[1] ஆதிபர்வம் 253 பக்கம் பார்க்க.

பிறகு, அவரைப்பார்த்துப் பின்வரும் வாக்கியத்தை உரைக்கலானார். 'பிராம்மணரே! கௌரவமுள்ளவர்களும் பரிசுத்தமான செய்கையை யுடையவர்களும் இந்திரனுக்கு ஸமமான பராக்ரமத்தையுடையவர்களு மான எத்தனை ராஜரிஷிகள் முன்பு மிருத்யுவினால் கொல்லப்பட்டார் கள்? மறுபடியும் என்னைத் தேவரீர் உண்மையான வார்த்தைகளாலே (உத்ஸாஹத்தினால்) விருத்தியடையும்படி செய்யும். முற்காலத்தி லிருந்த ராஜரிஷிகளுடைய செய்கைகளாலே என்னை ஆறுதலடையும் படி செய்யவேண்டும். மஹாத்மாக்களும் புண்ணியத்தைச்செய்தவர் களுமான ராஜரிஷிகளாலே எவ்வளவு தக்ஷிணைகள் கொடுக்கப்பட்டன? எவைகள் கொடுக்கப்பட்டன? அவற்றைத் தேவரீர் எனக்குச்சொல்ல வேண்டும்' என்று வினவ, வியாஸர் சொல்லலானார்.

'பாரதனே! யாகஞ்செய்தவர்களுக்கும் தவஞ்செய்தவர்களுக்கும் பொறுமையுடையவர்களுக்கும் வெவ்வேறான உலகங்களுண்டு; மூன்று உலகங்களைச் சூரர்களடைகிறார்கள். தர்மசாஸ்திரத்தை அறிந்த மனி தர்கள் யுத்தத்தில் சத்துருக்களைக்கொன்ற அல்லது (அவர்களால்) கொல்லப்பட்ட க்ஷத்ரியனுக்கு அழிவற்ற பலனுண்டென்று சொல்லு கிறார்கள். வேதங்களையும் வித்தைகளையும் அத்தியயனம்செய்து விரதத் தையும் அனுஷ்டித்து ஸ்நாதகர்களாயிருக்கிறவர்களும் யாகம்செய்கிற வர்களும் புத்திரனுள்ளவர்களுமான இவர்களுள் யாகஞ்செய்கிறவர் கள் சிறந்தவர்கள். யாகஞ்செய்கிறவர்களைக்காட்டிலும் யுத்தத்தில்சரீரத் தைவிடுபவர்களே மேலானவர்கள். அரசனே! அந்த வீரனான அர்ஜுன குமாரன் எப்பொழுதும் யாகஞ்செய்தவர்களான க்ஷத்ரியர்களை அனுஸ ரித்து இஷ்டமானவையும் மிக்கபுண்ணியமுள்ளவையுமான உலகங்களை அடைந்தானென்று நீ அறிந்துகொள். ராஜஶ்ரேஷ்டனே! சிறந்த எல் லா அரசர்களுடைய யாகங்களையும் கேள். [1] ஸ்வர்க்கத்தில் விருப்பமுள் ளவர்கள் அந்தயாகங்களைக்கடந்து சரீரத்தைவிட்டு ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள்' என்றுகூறினர். யுதிஷ்டிரர், 'நல்லவிரதமுள்ளவரே! யாகஞ்செய்த அனைவர்களுடைய யாகத்தையும் கேட்கவிரும்புகிறேன்; சிறந்த ராஜரிஷிகளாலே தகுந்தபாத்திரர்களிடத்தில் கொடுக்கப்பட்ட தக்ஷிணைகளையும் நான் கேட்கவிரும்புகிறேன்' என்றுகேட்க, வியாஸர் சொல்லலானார்.

---

[1] ஸ்வர்க்கத்தைவிரும்பி (யுத்தத்தில்) சரீரத்தைவிட்டவர்கள் அந்தயாகங் களை அதிக்ரமித்து (நல்லலோகங்களை) அடைகிறார்கள் என்றுமாம்.

'சைப்யராஜனுக்கு ஸ்ருஞ்சயனென்னும் பெயருள்ள பிரஸித்தி பெற்ற ஒருகுமாரன் இருந்தான்; அவனுக்குப் பர்வதர், நாரதர்என்கிற இரண்டுரிஷிகள் ஸ்நேகிதர்களானார்கள். அவ்விருவரும் ஒருஸமயத்தில் அவனைப்பார்க்கக்கருதி அவனுடையஅரண்மனையை அடைந்து, அவனால் முறைப்படி பூஜிக்கப்பெற்று அதனால் மனக்களிப்பையடைந்து அவ்விடத்திலேயே ஸுகமாக வாஸஞ்செய்தார்கள். ஒருஸமயத்தில் அவ்விருவர்களுடனும் ஸுகமாக வீற்றிருக்கும் ஸ்ருஞ்சயனருகில் திவ்யஸௌந்தர்யமுள்ளவளும் கன்னிகைப்பருவத்திலிருப்பவளுமான அவனுடையகுமாரியானவள் புன்னகையோடுவந்தாள். அந்தப்பெண்ணினால் நமஸ்கரிக்கப்பட்டஸ்ருஞ்சயன் சாஸ்திரத்தில் சொல்லியபடி இஷ்டமானவையும் அவளுக்குத்தக்கவையுமான ஆசீர்வாதங்களினாலே தன்பக்கத்தில் நிற்கின்றகுமாரியை ஆசீர்வதித்தான். அந்தப்பெண்ணைப்பார்த்துப் பர்வதர் புன்னகையுடன், 'ஸர்வலக்ஷணங்களும்பொருந்தியவளும் சஞ்சலமான கடைக்கண்பார்வையுடையவளுமான இந்தக் கன்னிகை யாருடையபெண்? உஷாதேவியோ? அல்லது ஸூர்யனுடைய ஒளியோ? அக்நிஜ்வாலையோ? ஸ்ரீதேவியோ? ஹ்ரீதேவியோ? கீர்த்தியோ? த்ருதியோ? புஷ்டியோ? ஸித்தியோ? சந்திரனுடைய ஒளியோ?' என்ற வாக்யத்தைச்சொன்னார். இவ்வாறுசொல்லுகின்ற தேவரிஷியான பர்வதரைப்பார்த்து, ஸ்ருஞ்சயராஜன், 'பகவானே! இவள் என்னுடைய குமாரி; வரனால்வரிக்கத்தக்கவள்; வரனைவிரும்புகிறாள்' என்று தெரிவித்தான். அரசனே! நாரதர் அவனைப்பார்த்து, 'வேந்தனே! நீ அதிகமான ச்ரேயஸ்ஸையடையவிரும்பினால் இந்தப்பெண்ணை எனக்குக்கொடுத்துவிடு'என்றுசொல்ல, ஸ்ருஞ்சயன் ஸந்தோஷமடைந்து அவரைப்பார்த்து, 'அவசியமாக நான் கொடுக்கிறேன்' என்றேசொன்னான். அரசன் இவ்வாறுசொல்லலும், குரோதத்தால் கலக்கமுற்ற கண்களையுடைய பர்வதர், அதிககோபங்கொண்டு நாரதரைப்பார்த்து, 'ரிஷியே! முதலில் என்னுடையமனத்தினாலேயே இவள் மனைவியாக வரிக்கப்பட்டாளென்றறியும்; (அப்படியிருக்க) நீர் நியாயவிரோதமான கார்யத்தைச்செய்தமையால் ஸ்வர்க்கமார்க்கத்தை அடையமாட்டீர்' என்றுசபித்தார். இவ்வாறுசொல்லியதைக்கேட்டநாரதர், அந்தப்பர்வதரைக்குறித்து, "மனம், வாக்கு, புத்தி, ஸம்பாஷணம், ஸத்தியம், ஜலம், அக்னிகள், பாணிக்ரஹணம், மந்திரங்கள் இவைகளல்லவோ பிரஸித்தமான தாரத்தின்லக்ஷணம்; இந்தத்தாரலக்ஷணங்களினுடையபூர்த்தி ஏற்படவில்லை; மனத்தினாலேமாத்திரம் உன்னால் அவள் பார்யையாக எண்ணப்பட்டாள். நீ

[1] இங்கு, நீலகண்டவியாக்யான பாடம் சிறிதுவேறுபடுகிறது.

அறிந்திருந்தும் என்னை இவ்வாறு சபித்ததனால் நீயும் என்னைவிட்டு ஸ்வர்க்கம்போகக்கூடாது'என்று பிரதிசாபத்தைக்கூறினார். இவ்வாறு அவ்விருவரும் ஒருவரை மற்றொருவர் சபித்து அவ்விடத்திலேயே அப்பொழுது வாஸஞ்செய்தார்கள். பிறகு, அந்த அரசனும் புத்திரனை விரும்பிப் பரிசுத்தனாயிருந்துகொண்டு தன்சத்திமீறியமுயற்சியோடு, அன்னபானங்களாலும் 'வஸ்திரங்களாலும் பிராம்மணர்களை உபசரித்தான். ஒருஸமயத்தில், தவத்திலும் வேதாத்யயனத்திலும் பற்றுள்ளவர்களும் வேதவேதாங்கங்களின் கரைகண்டவர்களுமான பிராம்மணோத்தமர்கள் ஒன்றுசேர்ந்து ப்ரீதியடைந்து அவனுக்குப்புத்ரனுண்டாகவேண்டுமென்றுகருதி நாரதரைநோக்கி, 'இந்த ஸ்ருஞ்சயனுக்கு விரும்பப்பட்ட ஒருபுத்திரனைக்கொடும்' என்று சொன்னார்கள். நாரதர், பிராம்மணர்களால் இவ்வாறுசொல்லப்பட்டவுடனே, 'அவ்வாறே ஆகுக' என்றுசொல்லி, ஸ்ருஞ்சயனைப்பார்த்து, 'ராஜரிஷியே! உன்விஷயத்தில் ப்ராம்மணர்கள் ப்ரீதியுள்ளவர்களாகி உனக்குப்புத்ரனுண்டாகவேண்டுமென்று விரும்புகிறார்கள்; உனக்கு மங்களமுண்டாகட்டும்; எப்படிப்பட்டபுத்திரனை நீ விரும்புகிறாயோ அப்படிப்பட்ட புத்திரவரனை நீ பெற்றுக்கொள்' என்றுசொன்னார். அவ்வாறுசொல்லப்பட்ட அந்த ஸ்ருஞ்சயராஜன் கைகளைக்குவித்துக்கொண்டு, 'நற்குணங்களுள்ளவனும் புகழுடையவனும் கீர்த்தியுடையவனும் தேஜஸுள்ளவனும் பகைவர்களைக்கொல்பவனும் ஜலம் மலம் சளி வேர்வை இவைகளெல்லாம் தேவரீருடைய அனுக்ரஹத்தினாலே தங்கமாகக்கூடியவனுமான புத்திரனை யான்விரும்புகிறேன்' என்று வேண்டினான். 'அவ்வாறேஆகுக' என்று அவர் சொன்னவுடனே, அவனுக்குத் தங்கத்திற்குஇருப்பிடமானவனும் பேரொளியுள்ளவனும் விரும்பப்பட்டவனுமான புத்திரன் அனுக்ரஹத்தினால் பிறந்தான். அழுகின்ற அக்குழந்தையினுடைய இரண்டுகண்களிலிருந்தும் கீழேவிழுந்தகண்ணீர் ஜலம் மலம் வேர்வை ஆகியஎல்லாம் தங்கமாயின. அந்தக்குழந்தைக்கு ஸ்வர்ணஷ்டீவி என்றே பெயருமிடப்பட்டது. அந்தக்குழந்தை வரப்பிரதானத்தினாலே அளவற்றதனத்தை விருத்திபண்ணுகையில் ஸ்ருஞ்சயராஜன் இச்சிக்கப்பட்ட எல்லாவஸ்துவையும் தங்கமயமாகச் செய்வித்தான். வீடுகள், மதிள்கள், கோட்டைகள், பிராம்மணர்களுடைய வாஸஸ்தானங்கள், படுக்கைகள், ஆஸனங்கள், வாகனங்கள், ஸ்தாலிகள், பானைகள், பாத்திரங்கள், அந்த அரசனுடையஅரண்மனை, அரண்மனைக்குவெளியிலுள்ள உபகரணங்கள் ஆகிய இவையெல்லாம் நாளடைவில் ஸ்வர்ணமயமாக விருத்திசெய்யப்பட்டன. பிறகு, திருடர்களுடையகூட்டங்கள், இந்த

இராஜகுமாரன் அவ்வாறிருப்பதைக்கேட்டும் பார்த்தும் ஒன்றுகூடி அவ்வரசன்விஷயத்தில் செய்யவிரும்பிய காரியத்தைச் செய்வதற்குத் தொடங்கின. அக்கூட்டத்தினுள் சிலர், 'அரசனுடையபுத்திரனை நாமே அபகரிப்போம். அந்தக்குமாரன் ஸ்வர்ணத்துக்கு உத்பத்திஸ்தானம். அதற்காக முயற்சியைச்செய்வோம்' என்றுசொன்னார்கள். பிறகு, பேராசையுள்ள அந்தத்திருடர்கள் அரசனுடைய அரண்மனையில் நுழைந்து ராஜகுமாரனை ஸ்வர்ணஷ்டீவியைப் பலாத்காரமாக அவ்வாறே கவர்ந்தார்கள். உபாயத்தையறியாதவர்களும் பேராசையுள்ளவர்களும் புத்தியில்லாதவர்களுமான அந்தத்திருடர்கள் அந்தஸ்வர்ணஷ்டீவியைப் பிடித்துக் கானகத்தில்கொண்டுபோய் அவனைக்கொன்று அறுத்தும் சிறிதும் பொருளைக்காணவில்லை. உயிரையிழந்திருக்கின்ற அந்தராஜபுத்திரனிடத்தில் அந்தஉத்தமமானஸுவர்ணம் நஷ்டமாகிவிட்டது. அப்பொழுது மூர்க்கர்களும் அறிவீனர்களுமான அந்தத்திருடர்களும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள்; பூமியில் அற்புதமாயிருந்த அந்தக்குமாரனைக்கொன்று, தாங்களும் ஒருவரையொருவர் கொன்றுகொண்டு நாசமடைந்தார்கள். துஷ்டகார்யத்தைச்செய்யுந்தன்மையுள்ள அந்தத்திருடர்கள் மனத்தினால்நினைக்கக்கூடாத கோரமான நரகத்தை அடைந்தார்கள். மிக்கதவத்தையுடைய ஸ்ருஞ்சயராஜன் வரத்தினால் கொடுக்கப்பட்ட அந்தப்புத்திரன் கொல்லப்பட்டதைக்கண்டு மிகுந்த துக்கத்தினால் பீடிக்கப்பட்டுத் தீனமாகப் பலவாறுபுலம்பினான். பிறகு, அவ்வரசன் புத்திரசோகத்தால் துன்பமுற்றுப் புலம்புவதைக்கேட்டுத் தேவரிஷியானநாரதர் அவன்ஸமீபத்தில் தோன்றினர். யுதிஷ்டிர! நாரதர், துக்கத்தினால்பீடிக்கப்பட்டவனும் புலம்புகின்றவனும் மனநிலை தவறினவனுமான ஸ்ருஞ்சயனைப்பார்த்துச் சொன்னதையெல்லாம் நீ அறிந்துகொள்.

நாரதர், 'மஹாராஜனே! சோகத்தைவிட்டுவிடு. புத்திமானே! மனவருத்தத்தைவிட்டுவிடு. நராதிப! துக்கப்பட்டாலும் மூர்ச்சையடைந்தாலும் மரித்தவன் பிழையான். ராஜசிரேஷ்டனே! துக்கத்தைவிடு. உன்னைப்போன்றவர்கள் சோகமடையமாட்டார்கள். மகாராஜனே! நீ சூரன். ஞானத்தினால் முதிர்ந்தவனென்றும் நான் நினைக்கிறேன். ஸ்ருஞ்சய! நீ இவ்வுலகத்தில்விஷயஸுகங்களில் திருப்தியடையாமலே உயிரை இழக்கப்போகிறாய். ஸ்ருஞ்சய! பிரம்மவாதிகளானநாங்கள் எவனுடைய அரண்மனையில் வாஸம்செய்துகொண்டிருந்தோமோ, அவிக்ஷித்தின்புத்திரனை அந்தமருத்தனும் மாண்டானென்று நாம்கேட்டிருக்கிறோம். ஸம்வர்த்தர் பிருஹஸ்பதிக்குவிரோதமாக அவனுக்கு யாகஞ்செய்வித்

தார். ஷாட்குண்யபரிபூர்ணரான ஜகந்நாதர் பற்பலயாகங்களால் பூஜிக்கப்போகிறவனான அந்தராஜரிஷிக்கு ஸ்வர்ணமயமான ஹிமயமலையைச் சேர்ந்த ஒருகுன்றை யாகதனமாகக்கொடுத்தார். அவனுடைய யாகமுடிவில் பிருஹஸ்பதியை முதன்மையாகக்கொண்டவைகளும் இந்திரனுடன்கூடியவைகளுமானதேவகணங்களும் உலகத்தைப்படைக்கிறவர்களான எல்லாத்தேவர்களும் ஸுகமாகவீற்றிருந்தார்கள். அவனுடைய யாகசாலையிலுள்ள எல்லாஉபகரணங்களும் பொன்மயமாயிருந்தன. அந்தஅரசனுடைய மனோபிப்பிராயத்தை அனுஸரித்ததும் பரிசுத்தமாயுள்ளதுமான எல்லாஅன்னத்தையும் பால் நெய் தேன் பக்ஷ்யம் மங்களகரமானபோஜ்யம் இவைகளையும் வேதம்வல்ல பிராம்மணோத்தமர்களும் அன்னார்த்திகளான மற்றஎல்லாத்விஜர்களும் திருப்தியாகும் வரையில் அப்பொழுது போஜனஞ்செய்தார்கள். அந்தஅரசனுடைய எல்லாயாகங்களிலும் விரும்பப்பட்ட வஸ்திரங்களும் ஆபரணங்களும் ஸந்துஷ்டர்களான வேதத்தின்கரைகண்டவர்களை வந்தடைந்தன. அந்த மருத்தனுடைய வீட்டில் தேவதைகளே அன்னங்களைப் பரிமாறினார்கள். ராஜரிஷியும் அவிக்ஷித்தின்குமாரனுமான மருத்தனுக்கு விஸ்வேதேவர்களே ஸபையோர்களாகவிருந்தார்கள். வீரியவானான அந்தஅரசனுக்கு நல்லமழையினாலே ஸஸ்யஸம்பத்துக்கள் உண்டாயின. அந்தஅரசன் நன்றாகஹோமம்செய்யப்படுகின்ற ஹவிஸுகளால் தேவலோகவாஸிகளைத் திருப்தியடைவித்தான். அந்தஅரசன் ரிஷிகளுக்கும் பிதிர்க்களுக்கும் ஸுகஜீவிகளான தேவர்களுக்கும் பிரம்மசர்யம் வேதாத்யயனமுதலியவைகளாலும் எல்லாத்தானங்களாலும் எப்பொழுதும் திருப்திசெய்வித்தான். படுக்கைகள், பீடங்கள், பானார்கமானவஸ்துக்கள், கொடுக்கமனம்வராத ஸ்வர்ணக்குவியல்கள், அளவற்றபொருள்கள் இவைகளையெல்லாம் பிராம்மணர்களுக்கு இஷ்டப்படி கொடுத்தான். அந்தமருத்தன் இந்திரனால் நினைக்கப்பட்டவுடன் பிரஜைகளைத்துன்பமற்றவைகளாகச்செய்துவிட்டு மிக்கசிரத்தையோடு ஜயிக்கப்பட்டவைகளும் புண்ணியத்தின்பயனைத் தருகின்றவைகளும் அழிவற்றவைகளுமான உலகங்களை அடைந்தான். மருத்தன் பிரஜைகளோடும் மற்றச்சிற்றரசர்களோடும் மந்திரிகளோடும் மனைவி மக்கள் பந்துக்கள் இவர்களோடும் ஆயிரம்வருஷகாலம் யுவாவாகவிருந்து ராஜ்யத்தை ஆண்டுவந்தான். ஸ்ருஞ்சய! [1] தர்மம் ஞானம் வைராக்யம் ஐசுவர்யம் இந்நான்கினு

[1] 'சதுர்ப்பத்ரதர:' என்பதுமூலம். 'தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம்' என்பதும், 'தர்மம் அர்த்தம் காமம் பலம்' என்பதும், 'கொடையுள்ளசெல்வம்' கர்வமில்லாதஞானம், பொறுமையுடன்கூடின சௌரியம், பற்றுதலில்லாத்யாகம்' என்பதும் பழையஉரை.

னும் உன்னைக்காட்டிலும் மிகமேற்பட்டவனுன அப்படிப்பட்டமருத்தனே மரித்தான். உன்புத்திரனைக்காட்டிலும் அவன் அதிகபுண்ணியசாலி. [1] ஸ்ருஞ்சய! யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி நீ துக்கிக்கவேண்டாம்.

---

## ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குச் சொல்லிய ஸுஹோத்ரன்கதை.)

ஸ்ருஞ்சய! உலகத்தில் ஒப்பற்றசூரனும் தேவர்களாலும் பார்ப்பதற்குமுடியாதவனுமான ஸுஹோத்ரனென்கிறஅரசன் காலஞ்சென்றதாக நாம்கேட்டிருக்கிறோம். அந்தஅரசன் தர்மத்தினால் ராஜ்யத்தைப் பெற்று ரித்விக்குக்களையும் மந்திரிகளையும் புரோகிதர்களையும் ஸம்மானித்துத் தனக்குநன்மையைக்கேட்டு அவர்கள் ஸம்மதப்படி யிருந்தான். அவன் பிரஜைகளைப்பரிபாலனஞ்செய்தல் தர்மம் தானம் யாகம் சத்ருஜயம் ஆகியஇவற்றை நன்றாக அறிந்துகொண்டு தர்மத்தைவிட்டு விலகாததான பொருள்வரவை விரும்பினான். தர்மத்தினாலே தேவர்களை ஆராதனஞ்செய்துகொண்டும், அவ்வாறே பாணங்களினாலே சத்துருக்களைஜயித்துக்கொண்டும், தன்குணங்களாலே எல்லாப்பிராணிகளையும் ஆனந்திக்கச்செய்தான். எந்தஅரசன் இந்தப்பூமியை மிலேச்சர்களாலும் [2] ஆடவிகர்களாலும் விடுபட்டதாகச்செய்து அனுபவித்தானோ, எந்தஅரசன்பொருட்டு மேகமானது அநேகவருஷகாலமாகப் பொன்மாரி பொழிந்ததோ அந்த ஸுஹோத்ரனுடையராஜ்யத்தில் முற்காலத்தில் நதிகள் பொன்மயமாகவும் எல்லாஜனங்களாலும் உபயோகிக்கத்தக்கவைகளாகவும் தங்கமயமானமுதலைகளையும் நண்டுகளையும் பற்பலவிதமான அநேகமீன்களையும்கொண்டு பெருகின. மேகமானது விரும்பப்பட்டவைகளையும் பலவிதமான வெள்ளிகளையும் எண்ணமுடியாததங்கங்களையும் வர்ஷித்தது. வாவிகள் ஒருகுரோசநீளமுள்ளவைகளாயிருந்தன. அவைகளில் பொன்மயமாகப் படைக்கப்பட்டவையும் [3] லக்ஷம்குட்டிகளுடன் கூடியவையுமான முதலைகள் சுறாமீன்கள் ஆமைகள் இவைகளை அவ்வரசன்கண்டு அப்பொழுது வியப்படைந்தான். ராஜரிஷியான

---

[1] இவன், 'ஶ்வைத்ய' என்றும் அழைக்கப்படுகிறான். [2] வனத்தில் வஸிக்கிற திருடர்கள். [3] வேறுபாடம்.

அவன் குருக்ஷேத்திரத்தில் யாகஞ்செய்துகொண்டு விஸ்தாரமான அந்தயாகத்தில் அளவற்ற அந்தப்பொன்னைப் பிராம்மணர்களுக்குக் கொடுக்க எண்ணினான். அவன் ஆயிரம்அஸ்வமேதங்களாலும் நூறு ராஜஸூயங்களாலும் பரிசுத்தமானவையும் மிகுதியானவையும், சிறந்தவையும் தக்ஷிணைகளுள்ளவையும் க்ஷத்ரியர்கள் செய்யக்கூடியவையுமான யாகங்களாலும் காம்யகர்மாக்களாலும் நித்யநைமித்திக கர்மாக்களாலும் தேவர்களைத் திருப்திசெய்வித்து இஷ்டமானகதியை அடைந்தான். ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் என்னும் இந்நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிக்கமேன்மைபெற்றவனும் உன்பிள்ளையைக்காட்டிலும் மஹாபரிசுத்தாத்மாவுமாயிருந்த அந்த ஸுஹோத்ரனே மாண்டான். ஆதலால், ஸ்ருஞ்சய! யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான புத்திரனைப்பற்றி நீ அனுதாபப் படவேண்டாம்.

---

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்கு அங்கராஜனுடைய த்ருத்தத்தைக் கூறியது.)

பூருவம்சத்தில் பிறந்தவனும் சூரனுமாயிருந்த [1] அங்கராஜன் காலஞ்சென்றதாக நாம் கேட்டிருக்கிறோம். எவன் பத்துலக்ஷம் வெள்ளைக்குதிரைகளை யாகத்திற்காகவெளியில் விட்டானோ அந்தராஜ ரிஷியினுடைய அஸ்வமேதத்தில் பற்பலதேசங்களிலிருந்து வந்தவர்களும் சிக்ஷையையும் அக்ஷரங்களுடையவிதிகளையும் அறிந்தவர்களுமான வித்வான்களுக்கு எண்ணிக்கையில்லை. அந்தயாகத்தில் வேதங்களையும் வித்தைகளையும் விரதங்களையும்கற்று அனுஷ்டித்துமுடித்தவர்களும் அபரிமிதமாகக் கொடுப்பவர்களும் பார்க்க இன்பமான தோற்றமுள்ளவர்களுமான வித்வான்கள் சிறந்தவஸ்திரங்களாலும் கிருஹங்களாலும் உத்தமமான சயனம் ஆஸனம் போஜனம் இவைகளாலும் உபசரிக்கப்பட்டார்கள். எப்பொழுதும் ஊக்கமுள்ளவர்களும் விளையாடுகின்றவர்களும் ஸ்வர்ணமயமான அலங்காரத்தை முடியில் அணிந்தவர்களும் [2] ஆராத்ரிகத்தைக் கையில்கொண்டவர்களுமான [3] நடர்களா

---

[1] ப்ருஹத்ரதனென்றும் பௌரவனென்றும் இவனுக்குப்பெயர்களுண்டு.

[2] த்ருஷ்டிதோஷத்தைப்போக்கும் மஞ்சணீர் முதலியன.

[3] நாட்டியம் ஆடுகிறவர்கள். ரஸத்தைப்பிரதானமாகக்கொண்டதும் லாஸ்யாபிநயப்ரதானமானதுமான வாக்கியார்த்தாபிநயம் நாட்யம்.

லும் *நர்த்தகர்களாலும் பாடகர்களாலும் ஸந்தோஷப்படுத்தப்பட்டார்கள். அந்த அங்கராஜன் ஒவ்வொரு பாகத்திலும் காலந்தவருமல் தக்ஷிணைகளைக்கொடுத்தான். ஸுவர்ணங்களினல் மூடப்பட்ட பதினுயிரக்கணக்கான யானைகளையும், அவ்வாறே தங்கமயமானவைகளும் கொடிமரங்களையுடையவைகளும் கொடித்துணிகளுள்ளவைகளுமான தேர்களையும் கொடுத்தான். அந்தஅரசன் பொன்னல் அலங்கரிக்கப்பட்டவர்களும் தேர், குதிரை, யானை இவைகளின்மீது ஏறினவர்களும் வாஸஸ்தானங்கள், க்ஷேத்திரங்கள், அநேகம்பசுக்கள் இவைகளையுடையவர்களுமான பத்துலக்ஷம் கன்னிகைகளையும், பொன்மாலைகளை அணிந்தவைகளும் ஆயிரம்பசுக்களைப் பின்தொடர்ந்தவைகளுமான நூறுலக்ஷம் காளைமாடுகளையும், ஸ்வர்ணமயமானகொம்புகளையும் வெள்ளிமயமான குளம்புகளையும் இளங்கன்றுகளையுமுடைய பசுக்களையும் கறப்பதற்கு வெண்கலப் பாத்திரங்களோடு தக்ஷிணையாகக்கொடுத்தான். மிகவிரிவாக அனுஷ்டிக்கப்பட்ட அந்த யாகத்தில் அவன் வேலைக்காரிகளையும் வேலைக்காரர்களையும் கோவேறுகழுதைகளையும் ஒட்டகங்களையும் அளவுக்கடங்காத கம்பளங்களையும் பலவிதமான ரத்தினங்களையும் பற்பலவிதமான மலைபோன்ற அன்னங்களையும் தக்ஷிணையாகத் தானஞ்செய்தான். அவனுடைய அந்த யாகத்தில் எவர்கள் புராணமறிந்தவர்களோ அவர்கள் காதைகளைக் கானம்பண்ணினர்கள். அந்த அங்கராஜன் யாகஞ்செய்யும் ஸமயத்தில் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற நாங்களும் திருப்தியடைந்தோம். ஸோமரஸபானத்தினல் இந்திரன் ஸந்தோஷமடைந்தான்; பிராம்மணர்கள் தக்ஷிணைகளால் திருப்தியை அடைந்தார்கள். அவனல் கொடுக்கப்பட்ட தக்ஷிணைகள் தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் கந்தர்வர்களுக்கும் அதிகப்பிரியமாயிருந்தன. ஸ்வதர்மத்தினல்அடையப்பட்டவைகளும் மங்களகரமானவைகளும் குணங்களால் மிக்கவைகளுமான யாகங்கள் யாகசீலனுன அந்தஅங்கனுக்கு ஸர்வாபீஷ்டங்களையும் விளைவித்தன. ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐசுவர்யமாகிய நான்கினுலும் உன்னைக்காட்டிலும் மேன்மையுடையவனும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிக்கபுண்ணியசாலியுமாயிருந்த அந்த அங்கராஜனே மாண்டான். ஆதலால், ஸ்ருஞ்சய! விதிப்படி யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகளைக்கொடாதவனுமான உன்புத்திரனைக்குறித்து நீ பரிதாபப்படவேண்டாம்.

---

* நர்த்தனஞ்செய்கிறவர்கள் கருத்தைப் பிரதானமாகக் கொண்டதும் அங்கிகாபிநயப்ரதானமுமான பதார்த்தாபிநயம் நர்த்தனம்.

## ஐம்பத்தேட்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக்கூறிய சிபியின்கதை.)

ஸ்ருஞ்சய! எவன் இந்தப்பூமிமுழுமையையும் ஒருதோல் போலச் சுருட்டி ஸ்வாதீனப்படுத்தினானோ அந்த உசீநரராஜகுமாரனான சிபியும் இறந்துபோனதாக நாம் கேட்டிருக்கிறோம். அந்தச்சிபி தன்தேரினுடைய ஒலியினாலே, மலைகள் தீவுகள் கடல்கள் காடுகள் இவைகளோடுகூடிய பூமண்டலத்தை எதிரொலியிடச்செய்துகொண்டு, எல்லாப் பகைவர்களையும்வென்று தலைமைபெற்று யாகஞ்செய்பவிரும்பினான். அவ்வரசனால் நிறைந்த தக்ஷிணையுள்ள பலவித யாகங்களாலே தேவர்கள் பூஜிக்கப்பட்டார்கள். அன்னியஜனங்களைத் துன்பம் செய்யாமல் அவன் ஸம்பூர்ணமான தனத்தைப் பெற்றான். அவன் முடிசூடின மன்னர்களனைவராலும் யுத்தத்தில் ஒப்பத்தக்கவனாகவிருந்தான். ஆயிரங்கோடி [1]ஸ்வர்ணநாணயங்களைக்கொடுக்கின்ற எந்தச்சிபியானவன் இந்தப்பூமியை ஜயித்துத் தடையற்றவையும் பயன்மிக்கவையுமான அஸ்வமேதங்களால் தேவர்களைப் பூஜைசெய்தானோ, எவன் கொடுத்த தக்ஷிணையானது போஷிக்கிறதோ, கங்காப்பிரவாஹத்தை மூடியதோ அந்தச்சிபி பலவிதமான யானைகள்,குதிரைகள்,மற்றமிருகங்கள்,தான்யங்கள், மான்கள், பசுக்கள், வெள்ளாடுகள், செம்மறியாடுகள் இவைகளோடுகூடப் பரிசுத்தமான பூமியைப் பிராம்மணர்களுக்கு அதீனமாகச் செய்தான். உசீனரராஜகுமாரனான அந்தச்சிபி, வர்ஷிக்கின்ற மேகத்தினிடத்தில் எவ்வளவு நீர்த்தாரைகளோ, ஆகாயத்தில் எவ்வளவு நக்ஷத்திரங்களோ, கங்கையில் எவ்வளவு மணல்களோ, மஹாமேருவில் எவ்வளவு பெருங்கற்களோ, ஸமுத்திரத்தில் எவ்வளவு ரத்நங்களோ, எவ்வளவு ஜலஜந்துக்களோ அவ்வளவு பசுக்களை யாகத்தில் தானஞ்செய்தான். பிரம்மதேவர் அந்தச்சிபிசக்ரவர்த்தியினுடைய கார்யபாரத்தை வஹிக்கச்சக்தியுள்ள வேறொரு புருஷஸ்ரேஷ்டனை இருந்தவனாகவாவது இருக்கிறவனாகவாவது இனி உண்டாகப்போகிறவனாகவாவது அறியவில்லை. அந்தச்சிபியினுடைய பலவிதமான யாகங்கள் ஸர்வாபீஷ்டங்களோடுங்கூடியவைகளும், ஸ்வர்ணமயமான யூபஸ்தம்பங்களையும் ஆஸனங்களையும் கிருஹங்களையுமுடையவைகளும்,ஸ்வர்ணமயமான மதில்களும் கோட்டைவாயில்களுமுள்ளவைகளுமாக இருந்

[1] சாந்தி பர்வம் 132-ம் பக்கம் குறிப்பிற்காண்க.

தன. பலவிதமான பக்ஷியங்களோடுகூடின சுசிருசியான அன்னபானங் களை லக்ஷக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் பிராம்மணர்கள் பிரியமான ஸல்லாபங்களைச்செய்துகொண்டே புஜித்தார்கள். அந்த அர சனுடைய யஜ்ஞசாலைகளில் பால் தயிர்மயமான பெரியமடுக்களோடு கூடின நதிகளிருந்தன; வெண்மையான அன்னபர்வதங்களுமிருந்தன. எந்த யாகத்தில், 'குடியுங்கள், ஸ்நானம் செய்யுங்கள், உண்ணுங்கள்' என்று ஜனங்களாலே சொல்லப்பட்டதோ, எந்தச்சிபியின்பொருட்டு அவன் செய்த புண்ணிய கர்மாவினாலே ஸந்தோஷமடைந்த ருத்ரர் கொடுக்கக்கொடுக்கக் குறைவுபடாதபொருள், சிரத்தை, கீர்த்தி, அவ் வாறே யதோக்தமான கர்மானுஷ்டானங்கள், பிராணிகளுக்குப் பிரியனா யிருத்தல், உத்தமமான ஸ்வர்க்கம் இப்படிப்பட்ட வரன்களைக்கொடுத் தாரோ அந்தச்சிபிசக்ரவர்த்தி இவ்விதமான இஷ்டமுள்ளவரன்களை யடைந்து காலத்தில் ஸ்வர்க்கத்தையடைந்தான். ஸ்ருஞ்சய! உன்னைக் காட்டிலும் தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் இவை நான்கி னாலும் மேன்மைபெற்றவனும் உன்குமாரனைக்காட்டிலும் மிக்க புண் ணியசாலியுமான அந்தச் சிபிசக்ரவர்த்தியே மாண்டான். ஸ்ருஞ்சய! ஆதலால், விதிப்படி யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனு மான உன்புத்திரனைப்பற்றி நீ பரிதாபப்படவேண்டாம்.

---

## ஐம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி)



(நாரதர் ஸ்ரீராமருடைய மகிமையை ஸ்ருஞ்சயனுக்குக் கூறியது.)

ஓ! ஸ்ருஞ்சய! பிதா ஔரஸபுத்திரனைப்பார்த்து ஆனந்தப் படுவதுபோலப் பிரஜைகள் எவரை அடுத்து மகிழ்ந்தனவோ அந்தத்தசரத புத்திரரான ஸ்ரீராமரும் மாண்டார் என்று நாம்கேட்கிறோம். அளவற்ற தேஜஸுள்ள ராமரிடத்தில் கணக்கிடமுடியாத குணங்களிருந்தன. லக்ஷ்மணருக்கு ஜ்யேஷ்டபிராதாவான அந்தஸ்ரீராமர் பிதாவினுடைய ஆஜ்ஞையினால் பதினான்குவருஷகாலம் தவறாத விரதமுள்ளவராகி ஸீதையுடன் கானகத்தில் வாஸம்செய்தார். புருஷஸ்ரேஷ்டரான அந்த ராமர் ரிஷிகளை ரக்ஷிப்பதற்காக ஜனஸ்தானத்தில் பதினாலாயிரம் அரக் கர்களை வதம்செய்தார். அந்த ஜனஸ்தானத்திலேயே வஸித்த அந்த ஸ்ரீராமருடைய பார்யையான வைதேஹியை ராவணனென்கிற ராக்ஷ ஸன் இளையஸஹோதரரோடுகூடின அந்த ராமரைமயக்கி அபகரித்தான்.

•ஸ்ரீராமபிரான் தம்மனைவி ராக்ஷஸனால் கவரப்பட்டாளென்பதை ஜடாயுவினிடமிருந்து கேட்டு [1] மனவருத்தமுற்றுச் சோகத்தால் மிகத் தபித்து வானரர்களுக்கெல்லாம் அரசனான ஸுக்ரீவனையடைந்தார். அவர் அந்த ஸுக்ரீவனோடு சேர்ந்து மிக்கவலிமையுள்ள வானரர்களோடு கடற்கரையை வந்தடைந்தார். மஹாபாகுபலமுள்ள அந்த ராமர் மஹாஸமுத்திரத்தில் அணையைக்கட்டி அந்தலங்கையில் ஸுஹ்ருத்துக்களுடைய கூட்டங்களோடும் பந்துக்களோடும்கூடிய பௌலஸ்தியர்களையும் மாயாவியும் மஹாகோரரூபியும் லோககண்டகனும் தேவாஸுரர்களாலும் கொல்லத்தகாதவனும் தேவர்களுக்கும் பிராம்மணர்களுக்கும் கண்டகனும் புலஸ்திய குலத்தில் உதித்தவனுமான அந்த ராவணனையும் யுத்தத்தில் பரிவாரங்களோடு வதஞ்செய்தார். அந்தராகவர் அந்தயுத்தத்தில் சத்துருவைக்கொன்று பார்யையுடன் சேர்ந்து தர்மாத்மாவான விபீஷணனை லங்கேஸ்வரனாகச்செய்தார். பிறகு, சூரரான ஸ்ரீராமர் பார்யையோடும் வானரசேனையோடுங்கூடி விளங்குகின்ற புஷ்பகவிமானத்தினால் அயோத்தியை வந்தடைந்தார். அரசனே! மிகுந்த கீர்த்தியையுடைய ஸ்ரீராகவர் அந்த அயோத்தியில் பிரவேசித்துத் தாய்மார்களுக்கும் சினேகிதர்களுக்கும் மந்திரிகளுக்கும் புரோஹிதர்களுக்கும் ரித்விக்குக்களுக்கும் எப்பொழுதும் பணிவிடைசெய்துகொண்டு மந்திரிகளால் அபிஷேகஞ்செய்யப்பெற்று வானரராஜாவான ஸுக்ரீவனையும் அங்கதனையும் ஹனுமானையும் அனுப்பிவிட்டு, ஸஹோதரர்களும் வீரர்களுமானபரதன், சத்ருக்னன், லக்ஷ்மணன் இவர்களை அதிப்ரீதியோடு மகிழ்விப்பவராகவும் வைதேஹியினால் பூஜிக்கப்பட்டவராகவும் நான்குஸமுத்திரங்களாலும் சூழப்பட்ட பூமண்டலத்தைப் பதினோராயிரம்வருஷம் ஆண்டனர். மிகுதியான தக்ஷிணைகளுள்ள அநேக அஸ்வமேதயாகங்களாலே தேவர்களைப் பூஜித்தார். ஸர்வப்ராணிகளிடத்திலும் தயைபொருந்தினவரான எந்த ராகவர் பிராம்மணர்களுடைய அனுக்ரஹத்தினாலே ஸர்வாபீஷ்டங்களையுமடைந்து, சாஸ்திரப்படி ராஜ்யத்தையும் பெற்று எல்லாத்தீவுகளையும் ஆக்ரமித்துக்கொண்டு பிரஜைகளை நீதிதவறாமல் ஆண்டனரோ பிரபுவான அந்த ராகவர், ஹவிர்ப்பாகத்தினாலே இந்திரனுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணிக்கொண்டு தடையற்று ஸர்வோத்தமமான நூறு அஸ்வமேதங்களைச் செய்தார். ராஜாவான அந்த ஸ்ரீராகவர் அநேகம் குணங்களுள்ள பற்பலவிதமான மற்றயாகங்களாலும் தேவர்களைப் பூஜித்தார். அவர் பிராணிகளினுடைய பசிதாகங்களையும் எல்லாப்பிணிகளையும் போக்கினார். எப்பொழுதும் நற்

---

[1] ஒருசொல் விடப்பட்டது

குணங்களோடுகூடினவரும் தம்தேஜஸினால் ஜ்வலிக்கின்றவரும் தசரத குமாரருமான ஸ்ரீராமர் எல்லாப்ராணிகளையுங்காட்டிலும் மேன்மையுடன் விளங்கினார். ராமர் ராஜ்யத்தை ஆண்டுவருங்காலத்தில், ரிஷிகளுக்கும் தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் ஸர்வவிதத்திலும் பூமியில் ஸஹவாஸம் ஏற்பட்டது. அப்பொழுது பிராணிகளுக்குப் பலம்குன்றவில்லை. துன்பமும் நேரவில்லை. அவர் ராஜ்யத்தை ஆண்டுவருங்காலத்தில் பிராணாபானவாயுக்கள் ஸமமாயிருந்தன. தேஜஸுகள் நான்குபக்கங்களிலும் பிரகாசித்தன. அப்பொழுது அனர்த்தங்கள் உண்டாகவேயில்லை. எல்லாப்ரஜைகளும் நீண்ட ஆயுளுள்ளவையாயின. அக்காலத்தில் யௌவனமுள்ளவன் இறப்பதில்லை. நான்கு வேதங்களாலும் மிகுந்த ப்ரீதியடைந்தவர்களான தேவர்கள் பலவிதமான ஹவ்யகவ்யங்களையும் தடாகம் பூந்தோட்டமுதலானவைகளையும் யாகத்தையும் அடைந்தார்கள். தேசங்கள் ஈக்களும் மசகங்களுமில்லாதவைகளாகவும் துஷ்டமிருகங்களும் ஸர்ப்பங்களும் அற்றவைகளாகவும் இருந்தன. பிராணிகளுக்கு ஜலத்தில் மரணம் ஸம்பவிக்கவில்லை. அகாலத்தில் நெருப்பு எரிக்கவில்லை. அக்காலத்தில் அதர்மத்தில் ருசியுள்ளவர்களாவது லுப்தர்களாவது மூர்க்கர்களாவது இருந்ததில்லை. அத்தருணத்தில் எல்லாவர்ணத்தார்களும் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டவையும் இஷ்டமானவையும் நன்கு அறியப்பட்டவையுமான கர்மாக்களையுடையவர்களாயிருந்தார்கள். ஈஸ்வரரான ராகவர், ஜனஸ்தானத்தில் ராக்ஷஸர்களால் நாசம்பண்ணப்பட்ட [1] ஸ்வதையையும் பூஜையையும் ராக்ஷஸர்களைக்கொன்று பிதிர்க்களுக்கும் தேவதைகளுக்கும் அளித்தார். புருஷர்கள் ஆயிரம் புத்திரர்களுள்ளவர்களாகவும், ஆயிரம் வருஷம் ஜீவிக்கின்றவர்களாகவுமிருந்தார்கள். அக்காலத்தில் வயதினால்முதிர்ந்தவர்கள் சிறுவர்களுக்குச் சிராத்தங்களைச்செய்யவில்லை. கறுத்தவரும் யௌவனமுடையவரும் சிவந்தகண்களையுடையவரும் மதங்கொண்ட யானையினுடைய விக்ரமம்போன்ற விக்ரமத்தையுடையவரும் முழங்கால் வரையில் நீண்டகைகளையுடையவரும் அழகிய புஜங்களையுடையவரும் ஸிம்மத்தினுடைய தோள்போன்ற தோளையுடையவரும் மஹாபலமுடையவருமான ஸ்ரீராமர் எல்லாப்ராணிகளினுடைய மனத்திற்கும் இனியவராயிருந்துகொண்டு பதினோராயிரம் வருஷம் ராஜ்யபரிபாலனஞ் செய்தார். பிரஜைகளுக்கு, 'ராமர், ராமர், ராமர்' என்றே கதை ஏற்பட்டது. ராமர் ராஜ்யபரிபாலனஞ் செய்யுங்காலத்தில் உலகமே ராமமயமாயிற்று. ஸ்ரீராமர் தம் விருப்பப்படி எட்டுவிதமாக ராஜவம்சத்தைப் பூமியில்

---

[1] பித்ருதேவதைகளை உத்தேசித்துக் கொடுக்கப்படும் ஹவிஸ்

பிரதிஷ்டைசெய்து நான்குவிதமான ப்ரஜைகளையும் ஸ்வர்க்கலோகத்தையடையும்படிசெய்துவிட்டு வைகுண்டம் சென்றார். தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் இந்நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிகச்சிறந்தவரும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிகவும் புண்ணியசாலியுமான அந்த ராகவரே மாண்டார். ஸ்ருஞ்சய! அப்படியானால், யாகம்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்னுடைய புத்திரனைக்குறித்து நீ வியஸனப்படவேண்டாம்.

---

## அறுபதாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர், பகீரதனுடைய சரித்திரத்தை ஸ்ருஞ்சயனுக்குச்சொல்லியது.)

ஸ்ருஞ்சய! எவனால் முன்னோர்களை ரக்ஷிப்பதின்பொருட்டுக் கங்கையானது பூமியில் இறங்கும்படி செய்விக்கப்பட்டதோ அந்தப் பகீரத மஹாராஜனும் மாண்டானென்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். மஹாத்மாவான எந்தப்பகீரதராஜனுடைய பாகுபலத்தினாலே இந்திரன் ப்ரீதியடைந்தானோ அந்தப்பகீரதன் ஸம்பூர்ணமான உத்தம தக்ஷிணைகளுள்ளவைகளும் ஹவிஸ், மந்திரம், அன்னம் இவைகளோடுகூடினவைகளுமான நூறு அஸ்வமேதயாகங்களைச்செய்து தேவர்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணினான். அவன், 'பாகீரதி' என்று பெயர்பெற்ற கங்கையை ஸ்வர்ணமயமான [1] சயனங்களால் நிறைத்தான். அவன் அரசர்களையும் ராஜகுமாரர்களையும் (அதிக்கிரமித்து) ஸ்வர்ணாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட லக்ஷம் கன்னிகைகளைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அந்த எல்லாக்கன்னிகைகளும் ரதத்தின் மீதிருந்தார்கள். எல்லாரதங்களும் நான்கு குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன. ஒவ்வொரு ரதத்தினருகிலும் நூறுநூறு யானைகள் இருந்தன. எல்லா யானைகளும் ஸ்வர்ணமாலைகளை அணிந்திருந்தன. ஒவ்வொரு யானைக்குப் பின்புறத்திலும் ஆயிரம் ஆயிரம் குதிரைகள் தொடர்ந்து சென்றன. ஒவ்வொரு குதிரையையும் நூறுநூறு பசுக்கள் பின்தொடர்ந்தன. பசுக்களுக்குப் பின்புறத்தில் செம்மறியாடுகள் வெள்ளாடுகள் இவைகளுடைய கூட்டங்கள் பின்தொடர்ந்தன. பகீரதன் ஸமீபத்திலிருந்து மிகுதியான தக்ஷிணைகளைக்கொடுத்துக்கொண்டிருந்தமையால் ஜனங்களுடைய கூட்டத்தினால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கிற அந்தப்

[1] யாகமேடைகள்; அல்லது செங்கற்களால் ஏற்படுத்தப்பட்ட படிக்கட்டுக்கள்.

பாகீரதியென்கிற கங்கையானவள் மிகப்பீடிக்கப்பட்டு அந்தப்பகீரத னுடைய மடியில் வந்து உட்கார்ந்தாள். அவள் முற்காலத்தில் ஸ்வர்க்க லோகத்தில் பெருகியோடிக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவ் வரசனுக்குப் பெண்ணாகவிருக்கும் நிலைமையைப் பெற்றதுடன் (முன்னோர்களை நற்கதியடையச்செய்தமையால்) புத்திரனாயிருக்கும் நிலைமையையும் பெற்றாள். ஸூர்யனுடைய தேஜஸ்போன்ற தேஜஸை யுடையவர்களான கந்தர்வர்கள் ஸந்தோஷத்தை யடைந்து, பிதிர்க் களும் தேவதைகளும் மனிதர்களும் கேட்டுக்கொண்டிருக்க, மனத் திற்கு இன்பந்தரும் சொற்களினால் அப்படிப்பட்ட காதையைக் கானஞ் செய்தார்கள். இக்ஷ்வாகுகுலத்தில் தோன்றினவனும் அதிகமான தக்ஷிணைகளைக்கொடுத்து யாகஞ்செய்தவனும் ஈஸ்வரனுமான பகீரதனை ஸமுத்ரகாமினியான கங்காதேவியானவள் பிதாவாக வரித்தாள். அவ னுடைய யாகமானது இந்திரனோடுகூடின கணதேவதைகளாலும் தேவர் களாலும் நன்றாக அலங்கரிக்கப்பட்டும் அவர்களால் நன்கு அங்கிகரிக் கப்பட்டும் இடையூறில்லாமலும் நிர்த்தோஷமாகவும் நிறைவேறியது. எந்தஎந்தப் பிராம்மணன் எந்தஎந்த இடத்தில் பிரியமான வஸ்துவைத் தனக்கு விரும்புகிறானோ அவனவனுக்கு அந்தஅந்தவிடத்தில் அந்த அந்தவஸ்துவை அவ்வப்பொழுதே யோகப்ரபாவமுள்ள பகீரதன் அன் போடு அளித்தான். எந்தப்பிராம்மணனுக்கு எந்தத்தனம் விருப்பமோ அந்தத்தனமானது அந்தப்பிராம்மணனுக்குக் கொடுக்கத்தகாததாக வில்லை. அந்தப்பகீரதராஜனும் பிராம்மணர்களுடைய அனுக்கிரஹத்தி னால் பிரம்மலோகமடைந்தான். [1] ஸூர்யகிரணங்களால் ஜீவிப்பவர் களான ரிஷிகள், உதயமானவர்களும் யாகயோகங்களை உபாயமாகக் கொண்டவர்களுமான ஸூர்யனையும் ஸூர்யாந்தர்யாமியான தேவதை யையும் எதற்காக உபாஸிக்க விரும்புகின்றனரோ அதற்காகவே மூவுல கங்களிலும் விளங்குபவனும் தலைவனுமான பகீரதனை உபாஸிக்கவிரு ம்புகிறார்கள். ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் இந்த நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மேன்மைபெற்றவனும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிகுந்த புண்ணியசாலியுமான அந்தப்பகீரத மஹாராஜனே மாண்டான். ஸ்ருஞ்சய! ஆதலால், யாகம் செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி நீ வியஸனமடை யாதே.

---

[1] 'எந்த மரங்கள் ஸ்வர்க்கத்தை நோக்கிப் பகீரதனைத் தொடர்ந்து சென்றனவோ அவைகள் இன்னமும் ஈஸ்வரனான அவ்வரசனை அனுஸரித்து வருவதற்கு விருப்பமுள்ளவைகளும் வணங்கினவைகளுமாக நிற்கின்றன' என் பது வேறொரு பாடத்தின் பொருள்.

## அறுபத்தோராவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக் கூறிய திலீபன் கதை.)

ஓ! ராஜஶ்ரேஷ்டனான ஸ்ருஞ்சய! திலீபனும் மாண்டானென்று நாம் கேட்டிருக்கிறோம். அவனுடைய நூற்றுக்கணக்கான யாகங்களில், கிரியைகளில் ஞானமுடையவர்களும் தனமுள்ளவர்களும் விதிப்படி யாகம் செய்தவர்களும் புத்ரபௌத்ரர்களுள்ளவர்களுமான பிராம்மணர்கள் லக்ஷக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் இருந்தார்கள். பண்டிதர்கள் இஷ்டப்படி நடக்கின்றவர்களும் பரிசுத்தமான சந்தனங்களையணிந்தவர்களும் நல்ல அன்னங்களைப் புஜிக்கின்றவர்களும் பொன்மாலைகளுள்ளவர்களுமாயிருந்துகொண்டு அவனுடைய பலவித ஸத்கார்யங்களையும் புகழ்ந்தார்கள். அந்த அரசன் யாகஞ்செய்துகொண்டு ஸவிஸ்தாரமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகின்ற யாகத்தில் தனங்களால் நிறைந்த இந்தப்பூமியைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். ஸவிஸ்தாரமான அந்த யாகத்தில் அரசர்கள் காணிக்கைகளைக் கொணர்ந்து கொடுத்தார்கள். திலீபனுடைய யாகங்களில் ("ஹிரண்மய:" என்று தொடங்கும் வேதவாக்கியத்தினால்) யாகபாத்ரங்களெல்லாம் தங்கத்தாலேயே செய்யப்படவேண்டுமென்று சொல்லப்பட்ட விதிமார்க்கமானது (முதன்முதலில்) ஆரம்பிக்கப்பட்டது. இந்திராதிதேவர்கள் அவனைத் தர்மத்தில் நிலைநாட்டுகின்றவர்கள்போல அடைந்தார்கள். அவனுடைய யாகத்தில் மலைகளுக்கொப்பான ஆயிரம் யானைகள் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தன. ஸதஸ்முழுவதும் ஸ்வர்ணமயமாயும் மிக்க ஒளிபொருந்தியதாயுமிருந்தது. ரஸங்கள் வாய்க்கால்களாகப் பெருகின. பக்ஷ்யங்கள் மலைகளாகக் குவிந்திருந்தன. வேந்தே! யூபங்கள் ஆயிரம் பாகம் நீட்டளவுள்ளவைகளாகவும் தங்கமயமாகவுமிருந்தன. அவனுடைய யூபத்திலுள்ள சஷாலம் ப்ரசஷாலம் என்கிற இரண்டு வளையங்களும் தங்கமயமாகவிருந்தன. அந்தயாகத்தில் பதின்மூவாயிரம் அப்ஸரஸ்திரீகள்நர்த்தனஞ்செய்தார்கள். அந்தயாகத்தில் விஶ்வாவஸு என்கிற கந்தர்வன் பிரீதியினால் தானே வீணையை வாசித்தான். 'எல்லா ப்ராணிகளும், 'அவன் என்பொருட்டு வாசிக்கிறான்' என்று எண்ணின. சர்க்கரைப்பொங்கல்முதலான உணவுகளால் மதமடைந்தவர்கள் [1] மார்க்கங்களில் படுத்திருந்தார்கள். திலீபமஹாராஜன் ஜலத்தில் போர்புரியும்

[1] வேறுபாடம்.

காலத்தில் இரண்டு சக்ரங்களும் ஜலத்தில் முழுகாமலிருந்தன. இது பிறரிடத்தில் நேராதது. இந்த விஷயத்தை ஆச்சரியமென்றே யான் நினைக்கிறேன். உறுதியான வில்லைக் கையிலேந்தியவனும் ஸத்யவாதியும் அஸாத்யமான தக்ஷிணைகளைக் கொடுக்கின்றவனுமான திலீபமஹாராஜனை எந்தமனிதர்கள் பார்த்தார்களோ அவர்களும் ஸ்வர்க்கத்தை ஜயித்தார்கள். அவனுடைய அரண்மனையில் வேதாத்யயன கோஷமும், நாணொலியும், 'குடியுங்கள், உண்ணுங்கள், பக்ஷியுங்கள்' என்பவைகளுமான ஐந்துவிதமான சப்தங்களும் குன்றாமலிருந்தன. ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஶ்வர்யம் இந்த நான்கினாலும் உன்னைக் காட்டிலும் மிக்கமேன்மைபெற்றவனும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிகுந்த புண்யசாலியுமான அந்தத்திலீபனே மாண்டான். ஸ்ருஞ்சய! யாகம்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்னுடைய புத்திரனைப்பற்றி நீ பரிதாபமடையவேண்டாம்.

---

## அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் மாந்தாதாவினுடைய சரித்திரத்தை ஸ்ருஞ்சயனுக்குக் கூறியது.)

ஸ்ருஞ்சய! யுவனாஶ்வகுமாரனான மாந்தாதாவும் உயிரிழந்தானென்று நாம் கேட்டிருக்கிறோம். அந்தமாந்தாதாவை அஶ்வினீதேவதைகளிருவரும் பிதாவினுடையகர்ப்பத்தினின்று விலாப்புறத்தைப்பிளந்து வெளியில்எடுத்தார்கள். ராஜாவான யுவனாஶ்வன் வேட்டையாடிக் களைப்படைந்த குதிரையுள்ளவனாகவும் தாகம்கொண்டவனாகவும் புகையைக்கண்டுசென்று ஒருயாகசாலையை அடைந்து தயிர்த்துளிகள்கலந்த நெய்யைப் பானஞ்செய்தான். அந்தப்பிருஷதாஜ்யமானது யுவநாஶ்வனுடையவயிற்றில் ஸூர்யன்போன்ற தேஜஸ்ஸுடைய புத்திரனாகப் பரிணமித்ததைக்கண்டு, அந்தக்கர்ப்பத்தை வைத்தியர்களுள்சிறந்தவர்களானஅஶ்வினீதேவர்களிருவர்களும் வெளிப்படுத்தினார்கள். பிதாவினுடையமடியில் தேவதையைப்போன்றஒளியுடன் ஜ்வலித்துக்கொண்டு படுத்திருக்கும் அக்குழந்தையைக்கண்டு தேவர்கள் இந்தக்குழந்தை யாரிடம் ஸ்தன்யபானம் செய்யப்போகிறதென்று பரஸ்பரம் சொல்லிக்கொண்டிருக்கையில், இந்திரன், 'தேவர்களே! இக்குழந்தை என்னையே அடைந்து பானம்செய்யட்டும்' என்று சொன்னான். பிறகு, இந்திரனுடைய விரல்களிலிருந்து பாலும் அமிர்தமும் பெருக ஆரம்பித்தன. இந்

திரன், கருணையினால், 'என்னை அடைந்து பானஞ்செய்யப்போகிறான்' என்று அன்போடு கூறினதனால், 'மாந்தாதா' என்றே அக்குழந்தைக்கு அற்புதமான பெயர் ஏற்படுத்தப்பட்டது பிறகு, மஹாத்மாவான அந்த யுவனாஸ்வகுமாரனுடைய வாயில் இந்திரனுடைய கையானது பால் அமிர்தம் இவைகளினுடைய தாரையைப் பெருக்கியது. அந்தக் குழந்தை இந்திரனுடையகையைப் பானம்செய்து ஒரேநாளில் விருத்தியடைந்தது. வீர்யமுள்ள அக்குழந்தை பன்னிரண்டு நாளில் பன்னிரண்டு பிராயமுள்ளவனுக்குச் சமனாகஆயிற்று. தர்மாத்மாவும் தைர்யமுள்ளவனும் வீர்யமுடையவனும் ஸத்யஸந்தனும் இந்திரியங்களை ஜயித்தவனுமான அந்தமாந்தாதா இந்தப்பூமண்டல முழுமையும் ஒரே நாளில் ஜயித்தான். மனுவம்சத்தில் தோன்றின அவன் ஜனமேஜயனையும் ஸுதன்வாவையும் கயனையும் பூருவையும் பிருஹத்ரதனையும் அஸிதனையும் ந்ருகனையும் ஜயித்தான். ஸூர்யன் எவ்விடமிருந்து தோன்றுகிறானோ, எவ்விடத்தில் அஸ்தமிக்கிறானோ அவற்றுக்குட்பட்டவிடமெல்லாம் யுவனாஸ்வகுமாரனான மாந்தாதாவினுடையக்ஷேத்ரமென்று கூறப்படுகிறது. மன்னவ! அந்தஅரசன் நூறுஅஸ்வமேதங்களாலும் நூறு ராஜஸூயயாகங்களாலும் தேவர்களைப்பூஜித்து, பத்மராகரத்னம் விளையக்கூடியதும் பொன்னுக்கு விளைவிடமாயுள்ளதும் [1] மேன்மைதங்கிய ஜனங்களுக்கு இருப்பிடமானதும் நூறுயோசனை தூரம் நீண்டிருக்கின்றதுமான மத்ஸ்யதேசத்தைப் பிராமணர்களுக்குத் தானம்செய்தான். மிக்கருசியுள்ள பர்வதாகாரமான பலவிதபக்ஷ்ய போஜ்யங்களையும் அன்னங்களையும் பிராம்மணர்களுக்கு அர்ப்பணஞ்செய்தான். பிராமணர்கள் புஜித்துமிருந்தபதார்த்தங்களைப்புஜிப்பதற்கு அவ்விடத்தில் போதுமானமனிதர்களில்லை. பக்ஷ்யங்கள், சித்ரான்னங்கள், பானார்ஹமான வஸ்துக்கள் இவைகளின் குவியல்களும் அன்ன பர்வதங்களும் விளங்கின. நெய்மடுக்களுள்ளவைகளும் பருப்பாகிற சேற்றையுடையவைகளும் தயிராகிற நுரையுள்ளவைகளும் பாயஸங்களாகிற ஜலமுள்ளவைகளும் தேன் பால் இவைகளோடு பெருகுகின்றவைகளும் மங்களகரமுமானநதிகள் பர்வதங்களில் மோதின. தேவாஸுரர்களும் மனுஷ்யர்களும் யக்ஷர்களும் கந்தர்வர்களும் உரகர்களும் பக்ஷிகளும் வேதவேதாங்கங்களில் கரைகண்டவர்களான பிராம்மணர்களும் அங்குவந்திருந்தார்கள். அந்தயாகத்தில் கற்றறியாதவர்களான பிராம்மணர்களாவது ரிஷிகளாவதுஇல்லை. அந்தமாந்தாதா எல்லாஇடங்களிலும் தனங்களால் நிரம்பினதும் ஸமுத்திரம்சூழ்ந்ததுமான அவ்

[1] 'ஒருயோஜனை உயரமுள்ளதும்' என்று பொருள்கொள்ளுதல் நேர்.

விதப்பூமியைப் பிராம்மணர்களுக்கு அர்ப்பணம்செய்துவிட்டுத் தன் அரண்மனையை அடைந்தான். அந்த அரசனும் பலவிததக்ஷிணைகளுள்ள பலவிதயாகங்களாலே தேவர்களை ஆராதித்துத் தன்கீர்த்தியினால் திக்குக்களை வியாபித்துக்கொண்டு புண்ணியம் செய்தவர்களுடைய உலகங்களை அடைந்தான். ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஶ்வர்யம் இந்நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிக்கமேன்மைபெற்றவனும் உன் புத்திரனைக்காட்டிலும் மிகுந்தபுண்யசாலியுமான அந்தமாந்தாதாவே மாண்டான். ஸ்ருஞ்சய! விதிப்படி யாகம்செய்யாதவனும் தக்ஷிணை கொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி நீ பரிதாபப்படவேண்டாம்.

---

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் யயாதியினுடைய சரித்திரத்தை ஸ்ருஞ்சயனுக்குக் கூறியது.)

ஸ்ருஞ்சய! நகுஷனுடையகுமாரனான யயாதிமஹாராஜனும் மாண்டானென்று நாம் கேட்டிருக்கிறோம். எவன் ஸமுத்திரங்களால் சூழப்பட்டதும் பர்வதங்களோடுகூடியதுமான இந்தப்பூமியை ஜயித்துச் [1] சம்யையை எறிவதனால் ஸம்பூர்ண தக்ஷிணைகளுள்ள வேதிகளை ஏற்படுத்திப் புண்ணியமான யஜ்ஞங்களால் தேவர்களை ஆராதித்துப் பிரதக்ஷிணமாகச் சுற்றிவந்தானோ அவன் நூறுராஜஸூயயாகங்களாலும் நூறு அஶ்வமேதங்களாலும் ஆயிரம் பௌண்டரீகயாகங்களாலும் அவ்வாறே நூறு வாஜபேயங்களாலும் ஆயிரம் அதிராத்திரங்களாலும் இஷ்டப்படி அனுஷ்டிக்கப்பட்ட சாதுர்மாஸ்யங்களாலும் அக்நிஷ்டோமங்களாலும் ஸம்பூர்ணதக்ஷிணைகளுள்ள பலவித யாகங்களாலும் தேவர்களைப் பூஜித்துப் பூமண்டலத்தில் மிலேச்சர்களிடமிருந்த தனங்கள் முழுமையையும் அவர்களிடமிருந்து கவர்ந்து பிராம்மணர்களுக்கு அதீனமாகச்செய்தான். நதிகளுள்மிக்கபுண்யத்தையுடைய ஸரஸ்வதி நதியும் அவ்வாறே ஸமுத்திரங்களும் மலைகளும் நதிகளும் யாகஞ் செய்கின்றவனும் மிக்கபுண்ணியசாலியுமான நகுஷகுமாரனான யயாதி ராஜன்பொருட்டு நெய்யையும் பாலையும் கறந்தன. அணிவகுக்கப்பட்ட

---

[1] யஜ்ஞங்களில், முப்பத்திரண்டு அங்குலம் அளவுள்ளதாகக் கருங்காலிக் கட்டையினால் செய்யப்பட்டு ஒருபக்கம் சிறுத்தும் மற்றொருபக்கம் பருத்துமிருக்கிற ஒருவிதமான தடி. சம்யையை எறிந்து அதுபோய்விழுந்தூரம் அளவுள்ளவையாக வேதிகளைச்செய்து என்றபடி.

தேவாஸுரயுத்தத்தில் தேவர்களுக்கு உதவியைச்செய்து, பிறகு, நானு விதயாகங்களால் தேவர்களைப் பூஜித்து இந்தப்பூமிமுழுமையையும் நாலாகப்பங்கிட்டு நான்குபேர்களுக்குப் பிரித்துக் கொடுத்தான். தேவதைக்குலப்பான அந்த அரசன் சுக்கிரனுடைய குமாரியான தேவயானியிடத்திலும் (விருஷபர்வாவென்கிற அஸுரராஜனுடைய குமாரியான) சர்மிஷ்டாதேவியினிடத்திலும் தர்மமாக உத்தமமான ஸந்ததியை உண்டுபண்ணி எல்லாத்தேவாரணியங்களிலும் இரண்டாவது இந்திரன் போலத் தன்னிஷ்டப்படி ஸஞ்சாரஞ்செய்துவந்தான். ஸர்வவேதங்களையுமறிந்தவனான அந்தயயாதிமஹாராஜன் எப்பொழுது விஷயசுகங்களில் சாந்தியை அடையவில்லையோ அப்பொழுது, 'இந்தப்பூமியில் நெற்களும் யவதான்யங்களும் ஸ்வர்ணமும் பசுக்களும் ஸ்திரீகளும் எவ்வளவுண்டோ அவைகளெல்லாம் ஒருவனுக்குக்கூடப் போதா என்றுஎண்ணிச் சாந்தியையடையவேண்டும்' என்னும் பொருளுள்ள இந்தக் காதையைச்சொல்லிவிட்டு மனைவியுடன் கானகம் சென்றான். இவ்வாறாக ஈசுவரனான யயாதி காமஸங்கங்களைவிட்டுத் தைர்யத்தையடைந்து, ராஜ்யத்தில் பூருவைநிலைநிறுத்திக் கானகம் சென்றான். ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வைராக்யம் ஐஶ்வர்யம் ஆகிய நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிகச்சிறந்தவனும் உன்புத்திரனைக்காட்டிலும் அதிக புண்ணியசாலியுமான அந்த யயாதியே உயிரிழந்தான். ஸ்ருஞ்சய! விதிப்படி யாகம் செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உனனுடையபுத்திரனைப்பற்றி நீ வருத்தப்படவேண்டாம்.

---

## அறுபத்துநான்காவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொ. ௰௬௪)

(நாரதர் அம்பரீஷமஹாராஜனுடைய விபவத்தை ஸ்ருஞ்சயனுக்குச் சொல்லியது.)

ஸ்ருஞ்சய! நாபாகனுடைய குமாரனான அம்பரீஷனும் உயிரையிழந்தானென்று நாம் கேட்டிருக்கிறோம். எவன் தான்ஒருவனாக விருந்துகொண்டே பத்துலக்ஷம் அரசர்களோடு போர்புரிந்தானோ அந்த அம்பரீஷனை அஸ்திரங்களால் யுத்தஞ்செய்யும்விதத்தை யறிந்தவர்களும் கோரர்களுமான பகைவர்கள் அமங்களகரமான வார்த்தைகளை உச்சரித்துக்கொண்டு யுத்தத்தில் ஜயிக்கக்கருதி நான்குபக்கங்களிலும் சூழ்ந்தார்கள். அந்தமஹாராஜன் தேகபலத்தினாலும் கைச்சுறுசுறுப்

பினாலும் சிக்ஷாபலத்தினாலும் அஸ்திரபலத்தினாலும் அந்தச்சத்து ருக்களினுடைய குடைகள், ஆயுதங்கள், கொடிமரங்கள், ரதங்கள், ஈட்டிகள் ஆகிய இவைகளையறுத்துத் துயரமற்றவனானன். அந்தப்பகைவர்கள் யுத்தஸன்னகத்தையிழந்து உயிரைவிரும்பினவர்களாக, 'நாங்கள் உம்மைச்சேர்ந்த மனிதர்கள்' என்று சொல்லிக்கொண்டு அந்த மஹாராஜனை ப்ரார்த்தித்துச் சரண்யனான அந்த அரசனைச் சரணமடைந்தார்கள். குற்றமற்ற அந்த அம்பரீஷனே அவர்களைத் தன்வசப்படுத்திக்கொண்டு இந்தப் பூமியை ஜயித்து மஹேந்திரன்போல மனத்திற்கு இஷ்டமான நூறுயாகங்களாலே தேவர்களை ஆராதித்தான். அந்த யாகத்தில் எப்பொழுதும் மற்றஜனங்களும் எல்லாவற்றாலும் நிறைந்த அன்னத்தைப் புஜித்தார்கள். பிராம்மணோத்தமர்கள் நன்றாகப் பூஜிக்கப்பட்டவர்களும் நன்றாகத்திருப்தியடைந்தவர்களுமானார்கள். அந்தயாகத்தில் பிராம்மணர்கள், மோதகங்களையும் பூரிகளையும் அப்பங்களையும் சுவைமிகுந்த முறுக்குகளையும் தேன்குழல்களையும் மாக்கலந்த தயிர்ப்பச்சடிகளையும் பெருந்திராக்ஷைப்பழத்தோடு சேர்க்கப்பட்ட பக்ஷணங்களையும் நன்றாகப் பக்குவஞ்செய்யப்பட்ட அன்னங்களையும் பருப்புக்களையும் மத்யங்களையும் பணியாரங்களையும் மாதுளைரஸ திராக்ஷாரஸங்களால் சேர்க்கப்பட்ட பானகங்களையும் நன்றாக (ஸம்பாரம்) சேர்க்கப்பட்டவைகளும் மிருதுவானவைகளும் வாஸனையோடுகூடியவைகளுமான ருசியுள்ள அன்னங்களையும் நெய், தேன், பால், தீர்த்தம், ருசியுள்ள தயிர், பழம், மிக்க ருசியுள்ள கிழங்கு இவைகளையும் புஜித்தார்கள். குடிக்கிறவர்கள் மயக்கத்தையுண்டுபண்ணக்கூடியவைகளான சாராயமுதலானவைகளைப் பாவத்துக்குக் காரணமாயிருப்பவைகளென்று அறிந்தும் தங்களுக்கு ஸுககரமென்று எண்ணிப் பாட்டுக்களோடும் வாத்தியங்களோடும் இஷ்டப்படி குடித்தார்கள். அவ்விடத்தில், குடிவெறிகொண்டசிலர் காதைகளைக் கானஞ்செய்தார்கள்; களித்தவர்களாகிப் படிக்கவும் படித்தார்கள். நாபாகனை ஸ்தோத்திரம்செய்துகொண்டு ஆயிரக்கணக்காகக் கூத்தும் ஆடினார்கள். அந்தயாகங்களில் அம்பரீஷன் (ஒவ்வொருவரும்) பத்துலக்ஷம்யாகம்செய்த பத்துலக்ஷம் அரசர்களைத் தக்ஷிணையாகக்கொடுத்தான். யாகம்செய்கின்ற அம்பரீஷ மஹாராஜன் ஸஹிஸ்தாரமானயாகத்தில் பொன்மயமான கவசத்தையணிந்தவர்களும் வெண்குடைகளும் சாமரங்களுமுள்ளவர்களும் தங்கத்தேரில் ஏறினவர்களும் பின்தொடர்ந்துவருகின்ற பரிவாரங்களையுடையவர்களுமான எல்லா அரசர்களையும் தக்ஷிணையாகக்கொடுத்தான். அந்த அம்பரீஷன் ஸைன்யங்களையும் பொக்கசங்களுடைய கூட்டங்களையு

முடைய முடிசூடிய மன்னர்களையும் அநேகராஜகுமாரர்களையும் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். மஹரிஷிகள் அம்பரீஷன்விஷயத்தில் ப்ரீதியுள்ளவர்களாகி, அளவற்றதக்ஷிணைகளோடு அவ்வரசன்செய்கிற யாகத்தை, 'இவ்விதமாக முன்னோர்களும் செய்ததில்லை; வருங்காலத்தில் மற்றவர்களும் செய்யப்போகிறதில்லை' என்று இவ்வாறு புகழ்ந்தார்கள். ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் ஆகிய நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிகுந்த பெருமைபெற்றவனும் உன் பிள்ளையைக்காட்டிலும் மிக்கபுண்ணியசாலியுமான அந்த அம்பரீஷனே மாண்டான். ஸ்ருஞ்சய! விதிப்படி யாகம்செய்யாதவனும் தக்ஷிணை கொடாதவனுமான உன்னுடைய புத்திரனைப்பற்றி நீ வியஸனப்பட வேண்டாம்.

---

அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக்கூறிய [1] சசிபிந்துவின்கதை.)

ஓ! ஸ்ருஞ்சய! சசிபிந்துவென்கிற அரசனும் மாண்டானென்று கேட்டிருக்கிறோம். ஐஸ்வரியமுள்ளவனும் உண்மையானபராக்ரமமுடையவனுமான எந்தச்சசிபிந்து பலவிதமானயாகங்களாலே தேவதைகளைப் பூஜித்தானோ மஹாபுருஷனான அவனுக்கு லக்ஷம் மனைவிகளிருந்தார்கள். ஒவ்வொரு பார்யையினிடத்திலும் ஆயிரம் ஆயிரம் பிள்ளைகள் பிறந்தார்கள். அந்த அரசன் குமாரர்களெல்லோரும் பராக்கிரமசாலிகளும் லக்ஷம் யாகஞ்செய்கின்றவர்களும் முக்கியமான யாகங்களாலே தேவர்களைப் பூஜிக்கின்றவர்களும் தனுர்வேதத்தினது கரைகடந்தவர்களுமாயிருந்தார்கள். சசிபிந்துவின் குமாரர்களெல்லோரும், ஸ்வர்ணமயமான கவசம் அணிந்தவர்கள்; எல்லோரும் உத்தமமான வில்லையுடையவர்கள்; எல்லாரும் அஸ்வமேதங்களாலே தேவர்களை ஆராதித்தவர்கள். இராஜஸ்ரேஷ்டனும் பிதாவுமான சசிபிந்து அஸ்வமேதயாகத்தில் அந்தப்புத்திரர்களைப் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அப்பொழுது, ஒவ்வொரு ராஜகுமாரனையும் நூறு நூறு ரதங்களும் கஜங்களும் ஸ்வர்ணங்களால் நன்றாக அலங்கரிக்கப்பட்ட கன்னிகைகளும் பின்தொடர்ந்தார்கள். ஒவ்வொரு கன்னிகையையும் நூறுநூறு யானைகள் பின்தொடர்ந்தன. ஒவ்வொருயானையையும் நூறுநூறு ரதங்களும், ஒவ்வொரு ரதத்தையும் பலமுள்ளவைகளும் பொன்மாலைகளை

[1] இவனுக்குச் சசபிந்து என்றும் பெயர்வழங்குகிறது.

யணிந்தவைகளுமான நூறு நூறு குதிரைகளும், ஒவ்வொரு குதிரையையும் ஆயிரம் ஆயிரம்பசுக்களும், ஒவ்வொரு பசுவையும் ஐம்பது ஐம்பது ஆடுகளும் பின்தொடர்ந்துசென்றன. மஹாபாக்யசாலியான சசிபிந்து அஸ்வமேத மஹாயாகத்தில் இவ்வளவு தனங்களையும் பிராம்மணர்களின்பொருட்டுப் போதாதவையென்று எண்ணினன். அவனுடைய அஸ்வமேதமஹாயாகத்தில் மரத்தினால் எவ்வளவு யூபஸ்தம்பங்களுண்டோ அவ்வளவு ஸ்வர்ணமயமானவைகளும் வேறு வேறு இருந்தன அந்த அரசனுடைய அஸ்வமேதயாகம் முடிந்தபிறகும், ஒருகுரோச உயரமுள்ளவைகளும் பர்வதம்போலப் பிரகாசிக்கின்றவைகளுமான பக்ஷ்யங்கள் அன்னபானுதிவஸ்துக்கள் இவற்றின் பதின்மூன்று குவியல்கள் மிகுந்தன. சசிபிந்து இந்தப்பூமியை ஸந்தோஷமும் தேகவன்மையுமுள்ள ஜனங்களாலே வியாபிக்கப்பட்டதாகவும் இடையூறுகளில்லாததாகவும ரோகமற்றதாகவுமிருக்கும்படி செய்து நெடுங்காலம் அனுபவித்து ஸ்வர்க்கம்சென்றான். ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் ஆகியநான்கினுலும் உன்னைக்காட்டிலும் அதிகமானபெருமைபெற்றவனும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிகுந்த புண்ணியசாலியுமாயிருந்த அந்தச்சசிபிந்துவே மாண்டான். ஸ்ருஞ்சய! விதிப்படி யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்னுடைய புத்திரனைப்பற்றி நீ அனுதாபப்படவேண்டாம்.

---

## அறுபத்தாறுவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக்கூறிய கயன்கதை.)

ஸ்ருஞ்சய! அமூர்த்தராஜஸினுடைய குமாரனான கயனும் உயிரையிழந்தானென்று நாம் கேட்டிருக்கிறோம். அந்தக் கயமஹாராஜன், நூறுவருஷகாலம் ஹோமசேஷத்தையே புஜித்துக்கொண்டிருந்தான். அந்தக் கயனுக்கு அக்னிபகவான் வரத்தைக்கொடுக்க ஆரம்பித்தான். கயனும், 'பாவக! தவத்தினுலும் ப்ரம்மசரியத்தினுலும் வ்ரதத்தினுலும் நியமத்தினுலும் குருக்களுடைய அனுக்ரஹத்தினுலும் வேதங்களையறியவிரும்புகிறேன்; பிறருக்குத் துன்பஞ்செய்யாமல் க்ஷத்ரியதர்மத்தைமுன்னிட்டுக் குறைவற்றதனத்தை அடையவிரும்புகிறேன். பிராம்மணர்களுக்குக்கொடுக்கும்விஷயத்தில் எக்காலத்திலும் எனக்கு ஸ்ரத்தையுண்டாகவேண்டும். க்ஷத்ரியஜாதியில்பிறந்த கன்

ஷிகைகளிடங்களில் எனக்கு ஸத்புத்திரர்கள் உண்டாகவேண்டும். எனக்கு அன்னம் பலம் தேஜஸ் இவைகள் விருத்தியாகவேண்டும். தர்மத்தினிடத்தில் என்மனம் இன்பமடையவேண்டும். தர்மகார்யங்களில் எப்பொழுதும் எனக்கு இடையூறுஉண்டாகாமலிருக்கவேண்டும்' என்று அக்னியினிடத்திலிருந்து வரன்களை வேண்டினன். அக்னிபகவானும், 'அப்படியே உண்டாகும்' என்று சொல்லிவிட்டு அந்தஇடத்திலேயே அந்தர்த்தானத்தை அடைந்தான். கயமகாராஜன் அவை எல்லாவற்றையும்பெற்றுத் தர்மத்தினால் உலகத்தை ஸந்தோஷப்படுத்திக்கொண்டு தர்சபூர்ணமாஸ இஷ்டிகளாலும் காலங்களில்செய்யும் ஆக்ரயண இஷ்டிகளாலும் சாதுர்மாஸ்யங்களாலும் ஸம்பூர்ணதக்ஷிணைகளுள்ள பலவிதயஜ்ஞங்களாலும் சிரத்தையோடு நூறுவருஷம் யாகஞ்செய்தான். நூறுவருஷகாலம் லக்ஷம் பசுக்களையும் பதினாயிரம் குதிரைகளையும் லக்ஷம் நிஷ்கங்களையும் அறுபதினாயிரம் காளைகளையும் திரும்பவும் திரும்பவும் தானஞ்செய்தான். எல்லாநக்ஷத்ரங்களிலும் நக்ஷத்திரதக்ஷிணைகளைக்கொடுத்துக்கொண்டு ஸோமன்போலவும் அங்கிரஸ்போலவும் பலவித யாகங்களாலே தேவதைகளை ஆராதித்தான். அந்தக்கயராஜன் அச்வமேதமஹாயாகத்தில் இந்தப்பூமியை ஸ்வர்ணமயமாகவும் ரத்னமயமான சிறியகற்களுள்ளதாகவும்செய்து பிராமணர்களுக்குத் தானஞ்செய்தான். அவனுடைய யூபஸ்தம்பங்களெல்லாம் தங்கமயமாகவும் ரத்னமிழைத்தவைகளாகவும் வேண்டினவையெல்லாம் நிரம்பினவைகளாகவும் எல்லாப்பிராணிகளுடைய மனத்தையும் கவர்வனவாகவும் இருந்தன. அப்பொழுது கயன் பிராம்மணர்களின்பொருட்டும் ஸந்தோஷமடைந்திருக்கின்ற எல்லாப்ராணிகளின் பொருட்டும் விரும்பத்தக்க எல்லாவிதப்பொருள்களாலும் நிறைந்த அன்னத்தைக் கொடுத்தான். கடல்களிலும் வனங்களிலும் தீவுகளிலும் நதிகளிலும் நதங்களிலும் ஜலங்களிலும் நகரங்களிலும் தேசங்களிலும் ஸ்வர்க்கத்திலும் ஆகாயத்திலும் வஸிக்கின்ற பலவிதப் பிராணிக்கூட்டங்களும் யாகத்தின்சிறப்பினால் நன்றாகத் திருப்தியடைந்து, 'கயனுடைய யஜ்ஞத்திற்கு ஒப்பான வேறுயஜ்ஞம்இல்லை' என்று கூறின. யாகம்செய்பவனான கயனுடைய பின்புறத்திலும் முன்புறத்திலுமுள்ள இருபத்துநான்குவேதிகள் முப்பத்தாறுயோசனைநீளமுள்ளனவாகவும் முப்பதுயோஜனை அகலமுள்ளனவாகவும் ஸ்வர்ணமயமாகவும் முத்துக்களாலும் வஜ்ரங்களாலும் மணிகளாலும் இழைக்கப்பட்டனவாகவுமிருந்தன. மேலும், அபரிமிதமான தக்ஷிணைகளைக்கொடுக்கின்றவனான அந்தக்கயன், வேதத்தையறிந்த பிராம்மணர்களுக்கு வஸ்திரங்களை

யும் ஆபரணங்களையும் சாஸ்திரமுறைப்படி இன்னும் அநேகம் தக்ஷிணை களையும் கொடுத்தான். அந்தக்கயனுடைய யாகத்தில் போஜனஞ்செய்து மிகுந்த அன்னங்களினுடைய பர்வதங்கள் இருபத்தைந்து இருந்தன. பால்வெள்ளம் பெருகிய வாய்க்கால்களும் (தேன் தயிர் முதலான) ரஸங் களினுடைய வாய்க்கால்களும் அப்பொழுது பெருக்கெடுத்துக்கொண் டிருந்தன. ஆடைகள் ஆபரணங்கள் வாஸனைப்பொருள் இவைகளி னுடையராசிகளும் தனித்தனி இருந்தன. அந்தயாகத்தின் மஹிமையி னாலே கயனும் க்ரியைகளை அழிவற்றனவாகச்செய்யும் ஆலமரமும் பரிசுத்தமான அந்த ப்ரம்மஸரஸும் மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்றனர். ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வைராக்யம் ஐஶ்வர்யம் இந் நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிகுந்த மேன்மைபெற்றவனும் உன்பிள்ளையைக்காட்டிலும் மிக்கபுண்ணியசாலியுமான அந்தக்கயமஹா ராஜனே இறந்தான். ஸ்ருஞ்சய! ஆகையால், யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி நீ அனுதாபப்பட வேண்டாம்.

---

## அறுபத்தேழாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர், ஸ்ருஞ்சயனுக்குச்சொல்லிய ரந்திதேவன் கதை.)

ஸ்ருஞ்சய! ஸங்கிருதியினுடைய குமாரனான ரந்திதேவனும் விண்ணுலகையடைந்தானென்று நாம் கேட்டிருக்கிறோம். மஹானுபாவ னான அந்த ரந்திதேவனுடைய அரண்மனைக்கு வருகின்ற அதிதிப்ராம் மணர்களுக்கு, நன்றாகப் பக்குவம்செய்யப்பட்டு அமிர்தத்துக்கொப்பா யுள்ள உத்தமமான அன்னத்தை இரவிலும் பகலிலும் பரிமாறுகின்ற சமையற்காரர்கள் இரண்டுலக்ஷம்பேர்கள் இருந்தார்கள். அவன் நியா யத்தினால் தேடப்பட்டபொருளைப் பிராம்மணர்களுக்கென்றே எண்ணி னான். ரந்திதேவமஹாராஜன் வேதங்களை அத்யயனஞ்செய்து பகைவர் களைத் தர்மத்தினால் தன்வசப்படுத்தினான். கடுமையான விரதமுள்ள வனும் முறைப்படி ஸத்ரயாகத்தைச்செய்கின்றவனுமான அவனை அநே கம் பசுக்கள் ஸ்வர்க்கத்தைவிரும்பித் தாமாகவே வந்தடைந்தன. அந்த அரசனுடைய யாகசாலையிலுள்ள தோற்குவியலிலிருந்து பெருகிஓடிய பரிசுத்தமான உத்தமநதியானது சர்மண்வதி என்று ப்ரஸித்திபெற் றது. அவன் செல்வப்பெருக்கினாலே, 'உமக்கு நிஷ்கம், உமக்கு நிஷ்

கம்' என்று சொல்லிக்கொண்டே பிராம்மணர்களுக்கு நிஷ்கமென்னும் பொன்னாணயங்களைக் கொடுத்தான். 'உமக்கு, உமக்கு' என்று சொல்லிக்கொண்டே தங்கநாணயங்களை ஆயிரக்கணக்காகக்கொடுத்தான். பிறகு, தனங்களைத் தன்னிடமிருந்துபெற்றிருக்கின்ற பிராம்மணர்களை மறுபடியும் ஸமாதானப்படுத்திப் பொன் நாணயங்களையே கொடுத்தான். 'என்னால் இப்பொழுது சிறிதே கொடுக்கப்பட்டது' என்று திரும்பவும் கோடிஸ்வர்ணநாணயங்களை ஆயிரக்கணக்காகக்கொடுத்தான். பிறகு, அப்படி தானம்செய்த தினத்திலேயே, 'இப்பொழுது பிராம்மணர்கள் எங்குஇருக்கிறார்களோ' என்று சொல்லிக்கொண்டே வாடுவான். 'பிராம்மணர்களுடைய கை (என் ஸமீபத்தைவிட்டு) விலகினால் எனக்கு நீங்காத பெரியதுக்கம் வந்துவிடும்; ஸம்சயமில்லை' என்று இவ்வாறுசொல்லிக்கொண்டு தனங்களைக்கொடுத்தான். நூறுபசுக்களால் பின்தொடரப்பெற்றவைவும் ஸ்வர்ணத்தினால் நிறைக்கப்பட்டவையுமான விருஷபங்களையும் ஆயிரமாயிரமாகத் தானஞ்செய்தான். நூற்றெட்டு ஸ்வர்ணங்கொண்ட தனத்தை நிஷ்கமென்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட நிஷ்கங்களை நூறுவருஷகாலம் ஒவ்வொரு பக்ஷத்திலும் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அக்நிஹோத்ரங்களுக்குவேண்டிய ஸாதனங்களையும் யாகத்திற்குவேண்டிய ஸாதனங்களையும் கமண்டலுக்களையும் குடங்களையும் ஸ்தாலிகளையும் பாண்டத்தையும் ரிஷிகளுக்குத் தானஞ்செய்தான். படுக்கைகள், ஆஸனங்கள், வாகனங்கள், மாளிகைகள், வீடுகள், பலவிதமான மரங்கள், அன்னங்கள், தனங்கள் இவைகளனைத்தையும் தானஞ்செய்தான். புத்திமானான ரந்திதேவனிடத்திலுள்ள அனைத்தும் ஸ்வர்ணமயமாகவே இருந்தன. முற்காலத்து விருத்தாந்தங்களையறிந்த ஜனங்கள் அச்சமயத்தில் ரந்திதேவனுடையதும் மனிதர்களுக்குக்கிடையாததுமான அந்த ஐசுவர்யத்தைக் கண்டு அவன் விஷயமாகக் காதைகளைப் பாடினார்கள். அந்த ஐஸ்வர்யத்தில் வியப்புற்றவர்கள், நமக்கு நிறைக்கப்படுகின்ற இப்படிப்பட்ட தனமானது குபேரனுடைய வீடுகளிலும் பார்க்கப்படவில்லை. மனிதர்களிடங்களில் கேட்கவேண்டியதென்ன ? நிச்சயமாக இந்தநகரியானது அளகைதான்' என்று சொன்னார்கள். ஸங்கிருதியினுடைய குமாரனான ரந்திதேவனுடைய (அரண்மனையில்) அதிதிகள் வாஸஞ்செய்த அந்த ராத்ரியில் இருபத்தோராயிரம் பசுக்கள் கொல்லப்பட்டன. நன்றாக மெருகிடப்பட்ட ரத்நங்களிழைத்த குண்டலங்களையணிந்தவர்களான அங்குள்ள சமையற்காரர்கள், 'பருப்பை யதேஷ்டமாகப் புஜியுங்கள். இன்றைக்கு முன்போல் மாம்ஸமில்லை' என்று உரக்கச்சொன்னார்கள்.

ரந்திதேவனிடத்தில் அக்காலத்தில் எதெது ஸ்வர்ணமயமாகவிருந்
தோ அவைத்தனைத்தையும் ஸவிஸ்தாரமான யாகத்தில் பிராம்மணர்
களுக்குக் கொடுத்தான். அரசனாலே கொடுக்கப்படுகின்ற ஹவ்யங்களை
யும் கவ்யங்களையும் தேவர்களும் பிதிர்க்களும் நேரில்வந்து பெற்றுக்
கொண்டார்கள். பிராம்மணோத்தமர்கள் அந்த அந்த ஸமயத்தில் விரும்
பியவற்றையெல்லாம் அடைந்தார்கள். ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வை
ராக்யம் ஐஸ்வர்யம் ஆகிய நான்கினாலும் உன்னைக்காட்டிலும் மிக்க மேன்
மைபெற்றவனும் உன்குமாரனைக்காட்டிலும் மிகுந்தபுண்யசாலியுமான
அந்த ரந்திதேவனே மாண்டான். ஸ்ருஞ்சய! யாகஞ்செய்யாதவனும்
தக்ஷிணைகொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி மனக்கவலையடைய
வேண்டாம்.

---

## அறுபத்தெட்டாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக் கூறிய பரதன் கதை.)

ஸ்ருஞ்சய! துஷ்யந்தனுடையகுமாரனான பரதனும் உயி
ரிழந்ததாகக் கேட்டிருக்கிறோம். அவன் இளமைப்பருவத்தில் மற்றவர்
களால் செய்யமுடியாத கார்யங்களை அரணியத்தில் செய்தான். பலவா
னான அந்தப் பரதன் பனிபோல் வெண்மைநிறமுள்ளவைகளும் நகங்
களையும் கோரப்பற்களையும் ஆயுதங்களாகக்கொண்டவைகளுமான
ஸிம்மங்களைத் தன்பலத்தினாலே வீர்யமற்றவைகளாகச்செய்து இழுத்
துக்கட்டினான். அரக்குக்குவியல்களோடுசேர்ந்த மனோசிலைகளென்கிற
கற்கள்போன்றவைகளும் குரூரமானவைகளும் மிக்கபயங்கரமுமான
புலிகளை அடக்கித் தன்வசப்படுத்தினான். மிக்கபலசாலியான அவன்
கொடிய ஜந்துக்களையும் உறுதியான அவயவங்களுள்ள யானைகளையும்
தந்தங்களில் பிடித்துப் புறங்காட்டியோடுகின்றவையாகவும் வாய்
வரண்டவையாகவுஞ்செய்து தன்வசப்படுத்தினான். மிக்கவலிமையுள்ள
அவன், மிகுந்த பலமுள்ளவைகளான காட்டெருமைகளையும் இழுத்
தான். மிக்ககொழுப்புள்ள நூற்றுக்கணக்கான ஸிம்மங்களையும் பல
முள்ள ஸ்ருமரமென்னும் மான்களையும் கட்கமிருகங்களையும் பலவித
மான மற்றப்பிராணிகளையும் பலத்தினாலே இழுத்துக்கட்டி அடக்கிப்
பிராணஸங்கடமடையும்படிசெய்து காட்டில் அவிழ்த்து விட்டான்.
அவ்விதமான இவனுடைய செய்கையினால் பிராம்மணர்கள் ஸர்வத

மனன்' என்று அவனை அழைத்தார்கள். தாயான சகுந்தலையானவள், 'பிராணிகளை ஹிம்ஸைசெய்யாதே' என்று அவனைத் தடுத்தாள். வீர்யமுள்ளவனான அந்த ஸர்வதமனன் யமுனைக்கு அருகில் நூறு அஸ்வமேதங்களையும் ஸரஸ்வதீநதிக்கரையில் முந்நூறுயாகங்களையும் கங்கைக்கு அருகில் நானூறு யாகங்களையும் செய்தான். அவன் மீண்டும் ஆயிரம் அஸ்வமேதங்களாலும் நூறு ராஜஸூயயாகங்களாலும் ஸம்பூர்ண தக்ஷிணைகளுள்ள மஹாயஜ்ஞங்களாலும் அக்நிஷ்டோமம், அதிராத்ரம், உக்தியம், விஸ்வஜித் இவைகளாலும் தேவர்களைப் பூஜித்தான். மிக்கபுகழ்பெற்றவனும் சகுந்தலையின் புத்திரனுமான பரதராஜன் நன்றாக அனுஷ்டிக்கப்பட்ட பத்துலக்ஷம் வாஜபேயங்களால் (தேவர்களை) ஆராதித்துத் தனங்களால் பிராம்மணர்களைத்திருப்திசெய்து ஆயிரம் பத்மஸங்கியையுள்ள ஜாம்பூநதமென்னும் சுத்தமான பொன்னைக் கண்வருக்குக் கொடுத்தான். எந்தப்பரதமஹாராஜனுடைய நூறுபாகம் நீளமுள்ள பொன்னாலாகிய யூபஸ்தம்பங்கள் பிராம்மணர்களோடு சேர்ந்து இந்திராதி தேவர்களாலே எடுத்து நிறுத்தப்பட்டனவோ அந்தப்பரதன், மனத்தைக்கவரும் எல்லா ரத்நங்களாலும் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்றவைகளும் பொன்னணிகளையுடையவைகளுமான யானை குதிரை தேர்களையும் ஒட்டகங்களையும் செம்மறியாடுகளையும் வெள்ளாடுகளையும் வேலைக்காரிகள், வேலைக்காரர்கள், தனதான்யங்கள், கன்றுகளோடுகூடின நல்லகறவைப்பசுக்கள், கிராமங்கள், கிருஹங்கள், விளைநிலங்கள், பலவிதமான உபகரணங்கள் இவைகளனைத்தையும் கோடிக்கணக்காகவும் லக்ஷக்கணக்காகவும் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அவன் கம்பீரஸ்வபாவமுள்ளவனும் பகைவர்களை வென்றவனும் சத்துருக்களாலே ஜயிக்கப்படாதவனும் சக்கரவர்த்தியுமாகவிருந்தான். ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஸ்வர்யம் இந்நான்கிலும் உன்னைக்காட்டிலும் மிக்கஹிதத்தைச்செய்தவனும் உன்னுடைய புத்திரனைக்காட்டிலும் மிக்கபுண்ணியசாலியுமான அந்தப்பரதனே மரணமடைந்தான். ஸ்ருஞ்சய! யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணைகொடாதவனுமான உன்புத்திரனைப்பற்றி நீ மனவருத்தமடைய வேண்டாம்.

---

## அறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர், ஸ்ருஞ்சயனுக்குக் கூறிய பிருது சக்கரவர்த்தியின் கதை.)

ஸ்ருஞ்சய! வேனனுடைய குமாரனான பிருது ராஜனும் உயிரிழந்தானென்று நாம் கேட்டிருக்கிறோம். மஹரிஷிகள் ஆலோசித்து அந்தப்பிருதுவை ராஜஸூயத்தில் அபிஷேகஞ் செய்தார்கள். இவன் நம்மனைவரையும் பிரஸித்தியடையும்படி செய்வான் என்பதினால் ப்ருது என்னும் பெயருள்ளவனும் நம்மனைவரையும் [1] க்ஷதத்திலிருந்து காப்பான் என்றதினால் க்ஷத்ரியனுமானான். வேனகுமாரனான பிருதுவைப் பார்த்துப் பிரஜைகள் அநுராகமுடையவர்களானோமென்று சொன்னார்கள். அந்த அநுராகத்தினால் அவனுக்கு 'ராஜா'என்கிற பெயர் உண்டாயிற்று. பூமியானது உழாமலே பலிக்கின்ற பயிர்களுள்ளதாகி வேனகுமாரனான பிருதுவுக்கு அபீஷ்டங்களைப்பெருக்குகிறதாயிற்று. எல்லாப்பசுக்களும் வேண்டியவளவு கறப்பவையாயின. ஒவ்வோர் இலையிலும் தேன் உறைந்திருந்தது. மரங்களெல்லாம் பொன்மயமாகவும் தொடுதற்கினியவைகளாகவும் ஸுகத்தையுண்டுபண்ணுகின்றவைகளாகவும் இருந்தன. ஜனங்கள் அம்மரங்களினுடைய பட்டைகளை ஆடைகளாக உபயோகித்தார்கள். அவைகளின்மீதிலேயே சயனித்தார்கள். அமிர்தம்போன்ற பழங்களும் ருசியுள்ளதேன்களும் அப்பொழுது அவர்களுக்கு ஆகாரமாயிருந்தன. பிரஜைகள் ஆகாரமில்லாதவைகளாயிருக்கவில்லை. மனிதர்கள் ரோகமற்றவர்களும் எல்லாவிருப்பங்களும் நிறைவேறினவர்களும் ஓரிடத்திலிருந்தும் பயத்தை அடையாதவர்களுமாகத் தங்கள் தங்களிஷ்டப்படி மரங்களிலும் குகைகளிலும் வாஸஞ்செய்தார்கள். அப்பொழுது, தேசங்களுக்கும் பட்டணங்களுக்கும் பிரிவு ஏற்படவில்லை. அவ்வாறாக இந்த ஜனங்கள் ஸந்தோஷமடைந்து இஷ்டப்படியும் ஸுகத்திற்குக்குறைவின்றியுமிருந்தார்கள். அவன் பகைவர்களின்மீது ஸமுத்திரத்தைத்தாண்டிப் படையெடுத்துச் செல்லவேண்டிய ஸமயத்தில் ஜலம் ஸ்தம்பித்திருந்தது. பர்வதங்களும் மார்க்கத்தைத்தந்தன. அவனுடைய கொடிமரமானது முறிந்ததில்லை. மரங்களும் மலைகளும் தேவர்களும் அஸுரர்களும் மனிதர்களும் ஸர்ப்பங்களும் ஸப்தரிஷிகளும் ராக்ஷஸர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் பிதிருக்களும் ஸுகமாக வீற்றிருக்

---

[1] ஆயுதங்களாலுண்டான புண்; மற்றத் துன்பங்களுக்கும் உபலக்ஷணம்.

கும் அந்த அரசனிடம் வந்து, 'மஹா ராஜரே! நீர் சக்கரவர்த்தியா யிருக்கிறீர். க்ஷத்திரியரும் ராஜரும் ரக்ஷகரும் எங்களுக்குப் பிதாவு மாயிருக்கிறீர். நாங்கள் திருப்தியடைந்து சாஸ்வதமான ஸுகத் தைப்பெற்றிருக்கும்படி விரும்பப்பட்ட வரன்களைப் பிரபுவானு நீர் எங்களுக்குக்கொடும்' என்று பிரார்த்தித்தார்கள். பிரஜைகளால் வேண் டப்பட்ட பலசாலியான பிருது சக்ரவர்த்தி பிரஜைகளுக்கு ஹிதம் செய்யக்கருதி விருப்பத்தோடு வில்லையும் அம்புகளையும் கையில் கொண்டு பூமியைக்குறித்து ஓடிவந்தான். வேந்தனே! பிறகு பூமி யானது அவனிடத்திலிருந்து உண்டான பயத்தினாலே ஒரு பசுவடிவ முள்ளதாகி வேகமாக ஓடியது. ஓடுகின்ற அந்தப் பூமியைநோக் கிப் பிருதுவானவன் கையில் வில்லை எடுத்துக்கொண்டு பின்தொடர் ந்து ஓடினான். அவனிடத்திலிருந்து உண்டான பயத்தினாலேயே பீடி க்கப்பட்ட அந்தப் பூதேவி ப்ரம்மலோகமுதலான லோகங்களை அடைந் தும் வில்லைக் கையிலேந்தி எதிரில் நிற்கின்ற அந்தப் பிருதுவைக்கண் டாள். ரக்ஷணத்தையடையாத பூமிதேவி ஜ்வலிக்கின்ற அம்புகளாலே உக்ரமான தேஜஸுள்ள ஸூர்யனுக்கு ஒப்பான காந்தியுடையவனும் மஹா யோகியும் மஹாத்மாவும் தேவர்களாலும் ஜயிக்க முடியாத வனுமான அந்த ப்ருதுவையே சரணமடைந்தாள். அரசனே! அந்தப் பூமியானவள் அப்பொழுது கைகளைக் குவித்துக்கொண்டு மூவுலகங்க ளாலேயும் பூஜிக்கத்தகுந்தவனை அந்தப்பிருதுசக்ரவர்த்தியை நோக்கி, 'அரசரே! இந்த அதர்மமான ஸ்திரீவதத்தை நீர்செய்யத்தக்கவரல்லீர். என்னையன்றிப் பிரஜைகளை எவ்வாறு ரக்ஷிக்கப்போகிறீர்?' என்று சொல்ல, பிருது சக்ரவர்த்தி, ஒருவன் முக்கியமாகத் தன் பிரயோஜனத் திற்காவது பிறனுடைய பிரயோஜனத்துக்காவது ஒன்றையோ அல்லது அநேகம் பிராணிகளுடைய உயிர்களையோ வாங்குவனானால் அது பாதக மாகாது. பெண்ணே! எவனொருவன் கொல்லப்பட்டால் அநேகர்கள் ஸுகமாக விருத்தியடைவார்களோ அவன் கொல்லப்பட்டால் தோஷ மில்லை. பாவம் கொன்றவனால் அநுபவிக்கப்படமாட்டாது. வஸுந் தரையே! நான் சொல்லுகிறபடி இப்பொழுது நீ என் விருப்பத்தைச் செய்யாமற்போனால் நான் பிரஜைகளைக்காப்பாற்றுநிமித்தம் உன்னைக் கொல்வேன். என் கட்டளையில் அநாதரவாயிருக்கிற உன்னைப் பாணத் தாற்கொன்று என் ஆண்மையை வெளியிட்டு நானே ப்ரஜைகளைத் தரிக் கப்போகிறேன். தார்மிகர்களுள் சிறந்தவளே! நீ சக்தியுடையவளாயிருந் தால் ஸுககரமான என் வார்த்தையை ஏற்றுக்கொண்டு எப்பொழுதும் பிரஜைகளை ஜீவிக்கும்படிசெய். எனக்குப் பெண்ணாகவிருக்கும் நிலைமை

யையும் நீ யடையவேண்டும். இப்படி நீ செய்வாயாகில் உன்னிமித்தமாகக் கையிலெடுக்கப்பட்டதும் பார்க்கப் பயங்கரமாயுள்ளதுமான இந்தப் பெரிதான அம்பை உபஸம்ஹாரம்செய்து கொள்வேன்' என்று சொன்னான். பூதேவி, 'பகைவரைக் கொல்பவரே! மஹாராஜரே! எல்லாவற்றையும் செய்வேன்; வேந்தரே! அன்புடையவளான நான் எந்தக் கன்றின் வழியாகப் பாலைப்பெருக்குவேனோ அப்படிப்பட்ட கன்றை நீர் பாரும். தார்மிகர்களுள்சிறந்தவரே! எல்லாம் அறிந்தவரே! எவ்வாறு என்னிடத்தினின்றும் பெருகுகின்றபாலை எல்லாவிடத்திலும் பரவும்படிசெய்வேனோ அவ்வாறாக என் ஸ்வரூபத்தைச் சமமாகச் செய்துவிடும்' என்று கூறினாள். வேனகுமாரனான பிருது, அப்பொழுது நான்கு பக்கங்களிலும் கற்குவியல்களை விலக்கித்தள்ளினான். அதனால் மலைகள்விசேஷமாக [1] உடைக்கப்பட்டன. பூமிக்குமன்னவனே! ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் பூமண்டலமானது மேடுபள்ளமாயிருக்குங் காலத்தில் நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் பிரிப்பு ஏற்படவில்லை. பயிர்களாவது பசுக்காத்தலாவது கிருஷியாவது வர்த்தகமாவது இல்லை. ராஜ சிரேஷ்டனே! வேன புத்திரனுடைய அரசாட்சிக் காலந் தொடங்கி இவைகளெல்லாம்உண்டாயின. மஹாராஜனே! எந்த எந்த இடத்தில் பூமிஸமமாகியதோ அந்த அந்த விடத்தில் பிரஜைகள் முயற்சியினால் குடியிருப்புக்குரியஸ்தானத்தை அமைத்துக்கொள்ள விரும்பின' என்று இவ்வாறு நாம் கேட்டிருக்கிறோம். வேனகுமாரன், 'அவ்வாறேயாகட்டும்' என்று சொல்லிவிட்டு, அஜகவமென்கிறவில்லையும் ஒப்பற்றவையும் கோரமுமான அம்புகளையும் எடுத்து ஆலோசித்துப் பூமியைப்பார்த்து, 'பூமியே! இங்குவா; வா; இவைகளுக்கு விரும்பப்பட்ட பாலைச் சீக்கிரமாகக்கற. என் ஆஜ்ஞையை மீறிநடந்தால் உன்னை அம்புகளால் நாசஞ்செய்வேன்' என்று கூறினான். பிருது அவ்வாறு சொல்லக்கேட்ட பூதேவி, தன்னுடைய நன்மையை ஆலோசித்து அவனைப்பார்த்து, 'கன்றையும் பாத்திரங்களையும் பால்களையும் நீர் கட்டளையிடும். ஐயா! எவனுக்கு எது விருப்பமோ அது அனைத்தையும் பிறகு நான் கொடுப்பேன். வீரரே! என்னை உமக்குப் பெண்ணாயிருக்கும் ஸ்தானத்தில் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும்' என்று சொன்னாள். ஜிதேந்திரியனான ப்ருதுவானவன், 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு எல்லா ஏற்பாட்டையும் செய்தான். பிறகு, பூதஸமூகங்கள் அந்தப்பூமியை அப்பொழுது கறந்தன. முதலில் அந்தப்பூமியைக்கறக்க எண்ணங்கொண்டவைகளாக மரங்கள்

---

[1] 'விவர்த்திதா:' என்பது மூலம்; விருத்தி செய்யப்பட்டன என்றுமாம்.

ஆரம்பித்தன. அன்புடையவளான அந்தப்பூமி கன்றையும் கறப்பவனையும் பாத்திரங்களையும் விரும்பி நின்றாள். பூத்த ஆச்சாமரம் கன்றாகியது; அப்பொழுது [1] இறலிமரம் கறக்கிறவனாகஏற்பட்டது. வெட்டினவுடன் துளிர்ப்பதென்பது பாலாகியது. அத்திமரங்களின் கூட்டம் பாத்திரமாகியது. உதயபர்வதம் கன்றும் மஹாமேருபர்வதம் கறக்கிறவனும் ரத்னங்களும் ஓஷதிகளும் பாலும் அஸ்தகிரியானது பாத்திரமுமாயின. தேவர்களுக்கு இந்திரன் கன்றும் பாத்திரம் தாருமயமும் தேவனான ஸூர்யன் கறக்கிறவனும் பலத்தையுண்டு பண்ணக்கூடிய வஸ்து ப்ரியமான பாலுமாயினர். அஸுரர்கள் அப்பொழுது இரும்புப்பாத்திரத்தில் அந்தப்பசுவினிடத்தினின்று மாயையைக் கறந்தார்கள். அதனைக்கறக்கும் விஷயத்தில் சுக்கிராசாரியர் கறக்கிறவரும் விரோசனன் கன்றுமானார்கள். பூதலத்திலுள்ள மனிதர்கள் [2] கிருஷியையும் ஸஸ்யத்தையும் [3] கறந்தார்கள். அவர்களுக்கு ஸ்வாயம்புவமனு கன்றும் பிருதுவே கறக்கிறவனும் ஆனார்கள். அவ்வாறே ஸர்ப்பங்களாலே பூதேவியினிடத்திலிருந்து சுரைப்பாத்திரத்தில் விஷமானது கறக்கப்பட்டது. அந்தஸர்ப்பங்களுக்கு த்ருதராஷ்டிரநாகன் கறக்கின்றவனும் தக்ஷகன் கன்றுமானார்கள். உத்தமமான கர்மாநுஷ்டானங்களுள்ள ஸப்தரிஷிகளாலே வேதம் கறக்கப்பட்டது. அவர்களுக்கு ப்ருஹஸ்பதி கறக்கிறவரும் சந்தஸ் பாத்திரமும் ஸோமராஜன் கன்றும் ஆனார்கள். ராக்ஷஸர்களாலே விசேஷமாகப் பிரகாசிக்கின்ற பூமிதேவியினிடத்திலிருந்து சுடாத மண்பாத்திரத்தில் அந்தர்த்தானமானது கறக்கப்பட்டது. அவர்களுக்குக் குபேரன் கறக்கிறவனும் வ்ருஷபத்வஜர் கன்றுமானார்கள். கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் தாமரைப்பூவாகிற பாத்திரத்தில் பரிசுத்தமான கந்தங்களைக் கறந்தார்கள். அவர்களுக்குத்தலைவனான சித்ரரதன் கன்றும் விஶ்வருசி கறக்கிறவனுமானார்கள். பிதிர்க்கள் அந்தப்பூமியினின்று வெள்ளிப்பாத்திரங்களில் ஸ்வதையைக் கறந்தார்கள். அப்பொழுது அவர்களுக்கு ஸூர்யகுமாரனான யமன் கன்றும் அந்தகன் கறக்கிறவனுமானார்கள். இவ்வாறு அந்தப்பூதவர்க்கங்கள் விராட்ரூபியான அந்தப்பூதேவியை இஷ்டமான பாலைக்கறந்தன. அவைகள் அந்தப்பாத்திரங்களோடும் கன்றுகளோடும் இன்றும் சாஶ்வதமாக ஜீவித்திருக்கின்றன. பிரதாபசாலியும் வேனகுமாரனுமான பிருதுராஜன் பலவிதயாகங்களால் தேவர்களைப்பூஜித்தும் மனத்துக்குப்பிரியமான ஸர்வாபீஷ்டங்களாலும் பிராணிகளை நன்

---

[1] 'பலாசுஎன்பது மூலம்' அத்திமரம்.

[2] வேளாண்மைத் தொழில். [3] பயிர்.

ருகத் திருப்தியடையும்படி செய்தும் பூமியில் மண்ணுற் செய்யப்பட்ட எல்லாப்பதார்த்தங்களையும் ஸ்வர்ணமயமாகச்செய்து அவைகளை அஶ்வமேத மஹாயாகத்தில் பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். அந்தப்பிருதுராஜன் அறுபதினுயிரம்பசுக்களையும் ஆறுயிரம்யானை களையும் ஸ்வர்ணத்தினுல் செய்து ப்ராம்மணர்களுக்குத் தானஞ்செய் தான். அவன் அகண்டமான பூமண்டலத்தையும் மணிகளாலும் ரத் னங்களாலும் அலங்கரிக்கப்பட்டதாகவும் ஸ்வர்ணமயமாகவும் செய்து பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தான். ஸ்ருஞ்சய! தர்மம், ஞானம், வைராக்யம், ஐஶ்வர்யம் ஆகிய நான்கினுலும் உன்னைக்காட்டி லும் மிகுந்த மேன்மைபெற்றவனும் உன்பிள்ளையைக்காட்டிலும் மிகுந்த புண்ணியசாலியுமான அந்தப்பிருதுசக்கரவர்த்தியே விண் ணுலகை யடைந்தான். ஸ்ருஞ்சய! ஆதலால், யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணை கொடாதவனுமான உன் புத்திரனைப்பற்றி நீ மனவருத்த மடையவேண்டாம்.

---

## எழுபதாவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)

(நாரதர் ஸ்ருஞ்சயனுக்குக்கூறிய [1] பாசுராமர் கதை.)

பெருந்தவஞ் செய்பவரும் சூரரும் வீர்யமுள்ளவரும் உலகங் களால் நமஸ்கரிக்கப்பட்டவரும் அளவற்ற கீர்த்திபெற்றவரும் ஜம தக்நியின் குமாரருமான பரசுராமரும் திருப்தியடையாமலே உயிரை யிழக்கப்போகிறுர். மன்னவ! எவர் அஸ்திரத்தினுல் பூமியைத் தோஷ மற்றதாகச் செய்துகொண்டு சுற்றிவந்தாரோ, எவருக்கு உத்தமமான ஐஶ்வரியத்தைப் பெற்றும் விகாரமுண்டாகவில்லையோ அப்படிப்பட்ட ஜாமதக்நியரைப்பற்றி நீகேட்டதில்லையா? அரசனே! முற்காலத்தில், கொல்லப்பட்ட [2] பந்துவையுடையவரும் (அதனுல்) கோபங்கொண்ட வரும் பிருகுவம்சத்தில் தோன்றியவர்களால்,'ராம! காப்பாற்று' என்று விகாரமான ஸ்வரத்தோடு அழைக்கப்பட்டவரும் வாட்டமுற்றவரு மான பரசுராமரொருவராலேயே பூமியானது [3] இருபத்தொருமுறை க்ஷத்திரியர்களில்லாததாகச் செய்யப்பட்டது. [4] கார்த்தவீர்யனுடைய

---

[1] சாந்திபர்வம், 28-வது அத்யாயத்தில் இவருடைய வரலாறு கூறப்பட வில்லை; சகரன் கதை கூறப்பட்டுள்ளது. [2] தந்தை.

[3] ஒருசொல் விடப்பட்டது. [4] வேறுபாடம்.

புத்திரர்களால் தம்பிதாவான ஜமதக்நி கொல்லப்பட்டவுடன் குழந்தையாக இருந்த பரசுராமர் கோபங்கொண்டு சத்துருக்களால் ஜயிக்கமுடியாதவனான கார்த்தவீர்யார்ஜுனனை யுத்தத்தில் கொன்றார். பரசுராமர் மரணத்துக்காக ஒன்று சேர்ந்திருந்த ஆறுலக்ஷத்து நாற்பதினாயிரம் க்ஷத்திரியர்களை அப்பொழுது ஒருவில்லின் உதவியினாலேயே ஆயிரம் ஆயிரமாக ஜயித்தார். பிறகு, அதனிடையிலேயே, அவர் மீண்டும் தந்தகூரமென்கிற தேசத்தில் பிராமணத்வேஷிகளான வேறு பதினாலாயிரம் க்ஷத்திரியர்களை நிக்ரஹித்து ஸம்ஹாரம் செய்தார்; உலக்கையினால் ஆயிரம் பேர்களை அடித்தார்; ஆயிரம் பேர்களைக் கத்தியினால் வெட்டினார்; ஆயிரம்பேர்களை மரத்தில் சுருக்கிட்டுத்தூக்கினார்; ஆயிரம் பெயர்களை ஜலத்தில் அமிழ்த்தினார்; ஆயிரம் பேர்களைப் பற்களையுடைத்து அவ்வாறே காதுகளையும் இழந்தவர்களாகச் செய்தார். பிறகு, ஏழாயிரம் பேர்களை உக்கிரமான புகையைக்குடிக்கும்படி செய்தார். மீதியுள்ள சத்துருக்களைக்கட்டிவைத்தும் கொன்றும் அவர்களுடைய தலையைப்பிளந்தார். குணவதிக்கு வடபுறத்திலும் காண்டவவனத்திற்குத் தெற்கிலும் மலைச்சார்பில் லக்ஷக்கணக்கான ஹேஹயதேசத்து வீரர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். பிதாவினுடைய வதத்தினால் கோபமூட்டப்பட்டவரும் புத்திமானுமான ஜாமதக்நியரால் அங்கு வீரர்கள் தேர்களோடும் குதிரைகளோடும் யானைகளோடும் கொல்லப்பட்டுப்படுத்தார்கள். அப்பொழுது ராமர் கோடாலியினால் பதினாயிரம் யுத்தவீரர்களைக் கொன்றார். 'பிருகுகுலத்திலுதித்தவனே! ராம! விரைவாக ஓடிவா' என்று பிராம்மணோத்தமர்கள் கதறினபொழுது அந்தப் பிராம்மணர்களாலே மிகுதியாகச்சொல்லப்பட்ட அந்தவார்த்தைகளை அவர் ஸஹிக்கவேயில்லை. பிறகு, பிரதாபசாலியான ஜாமதக்நியர் காஸ்மீரர்களையும் தரதர்களையும் குந்திதேசத்தரசர்களையும் க்ஷுத்ரகர்களையும் மாலவர்களையும் அங்கர்களையும் வங்கர்களையும் களிங்கர்களையும் விதேஹர்களையும் தாம்ரலிப்தர்களையும் ரக்ஷோவாஹர்களையும் வீதிஹோத்ரர்களையும் த்ரிகர்த்தர்களையும் மார்த்திகாவதர்களையும் சிபிதேசத்தார்களையும் மற்றுமுள்ள அரசர்களையும் அந்தந்த தேசங்களையும் ஆயிரமாயிரமாகக் கூர்மையானபாணங்களினால் ஸம்ஹாரம் செய்தார். கோடிக்கணக்காகவும் லக்ஷக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் கொல்லப்படுகின்ற க்ஷத்ரியர்களுடைய பட்டுப்பூச்சிக்கும் செம்பருத்திப்பூவிற்கும் ஸமமான நிறமுள்ள ரக்தவெள்ளங்களால் தடாகங்களை நிரப்பினார். பார்க்கவர் பதினெட்டுத்தீவுகளை முழுமையையும் தம்வசப்படுத்திக்கொண்டு, விதிப்படி அமைக்கப்பட்டதும் ஸ்வர்ணமயமானதும்

முப்பத்திரண்டுமுழம் வளர்ச்சியுள்ளதுமான வேதியை ஏற்படுத்தி ஸம்பூர்ணமான சிறந்த தக்ஷிணைகளுள்ள பரிசுத்தமான அநேக யாகங்களாலே தேவர்களை ஆராதித்தார். கஸ்யபர் நூற்றுக்கணக்கான எல்லா ரத்நங்களாலும்நிரம்பியதும் அநேகம் கொடி வரிசைகளையுடையதும் கிராமத்திலும் அரண்யங்களிலுமுள்ள பசுக்கூட்டங்களால் நிறைந்தது மான இந்தப்பூமியை ஜமதக்நியின்குமாரரான பரசுராமரிடத்தி லிருந்து பெற்றுக்கொண்டார். பிறகு, பரசுராமர் சிறந்த லக்ஷம் யானைகளைப் பொன்னால் அலங்கரித்துப் பூமியைச் சத்துருக்களில்லாததும் சிஷ்டர்களான இஷ்ட ஜனங்களாலே நிறைந்ததுமாகச்செய்து அஸ்வமேதமஹாயாகத்தில் கஸ்யபருக்குத் தானஞ்செய்தார். பிரபுவும் சூரருமான ராமர் இருபத்தொருமுறை பூமியை க்ஷத்திரியர்களில்லாததாகச் செய்து நூறுயாகங்களாலே தேவர்களைப்பூஜித்து ஸப்தத்வீபங்களோடு கூடின பூமண்டலத்தைப் பிராம்மணர்களுக்கென்றே எண்ணினார். மரீசிகுமாரரான கஸ்யபப்பிராம்மணரும் அதனைப்பெற்றுக்கொண்டு பரசுராமரைப்பார்த்து, 'என்னுடைய ஆஜ்ஞையினாலே இந்தப்பூமியை விட்டு விலகிப்போய்விடும்' என்று சொன்னார். கஸ்யபருடைய வசனத்தினால் யுத்தவீரர்களுள் சிறந்தவரான அந்தப்பரசுராமர் பிராம்மணருடைய கட்டளையை அநுஷ்டிப்பவராகி, ஓர் அம்புபோய்விழும்தூரத்தில் நதிநாதனான ஸமுத்திரத்தை விலக்கிப் பர்வதங்களுள் சிறந்த மஹேந்திரபர்வதத்தை வாஸஸ்தானமாகக்கொண்டார். இவ்வாறு அனேக குணங்களுள்ளவரும் பிருகுகுலத்தில் தோன்றினவர்களுக்குப் புகழை வளர்ப்பவரும் மிகுந்த புகழையும் காந்தியையுமுடையவரும் உன் புண்ணியத்தைக்காட்டிலும் மிகுந்த புண்ணியசாலியுமான அந்த ஜாமதக்னியரே மரிக்கப்போகிறார். யாகஞ்செய்யாதவனும் தக்ஷிணை கொடாதவனுமான உன் புத்திரனைப்பற்றி நீ மனவருத்தமடையவேண்டாம். உத்தமபுருஷர்களுட்சிறந்தவனே! ஸ்ருஞ்சய! தர்மம் ஞானம் வைராக்யம் ஐஸ்வர்யம் ஆகிய நான்கினாலும் உன்னைவிட அதிக மேன்மைபெற்றவர்களும் அனேகவிதமான மங்களங்களால் உன்னைக்காட்டிலும் மிக்க சிறப்பையுடையவர்களுமான இவர்கள் மாண்டார்கள்; மரிக்கவும் போகிறார்கள்' என்று கூறினார்.

---

## எழுபத்தோராவது அத்யாயம்.

## அபிமன்யுவதபர்வம் (தொடர்ச்சி.)



(வியாஸர் யுதிஷ்டிரரை ஸமாதானப்படுத்தித் தமது ஆச்ரமம் சென்றது.)

தர்மநந்தன! புண்யமானதும் நீண்ட ஆயுளைத்தருவதுமான பதினறு அரசர்களுடைய சரித்திரத்தைக்கேட்டு ராஜாவான அந்த ஸ்ருஞ்சயன் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்தான். அப்பொழுது தீனனுகவிருக்கின்ற அந்த ஸ்ருஞ்சயனை நோக்கி மகிமைபொருந்தியவரான நாரதமகரிஷி, 'நான் சொல்லியது உன்மனத்தில் நிலைபெற்றதா? அல்லது சூத்ரஸ்திரீயினுடையபதியை வைத்துச்செய்த சிராத்தம் போல முழுதும் நஷ்டமாயிற்று?' என்று கேட்டார். இவ்வாறு சொல்லக் கேட்ட அந்தஸ்ருஞ்சயன், அப்பொழுது கைகளைக்குவித்துக்கொண்டு, புராதனர்களும் யாகஞ்செய்தவர்களும் ஸம்பூர்ணதக்ஷிணை கொடுத்தவர்களுமான ராஜரிஷிகளைப்பற்றியதும் புத்திரசோகத்தைப்போக்கக்கூடியதும் புகழத்தக்கதும் உத்தமமுமான சரித்திரத்தைக்கேட்டு ஸூர்ய தேஜஸினுலே இருளானது விலக்கப்படுவதுபோல ஆச்சர்யத்தினுலே துக்கமானது விலக்கப்பட்டிருத்தலால் நான் துன்பமற்றவனும் பாவமற்றவனுமாயிருக்கிறேன். யான் என்ன செய்யக்கடவேன்? சொல்லும்' என்று விடையளிக்க, நாரதர், 'தெய்வாதீனமாக நீ புத்திரசோகத்தை விட்டாய். இப்பொழுது நீ விரும்பும் வரனைப் பெற்றுக்கொள். அந்த வரன்களெல்லாம் உனக்கு ஸித்திக்கும். நாங்கள் பொய்வார்த்தை சொல்லுகிறதில்லை' என்று கூறினர். ஸ்ருஞ்சயன், 'மஹரிஷியே! தேவரீர்கள் என்விஷயத்தில் அருளுள்ளவராயிருத்தலாலேயே நான் பரிசுத்தனுக்கப்பட்டேன். பகவானுன நீங்கள் எவன் விஷயத்தில் ப்ரீதியுள்ளவர்களாகிறீர்களோ அவனுக்கு இவ்வுலகத்தில் துர்லபமான வஸ்து ஒன்றுமில்லை' என்று தெரிவிக்க, நாரதர், 'வீணுகச் சத்துருக்களாலே கொல்லப்பட்ட உன்னுடைய பிள்ளையைக் கஷ்டமான நரகத்திலிருந்து எடுத்துப் புரோக்ஷணம்பண்ணப்பட்ட பசுப்போல் மறுபடியும் தருகிறேன்' என்று சொன்னர். பிறகு, ப்ரீதியுள்ளவரான நாரதமஹரிஷியினுலே கொடுக்கப்பட்ட அந்த ஸ்ருஞ்சயனுடைய புத்திரனுனவன் ஆச்சரியகரமான காந்தியுள்ளவனும் குபேரகுமாரனுக்கு ஒப்பானவனுமாகத் தோன்றினன். பிறகு, அரசன் புத்திரனேடுசேர்ந்து பிரீதியுடையவனுனன். ஸம்பூர்ணமான சிறந்த தக்ஷிணைகளுள்ள பரிசுத்தமான யாகங்களாலே தேவர்களையும் பூஜித்தான். புருஷார்த்தங்களை

யிழந்தவனும் பயப்படுகிறவனும் யுத்தஸன்னாஹத்தையறியாதவனும் யாகஞ்செய்யாதவனும் குழந்தையில்லாதவனுமான அந்த ஸ்ருஞ்சய குமாரன் அவரால் திரும்பவும் பிழைத்தான். சூரனும் வீரனும் கிருதார்த்தனுமான அபிமன்யுவோ ஆயிரக்கணக்காகச் சத்துருக்களைக் கொன்று யுத்தரங்கத்தில் முன்புறத்தில் அடிக்கப்பட்டு ஸ்வர்க்கத்தை யடைந்தான். (ஸாதுக்கள்) ப்ரம்மசரியத்தினாலும் ஸந்ததியினாலும் வேதாத்யயனத்தினாலும் இஷ்டங்களான யாகங்களாலும் எந்த வுலகங்களை அடைவார்களோ அந்த அழிவற்றஉலகங்களை உனது புத்திரன் அடைந்துவிட்டான். கற்றறிந்தவர்கள் புண்ணியகர்மாக்களாலே எப்பொழுதும் ஸ்வர்க்கத்தையடைய விரும்புகிறார்களேதவிர ஸ்வர்க்கவாஸிகளாலே ஸ்வர்க்கத்தைவிட்டு இம்மண்ணுலகானது விரும்பப்படுகிறதில்லை. ஆதலால், யுத்தத்தில் கொல்லப்பட்டு ஸ்வர்க்கத்தை யடைந்திருக்கின்ற அர்ஜுனகுமாரனை மீண்டும் இங்கு அழைத்துவர முடியாது. இந்த இஷ்டம் சிறிதும் அடையமுடியாதது. தியானத்தினாலே சுத்தமான அறிவுள்ள யோகிகளும் உத்தமமான யாகங்களை அனுஷ்டிக்கின்ற ஜனங்களும் உக்கிரமான தவத்தைச் செய்கின்ற மஹரிஷிகளும் எந்தக்கதியை யடைவார்களோ அக்ஷயமான அந்தக்கதியை உன்னுடைய குமாரன் அடைந்தான். வீரனை (அபிமன்யு) மாணத்திற்குப் பிறகு, திரும்பவும் ஸம்பத்தை அடைந்து அமிர்தமயமான தன் கிரணங்களோடு அரசன்போல் விளங்குகிறான். பிராம்மணர்களுக்குத் தகுந்ததான அந்தச்[1] சந்திரனுடையதான தன் சரீரத்தையடைந்த அந்த அபிமன்யு துக்கிக்கப்படத்தக்கவனல்லன். இவ்விதம் அறிந்து மனவுறுதியுள்ளவனாகி வியஸனமடையாதே. தைரியத்தைக்கைக்கொள். தோஷமற்றவனே! உயிருடனிருக்கும் மனிதன் விஷயத்தில் துக்கித்தல்தகும்; ஸ்வர்க்கத்தையடைந்தவன் விஷயத்தில் துக்கித்தல் தகாது. மகாராஜனே! துக்கப்படுகிறவனுக்குத் துக்கமே விருத்தியடையும். ஆதலால், விவேகியானவன் சோகத்தைவிட்டு நன்மையையடைவதின்பொருட்டே முயற்சிசெய்யவேண்டும். கற்றறிந்தவர்கள்[2] ஸந்தோஷம், ப்ரீதி, ஆனந்தம், ப்ரியம், மனோகாம்பீர்யம் இவைகளைச் சுத்தஸ்வபாவமென்று கூறுகிறார்கள். துக்கமானது அசுத்த ஸ்வபாவமென்று சொல்லப்படுகிறது. இவ்விதம் நீயறிந்து எழுந்திரு. கலக்கமற்ற மனத்தையுடையவனாகஇரு. வியஸனப்படாதே.

---

[1] சந்திரனுடைய புத்திரனை புதனுடைய அம்சத்தினால் அபிமன்யு பிறந்ததினால் இவ்வாறு கூறப்பட்டது.

[2] இங்கு நீலகண்டவ்யாக்யானபாடம் சிறிது வேறுபடுகிறது.

மிருத்யுவினுடைய உத்பத்தியும், ஒப்பற்றவைகளான தவங்களும், ப்ரம்மதேவரால் சொல்லப்பட்டிருக்கிற ஸர்வபூதஸமத்வமும் உன்னால் கேட்கப்பட்டன. மரித்தவனான ஸ்ருஞ்சய குமாரன் பிழைப்பு மூட்டப்பட்டவனானனென்ற விஷயமும் உன்னால்கேட்கப்பட்டது. மஹாராஜ! இவ்விதம் அறிந்த நீ வியஸனமடையாதே. நான் போகிறேன்' என்று சொன்னார். இவ்வளவு சொல்லிவிட்டு வியாஸபகவான் அவ்விடத்திலேயே மறைந்தார். வாக்குக்களுக்கு நாதரும் மஹாமகிமையுள்ளவரும் மேகமற்ற ஆகாயத்தின் காந்திபோன்ற காந்தியையுடையவரும் புத்திமான்களுள் சிறந்தவருமான வியாஸர், யுதிஷ்டிரரை ஸமாதானப்படுத்திச் சென்றவுடன், வித்வானான யுதிஷ்டிரர் மஹேந்திரனுக்குச்சமமான பராக்ரமத்தையுடையவர்களும் நியாயவழியினாலே அடையப்பட்ட பொருளையுடையவர்களுமான பூர்வராஜசிரேஷ்டர்களுடைய அவ்விதமான யாகஸம்பத்தைக்கேட்டு மனத்தினாலே புகழ்ந்து சோகத்தை விட்டவரானார். 'தனஞ்சயனைக்குறித்து நான்என்ன சொல்வேன்?'என்று மறுபடியும் மனக்கவலையையடைந்து தமக்குள் ஆலோசிக்கலானார்" என்று கூறினான்.

அபிமன்யுவதபர்வம் முற்றிற்று.

---

## எழுபத்திரண்டாவது அத்யாயம்.

## பிரதிஜ்ஞாபர்வம்.

(அர்ஜுனன் அபிமன்யுவைப்பற்றிப் புலம்பியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! தனஞ்சயன் ஸம்சப்தகர்களோடு போர்புரிந்துகொண்டிருக்கவும், பலசாலிகளுள் சிறந்தவனும் பாலனுமானஅபிமன்யுவும் (பகைவர்களால்) கொல்லப்பட்டிருக்கவும், மஹரிஷிகளுள்உத்தமரான வியாஸரும் போகவே, துக்கத்தாலே பீடிக்கப்பட்ட மனத்தையுடையவர்களான அந்த யுதிஷ்டிரனும் மற்றப் பாண்டவர்களும் பிறகு என்னசெய்தார்கள்?வானரக்கொடியையுடையவனான அர்ஜுனன் ஸம்சப்தகர்களிடமிருந்து எவ்வாறு திரும்பினான்? புத்திரனாகிறநெருப்பு அவிந்ததென்று அர்ஜுனனுக்கு எவனால் சொல்லப்பட்டது? இவையெல்லாவற்றையும் இப்பொழுது எனக்கு உண்மையாகச் சொல்லவேண்டும்"என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! பிறகு, கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் எல்லா ஸைன்யங்களையும் அக்நிபோலஎரிக்கின்றவனுமான அர்ஜுனன் அந்த

ஸம்சப்தகர்களிடமிருந்து திரும்பினவிதத்தைக் கேளும். ஐயா! ஸூர்யன் அஸ்தமிக்க மாலைக்காலமும் நெருங்கியவுடன், தன்பாசறையை அடையுமுன் அர்ஜுனனுடைய மனமானது கெடுதலைத்தெரிவிக்கின்ற துர்நிமித்தங்களாலே அடைந்த நிலைமையையும் கிருஷ்ணனாலே சொல்லப்பட்டதையும் பிள்ளையாகிய நெருப்பானது அவிக்கப்பட்டதென்று அந்த அர்ஜுனனுக்குச் சொல்லப்பட்டதையும் ஸவிஸ்தாரமாகச் சொல்லுகிறேன்; அவைகளெல்லாவற்றையும் என்னிடத்திலிருந்து கேளும். பரதஸ்ரேஷ்டரே! கோரமானதும் பிராணிகளுக்கு நாசத்தை யுண்டுபண்ணுகின்றதுமாயிருந்த அந்தப்பகல் முடியவும், ஸூர்யன் அஸ்தமிக்கவும், ஸந்தியாகாலம் வரவும், எல்லோர்களும் வாஸஸ்தானத்திற்குச்செல்லவும், சோபையுள்ளவனான வானரத்வஜன், திவ்யாஸ்திரங்களாலே ஸம்சப்தகர்கூட்டங்களைக்கொன்று வெற்றிபெற்று ஜயத்தைத் தருவதான ரதத்தின்மீதேறித் தன்பாசறையை நோக்கிச்சென்றான். அவ்வாறு சென்றுகொண்டே அர்ஜுனன் பாஷ்பத்துடன்கூடிய குரலுள்ளவனாகிக் கோவிந்தரை நோக்கி, 'கேசவரே! எந்தக்காரணத்தினால் என்மனம் பயத்தையடைகிறது? வாக்கும் தடுமாறுகிறது? அச்சுதரே! தேரில் நான் நிலைபெறவில்லை. அவயவங்கள் வாடுகின்றன. என்னை வந்து அடைந்திருக்கின்ற அனிஷ்டமானது என்மனத்தை விட்டு விலகவில்லை. பூமியிலும் திக்குக்களிலும் மிகக்கொடிய உத்பாதங்கள் என்னைப்பயமுறுத்துகின்றன; பலவாறாகக்காணப்படுகின்றன. எல்லாமே அனர்த்தத்தைச் சொல்லுகின்றன. மந்திரிகளோடுகூடினவரும் எனக்குக்குருவுமான யுதிஷ்டிர ராஜர் க்ஷேமமாக இருப்பாரா?' என்று வினவ, வாஸுதேவர், 'பாண்டவ! ப்ராதாக்களோடுகூடின தர்மராஜருக்குநிச்சயமாக க்ஷேமமே;நீ வியஸனப்படாதே. அவ்விடத்தில் வேறு ஏதாவது ஒருவித அனிஷ்டம் உண்டாகியிருக்கவேண்டும்' என்று கூறினார். வீரர்களும் சத்துருஸம்ஹாரம்செய்தவர்களுமான வாஸுதேவரும் அர்ஜுனனும் பிறரால்செய்யமுடியாதகார்யத்தைச்செய்துவிட்டுப் பிறகு மாலைக்கடன்களைச்செய்து வீரர்களின் உயிரைமாய்க்குமிடமான யுத்தரங்கத்தில் நடந்தவிருத்தாந்தத்தைப் பேசிக்கொண்டு ரதத்தின்மீதேறித் தம்சேனை தங்கியிருக்குமிடத்தைநோக்கிச் சென்றார்கள். பிறகு, பீபத்ஸுவானவன உருவமழிந்த சித்திரம்போன்ற தன்பாசறையைப்பார்த்து மனநிலைமைதவறினவனாகிக் கிருஷ்ணனைப் பார்த்து, 'ஜநார்த்தனரே! இப்பொழுது மங்களகரமான வாத்தியங்கள் முழங்கவில்லை. துந்துபித்வனிகளோடு தூர்யவாத்தியங்களோடுகூடின சங்கத்வனிகளும் கேட்கப்படவில்லை, சம்யையென்னும் தாளத்தின்

ஒலிகளுடன்கூடின வீணைகள் இப்பொழுது வாசிக்கப்படவேயில்லை. மங்களகரமும் ஸ்துதிகளோடுகூடியவைகளும் மனோஹரமுமான கானங்களை என்சேனைகளிலுள்ளவந்திகள் பாடவுமில்லை; படிக்கவுமில்லை. யுத்தவீரர்களும் என்னைப்பார்த்துவிட்டுத் தலைகுனிந்து திரும்பிவிடுகிறார்கள். முன்போலக் கார்யங்களைச்செய்து என்னைக்குறித்து அபிவாதனஞ்செய்கிறார்களில்லை. மாதவரே! இப்பொழுது என்ஸஹோதரர்கள் க்ஷேமமாகஇருப்பார்களா? மனவருத்தமுற்றிருக்கின்ற சுற்றத்தார்களைக்கண்டு என்மனம் தெளிவடையவில்லை. (அடுத்தவர்களுக்கு) கௌரவத்தைக்கொடுக்கின்ற அச்யுதரே! பாஞ்சாலராஜனுக்கும் விராடனுக்கும் ஸமஸ்தமான யுத்தவீரர்களுக்கும் எனக்கும் குறைவுநேரிடாமலிருக்குமா? இப்பொழுது ஸுபத்ராபுத்திரனான அபிமன்யு, பிராதாக்களோடு ஸந்தோஷத்துடன் சிரித்துக்கொண்டு யுத்தபூமியிலிருந்துவருகின்றஎன்னைத் தகுந்தபடி எதிர்கொண்டுவரவில்லை' என்று சொன்னான்.

இவ்விதமாகப் பேசிக்கொண்டு அவ்விருவரும் தங்கள் பாசறையிற்சென்று பாண்டவர்களை மிக்க நிலைமாறினவர்களாகவும் ப்ரஜ்ஞையிழந்தவர்களாகவும் கண்டார்கள். அர்ஜுனன் தன் பிராதாக்களையும் புத்திரர்களையுங்கண்டு ஸௌபத்ரனைக்காணாமல் மனவருத்தமுற்று இந்தவசனத்தைச்சொல்லலானான். 'உங்களெல்லோருக்கும் முகத்தினுடைய நிறமானது தெளிவில்லாமல் காணப்படுகிறது. அபிமன்யுவையும் நான் பார்க்கவில்லை. என்னைக்கண்டு நீங்கள் ஸந்தோஷவார்த்தைகூறவில்லை. துரோணர் பத்மவியூகம் வகுத்திருக்கிறாரென்று நான்கேட்டிருந்தேன். குழந்தையான ஸௌபத்ரனைத்தவிர அதனையுடைக்கிறவன் உங்களுள் ஒருவனுமில்லை. என்றால் அவனுக்கு வ்யூகத்தினின்று வெளியில்வருமுபாயமானது உபதேசிக்கப்படவில்லை. உங்களாலே அந்தப்பாலன் பகைவர்படையினுள் புகும்படி செய்யப்படாமலிருந்தானா? யுத்தத்தில் சத்துருவீரர்களை வதம்செய்கின்றவனும் சிறந்தவில்லாளியுமான ஸௌபத்ரன் சத்துருக்களுடையவியூகத்தையுடைத்து அநேகவீரர்களாலே ரணகளத்தில் கொல்லப்படாமலிருக்கிறானா? சிவந்தகண்களையுடையவனும் நீண்டகைகளையுடையவனும் மலைகளிலுள்ள ஸிம்மம்போன்றவனும் உபேந்திரனையொத்தவனுமான என் குழந்தையைப்பற்றின விருத்தாந்தத்தைச் சொல்லுங்கள். எவ்வாறு போரில் கொல்லப்பட்டான்? ஸுகுமாரனும் பெரிய வில்லைக் கையில்கொண்டவனும் இந்திரகுமாரனான எனக்குப்புத்திரனும் எப்பொழுதும் என்னுடைய அன்பிற்கு உரியவனுமான அபிமன்யுவைப்

பற்றிச் சொல்லுங்கள். யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்பட்டான்? ஸுபத்ராதேவிக்குப் பிரியனானபுத்திரனும் திரௌபதிக்கும் கேசவருக்கும் என்தாயாரான குந்திதேவிக்கும் எப்பொழுதும் பிரியனுமான, அபிமன்யுவைக் காலத்தினால் புத்திமயக்கங்கொண்டவன் கொன்றான்? பராக்ரமத்தாலும் சாஸ்திரஜ்ஞானத்தாலும் மற்றப் பெருமைகளாலும் மஹாத்மாவும் விருஷ்ணிகளுள் வீரருமான ஸ்ரீகேசவருக்கு ஸமமானஅவன் யுத்தத்தில் எவ்வாறு கொல்லப்பட்டான்? வ்ருஷ்ணிகுலத்தில் தோன்றியவளான ஸுபத்ராதேவிக்கு ப்ரியனும் சௌர்யமுள்ளவனும் என்னால் எப்பொழுதும் லாலனம் பண்ணப்பட்டவனுமான புத்திரனை நான்பாராமல்போனால் யமலோகஞ்செல்வேன். மிருதுவாயும் சுருண்டுமிருக்கின்ற நுனிமயிருள்ளவனும் பாலனும் மான்குட்டியின்கண்போன்ற கண்ணையுடையவனும் மதித்தயானையின் பராக்ரமம்போன்ற பராக்ரமத்தையுடையவனும் ஸிம்மக்குட்டிபோலப் பாய்கிறவனும் புன்சிரிப்புடன் பேசுகின்றவனும் நன்றாகப்பழக்கப்பட்டவனும் எப்பொழுதும் பெரியோர்களுடைய கட்டளையைச்செய்கின்றவனும் இளமைப்பருவத்திலும் ஒப்பற்றகாரியத்தைச்செய்கின்றவனும் இன்சொல்லுள்ளவனும் மாத்ஸரியமில்லாதவனும் அதிகமான உத்ஸாஹமுள்ளவனும் மிக்கபுஜபலமுடையவனும் தாமரைப்புஷ்பம்போல நீண்ட கண்களையுடையவனும் தன்னையண்டினவர்களிடத்தில் தயைபாராட்டுகிறவனும் இந்திரியங்களையடக்கினவனும் நீசர்களை அனுஸரியாதவனும் நன்றியறிவுடையவனும் ஞானத்தையுடையவனும் அஸ்திரவித்தையில் தேர்ச்சியடைந்தவனும் யுத்தத்தில் பின்வாங்காதவனும் யுத்தம்செய்வதில் மகிழ்பவனும் சத்துருக்களுக்கு எப்பொழுதும் பயத்தைவிருத்திபண்ணுகின்றவனும் தன்னைச்சேர்ந்தவர்களுக்கு ப்ரியத்தையும் நன்மையையும் செய்வதில் முயற்சியுடையவனும் தகப்பன்மார்களுக்கு ஜயத்தை விரும்புகின்றவனும் யுத்தத்தில் (பகைவர்களை) முதலில் அடிக்காதவனும் பரபரப்பில்லாதவனுமான என்குமாரனை யான் பாராவிடில் யமலோகம்செல்வேன். ரதிகர்கள் எண்ணப்படுங்காலத்தில் மஹாரதனாக எண்ணப்பட்டவனும் யுத்தத்தில் என்னிலும் அரைமடங்குமேலான குணங்களுள்ளவனும் தருணனும் பாஹுபலமுள்ளவனும் எப்பொழுதும் ப்ரத்யும்னனுக்கும் கேசவருக்கும் எனக்கும் பிரியனாயிருப்பவனுமான புத்திரனைப் பாராவிடில் நான் யமலோகம்செல்வேன். அழகான மூக்கும் நல்ல நெற்றியும் நல்ல கண்களும் புருவங்களும் உதடுகளுமுள்ள அவனுடையமுகத்தைப் பாராமலிருக்கின்ற என்னுடைய

மனத்திற்கு ஆறுதலேது? தந்தியினுடையநாதம்போல் சுகத்தையுண்டு பண்ணுகின்றதும் மனோரம்யமானதும் ஆண்குயில் கூவுவதுபோன்றது மான அவனுடைய குரலைக்கேளாமலிருக்கிற என்மனத்திற்கு ஆறுதலேது? தேவர்களாலுமடையமுடியாததும் நிகரற்றதுமான அந்தச் சூரனான என்புத்திரனுடையவடிவத்தைப் பாராமலிருக்கின்ற என் மனத்திற்கு ஆறுதலேது? [1] அபிவாதனம் பண்ணுவதில் ஸமர்த்தனும் தகப்பன்மார்களுடையவசனத்தில் பற்றுதலுடையவனுமான அவனை இப்பொழுது யான் பாராவிடில் என்மனத்திற்கு ஆறுதலேது? ஸுகுமாரனும் எப்பொழுதும் வீர்யமுள்ளவனும் மிகச்சிறந்தபடுக்கையில் படுக்கத்தகுந்தவனும் நாதனுடையவர்களுள் சிறந்தவனுமான என்குழந்தை பூமியில் அநாதன்போல நிச்சயமாகப்படுத்திருக்கிறான். முன்பு, சயனத்தில் படுத்திருக்கையில், உத்தமஸ்த்ரீகளால் நன்றாகச் சூழப்பெற்றிருந்த மஹாபுருஷனான அபிமன்யு, இப்பொழுது ஆயுதத்தால் அடிபட்டுப் பூமியில் புரட்டித்தள்ளப்பட்ட அங்கங்களையுடையவனாக அவனை அமங்களமான நரிகள் சூழ்ந்திருக்கின்றன. தூங்குகின்ற எவன் முன்பு ஸூதர்களாலும் மாகதர்களாலும் வந்திகளாலும் எழுப்பப்படுவனோ அவனை இப்பொழுது துஷ்டமிருகங்கள் விகாரமான குரல்களாலே நிச்சயமாக எழுப்புகின்றன. குடைநிழலுக்குத் தகுந்ததும் மங்களகரமுமான அந்த அபிமன்யுவினுடைய அந்த முகத்தை இப்பொழுது யுத்தபூமியிலுண்டான புழுதியானது நிச்சயமாக ஒளியை இழந்ததாகச்செய்யப்போகிறது. ஆ! ஆ! குழந்தாய்! புத்திரனைப்பார்க்கும் விஷயத்தில் எப்பொழுதும் திருப்தியடையாதவனும் பாக்யஹீனனுமான என்னிடத்திலிருந்து காலனாலே பலாத்காரமாக எவ்வாறுகொண்டுபோகப்பட்டாய்? எப்பொழுதும் புண்ணியவான்களால் அடையத்தகுந்த ஸ்தானமான அந்தஸம்யமினீநகரமும் உன் காந்தியினாலே மோகமடையும்படிசெய்விக்கப்பட்டு, நிச்சயமாக மிக்க ரம்யமாகவிளங்கும். விரும்பத்தக்க அதிதியாகவந்திருக்கின்றவனும் பயமற்றவனுமான உன்னை வைவஸ்வதனும் வருணனும் இந்திரனும் குபேரனும் நிச்சயமாகப்பூஜிப்பார்கள்' என்றான்.

இவ்வாறு பலவாறாகப்புலம்பிக் கப்பலுடைந்த வியாபாரிபோல மிகுந்த துக்கத்தால் கவரப்பட்டவனாகி யுதிஷ்டிரரைப்பார்த்து நீரும் பீமஸேனனும் த்ருஷ்டத்யும்னனும் இந்திரனுடைய பராக்கிரமம்

[1] தான் பெரியோர்களைவணங்கி அவர்கள் தன்னை ஆசீர்வதிக்கும்படி செய்வது.

போன்ற பராக்ரமத்தையுடைய ஸாத்யகியும் ஜீவித்திருக்கையில், ஸுப
த்ரா புத்திரனை அபிமன்யு எவ்வாறு பகைவர்களால் கொல்லப்பட்
டான்? குருநந்தனரே! அந்த அபிமன்யு சத்ருக்களுக்குத் துன்பத்தை
யுண்டுபண்ணி யுத்தத்தில் எதிர்த்துநின்று உத்தமர்களானபோர்வீரர்
களோடு யுத்தஞ்செய்து ஸ்வர்க்கமடைந்தானு? அவன் யுத்தத்தில்
ஸன்னாகமுடையவர்களான புருஷசிரேஷ்டர்களோடு ஸஹாயமற்றவ
னாக யுத்தஞ்செய்து ஸஹாயத்தைவிரும்பி நிச்சயமாக என்னை நினைத்
திருப்பான். பாலனை அவன் அம்புகளால் பீடிக்கப்பட்டு, 'ஐயா!
எனக்குநேரில் விரைந்து ஓடிவாரும்' என்று அலறிக்கொண்டே குரூரர்
களான பகைவர்களால் யுத்தரங்கத்தில் வீழ்த்தப்பட்டானென்றே நான்
நினைக்கிறேன்; அல்லது என்னிடத்திலிருந்து பிறந்தவனும் மாதவரு
டைய மருமானும் ஸுபத்திரையிடத்தில் ஜனித்தவனுமான அவன்
இவ்வாறும்சொல்லக்கூடியவனல்லன். நீண்டகைகளுள்ளவனும் சிவந்த
கண்களையுடையவனுமான என் குழந்தையைப் பாராமலிருக்கின்ற என்
மனம் இரண்டாக வெடிக்காமையால் நிச்சயமாகவே சிறந்த வஜ்ரத்தி
னுல் செய்யப்பட்டு மிக்க உறுதியுள்ளதாயிருக்கிறது. வாஸுதேவ
ருக்கு மருமானும் எனக்குப்புத்ரனும் பாலனுமான அபிமன்யுவின்
மீது குரூரர்களான மஹாவில்லாளிகள் மர்மஸ்தானத்தைப் பிளக்கக்
கூடிய அம்புகளை எவ்வாறு ப்ரயோகித்தார்கள்? மனவுறுதிகுன்றாத
எவன் பகைவரையழித்துத் திரும்பிவருகின்ற என்னை நாள்தோறும்
எதிர்கொண்டுவந்து மகிழ்விப்பனே அவன் இப்பொழுது என்னை ஏன்
பார்க்கவில்லை? நிச்சயமாகவே அந்த அபிமன்யு தள்ளப்பட்டு ரக்தத்
தால் நனைக்கப்பட்டு வீழ்த்தப்பட்ட ஸூர்யன்போல அங்கங்களாலே
பூமியை ப்ரகாசிக்கச்செய்துகொண்டு பூமியில் படுத்திருக்கிறான்.
எவள், யுத்தத்தில் ஓடாதவனை தன்புத்திரன் யுத்தத்தில் கொல்லப்
பட்டானென்பதைக்கேட்டுத் துக்கத்தால் பீடிக்கப்பட்டு நாசமடைவ
ளோ அப்படிப்பட்ட ஸுபத்திரையைப்பற்றி வியஸனிக்கிறேன். அபி
மன்யுவைக்காணுதவளான ஸுபத்திரை என்னைப்பார்த்து என்ன
சொல்லுவள்? துக்கத்தால் பீடிக்கப்பட்ட அந்தத்திரௌபதியைக்
கண்டும் நான் என்னசொல்வேன்? அழுகின்றவளும் துக்கத்தால்பீடிக்
கப்பட்டவளுமான மருமகளைக்கண்டும் ஆயிரம் துணுக்குக்களாகாமை
யால் என்நெஞ்சமானது வஜ்ரத்தினுல் செய்யப்பட்டுள்ளது. மகிழ்ச்சி
யடைந்த தார்த்தராஷ்டிரர்களுடைய ஸிம்மநாதமானது என்னுல் கேட்
கப்பட்டது. மஹாபுத்திசாலியும் வைஸ்யஸ்திரீயினிடத்தில் பிறந்த
வனுமான யுயுத்ஸுவும், 'தர்மத்தை அறியாத அரசர்களே! நீங்கள் சக்தி

யற்றவர்களாயிருந்துகொண்டு மஹாபலசாலியான பார்த்தனுடைய குமாரனைக்கொன்றுவிட்டு ஏன்வெட்கமடையாமலிருக்கிறீர்கள்? பலத்தைப்பாருங்கள். யுத்தத்தில் அந்தக்கேசவர் அர்ஜுனன் இருவருக்கும் அப்ரியமான கார்யத்தைச்செய்துவிட்டு ஸந்தோஷமடைந்து, துக்க காலம்நேர்ந்திருக்கும்பொழுது ஏன் ஸிம்மம்போலக் கர்ஜனம்செய்கிறீர்கள்? நீங்கள்செய்த கொடியசெய்கையினுடைய பலனானது சீக்கிரத்தில் உங்களை அடையப்போகிறது. கடுமையான அதர்மமல்லவோ உங்களால் செய்யப்பட்டது. அஃது எவ்வாறு நெடுங்காலம் பயனைக்கொடாமலிருக்கும்?' என்று சத்துருவீரர்களைப்பார்த்து நிந்தித்துச்சொல்லிக் கோபத்தோடும் துக்கத்தோடும் ஆயுதங்களை எறிந்துவிட்டு (யுத்தரங்கத்தைவிட்டு) விலகிவிட்டானாம். இந்தவிஷயம் கிருஷ்ணனால் கேட்கப்பட்டதாம். வாஸுதேவரே! யுத்தகளத்தில் யாதுகாரணம்பற்றி இந்த விருத்தாந்தத்தை நீர் என்னிடம்சொல்லவில்லை? அப்பொழுதே மகாரதர்களும் க்ரூரர்களுமான அந்த எல்லாவீரர்களையும் நான் எரித்திருப்பேன்' என்றுகூறினன்.

புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனும் நீர்நிறைந்தகண்களையுடையவனும் கவலையுற்றவனும் [1] புத்திரவிஷயமான மனோவியாதி கொண்டவனும் ஸஹிக்கமுடியாத துக்கத்தையுடையவனுமான அந்த அர்ஜுனனை வஸுதேவகுமாரரான ஸ்ரீகிருஷ்ணர் தடுத்து, 'நீ இவ்வாறு துக்கிக்கக்கூடாது' என்று சொன்னர். விசேஷமாக க்ஷத்திரியர்களாகத்தோன்றிய நமக்குச் சஸ்திரங்களாலேயே ஜீவனம். யுத்தத்தில் பின்வாங்காத சூரர்களனைவருக்குமே இதுதான்வழி. புத்திசாலிகளுள் உத்தமனான அர்ஜுன! 'எல்லாச்சாஸ்திரங்களும் கற்றறிந்தவர்களாலே, பின்வாங்காமல் யுத்தஞ்செய்கின்ற சூரர்களுக்கு இதுதான் கதி'என்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பின்னிடாமல் யுத்தஞ்செய்கிற சூரர்களுக்கு யுத்தத்தில் மரணம்நிச்சயமன்றோ? அபிமன்யு புண்ணியஞ்செய்கிறவர்களுக்குரிய உலகங்களையடைந்தான்; ஸம்சயமில்லை. பரதர்களுள் சிறந்தவனே! சத்துருக்களுடைய கர்வத்தைப்போக்குகின்றவனே! 'யுத்தத்தில் எதிர்த்து மரணத்தையடைவோமா' என்கிற இந்த விஷயம் எல்லாவீரர்களாலும் விரும்பப்படுகிறது. அந்த அபிமன்யுவும் யுத்தகளத்தில் வீர்யமுள்ளவர்களும் மஹாபலசாலிகளுமான ராஜகுமாரர்களைக்கொன்று போரில் எதிர்த்துநின்றுகொண்டே வீரர்களால் விரும்பப்பட்ட மரணத்தையடைந்தான். புருஷஶ்ரேஷ்ட! நீ வியஸனை

---

[1] கூறியது கூறலாக ஒருசொல் விடப்பட்டது.

மடையாதே. தார்மிகர்களான பூர்வபுருஷர்களாலே க்ஷத்ரியர்களுக்கு யுத்தத்தில் நாசமடைவது ஸநாதனமான தர்மமென்று ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. பாரதகுலோத்தம! நீ அதிக துக்கமுள்ளவனானால் இந்த உன் பிராதாக்கள் அரசர்கள் உன்னுடைய ஸ்நேஹிதர்கள் ஆகிய எல்லாரும் வாட்டத்தை அடைவார்கள். கௌரவத்தைக் கொடுக்கிற வனே! இவர்களை நல்வார்த்தையினால் ஸமாதானப்படுத்து. அறியத் தக்கது உன்னாலறியப்பட்டிருக்கிறது; நீ சோகத்தைப் பாராட்டத் தக்கவனல்லை' என்று கூறினார்.

ஆச்சரியமான செய்கையுள்ள ஸ்ரீ கிருஷ்ணனாலே இவ்வாறு ஸமா தானப்படுத்தப்பட்ட பார்த்தன், பிறகு தன்ஸஹோதரர்களையெல்லாம் பார்த்துத் தழுதழுத்த குரலுடன் அப்பொழுது சிலவார்த்தைகளைச் சொல்லலானான். 'தீர்க்கமான கையையுடையவனும் பெரிய தோளை யுடையவனும் தாமரைமலர்போன்ற நீண்ட கண்ணையுடையவனுமான அந்த அபிமன்யு மரித்ததை நடந்தபடி நான் கேட்கவிரும்புகிறேன். என்புத்திரனைக்கொன்ற அவர்கள் யுத்தகளத்தில் என்னால் யானைக ளோடும் தேர்களோடும் குதிரைகளோடும் கொல்லப்படுவதை வீரர் கள் நிச்சயமாக விரைவில் பார்க்கப்போகிறார்கள். அஸ்திரவித்தையில் ஸமர்த்தர்களான நீங்களெல்லோரும் ஆயுதபாணிகளாக இருக்கையில் ஸுபத்திராபுத்திரன் வஜ்ரபாணியான இந்திரனோடெதிர்த்துப் போர் புரிந்தாலும் எவ்வாறு மரணமடையக்கூடும்? என்புத்திரனை ரக்ஷிக்கும் விஷயத்தில் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் இவ்வண்ணம் அசக்தர்களென்று யான் அறிந்திருப்பேனாயின் மஹாயுத்தத்தில் நானே அவனைக் காப்பாற்றியிருப்பேன். தேரின்மீதுள்ள நீங்கள் அம்பு மழைகளைப் பொழிந்துகொண்டிருக்குங்காலத்தில், உங்களை வீர்யமற்ற வர்களாகச்செய்து சத்துருக்களால் அபிமன்யு எவ்வாறு கொல்லப் பட்டான்? நீங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அபிமன்யு வதம்பண்ணப்பட்டதனால் உங்களுக்குப் பௌருஷமுமில்லை; பராக்ர மமுமில்லை. ஆச்சரியம்! ஆச்சரியம்!! யான் மிக்க பலமற்றவர்களும் பயமுள்ளவர்களும் மனஉறுதியற்றவர்களுமான உங்களை ஏவிச் சென்ற காரணத்தினால், என்னையே நான் நிந்தித்துக்கொள்ளுகிறேன். அன்றி யும், என்புத்திரனைக்காப்பாற்றாதவர்களான உங்களுக்குக் கவசங்களும் சஸ்திரங்களும் ஆயுதங்களும் வீண் அலங்காரமே. உங்களுக்கு வாக்குக் கள் ஸபைகளில் பேசுவதற்கே' என்றான். பீபத்ஸுவானவன் இந்த வாக்கியத்தைச் சொல்லிவிட்டுப் பிறகு உத்தமமான கத்தியைக் கையில் பிடித்து நின்றான்; ஒருவனாலாவது பார்ப்பதற்குமுடியாமலிருந்தான்

யுமனப்போலக் கோபங்கொண்டு அடிக்கடி பெருமூச்சுவிடுகின்றவனும் வஜ்ராயுதத்தைக்கையில்கொண்ட மஹாபுஜங்களையுடைய மஹேந்திரனைப்போலிருக்கின்றவனும் புத்திரசோகத்தால் வருந்திக் கண்ணீர் நிறைந்தமுகத்தையுடையவனுமான அந்த அர்ஜுனனைப்பார்த்து, அப்பொழுது வாஸுதேவரையும் மூத்தவரான யுதிஷ்டிரரையும் தவிர மற்ற நண்பர்கள் பேசுகிறதற்காவது பார்க்கிறதற்காவது சக்தியற்றவர்களானார்கள். ஹிதர்களான அவ்விருவர்களும் எல்லாநிலைமைகளிலும் அர்ஜுனனுடைய மனத்தை அனுஸரித்தவர்கள். பஹுமானத்தினாலும் ப்ரீதியினாலும் அவ்விருவர்களும் அர்ஜுனனோடு பேசுவதற்குத் தகுந்தவர்கள். பிறகு, புத்திரசோகத்தினாலே மிகுந்த துன்பமடைந்த மனத்தையுடையவனும் தாமரைமலர்போன்ற கண்ணையுடையவனும் கோபமுண்டவனுமான அர்ஜுனனைநோக்கி யுதிஷ்டிரராஜர் பின்வரும் வசனத்தைச் சொல்லலானார்.

---

## எழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் அபிமன்யு மரணமடைந்தவிதத்தை அர்ஜுனனுக்குக் கூறியதும் அர்ஜுனன் ஜயத்ரதனைக்கொல்வதற்குச் சபதஞ் செய்ததும்.)

யுதிஷ்டிரர், 'ஓ! மிக்க புஜபலமுள்ளவனே! ஸம்சப்தகர்களுடைய படையைநோக்கி நீ போனவுடன், துரோணாசாரியர் என்னைப் பிடிக்கும்விஷயத்தில் உக்ரமான முயற்சியைச் செய்தார். பிறகு, அந்த மஹாயுத்தத்தில் ஸேனையை அணிவகுத்துக்கொண்டு முயற்சிசெய்கின்ற துரோணரை நாங்கள் சேனைகளோடுகூடி எதிரணிவகுத்து வன்மையுடன் எதிர்த்துப் போர்புரிந்தோம். தடுக்கப்படுகின்ற அவர், ரதிகர்களால் நான் நன்றாகப் பாதுகாக்கப்பட்டிருக்கையில், கூர்மையுள்ள அம்புகளாலே எங்களை ஹிம்ஸித்துக்கொண்டு வேகமாக எதிர்த்துவந்தார். அவ்வாறு அவரால் பீடிக்கப்படும் நாங்கள் அவருடையபடையை யுத்தத்தில் பார்ப்பதற்கும் சக்தியற்றவர்களாயிருக்கையில் அந்த ஸைன்யத்தைப் பிளப்பதற்கு எவ்வாறு சக்தியுள்ளவர்களாவோம்? பிறகு, நான் ரதிகர்களுள் ஒப்பற்றவனான அந்த அபிமன்யுவை நோக்கி, 'இந்தத் துரோண ஸைந்யத்தைப் பிளந்து எங்களுக்கு வழியை உண்டுபண்ணு' என்று சொன்னேன். அவ்வாறு எம்மால் ஏவப்பட்ட அந்த அபிமன்யு வீர்ய

முள்ள நல்லகுதிரைபோலப் பொறுக்கத்தகாததாயிருந்தாலும் அந்தப் பாரத்தைப் பொறுப்பதற்கே ஆரம்பித்தான். உன்னுடைய அஸ்திர மந்திரோபதேசத்தோடு வீர்யத்தையுமுடையவனும் பாலனுமான அந்த அபிமன்யு கருடன் ஸமுத்திரத்தில் ப்ரவேசிப்பதுபோல அந்தப் படையில் புகுந்தான். வீரனான ஸாத்வதீபுத்திரனை ரணகளத்தில் அப்படிப் பட்ட நாங்களும் பின்தொடர்ந்துபோய், அந்தச்சேனையில் அவன் நுழைந்த வழியினாலேயே நாங்களும் நுழைய எண்ணங்கொண்டோம். அப்பா! பிறகு, அல்பனாகிய ஸிந்துராஜனான ஜயத்ரதன் ருத்ரருடைய வரதானத்தினாலே எங்களனைவரையும் தடுத்துவிட்டான். பிறகு, ஸுபத்ராபுத்திரனை, துரோணரும் கிருபரும் கர்ணனும் துரோணபுத்திரரும் கோஸலராஜகுமாரனும் க்ருதவர்மாவுமாகிய ஆறுரதிகர்களும் சூழ்ந்துகொண்டார்கள். மஹாரதர்களான அவ்வெல்லோராலும் யுத்த களத்தில் சூழப்பட்ட பாலன், வல்லமையுடன் மிக்க முயற்சிசெய்தும் கூட அநேகவீரர்களாலே ரதத்தையிழந்தவனாகச்செய்யப்பட்டான். பிறகு, அவ்வாறு அவர்களால் விரைவாக ரதத்தையிழந்தவனாகச்செய்யப்பட்டு ஸம்சயத்தையடைந்து காலாளாகநிற்கின்றவனும் பகைவர்களால் ஜயிக்கப்படாதவனுமான அந்த அபிமன்யுவைப்பார்த்து, துச்சாஸனகுமாரன் சீக்கிரமாகக் கதையையெடுத்துக்கொண்டு கொல்ல எண்ணி எதிர்த்துவந்தான். பிறகு, இந்திரகுமாரனான உனக்குக் குமாரனும் வீரனும் கதாயுத்தத்தில் ஸமர்த்தனுமான அந்த அபிமன்யு கதாபாணியான அந்தத் துச்சாஸனகுமாரனைக்கண்டு தானும் கதையையெடுத்தான். எல்லாக்ஷத்ரியர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, அவ்விருவீரர்களும் கதாமண்டலகதியையடைந்து ஒருவருக்கொருவர் தீங்கைவிளைவிக்கக்கூடிய ஸமயத்தைத் தேடிக்கொண்டு நன்றாக ஸஞ்சாரம்பண்ணினார்கள். யுத்தத்தில் கெட்டமதங்கொண்ட அவ்விருவரும் பரஸ்பரம் கதைகளின் நுனியினாலடிக்கப்பட்டுக் கீழே தள்ளப்பட்ட இந்திரத்வஜம்போலப் பலத்தையிழந்து பூமியில் விழுந்தார்கள். பிறகு, கௌரவர்களுக்குக் கீர்த்தியை விருத்திபண்ணுகின்ற தௌச்சாஸனி எழுந்திருந்து, எழுகின்ற ஸௌபத்திரனைக் கதையினால் தலையில் அடித்தான். சத்துருவீரர்களைக் கொல்லுகிறவனான ஸுபத்ரா புத்ரன் கதையினுடைய வேகத்தினாலும் யுத்தசிரமத்தினாலும் மூர்ச்சையடைந்து ப்ரஜ்ஞையையிழந்து பூமியில் விழுந்தான். அந்த அபிமன்யுவோ ஆயிரம்யானைகளையும் குதிரைகளையும் ரதங்களையும் காலாட்களையும் சிறந்த நூறு ராஜகுமாரர்களையும் கணக்கிலடங்காத அநேகவீரர்களையுங்கொன்று, ராஜாவான ப்ருஹத்பலனையும் ஸ்வர்க்கத்தையடை

யும்படி செய்தான். தீரனான அபிமன்யு பகைவர்களைப் பயமுறுத்திப் பந்துக்களை ஸந்தோஷிக்கச்செய்து தன் தகப்பன்மார்கள் அம்மான் இவர்களின் பெயரை அடிக்கடி காதில்விழும்படி செய்வித்து, ஸ்வர்க்கத்தை ஜயித்தவர்களான புண்ணியவான்களுக்குரிய மங்களகரமான லோகங்களையடைந்தான். வீரனான அவன் அநேகம்பந்துக்களைத் துக்கிக்கச்செய்துவிட்டு நாசமடைந்தான். பிறகு, சோகத்தினாலே மிகத் தபிக்கப்பட்டவர்களான நாங்கள் உன்னோடு இப்பொழுது சேர்க்கை பெற்றோம். இவ்வளவும் நமக்குச் சோகத்தை விருத்திபண்ணக்கூடிய கார்யமாகவே முடிந்தது. அந்தப்புருஷஶ்ரேஷ்டனான அபிமன்யுவோ ஸ்வர்க்கலோகத்தையடைந்தான்' என்று கூறினார்.

பிறகு, தர்மராஜரால் சொல்லப்பட்ட வார்த்தையைக்கேட்டு, அர்ஜுனன், 'ஆ! புத்ர!' என்று பெருமூச்சுவிட்டு மனவருத்தமடைந்து பூமியில் விழுந்தான். துயரமிக்கமுகத்தையுடையவர்களான எல்லோரும் தனஞ்சயனைச்சூழ்ந்துகொண்டு தைன்யத்தைப்பாராட்டி இமைக்கொட்டில்லாத கண்களால் பரஸ்பரம் பார்த்துக்கொண்டார்கள். பிறகு, இந்திரகுமாரன் பிரஜ்ஞையடைந்து கோபமூண்டு ஜ்வரத்தினால் நடுக்கமுற்றவன்போல் அடிக்கடி பெருமூச்சுவிட்டுக்கொண்டு கையினால் கையைப்பிசைந்து பற்களைக் கடகடவென்று கடித்து, மூன்றுகோணலாகப் புருவத்தை நெறித்து, கோபத்தால் கண்கள் மிகச்சிவந்து, பைத்தியம் பிடித்தவன்போலப் பார்த்துக்கொண்டு இந்தவசனத்தை உரைக்கலானான்.

'ஸத்யமாக உங்களுக்கு யான் ப்ரதிஜ்ஞை செய்கிறேன்; நாளைத்தினம் ஜயத்ரதனைக் கொல்லப்போகிறேன். மஹாராஜரே! அந்த ஜயத்ரதன் வதபயத்தினால் பயந்தவனாகித் திருதராஷ்டிரகுமாரர்களைவிட்டு விலகிப்போகாமலிருந்தாலும் நம்மையாவது புருஷோத்தமரான ஸ்ரீ கிருஷ்ணரையாவது அல்லது உம்மையாவது சரணமடையாமலிருந்தாலும் நாளைத்தினம் அவனைக்கொல்லப்போகிறேன். திருதராஷ்டிர புத்திரர்களுக்கு விருப்பத்தைச்செய்கின்றவனும் என்னிடத்திலுள்ளநேசத்தை மறந்தவனும் பாபியும் பாலனுடைய வதத்திற்குக்காரணமாயிருந்தவனுமான ஜயத்ரதனை நாளைத்தினம் கொல்லப்போகிறேன். அரசரே! யுத்தகளத்தில் அந்த ஜயத்ரதனைக்காப்பாற்றுவதற்காக என்னுடன் யுத்தம்செய்பவர்கள் துரோணரானாலும் கிருபரானாலும் அவர்களை அம்புகளால் நான் மூடுவேன்; புருஷஶ்ரேஷ்டர்களே! யுத்தத்தில் இவ்வாறு இதனை யான் செய்யாமற்போனால் சூரர்களுக்கு ஸம்மதமாயிருக்

கின்ற புண்ணியம் செய்தவர்களுக்குரிய உலகங்களை அடையமாட்டேன். தாயைக்கொன்றவர்களுக்கும் தந்தையைக்கொன்றவர்களுக்கும் குரு தார கமனம் செய்கிறவர்களுக்கும் எப்பொழுதும் கோள்சொல்லுகிறவர் களுக்கும் ஸாதுக்களைப்பார்த்து அஸூயைப்படுகிறவர்களுக்கும் பிறர் மீது பழிகூறுகிறவர்களுக்கும் அடைக்கலப்பொருளைக்கவர்பவர்களுக் கும் விஸ்வாஸகாதகர்களுக்கும் முன்புஅனுபவிக்கப்பட்ட ஸ்திரீயை நிந்திக்கின்றவர்களுக்கும் பிறர்குற்றத்தை வெளியிடுகின்றவர்களுக்கும் ப்ரம்மஹத்திசெய்தவர்களுக்கும் பசுஹத்தி பண்ணினவர்களுக்கும் பாயஸம், யவான்னம், சாகம், எள்ளுப்பொடி, கோதுமைமாவினால்செய்த பக்ஷியங்கள், அப்பங்கள், மாம்ஸங்கள் இவைகளைக்காரணமின்றிப் புஜிக் கின்றவர்களுக்கும் எந்தலோகங்களுண்டோ அந்த லோகங்களை, நான் ஜயத்ரதனைக்கொல்லாவிடில் சீக்கிரமாக அடையக்கடவேன். வேதாத்ய யனம்செய்தவனும் மிகக்கடுமையான விரதத்தையனுஷ்டிக்கின்றவனு மானப்ராம்மணோத்தமனையும் முதியோர்களையும் ஸாதுக்களையும் ஆசார் யர்களையும் அவமதிக்கிறவர்கள் எந்த லோகங்களையடைவார்களோ அந்தலோகங்களை நான் அடைவேன். பிராம்மணனையும் பசுவையும் நெருப்பையும் காலால் தொடுகிறவர்களுக்கும் ஜலத்தில் கபம் மலம் ஜலம் இவைகளைவிடுகிறவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ அந்தக்கஷ்ட மான கதியை ஜயத்ரதனைக்கொல்லாவிடில் நான் அடையக்கடவேன். வஸ்திரமில்லாமல் ஸ்நானம் செய்கிறவனுக்கும், மலடிக்கு அதிதியாக நேர்ந்தவனுக்கும், நியாயவிருத்தமாகத் தனம் வாங்குகிறவர்களுக்கும், பொய்சொல்லுகிறவர்களுக்கும், வஞ்சகர்களுக்கும், மனச்சாக்ஷிக்கு விரோதமாகக் காரியம் செய்கின்றவர்களுக்கும், வீணுகத் தற்புகழ்ச்சி செய்கின்றவர்களுக்கும் வேலைக்காரர்களும் புத்திரர்களும் மனைவியும் ஆஸ்ரிதர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது பங்கிட்டுக்கொடா மல் மிருஷ்டான்னபோஜனம் பண்ணுகிற அற்பர்களுக்கும் எந்தக்கதி யுண்டோ அந்தக்கோரமான கதியை ஜயத்ரதனைக்கொல்லாவிட்டால் யான் அடையக்கடவேன். ஸாதுவும் தன்வார்த்தையில் ஆதரவுள்ளவ னும் தன்னை அண்டினவனுமான ஒருவனை க்ரூரஸ்வபாவமுள்ள எவன் போஷிக்காமல் நிந்திக்கிறானோ, எவன் சிராத்தத்தைத் தகுதியுள்ள அயல்வீட்டுக்காரனுக்குக்கொடாமல் தகாதவர்களுக்கும் அவ்வாறே விருஷளியின்பதிக்கும் கொடுக்கிறானோ அவனுக்கும் மதுபானம்பண் ணுகிறவன், வரம்புகடந்தவன், நன்றிமறந்தவன், எஜமானனை நிந்திக்கிற வன் ஆகிய இவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ அந்தக்கதியை ஜயத் ரதனை விரைவாகக் கொல்லாவிடில் நான் அடைவேன். இடக்கையினால்

புஜிக்கின்றவர்களுக்கும், மடியில் ஆஹாரங்களை வைத்துண்பவர்களுக்கும், பலாசத்தால் ஆஸனத்தையும் தும்பைச்செடியினால் பல்துலக்குவதையும்விடாதவர்களுக்கும்,விடியற்காலத்தில் தூங்குகிறவர்களுக்கும், குளிருக்குப் பயப்படுகிற பிராம்மணர்களுக்கும், யுத்தத்தில் பயப்படுகிற க்ஷத்ரியர்களுக்கும், ஓரேகிணற்றுஜலத்தோடுகூடியதும் வேதத்வனியினால் விடுபட்டதுமான கிராமத்தில் ஆறுமாஸம்வஸிக்கின்றவர்களுக்கும், சாஸ்திரத்தை நிந்திக்கின்றவர்களுக்கும், பகலில் ஸ்திரீயினிடத்தில்சேர்கின்றவர்களுக்கும் ,பகலில்தூங்குகின்றவர்களுக்கும், வீட்டில்நெருப்புவைக்கின்றவர்களுக்கும், விஷத்தைக்கொடுக்கின்றவர்களுக்கும்,அக்னிகார்யம்பண்ணாதவர்களுக்கும், அதிதிஸத்காரம்செய்யாதவர்களுக்கும், பசுக்கள்குடிக்கும்தண்ணீர்களில் இடையூற்றைச்செய்கின்றவர்களுக்கும், ரஜஸ்வலையைப்புணர்கின்றவர்களுக்கும், தனத்தைப்பெற்றுக்கொண்டு பெண்ணைக்கொடுக்கின்றவர்களுக்கும், பலருக்கு யாகஞ்செய்விப்பவர்களுக்கும், நாய்போலவிருத்தியுள்ள பிராமணர்களுக்கும், [1]பிராம்மணனுக்கு ப்ரதிஜ்ஞைசெய்துவிட்டுப் பிறகு லோபத்தினால் கொடாதவனுக்கும் எந்தக்கதியுண்டோ அந்தக்கதியை நாளைத்தினத்தில் ஜயத்ரதனைக்கொல்லாவிடில் நான் அடைவேன். இன்றுராத்திரிகழிந்து நாளைத்தினத்தில் ஜயத்ரதனை யான்கொல்லாமல்போனால், தர்மத்தைவிட்டு விலகினவர்களான மற்ற எவர்கள் என்னால் இங்கு சொல்லப்படவில்லையோ, எவர்கள் என்னால் சொல்லப்பட்டார்களோ அவர்களுடைய கதியைச் சீக்கிரத்தில் யானடைவேன். இந்த மற்றுமொரு ப்ரதிஜ்ஞையைத் திரும்பவும் யான் செய்கிறேன். அதனை அறியுங்கள். இந்தப்பாபியானவன் கொல்லப்படாமலிருக்கும்பொழுது ஸூர்யன் அஸ்தமயத்தையடைந்தால் இவ்விடத்திலேயே ஜ்வலிக்கின்ற அக்நியில் நான் ப்ரவேசிப்பேன். அஸுரர்களும் தேவர்களும் மனுஷ்யர்களும் பக்ஷிகளும் ஸர்ப்பங்களும் பிதிர்க்களும் ராக்ஷஸர்களும் பிரம்மரிஷிகளும்தேவரிஷிகளும் சராசரஸ்வரூபமானஇவ்வுலகமும்வேறுபொருளும், எனக்கு விரோதியான அந்த ஜயத்ரதனைப் பாதுகாப்பதற்குச் சக்தியற்றவர்களே. இந்த ஜயத்ரதன் பாதாளலோகத்தையடைந்தாலும் உத்தமமான ஆகாயத்தையாவது தேவநகரமான அமராவதியையாவது அல்லது அஸுரபட்டணத்தையாவது அடைந்தாலும் நான் நாளைவிடியற்காலத்தில் அநேகம் அம்புகளால் அபிமன்யுவின் சத்துருவான அவன் தலையை நன்றாயறுக்கப்போகிறேன்' என்று கூறினான்.

---

[1] இடக்கராயிருத்தலால் அரைஸ்லோகம் விடப்பட்டது.

அர்ஜுனன், இவ்வாறுசொல்லிக் காண்டீவத்தை இடம்வலமாகடீ டங்காரம் பண்ணினன். அந்த வில்லின் ஒலியானது எல்லாவற்றையும் தாண்டி ஆகாயத்தையளாவியது. அவனால் ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்ட வுடன், அவ்விடத்தில் ஜநார்த்தனர் பாஞ்சஜன்யத்தை முழக்கினர். பல்குனன் மிகுந்தகோபமுற்றுத் தேவதத்தமென்கிற சங்கத்தை ஊதி னன். அச்சுதருடைய வாய்க்காற்றினலே உள்ளிடம் மிக நிறைக்கப் பட்ட அந்தப் பாஞ்சஜன்யமானது தன்னிடத்தினின்று உண்டான ஒலியினலே பாதாளம் ஆகாயம் திக்குக்கள் திக்பாலகர்கள் இவர்க ளோடு உலகத்தை யுகத்தின்முடிவில்போல நடுங்கச்செய்தது. மஹாத் மாவான அர்ஜுனனால் ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டவுடன், ஆயிரக்கணக் கான நான்குவித வாத்யகோஷங்களும் பாண்டவர்களுடைய ஸிம்மநாத மும் தோன்றின. காண்டீவம் நர்த்தனம்செய்கிறதுபோல விளங்கியது. அம்பறாத்தூணியிலுள்ள அம்புகள் அப்பொழுது யுத்தத்தில் விருப்ப முள்ளவைகளாகி ஸந்தோஷத்தோடு தாமேவெளியில்புறப்படுவதுபோல விளங்கின. ஓ! பாரதரே! மிக்க ஸந்தோஷமுள்ள பீமஸேனன் தனஞ் சயனைநோக்கி ஸந்தோஷத்தால் தடுமாறுகின்ற வாக்கோடு, 'உன்னு டையப்ரதிஜ்ஞாசப்தத்தினலும் கிருஷ்ணனுடைய சங்கின் ஒலியின லும் த்ருதராஷ்டிரகுமாரனை இந்தத்துரியோதனன் சுற்றத்தாரோடும் பரிவாரங்களோடும் நாசமடைந்தான். ஓ! புருஷஸ்ரேஷ்டனே! மஹா ப்ரபாவமுடையதும் சிறந்தபொருளுள்ளதும் (நமக்கு) இஷ்டமாயிருப் பதுமான இந்த வாக்கியமானது, அணிந்திருந்த பூமாலையை வாடும்படி செய்ததும் உன்புத்திரசோகமயமுமான என்னுடைய ரோஷஸமூகத் தைப் போக்குகிறது' என்று கூறினன். மஹாராஜரே! ஸூதர்க ளோடும் மாகதர்களோடுங்கூடின ஸைனிகர்கள், பிறகு சங்கவாத்யங் களாலும் பேரீவாத்யங்களாலும் பணவங்களாலும் ஸ்தோத்ரங்களாலும் ஜயசீலனை அர்ஜுனனை நன்றாகப்புகழ்ந்தார்கள். அப்பொழுது அந்தச் சப்தத்தினலே பயங்கரமான உம்முடைய சேனைமுழுமையும் மூர்ச்சையடைந்து மிகுந்த வியஸனமுற்றதாகியது.

---

## எழுபத்துநான்காவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)



(அர்ஜுனனுடைய ப்ரதிஜ்ஞையைக்கேட்டுப் பயந்த ஜயத்ரதனுக்குத் த்ரோணரும் துரியோதனனும் தேறுதல் கூறியது.)

புத்திரனிடத்தில் மிக்க அன்புடையவர்களான பாண்டவர்களுடைய அந்த மஹாசப்தத்தைக்கேட்டும் சாரர்களாலே அறிந்தும் ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன் பயந்து எழுந்திருந்து துக்கத்தால் மதிமயக்கங்கொண்டவனும் துன்பத்தினால் மிகவும் கலக்கப்பட்டவனும் ஆழ்ந்ததும் விஸ்தாரமுமான சோகமாகிற கடலில் மூழ்கினவனுமாகிப் பலவாறு ஆலோசித்துக்கொண்டு அரசர்களுடைய ஸபையை அடைந்தான். அவன் அபிமன்யுவின் பிதாவினிடத்தில் பயந்து வெட்கமுற்று அந்த அரசர்களினருகில் புலம்பிக்கொண்டு (அவர்களைநோக்கி), 'காமுகனான இந்திரனாலே பாண்டுவினுடைய மனைவியினிடத்தில் எவன் உண்டுபண்ணப்பட்டானோ துர்ப்புத்தியுள்ள அவன் என்னொருவனை யமலோகத்தையடையும்படிசெய்ய விரும்புகிறானாம்; உங்களுக்கு மங்களமுண்டாகட்டும்; பிழைக்கவேண்டுமென்கிற எண்ணத்தோடு என் வீடுபோய்ச்சேருகிறேன். க்ஷத்ரியஸ்ரேஷ்டர்களே! இல்லையேல், பார்த்தனுடைய அஸ்திரத்தை எதிர்ப்பதற்கு வல்லமையுடையவர்களாயிருந்தால், அவனால் கொல்ல விரும்பப்பட்டிருக்கிற என்னைக் காப்பாற்றுங்கள். அப்படிப்பட்ட வீரர்களான நீங்கள் எனக்கு அபயங்கொடுங்கள்; துரோணர் துரியோதனன் கிருபர் கர்ணன் மத்ரதேசாதிபதியான சல்லியன் பாஹ்லீகன் துச்சாஸனன்முதலானவர்கள் அந்தகனால் பீடிக்கப்பட்டவனையும் காப்பாற்றுவதற்கு வல்லமையுள்ளவர்கள். இவ்வாறிருக்க, கொல்லவேண்டுமென்று எண்ணங்கொண்ட அர்ஜுனனொருவனிடமிருந்து என்னை மன்னர்களான நீங்கள் ஒன்றுசேர்ந்து ரக்ஷிக்கமாட்டீர்களா? பாண்டவர்களுடைய ப்ரதிஜ்ஞையைக்கேட்டு எனக்கு மிகுந்த பயமுண்டாயிருக்கிறது. மன்னர்களே! மரிக்கப்போகிறவனுடைய அங்கங்கள்போல என்னுடைய அங்கங்கள் சோர்வடைகின்றன. காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனனாலே என்வதமானது நிச்சயமாகப் பிரதிஜ்ஞைசெய்யப்பட்டுவிட்டது. அதற்கு நிதர்சனமாகப் பாண்டவர்கள் துக்ககாலத்திலும்கூடக் களிப்புள்ளவர்களாக ஸிம்மநாதம்செய்கிறார்கள். அந்த அர்ஜுனனுடைய ப்ரதிஜ்ஞையைத் தேவர்களாவது கந்தர்வர்களாவது அஸுரர்களாவது நாகர்க

ளாவது ராக்ஷஸர்களாவது வேறுவிதமாகச் செய்வதற்குச் சக்தியுள்ளவர்கள்ல்லர். (இவ்வாறிருக்க), அரசர்கள் எவ்வாறு திறமையுடையவர்களாவார்கள்? ஆதலால், புருஷஶ்ரேஷ்டர்களே! எனக்கு அநுமதிகொடுங்கள். உங்களுக்கு மங்களமுண்டாகட்டும். பாண்டவர்கள் என்னைப் பாராதபடி மறைந்துகொள்ளுகிறேன்' என்றுசொன்னான்.

இவ்வாறு புலம்புகின்றவனும் பயத்தினாலே மனக்கலக்கமுற்றவனுமான அந்த ஜயத்ரதனை நோக்கித் துரியோதனராஜன் தன்னுடைய கார்யகௌரவத்தினாலே, 'ஓ! புருஷஶ்ரேஷ்டனே! பயப்படவேண்டாம்; ஆண்மையிற்சிறந்தவனே! யுத்தபூமியில் க்ஷத்ரியவீரர்களின் நடுவிலிருக்கின்ற உன்னை எவன் வதம்செய்வதற்காக விரும்புவான்? மதயானைபோலச் செல்லுகின்றவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான இவ்வரசர்களிடம் இந்திரனும் பயப்படுவான். நான், ஸூர்யகுமாரனான கர்ணன், சித்ரஸேனன், விவிம்சதி, பூரிஶ்ரவஸ், சலன், சல்யன், நெருங்கமுடியாதவனான விருஷஸேனன், புருமித்ரன், ஜயன், போஜன், காம்போஜன், ஸுதக்ஷிணன், மஹாபாஹுபலமுள்ள ஸத்யவ்ரதன், விகர்ணன், துர்முகன், துச்சாஸனன், ஸுபாஹு, ஆயுதத்தைக் கையில் எடுத்த காளிங்கன், அவந்திதேசத்தரசர்களான விந்தானுவிந்தர்கள், துரோணர், துரோணபுத்திரர், சகுனி, மாயாவியும் பலமுடையவனும் சௌர்யமுடையவனுமான அலம்புஸனென்கிற ராக்ஷஸன் ஆகிய இவர்களும் மற்றுமநேகர்களான பலவித தேசத்தரசர்களும் ஸைன்யங்களோடு உன்னைக் காப்பாற்றப்போகிறார்கள்; உன்மனக்கவலை விலகிப்போகட்டும். அளவற்ற காந்தியுள்ள ஸைந்தவ! நீயும் ரதிகர்களுள் சிறந்தவன்; ஸ்வயமாகவே சூரன்; அவ்விதமான நீ பாண்டவர்களிடத்தி லிருந்து எப்படி பயத்தைப் பார்க்கிறாய்? மஹாவீர்யமுள்ள ஸைந்தவ! உன்னைக்காப்பாற்றும் விஷயத்தில் என்னுடைய அக்ஷௌஹிணிகள் முயற்சியுடனே யுத்தம்பண்ணப்போகின்றன; நீ பயப்படாதே; உனக்குண்டானபயம் விலகட்டும்' என்று கூறினான்.

அரசரே! இவ்வாறு உம்முடைய புத்திரனாலே ஸமாதானப்படுத்தப்பட்ட ஸைந்தவன் துரியோதனனுடன்சேர்ந்து இரவில் துரோணரிடத்தில் சென்றான். அந்த ஜயத்ரதராஜன், துரோணருடைய சரணங்களில் நமஸ்கரித்து அருகில்உட்கார்ந்து வணக்கத்துடன் பின்வருமாறு கேட்கலானான். '(ஆசார்யரே!) லக்ஷியத்தையடிப்பதிலும் தூரமாகப் பாணத்தை ப்ரயோகஞ்செய்வதிலும் லாகவத்திலும் திடமாக அடிப்பதிலும் எனக்கும் பல்குனனுக்குமுள்ள தாரதம்யத்தை மஹி

மையுள்ள தேவரீர் சொல்லவேண்டும். ஆசார்யரே! உண்மையாகவே அர்ஜுனனுக்கும் எனக்குமுள்ள வித்யாவிசேஷத்தை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். உண்மையை எனக்குச்சொல்லவேண்டும்' என்று வினவ, துரோணர், 'அப்பா! உனக்கும் அர்ஜுனனுக்கும் நான் பேதமின்றி ஆசார்யத்தன்மையை வகித்தேன்; அப்யாஸத்தினாலும் அந்தக் கஷ்டமான குருகுலவாஸத்தினாலும் உன்னைக்காட்டிலும் அர்ஜுனன் மேலானவன்; யுத்தத்தில் பார்த்தனிடத்திலிருந்து எவ்விதத்தி லும் நீ பயப்படவேண்டியதில்லை. அப்பா! பயத்தினின்று யானுன்னைப் பாதுகாப்பேன். இவ்விஷயத்தில் ஸம்சயம்வேண்டாம். என் கைகளால் காக்கப்படுகிற மனிதனுக்கு (தீங்குசெய்வதில்) தேவர்களும் சக்தியுள்ள வர்களாகார்கள். அர்ஜுனன் எந்த வியூஹத்தைத் தாண்டமாட்டானோ அப்படிப்பட்ட வியூஹத்தை நான் வகுக்கப்போகிறேன். ஆதலால், நீ யுத்தம்செய்; பயப்படாதே; ஸ்வதர்மத்தைக் காப்பாற்று. மஹாரத னே! தாதை மூதாதைகளின் வழியை அனுஸரித்துச் செல்வாயாக. சாஸ்திரமுறைப்படி உன்னால் வேதங்கள் அத்யயனம்பண்ணப்பட்டன; அக்நிகள் நன்றாக ஹோமம்செய்யப்பட்டன; அநேகயாகங்களால் தேவர் கள் பூஜிக்கப்பட்டார்கள்; பயங்கரமான ம்ருத்யு உனக்குக் கிடையாது; மூடர்களான மனுஷ்யர்களால் அடையத்தகாததான மஹாபாக்யத்தை யடைந்து புஜபலத்தினால் ஸம்பாதிக்கப்பட்ட ஸர்வோத்தமமான திவ்ய லோகங்களை நீ அடையப்போகிறாய்; கௌரவர்களும் பாண்டவர்களும் வ்ருஷ்ணிகளும் மற்றமனிதர்களும் நானும் என்புத்திரனும் சாஶ்வதர் களல்லோமென்று நினை; நாங்களெல்லோரும் பலவானான காலனால் வரி சையாக அடிக்கப்பட்டுத் தத்தம் வினைகளால் தொடரப்பட்டவர்க ளாகப் பரலோகம்போகப்போகிறோம்; தபஸ்விகள் தவஞ்செய்து எந்த லோகங்களையடைகிறார்களோ அந்த லோகங்களை க்ஷத்ரியதர்மத்தை அடைந்த க்ஷத்ரியவீரர்கள் அடைகிறார்கள்' என்று சொன்னார். பாரத் வாஜரால் இவ்வாறு ஸமாதானப்படுத்தப்பட்ட ஸைந்தவராஜன் பார்த்த னிடத்திலிருந்துண்டான பயத்தை விட்டான்; யுத்தத்தின்பொருட்டும் மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டான். வேந்தரே! பிறகு, ஸைனி கர்களுக்கும் அந்த ஜயத்ரதனுக்கும் ஸந்தோஷமுண்டாகியது. பயங் கரமான நான்குவித வாத்யங்களுடைய கோஷமும் ஸிம்மநாதங்களோடு சேர்ந்து தோன்றியது.

---

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(த்ரோணர் முதலானவர்கள் ஜயத்ரதனைக் காப்பதில் ப்ரதிஜ்ஞைசெய்தது முதலியவைகளை ஸ்ரீ க்ருஷ்ணன் அர்ஜுனனுக்குக் கூறியது.)

பார்த்தனால் ஸிந்துராஜனுடைய வதமானது ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டபொழுது, மிக்க புஜபலமுள்ள வாஸுதேவர் தனஞ்சயனை நோக்கி, 'ப்ராதாக்களுடைய ஸம்மதத்தையறியாமல், 'ஸைந்தவனை யான் கொல்லுவேன்' என்று உன் வாக்கினால் ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டது. இப்படிச்செய்யப்பட்ட அந்தப்பிரதிஜ்ஞை ஸாஹஸமே; என்னோடுகூட ஆலோசியாமலே இந்தப்பெரிய பாரத்தை நீ சுமக்க ஆரம்பித்தாய். எவ்வாறு நாம் எல்லாவுலகத்தோர்களாலும் பரிஹஸிக்கத் தகாதவர்களாவோம். தார்த்தராஷ்டிரனுடைய படைவீட்டில் வைக்கப் பட்டிருந்த சாரர்கள் சீக்ரமாக இங்குவந்து விருத்தாந்தத்தை நமக்குத் தெரிவிக்கிறார்கள். ப்ரபுவே! உன்னால் ஸிந்துராஜவதம் ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டவுடனே, நான்குவிதவாத்யங்களோடுகூடி இவ்விடத்தில் தோன்றின மிக்க பெரிதான ஸிம்ஹநாதமானது அவர்களால் கேட்கப் பட்டது. அந்தச் சப்தத்தினாலே ஸைந்தவனும் த்ருதராஷ்டிரகுமாரர்களும் மிகவும்பயந்து, 'இந்த ஸிம்ஹநாதம் அகாரணமாக உண்டாயிராது' என்று எண்ணி ஸந்நத்தர்களானார்கள். மிக்க கைவன்மையுள்ள அர்ஜுன! கௌரவர்களுடைய மிகப்பெரியஸிம்ஹநாதமும் யானைகள் குதிரைகள் காலாட்கள் தேர்கள் இவைகளுடையபயங்கரமானசப்தமும் உண்டாயின. 'நிச்சயமாக அபிமன்யுவினுடையவதத்தைக்கேட்டுத் துயரமுற்ற தனஞ்சயன் கோபத்தோடு இரவில்புறப்படப்போகிறான்' என்று எண்ணிக் கௌரவர்கள் ஸந்நத்தர்களானார்கள். தாமரைமலர்போன்ற கண்களையுடையவனே! ஸிந்துராஜனைக் கொல்லும்விஷயத்தில் ஸத்யஸந்தனான நீசெய்த அந்த ப்ரதிஜ்ஞை முழுவதையும் சாரர்களிடமிருந்து அவர்கள் கேட்டார்கள். பிறகு, துர்யோதனனுடைய மந்திரிகளெல்லாரும் வருத்தமுற்று, பலஹீனமானமான்கள்போல நடுக்கமுற்றவர்களானார்கள். அந்த ஜயத்ரதராஜனும் நடுக்கமுற்றான். பிறகு, ஸௌவீரதேசத்துக்கும் ஸிந்துதேசத்துக்கும் அரசனான ஜயத்ரதன் வாட்டமடைந்து மந்திரிகளோடு எழுந்திருந்து தன் படைவீட்டினின்று ராஜஸபையை அடைந்து மந்திராலோசனை ஸமயத்தில் க்ஷேமகரமான எல்லாக்கார்யத்தையும் ஆலோசித்துக்கொண்டு, ராஜஸபையில் துர்யோதனனை நோக்கி,

'தனஞ்சயன் புத்திரனைக்கொன்றவனென்பதனால் நாளைத்தினம் என்னை எதிர்த்துவரப்போகிறான். அவன் சேனைகளின்நடுவில் என்னுடைய வதத்தை ப்ரதிஜ்ஞை செய்தானும். ஸவ்யஸாசியினுடைய அந்தப்ரதிஜ்ஞையைத் தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் வேறுவிதமாகச்செய்வதற்குச் சக்தியுள்ளவர்களாகார்கள். நீங்கள் யுத்தரங்கத்தில் என்னைக்காப்பாற்றுங்கள். தனஞ்சயன் உங்கள் தலையில் காலைவைத்து என்னை லக்ஷியமாக்கிக்கொள்ளவேண்டாம். தகுந்தபரிகாரத்தை நீங்கள் செய்யுங்கள். குருநந்தன' அரசனே! என்னுடைய ரக்ஷையானது நன்றாகச்செய்யப்படாமற் போமாயின் எனக்கு நீ அனுமதிகொடு. நான் வீடுபோய்ச்சேருகிறேன்' என்று இந்த வாக்கியத்தைக்கூறினான். இவ்வாறு சொல்லியதைக்கேட்ட துரியோதனன், மனவருத்தமடைந்து தலைகுனிந்து உன்னுடைய அவ்விதமான சபதத்தைக்கேட்டுக் கவலையடையலானான். அந்த ஜயத்ரதராஜன், மனவருத்தமடைந்த அந்தத்துரியோதனனைப்பார்த்து, 'மஹாயுத்தத்தில் எவன் அர்ஜுனனுடைய அஸ்திரத்தை அஸ்திரத்தினால் முறிப்பனோ அவ்வித வீர்யத்துடன்கூடின ஒரு வில்லாளியை இங்கு உங்களுள் யான் காணவில்லை. வாஸுதேவனை ஸஹாயமாகக்கொண்டு காண்டீவமென்ற வில்லை அசைத்துக்கொண்டிருக்கிற அர்ஜுனனுக்கெதிரில் எவன் நிற்பான்? இந்திரனே நேரில் வந்தாலும் நிற்பது இயலாது. முற்காலத்தில் இமயமலையில் மஹாவீர்யமுள்ளவரும் லோகநாதருமான மஹேஸ்வரரும் காலாளான அர்ஜுனனாலே யுத்தஞ்செய்யும்படி செய்யப்பட்டார் என்று கேட்கிறோம். தேவராஜனாலே தூண்டப்பட்ட அர்ஜுனன் ஹிரண்யபுரத்தில் வஸிக்கின்ற ஆயிரக்கணக்கான அஸுரர்களை ஒரே தேரின் ஸஹாயத்தினாலேயே கொன்றான். புத்திசாலியான வாஸுதேவனோடுகூடின கௌந்தேயன் தேவர்களோடுகூடின மூவுலகங்களையும் நாசஞ்செய்வானென்பது என்னுடைய எண்ணம். அப்படிப்பட்ட நான் உனக்கு மனமிருந்தால் மஹாத்மாவும் வீரரும் புத்திரரோடு சேர்ந்தவருமான துரோணராலே அனுமதிபெறுதலையாவது அல்லது காப்பாற்றப்பெறுதலையாவது விரும்புகிறேன்' என்று தனக்கு ஹிதம்செய்பவையும் அபேக்ஷையுள்ளவையுமான இவ்வித வார்த்தைகளை மிருதுவாகச் சொன்னான். அர்ஜுன! அந்தத்துரோணாசாரியர் ராஜாவினாலே நேராகவே இந்தவிஷயத்தில் அதிகமாகவேண்டப்பட்டாராம். அவரால் தகுந்த ஒழுங்கும் செய்யப்பட்டு ரதங்களும் சித்தஞ்செய்யப்பட்டிருக்கின்றனவாம். கர்ணன், பூரிஸ்ரவஸ், துரோணபுத்திரர், ஜயிக்கமுடியாத விருஷஸேனன், கிருபர், மத்ரதேசாதிபதியான சல்யன் இவ்வறுவரும் இந்த

ஜயத்ரதனுக்கு முந்திச்செல்பவர்களாக இருக்கிறார்கள். துரோணரா லே வியூகமானது பாதிசகடரூபமாகவும் பாதிபத்மரூபமாகவும் பத் மத்தினுடைய கர்ணிகையினிடையில் ஸூசிரூபமாகவும் அமைக்கப்பட் டிருக்கிறது. மிகக் கொடியமதங்கொண்ட அந்த ஸிந்துராஜனை ஜயத் ரதன் வீரர்களால் காக்கப்பட்டு வியூகத்தினுடைய பக்கத்தில் நிற்கப் போகிறான். பார்த்த! வில்லிலும் அஸ்திரத்திலும் வீர்யத்திலும் பலத் திலும் மனோதைர்யத்திலும் இந்த ஆறு வீரர்களும் பொறுக்கமுடியாத வர்களென்றே நிச்சயிக்கப்பட்டிருக்கிறார்கள். பரிவாரங்களோடுகூடின இவர்களை ஜயிக்காமல் ஜயத்ரதன் அடையத்தக்கவனேயல்லன். நரஸ் ரேஷ்டனே! நீ இந்த ஆறுவீரர்களுடைய வீர்யத்தையும் தனித்தனி யாக ஆலோசித்துப்பார். ஒன்றுகூடியிருக்கிற இவர்கள் எளிதில் ஜயிக்க முடியாதவர்கள். நான் கார்ய ஸித்திக்காகவும் நம்முடைய நன்மைக்காக வும் மந்திராலோசனையை அறிந்தவர்களும் நட்பினர்களுமான மந்திரி களோடு சேர்ந்து மறுபடியும் நீதிவிஷயத்தைப்பற்றி ஆலோசிக்கப் போகிறேன்' என்று கூறினார்.

---

## எழுபத்தாறாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் தன் வல்லமையைக் கிருஷ்ணனிடம் கூறியது.)

அர்ஜுனன், 'மதுஸூதனரே! திருதராஷ்டிரகுமாரனான துர் யோதனனுடைய எந்த ஆறு ரதிகர்களைப் பலத்தினாலதிகரித்தவர்க ளென்று எண்ணுகின்றீரோ அவர்களுடைய வீர்யமானது எனது வீர் யத்தினுடைய ஒருகூற்றுக்கும் ஈடாகாதென்பது என்னுடைய எண் ணம். ஜயத்ரதனுடைய வதத்தைவிரும்புகின்ற என்னுடைய அஸ்திரத் தினாலே இவர்களனைவர்களுடைய அஸ்திரமும் பிளக்கப்படுவதை நீர் பார்க்கப்போகிறீர். கற்றறிந்தவரான துரோணர் கூட்டத்துடன் பார்த் துக்கொண்டிருக்கும்பொழுதே, நான் ஸிந்துராஜனுடைய தலையைப் பூமியில் தள்ளப்போகிறேன். மதுஸூதனரே! ஸாத்யர்கள் ருத்ரர்கள் அஸ்வினீதேவர்கள் வஸுக்கள் இந்திரன் மருத்துக்கள் விஸ்வே தே வர்கள் மற்றத்தேவர்கள் கந்தர்வர்கள் பிதிர்க்கள் கருடர்கள் ஸமுத்தி ரங்கள் மலைகள் ஸ்வர்க்கம் ஆகாசம் பூமி திக்பாலகர்களோடுகூடின திக் குக்கள் ஸ்தாவரஜங்கமரூபங்களான கிராமங்களிலும் அரணியங்களிலு முள்ள பிராணிகள் ஆகிய இவர்கள் ஸிந்துராஜனைக்காப்பாற்றுவதாயிருந்

நாளும் என்னுடைய அம்புகளாலே போர்க்களத்தில் ஜயத்ரதன் அடிக்கப்பட்டு விழுவதை நாளைத்தினம் பார்க்கப்போகிறீர். ஓ! கிருஷ்ண! நான் ஸத்யத்தோடு சபதஞ்செய்கிறேன். அவ்வாறே ஆயுதத்தையும் தொடுகிறேன். கேசவரே! பாபியும் துர்ப்புத்தியுடையவனுமான ஜயத்ரதனுக்கு ரக்ஷகரும் சிறந்த வில்லாளியுமான துரோணரையே முதலில் எதிர்த்துப் போர்புரியப்போகிறேன். அந்தத் துர்யோதனன் அவரிடத்தில் இந்த யுத்தம் கட்டுப்பட்டிருக்கிறதென்று எண்ணுகிறான். ஆதலால், அவருடைய ஸேனாமுகத்தையேபிளந்து ஸைந்தவனைக்குறித்துச் செல்லப்போகிறேன்; வஜ்ராயுதங்களாலே பிளக்கப்படுகின்ற மலையின் கொடுமுடிகள்போலத் தீக்ஷ்ணமானவைகளும் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளாலே யுத்தகளத்தில் என்னால் பெரிய வில்லாளிகள் பிளக்கப்படுவதை நாளைத்தினம் நீர் பார்க்கப்போகிறீர். கூர்மையான அம்புகளாலே நன்கு பிளக்கப்பட்டு விழுகின்றவைகளும் விழுந்தவைகளுமான மனிதர்கள் யானைகள் குதிரைகள் இவைகளினுடைய உடல்களிலிருந்து ரக்தம் பெருகப்போகிறது. காண்டீவத்தினால் விடப்பட்டவைகளும் வேகத்தில் மனத்திற்கும் காற்றிற்கும் ஒப்பானவைகளுமான அம்புகள் ஆயிரக்கணக்காக மனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும் தேகத்தினின்று உயிர்நீங்கினவைகளாகச் செய்யப்போகின்றன. என்னால் இந்திரனிடமிருந்தும் யமனிடமிருந்தும் குபேரனிடமிருந்தும் வருணனிடமிருந்தும் தேவரான ருத்ரரிடமிருந்தும் எந்த அஸ்திரங்கள் பெற்றுக் கொள்ளப்பட்டிருக்கின்றனவோ அந்தக்கோரமான அஸ்திரங்களை இந்த யுத்தத்தில் மனுஷ்யர்கள் பார்க்கப்போகிறார்கள். ஸைந்தவனைச்சூழ்ந்து காப்பாற்றுகின்ற எல்லாவீரர்களுடைய அஸ்திரங்களையும் என்னால்ப்ரம்மாஸ்திரத்தினாலே யுத்தகளத்தில் நாசம்பண்ணப்பட்டவைகளாகப் பார்க்கப்போகிறீர். கேசவரே! யுத்தகளத்தில் என்னுடைய அம்புவேகத்தால் நன்கு அறுக்கப்படும் அரசர்களுடைய தலைகளாலே யுத்தபூமி பரப்பப்படுவதை நாளைத்தினம் நீர் பார்க்கப்போகிறீர். புலாலுண்பவைகளைத் திருப்திசெய்விக்கப்போகிறேன். சத்துருக்களை ஓடும்படிசெய்யப்போகிறேன். சிநேகிதர்களை ஆனந்தப்படுத்தப்போகிறேன். ஸைந்தவனை நாசஞ்செய்யப்போகிறேன். அநேகவிதமான குற்றங்களைச்செய்தவனும் உறவினர்களில் இழிந்தவனும் பாபதேசத்தில் பிறந்தவனுமான ஸைந்தவராஜன் என்னால் கொல்லப்பட்டுத் தன்பந்துக்களைத் துக்கமடையும்படி செய்யப்போகிறான். க்ஷீரான்னபோஜனம் செய்கின்றவர்களும் யுத்தாங்கத்தில் பாவமான நடையுள்ளவர்களுமான எல்லாஸைந்தவர்களும் அரசர்களோடுகூடவே என்னம்புகளால் அடிக்கப்பட்டு நசிக்கப்போகி

ரூர்கள். கிருஷ்ண! துரியோதனன் உலகத்தில் யுத்தத்தில் எனக்குஸமமான வில்லாளி வேறொருவனில்லையென்று எண்ணும்படி காலையில் நான் செய்யப்போகிறேன். காண்டீவமென்கிற சிறந்தவில்லையும் யுத்தஞ்செய்கிறவனான தனஞ்சயனையும் ஸாரதியான ஹ்ருஷீகேசரையும் எவன் யுத்தத்தில் மீறுவான்? பகவானே! உம்முடைய அனுக்கிரகத்தினால் யுத்தத்தில் என்னால் அடையமுடியாததும் ஸஹிக்கமுடியாததும் என்ன இருக்கிறது? ஹ்ருஷீகேசரே! நீர் தெரிந்தவராயிருந்தும் ஏன் என்னை நிந்திக்கிறீர்? ஜநார்த்தனரே! சந்திரனிடத்தில் எவ்வாறு களங்கம் ஸ்திரமோ ஸமுத்திரத்தில் ஜலம் எப்படிஸ்திரமோ அவ்வாறே என்னிடத்தில் இந்தப்ரதிஜ்ஞை ஸத்தியமென்றறியும். என் அஸ்திரங்களையும் காண்டீவத்தையும் பாஹுபலத்தையும் தனஞ்சயனாகிய என்னையும் அவமதிக்காதீர். நரஶ்ரேஷ்டரே! ஹ்ருஷீகேசரே! வில்லோ தெய்வத்தன்மையுள்ளகாண்டீவம். யுத்தஞ்செய்கிறவனோ நான். ஸாரதியோ தேவரீர். இவ்விதமிருக்க, என்னால் எது ஜயிக்கப்படாததாகும்? நான் யுத்தத்திற்சென்று தோல்வியடையாமல் ஜயித்துக்கொண்டேவருகிறதற்குக் காரணமான அந்த ஸத்தியத்தினால் யுத்தத்தில் ஜயத்ரதனைக் கொல்லப்பட்டவனாக அறியும். மாதவரே! சத்துருக்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே நான் ஸைந்தவனைக் கொல்லும்படியான எல்லாவற்றையும் தேவரீரே செய்யப்போகிறீர். பிராம்மணனிடத்தில் ஸத்யம் நிலைபெற்றுள்ளது. ஸாதுக்களிடங்களில் வணக்கம் நிச்சிதமானது. ஸமர்த்தர்களிடங்களில் ஐஶ்வரியம் நிச்சிதமாயிருக்கிறது. ஸ்ரீமந்நாராயணரிடத்தில் ஜயம் நிச்சயம்' என்றுகூறினான். இந்திரகுமாரனான அர்ஜுனன் ஆத்மஸ்வரூபியான ஹ்ருஷீகேசரைப்பார்த்து இவ்வாறு தானாகவே சொல்லிவிட்டுக் கர்ஜித்துக்கொண்டு, பிரபுவான அவரைநோக்கி, 'கிருஷ்ண! இன்று ராத்திரிசென்று விடியற்காலத்தில் சிறந்ததேரானது ஸஜ்ஜமாயிருக்கும்படியும் என் ப்ரதிஜ்ஞை உறுதியாயிருக்கும்படியும் நீர் செய்யக்கடவீர்' என்றுகூறினான்.

---

## எழுபத்தேழாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞா பர்வம் (தொடர்ச்சி.)

(ஸ்ரீகிருஷ்ணன் ஸுபத்திரைக்குத் தேறுதல் சொல்லியது.)

**து**க்கத்தாலும் சோகத்தாலும் பீடிக்கப்பட்டவர்களான வாஸுதேவர் தனஞ்சயனிருவரும் ஸர்ப்பங்கள்போலப் பெருமூச்சுவிட்டுத்

கொண்டு அந்த இரவுமுழுவதும் உறங்கவில்லை. நரநாராயணர்கள் கோபங்கொண்டதையறிந்து இந்திரனோடுகூடின தேவர்கள், 'இஃது எவ்விதம்முடியுமோ' என்று வருத்தத்தோடு கவலையுற்றார்கள். கொடியவையும் பயங்கரமானவையும் விபத்தைத்தெரிவிக்கின்றவையுமான காற்றுக்கள் வீசின. அவ்வாறே ஸூர்யனிடத்தில் தலையில்லாமுண்டத்தோடு கூடின பரிகமானது காணப்பட்டது. முழக்கத்தோடும் மின்னலோடும் கூடிய நெருப்பிடிகள் விழுந்தன. மலைகளோடும் வனங்களோடும் தண்ணீரோடுங்கூடின பூமியும் நடுங்கியது. மஹாராஜரே! மகரங்களுக்கிருப்பிடமான ஸமுத்திரங்களும் கொந்தளித்தன. அவ்வாறே ஸமுத்திரகாமிகளான நதிகள் எதிர்த்துச்செல்லத்தலைப்பட்டன. ஊனுண்பவைகளான பிராணிகளுடைய ஸந்தோஷத்தின்பொருட்டும் யமனுடைய நாடு வளர்தற்பொருட்டும் தேர்களுக்கும் யானைகளுக்கும் குதிரைகளுக்கும் பதாதிகளுக்கும் விஷமமான யுத்தம் நடக்கத்தொடங்கியது. அச்சந்தருபவையும் மயிர்பொடிக்கச்செய்பவையுமான அந்த உத்பாதங்களையெல்லாம்கண்டு வாகனங்கள் ஜலமலங்களைவிட்டுக்கொண்டு அழுதன. பரதஸ்ரேஷ்டரே! மஹாபலசாலியான ஸவ்யஸாசியினுடைய உக்கிரமானபிரதிஜ்ஞையைக்கேட்டு உம்மைச்சேர்ந்த அந்த எல்லாஸைநிகர்களும் துயரத்தையடைந்தார்கள். பிறகு, மிக்க புஜபலமுள்ள இந்திரகுமாரன் கிருஷ்ணனை நோக்கி, 'நீர் மருமகளுடனிருக்கும் உமதுஸஹோதரியான ஸுபத்ரையைத் தேறுதலடையும்படிசெய்யும். மாதவரே! இவளுடைய மருமகளையும் தோழிகளையும் சோகத்தைவிலக்கினவர்களாகச்செய்யும். பிரபுவே! நல்வார்த்தையினாலும் உண்மையும் உசிதமுமான வார்த்தையினாலும் ஸமாதானப்படுத்தும்' என்றுகூறினான்.

பிறகு, வாஸுதேவர் மிகுந்தமனவருத்தத்துடன் அர்ஜுனனுடையவீட்டை அடைந்து, புத்திரசோகத்தினால் பீடிக்கப்பட்டவளும் துயரமுற்றவளுமான ஸஹோதரியைப்பார்த்து, 'விருஷ்ணிகுலத்தில் தோன்றியவளே! குமாரனைப்பற்றி நீ மருமகளுடன்சேர்ந்து துயரப்படவேண்டாம். பயந்தவளே! எல்லாப்பிராணிகளுக்கும் இவ்வாறானமுடிவானது காலத்தினால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நல்லகுலத்தில் பிறந்தவனும் சூரனுமான க்ஷத்திரியனுக்கே சிறந்ததான இந்தமரணம், உன்புத்ரனுக்குத் தகுந்தது. நீ விசனமடையாதே. மகாரதனும் தீரனும் பிதாவுக்குஸமமான பராக்கிரமத்தையுடையவனுமான உன்னுடையகுமாரன், அதிருஷ்டத்தினால் க்ஷத்திரியனுக்குரிய முறையினால் வீரர்களால் விரும்பப்பட்டகதியை அடைந்தான். பலவாறு சத்துருக்

களைஜயித்து யமனிடத்திற்கு அனுப்பிவிட்டுப் புண்ணியசாலிகளுக் குரியவையும் ஸர்வாபீஷ்டங்களையும் விளைவிப்பவையும் அழிவற்றவை யுமான உலகங்களை அடைந்தான். தவத்தினாலும் பிரம்மசர்யத்தினா லும் வேதாத்தியயனத்தினாலும் ஞானத்தினாலும் ஸாதுக்கள் எந்தக் கதியை அடையவிரும்புகிறார்களோ, அந்தக்கதியை உன்னுடைய அரு மைப்புதல்வன் அடைந்தான். நீ வீரனைப்பெற்றவள். வீரனுடைய மனைவி. வீரனிடத்தினின்றுபிறந்தவள். வீரர்களைப் பந்துக்களாகவுடை யவள். நல்லகுணமுள்ளவளே! புத்திரனைப்பற்றி நீ வியஸனமடை யாதே. அவன் உத்தமமானகதியை அடைந்தான். பிராம்மணஸ்திரீயா னவள் அத்தியயனத்தோடுகூடியவனும் (தர்மானுஷ்டானார்த்தமாகத் திரவ்யத்தை நல்லோரிடமிருந்து) யாசிப்பவனுமான பிள்ளையைப்பெறு வாள். பசுமாடு சுமக்கும்காளையை உண்டுபண்ணும். பெண்குதிரை வேக மாகச்செல்லக்கூடியகுதிரையை உண்டுபண்ணும். சூத்ரஸ்திரீ வேலை செய்பவனைப் பெறுவாள். வைஸ்யஸ்திரீ தொழிலைச்செய்கின்ற புத்தி ரனை உண்டுபண்ணுவாள். உன்னைப்போன்ற ராஜகுமாரி சூரனைப்பெறு வாள். பாலனைக்கொன்றவனும் பாபியுமான அந்த ஸைந்தவன் ஸ்நேகி தர்களின்கூட்டத்தோடும் பந்துக்களோடும்சேர்ந்து இந்த அதர்மத்தினு டையபலத்தை அடையப்போகிறான். [1] சிறந்த இடையுள்ளவளே! இரவு விடிந்தவுடன் பாதகத்தொழிலைச்செய்தவனான அவன் அமராவதிநகரத் தை அடைந்தாலும் பார்த்தனிடமிருந்து விடுதலையடையமாட்டான். நாளைத்தினம் நிச்சயமாக அறுத்து உன்காலடியில்கொணர்ந்து சேர்க் கப்படும் ஸைந்தவனுடையதலையைக் கால்களால் நீ தேய்க்கப்போகிறாய். வியஸனப்படாதே. ரோதனம்செய்யாதே. சூரனான உன்குமாரன் க்ஷத்தி ரியதர்மத்தைமுன்னிட்டு ஸத்புருஷர்கள் அடையும்கதியை அடைந் தான். இந்தயுத்தகளத்தில் நாங்களும் ஆயுதம்எடுத்து ஜீவிக்கின்ற இன்னம்மற்றவீரர்களும் அந்தக்கதியை அடையப்போகிறோம். சிறந்த இடையுள்ளவளே! அகன்றமார்பையுடையவனும் மிக்க புஜபலமுள்ள வனுமான உன்புத்திரன் சத்துருக்களுடைய கூட்டத்தினின்று பின் வாங்காதவனாகி ஸ்வர்க்கத்தை அடைந்தான். மனவருத்தத்தைவிடு. வீர்யமுடையவனும் சூரனும் மகாரதனுமான அபிமன்யு பிதாவையும் தாய்வர்க்கத்தையும் அனுஸரித்து ஆயிரம்ஆயிரமாகப் பகைவர்களைக் கொன்று, பிறகு தான்கொல்லப்பட்டான். ராஜபத்நி! மருமகளை ஸமா தானப்படுத்து. க்ஷத்திரியகுலத்தில் பிறந்தவளே! அதிகமனவருத்த மடையாதே. பெண்ணே! நாளைத்தினம் மிக்க அதிகமான பிரியவசனத்

[1] 'வராரோஹே' என்பது மூலம்.

தைக்கேட்டுச் சோகத்தைவிலக்கினவளாவாய். பார்த்தனால் எது ப்ரதிஜ்ஞைசெய்யப்பட்டதோ அது அவ்விதமே ஆகும். வேறுவிதமாகாது. உன்பர்த்தாவினால் செய்யவேண்டுமென்று இச்சிக்கப்பட்ட விஷயமானது ஒருபொழுதும் பயனற்றதாகாது. மனிதர்களும் பன்னகங்களும் பிசாசங்களும் ராக்ஷஸர்களும் பக்ஷிகளும் தேவர்களும் அசுரர்களும் யுத்தபூமியை அடைந்திருக்கின்ற ஸிந்துராஜனைக் காக்கவந்தாலும் அவர்களோடு அந்த ஜயத்ரதன் காலையிலிருக்கப்போகிறதில்லை' என்று கூறினார்.

---

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(ஸுபத்ரை புலம்பியதும், க்ருஷ்ணன் பின்னும் தேற்றியதும்.)

மஹாத்மாவான அந்தக் கேசவருடைய இந்த வார்த்தையைக் கேட்டு,ஸுபத்ரையானவள் புத்திரசோகத்தினால் பீடிக்கப்பட்டவளாகி, மிகத் துயரமடைந்து, 'ஐயோ! அல்பபாக்கியமுள்ளவளான என்பிள்ளையே! அப்பா! பிதாவுக்குஸமமான பராக்கிரமமுள்ள நீ எவ்வாறு யுத்தத்திற்சென்று நாசத்தை அடைந்தாய்? குழந்தாய்! கருநெய்தல்போலக் கறுப்புநிறமுள்ளதும் அழகான பற்களும் கண்களுமுள்ளதும் யுத்தரங்கத்திலுள்ள புழுதியினால் படியப்பட்டதுமான உன்முகமானது எவ்வாறு பார்க்கப்படும்? சூரனும் யுத்தத்தினின்று திரும்பாதவனும் கீழேவிழுந்திருப்பவனுமான உன்னை நிச்சயமாக எல்லோரும் பார்ப்பார்கள். அழகுள்ள தலை, கழுத்து, கை, தோள் இவைகளையுடையவனும் அகன்றமார்புள்ளவனும் ஒட்டினவயிறுள்ளவனும் சுந்தரமானவையும் நன்றாகப்புஷ்டியடைந்தவையுமான எல்லா அங்கங்களும் அழகியகண்களுமுடையவனும் ஆயுதம்பட்ட புண்களால் நிறைக்கப்பட்டவனுமான உன்னை எல்லாப்பிராணிகளும் பூமியில் உதித்திருக்கின்ற சந்திரனைப் போலப் பார்க்கின்றன. சுகத்துக்கு உரியவனான நீ முன்பு உத்தமமான விரிப்புக்களால் மூடப்பட்ட படுக்கையில்படுத்து உறங்கி இப்பொழுது அடிக்கத்தள்ளப்பட்டவனாக யுத்தபூமியில் எவ்வாறு படுத்திருக்கிறாய்? நீண்டகைகளையுடைய வீரனான எவன் முன்பு உத்தமஸ்திரீகளால் அனுஸரிக்கப்பட்டானோ அப்படிப்பட்டவன் இப்பொழுது யுத்தபூமியில் தள்ளப்பட்டு நரிகளால் எவ்வண்ணம் அனுஸரிக்கப்படுவான்? எவன் முன்பு மகிழ்ந்தவர்களான ஸூதர்களாலும் மாகதர்க

ளாலும் வந்திகளாலும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டானோ அவன் இப்பொழுது கோரமாக ஊளையிடுகின்ற ஊனுண்ணும் பிராணிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டிருப்பான். ப்ரபுவே! சூரர்களான பாண்டவர்களும் விருஷ்ணிகளும் பாஞ்சாலர்களும் ரக்ஷகர்களாயிருக்கும் பொழுது அநாதன்போல யாரால் நீ கொல்லப்பட்டாய்? ஓ! குழந்தாய்! கேசவர் நாதராயிருக்கும்போது, அநாதன்போல எவ்வாறு நீ கொல்லப்பட்டாய்? குற்றமற்றவனே! குழந்தாய்! உன்னைப்பார்க்கும்விஷயத்தில் திருப்திபெறாதவளும் பாக்கியமில்லாதவளுமான நான் நிச்சயமாக இப்பொழுது யமனுடைய வீட்டை அடையப்போகிறேன். புத்ர! விசாலமான கண்களுள்ளதும் மங்களகரமான நுனிமயிருடன்கூடியதும் இனியசொல்லுள்ளதும் நல்லவாஸனையையுடையதும் காயமில்லாததுமான உன்முகத்தை மறுபடியும் எப்பொழுது பார்ப்பேன்? யுத்தரங்கத்தை அடைந்திருக்கிற வீரனான உன்னைக் காப்பாற்றச் சக்தியற்றுப்போன பீமஸேனருடைய பலத்தை நிந்திக்கவேண்டும்; அர்ஜுனருடைய வில்திறமையை நிந்திக்கவேண்டும்; விருஷ்ணிவீரர்களுடைய வீர்யத்தை நிந்திக்கவேண்டும்; பாஞ்சாலர்களின் சேனையை நிந்திக்கவேண்டும்; கேகயர்களையும் சேதிதேசத்தவர்களையும் மச்சநாடர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் நிந்திக்கவேண்டும்; அபிமன்யுவைப்பாராமல் சோகத்தினால் கலங்கின கண்களையுடையவளான நான் இப்பொழுது பூமியைச் சூன்யம்போலவும் காந்தியையிழந்ததுபோலவும் காண்கிறேன். வாஸுதேவருக்கு மருமானும் காண்டீவத்தை வில்லாகவுடைய வீரருக்குப் புத்திரனும் அதிரதனும் வீரனுமான உன்னை இப்பொழுது தள்ளப்பட்டவனாக எவ்வாறு பார்ப்பேன்? குழந்தாய்! தாகங்கொண்டவனான நீ சீக்கிரம் வா; வா; பாக்கியமற்றவளும் பார்ப்பதில் திருப்தியடையாதவளுமான என் மடியின்மீதேறிப் பாலினால் நிரம்பின இரண்டு ஸ்தனங்களையும் சீக்கிரம்பானம்பண்ணு. ஆ! வீர! ஸ்வப்னத்தில் காணப்பட்ட பொருள்போல எனக்குக் கண்ணில்தோன்றி மறைந்தாயே? ஆச்சரியம்! மனுஷ்யத்தன்மை அநித்யமானது; நீர்க்குமிழிபோலச் சஞ்சலமானது. அபிமன்யுவே! உன்னைப்பற்றின மனோவியாதிகளால் ஆக்ரமிக்கப்பட்டவளும் யௌவனமுடையவளும் ஜாதியினால் உயர்ந்தவளும் நல்ல ஸ்வபாவமுடையவளும் இனிமையாகப்பேசுகின்றவளும் கீர்த்தியுடையவளும் மிருதுவான சரீரமுள்ளவளும் நீண்டகண்களையுடையவளும் பூர்ணசந்திரனுக்கொப்பான முகமுள்ளவளும் இளந்தளிர்போன்ற மெலிந்த அங்கத்தையுடையவளும் மதயானைபோலச் செல்கின்றவளும் கொவ்வைக்கனிபோன்ற உதடுகளையுடையவளும்

எனக்கு மருமகளுமான உத்தரை என்கிற இந்த உன் பிராணநாயகியை மெதுவாகக் கட்டி அணைந்து ஆனந்தப்படுத்து. புத்ர! கன்றைவிட்டுப்பிரிந்த பசுவைக் காப்பாற்றுவதுபோல, உன்னைவிட்டுப்பிரிந்தும் ஜரையடைந்தும் மனம்விழுந்துமிருக்கின்ற இந்த உத்தரையை நான் எவ்வாறு காப்பாற்றுவேன்? குழந்தாய்! உன்னைப் பார்க்கும்விஷயத்தில் மிக்க ஆவலுடையவளான என்னைப் பலம்வருங்காலத்தில் விட்டுவிட்டு அஸமயத்தில் புறப்பட்டுப்போய்விட்டாய். ஆ! ஆ!! கேசவர் நாதரா யிருக்கும்பொழுதே நீ அநாதன்போல யுத்தத்தில் கொல்லப்பட்டமையால் நிச்சயமாகத் தெய்வத்தினுடைய கதியானது கற்றறிந்தவர்களாலும் எவ்விதத்தாலும் அறியமுடியாதது. யாகஞ்செய்தவர்களும் தானம் கொடுப்பதே இயற்கையாயுள்ளவர்களும் சுத்தசித்தமுள்ளவர்களுமான ப்ராம்மணர்களுக்கும் ப்ரம்மசர்யத்தை அனுஷ்டித்தவர்களுக்கும் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானம்செய்கின்றவர்களுக்கும் நன்றிமறவாதவர்களுக்கும் ஔதார்யமுடையவர்களுக்கும் குருபணிவிடை செய்கின்றவர்களுக்கும் ஆயிரக்கணக்காகத் தக்ஷிணைகொடுத்தவர்களுக்கும் எந்தக் கதியுண்டோ அந்தக் கதியை நீ யடைவாயாக. திரும்பாமல் யுத்தம் செய்கின்ற சூரர்களுக்கும் யுத்தத்தில் பகைவர்களைக்கொன்று கொல்லப்பட்டவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ அந்தக் கதியை நீயடைவாயாக. குழந்தாய்! ஆயிரம் பசுக்களைத் தானம்செய்கின்றவர்களுக்கும் யாகத்தைநடப்பிக்கின்றவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, விவாஹத்துக்கு உபயோகமான கிருஹத்தை உபகரணங்களுடன் தானம்செய்கிறவர்களுக்கு மங்களகரமான எந்தக்கதியுண்டோ, சரணமடையத்தக்க பிராம்மணர்களுக்கு நிதியைக்கொடுக்கின்றவர்களுக்கும் அகங்காரத்தைவிட்டவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, அந்தக்கதியை நீ அடைவாயாக. ஓ! குழந்தாய்! கடுமையான விரதத்தை அனுஷ்டிக்கின்ற மஹரிஷிகள் பிரம்மசர்யத்தினால் எந்தக்கதியையடைகிறார்களோ, பதிவ்ரதாஸ்திரீகள் எந்தக்கதியையடைகிறார்களோ அந்தக்கதியை நீ யடைவாயாக. ஓ! குழந்தாய்! நன்னடக்கைகளாலே அரசர்களுக்கு நிலைத்ததான எந்தக் கதியுண்டாகிறதோ, (மேலும்) முன் உள்ள புண்யங்களால் அடையப்பட்டிருக்கிற ஸந்யாஸிகளுக்கும் எப்பொழுதும் ஏழைகளிடம் இரக்கமுள்ளவர்களுக்கும் தானம்செய்கின்றவர்களுக்கும் *கோள்சொல்வதினின்று விலகினவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, அந்தக்கதியை நீ யடைவாயாக. குழந்தாய்! விரதங்களையனுஷ்டிக்கின்றவர்களுக்கும் தார்மிகர்களுக்கும் குருபணிவிடைசெய்கின்றவர்களுக்கும் அதிதிகளுடைய விருப்பத்தை ஸபலமாகச்செய்கின்றவர்களுக்கும் எந்தக்கதி

யுண்டோ, அந்தக்கதியை நீ யடைவாயாக. அருமைக்குழந்தாய்! பொறுத்தற்கரிய துக்ககாலங்களில் சோகாக்னியால் பீடிக்கப்பட்டும் மனத்தை உறுதிப்படுத்திக்கொள்ளுகிறவர்களுக்கு எந்தக்கதியுண்டோ, அந்தக்கதியை நீ யடைவாயாக. இவ்வுலகத்தில் எப்பொழுதும் தாய்தந்ைதயர்களுக்குப் பணிவிடைசெய்கிறவர்களுக்கும் தம்மனைவிகளினிடத்திலேயே பற்றுதலுள்ளவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, அதனை நீயடைவாயாக. குழந்தாய்! ருதுகாலத்தில் தம்மனைவிகளைச்சேர்கின்றவர்களும் பரஸ்திரீகளிடமிருந்து மனத்தைத் திருப்பினவர்களுமான விவேகிகளுக்கு எந்தக்கதியுண்டோ, அதனை நீயடைவாயாக. மாத்ஸர்யத்தைவிட்டு எல்லாப்ராணிகளையும் அன்போடு பார்க்கின்றவர்களுக்கும் பரஹிம்ஸைசெய்யாதவர்களுக்கும் பொறுமையுள்ளவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, அந்தக்கதியை நீ யடைவாயாக. குழந்தாய்! மதுமாம்ஸத்தைவிலக்கினவர்களுக்கும் மதம் டம்பம் பொய் பரஹிம்ஸை அநியாயம் இவைகளினின்று விலகினவர்களுக்கும் எந்தக்கதியுண்டோ, அந்தக்கதியை நீயடைவாயாக. லஜ்ஜையுள்ளவர்களும் எல்லாச்சாஸ்திரங்களையும் அறிந்தவர்களும் ஞானத்தால் திருப்தியடைந்தவர்களும் இந்திரியங்களை யடக்கினவர்களுமான ஸாதுக்கள் எந்தக்கதியையடைகிறார்களோ, அந்தக்கதியை நீ யடைவாயாக' என்று புலம்பினாள்.

இவ்வாறு புலம்புகின்றவளும் வாட்டமுற்றவளும் சோகத்தால் பீடிக்கப்பட்டவளும் உத்தரையுடனிருப்பவளுமான ஸுபத்திரையினிடத்தில் அப்பொழுது பாஞ்சாலியானவள் வந்துசேர்ந்தாள். அரசரே! அப்பொழுது அந்த ஸுபத்திரை மிகவும் அழுது அதிக வியஸனமுற்றுப் பைத்தியம்பிடித்தவள்போலப் புலம்பி ப்ரஜ்ஞையற்றுப் பூமியில்விழுந்தாள். புண்டரீகாக்ஷரான ஸ்ரீ கிருஷ்ணரோ மிகுந்த வியஸனத்தையடைந்து, துக்கித்தவளான தம் ஸஹோதரியை ஜலத்தை முகத்தில்தெளித்து உபசாரஞ்செய்து ஸமாதானப்படுத்தி ஹிதமான அந்த அந்த வார்த்தையைச்சொல்லி ப்ரஜ்ஞையற்றவள்போன்று அழுது புரளுகின்றவளும் நடுக்கமுற்றவளுமான அவளைப்பார்த்து, 'ஸுபத்திரையே! புத்திரனைக்குறித்து நீ வியஸனப்படாதே. பாஞ்சாலி! உத்தரையைத் தேறுதலடையும்படி செய். க்ஷத்திரியஸ்ரேஷ்டனான அபிமன்யு ப்ரஸித்தமான கதியை அடைந்தான். ஸுந்தரமுகி! நம்முடைய குலத்தில் இன்னும் மற்றப் புருஷர்களெல்லோரும் கீர்த்திமானான அபிமன்யுவினுடைய கதியை அடையப்போகிறதில்லை. மஹாரதனான உன் குமாரன் ஸஹாயமற்றவனாக எந்தக் கார்யத்தைச்செய்தானோ அதனை

நாம் செய்யப்போகிறோம். நம்முடைய ஸுஹ்ருத்துக்களும் செய்வார்கள்' என்று இவ்வாறான வார்த்தையைக் கூறினார். மிக்க புஜபலமுடையவரும் சத்ருருக்களை அடக்குகிறவருமான ஸ்ரீ வாஸுதேவர் தம் ஸஹோதரியான ஸுபத்திரையையும் திரௌபதியையும் உத்தரையையும் இவ்வாறு ஸமாதானப்படுத்திவிட்டுப் பார்த்தனுடைய பக்கத்தையே வந்தடைந்தார். பிறகு, அவர் அரசர்களுக்கும் பந்துக்களுக்கும் அவ்வாறே அர்ஜுனனுக்கும் அனுமதிகொடுத்துவிட்டு அந்தப்புரத்தில் ப்ரவேசித்தார். அவர்களும் தங்கள் தங்கள் வாஸஸ்தானம்போய்ச் சேர்ந்தார்கள்.

---

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞா பர்வம் (தொடர்ச்சி.)

(ஸ்ரீ க்ருஷ்ணன் த்ர்யம்பகருக்குப் பலிபோடும்படி அர்ஜுனனுக்குச் சொல்லித் தாருகனோடு ஸம்பாஷித்தது.)

செந்தாமரைமலர்போன்ற கண்களையுடையவரும் பிரபுவுமான ஸ்ரீ வாஸுதேவர் பிறகு நிகரற்றதான அர்ஜுனனுடைய அரண்மனை சென்று தீர்த்தத்தை ஆசமனம்செய்து மங்களகரமான லக்ஷணங்களுள்ள தரையில் வைடூர்யத்திற்கொப்பான தர்ப்பங்களை நல்ல படுக்கையாகப் பரப்பினார். பிறகு, அந்தப்படுக்கையை உத்தமமான ஆயுதங்களால் சூழப்பட்டதாகச்செய்து, மாலையினாலும் அக்ஷதங்களாலும் மிக்க மங்களகரமான கந்தங்களாலும் சாஸ்திரமுறைப்படி அலங்கரித்தார். பிறகு, தீர்த்தத்தை ஆசமனம்செய்தவனும் வணக்கமுள்ள பரிசாரகர்களையுடையவனுமான பார்த்தனுக்கு, திரியம்பகரின்பொருட்டுத் தினந்தோறும் இரவில் செய்வதான பலியைக் காண்பித்தார். பிறகு, பார்த்தன் ஸந்தோஷமடைந்து மாதவரைக் கந்தங்களாலும் பூமாலைகளாலும் அலங்காரஞ்செய்து, இராத்திரியில் செய்வதான அந்தப்பலியை அந்தத் திரியம்பகருக்காக நிவேதனஞ்செய்தான். கோவிந்தர் பல்குனனைப் பார்த்து, 'நல்லது, நல்லது' என்று மறுமொழி சொன்னார். பிறகு, ஸ்ரீமானான க்ருஷ்ணர், 'பார்த்த! நீ தூங்கலாம்; உனக்கு மங்களமுண்டாகட்டும்; மங்களத்தின்பொருட்டே நான் செல்லுகிறேன்' என்று சொல்லிவிட்டு, ஆயுதபாணிகளான வாயில்காப்பவர்களை ரக்ஷகர்களாகவைத்துவிட்டுத் தாருகனால்பின்தொடரப்பெற்றுத் தம்சேனை தங்கியிருக்குமிடம் சென்றார். அவர் பலவாறான செய்கையை மனத்தில் ஆலோசித்துக்கொண்டு வெண்மையான படுக்கையில் படுத்தார். ஷாட்குண்யபரிபூர்ணரும்

செந்தாமரைபோன்ற கண்களையுடையவரும் ஸர்வேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரும் பெரிய கீர்த்தியுள்ளவரும் விஷ்ணுஸ்வரூபியும் ஜயசீலனான அர்ஜுனனுக்குப் பிரியத்தைச் செய்கின்றவருமான ஸ்ரீ வாஸுதேவர் நன்மையை விளைவிப்பதில் விருப்பத்துடன் யோகத்தையடைந்து (அதில்) மனத்தைச்சேர்த்து, பலத்தையும் காந்தியையும் வளர்ப்பதும், சோகத்தையும் மனக்கவலையையும் நீக்குவதுமான விதியை அர்ஜுனனுக்காகச் செய்தார். அந்த ராத்திரி பாண்டவர்களுடைய பாசறையில் ஒருவராவது தூங்கவில்லை. வேந்தரே! விழிப்பானது எல்லாஜனங்களையும் வந்தடைந்தது. புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனும் காண்டீவத்தை வில்லாகக்கொண்டவனுமான மஹாத்மாவினாலே நாளைத் தினம் ஸிந்துராஜனை வதஞ்செய்யவேண்டுமென்று பிரதிஜ்ஞைசெய்யப் பட்டது. மிக்க புஜபலமுள்ளவனும் சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனும் இந்திரகுமாரனுமான அர்ஜுனன் எவ்வாறு பிரதிஜ்ஞையை ஸபலமாகச்செய்வானென்று எல்லோரும் நன்றாக ஆலோசித்தனர். மற்றும் சிலர், 'புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனும் மஹாத்மாவுமான பாண்டவனாலே பெரிய பிரதிஜ்ஞையானது செய்யப்பட்டுவிட்டது. இந்த முயற்சி மிகவும் கஷ்டமானது. சூரர்களான பிராதாக்களும் அளவில்லாத சேனைகளும் திருதராஷ்டிரனுடைய புத்திரனால் நான்கு பக்கங்களிலும் நன்றாக அமைக்கப்பட்டிருக்கிறார்கள். அந்த அர்ஜுனன் பகைவர்கூட்டமனைத்தையுங்கொன்று மஹாவிரதத்தை நிறைவேற்றி யுத்தத்தில் ஸைந்தவனைக்கொன்று மறுபடி ஜயமுள்ளவனாகவும் ஸுகமுள்ளவனாகவும் திரும்பிவரவேண்டும். நமக்குச் சிறிதுபுண்யமிருக்குமாகில், அர்ஜுனன் ஸைந்தவனைக் கொல்லுக. பார்த்தன் எல்லாப்பகைவரையும்வென்று இந்த மகாபயத்தினின்று நம்மைக் காக்கட்டும்' என்றனர். இவ்வாறு பிரார்த்திக்கின்ற அவர்கள் [1] உபஸ்ருதியை எதிர்பார்த்திருந்தார்கள். இஷ்டமான உபஸ்ருதியைக் கேட்டு மனக்களிப்படைந்து நிச்சயமாக ஜயத்தை விரும்பினார்கள். 'இந்தக் கார்யம் எவ்வாறு முடியுமோ' என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். 'அர்ஜுனன் ஸிந்துராஜனை நாளைத்தினம் கொல்லாமல்போனால் அக்நிப்ரவேசம் செய்யப்போகிறான். விஜயனால் செய்யப்பட்ட பிரதிஜ்ஞையைப் பொய்யாகச்செய்வது முடியாதல்லவா? பார்த்தன் சோகத்தினால் மயக்கமுற்றுப் பெரிய ஸாஹஸத்தையன்றோ செய்துவிட்டான்? அர்ஜுனன் மாண்டபிறகு ராஜாவான தர்மநந்தனர் எப்படி இருப்பார்? அந்த

[1] தாம் எண்ணியிருப்பதற்கனுகூலமாகவோ ப்ரதிகூலமாகவோ சொல் பிறத்தல்

அர்ஜுனனிடத்திலல்லவோ பாண்டுநந்தனரான தர்மபுத்திரரால் எல்லா விஜயமும் வைக்கப்பட்டிருந்தது. நமக்குச் சிறிது ஸுக்ருதமாவது தானபலமாவது யாகபலமாவது இருக்குமேயானால் அவை எல்லா வற்றினுடைய பலத்தினாலும் ஸவ்யஸாசி சத்துருக்களை ஜயிக்கவேண் டும்' என்று பேசிக்கொண்டார்கள். பிரபுவே! மன்னரே! இவ்வாறு ஸம்பாஷித்து ஜயத்தைவிரும்பிக்கொண்டிருக்கின்ற அவர்களுக்கு அன் றிரவு அதிக கஷ்டத்துடன் கழிந்தது. அந்த ராத்திரியின் நடுவில் ஸ்ரீ ஜநார்த்தனர் விழித்துக்கொண்டு பார்த்தனுடைய பிரதிஜ்ஞையை நினைத்துத் தாருகனைப்பார்த்து, 'தாருக! கொல்லப்பட்ட பந்துவை யுடையவனும் மனவருத்தங்கொண்டவனுமான அர்ஜுனனாலே,'நாளைத் தினம் ஜயத்ரதனைக்கொல்லப்போகிறேன்' என்கிற ப்ரதிஜ்ஞை செய்யப் பட்டுவிட்டது. அந்த ப்ரதிஜ்ஞையைத் துரியோதனன்கேட்டு யுத்தத் தில் பார்த்தன் ஜயத்ரதனைக் கொல்லாதபடி மந்திரிகளோடு ஆலோசிக் கப்போகிறான். அந்த எல்லா அக்ஷௌஹிணி சேனைகளும் ஜயத்ரத னைக் காப்பாற்றப்போகின்றன. எல்லா அஸ்திரவிதிகளிலும் கரைகண் டவரான துரோணரும் தமதுபுத்திரரோடு பாதுகாக்கப்போகிறார். தைத் தியதானவர்களுடைய மதத்தை அழிப்பவனும் ஆயிரங்கண்களுள்ள வனும் நிகரற்றவனுமான அந்த இந்திரனும் துரோணராலே காக்கப் பட்ட ஜயத்ரதனை யுத்தத்தில் கொல்வதற்குச் சக்தியுள்ளவனாகான். குந்திபுத்ரனான அர்ஜுனன் ஸூர்யன் அஸ்தமயமடைவதற்குள் ஜயரதனைக்கொல்லும்படி நான் நாளைத்தினம் செய்யப்போகிறேன். எனக்குக் குந்திபுத்திரனான அர்ஜுனனைக்காட்டிலும் மிக்க அன்புக் குப் பாத்திரமானவன் வேறொருவனுமில்லை; மனைவிகளாவது ஸ்நே ஹிதர்களாவது ஞாதிகளாவது பந்துக்களாவது இல்லை. தாருக! முகூர்த்தகாலங்கூட இவ்வுலகத்தை அர்ஜுனனையிழந்ததாகப் பார்ப்ப தற்கு நான் சக்தனல்லேன். அஃது அவ்விதம் ஆகப்போகிறதில்லை. நான் குதிரைகளோடும் யானைகளோடும் கர்ணனோடும் துரியோதன னோடுங்கூடின அந்த எல்லாக் கௌரவவீரர்களையும் சீக்கிரமாக அர் ஜுனன் நிமித்தமாகக் கொன்று ஜயமடையப்போகிறேன். தாருக! மஹாயுத்தத்தில் தனஞ்சயன்பொருட்டுப் பராக்கிரமத்தை வெளிப் படுத்துகின்ற என்னுடைய வீர்யத்தைப் போர்க்களத்தில் நாளைத்தினம் மூவுலகங்களும் பார்க்கட்டும். தாருக! நாளைத்தினத்தில் யுத்தபூமியில் குதிரைகளோடும் யானைகளோடும் தேர்களோடும் ஆயிரக்கணக்கான அரசர்களையும் நூற்றுக்கணக்கான இராஜகுமாரர்களையும் ஓடும்படி செய்யப்போகிறேன். யுத்தத்தில் கோபங்கொண்ட என்னால் பாண்டவன்

நிமித்தமாகச் சக்ராயுதத்தால் த்வம்ஸம்பண்ணப்பட்டுக் கீழேதள்ளப் பட்டிருக்கிற அந்த அரசர்களுடைய சேனையை நாளைத்தினம் நீ பார்க்கப்போகிறாய். தேவர்களோடும் கந்தர்வர்களோடும் பிசாசங்களோடும் உரகங்களோடும் ராக்ஷஸர்களோடும்கூடின எல்லாவுலகங்களும் என்னை நாளைத்தினத்தில் ஸவ்யஸாசிக்கு நட்பாளனாக அறியப்போகின்றன. எவன் அந்த அர்ஜுனனைப் பகைக்கிறானோ அவன் என்னைப் பகைக்கிறான். எவன் அவனை அநுஸரிக்கிறானோ அவன் என்னை அநுஸரித்தவன். அர்ஜுனன் என் சரீரத்தில் பாதியாவன் என்று புத்தியினால் நிச்சயிப்பாயாக. நீ இன்று இரவு விடிந்ததும், உத்தமமான ரதத்தை யுத்தமுறைப்படி ஸித்தஞ்செய்து ஜாக்கிரதையோடு கொண்டுவா. ஸூத! கௌமோதகி என்கிற திவ்யமான கதையையும் சக்தியையும் சகாத்தையும் வில்லையும் அம்புகளையும் எல்லா உபகரணங்களையும் ரதத்தின்மீது எடுத்துவைத்து வீர்யமுள்ளதும் யுத்தபூமியில் ரதத்தில் விளங்குகின்றதும் கருடவடிவமுள்ளதுமான என்னுடைய கொடிமரத்துக்குத் தேரின்நடுவில் இடத்தையும் ஏற்படுத்து. சூரியனும் அக்னியும்போன்ற காந்தியையுடையவைகளும் விஸ்வகர்மாவினால் செய்யப்பட்டவைகளும் திவ்யமானவைகளும் பொன்னாற்செய்தவைகளுமான பூஷணங்களால் குடையையும் குதிரைகளையும் அலங்காரம் செய். தாருக! அந்தத்தேரில் வலாஹகம் மேகபுஷ்பம் சைப்யம் ஸுக்ரீவமென்கிற உத்தமமான குதிரைகளைப் பூட்டி. நீயும் கவசம்பூண்டு நில். மேகத்தின் இடிமுழக்கம்போன்ற பயங்கரமான பாஞ்சஜந்யத்தினுடைய பேரொலியைக்கேட்டு நீ வேகமாக என்னிடம் வந்துசேர். தாருக! என் பிதாவுக்கு ஸஹோதரிபுத்திரனும் எனக்குப் பிராதாவைப்போலிருக்கின்றவனுமான அர்ஜுனனுடைய கோபத்தையும் எல்லாத்துக்கங்களையும் ஒரு பகலில் போக்கப்போகிறேன். யுத்தத்தில் திருதராஷ்டர புத்திரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீபத்ஸுவானவன் ஜயத்ரதனைக்கொல்லும்படி. எல்லா உபாயங்களாலும் முயற்சிசெய்யப் போகிறேன். பீபத்ஸுவானவன் எவனெவனைக் கொல்லும்விஷயத்தில் முயற்சியைச் செய்யப்போகிறானோ அவனவனை யுத்தத்தில் அந்தந்த இடத்தில் கொல்லுவான் என்று நான் எண்ணுகிறேன்' என்று கூற, தாருகன், 'புருஷஸ்ரேஷ்டரே! எவனுக்குத் தேவரீர் ஸாரதியாக இருக்கும் நிலைமையை அடைந்தீர்களோ, அவனுக்கு நிச்சயமாக ஜயமே. தோல்வியானது எவ்விடத்திலிருந்து உண்டாகும்? விஜயனுடைய ஜயத்தின்பொருட்டு என்னைக்குறித்துத் தேவரீர் சொன்னதை இந்த இரவினுடைய கடையாமத்தில் செய்யப்போகிறேன்' என்று விஜ்ஞாபனஞ்செய்தான்.

---

## எண்பதாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ஸ்வப்னத்தில் க்ருஷ்ணனோடு கைலாஸத்துக்குச்சென்றதும் ருத்ரரைத்துதித்து மகிழ்வித்ததும்.)

எண்ணுதற்கரிய பராக்கிரமமுள்ளவனும் தன்சபதத்தைக்காப்பவனுமான தனஞ்சயன், திருதராஷ்டிரகுமாரனான துர்யோதனனுடைய அந்த ஆலோசனையை நினைத்துக்கொண்டே மதிமயக்கமுற்றான். சோகத்தினால் மிக்கதாபமடைந்தவனும் தியானம்செய்கின்றவனுமான அந்த அர்ஜுனனிடம் மகாதேஜஸ்வியான கருடத்வஜர் ஸ்வப்னத்தில்வந்தார். தர்மாத்மாவானபல்குனன் எல்லாநிலைமைகளிலும் பக்தியினாலும் அன்பினாலும் கிருஷ்ணருக்கு எழுந்திருந்து மரியாதைசெய்வதை எப்பொழுதும்விடுவதில்லை. அவன் ஸ்ரீ கோவிந்தரை எதிர்கொண்டழைத்துத் தன் ஆஸனத்தை அவருக்குக்கொடுத்துவிட்டு அப்பொழுது தானுட்காருவதில் புத்தியைச்செலுத்தாமல் நின்றான். பிறகு மஹாதேஜஸ்வியும் உலகத்தினுடைய நிச்சயத்தை அறிந்தவருமான ஸ்ரீ கிருஷ்ணபகவான் உட்கார்ந்துகொண்டு, நின்றுகொண்டிருக்கிற குந்திபுத்திரனைநோக்கி, 'பார்த்த! துக்கத்தில் மனத்தைச்செலுத்தாதே. காலம் (ஒருவராலும்) ஜயிக்கமுடியாததன்றோ? காலமானது எல்லாப்பிராணிகளையும் (ஸுகதுக்கங்களில் அல்லதுஜனனமரணங்களில்) கட்டுப்படுத்துகிறது. நரஸ்ரேஷ்டனே! எந்தநிமித்தமாக உனக்குத் துக்கம் உண்டாயிருக்கிறது? அதனை எனக்குச்சொல். கற்றறிந்தவர்களுள் சிறந்தவனே! நீ துக்கிக்கத்தக்கவனல்லை. சோகமானது கார்யங்களைக் கெடுக்குந்தன்மையையுடையது. எந்தக்கார்யம் அவசியம்செய்யத் தக்கதாயிருக்குமோ அதனைச்செய்கையினால் நன்றாகஅனுஷ்டானம்செய். தனஞ்சய! செய்கையில்லாதவனுக்குச் சோகமென்பது சத்துரு; சோகத்தைப்பாராட்டுகின்றமனிதன் சத்துருக்களை ஸந்தோஷிக்கச்செய்து பந்துக்களை வருத்தமடையச்செய்கிறான்; க்ஷயத்தையுமடைகிறான். ஆதலால், நீ துக்கிப்பதற்குத்தகுந்தவனல்லை' என்று இவ்விதமானவாக்யத்தை உரைத்தார்.

கற்றறிந்தவனும் பகைவர்களால் ஜயிக்கப்படாதவனுமான பீபத்ஸுவானவன் வாஸுதேவர் இவ்வாறுசொல்லியதைக்கேட்டு அப்பொழுது, 'கேசவரே! என்புத்திரனைக்கொன்றவனான துராத்மாவை நாளைத்தினம் கொல்லப்போகிறேனென்று பெரியப்ரதிஜ்ஞை ஜயத்ரதனைக்கொல்லும்விஷயத்தில் என்னால்செய்யப்பட்டது. அச்சுதரே! என் ப்ர

திஜ்ஞையை வீணுகச்செய்வதின்பொருட்டு மஹாரதர்களான எல்லாத் தார்த்தராஷ்டிரர்களும் ஸைந்தவனைக்காப்பாற்றிப் பின்பக்கத்தில்வைத் துக்கொள்வார்கள். மாதவரே! அந்தயுத்தகளத்தில் பதினேர் அக்ஷௌ ஹிணீ ஸைனியங்கள் இருந்தன. அவைகளில் கொல்லப்பட்டவை போக மிச்சமிருக்கும்இவை வெல்லமுடியாதவை. வாஸுதேவரே! அவைகளாலும் எல்லாமஹாரதர்களாலும் யுத்தத்தில் சூழப்பட்ட துராத்மாவான ஸைந்தவன் என்னுல் எவ்வாறு பார்க்கத்தக்கவனுவான்? கேசவரே! ப்ரதிஜ்ஞை நிறைவேறப்போகிறதில்லை. ப்ரதிஜ்ஞையானது தவறுமேயானுல் என்னைப்போன்றவன் எவ்வாறு ஜீவிப்பான்? வீரரே! என்துக்கத்தினுடைய முடிவைப்பற்றிய ஆவலானது சுற்றுகிறது. ஸூர்யனும் வேகமாகச்செல்லுகிறுன். ஆதலால், யான் இவ்வாறு சொல் லுகிறேன்' என்று இவ்விதமான அர்த்தபுஷ்டியுள்ள வார்த்தையைச் சொல்லினன். ராஜரே! பார்த்தனுடைய துக்கத்துக்கு ஆஸ்பதமான அந்தவசனத்தைக்கேட்டுக் கருடத்வஜரும் மஹாதேஜஸ்வியும் தாமரை போன்றகண்களுள்ளவரும் ஸைந்தவனுடைய வதத்தில் ஸமர்த்தரு மான ஸ்ரீ கண்ணபிரான் கிழக்குமுகமாகவிருந்து ஜலத்தைத்தொட்டுப் பாண்டுபுத்திரனுன அர்ஜுனனுடைய ஹிதத்தின்பொருட்டு, 'பார்த்த! தேவரான மஹேசுவரர் எந்த அஸ்திரத்தினுல் எல்லாத்தைத்யர்களை யும் யுத்தத்தில்கொன்றுரோ, அப்படிப்பட்ட பாசுபதமென்கிற உத்தம மான அஸ்திரமானது சாஸ்வதமானது. அந்த அஸ்திரத்தை இப்பொ ழுது நீ அறிந்தால் நாளைத்தினம் ஜயத்ரதனைக்கொல்வாய். ஆதலால், அதனை அறிவதற்காக விருஷபத்வஜரை மனத்தினுல் சரணமடைவா யாக. தனஞ்சய! அந்தத்தேவரை மனத்தினுலே தியானம்செய்து மௌனத்துடனிரு. பிறகு அவருடைய அனுக்ரஹத்தினுலே மகிமை யுடைய அந்த அஸ்திரத்தைப் பக்தியினுல் நீ அடைவாய்' என்று இந்த வாக்யத்தைச்சொன்னுர்.

பிறகு, கிருஷ்ணருடைய வார்த்தையைக்கேட்டுத் தனஞ்சயன் தீர்த்தத்தினுல் ஆசமனம்செய்து ஏகாக்ரசித்தத்தோடு பூமியில் உட் கார்ந்துகொண்டு மனத்தினுல் ருத்திரரைத்தியானித்தான். பிறகு, அர்ஜுனன் தியானத்திலிருந்துகொண்டு மங்களகரமான அடை யாளங்களுள்ள [1] பிராம்மமுகூர்த்தத்தில் தன்னைக் கேசவருடன் ஆகாயத்தில்கண்டான். பரிசுத்தமானதும் ஜ்யோதிர்மண்டலங்களால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டதும் ஸித்தர்களாலும் சாரணர்களா

[1] விடிய ஐந்துநாழிகை இருக்கும் ஸமயம்; இது உத்தமமான ஸாத்விகவேளை.

ஷம அடையப்பட்டதுமான ஹிமயபர்வதத்தின் தொடர்ச்சிமலையான மணிமானென்னும் பர்வதத்தையும் கண்டான். ஸர்வவ்யாபியான கேசவரால் வலக்கையில்பிடிக்கப்பட்டு அந்தப்பார்த்தன் அவரோடு வாயுவேகம்போன்ற வேகத்தையுடைய கதியுடையவனாக ஆகாயத்தை அடைந்தான். தர்மாத்மாவான அவன் ஆச்சரியகரமான தோற்றமுள்ள அனேக வஸ்துக்களைப்பார்த்துக்கொண்டு வடதிசையில் வெண்ணிறமுள்ள ஒரு மலையையும் குபேரனுடைய சைத்ரரதமென்னும் உத்தியானத்தில் தாமரைமலர்களால் அலங்கரிக்கப்பட்ட தாமரை ஓடையையும் கண்டான்; நதிகளுள்சிறந்ததும் அதிகமான ஜலமுள்ளதும் எப்பொழுதும் புஷ்பங்களும் பழங்களுமுள்ள மரங்களால் சூழப்பட்டதும் ஸ்படிகமயமானகற்களுள்ளதும் ஸிம்மங்களாலும் புலிகளாலும் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டதும் பலவிதமான மிருகங்களாலே வியாபிக்கப்பட்டதும் பரிசுத்தமான ஆஸ்ரமங்களுள்ளதும் மனத்திற்கு இன்பமானதும் அழகுள்ளபக்ஷிகளால் அடையப்பட்டதுமான அந்தக்கங்கையையும் பார்த்தான். கின்னரர்களுடைய உரத்தஸங்கீதத்வனியினால் ஒலியுள்ளதாகச் செய்யப்பட்டவையும் வெள்ளியும் தங்கமுமானகொடுமுடிகளோடு பலவிதஓஷதிகளாலே விளங்குகின்றவையும் அவ்வாறே பூத்திருக்கின்ற மந்தாரவிருக்ஷங்களாலே ப்ரகாசிக்கின்றவைகளுமான மந்தரபர்வதத்தினுடைய ப்ரதேசங்களையும் கண்டான். பளபளப்பான மைக்குவியலைப்போன்ற வடிவமுள்ள காலபர்வதத்தையும் ப்ரம்மதுங்கத்தையும் மற்றுமுள்ளநதிகளையும் தேசங்களையும் உயரமானசதஸ்ருங்கம் சர்யாதிவனம் அஸ்வசிரஸ்தானம் அதர்வணரிஷியினுடைய ஆஸ்ரமம் விருஷதம்சமென்கிற உத்தமமானபர்வதம் அப்ஸரஸுகளால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டதும் கின்னரர்களால் விளங்குவதுமான மஹாமந்தரபர்வதம் இவைகளையும் அடைந்தான். அந்தப்பர்வதத்தில் கிருஷ்ணனோடு செல்லுகின்ற அர்ஜுனன், மங்களகரமான அருவிகளால் நிரம்பியதும் ஸ்வர்ணமயமான தாதுக்களாலலங்கரிக்கப்பட்டதும்சந்திரகிரணங்கள்போல ப்ரகாசிக்கின்றமேனியுள்ளதும் பட்டணங்களுடைய வரிசையோடுகூடியதுமான பூமியையும் ஆச்சரியகரமான ஸ்வரூபமுள்ள கடல்களையும் பலவித உலோகங்கள் விளையுமிடங்களையும்கண்டான். கிருஷ்ணனோடுகூடின அர்ஜுனன் ஆகாசத்தையும் ஸ்வர்க்கத்தையும் பூமியையும் அவ்விதமாகவே விஷ்ணுபதமென்னுமிடத்தையும் அடைந்து ஆச்சரியத்தை அடைந்தவனாக வில்லிலிருந்து விடுபட்ட அம்புபோலச்சென்றான். அப்பொழுது அவன் கிருஹங்கள் நக்ஷத்திரங்கள் சந்திரன் சூரியன் அக்னி இவற்றிற்குநிகரான ஒளியுள்ள ஒரு மலையையும்

கண்டான். அந்த மலையை அடைந்து அதன்உச்சியில் தபோநிஷ்டையி லிருக்கின்றவரும் தம்தேஜஸினாலே ஆயிரம் ஸூர்யர்களுக்கு ஸமானமாக விளங்குகின்றவரும் சூலத்தைக்கையிலேந்தியவரும் சடைமுடியைத்தாங்கியவரும் வெள்ளைநிறமுள்ளவரும் மரப்பட்டையையும் யானைத்தோலையும் தரித்தவரும் ஆயிரங்கண்களோடு விசித்திரமான அங்கங்களுள்ளவரும் மஹாபராக்ரமசாலியும் பார்வதிஸமேதரும் ப்ரகாசிக்கின்ற பூதகணங்களோடுகூடியவரும் கானம் நான்குவிதவாத்யங்கள் இவைகளுடைய நாதங்களோடும் விகடத்தோடும் நர்த்தனத்தோடும் கூடியவரும் இங்குமங்கும் ஸஞ்சாரத்தோடும் கைகொட்டுதலோடும் உரத்தஸிம்மநாதத்தோடும் சேர்ந்தவரும் பரிசுத்தமான கந்தங்களால் அடையப்பட்டவரும் பிரம்மவாதிகளான தேவரிஷிகளால் ஸ்தோத்ரங்களாலே துதிக்கப்படுகின்றவரும் எல்லாப்பிராணிகளுக்கும் ரக்ஷகரும் ஜகதிஶ்வரரும் அபீஷ்டங்களைக்கொடுக்கின்றவரும் மங்களஸ்வரூபியும் மஹாத்மாவுமான விருஷபத்வஜரைக்கண்டான். தர்மாத்மாவான வாஸுதேவரோ பார்த்தனோடுகூட அவரைப்பார்த்து, சாஶ்வதமானவேத மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு சிரஸினால் வணங்கினார். உலகங்களுக்கு ஆதியும் விஶ்வகர்மஸ்வரூபியும் பிறப்பில்லாதவரும் ஜகத்திற்குப் பிரபுவும் விகாரமற்றவரும் மனத்தினுடைய ப்ரவிருத்தி நிவிர்த்திக்குக் காரணரும் ஜகத்துக்குக் காரணமாயிருப்பவரும் ஆகாசஸ்வரூபியாயும், வாயுஸ்வரூபியாயும், தேஜஸ்ஸுகளுக்கு நிதியாயுமிருப்பவரும் வாரிதாரைகளை ஸ்ருஷ்டிக்கின்றவரும் பூமிக்கு ஆதியான மூலகாரணரும் தேவர்கள் அஸுரர்கள் யக்ஷர்கள் மனுஷ்யர்கள் இவர்களுக்குச் சிக்ஷகரும் யோகதர்சிகளுக்குப் பரமாதாரமாயிருப்பவரும் பிரத்யக்ஷமாகத் தோன்றியிருக்கின்ற பிரம்மவித்துக்களுடைய ரகஸ்யமாயிருப்பவரும் சராசரங்களைப் படைத்தழிக்கின்றவரும் யமன்போன்ற கோபத்தையுடையவரும் மஹாத்மாவும் இந்திரனுடைய ஐஶ்வர்யம்போன்ற ஐஶ்வர்யமுடையவரும் ஸூர்யன்போல் பிரகாசத்தையுடையவருமான அந்த ஈஶ்வரரை அப்பொழுது கிருஷ்ணார்ஜுனர் இருவரும் வாக்கினாலும் மனத்தினாலும் புத்தியினாலும் செய்கையினாலும் நமஸ்காரஞ்செய்தார்கள். ஸூக்ஷ்மமான அத்யாத்மஸ்தானத்தை விரும்புகின்றவர்களான ஞானிகள் எவரைச் சரணமடைகிறார்களோ பிறப்பில்லாதவரும் காரணஸ்வரூபியுமான அந்தச்சங்கரரை அவ்விருவர்களும் சரணமடைந்தார்கள். அர்ஜுனனும் அந்தத்தேவரை ஸர்வபூதங்களுக்கும் ஆதி என்றும் முக்காலங்களிலுமுள்ள வஸ்துக்களுக்குக் காரணரென்றும் அறிந்து மறுபடியும் மறுபடியும் வந்தனம் பண்ணினான். அவன் ஜனார்த்

தனரோடுகூடி ரட்சிப்பதில் ஸமர்த்தரும் ஸர்வரக்ஷகரும் காந்தியுடைய வரும் ஐஸ்வர்யமுள்ளவரும் ஸர்வேசுவரரும் ஜகந்நாதருமான ருத்திர ரைச் சரணமடைந்தான். பிறகு ஈசுவரர், வந்து சரணமடைந்த நரநாரா யணஸ்வரூபிகளான அவ்விருவர்களையும்பார்த்து மிக்க பிரஸன்னமான மனத்தையுடையவராகிப் புன்னகையுடன், 'புருஷசிரேஷ்டர்களே! உங் களுக்கு நல்வரவா? சிரமத்தை விட்டுவிட்டு எழுந்திருங்கள். வீரர்களே! மேலும் உங்கள் மனத்திலுள்ள விருப்பத்தைச் சீக்கிரமாக உரைக்கக் கடவீர். நீங்கள் வந்தகாரியம் என்ன? அதனை நிறைவேற்றுகிறேன். எது உங்களுக்கு நன்மையானதோ அதனை விரும்புங்கள். அம்ருதத்தை த்தையும் உங்களுக்குக்கொடுக்கிறேன்' என்று கூறினர்.

பிறகு அந்த வார்த்தையைக்கேட்டு மிகுந்த புத்திசாலிகளும் மஹாத்மாக்களும் குற்றமற்றவர்களுமானவாஸுதேவர் அர்ஜுனனிரு வரும் அபிமுகமாக எழுந்திருந்து கைகளைக்குவித்துக்கொண்டு பக்தி யோடு திவ்யமான ஸ்தோத்திரத்தினல் பின்வருமாறு துதித்தார்கள். 'ஸர்வலோகங்களுக்கும் பிரபுவாயிருக்கின்றவரும் பிராணிகளை ஸம் ஹரிக்கின்றவரும் அழச்செய்பவரும் வரன்களைக் கொடுக்கின்றவரும் பசுக்களுக்குப்பதியும் எப்பொழுதும் உக்ரஸ்வரூபியும் ஜடையுள்ள வரும் தேவர்களுள் சிறந்ததேவரும் பயங்கரமானவரும் மூன்றுகண்களை யுடையவரும் சாந்தியுடையவரும் ஐசுவர்யமுள்ளவரும் யாகத்தை அழித்தவரும் அந்தகாஸுரனை ஸம்ஹரித்தவருமான தேவரீருக்கு வந்தனம். சுப்பிரமணியருக்குப் பிதாவும் நீலகண்டரும் உலகத்தை ஸ்ருஷ்டித்தவரும் பிநாகமென்கிறவில்லைக்கைக்கொண்டவரும் ஹவிஸை ப்பெறத்தக்கவரும் அழிவற்றவரும் எப்பொழுதும் விபவத்தில் நிலை பெற்றிருப்பவரும் மிக்கசெந்நிறமுடையவரும் மங்கலானகாந்தியுடைய வரும் [1] வேடவடிவம் பூண்டவரும் பிறரால் ஜயிக்கப்படாதவரும் எப் பொழுதும் கறுத்த சிகையுடையவரும் சூலத்தையுடையவரும் ஞானக் கண்ணையுடையவரும் தீக்ஷையையுடையவரும் ரக்ஷகரும் மூன்றுகண் களையுடையவரும் அக்னியினிடத்தில் இந்திரியத்தைவிட்டவரும் எண் ணத்தகாதவரும் அம்பிகாநாதரும் எல்லாத்தேவர்களாலும் துதிக்கப் பெற்றவரும் விருஷபத்தைக் கொடியாகவுடையவரும் முண்டிதமான வரும் ஜடையையுடையவரும் பிரம்மசாரியாயிருப்பவரும் ஜலத்தில் தவம் செய்கின்றவரும் பிராம்மணர்களுக்கு ஹிதத்தைத் தேடுகின்ற வரும் ஜயிக்கப்படாதவரும் உலகத்தை வடிவமாகவுடையவரும் உலக த்தை ஸ்ருஷ்டித்தவரும் உலகத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கின்ற

[1] இது, இரண்டுமுறை வருகிறது.

வரும் பூதகணங்களால் ஸேவிக்கத்தக்கவரும் எப்பொழுதும் பிரபுவா யிருக்கின்றவருமான தேவரீருக்கு வந்தனம்; வந்தனம். வேதங்களால் நிரம்பினமுகத்தையுடையவரும் ஸர்வஸ்வரூபியும் மங்களத்தையுண்டு பண்ணுகிறவரும் மங்களஸ்வரூபியும் வித்தைக்கெல்லாம் அதிபதியு மான தேவரீருக்குவந்தனம். ப்ரஜைகளுக்குப் பதியான தேவரீருக்கு வந்தனம். அடையத்தக்கவரும் விரும்பத்தக்கவரும் ஸ்தோத்திரம் செய்யத்தக்கவரும் எப்பொழுதும் உத்தமமான பதத்திலிருக்கின்ற வரும் தேவர்களுக்குத்தேவரும் மஹாபூதங்களைத்தரிக்கின்றவருமான தேவரீருக்கு வந்தனம். எல்லாவுலகங்களுக்கும் நாதரான உமக்கு வந்தனம். காலாட்களான யுத்தவீரர்களுக்குப் பதியான தேவரீருக்கு வந்தனம். உலகத்திற்கு நாதராயிருக்கின்றவரும் மஹத்துக்களுக் கெல்லாம் பதியாயிருக்கின்றவருமான தேவரீருக்கு வந்தனம்; வந் தனம். ஆயிரம் சிரங்களையுடையவரும் ஆயிரம் கைகளையுடையவரும் மிருத்யு ஸ்வரூபியாயிருக்கின்றவரும் ஆயிரம்கண்களையும் கால்களையு முடையவரும் எண்ணமுடியாத செய்கைகளையுடையவருமான தேவரீ ருக்கு வந்தனம்; வந்தனம். பிரபுவே! பொன்னிறமுடையவரும் பொற்கவசமணிந்தவரும் எப்பொழுதும் பக்தர்கள்விஷயத்தில் தயை யுள்ளவருமான தேவரீருக்கு வந்தனஞ் செய்கிறோம். எங்களுடைய அபீஷ்டமானது ஸித்திக்கவேண்டும்' என்று கூறினார்கள். இவ் வாறாக அர்ஜுனனோடுசேர்ந்து வாஸுதேவர் மஹாதேவரை ஸ்தோத்ரம்செய்துவிட்டு அப்பொழுது பாசுபதாஸ்திரத்தை அடைவ தற்காக அவரை ப்ரஸன்னமாகும்படி செய்தார்.

---

## எண்பத்தோராவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

**(அர்ஜுனன் ஸ்வப்னத்தில் சங்கரரிடத்திலிருந்து பாசுபதாஸ்திரம் பெற்றுக் கிருஷ்ணனுடன் தன்பாசறைக்குத் திரும்பிவந்தது.)**

பிறகு, அரசரே! தெளிந்தமனத்தையுடைய பார்த்தன் கைகளைக் குவித்துக்கொண்டு ஸமஷ்டிஸ்வரூபியும் தேஜோநிதியுமான விருஷப த்வஜரை மலர்ந்தகண்களால் கண்டான். தன்னால் நன்றாக இரவில் ஏற் படுத்தப்பட்டதும் வாஸுதேவருக்கு நிவேதனம் செய்யப்பட்டதும் சாஸ்திரத்தில் சொல்லியமுறைப்படி அனுஷ்டிக்கப்பட்டதுமான அந் தப்பலியையும் முக்கண்ணரருகில்கண்டான். பிறகு, பாண்டவன் கிருஷ்

ண்ணையும் ஈஸ்வரரையும் மனத்தினாலே நன்றாகப்பூஜித்துச் சங்கரரை நோக்கி, 'நான் திவ்யமான அஸ்திரத்தை விரும்புகிறேன்' என்று கூறினான். பிறகு, சங்கரர் அப்பொழுது பார்த்தனுடையவசனத்தை வரத்தை யடைவதின்பொருட்டென்று எண்ணி, மந்தஹாஸம்செய்துகொண்டு வாஸுதேவரையும் அர்ஜுனனையும்பார்த்து, 'நரஶ்ரேஷ்டர்களே! உங்களுக்கு நல்வரவா? உங்கள்மனத்தினாலே விரும்பப்பட்ட விஷயம் என்னால் அறிந்துகொள்ளப்பட்டது. எந்த விருப்பத்தோடு இங்குவந்தீர்களோ அந்தவரனை உங்களிருவர்களின்பொருட்டும் நான் தருகிறேன். சத்துருக்களை அழிக்கின்றவர்களே! அமிர்தமயமான திவ்யமான தடாகமொன்று ஸமீபத்திலிருக்கிறது. அந்தத் தடாகத்தில் முற்காலத்தில் என்னால் திவ்யமானவில்லும் அம்பும் வைக்கப்பட்டிருக்கின்றன. கிருஷ்ணார்ஜுனர்களே! எதனால் தேவசத்துருக்கள் அனைவர்களும் யுத்தத்தில் என்னால் மடிக்கப்பட்டார்களோ அம்புடன்கூடின உத்தமமான அந்தவில்லை அந்தத்தடாகத்தினின்று கொண்டுவாருங்கள்' என்றுகூறினார். வீரர்களான அவ்விருவர்களும், 'அப்படியே ஆகுக'என்று சொல்லிவிட்டு அங்கிருந்த எல்லாச்சபையோர்களோடுங்கூடி அநேக திவ்யஐஶ்வரியங்களையுடைய அந்தத் திவ்யஸரஸைக்குறித்துப் புறப்பட்டார்கள். விருஷபத்வஜரான ருத்ரராலே ஸர்வார்த்தஸாதகமும் பாவனமுமான எந்தத்தடாகம் குறிப்பிடப்பட்டதோ அந்தத்தடாகத்தை நரநாராயணரிஷி ஸ்வரூபர்களான அவ்விருவரும் பரபரப்பின்றி அடைந்தார்கள். பிறகு, அந்த அர்ஜுனனும் அச்சுதரும் ஸூர்யமண்டலத்திற்கொப்பான அந்தத்தடாகத்தை அடைந்து ஜலத்தினுள் பயங்கரமான ஒரு ஸர்ப்பத்தைக் கண்டார்கள். ஆயிரம் தலைகளுள்ளதும் பெரிய ஜ்வாலைகளைக் கக்கிக்கொண்டிருக்கின்றதும் அக்நியினுடைய காந்திபோன்ற காந்தியையுடையதுமான இரண்டாவதான வேறு ஒரு சிறந்த ஸர்ப்பத்தையுங்கண்டார்கள். பிறகு, வேதங்களையறிந்தவர்களான கிருஷ்ணரும் பார்த்தனும் தீர்த்தத்தினால் ஆசமனஞ்செய்து கைகளைக்குவித்துக்கொண்டு அறிதற்கரிய பிரமாணமுள்ளவரும் விருஷபத்தைக்கொடியாகக்கொண்டவருமான ருத்திரரை நமஸ்கரித்து ஸர்வவிதத்தினாலும் அடைந்து சதருத்ரியமென்கிற அந்த வேதமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அந்த இரண்டுஸர்ப்பங்களையும் ஸ்தோத்திரம்பண்ணினார்கள். பிறகு அவ்விரண்டு பெரியஸர்ப்பங்களும் ருத்ரருடைய மகிமையினாலே ஸர்ப்பஸ்வரூபத்தைவிட்டுச் சத்துருக்களை ஸம்ஹரிக்கிற ஒருவில்லும் அம்புமாயின. மஹாத்மாக்களான அவ்விருவரும் மகிழ்ந்து நல்ல ஒளியுள்ள வில் அம்பு இரண்டையும் கையிலெடுத்துக்கொண்டுவந்து மஹா

த்மாவான பரமசிவனிடத்தில் கொடுத்தார்கள். பிறகு மஞ்சள்நிறமான கண்களுள்ளவரும் தவத்துக்கு இருப்பிடமானவரும் பலசாலியும் கறுப்பும் சிவப்புமான நிறமுள்ளவருமான ஒருப்ரம்மசாரி விருஷபத்வஜருடைய பக்கத்திலிருந்து திரும்பிவந்தார். அவர் அந்த உத்தமமான வில்லைக் கையிலெடுத்து ஏகாக்ரசித்தராகி வீரன்நிற்கும் நிலைமையோடு நின்றார். பிறகு, அம்புடன்கூடின உத்தமமானவில்லைச் சாஸ்திரப்படி இழுத்தார். சிந்திக்கத்தகாத பராக்ரமமுள்ள பாண்டவன் அவருடைய நாண்கயிற்றையும் கைப்பிடியையும் நிற்கும்நிலைமையையுங்கண்டு ருத்ரரால்சொல்லப்பட்ட மந்திரத்தைக்கேட்டுப் பெற்றுக்கொண்டான். அதிபலசாலியான அந்தப்பிரபுவானவர் குளத்திலேயே அந்த அம்பைப் பிரயோகம்செய்தார். மறுபடியும் அந்தவீரர் அக்குளத்திலேயே அந்த வில்லையும் எறிந்தார். பிறகு, சிறந்த ஞாபகசக்தியுடையவனான அர்ஜுனன் அப்பொழுது ஈஸ்வரரைப் பிரீதியுள்ளவராகவறிந்து, 'ஈஸ்வரரே! எனக்கு அது கிடைக்கவேண்டும்' என்று முன்பு அரண்யத்தில் ஈஸ்வரரால் தனக்குக்கொடுக்கப்பட்ட வரத்தையும் அவருடைய தரிசனத்தையும் மனத்தினால் எண்ணினான். ஸந்துஷ்டரானசங்கரர் அவனுடைய அவ்விதமான அபிப்பிராயத்தை அறிந்து கோரமான அந்தப் பாசுபதாஸ்திரத்தையும் பிரதிஜ்ஞையினுடைய நிறைவேறுதலையும் வரமாகவளித்தார். பிறகு, சத்துருக்களால் ஜயிக்கமுடியாதவனான அர்ஜுனன் ஈஸ்வரரிடத்திலிருந்து திவ்யமான பாசுபதாஸ்திரத்தைப் பெற்று ரோமம்புளகித்தமேனியுடன் தன் கார்யம் நிறைவேறினதென்றே எண்ணினான். பிறகு, பகைவர்களைக்கொல்பவர்களான அர்ஜுனனும் ஹ்ருஷீகேசரும் ஸந்தோஷமடைந்து அந்த மஹேசுவரரை முடிகளாலே பலமுறைவணங்கினார்கள். அந்தக்ஷணத்தில் சூரர்களான அர்ஜுனனும் கேசவரும் ருத்ரரால் அநுமதிகொடுக்கப்பட்டு மிகுந்த ஸந்தோஷத்தோடு தம்ஸேனைதங்கியிருக்குமிடத்தை வந்தடைந்தார்கள். ஜம்பனுடைய வதத்தை விரும்பினவர்களான இந்திரன் உபேந்திரனிருவரும் பெரிய அஸுரர்களைக்கொல்பவரான ஈசுவரரால் அநுமதிகொடுக்கப்பட்டு ப்ரீதியடைந்ததுபோலக் கிருஷ்ணார்ஜுனர் இருவரும் அவரால் அநுமதி கொடுக்கப்பெற்று ப்ரீதியையடைந்தார்கள்.

---

## எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)



(ஸ்ரீ கிருஷ்ணன் யுதிஷ்டிரரிடம் வந்தது.)

அரசரே! அந்தக்கிருஷ்ணர் தாருகன் இருவரும் அவ்வாறு ஸல்லாபம் செய்துகொண்டிருக்கும்பொழுதே அன்றிரவு சென்றது. பிறகு, தர்மபுத்திரர் எழுப்பப்பட்டார். ஸ்தோத்ரங்களைப் பாடுபவர்களான மாகதர்கள் கைத்தாளத்தோடு பாடினார்கள். வைதாளிகர்களும் ஸூதர்களும் புருஷஶ்ரேஷ்டரான தர்மபுத்திரரை ஸ்தோத்திரஞ்செய்தார்கள். நர்த்தகர்களும் நாட்டியமாடினார்கள். இனியகுரலுள்ள பாடகர்கள் குருவம்சத்தினுடைய ஸ்தோத்திரத்தைப் பொருளாகக்கொண்ட பாட்டுக்களை இனிமையாகப் பாடினார்கள். மிருதங்கங்களும் ஜர்ஜரங்களும் பேரிகளும் பணவங்களும் ஆனகங்களும் கோமுகங்களும் சிறு பறைகளும் சங்கங்களும் பெரியஒலியுள்ள துந்துபிகளும் முழக்கப்பட்டன. பாரதரே! ஸமர்த்தர்களும் நன்றாகத்தேர்ந்தவர்களுமான மனிதர்கள் ஸந்தோஷமடைந்தவர்களாக இவ்வாறு இந்த வாத்யங்களையும் மற்றும் வேறு எல்லாவாத்யங்களையும் வாசித்தார்கள். பெரியதும் மேகத்தின் இடிமுழக்கத்திற்கொப்பானதுமான அந்தச்சப்தம் ஆகாயத்தையளாவியது. தூங்கிக்கொண்டிருந்த ராஜஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரரையும் எழுப்பியது. விலையுயர்ந்த சிறந்தசயனத்தில் ஸுகமாகப்படுத்துத் தூங்கிவிழித்தவரான அரசரும் எழுந்திருந்து அவசியம்செய்ய வேண்டிய கார்யத்திற்காக மஞ்சனசாலைக்குச்சென்றார். பிறகு வெள்ளை வஸ்திரம் தரித்தவர்களும் ஸ்நானம்செய்தவர்களும் யௌவனமுடையவர்களுமான நூற்றெட்டு[1] ஸ்நாபகர்கள் நீர்நிரம்பின பொற்கலசங்களோடு மஹாராஜரை வந்தடைந்தார்கள். மெல்லியவஸ்திரத்தை உடுத்து நாலுபக்கங்களிலும் ஸமமான ஆஸனத்தில் நன்றாக உட்கார்ந்தவரான தர்மராஜர் பலமுடையவர்களும் நன்கு தேர்ச்சியடைந்தவர்களுமான வேலைக்காரர்களாலே எல்லாவிதமான ஒஷதிகளாலும் செய்யப்பட்ட கஷாயத்தினாலே மேனியில்தேய்க்கப்பட்டுச் சந்தனத்தோடுசேர்க்கப்பட்டவையும் ஜபிக்கப்பட்டவையுமான தீர்த்தங்களால் ஸ்நானம் செய்விக்கப்பட்டார். வாசனைத்திரவியங்களோடு சேர்ந்ததும் நல்லமணமுள்ளதுமானதீர்த்தத்தினால் ஸ்நானம்செய்தவரான தர்மநந்தனர் தளர்ச்சியாகவைக்கப்பட்டதும் ராஜஹம்ஸம்போன்றதுமான தலைப்பாகையை

[1] ஸ்நானம்செய்விக்கின்றவர்கள்.

எடுத்து ஜலம்போவதற்காக அதைத் தலையில் சுற்றிக்கொண்டார். மிக்க புஜபலமுள்ளவரும் உதாரமான மனத்தை உடையவரும் ஸத் புருஷர்களுடைய வழியை அனுஸரிப்பவருமான கௌந்தேயர் சிவப்பான சந்தனத்தை மேனியில்பூசி மாலையை அணிந்து நிர்மலமான வஸ்திரத்தைத்தரித்து அஞ்சலிபந்தத்துடன் கிழக்குமுகமாக இருந்து இந்திரியங்களையும் மனத்தையும் ஒருமைப்படுத்தி ஜபிக்கத்தக்க மந்திரத்தை ஜபித்து அச்சமயத்தில் வணக்கமுடையவராகி, ஜ்வலிக்கின்ற அக்நியோடுகூடிய அக்நி கிருஹத்தில் பிரவேசித்துப் பரிசுத்தமான ஸமித்துக்களாலும் மந்திரங்களால் பரிசுத்தமான ஆஹுதிகளாலும் அக்கினியைப்பூஜித்து அந்தக் கிருஹத்தினின்று வெளியில் வந்தார். புருஷஶ்ரேஷ்டரும் மகாபாகுபலமுள்ளவருமான அரசர் அரண்மனையின் இரண்டாவதுகட்டைவிட்டு வெளியில்வந்து அங்கு வேதங்களை அறிந்தவர்களும் முதிர்ந்தவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் நியமாத்யயனம் செய்தவர்களும் விரதத்தை அனுஷ்டித்தவர்களும் யாகங்களின்முடிவில் அவபிருத ஸ்நானம்செய்தவர்களும் ஆயிரம் சிஷ்யர்களையுடையவர்களும் சூரியனை உபாஸிக்கின்றவர்களுமான ஆயிரத்தெட்டு பிராம்மணோத்தமர்களைக்கண்டு அவர்களை அக்ஷதங்களாலும் புஷ்பங்களாலும் அர்ச்சித்து ஸ்வஸ்திவாசனங்களைச்சொல்லும்படி செய்வித்து, தேன் நெய் இவைகளோடும் மிகச்சிறந்தமங்களகரமான பழங்களோடும் ஒவ்வொரு பிராம்மணருக்கும் ஒவ்வொரு நிஷ்கம் பொன்னையும் அலங்கரிக்கப்பட்ட அனேகம்குதிரைகளையும் வஸ்திரங்களையும் இஷ்டமான தக்ஷிணைகளையும் கொடுத்தார். பிறகு, பாண்டுநந்தனரான யுதிஷ்டிரர், அவ்வாறே நல்லகறவையுள்ளவைகளும் கன்றுகளையும் ஸ்வர்ணமயமான கொம்புக்குமிழ்களையும் வெள்ளிக்குளம்புகளையுமுடையவைகளுமான காராம்பசுக்களை அந்தப் பிராமணர்களுக்குக் கொடுத்து ப்ரதக்ஷிணஞ் செய்து, [1] ஸ்வஸ்திகங்களையும் [2] சராவங்களையும் [3] நந்த்யாவர்த்தங்களையும் பூமாலையையும் ஜலத்தினால் நிறைந்த குடங்களையும் ஜ்வலிக்கின்ற நெருப்பையும் பூர்ணமான அக்ஷதபாத்திரங்களையும் மாதுளம்பழத்தையும் கோரோசனையையும் அவ்வாறே நன்றாக அலங்கரிக்கப்பட்ட லக்ஷணமுள்ள கன்னிகைகளையும் தயிரையும் நெய்யையும் தேனையும் ஜலத்தையும் மங்களகரமான பக்ஷிகளையும் மற்றுமுள்ள சிறந்த வஸ்துவையும் பார்த்தும் தொட்டும், பிறகு, வெளிக்கட்டைவந்தடைந்தார்.

---

[1] பெண்கள் வலக்கையை இடத்தோளிலும் இடக்கையை வலத்தோளிலும் மாற்றிக்கட்டிக்கொள்ளும் மங்கலக்குறி. [2] மடக்குக்கள். [3] மேல்மூடியுள்ள அர்க்கியபாத்திரங்கள்.

பிறகு, அவ்விடத்தில் நிற்கின்ற நீண்டகைகளையுடைய அவ்வரசருக்குப் பரிசாரகர்கள் ஸ்வர்ணமயமானதும்[1] ஸர்வதோபத்ரமென்னும் வடிவமுள்ளதும் முத்துக்களாலும் வைடூர்யங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் சிறந்த மேல்விரிப்பினால் மூடப்பட்டதும் மேலே மற்றொரு வஸ்திரம் விரிக்கப்பெற்றதும் விலையுயர்ந்ததும் விஸ்வகர்மாவினால் செய்யப்பட்டதும் தேவஸம்பந்தம்பெற்றதும் உத்தமமுமான ஆஸனத்தைக் கொணர்ந்தார்கள். வேலைக்காரர்கள் அந்த ஆஸனத்தில் வீற்றிருக்கும் மஹாத்மாவான யுதிஷ்டிரருக்கு, விலைமதிக்கமுடியாதவையும் எல்லா விதத்தினாலும் மாசற்றவையுமான ஆபரணங்களைக் கொண்டுவந்து ஸமர்ப்பித்தார்கள். மஹாராஜரே! தகுந்த ஆபரணங்களோடும் வேஷத்தோடும் கூடிய மஹாத்மாவான யுதிஷ்டிரருடைய ரூபமானது பகைவர்களுக்குச் சோகத்தை விளைவிக்கிறதாயிற்று. அவர் சந்திரகிரணம் போன்ற காந்தியுள்ளவையும் ஸ்வர்ணமயமான பிடிகளுள்ளவையும் மிக்க மங்களகரமானவையும் அடிக்கடி வீசப்படுகின்றவையுமான சாமரங்களால் மேகமானது மின்னற்கொடிகளால் பிரகாசிப்பதுபோலப் பிரகாசித்தார். அவர் ஸூதர்களால் நன்றாகத் துதிக்கப்படுகின்றவரும் வந்திகளால் நமஸ்கரிக்கப்படுகின்றவரும் பாடகர்களால் பாடப்படுகின்றவருமாயிருந்தார். பிறகு, ஒரு முகூர்த்தகாலம் வந்திகளுடைய பெரிய சப்தமும் தேருருளைகளின் சப்தமும் குதிரைகளுடைய குளம்படியினாலுண்டான சப்தமும் தோன்றின. யானைமணிகளுடைய ஒலியினாலும் சங்கவாத்யங்களுடைய சப்தத்தினாலும் மனிதர்களுடைய காலடிஓசையினாலும் பூமியானது நடுக்கமுற்றதுபோலாகியது. பிறகு, குண்டலமணிந்தவனும் கத்திகட்டிக்கொண்டவனும் கவசம்பூண்டவனும் யௌவனமுடையவனுமான ஒரு துவாரபாலகன் அந்தப்புரத்தை அடைந்து முழங்கால்களால் பூமியில்நின்று, நமஸ்கரிக்கத்தக்கவரான அந்த அரசரைத் தலையால் வணங்கி மஹாத்மாவான அவருக்குக் கேசவர்வந்திருப்பதைத் தெரிவித்தான். புருஷஸ்ரேஷ்டரான அந்தத் தர்மபுத்திரர், 'மாதவரை நல்வரவுகூறி என்னிடம் அழைத்து வாருங்கள்; என் தாமதிக்கவேண்டும்? மதுவென்கிற அஸுரனைக்கொன்றவரான ஸ்ரீகிருஷ்ணருக்கு மிகச்சிறந்த ஆஸனம்கொடுங்கள்' என்று சொன்னார். பிறகு, யுதிஷ்டிரர் விருஷ்ணிகுலத்தில்தோன்றின ஸ்ரீகிருஷ்ணரை அந்தப்புரத்தில் ப்ரவேசிக்கச்செய்து உத்தமமான ஆஸனத்தில் உட்காரவைத்து மரியாதைசெய்து அவராலே தாமும் மரியாதைசெய்யப்பட்டுக் குசலப்ரஸ்னம்பண்ணினார்.

---

[1] இதன் இலக்கணத்தை, சப்தகல்பத்ருமத்தில் விரிவாகக்காண்க.

## எண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் ஜயத்ரதனைக் கொல்ல முடியாதென்று ஸந்தேஹிக்கக் கிருஷ்ணன் தேற்றியது.)

யுதிஷ்டிரர், 'ஓ! மதுஸூதனரே! தேவரீர்களுக்கு இராத்திரி ஸுகமாக விடிந்ததா? அச்சுதரே! தேவரீர்களுடைய எல்லா ஞானங்களும் ப்ரஸன்னமாயினவா?' என்று வினவினர். வாஸுதேவரும் யுதிஷ்டிரரைநோக்கி, 'இனியகுணமுள்ளவரே! உமது தர்சனத்தினாலேயே எனக்கு ஒருவிதமான அசுபமுமில்லை' என்று அதற்குத்தகுந்த மறுமொழி கூறினர். பிறகு, ஸாரதியானவன், [1]பிரகிருதிகள் வந்திருக்கிறதாகத் தெரிவித்தான். அரசராலே அனுமதிகொடுக்கப்பட்ட அந்த ஸாரதியானவன் அவர்களை ப்ரவேசிக்கச்செய்து, விராடன் பீமஸேனன் திருஷ்டத்யும்னன் ஸாத்யகி சேதிதேசாதிபதியான திருஷ்டகேது மஹாரதனான த்ருபதன் சிகண்டி நகுலஸஹதேவர்கள் கேகயதேசத்தரசனோடுகூடின சேகிதானன் குருகுலத்தில் தோன்றினவனான யுயுத்ஸு பாஞ்சாலராஜகுமாரனான உத்தமௌஜஸ் யுதாமன்யு ஸுபாஹு எல்லா த்ரௌபதி குமாரர்கள் ஆகிய இவர்களையும் இன்னும் மற்றுமுள்ள நண்பர்களையும் பாண்டவருக்குக் காண்பித்தான். யுதிஷ்டிரரால் அனுமதிகொடுக்கப்பெற்று அவர்கள் அவரைநமஸ்காரம்செய்துவிட்டுத் தகுதியான சிறந்த ஆஸனங்களில் ஸுகமாக வீற்றிருந்தார்கள். வீரர்களும் மஹாபலசாலிகளுமான கிருஷ்ணரும் யுயுதானனும் யாகவேதியில் இரண்டு அக்நிகள்போல ஒரே ஆஸனத்தில் உட்கார்ந்தார்கள். பிறகு, யுதிஷ்டிரர் அவர்கள் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது, மது வென்கிற அஸுரனை ஸம்ஹாரித்தவரான புண்டரீகாக்ஷரை அழைத்து, 'கிருஷ்ணரே! தேவர்கள் மஹேந்திரனை அடைந்ததுபோல நாங்கள் உம்மொருவரையே அடுத்து யுத்தத்தில் ஜயத்தையும் சாஸ்வதமான ஸுகங்களையும் வேண்டுகிறோம்; தேவரீர் எங்களுக்கு நேர்ந்த ராஜ்ய நாசத்தையும் சத்துருக்களால் ஏற்பட்ட அவமானத்தையும் பலவிதமான கஷ்டங்களையும் அப்படிப்பட்ட எல்லாவிஷயங்களையும் அறிந்திருக்கிறீர். பக்தவத்ஸலரே! மதுஸூதனரே! ஸர்வேசரே! எங்களனைவருடைய ஸுகமும் யோகக்ஷேமமும் உங்களையே சார்ந்திருக்கின்றன. விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரே! தேவரீரிடத்தில் என்மனம்

---

[1] ராஜ்யத்தின் அங்கத்தினர்.

நிலைபெறும்படி செய்யவேண்டும். அர்ஜுனன் செய்யவிரும்பிய ப்ரதிஜ்ஞையை நீர் ஸத்யமாகச் செய்யவேண்டும். மாதவரே! அப்படிப்பட்ட தேவரீர் துக்கமும் ரோஷமுமாகிற இந்த மஹா ஸமுத்திரத்திலிருந்து எங்களைக் கரையேற்றிவிடவேண்டும். இப்பொழுது, அக்கரையை அடையக் கருதிய எங்களுக்குத் தேவரீர் ஓடமாகவேண்டும். மாதவரே! தேவரீர் ஸாரதியாகவிருக்கும் நிலைமையையடைந்து யுத்தத்தில் எதைச் செய்கிறீரோ அதைக் கார்த்தவீர்யன்போன்றவனாயினும் வேறு ஒரு யுத்தவீரனும் செய்யமாட்டான். மிக்க புஜபலமுள்ளவரே! ஜநார்த்தனரே! எல்லா ஆபத்துக்களிலும் எவ்வாறு விருஷ்ணிகளைப் பாதுகாக்கிறீரோ, அவ்வாறே எங்களையும் வியஸனத்திலிருந்து ரக்ஷிக்கவேண்டும். சங்கசக்ரகதாதரரே! ஆழமானதும் தெப்பமில்லாததுமான குருஸேனையாகிற கடலில் மூழ்கியிருக்கின்ற பாண்டவர்களைத் தேவரீர் கப்பலாகவிருந்து கரையேற்றிவிடவேண்டும். தேவதேவேசரே! சாஸ்வதரே! சத்ருஸம்ஹாரகரே! விஷ்ணுவே! ஜயசீலரே! ஹரியே! கிருஷ்ணரே! வைகுண்டரே! புருஷோத்தமரே! உமக்கு வந்தனம். மாதவரே! நாரதர் தேவரீரை உத்தமரான புராதனரிஷியென்றும் வரதரென்றும் சார்ங்கபாணியென்றும் சிரேஷ்டரென்றும் சொல்லியிருக்கிறார். அந்த வார்த்தையை ஸத்யமாகச் செய்யும்' என்று மாதுர்யமுள்ள வார்த்தையைச் சொன்னார். தர்மராஜர் ஸபையில் இவ்வாறு சொல்லக்கேட்டு, நன்றாகப் பேசுபவரான ஸ்ரீபுண்டரீகாக்ஷர் யுதிஷ்டிரரைநோக்கி நீருண்ட மேகத்தின் முழக்கம்போன்ற சப்தத்தோடு மறுமொழி கூறலானார்.

'பார்த்தனான தனஞ்சயன்போன்றவில்லாளி, தேவர்களோடுகூடின எல்லாஜனங்களிலும் ஒருவனுமில்லை. வீர்யமுள்ளவனும் அஸ்திரங்களால் நிறைந்தவனும் பராக்ரமமுடையவனும் மஹாபலசாலியும் யுத்தத்தில் ஸமர்த்தனும் எப்பொழுதும் ரோஷமுள்ளவனும் தேஜஸினால் மனிதர்களுள்சிறந்தவனும் யௌவனமுள்ளவனும் விருஷபத்தினுடைய திமில்போன்ற தோளையுடையவனும் நீண்டகைகளையுடையவனும் மிக்கபலசாலியும் ஸிம்மத்தையும் விருஷபத்தையும்போன்ற நடையுடையவனும் ஸ்ரீமானுமான அந்த அர்ஜுனன் உம்முடைய பகைவர்களை வதஞ்செய்யப்போகிறான். நானும் அந்தக்காரியத்தைச் செய்யப்போகிறேன். அவ்வாறே குந்திபுத்திரனான அர்ஜுனனும், திருதராஷ்டிரப்புத்திரனான துர்யோதனனுடைய சேனைகளை, நெருப்பானது விறகை எரிப்பதுபோல எரிக்கப்போகிறான். அர்ஜுனன், இன்றைத்தினத்தில், பாபமான கார்யத்தைச் செய்தவனும் அல்பஸ்வபாவ

முள்ளவனும் ஸுபத்திராபுத்திரனைக்கொன்றவனுமான அந்த ஜயத்ர தனை அம்புகளாலே மீண்டும் பார்க்கமுடியாதவழியில் தள்ளப்போகி ருன். அந்தப் பாபியினுடைய மாம்ஸங்களை இன்றைத்தினத்தில் கழுகு களும் பருந்துகளும் கோரமான நரிகளும் நரமாம்ஸங்களைத் தின்னுப வையானமற்றஜந்துக்களும் பக்ஷிக்கப்போகின்றன. இந்திரனோடுகூடின எல்லாத்தேவர்களும் இவனைக் காப்பாற்றினாலும் அந்தத் துர்ப்புத்தி யுடைய ஜயத்ரதன் இன்றைக்குக் கொல்லப்பட்டு யமனுடைய ராஜதா னியை அடையப்போகிறான். அரசரே! ஜயசீலனான அர்ஜுனன் இன் றைத்தினத்தில் ஸைந்தவனைக்கொன்றுவிட்டு உம்முடைய ஸமீபம் வரப்போகிறான். நீர் சோகத்தைவிட்டு மனக்கவலையற்று ஆறுதலை முன்னிட்டவராகவிருப்பீராக' என்று சொன்னார்.

---

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## ப்ரதிஜ்ஞாபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன், ஜயத்ரதனை எதிர்க்கும்பொழுது யுதிஷ்டிரரைக்காக்கும்படி ஸாத்யகிக்குக் கட்டளையிட்டது.)

அவர்கள் அவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்பொழுது தனஞ் சயன், நண்பர்கூட்டத்துடனிருக்கிற பரதகுலோத்தமரான தர்மராஜ ரைப்பார்க்க எண்ணங்கொண்டு அங்குவந்துதோன்றினன். மங்களகர மான தம்மிருப்பிடத்தில் பிரவேசித்தவனும் அபிவாதனஞ்செய்து எதி ரில்நிற்கின்றவனுமான அந்தஅர்ஜுனனைப் பாண்டவஸ்ரேஷ்டரான தர்மநந்தனர் எழுந்திருந்து அன்புடன்கட்டிக்கொண்டு உச்சிமோந்து கையினால் ஆலிங்கனம்செய்துகொண்டு உத்தமமான ஆசீர்வாதங்களைச் சொல்லிப் புன்சிரிப்புடன் அவனைநோக்கி, 'அர்ஜுன! யுத்தத்தில் மிகப் பெரியவெற்றியானது உனக்கு நிச்சயமாகஉண்டாகப்போகிறது. அது எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. உன்முககாந்தியானது அவ்விதரூபத் தோடு விளங்குகிறது. ஜநார்த்தனரும் பிரஸன்னராகவிருக்கிறார்' என்று கூறினர். பிறகு, ஜிஷ்ணுவானவன் தர்மபுத்திரரைப்பார்த்து, 'கேசவ ருடைய அனுக்ரஹத்தினாலுண்டானதும் உங்களுக்கு மங்களகரமான தும் பெரிதும் சிறந்ததுமான ஓர் ஆச்சரியத்தை நான்கண்டிருக்கிறேன்' என்றுசொன்னான். பிறகு, அவன் தன் ஸ்நேகிதர்களின் மனத்தேறுத லின்பொருட்டு த்ரியம்பகரை ஸந்தித்ததைத் தான் கண்டபடி உரைத் தான். பிறகு, அவர்கள் எல்லோரும் ஆச்சரியங்கொண்டவர்களாகிச்

சிரஸினால் பூமியைத்தொட்டு விருஷபத்வஜரான பரமசிவனுக்கு வந்தனம்பண்ணி, 'நல்லது, நல்லது' என்றுசொன்னார்கள். பின்பு எல்லாநண்பர்களும் தர்மபுத்திரரால் அனுமதிகொடுக்கப்பெற்று ஸந்தோஷத்தையடைந்து யுத்தஸந்நாகத்துடன் போருக்கு விரைந்துசென்றார்கள். யுயுதானனும் அச்சுதரும் அர்ஜுனனும் ஸந்தோஷத்தோடு தர்மராஜனை வந்தனஞ்செய்துவிட்டு அவ்விடமிருந்து புறப்பட்டார்கள். ஒருவராலும் ஜயிக்கமுடியாத வீரர்களான யுயுதானன் ஜநார்த்தனரிருவரும் ஒன்றுசேர்ந்து ஒருதேரின்மீதேறி அர்ஜுனனுடைய வாஸஸ்தானத்தை அடைந்தார்கள். அந்தஇடத்தையடைந்து சாஸ்திரங்களை அறிந்த ஹ்ருஷீகேசர் ரதிகஸ்ரேஷ்டனான அர்ஜுனனுடைய யுத்தத்தின் பொருட்டுச் சிறந்தவானரத்தை த்வஜமாகக்கொண்டரதத்தை ஆயத்தஞ் செய்தார். மேககர்ஜனத்திற்கொப்பான முழக்கமுள்ளதும் புடமிட்ட தங்கத்தால் பிரகாசிக்கின்றதும் ஸித்தம்செய்யப்பட்டதும் சிறந்ததுமான அந்தரதமானது பாலஸூர்யன்போல விளங்கியது. பிறகு, புருஷஸ்ரேஷ்டரான ஸ்ரீகிருஷ்ணர் புருஷஸிம்மனான அர்ஜுனனிடத்தில், 'ரதமானது துவஜத்தையும் பதாகையையுமுடையதாக ஸன்னத்தமாக இருக்கிறது' என்று எல்லாவற்றையும் தெரிவித்தார். உலகத்தில் புருஷர்களுள் சிறந்தவனான கிரீடி பொற்கவசம்பூண்டு வில்லையும் அம்பையும் கையிற்கொண்டு அந்தத்தேரினை ப்ரதக்ஷிணம்செய்து தவத்தினாலும் வித்தையினாலும் வயதினாலும் முதிர்ந்தவர்களும், கர்மானுஷ்டானமுடையவர்களும், ஜிதேந்திரியர்களுமான மஹான்களாலே வெற்றியையுண்டாக்கும்படியான ஆசீர்வாதங்களாலே துதிக்கப்பெற்று ஜயத்தைக்கொடுக்கக்கூடியவைகளும் யுத்தத்திற்குரியவைகளுமான மந்திரங்களாலே முந்தியே அபிமந்திரணம் செய்யப்பட்ட மஹாரதத்தில் காந்தியுள்ளவனானஸூர்யன் உதயபர்வதத்தில்ஏறுவதுபோல் ஏறினான். ஸ்வர்ணமயமானரதத்தில், ஸ்வர்ணத்தால் மூடப்பட்டிருக்கிற ரதிகஸ்ரேஷ்டனான அந்தஅர்ஜுனன் மேருபர்வதத்தில் நல்லகாந்தியுள்ள நிர்மலமானஸூர்யன்போல் விளங்கினான். அர்ஜுனனுக்குப்பின் யுயுதானனும் ஜனார்த்தனரும், சர்யாதியினுடைய யஜ்ஞத்தைக்குறித்துவருகின்ற தேவேந்திரனுக்குப்பின் ஏறின அஸ்வினீதேவர்கள்போல ஏறினார்கள். பிறகு, கடிவாளம்பிடித்துக் 'குதிரையை நடத்துகிறவர்களுள் ஸ்ரேஷ்டரான கோவிந்தர், விருத்ராஸுரனைக்கொல்வதற்காகப் புறப்படப்போகின்ற இந்திரனுடைய குதிரைகளின் கடிவாளங்களை மாதலி பிடித்ததுபோலக் கடிவாளங்களைப் பிடித்தார். அவ்விருவரோடுங்கூடின அந்தப்பார்த்தன் உத்தமமான ரதத்தையடைந்து புதசுக்கிரர்களோடு

கூடி இருளைநாசஞ்செய்கின்ற சந்திரன்போல விளங்கினன். ஸைந்தவ னைக்கொல்ல எண்ணங்கொண்டு புறப்பட்டவனும் சத்துருக்களைக்கூட்ட மாக நாசஞ்செய்கிறவனுமான அர்ஜுனன், தாரகனைக்கொல்லுங்காலத் தில் அருணனுடனும் ஸூர்யனுடனும்கூடின இந்திரன்போல விளங்கி னன். பிறகு, புறப்படுகிற வீரனை அர்ஜுனனை மாகதர்கள் நான்குவித வாத்யகோஷங்களோடும் மங்களகரமும் சுபமுமான ஸ்தோத்ரங்களாலே துதித்தார்கள். ஜயத்தைவிளைவிக்கக்கூடிய ஆசீர்வாதத்தோடும் புண்ணி யாஹமந்திரகோஷங்களோடும் நான்குவிதவாத்யகோஷத்தோடுங்கூடின ஸூதமாகதர்களுடைய சப்தமானது அவர்களுக்குப் பிரீதியையுண்டு பண்ணியது. அந்த அர்ஜுனன் புறப்பட்டவுடனே, அவனுக்குப்பின் புறப்பட்டதும் பரிசுத்தமான வாஸனைபொருந்தியதும் மங்களகரமு மானகாற்றானது அவனை ஆனந்திக்கச்செய்துகொண்டும், சத்துருக்களை வாட்டியடையும்படி செய்துகொண்டும் வீசியது. அரசரே! பிறகு, அந்த க்ஷணத்தில் பலவிதமாயும் மங்களகரமாயுமுள்ள அநேகநிமித்தங்கள் பாண்டவர்களின் வெற்றியைத் தெரிவிப்பனவாகத் தோன்றின. ஐயா! உங்களைச்சேர்ந்தவர்களுடைய அபஜயத்தின்பொருட்டு விபரீதமான அனேகதுர்நிமித்தங்கள் தோன்றின. அர்ஜுனன் நிமித்தங்களைக்கண்டு மஹாவில்லாளியும் விஜயத்தையடைவதின்பொருட்டுத் தன்மனோபாவ த்தை அனுஸரித்திருக்கின்றவனுமான யுயுதானனைநோக்கி, 'சினிகளுள் உத்தமனே! யுயுதான! இந்த நன்னிமித்தங்கள் காணப்படுவதனால் இன் றைத்தினம் எனக்கு யுத்தத்தில் விஜயமானது நிச்சயமென்றேதோற்று கிறது. எந்தவிடத்தில் ஸிந்துதேசத்தரசனை ஜயத்ரதன் யமலோகத் தையடையவிரும்பி என்வீர்யத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறானோ அந்தஇடத்திற்கு யான்செல்லப்போகிறேன். ஸைந்தவனைக்கொல்வதா னது எனக்கு எவ்வாறு உத்தமமானகார்யமாக ஏற்பட்டதோ அவ்வாறே தர்மராஜரைக்காப்பாற்றுவதும் மிகவும்பெரியகார்யமாக ஏற்பட்டிருக் கிறது. மிக்கபுஜபலமுள்ள யுயுதான! அவ்விதமான நீ இப்பொழுது அர சரைப்பாதுகாக்கவேண்டும். எவ்வாறு என்னால் அவர் ரக்ஷிக்கப்படுவ ரோ அவ்வாறே உன்னாலும் ரக்ஷிக்கப்படவேண்டும். தான் தேவராஜனா யிருந்தாலும் யுத்தத்தில் வாஸுதேவரைப் போன்றஉன்னை ரணகளத் தில்ஜயிக்கக்கூடியவனை உலகத்தில் யான்காணவில்லை. நரஶ்ரேஷ்ட! உன் னிடத்திலும் மஹாரதனான பிரத்யும்னனிடத்திலும் மிக்கநம்பிக்கை யைவைத்த நான் மற்றொருவரையும் எதிர்பாராமலே ஸைந்தவனைக் கொல்வதற்குச் சக்தியுள்ளவனாவேன். என்னை ஒருவரும் அனுஸரிக்க வேண்டாம். இந்தக்கேசவர் எனக்கு ரக்ஷகராகவிருக்கிறார். எல்லாவிதத்

னாலும் நீ அரசருடைய மிகச்சிறந்தகாப்பையே செய்யவேண்டும். எந்தவிடத்தில் மிக்கபுஜபலமுள்ள ஸ்ரீவாஸுதேவரும் யானும் சேர்ந் திருக்கிறோமோ அவ்விடத்தில் ஒருவஸ்துவும் ஆபத்திற்குள்ளாகாது. இது நிச்சயம்' என்று இவ்விதமான வார்த்தையைச்சொன்னான்., பார்த் தன் இவ்வாறு சொல்லியதைக்கேட்டுச் சத்துருவீரர்களை ஸம்ஹரிக் கின்றவனான ஸாத்யகி, 'அவ்விதமேஆகுக' என்றுசொல்லிவிட்டு யுதிஷ் டிரராஜரிருக்குமிடம்சென்றான்" என்று கூறினான்.

ப்ரதிஜ்ஞாபர்வம் முற்றிற்று.

---

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம்.

(திருதராஷ்டிரன் துக்கித்து ஸஞ்சயனை மறுபடியும் போரைக்கூற ஏவியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! அந்த அபிமன்யுகொல்லப்பட்ட பிறகு துக்கத்தையும் மனவருத்தத்தையுமடைந்தவர்களான அந்தப் பாண்டவர்கள் மறுதினத்தில் என்னசெய்தார்கள்? எவர்களோடு யுத் தம்செய்தார்கள்? நம்மைச்சேர்ந்தகௌரவர்கள் அந்த ஸவ்யஸாசியினு டைய செய்கைகளையறிந்திருந்தும் அவ்விதத் தீயசெய்கையைச்செய்து எவ்வாறு பயமற்றிருந்தார்கள்? சொல்வாயாக. புத்திரசோகத்தால்மிக்க தாபத்தையடைந்தவனும் கோபம்கொண்டவனும் மிருத்யுவைப்போல் எல்லாப்பிராணிகளுடைய உயிரையும்வாங்க எண்ணங்கொண்டுவருகிற வனும் புருஷச்ரேஷ்டனுமான அர்ஜுனனைக் கௌரவர்கள் எவ்வாறு யுத்தத்தில் பார்த்தார்கள்? வானரசிரேஷ்டனான ஹனுமானை த்வஜமா கக்கொண்டவனும் யுத்தத்தில் பெரியவில்லை யசைப்பவனும் புத்திர சோகத்தால் மனவருத்தமுற்றவனுமான அந்த அர்ஜுனனைப்பார்த்து என்னைச்சேர்ந்தவர்கள் என்னசெய்தார்கள்? ஸஞ்சய! யுத்தத்தில் துர் யோதனனைப்பற்றி என்னநடந்தது? இப்பொழுது வீடுதோறும் பெரி தான அழுகைக்குரல் கேட்கப்படுகிறதன்றோ? ஸைந்தவனுடைய வீட் டில் மற்றச்சப்தங்களையும் மிஞ்சி அதிகமானசப்தமுண்டாயிருக்கிறது. ஸூதபுத்ர! பௌராணிகர்களுடையவையும் தூர்யவாத்யங்கள் சங்கங் கள் துந்துபிகள் இவைகளுடைய கோஷத்தோடுகூடின ஸூதர்கள் மாகதர்கள் வந்திகள் நாட்டியமாடுகிறவர்கள் இவர்களுடையவையுமான சப்தமானது இன்றைத்தினத்தில் முன்போலக் கேட்கப்படவில்லை,

எந்தவிடத்தில் நானுவிதமான விரும்பத்தக்க சப்தங்களைக்கேட்டேனு அந்தவிடத்தில் இப்பொழுது அங்குள்ளவர்கள் மனம்நொந்தவர்களாகி விட்டமையால் நன்ருகமுழக்கப்படும் அந்தச்சப்தங்களை நான் கேட்க வில்லை. அப்பா! ஸஞ்சய! யான் முற்காலத்தில் ஸத்யதிருதி ஸோம தத்தன் இவர்களுடைய கிருஹத்தில் உட்கார்ந்துகொண்டு உத்தமமான சப்தத்தைக்கேட்டேன். புண்ணியங்குறைந்தவனுன நான் இப்பொழுது அதே கிருஹத்தை அழுகுரலால் ஓசையுள்ளதாகவும் உத்ஸாஹத்தை யிழந்ததாகவும் விகாரத்தையடைந்ததாகவும் காண்கிறேன். விவிம்சதி துர்முகன் சித்திரஸேனன் விகர்ணன் இன்னும்மற்ற என்பிள்ளைகள் இவர்களுடைய அவ்வாருன கோலாஹலமானது கேட்கப்படவில்லை. மஹாவில்லாளியும் என்புத்திரர்களுக்கு முக்கியகதியுமாயிருக்கின்ற எந்தத் துரோணபுத்திரரைச் சிஷ்யர்களான பிராம்மணர்களும் க்ஷத்ரியர் களும் வைஸ்யர்களும் உபாஸிக்கிருர்களோ, எவர் [1] விதண்டைகளாலும் பேச்சுக்களாலும் [2] ஸல்லாபங்களாலும் அதிவேகமாக வாசிக்கப்படுகிற நான்குவிதவாத்யகோஷங்களாலும் இஷ்டமான பலவிதகானங்களாலும் இரவும் பகலும் ஆனந்தமடைகிருரோ, எவர் அநேகர்களான கௌரவர் களாலும் பாண்டவர்களாலும் ஸாத்வதர்களாலும் உபாஸிக்கப்படுகிரு ரோ, அந்தத்துரோணபுத்திரருடைய கிருஹத்தில் முன்போல இனிமை யான சப்தமானது கேட்கப்படவில்லை. மஹாவில்லாளியான துரோண குமாரரை எந்தக்காயகர்களும் நர்த்தனம்பண்ணுகிறவர்களும் மிகவும் உபாஸிப்பார்களோ அவர்களுடையசப்தம் கேட்கப்படவில்லை. ஸாயங் காலத்தில் விந்தானுவிந்தர்களுடைய பாசறையில்கேட்கப்படும் பேரொ லியானது இன்று கேட்கப்படவில்லை. அப்பா! கேகயர்களின் வீடுகளி லும் தினந்தோறும் ஸந்தோஷமடைந்து கூத்தாடுகின்ற கூட்டங்களு டைய பெரிய தாளத்துவனிகளும் கீதத்வனிகளும் இன்றைக்குக் கேட் கப்படவில்லை. யாகங்களைச்செய்கின்றவர்களும் வேதசாஸ்திரங்களுக்கு நிதியான பூரிஸ்ரவஸை உபாஸிக்கிறவர்களுமான யாகம்செய்பவர்களு டைய சப்தமும் கேட்கப்படவில்லை. துரோணருடையகிருஹத்தில் நா ணொலியும் வேதகோஷமும் தோமரம் கத்தி ரதம் இவைகளுடைய சப்த மும் ஓயாமலிருந்தன. அவற்றை இப்போது நான் கேட்கவில்லை. பலவித தேசங்களிலுண்டான நான்குவித வாத்யகோஷங்களோடுகூடிய கானங்க ளுடைய முன்னிருந்த பெரிய சப்தமானது இப்பொழுது கேட்கப்பட வில்லை. ஸூத! ஸமாதானத்தை விரும்பினவரும் தம்மைச்சார்ந்தவர்

[1] தன்னுடைய பக்ஷத்தைஸாதிக்க யுக்தியைச்சொல்லாமல் பிறர்பக்ஷத்தை மாத்திரம் கண்டிக்கிற வாதம். [2] இருவர் தனித்துப்பேசுவது.

கஸீனக் கைவிடாமலிருக்கின்ற விரதத்தையுடையவருமான ஜநார்த்தனர் உடப்லாவ்யத்திலிருந்து எல்லாப்பிராணிகளிடத்திலும் கருணைபாராட்டு வதின்பொருட்டு வந்தபொழுதே நான் மந்தனுன துர்யோதனனைப் பார்த்து, 'புத்ர! வாஸுதேவராகிற உபாயத்தை முன்னிட்டுப் பாண்டவர்களோடு ஸமாதானத்தையடை. துர்யோதன! இதுதான் இந்தஸமயத்திற்குத் தக்கதென்று எண்ணுகிறேன். நீ உல்லங்கனம்செய்யாதே. அந்தப் பிராதாக்களோடு ஸமாதானமடைந்து அரசர்களையும் பரிபாலனம்செய். நன்மையின்பொருட்டே ஸமாதானத்தை வேண்டுகின்றவரும் சொல்லுகின்றவருமான கேசவரை நீ அலக்ஷியம்செய்வாயாகில் உனக்கு யுத்தத்தில் ஜயம் கிடைக்காது' என்று சொன்னேன். எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவரும் அனுகூலமானவசனங்களைச் சொல்லுகின்றவருமான அந்தத்தாசார்ஹரைக் கர்ணன் துஶ்ஶாஸனன் துர்ப்புத்தியுடையவனுன சகுனி இவர்களுடைய அபிப்பிராயத்திற்கு இணங்கினவனுன அந்தத் துர்யோதனன் நிராகரித்தான். அநீதியினுல் அவர் வார்த்தைக்கு ஸம்மதிக்கவில்லை. குலத்திற்குநாசத்தைத்தேடுகின்ற துரியோதனனுல்நீண்ட கைகளையுடைய ஸ்ரீகிருஷ்ணன் அவமானம் பண்ணப்பட்டான். பிறகு, காலத்தால் இழுக்கப்பட்டுக் கெட்டபுத்தியையடைந்த துரியோதனன், என்னை நீக்கிவிட்டுத் துச்சாஸனன் கர்ணன் இவர்களுடைய அபிப்பிராயத்தையே அனுஸரித்தான். நானுவது விதுரனுவது துரோணராவது யுத்தத்தை விரும்பவேயில்லை. அவ்வாறே பாஹ்லீகனும் ஸோமதத்தனும் பீஷ்மரும் துரோணபுத்திரரும் சலனும் பூரிஶ்ரவஸும் புருமித்திரனும் விவிம்சதியும் ஜயனும் தர்மாத்மாவானகிருபரும் இன்னும் மற்றுமுள்ள என்பந்துக்களும் யுத்தத்தைவிரும்பவில்லை. என்புத்ரன் இவர்களுடைய ஸம்மதத்திற் கிணங்கியிருந்திருப்பானுகில், இந்தப் பூமண்டலத்தை இவர்களுக்குப்பிரியும் எனக்குப்பிரியும் அனுபவிப்பான். கபடமற்ற ஸ்வபாவமுடையவர்களும் இன்பமாகப் பேசுகின்றவர்களும் ஞாதிகளுடையமத்யத்தில் பிரியமானவார்த்தைகளைச் சொல்லுகின்றவர்களும் நற்குலத்தில் பிறந்தவர்களும் நன்குமதிக்கப்பட்டவர்களும் கற்றறிந்தவர்களுமான மனிதர்கள் ஸுகமாகஜீவிக்கிறுர்கள். நித்தியம் தர்மத்தை எதிர்பார்க்கின்றமனிதன் எல்லாவிடத்திலும் சுகத்தையடைகிறுன். மரித்தபிறகும் நிர்த்தோஷமான மங்களத்தையடைகிறுன். பூமியை அனுபவிப்பதிலும் தன்வசப்படுத்திக்கொள்வதிலும் அவர்கள் தகுந்த ஸாமர்த்தியமுடையவர்கள். ஸமுத்திரம்வரையிலுள்ள பூமியானது அவர்களுக்கும் தகப்பன் பாட்டன் பரம்பரையாகக்கிடைத்திருக்கிறது. குந்தீபுத்திரர்கள் தர்மத்தைவிட்டு, உன்னை அவமதிக்கமாட்டார்கள்;

கட்டளைக்குட்பட்டு நீதிமார்க்கத்திலிருப்பார்கள். அப்பா! பாண்டவர்கள் எவர்களுடையவார்த்தையைக் கேட்பார்களோ அப்படிப்பட்டஞாதிகள் எனக்குஇருக்கிறார்கள். அப்பா! உனக்காகச் சல்யன் ஸோமதத்தன் மஹாத்மாவானபீஷ்மர் துரோணர் விகர்ணன் பாஹ்லிகன் கிருபர் இவர்களிடத்திலும் மஹாத்மாக்களும் பாதகுலத்தில் பிறந்தவர்களுமான இன்னும் மற்றப் பெரியோர்களிடத்திலும் நான் சொன்னேன். அவர்கள் அந்தவசனங்களை ஏற்றுக்கொள்ளாமலிருக்கவில்லை. முற்கூறியவர்களுள் எவரை இதைக்காட்டிலும் வேறுவிதமாக உனக்கு உபதேசிப்பவரென்று நீ எண்ணுகிறாய்? கிருஷ்ணர் தர்மத்தைக்கைவிடமாட்டார். அந்தஎல்லாப்பாண்டவர்களும் அந்தக்கிருஷ்ணரை அநுஸரிப்பவர்களே. வீரர்களான அந்தப்பாண்டவர்கள் தர்மத்தோடுகூடின வாக்கியத்தை நான்சொன்னாலும் செய்யாமலிருக்கமாட்டார்கள். ஏனென்றால், பாண்டவர்கள் தர்மத்திலேயே மனத்தைச் செலுத்தினவர்கள்' என்றுசொன்னேன். ஸூத! நான் இவ்வாறு புலம்பிக்கொண்டு புத்திரனைக்குறித்துப் பலவாறாகச்சொன்னேன். மூடன் என்வார்த்தையைக் கேட்கவில்லை. காலத்தினுடைய வித்யாஸமென்றே நான்நினைக்கிறேன். எவ்விடத்தில் விருகோதரன் அர்ஜுனன் விருஷ்ணிகளுள் வீரனான ஸாத்யகி பாஞ்சால்யனான உத்தமௌஜஸ் ஒருவராலும் ஜயிக்கமுடியாத யுதாமன்யு, அவமதிக்கமுடியாத திருஷ்டத்யும்னன், பகைவர்களால் ஜயிக்கமுடியாதசிகண்டி அஶ்மகர்கள் கேகயர்கள் ஸோமககுமாரனான க்ஷத்ரதர்மா சேதிதேசாதிபதியான த்ருஷ்டகேது சேகிதானன் காசிராஜகுமாரனான அபிபூ திரௌபதிகுமாரர்கள் விராடன் மஹாரதனானதுருபதன் புருஷஶ்ரேஷ்டர்களான நகுலஸஹதேவர்கள் மந்திரியான மதுஸூதனர் இவர்களிருக்கிறார்களோ அந்தஇடத்தில் இவர்களோடு ஒருஸமயத்தில் இவ்வுலகத்தில் உயிரோடிருக்க எண்ணங்கொண்டஎவன் போர்புரிவான்? திவ்யாஸ்திரங்களை ப்ரயோகஞ்செய்கின்றவர்களான என்னுடையபகைவர்களைத் துரியோதனன், கர்ணன், ஸௌபலனானசகுனி, துச்சாஸனன் இந்தநால்வரையுந்தவிர வேறுஎவன் ஸஹிப்பான்? ஐந்தாமவனை யான் காணவில்லை. விஷ்வக்ஸேனரூபியான ஸ்ரீகிருஷ்ணர் ரதத்திலிருந்துகொண்டு எவர்களுடைய சொற்படி நடக்கிறாரோ, (எவர்களுக்கு) அர்ஜுனன் ஸன்னத்தனான யுத்தவீரனோ, அவர்களுக்கு அபஜயம் கிடையாது. அவ்வாறான என்னுடைய புலம்பல்களை இந்தத் துரியோதனன் (இப்பொழுது) நினைக்கமாட்டான். புருஷஶ்ரேஷ்டர்களான பீஷ்மர் துரோணரிருவரும் கொல்லப்பட்டார்களென்று நீசொல்லுகிறாய்; தீர்க்காலோசனையோடு சொல்லப்பட்டிருக்கிற

அவனதமான விதுரவாக்யங்களுடைய இவ்விதபலனைக்கண்டு என்புத்திரர்கள் துக்கிப்பார்களென்று நான்நினைக்கிறேன். ஸாத்யகியினாலும் அர்ஜுனனாலும் ஸேனை அவமதிக்கப்பட்டிருக்கின்றதையும் தேர்களின் நடுவிடங்கள் சூன்யமாயிருக்கின்றதையுங்கண்டு என்புத்திரர்கள் துக்கிப்பார்களென்று நான் நினைக்கிறேன். பனிக்காலத்தின்முடிவில் காற்றினால் விருத்திபண்ணப்பட்ட பெரியதீயானது உலர்ந்தகாட்டை எவ்விதம் எரிக்குமோ அவ்விதமே அந்தத்தனஞ்சயன் என்னுடைய ஸேனையை எரிப்பான். ஸஞ்சய! நீ ஸமர்த்தனாக இருக்கிறாய். அவையெல்லாவற்றையும் எனக்குச்சொல். அப்பா! அபிமன்யுவைக்கொன்று பார்த்தன்விஷயத்தில் பாதகத்தைச்செய்து ஸாயங்காலத்தில் கௌரவர்கள் திரும்பிவந்தபொழுது, உங்கள்மனம் எவ்விதமிருந்தது? அப்பா! யுத்தகளத்தில், காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அந்தஅர்ஜுனனுக்குப் பெரிய அபகாரத்தைச்செய்துவிட்டு என்னைச்சேர்ந்தவர்கள் ஒருகாலும் அவனுடைய செய்கைகளைத் தாங்கச் சக்தியுள்ளவர்களாகார்கள். இவ்வாறு காரியம்நடந்தபிறகு, அந்தக் கௌரவர்களுள் துரியோதனன் கர்ணன் துச்சாஸனன் சகுனி ஆகியஇவர்கள் எதைச்செய்யப்போகிறதாகக் கூறினார்கள்? ஸஞ்சய! அப்பா! மந்தனான துரியோதனனுடைய பெரிய அநீதிகளாலே ஒன்றுசேர்ந்தவர்களான என்னுடைய எல்லாப்புத்திரர்களுக்கும் யுத்தத்தில் எதுஸம்பவித்தது? ஸஞ்சய! பேராசையை அநுஸரித்தவனும் கெட்டஎண்ணமுடையவனும் கோபத்தினால் மனநிலைதப்பினவனும் ராஜ்யத்தில் ஆசைகொண்டவனும் மூடனும் மாத்ஸர்யத்தினால் கெடுக்கப்பட்ட சித்தவிருத்தியையுடையவனுமான அந்தத் துரியோதனனுடைய கெட்டதோ நல்லதோ அந்தவிருத்தாந்தத்தை எனக்குச் சொல்வாயாக" என்று வினவினன்.

---

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(ஸஞ்சயன், திருதராஷ்டிரனை நிந்தித்து யுத்தத்தைச்சொல்லத் தொடங்கியது.)

ஸஞ்சயன், "எல்லாவற்றையும் நேரில்கண்ட நான் உமக்குச் சொல்லப்போகிறேன். ஸ்திரமாகஇருந்துகொண்டு, நீர் கேட்பீராக. உம்முடைய அநியாயம் பெரிதன்றோ? அரசரே! ஜலம்போனபிறகு அணைகட்டுவதுபோல உம்முடைய இந்தப்புலம்பல் பிரயோஜனமற்றது. பரத

சிரேஷ்டரே! நீர் வியஸனப்படவேண்டாம். அந்தகனுடைய ஆச்சர்யகர மான இந்தச்செய்கையானது தாண்டமுடியாதது. பரதசிரேஷ்டரே! வியஸனப்படாதீர். இது முன் செய்தவினையின்பயன். நீர் முற்காலத் தில் சூதாட்டத்திலிருந்து குந்திபுத்திரரான யுதிஷ்டிரரை விலக்கி யிருப்பீராகில் உம்மையும் உம்முடைய புத்திரர்களையும் (இப்பொழுது) துக்கம்வந்து அணுகாது. யுத்தஸமயம் நேர்ந்தபொழுதே ரோஷா வேசம் கொண்டவர்களான வீரர்கள் அப்பொழுதே உம்மால் தடுக்கப் பட்டிருப்பார்களாகில் உம்மை வ்யஸனம்வந்து அணுகாது. அரசரே! கௌரவர்களின் நன்மையைக்கருதி மூர்க்கனை துரியோதனனை முந் திச் சிறைப்படுத்தியிருப்பீராகில், நீர் பெரும்புகழைப் பெற்றிருப்பீர். ஆதலால், உம்முடைய புத்தி வைஷம்யத்தினாலுண்டான பயனை ஜனங்களும் பாஞ்சாலர்களும் விருஷ்ணிகளும் மற்றுமுள்ள எல்லா அரசர்களும் அனுபவிக்கப்போகிறார்கள். நீர் பிதா செய்யவேண்டிய கார்யத்தைச்செய்து புத்திரனை நல்வழியில் நிலைநிறுத்தித் தர்மத் தோடேயிருந்திருப்பீராகில், உம்மை வ்யஸனம் வந்து நாடாது. உல கத்தில் புத்திமான்களுள் சிறந்தவரான நீர் சாஸ்வதமான தர்மத்தை விட்டுத் துர்யோதனன் கர்ணன் சகுனி இவர்களுடைய அபிப்பிரா யத்தை அனுஸரித்தீர். வேந்தரே! தனத்தில் மிகுந்த பற்றுள்ள உம் முடைய அந்தப் புலம்பலையெல்லாம் விஷத்தோடுகூடிய தேன்போன்ற தாக நான் நினைக்கிறேன். மன்னரே! நீர் எண்ணுவதுபோல ஸ்ரீ கிருஷ் ணரும் யுதிஷ்டிரராஜரும் பீஷ்மரும் துரோணரும் எண்ணுகிற தில்லை. வாஸுதேவர் எப்பொழுது உம்மைப் பேராசையுள்ளவரென் றும், தர்மத்தை (வாயினால் மட்டும்) சொல்லிக்கொண்டிருப்பவரென்றும் அறிந்தாரோ அதுமுதல் அவர் உம்மை முன்போல மதிக்கிறதில்லை. புத்திரர்களுக்கு ராஜ்யத்தை விரும்புகிறவரே! (உம்முடைய புத்ரர் களால்) பாண்டவர்கள் கடுஞ்சொற் சொல்லப்பட்டபொழுது நீர் கவனி யாமலிருந்ததன்பயன் (இப்பொழுது) உம்மை அடைந்திருக்கிறது. தோஷமற்ற மஹாராஜரே! தகப்பன் பாட்டன் வழியாகக் கிடைத் திருந்த ராஜ்யத்தை நீர் ஸந்தேகத்துக்குள்ளாக்கிவிட்டீர். ஏனெனில், பார்த்தர்களாலே ஜயிக்கப்பட்ட பூமி முழுமையும் நீரே அடைந்தீர். முன்பு கௌரவர்களின் ராஜ்யமும் கீர்த்தியும் பாண்டுவினாலேயே தேடப்பட்டன. தர்மத்தை யனுஷ்டிக்கின்றவர்களான பாண்டவர்க ளாலே மறுபடியும் இவ்விரண்டும் அதிகமாக்கப்பட்டன. இவ்வுலகில் ராஜ்ய போகத்தில் பேராசையுள்ளவரான உம்மாலே பிதாவைச்சேர்ந்த ராஜ்யத்திலிருந்து பாண்டவர்கள் விலகும்படி செய்யப்பட்டமையால்,

'அவர்களுடைய அவ்விதமான அந்தக் கார்யமானது உம்மை அடைந்து மிகவும் பயனற்றதாகி விட்டது. மன்னரே! நீர் இப்பொழுது யுத்த காலத்தில் பலவாருன குற்றங்களைக்கூறிப் புத்திரர்களை நிந்திப்பது தகாது. ரணகளத்தில் யுத்தஞ்செய்கின்ற அரசர்கள் உயிரைக்காப் பாற்றமாட்டார்கள். க்ஷத்ரியசிரேஷ்டர்கள் பார்த்தர்களுடையசேனை யில் நுழைந்து யுத்தஞ்செய்கிறார்கள். எந்தச் சேனையைக் கிருஷ்ண ரும் அர்ஜுனனும் ஸாத்யகியும் விருகோதரனும் காப்பாற்றுகிறார் களோ அந்தச்சேனையை (எதிர்த்து) துர்யோதனனைத்தவிர வேறெவன் யுத்தம் செய்வான்? எவர்களுக்கு அர்ஜுனன் யுத்தவீரனோ, எவர் களுக்கு ஜநார்த்தனர் மந்திரியோ, எவர்களுக்கு ஸாத்யகியும் விருகோ தரனும் யுத்த வீரர்களோ, அவர்களுடன் கௌரவர்களும் அவர் களை அனுஸரித்து வருகிறவர்களும்தவிர வேறு எந்த மனிதன் விற் பிடித்து யுத்தம் பண்ணச் சக்தியுள்ளவன்? பலம் குறையும் ஸம யத்தையறிந்தவர்களும் க்ஷத்ரியதர்மத்தில் பற்றுதலுள்ளவர்களும் சூரர்களுமான அரசர்களாலே எவ்வளவு செய்வதற்கு ஸாத்யமோ அவ் வளவையும் கௌரவர்கள் செய்கின்றார்கள். எவ்வாறு கௌரவர்களுக் குப் புருஷஶ்ரேஷ்டர்களான பாண்டவர்களோடு பரமஸங்கடமான யுத் தம் நேர்ந்ததோ அவையெல்லாவற்றையும் உள்ளபடி கேட்பீராக.

---

### எண்பத்தேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.

(துரோணர் சகடவ்யூகம் வகுத்தது.)

அந்த ராத்திரியானது விடிந்தவுடன், ஆயுததாரிகளுள் சிரேஷ் டரான துரோணர் தம்முடைய ஸேனைகளை யெல்லாம் அணிவகுக்க ஆரம்பித்தார். அரசரே! கர்ஜிக்கின்றவர்களும் மிகுந்த கோபம் கொண்டவர்களும் ஸஹிக்காதவர்களும் பரஸ்பரம் வதத்தை இச் சிக்கிறவர்களுமான சூரர்களுடைய நானாவிதமான சொற்கள் கேட்கப் பட்டன. சிலர் விற்களினின்று நாணொலியை எழுப்பியும், சிலர் நாண் கயிறுகளை உருவிக்கொண்டும் பெருமூச்சு விட்டுக்கொண்டும், 'தனஞ் சயன் இப்பொழுது எங்கேயிருக்கிறான்' என்று ஆரவாரம் செய்தார்கள். சிலர் உறையிலிருந்து எடுக்கப்பட்டவைகளும் நல்ல பிடியுள்ளவை களும் உறுதியாகச் செய்யப்பட்டவைகளும் தீட்டப்பட்டவைகளும் காய்ச்சித் தோய்க்கப்பட்டவைகளும் ஆகாசத்திற்கு ஒப்பானவைகளு

மானகத்திகளை வீசினார்கள். நன்றாகத் தேர்ச்சியடைந்தவர்களான ஆயி ரக்கணக்கான சூரர்கள் யுத்தஞ்செய்யவேண்டுமென்கிற விருப்பத்தோடு கத்திப்போர் வழிகளிலும் விற்போர் வழிகளிலும் ஸஞ்சரிக்கின்றவர் களாகக்காணப்பட்டார்கள். சிலர் மணிகளோடுகூடியவைகளும் சந்தனங் களால் நான்குபக்கங்களிலும் பூசப்பட்டவைகளும் ஸுவர்ணங்களாலும் வஜ்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டவைகளுமான கதாயுதங்களைக் கையி லெடுத்துக்கொண்டு, 'பாண்டவன் எங்கேஇருக்கிறான்? என்றுவினவினார் கள். பாகுபலமுள்ளவர்களும் பலத்தினாலும் மதத்தினாலும் பைத்தியங் கொண்டவர்களுமான சிலர் உயரத்தூக்கி நிறுத்தப்பட்ட இந்திர த்வஜங்களுக்கொப்பான பரிகங்களாலே ஆகாயத்தை இடைவெளியற்ற தாகச் செய்தார்கள். விசித்திரமான மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவர் களும் சூரர்களுமான சிலர் யுத்தஞ் செய்யவேண்டுமென்கிற எண்ணத் துடன் பலவித ஆயுதங்களோடு ஆங்காங்கு ஸன்னத்தர்களாக நின்று கொண்டு, யுத்தகளத்தில் அப்பொழுது, 'அர்ஜுனன் எங்கே? அந்தக் கோவிந்தன் எங்கே? அகங்காரியான விருகோதரன் எங்கே? அவர்க ளுடைய ஸ்நேகிதர்கள் எங்கே?' என்று சொல்லிக்கொண்டு யுத்தத் திற்கு அழைத்தார்கள். பிறகு, துரோணர் சங்கத்தை ஊதித் தாமே குதிரைகளை விரையச்செய்து அவைகளை ஒழுங்கு படுத்திக்கொண்டு வேகத்துடன் இங்குமங்கும் ஸஞ்சாரம்பண்ணினார். மஹாராஜரே! அந்த எல்லாச்சேனைகளும் யுத்தத்தில் ஊக்கத்தோடு நிற்கையில், பாரத்வாஜர் ஜயத்ரதனைக்குறித்து, 'நீயும் ஸோமதத்தகுமாரனும் மஹா ரதனான கர்ணனும் அஸ்வத்தாமாவும் சல்யனும் விருஷஸேனனும் கிருபரும் லக்ஷம் குதிரைகளோடும் அறுபதினாயிரம் தேர்களோடும் மதப்பெருக்கடைந்த பதினாலாயிரம் யானைகளோடும் கவசம் பூண்டிருக் கிற இருபத்தோராயிரம் காலாட்படைகளோடுங்கூடி என்னை அணு காமல் ஆறுகுரோசத்திற்கப்பால் விலகியிருங்கள். அங்கிருக்கின்ற உன்னை (எதிர்த்து) இந்திரனோடுகூடின தேவர்களும் போர்செய்து ஸஹிப்பதற்குச் சக்தியுள்ளவர்களல்லர். அவ்வாறிருக்க இந்த எல்லாப் பாண்டவர்களும் யாதுசெய்யப்போகின்றார்கள்? ஸைந்தவ! நீ தேறுத லடைவாயாக' என்று கூறினார். இவ்வாறு சொல்லக்கேட்டு, மனத் தேறுதலையடைந்த ஸிந்துதேசாதிபதியான ஜயத்ரதன், அந்தமஹா ரதர்களாலும் கவசமணிந்தவர்களும் ஸன்னத்தர்களும் ஈட்டியைக் கையில் பிடித்துக் குதிரையின்மேல் ஏறியிருக்கின்றவர்களுமான குதிரைவீரர்களாலும் சூழப்பட்டுக் காந்தாரர்களுடன்சேர்ந்து அவ்வி டம் சென்றான். ராஜஸ்ரேஷ்டரே! சாமரங்களைத் தலையலங்காரமாகக்

கொண்டவைகளும் ஸ்வர்ணங்களால் அலங்கரிக்கப்பட்டவைகளும் நன்ருகஇழுக்கும் திறமையுள்ளவைகளுமான ஜயத்ரதனுடைய குதிரைகளெல்லாம் எழுபத்துநாலாயிரமிருந்தன. ஸமர்த்தர்களான பாகர்களாலே நன்குஏறிநடத்தப்பட்டவைகளும் மதங்கொண்டவைகளும் பயங்கரமான உருவமுள்ளவைகளும் கவசமணிந்தவைகளும் குரூரமான செய்கைகளுள்ளவைகளுமான ஆயிரத்தைந்நூறு யானைகளாலே உம்முடைய புத்திரனை துர்மர்ஷணன் எல்லாச்சேனைகளுக்கும் முன்னிலையில், யுத்தம்பண்ணுவதற்கு ஸஜ்ஜமாக நின்ருன். பிறகு, உம்முடைய குமாரர்களான துச்சாஸனன் விகர்ணனிருவரும் ஸிந்துராஜனுடைய கார்ய ஸித்தியின்பொருட்டுப் படைகளுக்கு முன்னணியில் நின்ருர்கள். பாரத்வஜராலே ஏற்படுத்தப்பட்ட சக்ரவியூகத்தை நடுவில்கொண்ட சகட வ்யூகமானது பின்பக்கத்தில் ஐந்து [1] கவ்யூதி அகன்றும் பன்னிரண்டு கவ்யூதி நீண்டுமிருந்தது. ஆங்காங்கு நிறுத்தப்பட்ட வீரர்களான பலவித அரசர்களாலும் தேர் குதிரை யானை காலாட்படை இவைகளின் கூட்டங்களாலும் அந்த வியூகத்தைத் துரோணர் தாமே ஏற்படுத்தினர். அதற்குப் பின்பக்கத்தில் பத்மாகாரமான உள் வ்யூகமானது மறுபடியும் ஏற்படுத்தப்பட்டது. அந்தப் பத்மவ்யூகத்தின் நடுவில் மறைவான ஸூசீவ்யூகமும் மறுபடி ஏற்படுத்தப்பட்டது. இவ்வாறு இந்த மகாவ்யூகாகாரமாக ஸேனையை அணிவகுத்துத் துரோணர் ஸன்னத்தராக நின்ருர். சிறந்தவில்லாளியான கிருதவர்மா ஸூசீவ்யூகத்தின் முகத்தில் நின்ருன். ஐயா! அவனுக்குப் பின்புறத்தில் காம்போஜன் ஜலஸந்தன் இவ்விருவரும் நின்ருர்கள். அவர்களை அடுத்துத் துர்யோதனனும் கர்ணனும் நின்ருர்கள். பிறகு, முன்வைத்தகாலைப் பின்வாங்காதவர்களான லக்ஷக்கணக்கான எல்லாயுத்தவீரர்களும் அந்தச் சகட வியூகத்தின்முகத்தை ரக்ஷித்துக்கொண்டு ஸன்னஹத்தோடு நின்ருர்கள். பிறகு, அவர்களுக்குப் பின்புறத்தில் ஜயத்ரதராஜன் பெரிய சேனையினுல் சூழப்பட்டு ஸூசீவ்யூஹத்தின் பக்கத்தில் நின்ருன். ராஜச்ரேஷ்டரே! பாரத்வாஜர் சகடவ்யூகத்தின் முகத்தில் அதுபிளவுபடாமலிருக்கும்படி நின்ருர். ஆதலால், தாமே இந்தவ்யூகத்தைப் பாதுகாத்தார். வெண்மைநிறமுள்ள கவசமும் வஸ்திரமும் தலைப்பாகையுமுள்ளவரும் அகன்ற மார்பையுடையவரும் மகாபாகுபலமுள்ளவருமான துரோணர் வில்லின் நாணொலியை எழுப்பிக்கொண்டு கோபங்கொண்ட அந்தகன்போல நின்ருர். வீர்யவானை அவர் அந்த எல்லாச்சேனைக்கும் தலைவராகவும் ரக்ஷகராகவும் இருந்தார். பதாகையுள்ளதும் சிவப்பு

[1] இரண்டு க்ரோசம்.

நிறமுள்ள குதிரைகளையுடையதும் வேதிகையையும் கிருஷ்ணாஜினத்தையும் த்வஜமாகவுடையதுமான துரோணருடைய ரதத்தைப்பார்த்துக் கௌரவர்கள் மிகுந்த மனக்களிப்புற்றவர்களானார்கள். துரோணரால் ஏற்படுத்தப்பட்டுள்ளதும் கொந்தளிக்கின்ற கடல்போன்றதுமான அந்த வ்யூகத்தைப்பார்த்து ஸித்தசாரணர்களுடைய கூட்டங்களுக்கு மிக்க பெரிய ஆச்சரியம் உண்டாயிற்று. வ்யூகமானது, மலைகளையும் ஸமுத்திரங்களையும் காடுகளையுமுடையதும் பற்பல தேசங்களால் வியாபிக்கப்பட்டதுமான எல்லாப்பூமியையும் விழுங்கிவிடும் என்று எல்லாப்பிராணிகளும் நினைத்தன. அனேகரதங்களும் மனிதர்களும் குதிரைகளும் காலாட்களும் யானைகளுமுள்ளதும் எதிரிகளுக்குப் பயங்கரமான சப்தமுள்ளதும் ஆச்சரியமான உருவமுடையதும் பகைவர்களுடையமனத்தைப் பிளக்கின்றதும் பெரியதுமான சகடவ்யூகமானது வகுக்கப்பட்டதைப்பார்த்து அரசன் ஆனந்தமடைந்தான்.

---

## எண்பத்தேட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் யுத்தபூமியில் பிரவேசித்தது.)

ஐயா! மிகச்சிறந்தவைகளான உம்முடையபடைகள் அணிவகுக்கப்படவும், பேரிவாத்யங்களும் மிருதங்கங்களும் ஆனகங்களும் அடிக்கப்படவும், சேனைகளுடையசப்தமும் நான்குவிதவாத்தியங்களுடைய முழக்கமும் வெளிப்படுத்தப்படவும், சங்கவாத்யங்கள் ஊதப்படவும், உரத்தசப்தமானது மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணவும், ஆயுதங்கள் பிடிக்கப்படவும், பாரதவீரர்கள் யுத்தம்செய்யவிரும்பவும், பயங்கரமான முகூர்த்தமும்வரவும், ஸவ்யஸாசியானவன் காணப்பட்டான். ஸவ்யஸாசியினெதிரில் மாம்ஸத்தையும் ரக்தத்தையும் புஜிக்கின்ற அண்டங்காக்கைகள் காக்கைகள் இவற்றின் கூட்டங்கள் ஆயிரக்கணக்காக வந்து உட்கார்ந்தன. புறப்பட்டிருக்கின்ற நம்வீரர்களுடைய மார்க்கத்தில் கோரமான ஒலிகளுள்ள மிருகங்களும் அமங்களகரமான தோற்றமுள்ள நரிகளும் வலப்பக்கத்தில் ஊளையிட்டன. மகாராஜரே! யுத்தத்தில் பார்த்தனுக்கு மங்களகரமாகவும் உம்மைச்சேர்ந்தவர்களுக்கு அமங்களகரமாகவுமுள்ள அவ்விதமான உத்பாதங்கள் உலகங்களுக்கு அழிவுநேரும் காலத்தில் எவ்வாறோ அவ்வாறே இருந்தன. இடியோடுகூடிய ஜ்வலிக்கின்ற எரிநக்ஷத்திரங்கள் ஆயிரக்கணக்காக

விழுந்தன. கோரமானபயமானது அதிகமாகத்தோன்றவே பூமிமுழுமை யும் அசைவுற்றது. கௌந்தேயனும் வந்து யுத்தமும் நெருங்கவே, பனித்துளிகளுடன்கூடியதும் பாறக்கற்களை இறைக்கின்றதுமான குரூர மான காற்று நான்குபக்கங்களிலும் வீசியது. புத்திமான்களான நகுல குமாரனை சதானீகனும் பார்ஷதனை திருஷ்டத்யும்னனுமாகிய இரு வரும் அப்பொழுது பாண்டவர்களுடைய ஸேனைகளை அணிவகுத்தார் கள். பிறகு, ஆயிரம்தேர்களோடும், நூறுயானைகளோடும், மூவாயிரம் குதிரைகளோடும், பதினாயிரம் காலாட்படைகளோடும், ஆயிரத்தைந் நூறு விற்கள்பிரகாசிக்கவே, உம்முடையகுமாரனை துர்மர்ஷணன் எல் லாஸைநிகர்களுக்கும் முந்திநின்றுகொண்டு, 'காண்டீவத்தைக் கையில் பிடித்துச் சத்துருக்களைத் தவிக்கச்செய்கிறவனும் யுத்தத்தில் கெட்ட மதமுள்ளவனுமான அர்ஜுனனை ஸமுத்திரத்தைக் கரைதடுப்பது போல யான் தடுக்கப்போகிறேன். யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவனும் ரோஷமுடையவனுமான தனஞ்சயன் கல்லில்போடப்பட்ட மண்குடம் போல என்னிடத்தில் போர்புரிந்து உடைபடுவதை (எல்லோரும்) இப் பொழுது பார்க்கட்டும். தோராளிகளே! யுத்தத்தில் விருப்பமுள்ள நீங் கள் நில்லுங்கள். கீர்த்தியையும் கௌரவத்தையும் விருத்தியடையும்படி செய்கின்றவனை நான் ஒன்றுசேர்ந்திருக்கின்ற இவர்களை எதிர்த்து யுத்தஞ்செய்கிறேன்' என்றுகூறினான்.

மகாராஜரே! வேந்தரே! மிக்கமனோதைர்யமுள்ள அந்த அரசன் இவ்வாறு சொல்லிக்கொண்டு பெரியவில்லாளிகளால் சூழப்பட்டுப் பெரியவில்லைக் கையில்தாங்கி ஸந்நத்தனாகநின்றான். மகாராஜரே! பிறகு, மிக்கமனோதைரியமுள்ளவனும் பெரியோர்களைக்காப்பவனும் மகாரதன் என்று ப்ரஸித்தனுமான அர்ஜுனனும் பெரிதானவில்லைக் கையில் கொண்டு ஸன்னத்தனாக நின்றான். நிவாதகவசர்களுக்கு அந்தகனை அர்ஜுனன் உலர்ந்தகாட்டில்பிடித்த தொடமுடியாத நெருப்புப்போல வும், வஜ்ரத்தையுடைய இந்திரன்போலவும், காலத்தினால் தூண்டப் பட்டவனும் (பிறரால்)லங்கிக்கமுடியாதவனும் காலதண்டத்தைக்கையில் கொண்டவனுமான யமன்போலவும், கலங்கச்செய்யமுடியாத சூல பாணியான ருத்திரர்போலவும், பாசாயுதத்தையுடைய வருணன்போல வும், ஸ்தாவரஜங்கமங்களை எரிக்கஎண்ணங்கொண்ட ஜ்வாலையுள்ள யுகாந்தகாலத்து நெருப்புப்போலவும், கோபத்தாலும் பொறுமையையி லும் பலத்தாலும் தூண்டப்பட்டவனும் மகாவிரதத்தை நிறைவேற்றப் போகிறவனும் ஸத்தியத்தில்நின்று யுத்தத்தில் ஜயிக்கப்போகிறவனு

மாக யுத்தமுனையில் வந்துசேர்ந்தான். கவசத்தைப்பூண்டவனும் கத்தியைக் கையில்எடுத்தவனும் தங்கத்தினால் செய்யப்பட்ட கிரீடத்தை யணிந்தவனும் வெண்மைநிறமுள்ள மாலைகளையும் வஸ்திரங்களையும் தரித்தவனும் நல்லதோள்வளைகள் பூண்டவனும் அழகியகுண்டலங்களுள்ளவனும் நரஸ்வரூபியுமான அர்ஜுனன் நாராயணரை அநுஸரித்தவனாகி உத்தமமானரதத்தின்மீதேறிக் காண்டீவத்தினின்று நாணொலியை எழுப்பிக்கொண்டு யுத்தத்தில்உதித்த சூரியன்போலப் பிரகாசித்தான். அரசரே! பிரதாபசாலியான அந்தத் தனஞ்சயன் முன்னணிக்கெதிரில் எய்தஅம்புபோய் விழுந்தூரத்துக்கு ஒன்றரைமடங்கு தூரத்திலேயே ரதத்தைநிறுத்திச் சங்கத்தைஊதினான். ஐயா! பிறகு, கிருஷ்ணரும் பரபரப்பில்லாதவராகிப் பார்த்தனோடுசேர்ந்து பாஞ்சஜன்யமென்கிற உத்தமமான சங்கத்தைப் பலத்தோடு ஊதினார். வேந்தரே! அவ்விருவர்களுடைய சங்கநாதத்தினாலே உமதுபடையிலுள்ள யுத்தவீரர்கள் மயிர்சிலிர்த்து நடுங்கிப் பிரஜ்ஞையை இழந்தார்கள். இடிமுழக்கத்தால் எல்லாப்ராணிகளும் பயமடைவதுபோலச் சங்கத்தினுடைய பேரொலியினால் உமதுஸைனிகர்கள் பயமடைந்தார்கள். நான்குபக்கங்களிலும் வாகனங்கள் மலமூத்திரங்களைச் சொரிந்தன. இவ்வாறாக எல்லாச்சேனையும் வாகனங்களோடு அதிகமானபயத்தை யடைந்ததாகியது. மன்னரே! சங்கத்தின்ஒலியினாலே (அங்குள்ள) மனிதர்கள் உத்ஸாஹத்தை இழந்தார்கள். ஐயா! சிலர் ப்ரஜ்ஞையையிழந்தார்கள். இறைவரே! சிலர் மிகவும்பயந்தார்கள். பிறகு, (அர்ஜுனனுடைய தேரின்மீதுள்ள) வானரமானது த்வஜத்தில்வஸிக்கின்ற பூதங்களோடு வாயைத்திறந்துகொண்டும் உம்முடையஸைனிகர்களைப் பயமுறுத்திக்கொண்டும் அட்டஹாஸத்தைச்செய்தது. பிறகு, உம்முடையஸைனிகர்களுக்கு யுத்தத்தில் ஊக்கத்தை யுண்டுபண்ணக்கூடிய சங்கங்கள் ஊதப்பட்டன. பேரீவாத்யங்களும் மிருதங்கங்களும் பறைகளோடு திரும்பவும் அடிக்கப்பட்டன. நானாவிதமான வாத்யகோஷங்களோடும் எக்களிப்போடும் கைக்கொட்டுக்களோடும்சேர்ந்த உத்தமமான ஸிம்மநாதங்களாலும் நான்குபக்கங்களிலும் நடத்தப்பட்ட மஹாரதங்களாலும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிற அவ்விதமான சப்தமானது நெருங்கி உண்டாயிருக்குங்காலத்தில், அர்ஜுனன் மிக்க மனக்களிப்படைந்து வாஸுதேவரைப்பார்த்துச் சொல்லலானான்.

---

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

### (அர்ஜுனனுடைய யுத்தத்தை வர்ணித்தது.)

அர்ஜுனன், 'கேசவரே! துர்மர்ஷணனிருக்குமிடத்தைக் குறித்துக் குதிரைகளைநடத்தும்; இந்த யானைப்படையைப்பிளந்து சத்துரு ஸேனையில் நுழையப்போகிறேன்' என்று கூறினன். ஸவ்யஸாசியினால் இவ்வாறு சொல்லப்பட்ட மஹாபாகுவான கேசவர் துர்மர்ஷணனிருக்குமிடத்திற்குக் குதிரைகளை ஓட்டினார். ஸஹாயமற்றவனான அர்ஜுனனுக்கும் அநேக வீரர்களுக்கும் ரதங்கள், யானைகள், யுத்தவீரர்கள் இவைகளுக்கு நாசத்தையுண்டுபண்ணுகிற மிக்க பயங்கரமான கைகலந்த அவ்வித யுத்தம் நடந்தது. பிறகு, பார்த்தன், நீருண்ட மேகமானது நீர்த்தாரைகளை மலைகளின்மீது பொழிவதுபோல அம்புமழைகளைப் பகைவர்களின்மீது பொழிந்தான். அந்த எல்லா ரதிகர்களும் அந்த யுத்தத்தில் வேகத்துடன் மிகக்கைதேர்ந்தவர்கள்போலக் கிருஷ்ணார்ஜுனர்களின்மீது பாணக்கூட்டங்களை இறைத்தார்கள். பிறகு, மிக்க பாகுபலமுள்ளவனான பார்த்தன் யுத்தத்தில் சத்துருக்களால் தடுக்கப்பட்டுக் கோபமுற்றுத் தேராளிகளுடைய தலைகளை அம்புகளால் சரீரங்களிலிருந்து அபகரித்தான். யுத்த பூமியானது புரண்ட விழிகளையும் பற்களால் நன்றாகக் கடிக்கப்பட்ட உதடுகளையும் குண்டலங்களையும் தலைப்பாகைகளையுமுடைய அழகிய முகங்களால் மிகவும் நிரம்பியது. நான்கு பக்கங்களிலு மிறைக்கப்பட்ட யுத்தவீரர்களுடைய முகங்கள் நான்குபுறத்திலும் நன்றாக நாசஞ்செய்யப்பட்ட வெண்டாமரைக்காடுகள்போலப் பிரகாசித்தன. ஸுவர்ணமயமாயும் விசித்திரமாயுமுள்ள ஆபரணங்களை அணிந்தவர்களும் ரக்தத்தால் நனைக்கப்பட்டவர்களுமான வீரர்கள், மின்னலோடுகூடிச் சேர்ந்திருக்கின்ற மேகங்களுடைய குவியல்கள்போலக் காணப்பட்டனர். அரசரே! பூமியில் விழுகின்ற தலைகளினுடைய ஓசையானது காலத்தால் பக்குவமாகி விழுகின்ற பனம்பழங்களினுடைய ஓசைபோலிருந்தது. ஒரு தலையில்லா முண்டமானது எழுந்திருந்து அம்புடன்கூடினவில்லை இழுத்து நாணொலிசெய்துகொண்டு கிளம்பிற்று. மற்றோர் உடற்குறையானது கையினால் ஒரு கத்தியை உருவி ஓங்கிக்கொண்டு நின்றது. மற்றொரு கபந்தமானது வேறொருவனுடைய தலையை மயிர்களில் பிடித்துக்கொண்டு கூத்தாடியது. யுத்தத்தில் ஜயத்தை விரும்புகின்ற புருஷ

ஸ்ரேஷ்டர்கள், அர்ஜுனனைப் பொருதவர்களாகித் தலைகள் வீழ்ந்ததையும் தெரிந்துகொள்ளவில்லை. பூமியானது, குதிரைகளினுடைய தலைகளாலும் யானைகளினுடைய துதிக்கைகளாலும் வீரர்களினுடைய கைகளாலும் தலைகளாலும் நன்றாக நிரப்பப்பட்டது. உம்முடைய ஸைன்யங்களில், 'இவன் பார்த்தன்; எங்கே பார்த்தன்? இவன் பார்த்தன்; பார்த்தா! நில்; பார்த்த! என்னை நோக்கி இங்கேவா? எங்கே போகிறாய்?' என்று பிதற்றுகின்ற யுத்த வீரர்களுக்கு எல்லாம் பார்த்தமயமாயிற்று. சில வீரர்கள் ஒருவரையொருவர் கொன்றுகொண்டார்கள். சிலர் தம்மையே கொன்றுகொண்டார்கள். ஜனங்கள் காலத்தினாலே புத்திமயக்கங்கொண்டு எல்லாவற்றையும் பார்த்தனானதாக எண்ணினார்கள். அலறுகிறவர்களும் ரக்தப்பெருக்குடையவர்களும் நினைவற்றவர்களும் அதிகமான வேதனையை யுடையவர்களுமான அநேகவீரர்கள் படுத்தவர்களாகித் தங்கள் பந்துக்களைக் கூவியழைத்தார்கள். பிண்டிபாலங்கள், ப்ராஸங்கள், சக்தி, ரிஷ்டி, கோடாலி, நிர்வியூகம், கத்திகள், விற்கள், தோமரங்கள், அம்புகள், கவசங்கள், ஆபரணங்கள், கதைகள், தோள்வளைகள் இவைகளோடு கூடியவைகளும், மலைப்பாம்புக் கொப்பானவைகளும், பரிகத்துக் கொப்பானவைகளுமானகைகள், யுத்தபூமியில் சிறந்த அம்புகளால் அறுக்கப்பட்டு நான்குபக்கங்களிலும் மேலெழும்பிக் குதிக்கின்றவைகளாகவும் பலவாறு புரளுகின்றவைகளாகவும் மிகத்துடிக்கின்றவைகளாகவும் பரபரப்புள்ளவைகளாகவும் வேகமுள்ளவைகளாகவும் இருந்தன. எந்தெந்த மனிதன் ரணகளத்தில் பார்த்தனை எதிர்த்து வந்தானோ அவனவனுடைய சரீரத்தை அம்பானது மிருத்யுவாக அடைந்தது. ரதமார்க்கங்களில் நர்த்தனம் செய்கின்றவனும், அவ்வாறே வில்லைவளைத்து நாண்பூட்டி அம்பெய்கின்றவனுமான பார்த்தனிடத்தில் கொஞ்சமேனும் இடைவெளியை ஒருவனாவது அந்த யுத்தகளத்தில் காணவில்லை. முயற்சியுடையவனும் சீக்கிரமாக அம்புகளை ப்ரயோகம் செய்கின்றவனுமான பாண்டுபுத்திரனுடைய சுறுசுறுப்பினால் சத்துருவீரர்கள் ஆச்சரியமடைந்தார்கள். பல்குனன் யானையையும் மாவுத்தனையும் குதிரைகளையும் குதிரைக்காரர்களையும் தேராளிகளையும் ஸாரதிகளையும் அம்புகளால் பிளந்தான். அந்தப்பாண்டவன், நேரில் திரும்பிவருகின்றவனையும், வந்துயுத்தஞ் செய்கின்றவனையும், நேரில்நிற்கின்றவனையும், ஒருவனையாவது கொல்லாமலிருக்கவில்லை. உதிக்கின்ற ஸூர்யன் ஆகாயத்தில் பேரிருளை நாசஞ்செய்வதுபோலவே அர்ஜுனன் கழுகிறகுகள் கட்டின அம்புகளால் யானைக்கூட்டங்களைக் கொன்றான். பிளக்கப்பட்டு விழுந்திருக்கின்ற யானைகளால் உம்முடைய ஸைன்ய

மானது ப்ராளயகாலத்தில் மலைகளாலே வியாபிக்கப்பட்ட பூமிபோல் காணப்பட்டது. நடுப்பகலில் ஸூர்யனானவன் ப்ராணிகளால் எவ்வாறு பார்க்கக்கூடாதவனாயிருப்பனோ அவ்வாறாகவே யுத்தரங்கத்தில் கோபங் கொண்டவனான தனஞ்சயன் பகைவர்களால் எப்பொழுதும் பார்க்க முடியாதவனாக இருந்தான். பகைவரைவாட்டுபவரே! மஹாராஜரே! உமது புத்திரனுடைய அந்தப்படையானது, யுத்தரங்கத்தில் அம்புக ளால் பீடிக்கப்பட்டு மிகவும் தோல்வி யடைவிக்கப்பட்டதும் ஓடியதும் மிக்கபயமடைந்ததுமாகியது. பெருங்காற்றினால் மேகங்களுடைய கூட்டம்போல அந்த ஸைன்யம் சிதற அடிக்கப்பட்டது. தோல்வி யடைவிக்கப்படுகின்ற அந்த ஸைன்யமானது திரும்பிப் பார்ப்பதற்கும் சக்தியற்றதாகியது. அர்ஜுனனாலே ஹிம்ஸிக்கப்பட்ட உம்மைச் சேர்ந்த குதிரை வீரர்களும் தேராளிகளும் காலாட்களும் தாற்றுக்கோ லாலும், வில்நுனிகளாலும், அதட்டுதல்களாலும், நன்கு சுழற்றப்படும் கசைகளால் பின்புறங்களிலடிப்பதினாலும், உக்ரமான வாக்குக்களா லும், வேகமாகக் குதிரைகளை நடத்திக்கொண்டு ஓடிவிட்டார்கள். சிலர் குதிகால்களாலும் கட்டைவிரல்களாலும் அங்குசங்களாலும் யானை களைநடத்திக்கொண்டு ஓடினார்கள். மற்றுஞ்சிலர் அர்ஜுனனுடைய அம்புகளால் மயக்கமடைந்து அந்த அர்ஜுனனையே எதிர்த்துச்சென் றார்கள். அப்பொழுது உம்முடைய யுத்தவீரர்கள் உத்ஸாஹத்தை யிழந்தவர்களும் விசேஷமாக மனக்குழப்பமுடையவர்களுமானார்கள்" என்று கூறினான்.

---

## தொண்ணூறுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனனிடத்திலிருந்து துச்சாஸனன் தோல்வியடைந்தது.)

த்ருதராஷ்டிரன், "கிரீடியினால் வதம் செய்யப்படுகின்ற அந்த ஸைன்யங்களுடைய முனையானது நன்றாக நாசமாக்கப்பட்டவுடன், அந்த ரணகளத்தில் எந்தவீரர்கள் தனஞ்சயனை எதிர்த்தார்கள்? அல் லது எவர்கள் நிச்சயத்தின்பயனை யிழந்தவர்களாகிச் சகடவியூகத்தில் நுழைந்து துரோணராகிற அரணையடைந்து ஓரிடத்திலிருந்தும் பயத் தையடையாதவர்களாக விருந்தார்கள்?" என்று கேட்க, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"குற்றமற்றவரே! அந்த யுத்தகளத்தில் இந்திரகுமாரனான அர்ஜுனனாலே உம்முடைய படையானது சிறந்த அம்புகளாலே அவ்வாறு அடிக்கடி சின்னபின்னமாக அடிக்கப்பட்டு வீரர்களையிழந்தும் உத்ஸாஹமிழந்தும் ஓடுவதில்நோக்கத்துடனிருக்கும் ஸமயத்தில் அர்ஜுனனை ஒருவனாவது பார்ப்பதற்குச் சக்தியுள்ளவனாகவில்லை. அரசரே! பிறகு, அவ்வாறான நிலைமையையடைந்திருக்கின்ற படையைக்கண்டு உம்முடையகுமாரனான துச்சாஸனன் மிக்ககோபங்கொண்டு யுத்தத்தின் பொருட்டு அர்ஜுனனை எதிர்த்தான். மஹாராஜரே! தங்கத்தினாலான விசித்திரமான கவசத்தினால் நன்றாக மூடப்பட்டவனும் ஸ்வர்ணமயமான தலைப்பாகையுள்ளவனும் சூரனும் கடுமையான பராக்கிரமத்தையுடையவனுமான துச்சாஸனன், பெரியயானைப்படையினாலே இந்தப் பூமியை விழுங்குகிறவன்போலிருந்துகொண்டு ஸவ்யஸாசியைச் சூழ்ந்தான். யானைமணிகளுடைய சப்தத்தினாலும் சங்கங்களுடைய ஓசையினாலும் நாண்கயிற்றை இழுப்பதினாலுண்டான ஒலிகளாலும் யானைகளுடைய பிளிற்றொலியினாலும் பூமி, திக்குக்கள், ஆகாயம் இவைகளெல்லாம் சூழப்பட்டன. பலத்தினால் புகழ்பெற்றவனும் பொன்னிறமுடையவனும் பார்க்க இனியவனும் யுவராஜனுமான அந்தத்துச்சாஸனன் ஒரு முகூர்த்தகாலம் பயங்கரனாகவும் குரூரனாகவும் இருந்தான். அங்குசங்களாலே பகைவனுடைய படையைநோக்கித் தூண்டப்பட்டவையும் வேகமாகவருகின்றவையும் தொங்கிக்கொண்டிருக்கிற துதிக்கையையுடையவையும் ரோஷமுடையவையும் சிறகுகளோடுகூடின மலைகள்போன்றவையுமான அந்த யானைகளைக்கண்டு, புருஷஶ்ரேஷ்டனான அந்தத்தனஞ்சயன் உரத்தஸிம்மநாதத்தோடுகூடியவனாக அப்பொழுது மலைபோலவும் மேகங்கள்போலவும் ப்ரகாசிக்கின்றதும் அநேகங்கொடிகளால் நெருங்கியதும் சத்துருக்களுடையதுமான அந்த யானைக்கூட்டத்தை நான்கு பக்கங்களிலும் அம்புகளால் பிளந்தான். அவன் காற்றினாலே அலைக்கப்பட்டுப் பேரலைகளுள்ள பெருங்கடலில் மகரமென்கிற மீன் ப்ரவேசிப்பதுபோலப் பிரவேசித்தான். சத்துருபட்டணங்களை ஜயிப்பவனான கிரீடியானவன் யுகாந்தகாலத்தில் ஆகாயத்தையடைந்து கொளுத்துகின்ற ஸூர்யன்போல எல்லாத்திக்குக்களிலும் காணப்பட்டான். யுத்த வீரர்களும் யானைகளும், குதிரைகளுடைய குளம்பின் ஓசையினாலும் வண்டியுருளைகளுடைய சப்தத்தினாலும் உரத்தஸிம்மநாதத்தினாலும் நாணொலியினாலும் பலவித வாத்யகோஷங்களாலும் பாஞ்சஜன்யமென்கிற சங்கத்தினுடைய த்வனியினாலும் தேவதத்தமென்கிற சங்கத்தினுடையகோஷத்தினாலும் காண்டீவத்தினுடையடங்காரத்வனியினாலும்

மந்தமானவேகமுள்ளவர்களும் ப்ரஜ்ஞையற்றவர்களுமாயினர். ஸவ்ய ஸாசியினால் ஸர்ப்பம்போன்ற அம்புகளாலே பிளக்கப்பட்டு அந்தயானை கள் சேற்றுக்கடல்களில் அமிழ்ந்தவைபோல மிகவாட்டமுற்றன. வண்டு களாலேமொய்க்கப்பட்டமரங்கள்போலக் கிரீடியினால் காண்டீவமென்கிற தநுஸிலிருந்து லக்ஷக்கணக்காக விடப்பட்டு ஒரேஸமயத்தில் தாக்கி, கனமாத்திரத்தினால் மிகுந்திருக்கின்றவைகளும், இரத்தவெள்ளத்தை யுண்டுபண்ணுகின்றவைகளுமான அனேக அம்புகளாலே வதம்செய்யப் படுகின்ற யானைகள் சிறகுகளறுக்கப்பட்ட பர்வதங்கள்போல் அலறிக் கொண்டு ஒழிவற்றுப் பூமியில் வீழ்ந்தன. மற்றும் சிலயானைகள் தந்த மூலங்களிலும் கும்பஸ்தலங்களிலும் இடுப்புக்களிலும் அம்புகளால் அடிக்கப்பட்டு க்ரௌஞ்ச பக்ஷிகள்போல அடிக்கடி அலறின. யானை களின் கழுத்தின்மீதேறியிருக்கின்ற புருஷர்களுடைய முடிகள் கிரீடி யினால் படிந்த கனுக்களுள்ள அர்த்தசந்திரபாணங்களால் அறுக்கப்பட் டன. பார்த்தன் தாமரைமலர்களின் குவியல்களால் பலிபோடுவதுபோல விழுகின்ற குண்டலங்களோடுகூடின தலைகளின் குவியல்களால் யுத்த பூமியில் பலிபோட்டான். யுத்தரங்கத்தில் சுற்றுகின்ற யானைகளின் மீதுள்ள மனிதர்கள்[1] யந்திரத்தினால் கட்டப்பட்டவர்களும் கவசத்தை இழந்தவர்களும் காயத்தால் துன்பத்தையடைந்தவர்களும் ரக்தத்தி னால் நனைக்கப்பட்டவர்களுமாகத் தொங்கினார்கள். சிலர் நல்ல இறகு களுள்ளதும் நன்றாக விடப்பட்டதுமான ஒரே பாணத்தினால் இரண்டு மூன்றாகப்பிளக்கப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். மலைகள்போன்ற மற்றயானைகள் மதத்தினால் ரோஷமுள்ளவைகளாகித் தம்மீதுஏறியிருக் கின்ற வீரர்களுடன் மரங்களுடன்கூடின மலைகள்போலப் பூமியில் விழுந்தன. பார்த்தன் தேராளிகளுடைய நாண்கயிற்றையும் துவஜத்தை யும் வில்லையும் நுகத்தையும் ஏர்க்காலையும் வணங்கின கனுக்களுள்ள அர்த்தசந்திரபாணங்களால் அறுத்தான். அவன் வட்டமானவில்லுடன் நர்த்தனஞ்செய்பவனாகக் காணப்பட்டானேயொழியப் பாணத்தை ஸந்தானம் பண்ணுகிறவனாகவாவது நாண்கயிற்றை யிழுக்கிறவனாக வாவது பாணங்களை விடுகிறவனாகவாவது அம்புத்தூணியிலிருந்து பாணங்களை எடுக்கிறவனாகவாவது காணப்படவில்லை. அம்புகளாலே மிகவும் அடிக்கப்பட்ட மற்றுமுள்ள யானைகள் வாய்களாலே ரக்தங் களைக்கக்கிக்கொண்டு ஒரு முகூர்த்தகாலத்திற்குள் பூமியில் விழுந்தன. மஹாராஜரே! மிகநெருங்கின அந்த யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் எண்ணிறந்த தலையில்லாமுண்டங்கள் எழுந்தவைகளாகக் காணப்பட்

[1] கீழே விழாமல் காப்பதற்காக அமைத்திருக்கும் முட்டு.

டன. விற்களையுடையவைவும் விரல்களுக்கு ரக்ஷணமாயிருக்கிற தோல் களுடனும் கத்திகளுடனும் தோள்வளைகளுடனும் சேர்ந்தவைவும் ஸ்வர்ணமயமான பூஷணங்களாலே அலங்கரிக்கப்பட்டவையுமான கைகள் அறுக்கப்பட்டு யுத்தபூமியில் காணப்பட்டன. அந்தப்போரில் ஏர்க்கால்களால் அழகியவைவும் நல்ல கருவிகளுள்ளவையுமான தேர் முதலானவைகளாலும் நொருக்கப்பட்ட சக்ரங்களாலும் பலவாறாக முறிக்கப்பட்ட அச்சுக்களாலும் நுகத்தடிகளாலும் கேடகத்தையும் வில்லையும் கையிற்கொண்டு அங்குமிங்குமாகச் சிதறிக்கிடக்கின்ற சூரர் களாலும் மாலைகளாலும் ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலும் விழுந் திருக்கின்ற பெரிய கொடிமரங்களாலும் கொல்லப்பட்டயானைகளாலும் குதிரைகளாலும் தள்ளப்பட்டிருக்கின்ற க்ஷத்ரியர்களாலும் அந்தயுத்த பூமியானது குரூரமானகாட்சியுள்ளதாகக் காணப்பட்டது. மஹாராஜ ரே! கிரீடியினாலே இவ்வாறு வதஞ்செய்யப்படுகிற துச்சாஸனனுடைய ஸைன்யமானது துன்பமடைந்து தலைவர்களுடன் கூடவே புறங்காட்டி யோடியது. இவ்வாறு ஸைன்யமானது வேகமாக ஓடினவுடன், மஹா ரதனான ராஜபுத்திரனை, அர்ஜுனன் பத்துப்பாணங்களினாலடித்து, 'நில்; நில்; நீ எவ்வாறு உயிரோடு போகக்கூடும்? உன்னால் எவ்வளவு கெட்டவசனம் சொல்லப்பட்டதோ அவ்வளவையும் இப்பொழுது நீ நினைக்கிறாயா? அந்த வார்த்தைக்குத்தகுந்த கார்யத்தைச்செய்?' என்று சொன்னான். மஹாராஜரே! அரசர்களை நாசம் செய்கிறவனும அரசனு மான பார்த்தன் இவ்வாறு சொல்லிவிட்டு மிக்ககோபங்கொண்டு உம் முடைய குமாரனை அடித்தான். பிறகு, பாணத்தினால் அடிக்கப்பட்ட துச்சாஸனன் பயந்து ஸைன்யத்துடன் துரோணரை ரக்ஷகராக விரும் பிக்கொண்டு சகடவியூகத்தை நோக்கிச்சென்றான்.

---

## தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் துரோணரோடு போர்செய்து வியூகத்தில் நுழைந்தது.)

மஹாரதனான ஸவ்யஸாசி துச்சாஸனனுடைய ஸேனையை நாசஞ் செய்துவிட்டு ஸிந்துராஜனை எதிர்க்க எண்ணங்கொண்டு, துரோண ருடைய ஸேனைக்கு அருகில் விரைவாகச்சென்றான். அந்த அர்ஜுனன் வியூகத்தினுடைய முகத்தில் நிற்கின்ற துரோணரை வந்தடைந்து கிரு ஷ்ணனுடைய ஸம்மதத்தின்மேல் கைகளைக்குவித்துக்கொண்டு, 'பிராம்

மூணரே! தேவரீர் எனக்கு நன்மையைச் சிந்திக்கவேண்டும். எனக்கு க்ஷேமத்தையுங்கூறும். தேவரீருடைய அனுக்ரஹத்தினாலே, பிளக்க முடியாத படையில் நுழைய விரும்புகிறேன். தேவரீர் எனக்குப்பிதா வைப்போன்றவர். மேலும், தர்மராஜர் தௌம்யர் வாஸுதேவர் ஆகிய இவர்களுக்கும் ஒப்பானவர். இதனை, உண்மையாகத் தேவரீரிடத்தில் சொல்லுகிறேன். ஐயா! தோஷமற்றவரே! ப்ராம்மணோத்தமரே! அஸ்வத்தாமா எவ்வாறு தேவரீரால் ரக்ஷிக்கத்தக்கவரோ அவ்வாறே நானும் எப்பொழுதுமே தேவரீரால் காப்பாற்றத்தக்கவன். நரஸ்ரேஷ்டரே! தேவரீருடைய அனுக்ரஹத்தினாலே நான் யுத்தத்தில் ஸிந்துராஜனைக்கொல்ல விரும்புகிறேன். ப்ரபுவே! என் ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்றும்' என்கிற இவ்வாக்கியத்தைக் கூறினான். அப்பொழுது இவ்வாறு சொல்லியதைக் கேட்ட ஆசார்யர் புன்னகைசெய்துகொண்டு, 'பீபத்ஸுவே! என்னை ஜயிக்காமல் ஜயத்ரதன் உன்னால் ஜயிப்பதற்கு ஸாத்யப்படமாட்டான்' என்று மறுமொழி கூறினார். இவ்வளவு மட்டிலும் சொல்லிவிட்டு, துரோணர் அட்டஹாஸஞ்செய்து ரதத்தையும் குதிரைகளையும் கொடிமரத்தையும் ஸாரதியையுமுடைய அந்த அர்ஜுனன்மீது தீக்ஷ்ணமான அம்புக்கூட்டங்களை இறைத்தார். பிறகு, அர்ஜுனன் துரோணருடையபாணஸமூஹங்களை அம்புகளாலேதடுத்துப் பயங்கரமானஉருவமுள்ள மிக்கமகிமைபொருந்திய அம்புகளாலே துரோணரை நேரில் அடித்தான். அரசரே! அவன் துரோணரிடத்தினின்றும் அனுமதி பெற்று க்ஷத்ரியதர்மத்தைநாடி யுத்தகளத்தில் துரோணரை மறுபடியும் ஒன்பது பாணங்களால் அடித்தான். துரோணர் அந்த அர்ஜுனனுடைய அம்புகளை அம்புகளாலறுத்துக் கிருஷ்ணார்ஜுனராகிய அவ்விருவரையும் விஷாக்நியினுடைய ஜ்வாலைபோல் ஜ்வலிக்கின்ற பாணங்களால் அடித்தார். பாண்டவன் அவருடைய வில்லை அம்புகளால் அறுப்பதற்குவிரும்பினான். மஹாத்மாவான அந்தப்பல்குனன் ஆலோசித்துக் கொண்டிருக்கும்பொழுதே வீர்யமுள்ளவரான துரோணர் மதிமயங்காமல்சீக்ரமாக அம்புகளாலே அவனுடையநாண்கயிற்றை அறுத்தார். வீரரான அவர் புன்சிரிப்புள்ளவராக அர்ஜுனனுடைய குதிரைகளையும் கொடியையும் ஸாரதியையும்அடித்து அவன்மீதும்அம்புகளை நான்குபக்கங்களிலும் இறைத்தார். இதனிடையில் எல்லாஅஸ்திரங்களையும் அறிந்தவர்களுள் உத்தமனான பார்த்தன் பெரிதானவில்லை நாண்பூட்டி ஆசார்யரைக்காட்டிலும் மேற்பட்டவனாகி அறுநூறுபாணங்களை எடுத்து ஒரு பாணம்போல் சீக்ரமாகத்தொடுத்தான். மறுபடியும் தடையற்றவைகளான வேறு எழுநூறுபாணங்களையும் ஆயிரம்பாணங்களையும் பதி

னுயிரக்கணக்கான மற்றும் வேறுபாணங்களையும் தொடுத்தான். அவைகள் துரோணருடைய சேனையை நாசஞ்செய்தன. பலமுள்ளவனும் ஸாமர்த்தியமுடையவனும் விசித்ரமாக யுத்தம்செய்கின்ற திறமையுடையவனுமான அர்ஜுனனாலே நன்கு ப்ரயோகிக்கப்பட்ட அந்தப் பாணங்களாலே மனிதர்களும் குதிரைகளும் யானைகளும் அடிக்கப்பட்டு உயிரையிழந்து விழுந்தன. தேராளிகள் அம்புகளாலே பீடிக்கப்பட்டு ஸாரதியையும் குதிரைகளையும் கொடியையும் இழந்தவர்களாகவும் ஆயுதங்கள் அறுக்கப்பட்டவர்களாகவும் உயிரை இழந்தவர்களாகவும் சிறந்தரதங்களிலிருந்து விரைவாகக் கீழேவிழுந்தார்கள். யானைகள் வஜ்ராயுதத்தினாலும் காற்றினாலும் நெருப்பினாலும் முறையே சூர்ணம் பண்ணப்பட்டும் சிதற அடிக்கப்பட்டும் எரிக்கப்பட்டுமிருக்கின்ற மலைகளுக்கும் மேகங்களுக்கும் வீடுகளுக்குமொப்பான உருவமுள்ளவைகளாகக் கீழேவிழுந்தன. அர்ஜுனனுடைய பாணங்களாலே அடிக்கப்பட்ட ஆயிரக்கணக்கான குதிரைகள் இமயமலையினுடைய சார்பில் வர்ஷதாரா ஜலத்தினால் நன்றாகஅடிக்கப்பட்ட அன்னபக்ஷிகள்போல விழுந்தன. யுகாந்தகாலத்திய ஸூர்யனுடைய கிரணம்போல் பிரகாசிக்கின்ற பாண்டவனுடைய அஸ்திரங்களாலும் பாணங்களாலும் அடிக்கப்பட்ட தேர்கள் குதிரைகள் யானைகள் காலாட்கள் இவைகளுடைய கூட்டங்கள் ஆச்சரியகரமான ஜலப்ரவாஹங்கள்போல் விழுந்தன. யுத்தரங்கத்தில் கௌரவவீரர்களைத் தபிக்கச்செய்கிற பாண்டவனாகிறஸூர்யனுடைய அம்புகளாகிற கிரணங்களின் கூட்டத்தை அந்தத்துரோணராகிற மேகமானது அம்புமழையின் வேகங்களாலே மேகமானது ஸூர்யனுடைய கிரணங்களை மறைப்பதுபோல் மறைத்தது. பிறகு, துரோணர் நன்றாகப்ரயோகிக்கப்பட்டதும் சத்ருக்களுடைய ப்ராணனைப்பருகுகிறதுமான நாராசத்தினாலே தனஞ்சயனை மார்பிலடித்தார். அந்த அர்ஜுனன் பூமி அசையும்போது மலை அசைவதுபோல அசைவுற்ற எல்லா அங்கங்களுமுள்ளவனாகித் தைரியத்தைக் கைப்பற்றிப் பாணங்களால் துரோணரை யடித்தான். துரோணரோ ஐந்து பாணங்களாலே வாஸுதேவரையும் எழுபத்துமூன்று பாணங்களாலே அர்ஜுனனையும் மூன்று பாணங்களால் அவனுடைய கொடியையும் அடித்தார். அரசரே! பராக்ரமசாலியான துரோணர் சிஷ்யனைக்காட்டிலும் மிஞ்சுகிறவராகி ஒரு நிமிஷத்திற்குள் அம்பு மழைகளாலே அர்ஜுனனைக் கண்ணிற்குப் புலப்படாமலிருக்கும்படி செய்தார். துரோணருடைய அம்புகள் தொடர்ச்சியாகவே வந்துகொண்டிருப்பதைக் கண்டோம். மண்டலாகாரமாகவே செய்யப்பட்ட அந்தத் துரோணருடைய வில்லும்

அப்பொழுது அற்புதமாகக் காணப்பட்டது. மன்னரே! துரோண ரால் தொடுக்கப்பட்டவையும் கழுகிறகுகள் பூண்டவையுமான அநேக அம்புகள் யுத்தபூமியில் வாஸுதேவரையும் தனஞ்சயனையும் நோக்கி எதிர்த்து வந்தன. பார்த்தன் பாலனாயிருந்தும் வயதினால் முதிர்ந்த வீரான துரோணரைப் பலத்தினால் மிஞ்சாமலிருந்ததை நாங்கள் மலைகளி னுடைய ஸஞ்சாரத்தைப்போல் ஆச்சர்யமாகக் கண்டோம். விருஷ்ணி குலத்தில் தோன்றினவரான ஸ்ரீகிருஷ்ணர் துரோணருடைய பராக்ரமத் தைக்கண்டு, 'மஹாஸமுத்திரம் எவ்வாறு கரையைத் தாண்டிச் செல்ல மாட்டாதோ அவ்வாறே அர்ஜுனன் இந்தத் துரோணரை மீறிச் செல் லப்போகிறதில்லை' என்று எண்ணினார். பிறகு, அச்சுதரும் மதுவென்கிற அஸுரனை நாசஞ்செய்தவரும் உதாரமான புத்தியையுடையவருமான வாஸுதேவர் பார்த்தனுடைய கலக்கத்தையும் துரோணருடைய பரா க்ரமத்தையும் பார்த்துக் கவலையுற்றுத் தனஞ்சயனைநோக்கி, 'மிக்க பாஹுபலமுள்ளவனே! ஓ! பார்த்த! பார்த்த! நமக்குக் காலவிளம் பம்கூடாது. துரோணரைவிட்டு நாம் செல்வோம். இவர் பிராம்மணர்; சிரமமடையாதவர்' என்று கூறினார். பார்த்தனும் அவரைப்பார்த்து, 'இஷ்டப்பிரகாரம் செய்கிறேன்' என்று சொன்னான். பிறகு, பீபத் ஸுவானவன் புஜபலமுடையவரான துரோணரை ப்ரதக்ஷிணம்செய்து (அவரிடத்திலிருந்தும்) திரும்பி (கௌரவஸேனைகளின் மீது) பாணங் களை ப்ரயோகித்துக்கொண்டு சென்றான். பிறகு, துரோணர், 'பாண்டவ! எங்கே போகிறாய்? யுத்தத்தில் சத்துருவை ஜயிக்காமல் நீ திரும்புகிற தில்லையல்லவா' என்று சொல்ல, அர்ஜுனன், 'தேவரீர் எனக்கு ஆசார் யர்; சத்துருவல்லீர்; யான் தேவரீருக்குச் சிஷ்யன்; உம்முடைய குமார ருக்குச் சமானனாகவிருக்கிறேன். தேவரீரை யுத்தத்தில் தோல்வி யடையும்படி செய்யக்கூடிய மனிதன் உலகத்தில் ஒருவனுமில்லை'என்று கூறினான். ஜயத்ரதனுடைய வதத்தில் ஆவலுடையவனும் மிக்க பாகு பலமுடையவனுமான பீபத்ஸுவானவன் இவ்வாறு சொல்லிக் கொண்டே விரைவுடன் உம்முடைய ஸைந்யத்தைக்குறித்து ஓடினான். உம்முடைய படையில் பிரவேசிக்கின்ற அந்த அர்ஜுனனை அதிக மனோதைர்யமுள்ளவர்களும் ஸேனாரக்ஷகர்களும் பாஞ்சாலராஜகுமாரர் களுமான யுதாமன்யு உத்தமௌஜஸ் இருவரும் பின்தொடர்ந்தார்கள். மஹாராஜரே! பிறகு, தனஞ்சயனை ஜயனும் ஸாத்வதனான க்ருதவர்மா வும் காம்போஜனும் ஶ்ருதாயுவும் தடுத்தார்கள். அவர்களைப்பின் தொடர்ந்துவருகின்ற பதினாயிரம் ரதிகர்களும் அபீஷாஹர்களும் சூரஸேனர்களும் சிபிகளும் வஸாதிகளும் மாவேல்லகர்களும் லலித்தர்

களும் கேகயர்களும் மத்ரகர்களும் நாராயணர்களும் கோபாலர்களும் கர்ணனால் முந்தி யுத்தத்தில் ஜயிக்கப்பட்டவைகளும் சூரர்களால் ஸம்மதிக்கப்பட்டவைகளுமான காம்போஜர்களுடைய கூட்டங்களும் பாரத்வாஜரை முன்னிட்டுக்கொண்டு மனமகிழ்ச்சியுடன், புத்திரசோகத்தால் வாட்டமுற்றவனும் முடிவைச்செய்கின்ற யமன்போலக் கோபங்கொண்டவனும் நெருங்கின யுத்தத்தில் பிராணனை விடத்துணிந்தவனும் ஸன்னாஹமுள்ளவனும் விசித்ரமாக யுத்தஞ்செய்யுந் தன்மையுடையவனும் யூதபதியான யானைபோல ஸைன்யங்களில் ப்ரவேசிக்கின்றவனும் மஹாவில்லாளியும் பராக்ரமமுள்ளவனும் நரஶ்ரேஷ்டனுமான அந்த அர்ஜுனனை எதிர்த்தார்கள். பிறகு, பரஸ்பரம் எதிர்க்க விரும்புகிறவர்களான கௌரவயுத்தவீரர்களுக்கும் அர்ஜுனனுக்கும் கைகலந்ததும் மயிர்சிலிர்த்தலை யுண்டுபண்ணக்கூடியதுமான யுத்தம் ஆரம்பித்தது. ஜயத்ரதனுடைய வதத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணத்துடன் வருகின்ற புருஷஶ்ரேஷ்டனான அர்ஜுனனை விருத்தியடைந்திருக்கிற வியாதியைச் சிகித்ஸைகள் தடுப்பதுபோல ஒன்று சேர்ந்து தடுத்தார்கள்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் சுருதாயுதனையும் ஸுதக்ஷிணனையும் கொன்றது.)

மஹாபலபராக்ரமசாலியும் ரதிகர்களுள் உத்தமனுமான பார்த்தன் அவர்களால் தடுக்கப்பட்டவனும் துரோணரால் அதிசீக்ரமாகப்பின்தொடரப்பட்டவனுமாகி ஸூர்யன் தீக்ஷ்ணமான கிரணங்களை இறைப்பதுபோலத் தீக்ஷ்ணமான பாணஸமூஹங்களை இறைத்துக்கொண்டு வியாதிகளுடைய கூட்டமானது தேகத்தை வருத்துவதுபோல அந்த ஸேனையைத் தபிக்கும்படி செய்தான். குதிரைகள் அடிக்கப்பட்டன. தேர்கள் உடைக்கப்பட்டன. யானைவீரர்களோடுயானைகளும் தள்ளப்பட்டன. குடைகள் புரட்டித்தள்ளப்பட்டன. தேர்கள் சக்கரங்களற்றவையாகச் செய்யப்பட்டன. சேனைகள் அம்புகளால் அடிக்கப்பட்டு நான்கு பக்கங்களிலும் ஓடிவிட்டன. இவ்வாறு கைகலந்தயுத்தம் நேர்ந்தது. ஒன்றும் அறியப்படவில்லை. அரசரே! யுத்தத்தில் அம்புகளாலே ஒருவரை ஒருவர் அடக்குபவர்களான அவர்களுடையசேனையை அர்ஜுனன் அடிக்கடி மிகநடுங்கும்படி செய்தான். ஸத்ய ப்ரதிஜ்ஞை

யுடையவனும் வெண்மையான குதிரைகளை யுடையவனுமான அர்ஜுனன் ப்ரதிஜ்ஞையை உண்மையாகச் செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு சிவப்புக்குதிரைகளுள்ளவரும் ரதிகர்களுள் ஶ்ரேஷ்டருமான துரோணரை எதிர்த்தான். ஆசார்யரான துரோணர் சிறந்த வில்லாளியும் சிஷ்யனுமான அந்த அர்ஜுனனை மர்மஸ்தானங்களைப் பிளக்கின்ற இருபத்தைந்து பாணங்களால் அடித்தார். ஆயுததாரிகளனைவருள்ளும் சிறந்த பீபத்ஸுவானவன் பாணவேகங்களைத்தடுக்கின்ற அம்புகளைத் தொடுத்துக்கொண்டு சீக்கிரமாக அவரை எதிர்த்து ஓடினன். வேகமாகத்தொடுக்கின்ற அந்த அர்ஜுனனுடைய பல்லங்களை, மனத்தினுலெண்ணமுடியாத பராக்ரமத்தையுடைய துரோணாசாரியர் பிரம்மாஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு கணுக்கள்பதிந்த பல்லங்களாலே திருப்பியடித்தார். யுவாவாயிருக்கிற அர்ஜுனன் முயற்சிசெய்தும் யுத்தரங்கத்தில் இந்தத் துரோணாசாரியரைத் திருப்பியடிக்கச் சக்தியற்றவனுனமையால் துரோணருடைய அப்படிப்பட்ட (அஸ்திரத்)தேர்ச்சியை ஆச்சர்யமாகக்கண்டோம். ஆயிரக்கணக்காக நீர்த்தாரைகளைப்பொழிகின்ற மஹாமேகம்போலத் துரோணரென்கிற மேகமானது பாணவர்ஷங்களை அர்ஜுனனுகிற மலையின்மீது வர்ஷித்தது. வீர்யமுடையவனுன அர்ஜுனன் பரபரப்பில்லாதவனுய் அந்த அம்புமழையை அம்புமழையினுல் தடுத்தான். ஆசார்யரைமாத்திரம் ஹிம்ஸிக்கவில்லை. துரோணரோ இருபத்தைந்துபாணங்களாலே சுவேதவாஹனனையும் எழுபதுபாணங்களாலே ஸ்ரீவாஸுதேவரையும் இருகைகளிலும் மார்பிலும்அடித்தார். புத்திசாலியான அந்தப் பார்த்தனே அட்டஹாஸஞ்செய்துகொண்டு பாணஸமூகமுள்ளவரும் கூர்மையான பாணங்களை விடுகின்றவருமான அந்தத் துரோணாசாரியரை யுத்தத்தில் தடுத்தான். பிறகு, துரோணராலே பீடிக்கப்படுகிறவர்களும் ரதிகர்களுள் சிறந்தவர்களுமான அவ்விருவரும், ஜயிக்க முடியாதவரும் ஊழித்தீப்போல் எழுந்து நிற்பவருமான அந்தத் துரோணாசாரியரை விட்டு விலகினுர்கள். பிறகு, கிரீடத்தையும் மாலையையும் அணிந்தவனுன கௌந்தேயன் துரோணருடைய வில்லிலிருந்து விடப்படும் கூர்மையான அம்புகளை விட்டுவிட்டு, போஜஸைன்யத்தில் நுழைந்தான். அந்த அர்ஜுனன் மைனுகம் என்கிற மலைபோன்ற துரோணரை விட்டுவிட்டுக் கிருதவர்மாவுக்கும் காம்போஜனுன ஸுதக்ஷிணனுக்கும் இடையில் நின்று அவர்களை எதிர்த்தான். பிறகு, புருஷஶ்ரேஷ்டனுன க்ருதவர்மா பயமற்றவனுகி ஜயிக்கமுடியாதவனும் குருகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமனுமான அர்ஜுனனைக் கழுகிறகுகள் கட்டின பத்துப்பாணங்க

ளாலே சீக்கிரமாக அடித்தான். அரசரே! அர்ஜுனன் அவனை யுத்தத்தில் நூறுபாணங்களால் அடித்தான். மறுபடியும் அவனை மூர்ச்சையடைவிக்கும்படி மூன்று பாணங்களால் அடித்தான். அந்தப் போஜனோ அட்டஹாஸஞ் செய்துகொண்டு பார்த்தனையும் மாதவரான ஸ்ரீவாஸுதேவரையும் தனித்தனி இருபத்தைந்து இருபத்தைந்து பாணங்களால் அடித்தான். அர்ஜுனன் அந்தப் போஜனதுவில்லை அறுத்து நெருப்பு ஜ்வாலைக் கொப்பானவைகளும் கோபத்தோடுகூடிய ஸர்ப்பங்கள்போன்றவைகளுமான இருபத்தொரு பாணங்களாலே அவனை அடித்தான். பாரதரே! பிறகு, மஹாரதனான கிருதவர்மா வேறுவில்லை எடுத்து ஐந்து பாணங்களாலே விரைவாக (அர்ஜுனனுடைய) மார்பிலடித்தான். மறுபடியும் கூர்மையுள்ள ஐந்து பாணங்களாலே அவனையடித்தான். பார்த்தன் அவனை ஒன்பது பாணங்களாலே மார்பிலடித்தான். கிருதவர்மாவினுடைய ரதத்தைநாடிக் கௌந்தேயன் எதிர்த்து நிற்பதைக் கண்டு விருஷ்ணிகுலத்தில் தோன்றின ஸ்ரீ கிருஷ்ணர், நமக்குக் காலநாமதம் ஆகக்கூடாதென்று ஆலோசித்தார். பிறகு, அவர் பார்த்தனைக்குறித்து, 'கிருதவர்மாவினிடத்தில் தயைபாராட்டாதே; ஸம்பந்தத்தைமுற்றிலும்விட்டு இவனை நன்கு அடித்து நாசம்செய்' என்று கூறினார். பிறகு, அந்த அர்ஜுனன் கிருதவர்மாவைப் பாணங்களால் மூர்ச்சை அடையும்படிசெய்துவிட்டு வேகமுள்ள குதிரைகளுடன் காம்போஜர்களுடைய சேனையை எதிர்த்துச்சென்றான். வெண்மை நிறமுடைய குதிரைகளையுடைய அர்ஜுனன் பிரவேசித்தவுடன், ஹ்ருதிகபுத்ரனான க்ருதவர்மா கோபமுண்டு பாணங்களுடன்கூடினவில்லில் நாணொலியை உண்டுபண்ணிக்கொண்டு பாஞ்சாலராஜ குமாரர்களோடு யுத்தத்துக்காக எதிர்த்தான். ஸேனைகளுக்கு ரக்ஷகர்களும் அர்ஜுனனைப் பின்தொடர்ந்து வருகின்றவர்களுமான பாஞ்சால்யர்களைக் கிருதவர்மா ஸமீபத்திலிருந்து விடப்படுகிற அம்புகளால் தடுத்தான். பிறகு, போஜகுலத்தில் தோன்றினவனான கிருதவர்மா கூர்மையுள்ள மூன்று அம்புகளால் யுதாமன்யுவையும் நான்குபாணங்களால் உத்தமௌஜஸையும் அடித்தான். அவ்விருவரும் இந்தக் கிருதவர்மாவைப் பப்பத்துப் பாணங்களால் அடித்தார்கள். யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் மூன்றுமூன்று பாணங்களால் அவனுடைய கொடியையும் வில்லையும் அறுத்தார்கள். பிறகு, ஹார்த்திக்கியன் கோபமுண்டு வேறுவில்லை எடுத்து வீரர்களான பாஞ்சால்யர்களை வில்லை இழந்தவர்களாகச்செய்து அம்புமழைகளைப் பொழிந்தான். அவ்விருவர்களும் வேறு இரண்டு விற்களில் நாணேற்றிப் போஜனை அடித்தார்கள். பீபத்ஸுவானவன் அந்த

ஸமயத்தில் சத்துருக்களுடைய ஸேனையில் நுழைந்தான். புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவர்மாத்திரம் கிருதவர்மாவினால் தடுக்கப்பட்டு முயற்சிசெய்தும் கௌரவசேனைகளில் பிரவேசிக்க இடைவெளியைப் பெறவில்லை. சத்துருக்களை நாசஞ்செய்கின்ற அர்ஜுனன் விரைந்து ஸைன்யங்களை நாசம்செய்துகொண்டு, தன்னிடம் அகப்பட்டவனாயிருந்தும் கிருதவர்மாவைக் கொல்லவில்லை. அவ்விதம் வருகின்ற அந்த அர்ஜுனனைப்பார்த்துச் சூரனான சுருதாயுதன் என்கிற அரசன் மிக்ககோபங்கொண்டு பெரியவில்லை அசைத்துக்கொண்டு எதிர்த்து வந்தான். அந்தஶ்ருதாயுதன் மூன்று பாணங்களால் பார்த்தனையும் எழுபதுபாணங்களால் ஜநார்த்தனரையும் மிக்கதீக்ஷ்ணமான க்ஷுரப்ரம் என்கிற ஆயுதத்தினால் பார்த்தனுடைய கொடியையும் அடித்தான். பிறகு, அர்ஜுனன் மிக்க கோபங்கொண்டு பெரிய யானையை ஈட்டிகளால் குத்துவதுபோல உட்படிந்த கணுக்களுள்ள தொண்ணூறு பாணங்களாலே சுருதாயுதனை அடித்தான். இறைவரே! அந்தச் சுருதாயுதன் பாண்டுகுமாரனான அர்ஜுனனுடைய அந்தப் பராக்ரமத்தைப் பொறுக்கவில்லை. பிறகு, அந்த அர்ஜுனன்மீது எழுபத்தேழு நாராசங்களைப் பிரயோகித்தான். அர்ஜுனன் கோபங்கொண்டு அவன் வில்லைவெட்டித் தூணியையும் அறுத்து உட்படிந்த கணுக்களுள்ள ஏழுபாணங்களாலே மார்பிலடித்தான். பிறகு, அந்தஅரசன் கோபமூண்டவனாகி வேறுவில்லையெடுத்து ஒன்பது பாணங்களை இந்திரகுமாரனான அர்ஜுனனுடையமார்பின் மீது எய்தான். பாரதரே! பிறகு, பகைவர்களை அடக்குகிறவனான அர்ஜுனன் புன்னகைசெய்துகொண்டே அநேகமாயிரம் அம்புகளாலே சுருதாயுதனைத் துன்பமடையும்படி செய்தான். மிக்க பலவானும் மஹாரதிகனுமான அந்த அர்ஜுனன் எழுபதுபாணங்களாலே அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் சீக்ரமாகக்கொன்று அவனையும் அடித்தான். வீர்யமுள்ளவனான அந்தச் சுருதாயுதனென்கிற அரசன் குதிரையையிழந்த ரதத்தைவிட்டு ஒருகதாயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு யுத்தரங்கத்தில் பார்த்தனை எதிர்த்து வந்தான். வீர்யமுடையவனான அந்தச் சுருதாயுதனென்கிற அரசன் வருணனுடைய குமாரன். அந்தச்சுருதாயுதனுக்குக் குளிர்ந்த ஜலமுள்ள பர்ணாசையென்கிற மஹாநதியானவள் தாய். வேந்தரே! அந்தச்சுருதாயுதனுடைய தாயானவள் புத்திரன் நிமித்தமாக வருணனைப்பார்த்து, 'என் குமாரன் உலகத்தில் சத்துருக்களால் கொல்லத்தகாதவனாக வேண்டும்' என்று வேண்டினாள். வருணன் ஸந்தோஷமடைந்து, 'எந்த அஸ்திரத்தினாலே உன்னுடைய புத்திரன் கொல்லத்தகாதவனாவனோ அப்படிப்பட்ட ஹிதமான திவ்யாஸ்திரத்

தை அவனுக்கு வரமாக யான் கொடுக்கிறேன். நதிகளுள் சிறந்தவளே! மனிதனுக்கு எவ்விதத்தாலும் மரணமடையாமலிருக்கும் தன்மை கிடையாது; பிறப்பையுடைய அனைத்தும் அவசியம் மரிக்கத்தக்கது. ஆனால், இந்தக்குமாரன் ரணகளங்களில் இந்த அஸ்திரமஹிமையினால் எப்பொழுதும் சத்துருக்களால் ஜயிக்கத்தகாதவனாகப் போகிறான். உன் மனத்திலுள்ள கவலையானது விலகட்டும்' என்று சொன்னான். இவ்விதம் சொல்லி வருணன், சுருதாயுதன் எந்தக் கதையைப்பெற்று எல்லாவுலகங்களிலும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவனானானோ அவ்வித மான கதையை அவனுக்கு மந்திரோபதேசத்தை முன்னிட்டுக் கொடுத் தான். மறுபடியும், பகவானும் ஜலாதிபதியுமான வருணன் இந்தச் சுருதாயுதனை நோக்கி, 'பிரபுவே! இந்தக்கதாயுதமானது யுத்தஞ்செய் யாதவன்மேல் விடத்தக்கதன்று. (விட்டால்) அதுஉன்மேலேயேவிழும். இந்தக் கதையானது யுத்தஞ்செய்யாதவன்மீது பிரயோகிக்கப்பட் டால் பிரயோகிக்கிறவனையே திருப்பிக்கொல்லும்' என்று சொன் னான். அந்தச்சுருதாயுதன் ஸமயம் நேர்ந்திருக்கும் காலத்தில் அந்தப் பிதிருவாக்யத்தைப் பரிபாலனஞ் செய்யவில்லை. அவன் வீரர்களைக் கொல்லுகிற அந்தக் கதையினால், ஜநார்த்தனரை அடித்தான். வீர்ய முடையவரான ஸ்ரீகிருஷ்ணர் தமது பருத்ததோளினால் அதனை ஏற்றுக் கொண்டார். காற்றானது விந்தியமலையை அசைக்காததுபோல அந்தக் கதாயுதமானது சௌரியை அசைக்கவில்லை. பிறகு, பாண்டுகுமாரனான அர்ஜுனன் இரண்டுக்ஷுரப்ரங்களால் பரிகங்களுக்குச்சமமானவருண குமாரனுடைய இருகைகளையும் சீக்ரமாக அறுத்தான். எரிநக்ஷத்திரம் போல் ஜ்வலிக்கின்ற அந்தக் கதாயுதமானது ஜநார்த்தனரையடைந்து துர்மந்திரத்தினாலே வசப்படுத்தப்படுகின்ற பிசாசுபோல மஹாவேகத் தோடு திரும்பிவந்து ரோஷமுள்ளவனும் நிற்கின்றவனும் வீரனுமான சுருதாயுதனைக் கொன்றுவிட்டது. பலவானான அந்தச் சுருதாயுதன் தலையை இழந்து கைகளை இழந்து கொல்லப்பட்டவனாகிக் காற்றினாலே நன்றாக முறிக்கப்பட்ட அநேகம் கிளைகளுள்ள மரம்போலப் பூமியில் விழுந்தான். அதிகமாகப்பிரகாசிக்கின்றதும் ஜ்வாலைகளுள்ளதும் வஜ்ரா யுதத்தினுடைய வேகத்திற்குச்சமமான வேகத்தோடுகூடியதுமான அந்தக்கதையானது வீரனான சுருதாயுதனைக்கொன்று பூமியையடைந் தது. கதாயுதம் திரும்பினதையும் பகைவர்களை அடக்குகிறவனான சுருதாயுதன் அஸ்திரத்தினால் கொல்லப்பட்டதையும்கண்டு அவ்விடத்தி லுள்ள ஸைன்யங்களுக்குப் பெரிய ஹாஹாகாரமுண்டாகியது. மன்ன ரே! சுருதாயுதனாலே யுத்தம் செய்யாமலிருக்கின்ற கேசவர்மீது கதா

யுதமானது எறியப்பட்டதனால், அஃது அவனையே கொன்றது. எவ்வித மாக வருணனால் சொல்லப்பட்டதோ அவ்விதமே அவன் யுத்தத்தில் எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நாசத்தை அடைந்து உயிரைவிட்டுப் பூமியில் விழுந்தான். கீழேவிழுகின்ற பர்ணா சையினுடைய பிரியபுத்திரனை அந்தச்சுருதாயுதன், காற்றினால் நன்றாக முறிக்கப்பட்ட அநேகம் கிளைகளுள்ள மரம்போல் விளங்கினான். பிறகு, சத்துருக்களை அடக்குகிறவனான அவன் கொல்லப்பட்டதைக் கண்டு எல்லாச்சேனைகளும் சேனைத்தலைவர்களும் நான்குபுறத்திலும் ஓடினார்கள். பிறகு, காம்போஜராஜனுடைய குமாரனும் சூரனுமான ஸுதக்ஷிணன் வேகமுள்ள குதிரைகளோடு பகைவர்களைக்கொல்லு கின்ற பல்குனனைக்குறித்து எதிர்த்து வந்தான். பாரதரே! பார்த்தன் அந்த ஸுதக்ஷிணன்மீது ஏழுபாணங்களைப் பிரயோகித்தான். அவை அந்தச்சூரனைப் பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தன. யுத்தத்தில் காண்டீவத்தினின்றும் விடப்படுகின்ற கூர்மையான பாணங்களாலே நன்றாக அடிக்கப்பட்ட அந்த ஸுதக்ஷிணன், கழுகிறகுகளுள்ள பத்துப்பாணங்களாலே அர்ஜுனனைத் திருப்பியடித்தான். ஐயா! அந்த ஸுதக்ஷிணன் மூன்றுபாணங்களால் வாஸுதேவரையும் ஐந்து பாணங்களால் பார்த்தனையும் மறுபடியும் அடித்தான். பாண்டுகுமாரனான பார்த்தன் மிக்க கூர்மையான அர்த்தசந்திர பாணங்களாலே அவனுடைய வில்லையும் கொடியையும் அறுத்து அவனையும் அடித்தான். அந்த ஸுதக்ஷிணனோ மூன்றுபாணங்களால் பார்த்தனையடித்துப் பிறகு ஸிம்மநாதம் செய்தான். கோபமுள்ளவனும் சௌர்யமுள்ளவனுமான ஸுதக்ஷிணன் காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனன் மீது முழுதும் இரும்பினால் செய்ததும் மணிகள் கட்டியதும் குரூரமாயுள்ளதுமான சக்தியைப் பிரயோகஞ்செய்தான். பெரிய எரிநக்ஷத்திரம்போல் ஜ்வலிக்கின்ற அந்தச்சக்திஆயுதமானது நெருப்புப்பொறிகளுடன்கூடி மஹாரதனான அந்த அர்ஜுனனையடைந்து அவனைப் பிளந்துகொண்டு பூமியில் விழுந்தது. சக்தியாயுதத்தால் நன்றாக அடிக்கப்பட்டு மிகுந்த மூர்ச்சையடைந்த மஹாதேஜஸ்வியான அந்தப்பார்த்தன் நன்றாகத்தேறுதலடைந்து இரண்டு கடைவாய்களையும் நாக்கினால் நக்கிக்கொண்டு நினைத்தற்கரிய பராக்கிரமத்தோடு கழுகிறகுகள் கட்டிய பதினான்குபாணங்களாலே குதிரைகளோடும் கொடியோடும் வில்லோடும் ஸாரதியோடும்கூடின அந்த ஸுதக்ஷிணனை அடித்து மற்றும் அநேக பாணங்களாலே அவனுடைய ரதத்தையும் துண்டுதுண்டாகச் செய்தான். பாண்டவன், எண்ணமும் பயனும் வீணாகிவிட்ட காம்போஜ

ராஜகுமாரனை அந்த ஸுதக்ஷிணனைப் பெரிய முனையுள்ள ஓர் அம்பி னல் மார்பிலடித்தான். சூரனை அந்த ஸுதக்ஷிணன் கவசமுடைந்து அங்கங்கள் சரிந்து கிரீடமும் தோள்வளைகளும் நழுவி யந்திரத்தினல் கீழேதள்ளப்பட்ட இந்திரத்வஜம்போல எதிரேவிழுந்தான். வஸந்த காலத்தில் மலையுச்சியில் முளைத்திருக்கின்றதும் நல்ல காந்தியுடைய தும் நல்ல கிளைகளுள்ளதும் உறுதியாக நிலைத்திருப்பதுமான கர்ணி கார (கோங்கு)விருக்ஷமானது காற்றினல்ஒடிக்கப்பட்டுக் கீழேவிழுவது போல ஸுதக்ஷிணராஜன் பெரியகைகளை விரித்துக்கொண்டு விழுந்து சிதறினன். காம்போஜ தேசத்திலுண்டான உயர்ந்தவிரிப்புக்களில் படுக் கத்தக்கவனும் மிகச்சிறந்த ஆபரணங்களுள்ளவனுமான ஸுதக்ஷிணன் அடிக்கப்பட்டுப் பெரியதாழ்வரைகளோடுகூடின மலைபோலப் பூமியில் படுத்தான். மிக்கஅழகுள்ளவனும் சிவந்தகண்களுள்ளவனுமான அந்தக் காம்போஜராஜகுமாரனை ஸுதக்ஷிணன் பார்த்தனல் கர்ணியென்கிற பாணத்தினல் அடித்துத்தள்ளப்பட்டான். மிக்ககைவன்மையுள்ளவ னும் பிராணனையிழந்தவனும் பூமியில் தள்ளப்பட்டவனுமான அந்த ஸுதக்ஷிணன் அக்னிபோன்றதும் பொன்மயமுமான மாலையைச் சிர ஸில்தரித்தவனகப் பிரகாசித்தான். சுருதாயுதனும் காம்போஜராஜனை ஸுதக்ஷிணனும் கொல்லப்பட்டதுகண்டு உமது புத்திரனுடைய எல் லா ஸைனிகர்களும் ஓடினர்கள்.

---

## தொண்ணூற்றுமூன்றுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் சுருதாயுஸ்முதலானவர்களைக் கொன்றது.)

அரசரே! ஸுதக்ஷிணனும் வீரனை சுருதாயுதனும் கொல்லப் படவே, உம்முடைய ஸைனிகர்கள் கோபங்கொண்டு பார்த்தனைநோக்கி வேகத்தோடு எதிர்த்துச் சென்றர்கள். மன்னரே! பிறகு, அபீஷா ஹர்களும் சூரஸேனர்களும் சிபிகளும் வஸாதிகளும் அர்ஜுனன்மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். பாண்டவன் அந்தப்பகைவர்களுள் வேறு ஆறுயிரம் வீரர்களை அம்புகளாலே நாசஞ்செய்தான். அவர்கள் புலியினிடத்திலிருந்து அல்பமிருகங்கள்பயந்துஓடுவதுபோலப் பயந்து ஓடினர்கள். பகைவர்களை யுத்தரங்கத்தில் கொல்லுகின்றவனும் சத் துருக்களை யுத்தத்தில் ஜயிக்கக்கருதியவனுமான பார்த்தனை அவர் கள் மறுபடியும் திரும்பிவந்து நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்

டார்கள். தனஞ்சயன் எதிர்த்துவருகின்ற அந்தச் சத்துருக்களுடைய தலைகளையும் கைகளையும் காண்டீவத்தினின்றும் விடப்பட்ட அம்புகளாலே விரைவில் தள்ளினான். அவ்விடத்தில் தள்ளப்பட்ட தலைகளாலே யுத்தபூமியானது இடைவெளியற்றதாயிற்று. காக்கை கழுகுகளுடைய கூட்டங்களாலே யுத்தரங்கத்தில் மேகங்களுடைய நிழல்போன்ற நிழலுண்டாகியது. அவர்கள் நாசம்பண்ணப்படுகையில் சுருதாயுவும் அச்ருதாயுவும் கோபமும் பொறுமையும் கொண்டு தனஞ்சயனோடு போர்புரிந்தார்கள். பலசாலிகளும் பகைவரை அவமானப்படுத்தும் எண்ணமுள்ளவர்களும் வீர்யமுள்ளவர்களும் நற்குலத்தில் பிறந்தவர்களும் புஜபலமுள்ளவர்களுமான அவ்விருவரும் இந்த அர்ஜுனன்மீது பாண வர்ஷங்களை இடமாகவும் வலமாகவும் பொழிந்தார்கள். மஹாராஜரே! விரைவுள்ளவர்களும் பெரியபுகழை விரும்புகின்றவர்களும் உம்முடைய புத்திரன் நிமித்தமாக அர்ஜுனனுடைய வதத்தை விரும்புகின்றவர்களும் சிறந்த வில்லாளிகளுமான அவ்விருவரும் கோபங்கொண்டு தடாகத்தை இரண்டு மேகங்கள் நிரப்புவதுபோலப் படிந்தகணுக்களுள்ள ஆயிரம் பாணங்களாலே அர்ஜுனனை நிரப்பினார்கள். பிறகு, ரதிகர்களுள் ச்ரேஷ்டனான சுருதாயு கோபங்கொண்டு துவைக்கப்பட்டதும் கூர்மையுள்ளதுமான தோமரத்தினால் தனஞ்சயனை அடித்தான். பகைவர்களைக்கொல்லுகிற அந்த அர்ஜுனன் வலிமையுள்ள சத்துருவினால் நன்றாக அடிக்கப்பட்டு ரணகளத்தில் கேசவரையும் மோகிக்கும்படிசெய்துகொண்டு மிக்க மூர்ச்சையை அடைந்தான். இதே ஸமயத்தில் மஹாரதனான அந்த அச்ருதாயு மிக்க கூர்மையுள்ள சூலாயுதத்தினாலே பாண்டவனை யடித்தான். அந்த அச்ருதாயு மஹாத்மாவான பாண்டவனுக்குப் புண்ணில் காரத்தை விடுகிறதுபோலச் செய்தான். பார்த்தனும் நன்றாக அடிக்கப்பட்டுக் கொடிமரத்தில் சாய்ந்தான். பூமிபாலரே! பிறகு, தனஞ்சயன் கொல்லப்பட்டானென்று எண்ணி உம்முடைய எல்லா ஸைனிகர்களும் மிக்க ஸிம்மநாதத்தைச் செய்தார்கள். கிருஷ்ணரும் பிரஜ்ஞையை இழந்த பார்த்தனைக்கண்டு அதிக மனவருத்தமடைந்து அந்த ஸமயத்தில் அவனை மிக்க இன்பமான வார்த்தைகளால் ஸமாதானப்படுத்தினார். பிறகு, ரதிகர்களுள் ச்ரேஷ்டர்களும் அஸ்திரவித்தையில் தேர்ச்சியுள்ளவர்களுமான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் தனஞ்சயனையும் விருஷ்ணிகுலத்தில் தோன்றியவரான ஸ்ரீ வாஸுதேவரையும் நான்குபக்கங்களிலும் அம்பு மழைகளாலே சக்கரங்களோடும் கூபரத்தோடும் ரதத்தோடும் குதிரைகளோடும் கொடிமரத்தோடும் கொடிச்சீலையோடும் கண்ணிற்குப்புலப்படாதபடி செய்தார்கள்.

அது ஆச்சரியமாயிருந்தது. பாரதரே! பீபத்ஸுவானவன் யமபட்டணம்போய் மறுபடியும் மீண்டுவந்தவன்போல மெள்ளமூர்ச்சைதெளிந்து தேறுதலை யடைந்தான். பிறகு, மகாரதனான அவன் பாணஸமூஹத்தால் கேசவரோடு ரதமானது மூடப்பட்டிருப்பதையும் ஜ்வலிக்கின்ற நெருப்பைப்போல் பகைவர்கள் எதிரில் பிரகாசிப்பதையும் கண்டு, ஐந்திராஸ்திரத்தைப் பிரயோகம்செய்தான். அந்த ஐந்திராஸ்திரத்திலிருந்து பதிந்தகணுக்களுள்ள அம்புகள் ஆயிரக்கணக்காகத் தோன்றின. பார்த்தனுடைய வில்லிலிருந்து புறப்பட்ட அந்த அம்புகள் அந்தச் சிறந்த வில்லாளிகளையும் அவர்களால்விடப்பட்ட அம்புகளையும் நாசஞ்செய்துவிட்டு ஆகாயத்தில் ஸஞ்சரித்தன. பாண்டவன் பாணவேகத்தினால் அம்புகளை விரைவாகத் திருப்பியடித்துவிட்டு அந்த அந்தஇடங்களில் மஹாரதர்களைஎதிர்த்து யுத்தஞ்செய்துகொண்டே புறப்பட்டான். அவ்விருவரும் பல்குனனுடைய அம்புக்கூட்டங்களாலே கைகளையும் தலைகளையும் இழந்தவர்களாகச் செய்யப்பட்டுக் காற்றினால் முறிக்கப்பட்ட மரங்கள்போலப் பூமியில் விழுந்தார்கள். சுருதாயு அச்ருதாயு இருவருடையவதமும் ஸமுத்திரத்தினுடைய வரட்சிபோல உலகத்திற்கு ஆச்சரியகரமாயிருந்தது. பார்த்தன் அவ்விருவரையுமடுத்துப் பின்தொடர்ந்துவந்த ஐந்நூறுதேராளிகளையும் மறுபடிகொன்று சிறந்தவர்களைஎல்லாம் கொன்றுகொண்டே கௌரவசேனையைஎதிர்த்துச்சென்றான். பாரதரே! சுருதாயுவும் அசுருதாயுவும் கொல்லப்பட்டதைப்பார்த்து அவ்விருவருடைய குமாரர்களும் நரஶ்ரேஷ்டர்களுமான நியுதாயுவும் தீர்க்காயுவும் தந்தையர்களுடைய மரணத்தினாலுண்டான துன்பத்தினால் பீடிக்கப்பட்டு மிக்ககோபத்தோடு பலவிதபாணங்களை இறைத்துக்கொண்டு குந்திபுத்திரனை எதிர்த்தார்கள். அர்ஜுனன் மிக்க கோபங்கொண்டு ஒருமுகூர்த்த காலத்திற்குள் அவ்விருவரையும் உட்படிந்த கணுக்களுள்ள அம்புகளால் யமனுடைய வீட்டிற்கு அனுப்பினான். தாமரைத்தடாகத்தை யானை கலக்குவதுபோல் சேனைகளைக்கலக்குகின்ற பார்த்தனை க்ஷத்திரிய ஶ்ரேஷ்டர்கள் தடுப்பதற்குச்சக்தியற்றவர்களானார்கள். அரசரே! நல்ல சிக்ஷைபெற்றவர்களும் யானைவீரர்களுமான ஆயிரக்கணக்கான அங்கதேசத்து வீரர்கள் கோபங்கொண்டு யானைக்கூட்டங்களோடு ஆயிரமாயிரமாகப் பாண்டவனைச் சூழ்ந்துகொண்டார்கள். கீழ்நாட்டரசர்களும் தென்னாட்டரசர்களும் களிங்கன்முதலான அரசர்களும் துர்யோதனனால் கட்டளையிடப்பட்டு மலைபோன்ற யானைகளோடு பார்த்தனைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது உக்ரஸ்வரூபமுடையவனான அர்ஜுனன் காண்டீவத்தினின்றுவிடப்படும்

அம்புகளாலே எதிர்த்துவருகின்ற அந்தவீரர்களுடைய தலைகளையும் நல்லபூஷணங்களையணிந்த கைகளையும் சீக்ரமாக அறுத்தான். அந்தத் தலைகளாலும் தோள்வளைகளுடன்கூடின கைகளாலும் வியாபிக்கப்பட்ட யுத்தபூமியானது ஸ்வர்ணமயமான கற்களையுடையதுபோலவும் ஸர்ப்பங்களால் சூழப்பட்டதுபோலவும் விளங்கியது. அம்புகளாலே அறுக்கப்பட்ட கைகளும் அறுக்கப்பட்ட தலைகளும் கீழேவிழுகின்றவை மரங்களிலிருந்துவிழுகின்ற பக்ஷிகள்போலக் காணப்பட்டன. அம்புகளால் ஆயிரக்கணக்காக அடிக்கப்பட்டு ரக்தத்தைப்பெருக்குகின்ற யானைகள் கார்காலத்தில் சிவப்புவர்ணமுள்ள உலோகங்களோடு கலந்துபெருகுகின்ற அருவிகளுடன்கூடின மலைகள்போலக் காணப்பட்டன. யானையின்மீதேறியிருக்கின்ற பலவித ஆகாரரூபமுள்ள வேறு மிலேச்சர்கள் பீபத்ஸுவினுடைய கூர்மையானபாணங்களாலே அடிக்கப்பட்டுக்கிடந்தார்கள். நராதிபரே! பலவித வேஷத்தைத் தரித்தவர்களும் பலவித அஸ்திரஸமூஹங்களால் சூழப்பட்டவர்களுமான வீரர்கள் நானாவிதமான பாணங்களாலே அடிக்கப்பட்டு ரக்தத்தினால் பூசப்பட்டமேனியுடன் விளங்கினார்கள். மாவுத்தர்களோடும் பின்தொடர்ந்துவந்த வீரர்களோடும் சேர்ந்து பார்த்தனுடைய அம்பினாலடிக்கப்பட்டு ஆயிரமாயிரமாக அறுக்கப்பட்ட தேகத்தையுடையயானைகள் ரக்தத்தை அதிகமாகக்கக்கின. சிலயானைகள் வீரிட்டன. சில கீழேவிழுந்தன. சில திக்குக்களில் சுழன்றன. மேலேஏறியிருக்கின்ற வீரர்களையுடையவைகளும் கொடியவிஷத்துக் கொப்பானவைகளுமான மற்ற அநேக யானைகள் மிகவும் பயந்தவைகளாகித் தங்கள் ஸைனிகர்களையே நாசஞ்செய்தன. அஸுரமாயையை அறிந்தவர்களும் மிகவும் பயங்கரமானவர்களும் கோரமான கண்ணையுடையவர்களுமான யவனர்களும், பாரதர்களும், பாஹ்லிகர்களும், சகர்களும், காகத்தின் நிறமுடையவர்களும் கெட்ட நடையையுடையவர்களும் ஸ்திரீயிடத்தில் சாபல்யமுடையவர்களும் கலகத்தில் பிரீதியுள்ளவர்களும் மதித்தயானையின் பராக்கிரமம்போன்ற பராக்கிரமமுடையவர்களுமான திராவிடர்களும் அங்கு யுத்தஞ்செய்தார்கள். பசுவாகிய நந்தினியினிடத்தில் பிறந்தவர்களும் யமனுக்கொப்பானவர்களும் நன்கு அடிப்பவர்களுமான மிலேச்சர்களும் தார்வாதிஸாரர்களும் தரதர்களும் புண்டரர்களும் ஆயிரக்கணக்காக யுத்தஞ்செய்தார்கள். லக்ஷக்கணக்கான அந்தக்கூட்டங்கள் எண்ணுவதற்கு அஸாத்யமாக இருந்தன. அவர்களெல்லோரும் கூர்மையான அம்புகளைப் பாண்டவன்மீது நான்குபக்கங்களிலும் வர்ஷித்தார்கள். பலவிதயுத்தங்களில் ஸமர்த்தர்களான அந்த மிலேச்சர்களும் (பாணங்

களை) இறைத்தார்கள். தனஞ்சயன் சீக்கிரமாக அவர்களின்மீதும் அம்புமழையைப் பொழிந்தான். அப்படிப்பட்ட தொடர்ச்சியானது விட்டிற்பூச்சியினுடைய வரிசைபோலிருந்தது. தனஞ்சயன் ஸைன்யத்தில் அம்புகளாலே மேகத்தின்நிழலைப்போன்ற நிழலையுண்டுபண்ணி, மொட்டையடித்துக்கொண்டவர்களும் பாதிக்ஷௌரம் செய்துகொண்டவர்களும் சடைமுடியையுடையவர்களும் அசுத்தர்களும் தாடிமீசை அடர்ந்தமுகத்தையுடையவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான எல்லா மிலேச்சர்களையும் அஸ்திரசக்தியினால் நாசஞ்செய்தான். மலையில் ஸஞ்சரிக்கின்றவர்களும் மலையின்குகையில் வாஸஞ்செய்கின்றவர்களுமான அவர்களுடைய கூட்டங்கள் அம்புகளால் நூற்றுக்கணக்காக அடிக்கப்பட்டு யுத்தத்தினின்றும் பயந்தோடிவிட்டன. கூர்மையான அம்புகளாலேதள்ளப்பட்ட யானைகள் குதிரைகள் குதிரைவீரர்கள் மிலேச்சர்கள் இவர்களுடையஇரத்தத்தை ஸந்தோஷத்தோடு கொக்குகளும் கழுகுகளும் செந்நாய்களும் பூமியில் பானம்செய்தன. அந்த அர்ஜுனன் அம்புமழைகளாகிற ஓடங்களுள்ளதும் மயிர்களாகிற பாசிக்கொத்துக்களும் புல்தரைகளுமுள்ளதும் ரக்தவெள்ளமாகிற அலைகளுள்ளதும் அறுக்கப்பட்டவிரல்களாகிற சிறுமீன்களுள்ளதும் காலாட்களாலும் குதிரைகளாலும் தேர்களாலும் யானைகளாலும் மறைக்கப்பட்டபிரவாஹத்தையுடையதும் பயங்கரமானதும் உக்ரமானதும் ஊழிக்காலத்து யமன் போன்றதும் யானைகளால்நெருங்கியதும் ரக்தத்தைப் பிரதானமாகக் கொண்டதுமான ஒரு நதியை உண்டுபண்ணினான். இந்திரன் மழையைப்பொழியுங்காலத்தில் எவ்வாறு மேடும்பள்ளமும் இராவோ அவ்வாறு பூமிமுழுமையும் ராஜபுத்திரர்கள் யானைகள் குதிரைகள் தேராளிகள் குதிரைவீரர்கள் இவர்களுடைய தேகங்களிலிருந்து உண்டான ரக்தத்தினாலே எங்கும் நனைக்கப்பட்டதாகியது. க்ஷத்ரியஶ்ரேஷ்டனான அர்ஜுனன் ஆறாயிரம்குதிரைகளையும் ஶ்ரேஷ்டர்களான ஆயிரம் க்ஷத்ரியர்களையும் பரலோகத்திற்கு அனுப்பினான். முறைப்படி ஒழுங்குசெய்யப்பட்டயானைகள் ஆயிரக்கணக்காக அம்புகளாலடிக்கப்பட்டு வஜ்ரத்தாலடிக்கப்பட்டமலைகள்போல் யுத்தபூமியையடைந்து படுத்தன. அந்தஅர்ஜுனன், மதப்பெருக்கையுடைய யானையானது கோரைக்காட்டைஅழிப்பதுபோலக் குதிரைகளையும் தேர்களையும் யானைகளையும் நாசஞ்செய்துகொண்டு ஸஞ்சாரஞ்செய்தான். காற்றினாலே நன்றாகத் தூண்டப்பட்ட நெருப்பானது, அதிகமானமரங்களும் கொடிகளும் புதர்களும் உலர்ந்தவிறகுகளும் திருணங்களும் புற்களுமுள்ளகாட்டைஎவ்வாறுஎரிக்குமோ அவ்வாறே கிருஷ்ணனாகிறகாற்றினாலேதூண்

டப்பட்டதும் அம்புகளாகிற ஜ்வாலைகளுள்ளதுமான பாண்டுகுமார னை அர்ஜுனனாகிற நெருப்பானது கோபங்கொண்டு உம்முடைய ஸேனையாகிறகாட்டை எரித்தது. வில்லைக்கையில்கொண்ட தனஞ்சயன் தேர்களின் நடுவிடங்களைச் சூன்யமாகச்செய்துகொண்டும் மனுஷ்யர்க ளாலே பூமியைநிரப்பிக்கொண்டும் வஜ்ராயுதத்திற்கு ஸமமான அம்பு களாலே யுத்தபூமியை ரத்தப்பெருக்குள்ளதாகச் செய்துகொண்டும் நெருங்கின அந்தயுத்தத்தில் நர்த்தனஞ்செய்கின்றவன்போலக் காணப் பட்டான். பிறகு, இரத்தவெள்ளத்தால் அலைமோதுகின்றதும் எலும்பு களாகிற பருக்கைக்கற்களால் நெருங்கியதும் கொடிகளாகிற விருக்ஷங்க ளுள்ளதும் தேர்களாகிறமடுக்களுள்ளதும் நன்றாக அறுக்கப்பட்ட தலை களாகிற கற்களுள்ளதும் யானைத்துதிக்கைகளாகிற பெரியமுதலைகளுள் ளதும் மாம்ஸங்களும் ஊனீரும் எலும்புமாகிறசேற்றினால்நிரம்பியதும் கொல்லப்பட்ட குதிரைகளாகிற சுறாமீன்களால் வியாபிக்கப்பட்டதும் தலைப்பாகைகளாகிற நுரைகளால் நன்குமூடப்பட்டதும் அம்புகளாகிற கோரமானமீன்களால் மிகப்பரவப்பெற்றதுமான நதியானது, பர்வதங் களிலிருந்து நதிபுறப்படுவதுபோல மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவைகளுடைய தேகங்களிலிருந்து புறப்பட்டது. தனஞ்சயன் மிக்க கோபங்கொண்டு யுத்தபூமியை ருத்திரருடைய உத்யானத்திற்கு ஸமா னமாகவும் அதிபயங்கரமாகவும் செய்துகொண்டு பாரதசேனையில் பிர வேசித்தான். அவ்வாறு செல்லுகின்ற அந்தஅர்ஜுனனை அம்பஷ்ட தேசாதிபதியான சுருதாயுஸ் தடுத்தான். ஐயா! பிருதாகுமாரனை அர்ஜுனன் முயற்சிசெய்கின்ற அந்தச்சுருதாயுவினுடைய குதிரை களைக் கழுகிறகுகள்பூண்ட கூரியஅம்புகளாலே விரைவாகக்கீழேதள்ளி வேறுஅம்புகளாலே அவனுடையவில்லையும் அறுத்துத் தன்பராக்கிர மத்தைக் காட்டினான். அம்பஷ்டனோ கோபத்தினால் கண்கள்கலங்கிக் கதையைஎடுத்து யுத்தகளத்தில் மஹாரதனை பார்த்தனையும் கேசவ ரையும் எதிர்த்துவந்தான். பாரதரே! பிறகு வீரனானஅம்பஷ்டன் கதை யைஎடுத்து அடித்துக்கொண்டு ரதத்தைத்தடுத்துக் கதையினால் கேச வரை யடித்தான். பாரதரே! சத்துருவீரர்களை வதஞ்செய்கின்றவனான அர்ஜுனன் கதையினாலே கேசவர்அடிக்கப்பட்டதுகண்டு, பிறகு, மிகு ந்தகோபங்கொண்டு, உதிக்கின்றஸூர்யனை மேகம்மூடுவதுபோல ரதிக சிரேஷ்டனும் கதையையுடையவனுமான அந்தஅம்பஷ்டனை ஸுவர் ணமயமானகணுக்களுள்ள அம்புகளாலே யுத்தத்தில் மூடினான். பிறகு, அவன் வேறுஅம்புகளாலே மஹாபலசாலியான அந்த அம்பஷ்ட னுடையகதையைப் பொடியாக்கினான். அது அப்பொழுது ஆச்சரியமா

யிருந்தது. பிறகு, அந்த அம்பஷ்டன் அந்தக் கதை விழுந்தது கண்டு வேறு ஒருபெரியகதையைக்கையிலெடுத்து அர்ஜுனனையும் வாஸுதேவரையும் திரும்பவும் திரும்பவும் அடித்தான். அர்ஜுனன் கதையுடன் தூக்கப்பட்டவைகளும் இந்திர த்வஜம்போன்றவைகளுமான அவனுடைய இரண்டுகைகளையும் அர்த்தசந்திரபாணங்களாலறுத்து வேறு அம்பினாலே அவன்தலையையும் அறுத்தான். அரசரே! அந்த அம்பஷ்டராஜன் கொல்லப்பட்டு யந்திரத்தினால் அடியில்பெயர்க்கப் பட்டுக் கீழேதள்ளப்படுகின்ற இந்திரத்வஜம்போலப் பூமியை எதிரொலி யடையும்படிசெய்துகொண்டு கீழேவிழுந்தான். அவன் கொல்லப்பட்ட வுடனே, உம்முடைய சேனை அப்பொழுது தோல்வியடைந்தது. அப்பொழுது பார்த்தன் தேர்ப்படையினால் வியாபிக்கப்பட்டவனும் அநேக யானைகளாலும குதிரைகளாலும் சூழப்பட்டவனுமாகி மேகங்களால் மூடப்பட்ட ஸூர்யன்போலக் காணப்பட்டான்.

---

## தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துர்யோதனன் துரோணரை நிந்தித்து ஜயத்ரதனைப்பற்றித் துக்கித்ததும், துரோணர் துர்யோதனனுக்கு மந்திரத்தோடு கவசம்பூட்டி அர்ஜுனனோடு யுத்தத்திற்கு அனுப்பியதும்.)

பிறகு, குந்திபுத்திரனை அர்ஜுனன் ஸிந்து ராஜனைக்கொல்ல வேண்டுமென்கிற எண்ணத்துடன் தாண்டமுடியாத துரோணசேனையையும் போஜசேனையையும் பிளந்துகொண்டு உள்ளே பிரவேசிக்கவே, காம்போஜனுடைய குமாரனை ஸுதக்ஷிணனும் மிக்கவலிமையையுடைய சுருதாயுவும் ஸவ்யஸாசியினால் நாசம்பண்ணப்பட்டும் ஸைன்யங்கள் துரத்தியடிக்கப்பட்டும் நான்குபக்கங்களிலும் ஓடுமளவில், உம்முடைய குமாரன் தன்சேனை நாசம்பண்ணப்பட்டதைக்கண்டு விரைபவனாகித் தனியான ஒருதேரோடு துரோணரிடம்வந்து அவரைநோக்கி, 'புருஷஸ்ரேஷ்டரே! அந்த அர்ஜுனன் இந்தப்பெரியசேனையைப் பிளந்துகொண்டு உள்ளே பிரவேசித்துவிட்டான். குரூரமான இந்த ஜனநாசமானது நேர்ந்திருக்கும்பொழுது அர்ஜுனனுடைய விநாசத்தின் பொருட்டு மேல்செய்யத்தக்கதைத் தேவரீர்கள் புத்தியினால் ஆலோசிக்கவேண்டும். அந்தப்புருஷஸ்ரேஷ்டரே! ஜயத்ரதன் கொல்லப்படாமலிருக்கும்வண்ணம் உபாயத்தைச்செய்யும். தேவரீர்களுக்குமங்களமுண்

டாகவேண்டும்; தேவரீர்கள் எங்களுக்கு முக்கியமானகதியல்லவோ. கோபமாகிற காற்றினாலே தூண்டப்பட்ட இந்தத்தனஞ்சயனாகிற நெருப்பானது என்னுடைய சேனையாகிற உலர்ந்தகாட்டை, எழுந்ததீயானது காட்டைக்கொளுத்துவதுபோலக் கொளுத்துகிறது. பகைவரைவாட்டுபவரே! ஸைன்யத்தை உடைத்துக்கொண்டு கௌந்தேயன்மீறினவுடன் ஜயத்ரதனை ரக்ஷிக்கின்றவீரர்கள் அதிகமானஸந்தேகத்தை அடைந்தார்கள். ப்ரம்மவித்துக்களுள் உத்தமரே! 'தனஞ்சயன் உயிரோடு ஒருகாலும் துரோணரைக்கடந்து செல்லமாட்டான்' என்று அரசர்களுக்கு உறுதியான எண்ணமிருந்தது. அதிகமானதேஜஸ்ஸுடையவரே! தேவரீர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பார்த்தன் தாண்டிவிட்டமையால் இப்பொழுது எல்லாம் ஆபத்திற்குள்ளானதென்றே நினைக்கிறேன். இந்த என்னுடைய ஸைன்யமானது (இனி நமக்கு) இல்லை. ஓ! மஹாபாக்யசாலியே! தேவரீர்களைப் பாண்டவர்களுக்கு நன்மையைப் பயப்பதில் விருப்பமுள்ளவரென்று நான் அறிவேன். பிராம்மணரே! ஆதலால், காரியத்தை ஆலோசித்து நான் மதிமயக்கமுற்றிருக்கிறேன். பிராம்மணரே! நான் உமக்கு என்சக்திக்குத்தக்கபடி உத்தமமான விருத்தியை ஏற்படுத்தி அதை அபிவிர்த்திசெய்துகொண்டு என் சக்தியுள்ளமட்டிலும் உமக்குத் திருப்தியை யுண்டுபண்ணிவருகிறேன். அதனைத் தேவரீர் நினைக்கவில்லை. மிக்கபராக்ரமமுடையவரே! எப்பொழுதும் பக்தியுள்ளஎங்களைத் தேவரீர்கள் விரும்புகிறதில்லை. எங்களுக்கு அப்பிரியத்தைச்செய்வதில் பற்றுதலுள்ளவர்களான பாண்டவர்களுக்கு எப்பொழுதும் திருப்தியையுண்டுபண்ணுகிறீர். எம்மை அண்டிப்பிழைக்கின்றநீங்கள் எமக்கே அப்பிரியத்தைச்செய்வதில் பற்றுதலுள்ளவராயிருக்கிறீர்கள். உம்மை நான் தேனினால் பூசப்பட்டிருக்கிற கத்திபோன்றவரென்று அறியவில்லை. தவளைபோல் கத்துகிற ஸ்வபாவமுள்ள ஸர்ப்பமென்றும் உம்மை நான் அறியவில்லை. பாண்டவனை வெல்லும்விஷயத்தில் தேவரீர்கள் எனக்கு வரனைக்கொடாமலிருந்தால் வீட்டுக்குச்செல்லுகின்ற ஜயத்ரதனை நான் தடாமலிருந்திருப்பேன். புத்திமயக்கத்தினால் உம்மிடத்திலிருந்து ரக்ஷணத்தை விரும்புகின்ற புத்திஹீனனான என்னாலே ஸிந்துராஜன் தேறுதலடையும்படி செய்யப்பட்டு யமனுக்கு அர்ப்பணம்செய்யப்பட்டான். மனிதன் யமனுடைய கோரப்பற்களின் நடுவையடைந்து விடுபட்டாலும் விடுபடுவான்; யுத்தத்தில் அர்ஜுனனுடைய வசத்தையடைந்த ஜயத்ரதன் ஒருபோதும் மீளான். சிவந்தகுதிரைகளையுடையவரே! ஸைந்தவன் விடுபடும்வண்ணம் நீர்செய்யும். துயரமடைந்தவனான என்னுடைய புலம்பலைக்கேட்டு

கோபத்தைப் பாராட்டக்கூடாது. ஸைந்தவனைக் காப்பாற்றும்' என்று கூறினன்.'

துரோணர், துர்யோதனனைப்பார்த்து, 'அரசனே! நான் உன்வார்த்தையில் அஸூயைப்படவில்லை. எனக்கு நீ அஸ்வத்தாமாவோடு ஸமமானவன். நான் உனக்கு உண்மையைச் சொல்லப்போகிறேன்; அதனை நீ சரியாகச்செய்; அர்ஜுனனுக்கு ஸாரதியான வாஸுதேவர் மஹா ஸாமர்த்தியமுடையவர். அர்ஜுனனது சிறந்தகுதிரைகள் மிக்க சுறுசுறுப்புள்ளவை. சிறிது இடைவெளியை உண்டுபண்ணிக்கொண்டு தனஞ்சயன் விரைவாகச்செல்லுகிறான். பிரயோகிக்கப்பட்டவைகளும் ரதத்திற்குப்பின்புறத்தில் ஒரு குரோசதூரம் வந்துவிழுகின்றவைகளும் விரைவாகச்செல்லுகின்றவைகளுமான கிரீடியினுடைய பாணஸமூஹங்களை நீ பார்க்கவில்லையா? பிராயமுதிர்ந்தவனான நான் இப்பொழுது விரைவாக யுத்தத்தில்ஸஞ்சரிக்கும்விஷயத்தில் ஸாமர்த்தியமற்றவனாக இருக்கிறேன். ஸேனாமுகத்தில் பார்த்தர்களுடைய ஸைன்யமும் வந்து நெருங்கிவிட்டது. எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே யுதிஷ்டிரனை நான்பிடிப்பேன். மிக்கபுஜபலமுள்ளவனே! அரசர்களினடுவில் இவ்வாறு என்னால் பிரதிஜ்ஞைசெய்யப்பட்டது. வேந்தே! அர்ஜுனனால் விடப்பட்டிருக்கிற யுதிஷ்டிரனே எதிரில் வந்து நிற்கிறான். ஆதலால், வியூகத்தினுடைய முகத்தைவிட்டுப் பல்குனனைக்குறித்து யுத்தத்திற்காக நான் செல்லமாட்டேன். ஒத்தகுலத்தில் தோன்றியவனும் ஒத்தசெய்கையையுடையவனும் ஸஹாயமற்றவனுமான சத்துருவை ஸஹாயமுள்ளவனான நீ சென்றுஎதிர்த்து யுத்தஞ்செய்; பயப்படாதே. நீ இந்தஉலகத்திற்கு நாதனல்லையா? நீ அரசன்; சூரன்;கற்றறிந்தவன்; ஸாமர்த்யமுடையவன்; பாண்டவர்களோடு வைரத்தை விளைவித்தவன்; வீரனான நீ பிருதாகுமாரனான தனஞ்சயனிருக்குமிடத்திற்குத் தானாகவே விரைவாகச்செல்' என்றுசொல்ல, துர்யோதனன், 'ஆசார்யரே! ஆயுதம்பிடித்தவரெல்லாருள்ளும் சிறந்தஉம்மையும் மீறி வந்தஅர்ஜுனனை நான் எவ்வாறு எதிர்த்து யுத்தஞ்செய்வேன்? வஜ்ரபாணியான இந்திரனையும் யுத்தத்தில் தோற்கச்செய்யலாம். சத்துருபட்டணங்களை ஜயிக்கிறவல்லமையுடைய அர்ஜுனனை யுத்தத்தில் ஜயிக்க இயலாது. யுத்தத்தில் அக்னிபோல எரிக்கின்றவனும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவனும் பாண்டவனுமான எந்த அர்ஜுனனாலே போஜகுலத்தில் பிறந்தவனான கிருதவர்மாவும் தெய்வம்போன்ற தேவரீரும் அஸ்திர ப்ரதாபத்தால் ஜயிக்கப்பட்டீர்களோ [1] சுருதாயுவும்

---

[1] இவன் வேறு.

கொல்லப்பட்டானோ, ஸுதக்ஷிணனும் அரசனான சுருதாயுதனும் சுருதாயுஸும் அசுருதாயுஸும் பதினாயிரக்கணக்கான மிலேச்சர்களும் கொல்லப்பட்டார்களோ, அவனை யான் எவ்வாறு எதிர்த்துப்போர்புரிவேன்? மிக்க சிறப்புடையவரே! ஆசார்யரே! அதனைத் தேவரீர் எனக்குச் சொல்லவேண்டும். இப்பொழுது அவனோடு எனக்கு யுத்தம் நேருவது தகுதியானதென்று எண்ணுவீராகில் என்னைக்கட்டளையிடும். கிங்கரனைப்போல் உமக்கு நான் உடன்பட்டிருக்கிறேன். என்னுடைய கீர்த்தியைக்காப்பாற்றுவீராக' என்று விஜ்ஞாபனஞ்செய்தான். துரோணர், 'குருகுலத்தில் பிறந்தவனே! நீ உண்மையைச் சொல்லுகிறாய். தனஞ்சயன் (எவ்விதத்தாலும்) ஜயிக்கமுடியாதவனே. நீ போரில்இவனை எதிர்த்துத்தாங்கச் சக்தியுள்ளவனாகக்கூடிய காரியத்தை நான் செய்யப்போகிறேன். வாஸுதேவர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உன்னிடத்தில் எதிர்த்து யுத்தம்பண்ணுகிற கௌந்தேயனை உலகத்தில் எல்லாவில்லாளிகளும் இப்பொழுது ஆச்சரியமாகப் பார்க்கட்டும். மன்னவ! யுத்தத்தில் பாணங்களும் அஸ்திரங்களும் உன்னுடைய கவசத்தை உடைக்காதபடி ஸ்வர்ணமயமானகவசத்தை உனக்கு யான் பூட்டுகிறேன். அஸுரர்கள் தேவர்கள் யக்ஷர்கள் உரகர்கள் ராக்ஷஸர்கள் இவர்களுடனும் மனுஷ்யர்களுடனும்கூடிய மூவுலகங்களும் உன்னோடு போர்புரிந்தாலும் உனக்குப் பயம் நேராது. கிருஷ்ணனாவது கௌந்தேயனாவது அல்லது ஆயுதபாணியான வேறு எவ்விதவீரனாவது ஒருவன் யுத்தரங்கத்தில் உன்கவசத்தில் அம்புகளைப்போடுவதற்குச் சக்தியுடையவனாகான். அவ்விதமான நீ கவசம்பூண்டு இப்பொழுது யுத்தத்தில் கோபங்கொண்ட அர்ஜுனனைக்குறித்து நேரில் விரைந்து எதிர்த்துச்செல். அவன் உன்பராக்ரமத்தைத் தாங்கப்போகிறதில்லை' என்று நியமித்தார். பிரம்மவித்துக்களுள் உத்தமரான துரோணர் இவ்வாறு சொல்லிவிட்டு உலகங்களை வித்தையினால் ஆச்சரியப்படும்படி செய்பவராகி அந்தப் பெரியயுத்தத்தில் உமது குமாரனுடைய ஜயத்தைவேண்டி விரைவுடனே தீர்த்தத்தைத்தொட்டு ஆசமனம்செய்து அத்யாச்சரியகரமான மந்திரத்தை முறைப்படிஜபித்துப் பிரகாசிக்கின்ற கவசத்தைத் துர்யோதனனுக்குப் பூட்டினார். துரோணர், 'பாரதகுலத்தில் பிறந்தவனே! உனக்கு நான்முகன் மங்களத்தை உண்டுபண்ணட்டும். பிராம்மணர்களும் க்ஷேமத்தையுண்டுபண்ணட்டும். சிறந்த நாகங்களிடமிருந்தும் உனக்கு மங்களமுண்டாகட்டும். யயாதி நகுஷன் துந்துமாரன் பகீரதன் ஆகிய எல்லா ராஜரிஷிகளும் உனக்கு எப்பொழுதும் மங்களத்தையுண்டுபண்ணட்டும். மஹாயுத்தத்தில் உனக்கு ஒருகாலுள்ள

பிராணிகளிடமிருந்தும் அநேகம் கால்களுள்ள பிராணிகளிடமிருந்தும் காலேயில்லாத பிராணிகளிடமிருந்தும் எப்பொழுதும் மங்களமுண்டாகட்டும். குற்றமற்றவனே! ஸ்வாஹாவும் ஸ்வதாவும் இந்திராணியும் லக்ஷ்மியும் அருந்ததியும் உனக்கு எப்பொழுதும் மங்களத்தையுண்டு பண்ணட்டும். அரசனே! அஸிதரும் தேவலரும் விஸ்வாமித்திரரும் அங்கிரஸுபம் வஸிஷ்டரும் கஸ்யபரும் உனக்கு மங்களத்தையுண்டு பண்ணட்டும். தாதாவும் விதாதாவும் லோகநாதரும் திக்பாலகர்களோடு கூடின திக்குக்களும் உனக்கு இப்பொழுது மங்களத்தைக் கொடுக்கட்டும். தாரகாஸுரயுத்தத்தில் ஒரே தடவையில் தோல்வியடைவிக்கப்பட்டவர்களான தேவர்கள் எவரால் நிலைபெறுத்தப்பட்டார்களோ, தேவகணங்களால் கொல்லத்தகாத அந்தச் சூரனைதாரகனும் எவரால் ஸம்ஹாரம்செய்யப்பட்டானே அப்படிப்பட்ட கிருத்திகாகுமாரரான ஷண்முகரும் உனக்கு இப்பொழுது மங்களத்தைக் கொடுக்கட்டும். ஸூர்ய பகவான் உனக்கு மங்களத்தையுண்டுபண்ணட்டும். அவ்வாறே பார்ஷதர்கள் எவனுக்கு ஸ்வாதீனப்பட்டிருக்கிறார்களோ அப்படிப்பட்ட ஸூர்யனுடைய புத்திரனை யமனும் உனக்கு மங்களத்தைக்கொடுக்கட்டும். நான்குதிக்கஜங்களும் பூமியும் ஆகாயமும் க்ரஹங்களும் திக்குக்களும் மூலைத்திக்குக்களும் உலகத்திற்கு நன்மையில் பற்றுள்ளவர்களான ஸித்தர்களும் இந்த மந்திரத்தினால் துதிக்கப்பெற்று உனக்கு மங்களத்தை எப்பொழுதும் உண்டுபண்ணட்டும். அரசனே! கீழேயிருந்து பூமியை எப்பொழுதும் தாங்குகின்றவனும் ஸர்ப்பங்களுள் சிறந்தவனுமான ஆதிசேஷனும் உனக்கு மங்களத்தைக்கொடுக்கட்டும். காந்தாரிபுத்திரனே! [1] யுத்தத்தில் பராக்ரமத்தைக்காட்டி இந்திரகுமாரனை அர்ஜுனனை நீ ஸம்ஹாரம்செய். முற்காலத்தில் வ்ருத்திரனென்கிற அஸுரனாலே ஆயிரக்கணக்காக உடல் பிளக்கப்பட்டவர்களும் தேஜஸும் பலமும் கவரப்பட்டவர்களுமான இந்திராதிகளான எல்லாத் தேவர்களும் அப்பொழுது மஹாஸுரனை வ்ருத்ரனிடத்திலிருந்து பயந்து பிரம்மாவைச்சரணமடைந்து, 'தேவர்களுள் சிறந்தவரே! வ்ருத்திரனாலே மிக அடிக்கப்பட்டிருக்கின்ற தேவர்களுக்கெல்லாம் தேவரீர் ரக்ஷகராகவேண்டும். தேவசிரேஷ்டரே! எங்களை மஹாபயத்திலிருந்து பாதுகாப்பீராக' என்று பிரார்த்திக்க, பிறகு, பக்கத்தில் நிற்கின்ற உபேந்திரரையும் துக்கமடைந்த இந்திராதிகளான உத்தமதேவர்களையும்பார்த்து, 'தேவர்களே! இந்திரனும் பிராம்மணர்களும் தேவர்களும் எப்பொழுதும் என்னால் ரக்ஷிக்கத்தக்கவர்கள்; எதினாலே வ்ருத்

[1] வேறுபாடம்.

ரன் உண்டுபண்ணப்பட்டானே அந்த த்வஷ்டாவினுடைய தேஜஸானது ஒருவராலும் தாங்கமுடியாதது. தேவர்களே! முற்காலத்தில் த்வஷ்டா வானவன் பத்துலக்ஷம் வருஷங்கள் தவஞ்செய்து மஹேஸ்வரரிடத்தி லிருந்து வரத்தைப்பெற்று அப்பொழுது வ்ருத்திரனை உண்டுபண்ணி னான். பலசாலியும் தேவர்களுக்குச் சத்துருவுமான அந்த வ்ருத்திரன் சங்கரருடைய அனுக்கிரஹத்தினாலே கொல்லப்படுவான். அவருடைய வாஸஸ்தானத்தை அடையாமல் பகவானை ஹரர் பிரத்யக்ஷமாகமாட் டார். அவரைப் பார்த்தபின் சீக்கிரமாக அந்த விருத்ரனை ஜயிப்பீர்கள். தவங்களுக்குக் காரணரும் தக்ஷனுடையயாகத்தை அழித்தவரும் பினாகமென்கிறவில்லைக் கையிலெடுத்தவரும் ஸர்வபூதங்களுக்கும் நாத ரும் பகனுடையநேத்திரத்தைக் கீழேதள்ளினவருமான அந்தஈஸ்வரர் வாஸம்பண்ணுகிற மந்தரபர்வதத்துக்குச்செல்லுங்கள்' என்று இவ்விதம் பத்யமான வார்த்தையைச் சொன்னார். அந்தத் தேவர்கள் ஒன்றுசேர்ந்து பிரம்மதேவரோடு மந்தரபர்வதத்தை அடைந்து தேஜோராசியாயிருக் கின்றவரும் கோடிஸூர்யர்போன்ற காந்தியுடையவருமான ஈஸ்வரரைக் கண்டார்கள். அந்த ஈஸ்வரர், 'தேவர்களே! உங்களுக்கு நல்வரவா? நான் என்னசெய்யவேண்டும்? சொல்லுங்கள்; என்னுடைய தர்சனமானது பயனோடுகூடியது. ஆதலால், உங்களுக்கு அபீஷ்டஸித்தியுண்டாகட் டும்' என்றுகூறினார். இவ்வாறு சொல்லப்பட்ட தேவர்களெல்லோரும் அந்த ஈஸ்வரரைப்பார்த்து,'ஈஸ்வரரே! விருத்திரனால் வலிமையிழந்த தே வர்களான எங்களுக்குத் தேவரீர் கதியாகவேண்டும். தேவரே! அடிகளால் தளர்ச்சியடையச் செய்யப்பட்டிருக்கிற எங்களுடைய தேகங்களைப் பாரும். மஹேஸ்வரரே! உம்மை நாங்கள் சரணமடைந்துவிட்டோம். தேவரீர் ரக்ஷகராகவேண்டும்' என்றுபிரார்த்திக்க, ஈஸ்வரர், 'தேவர்களே! த்வஷ்டாவினுடைய தேஜஸினாலுண்டானதும் கோரமும் மிகஅதிக பலத்தையுடையதுமான இந்தப்பிசாசானது பலமற்றவர்களாலே எவ் விதத்தாலும் தடுக்கமுடியாததென்பது உங்களுக்குத்தெரிந்ததே. என் னால் எல்லாத்தேவர்களுக்கும் உதவியானது அவசியம்செய்யத்தக்கது. தேவர்களுக்கு ஈஸ்வரனை என்சரீரத்திலுண்டான இந்தக்கவசத்தைப் பெற்றுக்கொண்டு தேவர்களை ஸம்ஹாரம்செய்கின்றவனும் அஸுரர் களுள் தலைவனுமான விருத்திரனுடைய வதத்தின்பொருட்டு, இந்தமந் திரத்தை மனத்தினால் ஜபித்துப் பூட்டிக்கொள்' என்றுசொன்னார். வரங் கொடுப்பவரான ஈஸ்வரர் இவ்வாறு சொல்லிவிட்டுக் கவசத்தையும் அதைத்தரிப்பதற்குரிய மந்திரத்தையும் அளித்தார். அந்தஇந்திரன் அந்தக்கவசத்தினாலே பாதுகாக்கப்பட்டவனாகி விருத்திரனுடைய

சேனையைக்குறித்துச்சென்முன். அந்த இந்திரன் பூட்டிக்கொண்ட கவ சத்தினுடைய ஸந்தியானது அந்தமஹாயுத்தத்தில் போடப்படுகின்ற பலவித ஆயுதஸமூஹங்களாலே பிளப்பதற்கு முடியாததாகிவிட்டது. அந்த இந்திரன் அந்தக்கவசத்தினுல் ரக்ஷிக்கப்பட்டு யுத்தத்தில் பயப் படாதவனுகித் தேவர்களுக்குமுன்சென்று தேவசத்துருவான வ்ருத் திரனே அப்பொழுது கொன்முன். அவன் மந்திரமயமான அந்தப் பந்தத் தையும் கவசத்தையும் அங்கிரஸ்மஹரிஷிக்குக் கொடுத்தான். அங்கிர ஸாம் மந்திரங்களே அறிந்த தம்புத்திரரான பிருஹஸ்பதிக்கு உபதே சித்தார். பிறகு, பிருஹஸ்பதியும் புத்திமானுன அக்நிவேஸ்யருக்கு உப தேசித்தார். அக்நிவேஸ்யர் எனக்குக் கொடுத்தார். ராஜஸ்ரேஷ்டனே! இப்பொழுது உன்னுடையதேகத்தைக் காப்பாற்றுவதற்காக அந்தமந் திரத்தினுலே இந்தக்கவசத்தை உனக்கு நான் பூட்டுகிறேன்' என்று கூறினுர். பாரதரே! பிறகு ஆசார்யஸ்ரேஷ்டரான துரோணர் மஹா தேஜஸ்வியான உம்முடையகுமாரனேப்பார்த்து இவ்வாறுசொல்லிவிட்டு மறுபடியும் சிலவார்த்தையை மெதுவாகச்சொன்னுர். 'பாரத! பிரம்ம தேவரால் சொல்லப்பட்ட உபதேசமுறைப்படி உனக்கு நான் திவ்ய கவசத்தைப் பூட்டுகிறேன். முற்காலத்தில் யுத்தகளத்தில் பிரம்மதேவ ரால் விஷ்ணுவுக்கு எவ்வாறு கவசம்பூட்டப்பட்டதோ, தாரகாஸுர யுத்தத்தில் இந்திரனுக்குப் பிரம்மதேவராலே திவ்யகவசம் எவ்வாறு பூட்டப்பட்டதோ அவ்வாறே நான் உனக்குப்பூட்டுகிறேன்' என்று சொன்னுர். பிராம்மணரான துரோணர் விதிப்படி மந்திரத்தினுல் துர் யோதனராஜனுக்குக் கவசத்தைப்பூட்டிப் பெரியயுத்தத்தின்பொருட்டு அவனே அனுப்பினுர். பூமிபாலரே! மிக்கபுஜபலமுள்ள அந்தத்துர்யோ தனன் மஹாத்மாவான ஆசார்யராலே ஸந்நத்தனுகச் செய்யப்பட்டுத் தனஞ்சயன் சென்றவிடத்திற்கு அடிக்குந்திறமையுள்ள திரிகர்த்தர்க ளுடைய ஆயிரம்தேர்களாலும் மதங்கொண்டவைகளும் வீர்யமுள்ள வைகளுமான ஆயிரம்யானைகளாலும் லக்ஷம்குதிரைகளாலும் இன்னும் மற்றுமுள்ள மஹாரதிகர்களாலும் சூழப்பட்டவனுகிப் பற்பலவாத்திய கோஷங்களுடனே பலிசக்ரவர்த்திபோல அர்ஜுனனுடைய ரதத்தை நோக்கிச்சென்முன். பாரதரே! கரைபுரண்டுவருகின்ற ஆழ்ந்தகருங் கடல்போன்ற கௌரவனேக்கண்டு பிறகு, உம்முடையபடையில் பெரிய ஸிம்மநாதமுண்டாயிற்று.

---

## தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அரசர்கள் இருவர்இருவராக யுத்தத்துக்குச் சேர்ந்தது.)

மஹாராஜரே! பார்த்தனும் வாஸுதேவரும் யுத்தரங்கத்தில் பிரவேசிக்கவும், புருஷஸ்ரேஷ்டனை துர்யோதனனும் பின்புறத்தில் செல்லவும், பாண்டவர்கள் ஸோமகர்களுடன்சேர்ந்து உரத்தஸிம்மநாதத்துடன் வேகத்தோடு துரோணரை எதிர்த்தார்கள். பிறகு, யுத்தம் நேர்ந்தது. வ்யூகத்துக்குமுன்னிலையில் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஆச்சரியகரமானதும் உக்கிரமானதும் கைகலந்ததும் மயிர்சிலிர்த்தலை உண்டுபண்ணக்கூடியதுமான அவ்விதயுத்தம் நடந்தது. அரசரே! ஜனங்களுக்குநாதரே! சூரியன் உச்சியிலிருக்கும்ஸமயத்தில் நடந்ததுபோன்ற யுத்தமானது நம்மால் ஒருபொழுதும் காணப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. அடிக்கின்ற ஸ்வபாவமுள்ளவர்களான த்ருஷ்டத்யும்னனைத் தலைமையாகக்கொண்ட பார்த்தர்களெல்லோரும் அணிவகுக்கப்பட்ட சேனையுடன் துரோணருடையசேனைமீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். நாங்கள் ஆயுதத்தைத் தரித்திருக்கின்ற எல்லாவீரர்களுள்ளுஞ்சிறந்த துரோணரை முன்னிட்டுக்கொண்டு பார்ஷதனைமுன்னிட்ட பார்த்தர்களின்மீது அம்புகளால் வர்ஷித்தோம். சிசிரருதுவில் காற்றோடுகலந்து மேலேஎழும்பியிருக்கின்ற இரண்டுமஹாமேகங்கள்போல் ரதங்களால் அலங்கரிக்கப்பட்ட இரண்டுபிரதானஸேனைகளும் அழகியவையாகவிளங்கின. இரண்டுபெருஞ்சேனைகளும்தாக்கி வர்ஷாகாலத்தில் அதிகஜலத்தோடுகூடின கங்கையமுனைநதிகள்போல உத்தமமான வேகத்தைக்காண்பித்தன. பலவிதசஸ்திரங்களாகிற கீழ்காற்றோடுகூடியதும் யானைகளாலும் குதிரைகளாலும் தேர்களாலும் சூழப்பட்டதும் கதாயுதங்களாகிற மின்னற்கொடிகளால் மிக்கபயங்கரமுமான பெரியயுத்தமாகிறமேகமானது துரோணராகிற காற்றினோடு தோன்றி, அம்புகளாகிற அநேக நீர்த்தாரைகளை மிக்கபயங்கரமானதும் எழுந்து ஜ்வலிக்கின்றதுமான பாண்டவஸேனையாகிற நெருப்பின்மீது பொழிந்தது. வர்ஷாகாலத்தில் வீசுகின்ற கோரமானபெருங்காற்றானது ஸமுத்திரத்தைக் கலங்கச்செய்வதுபோல பிராம்மணோத்தமரான துரோணர் பாண்டவர்களுடைய சேனைகளைக் கலங்கச்செய்தார். பெரியஅணையை உடைக்கப்போகின்ற பெரியஜலப்பிரவாகங்கள்போல அவர்களும் முழுமுயற்சியோடும் துரோணரையேநோக்கி நன்றாக எதிர்த்துச்சென்

ரூர்கள். துரோணர் ஜலப்பிரவாகத்தை மலைதடுப்பதுபோல யுத்தத்தில் கோபங்கொண்டவர்களும் கேகயர்களோடுகூடியவர்களுமான பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் தடுத்தார். பிறகு, மஹாபலசாலிகளும் சௌர்யமுடையவர்களுமான வேறுசில அரசர்களும் பாஞ்சாலர்களை யுத்தகளத்தில் நான்குபக்கமும்சூழ்ந்துகொண்டு தடுத்தார்கள். பிறகு, நரஸ்ரேஷ்டனான பார்ஷதன் பாண்டவர்களோடுகூடிப் பகைவர் படையைப் பிளக்கஎண்ணி யுத்தத்தில் அடிக்கடி துரோணரை அடித்தான். துரோணர் பார்ஷதன்மீது எவ்விதமாக அம்புமழைகளைப்பொழிகிறாரோ அவ்வாறே அவனும் துரோணரின்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். கத்திகளாகிற கீழ்க்காற்றோடுகூடியதும் சக்திகள் பிராஸங்கள் ரிஷ்டிகள் இவைகளால்சூழப்பட்டதும் நாண்கயிறாகிற மின்னற்கொடியுள்ளதும் நாணொலியாகிற இடிமுழக்கமுள்ளதுமான த்ருஷ்டத்யும்னனாகிற மேகமானது பாணவர்ஷங்களாகிற கல்மழைகளை எல்லாத்திசைகளிலும் பொழிந்துகொண்டு சிறந்ததேர்களையும் குதிரைக்கூட்டங்களையும் நாசஞ்செய்து அந்தச்சேனையை மூழ்கச்செய்தது. துரோணர் பாண்டவர்களுடைய தேர்க்கூட்டத்தை அம்புகளாலெதிர்த்தடித்த எல்லா இடங்களிலிருந்தும் பார்ஷதன் அம்புகளால் துரோணரைத் திரும்பும்படி செய்தான். பாரதரே! அவ்வாறு த்ருஷ்டத்யும்னனையெதிர்த்து யுத்தத்தில் முயலுகின்ற துரோணருடைய படையானது மூன்று விதமாகவுடைந்தது. சிலர் போஜனை அடைந்தார்கள்; அவ்வாறே மற்றவர்கள் ஜலஸந்தனை அடைந்தார்கள். மற்றவர்கள் பாண்டவர்களால் துன்புறுத்தப்படுகின்றவர்களாகித் துரோணரையே அடைந்தார்கள். ரதிகர்களுள் உத்தமரான துரோணரோ சிதறிப்போன ஸேனைகளை ஒன்றாகக்கூட்டினார். மஹாரதனான த்ருஷ்டத்யும்னன் அந்த ஸேனைகளைச் சிதறியோடும்படி ஊதினான். அரண்யத்தில் இடையனை இழந்த பசுக்கள் அநேக கொடியமிருகங்களால் கொல்லப்படுவதுபோல அந்த நிலைமையையடைந்த உம்மைச்சேர்ந்தவர்கள் பாண்டவர்களாலும் ஸ்ருஞ்சயர்களாலும் கொல்லப்பட்டார்கள். கைகலந்து நடக்கின்ற அந்த யுத்தத்தில் ஜனங்கள் திருஷ்டத்யும்னனால் மயக்கமடையும்படி செய்யப்பட்ட யுத்தவீரர்களைக் காலன்பக்ஷிக்கிறானென்றே எண்ணினார்கள். கொடுங்கோல்மன்னனுடைய ராஜ்யமானது துர்ப்பிக்ஷங்களாலும் வியாதிகளாலும் திருடர்களாலும் எவ்வாறு பீடிக்கப்படுமோ அவ்வாறே ஆபத்தையடைந்த உம்முடைய சேனையானது பாண்டவர்களால் துரத்தியடிக்கப்பட்டது. சஸ்திரங்களிலும் கவசங்களிலும் சூரியகிரணங்கள் பரவியிருப்பதினாலும் ஸேனையி

கிருந்துண்டான தூளியினாலும் கண்கள் தடைப்பட்டன. மூன்றுவித மாகப் பிரிந்திருக்கின்ற சேனைகள் பாண்டவர்களால் கொல்லப்படும் பொழுது, அதனால் கோபங்கொண்டவரான துரோணர் பாஞ்சாலர்களை அம்புகளாலடித்தார். அந்த ஸைன்யங்களை அடித்து அம்புகளால் நாசஞ்செய்கின்ற துரோணருடைய உருவமானது ஜ்வலிக்கின்ற பிர ளயகாலநெருப்பினுடைய உருவம்போலிருந்தது. அரசரே! மஹாரத ரான துரோணர் யுத்தகளத்தில் தேரினையும் யானையையும் குதிரை யையும் காலாட்களையும் ஒவ்வோர் அம்பினால் பிளந்தார். பரதகுலத்தில் பிறந்த பிரபுவே! யுத்தகளத்தில் துரோணருடைய வில்லிலிருந்து விடுபடும் பாணங்களைத் தாங்கக்கூடியவன் ஒருவனாவது பாண்டவ ஸைனிகர்களிலில்லை. பாரதரே! ஸூர்யனாலே நன்குஎரிக்கப்படுகின்றதும் துரோணருடைய அம்புகளாலே கொளுத்தப்படுகின்றதுமான அந்தத் திருஷ்டத்யும்னனுடைய படையானது அந்த அந்தஇடத்திலேயேசுழன் றது. பரதஶ்ரேஷ்டரே! பாரத்வாஜராலே நான்குபக்கங்களிலும் கொல் லப்படுகிற அந்தப்பாண்டவசேனையானது அக்னிஜ்வாலையினுடைய ரூபம்போன்ற ரூபமுள்ள அம்புகளாலே எரிக்கப்பட்டது. அவ்வாறே த்ருஷ்டத்யும்னனாலே துரத்தியடிக்கப்படுகின்ற உம்முடைய சேனையா னது அக்னியினாலே நான்குபக்கத்திலும் எரிக்கப்படுகின்ற உலர்ந்த காடுபோலாயிற்று. துரோணர் த்ருஷ்டத்யும்னன் இவர்களின் அம்பு களாலே ஸைன்யங்கள் கொல்லப்படும்பொழுது வீரர்கள் ஸ்வர்க்கத்தை யடையவிருப்பமுள்ளவர்களாகிப் பிராணனைவிடத்துணிந்து அதிக வல் லமையோடு யுத்தஞ்செய்தார்கள். பரதஶ்ரேஷ்டரே! மஹாராஜரே! பயத்தால் யுத்தத்தைவிடுபவன் யுத்தஞ்செய்கின்ற உம்முடைய சேனை களிலாவது பகைவர்களுடையசேனைகளிலாவது ஒருவனுமில்லை. குந்தீ புத்திரனான பீமஸேனனை ஸகோதரர்களான விவிம்சதியும் சித்திரஸேன னும் மஹாரதனான விகர்ணனும் சூழ்ந்தெதிர்த்தார்கள். உம்முடைய மூன்று குமாரர்களுக்கும் அவந்திராஜகுமாரர்களான விந்தன் அனுவிந் தன் வீர்யமுடையவனான க்ஷேமதூர்த்தி இம்மூவருமே பின்செல்லுகிற வர்களானார்கள். தேஜஸுடையவனும்உயர்குலத்தில்பிறந்தவனும்மஹா ரதனுமான பாஹ்லிகதேசத்தரசன் சேனைகளோடும் மந்திரிகளோடும் கூடித் திரௌபதிகுமாரர்களைத் தடுத்தான். சிபிவம்சத்தவனான கோவா ஸனராஜன் சற்றேறக்குறைய ஆயிரத்துக்குமேற்பட்ட யுத்தவீரர்க ளோடுசேர்ந்து பராக்கிரமமுள்ள காசிதேசத்தரசனான அபிபூவினுடைய குமாரனைத்தடுத்தான். ஜ்வலிக்கின்ற நெருப்புப்போன்றவரும் குந்தீ புத்திரருமானயுதிஷ்டிரராஜரை மத்ரதேசத்தரசனானசல்யன்தடுத்தான்,

மிக்க கோபங்கொண்டவனும் சௌர்யமுடையவனுமான துச்சாஸனன் தன்சேனையை நிலைநிறுத்தி ரதிகஸ்ரேஷ்டனான ஸாத்யகியை எதிர்த்தான். நான் யுத்தஸன்னத்தனாகிக் கவசத்தையணிந்துகொண்டு என்னுடையபடையோடும் நானூறு சிறந்தவில்லாளிகளோடும் சேகிதானனை எதிர்த்தேன். சகுனியோ ஸைன்யத்தோடுகூடி விற்களையும் சக்திகளையும் கத்திகளையும் கையில்கொண்ட எழுநூறு காந்தாரவீரர்களோடு மாத்ரீபுத்திரர்களைத் தடுத்தான். அவந்திதேசத்தரசர்களும் மஹாவில்லாளிகளுமான விந்தானுவிந்தர்கள் உயிரைவிடத்துணிந்து மித்திரனுடைய கார்யார்த்தமாக ஆயுதங்களைக்கையிலெடுத்து மச்சதேசத்தரசனான விராடனை எதிர்த்தார்கள். (பகைவர்களைத் தன்புஜபலத்தினால்) தடுக்கின்றவனும் சத்துருக்களால் ஜயிக்கப்படாதவனும் மிக்கபராக்கிரமசாலியும் யாகஸேனகுமாரனுமான சிகண்டியைப் பாஹ்லீகன் தகுந்த ஸன்னாகத்துடன் தடுத்தான். கோபமூண்ட பாஞ்சாலராஜகுமாரனான த்ருஷ்டத்யும்னனை அவந்திதேசத்தரசன் ஸௌவீரர்களோடும் குரூரர்களான ப்ரபத்ரகர்களோடும்சேர்ந்து தடுத்தான். அவ்வாறே சூரனும் குரூரமானசெய்கையுடையவனும் யுத்தத்தில் கோபத்தோடு எதிர்த்து வருகின்றவனும் ராக்ஷஸனுமான கடோத்கசனை அலாயுதன் சீக்கிரமாக எதிர்த்துவந்தான். மஹாரதனான குந்திபோஜன் பெரிய ஸைன்யத்தோடுகூடி மிகுந்த கோபமுடைய அலம்புஸனென்கிற ராக்ஷஸேந்திரனைத் தடுத்தான். பாரதரே! ஸிந்துதேசத்தரசனான ஜயத்ரதன் மஹாவில்லாளிகளான கிருபர்முதலான ரதிகர்களாலே காக்கப்பட்டு எல்லாச்சேனைகளுக்கும் பின்புறத்திலிருந்தான். அரசரே! மிக்கதிறமையுள்ளவர்களும் சக்ரரக்ஷகர்களுமான அஸ்வத்தாமாவும் ஸூதபுத்திரனான கர்ணனுமாகிய இருவரும் அந்த ஸைந்தவனுக்கு வலப்பக்கத்திலும் இடப்பக்கத்திலும் நின்று சேனையைக்காக்கின்றவர்களானார்கள். மேலும், பூரிஸ்ரவஸை முதன்மையாகக்கொண்ட வீரர்கள் அந்தஸைந்தவனுடைய பின்பக்கத்தைப் பாதுகாத்தார்கள். நீதியுடையவர்களும் மஹாவில்லாளிகளும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான கிருபர், வ்ருஷஸேனன், சலன், சல்யன், துர்ஜயன் ஆகிய இவர்களெல்லோரும் ஸைந்தவனுக்கு இவ்வாறு ரக்ஷையை ஏற்படுத்திப் பிறகு யுத்தஞ்செய்தார்கள்.

---

## தொண்ணூற்றாறாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(அரசர்களுடைய த்வந்த்வயுத்தத்தை வர்ணித்தது.)

மன்னரே! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த ஆச்சரியகரமான அந்த யுத்தத்தை நடந்தபடி யான் சொல்லுகிறேன்; கேளும்; பார்த்தர்கள் வியூகத்திற்குமுன்பு நிற்கின்ற பாரத்வாஜரை யடைந்து அவருடைய சேனையைப் பிளக்கஎண்ணி ரணகளத்தில் யுத்தஞ்செய்தார்கள். துரோணரும் தமது வியூகத்தைக் காப்பாற்றிக்கொண்டு பெரிய கீர்த்தியை விரும்பி ஸைனிகர்களோடு ரணகளத்தில் பார்த்தர்களை எதிர்த்து யுத்தஞ்செய்தார். உம்முடைய புத்திரனுக்கு நன்மையை விரும்பினவர்களும் அவந்திதேசத்தரசர்களுமான விந்தனும் அனுவிந்தனும் மிகுந்த கோபங்கொண்டு பத்துக்கணைகளால் விராடனை அடித்தார்கள். ஓ! மஹாராஜரே! விராடனும் யுத்தத்தில் நிற்கின்றவர்களும் பராக்கிரமமுடையவர்களும் துணைவீரர்களோடு கூடியவர்களுமான அவ்விருவரையும் எதிர்த்துப் பராக்கிரமத்துடன் யுத்தஞ்செய்தான். காட்டில் மதப்பெருக்குள்ள இரண்டு சிறந்த யானைகளோடு ஒரு ஸிம்மத்திற்கு யுத்தம் நேர்ந்ததுபோல அவர்களுக்குப் பயங்கரமானதும் ரக்தப்பெருக்குள்ளதுமான யுத்தம் நேர்ந்தது. மஹாபலசாலியான த்ருஷ்டத்யும்னன் யுத்தத்தில் சுறுசுறுப்புள்ளவனான பாஹ்லீகனைக் கோரமானவைகளும் உயிர்நிலைகளிலுள்ள எலும்புகளைப் பிளக்கின்றவைகளும் கூரியவைகளுமான அம்புகளாலே அடித்தான். பாஹ்லீகனும் மிக்ககோபமுண்டு ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளும் உட்படிந்தகணுக்களுள்ளவைகளுமான ஒன்பது பாணங்களாலே த்ருஷ்டத்யும்னனை அடித்தான். அம்புகளாலும் சக்திகளாலும் நிறைந்தும் கோரமாயுமிருக்கின்ற அந்த யுத்தமானது பயப்படுகிறவர்களுக்கு அதிகபயத்தை உண்டுபண்ணுவதும் சூரர்களுக்குச் சந்தோஷத்தைவிருத்திபண்ணுவதுமாயிருந்தது. அந்த யுத்தகளத்தில் அவ்விருவராலும் விடப்படும் அம்புகளாலே ஆகாயமும் திக்குக்களும் மற்றுமனைத்தும் மூடப்பட்டன. ஒன்றும் அறியப்படவில்லை. சிபியின் குமாரனான கோவாஸனனும் ஸைன்யத்தோடுகூடியவனாக யானையானது எதிரியானையை எதிர்ப்பதுபோல மஹாரதனான காசிராஜகுமாரனை யுத்தத்தில் (எதிர்த்துப்) போர்புரிந்தான். மிக்ககோபங்கொண்டவனான பாஹ்லீகராஜன் ஐந்து இந்திரியங்

களையும் எதிர்க்கின்ற மனம்போல மஹாரதர்களான திரௌபதிகுமாரர்களை எதிர்த்து யுத்தம் செய்கின்றவனாகிப் போரில் விளங்கினான். நரஶ்ரேஷ்டரே! இந்திரியங்கள் அடிக்கடி தேகத்தை எதிர்ப்பதுபோல அந்தத்திரௌபதிகுமாரர்களும் நான்குபக்கமும் பாணஸமூஹங்களாலே அந்தப்பாஹ்லீகராஜனை அதிகமாக எதிர்த்துப் போர்புரிந்தார்கள். உம்முடைய புத்திரனான துச்சாஸனன் கணுக்கள்படிந்துள்ள கூரிய ஒன்பது பாணங்களாலே விருஷ்ணிகுலத்தில் தோன்றியவனான ஸாத்யகியை யுத்தகளத்தில் அடித்தான். பலசாலியும் பெரிய வில்லையுடையவனுமான அந்த வில்லாளியினால் அதிகமாக அடிக்கப்பட்ட ஸத்யபராக்ரமனான அந்த ஸாத்யகியும் சீக்கிரமாகச் சிறிது மூர்ச்சையடைந்தான். தேறுதலையடைந்தவனான அவன் மஹாரதனான உம்முடைய புத்திரனைக் கழுகிறகுகள் கட்டின பத்துப்பாணங்களாலே விரைவாக அடித்தான். இறைவரே! அன்யோன்யம் வலிமையுடன் அடிக்கப்பட்டவர்களும் அன்யோன்யம் பாணங்களால் பீடிக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷங்கள்போல யுத்தகளத்தில் விளங்கினார்கள். குந்திபோஜனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டவனும் மிக்க கோபங்கொண்டவனுமான அலம்புஸனோ புஷ்பங்களால் நிறைந்த பலாசவிருக்ஷம்போல அழகுடன் மிகவும் விளங்கினான். பிறகு, அலம்புஸனென்கிற ராக்ஷஸன் உருக்கினாலாகிய அநேகபாணங்களாலே குந்திபோஜனை யடித்து உம்முடைய ஸேனாமுகத்தில் பயங்கரமான (ஒலியுடன்) சப்தித்தான். பிறகு, யுத்தரங்கத்தில் பரஸ்பரம் யுத்தஞ்செய்கின்ற சூரர்களான அவ்விருவரையும் முற்காலத்தில் யுத்தஞ்செய்த இந்திரனையும் ஜம்பனையும்போல எல்லா ஸைனிகர்களும் கண்டார்கள். ஓ! பாரதரே! கோபங்கொண்டவர்களான மாத்ரீகுமாரர்கள் ரணகளத்தில் வேகத்தையுடையவனும் விரோதத்தை உண்டுபண்ணினவனுமான சகுனியை அம்புகளால் நன்றாக அடித்தார்கள். அரசரே! நெருங்கியதும் பெரியதுமான அவ்வித ஜனக்ஷயமானது உண்டாகியது. அரசரே! உம்மால் உண்டுபண்ணப்பட்டதும் கர்ணனால் மிகவும் விருத்திபண்ணப்பட்டதும் உம்முடைய புத்திரர்களால் காப்பாற்றப்பட்டதுமான குரோதத்தை மூலமாகக்கொண்ட நெருப்பானது இந்தப்பூமிமுழுமையும் எரிப்பதற்கு ஆரம்பித்துவிட்டது. சகுனியானவன் பாண்டுபுத்திரர்களாலே அம்புகளால் புறங்காட்டியோடும்படி செய்யப்பட்டு யுத்தத்தில் செய்யத்தக்க ஒருவிதமான பராக்கிரமத்தையும் அறியவில்லை. மஹாரதர்களான மாத்ரீபுத்திரர்கள் புறங்காட்டி ஓடும் சகுனியைக்கண்டு இரண்டு மேகங்கள் பெரிய மலையின்மீது மழையைப்பொழி

வதுபோல அவன்மீது மறுபடியும் பாணங்களைப் பொழிந்தார்கள். கனுக்கள்பதிவாயுள்ள அனேக அம்புகளாலே துன்புறுத்தப்படுகின்ற அந்தச்சகுனி வேகமுள்ள குதிரைகளோடு துரோண ஸைன்யத்தைக் குறித்து விரைந்தோடினன். அவ்வாறே கடோத்கசன் நடுத்தரமான வேகத்தையடைந்து யுத்தத்தில் பராபரமுள்ளவனும் சூரனுமான அலாயுதனென்கிற அந்த ராக்ஷஸனை எதிர்த்தான். மஹாராஜரே! முற்காலத்தில் ராமராவணர்களுடைய யுத்தம் நடந்ததுபோலவே அவ்விருவருடைய யுத்தமும் மிக்க ஆச்சரியமாயிருந்தது. பிறகு, யுதிஷ்டிரராஜர் யுத்தகளத்தில் மத்ரராஜனை ஐம்பதுபாணங்களாலடித்துத் திரும்பவும் ஏழுபாணங்களாலடித்தார். வேந்தரே! பிறகு, முற்காலத்தில் சம்பரனுக்கும் தேவராஜனுக்கும் பெரிய யுத்தம் நடந்ததுபோல அவ்விருவருக்கும் அதிக ஆச்சர்யகரமான யுத்தம் நடந்தது. உம்முடைய புத்ரர்களான விவிம்சதி சித்ரஸேனன் விகர்ணன் ஆகிய இவர்கள் பெரியசேனையினால் சூழப்பட்டவர்களாகிப் பீமஸேனனோடு போர்புரிந்தார்கள்.

---

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் யுத்தம்.)

மயிர் சிலிர்த்தலை யுண்டுபண்ணத்தக்க அந்த யுத்தமானது அவ்வாறு தொடங்கியிருக்கும்பொழுது, பாண்டவர்கள் மூன்றாகப்பிரிந்திருக்கிற கௌரவஸைனிகர்களை எதிர்த்தோடினார்கள். மிக்கதோள்வலியுள்ளவனான ஜலஸந்தனைப் பீமஸேனன் எதிர்த்தான். யுதிஷ்டிரர் சேனைகளோடுகூடி யுத்தகளத்தில் கிருதவர்மாவை எதிர்த்தார். மஹாராஜரே! பிரகாசிக்கின்ற ஸூர்யன்போன்ற த்ருஷ்டத்யும்னன் பாணவர்ஷங்களைப் பொழிந்துகொண்டு ரணகளத்தில் துரோணரைஎதிர்த்தோடி வந்தான். பிறகு, விரைகின்றவர்களும் ஒருவர்மீதொருவர் கோபங்கொண்டவர்களுமான கௌரவபாண்டவ சேனைகளிலுள்ள எல்லாவில்லாளிகளுக்கும் போர் தொடங்கியது. மிக்கபயங்கரமான அவ்வித நாசமானது நேர்ந்தது. ஸைனிகர்கள் ஒருவரையொருவர் எதிர்த்துப்பயமற்று த்வந்த்வயுத்தஞ் செய்கையில், பலசாலியான துரோணர் பலமுள்ள பாஞ்சாலராஜகுமாரனை எதிர்த்துப் பாணஸமூஹங்களைப் பிரயோகித்தார். அது ஆச்சரியமாயிருந்தது. துரோணரும் த்ருஷ்டத்யும்னனும் அநேகமாக மனிதர்களுடைய தலை

களை நான்குபக்கங்களிலும் நாசம்பண்ணப்பட்ட தாமரைக் காடுகளைப் போலச்செய்தார்கள். ஸைன்யங்களில் வீரர்களுடைய ஆடைகளும் ஆபரணங்களும் சஸ்திரங்களும் கொடிமரங்களும் கவசங்களும் ஆயுதங்களும் நான்குபக்கங்களிலும் இறைக்கப்பட்டன. பாரதரே! பொற்கவசமணிந்தவர்களும் அந்த யுத்தத்தில் காயப்படுத்தப்பட்டவர்களும் ரக்தத்தினால் மிக நனைக்கப்பட்டவர்களுமான உம்முடைய வீரர்களும் பாண்டவர்களைச்சேர்ந்தவீரர்களும் பூத்திருக்கின்ற [1]குராமரங்கள்போல விளங்கினார்கள். சில மஹாரதர்கள் ஒருபனையளவுள்ளவிற்களை இழுத்து அம்புகளால் யானைகளையும் குதிரைகளையும் காலாட்களையும் விழும்படி செய்தார்கள். யுத்தத்தில் மஹாபலசாலிகளான சூரர்களுடைய கத்திகளும் கேடகங்களும் விற்களும் தலைகளும் கவசங்களும் சிதறின. மஹாராஜரே! மிகநெருங்கிக் கைகலந்ததான அந்தச்சண்டையில் எண்ணமுடியாத உடற்குறைகள் நாற்புறங்களிலும் எழுந்தவைகளாகக்காணப்பட்டன. அந்த ரணரங்கத்தில் பலவிதமானவைகளும் ஊனுண்பவைகளுமான பெருங்கழுகுகளும், சிறுகழுகுகளும், கொக்குக்களும், பருந்துகளும் காக்கைகளும், நரிகளும், அவ்விடத்தில் மாம்ஸங்களைத் தின்பவைகளும் ரக்தத்தைக்குடிக்கின்றவைகளும் பலவிதமாகமயிர்களையும் மஜ்ஜைகளையும் வெளியில் பிடுங்குகின்றவைகளும் அந்த அந்த இடங்களில் கூட்டங் கூட்டமாயிருக்கின்ற மனிதர்கள், குதிரைகள், யானைகள் இவைகளுடைய சரீரங்களையும் சரீராவயவங்களையும் தலைகளையும் இழுக்கின்றவைகளுமாகக் காணப்பட்டன. அஸ்திரத்தில் நல்ல பயிற்சியுடையவர்களும் யுத்தப்பழக்கங்களால் தேர்ந்தவர்களுமான ரணதீரர்கள் யுத்தத்தில் ஜயத்தைவிரும்பி அப்பொழுது மிகவும் கடுமையான போர்புரிந்தார்கள். ஸைனிகர்கள் யுத்தபூமியில் பலவிதமான கத்திச்சிலம்பங்களைச் செய்துகொண்டு திரிந்தார்கள். யுத்தரங்கத்திலுள்ள மனிதர்கள் கோபங்கொண்டு ரிஷ்டிகளாலும் சக்திகளாலும் ப்ராஸங்களாலும் சூலங்களாலும் தோமரங்களாலும் பட்டாக்கத்திகளாலும் கதைகளாலும் பரிகங்களாலும் மற்றுமுள்ள ஆயுதங்களாலும் புஜங்களாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். ரதிகர்கள் ரதிகர்களோடும் குதிரைவீரர்கள் குதிரைவீரர்களோடும் யானைகள் சிறந்த யானைகளோடும் காலாட்கள் காலாட்களோடும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். ரங்கஸ்தலங்களில் யானைகள் ஒன்றோடொன்று சண்டைசெய்வதுபோலச் சிலவீரர்கள் மதங்கொண்டவர்களைப் போலவும் பயித்தியம் பிடித்தவர்களைப்போலவும் பரஸ்பரம் உரக்க அழைத்துப் போர்புரிந்து ஒருவரையொருவர் வதஞ்

[1] 'கோவிதாரா:' என்பது மூலம்.

செய்தார்கள். அரசரே! வரம்புகடந்த அவ்விதயுத்தமானது நடக்கையில் த்ருஷ்டத்யும்னன் தன் குதிரைகளைத் துரோணருடைய குதிரைகளோடு எதிர்க்கச்செய்தான். காற்றின் வேகம்போன்ற வேகமுடையவைகளும் புறாவைப்போன்ற நிறமுடையவைகளும் ரக்தம்போன்ற சிவந்த நிறமுடையவைகளுமான அந்தக்குதிரைகள் ஒன்றோடொன்று கலந்து யுத்தரங்கத்தில் மிகவும் பிரகாசித்தன. வேந்தரே! புறாவிற் கொப்பான நிறமுடைய குதிரைகள் ரக்தம்போன்ற சிவந்த நிறமுடைய குதிரைகளோடுகலந்து மின்னலோடுகூடிய மேகங்கள்போல் விளங்கின. பாரதரே! வீரனான த்ருஷ்டத்யும்னன் ஸமீபத்தில் வந்திருக்கின்ற துரோணரைக்கண்டு வில்லைஎறிந்துவிட்டுக் கத்தியையும்கேடகத்தையும் ஏந்தினான். பகைவர்களைக் கொல்லுகிறவனான பார்ஷதன் யாராலும் செய்யமுடியாத கார்யத்தைச்செய்ய எண்ணி ஏர்க்காலின் வழியாகச் சென்று துரோணருடைய ரதத்தில் பிரவேசித்தான். அவன் நுகத்தடியினிடையில்நின்றான்; நுகத்தடி கட்டுமிடங்களில் நின்றான்; குதிரைகளுடைய பின்தட்டுக்களின்பாதியில் நின்றான். அதை ஸைனிகர்கள் புகழ்ந்தார்கள். கத்தியோடு ஸஞ்சரிக்கின்றவனும் சிவப்பான குதிரைகளின் மீது நிற்கின்றவனுமான அந்தத் திருஷ்டத்யும்னனுக்கு இடுக்கண் விளைவிக்கக்கூடிய ஸமயத்தைத் துரோணர் காணவில்லை. அது ஆச்சரியமாயிருந்தது. வனங்களில் மாம்ஸத்தில் ஆசைகொண்டிருக்கிற பருந்தினுடைய பாய்ச்சல் எவ்விதமிருக்குமோ அவ்விதமாகவே துரோணரைக் கொல்லஎண்ணிய அந்தத் திருஷ்டத்யும்னனுடைய ஸஞ்சாரமானது இருந்தது. பிறகு, துரோணர் நூறு அம்புகளாலே அந்தத் துருபதகுமாரனுடைய நூறு புள்ளிகளுள்ள கேடகத்தை அறுத்துப் பத்துப்பாணங்களால் கத்தியையும் அறுத்துத்தள்ளினார். பலசாலியான துரோணர் அறுபத்துநான்குபாணங்களாலே அவனுடைய குதிரைகளை அடித்தார். அவ்வாறே இரண்டுஅர்த்தசந்திர பாணங்களாலே கொடியையும் குடையையும் அறுத்து இரண்டுபக்கங்களிலுமுள்ள ஸாரதிகளையும் கொன்றார். பிறகு, அவர் விரைவுள்ளவராக உயிரைப் போக்கக்கூடிய வேறொருபாணத்தை எடுத்து இந்திரன் வஜ்ராயுதத்தைப் பிரயோகிப்பதுபோல, அந்த த்ருஷ்டத்யும்னன்மீது பிரயோகஞ்செய்தார். அந்தப் பாணத்தை ஸாத்யகியானவன் கூர்மையுள்ள பதினான்குபாணங்களாலே அறுத்து ஆசார்ய ஸ்ரேஷ்டரான துரோணராலே கவரப்பட்ட த்ருஷ்டத்யும்னனை விடுவித்தான். ஐயா! சினிகளுட்சிறந்த ஸாத்யகியானவன், ஸிம்மத்தினாலே கவர்ந்துகொள்ளப்பட்ட மானைப்போல் நரஸிம்மரான துரோணராலே கவரப்பட்ட

பாஞ்சாலகுமாரனை அவரிடத்திலிருந்து விடுவித்தான். துரோணர் மஹாயுத்தத்தில் ரக்ஷகனாகவந்திருக்கின்ற ஸாத்யகியையும் பாஞ்சால குமாரனையும் பார்த்து விரைவுடன் இருபத்தாறு பாணங்களைப் பிர யோகஞ்செய்தார். பிறகு, சினியினுடைய பௌத்ரனான ஸாத்யகி ஸ்ருஞ்சயர்களை விழுங்குகின்ற துரோணரைக் கூர்மையான இருபத் தாறுபாணங்களால் மார்பில் அடித்தான். பிறகு, துரோணர் ஸாத்வ தனாலே எதிர்க்கப்பட்டபொழுது, ஜயத்தில் விருப்பமுள்ள எல்லாப் பாஞ்சால ரதிகர்களும் சீக்கிரமாக த்ருஷ்டத்யும்னனை விலக்கிக் கொண்டுபோனார்கள்" என்றுசொன்னான்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருக்கும் ஸாத்யகிக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! விருஷ்ணிகளுள் சிறந்த வீரனான அந்த ஸாத்யகியினால் அந்தப்பாணமும் அறுக்கப்பட்டு த்ருஷ்டத் யும்னனும் விடுவிக்கப்பட்டபொழுது, கோபங்கொண்டவரும் பெரிய வில்லையுடையவரும் ஆயுதங்களைத்தரித்த எல்லா வீரர்களுள்ளுஞ் சிறந்தவருமான துரோணர் புருஷஶ்ரேஷ்டனான சினியின்பௌத்ரனை யுத்தத்தில் என்ன செய்தார்?" என்றுகேட்க, ஸஞ்சயன் சொல்லத்

"கக்கப்பட்டிருக்கிற விஷம்போன்ற கோபத்தையுடையவரும் திறக்கப்பட்ட வாய்போன்றவில்லையுடையவரும் பற்கள்போன்றகூர் மையான அம்புகளையுடையவரும் வெண்மை நிறமுள்ள கோரப்பற்கள் போன்ற நாராசங்களையுடையவரும் நரஶ்ரேஷ்டருமான துரோணர் கோபத்தினாலும் பொறுமையினாலும் கண்கள் சிவந்து மஹாஸர்ப்பம் போலச்சீறிக்கொண்டும் மிக்க உத்ஸாஹத்தோடு பொற்கணுக்களுள்ள கணைகளைத்தொடுத்துக்கொண்டும் ஆகாயத்தில்பறப்பனபோன்றவையும் பர்வதத்தைத் தாண்டுவனபோன்றவையுமான மிக்கவேகமுள்ள சிவப் புக்குதிரைகளோடு யுயுதானனைநோக்கி அருகில் விரைவாகச்சென்றார். அரசரே! அம்புவர்ஷங்களாகிற பெரியமழைகளோடும் ரதத்தின் கோஷ மாகிற மேகமுழக்கத்தோடும் விற்களோடும் நாராசங்களாகிற அநேகம் மின்னல்களோடும் சக்திகளும் கத்திகளுமாகிற இடிகளோடும் குரோத ...ும் தோன்றினதும் குதிரைகளாகிற காற்றுக்

களால் தள்ளப்பட்டதும் தடுக்கமுடியாததும் எதிரில் வருகின்றதுமான துரோணராகிற மேகத்தைக்கண்டு சத்துருக்களுடைய நகரங்களை ஜயிப்பவனும் சூரனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனுமான ஸாத்யகி அட்டஹாஸஞ்செய்துகொண்டு ஸாரதியைப்பார்த்து, 'வல்லமையுள்ளவரும் தமக்குரிய கார்யங்களில் நிலைபெற்றிராதவரும் துர்யோதனனுக்கு ஆதாரமாயிருக்கின்றவரும் தர்மராஜனுக்குப் பயத்தை உண்டு பண்ணுகிறவரும் ராஜகுமாரர்களுக்கு ஆசார்யரும் எப்பொழுதும் சூரரென்று கர்வங்கொண்டவருமான இந்தப் பிராம்மணரைநோக்கி அதிக ஸந்தோஷமுடையவனாகி வேகமுள்ள குதிரைகளோடு சீக்கிரமாக எதிர்த்துச்செல்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லப்பட்ட தேர்ப்பாகன் ஸாத்யகியினுடைய ரதத்தை நடத்தினான். பிறகு, வெள்ளி போன்றவைகளும் காற்றின் வேகம்போன்ற வேகமுடையவைகளுமான ஸாத்யகியின் சிறந்த குதிரைகள் துரோணரை எதிர்நோக்கி விரைவாகச் சென்றன. பிறகு, சத்ருக்களைத் தவிக்கச்செய்பவர்களான துரோணரும் ஸாத்யகியும் அனேக ஆயிரக்கணக்கான அம்புகளால் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள். புருஷஸ்ரேஷ்டர்களும் வீரர்களுமான இருவர்களும் ஆகாசத்தை அம்புக்கூட்டங்களால் மறைத்து அம்புகளாலே பத்துத்திக்குக்களையும் நிரப்பி வர்ஷாகாலத்தில் இரண்டு மேகங்கள் பொழிவதுபோல ஒருவர்மீதொருவர் அம்புமழைகளாலே பொழிந்துகொண்டார்கள். அப்பொழுது சூரியன் பிரகாசிக்கவில்லை; காற்றும் வீசவில்லை. அப்பொழுது நான்குபக்கங்களிலும் பாணஸமூஹங்களால் மூடப்பட்ட கோரமான இருளானது மற்றச்சூரர்களுக்கு விலக்க முடியாததாயிற்று. துரோணர் ஸாத்யகி இவர்களுடைய பாணங்களால் உலகம் இருளடைந்ததாகச் செய்யப்பட்டிருக்கையில், விரைவுள்ள அஸ்திரங்களை அறிந்தவர்களும் நரஸ்ரேஷ்டர்களுமான அந்தத்துரோணர் ஸாத்வதன் இருவர்களுடைய அம்புமழைகளினிடை வெளியானது அப்பொழுது காணப்படவில்லை. பாணங்கள் ஒன்றோடொன்று மோதி அவற்றின்முனை உரைவதினால் உண்டாகும் சப்தமானது இந்திரனால் விடப்படும் இடிகளுடைய சப்தம்போலக் கேட்கப்பட்டது. பாரதரே! நாராசங்களால் எதிர்த்து அடிக்கப்பட்ட பாணங்களுடைய ரூபமானது ஸர்ப்பங்களால் நன்றாகக் கடிக்கப்பட்ட ஸர்ப்பங்களுடைய ரூபம்போல் விளங்கியது. யுத்தத்தில் ஸமர்த்தர்களான அவ்விருவர்களுடைய நாணொலியும் தலத்வனியும் வஜ்ரத்தினால் அடிக்கப்படுகின்ற மலைகளின் சிகரங்களுடைய ஒலிபோல ஒழிவற்றுக் கேட்கப்பட்டன. அரசரே! அப்பொழுது அவ்விருவருடைய அந்த

இரண்டு ரதங்களும் அந்தக் குதிரைகளும் அந்த இரண்டு ஸாரதிகளும் தங்கமயமான கணுக்களுடன் கூடின அம்புகளால் அறுக்கப்பட்டு விசித்திரமான உருவமுள்ளவைகளாக விளங்கின. அரசரே! பளபளப்புள்ளவைகளும் சட்டை உரித்த ஸர்ப்பங்கள்போலப் பிரகாசிக்கின்றவைகளும் நேராகச்செல்லுகின்றவைகளுமான நாராசங்களுடைய வீழ்ச்சியானது மிக்க பயங்கரமாயிருந்தது. யுத்தகளத்தில் கூர்மையுள்ள பாணங்களால் (பரஸ்பரம்) அடித்துக்கொள்ளுகின்ற துரோணர் ஸாத்யகி இவர்களுடைய இரண்டு குடைகளும் இரண்டு கொடிகளும் கீழே விழுந்தன. ரக்தத்தினால் நனைக்கப்பட்ட மேனியையுடையவர்களும் விஜயத்தை விரும்புகின்றவர்களும் மதஜலப்பெருக்குள்ள யானைகள் போல் ரக்தப்பெருக்குண்ட அங்கங்களையுடையவர்களுமான அவ்விருவரும் உயிரைப்போக்கக்கூடிய அம்புகளால் அந்யோந்யம் எதிர்த்து அடித்துக்கொண்டார்கள். மஹாராஜரே! கர்ஜனங்களும் சிறந்த ஸிம்ம நாதங்களும் சங்கதுந்துபி கோஷங்களும் அடங்கின. ஒருவனும் பேசவில்லை. சேனைகள் மௌனத்துடனிருந்தன. யுத்தவீரர்கள் யுத்தத்தைவிட்டொழிந்தார்கள். ஜனங்கள் ஆவலோடு அவ்விருவர்களால் செய்யப்படும் த்வந்த்வயுத்தத்தைக் கண்டார்கள். ரதிகர்களும் யானைவீரர்களும் குதிரைவீரர்களும் காலாட்களும் நான்கு பக்கமும் சூழ்ந்துகொண்டு புருஷஶ்ரேஷ்டர்களான அவ்விருவரையும் கண்ணிமையாமல் பார்த்தார்கள். யானைப்படைகளும் குதிரைப்படைகளும் தேர்ப்படைகளும் எதிரணி வகுக்கப்பட்டு நிலைதவறாமல் நின்றன. பாரதரே! முத்துக்களாலும் பவழங்களாலும் சித்திரவேலைசெய்யப்பட்டவையும் ரத்நங்களாலும் ஸ்வர்ணங்களாலும் அலங்கரிக்கப்பட்டவையுமான கொடிகளாலும் விசித்திரமான ஆபரணங்களாலும் ஸுவர்ணமயமான கவசங்களாலும் கொடிநுனியில் கட்டப்பட்ட பலவிதமான பதாகைகளாலும் வர்ணகம்பளங்களாலும் மெல்லிய கம்பளங்களாலும் தீட்டப்பட்ட பளபளப்புள்ள ஆயுதங்களாலும் குதிரைகளுக்கு அலங்காரமான சாமரங்களாலும் பொன் வெள்ளிகளால் செய்யப்பட்ட யானையின் மத்தகத்திலுள்ள மாலைகளாலும் தந்தவளையங்களாலும் அந்தச்சேனைகளுள் கார்காலத்தில் கொக்குக்களோடும் மின்மினிப்பூச்சிகளோடும் இந்திரதனுஸுகளோடும் மின்னல்களோடும் கூடின மேகக்கூட்டங்கள்போலக்காணப்பட்டன. அப்பொழுது மஹாத்மாக்களும் புருஷஶ்ரேஷ்டர்களுமான யுயுதானன் துரோணர் ஆகிய அவ்விருவருக்கும் ஆச்சர்யகரமானவையும் அஸ்திரங்களை நாசம்செய்கின்றவையுமானபற்பலவித ஆயுதங்களுடையபோக்குவரவுகளாலும்ஆயுதங்க

ளுடைய பிரயோகங்களாலும்சேர்ந்த அவ்விதமான த்வந்துவயுத்தத்தை நம்மைச்சேர்ந்தவர்களும் யுதிஷ்டிரரைச் சேர்ந்தவர்களும் பார்த்தார்கள். பிரம்மாவையும் ருத்திரரையும் முதன்மையாகக்கொண்ட விமானத்தின் மீது ஏறியிருக்கின்ற தேவர்களும் ஸித்தசாரணர்களுடைய கூட்டங் களும் வித்யாதரர்களும் உரகர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் அப்ஸரஸுகளும் கருடர்களும் அதனைப் பார்த்து ஆச்சரியத்தை அடைந்தார்கள். மஹா பலசாலிகளான அந் தத் துரோணரும் ஸாத்யகியும் அஸ்திரங்களில் ஹஸ்தலாகவத்தைக் காண்பித்துக்கொண்டு அம்புகளால் ஒருவரையொருவர் அடித்தார்கள். பிறகு, ஸாத்யகியானவன் யுத்தபூமியில் மஹாதேஜஸ்வியான துரோண ருடைய வில்லையும் அம்புகளையும் மிக்க உறுதியுள்ள அம்புகளால் விரைவாக அறுத்தான். பாரத்வாஜர் ஒரு நிமிஷத்திற்குள் வேறொரு வில்லை எடுத்து நாணேற்றினர். அதையும் ஸாத்யகி அறுத்தான். பிறகு, துரோணர் விரைவுடன் மறுபடியும் வேறுவில்லைக் கையில்எடுத் துக்கொண்டு எதிரே நின்றார். ஸாத்யகி கூர்மையுள்ள அம்புகளால் அவருடையவில்லை நாணேற்ற நாணேற்ற அறுத்தான். திடமானவில்லை யுடையவனான ஸாத்யகியினாலே துரோணாசாரியருடைய நூற்றொரு விற்கள் இவ்வாறு அறுக்கப்பட்டன. நாணேற்றுவதிலும் அறுப்பதி லும் அவ்விருவருக்கும் பேதமே காணப்படவில்லை. ராஜஶ்ரேஷ்டரே! பிறகு, யுத்தத்தில் துரோணர் மனிதர்களாற் செய்தற்கரிய யுயுதான னுடைய செய்கையைக்கண்டு, 'ஸாத்வதர்களுள் உத்தமனையுயுதான னிடத்திலுள்ள இவ்விதமான அஸ்திரபலமானது ராமனிடத்திலும் கார்த்தவீர்யனிடத்திலும் தனஞ்சயனிடத்திலும் புருஷஶ்ரேஷ்டரான பீஷ்மரிடத்திலுமே உள்ளது' என்று மனத்தினால் இதை ஆலோசித்தார். அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவரும் ப்ராம்மணோத்தமருமான துரோணர் இந்திரனுடைய லாகவம்போன்ற ஸாத்யகியினுடைய அவ் விதலாகவத்தைக்கண்டு, மனத்தினால் அவனுடைய பராக்ரமத்தைக் கொண்டாடித்திருப்தியடைந்தார். அவ்வாறே இந்திரனோடுகூடினதேவர் களும் ஸந்தோஷித்தார்கள். விரைவாகஸஞ்சரிக்கின்றவனான அந்தஸாத் யகியினுடைய அந்தச்சுறுசுறுப்பை ஒருவரும் காணவில்லை. வேந்தரே! யுயுதானன் துரோணர் இவர்களின் அந்தச் செய்கையை ஸித்த சாரண ருடைய கூட்டங்களும் தேவர்களும் கந்தர்வர்களும் அறியவில்லை. பாரதரே! க்ஷத்ரியர்களை அடிக்கின்றவரும் அஸ்திரங்களை அறிந்தவர் களுள் சிறந்தவருமான துரோணர் பிறகு வேறுவில்லைக் கையிலெடுத்து யுத்தஞ்செய்தார். அந்த ஸாத்யகி அவருடைய அஸ்திரங்களை அஸ்

திரமாயைகளாலே எதிர்த்து நாசம்பண்ணிக் கூர்மையுள்ள பாணங்க ளால் அடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. யுத்தகளத்தில் மற்ற வீரர்களுடையசெய்கைக்கு ஒப்பாகாததும் உபாயத்தோடுகூடியதுமான அந்த ஸாத்யகியினுடைய அதிமானுஷமான செய்கையைக்கண்டு உபா யத்தை யறிந்தவர்களான உம்மைச் சேர்ந்தவர்கள் புகழ்ந்தார்கள். துரோணர் எந்த அஸ்திரத்தைப் பிரயோகம் செய்தாரோ அதே அஸ் திரத்தை ஸாத்யகியும் பிரயோகம் செய்தான். பிறகு, சத்துருக்களை வாட்டுகிற துரோணாசாரியர் பரபரப்புடன் அவனை எதிர்த்துப் போர் புரிந்தார். மஹாராஜரே! பிறகு, கோபங்கொண்டவரும் தனுர்வேதத் தின்கரையை அடைந்தவருமான துரோணர் யுயுதானனைக் கொல்வதின் பொருட்டுத் திவ்யாஸ்திர மந்திரத்தை உச்சரித்தார். மஹாவில்லாளி யான அந்த ஸாத்யகி சத்துருக்களை நாசஞ்செய்கின்ற மஹா கோரமான அந்த ஆக்நேயாஸ்திரத்தைக் குறித்துத் திவ்யமான வாருணாஸ்திரத் தைப் பிரயோகித்தான். திவ்யாஸ்திரதாரிகளான அவ்விருவரையும் பார்த்துப் பெரிய கூக்குரலுண்டாயிற்று. அப்பொழுது ஆகாயத்தில் செல்லக்கூடிய பிராணிகளும் ஸஞ்சரிக்கவில்லை. அந்த வாருணம் ஆக் நேயம் ஆகிய இரண்டு அஸ்திரமந்திரங்களும் பாணங்களோடு பிர யோகிக்கப்பட்டு ஒன்றோடொன்று மோதுமுன்னரே சூரியன் உச்சியி னின்றும் சாய்ந்தான். பிறகு, யுதிஷ்டிரராஜரும் பீமஸேனனும் நகுல னும் ஸஹதேவனும் நான்குபக்கமும் சூழ்ந்து ஸாத்யகியைக் காப்பாற் றினார்கள். திருஷ்டத்யும்னன்முதலானவர்களோடும் கேகயர்களோ டுங்கூடின விராடராஜனும் மச்சதேசத்தார்களும் ஸால்வனுடைய ஸைனிகர்களும் வேகமாகத் துரோணரை எதிர்த்தார்கள். சத்துருக்க ளாலே நான்குபக்கமும் சூழப்பட்ட துரோணரைக்குறித்து ஆயிரக் கணக்கான ராஜகுமாரர்கள் துச்சாஸனனைமுன்னிட்டுக் கிட்டநெருங்கி னார்கள். அரசரே! பிறகு, அவர்களுக்கும் உம்முடைய வில்லாளி களுக்கும் யுத்தம் நேர்ந்துவிட்டது. உலகம் புழுதியினால் மறைபட் டும் பாணஸமூகங்களால் மூடப்பட்டுமிருக்கையில் எல்லாம் பயமடைந் தன. ஒன்றும் அறியப்படவில்லை. சேனையிலுண்டான புழுதியினாலே எல்லாம் மூடப்பட்டிருக்கும்பொழுது எல்லாம் வரம்புகடந்து நின்றன. அர்ஜுனனோ அத்தருணத்தில் பெரும்பகைவர்களை யுத்தத்தில் ஜயித்து அப்பொழுது ஸன்னத்தர்களாக நிற்கின்றவர்களை எதிர்த்துப் போர்புரிந்து அவர்களைத் தாண்டிச்சென்றான்.

---

## நூற்றொன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன் ரணகளத்தில் குதிரைகளின் பசிதாகங்களைத் தீர்ப்பதற்காகப் பாணங்களினால் தடாகம் உண்டுபண்ணி, வீடும் அமைத்தது.)

அப்பொழுது, துரோணருக்குப் பாண்டவர்களோடு யுத்தம் நடந்துவருகையில் அதிதிதேவியின் குமாரனான ஸூர்யனும் கிரணங்களோடுகூட அஸ்தமனத்துக்குத் திரும்பினான். அப்பொழுது கௌரவர்கள் புழுதியினால் வியாபிக்கப்பட்டவர்களும் யுத்தத்தில் முயற்சி குறைந்தவர்களுமானார்கள். யுத்தபூமியில் நிற்கின்றவர்களுக்கும் யுத்தஞ்செய்கின்றவர்களுக்கும் மறுபடியும் திரும்பி வருகின்றவர்களுக்கும் தோல்வியடைவிக்கப்படுகின்றவர்களுக்கும் ஜயிக்கின்றவர்களுக்கும் அந்தப் பகல் மெதுவாகச் சென்றது. அவ்வாறு அந்தச் சேனைகள் ஜயத்தைவிரும்பிப் போர்புரிந்துகொண்டிருக்கும்பொழுது அர்ஜுனனும் வாஸுதேவரும் ஸைந்தவனைக்குறித்துச் சென்றார்கள். அர்ஜுனன் கூர்மையான அம்புகளாலே ரதம் செல்லுவதற்குத் தகுதியான எந்தவழி ஏற்படுத்தினானோ அந்த வழியாக ஜநார்த்தனர் சென்றார். மன்னரே! மஹாத்மாவான பாண்டவனுடைய தேரானது எந்த எந்த இடத்தில் செல்லுகின்றதோ அந்த அந்த இடத்தில் உம்முடைய சேனைகள் பிளக்கப்பட்டன. வீர்யமுடையவரான வாஸுதேவர் உத்தமமும் அதமமும் மத்யமமுமான மண்டலகதிகளைக் காண்பித்துக்கொண்டு ரதத்தை நடத்துவதிலுள்ள ஸாமர்த்தியத்தைக் காண்பித்தார். பெயர் வெட்டப்பட்டவையும் காலாக்நிக்கு ஸமமானவையும் ஸூக்ஷ்மமான தோலினால் நுனியில் கட்டப்பட்டவையும் நல்லகணுக்களுள்ளவையும் பெரிய உருவமுள்ளவையும் நெடுந்தூரம் செல்லுகிறதன்மையையுடையவையும் மூங்கிலினாலும் உருக்கினாலும் செய்யப்பட்டவையும் உக்ரமானவையும் பலவிதமான சத்ருக்களைப் பக்ஷிக்கின்றவையுமான அந்தப் பாணங்கள் யுத்தரங்கத்தில் பக்ஷிகளோடுகூடிப் பிராணிகளுடைய ரக்தத்தைப் பானஞ்செய்தன. அர்ஜுனன் தேரிலிருந்துகொண்டு எதிரில் ஒருகுரோசதூரத்திலுள்ள (சத்துருக்களைக்குறித்து) எந்த அம்புகளைப் பிரயோகஞ்செய்கிறானோ அந்த அம்புகள் அவனுடைய ரதமானது ஒரு குரோசதூரம் சென்றபிறகு சத்துருக்களைக் கொல்கின்றன. அரசரே! கேசவர் எல்லாவுலகத்தையும் ஆச்சரியமடையும்படி செய்துகொண்டு கருடனுக்கும் காற்றிற்கும் ஸமமான

வேகமுள்ளவையும் நன்றாக இழுக்கின்றவையுமான குதிரைகளால் சென்றதுபோல ஸூர்யனுடைய ரதமாவது இந்திரனுடைய ரதமாவது ருத்ரருடைய ரதமாவது குபேரனுடைய ரதமாவது செல்லவில்லை. அவனிபரே! அர்ஜுனனுடைய மனத்திலுள்ள அபிப்பிராயத்தின் படி சீக்ரமாகச்செல்லுகின்ற ரதமானது சென்றதுபோல வேறொருவனுடைய ரதமும் யுத்தத்தில் இதற்குமுன் சென்றதில்லை. அரசரே! பாரதரே! சத்துருவீரர்களைக் கொல்லுகிறவரான கேசவர் யுத்தகளத்தில் புகுந்து சேனையின்மத்தியில் விரைவாகக் குதிரைகளை நடத்தினர். பிறகு, உத்தமமான குதிரைகள் அந்த ரதஸமூகங்களுடைய மத்தியத்தை அடைந்து பசிதாகங்களோடுகூடியவைகளாகி அந்தரதத்தைப் பிரயாஸத்தோடு இழுத்தன. அவைகள் யுத்தத்தில் ஸமர்த்தர்களான வீரர்களாலே அநேக ஆயுதங்களால் பலவாறு அடிக்கப்பட்டும் அடிக்கடி விசித்ரமான மண்டலகதிகளோடு ஸஞ்சரித்தன. அந்தக்குதிரைகள் மனிதர்களோடுகூடக் கொல்லப்பட்டவைகளும் மலைபோலப் பிரகாசிக்கின்றவைகளுமான ஆயிரக்கணக்கான குதிரைகள் யானைகள் தேர்கள் இவைகளின்மீது ஏறிச்சென்றன. இறைவரே! அந்த யுத்தத்தில் காற்றின்வேகம்போன்ற வேகமுடையவைகளான அந்தக் குதிரைகள் மிகக் களைத்தவைகளும் வேகம் குறைந்த நடையுடையவைகளுமாயின. அரசரே! இதனிடையில் வீர்யமுடையவர்களும் அவந்திதேசத்து ராஜகுமாரர்களும் ஸகோதரர்களுமான விந்தாநுவிந்தர்கள் சேனைகளுடன்சேர்ந்து வாடிய குதிரைகளுள்ள பாண்டவனை எதிர்த்தார்கள். அவ்விருவரும் ஸந்தோஷத்துடன் அர்ஜுனனை அறுபத்துநான்கு பாணங்களினாலும் ஜநார்த்தனரை எழுபது பாணங்களினாலும் குதிரைகளை நூறு பாணங்களினாலும் அடித்தார்கள். மஹாராஜரே! மர்மஸ்தானங்களை அறிந்தவனும் யுத்தத்தில் கோபங்கொண்டவனுமான அர்ஜுனன் உட்பதிந்த கணுக்களுள்ளவைகளும் மர்மஸ்தானங்களை உடைக்கின்றவைகளுமான ஒன்பது பாணங்களாலே அவ்விருவரையும் அடித்தான். பிறகு, அவ்விருவரும் கேசவரோடுகூடின அர்ஜுனனை அம்புக்கூட்டத்தினால்மூடிக் கோபத்துடன் ஸிம்மநாதத்தையும் செய்தார்கள். வெண்மையான குதிரைகளுள்ள தனஞ்சயன் அவ்விருவருடைய கைப்பிடியிலுமுள்ள இரண்டு விற்களை ரணகளத்தில் இரண்டு அர்த்தசந்திரபாணங்களாலே அறுத்து மறுபடியும் விரைவாக வேறு பாணங்களாலே பொன்னால் விளங்கிக்கொண்டிருக்கிற கொடிகளையும் விரைவாக அறுத்தான். அரசரே! பிறகு, அவந்திதேசத்து ராஜகுமாரர்கள் வேறு இரண்டுவிற்களைக் கையில்கொண்டு

யுத்தத்தில் மிகுந்த கோபமுற்றுப் பாண்டவனை அப்பொழுது அம்பு களாலடித்தார்கள். பாண்டுநந்தனனான தனஞ்சயன் மிகுந்த கோபங் கொண்டு மறுபடியும் அவ்விருவருடைய இரண்டு விற்களையும் இரண்டு பாணங்களால் சீக்கிரமாக அறுத்து, அவ்வாறே ஸுவர்ணமயமான கணுக்களுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையுமான வேறுபாண ங்களாலே விரைவாக அவர்களுடைய குதிரைகளையும் இரண்டு ஸார திகளையும் பரிவாரங்களோடுகூடின இரண்டுபின்புறரக்ஷகர்களையும் அடி த்து, மூத்தவனுடைய தலையை ஒருக்ஷுரப்ரத்தினால் உடலிலிருந்து அறுத்தான். கொல்லப்பட்ட அவன் காற்றினால் முறிக்கப்பட்ட மரம் போலக் கீழேவிழுந்தான். விந்தன் கொல்லப்பட்டதைக்கண்டு பிரதாப சாலியும் மிக்கபலமுடையவனுமான அநுவிந்தன் குதிரைகள் கொல்லப் பட்ட தேரைவிட்டுவிட்டுக் கதையையெடுத்துக்கொண்டு தன்பிராதாவினு டைய வதத்தை நினைத்துக்கொண்டவனாகி யுத்தகளத்தில் அர்ஜுனனை எதிர்த்து வந்தான். மஹாரதனும் ரதிகர்களுள் சிறந்தவனுமான அநு விந்தனே கோபமுள்ளவனாகிக் கதாயுதத்தோடு நர்த்தனஞ்செய்கின்ற வன்போலிருந்துகொண்டு அந்தக்கதையினாலே மதுஸூதனரை நெற்றி யில் அடித்து மைநாகமென்ற பர்வதத்தைப்போல அவரை அசைப்பதற் குச் சக்தியற்றவனானான். அர்ஜுனன் ஆறு அம்புகளாலே அவனுடைய கழுத்தையும் கால்களையும் கைகளையும் தலையையும் அறுத்தான். நன் றாக அறுக்கப்பட்ட அந்த அநுவிந்தன் மலையின்சிகரம்போலக் கீழே விழுந்தான். அரசரே! பிறகு, அவ்விருவரும் கொல்லப்பட்டதைப் பார்த்து அவர்களைத்தொடர்ந்துவந்த போர்வீரர்கள் மிக்ககோபங்கொண் டவர்களாகி நூற்றுக்கணக்காகப் பாணங்களை இறைத்துக்கொண்டு அர் ஜுனனை எதிர்த்து வந்தார்கள். பரதஸ்ரேஷ்டரே! அர்ஜுனன் அவர் களைப் பாணங்களால் சீக்கிரமாக வதஞ்செய்து பனிநீங்கியகாலத்தில் தீயானது காட்டை எரித்துப் பிரகாசிப்பதுபோல விளங்கினான். தனஞ் சயன் அவ்விருவருடைய சேனையையும் பிரயாஸத்தினால் தாண்டி உதிக் கின்ற சூரியன் மேகத்தைவிட்டுவிலகி விளங்குவதுபோல விளங்கினான். பரதஸ்ரேஷ்டரே! அவனைக்கண்டு கௌரவர்கள் பயந்தார்கள்; மறுபடி யும் ஊக்கத்துடன் பார்த்தனைச் சூழ்ந்து எதிர்த்தார்கள். கௌரவஸேனா வீரர்கள் அந்த அர்ஜுனனைக் களைப்படைந்தவனாகக்கண்டும் ஸைந்த வனைத் தூரத்திலிருப்பவனாக அறிந்தும் உரத்தஸிம்மநாதத்துடன் நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். மிக்க பரபரப்புள்ள அந் தச் சத்துருவீரர்களைப்பார்த்துப் புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனன் புன்னகைசெய்து தாசார்ஹரை நோக்கி, 'கிருஷ்ணரே!, குதிரைகள்

அம்புகளால் அடிக்கப்பட்டுக் களைத்திருக்கின்றன. ஸைந்தவனோ தூரத்தில் இருக்கிறான். இத்தருணத்தில் அடுத்துச்செய்யவேண்டியதும் நீர் தக்கதென்று விரும்புவதுமான காரியத்தை உள்ளபடி நீர் சொல்லும். தேவரீர் எப்பொழுதும் பேரறிஞரன்றோ? தேவரீரை நாதராகக்கொண்டே பாண்டவர்கள் இந்த யுத்தத்தில் பகைவர்களை வெல்லப்போகிறார்கள். நான் அடுத்து எந்தக்கார்யத்தைச்செய்யவேண்டுமோ அதை நீர் எனக்குச் சொல்லும். மாதவரே! குதிரைகளை அவிழ்த்துவிட்டு (அவற்றின் உடலில்தைத்த) அம்புகளையெடுத்து அவைகளைச் சுகமாகச்செய்யும்' என்று மெதுவாகக் கூறினான்.

பார்த்தன் இவ்வாறு சொல்ல, கேசவர் அர்ஜுனனைப்பார்த்து 'பார்த்த! நீ சொல்லியது எனக்கும் ஸம்மதமானது' என்று மறுமொழி கூறினார். அர்ஜுனன், 'கேசவரே! நான் எல்லாஸைன்யங்களையும் தடுப்பேன். தேவரீரும் இந்த ஸமயத்தில் அடுத்து எது செய்யத்தக்கதோ அதனை முறைதவறாமல் செய்யும்' என்று சொன்னான். அந்தத்தனஞ்சயன் ரதத்தின்மத்தியிலிருந்து இறங்கி வில்லைக் கையில்எடுத்துக்கொண்டு அஞ்சாமல் மலைபோல் அசைவற்று நின்றான். ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான க்ஷத்ரியர்கள் தனஞ்சயன் பூமியில் நிற்பதை அறிந்து, 'இதுதான் ஸமயம்'என்று, ஆரவாரஞ்செய்துகொண்டு அவனை எதிர்த்து விற்களை இழுத்துப் பாணங்களைத் தொடுத்துக்கொண்டு பெரிய தேர்க்கூட்டத்தோடு அஸஹாயனை அந்த அர்ஜுனனை நான்கு பக்கமும் சூழ்ந்துகொண்டார்கள். அந்த ரணகளத்தில் எல்லா க்ஷத்திரியர்களும் கோபமுற்று ஸூர்யனை மேகங்கள் மூடுவதுபோல அம்புகளாலே பார்த்தனை மூடிக்கொண்டு நானாவிதமான சஸ்திரங்களை வெளிப்படுத்தினார்கள். ரதிகர்களுள் சிறந்தவர்களான க்ஷத்ரியர்கள், க்ஷத்ரியர்களுள் சிறந்தவனும் மனிதர்களுள் உத்தமனுமான அர்ஜுனனை மதங்கொண்டயானைகள் ஸிம்மத்தை எதிர்த்துவருவதுபோல வேகத்தோடு எதிர்த்தோடி வந்தார்கள். அப்பொழுது கோபங்கொண்ட அர்ஜுனனை அநேகமான சேனைகள் நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டமையால் அவனுடைய பாகுபலமானது பெரிதாகக்காணப்பட்டது. பிரபுவான அர்ஜுனன் நான்குபக்கங்களிலும் சத்துருக்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால்தடுத்து விரைவாக அநேக அம்புகளாலே எல்லாவீரர்களையும் மூடினான். அரசரே! அந்த யுத்தகளத்தில் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற பாணங்களுடைய உரைதலால் அதிக ஜ்வாலையுள்ள நெருப்பு மிகஉண்டாயிற்று. பகைவர்களைக் கொல்பவனே! இரத்தத்தால் நனைக்கப்பட்டவர்களும் பெருமூச்சு விடுகின்றவர்களுமான மஹாவில்லாளி

களாலும் நன்றாகப்பிளக்கப்பட்டவைகளும் கனைக்கின்றவைகளுமான குதிரைகளாலும் யானைகளாலும் முயற்சியுள்ளவர்களும் யுத்தத்தில் ஜயத்தை விரும்புகின்றவர்களும் ஒரே கார்யத்தில் பற்றுதலுள்ளவர் களும் கோபங்கொண்டவர்களுமான அநேகசத்துருவீரர்களாலும் அந்த அந்தவிடத்தில் தாபமுண்டானதுபோலிருந்தது. அப்பொழுது பார்த் தன் அம்புகளாகிற அலைகளுள்ளதும் கொடிமரங்களாகிற சுழல்களை யுடையதும் யானைகளாகிற முதலைகளுள்ளதும் காலாட்களாகிற மீன் களாலே கலக்கப்படுவதும் புழுதியாகிற ஜலமுள்ளதும் தலைப்பாகை களாகிற ஆமைகளுள்ளதும் குடைகளும் கொடிகளுமாகிற நுரைவரி சைகளுள்ளதும் யானைகளுடைய சரீரங்களாகிற பாறைகளால் நிரப்பப் பட்டதும் ஒருவராலும் தாண்டமுடியாததும் சங்கதுந்துபிகளின் முழக்கமுள்ளதும் மனத்தினாலெண்ணமுடியாததும் கரையற்றதும் கலக்கமுடியாததுமான தேர்க்கூட்டமாகிற ஸமுத்திரத்தைக் கரை போலிருந்துகொண்டு அம்புகளாலே தடுத்தான்" என்று கூறினான்.

திருதராஷ்டிரன், "அர்ஜுனன் பூமியையடைந்தும் கேசவர் குதி ரைகளைக் கையில்பிடித்துக்கொண்டிருக்கும்படியான அவ்வித ஸமயத் தைப்பெற்றும், (நம்மைச்சேர்ந்தவர்களாலே) பார்த்தன் ஏன் கொல்லப் படவில்லை?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அரசரே! ரதத்திலிருக்கின்ற எல்லா அரசர்களும், பூமியிலிருக் கின்ற பார்த்தனாலே வேதஸம்பந்தமில்லாத வாக்யம்போல உடனே தடுக்கப்பட்டார்கள். அந்தப்பார்த்தன் பூமியிலிருந்தும் ரதத்தின் மீதிருக்கின்ற எல்லாஅரசர்களையும், லோபமானது எல்லாநற்குணங் களையும் தடுப்பதுபோல ஒருவனாயிருந்தே தடுத்தான். பிறகு, யுத்த களத்தில் மிக்க புஜபலமுள்ளவரான ஜநார்த்தனர், பரபரப்பில்லாமல் நண்பனும் புருஷச்ரேஷ்டனுமான அர்ஜுனனைப்பார்த்து, 'அர் ஜுனா! இந்த யுத்தரங்கத்தில் குதிரைகளுக்குக் குடிப்பதற்குப்போது மான தண்ணீரில்லை; இவைகள் குடிக்கும் தண்ணீரை விரும்புகின்றன. ஸ்நானத்தை விரும்பவில்லை' என்று சொல்லலும், அர்ஜுனன், 'இதோ இருக்கிறது' என்று சொல்லிக்கொண்டு பரபரப்பில்லாமல் பூமியை அஸ்திரத்தினால்வெட்டிக் குதிரைகள் குடிக்கக்கூடியதும் ஹம்ஸங்களா லும் நீர்க்காக்கைகளாலும் நாற்புறத்திலும் சூழப்பட்டதும் சக்கரவாகங் களால் விளங்குகின்றதும் மிக்கவிஸ்தாரமானதும் தெளிந்த தண்ணீ ருள்ளதும் நன்றாய்மலர்ந்திருக்கின்ற சிறந்த தாமரைமலர்களுள்ளதும் ஆமைகள் மீன்கள் இவைகளுடைய கூட்டங்களால் நான்குபக்கங்களி

லும் வியாபிக்கப்பட்டதும் சூழ்ந்ததும் ரிஷிகளாலே அடையப்பட்டதும் மங்களகரமானதுமான ஒரு தடாகத்தை உண்டுபண்ணினான். ஒரு க்ஷணத்திலுண்டுபண்ணப்பட்ட தடாகத்தைப்பார்ப்பதற்கு நாரத மஹரிஷியானவர் வந்துசேர்ந்தார். விஸ்வகர்மாவைப்போல அத்புதமான கார்யத்தைச்செய்கிறவனான பார்த்தன் அம்புகளையே விட்டங்களாகவும் ஸ்தம்பங்களாகவும் மேற்கூரைகளாகவுமுடையதும் ஆச்சரியகரமாயுள்ளதுமான அம்புமயமான ஒருவீட்டை உண்டுபண்ணினான். பிறகு, கோவிந்தர் மஹாத்மாவான பார்த்தனாலே அந்த அம்புமயமான வீடானது கட்டப்பட்டவுடன் சிரித்துக்கொண்டு, 'நல்லது, நல்லது' என்று சொன்னார்.

---

## நூறுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(க்ருஷ்ணன் குதிரைகளைக் களைப்பாற்றியபின் தேரிற்பூட்ட, க்ருஷ்ணனும் அர்ஜுனனும் தேரேறி ஜயத்ரதனை எதிர்த்துச் செல்லுகிறது.)

மஹாத்மாவான கௌந்தேயனாலே அந்த ஜலம் உண்டுபண்ணப்பட்டும் சத்துருஸைன்யமானது தாண்டப்பட்டும் பாணமயமானகிருஹமானது உண்டுபண்ணப்பட்டுமிருக்கையில், மஹாகாந்தியுள்ள வாஸுதேவர் ரதத்தினின்று விரைவாக இறங்கிக் கழுகிறகுகளுள்ள அம்புகளால் விசேஷமாக அடிக்கப்பட்டிருக்கின்ற குதிரைகளை அவிழ்த்துவிட்டார். இதற்குமுன் பார்க்கப்படாத அந்தத் தடாகத்தைக்கண்டு நான்குபக்கங்களிலும் ஸித்தசாரணஸங்கங்கள் ஸைநிகர்கள் இவர்களின் 'நல்லது, நல்லது' என்னும் உரத்தசப்தமானது உண்டாயிற்று. பெரிய தேரின்மீதிருக்கின்றவர்களான யுத்தவீரர்கள், காலாளாகநின்று யுத்தஞ்செய்கின்ற கௌந்தேயனைத் தடுக்கச் சக்தியற்றவர்களானார்கள். அஃது ஆச்சர்யமாயிருந்தது. யானைகளோடும் குதிரைகளோடுங்கூடின தேர்க்கூட்டங்கள் எதிர்த்துவருகையில் அவற்றை விலக்குவதில் புருஷசிரேஷ்டனான பார்த்தன் அப்பொழுது பரபரப்பைப்பாராட்டவில்லை. அந்த அரசர்கள், பாண்டவனைக்குறித்துப் பாணஸமூஹங்களைப் பிரயோகித்தார்கள். தர்மாத்மாவும் சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனும் இந்திரபுத்திரனுமான அர்ஜுனன் துன்பத்தை அடையவில்லை. ஸமுத்திரம் நதிகளை உட்கொள்ளுவதுபோல வீர்யமுள்ளவனான பார்த்தன் வருகின்ற அனேகபாணக்கூட்டங்களையும் கதாயுதங்களையும் ஈட்டிகளையும் விழுங்கினான். அவன் அதிகமான அஸ்திரவேகத்தாலும் பாகு

பலத்தாலும் எல்லாராஜஸ்ரேஷ்டர்களுடைய அந்த உத்தமமான பாணங்களையும் விழுங்கினான். மகாராஜரே! வாசுதேவர் பார்த்தன் இருவருடைய பெரிய ஆச்சர்யகரமான அந்த விக்கிரமத்தையும் (கண்டு) கௌரவர்கள் புகழ்ந்தார்கள். கௌரவர்கள், 'பார்த்தனும் கோவிந்தரும் ரணகளத்தில் குதிரைகளை ஜலத்தைக்குடிக்கும்படி செய்ததைக்காட்டிலும் மிக்க ஆச்சரியகரமானது உலகத்தில் எது உண்டாகப்போகிறது? அல்லது எதுதான் முன் உண்டாகியிருக்கிறது?' என்று சொன்னார்கள். பிரபுவே! புருஷோத்தமர்களான அவ்விருவரும் நம் விஷயத்தில் அதிக பயத்தை உண்டுபண்ணினார்கள். உக்ரமான சக்தியையும் வெளிப்படுத்தினார்கள். பொங்கிவருகின்ற ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோல ரணகளத்தில் பார்த்தன் ஒருவனே உம்முடைய சேனையைத் தடுத்தான். பாரதரே! பார்த்தனுடைய அம்புகளால் வேயப்பட்ட அந்த வீட்டில், பக்ஷிகள் ஆகாயத்தை அடைந்து ஸஞ்சரிப்பதுபோல ஸஞ்சரித்தன. ஐயா! யுத்தத்தில் நிற்கின்ற அந்த அர்ஜுனனை நோக்கி உம்முடையபடைகளுள் உம்மைச்சேர்ந்தவன் ஒருமனிதனாவது மிகுந்த கோபத்தோடு எதிர்த்துச்செல்லவில்லை. அரசரே! உம்முடைய யுத்தவீரர்களனைவரும் அந்த யுத்தகளத்தில் கோவிந்தரையும் பாண்டுகுமாரனான தனஞ்சயனையும் பார்த்து மனநிலைமையை இழந்தவர்களானார்கள். பாரதரே! பிறகு, அர்ஜுனனால் ரணகளத்தில் ஏற்படுத்தப்பட்ட பாணமயமான வீட்டில் செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவரான ஸ்ரீ வாஸுதேவர் ஸ்திரீகளுக்கு நடுவிலிருப்பவர்போலப் புன்சிரிப்புள்ளவராகியும் உம்மைச்சேர்ந்த எல்லைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கவலையற்றவராகியும் அக்குதிரைகளைப் புரளவிட்டார். மன்னரே! செந்தாமரைமலர்போன்ற கண்களையுடைய ஸ்ரீ கிருஷ்ணர் எல்லா யுத்தவீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பூமியில் புரண்டு எழுந்திருந்த குதிரைகளை இரண்டு கைகளாலும் நன்றாகத் துடைத்தார். குதிரைக்குச் செய்யவேண்டிய வேலையில் ஸமர்த்தரான ஸ்ரீ கண்ணபிரான் அக்குதிரைகளுடைய சிரமம் பலக்குறைவு வாயில்நுரைதள்ளுதல் நடுக்கம் காயங்கள் இவையனைத்தையும் போக்கினார். அவர் இருகைகளாலும் பாணங்களைப்பிடுங்கி அக்குதிரைகளைத்துடைத்து முறைப்படி திருப்பி ஜலத்தைக் குடிக்கும்படிசெய்தார். அவர், தண்ணீர் குடித்தும் ஸ்நானஞ்செய்தும் தீனிதின்றும் சிரமம்நீங்கின அந்தக் குதிரைகளை மகிழ்ச்சியுடன் மறுபடியும் சிறந்த ரதத்தில் பூட்டினார். ஆயுததாரிகளெல்லாருள்ளும் சிறந்தவரும் சூரகுலத்தில் தோன்றியவரும், மஹாதேஜஸ்

வியுமான அந்தக்கிருஷ்ணர் அர்ஜுனனோடுகூடவே அந்த உத்தமமான ரதத்தின்மீதேறி விரைவாகச்சென்றார். கோவிந்தர் அவனுடையகுதிரைகளை நான்முறைப்படி தேரில்பூட்டி மஹாரதர்களைத் துரும்பாக எண்ணி ரணகளத்தில் ஸஞ்சரித்தார். போர்க்களத்தில் தண்ணீரைக் குடித்து (விடாய்நீங்கின) குதிரைகளுள்ள மகாரதனான அர்ஜுனனுடைய தேரைக்கண்டு கௌரவஸேனைகளிலுள்ள உத்தமர்களான யுத்த வீரர்கள் மறுபடியும் மனநிலைதவறினவர்களானார்கள். அரசரே! விஷப் பற்களை இழந்த பாம்புகள்போல் அந்த யுத்தவீரர்கள் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'நாம் கெட்டோம்; ஆச்சரியம்; பார்த்தனும் கிருஷ்ணனும் தாண்டிச்சென்று விட்டார்கள்' என்று தனித்தனியாகச் சொல்லிக் கொண்டதுடன், மயிர்சிலிர்த்தலை உண்டுபண்ணக்கூடிய வியக்கத்தக்க அந்த ஸைன்யத்தை நான்குபக்கத்திலும் பார்த்து, 'சீக்கிரப்படுங்கள்; இது இராது' என்று சொல்லி அலறினார்கள். பகைவர்களை வாட்டுகிறவர்களும் கவசம்பூண்டவர்களுமான அவ்விருவரும், எல்லாக்ஷத்திரியர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே சிறுகுழந்தையானது மரப்பாவையோடு (விளையாடுவது)போல ஒருதேருடன் (விளையாட்டாக) நம்முடைய ஸேனையைப் பீடித்து, கூச்சலிடுகின்றவர்களும் முயற்சிசெய்கின்றவர்களுமான எல்லா அரசர்களிடத்திலும் தங்களுடைய வீர்யத்தைக்காண்பித்துத் தடையற்றுச் சென்றார்கள். அரசரே! அவர்கள் முற்காலத்தில் ஜம்பனுடைய வதத்தைவிரும்பி இந்திரனும் விஷ்ணுவும் தேவாஸுரயுத்தத்தில் அஸுரர்களைத் துரும்பாகவெண்ணி ஸஞ்சரித்ததுபோல ஸஞ்சரித்தார்கள். செல்லுகின்ற அவ்விருவரையும் மறுபடியும் பார்த்து அப்பொழுது சிலஸைனிகர்கள், 'கௌரவர்களே! நீங்களெல்லோரும் கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் கொல்லும் விஷயத்தில் விரைவுபடுங்கள். கிருஷ்ணன் எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ரதத்தைப்பூட்டி நம்மைப் போரில் அடித்துவிட்டு ஜயத்ரதனைக்கொல்வதற்குச் செல்கிறான்' என்று கூறினார்கள். இறைவரே! அந்த யுத்தகளத்தில் சிலஅரசர்கள் அந்தப்பெரிய ஆச்சரியத்தைக் கண்டு, 'இது இதற்குமுந்தி நம்மால் பார்க்கப்படாதது' என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். பாரதரே! அச்சமயத்தில் அரசர்கள், 'துர்யோதனனுடைய குற்றத்தினால் எல்லாச்சேனைகளும் நாசமடைந்தன. திருதராஷ்டிர ராஜனும் நாசத்தையடைந்தான். க்ஷத்திரியஜாதியும் ஸமஸ்தமான பூமியும் நாசத்தை மிகஅடைந்துவிட்டன. அதை அரசன் அறியவில்லை. யமனுடைய வீட்டையடைந்தபின் ஸிந்துராஜனை ஜயத்ரதன்விஷயத்தில் செய்யவேண்டிய கார்யத்தை, வீணான

எண்ணமுள்ளவனும் உபாயங்களை அறியாதவனுமான துர்யோதனன் செய்யட்டும்' என்று இவ்வாறு பேசிக்கொண்டார்கள். பிறகு, பாண்டவன் ஸூர்யன் மேற்கே சாய்ந்திருக்கும்பொழுது, தண்ணீரைக்குடித்து மனக்களிப்புற்ற குதிரைகளோடு அதிசீக்கிரமாக ஸைந்தவனைக்குறித்துச் சென்றான். பெரியகைவன்மையுள்ளவனும் சஸ்திரங்களைத்தரித்திருக்கின்ற எல்லாவீரர்களுள்ளும் உத்தமனும் வேகமாகச்செல்லுகின்றவனும் கோபமுற்ற அந்தகனைப்போன்றவனுமான அந்த அர்ஜுனனைக் கௌரவஸைனிகர்கள் தடுப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பிறகு, பகைவர்களை வாட்டுகிறவனான பாண்டவன் ஸிம்மம் மான்கூட்டங்களைத் துரத்திக்கலக்குவதுபோல ஸைந்தவன் நிமித்தமாகச் சேனையைத் துரத்திக் கலக்கினான். வாஸுதேவரும் ஸைன்யங்களில் நுழைந்து சீக்கிரமாகக் குதிரைகளை நடத்திக்கொண்டு கொக்கைப்போல வெண்மையான பாஞ்சஜன்யத்தை ஊதினார். கௌந்தேயனாலே எதிரில் பிரயோகிக்கப்படுகிற அம்புகள் பின்புறத்தில் விழுந்தன. ஏனெனில், காற்றின் வேகம்போன்ற வேகமுடைய குதிரைகள் பாணவேகத்தைக்காட்டிலும் அதிக வேகத்தோடு (ரதத்தை) இழுத்துச்சென்றன. பிறகு, ஜயத்ரதனுடைய வதத்தை விரும்புகின்ற தனஞ்சயனைக் கோபங்கொண்ட அரசர்களும் மற்ற அநேக க்ஷத்ரியர்களும் சூழ்ந்துகொண்டார்கள். ஸைன்யங்கள் எதிர்த்துச்சென்றபொழுது துரியோதனன் சிறிது நிற்கின்றவனும் புருஷஶ்ரேஷ்டனுமான பார்த்தனுக்குப்பின் மஹாயுத்தத்தில் விரைவாக வந்தான். காற்றினால் நன்றாக அசைக்கப்படும் கொடிச்சீலைகளுள்ளதும் மேகம்போல ஒலிக்கின்றதும் பயங்கரமானதும் வானரக்கொடியுள்ளதுமான அந்த ரதத்தைப்பார்த்து ரதிகர்கள் வியஸனமுற்றனர். பிறகு, ஸூர்யன் புழுதியினாலே நான்குபக்கமும் அதிகமாக மூடப்பட்டான். ரணகளத்தில் அம்புகளினாலே பீடிக்கப்பட்ட யுத்தவீரர்கள் கிருஷ்ணார்ஜுனர்களைப் பார்க்கஇயலாதவராயினர்.

---

## நூற்றோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஜயத்ரதனை எதிர்த்துச் செல்லமுயன்ற அர்ஜுனனைத் துரியோதனன் தடுத்தது.)

அரசரே! தாண்டிச்சென்றவர்களான வாஸுதேவர் தனஞ்சயன் இருவரையுங்கண்டு உம்மைச்சேர்ந்த வீரர்களுக்குப், பயத்தினால்

கொழுப்புக்கள் வெளியில் சரிந்தாற்போலாயின. அப்பொழுது மகாபல சாலிகளான எல்லாக்கௌரவ வீரர்களும் தங்களுடைய மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டவர்களும் எதிர்ப்பதில் ரோஷமுள்ளவர்களும் வெட்கமுள்ளவர்களும் பௌருஷத்தினால் தூண்டப்பட்டவர்களுமாகத் தனஞ்சயனை எதிர்த்தார்கள். போர்க்களத்தில் கோபத்துடனும் பொறுமையுடனும் பாண்டவனை (எதிர்த்துச்) சென்றவர்கள் ஸமுத்ரத்தினின்று நதிகள் திரும்பிவாராததுபோல இன்னும் திரும்பிவரவில்லை. நாஸ்திகர்கள் வேதங்களிடத்திலிருந்து திரும்புவதுபோலச் சில அஸத்துக்கள் (யுத்தத்தினின்று) திரும்பினார்கள். அந்த வீரர்கள் நரகத்தை யடைவதற்குக் காரணமான பாவத்தைப் பெற்றார்கள். த்ரோணிகளுடைய படையைத்தாண்டி விடுபட்டவர்களான அந்த இரண்டு புருஷஸ்ரேஷ்டர்களும், ராகுவினுடைய முகத்தினின்றும் விடுபட்ட சந்திர சூரியர்கள்போலக் காணப்பட்டார்கள். பெரிய வலையைக்கிழித்துக் கொண்டுவெளியில்வந்த இரண்டுமத்ஸ்யங்கள்போலக் கிருஷ்ணார்ஜுனர்களிருவரும் அந்தச்சேனைக்கூட்டத்தை ப்ரமமில்லாமல் பிளந்து கொண்டு வெளியில் வந்தவர்களாகக் காணப்பட்டார்கள். மஹாத்மாக்களான அவ்விருவரும் எவ்விதத்தினாலும் உடைக்கப்படாததும் சஸ்திரங்களால் நெருங்கியதுமான துரோணருடைய படையிலிருந்து விடுபட்டவர்களாகி உதித்திருக்கின்ற இரண்டுபிரளயகால சூரியர்கள்போலக் காணப்பட்டார்கள். நெருப்புப்போல உக்ரமான மகரத்தினுடைய வாயினின்றும் விடுபட்ட இரண்டு மத்ஸ்யங்களைப்போல, சத்துருக்களுடைய அஸ்திர சஸ்திர ஸங்கடத்தினின்றும் விடுபட்டவர்களான அந்த மஹா புருஷர்களிருவரும் பகைவர்களுக்கு அனர்த்தத்தை விளைவிக்கின்றவர்களாகக்காணப்பட்டார்கள். மேலும் அவ்விருவரும் ஸமுத்திரத்தை இரண்டுமகரங்கள் கலக்குவதுபோலச் சேனையைக் கலக்கினார்கள். அப்பொழுது அவ்விருவரும் துரோணருடைய சேனையிலிருக்கையில் உம்மைச் சேர்ந்தவர்களும் உம்முடைய புத்திரர்களும், 'இவ்விருவரும் துரோணரைத்தாண்டிச் செல்லப்போகிறதில்லை' என்று எண்ணினார்கள்; மஹாராஜரே! துரோணருடைய படையைத்தாண்டி வந்தவர்களும் மகாகாந்தியுள்ளவர்களுமான அவ்விருவரையும்பார்த்து ஸிந்துராஜனுடைய உயிரில் ஆசையற்றவர்களானார்கள். அரசரே! பிரபுவே! கிருஷ்ணார்ஜுனர்கள் துரோணரிடமிருந்தும் க்ருதவர்மாவிடமிருந்தும் விடுதலை அடையமாட்டார்களென்பதனால் ஸிந்துராஜனுடைய உயிரில் பெரிய ஆசை இருந்தது. மஹாராஜரே! சத்துருக்களைத்தபிக்கச்செய்கிறவர்களான அவ்விருவரும் அந்த ஆசையை வீணாகச்செய்து, துரோண

ருடைய சேனையையும் தாண்டமுடியாத போஜனுடைய சேனையையும் தாண்டினார்கள். பிறகு, அங்குள்ளவர்கள், (சேனையைத்)தாண்டி நெருப்புப்போல விளங்குகின்ற கிருஷ்ணார்ஜுனரிருவரையும் பார்த்து ஸிந்துராஜனுடைய உயிரில் ஆசையற்றவர்களாகி ஒன்றும்பேசவில்லை. பயமற்றவர்களும் (பகைவர்களுக்குப்) பயத்தைவிருத்திபண்ணுகிறவர்களுமான கிருஷ்ணனும் தனஞ்சயனும் ஜயத்ரதனுடைய வதத்தைப்பற்றின அவ்விதமான வார்த்தைகளை ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். 'அந்த ஸைந்தவன் மஹாரதர்களான ஆறுதார்த்தராஷ்டிரர்களால் மத்தியில் வைக்கப்பட்டிருக்கிறான். நம்முடைய கண்களுக்குப் புலப்படுவானாகில் அவன் நம்மால் விடப்படமாட்டான். யுத்தத்தில் இவனைப் பாதுகாப்பதற்காகத் தேவர்களுடைய கூட்டங்களோடுகூடின இந்திரன் வந்தாலும் நாம் இவனைக் கொல்வோம்' என்று சொல்லிக்கொண்டார்கள். இவ்வாறு மிக்கபுஜபலமுடையவர்களான கிருஷ்ணார்ஜுனர்கள் ஸிந்துராஜனுடைய வதத்தை எதிர்பார்த்து ஒருவரோடொருவர் ஸம்பாஷித்துக்கொண்டிருக்கும் ஸமயத்தில் உம்முடைய புத்திரர்கள் பலவாறாக ஆரவாரஞ்செய்தார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களான அவ்விருவரும், பாலைவனத்தைத்தாண்டிச்செல்லுகின்ற தாகங்கொண்ட இரண்டு யானைகள் தண்ணீரைக்குடித்து விடாயாறுவதுபோல விடாயாறினார்கள். யௌவனமுள்ளவர்களான அவ்விருவரும், புலிகளும் சிங்கங்களும் யானைகளுமாகிய இவைகளால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்ட மலைகளைத்தாண்டி மரணபயத்தைவிட்டவர்களான இரண்டு வர்த்தகர்கள்போலக் காணப்பட்டார்கள். அவ்விருவரையும் பார்த்து, 'இவ்விருவருடைய முகங்களின் நிறமும் இவ்விதமன்றோ இருக்கிறது' என்று எண்ணி நான்குபக்கங்களிலும் ஆரவாரித்தார்கள். ஜ்வலிக்கின்ற அக்நிபோன்றவரும் ஸர்ப்பம்போன்ற உருவமுள்ளவருமான துரோணரிடத்தினின்றும் ஸமுத்திரத்துக்கொப்பான அவருடைய ஸேனையினிடத்தினின்றும் மற்றுமுள்ள அரசர்களிடத்தினின்றும் விடுபட்டவர்களும் பிரகாசிக்கின்ற இரண்டு சூரியபிம்பம்போன்றவர்களும் சத்துருக்களையடக்குகிறவர்களுமான அவ்விருவரும் ஸமுத்திரத்தைத் தாண்டினவர்கள்போல ஸந்தோஷமுள்ளவர்களாகக் காணப்பட்டார்கள். பெரிய ஆயுதத்திரளிலிருந்தும் துரோணராலும் கிருதவர்மாவினாலும் காக்கப்பட்ட சேனையிலிருந்தும் விடுபட்டுப் பிரகாசிக்கின்றவர்களான அவ்விருவரும் யுத்தத்தில் இந்திரனும் அக்நியும்போலக்காணப்பட்டார்கள். துரோணருடைய அம்புகளாலே இரத்தப்பெருக்குள்ளவர்களாகச் செய்யப்பட்ட கிருஷ்ணனும் அர்ஜுனனும் கூர்மையுள்ள பாணங்களா

லடிக்கப்பட்டுக் கோங்குமரங்களால் நிறைந்த இரண்டு மலைகள்போல விளங்கினார்கள். சிறந்த வில்லாளிகளும் மேன்மைபெற்றவர்களும் உலகத்தில் பிரஸித்திபெற்றவர்களுமான கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் துரோணருடைய அஸ்திரபலத்தைத்தடுத்ததினால் சக்திகளாகிற ஸர்ப்பங்களால் நெருங்கியதும் இரும்புமயமான அம்புகளாகிற உக்கிரமான சுறுமீன்களுள்ளதும் க்ஷத்திரிய ஸ்ரேஷ்டர்களாகிற ஜலமுள்ளதுமான துரோணராகிற முதலைதங்கிய மடுவினின்று விடுபட்டவர்கள்' என்றும், 'இடிமுழக்கம்போன்ற நாணொலியும் தலத்வநியுமுள்ளதும் மின்னல்போன்ற கதைகளும் கத்திகளுமுள்ளதுமான மேகம்போன்ற துரோணருடைய அஸ்திரங்களாகிற மேகத்தினின்று, இருளிலிருந்து சூரிய சந்திரர்கள் விடுபடுவதுபோல விடுபட்டவர்கள்' என்றும், 'மழைக்காலத்தில் நிறைந்தவையும் பெரிய முதலைகளால் சூழப்பட்டவையும் ஸிந்துநதியை ஆறாவதாகவுடையவைகளுமான ஸமுத்திரகாமிகளான [1]ஐந்து நதிகளைக் கைகளால் நீந்தித் தாண்டினவர்கள்போலும்' என்றும், 'பெருமலைகளாலடர்ந்த கோரமான மஹாநதியைத் தாண்டிக் கரை கண்டவர்களான வழிப்போக்கர்கள்போல யுத்தத்தில் துரோணருடைய அஸ்திரபந்தத்தைத் தாண்டினார்கள்' என்றும் எல்லாப் பிராணிகளும் எண்ணின. ஸமீபத்தில் இருக்கிற ஜயத்ரதனைக்கொல்ல வேண்டுமென்கிறஎண்ணத்தினால் பார்க்கின்ற அவ்விருவரும் கானகத்தினிடையில் புள்ளிமானைப்பிடிக்க எண்ணங்கொண்ட இரண்டுபுலிகள் போல நின்றார்கள். மஹாராஜரே! அவ்விருவருடைய முககாந்தியினாலும் உம்முடைய யுத்தவீரர்கள் ஜயத்ரதனைக் கொல்லப்பட்டவனென்றே எண்ணினார்கள். சிவந்த கண்களையுடையவர்களும் நீண்ட கைகளையுடையவர்களும் சேர்ந்திருக்கின்றவர்களுமான கிருஷ்ணரும் பாண்டவனும் ஸிந்துராஜனைப்பார்த்து அடிக்கடி ஸந்தோஷத்துடன் ஸிம்மநாதஞ்செய்தார்கள். அரசரே! கடிவாளத்தைக் கையில்பிடித்த வாஸுதேவரும் வில்லைக்கையில்கொண்ட பார்த்தனுமாகிய இவர்களுடைய ஒளியானது சூரியன் அக்கினி இவர்களுடைய ஒளிபோலிருந்தது. துரோணருடைய சேனையிலிருந்து விடுபட்டவர்களும் மாம்ஸத்தைப் பார்க்கின்ற இரண்டு கழுகுகள்போல் அருகிலிருக்கிற ஜயத்ரதனைப்பார்க்கின்றவர்களுமான அவ்விருவருக்கும் ஸந்தோஷமே உண்டாயிற்று. ஸமீபத்திலிருக்கின்ற ஸைந்தவனைப்பார்த்துக் கோபங்கொண்ட அவ்விருவரும் மாம்ஸத்தை நோக்கிப் பருந்துகள்வந்து விழு

---

[1] சதத்ரு, விபாசா, இராவதீ, சந்திரபாகா, விதஸ்தா, இவற்றோடு ஸிந்து நதிசேர்ந்து ஆறுநதிகள்.

வதுபோல விரைவாகப் பாய்ந்தார்கள். பிரபுவே! அந்த வாஸுதேவ ரையும் தனஞ்சயனையும் பார்த்து, 'பராக்கிரமசாலியும் துரோணராலே பூட்டப்பட்ட கவசமுள்ளவனும் குதிரைகளுடையஸ்வபாவம் நோக்கம் இவைகளை அறிந்தவனும் அரசனும் உம்முடைய புத்திரனுமான துர்யோதனன் யுத்தகளத்தில் ஒருரதத்தோடு ஸிந்துராஜனைக் காப்பாற்றுவதற்காகச் சென்றான். மன்னரே! பிறகு, உம்முடைய குமாரன் மகிமைபொருந்திய வில்லையுடையவர்களான கிருஷ்ணார்ஜுனர்களைத் தாண்டிச்சென்று எதிரில்வந்து புண்டரீகாக்ஷரை எதிர்த்தான். பிறகு, உம்முடைய குமாரன் தனஞ்சயனை எதிர்க்கவே, எல்லாச்சேனைகளிலும் நான்குவித வாத்யங்களும் குதூகலத்துடன் முழக்கப்பட்டன. அந்த ரணகளத்தில் கிருஷ்ணார்ஜுனர்களுக்கெதிரில் துரியோதனன் நிற்பதைக்கண்டு சங்கவாத்தியங்களின் சப்தங்களோடுசேர்ந்த ஸிம்மநாதங்கள் தோன்றின. பிரபுவே! யுத்தத்தில் உம்முடைய புத்திரனைக் கண்டு அக்னிக்குச் சமமானவர்களும் ஸிந்துராஜனுக்கு ரக்ஷகர்களுமான வீரர்கள் மிக்க ஸந்தோஷமடைந்தார்கள். வேந்தரே! பரிவாரங்களோடுகூடி எதிர்த்துநிற்கின்ற துர்யோதனனைக்கண்டு ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனைப்பார்த்து அந்தச் சமயத்திற்குத் தக்கவைகளான பின்வரும் வார்த்தைகளைச் சொல்லலானார்.

---

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

**(துர்யோதனன் அர்ஜுனனை எதிர்த்து நிற்கையில், ஸ்ரீ கிருஷ்ணன் அவனால் செய்யப்பட்ட தீமைகளை ஞாபகப்படுத்தி அவனைக் கொல்வதற்காக அர்ஜுனனை ஏவியதும் துர்யோதனன் வீரவாதம் பேசியதும்.)**

வாஸுதேவர், 'தனஞ்சய! (சேனைகளைத்) தாண்டிவருகிற இந்தத் துர்யோதனனைப்பார். இவனை ஆபத்தை அடைந்தவனென்று நினைக்கிறேன். இவனுக்குச் சமானனான அதிகன் கிடையான். இவன் தூரத்திலிருந்தேபாயும் ஸ்வபாவமுள்ளவன்; பெரிய வில்லையுடையவன்; அஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவன்; யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவன்; உறுதியான கைப்பிடியுள்ளவன்; விசித்திரமாக யுத்தம் செய்யும் தன்மையுள்ளவன்; த்ருதராஷ்டிர புத்திரனான இவன் மிக்க பலசாலி; மிக்க ஸுகத்துடன் வளர்ந்தவன்; மஹாரதர்களால் பூஜிக்கப்பட்டவன்; ஸமர்த்தன். ஓ! பார்த்தா! எப்பொழுதும் பாண்டவர்களைப்

பகைக்கிறவன். குற்றமற்றவனே! அவனோடு யுத்தஞ்செய்வது இச்சமயத்திற்குத் தகுந்ததென்று யான் நினைக்கிறேன். நம்முடைய யுத்தமாகிற சூதாட்டமானது ஜயத்தின்பொருட்டோ அல்லது வேறுவிதமாவதின்பொருட்டோ இவனிடத்தில் சார்ந்திருக்கிறது. பார்த்த! வெகுகாலமாகச் சேர்த்துவைத்திருக்கிற கோபமாகிறவிஷத்தை இவன்மீது கக்கு. இவனே மஹாத்மாக்களான பாண்டவர்களுடைய அனர்த்தங்களுக்குக் காரணம். அப்படிப்பட்ட இவன் உன்பாணங்களுக்கு இலக்காகிவிட்டான்; பார். சொந்தப்பயனைத் தேடிக்கொள். ராஜ்யத்தை விரும்பின ஓர் அரசன் உன்னோடு எவ்வாறு போர்புரிவான்? தெய்வாதீனமாக இந்தத் துர்யோதனன் இப்பொழுது உன்னுடைய பாணத்திற்கு இலக்காகவந்துவிட்டான். தனஞ்சய! இவனைப் பிராணனை இழக்கும்படி செய். புருஷஶ்ரேஷ்ட! இவன் செல்வச் செருக்கினாலே மதிமயக்கங்கொண்டவன்; துக்கத்தை அடைந்தவனல்லன்; யுத்தகளத்தில் உன் பராக்கிரமத்தை அறியாதவன். பார்த்த! தேவர்களோடும் அஸுரர்களோடும் மனுஷ்யர்களோடுங்கூடின மூவுலகங்களும் யுத்தத்தில் உன்னை ஜயிக்கச் சக்தியுள்ளவையல்ல. அவ்வாறிருக்க, இந்தத் துர்யோதனன் ஒருவன் எவ்வாறு ஜயிக்க வல்லமையுள்ளவனாவான்? பார்த்த! அப்படிப்பட்டஇவன் பாக்யவிசேஷத்தினால் உன்தேரின்அருகில் வந்துவிட்டான். மிக்க புஜபலமுள்ளவனே! இந்திரன் விருத்திராஸுரனைக் கொன்றதுபோல இவனை நீ கொல்வாயாக. குற்றமற்றவனே! இவன் எப்பொழுதும் உனக்கு அனர்த்தத்தை விளைவிப்பதில் முயற்சியுள்ளவன். இவன் சூதாட்டத்தில் கபடத்தினாலே தர்மராஜரை வஞ்சித்தான். (பகைவர்களுடைய) அகங்காரத்தை அடக்குகிறவனே! பாபபுத்தியுடைய இந்தத் துர்யோதனனால் தோஷமற்றவர்களான உங்கள் விஷயத்திலும் எப்பொழுதும் மிகக் கொடிய அநேக கார்யங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பார்த்த! யுத்தத்தில் உத்தமமான புத்தியைச் செலுத்தி அயோக்யனும் எப்பொழுதும் கோபமுள்ளவனும் பேராசையே வடிவுகொண்ட மனிதனுமான இந்தத் துர்யோதனனை ஆலோசியாமல் கொல். பாண்டவ! கபடத்தினால் ராஜ்யத்தைக் கவர்ந்ததையும் வனவாஸத்தையும் திரௌபதியினுடைய கிலேசத்தையும் மனத்திலெண்ணி (இவ்விஷயத்தில்) பராக்கிரமத்தை வெளிப்படுத்து. இவன் தெய்வாதீனமாக உன்னுடைய பாணங்களுக்கு எதிராகநிற்கிறான். பாக்யத்தினாலே காரியத்திற்கு இடையூறுசெய்வதின் பொருட்டு முன்னிலையில்நின்று முயற்சிசெய்கிறான். தெய்வாதீனமாக யுத்தகளத்தில் உன்னோடுயுத்தஞ்செய்ய வேண்டுமென்று விரும்புகிறான்.

பார்த்தனே! விரும்பப்படாமலே எல்லா அபீஷ்டங்களும் பாக்யத்தினுல்பலித்துவிட்டன. பார்த்தனே! முற்காலத்தில் இந்திரன் தேவாஸுரயுத்தத்தில் ஜம்பாஸுரனைக் கொன்றதுபோலக் குலாதமனுன இந்தத் துரியோதனனை இந்த ரணகளத்தில் கொல். இவன் கொல்லப்பட்டவுடன் நாதனற்ற இந்தச் சேனையை நீ பிளக்கலாம். துராத்மாக்களுடைய வைரத்திற்கு உடன்பிறந்த வேரைப் பாக்யவிசேஷத்தினுல் அறுத்துவிடு' என்று கூறினுர்.

பார்த்தன் கிருஷ்ணனைநோக்கி, 'இந்தக்காரியத்தை நான் அவசியம் செய்வேன். மற்ற எல்லாவற்றையும் அலக்ஷியம் செய்துவிட்டுத் துர்யோதனனிருக்குமிடத்தைக்குறித்துச் செல்லும். வெகுகாலமாக நம்முடைய ராஜ்யத்தை இடையூறில்லாமல் அனுபவித்த இந்தத் துர்யோதனனுடைய தலையை யுத்தகளத்தில் என்பராக்கிரமத்தை வெளிப்படுத்தி அறுக்கிறேன். மாதவரே! கிலேசத்தை அனுபவிக்கத்தகாத கிருஷ்ணையினுடையகூந்தலைப்பற்றி இழுத்து அவமானஞ்செய்ததற்குப் பிரதிசெய்ய நான் சக்தியுள்ளவனுவேனு? மாதவரே! யுத்தாங்கத்தில் துர்யோதனனைக்கொன்று முன்ஸம்பவித்த அந்தத் துக்கங்களை எவ்விதத்தினுலாவது நான்போக்கிக்கொள்வேனு?' என்று சொன்னுன். இவ்வாறு சொல்லிக்கொண்டு கிருஷ்ணர்களிருவரும் ஸந்தோஷமுள்ளவர்களாக அந்தத் துர்யோதனராஜனை யுத்தத்தில் நெருங்கவிரும்பி வெண்மைநிறமுள்ள குதிரைகளைத் தூண்டினுர்கள். பரதஸ்ரேஷ்டரே! ஐயா! அவர்களினருகில்வந்து பெரும்பயம் நேர்ந்திருக்கும் போதும் உம்முடைய குமாரன் பயப்படவில்லை. எதிர்த்துவருகின்ற அர்ஜுனனையும் ஹ்ருஷீகேசரையும் துர்யோதனன் தடுத்ததாகிய இவனுடைய செய்கையை எல்லா க்ஷத்ரியர்களுமே கொண்டாடினுர்கள். பிரஜைகளுக்கு நாதரே! அந்த யுத்தத்தில் அரசனைக்கண்டு பிறகு உம்மைச்சேர்ந்த எல்லா ஸைனிகர்களும் கூக்குரல் செய்தார்கள். ஜனங்களுடைய பயங்கரமான அவ்விதப்பேரொலி உண்டாயிருக்கையில், உம்முடைய குமாரன் அதனைப் பொருளாகக்கொள்ளாமல் பகைவர்களைத் தடுத்தான். வில்லாளியான உம்முடைய புத்திரனுலே தடுக்கப்பட்டவனும் சத்துருக்களைத் தவிக்கச்செய்கின்றவனுமான அந்தக் கௌந்தேயன் அதிகமான கோபத்தையடைந்தான். ஒருவருக்கொருவர் பகைகொண்டவர்களான துர்யோதனன் தனஞ்சயன் அவ்விருவரையும் பயங்கரமான உருவமுள்ள அரசர்கள் நான்கு பக்கங்களிலுமிருந்தும் பார்த்தார்கள், பெரியவரே! பரபரப்பை யுடையவர்களான பார்த்தனை

யும் வாஸுதேவரையும்பார்த்து உம்முடைய குமாரன் யுத்தஞ்செய்ய வேண்டுமென்கிற விருப்பத்தோடு அட்டஹாஸத்துடன்கூடியவனாகவே அழைத்தான். பிறகு, உத்ஸாஹமுள்ளவர்களான கிருஷ்ணனும் பாண்டுபுத்திரனான தனஞ்சயனும் பெரிய ஸிம்மநாதஞ்செய்தார்கள். சிறந்த சங்கங்களையும் உரக்க ஊதினார்கள். அதிக ஸந்தோஷமுள்ளவர்களான அவ்விருவரையும் நன்றாகப்பார்த்து எல்லாக்கௌரவர்களும் உம்முடைய புத்திரனுடைய உயிரில் ஆசையற்றவர்களாயினர். கௌரவர்களனைவரும் உம்முடைய குமாரனை அக்னியின் முகத்தில் ஹோமம் பண்ணப்பட்டவனாக எண்ணி அதிக துக்கத்தையடைந்தனர். பயத்தினால் பீடிக்கப்பட்டவர்களான அந்த யுத்தவீரர்கள் அவ்வாறு உத்ஸாஹத்தோடுகூடியவர்களான கிருஷ்ணனையும் பாண்டவனையும்பார்த்து, 'மன்னன் மாண்டான்; மன்னன் மாண்டான்' என்று சொன்னார்கள். ஜனங்களுடைய சப்தத்தைக்கேட்டுத் துர்யோதனன், 'நீங்கள் பயப்படவேண்டாம்; நான் கிருஷ்ணார்ஜுனர்களை யமனிடத்திற்கு அனுப்பப்போகிறேன்' என்று சொன்னான். எல்லா ஸைனிகர்களையும்நோக்கி இவ்வாறு சொல்லிவிட்டு, அவன் ஜயத்தை எதிர்பார்த்தவனாகி முயற்சியோடு பார்த்தனை அழைத்து, 'பார்த்த! நீ பாண்டுவுக்குப் பிறந்திருப்பாயாகில் தேவஸம்பந்தம்பெற்றவையும் பூலோகஸம்பந்தம்பெற்றவையுமான நீ கற்ற அஸ்திரங்களெல்லாவற்றையும் என்னிடத்தில் விரைவாகக்காட்டு. உனக்கும் கேசவனுக்குமுள்ள பலத்தையும் வீர்யத்தையும் என்னிடத்தில் விரைவாகக்காண்பி. உன் ஆண்மையைப் பார்ப்போம். ஜனங்கள் நீ பெருங்கார்யங்களைச் செய்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆனால், நான் அவைகளை நேரில் பார்த்ததில்லை. மஹாவீரர்களுள் பிரதானனென்று மதிப்பதற்குக் காரணமான கார்யங்களை இவ்விடத்தில் காண்பித்துவிடு' என்று இவ்வாறான வசனத்தைக் கூறினான்.

---

## நூற்றுமூன்றாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனனால் துர்யோதனன் தோல்வியடைந்தது.)

துர்யோதனராஜன் இவ்வாறு சொல்லிவிட்டு, மர்மஸ்தானங்களைப்பிளந்து செல்லக்கூடிய மூன்று பாணங்களால் அர்ஜுனனையும் மகாவேகமுள்ள நான்கு பாணங்களால் நான்குகுதிரைகளையும் அடித்து வாஸுதேவரையும் பத்துப்பாணங்களால் மார்பிலடித்து அவருடைய

சவுக்கையும் அர்த்தசந்திரபாணத்தால் அறுத்துப் பூமியில்தள்ளினான். பார்த்தன் மனக்கவலையற்றவனாகி விசித்திரமான கட்டுக்களுள்ளவை களும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான பதினொன்று பாணங்க ளாலே விரைவாக அந்தத் துர்யோதனனை அடித்தான். அவைகளும் கவசத்தில் தாக்கிக் கீழேவிழுந்தன. அவைகள் வீணாகப்போனதைக் கண்டு அர்ஜுனன் மறுபடியும் கூர்மையுள்ள பதினொன்று பாணங்களைப் பிரயோகஞ்செய்தான். அவைகளும் கவசத்தினின்று நழுவிவிழுந்தன. சத்துருவீரர்களைக் கொல்லுகின்ற வாஸுதேவர், பிரயோகிக்கப்பட்ட அந்த இருபத்தெட்டுப் பாணங்களும் பயனில்லாமற்போனதைக்கண்டு அர்ஜுனனைப்பார்த்து, 'பார்த்த! உன்னால் விடப்பட்ட அம்புகள் பிர யோஜனத்தைச் செய்யவில்லை; மலைகள் தாமே நகர்தலைப்போல இது வரையில் பாராததைப் பார்க்கிறேன். பரதஸ்ரேஷ்டனே! காண்டீவத் தினுடையபலம் முன்போல இருக்கிறதா? உன்னுடைய கைப்பிடியும் தோள்வன்மையும் முன்போல இருக்கின்றனவா? உனக்கும் இந்தச் சத்துருவான துர்யோதனனுக்கும் இப்பொழுது இந்த (எதிர்ப்புக்) காலமானது கடைசியானதாயில்லாமலிருக்குமா? கேட்கின்ற எனக்குச் சொல். பார்த்த! யுத்தத்தில் துர்யோதனனுடைய ரதத்தைக்குறித்து விடப்பட்டிருக்கிற பாணங்கள் பயனற்றவைகளாகக் கீழே வீழ்ந்ததைக் கண்டு எனக்கு அதிகமான ஆச்சரியம் உண்டாயிருக்கிறது. பார்த்த! வஜ்ராயுதம்போன்றவையும் இடிக்கொப்பானவையும் கோரமானவை யும் சத்துருக்களுடைய சரீரத்தைப் பிளக்குந் தன்மையுள்ளவையுமான உன்னுடைய பாணங்கள் ஒருகாரியத்தையும் செய்யவில்லையே. இப் பொழுது இதென்ன பரிஹாஸம்' என்றுகூறினார். அர்ஜுனன், 'கிருஷ்ண! அஸ்திரங்களை நாசஞ்செய்யும் விஷயத்தில் ஏற்படுத்தப் பட்ட இந்தக் கவசதாரணமானது நிச்சயமாய்த் துரோணராலே துர் யோதனனிடத்தில் காண்பிக்கப்பட்டிருக்கவேண்டும். கிருஷ்ணரே! இந் தக் கவசத்தினிடம் மூவுலகங்களும் மறைந்திருக்கின்றன. இந்த மஹா கவசதாரணத்தைத் துரோணர் ஒருவரே அறிந்திருக்கிறார். ஸர்வோத்த மரான அந்தத் துரோணரிடத்திலிருந்து நான் அறிந்துகொண்டிருக்கி றேன். கோவிந்தரே! இந்தக் கவசமானது பாணங்களினால் எவ்விதத்தி லும் உடைக்கமுடியாதது. ஸாக்ஷாத் இந்திரனாலே யுத்தத்தில் வஜ் ராயுதத்தினாலும் பிளக்கமுடியாதது. கிருஷ்ண! எல்லாம் அறிந்த தேவரீரும் ஏன் என்னை மயங்கச்செய்கிறீர்? கேசவரே! மூவுல கங்களிலும் எது நடந்ததோ, எது நடக்கிறதோ, எது நடக்குமோ அவையெல்லாம் உம்மால் அறியப்பட்டிருக்கின்றன. மதுஸூதனரே

இதை நீர் அறிந்திருப்பதுபோல ஒருவனும் அறிந்ததில்லை. கிருஷ்ணா! இந்தத் துர்யோதனன் துரோணராலே ஏற்படுத்தப்பட்ட இந்தக் கவச தாரணையைவகித்துக்கொண்டு யுத்தத்தில்பயமற்றவன்போல நிற்கிறான். மாதவரே! இந்தக் கவசதாரணத்தில் எந்தக்கார்யம் விதிக்கப்பட்டிருக் கிறதோ அதை இவன் அறியான். மற்றொருவ்ராலே பூட்டப்பட்டிருக் கிற இந்தக் கவசதாரணையை ஒருஸ்திரீபோல் இவன் சுமந்துகொண் டிருக்கிறான் ஜநார்த்தனரே! என்னுடைய கைகள் வில் இவற்றின் பராக்கிரமத்தைப்பாரும். கவசத்தால் காப்பாற்றப்பட்டிருந்தாலும் கௌரவ்யனை யான் தோல்வியடையும்படி செய்யப்போகிறேன். பிரகா சிக்கின்ற இந்தக் கவசத்தைத் [1]தேவநாதர் அங்கிரஸனுக்குக் கொடுத் தார்; அவரிடமிருந்து பிருஹஸ்பதி அடைந்தார்; அவரிடத்திலிருந்தும் இந்திரன் அடைந்தான். பிறகு, தேவராஜன் இந்தக்கவசத்தை உபதேசத் தோடு எனக்குக்கொடுத்தான். இவனுடைய இந்தக் கவசமானது தேவர் கள் செய்ததேயாயினும் அல்லது நான்முகன்தானே செய்ததாயினும் இப்பொழுது என்னுடைய பாணத்தினால் அடிக்கப்படும்; இம்மதிகேட னைப்பாதுகாவாது' என்று கூறினான். கௌரவிக்கத்தக்க அர்ஜுனன் இவ்வாறு சொல்லிவிட்டுத் தீக்ஷ்ணமான கவசத்தையுடைக்கும் தன்மையுள்ள (மனுவைத் தேவதையாகக்கொண்ட) மானவாஸ்தி ரத்தினாலே பாணங்களை அபிமந்திரணம்பண்ணி நாண்கயிற்றில் வைத்து இழுத்தான். அர்ஜுனனாலே இழுக்கப்படுகின்றவையும் வில்லினடுவை அடைந்திருக்கின்றவையுமான அந்த அர்ஜுன னுடைய பாணங்களைத் துரோணபுத்திரர் எல்லா அஸ்திரங்களையும் அழிக்குந் தன்மையுள்ள ஓர்அஸ்திரத்தினால் அறுத்தார். ப்ரம்மவாதி யான அஸ்வத்தாமாவினாலே அவ்வம்புகள் தூரத்திலிருந்து அறுக்கப் பட்டதுகண்டு அர்ஜுனன் ஆச்சரியமடைந்து கேசவரைப்பார்த்து, 'ஜநார்த்தனரே! இந்த அஸ்திரத்தை நான் இரண்டுமுறை பிரயோகிக்க முடியாது. (அவ்வாறு பிரயோகித்தால்) என்னையே கொல்லும்; அல்லது என்பலத்தையாவது நாசஞ்செய்யும்' என்று விஜ்ஞாபனம் செய்தான். ராஜரே! பிறகு, துர்யோதனன் கிருஷ்ணார்ஜுனர்களை யுத்தத்தில் ஸர்ப்பத்திற்கொப்பான ஒன்பதொன்பது பாணங்களால் அடித்து மறு படியும் அவர்கள்மீது போரில் பெரிய அம்புமழையைப் பொழிந்தான். அதனால் உம்மைச்சேர்ந்தவர்கள் மனக்களிப்புற்று வாத்யகோஷங்களை யும் ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். பிறகு, யுத்தத்தில் கோபம் கொண்டவனான பார்த்தன் இரண்டு கடைவாய்களையும் நாவினால் நக்கிக்

---

[1] அத் - 94 - க்கும் அத் - 103 - க்கும் கவசவரலாறு வேறுபடுகிறது.

கொண்டு துர்யோதனனுடைய மேனியை உற்றுப்பார்த்தான். பிறகு, இவனுடைய ஓர் அங்கத்தையும் கவசத்தால் காக்கப்படாததாகக் காண வில்லை. பிறகு, நன்றாக விடப்பட்டவையும் அந்தகனுக்கொப்பானவையு மான கூரிய அம்புகளாலே துர்யோதனனுடைய குதிரைகளையும் பின்பக்கத்திலுள்ள ஸாரதிகளையும் சரீரத்தை இழக்கும்படி செய்தான். வீர்யமுடையவனான ஸவ்யஸாசியானவன் இவனுடைய வில்லையும் கை யுறையையும் விரைவாக அறுத்து ரதத்தையும் பொடிசெய்யத்தொடங் கினான். யுத்தமுயற்சியையறிந்தவனும் குந்தியின் புத்திரனுமான அர் ஜுனன் அப்பொழுது தீக்ஷ்ணமான இரண்டு அம்புகளாலே ரதத்தை இழந்தவனாக்கப்பட்ட துர்யோதனனை இரண்டு உள்ளங்கைகளிலும் நகக்கண்களிலும் பாணங்களால் அடித்தான். அந்தத்துர்யோதனன் வேதனைகளால் துன்பமுற்று ஓடுவதில் நோக்கம் கொண்டவனானான். தனஞ்சயனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டுக் கஷ்டமான ஆபத்தை அடைந்திருக்கிற அந்தத் துர்யோதனனைக்கண்டு சிறந்த வில்லாளிகள் அவனைப் பாதுகாக்கக்கருதி எதிர்த்துவந்து அந்தத்தனஞ்சயனை அநேக ஆயிரக்கணக்கான தேர்களாலும் ஸன்னாஹத்துடன்கூடின யானைகளாலும் குதிரைகளாலும் கோபமுள்ள காலாட்களுடைய கூட் டங்களாலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, பெரிய அஸ்திரவர்ஷத்தி னாலும் பாணஸமூகங்களாலும் மூடப்பட்ட அர்ஜுனன் கோவிந்தர் இருவருமாவது (அவர்களுடைய) ரதமாவது கண்ணிற்குப்புலப்பட வில்லை. பிறகு, அர்ஜுனன் அஸ்திரசக்தியினாலே அந்தச்சேனையைக் கொன்றான். பிறகு, அந்த யுத்தகளத்தில் ரதங்களும் யானைகளும் நூறு நூறாக அங்கங்களை இழந்தவைகளாகச்செய்யப்பட்டு வீழ்ந்தன. கொல் லப்பட்டவையும் கொல்லப்படுகின்றவையுமான அந்த யானைகள் அந்த உத்தமமான தேரை நகரவிடாமல் தடுத்தன. அந்தத்தேரானது, ஸைந் தவனிருக்குமிடத்திற்கு ஒரு க்ரோசதூரத்தில் நான்குபுறங்களிலும் ஸ்தம்பிக்கும்படி செய்யப்பட்டதாக நின்றது. பிறகு, விருஷ்ணிகளுள் வீரரான ஸ்ரீகிருஷ்ணர் விரைவுடன் அர்ஜுனனை நோக்கி, 'வில்லை அதிகமாக ஓசையிடும்படி செய். நான் சங்கத்தை ஊதப்போகிறேன்' என்று சொன்னார். பிறகு, அர்ஜுனன் காண்டீவத்தை வன்மையுடன் இழுத்து நாணொலிசெய்து தலத்வனியுடன்கூடின பெரிய அம்புமழை யினாலே சத்ருக்களைக் கொன்றான். பலவானான ஸ்ரீகேசவர் புழுதி யினாலே மூடப்பட்ட இமைமயிர் நுனியுள்ளவரும் மிகவும் வேர்த்திருக் கிறமுகமுள்ளவருமாகிப் பாஞ்சஜன்யத்தைக் கம்பீரமானஸ்வரத்துடன் ஊதினார். ராஜரே! அச்சுதருடைய உதடுகளாலே பூரிக்கப்பட்ட காற்றி

னுண்டாகியதும் சங்கத்தினுள்ளிருந்து விருத்தியடைந்து வெளிவந்ததுமான அந்தநாதத்தினாலே அஸுரர்களையும் ஆகாயத்தையும் தேவர்களையும் லோகபாலர்களையுமுடைய உலகமனைத்தும், மிக்க பயத்தையடைந்து வெடிக்கின்றதுபோலா

யினாலும் வில்லினுடைய டங்காரத்வனியினாலும் அப்பொழுது [1] ஜனங்கள் ப்ரஜ்ஞையை இழந்தவர்களும் இழக்காதவர்களுமாகப் பூமியில் விழுந்தார்கள். அவர்களால் விடப்பட்ட ரதமானது காற்றினால் அலைக்கப்பட்ட மேகம்போல விளங்கியது. பிறகு, ஜயத்ரதனை ரக்ஷிக்கின்றவர்கள் தங்களை அனுஸரித்துவந்திருக்கின்ற துணைவீரர்களோடு கலக்கமுற்றார்கள். பெரியவிற்களைக் கையிற் கொண்டவர்களும் ஜயத்ரதனுக்கு ரக்ஷகர்களுமான அந்த வீரர்கள் வேகத்தோடு அந்தப் பார்த்தனைப்பார்த்துப் பூமியை நடுங்கும்படி செய்துகொண்டு ஸிம்மநாதஞ்செய்தார்கள். மஹாபலசாலிகளான வீரர்கள் சங்கத்வனியுடன்கூடின உக்ரமான பாணசப்தங்களையும் ஸிம்மநாதங்களையும் வெளிப்படுத்தினார்கள். உம்முடைய ஸைனிகர்களிடத்திலிருந்துண்டான கோரமான அவ்வித சப்தத்தைக்கேட்டு வாஸுதேவர் தனஞ்சயனிருவரும் உத்தமமான சங்கங்களை ஊதினார்கள். ராஜரே! அந்தப்பெரிய சப்தத்தினால் மலைகளும் ஸமுத்திரங்களும் தீவுகளும் பாதாளங்களும் இந்தப்பூமியும் நிரப்பப்பட்டன. பரதஸ்ரேஷ்டரே! அவ்வொலியானது பத்துத்திக்குக்களையும் முழுவதும் வியாபித்துக்கொண்டு அந்தக்கௌரவபாண்டவ சேனையிலேயே எதிரொலியிட்டது. அந்த யுத்தரங்கத்தில் மஹாரதர்களும் சுறுசுறுப்புள்ளவர்களுமான உம்மைச்சேர்ந்தரதிகர்கள் கிருஷ்ணார்ஜுனர் இருவரையும்பார்த்து அதிககோபத்தை அடைந்தார்கள். பிறகு, மஹாபாக்யசாலிகளும் கவசம்பூண்டவர்களுமான கிருஷ்ணரிருவரையும் பார்த்து உம்மைச்சேர்ந்தவர்கள் மிக்ககோபங்கொண்டு எதிர்த்து வந்தார்கள். அஃது ஆச்சரியமாயிருந்தது.

---

[1] 'வலிமை மிக்கவர்களும் வலிமைகுன்றியவர்களும் பூமியில் விழுந்தார்கள்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

## நூற்றுநான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(அர்ஜுனன், பூரிஸ்ரவஸ்முதலிய எண்மரோடு போர்புரிந்தது.)

அரசரே! விருஷ்ணிகள் அந்தகர்கள் இவர்களுள் சிறந்தவரான ஸ்ரீகிருஷ்ணர் கௌரவர்களுள் சிறந்தவனான அர்ஜுனன் இவ்விருவர்களையும் உம்மைச்சேர்ந்தவர்கள் பார்த்து த்வரையுள்ளவர்களாகிக் கொல்லவிரும்பினார்கள். அவ்வாறே விஜயனும் சத்துருக்களைக்கொல்ல எண்ணம்கொண்டான். அந்த வீரர்கள் ஸ்வர்ணங்களால் சித்திரவேலை செய்யப்பட்டவையும் புலித்தோலால் அலங்கரிக்கப்பட்டவையும் ஒலியுள்ளவையும் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போன்றவையுமான மஹாரதங்களாலும் தங்கமயமான கணுக்களுள்ளவையும் பார்க்கவுமுடியாதவையும் கோபமூட்டப்பட்ட ஸர்ப்பங்கள்போல ஒப்பற்ற சப்தங்களை வெளியிடுகின்றவையுமான விற்களாலும் எல்லாத்திக்குக்களையும் பிரகாசிக்கச்செய்தார்கள். பூரிஸ்ரவஸ், சலன், கர்ணன், விருஷஸேனன், ஜயத்ரதன், கிருபர், மத்திரராஜன், ரதிகர்களுள் உத்தமரான அஸ்வத்தாமா ஆகிய அந்த எட்டு மஹாரதர்களும் அஸ்வங்களால் ஆகாசத்தை விழுங்குகிறவர்கள்போலப் புலித்தோலினால் சித்திரிக்கப்பட்டவையும் ஸ்வர்ணமயமான சந்திரப்பிரதிமைகளையுடையவையுமான (ரதங்களால்) பத்துத்திக்குக்களையும் விளங்கும்படி செய்தார்கள். அவர்கள் அர்ஜுனனுடைய கூர்மையான அம்புகளால் பிளக்கப்பட்டுப் பரபரப்புடன மேகக்கூட்டம்போல ஒலிக்கின்ற தேர்களால் பத்துத்திசைகளிலும் சூழ்ந்துகொண்டார்கள். குலூததேசத்தில் பிறந்தவைகளும் வேகமுள்ளவைகளும் வியப்பைத் தருபவைகளுமான குதிரைகள் அந்த மஹாரதர்களைத் தாங்கிக்கொண்டும் அப்பொழுது பத்துத்திக்குக்களையும் பிரகாசிப்பித்துக்கொண்டும் மிகவிளங்கின. மன்னரே! நற்குலத்தில்பிறந்தவைகளும் மஹாவேகமுள்ளவைகளும் பற்பலதேசங்களில் தோன்றியவைகளும் மலைநாடுகளில் உண்டானவைகளும் நதிதீரங்களில் பிறந்தவைகளும் ஸிந்துதேசத்தில் தோன்றியவைகளுமான உத்தமமான குதிரைகளோடு கௌரவஸேனையிலுள்ள சிறந்த யுத்தவீரர்கள் உம்முடைய புத்திரனைக் காப்பாற்ற எண்ணித் தனஞ்சயனுடைய ரதத்தைநோக்கி நான்குபக்கத்திலும் விரைவாக ஓடி வந்தார்கள். அரசரே! புருஷஸ்ரேஷ்டர்களான அவர்கள் ஆகாயத்தையும் ஸமுத்திரம்சூழ்ந்த பூமியையும் நிரப்பிக்கொண்டு பெரியசங்கங்

களை எடுத்து ஊதினார்கள். அவ்வாறே எல்லாத்தேவர்களுள்ளும் மிகச் சிறந்தவர்களான வாஸுதேவரும் தனஞ்சயனும் பூமண்டலத்திலுள்ள எல்லாச்சங்கங்களுள்ளும் சிறந்த சங்கங்களை ஊதினார்கள். அர்ஜுனன் தேவதத்தத்தையும் கிருஷ்ணன் பாஞ்சஜன்யத்தையும் ஊதினார்கள். தனஞ்சயனால் உண்டுபண்ணப்பட்ட தேவதத்தத்தின் ஒலியோ பூமியையும் ஆகாயத்தையும் திக்குக்களையும் நன்றாக மூடியது. அவ்வாறே வாஸுதேவரால் நன்றாக ஊதப்பட்ட பாஞ்சஜன்யமும் எல்லாச்சப்தங் களுக்கும் மேலோங்கி ஆகாயத்தையும் பூமியையும் நிரப்பியது. மஹா ராஜரே! பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகிறதும் சூரர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்திபண்ணுகிறதும் பயங்கரமுமான ஸங்குலமான அவ்வித நாதமானது அவ்வாறு உண்டாகிப் பேரீவாத் யங்களும் ஜர்ஜரங்களும் ஆனகங்களும் மிருதங்கங்களும் பலவாறாக வாசிக்கப்பட்டபொழுது மஹாரதர்களென்று பிரஸித்திபெற்றவர்களும் துர்யோதனனுக்கு ஹிதத்தைவிரும்புகின்றவர்களும் வில்லாளிகளுள் சிறந்தவர்களும் பெரியவில்லைக்கையில்பிடித்தவர்களும் உம்முடைய சேனையைப்பாதுகாக்கின்றவர்களும் மஹாரதர்களுமான கர்ணன்முத லானவீரர்கள் அந்தச் சப்தத்தைப் பொறாதவர்களாகிக் கோபமும் பொறாமையும்கொண்டு வாஸுதேவருக்கும் அர்ஜுனனுக்கும் செய்த தற்குப் பிரதியான கார்யத்தைச் செய்பவர்களாக மஹாசங்கங்களை ஊதினார்கள். சங்கத்தின்ஒலிதோன்றினவுடனே உம்முடைய அச்சேனை யானது நடுக்கமுற்ற ரதிகர்களோடும் யானைகளோடும் குதிரைகளோடும் கூடியதாகித் தன்நிலைமை தப்பினதுபோலாயிற்று. மிக்க ஸந்தோஷ மடைந்த ஜனங்களால் நெருங்கியதும் பேரிகளாலும் சங்கங்களாலும் சப்தமுள்ளதாகச் செய்யப்பட்டதுமான உம்முடைய சேனையானது இடிகளாலே சூழப்பட்டதுபோல மிக்க பயமுள்ளதாகியது. வேந்தரே! யுகாந்தகாலத்தில் தோன்றும் ஒலிபோல மிகவும் பெரிதான அந்த ஒலி யானது எல்லாத்திக்குக்களையும் எதிரொலியடையும்படிசெய்துகொண்டு அந்தஸைன்யத்தைப் பயமடையும்படிசெய்தது. பிறகு, துர்யோதன னும் அந்த மஹாரதர்களான எட்டு அரசர்களும் ஜயத்ரதனைக் காப் பதற்காகப் பாண்டவனைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, துரோண குமாரர் வாஸுதேவரை எழுபத்துமூன்றுபாணங்களாலும் அர்ஜு னனை மூன்று பல்லங்களாலும் கொடிமரத்தையும் குதிரைகளையும் ஐந்துபாணங்களாலும் அடித்தார். ஜநார்த்தனர் அடிக்கப்பட்டவுடன் மிக்க கோபம்கொண்டவனான அர்ஜுனன் அந்த அஸ்வத்தாமாவை அறுநூறுபாணங்களால் அடித்தான். வீர்யமுடையவனான பார்த்தன்

கர்ணனைப் பத்துப்பாணங்களாலும் விருஷஸேனனை மூன்றுபாணங்களாலும் அடித்துச் சல்லியனுடைய அம்புடன்கூடிய வில்லையும் கைபிடிக்குமிடத்தில் அறுத்தான். சல்லியனும் வேறுவில்லைக்கையிலெடுத்துப் பாண்டவனை அடித்தான். பூரிஸ்ரவஸ் ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ளவையும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவையுமான மூன்றுபாணங்களால் அடித்தான். ரணகளத்தில் கர்ணன் முப்பத்திரண்டுபாணங்களாலும் விருஷஸேனன் ஏழுபாணங்களாலும் ஜயத்ரதன் எழுபத்துமூன்றுபாணங்களாலும் கிருபர் பத்துப்பாணங்களாலும் மத்திரதேசத்தரசனான சல்யன் பத்துப்பாணங்களாலும் அர்ஜுனனை அடித்தார்கள். பிறகு, துரோணகுமாரர் பார்த்தன்மீது அறுபதுபாணங்களை இறைத்து மறுபடியும் இருபதுபாணங்களால் வாஸுதேவரையும் ஐந்துபாணங்களால் பார்த்தனையும் அடித்தார். வெண்மையான குதிரைகளையுடையவனும் கிருஷ்ணனை ஸாரதியாகக்கொண்டவனும் புருஷச்ரேஷ்டனுமான அந்த அர்ஜுனன் அட்டஹாஸஞ்செய்து ஹஸ்தலாகவத்தைக் காண்பிப்பவனாக அவர்களனைவரையும் திருப்பியடித்தான். பன்னிரண்டுபாணங்களால் கர்ணனையும் மூன்றுபாணங்களால் விருஷஸேனனையுமடித்துச் சல்யனுடைய அம்புடன்கூடியவில்லைக் கைபிடிக்குமிடத்தில் அறுத்துப் பூரிஸ்ரவஸை மூன்று பாணங்களாலும் சல்யனைப் பத்துப்பாணங்களாலும் துரோணகுமாரரைக் கூர்மையுள்ளவையும் அக்நிஜ்வாலைபோன்ற உருவமுள்ளவையுமான எட்டுப்பாணங்களாலும் கிருபரை இருபத்தைந்துபாணங்களாலும் ஜயத்ரதனை நூறுபாணங்களாலும் மறுபடியும் துரோணகுமாரரை எழுபதுபாணங்களாலும் அடித்தான். பூரிஸ்ரவஸோ மிகுந்தகோபம்கொண்டு கிருஷ்ணனுடைய சாட்டையை அறுத்து எழுபத்துமூன்றுபாணங்களால் அர்ஜுனனை அடித்தான். பிறகு, அர்ஜுனன் கோபம்கொண்டு பெருங்காற்றானது மேகங்களைத் தடுப்பதுபோலக் கூர்மையுள்ள அனேக அம்புகளால் அந்தச் சத்துருக்களை விரைவாகத்தடுத்தான்" என்று சொன்னான்.

---

## நூற்றைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

### (தேர்க்கொடிகளின் வர்ணனம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பார்த்தர்கள் என்னைச்சேர்ந்தவர்கள் இவர்களுடைய பற்பலவிதமான வடிவமுள்ளவைகளும் அமித

மான சோபையோடு விளங்குகின்றவைகளுமான த்வஜங்களை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அந்த மஹாத்மாக்களுடைய பற்பல வடிவங்களுள்ள த்வஜங்களை ரூபத்தினாலும் நிறத்தினாலும் பெயரினாலும் என்னிடத்திலிருந்து கேட்டுத்தெரிந்துகொள்ளும். ராஜஸ்ரேஷ்டரே! மஹாரதர்களான அந்த வீரர்களுடைய ரதங்களில் பற்பலவிதமான த்வஜங்கள் ஜ்வலிக்கின்ற அக்னிகள்போலக் காணப்பட்டன. பொன்மயமானவையும் பொன்னாலாகிய தலை அலங்காரத்தோடுகூடியவையும் பொன்மாலைகளால் அலங்கரிக்கப்பட்டவையும் பற்பலநிறமுடையவையும் மிக்க மங்களகரமானவையும் பற்பலவிதமாயிருக்கின்றவையுமான த்வஜங்கள் ஸ்வர்ணமயமான மேருகிரியினுடைய ஸ்வர்ணமயமான கொடுமுடிகள்போல விளங்கின. அவர்களுடைய அந்த த்வஜங்கள் பற்பல வர்ணமுள்ளவைகளான கொடித்துணிகளால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டும் எல்லாவிடங்களையும் மறைத்துக்கொண்டும் விளங்கின. அந்தக் கொடிமரங்களுடைய நுனிகளிலிருக்கிற கொடித்துணிகள் காற்றினால் அலைக்கப்பட்டு நாடகமேடையின்நடுவில் நடிக்கின்ற நாட்டியப்பெண்கள்போலக் காணப்பட்டன. பரதஸ்ரேஷ்டரே! அடிக்கடி அசைக்கப்பட்டவைகளும் இந்திரவிற்போன்ற ஒளியுள்ளவைகளுமான கொடித்துணிகள் ரதிகர்களுடைய பெரிய ரதங்களை விளங்கச் செய்தன. பாரதரே! யுத்தரங்கத்தில் தனஞ்சயனுடைய (ரதத்தின்மீது) ஸிம்மத்தின் வால்போன்றவாலுள்ளதும் உக்கிரமான முகமுள்ளதுமான வானரரூபமுள்ள த்வஜமானது காணப்பட்டது. அரசரே! கொடித்துணிகளால் அலங்கரிக்கப்பட்டதும் வானரத்தை அடையாளமாகக் கொண்டதுமான அந்த அர்ஜுனனுடைய கொடியானது அந்த ஸைன்யத்தைப் பயமடையும்படிசெய்தது. பாரதரே! அவ்வாறாகவே துரோணபுத்திரருடைய ரதத்தில் பாலசூர்யன்போன்ற காந்தியுள்ள ஸிம்மத்தினுடைய வால்வடிவமான த்வஜத்தினுடைய நுனியைக் கண்டோம். காற்றினால் அலைக்கப்பட்டதும் இந்திரத்வஜத்துக்கு நிகரான காந்தியையுடையதும் ஸ்வர்ணமயமானதும் உயரத்தூக்கிக் கட்டப்பட்டதுமான அஸ்வத்தாமாவினுடைய கொடியானது, கௌரவஸ்ரேஷ்டர்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணியது. மஹாராஜரே! அதிரதபுத்திரனான கர்ணனுடைய பொன்னாலாகிய கச்சைக்கொடியானது, யுத்தத்தில் ஆகாயத்தை நிரப்புகின்றதுபோலக் காணப்பட்டது. யுத்தகளத்தில் கொடித்துணிகளையுடையதும் தங்கமயமானதும் மாலையையணிந்ததும் காற்றி

ளுல் அசைக்கப்பட்டதுமான கர்ணனுடைய கொடியானது தேர்நடுவில் நடிப்பதுபோலிருந்தது. பாண்டவர்களுக்கு ஆசார்யரும் தபஸ்வியும் கௌதமபுத்திரரும் பிராம்மணருமான கிருபருடைய விருஷபரூபமான கொடியானது நன்றாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. அரசரே! அந்த மஹாரதமானது விருஷப வடிவமுள்ள அந்தக்கொடியினுல், திரிபுர ஸம்ஹாரம்செய்கின்ற பரமசிவனுடைய ரதமானது பிரகாசிக்கின்ற விருஷபக்கொடியினுல் விளங்கியதுபோல விளங்கிற்று. தங்கமயமான தும் மணிகளாலும் ரத்நங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான விருஷ ஸேனனுடைய மயில்கொடியானது ஸேனுமுகத்தைப் பிரகாசிக்கச் செய்துகொண்டு பேசப்போகிறதுபோலிருந்தது. ராஜேந்திரரே! ஸ்கந் ரம்மண்யருடைய ரதம் ப்ரகாசிக்கின்ற மயிலால் விளங்குவதுபோல, மஹாத்மாவான அந்த விருஷஸேனனுடைய ரதமானது அந்த மயிலி ஞல் விளங்கியது. மத்ரதேசத்தரசனுன சல்லியனுடைய த்வஜத்தின் நுனியில் ஸ்வர்ணமயமானதும் நிகரில்லாததும் மங்களகரமானதும் அக்நிஜ்வாலையைப்போன்றதுமான உழுபடைச்சாலைக் கண்டோம். பிரபுவே! அந்தப்படைச்சாலானது அவனுடைய ரதத்தையடைந்து விளங்கியது. அது எல்லாவித்துக்களும் முளைத்ததும் அழகியதுமான படைச்சால்போல விளங்கியது. ஸிந்துராஜனுடைய த்வஜத்தின்நுனி யில் வெள்ளிமயமான பன்றியானது பொன்னணிகளால் அலங்கரிக்கப் பட்டு அங்காரகனுடைய காந்திபோன்ற காந்தியையுடையதாக நான்கு பக்கமும் பிரகாசித்தது. வெள்ளிமயமான அந்த த்வஜத்தினுல் ஜயத் ரதன் முற்காலத்தில் தேவாஸுரயுத்தத்தில் பூஷா என்பவன் விளங்கி யதுபோல விளங்கினுன். யஜ்ஞம்செய்கிற ஸ்வபாவமுடையவனும் புத்தி சாலியும் ஸோமதத்தகுமாரனுமான பூரிஸ்ரவஸினுடைய யூபவடிவ மான கொடியானது சூரியன்போல் விளங்கியது. சந்திரனும் அதில் காணப்பட்டான். இறைவரே! ஸௌமதத்தியினுடைய ஸ்வர்ணமய மான அந்தயூபக்கொடியானது யாகங்களுள் உத்தமமான ராஜஸூயத் தில் தூக்கிநிறுத்தப்பட்ட யூபம்போல் விளங்கியது. மஹாராஜரே! வெள்ளிமயமான சலனுடைய பெரிய யானைக்கொடியானது பக்கங்களில் ஸ்வர்ணத்தினுல் சித்திரிக்கப்பட்ட அங்கங்களுள்ள மயில்களால் விளங் கியது. பரதஸ்ரேஷ்டரே! வெண்மைநிறமுடைய பெரிதான யானையா னது தேவராஜனுடைய ஸேனையை விளங்கச்செய்வதுபோல அந்தயானை த்வஜமானது உம்முடைய ஸைன்யத்தைப் பிரகாசிக்கச்செய்தது. அர சரே! ஜனங்களுக்கு நாதரே! துர்யோதனராஜனுடைய சிறந்த ரதத் தில் ரத்னமயமானதும் ஸ்வர்ணத்தினுல் மூடப்பட்டதும் அனேக கிண்

கிணிகளுடைய சப்தத்துடன்கூடியதுமான அரவக்கொடியானது ஆச்சரியகரமாகவிளங்கியது. அரசரே! அப்பொழுது கௌரவஸ்ரேஷ்டனான உம்முடைய புத்திரன் யுத்தபூமியில் பெரிதான அந்த அரவக் கொடியினால் மிக விளங்கினான். உம்முடையசேனையில் தூக்கிநிறுத்தப்பட்டுள்ள இந்த ஒன்பது மஹாத்வஜங்களும் யுகாந்தகாலத்திலுள்ள சூரியன்போலிருந்துகொண்டு உம்முடைய சேனையை விளங்கும்படி செய்தன. அர்ஜுனனுடைய பெரிதான வானர உருவமுள்ள ஒரு கொடியே பத்தாவதாக இருந்தது. அந்த வானரத்வஜத்தினால் அர்ஜுனன் சம்புவினால் இமயமலை விளங்குவதுபோல விளங்கினான். பிறகு, பகைவர்களைத் தவிக்கச்செய்கிறவர்களும் மஹாரதர்களுமான அந்த வீரர்கள் அர்ஜுனனுக்காக வேகத்துடன் நானாவிதமான மாசற்ற மிகப் பெரிய விற்களை எடுத்தார்கள். வேந்தரே! உம்முடைய துராலோசனையினாலுண்டான யுத்தத்தில் திவ்யமான கார்யத்தைச் செய்கிறவனும் பகைவரையழிப்பவனுமான அர்ஜுனன் அவ்வாறே காண்டீவமென்கிற வில்லை எடுத்தான். உம்முடைய குற்றத்தினால் பற்பலதிக்குக்களிலிருந்து அழைக்கப்பட்டவர்களும் குதிரைகளையும் தேர்களையும் யானைகளையுமுடையவர்களுமான அரசர்கள் யுத்தத்தில் பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டார்கள். பரஸ்பரம் கர்ஜிக்கின்றவர்களான துர்யோதனன்முதலான அந்தவீரர்களுக்கும் பாண்டவஸ்ரேஷ்டனான அர்ஜுனனுக்கும் ஒருவரோடொருவருக்குப் போர் உண்டாயிற்று. அந்த ஸமயத்தில், கிருஷ்ணனை ஸாரதியாகக்கொண்ட கௌந்தேயன் ஒருவனாயிருந்துகொண்டே பயமற்றவனாகி அனேக வீரர்களோடு எதிர்த்துப் போர்புரிதலென்கிற பெரிய ஆச்சர்யத்தை உண்டுபண்ணினான். மிக்க புஜபலமுள்ளவனும் புருஷஸ்ரேஷ்டனுமான அர்ஜுனன் அவர்களை ஜயிக்கவும் ஜயத்ரதனைக் கொல்லவுமெண்ணிக் காண்டீவமென்கிற வில்லைப் பலவாறாக அசைவுறச்செய்துகொண்டு பிரகாசித்தான். புருஷஸ்ரேஷ்டனும் பகைவரைவாட்டுபவனுமான அர்ஜுனன் அந்தப்போர்க்களத்தில் ஆயிரமாயிரமாக விடப்படும் பாணங்களால் உம்மைச்சேர்ந்த போர்வீரர்களைக் கண்ணுக்குப்புலப்படாமலிருக்கும்படி செய்துவிட்டான். பிறகு, மஹாரதர்களான அந்த யுத்தவீரர்களெல்லாம் பார்த்தனை யுத்தரங்கத்தில் நான்குபக்கத்திலிருந்தும் விடப்படும் அம்புக்கூட்டங்களால் கண்ணுக்குப்புலப்படாதவனாகச்செய்தார்கள். கௌரவர்களுள் சிரேஷ்டனான அர்ஜுனன் புருஷர்களுள் சிறந்தவர்களான போர்வீரர்களால் மூடப்பட்டபொழுது அந்தச்சேனையில் பெரிதான சப்தம் உண்டாயிற்று" என்று கூறினான்.

## நூற்றுருவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

—•—

(துரோணருக்கும் யுதிஷ்டிரருக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்ஜய! அர்ஜுனன் ஸைந்தவனை அடைந்திருக்குங்கால் துரோணரால் தடுக்கப்பட்ட பாஞ்சாலர்கள் கௌரவர்களோடு எதிர்த்து என்னசெய்தார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

மஹாராஜரே! பிற்பகலில், மயிர்சிலிர்த்தலையுண்டுபண்ணக்கூடிய யுத்தத்தில் பாஞ்சாலர்களுக்கும் கௌரவர்களுக்கும் துரோணரைப் பந்தயப்பொருளாகக்கொண்ட போராகிய சூதாட்டமானது நடந்தது. ஐயா! பாஞ்சாலர்கள் துரோணரைக் கொல்லஎண்ணி மிக்க ஸந்தோஷத்தோடு கர்ஜித்துக்கொண்டு அம்புமழைகளைப் பொழிந்தார்கள். பிறகு, அந்தப் பாஞ்சாலர்களுக்கும் கௌரவர்களுக்கும் கோரமானதும் தேவாஸுரர்களுடைய யுத்தம்போன்றதும் கைகலந்ததும் ஆச்சர்யகரமுமான ஸங்குலயுத்தமானது நடந்தது. எல்லாப்பாஞ்சாலர்களும் பாண்டவர்களுடன் சேர்ந்து துரோணருடைய ரதத்தை எதிர்த்து அவருடைய சேனையைப் பிளக்கக்கருதி மஹாஸ்திரங்களை வெளியிட்டார்கள். ரதிகர்கள் ரதத்தின்மீதேறினவர்களாக நடுத்தரமான வேகத்தை அடைந்து நடுங்கச்செய்துகொண்டு துரோணருடைய ரதத்தின் ஸமீபத்தை அடைந்தார்கள். கேகயர்களுள் மஹாரதனான ப்ருஹத்க்ஷத்ரன் இந்திரனுடைய வஜ்ராயுதத்துக்குநிகரான கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்து அந்தத்துரோணரை எதிர்த்தான். மிக்க புகழுள்ள க்ஷேமதூர்த்தி நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு அவனை விரைவாக எதிர்த்தான். சேதிதேசத்து வீரர்களுள் உத்தமனும் அதிக பலத்தோடு உதித்தவனுமான திருஷ்டகேதுவும் விரைவுள்ளவனாக மஹேந்திரனைச் சம்பான் எதிர்த்ததுபோலத் துரோணரை எதிர்த்தான். வேகமாக வருகின்றவனும் திறந்த வாயையுடைய அந்தகனைப்போன்றவனுமான திருஷ்டகேதுவை மஹாவில்லாளியான வீரதன்வா என்பவன் விரைவுடன் எதிர்த்தான். பிறகு, வீர்யமுடையவரான துரோணர் ஜயிக்கக்கருதி நிற்கின்றவரும் ஸைன்யத்துடன்கூடியவருமான யுதிஷ்டிரமஹாராஜரைத் தடுத்தார். பிரபுவே! யுத்தத்தில் ஸமர்த்தனும், பகைவர்களை

அடக்குகிறவனும் எதிர்த்துவருகின்றவனுமான நகுலனைப் பராக்கிரம சாலியும் உம்முடைய புத்திரனுமான விகர்ணன் எதிர்த்தான். அவ்வாறு வருகின்ற ஸஹதேவன்மீது சத்துருக்களை அழிப்பவனான துர்முகன் விரைவாகச் செல்லுகின்ற அனேகஆயிரம் அம்புகளை இறைத்தான். புருஷஶ்ரேஷ்டனான ஸாத்யகியை வியாக்கிரதத்தன் நன்றாகத்தீட்டப்பட்டுக் கூர்மையுள்ள அம்புகளால் அடிக்கடி நடுங்கச்செய்துகொண்டு தடுத்தான். ஸோமதத்தகுமாரனான சலன் உத்தமமான பாணங்களைப் பிரயோகிக்கின்றவர்களும் கோபமுள்ளவர்களும் ஶ்ரேஷ்டர்களும் ரதிகர்களும் புருஷோத்தமர்களுமான த்ரௌபதிகுமாரர்களைத் தடுத்தான். பயங்கரமான உருவமுள்ளவனும் பகைவர்களுக்குப் பயத்தை உண்டு பண்ணுகிறவனும் மிக்க பலசாலியுமான ஆர்ஶ்யஶ்ருங்கி கோபத்துடன் வருகின்ற பீமஸேனனை அப்பொழுது தடுத்தான். அரசரே! யுத்தகளத்தில் நரனும் ராக்ஷஸனுமான பீமஸேனன் ஆர்ஶ்யஶ்ருங்கி இருவருக்கும் முற்காலத்தில் ராமராவணர்களுக்கு யுத்தம்நடந்ததுபோல யுத்தம் நடந்தது. பாரதரே! பிறகு, பரதஶ்ரேஷ்டரான யுதிஷ்டிரர் கணுக்கள் உட்படிந்துள்ள தொண்ணூறுபாணங்களால் துரோணரை எல்லா மர்மஸ்தானங்களிலும் அடித்தார். பரதஶ்ரேஷ்டரே! கீர்த்தியுடைய யுதிஷ்டிரரால் கோபமடையும்படி செய்யப்பட்டவரான துரோணர் அந்தத் தர்மபுத்திரரை இருபத்தைந்து பாணங்களால் மார்பில் அடித்தார். துரோணர் எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உத்தமமான பாணங்களாலே யுதிஷ்டிரராஜரைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடியோடும் யுத்தபூமியில் கண்ணுக்குப் புலப்படாதவராகச்செய்தார். தர்மாத்மாவான பாண்டவர் கைத்தேர்ச்சியைக்காண்பித்துக்கொண்டு துரோணரால் விடப்பட்ட அந்தப்பாணங்களைப் பாணவர்ஷத்தினால் தடுத்தார். பிறகு, வில்லாளியான துரோணர் தர்மராஜருடைய யுத்தத்தில் மிக்க கோபம்கொண்டு மஹாத்மாவான அவருடையவில்லை யுத்தத்தில் அறுத்தார். பிறகு, வில்அறுக்கப்பட்ட தர்மபுத்திரரை மஹாரதரான துரோணர் விரைந்து நான்குபுறத்திலும் அனேக ஆயிரம் அம்புகளால் நிரப்பினார். துரோணருடைய அம்புகளால் கண்ணுக்குத்தெரியாமலிருக்கிற தர்மராஜரைப்பார்த்து எல்லாப் பிராணிகளும், 'யுதிஷ்டிரர் மாண்டார்' என்றே எண்ணின. ராஜஶ்ரேஷ்டரே! சிலர் அவ்வாறாகவே, 'யுதிஷ்டிரர் முதுகுகாட்டியோடும்படி செய்யப்பட்டார்' என்று நினைத்தனர். 'மஹாத்மாவான பிராம்மணரால் அரசர் கவரப்பட்டார்' என்று வேறு சிலர் எண்ணினார்கள். தர்மராஜரான அந்த யுதிஷ்டிரர் மிக்க ஸங்கடத்தை அடைந்து யுத்தத்தில்

துரோணரால் அறுக்கப்பட்ட அந்த வில்லை எறிந்துவிட்டு [1] உறுதியுள்ளதும் மிக்கவேகமுள்ளதும் ஸர்வோத்தமமுமானவேறொருவில்லை எடுத்தார். பிறகு, வீரரான அவர் அந்த யுத்தகளத்தில் ஆயிரக்கணக்காகத் துரோணரால் பிரயோகிக்கப்பட்ட அந்தப் பாணங்களை அறுத்தார். அது ஆச்சரியமாயிருந்தது. வேந்தரே! குரோதத்தினால் நன்கு சிவந்த கண்களையுடைய தர்மபுத்திரர் அந்தப்பாணங்களை அறுத்துவிட்டு மலைகளைக்கூடப் பிளக்கின்றதும் ஸ்வர்ணமயமான தண்டமுள்ளதும் மஹாகோரமானதும் எட்டுமணிகள் கட்டியதும் பயத்தை உண்டுபண்ணுகிறதுமான சக்தியை யுத்தத்தில் எடுத்தார். பாரதரே! பலவானான தர்மநந்தனர் அந்தச் சக்தியைத் தூக்கிக்கொண்டு சப்தத்தினால் எல்லாப் பிராணிகளையும் நடுங்கச்செய்கின்றவர்போல ஸந்தோஷத்துடன் உரக்க ஸிம்மநாதஞ்செய்தார். தர்மராஜரால் யுத்தத்தில் எடுக்கப்பட்ட சக்தியைப்பார்த்து உடனே எல்லாப் பிராணிகளும், 'துரோணருக்கு மங்களம் உண்டாகவேண்டும்' என்று சொல்லின. தர்மபுத்திருடைய கையிலிருந்து விடுபட்டதும் சட்டையுரித்த பாம்புக்கு ஒப்பானதுமான அந்தச் சக்தியானது, ஆகாயத்தையும் திக்குக்களையும் விதிக்குக்களையும் நன்கு பிரகாசிக்கச்செய்துகொண்டு, பிரகாசிக்கின்ற வாயையுடைய பெண்ஸர்ப்பம்போலத் துரோணரருகில் வந்தது. அரசரே! வேகமாகவருகின்ற அந்தச் சக்தியைப்பார்த்து அஸ்திரங்களை அறிந்தவர்களுள் உத்தமரான துரோணர் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தார். அந்த அஸ்திரமானது பார்க்கப் பயங்கரமான அந்தச் சக்தியைச் சாம்பலாகச்செய்துவிட்டுப் புகழையுடைய பாண்டவருடைய ரதத்தைக் குறித்து விரைவாகச்சென்றது. ஐயா! பிறகு மஹாமேதாவியான யுதிஷ்டிரராஜர் முயற்சியுடன்கூடிய அந்தத்துரோணருடைய அஸ்திரத்தைப் பிரம்மாஸ்திரத்தினாலேயே அடக்கினார். படிந்தகணுக்களுள்ள ஐந்துபாணங்களால் யுத்தத்தில் அந்தத் துரோணரை அடித்து மிக்க கூர்மையான ஒருக்ஷுரப்ரத்தினால் அவருடைய பெரிய வில்லையும் அறுத்தார். பெரியவரே! க்ஷத்திரியர்களை அடிக்கிறவராகிய துரோணர் அறுக்கப்பட்ட அந்த வில்லை எறிந்துவிட்டு விரைவாகத் தர்மபுத்திரரின்மீது கதாயுதத்தைப் பிரயோகித்தார். பகைவரைத்தவிக்கச் செய்பவரே! யுதிஷ்டிரர், விரைவாக வருகின்ற அந்தக் கதாயுதத்தைப் பார்த்துக் கோபம்கொண்டு கதாயுதத்தையே எடுத்துப் பிரயோகஞ்செய்தார். பலத்தினால் விடப்பட்ட அந்தஇரண்டு கதாயுதங்களும் ஒன்றோ

[1] 'பாரக்நம்' என்பது மூலம்; 'பகைவர்களாகிற பாரத்தை நாசம் செய்வது' என்றும் சொல்லலாம்.

டொன்றுமோதி உரைதலால் நெருப்பைக்கக்கிக்கொண்டு பூமியில் விழுந்தன. ஐயா! பிறகு, துரோணர் அதிககோபம்கொண்டு தர்மராஜருடைய குதிரைகளைக் கூர்மையுள்ள உத்தமமான நான்குபாணங்களால் அடித்து ஒரு பாணத்தினால் இந்திரத்வஜத்துக்கு ஒப்பான வில்லையும் ஒருபாணத்தினால் துவஜத்தையும் அறுத்து மூன்றுபாணங்களால் அவரையும் அடித்தார். பரதஸ்ரேஷ்டரே! யுதிஷ்டிரராஜர் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று விரைவாகக் குதித்துக் கைகளை உயரத்தூக்கிக்கொண்டு ஆயுதத்தை இழந்தவராகநின்றார். பகைவரை அவமதிக்கின்றவரே! ரதத்தை இழந்தவரும் விசேஷித்து ஆயுதங்களை இழந்தவருமான தர்மநந்தனரைப்பார்த்து, துரோணர் சத்துருக்களையும் எல்லா ஸைன்யங்களையும் மிகவும் மயங்கச்செய்தார். திடமான விரதத்தையுடையவரும் ஹஸ்தலாகவமுள்ளவருமான துரோணர் கூர்மையான அம்புக்கூட்டங்களைப் பிரயோகித்துக்கொண்டு அதிக பலமுள்ள சிங்கமானது யானையை எதிர்ப்பதுபோல யுதிஷ்டிரராஜரை எதிர்த்துச் சென்றார். சத்துருக்களைக் கொல்லுகிறவரான துரோணராலே தர்மபுத்ரர் எதிர்க்கப்பட்டதைப்பார்த்துப் பாண்டவர்கள் மிகப் பெரிதான ஆரவாரஞ்செய்தார்கள். ஐயா! 'துரோணரால் அரசர் கவரப்பட்டார், அரசர் கவரப்பட்டார்' என்கிற மிக்க பெரிதான சப்தமானது பாண்டவ சேனையில் நான்கு பக்கத்திலும் தோன்றியது. பிறகு, குந்திபுத்திரரான யுதிஷ்டிரராஜர் விரைவாக ஸஹதேவனுடைய ரதத்தின்மீதேறி வேகமுடைய குதிரைகளால் விலகிச்சென்றார்

---

## நூற்றேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தத்தை வர்ணித்தது.)

மஹாராஜரே! பிறகு, உறுதியான பராக்கிரமமுள்ளவனும் எதிர்த்து வருகின்றவனும் கேகயதேசத்து அரசனுமான பிருஹத்க்ஷத்திரனை க்ஷேமதூர்த்தியானவன் அம்புகளால் மார்பில் அடித்தான். மன்னரே! பிருஹத்க்ஷத்ரனோ விரைவுடன் துரோணருடைய சேனையைப்பிளக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் அந்த க்ஷேமதூர்த்தியைப்பதிந்த கணுக்களுள்ள தொண்ணூறு பாணங்களால் அடித்தான். க்ஷேமதூர்த்தியும் கோபம்கொண்டு தலைவந்ததும் கூர்மையுள்ளதுமான ஒருபல்லத்தினால் மஹாத்மாவான கேகயராஜனுடையவில்லை அறுத்தான். பிறகு,

வில் அறுக்கப்பட்டவனும் எல்லாவில்லாளிகளுள்ளும் சிறந்தவனுமான பிருஹத்க்ஷத்திரனை யுத்தத்தில் கணுக்கள்புலப்படாதபாணத்தால்விரைவாக அடித்தான். உடனேபிருஹத்க்ஷத்திரன் புன்னகைசெய்பவன்போல வேறுவில்லை எடுத்து மஹாரதனான க்ஷேமதூர்த்தியைக் குதிரைகளையும் பாகனையும் தேரையும் இழந்தவனாகச்செய்து மறுபடியும் துவைந்ததும் கூர்மையுள்ளதுமான வேறுபல்லத்தால் ஜ்வலிக்கின்ற குண்டலங்களை அணிந்த அந்த அரசனுடைய தலையையும் சரீரத்திலிருந்து அறுத்தான். அறுக்கப்பட்டதும் சுருண்டகேசத்தையுடையதும் கிரீடத்தை அணிந்ததுமான அந்த க்ஷேமதூர்த்தியினுடைய தலையானது விரைவாக யுத்தபூமியை அடைந்து, ஆகாயத்தினின்று கீழேவிழுந்த நக்ஷத்திரம்போல விளங்கிற்று. மஹாரதனான பிருஹத்க்ஷத்திரன் யுத்தத்தில் அந்த க்ஷேமதூர்த்தியைக்கொன்று ஸந்தோஷமடைந்தவனாகிப் பார்த்தர்களுக்காக உம்முடைய ஸைன்யத்தைக்குறித்து விரைவாக எதிர்த்து வந்தான். பாரதரே! அவ்வாறே எதிர்த்துவருகின்ற திருஷ்டகேதுவைப் பராக்கிரமசாலியும் சிறந்தவில்லாளியுமான வீரதன்வா துரோணருக்காகத் தடுத்தான். பலசாலிகளும் பாணங்களாகிற கோரப்பற்களுடன்கூடியவைகளுமான அவ்விரண்டு ஆண்சிங்கங்களும் ஒன்றை ஒன்றுதாக்கி அனேகஆயிரக்கணக்கான அம்புகளாலே பரஸ்பரம் அடித்துக்கொண்டன. நரஶ்ரேஷ்டர்களான அவ்விருவரும் பெருங்காட்டில் கொடியமதமுள்ள இரண்டு கஜயூதபதிகளைப்போல ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள். மஹாவீர்யமுள்ளவர்களான அவ்விருவரும் ஒருவரை ஒருவர் கொல்லுமெண்ணத்தோடு மலையின்குகைவாயிலையடைந்து கோபங்கொண்ட இரண்டு புலிகள் சண்டைசெய்வதுபோலச் சண்டை செய்தார்கள். அரசரே! கைகலந்ததான அந்த யுத்தமானது வீரர்களால் பார்க்கத்தக்கதும் ஸித்தசாரணர்களுடைய கூட்டங்களுக்கு மிக்க ஆச்சர்யகரமான காட்சியுள்ளதுமாயிருந்தது. பாரதரே! பிறகு, வீரதன்வா கோபங்கொண்டு புன்னகைசெய்து ஓர் அர்த்தசந்திர பாணத்தினால் த்ருஷ்டகேதுவினுடையவில்லை இரண்டாக அறுத்தான். மஹாரதனான சேதிதேசத்து அரசன் அறுக்கப்பட்ட அந்த வில்லை எறிந்துவிட்டுப் பெரிதும் பொற்பிடியுள்ளதும் இரும்பினாற்செய்ததுமான ஒருபெரியசக்தியை எடுத்துக்கொண்டான். பாரதரே! மஹாவீர்யமுள்ளதான அந்தச்சக்தியாயுதத்தைக் கைகளாலெடுத்து முயற்சியுடையவனாக வீரதன்வாவினுடைய ரதத்தைக்குறித்து வேகமாக எறிந்தான். வீரர்களைக்கொல்லும் திறமையையுடையதான அந்தச்சக்தியினால் அதிகமாக அடிக்கப்பட்ட அந்த அரசன் மார்புபிளந்து ரதத்தி

விருந்து பூமியில் விரைவாக விழுந்தான். விபுவே! த்ரிகர்த்தர்களுள் மஹாரதனான அந்த வீரன் கொல்லப்பட்டவுடன், உம்முடையஸைன்ய மானது பாண்டவர்களால் நான்குபக்கத்திலும் முறிய அடிக்கப்பட்டது. பிறகு, துர்முகன், ஸஹதேவன்மீது அறுபதுபாணங்களைப்பொழிந்து யுத்தத்தில் அவனை அதட்டிக்கொண்டு பெரிய ஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, மாத்ரீகுமாரனும் ப்ராதாவுமான ஸஹதேவன் கோபம்கொண்டு அட்டஹாஸஞ்செய்து முயற்சியுடன் ப்ராதாவான துர்முகனைக் கூர்மை யுள்ள அம்புகளால் அடித்தான். பாரதரே! மஹாபலசாலியான அந்த ஸஹதேவனை யுத்தத்தில் பரபரப்புள்ளவனாகக்கண்டு துர்முகன் ஒன் பதுபாணங்களால் அடித்தான். மஹாபலசாலியான ஸஹதேவன் அர்த்தசந்திரபாணத்தால் துர்முகனுடைய கொடியை அறுத்துக் கூர்மையுள்ள நான்குபாணங்களால் நான்குகுதிரைகளையுமடித்துத் துவைந்ததும் கூர்மையுள்ளதுமான வேறோர் அர்த்தசந்திரபாணத்தி னால் ஜ்வலிக்கின்ற குண்டலங்களோடுகூடின ஸாரதியின் தலையையும் சரீரத்தினின்று அறுத்துத்தள்ளினான். கூர்மையான க்ஷுரப்ரத்தினால் துர்முகனுடைய பெரியவில்லையும் யுத்தத்தில் அறுத்து அவனையும் ஐந்து பாணங்களால் அடித்தான். பாரதரே! அரசரே! குதிரைகள் கொல்லப்பட்ட தேரைவிட்டு அப்பொழுது மனவருத்தமுற்றவனான துர்முகன் நிரமித்திரனுடைய ரதத்தில் ஏறினான். பிறகு, சத்துரு வீரர்களைக் கொல்லுகிறவனான ஸஹதேவன் கோபம்கொண்டு மகாயுத் தத்தில் பெரியமுனையுள்ள அர்த்தசந்திரபாணத்தினால் நிரமித்ரனை அடித்தான். த்ரிகர்த்தராஜகுமாரனும் அரசனுமான அந்த நிரமித்திரன் உம்முடைய சேனைக்குத் துயரத்தையுண்டாக்கிக்கொண்டு தேரின்நடுவி லிருந்து கீழேவிழுந்தான். தாசரதியான ஸ்ரீராமர் மஹாபலசாலியான கரனென்னும் ராக்ஷஸனைக்கொன்று எவ்வாறாக விளங்கினாரோ அவ் வாறே மஹாபாகுபலமுள்ள ஸஹதேவன் நிரமித்ரனைக்கொன்று விளங் கினான். ஜனேச்வரரே! மஹாரதனும் ராஜபுத்திரனுமான நிரமித்திரன் கொல்லப்பட்டதைக்கண்டு த்ரிகர்த்தர்கள் மிக்க கூக்குரல் செய்தார்கள். வேந்தரே! நகுலன் விசாலமான கண்களையுடையவனும் உம்முடைய குமாரனுமான விகர்ணனை ஒரு முஹூர்த்தத்திற்குள் ஜயித்தான். உல கத்தில் அது ஆச்சரியமாயிருந்தது. வியாக்ரதத்தனோ படிந்தகணுக் களுள்ள அம்புகளால் ஸாத்யகியைப் படைநடுவில் குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடிமரத்தோடும் கண்ணுக்குப்புலப்படாதவனாகச் செய்தான். சூரனான ஸாத்யகி நல்ல கைப்பழக்கமுள்ளவன்போல் அந் தப்பாணங்களைத் தடுத்து அம்புகளால் வியாக்ரதத்தனைக் குதிரை

களோடும் ஸாரதியோடும் கொடியோடும்கூட விழும்படி செய்தான். பிரபுவே! மகததேசாதிபதியினுடைய குமாரனான அந்த வியாக்கிர தத்தன் கொல்லப்பட்டவுடன், மாகதர்கள் நான்குபக்கங்களிலும் ஸன்னாஹத்தோடுகூடியவர்களாக யுயுதானனை நோக்கி அருகில் ஓடிவந்தார்கள். சூரர்களான அந்த மகதநாட்டு வீரர்கள் அம்புகளையும் தோமரங்களையும் ஆயிரக்கணக்காகப் பிரயோகித்துக்கொண்டும் அவ்வாறே பிண்டிபாலங்களையும் ப்ராஸங்களையும் முத்கரங்களையும் உலக்கைகளையும் பிரயோகித்துக்கொண்டும் யுத்தத்தில் கெட்டமதமுள்ளவனான ஸாத்வதனை யுத்தபூமியில் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். பலசாலியும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனும் புருஷஸ்ரேஷ்டனுமான ஸாத்யகி சிரித்துக்கொண்டே அவர்களனைவர்களையும் மிக எளிதாக ஜயித்தான். பிரபுவே! மாண்டவர்கள்போக மிகுந்திருக்கின்றவர்களும் நான்கு பக்கத்திலும் ஓடுகின்றவர்களுமான மாகதர்களைக்கண்டு யுயுதானனுடைய பாணங்களால் பீடிக்கப்பட்ட உம்முடைய சேனையானது தோல்வியடைந்தது. அந்த ஸாத்யகி ரணகளத்தில் நான்குபக்கங்களிலுமுள்ள உம்முடைய சேனையை நாசஞ்செய்துவிட்டுச் சிறந்தவில்லை அசைவுறச்செய்துகொண்டு மிக்க கீர்த்தியையுடையவனாகப் பிரகாசித்தான். அரசரே! மஹாத்மாவும் நீண்ட கைகளையுடையவனுமான ஸாத்வதனால் அடிக்கப்பட்டும் பயமடையும்படி செய்யப்பட்டுமுள்ள உம்முடைய ஸேனையானது யுத்தத்திற்காகப் பகைவர்களை எதிர்க்கவே இல்லை. பிறகு, துரோணர் மிக்க கோபங்கொண்டு விரைவாகக் கண்களைப் புரட்டிவிழித்து ஸத்யமான செய்கைகளையுடையவனான ஸாத்யகியை நோக்கித் தாமே எதிர்த்துச் சென்றார்.

---

## நூற்றெட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(த்ரௌபதீகுமாரர்கள் சலனைக்கொன்றதும், பீமஸேனன் அலம்புஸனை வென்றதும்.)

மிக்ககீர்த்தியுள்ள ஸோமதத்தகுமாரனான சலன் மஹாவில்லாளிகளான த்ரௌபதீகுமாரர்களை ஒவ்வொருவரையும் ஐந்துஐந்து பாணங்களாலடித்து மறுபடியும் ஏழு ஏழுபாணங்களாலடித்தான். பிரபுவே! பயங்கரனான அந்தச் சலனால் பலத்தினால் மிகப் பீடிக்கப்பட்டவர்களான அந்த த்ரௌபதீபுத்திரர்கள் புத்திமயக்கம்கொண்டு யுத்தத்

தில் செய்யவேண்டிய கார்யம் ஒன்றையும் அறியவில்லை. பகைவர்களைத் துன்பப்படுத்துகிறவனும் நகுலகுமாரனுமான சதானீகன் தைரியமுடையவனாகி இரண்டுபாணங்களால் நரஶ்ரேஷ்டனான சலனை அடித்து ஸிம்மநாதஞ்செய்தான். அவ்வாறே மற்ற த்ரௌபதீபுத்திரர்களும் யுத்தத்தில் முயற்சியுடையவர்களாகி மும்மூன்றுபாணங்களால் கோபமுடையவனான சலனை விரைவாக யுத்தத்தில் அடித்தார்கள். மஹாராஜரே! மஹாகீர்த்திமானான அந்தச்சலன் அவர்களைக்குறித்து ஐந்து பாணங்களைப்பிரயோகித்தான். ஒவ்வொருவரையும் மார்பில் ஒவ்வொரு பாணத்தால் அடித்தான். பிறகு, தீரனான அவனால் பாணங்களால் அடிக்கப்பட்ட அந்த ஐந்துபிராதாக்களும் ரணகளத்தில் வீரனான சலனைச் சூழ்ந்துகொண்டு அம்புகளால்மிகவும்அடித்தார்கள். அர்ஜுனகுமாரனோ மிகுந்தகோபம்கொண்டு அந்தச்சலனுடையகுதிரைகளைக் கூர்மையுள்ள நான்குபாணங்களால் யமனுடையவீட்டுக்கு அனுப்பினான். பீமஸேனகுமாரன் உறுதியுள்ளவனான ஸோமதத்தகுமாரனுடையவில்லை அறுத்து உரத்தஸிம்மநாதஞ் செய்து கூர்மையுள்ள பாணங்களால் (அவனையும்) அடித்தான். யுதிஷ்டிரருடைய குமாரன் அந்தச்சலனுடைய த்வஜத்தை அறுத்துப் பூமியில் தள்ளினான். பிறகு, நகுலகுமாரன் ஸாரதியைத் தேர்த்தட்டிலிருந்து கிழேதள்ளினான். அரசரே! ஸஹதேவகுமாரன், அந்தச்சலன் ஸஹோதரர்களால் தோல்வியடைவிக்கப்பட்டதை அறிந்து மஹாபலசாலியான அந்தச்சலனுடைய தலையை க்ஷுரப்ரத்தினால் அறுத்தான். பொன்னாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள அவனுடைய தலையானது போர்க்களத்தில் விழுந்து பாலசூரியனுக்கொப்பான காந்தியுடன் யுத்தபூமியைப் பிரகாசிக்கச்செய்தது. வேந்தரே! மஹாத்மாவான ஸோமதத்தகுமாரனுடைய தலை விழுந்ததைக்கண்டு உம்மைச்சேர்ந்த ஸைநிகர்கள் பயந்து பலவாறு ஓடினார்கள்.

இராவணகுமாரன் இலக்ஷ்மணனை எதிர்த்துப்போர்புரிந்தது போல அலம்புஸன் கோபமூண்டு மஹாபலசாலியான பீமஸேனனை யுத்தத்தில் எதிர்த்துச் சண்டைசெய்தான். யுத்தபூமியில் நன்றாக யுத்தஞ் செய்கின்ற அந்த நரராக்ஷஸர்களிருவரையுங்கண்டு எல்லாப்பிராணிகளுக்கும் ஆச்சரியமும் மிகக்கொடிய பயமும் உண்டாயின. மன்னரே! பிறகு, பீமஸேனன் அட்டஹாஸஞ்செய்து கூர்மையுள்ள ஒன்பது பாணங்களால் கோபமுள்ளவனும் ருஶ்யஶ்ருங்ககுமாரனும் ராக்ஷஸராஜனுமான (அலம்புஸனை) அடித்தான். யுத்தத்தில் அடிக்கப்பட்ட அந்த ராக்ஷஸன் பயங்கரமான நாதத்தைச்செய்து பீமனை எதிர்த்தோடி வந்தான். பிறகு, அவனுடைய துணைவீரர்களும் எதிர்த்து வந்தார்கள்.

அந்த அலம்புஸன் கணுக்கள் உட்படிந்துள்ள ஐந்துபாணங்களால் பீமனை அடித்து யுத்தகளத்திலிருக்கின்ற முந்நூறுதேர்களையும் விரைவாக அடித்தான். பின்னும் நானூறுரதங்களை நாசஞ்செய்து பாணத்தினால் பீமனை அடித்தான். ராக்ஷஸனால் அவ்வாறு மிக அடிக்கப்பட்ட மஹாபலசாலியான பீமன் மயங்கித் தேர்மத்தியில் உட்கார்ந்தான். பிறகு, பிரஜ்ஞையை அடைந்தவனான வாயுபுத்திரன் கோபமிகுந்து கோரமானதும் பெருங்காரியத்துக்கு ஸாதனமாயுள்ளதுமான சிறந்த வில்லை இழுத்துக் கூர்மையுள்ள அம்புகளைத் தொடுத்து அலம்புஸனை நான்குபக்கத்திலும அடித்தான். அரசரே! அனேக பாணங்களால் அடிக்கப்பட்டவனும் கறுத்தமைக்குவியலுக்கு ஒப்பானவனுமான அந்த அலம்புஸன் நாற்புறத்திலும் நன்றாகப்பூத்திருக்கிற பலாசவிருக்ஷம்போல விளங்கினான். யுத்தத்தில் பீமனுடையவில்லிலிருந்துவிடப்படும் அம்புகளால் அடிக்கப்பட்ட அலம்புஸன், மஹாபலசாலியான பாண்டவன் தன்ஸஹோதரனைக்கொன்றதை நினைத்து, பிறகு, கோரமான ரூபத்தை எடுத்துக்கொண்டு பீமஸேனனைப்பார்த்து, 'பார்த்த! யுத்தத்தில் இப்பொழுது நில்; என்பராக்கிரமத்தை இப்பொழுதுபார். மிகுந்த துர்ப்புத்தியுடையவனே! பலவானும் என்பிராதாவுமான பகன் என்கிற ராக்ஷஸஶ்ரேஷ்டன் உன்னால்கொல்லப்பட்டது நான்பாராதபொழுது நடந்தது' என்று சொன்னான். இவ்வாறு அந்தராக்ஷஸன் பீமனை நோக்கிச் சொல்லிவிட்டு அப்பொழுதே அந்தர்த்தானத்தை அடைந்து பெரிதான அம்புவருஷத்தைஅவன்மீது அதிகமாகப்பொழிந்தான். மன்னரே! யுத்தத்தில் ராக்ஷஸன் அப்பொழுது கண்ணுக்குக்காணமலிருக்கும்பொழுது பீமஸேனன் படிந்த கணுக்களுள்ள அம்புகளால் ஆகாயத்தை நிரப்பினான். பீமனால் அல்பனான அந்த ராக்ஷஸன் அடிக்கப்பட்டு ஒரு நிமிஷத்தில் தேரேறிப் பூமியில்வந்து ஆகாயத்தை விரைவாக அடைந்தான். அந்த ராக்ஷஸன் அணுவாகவும் பெரிதாகவும் மறுபடியும் ஸ்தூலமாகவுமிருக்கிற உருவத்தையுடையவனாகி நானாவிதமான பலரூபங்களை யெடுத்து மேகம்போலக்கர்ஜித்துக்கொண்டு [1] பலவிதமான வார்த்தைகளை நாற்புறமும் சொன்னான். ஆகாயத்திலிருந்து ஆயிரக்கணக்கான சரதாரைகளும் சக்திகளும் கணபங்களும் பிராஸங்களும் சூலங்களும் பட்டஸங்களும் தோமரங்களும் சத்க்னிகளும் பரிகங்களும் பிண்டிபாலங்களும் கோடாலிகளும் கற்களும் கத்திகளும் வளைதடிகளும் ரிஷ்டிகளும் வஜ்ரங்களும் விழுந்தன. ராக்ஷஸனால் விடப்பட்ட மிக்கபயங்கரமான அந்தச்சஸ்திரவர்ஷமானது யுத்தமுனை

[1] வேறுபாடம்.

யில் பாண்டுபுத்திரனுடைய படையிலுள்ளவர்களை வதஞ்செய்தது. அந்தச்சஸ்திரவர்ஷத்தினால் யுத்தத்தில் பாண்டவசேனையிலுள்ள யானைகள் கொல்லப்பட்டன. காவலரே! அவ்வாறே அனேகம் குதிரைகளும் கொல்லப்பட்டன. காலாட்களும் கொல்லப்பட்டார்கள். அந்த ராக்ஷஸனுடைய அம்புகளால் அடித்துத்தள்ளப்பட்ட ரதிகர்கள் ரதங்களினின்று கீழேவிழுந்தார்கள். அரசரே! அந்த ராக்ஷஸன் ரத்தமாகிற ஜலமுள்ளதும் ரதங்களாகிற சுழல்களுள்ளதும் யானைகளாகிற முதலைகளால் சூழப்பட்டதும் குடைகளாகிற அன்னபக்ஷிகளுள்ளதும் கைகளாகிற ஸர்ப்பங்களால் சூழப்பட்டதும் சேறுள்ளதும் ராக்ஷஸர்களுடைய கூட்டங்களால் நிறைந்ததும் சேதிதேசத்தரசர்களையும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் பலவாறாக இழுத்துக்கொண்டு செல்லுகின்றதுமான ஒருநதியை உண்டுபண்ணினான். வேந்தரே! அவ்விதமே யுத்தத்தில் பயமில்லாதவன்போல் ஸஞ்சரிக்கின்ற அந்தராக்ஷஸனுடைய வல்லபத்தைப் பாண்டவர்கள் மிக்கமனவருத்தத்துடன் பார்த்தார்கள். உம்முடைய படையிலுள்ளவர்களுக்கு மிக்கஅதிகமான ஆனந்தம் உண்டாயிற்று. மயிர் பொடிக்கச்செய்வதும் பெரிதும் உக்கிரமுமான நான்குவித வாத்தியங்களுடைய சப்தமும் தோன்றியது. கையைக்கொட்டுதலால் உண்டுபண்ணப்பட்ட ஓசையை ஒருஸர்ப்பம் எவ்வாறு பொறாதோ அவ்வாறே பாண்டவன் உம்முடைய ஸைந்யத்திலுண்டான கோரமான அந்தச்சப்தத்தைக்கேட்டுப் பொறுக்கவில்லை. பிறகு, வாயுபுத்திரனான பீமஸேனன் எரிக்கின்ற அக்னிபோன்றவனாகிக் கோபத்தினால் கண்கள் சிவந்து த்வஷ்டாவைப்போல் த்வஷ்டாவைத்தேவதையாகக்கொண்ட அஸ்திரத்தைத் தானே ஸந்தானம் செய்தான். பிறகு, நான்குபக்கங்களிலும் ஆயிரக்கணக்கான அம்புகள்தோன்றின. அந்த அம்புகளாலே உம்முடைய ஸைனியத்துக்கு மிகப்பெரிதான விபத்தானது உண்டாகியது. யுத்தத்தில் அந்தப்பீமஸேனனால் தொடுக்கப்பட்ட அந்த அஸ்திரமானது ராக்ஷஸனுடைய மகாமாயையை நாசஞ்செய்துவிட்டு ராக்ஷஸனையும் வருத்தியது. பீமஸேனனால் பலவாறு பீடிக்கப்படுகின்ற அந்த ராக்ஷஸன் ரணகளத்தில் பீமஸேனனை விட்டுத் துரோணருடைய ஸைந்யத்தைக்குறித்து ஓடினான். அரசரே! மஹாபலசாலியான பீமஸேனனாலே அந்த ராக்ஷஸேந்திரன் ஜயிக்கப்பட்டபொழுது பாண்டவர்கள் ஸிம்மநாதங்களால் எல்லாத்திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்து மிகுந்த ஸந்தோஷத்தையடைந்து மஹாபலசாலியான வாயுபுத்திரனை, அஸுரர்கள் பிரஹ்லாதனையும் தேவர்களுடைய கூட்டங்கள் இந்திரனையும் பூஜிப்பதுபோலப் பூஜித்தார்கள்.

## நூற்றெண்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(கடோத்கசன் அலம்புஸனைக் கொன்றது.)

அரசரே! மஹாயுத்தத்தில் கோபத்தினால் பாணவர்ஷங்களை இறைக்கின்றவரும் கௌந்தேயர்களுடைய அந்தச்சேனையைப் பயமடையும்படி செய்கின்றவரும் ரதங்களை மிகவும் அடிக்கின்றவருமான (அந்தத்துரோணரைப்) பார்த்து, பிறகு, சிறந்த வில்லாளியும் மிக்க கைவன்மையுள்ளவனுமான கடோத்கசன் யுத்தத்தின்பொருட்டு எதிர்த்து வந்தான். மஹாராஜரே! பலசாலியான ஹிடிம்பையினுடைய புத்திரன், பலவிதமான ஆயுதங்களுள்ளவனும் நல்லொளியுள்ள பொற்கவசம் பூட்டப்பெற்றவனும் பூஷணங்களால்நிறைக்கப்பட்ட அங்கங்களுள்ளவனும் மேகம்போலக் கர்ஜிக்கின்றவனும் மிக்ககோபம்கொண்டவனுமாகிப் பிசாசங்களுடைய முகம்போன்றமுகமுடைய குதிரைகளையுடையதும் பொன்னாலாகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான ரதத்தின்மீதேறித் துரோணரை எதிர்த்து வந்தான். மிகுந்த கோபத்தோடு வருகின்ற அந்தக் கடோத்கசனை, கவசமணிந்தவனும் சிவந்த உதடுகளையுடையவனும் வில்லைக் கையில்கொண்டவனும் கல்பகவிருக்ஷம்போல உயர்ந்தவனுமான அலம்புஸன் கரடித்தோலால் மூடப்பட்ட தேரின்மீதேறிக்கொண்டு எதிர்த்துவந்தான். அலம்புஸன் பெரிய சதக்னிகளையும் உலக்கைகள்போன்ற தோமரங்களையும் அநேகமானமுஸண்டிகளையும் முத்தலைச்சூலங்களையும் பட்டஸங்களையும் நூறுமுனைகளையுடைய கர்ப்பரங்களையும் பலவிதமானபிநாகங்களையும் சக்கரங்களையும் க்ஷுரப்ரங்களையும் க்ஷேபணிகளையும் கடங்கடங்களையும் பிரயோகித்துக்கொண்டும் பயங்கரமான சப்தங்களை வெளியிட்டுக்கொண்டும் வில்லை எடுத்துக் கழுகுகளாலும் கோட்டான்களாலும் காக்கைகளாலுந் தொடரப்பட்ட பலவித நாராசங்களைப் பிரயோகித்தான். மன்னரே! கொடியவனும் பயங்கரனும் காலனைப்போல் வருகின்றவனுமான அந்த அலம்புஸனைக்கண்டு பயத்தினால் மனத்தளர்ச்சியடைந்து பாண்டவஸேனையானது விரைவாக ஓடியது. தேவதையினுடைய காந்திபோன்ற காந்தியையுடையவனும் மதிகர்களுள் சிறந்தவனுமான ஸாத்யகியோ யுத்தத்தில் அந்த ராக்ஷஸனைப்பார்த்துப் பெரிதான வில்லைச்சுழற்றிக்கொண்டும், 'நில் நில்' என்று சொல்லிக்கொண்டும் அவனைக்குறித்து எதிர்த்து விரைவாகச் சென்றான். அவன் ராக்ஷஸஸ்ரேஷ்டனான அலம்புஸன்மீது பாணவர்

க்ஷங்களையும் வர்ஷித்தான். பாரதரே! பிறகு, பாண்டவசேனை ஓடுகின்ற தைப்பார்த்துக் கடோத்கசன் வேகத்தோடு அலம்புஸனைச் சீக்கிரமாக எதிர்த்தான். கதாயுதங்களையும் சக்திகளையும் தோமரங்களையும் பட்டஸங்களையும் பொன்னால் சித்திரிக்கப்பட்ட பிடிகளுள்ளவைகளும் கொடிய உருவமுள்ளவைகளும் ஆகாயத்துக்கு ஸமமான ஒளிபொருந்தியவைகளுமான கத்திகளையும் அந்த அரக்கன்மீது பிரயோகித்தான். மஹாபலசாலிகளான அந்த இரண்டு அரக்கர்களும் ஸமீபத்தில் ஒருவரை ஒருவர்பார்த்து இரண்டு நீருண்டமேகங்கள்போலப் பயங்கரமாகச் சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு கர்ஜித்தார்கள். பிறகு, முற்காலத்தில் ராமராவணர்களுக்கு யுத்தம் நேர்ந்ததுபோலவே ராக்ஷஸஶ்ரேஷ்டர்களான அவ்விருவருக்கும் கோரமான யுத்தம் நடக்கத் தொடங்கியது. ஒருவர்மீதொருவர் கோபங்கொண்டவர்களான அவ்விருவரும் அப்பொழுது சக்திகளையும் பிறைகங்களையும் வஜ்ரங்களையும் கத்திகளையும் கோடாலிகளையும் பிரயோகித்தார்கள். இறைவரே! அவர்களுடைய தோள்வலிமையினால் இழுக்கப்படுகின்ற விற்கள் இரண்டும் அப்பொழுது யந்திரத்தினால் இழுக்கப்பட்டவைபோல அதிக சப்தங்களை உண்டுபண்ணின. பிறகு, வீர்யமுடையவனான அலம்புஸன் முயற்சியுடன் யமன்போன்றதும் அக்நிபோல விளங்குகின்றதுமான சக்கரத்தைக் கடோத்கசன்மீது எறிந்தான். பீமஸேனகுமாரனான கடோத்கசன் வேகத்துடன் வருகின்ற அந்தச் சக்கரத்தைப்பார்த்துப் பாதிவழியில் கதாயுதத்தால் அடித்தான். அந்தச்சக்ரமானது நூறு துண்டாகச்சிதறியது. பிறகு, சக்கரத்தில் மோதினதினாலுண்டானவைகளும் கதண்டுகள்போல விழுகின்றவைகளுமான நெருப்புப்பொறிகளால் அந்தச்சேனையானது மிக்கவருத்தத்தை அடைந்தது. பிறகு, சக்கரமானது முறிக்கப்பட்டபொழுது அந்தவீரன் கோபத்தினால் மனங்கலங்கி அப்பொழுது சீக்கிரமாகச் சூலத்தையும் ஆயிரம் சக்திகளையும் பிரயோகித்தான். ஜ்வலிக்கின்றவைகளும் நான்குபக்கங்களிலும் ஜ்வாலாவரிசைகளை இறைக்கின்றவைகளும் யுகாந்தகாலத்திய எரிநக்ஷத்திரங்கள்போன்றவைகளும் கூர்மையுள்ளவைகளும் தங்கமயமான தண்டமுள்ளவைகளும் பெரிதான சப்தத்துடன்கூடியவைகளும் எதிரில் வருகின்றவைகளுமான அந்த ராக்ஷஸனுடைய சக்திகளைப் பார்த்துக் கடோத்கசன் கழுகிறகுகள்கட்டின அர்த்தசந்திரபாணங்களால் அவைகளை அறுத்தான். பிறகு, ரோஷத்தினால் வியாபிக்கப்பட்ட அங்கங்களுள்ள அந்த ராக்ஷஸன் கடோத்கசனுடைய ரதத்தைக்குறித்து மஹாகோரமான சரமாரியைத் தொடுத்தான். இந்திரனும் சம்பர

னும்போலப் பற்பலமாயைகளை வெளியிடுகின்ற அந்த இரண்டு ராக்ஷஸ ஸ்ரேஷ்டர்களுக்கும் பயங்கரமான யுத்தம் நேர்ந்தது. அலம்புஸன் மிக்க கோபங்கொண்டு கடோத்கசனை அடித்தான். பிரபுவே! ராக்ஷஸ பதிகளுள் முக்கியர்களான அவ்விருவருக்கும் முற்காலத்தில் இராம ராவணர்களுக்கு யுத்தம் நேர்ந்ததுபோல யுத்தம் நேர்ந்தது. 'கடோத்கசனே இருபது பாணங்களால் அலம்புஸனை மார்பிலடித்து ஸிம்மம் போல் அடிக்கடி கர்ஜித்தான். அரசரே! அவ்வாறே அலம்புஸனும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனை ஹிடிம்பாகுமாரனைத் தைர்யத்துடன அடித்து அடித்து நான்குபுறத்திலும் ஆகாசத்தை நிறையும்படி செய்துகொண்டு ஸிம்மநாதஞ்செய்தான். அவ்வாறு மிக்ககோபம் கொண்டவர்களும் மஹாபலமுடையவர்களுமான அந்த இரண்டு ராக்ஷஸஸ்ரேஷ்டர்களும் மாயைகளோடு ஒருவரை ஒருவர் எதிர்த்து வேற்றுமையில்லாமல் யுத்தஞ் செய்தார்கள். நித்யம் அனேகமாயைகளை உண்டுபண்ணுகின்றவர்களும் ஒருவரை ஒருவர் மோஹிக்கச்செய்கிறவர்களும் மாயாயுத்தங்களில் ஸமர்த்தர்களுமான அவ்விருவரும் மாயா யுத்தத்தைச் செய்தார்கள். அரசரே! கடோத்கசன் யுத்தத்தில் எந்த எந்த மாயையைக் காண்பித்தானே அந்தஅந்த மாயையை அலம்புஸன் மாயையினாலேயே நாசஞ்செய்தான். அவ்வாறு யுத்தம் செய்கின்றவனும் மாயாயுத்தத்தில் ஸமர்த்தனும் ராக்ஷஸஸ்ரேஷ்டனுமான அந்த அலம்புஸனைப்பார்த்துப் பாண்டவர்கள் கோபங்கொண்டார்கள். இறைவரே! மிக்ககோபங்கொண்டவர்களும் அதிகமனவருத்தத்தை அடைந்தவர்களும் ரதிகர்களுள் உத்தமர்களுமான பீமஸேனன்முதலானவர்கள் அலம்புஸனைக்குறித்து எதிர்த்துச் சென்றார்கள். ஐயா! அவர்கள் நான்குபக்கங்களிலும் ரதஸமூகத்தினால் சூழ்ந்துகொண்டு அந்த ராக்ஷஸனை நடுவில் நிற்கும்படிசெய்து கொள்ளிக்கட்டைகளால் யானையைச் சுடுவதுபோல் அவன்மீது நான்குபக்கங்களிலும் பாணங்களை இறைத்தார்கள். அவன் அவர்களுடைய அந்த அஸ்திரவேகத்தை அஸ்திர மாயையினால் தடுத்துக் காட்டுத்தீயினிடமிருந்து காட்டியானைவிடுபடுவதுபோல அவர்களுடைய தேர்க்கூட்டத்திலிருந்து விடுபட்டான். பெரியவரே! அந்த அலம்புஸன் இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் ஓசைக்கு ஸமமான ஓசையுள்ள கோரமான வில்லை நாணொலிசெய்து வாயுகுமாரனை இருபத்தைந்து பாணங்களாலும் பீமஸேனகுமாரனை ஐந்து பாணங்களாலும் யுதிஷ்டிரரை மூன்று பாணங்களாலும் ஸஹதேவனை ஏழுபாணங்களாலும் நகுலனை எழுபத்துமூன்று பாணங்களாலும் த்ரௌபதீகுமாரர்களை ஐந்து ஐந்து பாணங்களாலும் அடித்துக் கோர

மான ஒலியுடன் கர்ஜித்தான். அந்த ராக்ஷஸனைப் பீமஸேனன் ஒன்பது பாணங்களாலும் ஸஹதேவன் ஐந்து பாணங்களாலும் யுதிஷ்டிரர் நூறுபாணங்களாலும் நகுலன் அறுபத்துநான்கு பாணங்களாலும் த்ரௌபதீகுமாரர்கள் மும்மூன்றுபாணங்களாலும் திருப்பி அடித்தார்கள். மஹாபலமுள்ள கடோத்கசன் யுத்தத்தில் அந்த ராக்ஷஸனை ஐந்நூறு பாணங்களாலடித்து மறுபடியும் எழுபது பாணங்களாலடித்து ஸிம்மநாதஞ் செய்தான். அரசரே! அவனுடைய பெரிதான சப்தத்தினால் மலைகளோடும் வனங்களோடும் மரங்களோடும் ஜலாதாரங்களோடும் கூடின பூமியானது நடுக்கமுற்றது. பெரியவில்லைக் கையில்பிடித்தவர்களும் மஹாரதிகர்களுமாகிய அந்தப்பாண்டவவீரர்களால் நான்குபக்கத்திலும் அதிகமாக அடிக்கப்பட்ட அந்த அலம்புஸன் அவர்களெல்லோரையும் ஐந்து ஐந்து பாணங்களால் திருப்பி அடித்தான். பரதஸ்ரேஷ்டரே! யுத்தத்தில் கோபங்கொண்டவனான அலம்புஸனென்கிற ராக்ஷஸனைக் கோபங்கொண்ட ராக்ஷஸனான ஹிடிம்பாபுத்திரன் ஏழு பாணங்களாலடித்தான். பலசாலியான அவனால் நன்றாக அடிக்கப்பட்டவனும் மஹாபலசாலியுமான அலம்புஸன் ஸ்வர்ணமயமான கட்டுக்களுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளைக் கடோத்கசன்மீது விரைவாகப் பிரயோகஞ்செய்தான். புலப்படாத கணுக்களுள்ள அந்த அம்புகள் மிக்கபலமுள்ளவைகளான கோபங்கொண்ட ஸர்ப்பங்கள் [1] மலைச்சிகரத்தில் நுழைவதுபோலக் கடோத்கசன் உடலிற் புகுந்தன. வேந்தரே! பிறகு, பயத்தை அடைந்திருக்கின்ற அந்தப் பாண்டவர்கள் ஹிடிம்பாபுத்திரனான கடோத்கசனுடன் சேர்ந்து கூர்மையுள்ள பாணங்களை நான்குபுறத்திலும் பிரயோகித்தார்கள். யுத்தத்தில் ஜயத்தால்பிரகாசிக்கின்றவர்களான பாண்டவர்களால் அடிக்கப்படுகின்ற மகாபலசாலியான அந்த அலம்புஸன் செய்யவேண்டியதை அறியவில்லை. மஹாராஜரே! அந்த ரிஸ்யசிருங்கன் மகனான அலம்புஸன் எரிக்கப்பட்ட மலையின் கொடுமுடிக்கு ஒப்பானவனும் மைக்குவியல்போன்றவனுமான அந்தக்கடோத்கசன்மீது அம்பு மழைகளை இறைத்தான். கடோத்கசனும் பரபரப்பில்லாதவனாகி அலம்புஸனைக்கொல்லக்கருதி அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு மிகப்பெரிய அம்புமழையை வர்ஷித்தான். அலம்புஸனுடைய வதத்தைக்குறித்தும் உக்கிரமான கடோத்கசனுடைய வதத்தைக்குறித்தும் பாணங்கள் மரத்தினின்று வண்டுகள் வருவதுபோல் நான்குபக்கங்களிலும் தோன்றின. அரசரே! அந்த யுத்தபூமியில் பாணங்களால் நிழலானது மேகச்சாயை

---

[1] வேறுபாடம்.

போல் உண்டுபண்ணப்பட்டது. அம்புகளால் இருளானது உண்டுபண்ணப்பட்டிருக்கும்பொழுது ஒன்றும் அறியப்படவில்லை. பிறகு, மஹாபலவானான கடோத்கசன் காதுவரையில் இழுத்துவிடப்பட்ட அர்த்தசந்திரபாணத்தினால் அலம்புஸனுடைய ஸாரதியின் தலையை அறுத்து பிறகு, வேகமுள்ள வேறு க்ஷுரங்களாலே அவன்ரதத்தினுடைய அச்சையும் ஏர்க்காலையும் நுகத்தையும் அடித்து வெட்டி எறிந்தான். கிர்மீரகுமாரனான அலம்புஸனும் அந்த ரதத்தினின்று விரைவாகத்துள்ளிக் கோபத்தோடு கடோத்கசன்மீது கோரமும் மாயாமயமுமான அஸ்திரவர்ஷத்தை வர்ஷித்தான். கடோத்கசனும் சீக்ரமாக ரதத்தினின்று அவன்மீதே பாய்ந்து மாயாஸ்திரத்தினால் சத்துருவினுடைய மாயாஸ்திரத்தை யுத்தத்தில் நாசஞ்செய்தான். மஹாராஜரே! ஹிடிம்பையின் குமாரனால் பீடிக்கப்படுகின்ற அந்த அலம்புஸன் யுத்தகளத்தினின்று ஓடி ஒளிந்துகொண்டு கடோத்கசனோடு யுத்தஞ் செய்தான். மகாபலவானான கடோத்கசன், ஒளிகின்ற அலம்புஸனை அங்கு அங்கே பார்த்து வேகத்துடன்கூடிய கதாயுதத்தினாலடித்தான். பிறகு, அடியினால் துன்பத்தை யடைவிக்கப்பட்டவனும் ராக்ஷஸச்ரேஷ்டனுமான அலம்புஸன் உடனே பக்ஷிராஜன்போல் ஆகாசத்தில் கிளம்பினான். பிறகு, கடோத்கசனும் அதைவிட அதிக வேகத்தோடு மழையைப் பொழிவதற்காகத் தோன்றிய மேகம்போலப் பரபரப்பில்லாதவனாகிக் கத்தியைக்கையில் கொண்டு ஆகாசமார்க்கத்தில் கிளம்பினான். தன்னை எதிர்த்துவருகின்ற அந்தக் கடோற்கசனைப்பார்த்து ராக்ஷஸச்ரேஷ்டனான கிர்மீரகுமாரன் எதிரில்நிற்கின்றஸிம்மத்தை ஸிம்மமெதிர்ப்பதுபோல வேகத்தோடு எதிர்த்துவந்தான். கடோத்கசன் கவசத்தால் மார்பைமறைத்து வலக்கையினால் கத்தியைத்தூக்கிக்கொண்டு வேகமுடையவனான அலம்புஸனை வேகத்தோடு எதிர்த்தான். வேகத்துடனும் முயற்சியுடனும்கூடினவர்களான அலம்புஸன் கடோத்கசன் அவ்விருவீரரும் வேகத்துடன் ஒருவரைஒருவர் துடைகளில் அடித்தார்கள். மலையோடுமலை மோதும்பொழுதுண்டாகும் பேரொலிபோல அந்த ராக்ஷஸஸிம்மங்களிரண்டும் ஒன்றோடொன்று அடித்துக்கொள்ளும்காலத்தில் பேரொலி உண்டாயிற்று. பிறகு, ராக்ஷஸச்ரேஷ்டர்களான அவ்விருவரும் உடனே விலகிப் பற்பலவிதமான அப்படிப்பட்ட கத்திப்போர்வழிகளில் ஸஞ்சரிக்கின்றவர்களாகி மறுபடியும் ஒருவரையொருவர் மிக்கவேகத்தோடு தாக்கினார்கள். அவ்விருவருடைய அங்கங்களிலும் விழுந்தவைகளும் ஒடிந்தவைகளுமான இரண்டு கத்திகளும் இந்திரனால் மலைத்தடங்களில் வேகத்தோடு போடப்பட்ட இரண்டு வஜ்ராயுதங்கள்போல

விழுந்தன. மாம்ஸத்தின் விஷயத்தில் இரண்டு கழுகுகள் சண்டைசெய்வதுபோலச் சண்டைசெய்கின்ற அவ்விருவருடைய அதிபயங்கரமான அந்த யுத்தத்தைச் சேனைகள் பார்த்தன. பிறகு, மிகச்சிவந்த கண்களையுடையவர்களும் ராக்ஷஸஶ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் இரண்டு புலிகள்போலவும் மாலைக்காலத்தில் சிவந்திருக்கின்ற இரண்டுமேகங்கள் போலவும் காணப்பட்டார்கள். அவ்விருவரும் சிறகுவிரித்த இரண்டு பக்ஷிகள்போலக் கையில்கத்திகளையுடையவர்களாகிப்பருந்துகளைப்போல ஆயிரக்கணக்கான மண்டலகதிகளைச்செய்தார்கள். கிர்மீரகுமாரன் பாண்டுவின்பேரனான அந்தக்கடோத்கசனுடைய தலையைஅறுப்பதற்காக அந்தக்கத்தியைச் சுழற்றி எறிந்தான். அந்தக் கடோத்கசனும் அலம்புஸன்மீது கத்தியை எறிந்தான். அவ்விரண்டு பெரிய கத்திகளும் ஒரே ஸமயத்தில் பிரகாசிப்பவைகளாகி ஒன்றோடொன்று மோதிக்கொண்டு பூமியில் விழுந்தன. அந்த இரண்டு ராக்ஷஸர்களும் கைகளால் சண்டைசெய்வதற்கு ஆரம்பித்தார்கள். பிறகு, வீரர்களான அவ்விருவரும் பரஸ்பரம் தலையோடு தலையை மோதிக்கொள்வதாலும் தோளோடு தோள் இடித்துக்கொள்வதாலும் நன்றாக அடிக்கப்பட்டு மறுபடியும் ஒருவரோடொருவர் பின்னிக்கொண்டு திரும்பத்திரும்ப யுத்தஞ்செய்தார்கள். பிறகு, பலமும் லாகவமும் விக்கிரமமுமுள்ளவனான பீமஸேனகுமாரன் கோபங்கொண்டு எல்லா ஸைன்யங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அலம்புஸனை மேலேதூக்கிஎறிந்து மறுபடியும் மறுபடியும் நன்றாக அடித்துக் கல்லின்மேல் நீர்நிறைந்த மண்குடத்தையுடைப்பதுபோல் விரைவாகப்பூமியில் மோதினான். ஸாலகடங்கடாபுத்திரனான அலம்புஸன் எல்லா அங்கங்களிலும் ரக்தம் பெருகவும் எலும்புகளும் ஆபரணங்களும் நொறுக்கப்படவும் கடோத்கசனால் சூர்ணம்பண்ணப்பட்டு உயிரை இழந்தான். பிறகு, பாண்டவர்களுடைய சேனையானது அந்த அலம்புஸன் கீழேதள்ளப்பட்டதைக்கண்டு அதிகஸந்தோஷத்தினால்நிரம்பி உரக்க ஸிம்மநாதம்செய்தது. பிறகு, ராக்ஷஸன் விரைவாக உயிரை இழந்து வஜ்ராயுதத்தின் வேகத்தினால் தள்ளப்பட்ட மலையினுடைய சிகரம்போலப் பூமியில் விழுந்தான். மஹாராஜரே! மிகவும் பருத்தவடிவத்தையுடைய அந்தப் பெரியஅலம்புஸன் விழுந்ததனால் உம்முடைய படையில் பத்துத்தோராளிகளும் பத்துயானைகளும் கொல்லப்பட்டனர். பிறகு, கடோத்கசன் விருத்ராஸுக்குஒப்பான அந்த அரக்கனைக்கொன்று மறுபடியும் ரதத்தின்மீதேறி ஜயிக்க எண்ணங்கொண்டவனாகி ஸிம்மநாதஞ்செய்தான். பிறகு, அந்த ராக்ஷஸன் கொல்லப்பட்டவுடனே,

பாண்டவர்கள் மனக்களிப்பை அடைந்து ஸிம்மநாதங்களைச்செய்தார்கள். வஸ்திரங்களையும் வீசினார்கள். பரதசிரேஷ்டரே! உம்மைச் சேர்ந்தவர்களான சூரர்களும் ஸைநிகர்களும் மலை சிதறினதுபோல மஹாபலசாலியும் ராக்ஷஸேந்திரனுமான அலம்புஸன் அவ்வாறு கொல்லப்பட்டதுகண்டு ஹாஹாகாரஞ்செய்தார்கள். பூமியில் தற்செயலாக விழுந்திருக்கின்ற அங்காரகனைப்போன்ற அந்த ராக்ஷஸனை ஜனங்கள் அகமகிழ்ச்சியோடு கண்டார்கள். கடோத்கசனோ பலசாலிகளுட்சிறந்த அந்த ராக்ஷஸனைக்கொன்றுவிட்டு வலனென்கிற அஸுரனைக்கொன்று இந்திரன் கர்ஜித்ததுபோல் உரத்த ஸிம்மநாதத்தை வெளியிட்டான். செய்யமுடியாதகார்யம் செய்யப்பட்டபொழுது பந்துக்களுடன்கூடிய பிதாக்களால் பூஜிக்கப்படுகின்ற அந்தக் கடோத்கசன் சத்துருவான அலம்புஸனை, பக்குவமான அலம்புஸமென்னும் பழத்தைப்போல நாசம் செய்து அப்பொழுது ஆனந்தமடைந்தான். பிறகு, சங்கங்கள் நானாவித பாணங்கள் இவற்றின் கோஷத்துடன்கூடின மிகப்பெரிய சப்தமானது தோன்றியது. அதைக்கேட்டுப் பாண்டவர்கள் உத்ஸாஹத்தோடு எதிராக ஸிம்மநாதஞ்செய்தார்கள். பிறகு, ஒலியானது ஸ்வர்க்கலோகத்தை நன்றாக அளாவியது. பிறகு, கடோத்கசன் தர்மதேவதையின் புத்திரரான யுதிஷ்டிராராஜரிடம்வந்து தான்செய்த கார்யத்தைத் தெரிவிப்பதற்காக முடியின்மீது கைகளைக்குவித்துக்கொண்டு வந்தனம் பண்ணினான். வேந்தரே! ஜ்யேஷ்டரான பாண்டவர் அவனைக்கட்டிக் கொண்டு உச்சிமோந்து ஸந்தோஷத்தினால் நன்றாக மலர்ந்த கண்களோடு, 'நான் பிரீதியை யடைந்தவனாகிறேன்' என்று சொன்னார். கடோத்கசனால் ஸாலகடங்கடாபுத்திரனான அந்த ராக்ஷஸன் பொடிபண்ணப்பட்டு மாண்டபிறகு எல்லாப்பாண்டவவீரர்களும் ஸந்தோஷத்தை யடைந்தவர்களானார்கள்" என்று கூறினான்.

---

## நூற்றுப்பத்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(போர்க்களத்தில் பாஞ்சஜன்யத்தின் ஒலிகேட்கப்பட்டும் காண்டீவத்தின் ஒலி கேட்கப்படாமலுமிருக்க, யுதிஷ்டிரர் ஐயமுற்று அர்ஜுனனுடைய நிலைமையை அறிந்துவரும்படி ஸாத்யகியை ஏவியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! யுயுதானன் துரோணரை யுத்தத்தில் எவ்வாறுதடுத்தான்? அதனை உள்ளபடி உரைப்பாயாக. எனக்கு அதிக ஆவலல்லவோ இருக்கின்றது" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"மன்னரே! பேரறிவுள்ளவரே! துரோணருக்கு யுயுதானனை முதன்மையாகக்கொண்ட பாண்டவர்களோடுநேர்ந்த மயிர்சிலிர்த்தலை உண்டாக்கக்கூடிய யுத்தத்தைக்கேளும். ஐயா! யுயுதானனால் வதஞ்செய்யப்படுகிற சேனையைப்பார்த்துத் துரோணரும் ஸத்யபராக்கிரமனான அவனைக்குறித்து எதிர்த்துச்சென்றார். வேகமாக வருகின்ற மஹாரதரான துரோணர்மீது ஸாத்யகியானவன் இருபத்தைந்து க்ஷுத்ரகங்களைப் பிரயோகித்தான். யுத்தத்தில் பராக்ரமசாலியான துரோணரும் ஜாக்கிரதையுள்ளவராகி யுயுதானனைப் பொற்கட்டுக்களுள்ளவையும் தீட்டப்பட்டவையுமான ஐந்துபாணங்களால் விரைவாக அடித்தார். அரசரே! சத்துருக்களுடைய மாம்ஸத்தைப் புஜிக்கின்றவைகளான அந்தப்பாணங்கள் மிக்க திடமான கவசத்தையுடைத்து ஸர்ப்பங்கள் புற்றில் நுழைவதுபோல் பூமியில் நுழைந்தன. நீண்ட கைகளையுடையவனான ஸாத்யகி தோட்டியினால் குத்தப்பட்ட யானைபோல மிக்ககோபம்கொண்டு நெருப்புக்கொப்பான ஐம்பது நாராசங்களால் துரோணரை அடித்தான். ரணகளத்தில் யுயுதானனால் விரைவோடு அடிக்கப்பட்ட துரோணர், முயற்சியை யுடையவனான அவனை அனேக பாணங்களாலடித்தார். பிறகு, கோபம்கொண்டவரும் மஹாபலசாலியும் சிறந்த வில்லாளியுமான அவர் கணுக்கள் புலப்படாத பாணங்களுடைய கூட்டத்தினால் மறுபடியுமே ஸாத்யகியை அடித்தார். அவனிபரே! யுத்தத்தில் பாரத்வாஜரால் அடிக்கப்படுகின்ற அந்த ஸாத்யகிசெய்யவேண்டியகாரியம் ஒன்றையும்அறியவேஇல்லை. வேந்தரே! போரில் கூர்மையுள்ள பாணங்களைப்பிரயோகிக்கின்ற துரோணரைக் கண்டு யுயுதானன் வியஸனமுற்ற முகமுள்ளவனுமானான். அரசரே! உம்முடைய புத்திரர்களும் ஸைநிகர்களும் அவனைப்பார்த்து மிக்க ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவர்களாகி ஸிம்மம்போல் அடிக்கடி கர்ஜித்தார்கள். பாரதரே! கோரமான அந்தச் சப்தத்தையும் ஸாத்யகி பீடிக்கப்படுவதையும்கேட்டு யுதிஷ்டிரராஜர் எல்லாப் படைவீரர்களையும் பார்த்து, 'விருஷ்ணிகளுள் உத்தமனும் வீரனும் ஸத்ய பராக்கிரமத்தையுடையவனுமான இந்த ஸாத்யகி ராகுவினால் சூரியன் விழுங்கப்படுவதுபோல யுத்தத்தில் வீரரான துரோணரால்விழுங்கப்படுகிறான். அவன் யுத்தஞ்செய்கிற இடத்தைக் குறித்து ஓடிச்செல்லுங்கள்' என்று சொன்னார். ஜனநாதரான அந்த யுதிஷ்டிரர், பாஞ்சாலராஜகுமாரனை திருஷ்டத்யும்னனையும்பார்த்து,' துரோணரை அதிவிரைவாகத்தடு. பிராம்மணர் ஸாத்யகியைக் கொல்லாமலிருக்கட்டும். பார்ஷத! துரோணரை நோக்கி வேகமாக ஓடு; ஏன் நிற்கிறாய்? துரோணரிடமிருந்து நமக்குக்

ஸ்காரமானபயம் நேர்ந்திருப்பதை நீ அறியவில்லை. பெரியவில்லுள்ள அந்தத் துரோணர் கயிற்றினால் கட்டப்பட்ட பக்ஷியோடு ஒரு பாலகன் விளையாடுவதுபோல யுத்தத்தில் யுயுதானனோடு விளையாடுகிறார். பீமஸேனனை முன்னிட்ட எல்லா வீரர்களும் உன்னோடுசேர்ந்து யுயுதானனுடைய ரதத்தைக்குறித்து அவ்விடமே செல்லட்டும். யான் பின் பக்கத்தில் ஸைநிகர்களோடுகூடி உன்னைத் தொடர்ந்துவருவேன். யமனுடைய கோரப்பற்களின் நடுவில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற ஸாத்யகியை இப்பொழுது விடுவிப்பாயாக' என்றும் கூறினார். பாரதரே! யுதிஷ்டிரராஜர் இவ்வாறு சொல்லிவிட்டு, பிறகு, எல்லாச்சேனையுடனும் யுயுதானனை ரக்ஷிப்பதற்காக யுத்தகளத்தில் துரோணரை எதிர்த்துச் சென்றார். அங்கு, துரோணர் ஒருவருடன் யுத்தம்செய்ய எண்ணம் கொண்டவர்களான பாண்டவஸ்ருஞ்சயர்களுடைய பெரிய சப்தமானது நான்குபக்கத்திலும் தோன்றியது. உமக்கு மங்களம். நரஸ்ரேஷ்டர்களான அவர்கள் ஒன்றுசேர்ந்து கழுகிறகுகளால் வேகமுள்ளவையாகச் செய்யப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்புகளால் மஹாரதரான துரோணரை இடைவிடாமல் அடித்தார்கள். வருகின்ற அதிதிகளைத்தீர்த்தத்தினாலும் ஆஸனத்தினாலும் வரவேற்பதுபோல த்ரோணர் அந்தவீரர்களைச் சிரித்துக்கொண்டே தாம் வரவேற்றார். அதிதிகளை உபசரிப்பதில் ஸமர்த்தனான ஒருவனுடைய வீட்டை அடைந்த விருந்தினர்கள் எவ்வாறு திருப்திசெய்விக்கப்படுவார்களோ அவ்வாறே வில்லாளியான அந்தத்துரோணருடைய அம்புகளால் அவர்கள் திருப்திசெய்விக்கப்பட்டார்கள். பிரபுவே! நடுப்பகலை அடைந்திருக்கின்ற சூரியனைப்போலப் பாரத்வாஜரைக் கண்ணால் பார்ப்பதற்கும் அவர்கள் எல்லோரும் சக்தியற்றவர்களானார்கள். ஆயுததாரிகளுட்சிறந்த துரோணர் கிரணங்களால் சூரியன் தபிக்கச்செய்வதுபோல் பாணஸமூகங்களால் அந்த எல்லா மகாவில்லாளிகளையும் தபிக்கச்செய்தார். மஹாராஜரே! அடிக்கப்படுகின்றவர்களான பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் சேற்றில் அமிழ்ந்த யானைகள்போல் ரக்ஷகனை அடையவில்லை. நான்கு பக்கங்களிலும் ஸஞ்சரிக்கின்ற துரோணருடைய பெரிய பாணங்கள் சூரிய கிரணங்கள்போல் நான்கு பக்கங்களிலும் மிக வாட்டுகின்றவைகளாகக் காணப்பட்டன. அந்த யுத்தத்தில் துரோணரால் மஹாரதர்களென்று பிரஸித்திபெற்றவர்களும் த்ருஷ்டத்யும்னனால் நன்குமதிக்கப்பெற்றவர்களுமான இருபத்தைந்து பாஞ்சாலவீரர்கள் கொல்லப்பட்டார்கள். சூரரான துரோணர், பாண்டவர்கள் பாஞ்சாலர்கள் இவர்களுடைய எல்லா ஸைனியங்களுள்ளும் சிறந்தவர்களை

யெல்லாம் கொல்வதைக் கண்டார்கள். மஹாராஜரே! துரோணர் நூறு கேகயர்களைக்கொன்றும் நான்கு பக்கங்களிலும் மற்றவர்களை ஓடும்படிசெய்தும் வாயைத்திறந்துகொண்டிருக்கும் அந்தகன்போல நின்றார். மன்னரே! பிறகு, மிக்க கைவன்மையுள்ள துரோணர் நூற்றுக் கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பாஞ்சாலர்களையும் ஸ்ருஞ்சயர்களை யும் மாத்ஸ்யர்களையும் கேகயர்களையும்ஜயித்தார். துரோணருடைய அம்பு களால் அடிக்கப்பட்ட அவர்களுடைய சப்தமானது காட்டில் தீயினால் சூழப்பட்ட குரங்குகளுடைய சப்தம்போல் தோன்றியது. அரசரே! அப்போது தேவர்களும் கந்தர்வர்களும் பித்ருக்களும், 'இதோ பாஞ்சா லர்களும் பாண்டவர்களும் படைவீரர்களோடு ஓடுகிறார்கள்' என்று கூறினார்கள். அவ்வாறாக யுத்தத்தில் ஸோமகர்களை நாசஞ்செய்கின்ற அந்தத் துரோணரைச் சிலர் யுத்தத்தில் எதிர்த்துவரவே இல்லை. மற்றவர்கள் அடிக்கவுமில்லை. அவ்வாறு பயங்கரமான அந்தச் சிறந்த வீரர்களுடைய நாசமானது நடந்துவரவே தர்மபுத்திரர் உடனே பாஞ்ச ஜந்யத்தினுடைய ஓசையைக் கேட்டார். மஹாபலசாலியான வாஸு தேவரால் சங்கராஜமான பாஞ்சஜன்யமானது ஊதப்படவும் ஸைந்த வனை நான்குபக்கங்களிலும் காக்கின்ற வீரர்கள் யுத்தஞ்செய்யவும் கௌரவர்கள் விஜயனுடைய ரதத்தைநோக்கிக் கர்ஜிக்கவும் காண்டீவத் தினுடைய ஒலியானது நான்குபக்கங்களிலும் சிறிதும் இல்லாமற் போகவும் யுதிஷ்டிரராஜர் மதிமயக்கமுற்று, 'சங்கங்களுட் சிறந்த பாஞ் சஜன்யமானது ஒலிப்பதனாலும் கௌரவர்களும் ஸந்தோஷமடைந்தவர் களாக அடிக்கடி கர்ஜிப்பதனாலும் நிச்சயமாகப் பார்த்தனுக்கு க்ஷேமம் இல்லை. இப்பொழுது எல்லா உலகங்களிலுமுள்ள மஹாரதர்களும் நிச்சயமாக நாசமடைகிறார்கள்' என்று ஆலோசித்தார். குந்திபுத்திர ரும் அஜாதசத்துருவுமான அவர் மனக்கலக்கமுற்று இவ்வாறு ஆலோ சித்து அடிக்கடி மதிமயக்கங்கொண்டவரும் செய்யவேண்டிய கார்யத்தில் விக்னமில்லாமையை விரும்புகின்றவருமாகிச் சினியின் குலத்தில் பிறந் தவர்களுள் உத்தமனான ஸாத்யகியைநோக்கிக் கண்ணீரால் சொல்தடு மாற வசனிக்கலானார்.

'சைனேய! ஆபத்காலத்தில் மித்திரன்விஷயத்தில் எது சாஸ்வத தர்மமென்று முற்காலத்தில் ஸாதுக்களால்எண்ணப்பட்டதோ அதற்கு இதோ ஸமயம் வந்துவிட்டது. சினிபுங்கவ! ஸாத்யகி! ஆலோசித்துப் பார்த்ததில் எல்லா யுத்தவீரர்களுள்ளும் உன்னைக்காட்டிலும் அதிக மான நேசமுள்ளவன் ஒருவனையாவது நான் காணவில்லை. எவன் மனத் தில் ப்ரியமுடையவனோ, எவன் எப்பொழுதும் அனுஸரித்துக்கொண்

டிருப்பானே அவன் ஆபத்காலத்தில் கார்யத்தில் ஏவத்தக்கவனென்பது என்னுடைய எண்ணம். விருஷ்ணிகுலத்தில் உதித்தவனே! கேசவர் பாண்டவர்களுக்கு எவ்வாறு எப்பொழுதும் முக்கியமான பற்றுக்கோடாயிருக்கிறாரோ அவ்வாறே கிருஷ்ணனுக்கு ஸமமான பராக்கிரமமுள்ள நீயும் இருக்கிறாய். அப்படிப்பட்ட நான் உன்னிடத்தில் கார்யப்பொறுப்பை வைக்கப்போகிறேன். நீ அதனைச் சுமப்பதற்குத் தகுந்தவனாயிருக்கிறாய். எப்பொழுதும் என்கருத்தை வீணாகச்செய்யலாகாது. நரஶ்ரேஷ்டனே! அப்படிப்பட்ட நீ ப்ராதாவும் தோழனும் ஆசார்யனுமாயிருக்கிற அர்ஜுனனுக்கு ஸங்கடகாமான யுத்தத்தில் உதவியைச்செய்வாயாக. வீரனே! நீ உலகத்தில் ஸத்யமானவிரதத்தையுடையவன்; சூரன்; மித்ரர்களுக்கு அபயம் கொடுப்பவன்; செய்கைகளால் ஸத்தியவாக்கையுடையவனென்று பிரஸித்தமாகச் சொல்லப்படுகிறாய். சைனேய! மித்திரனுக்காகப் போர்புரிந்து சரீரத்தைவிடுபவனும் பிராம்மணர்களுக்குப் பூமியைத் தானம்செய்பவனும் ஸமானர்களே. இந்த அகண்ட பூமண்டலத்தையும் விதிப்படி பிராம்மணர்களுக்குக்கொடுத்து அனேக அரசர்கள் ஸ்வர்க்கத்தை அடைந்தார்களென்று நாம்கேட்டிருக்கிறோம். இன்னும் பூமியானது அனேகர்களால் கொடுக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றது; அடிக்கடி கொடுக்கப்படவும் போகின்றது. இவ்வுலகில் ஒருவனாவது யுத்தத்தில் மித்திரனுக்காகப் பிராணனை விட்டவனில்லை. தர்மாத்மாவே! யான் கைகளைக்குவித்துக்கொண்டு உன்னை இவ்வாறு யாசிக்கிறேன். பிரபுவே! பூதானம் செய்ததற்கு ஸமமாகவோ அல்லது அதிகமாகவோஇருக்கிற பலன் உண்டாகும். ஸாத்யகியே! எப்பொழுதும் கிருஷ்ணர் ஒருவரே யுத்தத்தில் மித்திரர்களுக்கு அபயதானஞ்செய்துகொண்டு உயிரை விடுகிறார். இரண்டாமவன் நீ தான். விக்கிரமமுள்ளவனும் வீரனும் யுத்தத்தில் கீர்த்தியை விரும்புகின்றவனுமான சூரனுக்குச் சூரனே ஸகாயனாயிருக்கத்தக்கவன். மற்ற அல்பனான மனிதன் ஸகாயனாகமாட்டான். மதுவம்சத்தில் பிறந்தவனே! இப்படிப்பட்ட மிக்க ஸங்கடகரமான யுத்தத்திலிருக்கின்ற விஜயனுக்கு ரணகளத்தில் உன்னைத்தவிர வேறு ரக்ஷகன் ஒருவனுமில்லை. பாண்டவன் உன்னுடைய செய்கைகளை நூற்றுக்கணக்காகப் புகழ்ந்துகொண்டும் எனக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணிக்கொண்டும் அடிக்கடி வர்ணித்திருக்கிறான். 'அப்பா! 'ஸாத்யகி ஹஸ்தலாகவமுள்ளவன்; விசித்திரமாகப் போர்புரிகிறவன்; அவ்வாறே விரைவாகப் பகைவர்களைக் கவர்ந்துகொள்ளும் தன்மையுடையவன்; கற்றறிந்தவன்; எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவன்;

சூரன்; யுத்தத்தில் மயங்காதவன்; பருத்த தோள்களுள்ளவன்; அகன்ற மார்பையுடையவன்; நீண்ட கைகளையுடையவன்; பருத்தமோவாயுள்ளவன்; அதிக பலசாலி; அதிக வீர்யமுடையவன், மஹாத்மா; மஹாரதன்; எனக்குச் சிஷ்யன்; ஸஹாயன்; அவனுக்கு நான் அன்பன்; எனக்கும் அவன் அன்பன். யுயுதானன் எனக்கு ஸஹாயனாயிருந்து கௌரவர்களைக் கொல்லப்போகிறான். ராஜேந்திரரே! மஹாராஜரே! கேசவரும் பலராமரும் அநிருத்தனும் மஹாரதனான பிரத்யும்னனும் கதனும் ஸாரணனும் ஸாம்பனும் விருஷ்ணிகளோடுகூடிப் பெரும் போர்முனையில் நமக்கு உதவிசெய்வதற்காக முயற்சிசெய்தாலும் ஸத்யமான பராக்ரமத்தையுடையவனும் நரஸ்ரேஷ்டனுமான ஸாத்யகியையே நமக்கு உதவிசெய்யும்விஷயத்தில் ஏற்படுத்திக்கொள்வேன். அவனுக்கு ஸமானனான வேறொருவன் எனக்கு இங்கு இல்லையன்றோ?' என்று இவ்வாறு தனஞ்சயன் த்வைதவனத்தில் நீ நேரிலில்லாத ஸமயத்தில் உன்னுடைய யதார்த்தமான குணங்களைப் பெரியோர்களுடைய கோஷ்டியில் புகழ்ந்துகொண்டாடி என்னிடம் சொல்லியிருக்கிறான். வ்ருஷ்ணிகுலத்திற்பிறந்தவனே! அந்தத் தனஞ்சயன், நான், பீமன், நகுலன், ஸஹதேவன் ஆகிய எங்களுடைய இவ்விதமான ஸங்கல்பத்தை நீ வீணாகச் செய்யத்தக்கவனல்லை நானும், தீர்த்தயாத்திரை செய்துகொண்டு துவாரகைக்கு வந்தபொழுது உனக்கு அர்ஜுனனிடத்திலுள்ள பக்தியைக் கண்டிருக்கிறேன். சைனேய! ஆபத்தில் அகப்பட்டிருக்கின்ற எங்களை நீ ஆதரிப்பதுபோன்ற அவ்வித நேசத்தை மற்றவர்களிடம் நான் காணவில்லை. மாதவ! மிக்க புஜபலமுள்ளவனே! மகிமைபொருந்திய வில்லைக் கையில்கொண்டவனே! அப்படிப்பட்ட நீ அர்ஜுனனைக் காப்பாற்றுவதற்காக நட்புக்கும் ஆசார்யத்தன்மைக்கும் அன்புக்கும் வீர்யத்துக்கும் நற்குலத்தில் தோன்றியிருப்பதற்கும் ஸத்யத்துக்கும் எது தகுந்ததோ அவ்விதமான கார்யத்தை உயர்குடிப்பிறப்பாலும் பக்தியினாலும் செய்வதற்குத் தகுந்தவனாயிருக்கிறாய். துர்யோதனனோ துரோணரால் கவசம் பூட்டப்பட்டு விரைவாகப்போயிருக்கிறான். மஹாரதர்களான கௌரவர்களும் முன்னமே பின்தொடர்ந்து சென்றிருக்கிறார்கள். விஜயன் இருக்குமிடத்தில் மிகவும் பெரிய சப்தமும் கேட்கிறது. சைனேய! (பகைவரின்) கர்வத்தைப்போக்குபவனே! நீ வேகத்துடன் சீக்கிரமாகச் செல்லவேண்டும். துரோணர் உன்னை எதிர்த்துப் போர்புரிவாராகில் பீமஸேனனும் மற்ற நாங்களும் படைவீரர்களுடன் சேர்ந்து முயற்சியுடன் அவரைத் தடுப்போம். சைனேய! யுத்தத்தில் சேனைகள் ஓடுவதையும் ரணகளத்தில் பேரொலி

உண்டாவதையும் பாரதசேனை பிளக்கப்படுவதையும் பார். அப்பா! பர்வ காலங்களில் பெரும் காற்றினுடைய வேகத்தினால் கடல்போல ஸவ்ய ஸாசியினால் கௌரவர்களுடைய சேனையானது சிதற அடிக்கப்பட்டுவிட்டது. விசேஷமாக நான்குபுறத்திலும் ஓடுகின்றரதங்களாலும், மனிதர்களாலும் குதிரைகளாலும் உண்டுபண்ணப்பட்ட சேனையின் புழுதியானது இதோநான்குபக்கங்களிலும் பரவுகிறது. சத்துருவீரர்களைக்கொல்பவனான பல்குனன் நகரங்களாலும் பிராஸாயுதங்களாலும் யுத்தஞ் செய்கின்றவர்களும் மிக்க விருத்தியடைந்திருக்கின்றவர்களும் சூரர்களுமான ஸிந்துதேசத்து வீரர்களாலும் ஸௌவீரதேசத்து வீரர்களாலும் சூழப்பட்டிருக்கிறான். இந்தச் சேனையானது பிறரால் தடுக்க முடியாதது. ஜயத்ரதனும், பிறரால் ஜயிக்கமுடியாதவன். இந்தப் படைவீரர்களெல்லோரும் ஸைந்தவன்விஷயத்தில் உயிரை இழக்கத் துணிந்தவர்களாயிருக்கிறார்கள். அம்புகளும் சக்திகளும் சிறந்த கொடிகளுமுள்ளதும் குதிரைகளாலும் யானைகளாலும் சூழப்பெற்றதும் எவ்விதத்தினாலும் அணுகமுடியாததுமான இந்தத் தார்த்தராஷ்டிரர்களுடைய ஸேனையைப் பார். துந்துபிவாத்தியங்களுடைய கோஷத்தையும் கம்பீரமான சங்கங்களின் முழக்கங்களையும் ஸிம்மநாதத்தினால் உண்டாகும் சப்தங்களையும் அவ்வாறே தேருருளைகளின் ஒலிகளையும் யானைகள் ஆயிரக்கணக்கான காலாட்கள் இவர்களின் சப்தங்களையும் ஓடுகின்றவர்களும் பூமியை நடுங்கச்செய்கின்றவர்களுமான குதிரைவீரர்களுடைய சப்தத்தையும் கேள். நரஸ்ரேஷ்டனே! எதிரிலிருக்கின்ற ஸைந்தவனுடையஸேனையும் பின்பக்கத்திலுள்ள துரோணருடைய ஸேனையும் மிகுதியாக இருப்பதினால் தேவேந்திரனையும் துன்பமடையும்படி செய்யும். கரையில்லாமலிருக்கிற சேனையில்முழுகின அர்ஜுனன் தன் உயிரை இழந்தாலும் இழப்பான். அவன் யுத்தத்தில் கொல்லப்பட்டுவிட்டால் என்னைப்போன்றவன் எவ்வாறு ஜீவிக்கமுடியும்? நீ ஜீவித்திருக்கும்பொழுதே அர்ஜுனன் ஸர்வவிதத்தினாலும் மிக்க கஷ்டமான நிலைமையை அடைந்து விட்டான். அப்பா! கரியமேனியையுடையவனும் யௌவனமுள்ளவனும்சுருண்டகேசங்களுள்ளவனும் காட்சிக்கினியவனும் விரைவாக அஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவனும் விசித்திரமாக யுத்தஞ்செய்பவனும் மிக்க கைவன்மையுள்ளவனுமான அர்ஜுனன் சூரியோதயகாலத்தில் பாரதஸேனையில் நுழைந்தான். பகலும் தாண்டுகிறது. வார்ஷ்ணேய! அவன் உயிருடன் இருக்கிறானோ இல்லையோ? அதனை யான் அறியேன். கௌரவர்களுடைய அந்தப் பெரிய சேனையும் கடலுக்கு ஒப்பானது. அப்பா! மிக்க கைவன்மை

யுள்ள அர்ஜுனன் ஸஹாயமற்றவனாகவே, தேவர்களாலும் மஹாயுத் தத்தில் தாங்கமுடியாத பாரதஸேனையில் நுழைந்துவிட்டான். இப் பொழுது எனக்கு யுத்தத்தில் எவ்விதத்திலும் புத்தியானது செல்ல வில்லை. துரோணரும் யுத்தத்தில் வேகமுள்ளவராகி என்னுடைய சேனையை அடிக்கிறார். மிக்க புஜபலமுள்ள ஸாத்யகியே! பிராம்மண ரான அவர் எவ்வாறு ஸஞ்சரிக்கிறாரென்பது உனக்கு நேரிலேயே தெரி கிறது. பகைவர்களுடைய கர்வத்தை அழிப்பவனே! ஸாமர்த்திய முடையவனான நீ ஒரேஸமயத்தில் ஒன்றுசேர்ந்திருக்கிற கார்யங்களுள் அதிக பிரயோஜனமுள்ளதும் தாமதியாமல் செய்யவேண்டியதுமான காரியத்தைச் செய்யக்கடவாய். எல்லாக் கார்யங்களுள்ளும் யுத்தத்தில் அர்ஜுனனுடைய ரக்ஷணமே செய்பத்தக்கதென்னும் இதுதான் பெரி தான காரியமென்பது என்னுடைய எண்ணம். உலகத்துக்கு ரக்ஷகரும் பிரபுவுமான கிருஷ்ணரைப்பற்றி நான் வியஸனிக்கவில்லை. அப்பா! ஏனெனில், புருஷஶ்ரேஷ்டரான அந்த ஸ்ரீ கிருஷ்ணர் யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருக்கின்ற மூவுலகங்களையும் ஜயிப்பதற்குத் திறமை யுடையவர். இது உண்மையென்பதை உனக்குச் சொல்லுகிறேன். அவர் துர்யோதனனுடைய மிக்கபலம்குறைந்த இந்த ஸேனையை ஜயிப் பதில் திறமையையுடையவரென்பதில் என்ன ஸந்தேகம் இருக்கிறது? வார்ஷ்ணேய! இந்த அர்ஜுனனோ யுத்தத்தில் அனேகர்களால் பீடிக் கப்பட்டு யுத்தகளத்தில் பிராணனை விட்டுவிடுவான். ஆதலால், மதி மயக்கத்தை அடைகிறேன். அப்படிப்பட்ட அந்த அர்ஜுனனுக்கு இப்படிப்பட்டகாலத்தில் என்னைப்போன்றவனால் தூண்டப்பட்ட நீ, உன்னைப்போன்றவர்கள் எவ்வாறு யுத்தபூமியை நாடுவார்களோ அவ் வாறு அவனுடைய வழியை அடைவாயாக. ஸாத்வத! சிறந்த விருஷ்ணி வீரர்களுள், தோள்வலி மிக்க பிரத்யும்னனும் பிரஸித்திபெற்றவனான நீயுமே யுத்தத்தில் அதிரதர்களென்று கருதப்பட்டிருக்கிறீர்கள். நீ அஸ் திரத்தில் நாராயணருக்கும் பலத்தில் பலராமருக்கும் வீர்யத்தில் தன ஞ்சயனுக்கும் ஒத்தவனாக இருக்கிறாய். உலகத்தில் ஸாதுக்கள் புருஷ சிரேஷ்டனான உன்னையே எல்லாயுத்தங்களிலும் பீஷ்ம துரோணர்களைக் காட்டிலும் அதிக ஸாமர்த்தியமுடையவனென்று சொல்லுகிறார்கள். மாதவ! உலகங்களில் ஜனங்கள், 'ஸாத்யகி தேவர்களோடும் அஸுரர் களோடும் கந்தர்வர்களோடும் கின்னரர்களோடும் மஹோரகர்களோடும் கூடின பலசத்ருக்களையும் ஜயிப்பான்; உலகமனைத்தையும் எதிர்த்துப் போர்புரிவான். ஸாத்யகியினால் செய்யமுடியாதகார்யம் இல்லை' என்று உன்னுடைய குணங்களை எல்லா ஸமாஜங்களிலும் தனியிடங்களிலும்

எப்பொழுதும் சொல்லுகிறார்கள். மஹாபலமுள்ளவனே! ஆதலால், உன்னைநோக்கி எதைச் சொல்லப்போகிறேனோ அதை நீ செய்வாயாக. மஹாபாகுபலமுள்ளவனே! என்னிடமும் அர்ஜுனனிடமும் உலகத்துக்கு அதிகமான மதிப்பிருக்கிறதன்றோ? அதனை இப்போது நீமாற்றலாகாது. பிரியமான பிராணனில் பற்றைவிட்டு ரணகளத்தில் பயமற்றவனாகி ஸஞ்சாரஞ்செய். சைநேய! தாசார்ஹர்கள் யுத்தத்தில் பிராணனைக் காப்பாற்றமாட்டார்கள். யுத்தம்செய்யாமை, உறுதி இன்மை, யுத்தத்தில் புறங்காட்டிஓடுதல் என்பன பயமுள்ள அஸாதுக்களின்வழி; இவற்றைத் தாசார்ஹர்கள் செய்யமாட்டார்கள். சினிகளுள் சிறந்தவனே! தர்மாத்மாவான அர்ஜுனன் உனக்கு ஆசாரியன்; வாஸுதேவர் உனக்கும் புத்திமானான பார்த்தனுக்கும் ஆசாரியர். இந்த இரண்டுகாரணங்களையும் அறிந்துதான் யான் உன்னை நோக்கிச் சொன்னேன். என்னுடைய வார்த்தையை அவமதியாதே. உனக்குக் குருவான அர்ஜுனனுக்கும் நான் குரு. வாஸுதேவருக்கும் எனக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்மதமான விஷயமே என்னால் ஸத்தியமாக உனக்குச் சொல்லப்பட்டது. தனஞ்சயனிருக்குமிடத்துக்குப் போ. ஸத்தியமான பராக்கிரமமுள்ளவனே! அப்பா! ஸாத்வத! என்னுடைய இந்த வசனத்தை அறிந்து துர்ப்புத்தியையுடையவனான தார்த்தராஷ்டிரனுடைய இந்தச் சேனையில் நுழைவாயாக. நுழைந்து யுத்தமுறைப்படி மஹாரதர்களை எதிர்த்துத் தக்கபடியாக உன்னுடைய செய்கையை யுத்தரங்கத்தில் காட்டு' என்று கூறினார்.

---

## நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி தான் அர்ஜுனனால் யுதிஷ்டிரரைக்காக்க நியமனம் பெற்றிருப்பதாகக் கூறியதும், யுதிஷ்டிரர் தமக்கு வேறு காப்புண்டென்றுகூறி ஸாத்யகியை அர்ஜுனனைக் காத்தற்குச் செல்ல ஏவியதும்.)

பரதசிரேஷ்டரே! அன்போடுகூடியதும் மனத்துக்கு இனிமையானதும் எல்லா விதத்தினாலும் மதிக்கத்தக்கதும் ஸமயோசிதமானதும் ஆச்சரியகரமானதும் தம்புத்தியினாலே சொல்லப்பட்டதுமான தர்மராஜருடைய அந்தவாக்கியத்தைக்கேட்டு, சினிபுங்கவனான ஸாத்யகி அவரைப்பார்த்து, 'தர்மத்தினின்று தவறாதவரே! நியாயத்தோடுகூடி

னதும் உண்மையானதும் பல்குனன்விஷயத்தில் கீர்த்தியைவிளைவிக்கக் கூடியதுமான இந்தவாக்யம் முழுதும் என்னால் கேட்கப்பட்டது. மிகச் சிறந்தவரே! ராஜசிரேஷ்டரே! இவ்விதமான ஸமயத்தில் என்னையும் என்போன்றவனையும் பார்த்தனைப்போலப்பார்த்து நீர் சொல்லத்தகுந்த வர். தனஞ்சயன் விஷயத்தில் எவ்விதத்தாலும் என்னுயிர் ரக்ஷிக்கத் தக்கதன்று. உங்களால் கட்டளையிடப்பட்டால், நான் மகாயுத்தத்தில் எந்தக் கார்யத்தைத்தான் செய்யமாட்டேன். ராஜாதிராஜரே! உம்மால் ஏவப்பட்டவனாகிய யான் தேவர்களோடும் அஸுரர்களோடும் மனுஷி யர்களோடும்கூடின மூவுலகங்களையும் எதிர்த்துப்போர்புரிவேன். அவ் வாறிருக்க மிக்க பலஹீனர்களான அந்தக்கௌரவர்களைப்பற்றிக் கேட்கவேண்டியது என்ன இருக்கிறது? இப்பொழுது துர்யோதன னுடைய சேனையை எல்லாவிடங்களிலும் போருக்கழைக்கப்போகி றேன். அரசரே! ரணகளத்தில் விஜயத்தையும் பெறுவேன். இது உண்மை. மன்னரே! உமக்குச் சொல்லுகிறேன். க்ஷேமமுடையவனான நான், க்ஷேமமுடையவனான தனஞ்சயனை அடைந்து ஜயத்ரதன் கொல்லப்பட்ட பிறகு மறுபடியும் உம்மிடம் வருவேன். வேந்தரே! ஆனால் வாஸுதேவர் புத்திசாலியான அர்ஜுனன் இவர்களின் வசனங் களையெல்லாம் அவசியம் நான் உங்களிடம் விஜ்ஞாபனம் செய்யவேண் டும். வாஸுதேவர் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது எல்லாச்சேனை களுடைய மத்தியிலும் அர்ஜுனன் என்னைநோக்கி, 'மாதவ! இப்பொ ழுது யுத்தத்தில் உத்தமமான புத்தியைச்செலுத்தி நான் ஜயத்ரதனைக் கொல்லும் வரையில் நீ ஜாக்ரதையோடு யுதிஷ்டிரரைக் காப்பாற்று. மஹாபாகுபலமுள்ளவனே! நான் உன்னிடத்திலாவது மகாரதனான ப்ரத்யும்னனிடத்திலாவது அரசரை அடைக்கலமாக வைத்துவிட்டுக் கவலையற்றவனாகி ஜயத்ரதனைக் குறித்துச் செல்லவேண்டியவனாயிருக் கிறேன். மதுகுலத்தவனே! துரோணர் யுத்தத்தில் கௌரவர் களில் சிறந்தவர்களால் மதிக்கப்பட்டவரென்பதை அறிந்திருக்கிறா யல்லவா? அவருடைய பிரதிஜ்ஞையையும் நீ தினந்தோறும் கேட் டிருக்கிறாய். அவர் தர்மராஜரைப் பிடிக்கும் விஷயத்தில் ஆவலு டையவராயிருக்கிறார். அவர் ரணகளத்தில் யுதிஷ்டிரரை அடக்கு வதற்கும் வல்லமையுள்ளவர். ஆதலால், புருஷசிரேஷ்டரான தர்மராஜ ரை உன்னிடத்தில் வைத்துவிட்டு நான் இப்பொழுது ஸைந்தவனைக் கொல்வதற்காகப் போகப்போகிறேன். மாதவ! அப்படிப்பட்ட நீ இப் பொழுது யுத்தகளத்தில் முயற்சியுள்ளவனாகிப் பாண்டுபுத்திரரான தர்ம ராஜரைக் காப்பாற்று. தர்மராஜர் காக்கப்பட்டால் எனக்கு வெற்றி நிச்

சயமன்றோ? மாதவ! தர்மராஜரைத் துரோணர் பலாத்காரமாக ரண களத்தில் அடக்காமலிருப்பாரானால் நான் ஜயத்ரதனைக்கொன்றுவிட்டு விரைவாக வந்துசேருவேன். மாதவ! பாரத்வாஜராலே புருஷஸ்ரேஷ்டரான தர்மராஜர் பிடிக்கப்பட்டால் ஸைந்தவனுடைய வதமானது நேரிடாது. மேலும் எனக்கு வெறுப்பும்உண்டாகும். ஸத்தியவாதியும் புருஷஸ்ரேஷ்டருமான யுதிஷ்டிரர் இவ்வித நிலைமையை அடைந்துவிட்டால் நமக்குக் கானகத்தைக்குறித்து மறுபடியும் செல்வதானது நிச்சயமாக ஸம்பவிக்கும். துரோணர் யுத்தகளத்தில் கோபங்கொண்டு யுதிஷ்டிரரைப்பிடிப்பரேயாகில், அப்பொழுது என்னுடைய அப்படிப்பட்ட இந்த ஜயமானது வீணேயாகிவிடுமென்பது வெளிப்படை. மிக்கபுஜபலமுள்ளவனே! மாதவ! நீ இப்பொழுது எனக்குப் பிரியத்தைச்செய்வதின் பொருட்டும் ஜயத்தின்பொருட்டும் கீர்த்தியையடைவதின்பொருட்டும் போரில் அரசரைக் காப்பாற்று' என்று அடிக்கடி வற்புறுத்திச் சொல்லியிருக்கிறான். பிரபுவே! பாரத்வாஜரிடத்திலிருந்து எப்பொழுதும் பயத்தை எண்ணுகின்ற ஸவ்யஸாசியினால் அப்படிப்பட்ட நீங்கள் என்னிடத்தில் அடைக்கலமாக வைக்கப்பட்டிருக்கிறீர்கள். மிக்க தோள்வலியுள்ளவரே! பிரபுவே! ருக்மிணீபுத்திரனைத்தவிர அவரை எதிர்த்துப் போர்புரிபவனான வேறு ஒருவனை எப்பொழுதும் நான் காணவில்லை. யுத்தத்தில் புத்திமானான பாரத்வாஜருக்கு நிகரான வீரனாக என்னையும் ஸவ்யஸாசி எண்ணியிருக்கிறான். அரசரே! அத்தகைய யான் இந்த எண்ணத்தையும் அந்த ஆசார்யவசனத்தையும் அவமதிப்பதற்கும் உங்களை விட்டுப்போவதற்கும் துணியவில்லை. உடைக்கத்தகாததான கவசத்தினால் மூடப்பட்டவரான ஆசார்யர் ஹஸ்தலாகவத்தையுடையவராதலால் யுத்தகளத்தில் வந்து சிறுவன் பக்ஷியோடு விளையாடுவதுபோல விளையாடுவார். மச்சத்தைக் கொடியாகக்கொண்ட கிருஷ்ணகுமாரன் வில்லுங்கையுமாக இங்கு இருந்தால் அவனிடம் உம்மை விடுவேன். அவன் உங்களை அர்ஜுனன் எவ்விதம் பாதுகாப்பனோ அவ்விதமாகவே பாதுகாப்பான். நீங்கள் உங்களுடைய ரக்ஷணத்தைச் செய்துகொள்ளுங்கள். யான் போனால் எந்தச்சூரன் துரோணரை எதிர்த்து உங்களைக்காப்பான்? இதோ அர்ஜுனனை நான் அடையப்போகிறேன். அரசரே! உங்களுக்கு இப்பொழுது அர்ஜுனன் விஷயமாகப் பயம் வேண்டாம். மிக்கபுஜபலமுள்ள அந்த ஸவ்யஸாசி பாரத்தை மேற்கொண்டு பிறகு ஒருபொழுதும் தளர்ச்சியடைகிறவனல்லன். அரசரே! ஸௌவீரதேசத்தைச்சார்ந்த யுத்தவீரர்களும் ஸிந்துதேசத்து வீரர்களும் பௌரவர்களும் வடதேசத்திலும் தென்தேசத்திலுமுள்ள வீரர்களும்

மற்றும் வேறான மஹாரதர்களும் ரதிகச்ரேஷ்டர்களாகச் சொல்லப்படும் கர்ணன்முதலான வீரர்களும் கோபங்கொண்ட அர்ஜுனனுக்குப் பதினாறில் ஒருபாகத்துக்கும் ஈடாகமாட்டார்கள். பூபாலரே! தேவர்கள் அஸுரர்கள் மனிதர்கள் ராக்ஷஸக்கூட்டங்கள் கின்னரர்கள் மஹோரகர்கள் இவர்கள் எல்லோரும் ஜங்கமஸ்தாவரங்களுடன் சேர்ந்து முயற்சி செய்தாலும் யுத்தத்தில் அர்ஜுனனுடன் போர்புரிய வல்லவரல்லர். மஹாராஜரே! இவ்வாறு அறிந்து தனஞ்சயன்விஷயத்தில் உள்ளபயம் உம்மைவிட்டு விலகுக. எந்த இடத்தில் மஹாவில்லாளிகளும் ஸத்தியபராக்கிரமர்களும் வீரர்களுமான கிருஷ்ணரும் அர்ஜுனனும் இருக்கிறார்களோ அந்த இடத்தில் கார்யத்துக்கு எவ்விதத்தாலும் கெடுதி நேரிடாது. நீங்கள் ஸஹோதரனான அர்ஜுனனிடத்திலுள்ள அமானுஷசக்தியையும் அஸ்திரப்பயிற்சியையும் அறிவையும் குரோதத்தையும் யுத்தத்தில் சௌர்யத்தையும் நன்றியறிவையும் தயையையும் நன்றாக ஆலோசியுங்கள். வேந்தரே! தங்களுக்கு ஸஹாயனான நானும் அர்ஜுனனைநோக்கிச் சென்றுவிட்டால், யுத்தத்தில் துரோணரிடத்திலிருக்கக்கூடிய விசித்திரமான அஸ்திரஸாமர்த்தியத்தையும் நீங்கள் நன்றாக ஆலோசியுங்கள். அரசரே! ஆசார்யரோ உங்களைப்பிடிப்பதில் மிக்க ஆவலுள்ளவராயிருக்கிறார். பாரதரே! துரோணர் தம்முடைய பிரதிஜ்ஞையைக் காப்பாற்றிக்கொண்டு அதனை யதார்த்தமாகச்செய்வதற்கும் ஆவலுள்ளவராயிருக்கிறார். உம்முடைய ரக்ஷணத்தை நீர் இப்பொழுது ஏற்படுத்திக்கொள்ளும். குந்தீபுத்ரரே! எவன் நான் போனபின்பு உம்மைக் காப்பாற்றுவான்? எவனைநம்பி நான் பல்குனனைக்குறித்துச் செல்லுவேன? மஹாராஜரே! நான் உம்மை ஒருவனிடத்தில் ஒப்பிக்காமல் மஹாயுத்தத்தில் செல்லமாட்டேன். கௌரவ்யரே! உங்களிடத்தில் ஸத்யமாக நான் இதைச் சொல்லுகிறேன். மன்னரே! பாண்டவரே! எவன் உமக்கு இந்த ரணகளத்தில் ரக்ஷகனுவனே, எவனை நீங்கள் ரக்ஷகனுகவும் சக்தனுகவும் எண்ணுகிறீர்களோ அப்படிப்பட்ட ஒருரதிகனை யான் காணவில்லை. புத்திமான்களுள் உத்தமரே! அரசரே! புத்தியினால் பலவாறாக இதனை ஆலோசித்துச் சிறந்த நன்மையைப் புத்தியினால் கண்டு, பிறகு, என்னைக் கட்டளையிடுவீராக' என்று கூறினான்.

யுதிஷ்டிரர், 'மிக்ககைவன்மையுள்ளவனே! மாதவ! நீ சொல்வது சரிதான். கௌரவிக்கத்தக்கவனே! வெண்மைநிறமுள்ள குதிரைகளையுடையவனான அர்ஜுனனைப்பற்றி என்மனம் கலக்கமுற்றிருக்கிறது. என்னை ரக்ஷித்துக்கொள்ளும்விஷயத்திலோ நான் சிறந்த பிரயத்னத்

தைச் செய்யப்போகிறேன். என் அனுமதியைப்பெற்றுக்கொண்டு நீ தனஞ்சயன் போயிருக்குமிடம் செல். யுத்தத்தில் என்னைக்காப்பாற்றிக் கொள்வது அர்ஜுனன்பக்கத்தில் நீ உதவிக்காகச்செல்வது இவ்விரண்டையும் நான் புத்தியினால் ஆராய்ந்துபார்த்தமட்டில், நீ அர்ஜுனன் பக்கம் செல்வதே என் மனத்துக்கு விருப்பமாயிருக்கிறது. அந்த நீ எவ்விடத்தில் தனஞ்சயன் சென்றிருக்கிறானோ அவ்விடத்திற்குப் போவதற்குப் புறப்படு. மஹாபலசாலியானபீமன் என்னுடைய ரக்ஷணத்தையும் செய்வான். அப்பா! ஸஹோதரர்களோடுகூடின திருஷ்டத்யும்னனும் மஹாபலசாலிகளான அரசர்களும் த்ரௌபதீகுமாரர்களும் என்னை ஸம்சயமின்றி ரக்ஷிப்பார்கள். அப்பா! ஸஹோதரர்களான கேகயதேசத்தரசர்கள் ஐவர், ராக்ஷஸனான கடோத்கசன், விராடன், துருபதன், மஹாரதனான சிகண்டி, பலசாலியான திருஷ்டகேது, அம்மானான குந்திபோஜன், நகுலன், ஸஹதேவன், பாஞ்சாலர்கள், ஸ்ருஞ்சயர்கள் ஆகிய இவர்கள் மிகுந்த ஜாக்ரதையோடு ஸம்சயமின்றிப் பாதுகாப்பார்கள். யுத்தத்தில் சேனையுடன் த்ரோணராவது கிருதவர்மாவாவது என்னை எதிர்ப்பதற்குச் சக்தியுடையவர்களாகமாட்டார்கள்; அபஜயத்தை அடையும்படி செய்யவும் மாட்டார்கள். பகைவர்களைத்தபிக்கச் செய்கிறவனான திருஷ்டத்யும்னனும் யுத்தத்தில் கோபங்கொண்டவரான துரோணரை ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோலத் தன் வல்லமையினால் தடுக்கப்போகிறான். அப்பா! போர்க்களத்தில் சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனான பார்ஷதன் நிற்குமிடத்தில் துரோணருடைய பலமானது எவ்விதத்தினாலும் செல்லாது. இந்தத் திருஷ்டத்யும்னன் கவசத்துடனும் அம்புகளுடனும் கத்தியுடனும் வில்லுடனும் உத்தமமான பூஷணங்களுடனும் துரோணருடைய விநாசத்தின் பொருட்டு அக்நியிலிருந்து தோன்றியிருக்கிறான். பிரபுவே! அந்தப் பாஞ்சாலராஜகுமாரன் பாண்டவஸேனையிலுள்ள ஒன்றுசேர்ந்தவர்களான எல்லா வில்லாளிகளுடனும் சேர்ந்து, யுத்தத்தில் கோபங்கொண்ட துரோணரைத் தடுப்பான். சைனேய! கோபமின்றிச் செல். என் விஷயத்தில் பயம் வேண்டாம். திருஷ்டத்யும்னன் யுத்தத்தில் கோபமுள்ளவரான துரோணரைத் தடுப்பான்' என்று கூறினார்.

---

## நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி, யுதிஷ்டிரரைக் காக்கப் பீமனை வைத்துத் தான் அர்ஜுனனைக் காணச் சென்றது.)

சினிபுங்கவனும் யுத்தத்தில் அடங்காத மதமுடையவனும் மிக்க புகழுள்ளவனுமான ஸாத்யகியானவன் அரசரைவிடுவதால் பார்த்தனிட மிருந்து உண்டாகக்கூடிய பயத்தை நினைப்பவனாகவும், தனக்கு உல கத்தாரிடமிருந்து அபவாதம் சிறிதும் உண்டாகாமல் தடுக்கக்கருதின வனாகவும், 'பல்குனனைக்குறித்துச் செல்லுகின்ற என்னை ஜனங்கள் பயந்தவன் என்று சொல்லக்கூடாது' என்று எண்ணினவனாகவும், பல வாறு ஆலோசித்து இவ்வண்ணம் நிச்சயித்துச் சோகத்தினால் கெடுக் கப்பட்ட அறிவையுடையவனாகவும், 'இப்பொழுது எவ்வாறு நேரு மோ' என்று சிந்தித்துச் சோகத்தினால் தழுதழுத்த வாக்குடன் தர்ம ராஜரைச் சொல்விளங்காமலழைத்து, 'அரசரே! காவலைச் செய்து கொள்ளக்கூடுமென்று எண்ணுவீரானால் உமக்கு க்ஷேமம் உண்டாகட் டும். நான் பீபத்ஸுவினிடம் செல்வேன். நீர் சொல்லியதைச் செய் கிறேன். மன்னரே! உமக்கு ஸத்யமாகச்சொல்லுகிறேன்; எனக்கு அர் ஜுனனைவிட மிக்க பிரியனான ஒருவன் மூவுலகங்களிலுமில்லை. (பகை வர்களின்) கர்வத்தை நாசஞ்செய்பவரே! உம்முடைய கட்டளையால் யான் அவனுடைய வழியை அடையப்போகிறேன். உமது விஷயத்தில் ஒருவிதத்தாலும் எனக்குச் செய்யத்தகாதது ஒன்றுமில்லை. நரஶ்ரேஷ் டரே! ஆசார்யனான அர்ஜுனனுடைய வசனம் எனக்கு எவ்வாறு மேலானதோ அவ்வாறே உம்முடைய வசனமும் எனக்கு மேலானதே. ராஜபுங்கவரே! [1] பிராதாக்களான கிருஷ்ணார்ஜுனர்கள் உம்முடைய விருப்பப்படியே இருக்கின்றார்களன்றோ? என்னை அவர்களுடைய பிரியத்திலேயே இருப்பவனாக அறியும். பிரபுவே! நரஶ்ரேஷ்டரே! நான் தங்களுடைய கட்டளையைச் சிரஸினால் ஏற்று அர்ஜுனன் நிமித்தமாக உடைக்கமுடியாத இந்தச்சேனையை உடைத்து உள்ளே பிரவேசிக்கப் போகிறேன். பெரிய மீனானது ஸமுத்திரத்தில் பிரவேசிப்பதுபோல யான் இதோ கோபத்துடன் துரோணருடைய சேனையில் பிரவேசிக்கப் போகிறேன். வேந்தரே! எவ்விடத்தில் ஜயத்ரதன்பாண்டவனிடம்பயந்து கொண்டு சேனையின் நடுவிடத்தை அடைந்து ரதிகசிரேஷ்டர்களான அஶ்வத்தாமா கர்ணன் கிருபர் முதலானவர்களால் ரக்ஷிக்கப்பட்டிருக்

[1] ஸகோதரர்கள்போன்றவர்கள் என்பது.

கிருனே அவ்விடத்தைக்குறித்து நான் செல்வேன். அரசரே! எந்த இடத்தில் அந்தப்பார்த்தன் ஜயத்ரதனைக் கொல்வதில் முயற்சியுடைய வனயிருக்கிருனே அந்த இடத்துக்குச் செல்லும்வழியை இந்த இடத்திலிருந்து மூன்றுயோஜனை தூரமிருக்குமென்று நான் நினைக்கிறேன். அரசரே! நான் மிக்க உறுதியுள்ளமனத்துடன் மூன்றுயோஜனை தூரத்திலிருந்தாலும் அந்த அர்ஜுனனுடைய ஸ்தானத்தை, ஸைந்தவனைக் கொல்வதற்குள்ளாகவே அடைவேன். குருவினல் கட்டளையிடப்படாமல் எந்த மனிதன்தான் யுத்தஞ்செய்வான்? அரசரே! பெரியோர்களால் கட்டளையிடப்பட்ட என்னைப்போன்றவன் எவன் எவ்வாறு யுத்தஞ்செய்யாமலிருப்பான்? பாலனைக்கொன்றவனன அந்த ஸைந்தவன் எந்த இடத்திலிருக்கிருனே அந்த இடமானது இந்த இடத்திலிருந்து பூர்ணமாக மூன்று யோஜனைதூரம் இருக்கிறதென்பதை நான் அறிவேன். ஸமுத்திரத்துக்கொப்பானதும் ஸமுத்திரம்போலக் கர்ஜிக்கின்றதும் கலப்பைகள் சக்திகள் கதாயுதங்கள் ப்ராஸங்கள் கேடகங்கள் வாட்கள் ரிஷ்டிகள் தோமரங்கள் இவைகளோடுகூடியதும் பாணங்களாலும் சிறந்த அஸ்திரங்களாலும் நெருங்கியதுமான இந்தக் கௌரவ ஸேனையைக் கலக்கிக்கொண்டு யான் பிரவேசிக்கப்போகிறேன். ஆயிரக்கணக்கானதும் நீர் பார்ப்பதுமான இந்த யானைக்கூட்டமானது அஞ்சனமென்னும் யானையின்குலமென்று பெயர்பெற்றது. மன்னரே! இங்குள்ளவைகளும், மிக்க வலிமைபொருந்தியவைகளும், யுத்தத்தில் ஸமர்த்தர்களும் அடிக்கும் திறமையுள்ளவர்களுமான அனேக மிலேச்சர்களால் ஏறப்பெற்றவைகளும், மலைகளுக்கொப்பானவைகளும், மழையைப்பொழிகின்ற மேகங்கள்போன்றவைகளுமான இந்தயானைகள் யானைவீரர்களால் தூண்டப்பட்டால் ஒருகாலும் கொல்லாமல் திரும்பா. அரசரே! இந்த யானைகளைக் கொன்றாலன்றி ஓரிடத்திலாவது இவற்றுக்குத் தோல்வியுண்டாகாது. மன்னரே! மேலும், நீர் பார்க்கின்ற ஆயிரக்கணக்கான மஹாரதர்களான இந்த ராஜபுத்திரர்கள் ருக்மரதர்கள் என்று பிரஸித்திபெற்றவர்கள்; அரசரே! இவர்கள் தேரேறுவதிலும் ஆயுதங்களைப் பிரயோகிப்பதிலும் யானையேற்றத்திலும் நிபுணர்கள்; தனுர்வேதத்தில் கரைகண்டவர்கள்; முஷ்டியுத்தத்திலும் மிகத் தேர்ந்தவர்கள்; கதாயுத்தத்திலுள்ள விசேஷங்களையும் அறிந்தவர்கள்; கைச்சண்டையில் திறமையுள்ளவர்கள்; கத்திச்சண்டையிலும் கத்திகளையும் கேடகங்களையும் பிரயோகிப்பதிலும் ஸமர்த்தர்கள்; சூரர்கள்; கற்றறிந்தவர்கள்; பரஸ்பரம் ஸ்பர்த்தையுடையவர்கள். வேந்தரே! யுத்தத்தில் எப்பொழுதும் மனிதர்களை ஜயிக்க விருப்பமுடையவர்கள்.

அரசரே! இவர்கள் கர்ணனால் துச்சாஸனனை அனுஸரித்து இருப்பவர்களாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்கள். வாஸுதேவர்கூட இவர்களை ரதிகர்களுள் சிறந்தவர்களென்று புகழ்கின்றார். இவர்கள் எப்பொழுதும் பிரியத்தைச்செய்வதில் விருப்பமுள்ளவர்களாகக் கர்ணனுடையவசத்தில் நிற்கிறார்கள். வேந்தரே! அவனுடைய வசனத்தினாலேயே சுவேதவாஹனனிடத்திலிருந்து திரும்பிவிட்டார்கள். அவர்கள் வாட்டமடைந்தவர்களல்லர்; சிரமத்தை அடைந்தவர்களுமல்லர்; உறுதியான கவசங்களையும் வில்லையும் உடையவர்கள்; திருதராஷ்டிர குமாரனுடைய கட்டளையினால் நிச்சயமாக எனக்காகவே யுத்தஸந்நாஹத்துடன் நிற்கிறார்கள். கௌரவரே! உமக்குப் பிரியத்தைச் செய்வதற்காக யுத்தத்தில் இவர்களை நாசஞ்செய்துவிட்டு, பிறகு, ஸவ்யஸாசியினுடைய வழியை அனுஸரிக்கப்போகிறேன். அரசரே! முன்பு அர்ஜுனனால் பிடிக்கப்பட்ட கிராதராஜன், கவசங்களால் மூடப்பட்டவைகளும் கிராதர்களால் ஏறிநடத்தப்பட்டவைகளும் வேறானவைகளுமான இங்கு நீர்பார்க்கின்ற எழுநூறு யானைகளை நன்கு அலங்கரித்துத் தன்னுயிரை விரும்பி, இவைகளை அர்ஜுனனுக்கு ஏவல் செய்யும்படி கொடுத்தான். அரசரே! முற்காலத்தில் இந்த யானைகள் உம்முடைய வேலைகளை நன்றாகச் செய்துவந்தன. அவைகளே இப்பொழுது உம்மையே எதிர்த்து யுத்தஞ்செய்ய விருப்பங்கொண்டிருக்கின்றன. காலத்தின் மாறுபாட்டைப் பாரும். இந்த யானைகளைச் சேர்ந்த மஹாமாத்திரர்களென்னும் யானை வீரர்கள், யுத்தத்தில் கெட்டமதம்கொண்ட கிராதர்கள்; எல்லோரும் கஜசிக்ஷையை அறிந்தவர்கள்; மேலும் அக்னியில் தோன்றினவர்கள். இவர்கள் யுத்தத்தில் ஸவ்யஸாசியினால் ஜயிக்கப்பட்டவர்கள். இவர்களெல்லோரும் துர்யோதனன் வசத்தை அடைந்தவர்களாகி என் நிமித்தமாக யுத்தத்தில் இப்பொழுது ஸன்னத்தர்களாயிருக்கிறார்கள். அரசரே! யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களான இந்தக்கிராதர்களை அம்புகளால் கொன்று, ஸைந்தவனைக்கொல்வதில் முயற்சியுடையவனான பாண்டவனை அனுஸரிக்கப் போகிறேன். அரசரே! அஞ்சனம் என்கிற மேற்றிசையானையின் குலத்தில் தோன்றியவைகளும் கடினமானவைகளும் நன்குபழக்கப்பட்டவைகளும் மதப்பெருக்குள்ள கபோலங்களும் வாயுமுள்ளவைகளும் முழுதும் பொன்னாலாகிய கவசங்களால் நன்றாக அலங்கரிக்கப்பட்டவைகளும் ரணகளத்தில் குறிதவறாதவைகளும் யுத்தத்தில் ஐராவதத்துக்கு ஸமமானவைகளுமான இந்தப்பெரிய யானைகள் குரூரர்களும் சௌர்யமுடையவர்களும் உத்தமமான மலைநாட்டில் தோன்றியவர்களும் கடின

மானவர்களும் எஃகினாற்செய்த கவசத்தை அணிந்தவர்களுமான தஸ்யுக்களென்கிற உத்தமவீரர்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இங்கே பசுவுக்குப்பிறந்தவர்களும் குரங்குக்குப்பிறந்தவர்களும் பலவேறு ஜந்துக்களுக்குப் பிறந்தவர்களும் மனுஷ்யர்களுக்கு பிறந்தவர்களும் இருக்கின்றனர். அயோக்யர்களும் பாவஞ்செய்கின்றவர்களும் இமயமலையின் துர்க்கத்தில் வஸிப்பவர்களுமான மிலேச்சர்களுடைய இந்தச்சேனையானது புகைநிறமுடையதென்று சொல்லப்படுகிறது. இந்த எல்லாராஜமண்டலத்தையும் கிருபரையும் ஸோமதத்தகுமாரனை பூரிஸ்ரவஸையும் ரதிகர்களுள் சிறந்தவரான துரோணரையும் ஸிந்துராஜனையும் கர்ணனையும் துர்யோதனன் அடைந்து பாண்டவர்களை அவமதித்தான். மேலும், காலனால் தூண்டப்பட்டவனாகித் தன்னைக் கிருதார்த்தனாகவும் எண்ணிக்கொண்டிருக்கிறான். கௌந்தேயரே! அவர்களெல்லோரும் இப்பொழுது என்னுடைய பாணங்களுக்கு எதிர்ப்பட்டிருக்கும் நிலைமையை அடைந்துவிட்டார்கள். மனோவேகம்போன்ற வேகமுள்ளவர்களாயினும், இனி, அவர்கள் உயிரோடிருக்கமாட்டார்கள். பிறருடைய வீர்யத்தை அண்டிப்பிழைப்பதே ஸ்வபாவமாகவுடையவனான அந்தத்துர்யோதனனால் எப்பொழுதும் கௌரவிக்கப்பட்டிருக்கின்ற இந்த வீரர்கள் என்னுடைய பாணக்கூட்டங்களால் பீடிக்கப்பட்டு நாசத்தை அடையப்போகிறார்கள். அரசரே! ஸ்வர்ணத் துவஜத்தையுடையவர்களாகக் காணப்படும் இந்த ரதிகர்கள், துர்வாரணர்களென்று பிரஸித்தர்களான காம்போஜதேசத்து வீரர்கள். இவர்கள் சூரர்களென்றும் வித்தையைக்கற்றவர்களென்றும் தனுர்வேதத்தில் நல்லதேர்ச்சியுடையவர்களென்றும் உறுதியாக ஒன்றுகூடிப் பரஸ்பரம் நன்மையை விரும்பும் தன்மையுள்ளவர்களென்றும் நீங்கள் கேட்டிருப்பீர்கள். பாரதரே! தார்த்தராஷ்டிரனுடைய சேனைமுழுதும் கோபமுள்ளவைகளாகிக் குருவீரர்களால் காக்கப்பட்டு என்னை எதிர்ப்பதற்காக ஸன்னத்தமாயிருக்கின்றன. மஹாராஜரே! மிக்க ஜாக்கிரதையோடு என்னையே எதிர்த்து நிற்கின்ற அவர்களை, நான் நெருப்பானது புற்களை எரிப்பதுபோல நாசஞ்செய்யப்போகிறேன். அரசரே! ஆதலால், ரதங்களை ஸன்னத்தஞ்செய்பவர்கள் என் ரதத்தில் எல்லா அம்புப்பெட்டிகளையும் எல்லா உபகரணங்களையும் சேர்க்கட்டும். இந்த யுத்தத்தில் பற்பலவிதமான ஆயுதங்களை எடுக்கவேண்டியிருக்கும். ஆசார்யர்களால் உபதேசிக்கப்பட்டவண்ணம் ரதத்தை ஐந்து மடங்கு ஸாமக்ரிகளோடு கூடியதாகச்செய்யவேண்டும். குரூரர்களும் ஸர்ப்பங்களுக்கு ஒப்பானவர்களும் பற்பல சஸ்திரங்களுடைய கூட்டத்தையுடையவர்களும் பலவித ஆயுதங்களால்

யுத்தஞ்செய்யும் தன்மையுடையவர்களுமான காம்போஜர்களோடும், விஷம்போன்றவர்களும் அடிக்கும் ஸ்வபாவமுள்ளவர்களும் எப்பொழுதும் அரசனால் லாலனஞ்செய்யப்பட்டவர்களும் துர்யோதனனுக்கு நன்மையை விரும்புகின்றவர்களுமான கிராதர்களோடும் யான் எதிர்க்கப் போகிறேன். இந்திரனுக்கு ஸமமான பராக்கிரமத்தையுடையவர்களும் நெருப்புக்கு ஸமானர்களும் அவமதிப்பதற்குத்தகாதவர்களும் நன்றாக ஜ்வலிக்கின்ற அக்னிபோன்றவர்களுமான சகர்களோடும் யான் போர்புரியப்போகிறேன். ஓ! அரசரே! அவ்வாறே யமனுக்கொப்பானவர்களும் அணுகமுடியாதவர்களும் யுத்தத்தில் கெட்டமதம்கொண்டவர்களுமான மற்றும் பற்பலவித அனேக யுத்தவீரர்களை ரணகளத்தில் எதிர்க்கப்போகிறேன். மூன்றுயோஜனை தூரம் சென்றிருந்தாலும் ஸவ்யஸாசியினுடைய மார்க்கத்தை நான் அடைந்து, ரதிகர்களுள் சிறந்தவனும் வில்லாளிகளுள் மிக்க உத்தமனுமான அந்தஸவ்யஸாசியை அடைவேன். ஸூர்யோதயகாலத்தில் சென்ற பாண்டவனுடைய வழியில் யான் சென்று, ஸூர்யன் பிற்பகலை அடைவதற்குள், அவனை அடைவேன்; ஸம்சயம் இல்லை. ஆதலால், சிறந்தவைகளும் சுபமான லக்ஷணங்களால் பிரஸித்திபெற்றவைகளும் பூமியில் புரண்டெழுந்தவைகளும் தண்ணீர்குடித்தவைகளுமான குதிரைகளை என்னுடைய ரதத்தில் பூட்டலாம்' என்று கூறினன்.

ராஜாவான தர்மநந்தனர் எல்லா அம்புப்பெட்டிகளையும் எல்லா உபகரணங்களையும் பலவிதமான சஸ்திரங்களையும் அந்த ஸாத்யகியினுடைய தேரில் வைக்கும்படி செய்தார். பிறகு, முழுதும் அவிழ்த்துவிடப்பட்ட நான்கு சிறந்தகுதிரைகளை வேலைக்காரர்கள் ருசியுள்ளதும் மதத்தை விருத்திபண்ணுகிறதுமான பானத்தைக் குடிக்கும்படி செய்தார்கள். குடித்துப் பூமியில் புரண்டு ஸ்நானம் செய்விக்கப்பட்டவைகளும் ஆகாரத்தை உட்கொண்டவைகளும் நன்றாக அலங்கரிக்கப்பட்டவைகளும் சரீரத்தில்பாய்ந்த அம்புகள் பிடுங்கப்பட்டவைகளும் பொன்மாலைகளை யணிந்தவைகளும் ஒன்றுசேர்ந்தவைகளும் ஸுவர்ணம்போன்ற வர்ணமுடையவைகளும் நன்றாகப்பழக்கப்பட்டவைகளும் விரைவாகச்செல்பவைகளும் மனத்தில் மிக்க களிப்புள்ளவைகளும் ஊக்கமுள்ளவைகளும் முறைப்படி ரதத்தில் பூட்டப்பட்டவைகளும் பொற்சேணமுதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டவைகளுமானநான்கு குதிரைகளையும், தங்கமயமான பிடரிமயிர்களுள்ள பெரிய ஸிம்மத்வஜத்தையுடையதும் ஸுவர்ணத்தாலும் ரத்நங்களாலும் பவளங்க

ளாலும் சித்திரிக்கப்பட்டிருக்கிற குருவிந்தரத்தின சலாகைகளால் நான்கு புறத்திலும் சூழப்பட்டுள்ளதும் வெண்மைநிறமுள்ள மேகம் போன்ற கொடித்துணிகளால் அலங்கரிக்கப்பட்டதும் தங்கத்தடியினுல் தூக்கிப்பிடிக்கப்படும் குடையுள்ளதும் அனேக சஸ்திரங்களாகிற உபகாரணங்களோடுகூடியதுமான ரதத்தில் விதிப்படி பூட்டி, ஸாத்ய கிக்கு இனியதோழனும் தாருகனுக்கு இளைய ஸஹோதரனுமான ஸூதன், மாதலிஇந்திரனுக்குத் தெரிவிப்பதுபோல, ரதம் யுத்தப்பிர யாணத்தில் ஸன்னத்தமாக இருப்பதை ஸாத்யகிக்குத் தெரிவித்தான். பிறகு, ஸாத்யகி ஸ்நானஞ்செய்து சுசியாயிருந்துகொண்டு உத்ஸாஹத் துக்கு ஹேதுவான மங்களகாரியங்கள் செய்யப்பெற்று, பிறகு, ஆயிரம் ஸ்நாதகர்களுக்கு நிஷ்கமென்னும் பொன்னுணயங்களைத் தானஞ்செய் தான். செல்வவான்களுள் சிறந்த ஸாத்யகி ஆசீர்வாதங்களைப் பெற்று மதுபர்க்கத்துடன்கூடின தீர்த்தத்தையும் கைராதக மதுவையும் பானம்பண்ணிப் பிறகு மதத்திஞல் புரளுகின்ற சிவந்த கண்களை யுடையவனும் வீரகாம்ஸ்யத்தைத்தொட்டு அதிக ஸந்தோஷமுள்ள வனுமாக விளங்கினன். ரதிகர்களுள் ஶ்ரேஷ்டனும் ஸ்ரீமான்களுள் சிறப்புற்றவனுமான அந்த ஸாத்யகி அம்பையும் வில்லையும் மடியின் மீது வைத்துக்கொண்டு வலிமை இரட்டிப்பாக்கப்பட்டதனுல் ஜ்வலிக் கிற அக்னிபோன்றவனும் ஆசீர்வாதங்களால் நிரம்பினவனும் பிராம் மணர்களால் ஸ்வஸ்தியயனம் செய்யப்பெற்றவனும் கவசத்தையும் அலங்காரங்களையும் தரித்தவனும் கன்னியர்களால் வீசப்படுகிற பொரி களாலும் சந்தனங்களாலும் மாலைகளாலும் மகிழ்விக்கப்பட்டவனும் யுதிஷ்டிராருடைய சரணங்களில் நமஸ்கரித்துக் கைகளைக்குவித்தவனும் அந்த யுதிஷ்டிரரால் உச்சிமோந்து மங்களத்தைக் கருதப்பட்டவனும் அவருடைய வாக்கினுல் உச்சரிக்கப்பட்ட பலவித ஆசீர்வாதங்களைக் கேட்டு அதிக ஸந்தோஷத்தோடுகூடியவனுமாக மஹாரதத்தின்மீது ஏறினன். ஸந்தோஷமுள்ளவைகளும் மிக்க தேகபுஷ்டியுள்ளவை களும் காற்றின் வேகம்போன்ற வேகமுடையவைகளும் ஜயிக்க முடியா தவைகளுமான அந்தக் குதிரைகள் ஸந்தோஷமுள்ளவைகளாக முற் காலத்தில் இந்திரனுடைய ரதத்தை அந்தப் பச்சைக்குதிரைகள் எவ் வாறு வஹித்தனவோ அவ்வாறே வெற்றியைத்தருவதான ஸாத்யகி யின் ரதத்தை வஹித்தன. அவ்வாறுகவே, பீமஸேனனும் தர்மராஜ ரால் புகழப்பெற்று அவரை அபிவாதனஞ் செய்து ஸாத்யகியுடன் கூடவே சென்றுன். உம்முடைய சேனையில் பிரவேசிக்க எண்ணமுள் ளவர்களும் சத்ருக்களை அடக்குகிறவர்களுமான அவ்விருவர்களையும் கண்டு, துரோணர் முதலான உம்மைச்சேர்ந்தவர்களெல்லோரும் ஸந்த்

தர்களாயிருந்தார்கள். ஸங்நத்தனுகத் தன்னைப் பின்தொடர்ந்து வரு கின்ற பீமனைப்பார்த்து வீரனான ஸாத்யகி புகழ்ந்து அப்பொழுது, 'பீமஸேனரே! நீர் அரசரைக் காப்பாற்றும். இது உமக்கு முக்கியமான கார்யமன்றோ? யான் காலத்தினால் பக்குவமான இந்தச் சேனையைப் பிளந்துகொண்டு பிரவேசிக்கப்போகிறேன். இப்பொழுதும் வருங்காலத் திலும் அரசரைக்காப்பதே சிறந்தது. பீமஸேனரே! நீர் என்னுடைய வீர்யத்தை அறிவீர்; நானும் உமது வீர்யத்தை அறிவேன். பகைவர் களை அடக்குகிறவரே! எனக்குப் பிரியத்தை நீர் விரும்பினால் யுத்த ஸன்னாஹத்தைவிட்டுத் திரும்பும்' என்று ஸந்தோஷகரமானவார்த் தையை அப்பொழுது சொன்னான். அவ்வாறு சொல்லப்பட்ட பீமன் ஸாத்யகியைப்பார்த்து 'மனிதரிற் சிறந்தவனே! கார்யஸித்தியின் பொருட்டு நீ செல்; யான் அரசருடைய ரக்ஷணத்தைச் செய்வேன்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக்கேட்ட அந்த ஸாத்யகி பீம ஸேனனைப்பார்த்து, 'பார்த்தரே! நிச்சயமாக நீர் போம்; போம். பீம ஸேனரே! நேசமுள்ளவரும் பற்றுள்ளவருமான நீர் எனக்கு இப் பொழுது ஸ்வாதீனராயிருப்பதனாலும் நல்ல நிமித்தங்களும் என்னை நோக்கிச் சொல்லுவதனாலும் எனக்கு வெற்றி நிச்சயமே. மஹாத்மா வான பாண்டவனால் பாபியான ஸைந்தவன் கொல்லப்பட்ட பிறகு, தர் மாத்மாவான யுதிஷ்டிரராஜரை நான் ஆலிங்கனஞ்செய்துகொள்வேன். மஹாரதரான துரோணரைக் குறித்து ஜாக்கிரதையாக இரும்' என்று மறுமொழிகூறினான். மிக்க புகழுள்ள ஸாத்யகி பீமனைப்பார்த்து இவ்வளவு வார்த்தையைச் சொல்லித் திருப்பி அனுப்பிவிட்டு, ஒரு புலி மான்கூட்டங்களைப்பார்ப்பதுபோல உம்முடைய சேனையை நன்று கப் பார்த்தான். அரசரே! உம்முடைய படையில் பிரவேசிக்க எண் ணம் கொண்டவனான ஸாத்யகியைப்பார்த்து உம்முடைய சேனையானது மறுபடியுமே மயக்கத்தை அடைந்து மிகநடுங்கியது. மன்னரே! பிறகு, அந்த ஸாத்யகி தர்மராஜருடைய ஆஜ்ஞையினால் அர்ஜுனனைப்பார்க்க எண்ணி விரைவாக உம்முடைய படையில் புகுந்தான்.

---

## நூற்றுப்பதின்மூன்றுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

**(ஸாத்யகி அர்ஜுனனிடம் செல்லுகையில் கிருதவர்மாவோடு போர்புரிந்தது.)**

மஹாராஜரே! யுயுதானன் யுத்தம் செய்யக்கருதி உம்முடைய சேனையைக்குறித்துச் சென்றபொழுது தர்மராஜர் துரோணருடைய

ரதத்தை அடைய விரும்பித் தம்முடைய சேனையினால் சூழப்பெற்று யுயுதானனுக்குப் பின்புறத்தில் விரைவாகச்சென்றார். வேந்தரே! பிறகு, அவன் சென்றவுடன் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனான பாஞ்சால ராஜகுமாரனும் வஸுதானனென்கிற அரசனும் பாண்டவன் படையில் ஸைனிகர்களைப்பார்த்து உரத்தசப்தத்துடன் அழைத்தனர். "யுத்தத்தில் கொடியமதங்கொண்ட ஸாத்யகியானவன் சுகமாகச் செல்லும்படி செய்ய வாருங்கள்; அடியுங்கள்; சீக்கிரமாக நான்குபக்கத்திலும் ஓடுங்கள்; அனேக மஹாரதர்கள் இவனை ஜயிக்கும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள்' என்கிற இந்த வசனத்தைச் சொன்னார்கள். மஹாராஜரே! ஸேனாபதியினுடைய வார்த்தையைக் கேட்டுப் பாண்டவஸேனாவீரர்கள் நாற்புறங்களிலும் உம்முடைய ஸைந்யத்தை எதிர்த்துச்சென்றனர். அந்த மஹாரதர்கள், 'கொல்லு; அடி; பிடி; துன்பமடையும்படி செய்; ஓடு: துரத்திவா' என்று சொல்லிக் கொண்டு வேகத்துடன் (உம்முடைய ஸேனையைத்) தாக்கினார்கள். நாங்கள் வாத்தியகோஷங்களுடன்கூடின பாணசப்தங்களையும் சங்கங்களின் சப்தங்களையும் உண்டுபண்ணிக்கொண்டு அவர்களை எதிர்த்து ஜயிக்கக் கருதி யுத்தகளத்தில் அவர்களை நன்றாக எதிர்த்தோம். யுயுதானனுடைய ரதத்தைப்பார்த்து உம்மைச்சேர்ந்த ஸைனிகர்கள் எதிர்த்து ஓடினார்கள். பிறகு, யுயுதானனுடைய ரதமிருக்குமிடத்தில் பெரிய சப்தம் தோன்றியது. மஹாராஜரே! நான்குபக்கத்திலும் சிதறி ஓடுகின்ற உமது புத்திரனுடைய சேனையானது ஸாத்யகியினால் நூறு துண்டாக நான்குபக்கத்திலும் சிதற அடிக்கப்பட்டது. அந்தச்சேனையானது பிளக்கப்படும்போது மகாரதனான சினிகுமாரன், சிறந்த வில்லாளிகளான ஏழுவீரர்களைச் சேனையின் முன்னணிகளில் நாசஞ்செய்தான். ராஜசிரேஷ்டரே! பிறகு, வேறு பற்பல தேசத்தரசர்களான வீரர்களையும் நெருப்புக்கொப்பான அம்புகளாலே யமனுடைய வீட்டையுடையும்படி செய்தான். ஓரம்பினால் நூறு வீரர்களையும் நூறு அம்புகளால் ஒரு வீரனையும் அடித்தான். அவன், ருத்ரர் பிராணிகளைக் கொல்வதுபோல யானையின்மீது ஏறியிருப்பவர்களையும் யானைகளையும், குதிரையின்மீது ஏறியிருப்பவர்களையும் குதிரைகளையும், குதிரைகளோடும் ஸாரதிகளோடும்கூடின ரதிகர்களையும் கொன்றான். அவ்வாறு ஆச்சர்யமான காரியத்தைச் செய்கின்றவனும் சரமாரியைப் பொழிகின்றவனுமான அந்த ஸாத்யகியை உமது ஸைனிகர்களில்யாரும் எதிர்த்து வரவில்லை. நீண்ட கைகளுள்ள ஸாத்யகியினாலே நாசம் பண்ணப்படுகின்றவர்களும் நாசம் பண்ணப்பட்டவர்களுமான உம்முடைய வீரர்கள்

பயமடைந்து அதிகமான பௌருஷமுடைய அந்த ஸாத்யகியைப் பார்த்து யுத்தத்தை விட்டார்கள். ஐயா! அவனுடைய பலத்தினால் மயங்கியவர்கள், அந்த ஸாத்யகி யொருவனை அனேகர்களாகப் பார்த்தார்கள். பிரஜாநாதரே! யுத்தபூமியானது பொடிபண்ணப்பட்ட [1] நீடங்களோடு நொறுக்கப்பட்ட ரதங்களாலும் நாசம்பண்ணப்பட்ட சக்ரங்களாலும் தள்ளப்பட்ட குடைகளாலும் கொடிமரங்களாலும் [2] இருசுக்கட்டைகளாலும் கொடித்துணிகளாலும் ஸ்வர்ணமயமான தலைப்பாகைகளாலும் தோள்வளைகளணிந்து சந்தனம் பூசப்பெற்ற கைகளாலும் யானைத்துதிக்கைக்கு ஒப்பானவையும் ஸர்ப்பங்களுடைய உடல்போன்றவையுமான மனிதர்களுடைய தொடைகளாலும் மூடப்பட்டது. பாரதரே! காளையினுடைய கண்போன்ற கண்களையுடையவையும் சந்திரனுக்கொப்பானவையும் அழகிய குண்டலங்களணிந்தவையும் விழுந்திருக்கின்றவையுமான வீரர்களுடைய முகங்களாலே பூமியானது விளங்கியது. பலவாறு அறுக்கப்பட்டுப் படுத்திருக்கின்ற பர்வதம்போன்ற யானைகளால் யுத்தபூமியானது நான்கு புறத்திலும் சிதறியிருக்கின்ற மலைகளால் பூமிவிளங்குவதுபோல மிக விளங்கியது. நீண்ட கைகளையுடைய ஸாத்யகியினால் கொல்லப்பட்டு உயிரிழந்து பூமியில் விழுந்திருக்கின்ற குதிரைகள் பொன்னாலானவையும் முத்துக்களின் வரிசைகளால் அலங்கரிக்கப்பட்டவையுமான கடிவாளங்களோடும் விசித்ரமான கவசங்களோடும் விசேஷமாக விளங்கின. ஸாத்வதன் பற்பலவிதமான உம்முடைய படைகளைக்கொன்று நன்றாகத் துரத்தியடித்து உம்முடைய படையில் பிரவேசித்தான். பிறகு, தனஞ்சயன் சென்ற அவ்வழியினாலேயே ஸாத்யகி செல்ல எண்ணங்கொண்டான்; ஆனால், துரோணரால் தடுக்கப்பட்டான். ஸத்யகபுத்ரனான யுயுதானன் மிகவும் கோபமுண்டவனாகிப் பாரத்வாஜரையடைந்து ஸமுத்திரமானது கரையை அடைந்து திரும்பாததுபோலத் திரும்பவில்லை. துரோணர் மகாரதனான யுயுதானனை யுத்தத்தில்தடுத்து மர்மஸ்தானங்களைப்பிளக்குந்தன்மையுள்ள கூர்மையான ஐந்துபாணங்களால் அடித்தார். அரசரே! ஸாத்யகியோ ரணகளத்தில் துரோணரைப் பொற்கட்டுக்களுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளும் கழுகு இறகுகளால் வேகமுடையவைகளாகச் செய்யப்பட்டவைகளுமான ஏழுபாணங்களால் அடித்தான். துரோணர் குதிரைகளோடும் ஸாரதியோடுங்கூடின அந்த ஸாத்யகியை ஆறுபாணங்களாலடித்தார். மகாரதனான யுயுதானன்

---

[1] பீஷ்மபர்வம் 280 - வது பக்கம் குறிப்பிற்காண்க.

[2] 'அநுகர்ஷை:' என்பது மூலம்.

அந்தத்துரோணரைப் பொறுக்கவில்லை. அவன் பிறகு ஸிம்மநாதஞ் செய்து பத்துப்பாணங்களாலும் வேறு ஆறுபாணங்களாலும் எட்டுப் பாணங்களாலும் துரோணரையடித்தான்; மறுபடியும், துரோணரைப் பத்துப் பாணங்களாலடித்தான். ஐயா! அவன் ஓரம்பினால் துரோணருடைய ஸாரதியையும் நான்கு பாணங்களினால் நான்கு குதிரைகளையும் ஓரம்பினால் த்வஜத்தையும் யுத்தத்திலடித்தான். துரோணர் சுறுசுறுப்புடன் அந்த ஸாத்யகியைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் தேரோடும் கொடிமரத்தோடுங்கூட விட்டில் பூச்சிகளின் கூட்டங்கள் போன்ற விரைவாகச் செல்லுகின்ற அம்புகளால் மறைத்தார். அவ்வாறே மகாரதனான யுயுதானனும் சுறுசுறுப்புடையவனாகவும் கலங்காதவனாகவும் அனேக அம்புகளாலே துரோணரை மறைத்தான். சத்ரு வீரர்களைக் கொல்லுகிறவரான துரோணரோ அதிக கோபங்கொண்டு வாஸுதேவருக்குச் சமமானவல்லமைபொருந்திய ஸாத்யகியின்மீது கூர்மையான அம்புகளை இறைத்தார். அவர் சைனேயனை அவ்வாறு பெரிதான பாணஸமூகத்தால் மூடி அடிக்கடி அட்டஹாஸஞ்செய்து அவனைப்பார்த்து, 'உன்னுடைய ஆசார்யன் அல்பமனிதன்போல யுத்தத்தைவிட்டுச் சென்றான்; மேலும் யுத்தஞ்செய்கின்ற என்னைவிட்டு வலமாகச் சென்றான். மாதவ! யுத்தத்தில் என்னை விட்டு உன் ஆசார்யனான அர்ஜுனனைப்போல நீ வேகமாகச் செல்லாமலிருப்பாயாகில், யுத்தஞ்செய்கின்ற என்னிடத்திலிருந்து நீ உயிரோடு போகப்போகிறதில்லை' என்று கூறினார். ஸாத்யகி, 'அந்தணரே! தர்மராஜருடைய கட்டளையினாலே தனஞ்சயனுடையவழியை அடைகிறேன். உமக்கு மங்களமுண்டாகுக; காலவிளம்பம் எனக்குண்டாகக்கூடாது. ஆசார்யர்களால் அனுஸரிக்கப்பட்டவழியே எப்பொழுதும் சிஷ்யர்களால் அனுஸரிக்கப்படுகிறது. ஆதலால், என்னுடைய ஆசார்யனான அர்ஜுனன் எப்படிச்சென்றானோ அப்படியே விரைவிற் செல்லுகிறேன்' என்று கூறினான்.

அரசரே! சைனேயன் இவ்வளவுமட்டிலும் சொல்லித் துரோணாசாரியரைவிட்டு விரைவாகச்செல்லுகின்றவனாகி ஸாரதியை நோக்கி, 'ஸூத! துரோணர் எல்லாவிதத்தினாலும் என்னைத்தடுப்பதில் முயற்சியைச்செய்வார். யுத்தத்தில் முயற்சியுள்ளவனாகச்செல்; இந்த வார்த்தையையும் கேள். இதோ மிக்க ஒளிபொருந்தின அவந்திதேசத்து வீரர்களுடைய ஸைனியமானது காணப்படுகிறது. அதற்கடுத்துத் தென்னாட்டு வீரர்களுடைய பெரிய சேனையானது இதோ காணப்படு

கிறது. அதனையடுத்து பாஹ்லிகர்களுடைய பெரிய சேனை இதோ காணப்படுகிறது. பாஹ்லிக வீரர்களுடைய பக்கத்தில் கர்ணனுடைய பெரிதான சேனையானது சேர்ந்து நிற்கின்றது. ஸாரதியே! இந்தச் சைனியங்கள் ஒன்றுக்கொன்று விலகி இருக்கின்றன. இவை ஒன்றை மற்றொன்று உதவியாக அடைந்து யுத்தரங்கத்தைவிட்டு விலகிப் போகா. ஸாரதியே! நீ ஸந்தோஷத்துடன் இந்த இடைவெளியின் வழியாகக் குதிரைகளையோட்டு. பலவித ஆயுதங்களோடு முயற்சியுடைய வர்களாகிப் பாஹ்லிகர்களும் சூதபுத்ரனை கர்ணனைத் தலைமையாகக் கொண்ட அனேகம் தென்னாட்டு வீரர்களும் காணப்படுவதும் பற்பல தேசங்களினின்றுவந்திருக்கின்ற காலாட்படைகளாலே அடையப்பட்டு, யானைகள் குதிரைகள் தேர்கள் இவைகளால் நெருங்கிய சேனைகாணப் படுவதுமான இடத்திற்கு நடுத்தரமான வேகத்துடன் என்னுடைய ரதத்தை நடத்திக்கொண்டுபோ. எந்தவிடத்தில் அந்தப் பெரிதான வ்யூகமானது யுத்தத்தில் விரைவாக உடைக்கக்கூடியதாகுமோ அவ் விடத்திற்கு யுத்தத்தில் சத்துருக்களை நாசஞ்செய்துகொண்டு விரை வாகச் செல்வோம். அவ்விடத்தில் இவர்கள் மிகக்களித்திருப்பதால் நம்மோடு போர்புரியக் கருதமாட்டார்கள். யான் பலரோடு போர்புரி யாமல் மிக்க பலஹீனமான ஒரு சேனையை எதிர்த்து அழித்து எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே செல்வேன். உக்கிர மாயும் மிகவும் பெரிதாயுமிருக்கின்ற கர்ணனுடைய சேனையின் மத்தி யில் செல். அங்குள்ள மிக்க கோபங்கொண்ட தென்னாட்டு வீரர்களான இந்த மகாரதர்களை யுத்தத்தில் ஜயித்த பிறகு, தனஞ்சயனைக் குறித் துச் செல்வோம்' என்று கூறினான்.

அரசரே! யுயுதானனுடைய வார்த்தையைக்கேட்டு அவனுடைய ஸாரதி அவனுடைய சொற்படியே யுத்தரங்கத்தில் துரோணரைவிட்டுச் சென்றான். திரும்பாமல் செல்லுகின்றவனும் மகாபாக்கியசாலியுமான அந்த யுயுதானனைத் துரோணர் கோபங்கொண்டு அனேக அம்புகளை இறைத்துக்கொண்டு பின்தொடர்ந்தார். அந்த ஸாத்யகியும் பெரிதான படையையும் தென்னாட்டு வீரர்களுடைய சேனையையும் மிகப் பெரி தான கர்ணனுடைய சேனையையும் கூர்மையான அம்புகளாலடித்து முடிவில்லாமலிருக்கின்ற கௌரவசேனையிற் பிரவேசித்தான். பிறகு, அந்த ஸாத்யகி நான்கு பக்கங்களிலும் சேனைகளைத் துரத்தினான். அவன் பிரவேசித்தலால், சைனிகர்கள் ஓடவே, கோபமுடையவனை கிருதவர்மா ஸாத்யகியைச் சூழ்ந்து தடுத்தான். வீர்யமுடைய ஸாத்

யகி எதிர்த்து வருகின்ற கிருதவர்மாவை ஆறு பாணங்களாலடித்து நான்கு பாணங்களாலே அவனுடைய நான்கு குதிரைகளையும் விரைவாக அடித்தான். பிறகு, அவன் கணுக்கள் உட்படிந்துள்ள பதினாறு பாணங்களாலே கிருதவர்மாவை மார்பில் அடித்தான். மகாராஜரே! ஸாத்வதனால் மிக்க கூர்மையுள்ள அனேக அம்புகளால் அடிக்கப்படுகின்ற அந்தக் கிருதவர்மா பொறுக்கவில்லை. ஓ! ராஜரே! அந்தக் கிருதவர்மாவும் சூரியனுக்கும் அக்னிக்கும் ஸமானமான ஒளியுள்ள வத்ஸதந்தமென்ற பாணத்தைத் தொடுத்துக் காதுவரையிலிழுத்து ஸாத்யகியை மார்பிலடித்தான். அந்தப் பாணமானது ஸாத்யகியினுடைய கவசத்தையும் தேகத்தையும் பிளந்து இரத்தத்தால் நனைக்கப்பட்டதாகக் கணுக்களோடும் இறகுகளோடும் பூமியிற்பிரவேசித்தது. ராஜரே! பிறகு உத்தமமான அஸ்திரங்களையறிந்த அந்தக் கிருதவர்மா அனேக பாணங்களாலே ஸாத்யகியினுடைய பாணக்கூட்டங்களையும் வில்லையும் அறுத்தான். வேந்தரே! யுத்தரங்கத்தில் அந்தக் கிருதவர்மா மிக்க கோபங்கொண்டு ஸத்யவிக்ரமனான ஸாத்யகியைக் கூர்மையுள்ள பத்துக் கணைகளாலே மார்பிலடித்தான். பிறகு, வில்லானது சிதறியவுடன் வல்லமையுள்ளவர்களுள் சிறந்த ஸாத்யகி கிருதவர்மாவினுடைய வலக்கையைச் சக்தியாயுதத்தாலடித்து, பிறகு, மிக்க உறுதியான வேறொரு வில்லைக் கையிலெடுத்து நன்றாக வளைத்து நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அம்புகளை விரைவாகப்பொழிந்து ரதத்திலிருக்கிற கிருதவர்மாவை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துதடுத்தான். அரசரே! அவன் கிருதவர்மாவை யுத்தத்தில் (அம்புகளால்) மூடி, பிறகு, அர்த்தசந்திரபாணத்தினாலே அவன் ஸாரதியினுடைய தலையை அறுத்தான். அந்த ஸாரதி கொல்லப்பட்டு ஹார்த்திக்யனுடைய பெரிய ரதத்தினின்று (கீழே) வீழ்ந்தான். பிறகு, அந்தக் குதிரைகள் ஸாரதியில்லாமையால் அதிகமாகஓடின. பிறகு போஜகுலத்திற் பிறந்தவனான கிருதவர்மா மிக்க கலக்கமுற்றவனாகித் தானே அந்தக் குதிரைகளை அடக்கி வில்லைக்கையிலேந்தி நின்றான். அதனை ஸேனைகள் புகழ்ந்தன. பயமற்றவனான அந்தக் கிருதவர்மா ஒரு முகூர்த்தகாலம் இளைப்பாறி, சத்ருக்களுக்கு அதிகமான பயத்தை யுண்டுபண்ணிக்கொண்டு சிறந்த குதிரைகளை நடத்தினான். ஸாத்யகியோ அந்தப் போஜனைத் தாண்டிச் சென்றான். அந்தப் போஜனோ பீமஸேனனுக்கருகில் (விரைவாகச்) சென்றான். ராஜசிரேஷ்டரே! யுயுதானனும் போஜனுடைய சேனையினின்று வெளிப்பட்டுக் காம்போஜர்களுடைய பெரிய சேனையைக் குறித்து விரைவாகச்சென்றான். அரசரே! அப்பொழுது உண்மை

யான பராக்ரமத்தையுடைய அந்த ஸாத்யகி, அவ்விடத்தில் மகாரதர்க ளான அனேகசூரர்களால் தடுக்கப்பட்டும் நிலைதவறவில்லை. துரோணர் சேனையை ஒன்று சேர்த்து ரக்ஷிக்கும் பொறுப்பைக் கிருதவர்மாவி னிடத்தில்வைத்து முயற்சியுடன் யுத்தம்பண்ணும் விருப்பத்தோடு ரணகளத்தில் யுயுதானனை நோக்கிச்சென்றார். அவ்வாறு அவனைப் பின் தொடர்ந்து செல்லுகின்ற அந்தத் துரோணரைப் பாண்டவசைனியத்தி லுள்ள மிகுந்த பராக்கிரமசாலிகள் உத்ஸாகத்தோடு தடுத்தார்கள். அரசரே! ரதிகர்களுள் மிக்க உத்தமரதிகனை ஹார்த்திக்யனையடைந்து உத்ஸாஹத்தை யிழந்தவர்களான பீமஸேனனை முதன்மையாகக் கொண்ட பாஞ்சாலர்கள் வீரனை அந்தக் கிருதவர்மாவினாலே விக்ர மத்தை வெளியிட்டுத் தடுக்கப்பட்டார்கள். அந்தக் கிருதவர்மா முயற் சியுடையவர்களும் மனம் சிறிது தளர்ந்தவர்களுமான அந்த எல்லாப் பாஞ்சாலர்களையும் நான்கு பக்கங்களிலும் பாணங்களைப் பொழிந்து அவர்களுடைய வாகனங்களைக் களைப்படையச் செய்தான். ரணகளத்தில் போஜனுடைய சேனையைக் கவர்ந்துகொள்ள எண்ணிய பாஞ்சாலவீரர் கள் அவனால் துன்புறுத்தப்பட்டும், நற்குலத்திற்பிறந்த மகா புருஷன் போலப் பெரிய கீர்த்தியைவிரும்பி நின்றார்கள். முயற்சியுடையவர் களான அவர்கள் யுத்தரங்கத்தில் கிருதவர்மாவை எதிர்த்துப் பார்ப் பதற்குக்கூடச் சக்தியுள்ளவர்களாகவில்லை" என்று கூறினான்.

---

## நூற்றுப்பதினான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் தன்சைனியங்களின் தோல்வியைக்கேட்டுத் துக்கித்ததும், ஸஞ்சயன் திருதராஷ்டிரனை நிந்தித்துக் கிருதவர்மாவினுடைய பராக்கிரமத்தைக் கூறியதும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! படையானது இவ்வாறு அனேக குணங்களுள்ளது; இவ்வாறு பொறுக்கியெடுக்கப்பட்டது; நல்லபல முள்ளது; இவ்வாறு சாஸ்திரப்படி அணிவகுக்கப்பட்டது; மிகுதி யானது; எப்பொழுதும் நம்மால் மரியாதைசெய்யப்பட்டுள்ளது; எப் பொழுதும் நம்மிடத்தில் அன்புள்ளது; பெருந்தன்மைபொருந்தியது; ஆச்சர்யகரமான வடிவத்தோடு கூடியது; நேரில்காணப்பட்ட பராக்ர மத்தையுடையது; அதிக முதுமையடைந்ததுமன்று; அதிக பால்யமு

மன்று; இளைத்ததுமன்று; மிகவும் பருத்ததுமன்று; பெரும்பான்மை யாக மனத்திற்கினிய நடைக்கிருப்பிடமானது; உறுதியான அவயவங் களையுடையது ; ஆரோக்யமுள்ளது ; விடாமுயற்சியுள்ளது; அனேக சஸ்திரங்களை உபகரணங்களாகவுடையது; அனேகமான சஸ்திரங்களைப் பிடித்துப் போர்புரியும்வித்தைகளில் தேர்ச்சியடைந்துள்ளது; ஏறுவதி லும் இறங்குவதிலும் பாய்வதிலும் துள்ளிச்செல்வதிலும் நன்றாயடிப் பதிலும் எதிர்த்துச்செல்வதிலும் விலகுவதிலும் ஸாமர்த்தியமுடை யது; யானைப்போரிலும் குதிரைப்போரிலும் தேர்ப்போரிலும் பல முறை பரீக்ஷைபண்ணப்பட்டுள்ளது; கேடகங்களையும் கத்திகளையும் எடுத்து யுத்தம்பண்ணும்விஷயத்திலும் கைச்சண்டையிலும் ஸாமர்த் தியமுடையது; என்னுடையசேனையானது வீணை ஸல்லாபத்தாலும் உபகாரத்தாலும் உறவென்கிற நிமித்தத்தினாலும் ஏற்படுத்தப்பட வில்லை; பரீக்ஷித்துத் தகுந்தசம்பளத்துடன் ஏற்படுத்தப்பட்டது; என்றால் அழைக்கப்படாமலும் போஷிக்கப்படாமலும் இருந்ததில்லை; அப்பா! என்னுடைய சைனியமானது நற்குலத்தில் தோன்றிய உத்தம புருஷர்களோடுகூடியது; சந்தோஷத்துடனும் புஷ்டியுடனும்கூடியது; கர்வமற்றது; வெகுமானமும் உபசாரமும் செய்யப் பெற்றுள்ளது; கீர்த்திபொருந்தியது; உதாரமான மனமுள்ளது; பிரதானர்களும் புண் ணியமான செய்கைகளுள்ளவர்களுமான வேறு அனேக மந்திரிகளாலும் லோகபாலர்களுக் கொப்பான நரஸிரேஷ்டர்களாலும் பாதுகாக்கப் பட்டுள்ளது; நமக்குப் பிரியத்தைச் செய்யக்கருதியவர்களும் அன்போடு நம்மையடைந்திருக்கின்றவர்களும் சேனையுள்ளவர்களும் தம்வழியை அனுஸரிப்பவர்களுடன்கூடினவர்களுமான அனேக அரசர்களாலே ரக்ஷிக்கப்பட்டுள்ளது. எல்லாப் பக்கங்களிலும் நதிகளால் நிரப்பப் படுகின்ற ஸமுத்ரம்போலச் சிறகில்லாத பக்ஷிகளுக்கொப்பான ரதங்க ளாலும் குதிரைகளாலும் சூழப்பட்டுள்ளதும் மதப்பெருக்குக்கொண்ட கபோலங்களுள்ள யானைகளாற் சூழப்பட்டதும் பெரிதுமான என் னுடைய அந்தச்சைனியமே சத்ருவினாலடிக்கப்பட்டதாகில் துரதிர்ஷ் டத்தைத்தவிர வேறென்னவிருக்கிறது? ஸஞ்சய! யுத்தவீரர்க ளாகிற குறைவற்ற ஜலத்தையுடையதும் பயங்கரமானதும் வாகனங்க ளாகிற அலைவரிசைகளுள்ளதும் க்ஷேபணிகள் கத்திகள் கதைகள் சக்திகள் அம்புகள் ஈட்டிகள் இவைகளாகிய மச்சங்களால் நிரம்பி யதும் நெருங்கின கொடிமரங்களும் பூஷணங்களுமாகிய ரத்னங்களா லும் கற்களாலும் நிறைந்ததும் ஓடுகின்றவாகனங்களாகிற காற்றுவேக த்தினாலுண்டான அசைவுள்ளதும் துரோணராகிற ஆழ்ந்தபாதாளத்தை

யுடையதும் கிருதவர்மாவாகிற பெரிய மடுவுள்ளதும் ஜலஸந்தனுகிற பெரிய முதலையையுடையதும் கர்ணனுகிற சந்திரோதயத்தினுற் பொங்கியதுமான என்னுடையசேனுஸமுத்திரத்தைப் பாண்டவசிரேஷ்டனுன ஸவ்யஸாசி பலத்தாலுடைத்துப் பிரவேசிக்க, ரதிகர்களுள் உத்தமனுன ஸாத்வதனும் என்னுடைய சேனையில் ஒருரதத்தோடு பிரவேசித்த பின், அந்த என்னுடையஸைன்யத்தில் மிகுதியிருக்குமென்று நான் எண்ணவில்லை. அந்த இடத்தில் மிக்கபலசாலிகளும் தாண்டிவருகின்றவர்களுமான அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களையும் காண்டீவத்திற்கிலக்கான ஸிந்துராஜனையும் பார்த்துக் காலத்தால் தூண்டப்பட்ட கௌரவர்கள் என்ன காரியத்தைச் செய்தார்கள்? அதிபயங்கரமும் வேறுகதியற்றதுமான அந்த அகாலத்தில் கௌரவர்கள் எவ்வாறு நிலைபெற்றிருந்தார்கள்? அப்பா! ஒன்றுகக்கூடிய கௌரவர்களை மிருத்யுவினுல் விழுங்கப்பட்டவர்களேயென நினைக்கிறேன். யுத்தத்தில் அவர்களுக்குள்ளபராக்ரமமும் அவ்வாறு (முன்னிருந்ததுபோலக்) காணப்படவில்லை. ஸஞ்சய! அந்த யுத்தத்தில் கிருஷ்ணனும் அர்ஜுனனும் காயமின்றியே உள்ளே பிரவேசித்துவிட்டார்கள். அவ்விருவரையுந் தடுப்பவன் ஒருவனுவது இந்தச்சேனையிலில்லை. அப்பா! அனேக மகாரதர்களான யுத்தவீரர்கள் பரீக்ஷித்தே அவரவர்கள் தகுதிப்படி சம்பளத்தினுல் போஷிக்கப்பட்டிருக்கிறுர்கள். மற்றும்சிலர் பிரியமான வார்த்தையினுல் கௌரவிக்கப்பட்டிருக்கிறுர்கள். என்னுடைய சைனியத்தில் அவமரியாதையோடு போஷிக்கப்பட்டவனுமில்லை. தகுந்த வேலையினுல் அன்னமுங்கூலியும் (அவரவர்களால்) பெற்றுக்கொள்ளப்படுகின்றன. அப்பா! ஸஞ்சய! என்னுடைய படையில் ஒரு போர்வீரனும் அற்பமான தானத்தினுல் போஷிக்கப்படவில்லை. ஐயா! அவ்வாறே சம்பளம் வாங்காத மனிதனுமில்லை. அப்பா! என்னுலும் என்புத்ரர்களாலும் பந்துக்களோடுகூடிய ஞாதிகளாலும் சக்திக்குத் தக்கபடி ஒவ்வொரு யுத்தவீரனும் கொடுப்பதனுலும் மதிப்பதனுலும் ஆஸனத்தாலும் கௌரவிக்கப்பட்டிருக்கிறுன். அப்படிப்பட்ட வீரர்களும் யுத்தத்தையடைந்து ஸவ்யஸாசியினுல் ஜயிக்கப்பட்டார்கள்; ஸாத்யகியினுலே அழிக்கப்பட்டார்கள். இது துரதிர்ஷ்டத்தைத் தவிர வேறு என்ன? ஸஞ்சய! போரில் காக்கப்படுகிறவன் காப்பவர்கள் இவர்களுள் காக்கப்படுகிறவனுக்குள்ள ஒருவழியே காப்பவர்களுக்கும் பொதுவாயிற்று. யுத்தகளத்தில் ஜயத்ரதனுக்கு எதிரில் நிற்கின்ற அர்ஜுனனைக்கண்டு மிக்கமூடனுன என்னுடைய குமாரன் என்னகாரியத்தைச்செய்ய எண்ணினுன்? ரணகளத்தில் பயமற்றுப் பிர

வெளிக்கின்ற ஸாத்யகியைப்பார்த்துத் துரியோதனன் எந்தக்காரியத்தைச் சமயத்திற்கேற்றதெனவெண்ணினன்? எல்லா வீரர்களுடைய சஸ்திரங்களையும் தாண்டியவர்களும் சேனையில் நுழைந்தவர்களுமான ரதிகசிரேஷ்டர்களைக்கண்டு என்னைச்சார்ந்த வீரர்கள் யுத்தத்தில் எவ்விதமான தைரியத்தைப் பாராட்டினார்கள்? அர்ஜுனனிமித்தமாக ஸன்னத்தராயிருக்கிற தாசார்ஹனாகிய ஸ்ரீகிருஷ்ணனையும் சினிகளுளுத்தமனான ஸாத்யகியையும்பார்த்துத் தயைபாராட்டத் தக்கவர்களான என் புத்திரர்கள் துக்கப்படுவார்களென்று நினைக்கிறேன். ஸாத்வதனாலும் அர்ஜுனனாலும் அதிக்ரமிக்கப்பட்டிருக்கிற சேனையையும் ஓடுகின்ற கௌரவர்களையுங்கண்டு என் புத்திரர்கள் துக்கிப்பார்களென்றே யான் நினைக்கிறேன். பகைவர்களை வெல்லும் விஷயத்தில் உத்ஸாகத்தைவிட்டு ஓடுவதில் ஊக்கத்தையடைந்து ஓடுகின்றவர்களான தேராளிகளைக்கண்டு என்னுடைய புத்ரர்கள் துக்கிப்பார்களென்றே நினைக்கிறேன். ஸாத்வதனாலும் அர்ஜுனனாலும் தேர்களின் நடுவிடங்கள் சூன்யமாகச் செய்யப்பட்டதையும் போர்வீரர்கள் கொல்லப்பட்டதையுங்கண்டு என்னுடைய புத்ரர்கள் துக்கிப்பார்களென்றே எண்ணுகிறேன். அந்தச்சேனையில் குதிரைகளையும் யானைகளையும் தேர்களையுமிழந்து மனக்கவலையடைந்து யுத்தத்தில் ஓடுகின்ற ஆயிரக்கணக்கான வீரர்களைக்கண்டு என் புத்திரர்கள் துக்கிப்பார்களென்றே யானெண்ணுகிறேன். அர்ஜுனனுடைய பாணங்களினாலடிபட்டு ஓடுகின்றவைகளும் கீழேவிழுந்தவைகளும் விழுகின்றவைகளுமான யானைகளைக்கண்டு என்புத்ரர்கள் விசனப்படுவார்களென்றே நினைக்கிறேன். அந்த யுத்தகளத்தில் ஸாத்யகியினாலும் பார்த்தனாலும் ஸாரதிகளையிழந்தவையாகச் செய்யப்பட்ட குதிரைகளையும் ரதங்களையிழந்தவர்களாகச் செய்யப்பட்ட வீரர்களையும்பார்த்து என் புத்திரர்கள் விசனமடைந்திருப்பார்களென்றே யான் நினைக்கிறேன். ரணகளத்தில் ஸாத்யகியினாலும் பார்த்தனாலும் கொல்லப்பட்டவைகளும் ஆங்காங்கு ஓடுகின்றவைகளுமான குதிரைக்கூட்டங்களைக்கண்டு என்புத்திரர்கள் விசனப்படுவார்களென்றே நான் எண்ணுகிறேன். யுத்தகளத்தில் நான்கு பக்கங்களிலும் ஓடுகின்ற காலாட்கூட்டங்களைக்கண்டு என்புத்ரர்களெல்லோரும் விஜயத்தில் ஆசையற்றவர்களாகத் துக்கமடைந்திருப்பார்களென்றே நானெண்ணுகிறேன். துரோணருடைய சேனையைத் தாண்டிச்சென்றவர்களும் ஜயிக்கப்படாதவர்களுமான அந்த இருவீரர்களையுங்கண்டு அந்த க்ஷணத்தில் என் புத்திரர்கள் துக்கித்திருப்பார்களென்றே எண்ணுகிறேன். அப்பா! தவறாதவர்களான கிருஷ்ணனும் தனஞ்

சயனும் ஸாத்வதனோடு என்னுடைய சேனையிற் பிரவேசித்தார்களென் பதைக்கேட்டு யான் மிகவும் புத்திமயக்கங்கொண்டவனாக இருக்கி றேன். சினிகளுள் மிக்க உத்தமாதிகனான அந்த ஸாத்வதன், சேனை யிற்பிரவேசித்துப் போஜனுடையசேனையையுந் தாண்டியபொழுது கௌ ரவர்கள் யாதுசெய்தார்கள்? ஸஞ்சய! யுத்தத்தில் துரோணராலே அவ் வாறு பாண்டவர்கள் அடக்கப்பட்டபொழுது அவ்விடத்தில் யுத்தம் எவ்வாறு நடந்தது? அதனை எனக்குச் சொல்லுவாயாக. துரோணரோ பலமுடையவர்; சிரேஷ்டர்; அஸ்திரங்களில் தேர்ச்சிபெற்றவர்; யுத்தத் தில் அடங்காத மதங்கொண்டவர். அந்த மகாவில்லாளியை, தனஞ்சய னுக்கு ஜயத்தைத் தேடுவதில் விருப்பமுள்ளவர்களும் அதனால் துரோ ணரிடத்தில் வைரங்கொண்டவர்களுமான பாஞ்சாலர்கள் ரணகளத்தில் எவ்வாறு எதிர்த்துப் போர்புரிந்தார்கள்? அவர்களிடத்தில் ஊன்றிய வைரத்தையுடையவரும் மகாரதரும் பாரத்வாஜகுமாரருமான அசுவத் தாமா யுத்தத்தில் யாதுசெய்தார்? ஸஞ்சய! அர்ஜுனனும் ஸிந்து ராஜனுடைய வதத்தைப்பற்றி என்னசெய்தான்? அவற்றையெல்லாம் எனக்குச் சொல். நீ ஸமர்த்தனாயிருக்கிறாய்" என்று வினவ, ஸஞ்ச யன் சொல்லத்தொடங்கினான்.

"பரதசிரேஷ்டரே! வீரரே! உமது குற்றத்தினாலுண்டான [illegible] தையடைந்திருத்தலால், அற்பமனிதன்போல வியஸனப்படுவதற்கு நீர் தகுதியுள்ளவரல்லீர். கற்றறிந்தவர்களும் நட்பினர்களுமான விது ரர்முதலானவர்களாலே, 'ராஜனே! பாண்டவர்களைத் துன்பஞ்செய்யாதே' என்று முற்காலத்தில் சொல்லப்பட்ட வார்த்தையை நீர் கேட்கவில்லை நன்மையை விரும்புகின்றவர்களான நட்பினர்களுடைய வாக்கியத்தை எந்த மனிதன் கேட்கவில்லையோ அவன் உம்மைப்போலப் பெரிய விச னத்தையடைந்து துக்கிப்பான். அரசரே! முற்காலத்தில் ஸமாதானத் தின்பொருட்டு வாஸுதேவராலே வேண்டப்பட்டீர். மகாகீர்த்தியுடை யவரான ஸ்ரீகிருஷ்ணபகவான் உம்மிடத்திலிருந்து அந்த விருப்பத்தை அடையவில்லை. உத்தமரே! ராஜரே! எல்லாவுலகங்களுடைய தத்வத் தையும் அறிந்தவரும் எல்லாவுலகங்களுக்கும் ஈசுவரரும் பிரபுவுமான ஸ்ரீவாஸுதேவர் உம்முடைய குணமில்லாத தன்மையையும் புத்திரர்க ளிடமுள்ள பக்ஷபாதத்தையும் அவ்வாறே தர்மத்திலுள்ள ஸம்சயத் தையும் பாண்டவர்களிடமுள்ள பகையையும் பாண்டவர்களைப்பற்றி உம்முடைய கோணலான எண்ணத்தையும் அனேகமான தீனமாயுள்ள வீண்புலம்பல்களையும் அறிந்து, பிறகு, கௌரவர்களுக்கு மகத்தான

யுத்தத்தை உண்டுபண்ணினர். அகங்காரத்தை நாசஞ்செய்கின்றவரே! உம்முடைய குற்றத்தினலேயே உமக்கு மிகப்பெரிய அழிவு நேர்ந்து விட்டது. இந்தத் தோஷத்தைத் துரியோதனன்மீது நீர் சாட்டுவது தகுதியன்று. பாரதரே! தொடக்கத்திலாவது மத்தியிலாவது கடைசியிலாவது உம்மிடத்தில் சிறிதும் நல்லசெய்கை காணப்படவில்லை. தோல்வியானது உம்மை மூலமாகக் கொண்டதன்றோ? ஆதலால், இப்பொழுது நீர் உறுதியாயிருந்துகொண்டு உலகத்தினுடைய நிச்சயத்தையறிந்து கோரமான தேவாஸுரயுத்தம்போன்ற யுத்தத்தை நடந்தபடிகேளும். உண்மையான பராக்ரமமுள்ள ஸாத்யகி உம்முடைய சைனியத்தில் பிரவேசித்தவுடனே பீமஸேனன்முதலான பார்த்தர்கள் உம்முடைய சேனையை எதிர்த்து வந்தார்கள். விரைவாக எதிர்த்து வருகின்றவர்களும் அதிக கோபமுள்ளவர்களும் பின் உதவியுள்ளவர்களுமான அந்தப்பாண்டவர்களை மகாரதனை கிருதவர்மா யுத்தத்தில் ஒருவனுகவே எதிர்த்தான். புரண்டுவருகின்ற ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோல யுத்தத்தில் ஹ்ருதிககுமாரனை கிருதவர்மா பாண்டவஸேனையைத் தடுத்தான். அந்த யுத்தத்தில் ஒன்று சேர்ந்த பார்த்தர்களும் இந்த க்ருதவர்மாவை மீறமுடியாமையால் இவனுடைய பராக்கிரமத்தை அத்புதமாகக் கண்டோம். பிறகு, மிக்க புஜபலமுள்ள பீமன் கிருதவர்மாவை மூன்றுபாணங்களாலடித்து எல்லாப்பாண்டவர்களையும் சந்தோஷமடையும்படி செய்துகொண்டு சங்கத்தை ஊதினன். ஸகதேவன் இருபதுபாணங்களாலும் தர்மராஜர் ஐந்துபாணங்களாலும் நகுலன் நூறுபாணங்களாலும் கிருதவர்மாவை அடித்தார்கள். திரௌபதிகுமாரர்களும் கடோத்கசனும் திருஷ்டத்யும்னனும் முறையே எழுபத்துமூன்றுபாணங்களாலும் ஏழுபாணங்களாலும் மூன்று பாணங்களாலும் அவனை அடித்தார்கள். அவனை விராடனும் துருபதனும் த்ருஷ்டத்யும்னனும் ஐவைந்துபாணங்களாலே அடித்தார்கள். சிகண்டியோ ஐந்து பாணங்களாலே க்ருதவர்மாவை அடித்துச் சிரித்துக்கொண்டு இருபது பாணங்களால் மறுபடியும் அவனையடித்தான். அரசரே! பிறகு, கிருதவர்மா, அந்த மகாரதர்களனைவரையும் ஒவ்வொருவரை ஐந்தைந்து பாணங்களினலடித்துப் பீமனை ஏழு பாணங்களால் அடித்தான். அப்பொழுது அவனுடைய வில்லையுங் கொடியையும் தேரினின்றும் பூமியில் தள்ளினன். பிறகு, மகாரதனை இருதவர்மா கோபங்கொண்டு வில் அறுக்கப்பட்ட பீமஸேனனைக் கூர்மையுள்ள எழுபது பாணங்களினல் விரைவுடன் மார்பிலடித்தான். ஹார்த்திக்யனுடைய சிறந்த அம்புகளாலே நன்றாக அடிக்கப்பட்ட பல

சாலியான அந்தப் பீமன் தேரினடுவிலிருந்துகொண்டு பூகம்பமுண்டாகுங்காலத்தில் மலைநடுங்குவதுபோல நடுங்கினான். ராஜரே! அவ்வித நிலைமையுள்ள பீமஸேனனைக்கண்டு தர்மராஜர்முதலான பாண்டவர்கள் அம்புகளைப் பிரயோகஞ்செய்துகொண்டு கிருதவர்மாவை அடித்தார்கள். ஐயா! மகிழ்ச்சியுற்றவர்களான அவர்களெல்லாரும் யுத்தத்தில் அந்தப் பீமஸேனனைக் காப்பதற்காக அந்தக் கிருதவர்மாவைத் தேர்க்கூட்டத்தால் நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு அவனைப் பாணங்களால் அடித்தார்கள். பிறகு, மகாபலசாலியான பீமஸேனன் பிரஜ்ஞையையடைந்து யுத்தகளத்தில் பொற்பிடியுள்ள இரும்புமயமான சக்தியை எடுத்துத் தன் ரதத்தினின்று விரைவாகக் கிருதவர்மாவினுடைய ரதத்தின்மீதெறிந்தான். பீமனுடைய கையினலெறியப்பட்டதும் சட்டையுரித்த பாம்புக்கொப்பானதும் மிக்க பயங்கரமுமான அந்தச் சக்தியானது கிருதவர்மாவினெதிரில் அதிகமாக ஜ்வலித்தது. ஊழித்தீயைப்போன்ற ஒளியுடன் விரைவாக எதிர்நோக்கி வருகின்ற அந்தச் சக்தியை அப்பொழுது ஹார்த்திக்யன் இரண்டு பாணங்களினல் இரண்டாகத் துண்டாக்கினான். அரசரே! பொன்மயமான பூஷணங்களையணிந்த அந்தச் சக்தியானது அறுக்கப்பட்டு வானத்தினின்று விழுகின்ற பெரிய எரி நக்ஷத்திரம்போலத் திக்குக்களைப் பிரகாசிக்கச்செய்துகொண்டு பூமியில் விழுந்தது. சக்தி நாசஞ்செய்யப்பட்டதைப் பார்த்துப் பீமன் மிக்க கோபங்கொண்டான். கோபங்கொண்ட பீமஸேனன், பிறகு, யுத்தகளத்தில் மிக்க வேகத்தையுடையதும் மிக்க பேரொலியுள்ளதுமான வேறுவில்லை எடுத்து ஹார்த்திக்யனை எதிர்த்தான். ராஜரே! பிறகு, பயங்கரமான பலத்தையுடைய பீமன் உம்முடைய துராலோசனையினல் ஐந்து பாணங்களினல் ஹார்த்திக்யனை மார்பிலடித்தான். ஐயா! பீமஸேனனல் காயப்படுத்தப்பட்ட எல்லா அங்கங்களையுமுடைய போஜனே யுத்தகளத்தில் நன்ருகப் பூத்திருக்கின்ற சிவந்த அசோகவிருக்ஷம்போல விளங்கினான். பிறகு, கோபங்கொண்டவனும் சிறந்த வில்லாளியுமான ஹார்த்திக்யன் மந்தஹாஸத்துடன் பீமஸேனனை மூன்றுபாணங்களால் திடமாக அடித்து முயற்சிசெய்கின்ற மற்றெல்லா மகாரதர்களையும் மும்மூன்று பாணங்களால் யுத்தத்தில் திருப்பியடித்தான். அவர்களும் அவனை எவ்வேழு பாணங்களாலே திருப்பியடித்தார்கள். பிறகு, கோபங்கொண்டவனும் மகாரதனுமானகிருதவர்மா பெருநகைப்புடன் ரணகளத்தில் ஒருக்ஷுரப்ரத்தினலே சிகண்டியினுடைய வில்லை அறுத்தான். பின்பு, சிகண்டி தன் வில் அறுக்கப்பட்டவுடன் கோபமுள்ளவனும் விரைவுள்ளவனு

மாவி யுத்தத்தில் கத்தியையும் விளங்குகின்ற கேடகத்தையும் எடுத்தான். பொன்னால் அலங்கரிக்கப்பட்ட பெரிய கேடகத்தைச் சுழற்றி அந்தக் கத்தியைக் கிருதவர்மாவினுடைய ரதத்தைநோக்கிப் பிரயோகம் செய்தான். வேந்தரே! அந்தப் பெரியவாளானது அவனுடைய அம்புடன்கூடின வில்லையறுத்து ஆகாயத்தினின்று நழுவிவிழுகின்ற சோதி மண்டலம்போல் பூமியையடைந்தது. இச்சமயத்தில் மகாரதர்கள் யுத்தத்தில் சுறுசுறுப்புள்ள கிருதவர்மாவை அம்புகளால் மிக அடித்தார்கள். பரதசிரேஷ்டரே! சத்துருவீரர்களைக்கொல்லுகிறவனான ஹார்த்திக்யன் சிதறிப்போன அந்தப் பெரியவில்லை யெறிந்துவிட்டு வேறு வில்லை எடுத்துப் பாண்டவர்களை யுத்தகளத்தில் மும்மூன்றம்புகளாலே அடித்து எட்டுக்கணைகளினால் சிகண்டியையும் அடித்தான். மிக்க கீர்த்தியுடையவனான சிகண்டியோ வேறு தனுசை எடுத்து ஆமையினுடைய நகம்போன்ற அம்புகளாலே க்ருதவர்மாவைத் தடுத்தான். மன்னரே! பிறகு, ரணகளத்தில் கோபங்கொண்ட சூரனான கிருதவர்மா மகாரதனும் ரணகளத்தில் மகாத்மாவான பீஷ்மருடைய மரணத்திற்கு ஏதுவாயிருந்தவனுமான சிகண்டியைத் தன்பலத்தை வெளியிட்டுக் கொண்டு, புலி யானையை எதிர்ப்பதுபோல வேகத்தோடு எதிர்த்தோடி வந்தான். திக்கஜங்களுக்கு ஒப்பானவர்களும் ஜ்வலிக்கின்ற அக்நி போன்றவர்களும் சத்துருக்களை அடக்குகிறவர்களுமான அவ்விருவர்களும் பாணஸமூகங்களாலே ஒருவரைஒருவர் எதிர்த்து நெருங்கினார்கள். உத்தமமான விற்களைப் பலவாறாக அசைக்கின்றவர்களும் நூற்றுக் கணக்காக அம்புகளைத் தொடுத்து இரண்டுசூரியர்கள் கிரணங்களைப் பரப்புவதுபோல விடுகின்றவர்களும் கூர்மையான அம்புகளாலே ஒருவரை ஒருவர் வாட்டுகின்றவர்களும் [1] யுகாந்தம்போல் விளங்குகின்றவர்களும் மகாரதர்களுமான அவ்விரண்டு சூரர்களும் இரண்டுசூரியர்கள்போலப் பிரகாசித்தார்கள். கிருதவர்மாவும் யுத்தத்தில் மகாரதனான சிகண்டியை எழுபத்துமூன்றுபாணங்களினாலடித்து மறுபடியும் ஏழு பாணங்களினாலடித்தான். நன்றாக அடிக்கப்பட்ட அந்தச் சிகண்டி துன்பமுற்று மூர்ச்சையடைந்து அம்புடன்கூடியவில்லை நழுவவிட்டு ரதத்தினடுவே உட்கார்ந்தான். புருஷஸ்ரேஷ்டரே! உம்மைச்சேர்ந்தவர்கள் அந்தச் சிகண்டி யுத்தத்தில் மூர்ச்சையடைந்ததைக் கண்டு ஹார்த்திக்யனைப் புகழ்ந்தார்கள்; வஸ்திரங்களையும் வீசினார்கள். சிகண்டி அவ்வாறு ஹார்த்திக்யனுடைய அம்பினாலே பீடிக்கப்பட்டதை அறி

[1] 'யுகாந்தகாலத்தில் தோற்றும் இரண்டுசூரியர்கள்போல' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

ந்து ஸாரதியானவன் அந்த மகாரதனை வேகத்துடன் ரணகளத்திலிரு ந்து வேறிடத்திற்கு நடத்திச்சென்றான். பார்த்தர்கள் தேரினிடை யில் மூர்ச்சையடையும்படி செய்யப்பட்ட சிகண்டியைக்கண்டு யுத்த களத்தில் கிருதவர்மாவை விரைவாக ரதங்களாற் சூழ்ந்துகொண்டார் கள். மகாரதனான கிருதவர்மா ஒருவனாகவிருந்துகொண்டு பரிவாரங்க ளுடன்கூடின பார்த்தர்களையெல்லாம் யுத்தத்தில் தடுத்தமையால் அத் யாச்சர்யகரமான செய்கையைச் செய்தான். மகாரதனான அவன் பார்த் தர்களை ஜயித்துவிட்டுச் சேதிதேசத்து வீரர்களையும் பாஞ்சாலர்களை யும் ஸ்ருஞ்சயர்களையும் மகாவீர்யமுள்ளவர்களான கேகயர்களையும் ஜயித்தான். ரணகளத்தில் கிருதவர்மாவினால் பீடிக்கப்படுகின்ற அந்தப் பாண்டவர்கள் யுத்தரங்கத்தில் இங்குமங்கும் ஓடுபவர்களாகித் தைர் யத்தைக் கைக்கொள்ளவில்லை. ஹார்த்திக்யன் யுத்தத்தில் பீமஸேனன் முதலான பாண்டுபுத்ரர்களை ஜயித்துப் புகையடங்கின தீயைப்போல் யுத்தகளத்தில் நின்றான். மகாரதர்களான பாண்டவஸேனாவீரர்கள் ரண களத்தில் ஹார்த்திக்யனால் அம்புமழைகளாற் பீடிக்கப்பட்டுத் துரத்தி யடிக்கப்பட்டு யுத்தத்தில் நோக்கமற்றவர்களானார்கள்.

---

## நூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி)

(ஸாத்யகி ஜலஸந்தனைக் கொன்றது.)

அரசரே! எதைப்பற்றி நீர் என்னைக் கேட்கிறீரோ அதை ஒரே மனத்துடன் கேளும். ராஜரே! மகாத்மாவான ஹார்த்திக்யனாலே அந் தப் பாண்டவஸேனையானது துரத்தப்பட்டு வெட்கத்தினால் தலைகுனி ந்து நிற்க, உம்முடைய படையும் ஸந்தோஷமடைந்தபொழுது, ஆழத் தில் மேடான தரையை விரும்புகின்ற பாண்டவர்களுக்கு ஒரு தீவு போலான அந்த ஸாத்யகி மகாயுத்தத்தில் உம்மைச்சேர்ந்த வீரர்க ளுடைய பயங்கரமான சப்தத்தைக்கேட்டு விரைந்து கிருதவர்மாவை எதிர்த்தான். அந்த யுத்தரங்கத்தில் கோபத்தையும் பொறுமையையும் அடைந்து ஸாரதியை நோக்கி, 'ஸூதனே! உத்தமமான என்னுடைய ரதத்தைக் கிருதவர்மாவுக்கெதிரில் நிறுத்து. இந்தக் கிருதவர்மா கோப முடையவனாகிப் பாண்டவசேனைக்கு நாசத்தைச்செய்கிறான்; பார். ஸூத! இவனை வென்றுவிட்டு மறுபடியும் விஜயனைநோக்கிச் செல் வேன்' என்று சொன்னான். சிறந்த புத்தியுடையவரே! இவ்விதமான

வார்த்தை சொல்லப்பட்டவுடன் அவனுடைய ஸாரதி இமைப்பொழு துக்குள் கிருதவர்மாவுக்கெதிரில் சென்றான். ஹ்ருதிககுமாரனை கிருதவர்மாவோ மிக்க கோபங்கொண்டு கூர்மையுள்ள அம்புகளை ஸாத் யகியின்மீது இறைத்தான். பிறகு, அந்த ஸாத்யகி கோபங்கொண்டான். பிறகு, அவன் விரைவாகக் கூர்மையுள்ள அர்த்தசந்திரபாணத்தைக் கிருதவர்மாவின்மீது யுத்தத்தில் பிரயோகித்து வேறு நான்கு அம்புகளை யும் பிரயோகித்தான். அவைகள் அவனுடைய குதிரைகளை நாசம்செய் தன. அர்த்தசந்திரபாணத்தினாலே அவனுடைய வில்லையும் அறுத்து அவ்வாறே கூர்மையுள்ள அம்புகளாலே பின்புறத்தை ரக்ஷிக்கின்ற சூதனையும் கொன்றான். பிறகு, ஸத்யவிக்ரமனான ஸாத்யகி அந்தக் கிருதவர்மாவை ரதத்தையிழந்தவனாகச்செய்து உட்படிந்த கணுக்க ளுள்ள அம்புகளாலே அவனுடைய சேனையை அடித்தான். பிறகு, சைனேயனுடைய அம்புகளாலே பீடிக்கப்பட்ட கௌரவசேனை ஓடுவ தில் ஊக்கங்கொண்டதும் ஆங்காங்கு சுழல்கின்றதுமாக நாசமடைந் தது. பிறகு, ஸத்யவிக்கிரமனான அந்த ஸாத்யகி விரைவுடன் சென் றான். ராஜரே! வீர்யமுடையவனான ஸாத்யகி உம்முடைய படைகளிற் செய்ததைக் கேளும். மகாராஜரே! அந்தச் சூரனான ஸாத்யகி துரோண ருடைய சேனையாகிய பெருங்கடலைத் தாண்டி யுத்தத்தில் கிருதவர்மா வை ஜயித்து மிக்க களிப்படைந்து ஸாரதியைநோக்கி, 'பரபரப்பின்றி மெதுவாகப் போ' என்று சொன்னான். தேர்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் சூழப்பட்டுள்ளதும் காலாட்படைகளால் எங்கும் நிறைந் திருப்பதுமான உம்முடைய அந்தச் சேனையைக்கண்டு மறுபடியும் ஸாரதியைநோக்கி, 'ஸாரதியே! துரோணருடைய படைக்கு இடப்பக் கத்தில் காணப்படுவதும் மேகத்திற்குச் சமமானதும் மிகப்பெரிதுமான யானைப்படைக்குத் துரோணரே தலைவராயிருக்கிறார். இதிலுள்ள யுத்த வீரர்கள் பலர் யுத்தத்தில் எவ்விதத்தாலும் தடுக்கமுடியாதவர்கள்; சிறந்த வில்லாளிகள்; ராஜபுத்ரர்கள்; எல்லோரும் துரியோதனனால் கட் டளையிடப்பட்டவர்களாகி என்னிமித்தமாகப் பராக்ரமத்தை வெளிப் படுத்தி யுத்தஞ்செய்து உயிரையிழக்கத் துணிந்திருக்கிறார்கள். ஸூத னே! யுத்தத்தில் இவர்களை ஜயிக்காமல் ஜயத்ரதன் அடையத்தக்கவ னல்லன். பார்த்தனும் எவ்விதத்தாலும் என்னால் நாடத்தக்கவனாகான். எல்லாவித்தைகளிலும் கரைகண்டவர்களான இவர்கள் ஒன்றுசேர்ந்து நிற்கிறார்கள். பொன்னாற்சித்திரிக்கப்பட்ட கொடிமரங்களையுடைய மகா ரதர்களான த்ரிகர்த்தவீரர்கள் போர்புரியப்போகிறவர்களாக எனக்கு எதிர்முகமாகவே நிற்கிறார்கள். ஸாரதியே! விரைவாகக் குதிரையை

ஓட்டு. என்னை அவ்விடத்தில் கொண்டுபோய்ச் சேர். பாரத்வாஜர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே த்ரிகர்த்தர்களோடு போர்புரியப் போகின்றேன்' என்று சொன்னான். பிறகு, ஸூதன் ஸாத்யகியினுடைய இஷ்டப்படி சூரியனுக்குச் சமமான காந்தியுள்ளதும் கொடியுடன்கூடியதுமான பிரகாசமுள்ள ரதத்தோடு மெதுவாகச் சென்றான். யுத்தகளத்தில் வாயுவேகம்போன்ற வேகமுள்ளவையும் குருக்கத்திப்பூவும் சந்திரனும் வெள்ளியும்போலக் காந்தியுடையவையும் பாய்கின்றவைகளுமான சிறந்த குதிரைகள் தேர்ப்பாகனுக்கு வசப்பட்டு அந்த ஸாத்யகியை இழுத்துச்சென்றன. பிறகு, சங்குபோன்ற நிறமுள்ள உத்தமமான குதிரைகளோடு ரணகளத்தில் எதிர்த்துவருகின்ற அந்தச் சைனேயனை லாகவத்தினால் அடிப்பவர்கள் கூர்மையுள்ள பலவித அம்புகளை இறைத்துக்கொண்டு யானைப்படையுடன் நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். ஸாத்யகியும் பெரியமேகமானது வர்ஷாகாலத்தில் வர்ஷதாரைகளைப் பர்வதங்களின்மீது இறைப்பதுபோலக் கூர்மையான பாணங்களை யானைப்படைகளின்மீது இறைத்துக்கொண்டு யுத்தஞ்செய்தான். வஜ்ராயுதமும் இடியும்போலத் தாக்குபவைகளும் ஸாத்யகியினால் பிரயோகிக்கப்பட்டவைகளுமான அம்புகளால் வதஞ்செய்யப்படுகின்ற யானைகள் யுத்தத்தைவிட்டு அதிகமாக ஓடின. அரசரே! ஸாத்வதனால், நாராசங்களாலும் வத்ஸதந்தங்களாலும் பல்லங்களாலும் அஞ்சலிகங்களாலும் க்ஷுரப்ரங்களாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் பிளக்கப்பட்ட யானைகள் தந்தங்கள் சிதறினவைகளும் அதிகமான ரக்தத்தைக் கக்குகின்றவைகளும் மத்தகங்களும் கபோலங்களும் பிளக்கப்பட்டவைகளும் காதுகளும் முகங்களும் துதிக்கைகளும் சிதறினவைகளும் மாவுத்தர்களையும் கொடிகளையுமிழந்தவைகளும் நன்றாகப் பிளக்கப்பட்ட கவசங்களையும் மணிகளையுமுடையவைகளும் பெரியதுவஜங்களறுக்கப்பட்டவைகளும் நர்மீதிருந்த வீரர்களையிழந்தவைகளும் நழுவின கம்பளங்களையுடையவைகளும் பலவித ஒலிகளை வெளியிடுகின்றவைகளும் மேகத்தின் இடிமுழக்கம்போன்ற சப்தமுள்ளவைகளுமாகத் திக்குக்களில் ஓடின. அவ்வாறே இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டும் மலமூத்திரங்களை விட்டுக்கொண்டும் விரைவாக ஓடின சில யானைகள் சுழன்றன; சில தடுமாறின; மற்றவைகள் கீழேவிழுந்தன; மற்றுஞ் சில வாட்டமுற்றன. இவ்வாறு யுயுதானனால் அக்னிக்கும் சூரியனுக்கும் சமமான அம்புகளாலே பீடிக்கப்பட்ட அந்த யானைப்படையானது நான்குபக்கங்களிலும் ஓடியது. அந்த யானைப்படை அடிக்கப்பட்டவுடன், மகாபலசாலியான ஜலஸந்தன் வெள்ளிநிறமுள்ள குதிரைகள்

பூட்டின ரதத்தைநோக்கித் தன் யானையை முயற்சியுடன் நடத்தினன். மகாராஜரே! பொற்கவசத்தையணிந்தவனும் சூரனும் பொன்னாலாகிய தோள்வளைகளணிந்தவனும் பரிசுத்தனும்குண்டலங்களையும் கிரீடத்தையும்பூண்டவனும் வாளேந்தியவனும் சிவந்த சந்தனத்தால் பூசப்பட்டவனும் பிரகாசிக்கின்ற பொன்மாலையைத் தலையில் சூடியவனும் பிரகாசிக்கின்ற நிஷ்கமென்னும் பொன்னணயத்தையும் கண்டஸூத்ரத்தையும் மார்பில் தரிக்கின்றவனும் ஸ்வர்ணத்தினால் சித்திரவேலைசெய்யப்பட்ட வில்லை அசைவுறச்செய்பவனுமான அந்த ஜலஸந்தன் மின்னலோடு கூடிய மேகம்போல யானையின் சிரத்தில் விளங்கினன். வேகமாக வருகின்ற அந்த மகததேசாதிபதியான ஜலஸந்தனுடைய சிறந்த யானையை ஸாத்யகி ஸமுத்திரத்தைக் கரைதடுப்பதுபோலத் தடுத்தான். மன்னரே! ஸாத்யகியினுடைய உத்தமமான அம்புகளால் யானை தடுக்கப்பட்டதைக்கண்டு, மகாபலசாலியான ஜலஸந்தன் யுத்தத்தில் கோபங்கொண்டான். மகாராஜரே! கோபங்கொண்ட அவன், பிறகு, பெருங்காரியங்களுக்கு ஸாதனமான அம்புகளால் சினியினுடைய பௌத்திரனை விசாலமான மார்பிலடித்தான். பிறகு, துவைந்ததும் கூர்மையுள்ளதுமான வேறு ஒரு பல்லம் என்கிற பாணத்தினால், பாணங்களைப் பிரயோகஞ்செய்துகொண்டிருக்கின்ற விருஷ்ணிவீரனை ஸாத்யகியினது வில்லை அறுத்தான். பாரதரே! மாகதவீரனை ஜலஸந்தன் அட்டஹாஸத்துடன் வில் அறுக்கப்பட்ட ஸாத்யகியைக் கூர்மையுள்ள ஐந்து பாணங்களால் அடித்தான். வீர்யமுடையவனும் மிக்க புஜபலமுள்ளவனுமான அந்த ஸாத்யகி ஜலஸந்தனால் அனேக பாணங்களால் அடிக்கப்பட்டும் அசையவில்லை. அது ஆச்சரியமாயிருந்தது. பலசாலியான ஸாத்யகி அம்புகளுடன் சிறிதும் பரபரப்பில்லாமல் வேறு தனுஸை எடுத்துக் கோபத்தினால் 'நில்; நில்' என்று சொன்னன். அவன் இவ்வளவு சொல்லிவிட்டு அட்டகாஸத்துடன் ஜலஸந்தனை அறுபதுபாணங்களால் விசாலமான மார்பில் அடித்தான். ஜலஸந்தனுடைய பெரியவில்லைக் கைபிடித்திருக்குமிடத்தில் மிக்க கூர்மையுள்ள க்ஷுரப்ரத்தினாலறுத்து மூன்று பாணங்களால் (அவனையும்) அடித்தான். ஐயா! ஜலஸந்தனோ அம்புகளோடுகூடின அந்த வில்லை எறிந்துவிட்டு ஸாத்யகியைக்குறித்து விரைவாகத் தோமரத்தைப் பிரயோகஞ் செய்தான். அந்தத் தோமரமானது மகாயுத்தத்தில் ஸாத்யகியினுடைய இடக்கையைப்பிளந்துவிட்டுக் கோரமாகச் சீறுகின்ற ஸர்ப்பம்போல் பூமியிற் பிரவேசித்தது. ஸத்யபராக்ரமமுள்ள ஸாத்யகி இடக்கை பிளக்கப்பட்டவுடனே, கூர்மையுள்ள முப்பதுபாணங்களாலே ஜலஸந்தனை அடித்தான். பிறகு,

மகாபலசாலியான ஜலஸந்தன் கத்தியையும் அனேகம் புள்ளிகள் நெருங்கியிருப்பதும் காளைமாட்டுத்தோலினாற் செய்யப்பட்டதுமான பெரிய கேடகத்தையும் எடுத்து, பிறகு, கத்தியைச் சுழற்றி ஸாத்யகியின்மீது எறிந்தான். அந்த வாளானது அவனுடைய வில்லை யறுத்து விட்டுப் பூமியில் விழுந்தது. பூமியை அடைந்த அந்தக் கத்தியானது கொள்ளிவட்டம்போல விளங்கியது. பிறகு, ஸாத்யகி எல்லாருடைய சரீரங்களையும் பிளக்கிற வேறுவில்லை எடுத்து ஜலஸந்தனைப்பார்த்து மிக நகைத்துக் கோபங்கொண்டு விருக்ஷத்தினுடைய அடிக்கட்டை போன்றதும் இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் ஒலிபோன்ற ஒலியுள்ளதுமான அந்த வில்லை ஒலிக்கச்செய்து அவனைப் பாணத்தாலடித்தான். பிறகு, உத்தமனான ஸாத்யகி மிக நகைத்துக்கொண்டு இரண்டு க்ஷுரப்ரங்களாலே ஆபரணங்களை யணிந்தவையும் தோள்வளைகளுள்ளவையுமான ஜலஸந்தனுடைய இரண்டு கைகளையும் அறுத்தான். பரிகாயுதம் போன்ற அவ்விரண்டு கைகளும் மலையினுச்சியினின்று கீழேவிழுந்த இரண்டு ஐந்துதலைநாகங்கள்போல உத்தமமான யானையின்மீதிருந்து கீழேவிழுந்தன. பிறகு, ஸாத்யகி மூன்றாவதான க்ஷுரப்ரத்தினாலே அழகிய பற்களும் மோவாயுமுள்ளதும் அழகிய குண்டலங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான ஜலஸந்தனுடைய தலையை அறுத்தான். தலையும் கைகளும் தள்ளப்பட்டதும் பயங்கரமான காட்சியுள்ளதுமான அந்த ஜலஸந்தனுடைய உடற்குறையானது யானையை ரக்தத்தால்அபிஷேகஞ்செய்தது. மகாராஜரே! ஸாத்யகி விரைந்து யுத்தத்தில் ஜலஸந்தனைக்கொன்று யானையினுடைய தோளிலிருந்து விமானத்தைக் கீழேவிழும்படி செய்தான். ஜலஸந்தனுடைய யானையானது உதிரந்தால் அங்கங்கள் நனைக்கப்பட்டு, தொங்கிக்கொண்டிருக்கிறதும் நன்றாகக் கட்டப்பட்டதுமான உத்தமமான ஆஸனத்தைத் தூக்கிக்கொண்டே சென்றது. ஸாத்யகியினுடைய அம்புகளால் பீடிக்கப்பட்ட அந்தப் பெரியயானையானது தன் சேனையையே துவைத்துக்கொண்டும் பயங்கரமாக அலறிக்கொண்டும் ஓடியது. ஐயா! விருஷ்ணிகளுள் உத்தமனான ஸாத்யகியினால் ஜலஸந்தன் கொல்லப்பட்டதைக்கண்டு உமது சைனியத்தில் பெரிதான கூக்குரல் உண்டாயிற்று. உம்முடைய யுத்தவீரர்களும் ஓடுவதில் உத்ஸாகமுள்ளவர்களும் சத்ருக்களை ஜயிக்கும் விஷயத்தில் ஊக்கத்தை இழந்தவர்களுமாகிப் புறங்காட்டி எங்கும் ஓடினார்கள். பாரதரே! ராஜரே! இந்த ஸமயத்தில் சஸ்திரங்களைப் பிடித்தவர்களுள் உத்தமரான துரோணர் கிருதவர்மாவினிடத்தில் மிகப்பெரிய பொறுப்பை வைத்துவிட்டு வேகமுள்ள குதிரைகளோடு

மகாரதனான யுயுதானனை எதிர்த்து வந்தார். மகாபலசாலியான அந்தக் கிருதவர்மாவோ ஒருவனாகவே ரணகளத்தில் முயற்சியுடையவர்களான பார்த்தர்களை எதிர்த்தான். அவ்வாறு விருத்தியடைந்திருக்கின்ற அந்த ஸாத்யகியைக்கண்டு கௌரவ சிரேஷ்டர்கள் கோபங்கொண்டு துரோணருடன்கூடவே அனைருகில் எதிர்த்து ஓடிவந்தார்கள். அரசரே! பிறகு, கௌரவர்களுக்கும்ஸாத்யகிக்கும் துரோணருக்கும் ரணகளத்தில் தேவாஸுரயுத்தத்திற் கொப்பான கோரமானயுத்தம்நடந்தது.

---

## நூற்றுப்பதினொருவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி துரியோதனனையும் கிருதவர்மாவையும் வென்றது.)

யுத்தத்தில் ஸாத்யகியினுடைய செய்கையைக்கண்டு பொருதவர்களான மகாரதர்கள் மிக்க முயற்சியுடன் யுத்தஞ்செய்யும்பொருட்டு அவனைநோக்கி எதிர்த்தோடிவந்தார்கள். மஹாராஜரே! நன்றாகஅடிபட்டவர்களான அவர்களெல்லோரும் முயற்சியுடையவர்களாகிப் பாண ஸமூகங்களை இறைத்துக்கொண்டு விரைவுடன் யுயுதானனோடு போர் புரிந்தார்கள். அவனைத் துரோணர் கூர்மையுள்ள எழுபத்தேழுபாணங்களாலும் துர்மர்ஷணன் பன்னிரண்டுபாணங்களாலும் துஸ்ஸஹன் பத்துப்பாணங்களாலும் அடித்தார்கள். விகர்ணனும் கழுகிறகுகள் கட்டின கூர்மையுள்ள முப்பதுபாணங்களாலே இடப்பக்கத்து மார்பில் விரைவாக அடித்தான். ஐயா! துர்முகன் பத்துப் பாணங்களாலும் துச்சாஸனன் எட்டுப்பாணங்களாலும் சித்திரஸேனன் இரண்டு பாணங்களாலும் சைனேயனை அடித்தார்கள். அரசரே! துரியோதனனும் சூரர்களான மற்ற மகாரதர்களும் பெரிதான அம்புமழையினால் ஸாத்யகியை ரணகளத்தில் பீடித்தார்கள். விருஷ்ணிகுலத்தில் தோன்றின ஸாத்யகி அப்பொழுது மகாரதர்களான உம்முடைய புத்ரர்களாலே நான்குபக்கத்திலும் அடிக்கப்பட்டும் (மற்றக்) கௌரவ சிரேஷ்டர்களாலும் நான்கு புறங்களிலும் துன்பஞ்செய்யப்பட்டும் அவர்களைத் தனித்தனியாக அம்புகளால் திருப்பியடித்தான். அஸ்திரங்களில் மிக்க தேர்ச்சியடைந்தவனும் தாமரைமலர்போன்ற கண்களையுடையவனுமான ஸாத்யகி பாரத்வாஜரை மூன்றுபாணங்களாலும் துஸ்ஸஹனை ஒன்பதுபாணங்களாலும் விகர்ணனை இருபத்தைந்துபாணங்களாலும் சித்ரஸேனனை ஏழுபாணங்களாலும் துர்மர்ஷணனைப் பன்னிரண்டுபாணங்களாலும் விவிம்சதியை எட்டுப்பாணங்களாலும் ஸத்யவ்ரதனை ஒன்பது பாணங்

களாலும் விஜயனைப் பத்துப்பாணங்களாலும் துரியோதனனை நல்ல கணுக்களும் கூரியமுனையுமுள்ள மூன்றுபாணங்களாலும் அடித்தான். பிறகு, மகாரதனான ஸாத்யகி, பொற்கட்டுக்களுள்ள வில்லை அசைத்துக்கொண்டு மகாரதனும் எல்லா ஜனங்களுக்கும் அரசனும் எல்லா உலகத்தாரிலும் மேன்மைபெற்ற ரதிகனும் உமது புத்திரனுமான துரியோதனனை எதிர்த்து அம்புகளால் மிகவும் அடித்தான். பிறகு, அவ்விருவருக்கும் யுத்தம் நேர்ந்தது. அந்த மகாரதர்களிருவரும் பகைவரை யழிப்பவையான கூரிய அம்புகளைத் தொடுத்துப்பிரயோகித்து ஒருவரையொருவர் யுத்தத்தில் கண்ணிற்குப் புலப்படாதபடி செய்தார்கள். ஸாத்யகி குருராஜனாலே நன்றாக அடிக்கப்பட்டு மிகவும் விளங்கினான்; சந்தனமரமானது தன்னிடத்திலுள்ள ரஸத்தைப் பெருக்குவதுபோல அதிகமான ரக்தத்தைப் பெருக்கினான். ஸாத்யகியினாலும் பாணஸமூகங்களால் நன்றாக அடிக்கப்பட்ட உம்முடைய குமாரன் பொன்னாலாகிய தலையணிகளுடன் தூக்கி நிறுத்தப்பட்ட யூபஸ்தம்பம்போல விளங்கினான். வேந்தரே! ஸாத்யகியோ யுத்தத்தில் மந்தகாஸத்துடன் வில்லாளியான குருராஜனுடையதனுஸை க்ஷுரப்ரத்தினாலே அறுத்தான்; பிறகு, அறுக்கப்பட்ட வில்லையுடையவனான இந்தத் துரியோதனனை அனேக அம்புகளாலே நிரப்பினான். விரைவான செய்கையுள்ளவனும் சத்துருவுமான ஸாத்யகியினால் அம்புகளாற் பிளக்கப்பட்ட துரியோதனராஜன் யுத்தத்தில் சத்ருவினுடைய விஜயத்திற்கடையாளமான பராக்ரமத்தைப் பொறுக்கவில்லை. பிறகு, பொன்னாலலங்கரிக்கப்பட்ட பின்பக்கமுள்ளதும் பிறரால் நெருங்க முடியாததுமான வேறுவில்லை எடுத்து நூறு அம்புகளாலே ஸாத்யகியை விரைவாக அடித்தான். வில்லாளியும் பலசாலியுமான உம்முடைய புத்ரனாலே அதிகமாக அடிக்கப்பட்ட அந்த ஸாத்யகி கோபத்திற்குடன்பட்டவனாகி உம்முடைய புத்ரனைத் துன்பஞ்செய்தான். ராஜாவான உம்முடைய குமாரன் பீடிக்கப்பட்டதைக்கண்டு மகாரதர்கள் பராக்கிரமத்தை வெளியிட்டு அம்புமழையினால் ஸாத்யகியை மூடினார்கள். மகாரதர்களும் அனேகர்களுமான உம்முடைய குமாரர்களாலே மூடப்படுகின்ற அந்த ஸாத்யகி, ஒவ்வொருவரையும் ஐந்து ஐந்து பாணங்களாலடித்து மறுபடியும் ஏழேழு பாணகளாலடித்தான். அட்டகாஸம் செய்துகொண்டு துரியோதனனை எட்டுப் பாணங்களால் விரைவாக அடித்துச் சத்துருக்களுக்குப் பயங்கரமான இவனுடைய வில்லையும் அறுத்து ரத்னமயமான அரவக்கொடியையும் அம்புகளாலறுத்துக்கீழே தள்ளினான். மிக்க கீர்த்தியுடையவனான ஸாத்யகி கூர்மையுள்ள நான்கு

பாணங்களாலே நான்குகுதிரைகளையுங்கொன்று க்ஷுரப்ரமென்கிற அம்பினால் ஸாரதியையும் கீழேதள்ளினான். களிப்புள்ளவனான ஸாத்யகி இந்தச் சமயத்திலேயே மர்மஸ்தானங்களைப் பிளக்கின்ற அனேக அம்புகளை மகாரதனான குருராஜன்மீது இறைத்தான். அரசரே! யுத்தத்தில் சைனேயனுடைய உத்தமமான அம்புகளாலே அடிக்கப்படுகின்ற உம்முடைய குமாரனான துரியோதனன் விரைவாகவோடி வில்லாளியான சித்ரஸேனனுடைய ரதத்தின்மீது ஏறிக்கொண்டான். ராகுவினால் ஆகாயத்தில் சந்திரன் விழுங்கப்படுவதுபோல யுத்தத்தில் ஸாத்யகியினால் துரியோதனராஜன் ஆக்ரமிக்கப்படுவதைப் பார்த்து உலகமானது ஹாஹாகாரத்தோடு கூடியதாயிற்று. பிறகு, மகாரதனான கிருதவர்மா அந்தச் சப்தத்தைக்கேட்டுச் சிறந்த வில்லை அசைத்துக்கொண்டும் குதிரைகளைத்தூண்டிக்கொண்டும் ஸாரதியை, 'விரைவாக முன்னே போ; போ' என்று அதட்டிக்கொண்டும், பிரபுவான ஸாத்யகியிருக்குமிடத்துக்கு விரைவாக நேரில் சென்றான். மகாராஜரே! வாயைத் திறந்திருக்கும் யமன்போலவருகின்ற அந்தக் கிருதவர்மாவைப்பார்த்து யுயுதானன் ஸாரதியை நோக்கி, 'இந்தக் கிருதவர்மா அம்புகளோடு கூடியவனாக ரதத்தோடு விரைவாகவருகின்றான். எல்லா வில்லாளிகளுள்ளும் மிகவும் சிறந்தவனான இந்தக் கிருதவர்மாவை நோக்கித் தேருடன் எதிர்த்துச்செல். ஸூத! மிக உத்தமமான ரதத்தை ரதத்துடன் விரைவாக எதிர்த்துச்செல். சத்ருக்களை அடக்குகிறவனான அந்த விருஷ்ணிவீரனை யுத்தத்தில் கொல்லப்போகிறேன்' என்று இவ்வாறான வார்த்தையைக்கூறினான். பிறகு, ரதிகர்களுள் சிரேஷ்டனான ஸாத்யகி மிக்கவேகமுள்ள குதிரைகள்கட்டின ரதத்தினால் யுத்தகளத்தில் வில்லாளிகளுக்கு அளவுகருவிபோன்றவனான கிருதவர்மாவை எதிர்த்தான். பிறகு, சூரியனுக்கு ஒப்பானவர்களும் ஜ்வலிக்கின்ற நெருப்புப்போன்றவர்களுமான அந்த நரசிரேஷ்டர்களிருவரும் நல்லபலமுள்ள இரண்டு புலிகள்போல எதிர்த்தார்கள். ஸமர்த்தனும் பொன்னாலாகிய தோள்வளைகளை யணிந்தவனும் பொற்கவசம் பூண்டவனும் பொன்மயமான கொடியுள்ளவனுமான கிருதவர்மாவோ பொன்னால் அலங்கரித்த பின்புறமுள்ள பெரியவில்லை நாணொலிசெய்துகொண்டு பொற்கட்டுக்களுள்ள கூர்மையான இருபத்தாறு பாணங்களால் ஸாத்யகியை யடித்துக் கூர்மையுள்ள ஐந்து பாணங்களால் அவனுடைய ஸாரதியையும் அடித்துச் சிறந்தவைகளான நான்குபாணங்களாலே நன்குபழக்கப்பட்டவைகளும் ஸிந்துதேசத்தில் தோன்றினவைகளுமான அந்த ஸாத்வதனுடைய நான்கு குதிரைகளையும் அடித்துத் தடுத்

தான். பிறகு, சினியின் பேரனை ஸாத்யகி விரைவுடன் தனஞ்சயனைப் பார்க்கும் விருப்பமுள்ளவனாகிக் கிருதவர்மாவின்மீது எண்பதுபாணங்களைப் பிரயோகித்தான். சத்ருக்களைத் தவிக்கச்செய்கிறவனும் ஜயிக்க முடியாதவனுமான அந்தக் கிருதவர்மா பலமுடையசத்ருவினால் அதிகமாக அடிக்கப்பட்டு, பூகம்பம் உண்டாகுங்காலத்தில் மலை நடுங்குவது போல நடுங்கினான். ஸத்யவிக்ரமனான ஸாத்யகி கிருதவர்மாவினுடைய நான்கு குதிரைகளையும் கூர்மையுள்ள அறுபத்துமூன்று பாணங்களாலும் அவ்வாறே ஸாரதியை ஏழுபாணங்களாலும் விரைவாகஅடித்தான். சினிபுங்கவனான ஸாத்யகி பொற்கட்டுக்கள் கட்டிய பாணத்தை எடுத்து மிகுந்த கோபங்கொண்ட ஸர்ப்பத்தைப் போன்றதும் அதிக ஜ்வாலையுள்ளதுமான அவ்வம்பைக் குதிரைகளையும் ஸாரதிகளையுமிழந்த தேரிலிருக்கின்ற கிருதவர்மாவின்மீது பிரயோகித்தான். யமதண்டம் போன்ற உக்கிரமான அந்தப் பாணமானது கிருதவர்மாவை அடித்துத் தங்கத்தினால் மிக்க வேலைப்பாடமைந்த காந்தியுள்ள கவசத்தையுமுடைத்து ரக்தத்தினால் நனைக்கப்பட்டதாகிப் பூமியை அடைந்தது. யுத்தத்தில் ஸாத்யகியினுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டு ரக்தத்துடன்கூடிய அந்தக் கிருதவர்மா பாணங்களோடுகூடினவில்லை நழுவவிட்டு உத்தமமான ரதத்திலிருந்து கீழேவிழுந்தான். சிங்கப்பற்களுள்ளவனும் அளவிடமுடியாத பராக்கிரமமுள்ளவனும் புருஷஸ்ரேஷ்டனுமான கிருதவர்மா ஸாத்யகியினால் அம்புகளால் அடிக்கப்பட்டவனாகித் தேர்நடுவில் முழங்கால்களால் மண்டியிட்டு விழுந்தான். ஸாத்யகி ஆயிரம் கைகளுள்ள கார்த்தவீர்யன்போன்றவனும் ஸமுத்திரம்போலக் கலக்கமுடியாதவனுமான கிருதவர்மாவைத் தடுத்துவிட்டுப் பிறகு சென்றான். அரசரே! அந்த ஸாத்யகியினுடைய அம்பானது எவ்விதத்தினாலும் பயனற்றதாகிறதில்லை அவன் அர்ஜுனனைப் பார்க்கக்கருதி அவனிருக்கிறவிடத்துக்குச் சென்றான். ராஜரே! அவ்விடத்தில் அரசர்களால் வல்லமையினால் தடுக்கப்பட்டவனும் மிக்க பலசாலியுமான அந்த ஸாத்யகி பாண்டுநந்தனனைப்பார்க்க எண்ணங்கொண்டு போர்புரிந்தான். சினிபுங்கவனை அவன் கத்திகளாலும் சக்திகளாலும் விற்களாலும் நிரம்பியதும், யானைகளாலும் குதிரைகளாலும் ரதங்களாலும் நெருங்கியதும், நூற்றுக்கணக்கான க்ஷத்ரிய ஸ்ரேஷ்டர்களால் உண்டுபண்ணப்பட்ட உக்கிரமான ரக்தத்தையுடையதுமான சேனையை, இந்திரன் அஸுரஸேனையைவிட்டு விலகிப்போவது போல், விட்டுவிட்டு எல்லா ஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அவர்களின் நடுவில் சென்றான். பலசாலியான அந்தக் கிருத

வர்மா தேறுதலடைந்து பெரிதான வேறு ஒருவில்லை எடுத்து அந்த யுத்தகளத்தில் பாண்டவவீரர்களைத் தடுத்துக்கொண்டு நின்றான்.

---

## நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொ. ௧௬௪)

(ஸாத்யகியின் பராக்கிரமத்தை வர்ணித்தல்.)

ஸாத்யகினால் கௌரவஸைன்யங்கள் ஆங்காங்கு துரத்தியடிக்கப்படும்பொழுது, துரோணர் உயிர்நிலைகளைப் பிளக்கின்ற அம்புக்கூட்டங்களை இறைத்தார். எல்லாச்சேனைகளும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே துரோணருக்கும் ஸாத்யகிக்கும், மஹாபலிக்கும் இந்திரனுக்கும் நடந்ததுபோலக் கைகலந்தயுத்தம் நடந்தது. பிறகு, துரோணர் சினியினுடைய பௌத்திரனை ஸாத்யகியை ஸர்ப்பங்கள்போன்றவடிவமுள்ளவையும் விசித்ரமானவையும் முழுவதும் எஃகினாற் செய்தவையுமான மூன்று பாணங்களால் நெற்றியிலடித்தான். மஹாராஜரே! யுயுதானனே நெற்றியில் தைத்திருக்கிற அந்தப் பாணங்களால் மூன்று சிகரங்களையுடைய மலைபோல விளங்கினான். ஸாத்யகி தவறும் ஸமயத்தை எதிர்பார்க்கின்ற துரோணர் யுத்தத்தில் இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் ஒலிபோன்ற ஒலியுள்ள வேறு பாணங்களை அந்த ஸாத்யகியின்மீது பிரயோகித்தார். உத்தமமான அஸ்திரங்களை அறிந்தவனும் தாசார்ஹகுலத்திற் பிறந்தவனுமான ஸாத்யகி துரோணருடைய வில்லினின்று விடுபட்டுவருகின்ற அந்த அம்புகளை நல்ல கணுக்களுள்ள இரண்டு இரண்டு அம்புகளால் துண்டாக்கினான். அரசரே! துரோணர் அவனுடைய அவ்விதமான லாகவத்தைப்பார்த்து அட்டகாஸஞ்செய்து கொண்டு முப்பதுபாணங்களாலே அவனை விரைவாக அடித்தார். மறுபடியும் தமதுலாகவத்தினால் அவனுடையலாகவத்தை மிஞ்சிக்கொண்டு கூர்மையான ஐம்பது பாணங்களைப் பிரயோகித்தார். அரசரே! கோபங்கொண்ட பெரிய ஸர்ப்பங்கள் புற்றிலிருந்து வெளிவருவதுபோலத் துரோணருடைய ரதத்திலிருந்து தேகத்தைப் பிளக்கின்ற அம்புகள் வெளிப்பட்டன. அவ்வாறே யுயுதானனாலே லக்ஷக்கணக்காகப் பிரயோகிக்கப்பட்டவையும் ரக்தத்தைப் பானம்பண்ணுகின்றவையுமான அம்புகள் துரோணருடைய ரதத்தை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டன. ஐயா! பிராம்மணோத்தமரான துரோணருக்கும் ஸாத்யகிக்கும் லாகவத்தில் வித்யாஸத்தை நாங்கள் தெரிந்துகொள்ளவில்லை. புருஷ

சிரேஷ்டர்களான அவ்விருவரும் ஸமமாகவே யிருந்தார்கள். பிறகு, ஸாத்யகியோ மிக்க கோபங்கொண்டு உட்பதிந்த கணுக்களுள்ளவைக ளும் கூர்மையுள்ளவைகளுமான ஒன்பதுபாணங்களால் துரோணரையும் அடித்துத் துவஜத்தையும் அறுத்து அவர் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே நூறம்புகளாலே ஸாரதியையும் அடித்தான். மகாரதரான துரோணர் யுயுதானனுடைய லாகவத்தைக்கண்டு எழுபதுபாணங் களால் அவனுடைய ஸாரதியையும் மும்மூன்று பாணங்களால் குதிரை களையும் அடித்து ரதத்தில்நிற்கின்ற த்வஜத்தையும் ஓர் அம்பினாலே அறுத்தார். பிறகு, பொற்கணுக்களுள்ள வேறொரு பல்லமென்கிற பாணத்தாலே மகாத்மாவான ஸாத்யகியினுடையவில்லையும் யுத்தத்தில் அறுத்தார். பிறகு, மகாரதனான ஸாத்யகியோ கோபங்கொண்டு வில்லை எறிந்துவிட்டு ஒரு பெரிதான கதாயுதத்தை எடுத்துப் பாரத்வாஜர்மீது எறிந்தான். விரைவாகவருகின்றதும் பட்டங்கள்கட்டப்பட்டதும் இரும்பினாலாகியதுமான அந்தக் கதாயுதத்தைத் துரோணர் பற்பல விதமான அனேக அம்புகளாலே தடுத்தார். பிறகு, ஸத்யவிக்ரமனான ஸாத்யகி வேறு வில்லையெடுத்துச் சாணையில் தீட்டப்பட்ட அனேக அம்புகளாலே வீரரான பாரத்வாஜரை அடித்தான். அவன் யுத்தத்தில் துரோணரை அடித்துக் கர்ஜனம் செய்தான். மகாத்மாவான அவ னுடைய அந்த ஸிம்மநாதத்தைத் துரோணர் ஸகிக்கவேயில்லை. பிறகு, அவர் யுத்தகளத்தில் ஸாத்யகியினுடைய ரதத்தைக்குறித்துப் பொற் காம்புள்ளதும் இரும்பினாற்செய்ததுமான சக்தியாயுதத்தைப் பலத்தி னால் பிரயோகஞ்செய்தார். யமனுக்கொப்பானதும் கொடியதுமான அந்தச் சக்தியாயுதமானது ஸாத்யகியைத்தாக்காமலே ரதத்தைப் பிளந்துகொண்டு பயங்கரமான சப்தத்தோடு பூமியில் பிரவேசித்தது. அரசரே! பரதசிரேஷ்டரே! பிறகு, சினியினுடைய பௌத்ரனான ஸாத்யகி துரோணருடைய வலக்கையைக் குறிவைத்துப் பீடிப்பவனாகி அம்பினாலடித்தான். மன்னரே! துரோணரும் யுத்தத்தில் அர்த்த சந்திர பாணத்தினாலே ஸாத்யகியின் பெரியவில்லை அறுத்து [1] ரதசக்தி யினாலே ஸாரதியையும் அறுத்தார். சக்தியினால் அடிக்கப்பட்ட ஸாத் யகியினுடைய ஸாரதி மயக்கத்தையடைந்து ரதத்தினுடைய நடுவிற் போய் ஒருமுகூர்த்தகாலம் உட்கார்ந்திருந்தான். அரசரே! தானே கடிவாளங்களைப்பிடித்துக் குதிரைகளையும் நடத்திக்கொண்டு துரோண ரையும் எதிர்த்துப் போர்புரிந்ததான மனிதர்களாற் செயற்கரிய செய்கையை அந்த யுத்தகளத்தில் ஸாத்யகி செய்தான். ராஜரே! பிறகு,

[1] 'தாழைமடல்போன்ற வாயுள்ள சக்தி' என்பது பழைய உரை.

மகாரதனை அவன் அதிக உத்ஸாகத்துடன் ரணகளத்தில் பிராம்மண ரான துரோணரை நூறுபாணங்களால் அடித்தான். பாரதரே! துரோ ணர் அந்த ஸாத்யகியின்மீது ஐந்துபாணங்களைப் பிரயோகஞ்செய்தார். கோரமான அந்த அம்புகள் கவசத்தையுடைத்து யுத்தகளத்தில் ரக்தத் தைப் பருகின. கோரமான அம்புகளாலே அடிக்கப்பட்ட வீரனான ஸாத்யகி மிக்க கோபங்கொண்டு துரோணரைக்குறித்துப் பாணங்களைப் பிரயோகஞ்செய்தான். பிறகு, ஒரு பாணத்தினால் துரோணருடைய ஸாரதியைப் பூமியில் தள்ளி, ஸாரதியையிழந்த குதிரைகளை ஆங்காங்கு ஓடும்படிசெய்தான். அரசரே! பொன்மயமான அந்த ரதமானது யுத்த களத்தில் விரைவாக ஓடுவதாகிச் சூரியன்போல விளங்கிக்கொண்டு ஆயிரக்கணக்கான மண்டலகதிகளைச் செய்தது. எல்லா அரசர்களும் ராஜகுமாரர்களும், 'எதிர்த்தோடுங்கள்; துரோணருடைய குதிரைகளைப் பிடியுங்கள்; ஓடுங்கள்' என்று கூச்சலிட்டார்கள். அரசரே! ரணகளத் தில் எல்லா மகாரதர்களும் விரைவாக ஸாத்யகியை விட்டுவிட்டுத் துரோணரிருக்கிறவிடத்திற்கே வேகமாக ஓடிவந்தார்கள். யுத்தத்தில் ஸாத்யகியினுடைய அம்புகளாலே துன்பஞ்செய்யப்பட்டு அவர்கள் ஓடக்கண்டு உம்முடையசேனையானது மறுபடியுமே மிகவும்தைரியத்தை இழந்ததும் வியஸனமுற்றதுமாயிற்று. ஸாத்வதனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டவைகளும் காற்றைப்போல வேகமாகச் செல்லுகின்றவை களுமான அந்தக் குதிரைகளாலே கொண்டுபோகப்பட்ட துரோணர் மறுபடியும் வ்யூகத்தினுடைய வாயிலேயே அடைந்துநின்றார். வீர்ய முடையவரான அவர், பாண்டவர்களாலும் பாஞ்சாலர்களாலும் வியூக மானது பிளக்கப்படுவதைக்கண்டு ஸாத்யகிவிஷயத்தில் முயற்சியைச் செய்யாமல் வ்யூகத்தையே பாதுகாத்தார். துரோணராகிற நெருப் பானது கோபமாகிற விறகினாலே நன்றாக ஜ்வலித்துக்கொண்டு பாண்ட வர்களையும் பாஞ்சாலர்களையும் தடுத்து எரிப்பதுபோலவும் உதித்திருக் கின்ற பிரளயகால சூரியன்போலவும் இருந்தது.

---

## நூற்றுப்பதினெட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி ஸுதர்சனராஜனைக் கொன்றது.)

கௌரவஸ்ரேஷ்டர்களுள் சிறந்தவரே! புருஷர்களுள் மிகச் சிறந்தவனும் சினிகளுள் உத்தமவீரனுமான அந்த ஸாத்யகி, துரோ

ணரையும் உம்மைச் சேர்ந்தவர்களான கிருதவர்மாமுதலானவர்களையும் ஜயித்து அட்டஹாஸஞ்செய்து தன்ஸாரதியைநோக்கி, 'ஸூதா! இப்பொழுது நாம் நிமித்தமாத்திரமே. ரதங்கள் கேசவராலும் புல்குனனுலும் எரிக்கப்பட்டன. இந்திரனுடைய குமாரனும் புருஷஸ்ரேஷ்டனுமான அர்ஜுனனாலே அடிக்கப்பட்டவர்களை நாம் இப்பொழுது கொல்லுகிறோம்' என்று கூறினன். சினிகளுள் ஸ்ரேஷ்டனும் வில்லாளிகளுள் தலைவனும் சத்ருக்களை ஸம்ஹரிக்கின்றவனும் பலசாலியுமான ஸாத்யகி மகாயுத்தத்தில் அந்த ஸாரதியைநோக்கி இவ்வாறு சொல்லிவிட்டு அம்புகளைச் சீக்கிரமாக நான்குபக்கமுமிறைத்துக்கொண்டு மாம்ஸத்தில் ஆசையினால் கழுகுவருவதுபோல வந்தான். பாரதரே! சந்திரனும் சங்கும்போன்ற நிறமுள்ள குதிரைகளால் படையில் புகுந்து செல்லுகின்றவனும் ஸூர்யகிரணங்களுக்கொப்பானவனும் ரதிகர்களுள் சிறந்தவனும் பிறரால் தாங்கற்கரிய பராக்ரமமுள்ளவனும் தளராத தைரியமுடையவனும் இந்திரனுக்குச்சமமான பிரபாவமுள்ளவனும் சரத்காலத்தில் ஆகாயத்தில் விளங்கும் சூரியனைப்போன்றவனுமான அந்த ஸாத்யகியை உம்மைச்சேர்ந்த வீரர்களுடைய கூட்டங்களெல்லாம் நான்குபக்கத்திலும் தடுக்கச்சக்தியுள்ளவைகளாகவில்லை. வருகின்ற ஸாத்யகியை, கோபத்தால் நிறைந்தவனும் அதிவிசித்திரமாகப் போர் புரிகின்றவனும் வில்லைப் பிடித்தவனும் பொற்கவசத்தை யணிந்தவனுமான ஸுதர்சனனென்கிற ராஜஸ்ரேஷ்டன் பலாத்காரமாகத் தடுத்தான். பாரதரே! அவ்விருவருக்கும் மிக்க உக்கிரமான யுத்தம் நேர்ந்தது. அந்த யுத்தத்தை உம்முடைய யுத்தவீரர்களும் ஸோமகர்களும், விருத்திரன் இந்திரன் இவர்களுடைய யுத்தத்தைத் தேவர்களுடைய கூட்டங்கள் புகழ்ந்ததுபோல மிகவும் புகழ்ந்தார்கள். அரசரே! சுதர்சனன் மிக்க கூர்மையுள்ள நூற்றுக்கணக்கான அம்புகளாலே ரணகளத்தில் ஸாத்வதர்களுள் முக்கியனை ஸாத்யகியை அடித்தான். சினிபுங்கவனை ஸாத்யகியும் அந்தப் பாணங்களைத் தன்னிடம் வருவதற்குள்ளாகவே அறுத்தான். அவ்வாறுகவே இந்திரன்போன்றவனை அவன் சுதர்சனன்மீது பிரயோகித்த பாணங்களை உத்தமமான ரதத்தில் வீற்றிருக்கின்ற சுதர்சனனும் உத்தமமான பாணங்களால் இரண்டு மூன்றாகத் துண்டாக்கினன். அவன் அப்பொழுது ஸாத்யகியினுடைய பாணவேகங்களாலே அந்த அம்புகள் நாசம்பண்ணப்பட்டதைப்பார்த்து எரிக்கவிரும்பின ஸூர்யன்போலக் கோபங்கொண்டு ஸுவர்ணத்தினாலே சித்ரவேலைசெய்யப்பட்ட அம்புகளைப் பிரயோகஞ்செய்தான். மறுபடியும் அவன் காதுவரை இழுத்து விடப்பட்டவையும் கூர்மையுள்ள

வையும் நல்ல கட்டுக்களுள்ளவையும் அக்னிபோன்றவையுமான மூன்று பாணங்களாலே ஸாத்யகியினுடைய கவசத்தைப் பிளந்தான். அவைகள் அதனை யுடைத்துக்கொண்டு ஸாத்யகியின் சரீரத்தில் பிரவேசித்தன. முன்போலவே ராஜகுமாரனை சுதர்சனன் ஜ்வலிக்கின்ற வேறு அம்புகளை வில்லிற்பூட்டி நான்கம்புகளாலே வெள்ளிபோல் பிரகாசிக்கின்ற ஸாத்யகியினுடைய நான்குகுதிரைகளையும் வலிமையோடு அடித்தான். அந்தச் சுதர்சனனால் அவ்வாறு அடிக்கப்பட்டவனும் மிக்க பலமுடையவனும் இந்திரனுக்குச் சமமான வீர்யமுடையவனும் சினியினுடைய பௌத்ரனுமான ஸாத்யகியும் மிக்க தீக்ஷ்ணமான பாணஸமூகங்களாலே சுதர்சனனுடைய குதிரைகளைச் சீக்ரமாகக்கொன்று ஸிம்ம நாதஞ்செய்தான். அரசரே! சினிகளுள் உத்தமவீரனான ஸாத்யகி, பிறகு, இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கொப்பான பல்லத்தினால் சுதர்சனனது ஸாரதியினுடைய தலையையறுத்து ஊழித்தீப்போன்ற க்ஷுரமென்னும் அம்பினால் குண்டலத்தை அணிந்ததும் பூர்ண சந்திரன்போன்ற காந்தியுள்ளதும் பிரகாசிக்கின்றதுமான ஸுதர்சனனது முகத்தையும், முன் இந்திரன் யுத்தத்தில் மிக்க பலமுள்ள பலாஸுரனுடைய தலையைப் பலாத்காரமாக அறுத்ததுபோல உடலினின்றும் அறுத்தான். அரசரே! மகாத்மாவும் வேகமுள்ளவனும் யாதவ ச்ரேஷ்டனுமான அவன் அந்தராஜகுமாரனை சுதர்சனனை யுத்தத்தில் கொன்று அதிகமான ஸந்தோஷத்துடன் தேவராஜனுக்கு ஒப்பாக விளங்கினான். அரசரே! பிறகு, வீரர்களுள் சிரேஷ்டனான ஸாத்யகி பாணக்கூட்டங்களாலே உம்முடைய சேனையைத்தடுத்து எல்லா உலகத்தையும் ஆச்சரியமடைவிக்கக்கருதி நல்ல குதிரைகளோடுகூடின ரதத்தினால் அர்ஜுனனைக்குறித்தே சென்றான். ஆச்சரியகரமான அந்த ஸாத்யகியினுடைய உத்தமமான செய்கையை யுத்தவீரர்கள் ஒன்றுசேர்ந்து புகழ்ந்தார்கள். ஸாத்யகியானவன் அம்புகளுக்கிலக்கான சத்ருக்களை அக்னிபோல் அம்புகளால் எரித்தான்.

---

## நூற்றுப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகியின் பராக்ரமத்தை வர்ணித்தது.)

அரசரே! உண்மையான தைரியமுள்ளவனும் மஹாத்மாவும் சினிபுங்கவனுமான அந்த ஸாத்யகி யுத்தத்தில் கிருதவர்மாவையும் பார

த்வாஜரையும் சூரனும் நன்குபோர்புரிபவனுமான துரியோதனனையும் ஜயித்து, ஜலஸந்தனையும் சூரஸேனனென்கிற ராஜனையும் யுத்தத்தில் கொன்று, பலவகைப்பட்ட மிலேச்சர்களையும் காசிராஜகுமாரனையும் நிஷாதர்களையும் தங்கணர்களையும் கலிங்கர்களையும் [1] மகதர்களையும் கேகயர்களையும் சூரஸேனர்களையும் மலைநாட்டுவீரர்களையும் காம்போஜர்களையும் யவனர்களையும் வஸாதிகளையும் சிபிகளையும் கோஸலர்களையும் மகதர்களையும் சித்திரர்களுடன்கூடின ராக்ஷஸர்களையும் மற்ற வீரர்களையும் போரில்கொன்று யுத்தபூமியிற்சென்றான். மன்னரே! அந்த ஸாத்யகி மயிர்களாகிற பாசிக்கொத்துக்களும் புல்தரைகளுமுள்ளதும் சக்திகளாகிற முதலைகளால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டதும் குடைகளாகிற அன்னப்பறவைகளால் விளங்குகிறதும் கோரமாயிருப்பதும் பயந்தவர்களாலே எப்பொழுதும் தாண்டமுடியாததும் சூரர்களான ஜனங்களிடத்தினின்று பெருகுவதுமான ரக்தவெள்ளமயமானநதியை உண்டுபண்ணி ஸந்தோஷத்தோடு மறுபடியும் ஸாரதியைநோக்கி, 'அப்பா! த்வஜங்களும் யானைகளும் குதிரைகளும் நிறைந்ததும் அம்புகளும் சக்திகளுமாகிற அலைவரிசையும் கத்திகளாகிறமீன்களும் கதாயுதங்களாகிற முதலைகளுமுள்ளதும் சூரர்களுடைய ஆயுதங்களாலுண்டான பேரொலியோடுகூடினதும் பிராணன்களைக் கவர்கின்றதும் பயங்கரமானதும் நான்குவிதவாத்யமுழக்கங்களால் ஒலியுள்ளதாகச்செய்யப்பட்டதும் சூரர்களுக்கு இனிது [2] நெருங்கக்கூடியதும் பயந்தவர்களால் தொடமுடியாததும் பிறரால் தாண்டத்தகாததுமான துரோணருடைய படையாகிற பெருங்கடலை நாம் தாண்டிவிட்டோம். இந்தயுத்தபூமியில் ராக்ஷஸர்கள்போன்ற ஜலஸந்தனுடைய படையிலுள்ளவர்களால் சூழப்பட்ட இந்தத் துரோணசேனையைத்தவிர மிச்சமிருக்கிற மற்றச்சேனையை, தாண்டத்தக்கதும் ஸ்வல்பஜலமுள்ளதுமான சிற்றாற்றைப்போல எண்ணுகிறேன். குதிரைகளை அலமலப்பில்லாமல் ஓட்டு. நான் இப்பொழுது ஸவ்யஸாசியைக் கையில்கிடைத்தவனாக எண்ணுகிறேன். யுத்தத்தில் தாங்கமுடியாத துரோணரையும் யுத்தவீரர்களுள்சிறந்த கிருதவர்மாவையும் பரிவாரங்களோடு ஜயித்துவிட்டமையால் தனஞ்சயனை அடையப்பட்டவனென்றே எண்ணுகிறேன். காட்டில் உலர்ந்தபுற்களடர்ந்தஇடத்தைத்தக்கொளுத்துகிற ஜ்வலிக்கின்றநெருப்புக்குப் பயமுண்டாகாததுபோலப் பலவிதமான சைனியங்களைக்கண்டு பயம் எனக்குண்

---

[1] இது இரண்டுமுறை வருகிறது.

[2] 'ஸுகஸம்ஸ்பர்சம்' என்பது மூலம். 'அஸுகஸ்பர்சம்' என்பது வேறு பாடம்.

டாகவில்லை. பாண்டவர்களுள் முக்கியனான கிரீடிசென்ற போர்க்களமானது விழுந்திருக்கின்றகாலாட்களாலும் குதிரைகளாலும் ரதங்களாலும் யானைக்கூட்டங்களாலும் மேடுபள்ளமுள்ளதாகச்செய்யப்பட்டிருப்பதைப்பார். ஸாரதியே! மகாத்மாவான அந்த அர்ஜுனனாலே தோல்வியடைந்த அந்தச்சேனையானது, ரதங்களோடும் நான்குபக்கமும் ஓடுகின்றயானைகளோடும் குதிரைகளோடும் ஓடுகின்றது. சிவப்புநிறமுள்ள பட்டுக்கொப்பான இந்தப்புழுதியும் மேலேதூற்றப்படுகிறது. வாஸுதேவரை ஸாரதியாகவுடைய அர்ஜுனன் சமீபத்திலிருக்கிறானென்று நான் எண்ணுகிறேன். அளவற்றவல்லமைபொருந்தியதும் நாணொலி செய்யப்படுகின்றதுமான காண்டீவத்தினுடையசப்தமானது ரணகளத்தில் கர்ஜிக்கின்றமேகத்தினுடைய இடிமுழக்கம்போல இதோ கேட்கப்படுகின்றது. கிரீடி ஸைந்தவனுக்குச் சமீபத்திலிருக்கிறானென்று நான் நினைக்கிறேன். ஸமுத்ரத்தினுடைய சப்தத்திற்கொப்பான ஸைநிகர்களுடையசப்தம் அவ்விதமாகக் கேட்கப்படுகிறது. நன்னிமித்தங்கள் என்னால்காணப்படுகின்றபடியால், சூரியன்அஸ்தமிப்பதற்குள் அர்ஜுனன் ஸைந்தவனைக் கொல்லுவான். எந்தஇடத்தில் பகைவனுடைய சேனையானது இருக்கிறதோ, எந்தஇடத்தில் வீரனுறைகளுள்ளவர்களும் துர்யோதனனைத் தலைவனாகக்கொண்டவர்களும் கவசம்பூண்டவர்களும் குரூரமான செய்கைகளுள்ளவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான இந்தக்காம்போஜர்களும் அம்புகளேயும் விற்களேயும் தரித்தவர்களும் அடிக்கிறவர்களுமான யவனர்களும் சகர்களும் கிராதர்களும் தாதர்களும் பர்ப்பரர்களும் தாம்ரலிப்தர்களும் பற்பலஆயுதங்களைக் கையிற்கொண்ட மற்றும்பலமிலேச்சர்களும் ஆகியஎல்லோரும் யுத்தத்தைவிரும்பி என்னையே எதிர்பார்த்து நிற்கிறார்களோ அவ்விடத்திற்குக் குதிரைகளைத் தேறுதலடையும்படிசெய்துகொண்டு மெதுவாகச் செல். ரதங்களோடும் யானைகளோடும் குதிரைகளோடும் காலாட்களோடுங்கூடியவர்களான இந்தவீரர்களை யுத்தத்திற்கொன்று மஹாகோரமான இந்தத் துர்க்கத்தை நான் தாண்டிவிட்டேனென்றே நீ நிச்சயமாக எண்ணு' என்று கூறினான்.

தேர்ப்பாகன், 'உண்மையானபராக்ரமமுள்ளவரே! வார்ஷ்ணேயரே! எனக்குப்பயமில்லை. மகாபுஜங்களுள்ளவரே! உமக்கெதிரில் ஜமதக்னிகுமாரரான பரசுராமராவது ரதிகர்களுள் சிரேஷ்டரான துரோணராவது கிருபராவது மத்ரராஜனாவது கோபங்கொண்டுநின்றாலும் உம்மை அண்டியிருக்கின்றவனுக்குப் பயமுண்டாகாது. பகைவர்களை அழிப்பவரே! உம்மால் யுத்தகளத்தில் கவசந்தரித்தவர்களும் குரூரமானசெய்

கையுடையவர்களும் யுத்தத்தில கெட்டமதங்கொண்டவர்களுமான அனேக காம்போஜர்களும் அம்புகளையும் விற்களையும் தரித்தவர்களும் நன்றாக அடிப்பவர்களுமான யவனர்களும் சகர்களும் கிராதர்களும் தரதர்களும் பர்ப்பரர்களும் தாம்ரலிப்தர்களும் பற்பலவிதமான ஆயுதங்களைக் கையில் ஏந்தியவர்களான மற்றுமனேகம்லேச்சர்களும் ஜயிக்கப் பட்டார்கள். வீரரே! எனக்கு எவ்விதக் கஷ்டநிலைமையிலும் எவ்விதப் பயமும் இதற்குமுன் உண்டானதில்லை. அவ்வாறிருக்க, பசுவின்குளம்படிபோன்ற இந்தயுத்தத்தையடைந்து நான் எப்படி பயப்படுவேன்? ஆயுஷ்மன்! உம்மை எந்தவழியினால் தனஞ்சயனையடையும்படி செய்விப்பேன்? வார்ஷ்ணேயரே! எவர்களின்மீது நீர்கோபங்கொண்டிருக்கின்றீர்? எவர்களை மிருத்யு நெருங்கியிருக்கின்றான்? எவர்களுடைய சேனைக்கூட்டத்தை உமதுமனமானது கொல்லவிரும்புகிறது? [1] காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானவரும் பேராற்றலுள்ளவருமான நீர் போரில் பகைவரைமிஞ்சுவதைக்கண்டு யுத்தகளத்தில் எவர்கள் ஓடப்போகிறார்கள்? மிக்ககைவன்மையுள்ளவரே! வைவஸ்வதராஜன் எவர்களை இப்பொழுது நினைக்கிறான்?' என்றுசொல்ல, ஸாத்யகி, 'ஸூத! இந்திரன் அஸுரர்களைக்கொல்வதுபோல இந்த மொட்டைத்தலையர்களைக் கொல்லப்போகிறேன். இதனால் பிரதிஜ்ஞையை நிறைவேற்றப்போகிறேன். என்னைக் காம்போஜர்களிடமே கொண்டுபோ. [2] இப்பொழுது இவர்களைக்கொன்றுவிட்டு ப்ரியனான அர்ஜுனனிடம் செல்வேன். இப்பொழுது துரியோதனனும் மற்றக்கௌரவர்களும் என்னுடையவீர்யத்தைப் பார்க்கப்போகிறார்கள். ஸூத! இப்பொழுது இந்தமொட்டையர்களுடையசேனையும் மற்றஎல்லாச்சேனைகளும் அடிக்கடி அழிக்கப்படுகையில் யுத்தத்தில் பிளக்கப்படுகிற கௌரவசேனையினுடைய பலவாறானசப்தத்தைக்கேட்டுத் துரியோதனன் மிக்கவருத்தமடையப்போகிறான். மகாத்மாவும் பாண்டவர்களுள்முக்கியனுமான அர்ஜுனனுடைய உபாத்திமையினால் கற்பிக்கப்பட்டவழியை இப்பொழுது யுத்தத்தில் காண்பிப்பேன். இப்பொழுது என்பாணங்களால் ஆயிரக்கணக்கான முக்கியமான யுத்தவீரர்கள் கொல்லப்பட்டதைக்கண்டு துரியோதனராஜன் பச்சாத்தாபத்தை அடையப்போகிறான். ஹஸ்தலாகவமுள்ளவனும் உத்தமமான அம்புகளைப் பிரயோகிக்கின்றவனுமான என்னுடைய கொள்ளிவட்டம்போன்றவில்லைக் கௌரவர்கள் இப்பொழுது பார்க்கப் போகிறார்கள். என்பாணங்களாலே நிறைக்கப்பட்ட அங்கங்களுள்ளவர்

[1] 'காலாந்தகயமோபமம்' என்பது மூலம். 'யுகாந்தகாலத்து யமனுக்கொப்பானவர்' என்பது இங்கிலீஷ்மொழிபெயர்ப்பு. [2] வேறுபாடம்.

களும் ரக்தத்தை அடிக்கடி பெருக்குகிறவர்களுமான ஸைனிகர்க ளுடைய வதத்தைப்பார்த்துத் துரியோதனன் மனவருத்தமடையப் போகிறான். இன்றைக்கு இப்பொழுது யான் மிக்ககோபங்கொண்டு சிறந்தவீரர்களையெல்லாம் கொல்லுகையில், துரியோதனன் இவ்வுலகத் தை இரண்டுபேல்குனனுள்ளதாக எண்ணப்போகிறான். இப்பொழுது யுத்தத்தில் என்னால் ஆயிரக்கணக்கான அரசர்கள் கொல்லப்பட்டதைக் கண்டு துரியோதனராஜன் இப்பெரும்போர்விஷயமாக மனவருத்த மடையப்போகிறான். இப்பொழுது ஆயிரக்கணக்கான அரசர்களைக் கொன்று மகாத்மாக்களான பாண்டவர்களிடமுள்ள நேசத்தையும் பக் தியையும் அரசர்களிடத்தில் காண்பிக்கப்போகிறேன். கௌரவர்கள் என்னுடையபலத்தையும் வீர்யத்தையும் நன்றியறிவையும் அறிந்து கொள்வார்கள்' என்றுசொன்னான்.

இவ்வாறு சொல்லக்கேட்டஸாரதி, அப்பொழுது பழக்கப்பட்ட வைகளும் நன்குஇழுப்பவைகளும் சந்திரனுக்கொப்பானவைகளுமான குதிரைகளை நன்றாகஓட்டினான். மனமும் வாயுவும்போன்ற வேகமுள்ள அந்தச்சிறந்தகுதிரைகள் ஆகாயத்தைப்பருகுவனபோல (பாய்ந்தோடி) யுயுதானனை யவனர்களைச் சீக்கிரமாக அடையும்படிசெய்தன. படைக ளில் பின்வாங்காத ஸாத்யகியைக் கைதேர்ந்தவர்களான அனேகம் யவ னர்கள் எதிர்த்து அம்புமழைகளைப் பொழிந்தார்கள். அரசரே! பிறகு, வேகமுள்ளஸாத்யகி அவர்களுடைய அம்புகளையும் அஸ்திரங்களையும் கணுக்கள்பதிவாயுள்ள அம்புகளாலே அறுத்தான். ஆகையால், அந்த அம்புகள் ஸாத்யகியை நாடவில்லை. பொன்னாலாகிய அடிப்பாகமுள்ள வைகளும் நன்குதீட்டப்பட்டவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளு மான அம்புகளாலே உக்ரமானஸாத்யகி யவனர்களுடைய தலைகளையும் கைகளையும் அறுத்தான். பாணங்கள் சிவந்தஇரும்பினாலும் வெண்கலத் தினாலும் செய்யப்பட்டிருக்கிற கவசங்களை நாற்புறமுமுடைத்து அவர் களுடைய தேகங்களையும்பிளந்து பூமியையடைந்தன. யுத்தத்தில் வீர னை ஸாத்யகியினாலே கொல்லப்படுகின்ற அந்தமிலேச்சர்கள் நூற்றுக் கணக்காக உயிரையிழந்து அப்பொழுது யுத்தபூமியில் விழுந்தார்கள். ஸாத்யகி காதுவரையில் நன்றாக இழுத்துவிடப்பட்டவைகளும் தொடர் ச்சியாகப்பிரயோகிக்கப்படுகின்றவைகளுமான அம்புகளால் யவனர்களை ஐவர், அறுவர், எழுவர், எண்மராகக்கொன்றான். அரசரே! அப்பொ ழுது அவன் யுத்தபூமியை ஆயிரக்கணக்கான காம்போஜர்களாலும் சகர் களாலும் சபரர்களாலும் கிராதர்களாலும் பர்ப்பரர்களாலும் (அருகில்)

செல்லத்தகாத தோற்றமுள்ளனவும் மாம்ஸங்களாலும் ரத்தங்களாலும் சேறுள்ளதுமாகச் செய்துகொண்டு உம்முடைய ஸைனியத்தை நாசஞ் செய்தான். தலைப்பாகைகளையுடையவைகளும் மயிர்கத்தரிக்கப்பட்டவைகளும் நீண்ட தாடிகளுள்ளவைகளுமான தஸ்யுக்களுடைய தலைகளால் பூமியானது சிறகிழந்த பறவைகளால் வியாபிக்கப்பட்டதுபோலாயிற்று. எல்லா அங்கங்களும் ரத்தத்தினால் நனைக்கப்பட்ட அந்தக் கபந்தங்களாலே சூழப்பட்ட யுத்தபூமி முழுவதும் அப்பொழுது சிவந்த மேகங்களால் சூழப்பட்ட ஆகாயம்போல் விளங்கியது. ஸாத்வதனால் வஜ்ராயுதமும் இடியும்போலத் தாக்குபவைகளும் நல்ல கணுக்களையுடையவைகளுமான அம்புகளால் கொல்லப்பட்ட அந்த வீரர்கள் யுத்தபூமியை நாலுபக்கமும் நிரப்பினார்கள். மகாராஜரே! ஸாத்யகி கணுக்கள் உட்படிந்துள்ள அம்புகளாலே அந்த யவனர்களுடைய அஸ்திரங்களையும் பாணங்களையும் கழுத்துக்களையும் அறுத்தான். யுயுதானனால் பிரயோகிக்கப்படுகின்றவைகளும் கணுக்கள் படிந்துள்ளவைகளுமான அந்த அம்புகள் அவர்களுடைய தேகத்தைப்பிளந்து பூமியில் விழுந்தன. யுத்தகளத்தில் விருஷ்ணிவீரனாலே கொல்லப்படுகின்ற வீரர்களான அந்தக் காம்போஜர்கள் அனுஸரித்து வருகின்ற காலாட்களுடன் சஸ்த்ரங்களாலடிக்கப்பட்டுப் பூமியில் விழுந்தார்கள். பாரதரே! அறுக்கப்பட்ட காம்போஜர்களுடைய கைகளாலும் யவனர்களுடைய கைகளாலும் யுத்தபூமியானது ஆங்காங்கு ஐந்துதலை நாகங்களால் சூழப்பட்டதுபோல் விளங்கியது. மகாராஜரே! யுத்தத்தில் கவசம்பூண்டவர்களும் மிஞ்சியிருப்பவர்களுமானசிலர் ஸாத்யகியினால் தோல்வியடைந்தவர்களும் கஷ்டப்படும் உயிருள்ளவர்களும் பிரஜ்ஞையிழந்தவர்களுமாகி ஜயிக்கப்பட்டார்கள். அவர்கள் குதிரைகளைக் குதிகால்களாலும் கசைகளாலும் அடித்துக்கொண்டு மிக்க வேகத்துடன் பயத்தினால் நான்குபக்கங்களிலும் ஓடினார்கள். பாரதரே! உண்மையான பராக்ரமமுள்ளவனும் ஆண்மையிற் சிறந்தவனுமான அந்த ஸாத்யகி யுத்தத்தில் ஜயிக்கமுடியாத காம்போஜ ஸேனையையும் யவனர்கள் சகர்கள் இவர்களின் பெரியசேனையையுந் துரத்தி உத்ஸாகத்தோடு உம்மைச்சேர்ந்தவர்களையும் ஜயித்து, பிறகு, ஸாரதியை நோக்கி, 'ஸூத! சீக்கிரம் செல்' என்று ஏவினான். ஒருவராலும் முன்புசெய்யப்படாததான அந்த ஸாத்யகியினுடைய யுத்தத்தில் நடந்த அந்தச் செய்கையைக்கண்டு கந்தர்வர்களும் சாரணர்களும் மிகவும் புகழ்ந்தார்கள்; பிரஜைகளுக்கு நாதரே! அர்ஜுனனுக்குப் பின் ரக்ஷகனைச் செல்கின்ற ஸாத்யகியைக்கண்டு சாரணர்கள் ஸந்தோஷமடைந்தார்கள்; உம்மைச்சேர்ந்தவர்களும் புகழ்ந்தார்கள்.

---

## ஐம்பத்திருபதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகியினது யுத்தத்தை வர்ணித்தது.)

ரதிகர்களுள் உத்தமனான யுயுதானன் யவனர்களையும் காம்போஜர்களையும் ஜயித்துவிட்டுப் பிறகு, உமது சைனியத்தின் நடுவோடு அர்ஜுனனை அடைந்தான். கோரப்பற்கள்போன்ற அம்புகளையுடையவனும் விசித்ரமான கவசத்தினுடைய காந்திபொருந்தியவனும் நரசிரேஷ்டனுமான அந்த யுயுதானன் புலியானது மான்கூட்டத்தை மோப்பம்பிடிப்பதுபோல் மோப்பம்பிடித்துச்சென்று உம்முடைய சைனியத்தைப் பயத்தையடையும்படி செய்தான். வழிகளில் தேரோடு செல்பவனும், பின்புறத்தில் பொன்னால் அலங்கரிக்கப் பெற்றதும் அதிவேகமுள்ளதும் பொற்புள்ளிகள் நிறைந்ததுமான வில்லை அதிகமாகச் சுழற்றுகிறவனும், பொன்னாலாகிய தோள்வளைகளும் தலைப்பாகையுமுள்ளவனும், பொற்கவசத்தினால் மூடப்பட்டவனும், ஸ்வர்ணமயமான த்வஜத்தையும் வில்லையுமுடையவனுமான அந்தச் சூரன், மேருமலையினுடைய கொடுமுடிபோல விளங்கினான். (வட்டமாயிருக்கிற) வில்லாகிற மண்டலத்துடன் கூடியவனும், தேஜஸாகிற பிரகாசிக்கின்ற கிரணங்களுள்ளவனுமான நரசூரியன் சரத்காலத்தில் தோன்றிய சூரியன்போல யுத்தத்தில் விளங்கினான். திமிலையுடைய காளைபோன்ற வலிமையுடையவனும் ரிஷபத்தினுடைய கண்கள்போன்ற கண்களையுடையவனுமான அந்த நரவிருஷபன் உம்முடைய படைவீரர்களினிடையில் பசுக்களினிடையே காளைபோல் விளங்கினான்.

மதயானைபோன்றவனும் மதயானைபோல நடக்கிறவனும் யானைக்கூட்டங்களினிடையில் மதயானை நிற்பதுபோல நிற்கின்றவனுமான அந்த ஸாத்யகியை வேடர்கள்போல உம்மைச்சேர்ந்தவர்கள் கொல்லக்கருதி அருகில் ஓடிவந்தார்கள். அரசரே! யுத்தத்தில் உம்முடைய குமாரர்கள் ஸாத்யகியை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். துரோணருடையபடையையும் தாண்டமுடியாத கிருதவர்மாவினுடைய படையையும் தாண்டி, ஜலஸந்தனாகிற சமுத்திரத்தையும் காம்போஜர்களுடைய சேனையாகிற ஆற்றையும் தாண்டிக் கிருதவர்மாவாகிற முதலையினிடமிருந்து விடுபட்டவனும் சைனியமாகிற கடலைக் கடந்தவனுமான ஸாத்யகியை உம்மைச்சேர்ந்த தேராளிகள் பிருந்தகேயத்துடன் சூழ்ந்துகொண்டார்கள். செல்லுகிற ஸாத்யகியைத் துரியோதனன்,

சித்ரஸேனன், துச்சாஸனன், விவிம்சதி, சகுனி, துஸ்ஸஹன், யௌவன முடையவனான துர்த்தர்ஷணன், க்ரதன் இவர்களும் சஸ்திரங்களை யுடையவர்களும் ஒருவராலும் நெருங்கமுடியாதவர்களும் கோபங் கொண்டவர்களுமான மற்ற அனேக சூரர்களும் பின்தொடர்ந்தார்கள். ஐயா! பிறகு, பர்வகாலத்தில் காற்றினால் உண்டுபண்ணப்பட்ட வேகத் துடன்கூடின ஸமுத்திரத்தினுடைய கோஷம்போல உம்முடைய சைனி யத்தினுடைய பேரொலியானது உண்டாயிற்று. எதிர்த்துவருகின்ற அவர்களெல்லாரையும் கண்டு சினிபுங்கவன் அட்டஹாஸஞ்செய்து கொண்டு ஸாரதியை நோக்கி, 'ஸாரதியே! மெதுவாகச் செல். தேர் களும் யானைகளும் குதிரைகளும காலாட்களுமுள்ளதும் நன்குகிளப் பப்பட்டதும் பெரிதுமான இந்தக் கௌரவசேனையானது எல்லாத் திக் குக்களையும் ரதங்களுடைய சத்தங்களால் எதிரொலியிடும்படி செய்து கொண்டு என்னையே எதிர்த்து விரைவாக வருகிறது. ஸூத! மகா யுத்தத்தில் பூமியையும் ஆகாயத்தையும் ஸமுத்ரங்களையும் நடுங்கும்படி செய்துகொண்டு பௌர்ணமாஸியில் பொங்கிவருகின்ற சமுத்திரத்தைக் கரையானது தடுப்பதுபோல் இந்த ஸேனாஸமுத்ரத்தை யான் தடுக்கப் போகிறேன். ஸூத! மகாயுத்தத்தில் இந்திரனுடைய பராக்ரமம் போன்ற என்னுடைய பராக்கிரமத்தைப் பார். இதோ சத்ருக்களு டைய சைனியங்களைக் கூர்மையான அம்புகளால் பொடிசெய்கிறேன். யானைகளும் காலாட்களும குதிரைகளும் தேர்களும் நெருப்புக்கொப் பான என்னுடைய பாணங்களாலே தேகங்களிலடிக்கப்பட்டு யுத்தத் தில் ஆயிரமாயிரமாகக் கொல்லப்படுவதைப் பார்' என்று கூறினான். இவ்வாறு சொல்லுகிறவனும் அளவற்ற தேஜஸுள்ளவனுமான அந்த ஸாத்யகியினருகில் அந்தப் படைவீரர்கள் யுத்தஞ்செய்யக் கருதி, 'கொல்; நான்குபக்கங்களிலும் ஓடி வா; நில்; பார்; பார்' என்று சொல்லிக்கொண்டு விரைவாக வந்தார்கள். அஸ்திர லாகவ முள்ளவனும், விசித்திரமாக யுத்தஞ்செய்கிறவனும், நன்றாக அடிக் கிறவனும், சினிபுங்கவனுமான ஸாத்யகி, இவ்வாறுசொல்லுகின்ற அவ்வீரர்களையும் முந்நூறு குதிரைகளையும் நானூறு யானை களையும் கூர்மையான அம்புகளால் கொன்றான். அந்த ஸாத்ய கிக்கும் அந்த வில்லாளிகளுக்கும் தேவாஸுரர்களுடைய யுத்தத் திற்கொப்பானதும், ஜனங்களுக்கு நாசத்தை உண்டாக்கக்கூடியது மான நெருங்கினயுத்தம் நடந்தது. ஐயா! சினியினுடைய பௌத்திர னான ஸாத்யகி ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளால் மேகசமூகங்க ளுக்கொப்பான உம்முடைய புத்ரனுடைய படையை எதிர்த்தான். மகா

ராஜரே! யுத்தத்தில் அம்புத்திரள்களாலே மறைக்கப்படுகிறவனும் வீர்யமுள்ளவனுமான அந்த ஸாத்யகி பயப்படாமல் உம்மைச்சார்ந்த வர்களான அனேகர்களைக்கொன்றான். ராஜசிரேஷ்டரே! அவ்விடத் தில் மிக்கபெரிதான ஆச்சரியத்தை நான்கண்டேன். பிரபுவே! ஸாத் யகியினுடைய ஒருபாணமாவது வீணாகவில்லை. ரதங்களாலும், யானை களாலும், குதிரைகளாலும் வியாபிக்கப்பட்டதும் காலாட்களாகிற அலைகளாலே நிறைந்ததுமான ஸைநியமாகிற பெருங்கடலானது ஸைனேயனாகிற கரையை அடைந்து நின்றது. பயமடைந்த மனிதர்களை யும், யானைகளையும், குதிரைகளையுமுடையதான அந்தக்கௌரவசேனை யானது அடிக்கடி ஸாத்யகியின் அம்புகளால் நான்குபக்கங்களிலும் அடிக்கப்படுவதாகி ஆங்காங்கு குளிரினாலே பீடிக்கப்பட்டுள்ள பசுக் கள்போலச் சுற்றிவந்தது. அந்தயுத்தகளத்தில் யுயுதானனுடைய அம் புகளால் அடிக்கப்படாத காலாளையும் ரதத்தையும் யானையையும் குதிரைவீரனையும் அவ்வாறே குதிரையையும் நான்காணவில்லை. ஸாத் யகி ஸைநியங்களுக்குச் செய்ததுபோன்ற நாசத்தை அந்த யுத்த களத்தில் பல்குனனும் செய்யவில்லை. புருஷசிரேஷ்டனான சினியி னுடைய பௌத்திரன் பயமற்றவனும் லாகவமுள்ளவனும் திறமையை நன்றாக வெளிப்படுத்துகிறவனுமாகி அர்ஜுனனைக்காட்டிலும் மேலா கப் போர்புரிந்தான். பிறகு, துரியோதனராஜன் மூன்றம்புகளாலே ஸாத்யகியினுடைய ஸாரதியையும் கூர்மையுள்ள நான்கம்புகளாலே நான்குகுதிரைகளையும் அடித்தான். துச்சாஸனன் சினிபுங்கவனான ஸாத்யகியை மூன்றம்புகளாலும் மறுபடி எட்டம்புகளாலும் அடித் துப் பதினாறம்புகளாலும் அடித்தான். சகுனியானவன் இருபத்தைந் துபாணங்களாலும் சித்ரஸேனன் ஐந்துபாணங்களாலும் துஸ்ஸஹன் பதினைந்துபாணங்களாலும் ஸாத்யகியை மார்பிலடித்தார்கள். மகாரா ஜரே! அவ்வாறு பாணங்களால் மிகஅடிக்கப்பட்ட அந்தவிருஷ்ணி வீரன் அதிகமாகச்சிரித்துக்கொண்டு அவர்களெல்லோரையும் மும் மூன்று பாணங்களாலடித்தான்.

லாகவமுள்ளவனும் பராக்ரமசாலியுமான ஸாத்யகி நன்றாகத் தீட்டப்பட்ட அம்புகளால் சத்துருக்களை நன்றாக அடித்துப் பருந்து போல் யுத்தத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு சகுனியினுடைய வில்லையறுத் துக் கையுறையையுமறுத்துத் துரியோதனனை மூன்றுபாணங்களாலே மார்பிலடித்துச் சித்ரஸேனனை நூறம்புகளாலும் துஸ்ஸஹனைப்பத்துப் பாணங்களாலும் துச்சாஸனனை இருபதுபாணங்களாலும் அடித்தான். பிரஜைகளுக்கு நாதரே! பிறகு, உம்முடைய மைத்துனனான சகுனி

வேறு தனுஸ்ஸையெடுத்து ஸாத்யகியை எட்டுப்பாணங்களாலடித்து மறு படியும் ஐந்துபாணங்களாலடித்தான். அரசரே! துச்சாஸனன் பத்துப் பாணங்களாலும், துஸ்ஸஹன் மூன்றுபாணங்களாலும், துர்முகன் பன்னிரண்டு பாணங்களாலும், ஸாத்யகியை அடித்தார்கள். பாரதரே! துரியோதனன் எழுபத்துமூன்று பாணங்களால் ஸாத்யகியை யடித்துப் பின் கூர்மையுள்ள மூன்றம்புகளால் அவனுடைய ஸாரதியையும் அடித்தான். ஸாத்யகி ஒன்றுகூடி முயற்சிசெய்கிற அமமகாரதர்களெல்லோரையும் திரும்பவும் ஐந்தைந்துபாணங்களால் அடித்தான். பின்பு, ரதிகர்களுள் சிரேஷ்டனான அந்த ஸாத்யகி உமது புத்திரனுடைய ஸாரதியை ஒரு பல்லத்தால் விரைவாக அடித்தான். அடிக்கப்பட்ட ஸாரதி பூமியில் விழுந்தான். பிரபுவே! அந்த ஸாரதிவிழுந்தவுடன் உமது குமாரனுடைய ரதமானது காற்றுப்போல் ஓடுகின்ற குதிரைகளாலே யுத்த பூமியினின்று இழுத்துக்கொண்டு போகப்பட்டது. மன்னரே! பிரஜாநாதரே! பின்பு உம்முடைய குமாரர்களும் ஸைனிகர்களும் அரசனுடைய ரதத்தைப்பார்த்து நூற்றுக்கணக்காகப் பயந்து ஓடினார்கள். பாரதரே! ஸாத்யகி அந்த ஸேனை ஓடுவதைப்பார்த்துப் பொன்னாலாகிய அடிப்பாகமுள்ளவைகளும், சாணையில் தீட்டப்பட்டவைகளும், கூரியவைகளுமான அம்புகளை இறைத்தான். வேந்தரே! உம்முடைய ஆயிரக்கணக்கான எல்லாச் சைனியங்களையும் ஓடும்படிசெய்து ஸாத்யகி அர்ச்சுனனுடைய ரதத்தைநோக்கிச் சென்றான். ஐயா! செல்லுகின்ற புஜபலமுள்ள ஸாத்யகியை உம்முடைய வீரர்கள் பார்த்தும் பாராதது போலிருந்துகொண்டு வேறு காரியத்தைச் செய்தார்கள். அம்புகளை எடுக்கின்றவனும், ஸாரதியையுந் தன்னையும் பாதுகாப்பவனுமான ஸாத்யகியை உம்மைச்சேர்ந்தவர்கள் புகழ்ந்தார்கள்" என்று கூறினான்.

---

## நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகியின் யுத்தத்தை வர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸஞ்சய! பெரியதான சேனையை நாசஞ் செய்துவிட்டு அர்ஜுனனை நோக்கிச் செல்லுகின்ற ஸாத்யகியை வெட்கமில்லாதவர்களான அந்த என்னுடைய புத்திரர்கள் என்ன செய்தார்கள்? ஸவ்யஸாசியினுடைய செய்கையைப்போன்ற சைனேயனுடைய செய்கையைக்கண்டு மரிக்கப்போகிறவர்களான இவர்களுக்கு

அப்பொழுது யுத்தத்தில் எவ்வாறு தைரியமுண்டாயிற்று? சேனைகளினிடையில் தோல்வியடைவிக்கப்பட்டவர்களான அவர்கள் க்ஷத்திரிய தர்மத்தைப்பற்றி என்ன சொல்லுவார்கள்? மகாகீர்த்திமானான ஸாத்யகி யுத்தத்தில் எவ்வாறு தாண்டினான்? ஸஞ்சய! அந்த யுத்தகளத்தில் என்புத்திரர்கள் உயிரோடிருக்கையில் ஸாத்யகி எவ்வாறு (அர்ஜுனனை) நோக்கிச் சென்றான்? அதனை எனக்குச் சொல்வாயாக. அப்பா! ஒருவனுக்கு மகாரதர்களான அனேக சத்துருக்களோடு நேர்ந்த இந்த மிக்க ஆச்சரியமான யுத்தத்தை யான் உன்னிடத்தினின்றுகேட்கிறேன். அந்த யுத்தத்தில் ஸாத்யகியினாலே மகாரதர்கள் கொல்லப்பட்டார்கள். ஆதலால், பாக்யஹீனனான புத்திரனைக் குறித்துக் (காலம்) விபரீதமாயிருக்கிறதென்று நான் எண்ணுகிறேன். ஸஞ்சய! பாண்டவர்களெல்லோருமிருக்கட்டும். கோபங்கொண்டவனான யுயுதானன் ஒருவனுக்கே துர்யோதனனுடைய ஸைன்யம் போதாது. யுயுதானன் யுத்தத்தில் ஸமர்த்தரும் விசித்திரமாகப் போர்புரிகின்றவருமான துரோணரை ஜயித்துப் பசுக்கூட்டங்களைச் சிங்கம் கொல்வதுபோல என்பிள்ளைகளைக் கொல்லப்போகிறான். யுத்தத்தில் அந்தப்புருஷசிரேஷ்டனான யுயுதானன், முயற்சியுடையவர்களும் அனேகர்களுமான கிருதவர்மாமுதலான சூரர்களாலே கொல்லமுடியாதவன். பெருங்கீர்த்தியுடைய சினியினுடைய பௌத்ரன்செய்த இந்த யுத்தம் போன்ற யுத்தத்தைப் பல்குனனும் ரணகளத்தில் செய்யவில்லை" என்றுகூற, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதரே! அரசரே! உம்முடைய துராலோசனையினாலும் துரியோதனனுடைய செய்கையினாலும் ஸம்பவித்ததைச் சொல்லப் போகிறேன். அதனை ஜாக்ரதையாயிருந்து கேளும். அந்த வீரர்கள் பரஸ்பரம் சபதங்களைச்செய்துகொண்டு யுத்தத்தில் மிக்க குரூரமான எண்ணத்தைக்கொண்டு உம்முடையபுத்ரனது கட்டளையினாலே மறுபடியும் திரும்பினார்கள். ராஜேந்திரரே! மூவாயிரம் குதிரைவீரர்களும் துரியோதனனைத் தலைமையாகக்கொண்ட சகர்களும், காம்போஜர்களும், பாஹ்லிகர்களும், யவனர்களும், [1]பாரதர்களும், குணிந்தர்களும், தங்கணர்களும், அம்பஷ்டர்களும், பார்ப்பரர்களும், பைசாசர்களும், கோபமுற்றவர்களும் கற்களைக் கையிற்கொண்டவர்களுமான மலைநாடர்களும் விட்டிற்பூச்சிகள் நெருப்பை எதிர்த்து ஓடிவருவதுபோலச் சைனியத்தைக்குறித்து எதிர்த்து ஓடிவந்தார்கள். அர

[1]. இவர்கள் வேறு.

ஈரே! கற்களால் யுத்தஞ்செய்கின்றவர்களான மலைநாட்டு வீரர்களுஞ் சூரர்களான ஐந்நூறு ரதிகர்கள்சேர்ந்து ஸாத்யகியை எதிர்த்தார்கள். பிறகு, மகாரதர்கள் ஆயிரம்ரதங்களோடும், நூறுமகாரதர்களோடும், ஆயிரம்யானைகளோடும், இரண்டாயிரம்குதிரைகளோடும், பற்பலவித மான பாணவர்ஷங்களைப் பிரயோகித்துக்கொண்டு சைனேயனை எதிர்த் தோடிவந்தார்கள்; கணக்கிலடங்காத காலாட்களும் எதிர்த்து வந்தார் கள். பாரதரே! மகாராஜரே! 'இவனைக் கொல்லுங்கள்' என்று அவர்க ளனைவரையும் தூண்டுகின்றவனாகித் துச்சாஸனன் ஸாத்யகியைத் தடுத்தான். அப்பொழுது ஸாத்யகி ஒருவனாகநின்றுகொண்டு அனேக வீரர்களோடு கலங்காமல் யுத்தம்பண்ணினமையால் சைனேயனுடைய செய்கையைப் பெரிய ஆச்சரியமென்றுகண்டோம். ஸாத்யகி தேர்ப்படை யையும் யானைப்படையையும் எல்லாக் குதிரைவீரர்களையும் தஸ்யுக்க ளனைவரையும் கொன்றான். அந்த யுத்தத்தில் நொறுக்கப்பட்ட சக்ரங்க ளாலும் முறிக்கப்பட்ட உத்தம ஆயுதங்களாலும் பலவாறு ஒடிக்கப்பட் டவைகளும் ஏர்க்கால்களாலழகியவைகளுமான அச்சுக்களாலும் நாசம் பண்ணப்பட்ட யானைகளாலும் கீழே தள்ளப்பட்ட கொடிமரங்களாலும் அவ்வாறே கவசங்களாலும் சேனைகளாலும் பூமியானது பரப்பப்பட்டது. ஐயா! பாரதரே! அங்கு (விழுந்திருக்கின்ற) மாலைகளாலும் ஆபரணங்க ளாலும் வஸ்திரங்களாலும் இருசுக்கட்டைகளாலும் நன்றாக மூடப்பட் டிருக்கின்ற பூமியானது, ஜ்யோதிமண்டலங்களால் ஆகாயம் விளங்கு வதுபோல் விளங்கினது. மகாராஜரே! மலைகளின் வடிவம்போன்ற வடிவத்தையுடையவைகளும் மிலேச்சர்களால் ஏறப்பட்டவைகளும் விள்ளப்பட்ட மைக்கட்டிபோன்றவைகளும் கீழேவிழுந்திருக்கின்றவை களுமான மகாகஜங்களாலும், பருத்திருக்கின்றவைகளும் பர்வதம் போன்றவைகளுமான [1] மிருகங்களாலும், மந்த்ரங்களாலும், பத்ரங்களா லும், மிருகமந்த்ரங்களாலும், மந்த்ரபத்ரங்களாலும், மந்த்ரமிருகங்களா லும் மிருகபத்ரங்களாலும் பத்ரமந்த்ரங்களாலும் பத்ரமிருகங்களாலும் ஆங்காங்கு யுத்தபூமியானது வியாபிக்கப்பட்டிருந்தது. பாரதரே! அரசரே! அஞ்சனத்தின் வம்சத்திற் பிறந்தவைகளும், வாமனத்தி னுடைய குலத்திற்றோன்றியவைகளும், ஸுப்ரதீகத்தின் குலத்திற் றோன்றியவைகளும், குமுதத்தினுடைய வம்சத்திற்றோன்றியவைக ளும்) ஐராவதத்தின்குலத்திற் பிறந்தவைகளும், அவ்வாறே மற்றத்திக்

[1] இந்த யானைகளின் விவரத்தை ராமாயணம் பாலகாண்டம், ௯-வது ௨௬-வது ஸ்லோகத்தாலும் அதனுரையாலும் அறிக. 'அங்கேபத்ரமந்த்ரம்ருகம்' என்று ஒருஜாதி கூறப்பட்டுள்ளது.

ஜங்களுடைய குலங்களில் தோன்றியவைகளுமான அனேகம் சிறந்த யானைகள் அடிக்கப்பட்டு விழுந்தன. அரசரே! அந்த யுத்தத்தில் ஸாத்யகியானவன், அவ்வாறே வனாயுதேசத்திற்றோன்றியவைகளும், மலைநாடுகளில் தோன்றியவைகளும், காம்போஜதேசத்திற் பிறந்தவைகளும், பாஹ்லிகதேசத்திற் பிறந்தவைகளுமான உத்தமமான் குதிரைகளை நாசஞ்செய்தான். பின்பு, ஸாத்யகி அந்த யுத்தபூமியில் பற்பல தேசங்களிற் றோன்றியவைகளும், பற்பலஜாதிகளைச் சேர்ந்தவைகளுமான யானைகளை நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கொன்றான். அவைகள் துரத்தப்படும்பொழுது துச்சாஸனன் தஸ்யுக்களைப் பார்த்து, 'யுத்ததர்மத்தையறியாதவீரர்களே! திரும்புங்கள்; யுத்தஞ் செய்யுங்கள்; ஏன் நீங்கள் ஓடுகிறீர்கள்?' என்று சொன்னான். அதிகமாக முறிய அடிக்கப்பட்டவர்களும் கற்களால் யுத்தஞ் செய்கிறவர்களும் மலைநாட்டில் வஸிக்கின்றவர்களுமான அந்த வீரர்களைப்பார்த்து உம்முடைய குமாரனான துச்சாஸனன், 'நீங்கள் கற்சண்டைகளில் ஸமர்த்தர்கள். ஸாத்யகிக்கு இது தெரியாது. கற்சண்டையை அறியாதவனும் யுத்தத்தில் ஆவலுள்ளவனுமான இந்தஸாத்யகியைக் கொல்லுங்கள். அவ்வாறே கௌரவர்களெல்லோரும் கற்சண்டையில் ஸாமர்த்தியமில்லாதவர்கள். எதிர்த்துச்செல்லுங்கள். பயப்படாதீர்கள். ஸாத்யகி உங்களை எதிர்த்து வரமாட்டான்' என்று தூண்டினான். மலைநாட்டில் தோன்றியவர்களும் கற்களால் யுத்தஞ்செய்கின்றவர்களுமான அந்த எல்லாக்ஷத்ரியர்களும், அரசனைநோக்கி மந்திரிகள் வருவதுபோல ஸாத்யகியைக்குறித்து எதிர்த்தோடி வந்தார்கள். பிறகு, மலைகளில் வசிக்கின்றவர்களான அந்தவீரர்கள் யானைத்தலை போன்ற கற்களைத்தூக்கிக்கொண்டு போர்க்களத்தில் யுயுதானனுக் கெதிரில் வந்துநின்றார்கள். அவ்வாறே வேறுசிலவீரர்கள் உம்முடைய புத்திரனால் தூண்டப்பட்டு க்ஷேபணீயங்களால் ஸாத்வதனைக்கொல்ல எண்ணங்கொண்டு நான்குபக்கங்களிலும் சூழ்ந்துநின்று தடுத்தார்கள். ஸாத்யகி, கற்போர்செய்ய எண்ணி வந்தவர்களான அவர்களைக்குறித்துக் கூர்மையான அம்புகளைப் பிரயோகித்தான். சினிபுங்கவனான ஸாத்யகி மலைநாட்டுவீரர்களால் பிரயோகிக்கப்படுகின்ற நெருங்கியமழை போன்ற அந்தக்கற்களை ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளால் பொடியாக்கினான். ஐயா! மின்மினிப்பூச்சிகளுடைய கூட்டம்போல விளங்குகின்ற அந்தக்கற்பொடிகளாலே கூக்குரலிட்டுக்கதறிய சைனியங்கள் பெரும்பான்மையாக நாசஞ்செய்யப்பட்டன. அரசரே! பிறகு, பெரிய கற்களைத்தூக்கிக்கொண்டுவந்த ஐந்நூறுவீரர்கள் கைகளறுக்கப்பட்டுப்

பூதலத்தில் விழுந்தார்கள். ஸாத்யகியினுடைய பல்லத்தினாலே பொடியாக்கப்பட்ட அந்தமலைகளாலே அடிக்கப்பட்டவர்களான மிலேச்சர்கள் ஆங்காங்கு உயிரையிழந்து விழுந்தார்கள். மகாபலசாலியான ஸாத்யகியினாலே யுத்தத்தில் கொல்லப்படுகின்ற அந்தவீரர்கள் அவன்மீது மிக்கபயங்கரமான கல்மாரியைப் பொழிந்தார்கள். ஸாத்யகியும், கற்களால்யுத்தஞ்செய்கின்றவர்களும் முயற்சியுடன் எதிரில்நிற்கின்றவர்களுமான அனேக ஆயிரக்கணக்கான சூரர்களை வதஞ்செய்தான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, பஸ்தமுகர்களாலும் அதோபஸ்தர்களாலும் ஸ்தூலபஸ்தர்களாலும் தரதர்களாலும் கஸர்களாலும் தங்கணர்களாலும் லம்பகர்களாலும் [*] குணிந்தர்களாலும் நான்குபக்கங்களிலும் பலமுறை எறியப்பட்ட கல்மழைகளை அயோசிதமான காரியத்தைச் செய்வதில் ஸமர்த்தனான ஸாத்யகியானவன் நாராசங்களால் துண்டாக்கினான். ஆகாயத்தில் கூர்மையுள்ள அம்புகளாலுடைக்கப்படுகின்ற கற்பாறைகளினுடைய சப்தத்தால் யுத்தகளத்திலுள்ளாதங்களும் குதிரைகளும் யானைகளும் காலாட்படைகளும் ஓடின. கற்களின் தூள்களாலே நான்குபக்கமும் இறைக்கப்படுகிற மனிதர்களும் யானைகளும் குதிரைகளும் தேனீக்களால் கடிக்கப்பட்டவைகள்போல நிலைபெற்று நிற்பதற்குச் சக்தியற்றவைகளாயின. அரசரே! மாண்டவைபோக மிகுந்திருக்கின்ற யானைகள் நூற்றுக்கணக்காக இரத்தம்பெருகுகின்றவைகளும் தலையிலுள்ளகும்பஸ்தலங்கள் பிளக்கப்பட்டவைகளும் தந்தங்கள் ஒடிந்தவைகளும் துதிக்கைகளறுத்துத் தள்ளப்பட்டவைகளும் அங்கங்களை இழந்தவைகளுமாகச் செய்யப்பட்டன. ஐயா! கைதேர்ந்தவனானஸாத்யகி அந்தக்ஷணத்திலேயே ஐந்நூறுயுத்தவீரர்களைக்கொன்று ஸேனையினிடையில் ஸஞ்சாரஞ்செய்தான். அவனாலே மயங்கும்படி செய்யப்பட்டயானைகள் திரும்பியோடின. அம்புகளால் பிளக்கப்படுகின்ற கற்களுடைய தொனியானது தாமரைஇலைகளில் விழுகின்ற வர்ஷதாரைகளின் சப்தம்போலக்கேட்கப்பட்டது. ஐயா! பிறகு யுயுதானனாலே பீடிக்கப்படுகின்ற உம்முடைய சைனியத்தின் சப்தமானது பர்வகாலத்தில் சமுத்திரத்தின்சப்தம்போலத் தோன்றியது. அந்த நெருங்கின சப்தத்தைக்கேட்டுத் துரோணர் ஸாரதியைநோக்கி, 'ஸூத! ஸாத்வதர்களுள் மஹாரதனான இந்த ஸாத்யகி, கோபமூண்டு யுத்தகளத்தில் ஸைனியத்தைப் பலவாறு பிளந்துகொண்டு யுத்தபூமியில் காலன்போல ஸஞ்சாரம்பண்ணுகிறான். ஸூத! இந்த நெருங்கின சப்தம் உண்டாகிற அவ்விடத்தைக்குறித்து ரதத்தை ஓட்டு. கற்க

[*] 'குலிந்தர்' என்பது வேறுபாடம்.

னால் யுத்தஞ்செய்கிறவர்களை நிச்சயமாக யுயுதானன் எதிர்த்திருக்க வேண்டும். ஏனெனில், எல்லாரதிகர்களும் ஓடுகின்ற குதிரைகளால் இழுத்துக்கொண்டுபோகப்படுகிறார்கள், மேலும், ரதிகர்கள் சஸ்திரங்களையுங்கவசங்களையுமிழந்தும் துன்பமடைந்தும் ஆங்காங்கு விழுகிறார்கள். ஸாரதிகள், நெருங்கினயுத்தரங்கத்தில் குதிரைகளை அடக்குவதற்குச் சக்தியற்றவர்களாயிருக்கிறார்கள்' என்று கூறினார். இவ்வாறான பாரத்வாஜருடைய வார்த்தையைக்கேட்டபின், ஸாரதியானவன் ஆயுததாரிகளனைவருள்ளும் சிறந்தவரான துரோணரைப்பார்த்து, 'நீண்ட ஆயுளுள்ளவரே! துரியோதனனுக்கு நான்குபக்கங்களிலும் சைனியம் ஓடுகிறது. யுத்தத்தில் போர்வீரர்கள் முறிய அடிக்கப்பட்டு ஆங்காங்கு ஓடுகின்றதைப்பாரும். இதோ சூரர்களானபாஞ்சாலர்கள் பாண்டவர்களோடுசேர்ந்து உம்மையேகொல்ல எண்ணி நான்குபக்கங்களிலும் ஓடிவருகின்றார்கள். ஓ! சத்ருக்களை அடக்குபவரே! இப்பொழுது நிற்பதிலோ செல்லுவதிலோ ஸமயோசிதமான காரியத்தைச்செய்யும். ஸாத்யகியும் தூரத்தில் சென்றுவிட்டான்' என்று மறுமொழியுரைத்தான். அந்தத்துரோணருடையஸாரதி இவ்வாறு சொல்லும்பொழுது அனேகவிதமானரதங்களை நாசஞ்செய்கின்றவனான ஸாத்யகி காணப்பட்டான். யுத்தத்தில் உம்மைச்சேர்ந்தவர்கள் யுயுதானனால் கொல்லப்படுகின்றவர்களாகி அவனுடையரதத்தை விட்டுவிட்டுத் துரோணருடைய படையைக்குறித்து ஓடினார்கள். எந்த ரதிகர்களோடு சேர்ந்து துச்சாஸனன் முன்பு திரும்பினானோ அவர்களெல்லோரும் பயந்து துரோணருடைய ரதத்தைக்குறித்து ஓடிவந்தார்கள்.

---

## நூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

[துரோணர் பயந்தோடிய துச்சாஸனனை நிந்தித்ததும் துரோணருக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் யுத்தமும்.)

துச்சாஸனனுடைய ரதம் அருகில் நிற்பதைக்கண்டு, பின்பு பாரத்வாஜர் அவனைநோக்கி, 'துச்சாஸனா! யாதுகாரணத்தால் இந்த ரதிகர்களெல்லாரும் ஓடுகிறார்கள்? அரசனுக்கு க்ஷேமமா? ஸைந்தவன் உயிரோடிருக்கிறானா? ராஜபுத்ரனும் ராஜாவுக்கு ஸஹோதரனும் மகாரதனுமான நீ இளவரசனாயிருந்தும் யாதுகாரணத்தால் இப்பொழுது

யுத்தத்தில் ஓடுகின்றாய்? துச்சாஸனா! 'நீ அடிமை; சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்டாய். நீ இஷ்டப்படி நடப்பவளாகவேண்டும். என்னுடைய தமையனாரான அரசருக்கு நீ வஸ்திரங்களைச் சுமப்பவளாயிருக்கவேண்டும். உன்னுடைய பர்த்தாக்களனைவரும் இப்பொழுது இல்லை. அவர்கள் எள்ளுப்பதருக்குச் சமமானவர்கள்' என்று இவ்வாறு முன்பு சொல்லிவிட்டு, இப்பொழுது ஏன் ஓடுகின்றாய்? நீயாகவே பாஞ்சாலர்களோடும் பாண்டவர்களோடும் பெரிதானவைரத்தை யுண்டுபண்ணிக்கொண்டு இப்பொழுது ஸாத்யகியொருவனை எதிர்த்து யுத்தத்தில் ஏன் பயப்படுகிறாய். நீ முன்பு சூதாட்டத்தில் பாச்சிகைகளை எடுக்கும்பொழுது, 'இவை பயங்கரமான ஸர்ப்பம்போன்ற பாணங்களாகவே ஆகப்போகின்றன' என்பதை அறியவில்லை. பாண்டவனைப்பற்றி மிகுதியாகக்கடுஞ்சொற்கூறியதும் த்ரௌபதியினுடையகிலேசமும் உன்னையே மூலமாகக்கொண்டு முன்பு உண்டாயின. உன்னுடையமானமும் கர்வமும் எங்கே? உன்வீர்யம் எங்கே? கர்ஜனம் எங்கே? ஸர்ப்பங்களுக்கொப்பான பார்த்தர்களைக் கோபமடையும்படி செய்துவிட்டு எங்கே போகப்போகிறாய்? கடினஸ்வபாவமுள்ளவனும் ஓடுவதில் நோக்கங்கொண்டவனுமான உன்னுடைய ஸஹோதரனான அந்தத்துரியோதனனும் ராஜ்யமும் இந்தப்பாரதஸேனையும் வியஸனிக்கப்படத் தக்கன. வீரனே! பிளக்கப்படுகின்றதும் பயத்தினால் பீடிக்கப்பட்டதுமான சேனையானது உன்கைவன்மையைக்கொண்டு உன்னால் ரக்ஷிக்கத்தக்கதல்லவா? அப்படிப்பட்ட நீ இப்பொழுது யுத்தத்தைவிட்டுப் பயந்து பகைவர்களை ஆனந்திக்கும்படிசெய்கிறாய். சத்துருக்களை யழிப்பவனே! சேனைக்கு ஆதாரமாயுள்ளவனும் நாயகனுமான நீயே பயந்தோடுவாயாகில், பயப்படுந்தன்மையுள்ள வேறெவன் யுத்தத்தில் நிற்பான்? இப்பொழுது ஸகாயமில்லாதவனான அந்தஸாத்வதனொருவனோடு யுத்தஞ்செய்கின்ற உனக்கு யுத்தத்தைவிட்டோடுவதில் எண்ணம் உண்டாயிருக்கிறதன்றோ? கௌரவ! காண்டீவத்தைக் கையிற்கொண்ட அர்ஜுனனையும் பீமசேனனையும் நகுலசகதேவர்களையும் ரணகளத்தில் பார்க்கும்பொழுது என்னசெய்யப்போகிறாய்? ஸாத்யகியினால் பிரயோகிக்கப்பட்ட எந்தப்பாணங்களினிடமிருந்து பயந்தோடுகிறாயோ அந்தப்பாணங்கள் யுத்தரங்கத்தில் சூரியனும் அக்னியும்போன்ற தேஜஸுள்ள பல்குனனுடையபாணங்களுக்குச் சமானமாகா. வீர! நீ வேகமாகச்செல்; காந்தாரியினுடைய வயிற்றில் பிரவேசி. பூமண்டலத்தில் ஓடுகின்ற உனக்கு உயிர்தப்புவதற்கு வேறுவழியை நான் காணவில்லை. புத்தியானது ஓடுவதிலேயே நிச்சயங்கொண்டதாகச் செய்யப்பட்டிருக்குமாகில்

ஸமாதானமாகவே தர்மராஜனுக்குப் பூமியைக்கொடுத்துவிடலாம். சட்டை கழற்றிய ஸர்ப்பங்களுக்கொப்பான அர்ஜுனனுடைய நாராசங்கள் உன்சரீரத்தில் பிரவேசிக்குமுன்னரே பாண்டவர்களோடு ஸமாதானத்தை அடைவாயாக. மகாத்மாக்களான பார்த்தர்கள் யுத்தத்தில் உன்னுடைய நூறுபிராதாக்களையுங்கொன்று பூமியைக்கவருமுன்னரே (அங்ஙம்) பாண்டவர்களோடு சமாதானமடை. தர்மநந்தனனான யுதிஷ்டிரராஜனும் போரைப்புகழ்கின்ற ஸ்ரீவாஸுதேவரும் கோபங்கொள்ளாமலிருக்கையிலேயே பாண்டவர்களோடு ஸமாதானத்தை யடைவாயாக. மிக்ககைவன்மையுள்ள பீமஸேனன், பெரிய சேனையிற்புகுந்து உன் சகோதரர்களை அழிக்காமலிருக்கையிலேயே பாண்டவர்களோடு சமாதானத்தையடை. பீஷ்மராலே உன்பிராதாவான துரியோதனன் முன், 'யுத்தத்தில் பாண்டவர்கள் ஜயிக்கத்தகாதவர்கள். இனியவனே! அவர்களுடன் ஸமாதானஞ்செய்துகொள்வாயாக' என்று சொல்லப்பட்டிருக்கிறான். ஸமாதானத்தில் நோக்கமுள்ள என்னாலும், 'ஏ! துரியோதனா! மிகுந்திருப்பதைக் காப்பாற்று; பார்த்தர்களுடன் நீ சமாதானஞ் செய்துகொள். வீர! எல்லா அரசர்களையும் காப்பாற்று' என்று சொல்லப்பட்டிருக்கிறான். மூடனும் உன்னுடைய பிராதாவுமான துரியோதனன் அதனைச்செய்யவில்லை. அப்படிப்பட்ட நீயாவது யுத்தத்தில் தைரியமடைந்து முயற்சியுள்ளவனாகிப் பாண்டவர்களுடன் யுத்தஞ் செய். உன்னுடைய ரத்தத்தையும் பீமஸேனன் குடிக்கப்போகிறான் என்று நான் கேட்டிருக்கிறேன். அவனுடைய அந்த வசனமும் பொய்யன்று. அஃது அவ்வாறே ஆகும். அதிமூடனே! யுத்தத்தில் ஓடுந் தன்மையுள்ள நீ யாதுகாரணத்தால் வைரத்தைத் தொடங்கினாய்? நீ பீமனுடைய போராண்மையை அறியவில்லையா? ஸாத்யகி நிற்கிற விடத்திற்கு விரைவாக ரதத்தோடுசெல். பாரத! உன்னால் விடப்பட்டிருக்கிற இந்தச்சேனையானது ஓடப்போகிறது. ஸத்யவிக்ரமனான ஸாத்யகியை யுத்தகளத்தில் உனது நன்மைக்காக எதிர்த்து யுத்தம் செய்' என்று கூறினார்.

இவ்வாறு சொல்லியதைக்கேட்ட உம்முடைய குமாரன் ஒன்றும் மறுமொழி கூறவில்லை. கேட்டும் கேளாததுபோலக் காட்டிக்கொண்டு, ஸாத்யகி சென்றவழியினால்சென்று பின்வாங்காதவர்களான மிலேச்சர்களுடைய பெரும்படையோடுகூடி யுத்தரங்கத்தில் அந்த யுயுதானனை எதிர்த்து முயற்சியுடன் போர்புரிந்தான். ரதிகர்களுள் சிரேஷ்டரான துரோணரும் மிக்க கோபங்கொண்டு கடுத்தரமான வேகத்துடன் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் எதிர்த்தார். ரணகளத்தில்

அவர் பாண்டவர்களுடைய சேனையில் புகுந்து நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் யுத்தவீரர்களை ஓட்டினர். மகாராஜரே! பிறகு அவர் ரணகளத்தில் தம் பெயரைப் பிறர்கேட்கச் சொல்லிக்கொண்டு, பாண்டவர்களுக்கும் பாஞ்சாலர்களுக்கும் மச்சதேசத்தினர்க்கும் பெரியநாசத்தைச் செய்தார். சேனைகளை ஆங்காங்கு ஜயிக்கின்ற அவரைக் காந்தியுள்ள பாஞ்சாலராஜகுமாரனை வீரகேது எதிர்த்து வந்தான். அவன் படிந்த கணுக்களுள்ள ஐந்துபாணங்களால் துரோணரை அடித்து ஒரு பாணத்தால் அவருடைய கொடிமரத்தையறுத்து ஏழு பாணங்களால் ஸாரதியையும் அடித்தான். மகாராஜரே! யுத்தகளத்தில் துரோணர் வேகமுள்ளவனை பாஞ்சாலனை அதிக்ரமிக்கவில்லையென்னும் ஆச்சரியத்தை அந்த யுத்தத்தில் நான் கண்டேன். ஐயா! அரசரே! யுத்தத்தில் வீரகேதுவினால் துரோணர் நன்றாகத் தடுக்கப்பட்டதைக்கண்டு தர்மபுத்ரருக்கு ஜயத்தை விரும்புகின்றவர்களான பாஞ்சாலர்கள் அந்தத் துரோணரை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அவர்கள் நெருப்புக்கொப்பான அம்புகளையும் மிகுந்த விலைமதிப்புள்ள தோமரங்களையும் பலவிதமான சஸ்திரங்களையும் துரோணர் ஒருவர்மீது இறைத்தார்கள். அரசரே! நான்கு பக்கங்களிலுமிருந்து அந்தப் பாணஸமூகங்களைத் துரோணர் ஆகாயத்தில் பெரிய மேகங்களைக் காற்றானது தடுப்பதுபோலத் தடுத்துக்கொண்டு விளங்கினர். பிறகு, சத்துருவீரர்களைக் கொல்லுகிறவரான துரோணர் மிக்க கோரமானதும் சூரியனையும் அக்கினியையும் போன்றதுமான ஒருபாணத்தை வில்லில்பூட்டி வீரகேதுவினுடைய தேரைக்குறித்துப் பிரயோகித்தார். வேந்தரே! அந்தப்பாணமோ பாஞ்சாலகுலத்தை மகிழ்விப்பவனை வீரகேதுவைப் பிளந்து ரத்தத்தினால் நனைந்து ஜ்வலித்துக்கொண்டு விரைவாகப் பூமியை யடைந்தது. பிறகு, காற்றினால் முறிக்கப்பட்ட பெரிய சண்பகமரமானது மலையுச்சியிலிருந்து கீழே விழுவதுபோலப் பாஞ்சால குலநந்தனனை வீரகேது ரதத்திலிருந்து விரைவாகக் கீழேவீழ்ந்தான். சிறந்தவில்லாளியும் மிக்கபலசாலியுமான அந்த ராஜபுத்ரன் கொல்லப்பட்டவுடனே, பாஞ்சாலர்கள் துரோணரை நான்குபக்கங்களிலும் விரைந்து சூழ்ந்துகொண்டார்கள். பாரதரே! ப்ராதாவினுடைய் வியஸனத்தினாலே பீடிக்கப்பட்டவர்களான சித்ரகேதுவும் ஸுதன்வாவும் சித்ரவர்மாவும் சித்ராதனும் ஒன்றுகூடிப் பாரத்வாஜரோடு போர்புரியக்கருதி நல்லவிற்களைக்கையிற்கொண்டு எதிர்த்துவந்து மாரிக்காலத்து மேகங்கள்போல அம்புமழைகளைப் பொழிந்துகொண்டு போர்க்களத்தில் அவரைக் கண்ணுக்குப் புலப்படாதபடி

செய்தார்கள். பிராமணோத்தமரான அந்தத் துரோணர் மகாரதர்களான ராஜபுத்திரர்களாலே பலவாறு துன்புறுத்தப்பட்டு அவர்களை அழிப்ப தின்பொருட்டுக் கோபத்தை அடைந்தார். பிறகு, அவர் அவர்கள்மீது அம்புமயமான வலையை வீசினார். ராஜசிரேஷ்டரே! காதுவரை இழுத்து விடப்படும் துரோணருடைய அம்புகளால் அடிக்கப்படுகின்ற அந்த ராஜகுமாரர்கள் செய்யவேண்டியதை அறியவில்லை. பாரதரே! யுத்தத்தில் கோபங்கொண்டவரான துரோணர் உரக்கச் சிரித்துக்கொண்டு யுத்தகளத்தில் பிரமித்திருக்கின்ற அந்த ராஜகுமாரர்களை, குதிரைகளையும் ஸாரதிகளையும் ரதங்களையும் இழந்தவர்களாகச் செய்தார். பிறகு, மகாகீர்த்திமானான துரோணர், மிக்ககூர்மையுள்ள வேறு பல்லங்களாலே அவர்களுடைய தலைகளை, நன்றாக வீசுகின்ற காற்றானது புஷ்பங்களை உதிர்ப்பதுபோல அறுத்துக் கீழே தள்ளினார். அரசரே! நல்ல தேஜஸுள்ள அந்த ராஜகுமாரர்கள் முற்காலத்தில் தேவாசுரயுத்தத்தில் தைத்திய தானவர்கள் போலக் கொல்லப்பட்டுத் தேர்களிலிருந்து கீழேவிழுந்தார்கள். ராஜரே! பிரதாபசாலியான பாரத்வாஜர் யுத்தத்தில் அவர்களைக்கொன்று பின்புறத்தில் பொன்வேய்ந்ததும் எவ்விதத்திலும் நெருங்கமுடியாததுமான வில்லைச் சுழற்றினார். அரசரே! அந்த வில்லானது மேகத்தினிடையில் மின்னல்போல விளங்கியது. தேவர்களுக்கொப்பானவர்களும் மகாரதர்களுமான பாஞ்சாலராஜர்கள் கொல்லப்பட்டதைக்கண்டு திருஷ்டத்யும்னன் மிக்க மனவருத்தமுற்று இருகண்களாலும் நீரை வடித்தான். அவன் கோபமூண்டு யுத்தகளத்தில் துரோணருடைய ரதத்தைக்குறித்து எதிர்த்துவந்தான். அரசரே! பாஞ்சால்யனுடைய அம்புகளால் துரோணர் போர்க்களத்தில் தடுக்கப்பட்டதைக் கண்டு, 'ஆ! ஆ!' என்னும் சப்தமானது விரைவாகத் தோன்றியது. மகாத்மாவான பார்ஷதனாலே பலவாறு மறைக்கப்பட்டும் அந்தத் துரோணர் அதனால் துன்பத்தையடையவில்லை; புன்சிரிப்புள்ளவராகவே யுத்தஞ் செய்தார். மகாராஜரே! பிறகு, கோபமூண்டவனான த்ருஷ்டத்யும்னன் கணுக்கள் பதிவாயுள்ள தொண்ணூறு பாணங்களாலே துரோணரை மார்பிலடித்தான். பலசாலியான திருஷ்டத்யும்னனாலே நன்றாக அடிக்கப்பட்ட மகா கீர்த்திமானான பாரத்வாஜர் தேர்த்தட்டில் உட்கார்ந்து மூர்ச்சையடைந்தார். பராக்ரமசாலியும் வீர்யமுடையவனுமான திருஷ்டத்யும்னன் அவ்வித நிலைமையையடைந்திருக்கின்ற அந்தத் துரோணரைக்கண்டு வில்லையெறிந்துவிட்டுச் சீக்கிரமாக ஒருவாளை எடுத்தான். ஐயா! கோபத்தினால் கண்கள் மிகச் சிவந்தவனும் வேக

முன்னவனுமான அந்த மஹாரதன் துரோணருடைய தலையைச் சரீரத்திலிருந்து கவரஎண்ணித் தன் ரதத்தினின்று பாய்ந்து அவருடைய ரதத்தின்மீது விரைவாக ஏறினான். வேந்தரே! பிறகு, மனத்தெளிவையடைந்த துரோணர் (தம்மைக்) கொல்லும் எண்ணத்தோடு அருகில் வந்திருக்கின்ற மஹாரதனான திருஷ்டத்யும்னனைக் கண்டு பெரிய ஒலியுள்ள வில்லை எடுத்து அருகிலிருப்பவரை அடிக்கின்ற வைதஸ்திகம் என்கிற அம்புகளாலே யுத்தரங்கத்தில் மகாரதனான திருஷ்டத்யும்னனை எதிர்த்துப் போர்புரிந்தார். அரசரே! ஸமீபத்திலிருந்து யுத்தஞ்செய்கின்ற துரோணருக்கு வைதஸ்திகங்களென்னும் அந்த அம்புகள் [1] தெரிந்தவை. அவற்றால் அவர் த்ருஷ்டத்யும்னனை அடித்தார். அனேகமான அந்த அம்புகளாலே அடிக்கப்படுகின்றவனும் மிக்க பலசாலியும் மஹாரதனும் பராக்ரமமுள்ளவனும் வீரனுமான அந்தத் திருஷ்டத்யும்னன் வேகம் குறைந்தவனாகித் துரோணருடைய ரதத்திலிருந்து கீழே விரைவாகக் குதித்துத் தன் ரதத்தின்மீதேறிப் பெரிய வில்லையெடுத்து யுத்தத்தில் அவரையடித்தான். மஹாராஜரே! துரோணரும் பார்ஷதனை அம்புகளால் அடித்தார். அப்பொழுது மூவுலகங்களையும் விரும்புகின்ற இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்கும் யுத்தம் நடந்ததுபோல் துரோணருக்கும் பாஞ்சாலனுக்கும் ஆச்சர்யகரமான அப்படிப்பட்ட யுத்தம் நடந்தது. பிறகு, யுத்தகதிகளை அறிந்தவர்களும் மஹாத்மாக்களுமான துரோணரும் பார்ஷதனும் விசித்திரமான மண்டலகதிகளோடும் [2] யமகங்களோடும் மற்றக் கதிகளோடும் ஸஞ்சரிப்பவர்களும் யுத்தத்தில் யுத்தவீரர்களுடைய மனங்களை மயங்கச் செய்கின்றவர்களும வர்ஷாகாலங்களில் இரண்டுமேகங்கள் வர்ஷிப்பதுபோல அம்புமழைகளைப் பொழிகின்றவர்களும் பாணங்களால் ஆகாயத்தையும் திக்குக்களையும் பூமியையும் மறைக்கின்றவர்களுமாக அம்புகளால் வெட்டிக்கொண்டார்கள். மஹாராஜரே! அற்புதமான அவ் விருவருடைய அந்த யுத்தத்தைப் பிராணிவர்க்கங்களும் க்ஷத்திரியர்களும் மற்றுமுள்ள உமது ஸைனிகர்களும் புகழ்ந்தார்கள். ராஜரே! பாஞ்சாலர்கள், 'யுத்தத்தில் திருஷ்டத்யும்னனோடு எதிர்த்திருக்கின்ற துரோணர் நிச்சயமாக நமக்கு வசப்படப்போகிறார்' என்று ஆரவாரித்தார்கள். துரோணரோ யுத்தத்தில் விரைவுடன் திருஷ்டத்யும்னனுடைய ஸாரதியின் தலையைப் பக்குவமான பழத்தை மரத்திலிருந்து

---

[1] ஒருசாண் நீளமுள்ளவை.

[2] 'விதிதா:' என்னும் பாடம் கொள்ளப்பட்டது.

[3] பகைவரைத் தடுக்குங்கதி.

விழச்செய்வதுபோல விழச்செய்தார். பிறகு, மஹாத்மாவான அந்தத் திருஷ்டத்யும்னனுடைய குதிரைகள் ஓடின. அந்தக் குதிரைகள் ஓடும்பொழுது பராக்கிரமசாலியான துரோணர் ரணகளத்தில் அங்காங்கு பாஞ்சாலர்களோடும் அவ்வாறே ஸ்ருஞ்சயர்களோடும் போர் புரிந்தார். பிரதாபசாலியான பாரத்வாஜர் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் ஜயித்துத் தம் படை வகுப்பை மறுபடியும் அடைந்து சத்துரு ஸம்ஹாரத்தில் நோக்கமுள்ளவராக நின்றார். பிரபுவே! இந்தத் துரோணரை யுத்தத்தில் ஜயிப்பதற்குப் பாண்டவர்கள் உத்

---

## நூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி துச்சாஸனனை வென்றது.)

அரசரே! பிறகு, துச்சாஸனன் மழைபொழிகின்ற மேகம் போல ஆயிரக்கணக்கான அம்புகளை இறைத்துக்கொண்டு ஸாத்யகியை எதிர்த்தான். யுத்தத்தில் மைனாகபர்வதம்போல நிலைபெற்றிருக்கிற ஸாத்யகியைத் துச்சாஸனன் அறுபது பாணங்களாலும் அவ்வாறே பதினாறுபாணங்களாலும் அடித்தும் அசையச்செய்யவில்லை. பாரதசிரேஷ்டரே! சூரனான துச்சாஸனன் பற்பலதேசத்தினின்றும் வந்திருக்கின்ற பெரிய தேர்க்கூட்டத்தோடு நான்குபக்கங்களிலும் அனேக அம்புகளைப் பிரயோகித்துக்கொண்டும மேகம் போலச் சிங்கநாதத்தினால் பத்துத்திக்குக்களையும் எதிரொலியிடும்படி செய்துகொண்டும் அந்த ஸாத்யகியை அம்புகளாலே அதிகமாகமூடினான். மிக்க புஜபலமுள்ள ஸாத்யகி ரணகளத்தில் எதிர்த்துவருகிற அந்தக் கௌரவனைப்பார்த்து எதிர்த்தோடி அம்புகளால் மூடினான். பாணஸமூகங்களாலே மூடப்படுகின்ற துச்சாஸனன்முதலான அந்தக் கௌரவர்கள் பயந்து உம்முடைய சைனியம் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே யுத்தத்தினின்றும் ஓடினார்கள். ராஜசிரேஷ்டரே! அவர்கள் ஓடுகையில் உம்முடைய குமாரனான துச்சாஸனன் பயமற்றவனாகி ஸாத்யகியைப் பாணங்களால் அடித்துக்கொண்டு நின்றான். அவன் யுத்தத்தில் நான்குபாணங்களால் ஸாத்யகியினுடைய குதிரைகளையும் மூன்று பாணங்களால் ஸாரதியையும் நூறுபாணங்களால் அவனையுமடித்து

ஸிம்மநாதஞ்செய்தான். மஹாராஜரே! பிறகு, யுத்தகளத்தில் ஸாத்யகி கோபங்கொண்டு அந்தத் துச்சாஸனனுடைய ரதத்தையும்ஸாரதியையும் த்வஜத்தையும் அம்புகளால் காணக்கூடாதபடிசெய்தான். அந்த ஸாத்யகியோ அர்ஜுனதுச்சாஸனனை, சிலந்தியானது தன்னிடம்வந்த கொசுவைச்சுற்றுவதுபோல அம்புகளாலே நன்றாகச்சுற்றினான். பகைவர்களை ஜயிக்கின்றவனான ஸாத்யகி விரைவுடன் துச்சாஸனனைப் பாணங்களால் நன்றாக மூடினான். ராஜாவான துரியோதனன், அவ்வாறு துச்சாஸனன் அனேக அம்புகளால் நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்டிருப்பதைக்கண்டு யுயுதானனுடைய ரதத்தைக்குறித்து த்ரிகர்த்தர்களை ஏவினான். யுத்தத்தில் ஸமர்த்தர்களான மூவாயிரம் த்ரிகர்த்த ரதிகர்கள் கொடிய செய்கையையுடைய யுயுதானனுடைய அருகில் சென்றார்கள், அந்தத் திரிகர்த்தவீரர்கள் புத்தியைப் போரில் உறுதிப்படுத்திக்கொண்டு ஒருவரோடொருவர்சேர்ந்து பெரிய ரதஸமூகத்தோடு அவனை நான்குபக்கங்களிலும் சுற்றிக்கொண்டார்கள். ஸாத்யகி மிக்கமுயற்சியுடன் பாணவர்ஷங்களைப்பொழிகின்ற த்ரிகர்த்தவீரர்களுள் படைமுனையில்நிற்கின்ற தலைவர்களான ஐந்நூறுபோர்வீரர்களைக் கொன்றான். சினிபுங்கவனான ஸாத்யகியினுடைய பாணங்களால் விரைவாக அடிக்கப்பட்ட அந்த த்ரிகர்த்தர்கள் பெரிய காற்றின் வேகத்தினால் முறிக்கப்பட்டமரங்கள் மலையிலிருந்து விழுவதுபோல் விழுந்தார்கள். அரசரே! ஸாத்யகியினுடைய அம்புகளால் அறுக்கப்பட்டும், ரத்தவெள்ளத்தால் நனைக்கப்பட்டும் அவ்விடத்தில் விழுந்திருக்கும் யானைகளாலும் பலவாறாக அறுக்கப்பட்ட த்வஜங்களாலும் பொன்னாலாகிய தலையலங்காரங்களுள்ள குதிரைகளாலும் பூமியானது பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷங்களால் விளங்குவதுபோல விளங்கியது. யுத்தத்தில் யுயுதானனாலே கொல்லப்படுகின்றவர்களும் உம்மைச் சேர்ந்தவர்களுமான அந்தயுத்தவீரர்கள் சேற்றிலாழ்ந்தயானைகள்போல ரக்ஷகனையடையவில்லை. பிறகு, அவர்களெல்லாரும் கருடனிடத்திலுள்ள பயத்தினாலே ஸர்ப்பங்கள் புற்றைநோக்கித் திரும்புவதுபோல ஸாத்யகியினிடத்திலிருந்துண்டான பயத்தினால் துரோணருடைய ரதத்தை நோக்கித் திரும்பினார்கள். வீரனான அந்த ஸாத்யகி ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளாலே ஐந்நூறு போர்வீரர்களைக்கொன்று மெதுவாகத் தனஞ்சயனுடைய ரதத்தைநோக்கிச் சென்றான். செல்கின்ற அந்த நரசிரேஷ்டனான ஸாத்யகியை உமமுடைய குமாரனான துச்சாஸனன் படிந்தகணுக்களுள்ள ஒன்பதுபாணங்களால் விரைவாக அடித்தான். சிறந்த வில்லாளியான அந்த ஸாத்யகியோ பொற்கணுக்களுள்

ளவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளும் நேராகச்செல்லுகின்றவைகளும் கூர்மையுள்ளவைகளுமான ஐந்துபாணங்களாலே துச்சாஸனனைத் திருப்பியடித்தான். மகாராஜரே! துச்சாஸனன் அட்டகாசஞ்செய்து ஸாத்யகியை மூன்றுபாணங்களாலடித்துப் பின்னும் ஐந்துபாணங்களாலடித்தான். சைனேயன் ஐந்துபாணங்களாலே உம்முடைய புத்திரனையடித்து யுத்தரங்கத்தில் இவனுடைய வில்லையும் அறுத்துவிட்டுப் புன்னகையுடன் அர்ஜுனனைநோக்கிச் சென்றான். பின்பு, துச்சாஸனன் கோபங்கொண்டு சென்றுகொண்டிருக்கிற விருஷ்ணிவீரனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினால் முழுமையும் எஃகினாலாகிய சக்தியாயுதத்தை அவன்மீது பிரயோகஞ்செய்தான். மன்னரே! ஸாத்யகி அப்பொழுது உமது புத்திரனுடைய அந்தப் பயங்கரமான சக்தியாயுதத்தைக் கழுகிறகுகள் பூண்ட கூர்மையுள்ள அம்புகளாலே நூறுதுண்டாக வெட்டினான். ஜனேஸ்வரரே! பிறகு, உம்முடைய குமாரன் வேறுவில்லை எடுத்து ஸாத்யகியை அம்புகளால் அடித்து ஸிம்மநாதமும் செய்தான். ஸாத்யகியோ யுத்தத்தில் கோபங்கொண்டு உமது புத்ரனைமோகிக்கசசெய்து அக்னிஜ்வாலைகள்போல் விளங்குகின்ற அம்புகளாலே மார்பிலடித்தான். மகாபாக்யசாலியான அந்த ஸாத்யகி உட்படிந்த கணுக்களுள்ளவைகளும், முழுதும் எஃகினாற் செய்தவைகளும், கூர்மையான வாயுள்ளவைகளுமான மூன்றுபாணங்களினால் அடித்துப் பின்பு எட்டுப்பாணங்களினாலுமடித்தான். மகாராஜரே! துச்சாஸனனோ இருபதுபாணங்களால் ஸாத்யகியைத் திருப்பியடித்தான். மகாராஜரே! மகாபாக்யசாலியான ஸாத்வதனும் உட்படிந்தகணுக்களுள்ள மூன்றம்புகளாலேயே அவனை மார்பிலடித்தான், பிறகு, மஹாரதனனஸாத்யகி மிக்ககோபங்கொண்டு வணங்கின கணுக்களுள்ள கூரிய அம்புகளாலே இவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றான். உத்தமமான அஸ்திரங்களையறிந்தவனான அந்தஸாத்யகி,ஒருபல்லத்தால் துச்சாஸனனுடையவில்லையும் ஐந்துபாணங்களாலே அவன்கையில்கட்டியிருக்குந் தோலுறையையும் இரண்டு பல்லங்களாலே கொடிமரத்தையும் ரதசக்தியையும் கூர்மையுள்ள அம்புகளால் இருபக்கத்திலுமுள்ள ஸாரதிகளையும் அறுத்தான். வில் அறுக்கப்பட்டவனும் ரதத்தையிழந்தவனும் குதிரைகளும் ஸாரதிகளும் கொல்லப்பட்டவனுமான அந்தத் துச்சாஸனனைத் திரிகர்த்தஸேனாபதி தன்னுடைய ரதத்தினால் வேறிடத்துக்குக் கொண்டுபோனான். பாரதரே! மிக்க புஜபலமுள்ள ஸாத்யகி, ஒரு முகூர்த்தகாலம் அவனைத் தூரத்தில் பீமஸேனனுடைய வசனத்தைநினைத்துக் கொல்லாமல் விட்

டான். பாரதரே! ஸபையினடுவே பீமஸேனனால் யுத்தத்தில் உம்முடைய எல்லாப்புத்திரர்களையும் வதஞ்செய்வது பிரதிஜ்ஞைசெய்யப்பட்டிருக்கிறது. பிரபுவே! ராஜரே! பிறகு, ஸாத்யகி யுத்தத்தில் துச்சாஸனனைஜயித்து விரைவுடன் தனஞ்சயன்சென்ற வழியினால்சென்றான்" என்று கூறினான்.

## நூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(ஸங்குலயுத்தத்தை வர்ணித்தல்.)

திருதராஷ்டிரன், "எனது அந்தச் சேனையில் மகாரதர்கள் சிலர் கூட இல்லையா? அவ்வாறு செல்லும் ஸாத்யகியை யாரும் அடிக்கவுமில்லை; தடுக்கவுமில்லையே. யுத்தத்தில இந்திரனுக்கொப்பான பலமுள்ளவனும் ஸத்யவிக்ரமனுமான ஸாத்யகி ஒருவனாகவே யுத்தத்தில் மகேந்திரன் அஸுரர்களிடத்திற் செய்ததுபோன்ற செய்கையைச் செய்தானா? அல்லது அந்த ஸாத்யகி சென்றவழி சூன்யமாயிருந்ததா? அல்லது அந்த ஸாத்யகி சென்றவழியிலிருந்தவர்கள் பெரும்பான்மையாக நாசஞ்செய்யப்பட்டனரா? ஸஞ்சய! விருஷ்ணிவீரனாலே ரணகளத்தில் எந்தக்காரியம் செய்யப்பட்டதாக என்னிடம் புகழ்கிறாயோ அந்தக் காரியத்தை இந்திரனும் செய்வதற்குச்சக்தியுள்ளவனல்லன். விருஷ்ணிகளுள்ளும் அந்தகர்களுள்ளும் மிக்க சூரனும் மகாத்மாவுமான அந்த ஸாத்யகியினுடைய நம்பத்தகாததும் எண்ணத்தகாததுமான செய்கையைக்கேட்டு என்மனம் துன்பமடைகிறது. ஸஞ்சய! உண்மையானபராக்கிரமமுள்ள அந்த ஸாத்யகியொருவன் அனேக சேனைகளைக் கொன்றானென்று சொல்வதினால் எனக்குப் புத்திரர்கள் இல்லை. ஸஞ்சய! மகாபலசாலிகளான அனேக வீரர்கள் போர்புரிந்துகொண்டிருக்கும் பொழுது ஒருவனான சைனேயன் அவர்களைத்தாண்டி எவ்விதம் சென்றான்? அதனை எனக்கு உரைக்கவேண்டும்" என்று சொல்ல, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! உம்முடைய சேனையில் தேர்கள் குதிரைகள் யானைகள் காலாட்கள் இவைகளுடைய ஒப்பற்ற முயற்சியானது யுகத்தின் முடிவுக்காலத்திற்கொப்பாக இருந்தது. (பகைவருடைய) கர்வத்தை அழிக்கின்றவரே! வீரஸமூகங்கள் அழைக்கப்பட்டு (க்கூடிய) பொழுது, உம்முடைய (அந்த) ஸைன்யத்துக்குச் சமமான கூட்டமானது உலகத்தில்

முன் ஒருபொழுதும் கூடினதில்லையென்பது என்னுடைய எண்ணம். அந்த யுத்த ரங்கத்தில் ஒன்றுகூடியிருக்கிற தேவர்களும் சாரணர்களும், 'பூமண்டலத்தில் ஸேனாஸமூகங்கள் இந்தக் கூட்டத்தை முடிவாயுடையவைகளாகப் போகின்றன' என்று சொன்னார்கள். அரசரே! ஜயத்ரதனுடைய வதவிஷயமான (சண்டையில்) துரோணரால் சேனை அணிவகுக்கப் பட்டிருந்ததுபோன்ற அணிவகுப்பு ஒன்றுவது இதற்குமுன் இருந்ததில்லை. அந்த யுத்தரங்கத்திலுள்ள அந்த ஜனக்கூட்டத்தைப் பார்த்து, 'யுத்தத்துக்கு வந்திருக்கின்ற இவர்களாலே நிச்சயமாகப் பூமியானது தூக்கப்பட்டது' என்று ஜனங்கள் சொன்னார்கள். ரணகளத்தில் ஒருவரையொருவர் எதிர்த்து ஓடுகின்ற ஸேனாஸமூகங்களினுடைய சப்தமானது பெருங்காற்றினால் கலக்கப்படும் கடல்களின் ஒலிபோலத் தோன்றியது. நரசிரேஷ்டரே! உம்முடைய ஸேனையிலும் பாண்டவர்களுடைய ஸேனையிலும் ஆயிரக்கணக்காகவும் நூற்றுக்கணக்காகவும் அனேக அரசர்கள் கூடியிருந்தார்கள். யுத்தத்தில் கோபமுள்ளவர்களும் ஊர்ஜிதமான செய்கைகளுள்ளவர்களுமான உத்தமவீரர்களுடைய மயிர்சிலிர்த்தலையுண்டுபண்ணுகின்றதும் நெருங்கியதும் மிகப் பெரிதுமான சப்தமானது அந்த இடத்தில் தோன்றியது. ஒருவரையொருவர் பார்த்துக் கர்ஜிக்கின்றவர்களான பாண்டவர்கள் கௌரவர்கள் இவர்களுடைய ஸிம்மநாதங்களும் 'கலகல' என்னும் சப்தங்களும் அவ்விடத்தில் ஆயிரக்கணக்காகத் தோன்றின. பாரதரே! பேரிகைமுழக்கங்களும் நெருக்கின பாணசப்தங்களும் ஒருவரையொருவர் அடித்துக் கொள்ளுகிற மனிதர்களுடைய சப்தமும் கேட்கப்பட்டன. ஐயா! பிறகு, பீமசேனனும் திருஷ்டத்யும்னனும் நகுலனும் சகதேவனும் பாண்டுபுத்ரரான தர்மராஜரும், 'வாருங்கள்; அடியுங்கள்; வேகமாக நான்குபக்கங்களிலும் ஓடுங்கள்; வீரர்களான ஸாத்யகியும் அர்ஜுனனும் சத்துரு சேனையிற் பிரவேசித்துவிட்டார்கள். அவ்விருவரும் ஜயத்ரதவதத்தைக் குறித்து ஸுலபமாகச் செல்லும்படி சீக்கிரம் செய்யுங்கள்' என்று ஸைனியங்களைத் தூண்டினார்கள். 'அவ்விருவருமில்லாவிட்டால் கௌரவர்கள் தம் காரியம் நிறைவேறினவர்களாகிவிடுவார்கள்; நாமும் ஜயிக்கப்பட்டவர்களாகிவிடுவோம். மிக்க பலசாலிகளும் சத்துருக்களுடைய பட்டணங்களை ஜயிக்கின்றவர்களுமான அவ்விருவரும் விரைவாகச்சென்றவிடத்தில் சூரர்களான நீங்கள் ஒன்றுகூடிக் காற்று ஸமுத்திரத்தைக் கலக்குவதுபோல விரைவாக ஸேனாஸமுத்திரத்தைக் கலக்குங்கள்.' அரசரே! பீமசேனனாலும் பாஞ்சாலராஜ குமாரனான திருஷ்டத்யும்னனாலும் தூண்டப்பட்ட அவ்வீரர்கள் ரணகளத்தில் தங்க

ளுடைய பிரியமான உயிர்களைவிடத்துணிந்து கௌரவர்களைக் கொன்ருர்கள். சிறந்த சக்தியுள்ள அந்த வீரர்கள் சஸ்த்ரங்களாலே யுத்தத்தில் நாசத்தை இச்சித்தவர்களும் ஸ்வர்க்கத்தையடைய விருப்பமுள்ளவர்களுமாகி மித்ரகார்யத்தில் தம்முயிரைப் பெரிதாக எண்ணவில்லை; அரசரே! அவ்வாறே உம்மைச்சார்ந்த வீரர்களும் பெரியகீர்த்தியை வேண்டினவர்களாக யுத்தத்தில் சிறந்த நிச்சயத்தைச் செய்துகொண்டு யுத்தத்தின்பொருட்டேநின்ருர்கள். பயத்தையுண்டுபண்ணக் கூடியதும் நெருங்கியதுமான அந்த யுத்தம் நடந்துகொண்டிருக்குங் காலத்தில் ஸாத்யகி எல்லாஸைனியங்களையும் ஜயித்துவிட்டு அர்ஜுனனைக் குறித்துச் சென்ருன். அந்த ரணகளத்தில் சூரியகிரணங்களால் விளங்குகின்ற கவசங்களுடைய காந்திகள், த்வஜங்களிலும் சஸ்த்ரங்களிலும் தாக்கி (ஒளிமிகுந்து) நான்குபுறங்களிலுமுள்ள ஸைனிகர்களுடைய கண்களைக் கூசச்செய்துகொண்டு உலகங்களைப் பிரகாசிக்கச் செய்தன. பெருங்காற்றினலே எழுப்பப்பட்ட மேகங்களைச் சூரியன் விசேஷமாக எரிப்பதுபோல அர்ஜுனன் பெரிதான உம்முடைய அந்தச் சேனையை அவ்வாறு தபிக்கச் செய்துகொண்டு பிரகாசித்தான். மிக்க ஸந்தோஷமுள்ள அர்ஜுனன் விரைவாக ஸமுத்திரம்போன்ற உம்முடைய சேனையைச் சுருமீன் சமுத்திரத்தைக் கலக்குவதுபோல நான்குபுறங்களிலும் சென்று கலக்கினன். அரசரே! மிக்க தோள்வலியுள்ளவரே! அவ்விடத்தில் பாண்டவனுக்கும் உம்மைச்சேர்ந்த வீரர்களுக்கும் நடந்த பெரிய யுத்தமானது உக்கிரமாயும் பயத்தை உண்டுபண்ணுகிறதாயுமிருந்தது. ஸர்வ ப்ராணிகளுடைய நாசத்திற்கும் இடமான அந்த யுத்தபூமியானது ருத்ரருடைய உத்யானம்போல விளங்கியது. பின்பு, தனஞ்சயன் சென்றவிடத்தில் பெரிதான சப்தம் உண்டாயிற்று. பாண்டுவுக்கு முன்பிறந்தவரே! அந்த மஹா யுத்தத்தில் பாரதப்படையின்நடுவில் மஹாபாகுவான அர்ஜுனனுக்கும் ஸாத்யகிக்கும் உமது யுத்தவீரர்களுடன் கோரமானயுத்தம் நடந்தது. துரோணருக்கும் வியூகத்துவாரத்தில் பகைவர்களுடன் மிக்க பயங்கரமான யுத்தம் நடந்தது. பூமிக்கு நாதரே! அர்ஜுனனும் அவ்வாறே துரோணரும் மகாரதனை ஸாத்யகியும் கோபித்துக்கொண்டவுடன், பூமியில் இவ்வாறு இந்த அழிவானது ஏற்பட்டது. மகாராஜரே! துரியோதனன் அவ்வாறு முயற்சியையுடையவர்களும் மகாத்மாக்களுமான பாண்டவர்களுடைய பெருஞ்சேனையில் நுழைந்துவிட்டான். பாரதரே! அந்த வீரர்களுக்கும் அவனுக்கும், ஸர்வப்ராணிகளுக்கும் நாசத்தைச்செய்யக்கூடியதும் பெரிதும் நெருங்கியதுமான அவ்விதயுத்தம் நடந்தது" என்று கூறினன்.

திருதராஷ்டிரன், "ஸூத! ஸைன்யங்கள் அவ்வாறானபொழுது தானாகவே அவ்வண்ணமான கஷ்டத்தை அடைந்திருந்த துரியோதனன் பின்புறத்தில் யுத்தத்தைச் செய்யவில்லையா? மகாயுத்தத்தில் ஒருவனுக்கு, அதிலும் அரசனுக்கு, அனேகம் பேர்களை எதிர்ப்பது தகாதென்று எனக்குத் தோற்றுகிறது. மிகவும் ஸுகமாக வளர்ந்தவனும் ஐசுவரியமுள்ளவனும் உலகத்துக்கு ஈசுவரனும் ஸகாயமற்றவனுமான துரியோதனன் அனேக வீரர்களை எதிர்த்துப் புறங்காட்டாமலிருந்தானா?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! பாரதரே! ஒருவனான உம்முடைய புத்திரனுக்கு அனேகம் பேர்களோடு நடந்த ஆச்சரியமான யுத்தத்தைச் சொல்லுகின்ற என்னிடத்தினின்றும் கேளும். துரியோதனனால் ஒலிமிக்க யுத்தரங்கத்தில் பாண்டவசேனையானது யானையினால் தாமரை ஓடையானது கலக்கப்படுவதுபோல நான்குபுறங்களிலுங் கலக்கப்பட்டது. மன்னரே! பிறகு, உம்முடைய புத்திரனாலே அந்தப் பாண்டவசேனை அழிக்கப்படுவதைக்கண்டு பீமஸேனனை முன்னிட்டவர்களான பாஞ்சாலர்கள் அவனை எதிர்த்தோடிவந்தார்கள். அவன் பாண்டுகுமாரனான பீமஸேனனைப் பத்துப்பாணங்களாலும் வீரர்களான நகுலஸஹதேவர்களை மும்மூன்று பாணங்களாலும் தர்மராஜரை ஏழுபாணங்களாலும் விராடனையும் துருபதனையும் ஆறு ஆறு பாணங்களாலும் சிகண்டியை நூறுபாணங்களாலும் திருஷ்டத்யும்னனை இருபதுபாணங்களாலும் த்ரௌபதி குமாரர்களை மும்மூன்றுபாணங்களாலும் அடித்தான். ரணகளத்தில் நூறுநூறாயிருக்கின்ற மற்றப் போர்வீரர்களையும் யானைகளையும் ரதங்களையும் கோபங்கொண்ட யமன் பிரஜைகளை அழிப்பதுபோல உக்கிரமான பாணங்களால்அறுத்தான். பயிற்சியினாலும் அஸ்திரபலத்தாலும் சத்துருக்களைத் துன்பஞ்செய்கின்ற அந்தத் துரியோதனன் (பாணங்களைத்) தொடுப்பதும் விடுப்பதும் காணப்படவில்லை. அவனுடைய வில் மண்டலாகாரமாயிருப்பதாகவே காணப்பட்டது. யுத்தரங்கத்தில் பகைவர்களைக் கொல்லுகின்ற துரியோதனனுடைய பொன்வேய்ந்த பின்புறமுள்ள பெரிய வில்லை ஜனங்கள் எப்பொழுதும் வட்டமாகவே கண்டார்கள். கௌரவரே! பிறகு, யுதிஷ்டிரராஜர் யுத்தத்தில் முயற்சியுடையவனான உம்முடைய குமாரனது வில்லை இரண்டு பல்லங்களாலறுத்து நன்றாகப் பிரயோகிக்கப்பட்ட உத்தமமான பத்துப் பாணங்களாலே இந்தத் துரியோதனனையும் அடித்தார். அந்தப் பாணங்கள் (அவனிடம்) வேகமாக நெருங்கிக் கவசத்தைப்புடைத்துக்கொண்டு பூமியில் பிரவேசித்தன. பிறகு, பார்த்தர்கள் மிகுந்த சந்தோஷமடை

ந்து முற்காலத்தில் விருத்திரனுடைய வதத்தின்பொருட்டுத் தேவர்களும் மகரிஷிகளும் இந்திரனைச் சூழ்ந்துகொண்டதுபோல யுதிஷ்டிரரைச் சூழ்ந்துகொண்டார்கள். பின்பு, பிரதாபசாலியான உம்முடைய குமாரன் வேறுவில்லை எடுத்து, 'நில், நில்' என்று தர்மராஜரைப்பார்த்துச் சொல்லிக்கொண்டு பாண்டவனை எதிர்த்தான். மகா யுத்தத்தில் எதிர்த்துவருகின்ற அந்த உம்முடைய குமாரனை எதிரில் பார்த்து ஜயத்திலாவலுள்ளவர்களான பாஞ்சாலர்கள் ஒன்றுசேர்ந்து எதிர்த்தார்கள். யுத்தத்தில் யுதிஷ்டிரரைப் பிடிக்கக்கருதிய துரோணர் பெருங்காற்றினால் அலைக்கப்பட்டு ஜலங்களைப் பொழிகின்ற மேகங்களை மலை தடுப்பதுபோல யுத்தத்தில் அவர்களை எதிர்த்துத் தடுத்தார். அரசரே! மிக்க புஜபலமுள்ளவரே! அந்த யுத்தகளத்தில் பாண்டவர்களுக்கும் உம்மைச் சேர்ந்தவர்களுக்கும் மயிர்சிலிர்த்தலை யுண்டுபண்ணுகிற பெரும்போர் நடந்தது. எல்லாப் பிராணிகளுடைய ஸம்ஹாரத்திற்கு இடமாயுள்ள அந்த யுத்தபூமியானது ருத்ரருடைய உத்யானம்போலிருந்தது. பிரபுவே! பிறகு, தனஞ்சயன் சென்றவழியில் எல்லாச் சத்தங்களையும் புன்காட்டிலும் பெரிதும் மயிர்சிலிர்க்கச்செய்வதுமானசப்தம் அதிகமாகத் தோன்றியது. மகாபாகுபலமுள்ளவரே! மஹாயுத்தத்தில் பாரதஸைன்யத்தின் மத்தியில் அர்ஜுனனுக்கும் ஸாத்யகிக்கும் உம்மைச்சேர்ந்த வில்லாளிகளுடன் யுத்தம் நடந்தது. துரோணருக்கும் மகாயுத்தத்தில் வியூகத்தின் முன்னணியில் பகைவர்களோடு யுத்தம் நடந்தது. அரசரே! அர்ஜுனனும் துரோணரும் மகாரதனான ஸாத்வதனும் கோபங்கொண்டபொழுது இவ்வாறு பூமியில் நாசம் நேர்ந்தது"

---

## நூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருடைய பராக்ரமத்தை வர்ணித்தது.)

மகாராஜரே! பிற்பகலில் துரோணருக்கு ஸோமகர்களோடு மேகத்தினிடிமுழக்கத்துக்கொப்பான முழக்கமுள்ள மிக்க பெரும்போர் மீண்டும் நடந்தது. மனிதர்களுள் வீரரான துரோணர் ஜாக்ரதையுடன் சிவப்புக்குதிரைகள் பூட்டிய ரதத்தின்மீதேறி நடுத்தரமான வேகத்தை அடைந்து யுத்தத்தில் பாண்டவர்களை எதிர்த்துச் சென்றார். அரசரே! பெரிய வில்லைக் கையிலேந்தியவரும் மகாபலமுள்ளவரும் உத்தமமான

கூட்டத்தில் தோன்றியவருமான அவர் உமக்குப் பிரியத்தையும், ஹித்தத்தையும் செய்வதில் முயற்சியுள்ளவராகி விசித்ரமான கனுக்களுள்ள கூர்மையான அம்புகளாலே ஸோமகர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் கேகயர்களையும் ஸம்ஹாரம் செய்தார். பாரதரே! ராஜரே! பிரதாபசாலியான பாரத்வாஜர் போர்வீரர்களுள் சிறந்தவர்களையெல்லாம் தேடுகின்றவர்போல யுத்தத்தில் விளையாடினார். மன்னரே! கேகயர்களுள் மகாரதனும் யுத்தத்தில் கொடுந்தன்மையுள்ளவனும் ஐந்து ஸகோதரர்களுட் சிறந்தவனுமான பிருஹத்க்ஷத்திரன் அந்தத் துரோணரை எதிர்த்து மகாமேகமானது கந்தமாதன பர்வதத்தின்மீது மழையைப்பொழிவது போலக் கூர்மையானபாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு ஆசார்யரான அவரைத் துன்பப்படுத்தினன். மகாராஜரே! துரோணர் அவனிடத்தில் மிக்க கோபங்கொண்டு பொற்கனுக்களுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையுமான பதினைந்து பாணங்களைப் பிரயோகித்தார். துரோணரால் விடப்பட்டவைகளும் கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போன்றவைகளுமான அந்தப் பாணங்களொவ்வொன்றையும் கேகயவீரன் ஸந்தோஷத்துடன் யுத்தத்தில் ஐந்து ஐந்து பாணங்களாலறுத்தான். அவனுடைய அந்த லாகவத்தைக் கண்டு பிராம்மணோத்தமர் மிகச் சிரித்து உட்படிந்த கனுக்களுள்ள எட்டுப்பாணங்களைப் பிரயோகித்தார். அவருடைய வில்லினின்று விடுபட்டவைகளும் வேகத்தோடு வருகின்றவைகளுமான அந்த அம்புகளைப் பார்த்துக் கேகயவீரன் யுத்தத்தில் கூர்மையுள்ள அவ்வளவு அம்புகளாலேயே தடுத்தான். மகாராஜரே! பிருஹத்க்ஷத்ரனாலே அந்தச் செயற்கரிய செய்கையானது செய்யப்பட்டதுகண்டு, பிறகு, உம்முடைய சைனியத்திற்கு ஆச்சரியமுண்டாயிற்று. மகாராஜரே! பிறகு, துரோணர் பிருஹத்க்ஷத்திரனை மிஞ்ச எண்ணி யுத்தத்தில் ஜயிக்கமுடியாத திவ்யமான பிரம்மாஸ்திரத்தை வெளியிட்டார். ராஜேந்திரரே! யுத்தத்தில் துரோணராலே விடப்பட்ட பிரம்மாஸ்திரத்தைக் கேகயவீரன்கண்டு அந்தப் பிரம்மாஸ்திரத்தைப் பிரம்மாஸ்திரத்தினாலேயே நாசஞ்செய்தான். பாரதரே! பிரம்மாஸ்திரம் நாசம்பண்ணப்பட்ட பிறகு, பிருஹத்க்ஷத்ரன் சாணையில் தீட்டப்பட்டவையும் பொன்மயமான கனுக்களுள்ளவையுமான அறுபது பாணங்களாலே அவரையடித்தான். மனிதர்களுள் சிறந்தவரான துரோணர் அந்தப் பிருஹத்க்ஷத்ரன்மீது ஒரு நாராசத்தைப் பிரயோகம்செய்தார். அந்த நாராசமானது அவனுடைய கவசத்தையுடைத்துப் பூமியில் பிரவேசித்தது. ராஜஸிரேஷ்டரே! விடப்பட்ட கருநாகமானது புற்றில் நுழைவதுபோல யுத்தகளத்தில் அந்தப்பாணம் கேகயனைப்

பிளந்து பூமியில் நுழைந்தது. மகாராஜரே! த்ரோணருடைய அம்புக ளாலே மிகவும் அடிக்கப்பட்ட அந்தக் கேகயவீரன், மிகுந்த கோபா வேசங்கொண்டு இரண்டு கண்களையும் புரட்டி விழித்து, பொன்னு லாகிய அடிப்புறமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளு மான எழுபது பாணங்களாலே த்ரோணரை அடித்து ஒருபாணத்தி ஞல் அவருடைய ஸாரதியையும் உயிர்நிலைகளில் அதிகமாக அடித் தான். ஐயா! ப்ருஹத்க்ஷத்ரனுல் அனேக அம்புகளால் அடிக்கப் பட்ட த்ரோணரோ அவனுடைய ரதத்தைக்குறித்துக் கூர்மையான அம்புகளைப் பிரயோகித்தார். அவர் மகாரதனுன அந்தப் ப்ருஹத் க்ஷத்திரனை மனங்கலங்கச்செய்து நான்குபாணங்களாலே அவனுடைய நான்குகுதிரைகளையும் கொன்ருர். ஒருபாணத்தினுலே ஸாரதியை யடித்துத் தேர்த்தட்டினின்றுதள்ளி இரண்டம்புகளாலே கொடிமரத் தையும் குடையையுமறுத்துப் பூமியில் தள்ளினுர். பிறகு, ப்ராம்ம ணேத்தமராகிய த்ரோணர் நன்ருகவிடப்பட்ட நாராசத்தினுல் ப்ருஹத் க்ஷத்திரனை மார்பிலடித்தார். அவன் மார்புபிளந்து கீழேவிழுந்தான். அரசரே! கேகயர்களுள் மகாரதனுன அவன் கொல்லப்பட்டவுடனே, சிசு பாலபுத்ரன் மிக்ககோபங்கொண்டு ஸாரதியைநோக்கி, 'ஸாரதியே! கவசம் பூண்டவராகிய இந்தத் த்ரோணர் எல்லாக்கேகயர்களையும் பாஞ்சாலர்க ளுடையஸேனையையும் நாசஞ்செய்துகொண்டிருக்குமிடத்திற்குச்செல்' என்றுசொன்னுன். அவனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு ஸாரதி யானவன் ரதிகர்களுள் சிறந்தவனுன அந்தச் சிசுபாலபுத்ரனைக் காம் போஜதேசத்திலுண்டானவைகளும், வேகமுள்ளவைகளுமான குதிரைக ளாலே த்ரோணருடைய ஸமீபத்தை யடையும்படிசெய்தான். சேதி தேசத்தவர்களுள் சிரேஷ்டனுன த்ருஷ்டகேதுவும் மிதமிஞ்சின பல முள்ளவனுகி விட்டிற்பூச்சி நெருப்பை எதிர்ப்பதுபோல் வதத்தின் பொருட்டுத் த்ரோணரை எதிர்த்துவந்தான். அவன் அப்பொழுது தூங்கிக்கொண்டிருக்கிற புலியைத் துன்பஞ்செய்கிறவன்போலத் த்ரோ ணரைக் குதிரைகளோடும் ரதத்தோடும் த்வஜத்தோடுங்கூட அறுபது பாணங்களாலடித்து மறுபடியும் கூர்மையுள்ள வேறு அம்புகளால் அடித் தான். மூயற்சியுடையவனும் கோபங்கொண்டவனுமான அந்தச்சிசுபால புத்ரனுடைய வில்லின்நடுவைத் த்ரோணர் கழுகிறகுகள்பூண்ட கூர்மை யான அம்பினுலே அறுத்தார். பிறகு, மகாரதனுன அவன் வேறு வில்லையெடுத்துக் கழுகிறகுகளால் வேகமுள்ளவைகளாகச் செய்யப்பட்ட அம்புகளால் த்ரோணரையடித்தான். த்ரோணர் நான்குபாணங்க ளாலே அவனுடைய நான்குகுதிரைகளையுங்கொன்று அட்டஹாஸத்

டுடன் ஸாரதியினுடைய தலையையும் உடலிலிருந்து அறுத்துத்தள்ளி னர். பிறகு, இருபத்தைந்துபாணங்களாலே அவனையடித்தார். அந்தச் சேதிராஜன் விரைவுடன் கதையை எடுத்து ரதத்தினின்று குதித்துக் கோபங்கொண்ட பெண்ணுகம்போன்ற அதனைப் பாரத்வாஜ ரின்மீது பிரயோகித்தான். எதிரில் வருகின்றதும் மூபற்சியுள்ள காள ராத்ரியென்னும் தேவதைபோன்றதும் எஃகினாற்செய்ததும் பெரியதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தக் கதாயுதத்தைப்பார்த் துத் துரோணர் அநேக ஆயிரக்கணக்கான கூரிய அம்புகளால் பிளந் தார். ஐயா! குருகுலத்திற் பிறந்தவரே! பாரத்வாஜராலே அனேக அம்பு களால் பிளக்கப்பட்ட அந்தக்கதாயுதமானது சப்தித்துக்கொண்டு பூமி யில் விழுந்தது. கோபமுள்ளவனும் வீரனுமான திருஷ்டகேதுவானவன் நாசஞ்செய்யப்பட்ட அந்தக் கதையைப்பார்த்து, தோமரத்தையும் பொன்னால் மிகவும் ஒளிவீசுகின்ற சக்தியையும் பிரயோகித்தான். துரோணர் தோமரத்தை ஐந்துபாணங்களால் உடைத்துச் சக்தியை யும் ஐந்துபாணங்களால் அறுத்தார். கருடனாலே துண்டாக்கப்பட்ட இரண்டு ஸர்ப்பங்கள்போல அவ்விரண்டு ஆயுதங்களும் அறுக்கப்பட் டுப் பூமியில்விழுந்தன. பிறகு, பிரதாபசாலியான பாரத்வாஜர் யுத்த களத்தில் கொல்ல எண்ணங்கொண்ட அந்தச் சேதிராஜனைக் கொல்வ தின்பொருட்டுக் கூர்மையுள்ள அம்பைப் பிரயோகஞ்செய்தார். அவ் வம்பானது அளவுகடந்த வல்லமையுள்ள த்ருஷ்டகேதுவினுடைய கவ சத்தையும் மார்பையும் பிளந்து அன்னப்பறவையானது தாமரைக் காட் டில் புகுவதுபோல் பூமியில்புகுந்தது. பசியுள்ளகாடையானது சிறிதான விட்டிற்பூச்சியை விழுங்குவதுபோலச் சூரரான துரோணர் மகாயுத்தத் தில் திருஷ்டகேதுவை 'விழுங்கினர். சேதிராஜன் கொல்லப்பட்ட வுடன் உத்தமமான அஸ்திரங்களையறிந்தவனான அவனுடைய குமாரன் கோபவசனாகிப் பிதாவினுடைய அந்தப் படைவகுப்பில் பிரவே சித்தான். பலசாலியான துரோணர் அட்டஹாஸஞ்செய்துகொண்டு பெரிய அரண்யத்தில் பெரும்புலி மான்குட்டியை (க்கொல்வதுபோல) அம்புகளால் அவனையும் யமலோகத்திற்கனுப்பினர். பாரதரே! அப் பாண்டவர்களுடைய க்ஷத்ரியர்கள் க்ஷீணிக்கும்பொழுது சூர னான ஜராஸந்தனுடைய குமாரன் தானாகவே துரோணரை எதிர்த்து அருகில் வந்தான். மிக்க கைவன்மையுள்ள அந்த ஜராஸந்த குமாரனோ யுத்தகளத்தில் அம்புமழைகளாலே துரோணரை மேக மானது சூரியனை மறைப்பதுபோல மறைத்தான். க்ஷத்ரியர்

' கொன்றார் என்பது.

களைத் துளைப்பவரான துரோணர் அவனுடைய அந்த ஸாகஸத்தைக் கண்டு, பிறகு, நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் அவன்மீது அம்புகளை விரைவாகப் பிரயோகித்தார். அவர் ரணகளத்தில் ரதத்திலிருக்கின்றவனும் ரதிகர்களுள் உத்தமனுமான ஜாரஸந்த குமாரனை மூடி எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே விரைவாகக் கொன்றார். [1]அங்கே எவன் எவன் (தம்மை எதிர்ப்பதற்காக) அனுப்பப்பட்டானோ அவன் அவனை யமனுக்கொப்பான துரோணர் ஸம்ஹாரகாலத்தில் அந்தகன் எல்லாப் பிராணிகளையும் ஏற்றுக்கொள்வது போலத் தாமே ஏற்றுக்கொண்டார்.

மகாராஜரே! பிறகு, அவர் யுத்தகளத்தில் தம் பெயரை எல்லாரும் கேட்கும்படி சொல்லிக்கொண்டு அனேக ஆயிர அம்புகளாலே பாண்டவ பக்ஷத்தவர்களை மூடினார். பேர்வெட்டப்பட்டவைகளும் சாணையில்தீட்டப்பட்டவைகளும் துரோணராலே பிரயோகிக்கப்பட்டவைகளுமான அந்தப் பாணங்கள் யுத்தத்தில் நூறுநூறு மனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும் கொன்றன. இந்திரனாலே பெரிய அஸுரர்கள் கொல்லப்படுவதுபோலத் துரோணராலே கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்கள் குளிரினால் பீடிக்கப்பட்ட பசுக்கள்போல மிக நடுங்கினார்கள்; பரதசிரேஷ்டரே! பிறகு, துரோணராலே சைனியங்கள் வதம்பண்ணப்படும்பொழுது பாண்டவர்களிடத்தில் கோரமான அலறல் உண்டாயிற்று. சூரியனாலே நன்றாகத் தபிக்கப்பட்டவர்களும் அம்புகளாலே வதஞ்செய்யப்படுகிறவர்களுமான பாஞ்சாலர்கள் அப்பொழுது மிகப் பயந்த மனமுள்ளவர்களாயினர். மகாராஜரே! யுத்தத்தில் பாரத்வாஜரால் பாணஸமூகத்தினால் மயக்கப்பட்டவர்களும் தொடைப்பிடிப்புக் கொண்டவர்களுமான பாஞ்சாலமஹாரதர்களும் சேதிதேசத்தவர்களும் ஸ்ருஞ்சயர்களும் காசிதேசத்தவர்களும் கோஸலர்களும் அதிக உத்ஸாகத்துடன் போர்புரியும் விருப்பத்தோடு துரோணரை எதிர்த்து வந்தார்கள். புருஷசிரேஷ்டர்களான சைத்யர்களும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் யுத்தத்தில், 'துரோணரைக் கொல்லுங்கள்; துரோணரைக் கொல்லுங்கள்' என்று ஒருவர்க்கொருவர்சொல்லிக்கொண்டு அவரை எதிர்த்தார்கள்; தேஜஸ்வியான துரோணரை யுத்தத்தில் யமனுடைய வீட்டை அடையும்படி செய்ய எண்ணி முழுவல்லமையுடனும் முயற்சிசெய்து எதிர்த்தார்கள். முயற்சியுடையவர்களான அந்த வீரர்களையும் பெரும்பாலும் சேதிவீரர்களுள் முக்

[1] வேறுபாடம்.

[illegible]ர்களையும் பாரத்வாஜர் அம்புகளால் யமனிடம் அனுப்பினார். சேதிதேசத்தார்களுள் முக்கியர்களான அவர்களெல்லோரும் க்ஷீணிக்கும்பொழுது துரோணருடைய அம்புகளாலே ஹிம்ஸிக்கப்பட்ட பாஞ்சாலர்கள் மிக நடுநடுங்கினார்கள். பாரதரே! அவ்வாறுள்ள துரோணருடைய செய்கைகளைக் கண்டு அந்தப் பாஞ்சாலர்கள் பீமஸேனனையும் திருஷ்டத்யும்னனையும் அலறி யழைத்தார்கள். பீமஸேனன், 'செய்யமுடியாததும் பெரியதுமான தவமானது பிராம்மணரால் செய்யப்பட்டிருக்கிறது; நிச்சயம். ஆதலால்தான், மிகவுங்கோபம் மூண்டு யுத்தத்தில் க்ஷத்ரியசிரேஷ்டர்களைக் கொளுத்துகிறார். க்ஷத்ரியனுக்கு யுத்தம் தர்மம். பிராம்மணனுக்குத் தவமே சிறந்த தர்மம். தபஸ்வியும் வில்வித்தையைக் கற்றவருமான துரோணர் பார்வையினாலும் பகைவர்களைத் தகித்துவிடுவார். பாரதரே! அஸ்திர ஸம்பந்தத்தால் எரிப்பதும் (ஒருவராலும்) தாண்ட இயலாததும் கோரமுமான துரோணரென்னும் நெருப்பில் சிறந்த க்ஷத்திரியர்களனேகர் பிரவேசித்து எரிந்துவிட்டார்கள். மிக்க காந்தியுள்ள துரோணர் எல்லாப்பிராணிகளையும் மோகிக்கச் செய்துகொண்டு தம்முடைய பலத்துக்கும் உத்ஸாஹத்துக்கும் தைரியத்துக்கும் ஏற்றபடி நம்முடைய சேனைகளைக் கொல்லுகிறார்' என்று கூறினான். அந்தப் பீமனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு உறுதியாக நிற்கும் க்ஷத்ரதர்மா அர்த்தசந்திர பாணத்தினாலே அம்புடன்கூடின துரோணருடைய வில்லை அறுத்தான். க்ஷத்ரியர்களைத் துவைக்கின்றவரும் பலசாலியுமான அந்தத் துரோணாசார்யர் மிகுந்த கோபமுள்ளவராகிப் பிரகாசிக்கின்றதும் மிகுந்த வேகமுள்ளதுமான வேறுவில்லை எடுத்து அதில் சத்துருக்களுடைய படையை யழிக்கிற கூர்மையான அம்பைப் பூட்டிக் காதுவரையிழுத்துப் பிரயோகம்செய்தார். அவ்வம்பானது [1]க்ஷத்ரதர்மாவைக் கொன்று பூமியில் பிரவேசித்தது. அந்த க்ஷத்ரதர்மா மார்புபிளக்கப்பட்டு வாகனத்தினின்று பூமியில் விழுந்தான். திருஷ்டத்யும்னகுமாரன் கொல்லப்பட்டவுடன் சைனியங்கள் நடுக்கமுற்றன. பிறகு, மகாபலசாலியான சேகிதானன் துரோணரை எதிர்த்தான். அவன் துரோணரைப் பத்துப்பாணங்களால் மார்பில் அடித்து நான்கு அம்புகளால் அவருடைய ஸாரதியையும், நான்கம்புகளால் நான்கு குதிரைகளையும் அடித்தான். அந்தச் சேகிதானனைத் துரோணாசாரியர் மூன்று பாணங்களால் இரு கைகளிலும் மார்பிலுமடித்துக் கொடிமரத்தை ஏழுபாணங்களாற்பிளந்து ஸாரதியையும் மூன்றம்புகளால் நாசஞ்செய்தார். ஐயா! யுத்தத்

---

[1] க்ஷத்ரவர்மா என்னும் பெயருள்ளவனும் இவனே.

தில் பாரத்வாஜருடைய அம்புகளாற் சூழப்பட்டிருக்கின்ற அவனு டைய குதிரைகள் ஸாரதிகொல்லப்பட்டவுடன் ரதத்தை யிழுத்துக் கொண்டு ஓடின. ஐயா! குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்ட சேகிதானனுடைய ரதத்தைப்பார்த்து ரணகளத்தில் ஒன்றுகூடியிரு க்கின்ற சூரர்களானசேதிநாடர்களையும், பாஞ்சாலர்களையும், ஸ்ருஞ்சயர் களையும் துரோணர் நான்குபக்கத்திலும் ஓடும்படி செய்துகொண்டு மிகவும் பிரகாசித்தார். காதுவரையில் நரைத்த மயிருள்ளவரும், கரியநிறமுள்ளவரும், நானூறுபிராயமுள்ளவரும், கிழவருமான துரோணர் பதினாறு வயதுள்ளவன்போல ரணகளத்தில் நாற்புறங்க ளிலும் ஸஞ்சரித்தார். மகாராஜரே! பிறகு, பயமற்று ஸஞ்சரிக்கின்ற வரும் பகைவர்களை யழிக்கின்றவருமான அவரைப் பகைவர்கள் வஜ்ராயுதத்தைக் கையிற்கொண்ட இந்திரனாக எண்ணினார்கள். வேந்தரே! பிறகு, மிக்க புஜபலமுள்ளவனும் புத்திமானுமான துருபதன், 'புலியா னது அற்ப மிருகங்களைக் கொல்வதுபோலப் பேராவல்கொண்ட இந்தத் துரோணர் க்ஷத்திரியர்களைக் கொல்லுகிறார். எவனுடைய பேராசை யினாலே யுத்தத்தில் க்ஷத்திரிய சிரேஷ்டர்கள் கொல்லப்பட்டு ரக்தத்தி னாலே நனைக்கப்பட்டிருக்கின்ற அங்கங்களுள்ளவர்களும் நாய் நரிகளு க்கு ஆகாரமாக்கப்பட்டவர்களுமாகி வெட்டப்பட்ட காளைகள்போல் நூறுநூறாகப் பூமியில் படுத்துக்கொண்டிருக்கிறார்களோ பாபியும் துர்ப்புத்தியுடையவனுமான அந்தத் துரியோதனன் கஷ்டங்களை அனுப விக்கக்கூடிய லோகங்களை அடையப்போகிறான்' என்று சொன்னான். மகாராஜரே! ஓர் அக்ஷௌஹிணிக்கு நாதனான துருபதன் இவ்வாறு சொல்லிவிட்டு யுத்தகளத்தில் பார்த்தர்களை முன்னிட்டு விரைவாகத் துரோணரை எதிர்த்தான்.

---

## நூற்றிருபத்தாறுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர், அர்ஜுனன் ஸாத்யகி இருவரின் வரலாற்றையும் அறிதற்காகப் பீமஸேனனைச் செல்லக் கட்டளையிட்டது.)

பாண்டவர்களுடைய வ்யூகங்கள் ஆங்காங்கு கலக்கப்படுகையில், பார்த்தர்களும் பாஞ்சாலர்களும் ஸோமகர்களுடன் வெகுதூரம் பின் தொடர்ந்தார்கள். பாரதரே! மயிர் புளகித்தலைச் செய்யக்கூடிய யுத்த மானது அவ்வண்ணம் பயங்கரமாயிருக்கவும், யுகாந்தகாலம்போலத்

திவ்ரமானாகசமும் உலகத்திற்குகோவும், துரோணரும் யுத்தத்தில் பராக்ரமத்தை வெளியிட்டு அடிக்கடி கர்ஜிக்கவும், பாஞ்சாலர்களும் க்ஷீணிக்கவும், பாண்டவர்களும் கொல்லப்படும்பொழுது தர்மராஜா வான யுதிஷ்டிரர் ஒருவரையும் ரக்ஷகராகக் காணவில்லை; ராஜேந்திரரே! அவர், 'இஃது எவ்வாறு ஸம்பவிக்குமோ?' என்று கவலையுற்றார். பின்பு, அவர், ஸவ்யஸாசியைப் பார்க்கும் விருப்பத்துடன் எல்லாத்திக்குகளை யும் பார்த்தும் பார்த்தனையாவது மாதவனையாவது காணவில்லை. தர்ம ராஜரான அந்த யுதிஷ்டிரர் சிறந்த வானரத்தைக் கொடியாகக்கொண்ட புருஷசிரேஷ்டனைக் காணாமலும் காண்டீவ சப்தத்தைக் கேளாமலும் விருஷ்ணிகளுள் சிறந்தவனான ஸாத்யகியைப்பாராமலும் கவலையுற்றுப் பொறிகள் கலங்கினவரானார். புருஷோத்தமர்களான அவ்விருவரையுங் காணாததினால் அப்பொழுது மனத்துக்கு ஆறுதலையடையவில்லை. பெரிய மனமுள்ளவரும் மிக்க கைவன்மையுள்ளவருமான தர்மராஜர் லோகாபவாததகில் பயந்திருப்பதினாலே ஸாத்யகியினுடைய ரதத்தைப் பற்றி ஆலோசித்தார். மித்திரர்களுக்கு அபயதானஞ் செய்பவனும் உண்மையுள்ளவனும் சினியினுடைய குலத்தில் தோன்றியவனுமான ஸாத்யகி என்னால் ரணகளத்தில் பல்குனனுடைய வழியைநோக்கி அனுப்பப்பட்டான். எனக்கு (அர்ஜுனனுடைய நிலைமையை யறிய வேண்டுமென்கிற) அந்த ஒரே கவலையிருந்தது. இப்பொழுது ஸாத்ய கியையும் பாண்டவனான தனஞ்சயனையும் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற இந்த இரண்டு விதமான கவலைகள் உண்டாயிருக் கின்றன. ஸாத்யகியை அர்ஜுனனைப் பின்தொடர்ந்து செல்லும்படி யனுப்பிவிட்டு யுத்தத்தில் ஸாத்வதனையும் பின்தொடரும்படி யாரையனுப்புவேன்? யுயுதானனைத் தேடாமல் பிராதாவைத் தேடுதலை முயற்சியுடன் செய்வேனாகில் உலகம், 'தர்மபுத்திரனான யுதிஷ்டிரன் பிராதாவைமட்டும் தேடி ஸத்யவிக்ரமனும் விருஷ்ணிவீரனுமான ஸாத்யகியைக் கைவிடுகிறான்' என்று என்னை நிந்திக்கும். அப்படிப் பட்ட நான் லோகாபவாதத்தினின்றும் பயந்திருப்பதினாலே மகாத்மா வான ஸாத்யகியின் வழியைக்குறித்துப் பிருதாபுத்திரனும் விரு கோதரனுமான பீமஸேனனை அனுப்புவேன். சத்துருக்களை யழிக்கிற வனான அர்ஜுனனிடத்தில் எனக்குப் பிரீதியிருப்பதுபோலவே யுத்தத்தில் மிக்க மதங்கொண்டவனும் விருஷ்ணிகளுள் வீரனு மான ஸாத்வதனிடத்திலும் பிரீதி உண்டு. சைனேயநந்தனன் என் னால் மிகப்பெரிதான கார்யத்தில் ஏவப்பட்டான். மகாபலசாலியான அந்த ஸாத்வதனோ நண்பன் வற்புறுத்துவதாலும் கௌரவத்தினாலும்

மகாமீனானது கடலில் புகுவதுபோலப் பாரதசேனையில் புகுந்தான். புத்திமானான விருஷ்ணிவீரனோடு தனிமையில் போர்புரிகின்றவர்களும் திரும்பாதவர்களுமான சூரர்களுடைய சப்தம் இதோ கேட்கிறது. பலவிதத்தாலும் இது ஸமயோசிதமென்று நான் திடமாக நிச்சயிக்கிறேன். மகாரதர்களான அர்ஜுனன் ஸாத்யகி இருவரும் எவ்விடத்திலிருக்கிறார்களோ அவ்விடத்திற்கே வில்லாளியும் பாண்டுநந்தனனுமான பீமஸேனன் செல்வது எனக்கு ருசித்திருக்கிறது. பூமியில் பீமனால் ஸகிக்கத்தகாதது யாதொன்றுமில்லை. இந்தப்பீமன் யுத்தத்தில் முயற்சியுடன் தன் புஜபலத்தைக்கொண்டே பூமியிலுள்ள எல்லா வில்லாளிகளையும் விரைவாக எதிர்த்துப் போர்புரியுந்திறமையுள்ளவன். மகாத்மாவான அவனுடைய பாகுபலத்தை ஆதாரமாகக் கொண்டு நாங்களனைவரும் வனவாஸத்தினின்றும் மீண்டுவந்தோம்; யுத்தங்களில் ஜயிக்கப்படாமலிருக்கிறோம் அந்தப் பாண்டுநந்தனனை பீமஸேனன் ஸாத்வதனைக்குறித்து இவ்விடத்திலிருந்து போவானேயாகில் யுத்தத்தில் ஸாத்வதனும் பல்குனனும் நாதனையுடையவர்களாவார்களன்றோ? சஸ்திரங்களில் தாமே ஸமர்த்தர்களும் வாஸுதேவராலே காக்கப்பட்டவர்களுமான அந்த ஸாத்வதனையும் பல்குனனையும்பற்றி நான் யுத்தத்தில் அதிகம் துக்கப்படவேண்டியதில்லை. ஆனாலும், நான் அவசியம் என்னுடைய துக்கத்தைப்போக்கிக்கொள்ளவேண்டும். ஆதலால், பீமஸேனனை ஸாத்யகியைப் பின்தொடரும்படி அனுப்பப்போகிறேன். அவ்விதம் செய்தால் ஸாத்யகி விஷயத்தில் தகுந்த ஏற்பாடு செய்யப்பட்டதாக நான் நினைப்பேன்' என்று ஆலோசித்தார். தர்மபுத்திரரும் ராஜாவுமான யுதிஷ்டிரர் இவ்வண்ணம் மனத்தினால் நிச்சயித்து ஸாரதியைநோக்கி, 'என்னைப் பீமனிடத்தில் கொண்டுபோய்ச் சேர்' என்று கூறினார். குதிரைகளின்தன்மையை அறிந்தவனான அந்த ஸாரதி தர்மராஜருடைய வார்த்தையைக்கேட்டு ஸ்வர்ணாலங்காரத்துடன்கூடின ரதத்தைப் பீமனருகில் கொண்டுபோய்ச் சேர்த்தான். யுதிஷ்டிரராஜர் பீமஸேனனுடைய ஸம்மதத்தின்மேல் அக்காலத்திற்கேற்றதை ஆலோசித்து மனக்குழப்பமடைந்து அச்சமயத்தில் பல விஷயங்களைக் கட்டளையிடலானார். அரசரே! குந்திபுத்ரரான அந்த யுதிஷ்டிரராஜர் மதிமயக்கத்தையடைந்து பீமனையழைத்து, 'பீம! ஒற்றைத்தேராளியாகித் தேவர்களையும் கந்தர்வர்களையும் அஸுரர்களையும் ஜயித்தவனும் உன்தம்பியுமான அர்ஜுனனுடைய கொடியை நான் காணவில்லை' என்ற வசனத்தைக் கூறினார். பிறகு, அவ்வித நிலைமையையடைந்திருக்கிற தர்மராஜரைப்பார்த்து,

பீமஸேனன், 'உமக்கு இப்படிப்பட்ட கலக்கம்வந்ததைப்பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. முன்புமிருந்த துன்பத்தாலே பீடிக்கப்பட்டவர்களான எங்களுக்கு நீர் கதியாயிருந்தீரல்லவோ? ராஜேந்திரரே! எழுந்திரும்; எழுந்திரும்; கட்டளையிடும். யான் தேவரீருக்கு என்னசெய்யக் கடவேன்? (பகைவரின்) கர்வத்தை நாசம்செய்பவரே! எனக்கு அஸாத்தியமானதும் செய்யத்தகாததும் ஒன்றுமில்லை. கௌரவசிரேஷ்டரே! கட்டளையிடும். தாங்கள் துக்கத்தில் மனத்தைச் செலுத்தவேண்டாம்' என்று விண்ணப்பம்செய்தான். தர்மராஜர் கண்களில் நீர்ததும்ப முகம் மிகவும் வாட்டமுற்றுக் கருநாகம்போற் பெருமூச்சுவிட்டுக்கொண்டு அந்தப் பீமஸேனனைப் பார்த்து, 'கோபமுள்ளவரும் கீர்த்தியையுடையவருமான வாஸுதேவராலே ஊதப்பட்ட பாஞ்சஜன்யமென்கிற சங்கத்தினுடைய சப்தமானது கேட்கிறபடியால் இப்பொழுது உன்னுடைய பிராதாவான தனஞ்சயன் நிச்சயமாய்க் கொல்லப்பட்டுப் படுத்திருக்கிறான். அவன் கொல்லப்பட்ட பிறகு கருடத்வஜர் யுத்தம்பண்ணுகிறாரென்பது நிச்சயம். பலசாலியான எவனுடைய வீர்யத்தைப் பாண்டவர்கள் அண்டிப் பிழைக்கிறார்களோ, அவர்கள் பயம் நேர்ந்தகாலங்களில் ஆயிரங்கண்களையுடையவனான இந்திரனைத் தேவர்கள் அனுசரிப்பதுபோல எவனை அனுஸரிக்கிறார்களோ அந்தச் சூரன் ஸைந்தவனை எதிர்க்கக் கருதிப் பாரதசேனையில் பிரவேசித்தான். பீம! அந்த அர்ஜுனன் சென்றதை அறிவோம்; மறுபடியுந் திரும்பிவருவதையறியோம். கறுத்த நிறமுடையவனும், யௌவனமுடையவனும், சுருண்டதலைமயிருள்ளவனும், காட்சிக்கினியவனும், மகாரதனும், அகன்ற மார்பையுடையவனும், நீண்டகைகளுள்ளவனும், மதயானைபோன்ற விக்கிரமமுள்ளவனும், சகோரபக்ஷியின் கண்கள்போன்ற கண்களையுடையவனும், சிவந்த முகமுள்ளவனும், பகைவர்களுக்குப் பயத்தைப் பெருக்குபவனுமான அந்த அர்ஜுனன் எனக்குப் பிரியத்தையும் ஹிதத்தையும் செய்யும்பொருட்டே இந்திரலோகத்தினின்று இம்மண்ணுலகிற்கு வந்தான். பெரியோர்களை அடுப்பவனும், தைரியமுடையவனும், நன்றியறிவுள்ளவனும், உண்மையான பிரதிஜ்ஞையுள்ளவனுமான தனஞ்சயன் முடிவற்ற பெரிதான பாரதசேனையிற் பிரவேசித்தான். சத்துருக்களையழிக்கின்றவனான அவன் கோரமான கௌரவசேனையில் பிரவேசித்தவுடனே வீரனான ஸாத்வதன் அவனைப் பின்தொடர்ந்து செல்லும்படி அனுப்பப்பட்டான். பீம! அந்த ஸாத்வதனுடைய யுத்தப்பிரயாணத்தை அறிவேன்; மறுபடியும் மீண்டுவருவதை அறியேன். பகைவரை அடக்குபவனே! உனக்கு மங்களம். என்சோகத்திற்குக்காரணம் இதுதான்.

சிறந்த கைகளுள்ளவனே! அர்ஜுனன் நிமித்தமாகவும் ஸாத்வதன் நிமித்தமாகவும் சோகமானது ஹவிஸினால் ஜ்வலிக்கும்படிசெய்யப் பட்ட அக்னி வளர்வதுபோல் மேலும்மேலும் வளர்கிறது. அந்த அர்ஜுனனுடைய கொடியைக் காணவில்லை. ஆதலால், மதிமயக்கத்தை யடைகிறேன். அந்தப் புருஷசிரேஷ்டனையும், மகாரதனான ஸாத்வத னையும் அறிந்துவா. அந்தஸாத்யகி மகாரதனான உன் இளைய ஸகோ தரனைப் பின்தொடர்ந்து சென்றான். யான் தோள்வலிமிக்க அந்த ஸாத் வதனைக்காணாமல் மதிமயக்கம்கொள்ளுகிறேன். ஸைந்தவனுடைய சமீபத்தில் கேசவரோடும் ஸாத்யகியோடுங்கூடி க்ஷேமமாயிருக்கின்ற வனும், சிவந்த கண்களையுடையவனுமான அர்ஜுனனை நீ கண்டு மீண்டுவந்து சொல்லவேண்டும். பாண்டவ! நீ ஸிம்மநாதத்தினாலே எனக்குத் தெரிவிப்பாயாக. சத்துருக்களைத் தபிக்கச்செய்பவனே! பீம! சூரனான ஸவ்யஸாசி கொல்லப்பட்டான்; நிச்சயம். அந்தப் பார்த்தன் கொல்லப்பட்ட பிறகு, கருடத்வஜர் யுத்தம் செய்கிறார். இவருக்கு ஒருவரும் ஸகாயமில்லை. ஆதலால், நான் மதிமயக்கத்தை அடைகி றேன். ஆதலால், யுத்தத்தில் ஸமர்த்தரான வாஸுதேவர் நிச்சய மாகப் போர்புரிகிறார். சத்துருக்களைத் தபிக்கச் செய்கின்ற பீமஸேனா! அவ்விருவர் விஷயத்திலும் என்மனம் தெளிவடையவில்லை. கௌந்தேய! நீ என் சொற்படி நடக்கக் கருதினால் தனஞ்சயனும் மகாவீர்யமுடை யவனான ஸாத்யகியும் சென்ற இடத்திற்குச் செல். தர்மத்தையறிந்த பீம! நான் உனக்கு ஜ்யேஷ்ட பிராதாவாயிருக்கிறேன். பார்த்த! ஸாத் யகியைப்பற்றி நான் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டும். அர்ஜுன னைப்பற்றிக்கூட அவ்வளவு அவசியமில்லை. அந்த ஸாத்யகி என் விருப்பத்தைச் செய்யக்கருதிச் செல்லுதற்கு அருமையானதும் கோர மாயுள்ளதும் மனோதைரியமற்றவர்களால் செல்லமுடியாததுமான ஸவ்ய ஸாசியினுடைய வழியைத் தொடர்ந்து சென்றான். பாண்டவ! கிருஷ் ணனும் அர்ஜுனனும் ஸாத்வதனான ஸாத்யகியும் க்ஷேமத்துடனிருப் பதைக்கண்டு ஸிம்மநாதத்தால் நீ அறிவிப்பாயாக' என்று கூறினார்.

---

## நூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன் சில தார்த்தராஷ்டிரர்களைக் கொன்றதும், அவனைத் துரோணர் தடுத்ததும், அவன் அவருடைய தேரை அழித்ததும்.)

பீமஸேனன், 'பிரம்மாவையும் ருத்திரனையும் இந்திரனையும் வருணனையும் எந்த ரதம் முன்பு வகித்ததோ அந்த ரதத்தின்மீதேறிக் கிருஷ்ணனும் அர்ஜுனனும் யுத்தத்திற்குச் சென்றிருக்கிறார்கள். அவ்விருவருக்கும் பயமே கிடையாது. உங்களுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு இதோ செல்லுகிறேன். நீர் விசனமடையவேண்டாம். அந்தப் புருஷசிரேஷ்டர்களை அடைந்து உமக்குத் தெரிவிக்கிறேன்' என்று கூறினன். பலவானன பீமஸேனன் இவ்வளவுமட்டிலும் சொல்லிவிட்டு யுதிஷ்டிரரைத் த்ருஷ்டத்யும்னனிடத்திலும் மித்திரர்களிடத்திலும் அடிக்கடி சொல்லி ஒப்பித்துவிட்டுச் செல்லத்தொடங்கினன். மகாபலமுள்ள அவன் திருஷ்டத்யும்னனைப் பார்த்து, 'மகா பாகுபலமுள்ளவனே! மகாரதிகரான துரோணர், தர்மராஜரைப் பிடிக்கும் விஷயத்தில் எல்லாவித உபாயத்தோடுமிருப்பதை நீ அறிந்திருக்கிறாய். பார்ஷத! நமக்கு ராஜாவை ரக்ஷிப்பது முக்கியகாரியமாயிருப்பதுபோல எனக்குச் செல்வது முக்கியகாரியமாயில்லை. ஆனால், தர்மராஜரால் யான் இவ்வாறு கட்டளையிடப்பட்டிருக்கிறேன். மறுத்துச் சொல்வதற்கு நான் சக்தியற்றவனாயிருக்கிறேன். மரிக்கப்போகிறவனான ஸைந்தவன் இருக்கிறவிடத்திற்குப் போகப்போகிறேன். தர்மராஜருடைய சொற்படி ஸந்தேகமின்றி இருக்கவேண்டும். நான், பிராதாவான அர்ஜுனன் புத்திசாலியான ஸாத்வதன் இவர்களுடைய வழியிற்செல்வேன். அப்படிப்பட்ட நீ யுத்தத்தில் முயற்சியுடையவனாகிப் பிருதாபுத்ரரான யுதிஷ்டிரரைப் பாதுகாப்பாயாக. யுத்தத்தில் எல்லாக் காரியங்களிலும் இதுதான முக்கியகாரியம்' என்று சொன்னன். மகாராஜரே! திருஷ்டத்யும்னன் அந்த விருகோதரனை நோக்கி, 'பார்த்த! உன்னிஷ்டத்தைச் செய்வேன். ஆலோசியாமல் செல். யுத்தத்தில் துரோணர் திருஷ்டத்யும்னனைக் கொல்லாமல் எவ்விதத்தாலும் தர்மராஜனைப் பிடித்தலைச் செய்யப்போகிறதில்லை' என்று சொன்னன். பிறகு, பீமஸேனன் பாண்டுகுமாரரான அரசரைத் திருஷ்டத்யும்னனிடத்தில் ஒப்பித்து, மூத்தவரான தர்மபுத்திரரை நமஸ்கரித்துப் பல்குனன் சென்ற வழியில் செல்லத்தொடங்கினன். குந்தியினிடத்

தில வாயுவினால் உண்டுபண்ணப்பட்டவனும் ரதிகர்களுள் உத்தமனும் வீரனும் மகாபாகுபலமுள்ளவனுமான பீமஸேனன் தர்மராஜரால் கட்டித்தழுவி அவ்வாறே உச்சிமோந்து மங்களகரமான ஆசீர்வாதங்கள் செய்யப்பெற்று, அர்ச்சிக்கப்பட்டவர்களும் ஸந்தோஷமுள்ள மனத்தையுடையவர்களுமான பிராம்மணர்களைப் பிரதக்ஷிணஞ்செய்து (அக்னி, பசுமாடு, ஹிரண்யம், அறுகம்புல், கோரோசனை, அமிருதம், அக்ஷதம், தயிர் ஆகிய) எட்டு மங்களத்திரவ்யங்களைத் தொட்டுக் கைராதகமென்கிற மதுவைப் பானஞ்செய்து இரண்டுமடங்கு பலமுள்ளவனும் மதத்தினால் கடைக்கண்கள் சிவந்தவனும் பிராம்மணர்களால் ஆசீர்வாதங்கள் செய்யப்பெற்றவனும் சுபநிமித்தங்களால் விஜயத்தை அறிவிக்கப்பட்டவனும் தன்புத்தியானது விஜயத்தையும் ஆனந்தத்தையும் உண்டுபண்ணுவதாயிருப்பதைக் காண்பவனும் அனுகூலமான காற்றுக்களால் விரைவில்வரும்வெற்றியைக் காண்பிக்கப்பெற்றவனும் கவசமணிந்தவனும் மங்களகரமான குண்டலங்களைபணிந்தவனும் கதாயுதமேந்தினவனும் கையுறைபூண்டவனும் அம்புகளையுடையவனுமாக எல்லா உபகரணங்களோடுங்கூடியதும் பூட்டப்பட்டிருக்கின்றதுமான ரதத்தின்மீதேறிச்சென்றான். உருக்கினாலாகியதும் ஸ்வர்ணத்தினால் சித்ரவேலைசெய்யப்பட்டதும் விலையேறப்பெற்றதும் நான்கு புறங்களிலும் இணைக்கப்பட்டிருக்கிறதுமான அவனுடைய கவசமானது மின்னலுடன்கூடியமேகம்போல் விளங்கியது. மஞ்சளும், சிவப்பும், கறுப்பும், வெளுப்புமாகிய நிறங்களுள்ள வஸ்திரங்களால் நன்றாகச்சுற்றப்பட்டவனும், கண்டஸூத்திரத்தோடு கூடியவனுமான பீமஸேனன் இந்திரவில்லுடன் கூடினமேகம்போல் விளங்கினான். பிரஜாநாதரே! பீமஸேனன் போர்புரியவேண்டுமென்கிற எண்ணத்தோடு உம்முடைய ஸைனியத்தைநோக்கிச்சென்றபொழுது கோரமானபாஞ்சஜன்யத்தின் ஒலியொன்று மறுபடியும் உண்டாயிற்று. கோரமானதும் பெரியதும் மூவுலகத்தையும் பயமடையும்படி செய்கின்றதுமான அந்தச் சப்தத்தைக்கேட்டுத் தர்மபுத்ரர் மறுபடியும் மிக்க புஜபலமுள்ள பீமனைநோக்கி, 'விருஷ்ணிகளுள் உத்தமவீரரான ஸ்ரீ வாஸுதேவராலே ஊதப்பட்டதும் ஜலத்தினின்றும் தோன்றியதுமான இந்தச்சிறந்த சங்கமானது பூமியையும் ஆகாயத்தையும் மிக ஒலியிடும்படிசெய்கிறது. ஸவ்யஸாசியானவன் மிகவும் பெரிதான வியஸனத்தையடைந்திருப்பதால், சக்ரகதாதரனான ஸ்ரீ கிருஷ்ணர் எல்லாக் கௌரவர்களோடும் யுத்தஞ்செய்கிறாரென்பது நிச்சயம். பூஜிக்கப்படத்தக்கவளான குந்திதேவியும், த்ரௌபதியும், ஸுபத்திரையும், இவ்விதப் பாபகரமான பெரியவிசனத்தைப் பந்துக்க

ளோடு நிச்சயமாகப் பார்க்கப்போகிறுர்கள். ஆதலால், பீம! தனஞ்சய னிருக்குமிடத்திற்கு விரைவுடன்செல். பார்த்த! தனஞ்சயனைப் பார்க்கவேண்டுமென்கிற எண்ணத்தினுலும், ஸாத்வதன் நிமித்தமாகவும் என்மனம திசைகளும் மூலைத்திசைகளும் தோன்றுவண்ணம் மயங்குகிறது.' என்று சொன்னுர். 'செல், செல்' என்று ஜ்யேஷ்ட ப்ராதாவான தர்மநந்தனரால், அந்தவிருகோதரன் அனுமதிகொடுக்கப் பட்டான். அரசரே! பிறகு, பிரதாபத்துடன் கூடியவனும் ப்ராதாவும் பாண்டுபுத்ரனுமான பீமஸேனன் ஜ்யேஷ்டப்ராதாவான தர்மநந்தரால் அனுப்பப்பட்டவனும் ப்ராதாவுக்குப் பிரியத்தைச்செய்கிறவனும் உடும்புத்தோலால் செய்யப்பட்ட விரலுறைகளையுடையவனும் வில்லைக் கையில்பிடித்தவனுமாகி, துந்துபிவாத்யத்தையடித்து அடிக்கடி சங்கத்தையும்ஊதி ஸிம்மநாதத்தினுல் எதிரொலியிடும்படி செய்து அடிக்கடி நாண்கயிற்றையிழுத்து அந்தச்சப்தத்தினுலே வீரர்களுடைய மனங்களை நழுவச்செய்து தன்னுருவத்தைக் கோரமாகக் காண்பித்துக்கொண்டு பகைவர்களைநோக்கி விரைவாகச்சென்றுன். அந்தப்பீமஸேனனை வேகமுடையவையும் பழக்கப்பட்டவையும் மனமும் காற்றும்போன்ற வேகமுள்ளவையும் கனைக்கின்றவையுமான சிறந்த குதிரைகள் விசோகனுல் நடத்தப்பட்டு இழுத்துச்சென்றன. பார்த்தன் கையினுல் நாண் கயிற்றை நன்றுக இழுத்தும் படைமுனையை அறுத்தும் அடித்தும் இழித்தும் தள்ளியும் மிகக்கலக்கினுன். செல்கின்ற மிக்க புஜபலமுள்ள அந்தப் பீமஸேனனைச் சூரர்களான பாஞ்சாலர்கள் ஸோமகர்களுடன் சேர்ந்து இந்திரனைத் தேவர்கள் பின்தொடர்வதுபோலப் பின்தொடர்ந் தார்கள். மகாராஜரே! உம்மைச் சேர்ந்தவர்களான துச்சாஸனன், சித்ரஸேனன், குண்டபேதி, விவிம்சதி, துர்முகன், துஸ்ஸஹன், விகர் ணன், சலன், விந்தன், அனுவிந்தன், ஸுமுகன், தீர்க்கபாகு, சுதர் சனன், பிருந்தாரகன், ஸுஹஸ்தன், ஸுஷேணன், தீர்க்கலோசனன், அபயன், ரௌத்ரகர்மா, ஸுவர்மா, துர்விமோசனன் இவர்களெல்லோரும் பீமனை எதிர்த்துச் சூழ்ந்துகொண்டார்கள். பின் தொடர்ந்துவருகின்ற ஸைனிகர்களையுடையவர்களும், வீரர்களுமான ரதிகஸிரேஷ்டர்கள் யுத்தகளத்தில் மிகுந்த முயற்சியோடு பிரகாசிப்பவர்களாகிப் பீமஸேனனுக்கருகில் வந்தார்கள். அந்த மகாரதனுன பீமஸேனன் யுத்தங்களில் சூரர்களால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டான். பராக்கிரமசாலியும் குந்திபுத்ரனுமான பீமஸேனன் அவர்களை நன்றுக்ப்பார்த்து ஸிம்மமானது அற்பமிருகங்களை எதிர்ப்பதுபோல் வேகமாக எதிர்த்தான். அந்தயுத்தத்தில் அந்த வீரர்கள், மேகங்கள்

உதித்த சூரியனைமறைப்பதுபோல அம்புகளால் பீமனைமறைத்துக் கொண்டு தேவஸம்பந்தம்பெற்ற மகாஸ்திரங்களை வெளியிட்டார்கள். அரசரே! பிறகு, பராக்ரமசாலியானபீமன் கோபங்கொண்டு முன்னிலையிலிருக்கின்ற தேர்ப்படையின்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். யுத்தத்தில் வதம்பண்ணப்படுகிறவர்களும், பயங்கரமான பலமுடையவர்களும், யுத்தத்தில் ஜயத்தைவிரும்புகின்றவர்களும், மகாரதர்களுமான அந்த உம்முடைய புத்ரர்கள் பீமனோடு போர்புரிந்தார்கள். பிறகு, துச்சாஸனன் கோபங்கொண்டு பாண்டுநந்தனனான பீமனைக்கொல்ல எண்ணிக் கூர்மையுள்ளதும் முழுதும் எஃகினாற்செய்ததுமானரதசக்தியைப் பிரயோகித்தான். உம்முடைய புத்திரனால் பிரயோகிக்கப்பட்டு வருகின்ற அந்த மகாசக்தியைப் பீமஸேனன் இரண்டாகத்துண்டாக்கினான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, பலசாலியானபீமன் மிகுந்த கோபங்கொண்டு குண்டபேதி ஸுஷேணன் தீர்க்கநேத்திரன் இம்மூவரையும் கூர்மையுள்ள வேறு மூன்றுபாணங்களாலே கொன்றான். பிறகு பீமன் மறுபடியும் யுத்தஞ்செய்கின்ற வீரர்களான உம்முடைய புத்திரர்களுள் வீரனும கௌரவர்களுக்குக் கீர்த்தியை யுண்டுபண்ணுகிறவனுமான பிருந்தாரகனைக் கொன்றான். பீமன் மறுபடியுமே உம்முடைய புத்திரர்களான அபயன் ரௌத்ரகர்மா துர்விமோசனன் ஆகிய மூவரையும் மூன்றுபாணங்களால் கொன்றான். மகாராஜரே! பலவானான பீமனாலே கொல்லப்படுகின்ற உம்முடைய புத்திரர்கள் அடிக்கிறவர்களுள் சிறந்தவனான பீமனை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்தார்கள். அவர்கள் வர்ஷாகாலத்தில் மேகங்கள் மலையின்மீது வர்ஷதாரைகளைப் பொழிவதுபோல யுத்தத்தில் பயங்கரமான செய்கையுள்ள பீமன்மீது அம்புகளைப் பொழிந்தார்கள். சத்துருக்களை ஸம்ஹரிக்கின்றவனான அந்தப் பாண்டுபுத்ரன் கல்மாரியை மலையானது தாங்குவதுபோல அந்தச் சரமாரியை ஏற்றுக்கொண்டான். கொஞ்சமேனும துன்பமடையவில்லை. குந்திபுத்திரனானபீமன் சேர்ந்திருக்கின்ற விந்தானுவிந்தர்களையும் உம்முடைய குமாரனான ஸுவர்மாவையும் அட்டஹாஸத்துடன் அம்புகளால் யமலோகத்திற் கனுப்பினான். பரதசிரேஷ்டரே! பிறகு, வீரனான ஸுதர்சனனென்கிற உம்முடைய புத்ரனை யுத்தத்தில் பீமன் விரைவாக அடித்தான். அந்த ஸுதர்சனன் கீழேவிழுந்து உயிரையுமிழந்தான். அந்தப் பாண்டுநந்தனன் எல்லாத் திக்குக்களையும் நன்றாகப்பார்த்து அந்தத் தேர்ப்படையைச் சிறிதுநோத்திற்குள்ளாகவே அம்புகளாலே அடித்தான். பிரஜைகளுக்கு நாதரே! பிறகு,

உம்முடைய புத்திரர்களெல்லோரும் யுத்தகளத்தில் த்ரோணனாலும் அர்ஜுனனாலும் மான்கள்போல மனமுறிந்தவர்களும் பீமஸேனனிட த்திலுண்டான பயத்தினால் பிடிக்கப்பட்டவர்களுமாக விரைவாக ஓடி னார்கள். அரசரே! உமது குமாரர்களுடைய பெரியசேனையைக் குந்தி புத்திரன் பின்தொடர்ந்து கௌரவசேனையிலுள்ளவர்களை நான்குபுற த்திலும் யுத்தகளத்திலடித்தான். மகாராஜரே! பீமஸேனனால் வதம் பண்ணப்படுகின்ற உம்மைச்சேர்ந்தவீரர்கள் உத்தமமான குதிரைகளை ஓட்டிக்கொண்டு பீமஸேனனைவிட்டு யுத்தரங்கத்தினின்று சென்றார் கள். மகா பலசாலியும் பாண்டுநந்தனனுமான பீமஸேனன் யுத்தத்தில் அவர்களைஜயித்து ஸிம்மநாதத்தைச்செய்து தோள்கள்தட்டிக் கைகளை உரக்கக்கொட்டிக்கொண்டு துரோணருடைய ஸமீபத்தைக் குறித்துச் சென்றான். அந்தப் பீமஸேனனைப் பொங்கிவரும் கடலைக் கரைதடுப் பதுபோலத் துரோணாசாரியர் தடுத்தார். அரசரே! துரோணர் யுத்தத் தில் குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடிமரத்தோடுங்கூடிய பீம ஸேனனுடைய ரதத்தை விரைவாக மறைத்தார். அது ஆச்சரியமா யிருந்தது. துரோணர் புன்சிரிப்புடன் பீமஸேனனை நாராசத்தினால் நெற்றியிலடித்தார். அப்பொழுது பீமன் மேல்நோக்கிய கிரணங்க ளுள்ள சூரியன்போல் விளங்கினான். அந்தத் துரோணாசாரியர், 'பல்கு னன்போலவே பீமனும் மரியாதைசெய்வான்' என்றெண்ணி அவனைப் பார்த்து, 'பீமஸேன! மகாபலசாலியே! சத்துருவாயுள்ளஎன்னை இப் பொழுது யுத்தத்தில் ஜயிக்காமல் சத்துருசேனையில் நீபிரவேசிப்பது இயலாது. உன்னிளைய ஸகோதரனை அர்ஜுனனோடுகூடின கிருஷ் ணன் என் சம்மதத்தின்மேல் ஸேனையில் பிரவேசித்தான். உன்னாலே யோ இச்சமயத்தில் என்னுடைய படையானது பிரவேசிக்க ஸாத்ய மாகாது' என்று கூறினார். பிறகு, பீமனோ ஆசார்யருடைய அந்த அசங்யமனைத்தையும் கேட்டுக் கோபங்கொண்டு கண்கள் சிவந்து பெருமூச்சுவிட்டு அவரைநோக்கி, [1]"ப்ரம்மபந்துவே! உமது ஸம்ம தத்தின்மேல் அர்ஜுனன் யுத்தபூமியில் பிரவேசிக்கவில்லை. அவனோ (ஒருவராலும்) ஜயிக்கமுடியாதவன். அவன் இந்திரன் ஸேனையிலும்பிர வேசிப்பான். பிராம்மணரே! சிறந்த பூஜையைச்செய்கின்ற எந்த அர் ஜுனனாலே நீர் மதிக்கப்பட்டீரோ தயையுள்ள அந்த அர்ஜுனன் நானல்லேன்; நான் உமக்குச்சத்துருவான பீமஸேனன். அக்காலத்தில் நீர் எங்களுக்குத் தந்தை; குரு; உறவினர். நாங்கள் உமக்குப் புத்திர ரென் றெண்ணி எல்லோரும் உம்மை வணங்கியிருந்தோம், இவ்விதம்

[1] இது இழிவுச்சொல்.

நீர் எங்களிடம் பேசுவதால் அது இப்பொழுது விபரீதமாகக் காணப்படுகிறது. நீர் உம்மைச் சத்துருவாக எண்ணுவீராகில் அஃது இச்சமயத்தில் அவ்வாறே இருக்கட்டும். சத்துருவாயிருக்கிற உமக்குத் தகுந்தகாரியத்தை இதோ பீமஸேனன் செய்யப்போகிறான்' என்று மறுமொழிகூறினான். அரசரே! பிறகு, வீரனான பீமன் காலதண்டத்தை யமன் சுழற்றுவதுபோலக் கதாயுதத்தைச்சுழற்றித் துரோணரைக்குறித்துப் பிரயோகித்து ரதத்தினின்றும் கிளம்பிக் குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடிமரத்தோடுங்கூடிய துரோணருடைய ரதத்தை அப்பொழுது பொடியாக்கினான். பாண்டவனான பீமனுடைய அந்தப்பராக்ரமத்தை ஆச்சரியமாகக்கண்டோம். மகாபலசாலியான பீமஸேனன் துரோணரை ரதத்தையிழந்தவராகச்செய்து நான்குபக்கங்களிலும் உமதுசைனியங்களை எதிர்த்தான். அரசரே! வாயுவுக்கு ஸமமான பராக்ரமமுள்ள அந்தப்பீமன் காற்றானது பலத்தினால் மரங்களை முறிப்பதுபோல வேகத்தினால் யுத்தவீரர்களைத் துகைத்துக்கொண்டு யுத்தகளத்தில் ஸஞ்சரித்தான் மகாபலசாலியான அந்தப் பாண்டவனாலே அப்பொழுது ஜயிக்கப்பட்டவரும் அடிப்பவர்களுள் சிறந்தவருமான துரோணர் வேறுரதத்தின்மீது ஏறினார்.

---

## நூற்றிருபத்தெட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன் மறுபடியும் துரோணருடைய ரதங்களைநாசஞ்செய்து சென்று அர்ஜுனனைக்கண்டு ஸிம்மநாதம் செய்ததும், அதைக்கேட்டு யுதிஷ்டிரர் மகிழ்ந்ததும்.)

யுத்தகளத்தில் தோரணிகளுடைய படையைத்தாண்டிச் செல்லுகின்ற பாண்டுகுமாரனான பீமஸேனனைத் துரோணாசாரியர் தடுக்கக்கருதி அட்டகாஸஞ்செய்துகொண்டு அம்புமழைகளைப்பொழிந்தார். அவருடைய வில்லினின்றும் விடுபட்ட அந்தப்பாண ஸமூகங்களை அந்தப்பீமன் பக்ஷிக்கிறவன்போலப் பலத்தை வெளியிடுவதினால் ஸகோதரர்களை மயங்கும்படி செய்துகொண்டு எதிர்த்தான். அந்தப் பீமனை உம்முடைய புத்திரர்களாலே தூண்டப்பட்ட சிறந்தவில்லாளிகளெல்லாம் யுத்தத்தில் அதிகமான வேகத்தையடைந்து நான்குபக்கத்திலும் சூழ்ந்துதடுத்தார்கள். அவர்களால் சூழப்பட்ட அந்தப்பீமன் கோபத்தினால் எரிப்பவன்போலிருந்துகொண்டும் ஸிம்மம்போலக்

கர்ஜித்துக்கொண்டும் சத்துருக்களுடைய கக்ஷியையழிப்பதான, மிக வும் கோரமான கதாயுதத்தைக் கையில் எடுத்து வேகமாக அவர்களின் மீது பிரயோகஞ்செய்தான். மகாராஜரே! பீமனால் மூச்சை அடக்கிக் கொண்டு சுழற்றி எறியப்பட்ட அந்தக் கதாயுதமானது இந்திரனாலே பிரயோகிக்கப்பட்ட வஜ்ராயுதம்போலப் போர்க்களத்தில் உமது சைனி கர்களை நாசஞ்செய்தது. அரசரே! பெரிய ஒலியினால் பூமியைநிரப்பு வதும் ஒளியினால் விளங்குவதும் அச்சந்தருவதுமான அந்தக்கதை யானது உம்முடைய புத்ரர்களைப் பயமுறுத்தியது. ஒளியினால்நிரம்பிய மகாவேகத்துடன்வருகின்ற அந்தக்கதையைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர் களெல்லோரும் பயங்கரமான சப்தங்களைவெளியிட்டுக்கொண்டு ஓடினார் கள். அப்பொழுது ரணகளத்தில் ஸகிக்கமுடியாததான பீமனுடைய ஸிம்மநாதத்தைக்கேட்டு வீரர்கள் பயந்து கீழேவிழுந்தார்கள். ரதிகர்க ளும் ரதங்களினின்றும் கீழேவிழுந்தார்கள். கதையைக்கையில்கொண்ட பீமஸேனனாலே கொல்லப்படுகின்ற உம்மைச்சேர்ந்தவர்கள் [1]புலிகள் வருவதை மோப்பத்தினாலறிந்த மான்கள்போலப் பயந்தவர்களாகி யுத் தத்தில் ஓடினார்கள். அந்தக் குந்திபுத்ரன் யுத்தத்தில் நெருங்கமுடி யாதவர்களான அந்தச் சத்துருக்களை ஓடும்படிசெய்து பக்ஷிகளுக்கு ராஜாவான கருடன்போல வேகமாக ஸேனையைத் தாண்டிச் சென்றான். மகாராஜரே! அவ்வாறு தீங்கிழைப்பவனும் ரதயூதபதிகளின் கூட்டத் துக்குத் தலைவனுமான பீமஸேனனைத் துரோணர் எதிர்த்தார். துரோ ணர் யுத்தத்தில் பீமனை அலைகள்போன்ற அம்புவரிசைகளால் தடுத் துப் பாண்டவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணிக்கொண்டு விரைவாக ஸிம்மநாதஞ்செய்தார். மகாராஜரே! துரோணருக்கும் மகாத்மாவான பீமனுக்கும் தேவாஸுர யுத்தத்திற்கொப்பானதும் கோரமானதும் மிகப் பெரிதுமான அவ்விதமான போர் நேர்ந்தது. பிறகு, துரோண ருடைய வில்லினின்று விடுபட்ட கூர்மையுள்ள அம்புகளாலே யுத்தத் தில் சூரர்கள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் கொல்லப்பட்டார் கள். அரசரே! பிறகு, பாண்டுபுத்திரனான பீமன் ரதத்தினின்று துள் ளிக் குதித்து வேகத்தையடைந்து இரண்டுகண்களையும்மூடிக்கொண்டு காலாளாகித் துரோணரை எதிர்த்தான். பலவானும் நரசிரேஷ்டனு மான பீமஸேனன் தலையைத் தோளில் சாய்த்துக்கொண்டும், கைகளை ஸ்திரமாக மார்பில்வைத்துக்கொண்டும் மனம் காற்று கருடன் இவைக ளுடைய வேகத்தையடைந்து காளையானது வர்ஷதாரையை விளையாட் டுடன் தாங்குவதுபோல அம்புமழையை ஏற்றுக்கொண்டான். ஐயா!

[1] 'வ்யாக்ரக்ராதாம்' என்பது மூலம்.

அடிக்கப்படுகின்ற மகாபலசாலியான பீமன் யுத்தரங்கத்தில் துரோண ருடைய ரதத்தைக் கையினால் ஏர்க்காலைப்பிடித்து வேகமாயெறிந்தான். அரசரே! யுத்தத்தில் வேகமுள்ள துரோணர் பீமனால் எறியப்பட்டதை ஆச்சர்யத்தினால் மலர்ந்த கண்களுள்ள உம்முடைய வீரர்கள் பார்த் தார்கள்? துரோணர் பூமியில் சூர்ணமாக்கப்பட்ட அந்த ரதத்தைவிட்டு வேறுரதத்தின்மீதேறி மறுபடியும் வ்யூகத்தின் முன்பக்கத்தையடைந் தார். அவ்வாறு வருகின்றவரும் உத்ஸாகத்தையிழந்தவருமான அந் தத் துரோணாசாரியரைப் பீமன் அப்பொழுது பார்த்து வேகத்தோடு மறுபடியும் சென்று தேரினுடைய ஏர்க்காலைப் பிடித்து மிக்க கோபத் துடன் அந்தப் பெரிய ரதத்தையும் எறிந்தான். இவ்வாறே பீமஸேன னால் விளையாட்டாகவே எட்டுரதங்கள் எறியப்பட்டன. அவன் திரும் பவும் திரும்பவும் ஒரு கண்ணிமைப்பொழுதுக்குள் தன் ரதத்தையடை ந்தவனாகக் காணப்பட்டான். ஆச்சர்யத்தினால் மலர்ந்த கண்களையுடை யவர்களான உம்முடைய யுத்தவீரர்களும் (அவனைப்) பார்த்தார்கள். கௌரவரே! அந்தக்ஷணத்தில் அந்தப் பீமஸேனனுடைய ஸாரதியான வன் குதிரைகளை விரைவாக ஓட்டினான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, மகாபலசாலியான பீமஸேனன் தன் ரதத்தையடைந்து வேகத் தோடு உமது குமாரனுடைய ஸேனையைக்குறித்து எதிர்த்துச்சென் றான். அந்தப்பீமன் பெருங்காற்றானது மரங்களையொடிப்பதுபோல யுத்தத்தில் க்ஷத்திரியர்களை நாசம்பண்ணிக்கொண்டும் நதியின் வேக மானது மரங்களை (வேரைப்) பறித்துக்கொண்டு செல்வதுபோல ஸேனை யைப்பிளந்துகொண்டும்சென்றான். அதிபலசாலியானவீரன் கிருதவர்மா வினால் பாதுகாக்கப்பட்டுள்ள போஜஸேனையை அடைந்து பலத்தினால் அதனையும் அழித்துக்கொண்டுசென்றான். பாண்டவன் தலத்வனியினால் படைகளை நடுங்கச்செய்துகொண்டு புலியானது காளைகளை ஜயிப்பது போல எல்லா ஸைனியங்களையும் ஜயித்தான். கௌந்தேயன் போஜ ஸேனையையும் தரதர்களுடைய ஸேனையையும் மிலேச்சர்களுடைய கூட்டங்களையும் யுத்தத்தில் ஸமர்த்தர்களான வேறு அநேக வீரர்களை யுந் தாண்டி யுத்தஞ்செய்கின்ற மஹாரதனான ஸாத்யகியையும் நன்று கப்பார்த்து முயற்சியுடன் அப்பொழுது ரதத்துடன் வேகமாகச் சென் றான். மகாராஜரே! பராக்ரமசாலியும் பாண்டுநந்தனனுமான பீமஸே னன் அர்ஜுனனைப் பார்க்கக்கருதி யுத்தத்தில் உமது போர்வீரர்களைத் தாண்டி ஸைந்தவனைக் கொல்வதற்காகப் பராக்ரமத்தை வெளிப்படுத் திக்கொண்டு அங்கு போர்புரிகின்ற மகாரதனான அர்ஜுனனைக் கண் டான். மகாராஜரே! புருஷசிரேஷ்டனான பீமன் அந்த அர்ஜுனனைக்

கண்டு வர்ஷாகாலத்தில் முழக்கத்துடன்கூடின மேகம்போல் பேரிரைச்சல்செய்து அழைத்தான். பார்த்தனும் வாஸுதேவரும் யுத்தத்தில் கர்ஜிக்கின்ற அந்தப் பீமஸேனனுடைய கோரமான சப்தத்தைக் கேட்டார்கள். வீரர்களான அவ்விருவரும் கோபங்கொண்ட பீமஸேனனுடைய ஸிம்மநாதத்தைக் கேட்டு அவனைப் பார்க்க எண்ணி அடிக்கடி சேர்ந்து கர்ஜித்தார்கள். மகாராஜரே! பிறகு, பார்த்தனும் மாதவரும் கர்ஜிக்கும் இரண்டுகாளைகள்போலப் பெரிய சப்தங்களைச் செய்துகொண்டே (பகைவர்களை) எதிர்த்துச் சென்றார்கள். மகாராஜரே! தர்மராஜனுடைய புத்திரரான யுதிஷ்டிரர் பீமஸேனனுடைய சப்தத்தையும் வில்லாளியான பல்குனனுடைய சப்தத்தையுங்கேட்டு மனக்களிப்புற்றார். பிரபுவான தர்மராஜர் அவ்விருவருடைய அந்தச் சப்தத்தையுங் கேட்டுச் சோகத்தைவிட்டு யுத்தத்தில் தனஞ்சயனுக்கு ஜயாசீர்வாதஞ் செய்தார்.

மிக்க மதங்கொண்ட பீமஸேனன் அவ்வாறு கர்ஜிக்குமளவில், பெரிய கைவன்மையுள்ளவரும் தார்மிகர்களுள் உத்தமரும் தர்மராஜனுக்குப் புத்திரருமான யுதிஷ்டிரர் நகைத்துத் தம்முள்ளத்திலிருக்கும் விஷயத்தை ஆலோசித்து, 'பீம! உன்னால் குறிப்பிக்கப்பட்டது; மூத்தவனான என்னுடைய வார்த்தை அவ்வாறே அனுஷ்டிக்கப்பட்டது. பாண்டவ! எவர்களுக்கு நீ சத்துருவாக இருக்கிறாயோ அவர்களுக்கு யுத்தத்தில் ஜயம் கிடைக்காது. நல்வினைப்பயனால் யுத்தரங்கத்தில் ஸவ்யஸாசியான தனஞ்சயன் ஜீவித்திருக்கிறான். ஸத்யபராக்ரமனும் வீரனுமான ஸாத்யகியும் பாக்ய விசேஷத்தினால் க்ஷேமமாயிருக்கிறான். வாஸுதேவரும் தனஞ்சயனும் கர்ஜிப்பதைப் பாக்ய விசேஷத்தால் கேட்கிறேன். இந்திரனை யுத்தத்தில் ஜயித்து அக்னிபகவானை த்ருப்தியடையச் செய்தவனும் யுத்தத்தில் சத்துருக்களை ஸம்ஹரிக்கின்றவனுமான பல்குனன் பாக்கியவிசேஷத்தினால் ஜீவித்திருக்கிறான். எவனுடைய தோள்வலிமையை நாமனைவரும் (துணையாக) அடுத்து ஜீவித்திருக்கிறோமோ சத்துருஸைனியங்களைக் கொல்லுபவனான அந்தப் பல்குனன் பாக்யத்தால் ஜீவிக்கிறான். தேவர்களாலும் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாத நிவாதகவசர்கள் எவனாலே ஒரே வில்லின் ஸகாயத்தாலே ஜயிக்கப்பட்டார்களோ அந்தப் பார்த்தன் பாக்யத்தால் ஜீவித்திருக்கிறான். எவன் விராடநகரத்தில் பசுக்களைப் பிடிப்பதற்காக ஒன்றுசேர்ந்துவந்த எல்லாக் கௌரவர்களையும் ஜயித்தானோ அந்தப் பார்த்தன் பாக்யத்தால் ஜீவித்திருக்கிறான். எவன் புஜ

பலத்தினால் மஹாயுத்தத்தில் பதினாலாயிரம் காலகேயர்களைக் கொன்றானோ அந்தப் பார்த்தன் பாக்யாதிசயத்தால் ஜீவித்திருக்கிறான். எவன் அஸ்திரவீர்யத்தினால் பலசாலியான (சித்திரஸேனனாகிய) கந்தர்வராஜனைத் துரியோதனன்பொருட்டு ஜயித்தானோ அந்தப் பார்த்தன் பாக்யாதிசயத்தினால் ஜீவிக்கிறான். கிரீடத்தையும் மாலையையுமணிந்தவனும் பலமுடையவனும் வெண்ணிறமுள்ள குதிரைகளையுடையவனுங் கிருஷ்ணனை ஸாரதியாகவுடையவனும் எப்பொழுதும் என்னன்புக்குப் பாத்ரனுமான அந்தப் பார்த்தன் பாக்யவிசேஷத்தால் ஜீவித்திருக்கிறான். புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனும் செய்யமுடியாத காரியத்தைச் செய்ய எண்ணினவனுமான எவன் ஜயத்ரதனுடைய வதத்தை விரும்பிப் பிரதிஜ்ஞையைச் செய்தானோ அந்தத் தனஞ்சயன் ஸைந்தவனை யுத்தத்தில் வதஞ்செய்வனா? வாஸுதேவரால் ரக்ஷிக்கப்பட்டவனும் சூரியன் அஸ்தமிப்பதற்குள் பிரதிஜ்ஞையை நிறைவேற்றினவனுமான அர்ஜுனனோடு நான் சேர்க்கைபெறுவேனா? துரியோதனனுக்கு ஹிதத்தைத் தேடுவதில் ஆவலுள்ளவனும் அரசனும் அல்பனுமான ஸைந்தவன் பல்குனனால் தள்ளப்பட்டுத் தன் சத்துருக்களை ஆனந்தமடையும்படி செய்வனா? துரியோதனராஜன் யுத்தத்தில் ஸைந்தவன் பல்குனனால் தள்ளப்பட்டதைக்கண்டு நமது விஷயத்தில் ஸமாதானத்தை யடைவனா? யுத்தத்தில் தன் தம்பியர்கள் பீமஸேனனால் கொல்லப்பட்டதைப் பார்த்து மூடனான துரியோதனன் நம் விஷயத்தில் ஸமாதானத்தை அடைவனா? மற்றப் பெரிய போர்வீரர்களும் பூதலத்தில் தள்ளப்பட்டதைப் பார்த்து மந்தனான துர்யோதனன் பச்சாத்தாபத்தை அடைவனா? பீஷ்மர் ஒருவர் ஒழிந்ததோடு நம்முடைய வைரமானது ஒழியுமா? மிகுதியுள்ளவர்களை ரக்ஷிக்கும்பொருட்டுத் துர்யோதனன் ஸந்தியைப் பெறுவனா?'' என்று கூறினர்.

கருணைமேற்கொண்ட அந்தத் தர்மராஜர் அப்பொழுது இப்படிப் பலவிதமாகச் சிந்தித்துக்கொண்டிருக்கும் ஸமயத்தில் கோரமான யுத்தம் நடந்தது'' என்று கூறினன்.

---

## நூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமனால் கர்ணன் தோல்வியடைந்ததும், துச்சலன் கொல்லப்பட்டதும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! அவ்வாறு கர்ஜிக்கின்றவனும் மேகத்தினிடிமுழக்கம்போன்ற முழக்கமுள்ளவனும் மகாபலசாலியு

மான அந்தப் பீமஸேனனை எந்த வீரர்கள் நான்குபுறத்திலும் சூழ்ந்து கொண்டார்கள்? யுத்தத்தில் கோபங்கொண்டவனான பீமஸேனனுக்கு எதிரில் நிற்கக்கூடிய ஒருவனையும் மூன்றுலகங்களிலும் நான் காண்கிலேன். ஸஞ்சய! யமன்போன்றவனும் கதாயுத்தம் செய்ய விரும்பியவனுமான பீமஸேனனுடைய முன்னிலையில் இந்த யுத்தத்தில் நிற்கக்கூடிய மனிதனை நான் காண்கிறேனில்லை. எவன் ரதத்தை ரதத்தாலும் யானையை யானையாலும் நாசம் செய்வானோ அப்படிப்பட்ட பீமனுடைய யுத்தத்தில் ஸாக்ஷாத் இந்திரனாயிருந்தாலும் எவன் (எதிர்த்து) நிற்பான்? கோபங்கொண்டு என் புத்திரர்களைக் கொல்லவிரும்பின பீமஸேனனுக்கெதிரில் துர்யோதனனுக்கு ஹிதத்தைச் செய்ய எந்த வீரர்கள் நின்றார்கள்? என் புத்திரர்களாகிற புற்களை எரிக்கப்போகிறதான பீமஸேனனான காட்டுத்தீக்கெதிரில் யுத்தமுனையில் எந்த மனிதர்கள் நின்றார்கள்? (ஊழிக்காலத்தில்) யமனால் எல்லாப் பிரஜைகளும் தூரத் தப்படுவதுபோலப் பீமனுடைய யுத்தத்தில் (அவனால்) என்புத்ரர்கள் தூரத்தப்படுவதைக் கண்டு எந்த வீரர்கள் பீமனைச் சூழ்ந்து தடுத்தார்கள்? எனக்குப் பீமனிடத்தில் இருப்பதுபோன்ற பயமானது அர்ஜுனனிடத்திலாவது கிருஷ்ணனிடத்திலாவது ஸாத்யகியினிடத்திலாவது அக்னியிற் பிறந்தவனான திருஷ்டத்யும்னனிடத்திலாவது இல்லை. ஸஞ்சய! என் புத்ரர்களை எரிக்க எண்ணங்கொண்டு (கதாயுதத்தோடு) மிகவும் ஜ்வலிக்கின்ற பீமனாகிய நெருப்புக்கு நான்கு புறங்களிலும் எந்தச் சூரர்கள் சூழ்ந்துநின்றார்கள்? அதனை எனக்குச்சொல்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"அவ்வாறு கர்ஜிக்கின்ற மகாபலசாலியான பீமஸேனனைப் பலசாலியான கர்ணனும் மிக்க சப்தத்தோடு எதிர்த்தான். மிக்க கோபமுள்ள கர்ணன் மிகப்பெரிதானவில்லை நாணேவிபிடும்படி செய்துகொண்டு நல்ல யுத்தத்தை விரும்பி யுத்தத்தில் தன்பலத்தைக்காண்பிப்பவனாகிக் காற்றினுடையவழியை மரம் தடுப்பதுபோலப் பீமனுடைய வழியைத் தடுத்தான். வீரனான பீமனும் மனக்கொதிப்புடன் முன்னிலையில் நிற்கின்ற சூரியகுமாரனைக்கண்டு அதிககோபங்கொண்டு சாணையில் தீட்டப்பட்டுள்ள அம்புகளை அவன்மீது பிரயோகஞ்செய்தான். கர்ணனும் அவைகளை ஏற்றுக்கொண்டு திரும்ப அம்புகளையும் பிரயோகித்தான். பிறகு, கர்ணனுக்கும் பீமனுக்கும்நேர்ந்த யுத்தத்தில் அப்பொழுது முயற்சிசெய்கின்றவர்களும் பார்த்துக்கொண்டிருப்பவர்களுமான எல்லாவீரர்களுக்கும் அங்கங்கள் மிகநடுக்கமுற்றன. ரதிகர்

கள் குதிரைவீரர்கள் இவர்களுடைய சப்தத்தையும், பீமன், கர்ணன் இவ்விருவர்களுடைய தல்த்வனியையும் யுத்தரங்கத்தில் பயங்கரமான பீமனுடைய சப்தத்தையுங்கேட்டு க்ஷத்ரியசிரேஷ்டர்கள் ஆகாயத்தையும் பூமியையும் நன்குநிறைக்கப்பட்டனவாக எண்ணினார்கள். மறுபடியும், மகாத்மாவான பாண்டவனுடைய கோரமான சப்தத்தினாலே யுத்தகளத்தில் எல்லாவீரர்களுடைய விற்களும் பூமியில் நழுவிவிழுந்தன. சிலவீரர்களுடைய கைகளிலிருந்து சஸ்திரங்கள் கீழேவிழுந்தன. சிலவீரர்களுக்கு உயிர்களும்போயின. எல்லாம பயந்துகொண்டு ஜலமலங்களைப்பெருக்கின. எல்லாவாகனங்களும் மனவருத்தத்தை அடைந்தவையாயின. மேலும், அனேகம் கொடிய துர்நிமித்தங்களும் தோன்றின. அரசரே! மிகநெருங்கியதான பீமகர்ணர்களுடைய யுத்தத்தில் ஆகாயம, கழுகுகள் பருந்துகள் இவைகளினுடைய கூட்டங்களாலே நன்றாக மூடப்பட்டதாயிற்று; பிறகு, கர்ணனே இருபது பாணங்களாலே பீமனையடித்து விரைவுடன் ஐந்துபாணங்களாலே அவன் ஸாரதியையும் அடித்தான். விரைவாக வேலைகளைச் செய்கிறவனும் மிக்க கீர்த்தி பொருந்தியவனுமான பீமஸேனனும் அட்டகாசஞ்செய்து ரணகளத்தில் அறுபத்துநான்குபாணங்களைக் கர்ணன்மீது பிரயோகித்துக் கொண்டு எதிர்த்து வந்தான். சிறந்த வில்லாளியான கர்ணன் அந்தப் பீமன்மீது நான்குபாணங்களைப் பிரயோகஞ்செய்தான். அரசரே! பீமன் அஸ்தலாகவத்தைக் காண்பித்துக்கொண்டு அந்தப் பாணங்களைத் தன்னைவந்து நாடுவதற்குள்ளாகப் படிந்த கணுக்களுள்ள அம்புகளாலே பலவாறு அறுத்தான். அவனைக் கர்ணன் அனேகமான பாணஸமூகங்களாலே மூடினான். கர்ணனால் பலவாறாக மூடப்படுகிறவனும் மகாரதனுமான பாண்டுபுத்திரன் கர்ணனுடையவில்லைக் கைப்பிடியில் வெட்டினான். உட்படிந்த கணுக்களுள்ள அனேக அமபுகளாலே அவனையும் அடித்தான். பிறகு, பயங்கரமான செய்கையுள்ள மகாரதனான ஸூதபுத்ரன் வேறுவில்லை யெடுத்து நாணேற்றி யுத்தத்தில் பீமனை அடித்தான். பீமன் மிக்க கோபங்கொண்டவனாகிக் கர்ணனுடைய மார்பில் கணுக்கள் படிந்துள்ள மூன்று பாணங்களை வேகமாக நாட்டினான். பரதஸ்ரேஷ்டரே! அப்பொழுது நடுமார்பில் நாட்டப்பட்டுள்ள அந்த அம்புகளால் கர்ணன் மூன்று சிகரங்களோடுகூடின உன்னதமானமலை போல விளங்கினான். உத்தமமான பாணங்களாலே அடிக்கப்பட்ட அந்தக் கர்ணனுடைய ரக்தமானது தாதுக்களைப்பெருக்குகின்ற மலையினின்று அதிலுள்ள தாதுக்கள் பெருகுவதுபோலப் பெருகியது. நல்ல அடியினாலே பீடிக்கப்பட்ட கர்ணன் சிறிதுநடுக்கமுற்றுக் காதுவரை

இழுத்துவிடப்படும் அம்புகளால் பீமனையடித்து மறுபடியும் நூற்றுக் கணக்கும் ஆயிரக்கணக்குமான அம்புகளைப் பிரயோகித்தான். உறுதி யானவில்லுள்ள அந்தக் கர்ணனுடைய பாணங்களாலே பீடிக்கப்பட்ட மகாரதனான அந்தப் பீமன் க்ஷுரமென்கிற பாணத்தால் கர்ணனு டைய தனுஸிலுள்ள நாண்கயிற்றை விரைவாக அறுத்தான். ஒரு பல்லத்தால் அவன் ஸாரதியையுமடித்து ரதத்தினின்று கீழேதள்ளி அவனுடைய நான்கு குதிரைகளையும் கொன்றான். மன்னரே! குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று கர்ணன் குதித்துப் பயத் தினாலே விரைவாக விருஷஸேனனுடைய ரதத்தின்மீதேறினான். பிர தாபசாலியும் பலசாலியுமான பீமஸேனன் யுத்தத்தில் கர்ணனைஜயித்து மேகத்தின் இடிமுழக்கத்துக் கொப்பான ஸிம்மநாதத்தைச் செய்தான். அவனுடைய அந்தச் சப்தத்தைக்கேட்டு யுதிஷ்டிரர் மிக்க ஸந்தோஷ முள்ளவரானார். யுத்தத்தில் பீமஸேனன் கர்ணனைவென்றுவிட்ட தாக எண்ணிப் பாண்டவஸேனையானது அப்பொழுது நான்கு பக்கங்களிலும் சங்கநாதத்தை உண்டுபண்ணியது. சத்ருஸேனையி னுடைய முழக்கத்தைக்கேட்டு உம்மைச்சேர்ந்தவர்கள், மிகவும் கர் ஜித்தார்கள். அரசரான அந்த யுதிஷ்டிரர் யுத்தத்தில் ஸந்தோஷத் தினால் தம்ஸேனையைச் சங்ககோஷங்களாலும் பாணங்களுடைய சப்தங்களாலும் ஸந்தோஷத்தால் உண்டான பேரொலிகளாலும் நிறைந்ததாகச் செய்தார். பார்த்தன் காண்டீவத்தை நாணொலியிடும் படி செய்தான். வாஸுதேவரும் சங்கத்தை ஊதினார். அரசரே! கர்ஜிக்கின்ற பீமனுடைய பயங்கரமான த்வனியானது அந்தச் சப்தத் தைக் கீழ்ப்படுத்தி அப்பொழுது எல்லாஸைனியங்களிலும் உக்கிர மாகக் கேட்கப்பட்டது. பிறகு, ராதேயன் மெதுவாகவும் பாண்டவன் கடுமையாகவும் வெவ்வேறு அஸ்திரங்களாலும் பாணங்களாலும் போர் புரிந்தார்கள். மகாராஜரே! அஸுரர்களுடைய பெரிய சேனையிலிரு ந்த தாரகாஸுரனைநோக்கி ஸுப்ரம்மண்யர் எதிர்த்ததுபோலப் பீம னும் சூரியகுமாரனான கர்ணனை எதிர்த்தான். பயங்கரமான செய்கை யுள்ளவர்களான அவ்விருவருக்கும் இவ்வாறானபெரும்போர் நடந்தது. பீமஸேனன் பெரிதான அம்புமழையினாலே அவனைத் தடுத்துக் கொண்டு அம்புகளாலே அவனுடைய ஸாரதியையும் நான்கு குதிரை களையும் அடித்தான். ஐயா! பீமன் கனுக்கள்படிந்துள்ள பல்லங் களாலே அவனுடைய துவசத்தையும் கொடிச்சீலையையும் அறுத்து ரதத்தையும் சக்ரரக்ஷகர்களையும் நாசஞ்செய்தான். அரசரே! ரதிகர் களுள் சிறந்தவனும் பலசாலியுமான கர்ணனும் பீமஸேனனால் நடுங்கும்

படி செய்யப்பட்டவனுகக் கத்தியையும் கேடகத்தையும் கையிற்பிடித்துப் பீமனை எதிர்த்தான். ஐயா! பீமன் அந்தக் கத்தியைக் கேடகத்தோடு வெட்டினுன். மகாராஜரே! துரியோதனன், பீமனுல் கர்ணன் அனேக அம்புகளாலே பீடிக்கப்பட்டதைக்கண்டு துச்சலனைப்பார்த்து, 'கர்ணன் கஷ்டமான நிலைமையை அடைந்துவிட்டதைப் பார். சீக்ரமாக அவனுக்கு ரதத்தைக் கொடு' என்று சொன்னுன். இவ்வாறு அரசன் சொல்லியதைக்கேட்ட துச்சலன், பிறகு, கர்ணனுடைய ஸமீபத்தில் ஓடிவந்தான். மகாரதனுன கர்ணனும் துச்சலனுடைய ரதத்தில் ஏறிக்கொண்டான். அவ்விருவரையும் பிருதையின்புத்ரனுன பீமன் விரைவாக நெருங்கிப் பத்துப்பாணங்களாலடித்து மறுபடியும் கர்ணனை அடித்துத் துச்சலனுடைய தலையையுமறுத்தான். ஐயா! பீமஸேனனுல் துச்சலன் கொல்லப்பட்டதைப் பார்த்துக் கர்ணன் அவனுடையவில்லையே எடுத்துப் பாண்டவனையடித்தான். வீரர்களும் மகாபலசாலிகளும் சத்ருக்களை ஸம்ஹரிக்கின்றவர்களுமான அவ்விருவரும் யுத்தகளத்தில் சத்துருக்களுடையமத்தியில் பலனும் இந்திரனும்போலப் பரஸ்பரம் போர்புரிந்தார்கள். மகாபலசாலியும் பிருதாபுத்திரனுமானபீமன் அட்டகாசஞ்செய்துகொண்டு குதிரைகளையும் ஸாரதியையுமடித்து அடிக்கடி கர்ணனையெதிர்த்தான். பிறகு, யுத்தபூமியில் பீமன் போர்புரிகையில் அச்சேனை குழப்பமுற்றது. யாதொன்றும் அறியப்படவில்லை.

---

## நூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோண துரியோதனர்களுடைய ஸம்வாதமும், துரியோதனனுடைய யுத்தமும்.)

அந்தச் சேனைகலக்கப்பட்டிருக்க, அர்ஜுனனும் ஸாத்யகியும் பீமஸேனனும் ஸைந்தவனைக்குறித்துச்செல்லவே, உம்முடைய குமாரனுன துரியோதனன், விரைவுடன் செய்யவேண்டிய அனேக காரியத்தை ஆலோசித்துக்கொண்டு ஒரேரதத்துடன் துரோணரிடம் செல்லப் புறப்பட்டான். காற்றுக்கும் மனத்துக்கும் ஒப்பான வேகமுள்ள உம்முடைய புத்ரனுடைய ரதமானது மிக்கவேகத்துடன் துரோணரை நோக்கி விரைவாகச்சென்றது. ஐயா! கௌரவர்களுக்கு ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறவனும் அரசனுமான உமது குமாரன், ரதத்தோடு

கூடியவனாக, 'இதோ காணப்பட்டான்; இதோ மறைந்துவிட்டான்' என்று (ஜனங்கள் சொல்லும்படி) ஒருமுகூர்த்தத்தில் துரோணரை யடைந்து பரபரப்புடன் சொல்லலானான். 'மகாரதர்களான அர்ஜுனனும் பீமஸேனனும் ஜயிக்கப்படாதவனான ஸாத்யகியும் மிகவும் பெரிதான எல்லாச் சேனைகளையும் ஜயித்துத் தடுக்கப்படாதவர்களாகி ஸிந்துராஜனுடைய ஸமீபத்தை அடைந்துவிட்டார்கள், அவ்விடத்திலும் ஜயிக்கப்படாதவர்களாக எல்லோரும் போர்புரிகிறார்கள். (பகைவரின்) கர்வத்தையழிப்பவரே! மகாரதனான அர்ஜுனன் ரணகளத்தில் உம்மைமீறிச் சென்றானாலும் ஸாத்யகியினாலும் பீமனாலும் எவ்வாறு கடந்துசெல்லப்பட்டீர்? பிராம்மணோத்தமரே! ஸாத்யகியினாலும் அர்ஜுனனாலும் பீமஸேனனாலும் உமக்குத் தோல்விநேர்ந்தது இவ்வுலகத்தில் கடல்வறண்டதுபோல ஆச்சரியகரமாயிற்று. உலகமும் (இதனை ஆச்சரியமென்றே) ஒத்துச்சொல்லுகிறது. யுத்தவீரர்கள், 'தனுர்வேதத்தில் கரைகண்டவரான துரோணர் எவ்வாறு யுத்தத்தில் ஜயிக்கப்பட்டார்?' என்று சொல்லுகிறார்கள். உம்முடைய இந்தத்தோல்வியானது நம்பத்தகாததாயிருக்கிறது. புருஷசிரேஷ்டரான தேவரீரை மூன்றுரதிகர்களும் தாண்டிச்சென்றதனால் யுத்தத்தில் பாக்கியஹீனனான எனக்கு நாசமே நிச்சயம்' என்று சொல்ல, துரோணர், 'இந்தக்காரியம் இவ்வாறு சென்றுபோனபின், நீ சொல்ல விரும்பியதைச் சொல். மரியாதை செய்பவனே! போனது போனதே. மேல் நடக்கவேண்டியதை ஆலோசனை செய்' என்று சொன்னார். துரியோதனன், 'பிராம்மணரே! ஸிந்துராஜன் விஷயத்தில் இந்த ஸமயத்திற்குத்தக்கதும அடுத்துச் செய்யவேண்டியதுமான நல்லகாரியத்தை நமக்குள் நன்றாகஆலோசித்து விரைவாகச் செய்யவேண்டும்' என்றுகூறினான். துரோணர், 'அப்பா! ஆலோசிக்கவேண்டியவிஷயம் பலவாறாயிருக்கிறது. செய்யத்தக்கதை என்னிடத்தினின்றும் கேள். பாண்டவவீரர்களுள் மகாரதர்களானமூவர் தாண்டிச் சென்றுவிட்டார்கள். அம்மூவருக்கும் பின்புறத்தில் நமக்கு எவ்வளவு பயமிருக்கிறதோ அவ்வளவுபயமே அவர்களுக்கு முன்புறத்திலும் நமக்கு இருக்கிறது. ஆயினும், எந்த இடத்தில் கிருஷ்ணனும் தனஞ்சயனும் இருக்கிறார்களோ அந்த இடத்தில் (நமக்கு) பயம் மிகப் பெரிதெனநினைக்கிறேன். அந்தப் பாரதசேனையானது முன்புறத்திலும் பின்புறத்திலும் (பகைவர்களால்) கவரப்பட்டிருக்கிறது. அவ்விடத்தில் ஸைந்தவனுடைய ரக்ஷணமானது செய்யத்தக்கதென்று நான் எண்ணுகிறேன். அப்பா! கோபங்கொண்டிருக்கிற தனஞ்சய

னிடத்திலிருந்து பயந்தவனான அந்த ஸைந்தவனை நாம் அவசியம் காக்கவேண்டும். பயங்கரர்களான யுயுதானனும் பீமனும் ஸைந்தவனைக் குறித்துச் சென்றிருக்கிறார்கள். சகுனியின் புத்தியில் தோன்றிய அந்தச் சூதாட்டம் இந்தயுத்தமாக நேர்ந்திருக்கிறது. அப்பொழுது ஸபையில் வெற்றியாவது தோல்வியாவது உண்டாகவில்லை. இந்தப் போர்க்களத்தில் பந்தயம்வைத்தாடுகிற நமக்கு இப்பொழுதுதான் வெற்றிதோல்விகள் ஏற்படவேண்டும். கௌரவசபையில் அந்தச் சகுனி கோரமான எவைகளைப் பாச்சிகைகளென்று எண்ணி முன்பு விளையாடினனோ அவைகள் (இப்பொழுது) நெருங்கமுடியாத அம்பு களாகத் தோன்றிவிட்டன. அப்பா! அரசனே! அந்த ஸபையில், அநேகர்களான சூதாடிகளாகவீற்றிருந்த அந்தக் கௌரவர்களடங்கிய (இந்தச்) சைனிகர்களைச் சூதாடுகிறவர்களாகவும், அம்புகளைச் சூதாடு கருவிகளாகவும் அறி. அரசனே! இந்தச் சூதாட்டத்தில் ஸைந்த வனைப் பந்தயமாக வைக்கப்பட்ட பொருளென்றறி. சூதாட்டத்தி னுடைய முடிவானது அவனைச் சார்ந்திருக்கிறது. ஸைந்தவன் விஷய மாகப் பகைவர்களோடு பெரிய (போர்ச்) சூதாட்டமானது நன்றாகத் தொடங்கப்பட்டிருக்கிறது. உனக்கு ஜயமோ அல்லது அபஜயமோ நிச்சயமாக இந்தச் சூதாட்டத்தைச் சார்ந்திருக்கிறது. மஹாராஜனே! இந்த யுத்தத்தில் நீங்களெல்லாரும் தங்கள் தங்கள் உயிரில் பற்றை விட்டு யுத்தத்தில் ஸைந்தவனுடைய ரக்ஷணத்தை முறைப்படி செய்ய வேண்டியவர்களாகிறீர்கள். ஸைந்தவன்விஷயத்தில் சூதாடுகின்ற நமக்கு வெற்றிதோல்விகள் நிச்சயமாகவிருக்கின்றன. உத்தமமான விற்களைப்பிடித்த அந்தவீரர்கள் முயற்சியுடன் ஸைந்தவனைக் காப் பாற்றுகிறவிடத்திற்கு நீயே விரைவாகச் செல். பாதுகாக்கின்ற அந்த வீரர்களையும் நீ ரக்ஷிக்கவேண்டும். நானே இவ்விடத்திலேயே இருப் பேன். இன்னும் மற்றவர்களையும் அனுப்புவேன். பாண்டவர்களோ டும் ஸ்ருஞ்சயர்களோடுங்கூடின பாஞ்சாலர்களைத் தடுப்பேன்' என்று கூறினார்.

பிறகு, துரியோதனன் (தன்னைத்) தொடர்ந்து வருகின்ற காலாட்படைகளோடு உக்ரமான காரியத்தின் பொருட்டு மனத்தில் முயற்சிகொண்டு ஆசார்யருடைய கட்டளையால் விரைவாகச்சென்றான். மஹாராஜரே! முன்பு கிருதவர்மாவினால்தடுக்கப்பட்டவர்களும் (பாண் டவ[illegible]னையைக் காப்பவர்களும் பாஞ்சாலராஜகுமாரர்களுமான யுதா மன்யுவும் உத்தமௌஜஸ[illegible]ம் சேனைக்கு வெளிப்புறமாகச்சென்று ஸவ்ய

ஸாரதியை அடைந்தார்கள். அரசரே! யுத்தஞ்செய்யும் விருப்பத்தோடு அர்ஜுனன் உம்முடைய சேனையில் புகுந்தவளவில் வீரர்களான அவ்விருவரும் ஸேனையை விலாப்புறத்தில் உடைத்துக்கொண்டு உமது சேனையில் பிரவேசித்தார்கள். குருராஜன், சைனியத்தைப் பக்கத்தில் எதிர்த்துவருகின்ற அவ்விருவரையுங் கண்டான். பலசாலியும் பரத குலத்தில் தோன்றியவனுமான துரியோதனன் விரைபவனாகி விரைபவர்களான அவ்விரண்டு பிராதாக்களோடும் சிறந்த போர்புரிந்தான். மகாரதர்களென்று பிரஸித்திபெற்றவர்களும் க்ஷத்ரிய சிரேஷ்டர்களுமான அவ்விருவரும் வில்லைக்கையிலெடுத்து யுத்தத்தில் இந்தத் துரியோதனனை எதிர்த்தார்கள். யுதாமன்யு கழுகிறகுகளுள்ள முப்பது பாணங்களாலே துரியோதனனை அடித்தான். இருபது அம்புகளாலே அவனுடைய ஸாரதியையும் நான்குபாணங்களாலே நான்கு குதிரைகளையும் அடித்தான். உமது புத்ரனான துரியோதனன் ஒருபாணத்தால் யுதாமன்யுவினுடைய த்வஜத்தையறுத்து ஒருபாணத்தால் அவனுடைய வில்லையுமறுத்தான். ஒருபல்லத்தினால் ஸாரதியைக்கொன்று தேர்த்தட்டினின்றும் தள்ளினான். பிறகு, கூர்மையுள்ள நான்கு பாணங்களாலே அவனுடைய நான்குகுதிரைகளையும் அடித்தான். யுதாமன்யுவும் மிகுந்த கோபங்கொண்டவனும் விரைவுள்ளவனுமாகி, யுத்தத்தில் முப்பது பாணங்களை உமது புத்ரனுடைய நடுமார்பிலெய்தான். அவ்வாறே உத்தமௌஜஸனும் மிகுந்த கோபங்கொண்டு பொன்னால் அலங்கரிக்கப்பட்ட அம்புகளாலே அவனுடைய ஸாரதியையடித்து யமலோகத்திற்கு அனுப்பினான். ராஜேந்திரரே! துரியோதனனும் பாஞ்சால்யனான உத்தமௌஜஸினுடைய நான்கு குதிரைகளையும் இரு பக்கத்திலுமுள்ள இரண்டு ஸாரதிகளையும் கொன்றான். யுத்தத்தில் குதிரைகளையும் ஸாரதியையுமிழந்த உத்தமௌஜஸோ மிகவிரைந்து தன் பிராதாவான யுதாமன்யுவினுடைய ரதத்தின்மீது ஏறினான். அந்த உத்தமௌஜஸ் தன்பிராதாவான யுதாமன்யுவினுடைய ரதத்தையடைந்து அனேக அம்புகளாலே துரியோதனனுடைய குதிரைகளை அடித்தான். அவைகள் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தன. யுதாமன்யு யுத்தத்தில் துரியோதனனுடைய குதிரைகள் அடிக்கப்பட்டுக் கீழே விழவே, உத்தமமான பாணத்தினாலே அவனுடைய வில்லையும் அம்புத்தூணியையும் சீக்கிரமாக அறுத்துவிட்டு அவனுடைய ஸாரதியையும் அடித்து யமலோகத்திற்கு அனுப்பினான். அரசனாகிய உம்முடைய குமாரன்குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்ட ரதத்தினின்று கீழே இறங்கிக் கதையைக் கையிலெடுத்துக்கொண்டு பாஞ்சால்ராஜ குமாரர்க

ளான இருவரையும் எதிர்த்து ஓடினான். கோபங்கொண்டு வருகின்ற அந்தக் கௌரவராஜனைப்பார்த்து அப்பொழுது யுதாமன்யுவும் உத்தமௌஜஸ்ஸும் தேர்நடுவிலிருந்து பாய்ந்து குதித்தார்கள். வேந்தரே! பிறகு, கதாயுதத்தையேந்திய அந்தத் துரியோதனன் மிகுந்த கோபங்கொண்டு கதாயுதத்தினாலே ஸ்வர்ணத்தினால் சித்திரிக்கப்பட்டிருக்கிற அந்தரதத்தைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடிமரத்தோடும் நாசஞ்செய்தான். ஜனாதிபரே! கதாயுதம்பிடித்தவர்களுள் சிரேஷ்டனும் எல்லா உலகங்களிலும் மகாரதனுமான உமது குமாரன் கதையினால் இவ்விதமானகாரியத்தைச் செய்தான். குதிரைகளை யிழந்தவனும் ஸாரதியையிழந்தவனும் சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவனுமான உம்முடையகுமாரன் (அந்த) ரதத்தை நாசஞ்செய்துவிட்டு மத்ரராஜனான சல்யனுடையரதத்தில் விரைவாக ஏறினான். பிறகு, பாஞ்சாலர்களுள் பிரதானர்களும் மகாரதர்களுமான ராஜகுமாரர்களிருவரும் வேறு ரதங்களிலேறிக்கொண்டு பீபத்ஸுவை நோக்கிச்சென்றார்கள்.

---

## நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன் கர்ணனை வென்றது.)

மகாராஜரே! பரதச்ரேஷ்டரே! மயிர் சிலிர்த்தலைச் செய்யத்தக்க யுத்தம் நடக்கையில் எல்லோருமே எல்லாவிதத்தினாலும் பீடிக்கப்பட்டு மனக்கலக்கமுற்றவர்களாக, ராதாபுத்ரனான கர்ணன் யுத்தத்தின்பொருட்டுப் பீமனை வனத்தில் மதங்கொண்டயானை மதங்கொண்டயானையை எதிர்ப்பதுபோல எதிர்த்துச்சென்றான். பிறகு, பகைவர்களை அடக்குகிறவர்களான அவர்களுள் ராதேயன் மென்மையாகவும் பீமன் வன்மையாகவும் அஸ்திரங்களாலே [1] ஒருவரையொருவர் துன்புறுத்தினார்கள்" என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், "மகாபலசாலிகளான அந்தப் பீமனும், கர்ணனும் அர்ஜுனனுடைய ரதத்தின் ஸமீபத்தில் யுத்தஞ்செய்தார்களே, அந்த யுத்தம் எவ்வாறு இருந்தது? முன்பே பீமஸேனனாலே யுத்தத்தில் தோல்வியடைவிக்கப்பட்ட மகாரதனான கர்ணன் மறுபடியும் எவ்வாறு பீமனை எதிர்த்தான்? மகாரதனென்று பிரஸித்திபெற்றவனும் புவியில் மிகச்சிறந்த ரதிகனுமான ஸூதபுத்திரனைப் பீமனும் எவ்

---

[1] 'ப்ருதக்ப்ருதக்' என்பது மூலம்.

வாறு யுத்தத்தில் எதிர்த்தான்? தர்மராஜனுன யுதிஷ்டிரன் பீஷ்மரை யும் துரோணரையும் தாண்டினபின் மகாரதனுன கர்ணனைத்தவிர வேறொருவனிடத்திலிருந்தும் பயத்தை நினைக்கவில்லை. மிக்க புஜபல முள்ளவனே! தர்மராஜன், மகாத்மாவான எந்த ராதேயனுடைய வீர்ய த்தை எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டு பயத்தினுல் அனேகவருஷங் களாக உறங்காமலிருக்கிருனே அந்த ஸூதபுத்ரனைப் பீமன் யுத்தகள த்தில் எவ்வாறு எதிர்த்துப்போர்புரிந்தான்? பிராமணர்களுக்கு நன்மை யைச் செய்கின்றவனும் வீர்யமுள்ளவனும் யுத்தங்களில் பின்வாங்காத வனும் யுத்தம்பண்ணுகிறவர்களுள் சிரேஷ்டனுமான கர்ணனைப் பாண் டவன் எவ்வாறு (எதிர்த்து) போர்புரிந்தான்? வீர்யமுடையவர்களும் மிக்கவன்மையும் பகைவரை மிஞ்சும் திறமையுமுள்ளவர்களுமான கர்ணனும விருகோதரனும் இந்தப்போர்க்களத்தில்(ஒருவரையொருவர்) எதிர்த்து எவ்வாறுபோர்புரிந்தார்கள்? ஸகோதரத்தன்மையானது முந் தியே)(கர்ணனுக்கு) காண்பிக்கப்பட்டிருக்கிறது. (அதனுல்)அந்தஸூத புத்ரனும் கருணையுள்ளவனுகவே இருந்தான். அவன் குந்தியினுடைய வேண்டுகோளை நினைப்பவனுகிப் பீமனேடு எவ்வாறு போர்புரிந்தான்? சூரனுன பீமனும் கர்ணனுலே முன் செய்யப்பட்ட வைரத்தை நினைக் கின்றவனுகி யுத்தாங்கத்தில் அவனேடு எவ்வாறு போர்புரிந்தான்? என்னுடைய துரியோதனன், 'யுத்தாங்கத்தில் கர்ணன் எல்லாப் பாண் டவர்களையும் ஜயிக்கப்போகிருன்' என்று ஸூதபுத்திரனிடத்தில் எப்பொழுதும் விருப்பமுள்ளவனுயிருக்கிருன். மந்தனுன என் புத்ர னுக்கு யுத்தத்தில் ஜயத்தில் ஆசையானது எவனிடத்தில் வைக்கப்பட் டிருக்கிறதோ அப்படிப்பட்ட கர்ணன் பயங்கரமான செய்கையுள்ள பீம ஸேனனேடு எவ்வாறு போர்புரிந்தான்? அப்பா! எவனை அடைந்து என் புத்திரர்களாலே மகாரதர்களான பாண்டவர்களோடு வைரமுண்டு பண்ணப்பட்டதோ அந்த ஸூதபுத்திரனேடு பீமன் எவ்வாறு போர் புரிந்தான்? சூதபுத்ரனிடத்திலிருந்து உண்டான பலதீங்குகளை நினைக் கின்றவனுன பீமஸேனன் ஸூதபுத்ரனேடு எவ்வாறு போர்புரிந்தான்? வீர்யமுள்ளவனுன எவன் ஒரு ரதத்தினுலே பூமண்டலத்தை முழுதும் ஜயித்தானே அப்படிப்பட்ட ஸூதபுத்ரனேடு யுத்தத்தில் பீமஸேனன் எவ்வாறு போர்புரிந்தான்? எவன் குண்டலங்களோடும் கவசத்தோடும் பிறந்தானே அந்த ஸூதபுத்ரனுடன் யுத்தகளத்தில் பீமன் எவ்வாறு போர்புரிந்தான்? அப்பா! முன்பு அஸ்திரங்களைப் பெறுவதற்காகக் கர் ணன் பரசுராமரைப் பூஜித்து ப்ருகுகுலத்தாருள் சிறந்தவரான அவ ரிடமிருந்து அவருடைய அனுக்கிரஹத்தினுல் பிரம்மாஸ்திரத்தையும்

பெற்றான். ஸஞ்சய! அவ்விருவருக்கும் யுத்தம் எவ்வாறு நேர்ந்த தென்பதையும் அவ்விருவருள்ளும் எவன் ஜயத்தை அடைந்தானென் பதையும் எனக்கு உண்மையாகச் சொல்; நீ ஸமர்த்தனாயிருக்கிறாய்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பீமஸேனனோ ரதிகர்களுள் உத்தமனான ராதேயனை விட்டுவிட்டு வீரர்களான கிருஷ்ணனும் தனஞ்சயனும் இருந்தவிடம் செல்ல விரும் பினான். மகாராஜரே! ராதாபுத்திரனான கர்ணன் மேகமானது வர் ஷத்தை மலையின்மீது பொழிவதுபோல வேகமாகச் செல்லுகின்ற பீமஸேனனை எதிர்த்தோடி அவன்மீது கழுகிறகுகள்பூண்ட அம்பு களைப் பொழிந்தான். பலசாலியும் அதிரதபுத்திரனுமான கர்ணன் அப்பொழுது சிரித்துக்கொண்டு மலர்ந்த தாமரைப்பூப்போன்ற முக முள்ளவனாகி யுத்தரங்கத்தில் செல்கின்ற பீமனை அழைத்தான். கர் ணன், 'பீம! பகைவர்களோடு போரை நீ கனவிலும் கண்டதில்லை. அப்படியிருக்கையில் அர்ஜுனனைப் பார்க்கவேண்டுமென்கிற எண்ணத் தினாலே ஏன் எனக்கு முதுகுகாட்டுகிறாய்? பாண்டவநந்தன! குந்தி புத்ரனாயிருக்கிற உனக்கு இது தகுந்ததன்று. ஆதலால், எதிரில் நின்று என்மீது பாணவர்ஷங்களைப் பொழிவாயாக' என்றுங் கூறி னான். பீமஸேனன் கர்ணனுடைய அவ்வித அழைப்பை யுத்த ரங்கத் தில் பொறுக்கவில்லை. அர்த்தமண்டலாகாரமாக வில்லை வளைத்து அந்த ஸூதபுத்திரனோடு போர்புரிந்தான். மகாகீர்த்தியுள்ள பீமன் கவசம் பூண்டவனும் துவந்துவயுத்தத்தில் முயற்சியுள்ளவனும் எல்லா ஆயு தங்களிலும் வல்லவனுமான கர்ணன்மீது நேராகச் செல்லுகின்ற அம்பு களை வர்ஷித்தான். கர்ணனைக் கொல்ல எண்ணங்கொண்ட அந்தப் பீமன் போரின் முடிவைச் செய்யக்கருதிக் கர்ணனை அடித்தான். ஐயா! மகாபலசாலியும் பகைவர்களை வாட்டுகிறவனுமான பாண்டவன் கோபங் கொண்டு கர்ணனை அனுஸரித்துவந்த வீரர்களைக்கொன்று அவனையுங் கொல்ல எண்ணங்கொண்டவனாகிக் குரோதத்தினாலே உக்ரமாயுள்ள பலவித அம்புமழைகளை அவன்மீது பொழிந்தான். உத்தமமான அஸ் திரங்களை யறிந்தவனான ஸூதபுத்ரன் மதங்கொண்ட யானைபோல நடக் கின்ற அந்தப் பீமனுடைய அந்தப் பாணவர்ஷங்களை அஸ்திரமாயையி னாலே நாசஞ்செய்தான். பெரிதான வில்லைக் கையிலேந்தியவனும் மிக்க கைவன்மையுள்ளவனும் முறைப்படி (கற்ற) வித்தையினால் மிகவும் புகழப்பட்டவனும் பலசாலியுமான கர்ணன் (தனுர்வேத) ஆசாரியன் போல நான்குப்பக்கங்களிலும் ஸஞ்சாரஞ் செய்தான். அரசரே! கோபத்

திறல் யுத்தஞ்செய்கின்றவனும் செந்நாயினுடைய வயிறுபோன்ற வயிற்றையுடையவனும் குந்திபுத்ரனுமான பீமஸேனனைக் கர்ணன் சிரித்துக்கொண்டு எதிர்த்தான். போர்புரிகின்ற வீரர்கள் நான்குபக்கங்களிலும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது யுத்தரங்கத்தில் கர்ணனுடைய அந்தச் சிரிப்பைக் கௌந்தேயன் ஸஹிக்கவில்லை. பலசாலியான பீமஸேனன் கோபமூண்டு பெரிய யானையை ஈட்டிகளால் குத்துவதுபோல எதிர்த்துவருகின்ற அந்தக்கர்ணனை மார்பில் வத்ஸதந்தங்களால் அடித்தான். மறுபடியும், ஸுவர்ணமயமான கணுக்களுள்ளவையும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவையும் நன்றாக விடப்பட்டவையுமான இருபத்தொரு பாணங்களாலே விசித்திரமான கவசமபூண்ட ஸூதபுத்திரனைப் பிளந்தான். கர்ணன் ஸ்வர்ணமயமான மேல்விரிப்புகளாலே நன்றாக மூடப்பட்டவைகளும் காற்றின்வேகம்போன்ற வேகமுடையவைகளுமான பீமனுடைய குதிரைகளை ஐந்தைந்து பாணங்களாலே அடித்தான். மன்னரே! பிறகு, கர்ணனாலே அரைநிமிஷத்திற்குள் பீமஸேனனுடைய ரதத்தைக் குறித்து ஏற்படுத்தப்பட்ட அம்புமயமான ஒரு வலையானது காணப்பட்டது. மகாராஜரே! அப்பொழுது அந்த யுத்தரங்கத்தில் கர்ணனுடைய வில்லினின்று விடுபடும் அம்புகளாலே பாண்டவன் ரதத்தோடும் த்வஜத்தோடும் ஸாரதியோடும் நன்றாக மறைக்கப்பட்டான். கர்ணன் கோபங்கொண்டு பீமஸேனனுடைய திடமான கவசத்தை அறுபத்துநான்குபாணங்களாலே தூளாக்கினான். மர்மஸ்தானங்களைப் பிளக்கின்ற நாராசங்களாலே பீமனையும் அடித்தான். பிறகு, மிக்க தோள்வலியுள்ளவனான விருகோதரன் பயமற்றவனாகக் கர்ணனுடைய வில்லினின்று வெளிவருகின்ற பாணங்களைப் பொருட்படுத்தாமல் அவனை மிக நெருங்கினான். மகாராஜரே! அந்தப் பீமன் கர்ணனுடைய வில்லினின்று விடுபட்டவையும் ஸர்ப்பங்களுக்கொப்பானவையுமான பாணங்களைத் தாங்கியும் ரணகளத்தில் துன்பத்தை அடையவில்லை. பிறகு, பிரதாபசாலியான பீமஸேனன் நன்றாகத் தீட்டப்பட்டவையும் கூரியமுனையுள்ளவையுமான முப்பத்திரண்டுபல்லங்களாலே யுத்தத்தில் கர்ணனை அடித்தான். கர்ணன் அதிக பாகுபலமுள்ளவனும் ஸைந்தவனுடைய வதத்தை விரும்புகிறவனுமான அந்தப் பீமஸேனன்மீது பிரயத்தனமின்றியே அம்புகளை அதிகமாக இறைத்தான். ராதேயன் பீமஸேனனோடு ரணகளத்தில் சாந்தமாகவே போர்புரிந்தான். பீமனோ பழம்பகையை நினைத்துக்கொண்டு கோபத்துடனேயே போர்புரிந்தான். பகைவர்களைக் கொல்பவனும் கோபமுள்ளவனுமான பீமஸேனன் அந்த அவமானத்

தைப் பொறுமல் அவன்மீது விரைவாகப் பாணவர்ஷத்தைப் பிர யோகித்தான். அந்தப் பீமஸேனனாலே யுத்தகளத்தில் பிரயோகிக்கப் படுகின்ற அந்த அம்புகள் வீரனான கர்ணன்மீது ஒலிக்கின்ற பறவை கள்போல நான்குபக்கமும் வந்து விழுந்தன. ஸ்வர்ணமயமான அடிப் புறமுள்ளவைகளும் மிக்க வேகமுள்ளவைகளும் பீமஸேனனுடைய வில்லினின்று கிளம்பினவைகளுமான அந்த அம்புகள் விட்டிற்பூச்சி கள் நெருப்பை மறைப்பதுபோல ராதேயனை மறைத்தன. பாரதரே! அரசரே! நான்குபக்கங்களிலும் மறைக்கப்படுகின்றவனும் ரதிகர்க ளுள் சிரேஷ்டனுமான கர்ணன் உக்ரமான பாணவர்ஷங்களை அவன் மீது பொழிந்தான். விருகோதரன் இடிபோன்றவையும் யுத்தத்தில் பிரகாசிக்கின்றவையுமான கர்ணனுடைய அந்த அம்புகளைத் தன்னை வந்தடைவதற்குள்ளாகவே அனேகமான பல்லங்களால் அறுத்தான். பாரதரே! சத்துருக்களை அடக்குகிறவனும் சூரியபுத்திரனுமான கர்ணன் யுத்தத்தில் பீமஸேனனை மறுபடியும் அம்புமழையினால் மூடி னான். பாரதரே! அந்த யுத்தகளத்தில் அம்புகளால் நான்குபக்கங் களிலும் நிறைக்கப்பட்ட மேனியை உடையவனான பீமனை முட்களால் நிறைந்த முள்ளம்பன்றியைப்போல் (எல்லோரும்) கண்டார்கள். வீர னான பீமன் யுத்தத்தில் சூரியன் தன் கிரணங்களைத் தரிப்பதுபோல, பொற்கணுக்களுள்ளவையும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவையும் கர்ணனுடைய வில்லினின்றும் விடுபட்டவையுமான அம்புகளைத் தாங் கினான். எல்லா அங்கங்களும் ரக்தத்தால் நனைக்கப்பட்ட பீமஸேனன் வஸந்தகாலத்தில் தலையில் புஷ்பங்கள் நிறைந்திருத்தலால் அலங்காரமா யுள்ள அசோகமரத்தைப்போல் விளங்கினான். நீண்ட புஜங்களையுடைய பீமன் மிக்க புஜபலமுள்ள கர்ணனுடைய அந்தச் செய்கையை யுத்தத் தில் பொறுக்கவில்லை. அவன், மிக்க விஷமுள்ள ஸர்ப்பங்களாலே சூழப்பட்ட சுவேதபர்வதத்தைப்போலத் தோன்றும்படி இருபத் தைந்து நாராசங்களால் கர்ணனையடித்து மறுபடியும் ஆறுபாணங்க ளாலும் எட்டுப் பாணங்களாலும் அடித்தான். தேவர்களுக்கொப்பான விக்கிரமமுள்ளவனும் பிரதாபசாலியுமான பீமஸேனன் சரீரத்தை விடத் துணிந்தவனான ஸூதபுத்திரனை மர்மஸ்தானங்களில் மறுபடி வேறு ஒரு பாணத்தாலடித்து அட்டகாஸத்துடன் அவனுடைய வில்லை யும் விரைவாக அறுத்தான். அந்தப் பீமன் விரைபவனாகி அம்புகளாலே அவனுடைய நான்குகுதிரைகளையும் ஸாரதியையுங்கொன்று சூரியகிர ணங்களுக்கொப்பான காந்தியுள்ள நாராசங்களாலே கர்ணனையும் மார்பில் அடித்தான். அந்த அம்புகள் சூரியகிரணங்கள் மேகத்தைப் பிளந்து

செல்வதுபோலக் கர்ணனைப் பிளந்துகொண்டு சென்று விரைவாகப் பூமியில்பிரவேசித்தன. பாரதரே! வில் அறுக்கப்பட்டவனும் அம்புகளாலே அடிக்கப்பட்டவனும் (தன்னை) அவ்விதமான ஆண்மையுள்ளவனென்று கருதினவனுமான கர்ணன் அதிகமான கிலேசத்தையடைந்து பீமஸேனனிடத்திலுண்டான பயத்தினாலே வெட்கத்தைவிட்டு வேறு ரதத்தை நோக்கி ஓடினான்" என்று கூறினான்.

---

## நூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(பீமனுக்கும் கர்ணனுக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பிருகுகுலத்தில் பிறந்தவர்களுள் உத்தமரும் வில்லாளியுமான பரசுராமர், மகேஶ்வரருக்கு நேரான சிஷ்யர். கர்ணன் அந்தப் பரசுராமருக்குச் சிஷ்யனானான். அவன் அஸ்த்ர வித்தையில் அவருக்கு ஒப்பானவன். அல்லது, சிஷ்யர்களுக்குரிய குணங்களோடு கூடின கர்ணன் சிஷ்யனாகவிருந்தாலும் ஆசார்யராகிய பார்க்கவரைக்காட்டிலும் மேலானவனுமாம். அப்படிப்பட்ட கர்ணன் குந்தியின் புத்ரனான பீமனாலே விளையாட்டாகவே ஜயிக்கப்பட்டான். ஸஞ்சய! என் புத்திரர்கள் எவனிடத்தில் ஜயத்தைப்பற்றிப் பெரிதான விருப்பத்தை வைத்திருக்கிறார்களோ அப்படிப்பட்ட கர்ணன் பீமனிடத்திலிருந்து புறங்காட்டி ஓடுகின்றதைக் கண்டு துரியோதனன் யாது கூறினான்? அப்பா! வீர்யத்தினால் புகழ்பெற்றவனும் மகாபலசாலியுமான பீமன் எவ்வாறு யுத்தஞ்செய்தான்? ஜ்வலிக்கின்ற நெருப்புப்போன்ற அவனை யுத்தத்தில் கண்டு கர்ணனுவது ரணகளத்தில் அதற்குப் பிறகு யாது செய்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"கர்ணன் முறைப்படி ஏற்படுத்தப்பட்ட வேறு ரதத்தின்மீது ஏறிக்கொண்டு காற்றினால் கலக்கப்பட்ட கடல்போல மறுபடியும் பீமனை எதிர்த்தான். பிரஜைகளுக்கு நாதரே! உம்முடைய புத்திரர்கள், அதிரதபுத்திரனான கர்ணன் கோபங்கொண்டதைக்கண்டு பீமனை அக்னிமுகத்தில் ஹோமஞ்செய்யப்பட்டவனாகவே எண்ணினார்கள். பிறகு, ராதேயன் பயங்கரமான வில்லினுடைய ஒலியையும் தலத்வனியையும் செய்துகொண்டு பீமஸேனனுடைய ரதத்தைநோக்கி எதிர்த்துவந்தான்.

அரசரே! சூரனான கர்ணனும் மகாத்மாவான பீமனுமாகிய அவ்விருவ ருக்கும் கோரமான யுத்தம் மறுபடியும் நடந்தது. கோபமுள்ளவர் களும் மிக்க கைவன்மையுள்ளவர்களுமான அவர்கள் ஒருவரையொரு வர் கொல்ல விரும்பிக் கண்களால் எரிப்பவர்கள்போல ஒருவரையொரு வர் பார்த்துக்கொண்டார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களும் கோபத்தால் சிவந்த கண்களையுடையவர்களும் சூரர்களும் கடுமையுள்ள வர்களுமான அவ்விருவரும் ஸர்ப்பங்கள்போலப் பெருமூச்சுவிட்டுக் கொண்டு ஒருவரையொருவர் நெருங்கி அடித்துக்கொண்டார்கள்; புலி கள்போல் மிகுந்த பரபரப்புள்ளவர்களும் பருந்துகள்போல விரைவாகச் செல்லுகின்றவர்களும் சரபங்கள்போல மிக்ககோபங்கொண்டவர்களு மாகிப் பரஸ்பரம் சண்டைசெய்தார்கள். பாரதரே! பிறகு, சத்துருக் களைச் சிக்ஷிப்பவனும் அழிப்பவனும் தர்மாத்மாவும் செந்நாயின் வயிறு போன்ற வயிற்றையுடையவனுமான பீமன் சூதாட்டத்திலும் வனத் திலும் விராடநகரத்திலும் அடைந்த துன்பங்களையும், உமதுகுமாரர் கள் மிகுதியான ரத்னங்களுள்ள தேசங்களைக் கைப்பற்றியதையும், உம்மாலும் உமது புத்திரர்களாலும் எப்பொழுதும் செய்யப்பட்ட துன்பங்களையும், புத்திரர்களோடு நிரபராதையான குந்தியை நீர் கொளுத்த எண்ணினதையும், ஸபைநடுவில் துராத்மாக்களாலே திரௌ பதிக்கு உண்டுபண்ணப்பட்ட துன்பத்தையும், அவ்வாறே துச்சாஸ னன் அவளுடைய கூந்தலைப் பிடித்ததையும், கர்ணனால் சொல்லப்பட்ட குரூரமான சொற்களையும், உமக்கு எதிரில் அப்பொழுது குருவம் சத்திற்றோன்றியவர்களான உம்முடைய குமாரர்கள் திரௌபதியை யும் அடிமையாக்கி அநுபவிக்கவிரும்பி, 'நீ வேறு கணவனைவிரும்பு. உனக்குக் கணவர்களில்லை. எள்ளுப்பதர்கள்போன்ற பார்த்தர்களெல் லோரும் நரகத்தில் விழுந்துவிட்டார்கள்' என்று சொல்லிய வார்த்தை களையும், மான்தோலுடுத்துச் செல்லுகின்ற பார்த்தர்களைநோக்கிக் கர்ணன் ஸபையில் உம்முடைய ஸந்நிதானத்தில் கொடிய வார்த்தை களைச்சொன்னதையும், நல்ல நிலைமையிலிருக்கின்ற உம்முடைய புத்தி ரன் கெட்ட நிலைமையிலிருக்கின்ற பார்த்தர்களைக் கோபத்துடன் புத்தி யில்லாமல் துரும்பாகஎண்ணித் தள்ளினதையும், பால்யந்தொடங்கித் தன்னால் அநுபவிக்கப்பட்டிருக்கின்ற துக்கங்களையும் நினைத்துத் தன்னுயிரை வைத்திருப்பதில் வெறுப்புற்றான். பிறகு, பாதசிரேஷ்ட னான பீமன் சரீரத்தை விடத்துணிந்து பொன்னாலலங்கரித்த பின்புற முள்ளதும் நெருங்க முடியாததுமான மிகப்பெரியவில்லை நாணேறி யிடும்படி செய்துகொண்டு கர்ணனை எதிர்த்தான். அந்தப்பீமன் காந்

தியுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையும் கர்ணன் ரதத்தைக் குறித்து விடப்பட்டவையுமான) அம்புமயமான வலைகளாலே ஸூர்ய னுடைய ஒளியை நன்றாகமறைத்தான். பிறகு, அதிரதன் மைந்தனான கர்ணன் அட்டஹாஸஞ்செய்து விரைவாகக் கூர்மையுள்ளபாணங்களைப் பிரயோகஞ்செய்துகொண்டு அம்புகளாலே பீமஸேனனுடைய பாண ஸமூகங்களை நாசஞ்செய்தான். மகாரதனும் தீர்க்கமான புஜங்களை யுடையவனும் அதிகமான பலமுடையவனும், அதிரதபுத்ரனுமான கர்ணன் அப்பொழுது கூர்மையுள்ள ஒன்பது பெரிய பாணங்களாலே பீமனை அடித்தான். தாற்றுக்கோலாலே யானை தடுக்கப்படுவதுபோல் அம்புகளால் தடுக்கப்படுகின்ற அந்த விருகோதரன் கலங்காமலிருந்து ஸூதபுத்ரனை எதிர்த்தான். வேகத்தோடு எதிர்த்து வருகின்ற பாண்டவசிரேஷ்டனான பீமனைக் கர்ணன் யுத்தத்தில் மதங்கொண்டயானை மதங்கொண்டயானையை எதிர்ப்பதுபோல் வேகத்தோடு எதிர்த்தான்; பிறகு, நூறுபேரிகைகளின் ஒலிபோன்ற ஒலியுள்ள சங்கத்தை முழக்கி ஸந்தோஷத்தினாலே சேனையைப் பொங்குகின்ற சமுத்திரம்போலக் கலங்கச்செய்தான். பீமன் யானைகளும் குதிரைகளும் ரதங்களும் காலாட்களுமுள்ளதும் கலங்கினதுமான அந்தச்சேனையைக் கண்டு அருகில்வந்து கர்ணனை அம்புகளால் மூடினான். கர்ணனும் அம்புகளால் பாண்டவனை மூடிக்கொண்டு ரணகளத்தில் அன்னப்பறவையின் நிறமுள்ள உத்தமமான தன் குதிரைகளோடு கரடிநிறமுள்ள பீமன் குதிரைகளை நெருங்கவிட்டான். வெண்ணிறமுள்ள குதிரைகளோடு கலந்தவைகளும் காற்றுப்போன்ற வேகமுள்ளவைகளும் கரடிநிறமுள்ளவைகளுமான குதிரைகளைக்கண்டு உமது புத்திரர்களுடைய சேனையானது ஆ! ஆ! ஆ! என்னும் ஒலியுள்ளதாயிற்று மகாராஜரே! வாயுவேகமுள்ளவைகளும் (ஒன்றோடொன்று) சேர்ந்தவைகளுமான அக்குதிரைகள் ஆகாயத்தில் ஒன்றுசேர்ந்திருக்கின்ற வெண்மை நிறமும் கருமை நிறமுமுள்ள மேகங்கள்போல மிகவிளங்கின. உம்மைச்சேர்ந்தவர்களான மகாரதர்கள், கோபமுள்ளவர்களும் கோபத்தினால் கண்கள் சிவந்தவர்களுமான கர்ணனையும் விருகோதரனையும் கண்டு பயந்து நடுங்கினார்கள். பரதஸ்ரேஷ்டரே! அவ்விருவருடைய அந்த யுத்தபூமியானது யமனுடைய ராஜ்யம்போலக் கோரமாயும் பிரேதராஜனுடைய பட்டணம்போலப் பார்க்கமுடியாததாயும் இருந்தது. ஸமாஜத்தார்போலிருந்துகொண்டு ஆச்சர்யகரமான அந்த யுத்தத்தைப் பார்ப்பவர்களான மகாரதர்கள் அந்தமஹாயுத்தத்தில் இருவரில் ஒருவனுக்காவது ஜயத்தை வெளிப்படையாகக் காணவில்லை. அரசரே!" பிரஜைகளுக்கு

நாதரே! பெரிய ஆயுதங்களுள்ளவர்களான அவ்விருவருக்கும் புத்தி ரர்களோடுகூடின உம்முடைய துராலோசனையினாலுண்டான நெருங்கிய யுத்தத்தை அவர்கள் பார்த்தார்கள். ஆச்சர்யகரமான பராக்கிரமமுள்ள வர்களும் சத்துருக்களைக் கொல்லுகிறவர்களும் கூர்மையான அம்புக ளாலே பரஸ்பரம் மூடுகின்றவர்களுமான அவ்விருவர்களும் ஆகாயத் தைப் பாணஸமூகத்தால் மூடப்பட்டதாகச் செய்தார்கள். கூர்மையான அம்புகளால் ஒருவரையொருவர் வதஞ்செய்ய எண்ணங்கொண்டவர்க ளும் மகாரதர்களுமான அவ்விருவரும் மழையுடன்கூடின இரண்டு மேகங்கள்போலக் காட்சிக்கு மிகவும் இனியவர்களா யிருந்தார்கள். பிரபுவே! சத்துருக்களைச் சிக்ஷிக்கின்றவர்களான அவ்விருவரும் பொன்னால் சித்ரவேலைசெய்யப்பட்ட பாணங்களைப் பிரயோகித்துக் கொண்டு ஆகாயத்தை உற்கைகளால் பிரகாசிப்பதுபோலப் பிரகாசிக்கச் செய்தார்கள். அரசரே! அவ்விருவர்களால் விடப்பட்டவைகளும் கழு கிறகுகள் பூண்டவைகளுமான அவ்வம்புகள் சரத்காலத்தில் ஆகாயத் தில் ஸாரஸபக்ஷிகளின் வரிசைகள்போல விளங்கின. பகைவரை அட க்குபவனான பீமன் ஸூதபுத்திரனோடு எதிர்த்திருப்பதைக்கண்டு, கிருஷ்ணனும் தனஞ்சயனும் பீமனிடத்தில் பெரிய பாரம் வைக்கப் பட்டதாக நினைத்தார்கள். அந்த யுத்தகளத்தில் அதிரதபுத்ரனான கர் ணனாலும் பீமனாலும் விடப்படும் அம்புகளாலே திடமாக அடிக்கப் பட்டுள்ள குதிரைகளும் யானைகளும் மனிதர்களும் ஓர் அம்பு செல் லுந்தூரம் விலகிக் கீழேவிழுந்தனர். அரசரே! மகாராஜரே! விழுகின் றவைகளும் உயிரையிழந்து பலவாறாக வீழ்ந்தவைகளுமான மற்ற வைகளாலே உமது புத்ரர்களுடைய சேனையில் ஜனங்களுக்கு நாசம் உண்டுபண்ணப்பட்டது. பாதசிரேஷ்டரே! உயிரையிழந்த மனிதர்க ளுடையனவும் குதிரைகளுடையனவும் யானைகளுடையனவுமான சரீ ரங்களாலே யுத்தபூமியானது ஒரு நிமிஷத்தில் மூடப்பட்டது" என்று கூறினான்.

---

## நூற்றுமுப்பத்துமூன்றுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன், கர்ணனுக்கு உதவியாகவந்த துர்ஜயனைக் கொன்றது.)

திருதராஷ்டிரன், "யுத்தத்தில் வேகமான பராக்கிரமசாலியான பீமஸேனன் கர்ணனோடு எதிர்த்துப் போர்புரிந்தமையால் பீமஸேனனு

டிய வன்மையை மிக்க ஆச்சரியகரமென்று நான் எண்ணுகிறேன். அப்பா! சஞ்சய! யுத்தகளத்தில் எல்லா ஆயுதங்களையும் தரித்தவர்களும் யக்ஷர்களோடும் அஸுரர்களோடும் மனிதர்களோடுங்கூடினவர்களுமான தேவர்களையும் யுத்தத்தில் தடுக்கக்கூடிய கர்ணன், போர்க்களத்தில் காந்தியினால் ஜ்வலிக்கின்ற பாண்டுகுமாரனான் பீமஸேனனை யுத்தத்தில் ஏன் ஜயிக்கவில்லை? அதனை எனக்குக்கூறுவாயாக. பிராணன்களின் விஷயமான பந்தயத்தில் அவ்விருவருக்கும் எவ்வாறு யுத்தம் நடந்தது? ஜயமோ அல்லது அபஜயமோ இக்கர்ணனைச்சார்ந்துள்ளதென்றே நான் நினைக்கிறேன். பாகனே! என் புத்ரனான துரியோதனன் கர்ணனையடைந்து யுத்தத்தில் கோவிந்தனோடும் ஸாத்யகியோடும்கூடிய பார்த்தர்களை ஜயிப்பதற்கு ஊக்கமுடையவனாயிருக்கிறான். பயங்கரமான செய்கையுள்ள பீமஸேனனாலே யுத்தத்தில் அடிக்கடி கர்ணன் தோல்வியடையும்படி செய்யப்பட்டானென்பதைக் கேட்டு எனக்கு மயக்கம் வருவதுபோலிருக்கிறது. ஸஞ்சய! என்குமாரனுடைய துர்நீதிகளாலே கௌரவர்களை அழிந்தவர்களாகவே எண்ணுகிறேன். கர்ணன் மகாவில்லாளிகளான பார்த்தர்களை ஜயிக்கப்போகிறதில்லை. கர்ணன் பாண்டுபுத்திரர்களோடுசெய்த யுத்தங்களெல்லாவற்றிலும் யுத்தபூமியில் அந்தப் பாண்டவர்களே கர்ணனை ஜயித்தார்கள். அப்பா! இந்திரனோடுகூடின தேவர்களாலும் பாண்டவர்கள் ஜயிக்கத்தகாதவர்கள். புத்தியில்லாதவனும் எனக்குப் புத்திரனுமான துரியோதனன் அதனை அறியவில்லை. குபேரனுடையதனத்தைப்போன்ற பார்த்தனுடைய தனத்தைப் புத்தியற்ற என்புத்திரன் அபகரித்து, தேனில் விருப்பமுள்ளவன் கீழேயிருக்கிறபள்ளத்தைத் தெரிந்துகொள்ளாததுபோல அனர்த்தத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. வஞ்சனையில் புத்தியுள்ளவனான என்புத்திரன் மகாத்மாக்களான பாண்டவர்களுடைய ராஜ்யத்தைக் கபடத்தால் கவர்ந்துகொண்டு, 'ஜயம் அடையப்பட்டது' என்றே எண்ணிக்கொண்டு பாண்டவர்களை அவமதிக்கிறான். புத்திரஸ்னேகத்தால் கவரப்பட்டவனும் மனங்கலங்கியவனுமான என்னாலும் தர்மத்தில் நிலைபெற்றவர்களும் மகாத்மாக்களுமானபாண்டுபுத்திரர்கள் வஞ்சிக்கப்பட்டார்கள். ஸமாதானத்தில் விருப்பமுடையவனும் நீண்ட ஆலோசனையுள்ளவனும் சகோதரர்களோடுகூடியவனுமான யுதிஷ்டிரன் அசக்தனென்றெண்ணி என்புத்திரர்களால் அவமதிக்கப்பட்டான். அவ்விதமான அனேகதுக்கங்களையும் அனேகம் தீங்குகளையும் மனத்தில் எண்ணி மிக்க புஜபலமுள்ளபீமன் ஸூதபுத்திரனோடு யுத்தஞ்செய்தான். ஸஞ்சய! யுத்தஞ்செய்யும் வீரர்களுள் சிரேஷ்டர்களான

கர்ணனும் பீமனும் போர்க்களத்தில் ஒருவரை ஒருவர் கொல்லக்கருதிப் போர்புரிந்தவிதத்தை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! ஒருவரையொருவர் கொல்லுவதில் நோக்கங்கொண்டவர்களான கர்ணனுக்கும் பீமனுக்கும் இரண்டு காட்டுயானைகளுக்கு நடந்ததுபோன்ற யுத்தத்தை உள்ளபடிகேளும். அரசரே! கோபங்கொண்டவைகர்த்தனன், கோபங்கொண்டவனும் பகைவர்களைச்சிக்ஷிப்பவனும் பராக்கிரமசாலியுமான பீமனை எதிர்த்து முப்பதுபாணங்களால் அடித்தான். பரதசிரேஷ்டரே! அவன் மகாவேகமுள்ளவையும், மிக்ககூர்மையான நுனியுள்ளவையும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவையுமான அம்புகளாலே பீமனை அடித்தும் மீறவில்லை. அம்புகளைப் பிரயோகிக்கின்ற கர்ணனுடையவில்லைப் பீமன் மூன்று பாணங்களால் அறுத்து ஸாரதியை ஒரு பல்லத்தினால் தேர்த்தட்டினின்று பூமியில் தள்ளினான். ஸூர்யபுத்ரனான கர்ணன் பீமஸேனனைக் கொல்லக்கருதிப் பொன்னாலும் வைடூர்யங்களாலும் சித்திரவேலை செய்யப்பட்ட பிடியுள்ள சக்தியாயுதத்தை எடுத்தான். மகாபலசாலியான ராதேயன் வேறு காலராத்ரிபோன்றதும் உயிருக்கு முடிவை உண்டுபண்ணுவதுமான மகாசக்தியை நன்றாகத்தூக்கிப் பீமஸேனன்மீது எறிந்தான். பலசாலியும் ஸூதநந்தனனுமான ராதேயன் இந்திரன் வஜ்ராயுதத்தைப் பிரயோகிப்பதுபோலச் சக்தியைப் பிரயோகித்துப் பெரிய ஸிம்மநாதத்தைச் செய்தான். பிறகு, அந்தச் சப்தத்தைக்கேட்டு உமது புத்திரர்கள் சந்தோஷமடைந்தார்கள். கர்ணனுடைய கையினால் எறியப்பட்டதும் சூரியனும் அக்னியும்போன்ற ஒளிபொருந்தியதுமான அந்தச் சக்தியைப் பீமன் ஏழுபாணங்களாலே ஆகாயத்தில் அறுத்தான். ஐயா! பிறகு, பீமன் சட்டையுரித்த ஸர்ப்பத்திற்கொப்பானதும் பிராணனைத் தேடுவதுபோலிருப்பதுமான ஸூதபுத்திரனுடைய சக்தியாயுதத்தை அறுத்து யுத்தத்தில் கோபமூண்டு இறகுகளுள்ளவையும் பொன்னாலலங்கரித்த அடிப்புறமுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையும் யமதண்டம் போன்றவையுமான அம்புகளைப் பிரயோகம் செய்தான். கர்ணனும் அப்பொழுது பின்புறத்திற் பொன்வேய்ந்ததும் அணுகமுடியாததுமான பெரிதான வேறுவில்லை எடுத்து அம்புகளைப்பூட்டி நாண்கயிற்றையிழுத்துப் பிரயோகம்செய்தான். அரசரே! பாண்டுபுத்ரனான பீமன் கர்ணனாலே விடப்பட்ட அந்த ஒன்பது பெரியபாணங்களைப் படிந்த கணுக்களுள்ள ஒன்பதுபாணங்க

ளால் அறுத்தான். மகாராஜரே! பீமன் (அவ்வாறு அந்தப்பாணங் களை) அறுத்துவிட்டு ஸிம்மம்போலக் கர்ஜித்தான். அவர்கள் பசுவின் விஷயத்தில் கர்ஜிக்கின்ற பலமுள்ள இரண்டு காளைகள்போலவும், மாம் ஸத்தின் நிமித்தமாகக் கர்ஜிக்கின்ற இரண்டு புலிகள்போலவும் பரஸ் பரம்நோக்கிக் கர்ஜித்தார்கள். ஒருவரையொருவர் கொல்ல எண்ணங் கொண்டவர்களும் அதற்குரிய ஸமயத்தைப் பரஸ்பரம் விரும்புகின்ற வர்களும் கொட்டில்களிலுள்ள பெரியகாளைகள்போல ஒருவரையொரு வர் பார்க்கின்றவர்களும் கொம்புநுனிகளாலே ஒன்றையொன்று முட்டி எதிர்க்கின்ற இரண்டுபெரியயானைகள் போன்றவர்களுமான அவ்விரு வரும் காதுவரையில் இழுத்துவிடப்படும் அம்புகளாலே ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டார்கள். மகாராஜரே! சஸ்த்ரமழையினாலே ஒருவரையொருவர் எரிக்கின்றவர்களும் கோபத்தினாலே கண்களைப் புரட்டி விழித்து ஒருவரையொருவர் பார்க்கின்றவர்களும் அந்நியோந்நி யம் பார்த்து அட்டஹாஸஞ் செய்கின்றவர்களும் அடிக்கடி அதட்டு கின்றவர்களுமான அவ்விருவர்களும் சங்கங்களை முழக்கிக்கொண்டு ஒருவரோடொருவர் போர்செய்தார்கள். ஐயா! பீமன் மறுபடியும் அவ னுடையவில்லைக் கைப்பிடியில் அறுத்துச் சங்குபோன்றநிறமுள்ள அக்குதிரைகளையும் அம்புகளால யமலோகத்திற்கனுப்பி, அவ்வாறே அவனுடைய ஸாரதியையும் தேர்த்தட்டினின்றும் கீழேதள்ளினான். பிறகு, சூரியகுமாரனான கர்ணன் முடிவற்ற மனக்கவலையை அடைந் தான். யுத்தத்தில் குதிரையையிழந்தவனும் ஸாரதியையிழந்தவனு மான அந்தக்கர்ணன் அம்புத்திரளால் மறைக்கப்பட்டவனாகிப் புத்தி மயக்கங்கொண்டு மேலேசெய்யவேண்டியதை அறியவில்லை. அவ்வாறு கர்ணன் கஷ்டமானநிலைமையையடைந்திருப்பதைக்கண்டு, ராஜாவான துரியோதனன் நடுக்கமுற்று, பிறகு, கோபத்தால் துர்ஜயனைநோக்கி 'துர்ஜயா! பாண்டவன் ராதேயனை விழுங்கப்போகிறான்; நீ கர்ணனுக் குப் பலத்தை உண்டுபண்ணிக்கொண்டு, [1] மீசையில்லாத அவனை விரைவாக ஸம்ஹாரஞ்செய்' என்று கட்டளையிட்டான். இவ்வாறு சொல்லப்பட்ட உம்முடைய குமாரன் உமது புத்ரனான துர்யோதன னைப்பார்த்து, 'அவ்வாறே ஆகட்டும்' என்று சொல்லிவிட்டு (கர்ண னுடன் போர்புரிவதில்) மனம் பதிந்துள்ள பீமஸேனன்மீது அம்பு களை இறைத்துக்கொண்டு எதிர்த்தோடிவந்தான். அந்தத் துர்ஜயன் பீமனை ஒன்பதுபாணங்களாலும் குதிரைகளை எட்டுப்பாணங்களாலும் ஸாரதியை ஆறுபாணங்களாலும் கொடிமரத்தை மூன்றுபாணங்களா

---

[1] 'தூபரகம்' என்பது மூலம்.

லும் மறுபடியும் பீமனை ஏழுபாணங்களாலும் அடித்தான். பீமஸே னனும் மிகுந்தகோபங்கொண்டு துர்ஜயனை அம்புகளால் மர்மஸ்தானங் களில்பிளந்து அவனைக் குதிரைகளோடும் ஸாரதியோடுங்கூடவே யம லோகத்திற்கனுப்பினான். நன்றாக அடித்துத் துகைக்கப்பட்டுப் பூமி யில் விழுந்து பாம்புபோலப் புரளுகின்ற உம்முடைய குமாரனைப்பார் த்துக் கர்ணன் அழுதுகொண்டு மனவருத்தமடைந்து பிரதக்ஷிணஞ் செய்தான். அந்தப்பீமன் அத்யந்த விரோதியான கர்ணனை ரதத்தை இழந்தவனாகச்செய்து புன்சிரிப்புடன் அவனை அம்புகளுடைய கூட் டங்களாலும் சதக்னிகளாலும் முளைகளாலும் நான்குபுறத்திலும் நிறைத்தான். பகைவரை வாட்டுபவனும் அதிரதனுமான கர்ணன் பீம னுடைய அம்புகளாலே அவ்வண்ணம் பிளக்கப்பட்டும் மிக்ககோப முள்ள பீமனை யுத்தத்தில் விட்டுவிலகவில்லை.

---

## நூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

---

(கர்ணன் பீமனுக்குத் தோற்றோடியது.)

ரதேமிழந்தவனான கர்ணன் மறுபடியும் பீமஸேனனாலே எல்லாவிதத்திலும் ஜயிக்கப்பட்டு வேறு ரதத்தின்மீதேறித் திரும்ப வும் பாண்டவனை அடித்தான். அவ்விருவரும் இரண்டு பெரிய யானை கள் கொம்புநுனிகளாலே ஒன்றையொன்று எதிர்ப்பதுபோல இழுக் கக்கூடியவரையில் இழுத்துவிடப்பட்ட அம்புகளாலே பரஸ்பரம் அடி த்துக்கொண்டார்கள். பிறகு, கர்ணன் பாணஸமூகங்களைப் பீமஸே னன்மீது பிரயோகித்து மிகவும்பெரிதான ஸிம்மநாதத்தைச்செய்து மறுபடியும் மார்பிலுமடித்தான். பீமன் நேராகச்செல்லுகின்ற பத்துப் பாணங்களாலே அவனைத் திருப்பியடித்துப் பின்னும் கணுக்கள்படி வாயுள்ள எழுபது பாணங்களால் அடித்தான். அரசரே! கர்ணனோ பீமனை ஒன்பது பாணங்களால் மார்பில்பிளந்து த்வஜத்தை ஒருபாண த்தாலும் விசோகனை மூன்றுபாணங்களாலும் அடித்தான். பிறகு, பீமன் யானைத்தோட்டிகளால் பெரியயானையை அடிப்பதுபோலவும், கசைகளால் குதிரையை அடிப்பதுபோலவும் அறுபத்துமூன்றுபாண ங்களினால் கர்ணனைத் திருப்பியடித்தான். மகாராஜரே! கீர்த்தியுள்ள பாண்டவனாலே நன்றாக அடிக்கப்பட்ட அந்தவீரன் கோபத்தால்

கடைக்கண்கள்சிவந்து இரண்டு கடைவாய்களையும் நக்கிக்கொண்டு, பிறகு, இந்திரன், பலனென்னும் அஸுரன்மீது வஜ்ராயுதத்தைப்பிரயோகித்ததுபோலத் தேகத்தை முழுதும் பிளக்கிற ஓர் அம்பைப் பீமஸேனன்மீது பிரயோகித்தான். கர்ணனுடைய வில்லிலிருந்து விடுபட்டதும், விசித்திரமானகணுக்களுள்ளதுமான அந்த அம்பானது யுத்தத்தில் பிருதாபுத்ரனை பீமனைப் பிளந்துவிட்டுப் பூமியையும்பிளந்து கொண்டு சென்றது. பிறகு, மகாபாகுபலமுள்ள பீமன் கோபத்தால் கண்கள்மிகச்சிவந்து வஜ்ராயுதம்போன்றதும் நாலுமுழநீளமுள்ளதும் பெரிதும் பொன்வளையங்களுள்ளதும் ஆறுபட்டைகளையுடையதுமான கதாயுதத்தை ஆலோசியாமல் ஸூதபுத்திரன்மீது பிரயோகித்தான். பாரதகுலத்திற் பிறந்தவனானபீமன் கோபங்கொண்டு, இந்திரன் வஜ்ராயுதத்தினாலே அஸுரர்களை அடித்ததுபோல நன்றாக வகிக்குந்திறமையுள்ள அதிரதபுத்ரனான கர்ணனுடைய நல்ல குதிரைகளை அந்தக் கதையினாலே கொன்றான், பரதசிரேஷ்டரே! பிறகு, மிக்க புஜபலமுள்ளபீமன் இரண்டு க்ஷுரங்களாலே அதிரதனான கர்ணனுடைய த்வஜத்தையும் அறுத்து அம்புகளாலே ஸாரதியையுங்கொன்றான். பாரதரே! கர்ணன் குதிரைகளும் ஸாரதியும் கொல்லப்பட்டதும் கொடிமரம் விழுந்துவிட்டதுமான ரதத்தை விட்டுவிட்டு மனவருத்தமுற்று வில்லை ஒலிக்கச்செய்துகொண்டு எதிரில் நின்றான். அந்த யுத்தகளத்தில் தோராளிகளுட்சிறந்த ராதேயன் தேரிழந்தவனாகிச் சத்துருவைத் தடுத்ததென்னும் அவனுடைய ஆச்சரியமான வல்லமையைக் கண்டோம். அரசரே! பிறகு, நரசிரேஷ்டனும் அதிரதன் மைந்தனுமான அந்தக்கர்ணனை யுத்தத்தில் ரதத்தை யிழந்தவனாகக்கண்டு துரியோதனன் துர்முகனைப்பார்த்து, 'துர்முகா! இதோ ராதேயன் பீமஸேனனாலே ரதத்தையிழந்தவனாகச் செய்யப்பட்டிருக்கிறான். நரசிரேஷ்ட! அந்த மகாரதனை ரதத்தில் ஏற்றிக்கொள்' என்று சொன்னான். பாரதரே! பிறகு, துர்முகன் துரியோதனனுடைய வார்த்தையைக் கேட்டு விரைவாகக் கர்ணனைநோக்கிச் சென்றான்; பீமனையும் அம்புகளால் தடுத்தான். வாயுபுத்ரனான பீமன் யுத்தத்தில் துர்முகன் ஸூதபுத்திரனைத் தொடர்ந்துவருவதைக்கண்டு இரண்டுகடைவாய்களையும் நக்கிக்கொண்டு சந்தோஷமுடையவனானான். மகாராஜரே! பிறகு, பாண்டவன் அம்புகளாலே கர்ணனைத்தடுத்துத் துர்முகனைக்குறித்து ரதத்தை வேகமாகநடத்தினான். மகாராஜரே! பீமன் அந்தக்ஷணத்தில் படிந்த கணுக்களுள்ளவையும் கூரியவாயுள்ளவையுமான ஒன்பது பாணங்களாலே துர்முகனை யமலோகத்திற்கு அனுப்பினான். அரசரே!

பிறகு, துர்முகன் கொல்லப்பட்டவுடன் அதிரதபுத்ரனான கர்ணன் அதோரதத்திலேறி ஜ்வலிக்கின்ற சூரியன்போலப் பிரகாசித்தான். கவசமுடைந்து ரக்தத்தால் நனைக்கப்பட்டுப் படுத்திருக்கின்ற துர்முகனைக்கண்டு கர்ணன் கண்களில் நீர்ததும்ப ஒரு முகூர்த்தகாலம் சத்துருவை எதிர்க்காமலிருந்தான். வீரனான கர்ணன் உயிரிழந்தவனான அந்தத்துர்முகனை வலம்செய்து தாண்டிவந்து உஷ்ணமாக நெடுமூச்செறிந்து ஒன்றுந்தெரியாமலிருந்தான். அரசரே! அச்சமயத்தில், பீமஸேனன் கழுகிறகுகள்பூண்ட பதினான்கு நாராசங்களை ஸூதபுத்திரன்மீது பிரயோகித்தான். மகாராஜரே! பொன்மயமான புங்கமுள்ள அந்த நாராசங்கள் மகாதேஜஸ்வியான அந்தக் கர்ணனுடைய பொன்னால்சித்திரிக்கப்பட்டிருக்கிற கவசத்தையுடைத்துப் பத்துத்திக்குக்களிலும் விளங்கின. மனிதர்களுக்குப் பிரபுவே! இரத்தத்தைப் பானம்பண்ணுகின்றவைகளான (பீமனுடைய அம்புகள்) காலனாலே தூண்டப்பட்ட கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போல ஸூதபுத்ரனுடைய ரக்தத்தைப் பானஞ்செய்தன. பூமியில் பிரவேசிக்கின்றவைகளான அவ்வம்புகள் புற்றுக்களில் கோபத்துடன் பாதிநுழைந்திருக்கின்ற பெரிய ஸர்ப்பங்கள்போல விளங்கின. ராதேயன் ஆலோசனையற்றவனாகப் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவையும் மிகக்கொடியவைகளுமான பதினான்கு நாராசங்களாலே அந்தப் பீமஸேனனைத் திருப்பி யடித்தான். பயங்கரமான அந்த அம்புகள் பீமஸேனனுடைய இடக்கையைப்பிளந்துகொண்டு அன்னப்பறவைகள் க்ரௌஞ்ச பர்வதத்தில் பிரவேசிப்பதுபோலப் பூமியிற் பிரவேசித்தன. பூமியில் நுழைகின்ற அந்த நாராசங்கள் சூரியன் அஸ்தமிக்குங்காலத்தில் பிரகாசிக்கின்ற கிரணங்கள்போல் விளங்கின. அந்தப்பீமன் போரில் உயிர்நிலைகளைப் பிளப்பவைகளான நாராசங்களாலே பிளக்கப்பட்டு மலையானது ஜலத்தைப்பெருக்குவதுபோல அதிக ரக்தத்தைப் பெருக்கினான். அந்தப்பீமன் கருடனுடைய வேகம்போன்ற வேகமுள்ள மூன்று அம்புகளாலே ஸூதபுத்ரனையும் ஏழு அம்புகளாலே அவன் ஸாரதியையும் அடித்தான். மகாராஜரே! பீமனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டுத் தளர்ச்சியடைந்தவனான அந்தக் கர்ணன் வேகமுள்ள குதிரைகளோடு பெரும்பயத்தினால் யுத்தரங்கத்தைவிட்டு ஓடினான். அதிரதனான பீமசேனனோ ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டவில்லை நாணொலி செய்துகொண்டு ஜ்வலிக்கின்ற நெருப்புப்போல யுத்தத்தில் நின்றான்" என்றுகூறினான்.

---

## நூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(பீமஸேனன் துர்மர்ஷணன்முதலான துரியோதனனுடைய ஐந்து தம்பியரைக்கொன்றது.)

திருதராஷ்டிரன், "முயற்சியுடையவனும் அதிரதபுத்ரனுமான கர்ணன் ரணகளத்தில் பாண்டுபுத்ரனான பீமஸேனனை மீறுமையால் விதியேவலிதென்று எண்ணுகிறேன். பயனற்ற முயற்சியை இகழ வேண்டும். 'கர்ணன் கோவிந்தனோடுகூடின பார்த்தர்களை ரணகளத்தில் ஜயிக்கச்சக்தியுள்ளவன். கர்ணனுக்குச் சமானமான யுத்தவீரன் ஒருவனையும் உலகத்தில் நான் கண்டதில்லை' என்று அடிக்கடி சொல்லுகின்ற துரியோதனனுடைய வார்த்தையை நான் கேட்டிருக்கிறேன். ஸூத! அவன், 'கர்ணனே மிகுந்தபலமுள்ளவன்; சூரன்; திடமான வில்லையுடையவன்; சிரமத்தை ஜயித்தவன்' என்று என்னிடத்தில் சொல்லியிருக்கிறான். அரசரே! 'கர்ணனை ஸகாயமாகக்கொண்ட என்னை யுத்தத்தில் தேவர்கள்கூட ஜயிக்கச் சக்தியற்றவர்கள். அவ்வாறிருக்க, பலமற்றவர்களும் புத்தியில்லாதவர்களுமான பாண்டவர்கள் எவ்வாறுஜயிக்கப்போகிறார்கள்?' என்றும் மந்தனான துர்யோதனன்முந்தி என்னிடம் சொன்னான். அந்த யுத்தகளத்தில் விஷமற்ற ஸர்ப்பத்தைப் போல் ஜயிக்கப்பட்டு, யுத்தத்தைவிட்டு ஓடுகின்ற கர்ணனைக்கண்டு துரியோதனன் என்ன சொன்னான்? அந்தோ! மதிமயக்கமுள்ளவனான துர்யோதனன் யுத்தங்களில் ஸாமர்த்தியமில்லாதவனான துர்முகனை ஏகாகியாக நெருப்பில் விட்டிற்பூச்சியை விழச்செய்வதுபோல (பீமயுத்தத்தில்) பிரவேசிக்கச்செய்தான். ஸஞ்சய! பீமனுக்கெதிரில் அச்வத்தாமாவும் மத்ரராஜனும் கிருபரும் கர்ணனும் ஒன்றுசேர்ந்துங்கூட நிற்பதற்கு நிச்சயமாகச் சக்தியற்றவர்களே. பலத்தையும், கோபத்தையும் வீர்யத்தையும் அறிந்தவர்களான அவர்கள் அந்தப் பீமஸேனனுடைய மகாகோரமானதும் பதினாயிரம்யானையின் பலம்போன்றதுமான பலத்தையும் வாயுவினுடைய சக்திபோன்ற சக்தியுள்ள அவனுடைய குரூரமான முயற்சியையும் அறிந்தவர்களாயிருந்தும் யுத்தகளத்தில் யமனும் காலனும் அந்தகனும் போன்றவனும் கொடுஞ்செய்கையுடையவனுமான அவனை ஏன் கோபிக்கச்செய்தார்கள்? தோள்வலிமைமிக்க ஸூதபுத்ரனான கர்ணனே தன் கைவன்மையால் கர்வமடைந்திருக்கிற பீமஸேனனை அலக்ஷியம்செய்து யுத்தகளத்தில்போர்

புரிந்தான். யுத்தத்தில் இந்திரன் அஸுரனை ஜயித்ததுபோல் கர்ணனை ஜயித்த பாண்டுபுத்திரனான பீமன் யுத்தத்தில் ஒருவனாலும் ஜயிக்க முடியாதவன். தனஞ்சயனைத்தேடிக்கொண்டு ஒருவனாகவே துரோணரை முறிய அடித்து என்சேனையில் பிரவேசித்த பீமனை உயிரோடிருக்க எண்ணங்கொண்டவன் எவன்தான் எதிர்ப்பான்? ஸஞ்சய! வஜ்ராயுதத்தைக் கையில்பிடித்த மகேந்திரனுக்கெதிரில் அஸுரன்போல பீமனுக்கெதிரில் எவன் நிற்கச் சக்தியுள்ளவன்? மனிதன் யமனுடைய பட்டணத்தையடைந்து திரும்பினாலும் திரும்புவான்; பீமஸேனனையடைந்து ஒருபோதிலும் திரும்பமாட்டான். அல்பபுத்தியுள்ளவர்களாகி மதிமயக்கங்கொண்டு மிக்ககோபமுள்ளவனான பீமஸேனனை எதிர்த்துச் சென்றவர்கள் நெருப்பில் பிரவேசிக்கின்ற விட்டிற்பூச்சி போன்றவர்களே, அப்பொழுது, கௌரவஸபையில் கௌரவர்கள் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது முயற்சியுடையவனும் உக்ரசுபாவமுள்ளவனுமான பீமனாலே என் புத்திரர்களுடைய வதத்தைப்பற்றிச் சொல்லப்பட்ட வார்த்தையை நினைத்தும் கர்ணன் தோல்வியடைவிக்கப்பட்டதைக் கண்டும், துச்சாஸனன் பிராதாவோடுகூடப் பீமனிடத்திலுள்ள பயத்தினால் விலகினான். இது நிச்சயம். ஸஞ்சய! மதிகேடனும் கௌரவசபையில், 'கர்ணனும் துச்சாசனனும் நானும் யுத்தத்தில் பாண்டவர்களை ஜயிப்போம்' என்று அடிக்கடி சொன்னவனுமான என்னுடைய இழிகுணமுள்ள புதல்வன், பீமனாலே கர்ணன் தோல்வியடைவிக்கப்பட்டு ரதத்தை யிழந்ததைக்கண்டும் (முன்பு தான்) கிருஷ்ணனை அவமதித்ததை நினைத்தும் நிச்சயமாக மிகுந்த மனவருத்தத்தையடைவான். கவசம் பூண்டவர்களும் யுத்தத்தில் பீமஸேனனால் கொல்லப்பட்டவர்களுமான தன் பிராதாக்களைக்கண்டு தன்னுடைய குற்றத்தினால் மிக்க மதிமயக்கமுற்று என்புத்திரன் மனவருத்தத்தை நிச்சயமாக அடைவான். பயங்கரமான ஆயுதங்களையுடையவனும் கோபமுள்ளவனும் நேரில்வந்த யமன்போல நிற்கின்றவனும் பாண்டுபுத்ரனுமான பீமனை உயிரோடிருக்க எண்ணம்கொண்டவன்தான் எதிர்த்துப் போவான். வடவைத்தீயின் வாயிடையில் அகப்பட்ட மனிதன் விடுபட்டாலும் விடுபடுவான். பீமஸேனனுடைய முகத்தை நாடினவன் விடுபடமாட்டானென்பதே என்னுடைய எண்ணம். யுத்தத்தில் கோபமுள்ளவர்களான பார்த்தர்களாவது பாஞ்சாலர்களாவது கேசவனாவது ஸாத்யகியாவது உயிரைப்பாதுகாத்தல் என்னும் விஷயத்தை அறியாதவர்கள். ஸூத! அந்தோ! என்புத்திரர்களுடைய உயிரானது விபத்தை அடைந்துவிட்டது" என்று புலம்ப, ஸஞ்சயன் சொல்லத் தொடங்கினான்.

" குருகுலத்தில் தோன்றியவரே! பெரியபயம் நேர்ந்திருக்கும்பொழுது துக்கப்படுகிற நீங்களே இந்த உலகத்தினுடைய விநாசத்துக்குக் காரணம்; ஸம்சயமில்லை. புத்திரர்களுடைய சொற்படிநின்று நீரே பெரிதான வைரத்தையுண்டுபண்ணி (பீஷ்மர் முதலானவர்களால்) சொல்லப்பட்டும், சாகுந் தறுவாயிலிருப்பவன் பத்தியமான ஔஷதத்தை ஏற்றுக்கொள்ளாததுபோல நீர் (அந்தச் சொற்களை) ஏற்றுக்கொள்ளவில்லை. மஹாராஜரே! புருஷஸ்ரேஷ்டரே! எவ்விதத்தாலும் ஜீர்ணம் செய்வதற்கு முடியாத காலகூடமென்னும் விஷத்தை நீர் தாமாகவே பானஞ்செய்தீர். அதினுடைய பூர்ணபலத்தை இப்பொழுது அனுபவியும். யுத்தஞ் செய்கின்றவர்களும் மஹாபலசாலிகளுமான போர்வீரர்களை நிந்திக்கிறீர். யுத்தம் நடந்தவிதத்தை உமக்கு உரைப்பேன். பாரதரே! பீமஸேனனால் தோல்வியடைவிக்கப்பட்ட கர்ணனைக்கண்டு பெரிய வில்லையுடையவர்களும் ஸஹோதரர்களுமான துர்மர்ஷணன், துஸ்ஸஹன், துர்மதன், துர்த்தரன், ஜயன் என்கிற உம்முடைய ஐந்து புத்திரர்கள் பொறுக்கவில்லை. அவர்கள் ஆச்சர்யகரமான ஸன்னாஹத்தோடு கூடியவர்களாகிச் சத்துருவான அந்தப் பாண்டவனை எதிர்த்து அருகில் ஓடினார்கள். அவர்கள் மஹாபாகுபலமுள்ள விருகோதரனை நான்கு பக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு விட்டிற் பூச்சிகளுடைய கூட்டங்கள்போன்ற பாணங்களால் திக்குக்களை மூடினார்கள். (எதிர்த்து) வருகின்றவர்களும் தேவதைகளுடைய ரூபம்போன்ற ரூபமுடையவர்களுமான அந்தக் குமாரர்களைப் பீமஸேனன் சிரித்துக்கொண்டே யுத்தத்தில் வரவேற்றான். ராதா புத்திரனே துர்மர்ஷணன் முதலான உம்முடைய பிள்ளைகளைப்பார்த்து மஹாபலசாலியான பீமஸேனன்மீது கூர்மையுள்ளவையும் பொற்புங்கமுள்ளவையும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவையுமான பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு எதிர்த்தான். பீமன் உம்முடைய குமாரர்களால் தடுக்கப்பட்டும் அந்தக்கர்ணனை விரைவாக எதிர்த்தான். கௌரவர்களோ, பிறகு, நான்கு பக்கங்களிலும் கர்ணனைச் சூழ்ந்துகொண்டு படிந்த கணுக்களுள்ள அம்புகளைப் பீமஸேனன்மீது இறைத்தார்கள். அரசரே! பயங்கரமான வில்லைப் பிடித்தவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அந்த வீரர்களைப் பீமன், இருபத்தைந்துபாணங்களால் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் யமனுடைய வீட்டுக்கு அனுப்பினான். அவர்கள், காற்றினால் முறிக்கப்பட்டவையும் பற்பல நிறமுள்ள புஷ்பங்களைத் தாங்குகின்றவையுமான மரங்கள்போல ஸூதர்களோடு உயிரை இழந்து தேர்களிலிருந்து கீழேவிழுந்தார்கள். அந்த யுத்தத்

தில் அதிரதபுத்ரனுன கர்ணனைப் பாணங்களால்தடுத்து உம்முடைய குமாரர்களைக் கொன்றமையால், பீமஸேனனுடைய பராக்ரமத்தை ஆச்சரியமாகக்கண்டோம். மஹாராஜரே! பீமனுல், கூர்மையுள்ள பாணங்களால் நான்குபக்கங்களிலும் தடுக்கப்படுகின்ற அந்த ஸூத புத்திரன் பீமஸேனனை நன்ருகப்பார்த்தான். பீமஸேனன் கோபத்தினுல் கண்கள் மிகச்சிவந்தவனுகி மிகப் பெரிதானவில்லை நாணுெலி யிடும்படிசெய்துகொண்டு பரபரப்பினுல் அடிக்கடி அந்தக் கர்ணனைப் பார்த்தான்.

---

## நூற்றுமுப்பத்தாருவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன் சித்ரன் உபசித்ரன் முதலான துர்யோதன ஸஹோதரர்களைக் கொன்றது.)

உம்முடைய குமாரர்கள் விழுந்ததைக்கண்டு பிரதாபசாலியான கர்ணன் மிக்ககோபங்கொண்டு தன் உயிரில் ஆசையற்றவனுனன். அதிரதபுத்ரனுன கர்ணன், தன்முன்னிலையில் பீமனுல் உம்முடைய குமாரர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்களாதலால் அப்பொழுது தன்னைக் குற்றம்செய்தவனைப்போல் எண்ணினுன். பிறகு, பீமஸேனன் கோபங்கொண்டவனும் பரபரப்புள்ளவனுமாகி முந்தின வைரத்தை நினைத்துக்கொண்டு கர்ணன்மீது கூர்மையுள்ள பாணங்களை நாட்டினுன். அந்த ராதேயன் அட்டஹாஸஞ்செய்துகொண்டு பீமனை ஐந்துபாணங்களால் அடித்து மறுபடியும் ஸ்வர்ணமயமானகட்டுக்களுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையுமான எழுபது பாணங்களால் அடித்தான். பிறகு, விருகோதரன் கர்ணனுல் விடப்பட்ட அந்த அம்புகளை லக்ஷ்யம்செய்யாமல் யுத்தகளத்தில் படிந்த கணுக்களுள்ள அம்பினுல் அவனை அடித்தான். பெருமானே! மறுபடியும், கூர்மையுள்ள ஐந்துபாணங்களால் தேர்ப்பாகன் மகனுடைய உயிர்நிலைகளில் அடித்து ஒரு பல்லத்தினுல் அவனுடைய வில்லையும் அறுத்தான். பாரதரே! பிறகு, பகைவர்களைத் தபிக்கச்செய்கிறவனுன கர்ணன் மனவருத்தமடைந்து வேறுவில்லை எடுத்துப் பீமஸேனனைப் பாணங்களால் மூடினுன். பீமன் அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும்கொன்று பழிக்குப் பழிவாங்கிப் பெருநகைசெய்தான். மஹாராஜரே! புருஷச்ரேஷ்டனுன பீமன் அம்புகளால் கர்ணனுடைய

வில்லையும் அறுத்தான். பொன்வேய்ந்த பின்பக்கமுள்ள அந்த வில்லானது பேரொலியுடன் கீழேவிழுந்தது. பிறகு, மஹாரதனான கர்ணன் அந்த ரதத்தினின்றும் இறங்கிக் கோபத்துடன் யுத்தத்தில் கதாயுதத்தைக் கையிலெடுத்துப் பீமன்மீது பிரயோகித்தான். அரசரே! பீமஸேனன், வருகின்ற அந்தப் பெரிய கதாயுதத்தைப் பார்த்து எல்லாஸைனிகர்களும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே அம்புகளால் தடுத்தான். பிறகு, பராக்ரமசாலியான பாண்டவன் விரைவுள்ளவனாகி ஸூதபுத்ரனான கர்ணனைக் கொல்ல எண்ணி அவன் மீது ஆயிரக்கணக்கான அம்புகளைப் பிரயோகித்தான். கர்ணன் மகா யுத்தத்தில் அந்த அம்புகளை அம்புகளால்தடுத்துப் பீமஸேனனுடைய கவசத்தை அம்புகளால் உடைத்து, பிறகு, அந்தப்பீமனை எல்லாப் படைவீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது இருபத்தைந்து நாராசங்களால் அடித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. ஐயா! பிறகு, தோள்வலிமிக்க பீமன் மிகுந்த கோபங்கொண்டு படிந்தகணுக்களுள்ள ஒன்பதுபாணங்களை ஸூதபுத்திரனான கர்ணன்மீது பிரயோகித்தான். கூர்மையுள்ள அவ்வம்புகள் அவனுடைய கவசத்தையும் அவ்வாறே வலக்கையையும்பிளந்து புற்றில் ஸர்ப்பங்கள் பிரவேசிப்பதுபோலப் பூமியிற்பிரவேசித்தன. கர்ணன் பீமஸேனனுடைய வில்லினின்று விடுபடும் பாணசமூகங்களாலே மூடப்படுகின்றவனாகி மறுபடியும் பீமஸேனனிடமிருந்து (யுத்தத்தில்) புறங்காட்டிச் செல்லுகின்றவனானான். ஸூதபுத்ரனான கர்ணன் குந்திபுத்ரனான பீமனுடைய அம்புகளால் மூடப்பட்டுப் பின்னேதிரும்பின முகமுள்ளவனாகிக் காலால்நடந்து செல்லுகின்றதைப்பார்த்து ராஜாவான துரியோதனன், 'நீங்கள் எல்லாப்புறங்களிலும் முயற்சியுடன் ராதேயனுடைய ரதத்தைக்குறித்து விரைவுபடுங்கள்' என்றுசொன்னான். வேந்தரே! பிராதாவான துரியோதனனுடைய வார்த்தையைக்கேட்டுப் பின் யுத்தத்தில் விசித்ரமாக யுத்தம்பண்ணுகிறவர்களான சித்ரன், உபசித்ரன், சித்ராக்ஷன், சாருசித்ரன், சராஸனன், சித்ராயுதன், சித்ரவர்மா என்னும் உம்முடைய புத்திரர்கள் யுத்தத்தில் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு பாண்டவனை எதிர்த்தார்கள். மகாரதனான பீமஸேனன் அந்த உம்முடைய குமாரர்கள்வரும்பொழுதே அவர்களை ஒவ்வோர் அம்பினாலே யுத்தகளத்தில் விரைவாகத் தள்ளினான். அவர்கள் காற்றினாலேமுறிக்கப்பட்ட மரங்கள்போலக் கொல்லப்பட்டுக் கீழேவிழுந்தார்கள். மன்னரே! மகாரதர்களான உம்முடைய புத்ரர்கள் கொல்லப்பட்டதைக்கண்டு கர்ணன் கண்ணீரால்நிரம்பிய முகத்தையுடையவனாகி

விதுரருடைய அந்த வார்த்தையை நினைந்தான். பராக்கிரமசாலியான கர்ணன் விரைவுடனெச் சாஸ்திரப்படி அமைக்கப்பட்ட வேறு ரதத்தின்மீது ஏறிக்கொண்டு, மறுபடியும் யுத்தரங்கத்தில் பாண்டவனை எதிர்த்துச் சென்றான். அவ்விருவரும் பொன்மயமான அடிப்பக்க முள்ளவையும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவையுமான அம்புகளாலே அந்யோந்யம் அடித்துக்கொண்டு சூரியகிரணங்களாலே நன்றாகக்கோக்கப்பட்ட இரண்டுமேகங்கள்போல விளங்கினார்கள். பிறகு, பாண்டவன் கோபமூண்டு தீட்டப்பட்டவையும் மிக்க கூர்மையுள்ளவையுமான முப்பத்தாறுபல்லங்களாலே ஸூதபுத்ரனுடைய கவசத்தை உடைத்தான். பரதஶ்ரேஷ்டரே! மகாபாகுவான ஸூதபுத்ரனும் கணுக்கள் உட்படிந்துள்ள ஐம்பதுபாணங்களாலே கௌந்தேயனை அடித்தான். செஞ்சந்தனத்தினாலே பூசப்பட்ட மேனியையுடையவர்களும் அம்புகளாலே உண்டுபண்ணப்பட்ட பெரும்புண்ணுள்ளவர்களும் இரத்தத்தால் நனைக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் உதித்திருக்கின்ற இரண்டு பிரளயகால சூரியர்கள்போல் விளங்கினார்கள். இரத்தத்தால் நனைக்கப்பட்ட அவயவங்களுள்ளவர்களும் அம்புகளாலே கவசங்களறுக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும், சட்டையுரித்த இரண்டுபாம்புகளைப் போலத் திறந்திருக்கின்ற அங்கங்களையுடையவர்களாக விளங்கினார்கள். மகாராஜரே! கோபாக்னியினுடைய தேஜஸினால் பிரகாசிக்கின்றவர்களும் ரோஷத்தினால் சிவந்த கண்களையுடையவர்களுமான அவ்விருவரும் புகைதணிந்திருக்கின்ற இரண்டு நெருப்புகள்போலப் பிரகாசித்தார்கள். நரசிரேஷ்டர்களான இருவீரர்களும், கோரப்பற்களால் இரண்டுபுலிகள் ஒன்றோடொன்று சண்டையிடுவதுபோல (சஸ்திரங்களாலே ஒருவரையொருவர் எதிர்த்து) மேகங்கள்போல் அம்புமழையைப் பொழிந்துகொண்டார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களான அவ்விருவரும் இரண்டுயானைகள் கொம்புகளாலே பரஸ்பரம் பிளந்துகொள்வதுபோல அம்புகளாலே தங்களுடைய அவயவங்களைப் பிளந்துகொண்டு அழகாகவிளங்கினார்கள். ஒருவரையொருவர் அலறும்படி செய்கின்றவர்களும், மிகுந்த உத்ஸாகமுடையவர்களும், (போர்) விளையாட்டைச் செய்கின்றவர்களும், ரதங்களால் மண்டலாகாரமான கதிகளோடுசெல்லுகின்றவர்களும், ரதிகர்களுள் உத்தமர்களும், ஒருபசுமாட்டின் விஷயமாகக்கர்ஜிக்கின்ற பலமுள்ள இரண்டுகாளைகள் போன்றவர்களும், ஸிம்மங்கள்போலப் பராக்ரமத்தைக் காண்பிப்பவர்களும், நரஶ்ரேஷ்டர்களும், மகாபலசாலிகளும், ஒருவரையொருவர் பார்க்கின்றவர்களும், கோபத்தால் சிவந்தகண்களையுடையவர்களுமான அவ்விரு

வரும் மகாபலசாலிகளான இந்திரனும் பலியென்னும் அஸுரனும் போல யுத்தஞ்செய்தார்கள். அரசரே! பிறகு, மகாபாகுபலமுள்ள பீமன் இரண்டுகைகளாலும் வில்லை அசைத்துக்கொண்டு மின்னலோடு கூடின மேகம்போல யுத்தகளத்தில் விளங்கினான். பீமஸேனனென்கிற பெருமேகமானது தேருருளைக்கட்டின ஓசையாகிய இடிமுழக்கத் தோடும் வில்லாகிற மின்னலோடும்கூடிக் கர்ணனென்கிற பர்வதத்தைச் சரமாகிறஜலத்தினால் நான்கு புறமும் சூழ்ந்துகொண்டது. பாரதரே! பிறகு,பயங்கரமான பராக்ரமமுள்ளபீமன் நன்றாகப்பிரயோகிக்கப்பட்ட ஆயிரம் அம்புகளைக் கர்ணன்மீது இறைத்தான். அவ்விடத்தில் உம் முடையகுமாரர்கள் உறுதியான கட்டுக்களுள்ளவைகளும் கழுகிறகு கள் பூண்டவைகளுமான அம்புகளாலே கர்ணனைமூடுகின்ற பீமஸேன னுடைய விக்ரமத்தைக் கண்டார்கள். அந்தப பீமன் யுத்தகளத்தில் பார்த்தனையும் கீர்த்தியுடையவரான கேசவரையும் ஸாத்யகியையும், இரண்டு சக்ரரக்ஷகர்களையும் ஸந்தோஷிக்கச்செய்துகொண்டு கர்ண னோடு போர்புரிந்தான். மகாராஜரே! . தன்னிலைமையை அறிந்தவ னான பீமஸேனனுடைய விக்கிரமத்தையும் வீர்யத்தையும் தைரியத் தையும்பார்த்து உம்முடைய புத்திரர்கள் துக்கத்தை யடைந்தவர்க ளானார்கள்.

---

## நூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி)

(பீமன் யுத்தத்தில் கர்ணனுக்கு உதவின விகர்ணன் முதலியவர்களைக் கொன்றது.)

ராதேயன் பீமஸேனனுடைய நாணொலியையும் தலதவனியை யும்கேட்டு மதங்கொண்டயானையானது பகையானையினுடைய சப்தத் தைப் பொறுததுபோலப் பொறுக்கவில்லை. அவன் பீமஸேனனுடைய முன்னிலையைவிட்டு ஒரு முகூர்த்தகாலம் விலகியிருந்து, பிறகு, பீமஸேனனால் மாய்க்கப்பட்ட உம்முடைய புத்திரர்களைக் கண்டான். நரஸ்ரேஷ்டரே! கர்ணன் அவர்களைக்கண்டு அப்பொழுது மிக்க மன வருத்தமுற்றுத் துக்கத்தை அடைந்து உஷ்ணமாகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு பாண்டவனை எதிர்த்துச்சென்றான். குரோதத்தினால் சிவந்தகண்களையுடையவனும் மஹாஸர்ப்பம்போல மூச்சுவிடுகின்ற வனுமான கர்ணன் பாணங்களைப் பிரயோகிப்பவனாகிக் கிரணங்களைப்

பரப்புகின்ற ஸூரியன்போல விளங்கினான். பரதஸ்ரேஷ்டரே! ஸூரிய
னுடைய கிரணங்களால் மலைமூடப்படுவதுபோல, விருகோதரன் கர்ண
னுடைய வில்லிலிருந்து விடுபடும்பாணங்களால் நன்றாகமூடப்பட்
டான். கர்ணனுடைய வில்லிலிருந்து தோன்றுகின்றவையும் இறகுகள்
கட்டியவையுமான அவ்வம்புகள், பறவைகள் வஸிப்பதற்காக மரத்தில்
நுழைவதுபோல நான்குபக்கங்களிலும் பீமனிடம் நுழைந்தன. ஆங்கா
ங்கு விழுகின்றவைகளும் ஸ்வர்ணமயமான கணுக்களுள்ளவைகளும்
கர்ணனுடைய வில்லிலிருந்து விடுபட்டவைகளுமான அம்புகள் வரிசை
யாகப் பறக்கின்ற அன்னப்பறவைகள்போல விளங்கின. அரசரே! அதிர
தன்மகனான கர்ணனுடைய அம்புகள் வில்லினின்றும் த்வஜத்தினின்றும்
மற்ற உபகரணங்களினின்றும் குடையினின்றும் ஏர்க்கால் நுனியினின்
றும் நுகத்தடியினின்றும் புறப்படுகின்றவைகளாகக் காணப்பட்டன.
அதிரதபுத்ரனானகர்ணன் ஆகாயத்தை நிரப்பிக்கொண்டு மிக்கவேகமுள்
ளவையும் ஆகாயத்தில்ஸஞ்சரிக்கிறவையும் கழுகிறகுகள்பூண்டவையும்
பொன்னால் வேலைசெய்யப்பட்டுள்ளவையும் ஆச்சர்யகரமானவையுமான
அம்புகளைப் பிரயோகித்தான். கர்ணன் பிராணன்களை இழக்கத்துணி
ந்து அதிவேகத்துடன் முன்வந்து, யமன்போலவருகின்றவனும் முயற்சி
யுள்ளவனுமான விருகோதரனைக் கூரிய அம்புகளால் அடித்தான். வீர்ய
முடையவனும் பாண்டுகுமாரனுமான அந்தப் பீமன் ஸகிக்கமுடியாத
கர்ணனுடைய வேகத்தைப்பார்த்து அந்தப் பெரிய அப்புத்திரள்களைத்
தடுத்தான். பிறகு, பாண்டவன் அதிரதன் மைந்தனான கர்ணனுடைய
பாணஸமூகங்களை நாசஞ்செய்து மறுபடியும் சாணையில் தீட்டப்பட்ட
இருபதுபாணங்களால் கர்ணனையடித்தான். பாண்டுபுத்ரனான பீமன்
போர்க்களத்தில் கர்ணன் தன்னை அம்புகளால் மூடியதுபோலவே தா
னும் அவனை அம்புகளால் மூடினான். பாரதரே! யுத்தரங்கத்தில் பீம
ஸேனனுடைய வல்லமையைக் கண்டு உம்மைச் சேர்ந்தவர்கள் ஸந்
தோஷமடைந்தார்கள். சாரணர்களும் களிப்படைந்தார்கள். மன்னரே!
கௌரவபாண்டவகக்ஷிகளிலிருக்கின்ற பூரிஸ்ரவஸ் கிருபர் அஸ்வத்
தாமா மத்ரதேசாதிபதியான சல்யன் ஜயத்ரதன் உத்தமௌஜஸ் யுதா
மன்யு ஸாத்யகி ஸ்ரீகேசவர் அர்ஜுனன் ஆகிய பத்துமகாரதர்களும்,
'நல்லது, நல்லது' என்று புகழ்ந்து பின்பு வேகத்துடன் ஸிம்மநாத
முஞ் செய்தார்கள். அரசரே! நெருங்கியதும் மயிர்க்கூச்சத்தையுண்டு
பண்ணுகிறதுமான அந்த ஸிம்மநாதம் தோன்றியவுடனே உமது புத்ர
னான துரியோதனன், பரபரப்புடன் ராஜபுத்ரர்களையும் அரசர்களையும்
விசேஷித்துத் தன் சகோதரர்களையும் நோக்கி, 'கர்ணனைப் பீமனிடத்தி

னின்று காத்தற்காகச் செல்லுங்கள். உங்களுக்கு மங்களமுண்டாகுக. பீமனுடைய வில்லினின்று விடுபடுகின்ற அம்புகள் ராதேயனைக் கொல்லப்போகின்றன. மகாவில்லாளிகளான நீங்கள் ஸூதபுத்திரனைப் பாதுகாக்கும் விஷயத்தில் முயற்சிசெய்யுங்கள்' என்று கூறினான். பாரதரே! துரியோதனனால் ஏவப்பட்ட ஏழு ஸகோதரர்களும் கோபங்கொண்டு பீமஸேனனை எதிர்த்துச்சென்று நாற்புறங்களிலும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் குந்தீபுத்திரனான பீமனை எதிர்த்து மாரிக் காலத்தில் மேகங்கள் மழைத்தாரைகளால் மலையைச் சூழ்வதுபோல அம்புமழைகளால் நான்குபக்கத்திலும் சூழ்ந்து தடுத்தார்கள். அரசரே! பிரஜைகளுக்கு நாசம் நேரிடுங்காலத்தில் ஏழுகிரஹங்கள் சந்திரனைப் பீடிப்பதுபோலக் கோபங்கொண்ட அந்த ஏழுஸகோதரர்களும் பீமஸேனனைப் பீடித்தார்கள். வேந்தரே! பிறகு, குந்தீபுத்ரனும் சிரமத்தை ஸகிக்கின்றவனும் பிரபுவுமான பீமன் நன்கு அலங்கரிக்கப்பட்ட வில்லை உறுதியான கைப்பிடியினால் அழுத்திப் பிடித்து வேகத்தோடு மனிதர்களாற்செய்தற்கரிய காரியத்தைச்செய்து சூரியகிரணங்கள்போன்ற ஏழு பாணங்களை வில்லிற்பூட்டி உமது புத்ரர்களுடைய பிராணன்களைத் தேகங்களினின்று விலக்குகிறவனும் பழம்பகையை நினைத்துக்கொண்டவனுமாகி அவர்கள்மீது பிரயோகஞ்செய்தான். பாரதரே! பீமஸேனனால் விடப்பட்டவையும் பொற்புங்கமுள்ளவையும் சாணையில் தீட்டப்பட்டவையுமான அந்தப் பாணங்கள் ஆகாயத்தைப் பிளந்து கொண்டு பாரதர்கள்மீது பாய்ந்தன. ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்ட அந்த அம்புகள் அவர்களுடைய தேகங்களைப் பிளந்து கொன்று கொண்டு அவர்களின் உயிரோடுகூடவே பூமியிற் பிரவேசித்தன. ராஜேந்திரரே! ரக்தத்தால் பூசப்பட்ட இறகுநுனிகளுள்ளவைகளும் பொன்னாலலங்கரிக்கப்பட்டவைகளுமான ஏழுபாணங்கள் உமது புத்ரர்களுடைய ரக்தத்தைப் பானஞ்செய்து வெளிப்பட்டுக் கருடன்கள் போல ஆகாயத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு விளங்கின. அம்புகளாலே மர்மங்கள் பிளக்கப்பட்ட அவர்கள் யானையினால் ஒடிக்கப்பட்டவையும் மலையின் தாழ்வரையில் முளைத்தவையுமான பெரியவிருக்ஷங்கள் போல ரதங்களினின்று பூமியில் விழுந்தார்கள். சத்ருஞ்சயன், சத்ருஸஹன், சித்ரன், சித்ராயுதன், த்ருடன், சித்ரஸேனன், விகர்ணன் இவ்வெழுவரும் கீழே தள்ளப்பட்டார்கள். கொல்லப்பட்டவர்களான உம்முடைய எல்லாப்புத்திரர்களுள்ளும் பிரியனான விகர்ணனைப்பற்றிப் பாண்டுபுத்திரனான விருகோதரன் துக்கத்தினால் மிக அதிகமாகத் துக்கித்தான். 'விகர்ணா! என்னால் இந்தப் பிரதிஜ்ஞை செய்யப்பட்டது

யுத்தத்தில் நீங்கள் கொல்லப்படத்தக்கவர்களல்லரோ? ஆதலால், நீ கொல்லப்பட்டாய். என்னால் பிரதிஜ்ஞை காக்கப்பட்டது. வீரனே! க்ஷத்திரியதர்மத்தை நினைத்துக்கொண்டு நீ யுத்தத்திற்கு வந்தாய். ஆதலால், யுத்தகளத்தில் நீ கொல்லப்பட்டாய். யுத்தமுறையானது கொடிதன்றோ? எங்களுடைய நன்மையிலும் விசேஷமாக (எங்கள்) அரசருடைய நன்மையிலும் பற்றுள்ளவனும் அதிக தேஜஸையுடையவனுமான விகர்ணன் நியாயத்தினாலோ அநியாயத்தினாலோ அடிக்கப்பட்டுப் படுத்திருக்கிறான். ஆழ்ந்த புத்தியுள்ளவரும் பூமியில் பிருகஸ்பதிக்குச் சமமானவரும் கங்காபுத்ரருமான பீஷ்மரும் யுத்தத்தில் பிராணனையிழக்கும்படி செய்விக்கப்பட்டார். ஆதலால், யுத்தமானது கொடிதன்றோ?'' என்று கூறினான். மிக்க புஜபலமுள்ள பாண்டுநந்தனன், ராதேயன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவர்களைக்கொன்று கோரமான ஸிம்மநாதத்தைச் செய்தான். பாரதரே! சூரனான அந்தப் பீமனுடைய அந்தச் சப்தமானது தர்மராஜருக்கு அந்த யுத்தத்தையும் தனக்கு நேர்ந்த பெரிய வெற்றியையும் சொல்லியதுபோலிருந்தது. வில்லாளியான பீமஸேனனுடைய அந்த உரத்த சப்தத்தைக் கேட்டுப் புத்திசாலியான தர்மராஜருக்கு அதிகமான பிரீதி உண்டாயிற்று. அரசரே! பிறகு, பாண்டுபுத்ரரான யுதிஷ்டிரர் ஸந்தோஷமுள்ள மனத்துடன் நான்குவித வாத்யங்களுடைய பேரொலிகளாலும் பிராதாவான பீமனுடைய ஸிம்மநாத த்வனியை வரவேற்றுக்கொண்டார். விருகோதரன் ஸங்கேதத்தைச் செய்தவுடனே, எல்லா ஆயுதபாணிகளுள்ளும் உத்தமரான தர்மராஜர் மிகுந்த ஸந்தோஷத்தோடு யுத்தகளத்தில் துரோணரை எதிர்த்தார். மஹாராஜரே! துர்யோதனன் உம்முடைய முப்பத்தொரு பிள்ளைகள் கொன்றுதள்ளப்பட்டதைப் பார்த்து விதுரருடைய அந்த வார்த்தையை நினைத்தான். 'அது நிச்சயமாக நன்மைக்கு ஸாதனமானது. விதுரருடைய அந்த வசனத்தைக் கேளாததன் பயனானது நன்றாக அடையப்பட்டுவிட்டது' என்று எண்ணி உம்முடைய புத்திரன் மேலே செய்யவேண்டிய காரியத்தை அறியவில்லை. ராஜேந்திரரே! கெட்டபுத்தியுள்ளவனும் அல்பபுத்தியுடையவனுமான உம்முடைய புத்திரன் கர்ணனோடுகூடிக்கொண்டு பாஞ்சாலியை ஸபையின்கண் அழைத்துவந்து சூதாட்டக்காலத்தில் எந்தவாக்கியத்தைச் சொன்னானோ, கர்ணனும் பாண்டுபுத்திரர்களுக்கும் உமக்கும் முன்னிலையில் ஸபையில் நீரும் எல்லாக்கௌரவர்களும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுது கிருஷ்ணையைநோக்கி, 'கிருஷ்ணையே! பாண்டவர்கள் நசித்துச் சாஸ்வதமான நரகத்தை அடைந்தார்கள். வேறு பர்த்தாவை

வரித்துக்கொள்' என்று எந்தக் குரூரமான வார்த்தைகளைச் சொன்னீரோ அவற்றின்பயன் இப்பொழுது வந்துவிட்டது. மேலும், மஹாத்மாக்களான அந்தப் பாண்டவர்கள் கோபத்தை உண்டுபண்ணுகின்ற உம்முடைய குமாரர்களால், 'எள்ளுப்பதர்கள்' என்றது முதலிய குரூரமான வாக்கியங்களைக் கேட்கும்படி செய்யப்பட்டதனால் பதின்மூன்று வருஷகாலம் நிலைபெற்றிருந்த அந்தக் கோபத்தீயைப் பாண்டுபுத்திரனான பீமஸேனன் வெளியில் கக்கிக்கொண்டு உம்முடைய புத்திரர்களுக்கு நாசத்தை உண்டுபண்ணுகிறான். பரதஸ்ரேஷ்டரே! விதுரர் உம்மிடத்தில் மிகப் புலம்பியும் (நீர் கேளாமையால்) அவர் ஆறுதலையடையவில்லை. அதனுடைய பலனைப் புத்திரனுடன் நீர் அநுபவியும். முதியவரும் தைரியமுள்ளவரும் செய்யவேண்டிய உண்மையான விஷயங்களை அறிபவருமான நீர் மித்ரர்களுடைய சொல்லைப் பின்பற்றவில்லை. இந்த விஷயத்தில் தெய்வமே கதி. நரஸ்ரேஷ்டரே! ஆதலால், நீர் வியஸனமடையவேண்டாம். பெரிதான அநியாயமானது உம்முடையதே. புத்திரர்களுடைய விநாசத்துக்கு நீரே காரணமென்று நான் எண்ணுகிறேன்' ராஜேந்திரரே! உம்முடைய புத்திரர்களுள் உத்தமர்களான விகர்ணனும் வீர்யமுள்ளவனான சித்திரஸேனனும் மஹாரதர்களான மற்றப் பிள்ளைகளும் கொல்லப்பட்டார்கள். மஹாராஜரே! பீமன் தன் கண்ணுக்கிலக்கானவர்களாகக் கண்ட உம்முடைய மற்றக் குமாரர்களையும் விரைவுடன் கொன்றான். பாண்டவஸ்ரேஷ்டனான பீமஸேனனால் ஆயிரக்கணக்காக விடப்படுகிற பாணங்களால் உமது நிமித்தமாக ஸேனை எரிக்கப்படுவதை நான் பார்த்தேன்'' என்று கூறினான்.

---

## நூற்றுமுப்பத்தேட்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமனுக்கும் கர்ணனுக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "ஓ! ஸூத! ஸஞ்சய! இப்பொழுது, இவ்விஷயத்தில் நான் துயரத்தை அநுபவிப்பதற்கு என்னுடைய பெரிதான அநியாயமே முக்கிய காரணம். அந்த அநீதியானது இப்பொழுது பலித்துவிட்டதென்று நான் நினைக்கிறேன். ஸஞ்சய! சென்றது சென்றதேயென்று என்மனத்தில் உறுதியுண்டாகிவிட்டது. இப்பொழுது இந்த இடத்தில் எந்தக் காரியத்தை யான் செய்வேன். ஸஞ்சய! என்னுடைய அநியாயத்தினால் வீரர்களுக்கு நாசம் நேர்ந்த விதத்தைஎனக்

குச்சொல்; நான் உறுதியடைந்திருக்கிறேன்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"மஹாராஜரே! பகைவர்களை அடக்குகின்றவர்களும் மஹாபல சாலிகளுமான கர்ணனும் பீமனும் மழைபொழிகின்ற இரண்டுமேகங்கள் போலப் பாணவர்ஷங்களைப்பொழிந்தார்கள். பீமனுடையபெயரினாலடை யாளமிடப்பட்டவையும் ஸ்வர்ணபுங்கங்களுள்ளவையும் சாணைபிடிக்கப் பட்டவையுமான பாணங்கள் கர்ணனிடம்வந்து அவனுயிரைப்போக்கு வனபோல நுழைந்தன. அவ்வாறே கர்ணனால் விடப்பட்டவையும் சிறகுகள்கட்டியவையும், நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவுமிருப்ப வையுமான அம்புகள் வீரனானபீமனை மறைத்துவிட்டன. மகா ராஜரே! நான்குபக்கங்களிலும் விழுகின்ற அவ்விருவருடைய அம்பு களாலே யுத்தரங்கத்தில் ஸைனிகர்களுக்கு மிகப் பெருங்கலக்கமுண் டாயிற்று. பகைவர்களை அடக்குகிறவரே! பயங்கரமானவையும் பாம்புகள்போன்றவையும பீமனுடைய வில்லினின்று விடுபடுகின்ற வையுமான அம்புகளால் உமது சைனியத்தினுடைய மத்தியிலுள்ள போர்வீரர்கள் கொல்லப்பட்டார்கள். அரசரே! விழுந்திருக்கின்ற யானைகளாலும் குதிரைகளாலும் மனிதர்களாலும் நிரப்பப்பட்டுள்ள யுத்தபூமியானது காற்றினாலேமுறிக்கப்பட்ட மரங்களாலே (சூழப்பட் டது) போலக் காணப்பட்டது. யுத்தத்தில் பீமனுடைய வில்லினின்று விடுபடுகின்ற அமபுகளாலே அடிக்கப்படுகின்ற உம்மைச்சேர்ந்த அந்த யுத்தவீரர்கள் ஓடினார்கள்; 'இஃது என்ன?' என்றும் சொல் லிக்கொண்டார்கள். பிறகு, கர்ணன் பீமன் இவர்களுடைய மஹா வேகமுள்ள அம்புக்ளாலே நன்கு தள்ளப்பட்ட ஸைந்தவர்களையும் ஸௌவீரர்களையும் கௌரவர்களையும்சேர்ந்த அந்த ஸைன்யமானது வெகுதூரம் விலகிவிட்டது. பெரும்பான்மையாகக் கொல்லப்பட்ட வர்களும், குதிரைகளும் தேர்களும் யானைகளும் நாசம்செய்யப்பட்ட வர்களுமான அந்தச்சூரர்கள் பீமனையும் கர்ணனையும் விட்டுவிட்டு நான்கு திக்குக்களிலும் ஓடிவிட்டார்கள். 'கர்ணன், பீமன் இவர்க ளிடத்திலிருந்துண்டான அம்புகளாலே நம்முடையசேனையே கொல் லப்படுதலால் பார்த்தனுக்காகவே நம்மைத் தேவர்கள் மோகிக்கச் செய்கிறார்களென்பது நிச்சயம்' என்று இவ்வாறு சொல்லிக்கொண்டு பயத்தால் பீடிக்கப்பட்டவர்களான உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்கள் அம்புவிழுமிடத்தைவிட்டுவிலகி யுத்தத்தைப் பார்க்கவிருப்பமுள்ளவர் களாக நின்றார்கள். பிறகு, யுத்தரங்கத்தில் பயங்கரமான உருவமுள்ள

தும் சூரர்களுக்கு ஸந்தோஷத்தையுண்டுபண்ணுகிறதும் பயந்தவர்களுக்குப் பயத்தைவிருத்திபண்ணுகிறதும் யானைகள், குதிரைகள், மனிதர்கள் இவைகளுடைய ரக்தப்பெருக்காலுண்டானதுமான ஒரு நதியானது பெருக ஆரம்பித்தது. உயிரையிழந்த மனிதர்களாலும், யானைகளாலும், குதிரைகளாலும், இருசுக்கட்டைகளாலும், பதாகைகளாலும் யானைகள் குதிரைகள் ரதங்கள் இவைகளுக்குரிய பூஷணங்களாலும். புரட்டித்தள்ளப்பட்டவைகளும் சக்ரங்களும் அச்சுக்களும் ஏர்க்கால்களும் ஒடிக்கப்பட்டவைகளுமான ரதங்களாலும், பொன்னலங்காரமுள்ளவைகளும் உரத்தசப்தமுள்ளவைகளுமான விற்களாலும், பொற்கட்டுக்களுள்ள பாணங்களாலும், கர்ணனும் பீமனும் விடப்பட்டவைகளும் சட்டையுரித்த பாம்புபோன்றவைகளுமான ஆயிரக்கணக்கான நாராசங்களாலும், பிராஸங்கள் தோமரங்கள் இவைகளினுடைய கூட்டங்களாலும், கோடாலிகளாலும், கத்திகளாலும், தங்கத்தினால் சித்திரவேலைசெய்யப்பட்ட கதாயுதங்களாலும், உலக்கைகளாலும், பட்டாக்கத்திகளாலும், பலவிதரூபம்பொருந்திய வஜ்ரங்களாலும், சக்திகளாலும், பரிகங்களாலும், பற்பலவிதமான சதக்னிகளாலும் சூழப்பட்டு யுத்தபூமியானது பிரகாசித்தது. ஐயா! பாரதரே! தங்கமயமான தோள்வளைகளாலும், ஆரங்களாலும், குண்டலங்களாலும், மகுடங்களாலும், புரண்டு கிடக்கின்ற வளைகளாலும், மோதிரங்களாலும், சூடாமணிகளாலும், தலைப்பாகைகளாலும், ஸ்வர்ணமயமான நூல்களாலும், கவசங்களாலும், கையுறைகளாலும், ஹாரங்களாலும், பொன்நாணயங்களாலும், ஆடைகளாலும், குடைகளாலும், கெடுக்கப்பட்ட சாமரங்களாலும், விசிறிகளாலும், பிளக்கப்பட்ட யானைகளாலும், குதிரைகளாலும், மனிதர்களாலும், ரக்தத்தால் நனைந்தவைகளும் ஆங்காங்கு முறிக்கப்பட்டுக் கீழேவிழுந்தவைகளும் சிதற அடிக்கப்பட்டவைகளுமான பற்பலவிதமான அந்த அந்த அம்புகளாலும் ரணபூமியானது ஜோதிமண்டலங்களாலே ஆகாசம் விளங்குவதுபோல விளங்கியது. நினைக்கமுடியாததும், ஆச்சரியகரமானதும், மனிதசக்தியை மீறினதுமான அவ்விருவருடைய செய்கையையும் பார்த்துச் சாரணர்களுக்கும் ஸித்தர்களுக்கும் ஆச்சரியமுண்டாயிற்று. பீமனோடு எதிர்த்த அதிரதபுத்ரனான கர்ணனுடைய ஸஞ்சாரமானது யுத்தரங்கத்தில் உலர்ந்தபுற்குவியலில் காற்றுடன் சேர்ந்ததீயின் ஸஞ்சாரம்போலிருந்தது. அரசரே! கொடிமரங்களும் ரதங்களும் தள்ளப்பட்டதும், யானைகளும் குதிரைகளும் மனிதர்களும் கொல்லப்பட்டதுமான உமது சேனையானது ஒன்றோடொன்று எதிர்த்துச் சண்டைசெய்

ின்ற இரண்டு யானைகளாலே (துகைக்கப்பட்ட) கோரைக்காடுபோல அவ்வித உருவமுள்ளதாயிருந்தது. போர்க்களத்தில் கர்ணனுக்கும் பீமனுக்கும் உத்தமமான யுத்தம் நேர்ந்தது.

---

## நூற்றுமுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமனுக்கும் கர்ணனுக்கும் நடந்தயுத்தத்தை வர்ணித்தது.)

மகாராஜரே! பிறகு, கர்ணன் பீமனை மூன்று பாணங்களால் அடித்து மறுபடியும் கழுகிறகுகள் கட்டியவைகளும் கூரியமுனையுள்ளவைகளுமான ஆறுபாணங்களாலடித்து விசித்ரமாயும் பலவாருயுமுள்ள அம்புமழைகளைப் பொழிந்தான். மிக்க தோள்வலிமையுள்ளவனும் பாண்டுபுத்திரனுமான பீமஸேனன் ஸூதபுத்திரனாலே அடிக்கப்பட்டும் பிளக்கப்படுகின்ற மலைபோலத் துன்பத்தை அடையவில்லை. ஐயா! அந்தப் பீமன் துவைந்ததும் கூர்மையுள்ளதும் எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டதுமான கர்ணியென்னும் பாணத்தினாலே யுத்தபூமியில் கர்ணனைக் காதில் மிகப் பலமாக அடித்தான். மகாராஜரே! பீமன் ஸ்வர்ணமயமானதும் பெரிதும் அழகியதுமான கர்ணனுடைய குண்டலத்தை, ஜ்வலிக்கின்ற ஜ்யோதிர்மண்டலமானது ஆகாயத்திலிருந்து விழுவதுபோலப் பூமியில் விழச்செய்தான். பிறகு, மிக்க கோபங்கொண்ட விருகோதரன் சிரித்துக்கொண்டே வேறொரு பல்லத்தினாலே ஸூதபுத்திரனை நடுமார்பில் அடித்தான். பாரதரே! மிக்க புஜபலமுள்ள பீமன் மறுபடியும் விரைவாக யுத்தகளத்தில் சட்டையுரித்த பாம்புகளுக்கொப்பான பத்துநாராசங்களைக் கர்ணன்மீது பிரயோகித்தான். பாரதரே! அவனால் விடப்பட்ட அவ்வம்புகள் ஸூதபுத்ரனுடைய நெற்றியைப் பிளந்துகொண்டு புற்றில் பாம்புநுழைவதுபோல நுழைந்தன. பிறகு, ஸூதபுத்ரன் நெற்றியில் தைத்திருக்கின்ற பாணங்களாலே முன்பு கருநெய்தல் புஷ்பமாலையைத் தரித்துக்கொண்டு விளங்கியதுபோல விளங்கினான். பலசாலியான பாண்டவனாலே நன்றாக அடிக்கப்பட்டகர்ணன் ரதத்தின் ஏர்க்காலைப் பிடித்துக்கொண்டு இரண்டு கண்களையும் மூடினான். பகைவர்களைவாட்டுகிறவனான அந்தக்கர்ணன் மறுபடியும் ஒரு முகூர்த்தகாலத்திற்குள் பிரஜ்ஞையையடைந்து எல்லா அங்கங்களும் ரக்தத்தால் நனைக்கப்பட்டவனாகி அதிக கோபத்தையடைந்தான். உறுதியானவில்லையுடைய பீமஸே

னாலே யுத்தத்தில் துன்புறுத்தப்பட்ட கர்ணன், பிறகு, கோபங் கொண்டவனும் மிக்க வேகமுள்ளவனுமாகப் பீமஸேனனுடைய ரதத்தைநோக்கி விரைவாகச் சென்றான். பாரதரே! கோபமுள்ளவனும் பலமுடையவனும் பொறுமையுள்ளவனுமான கர்ணன் கழுகிறகுகள்பூண்ட நூறு பாணங்களைப் பீமன்மீது பிரயோகித்தான். பிறகு, பாண்டவன் யுத்தகளத்தில் அவனை அலக்ஷ்யஞ்செய்து அவனுடைய பராக்ரமத்தை ஆலோசியாமல் கொடுமையான அம்புமழைகளைப் பொழிந்தான். மகாராஜரே! பிறகு, கோபங்கொண்டவனான கர்ணன் மிக்ககோபங்கொண்டவனான பாண்டவனை ஒன்பது பாணங்களால் மார்பிலடித்தான். பகைவர்களை அடக்குபவர்களும் அம்புகளாகிற கோரப்பற்களை யுடையவர்களுமான அந்த இரண்டு நரஸ்ரேஷ்டர்களும் மிகநெருங்கி அடித்துக்கொண்டார்கள். இரண்டுவீரர்களும் யுத்தாங்கத்தில் மேகங்கள்போலப் பரஸ்பரம் (பாணங்களைப்) பொழிந்துகொண்டார்கள். அவ்விருவரும் யுத்தத்தில் பரஸ்பரம் கோபங்கொண்டவர்களும் செய்ததற்குப் பிரதிசெய்வதில் விருப்பமுள்ளவர்களுமாக யுத்தத்தில் தலத்வனிகளாலும், பலவித பாணசமூகங்களாலும் ஒருவரையொருவர் பயமுறுத்தினார்கள். பாரதரே! பிறகு, மிக்க புஜபலமுள்ளவனும் சத்துருவீரர்களை வதஞ்செய்கின்றவனுமான பீமன் க்ஷுரத்தினாலே மஹாரதனான ஸூதபுத்ரனுடைய வில்லையறுத்து ஸிம்மநாதஞ்செய்தான். மகாரதனான ஸூதபுத்ரன் அறுக்கப்பட்ட அந்த வில்லையெறிந்துவிட்டுப் பகைவர்கூட்டத்தையழிப்பதும் மிக்க வேகமுள்ளதுமான வேறுவில்லைக் கையிலெடுத்தான். பிறகு, விருகோதரன் கர்ணனுடைய அந்த வில்லையும் அரைநிமிஷத்திற்குள் அறுத்தான். இவ்வாறு விருகோதரன் கர்ணனுடைய மூன்றாவதும் நான்காவதும், ஐந்தாவதும், ஆறாவதும், ஏழாவதும், எட்டாவதும், ஒன்பதாவதும், பத்தாவதும், பதினோராவதும், பன்னிரண்டாவதும், பதின்மூன்றாவதும், பதினான்காவதும், பதினைந்தாவதும், பதினாறாவதும், பதினேழாவதும், பதினெட்டாவதும் மற்றும் பலவுமான விற்களை அறுத்தான். பிறகு, கர்ணன், அரைநிமிஷத்தினுள் வில்லைக்கையிற்கொண்டு எதிர்நின்றான். அந்தக்கர்ணன், கௌரவர்களும் ஸௌவீரர்களும் ஸிந்துதேசத்தவர்களுமான வீரர்களுடைய சேனையின் நாசத்தையும் விழுந்திருக்கின்ற கவசங்களாலும், கொடிகளாலும், ஆயுதங்களாலும், பல்லங்களாலே உடைக்கப்பட்ட ரதங்களாலும், தாக்கப்பட்ட மற்றக்குதிரைகளாலும், ஒளிமழுங்கினவர்களும், புழுதியினால் மூடப்பட்ட தலைமயிர்களுள்ள

வர்களுமான புருஷஸ்ரேஷ்டர்களாலும் மூடப்பட்டுள்ள ரணபூமியை யும் கண்டான். நான்குபக்கங்களிலும் மரித்துக்கிடக்கின்ற யானைகள், குதிரைகள், ரதிகர்கள் இவர்களினுடைய தேகங்களைக்கண்டு ஸூத புத்திரனுடைய சரீரமானது கோபத்தினால் ஜ்வலிக்கிறதாயிற்று. அந்த ராதேயன் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட பெரியவில்லை நாணொலி செய்து கோரமானகண்ணால் கோரமான பீமனைப் பார்த்தான். பிறகு, கோபங்கொண்டவனும் அம்புகளையெய்கின்றவனுமான ஸூதபுத்ரன் சரத்காலத்தில் நடுப்பகலில் அதிக காந்தியுடன்விளங்கும் சூரியன் போல விளங்கினான். அரசரே! அனேக அம்புகளாலே நான்கு புறத் திலும் நிறைக்கப்பட்டதும் கோரமாயிருப்பதுமான அதிரதபுத்ரனான கர்ணனுடைய சரீரமானது கிரணங்களாலே விளங்கும் சூரியனுடைய சரீரம்போல விளங்கியது. அவன் இருகைகளாலும் அம்புகளை எடுத்து நாணில்பூட்டி நாண்கயிற்றையிழுத்துப் பிரயோகம்செய்யும் பொழுது யுத்தத்தில் இடைவெளி காணப்படவில்லை. பூமியை ரக்ஷிப் பவரே! இடமும் வலமுமாகப் பாணங்களைப் பிரயோகிக்கின்ற கர்ண னுடைய கோரமான ஆயுதமானது வட்டமாகச் செய்யப்பட்டுக் கொள் ளிவட்டம்போல இருந்தது. மகாராஜரே! பொற்கட்டுக்களுள்ளவையும் மிக்க கூர்மையுள்ளவையும் கர்ணனுடைய வில்லினின்று விடுபடுகின் றவையுமான அம்புகள் திக்குக்களைச் சூரியன் கிரணங்களால் மூடுவது போல மூடின. பிறகு, வில்லிலிருந்து விடுபட்டவையும் பொன்னா லாகிய புங்கமுள்ளவையும் உட்படிந்த கணுக்களையுடையவையுமான அம்புகளின் கூட்டமானது பலவாறாக ஆகாயத்தில் காணப்பட்டது. அரசரே! அதிரதபுத்ரனான கர்ணனுடைய வில்லினின்று புறப்படு கின்ற அம்புகள் ஆகாயத்தில் வரிசையாகச் செல்லுகின்ற க்ரௌஞ்ச பக்ஷிகள்போல் விளங்கின. அதிரதகுமாரனான கர்ணன் கழுகிறகு கட்டியவையும் சாணையில் தீட்டப்பட்டவையும் பொன்னால் அலங்கரிக் கப்பட்டவையும் மிக்க வேகமுடையவையும் நன்றாக ஜ்வலிக்கின்ற முனையுள்ளவையுமான அம்புகளைப் பிரயோகஞ்செய்தான். வில்லி னுடைய பலத்தினாலே நன்குதொடுக்கப்பட்டவையும் பொன்னால் நன் றாக அலங்கரிக்கப்பட்டவையுமான அந்தப் பாணங்களோ பீமஸேன னுடைய ரதத்தின்மீது தொடர்ச்சியாக விழுந்தன. தங்கத்தால் சித் திரவேலை செய்யப்பட்டவையும் கர்ணனால் பிரயோகிக்கப்பட்டவையு மான ஆயிரக்கணக்கான அந்தப் பாணங்கள் ஆகாயத்தில் விட்டிற்பூச்சி களினுடைய கூட்டங்கள்போல் விளங்கின. அதிரதன்மகனான கர்ண னுடைய வில்லினின்றுவிடுபட்டு வேகமாகப் பாய்கின்ற அம்புகள்

ஆகாயத்தில் மிகவும் நீண்டிருக்கின்ற ஒரே அம்புபோல விளங்கின. அவன், கோபங்கொண்டு, மேகமானது பர்வதத்தை நீர்த்தாரைகளால் மூடுவதுபோலப் பாணமழைகளாலே பீமனை மூடினான். பாரதரே! அந்த யுத்தகளத்தில் உமது புத்திரர்களும் மற்ற ஸைனிகர்களும் பீமனுடைய பலத்தையும் வீர்யத்தையும் பராக்ரமத்தையும் முயற்சியையும் கண்டார்கள். பீமனோ கோபங்கொண்டு கடல்போல முழக்கத்துடன் மேலேவருகின்ற அந்த அம்புமழையை மதியாமல் கர்ணனை எதிர்த்தோடிவந்தான். அரசரே! பொன்னாலலங்கரித்த பின்புறமுள்ள பீமனுடைய பெரிய வில்லானது நாண்கயிறு இழுக்கப்படுவதினால் வட்டவடிவமுள்ளதாகி வேறோர் இந்திரவிற்போலிருந்தது. அந்த வில்லினின்று அம்புகள் ஆகாயத்தை நிரப்புகின்றதுபோலத் தோன்றின. பீமனால் பொன்கட்டிய புங்கமுள்ளவையும் கணுக்கள் உட்படிந்துள்ளவையுமான அம்புகளாலே ஆகாயத்தில் ஏற்படுத்தப்பட்ட வரிசையானது பொன்மாலைபோல விளங்கியது. பிறகு, ஆகாயத்தில் பாகம்பாகமாகப் பிரயோகிக்கப்படுகின்ற பாணஸமூகங்கள் பீமஸேனனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டுச் சிதறின. கர்ணனாலும் பீமஸேனனாலும் பிரயோகிக்கப்பட்டனவும், நெருப்புப்பொறிபோல மேலேபடுவனவும், யுத்தத்தில் விரைவாகச் செல்லுவனவும், கனகபுங்கமுள்ளனவுமான அந்த அந்தப் பாணங்களுடைய கூட்டங்களாலே ஆகாயமானது மறைக்கப்பட்டதாயிற்று. அப்பொழுது, சூரியனும் பிரகாசிக்கவில்லை; காற்றும் வீசவில்லை. ஆகாயமானது பாணஸமூகங்களாலே மூடப்பட்டபொழுது ஒன்றும் அறியப்படவில்லை. ஸூதபுத்ரனான அந்தக்கர்ணன் வெவ்வேறு மாதிரியான அம்புகளாலே பீமனைமூடிக்கொண்டு மகாத்மாவான அந்தப் பீமனுடைய வீர்யத்தை மதியாமல் கிட்டநெருங்கினான். பெரியவரே! அந்த யுத்தத்தில் அவ்விருவராலும் விடப்படும் அம்புத்திரள்கள் மிக்கவேகமுள்ளவையும் ஒன்றோடொன்று மோதுகின்றவையுமாகக் காணப்பட்டன. பரதஸ்ரேஷ்டரே! புருஷஸ்ரேஷ்டர்களான அவ்விருவருடைய பாணங்களும் ஒன்றோடொன்று உரைதலால் ஆகாயத்தில் நெருப்புண்டாயிற்று. அவ்வாறே, கர்ணன் கோபங்கொண்டு கொல்லவேண்டுமென்கிற விருப்பத்தால் கூர்மையுள்ளவையும் சிற்பியினால் நன்றாகச் சாணைபிடிக்கப்பட்டவையும் பொன்னால் சித்ரவேலை செய்யப்பட்டவையுமான அம்புகளைப் பிரயோகித்தான். பீமன் ஸூதபுத்திரனை மீறினவனாகி அந்த அம்புகளை ஆகாயத்திலே அம்புகளால் ஒவ்வொன்றையும் மும்மூன்றாகத் துண்டித்து (அவனை) 'நில்' என்றும் சொன்னான்.

மறுபடியும், பொறுமையுள்ளவனும் பலசாலியும் கோபமுள்ளவனுமான பாண்டவன் அக்னிபோல் எரிக்க எண்ணங்கொண்டு உக்ரமான பாண மழைகளைப் பிரயோகித்தான். பிறகு, அவ்விருவர்களுடைய விரல் உறையில் நாண் உரைவதாலுண்டாகும் சடசட என்னும் ஒலியும் கை கொட்டுதலாலுண்டாகும் மிகப்பெரிய சப்தமும் பயங்கரமான ஸிம்ம நாதமும் தேருருளைக்கட்டின் த்வனியும் பயங்கரமான நாணொலியும் தோன்றின. அரசரே! ஒருவரையொருவர் கொல்ல எண்ணங் கொண்ட கர்ணன் பீமஸேனன் இருவருடைய பராக்ரமத்தையும்பார்க்க எண்ணங்கொண்ட (மற்றப்) போர்வீரர்கள் போரை நிறுத்தினார்கள். தேவர்களும், ரிஷிகளும், ஸித்தர்களும், கந்தர்வர்களும், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தார்கள். அவ்வாறே வித்யாதரர்களுடைய கூட்டங்களும் பூமாரியைப் பொழிந்தன. பிறகு, மிக்க புஜபலமுள்ளவனும், யுத்தமுயற்சியுடையவனும், உறுதியான பராக்ரமமுடையவனுமான பீமன் அஸ்த்ரங்களால் அஸ்த்ரங்களைத்தடுத்து அம்புகளால் கர்ணனை அடித்தான். மகாபலசாலியான கர்ணனும் பீமஸேனனுடைய அம்புகளைத்தடுத்து யுத்தகளத்தில் ஸர்ப்பங்களுக்கொப்பான ஒன்பது நாராசங்களை (அவன்மீது) பிரயோகித்தான். பிறகு, பீமன் அந்த ஸூத புத்திரனுடைய நாராசங்களை அவ்வளவு அம்புகளாலே ஆகாயத்தில் துண்டாக்கி, 'நில், நில்' என்றும் சொன்னான். பிறகு, மகாபாகுபல முள்ளவனும் வீரனுமான பீமன் கோபங்கொண்ட யமன்போன்றதும் வேறு யமதண்டம்போன்றதுமான ஓரம்பைக் கர்ணன்மீது பிரயோகித் தான். வேந்தரே! வருகின்ற அந்தப் பாண்டவனுடைய பாணத்தைப் பிரதாபசாலியான ராதேயன் அட்டஹாஸத்துடன் மூன்று பாணங்க ளாலே அறுத்தான். பாண்டவன் மறுபடியும் உக்கிரமான பாணவர் ஷங்களை (அவன்மீது) பொழிந்தான். ஸூதபுத்திரனான கர்ணன் யுத் தஞ்செய்கின்ற அந்தப் பீமனுடைய அந்த அஸ்திரங்களனைத்தையும் பயப்படாமலே அஸ்திரமாயையினாலே ஏற்றுக்கொண்டான். கர்ணன் கோபங்கொண்டவனாகி யுத்தரங்கத்தில் உட்படிந்த கணுக்களுள்ள அம்புகளாலே அந்தப் பீமனுடைய இரண்டு அம்புப் பெட்டிகளையும், வில்லையும், நாண்கயிற்றையும், குதிரைகளின் கடிவாளங்களையும், பூட்டாங்கயிறுகளையும் அறுத்து, மறுபடியும் அவனுடைய குதிரைகளை யுங்கொன்று, ஐந்து பாணங்களாலே ஸாரதியையும் அடித்தான். பீம னுடைய அந்த ஸாரதியானவன் கீழே இறங்கி வேகமாக யுதாமன்யுவி னுடைய ரதத்திற்குச் சென்றான். ராதேயன் கோபங்கொண்டு காலாக்னிபோலப் பிரகாசித்துக்கொண்டும் உரக்கச் சிரித்துக்கொண்

டும் பீமனுடைய கொடிமரத்தையும் பதாகையையும் அறுத்துத்தள்ளி னன். வில்லை இழந்தவனான புஜபலமிக்க அந்தப் பீமன், பிறகு, சக்தி யைக் கையிலெடுத்துக் கோபத்துடன் அதனைச் சுழற்றிக் கர்ணனு டைய ரதத்தின்மீது பிரயோகித்தான். வருகின்றதும் ஸ்வர்ணத்தி னல் அலங்கரிக்கப்பட்டதும் பெரிதான உற்கைபோலப் பிரகாசிக்கின் றதுமான அந்தச் சக்தியாயுதத்தை முயற்சியுடையவனான கர்ணன் பத்துப் பாணங்களால் அறுத்தான். அந்தச் சக்தியானது தேர்ப் பாகன்மகனும் மித்திரன் நிமித்தமாக விசித்ரமாக யுத்தஞ்செய்கின்ற வனும் (அம்புகளைப்) பிரயோகிப்பவனுமான கர்ணனுடைய கூர்மை யான அம்புகளாலே பத்துத்துண்டாக அறுக்கப்பட்டு விழுந்தது. குந்திபுத்ரனான அந்தப் பீமன் ஜயம் அல்லது மரணம் இவ்விரண்டி னுள் ஒன்றைவிரும்பிக் கத்தியையும் பொன்னுல் அலங்கரிக்கப்பட்ட கேடகத்தையும் கையிலெடுத்தான். பாரதரே! கோபங்கொண்டவ னன கர்ணன் அட்டஹாஸஞ்செய்துகொண்டு மிகக் கொடிய அனேக அம்புகளாலே நல்லஒளியுள்ள பீமஸேனனுடைய அந்தக் கேடகத்தைச் சீக்கிரமாக நாசஞ்செய்தான். மகாராஜரே! ரதத்தையும் கேடகத்தையு மிழந்த அந்தப் பீமன் கோபமீறி விரைபவனாகிக் கத்தியைச்சுழற்றிக் கர்ணனுடைய ரதத்தின்மீது எறிந்தான். ராஜேந்திரரே! அந்தப் பெரியவாளானது, ஸூதபுத்ரனுடைய நாணேற்றப்பட்டிருக்கிறவில்லை அறுத்துக் கோபத்துடன்கூடிய ஸர்ப்பம்போல் ஆகாயத்தினின்று பூமி யில் விழுந்தது. மகாராஜரே! பிறகு, அதிரதபுத்ரனான அந்தக் கர்ணன் யுத்தரங்கத்தில் கோபங்கொண்டு அட்டஹாஸஞ்செய்து சத் துருக்களை ஸம்ஹரிக்கின்றதும், உறுதியான நாண்கயிறுள்ளதும், மிக்க வேகமுள்ளதுமான வேறொருவில்லைக் கையிலெடுத்துக் குந்திபுத் திரனைக் கொல்லும்விருப்பத்தோடு பொன்மயமான கட்டுக்களுள்ளவை களும் நன்கு சாணைபிடிக்கப்பட்டவைகளுமான அம்புகளை ஆயிரக் கணக்காகப் பிரயோகித்தான். கர்ணனுடைய வில்லினின்றுவிடுபடு கின்ற அம்புகளாலே பீடிக்கப்படுகின்ற பலசாலியான அந்தப் பீமன் ஆகாயத்தில் கிளம்பிக் கர்ணனுடையரதத்தில் பிரவேசித்தான். யுத்த ரங்கத்தில் ஜயத்தை விரும்புகின்ற அந்தப் பீமனுடைய செய்கையைக் கண்டு அந்த ராதேயன் கொடிமரமுள்ளவிடத்தில் ஒளிந்துகொண்டு பீமஸேனனை வஞ்சித்தான். துன்பத்தையடைந்திருக்கின்ற இந்திரியங் களையுடையவனாகித் தேரின்நடுவில் பதுங்கிக்கொண்டிருக்கின்ற அந்தக் கர்ணனைக்காணமல், பீமஸேனன் அந்தத்தேரின் கொடிமரத்தில் ஏறிப் பின்பு பூமியிலிறங்கி அவனை எதிர்பார்த்து நின்றான். கருடன் ஸர்ப்பத்

னைக் கவருவதுபோல் ரதத்தினின்று கர்ணனைக் கவருவதற்கு விரும் பினதாகிய அந்தப் பீமனுடைய செய்கையை எல்லாக் கௌரவர்களும் சாரணர்களும் புகழ்ந்தார்கள். வில் அறுக்கப்பட்டவனும் ரதத்தை யிழந்தவனுமான அந்தப்பீமன் தனக்குரிய தர்மத்தைப் பாதுகாத்துக் கொண்டு தன் ரதத்தைப் பிற்படுத்தி யுத்தத்தின்பொருட்டே உறுதி யாக நின்றான். அவ்விதமான பீமனுடைய நிலைமையை ஆலோசித்து அந்த ராதேயன், பிறகு, யுத்தபூமியில் முயற்சியோடு யுத்தத்தின் பொருட்டு எதிர்த்து நிற்கின்ற அந்தப் பாண்டவனை எதிர்த்தான். மகாராஜரே! எதிர்த்து யுத்தஞ்செய்கின்ற மகா பலசாலிகளான அந்த நரசிரேஷ்டர்களிருவரும் கிரீஷ்மருதுவினுடைய முடிவில் கர்ஜிக்கின்ற இரண்டு மேகங்கள்போலக் காணப்பட்டார்கள். கோபங்கொண்டவர் களும் பொறுமையுள்ளவர்களும் நரஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவருக் கும் யுத்தகளத்தில் யுத்தமானது, ஒரு தேவனுக்கும் அஸுரனுக்கும் நேர்ந்ததுபோல நேர்ந்தது. ஆயுதங்கள் செலவாகிவிட்டவனும் கர்ண னால் விரைவாக எதிர்க்கப்பட்டவனுமான பீமன்,மலைபோன்ற யானைகள் அர்ஜுனனால் கொல்லப்பட்டுக் கீழே விழுந்திருப்பதைக் கண்டு கர்ண னுடைய ரதமார்க்கத்தைத் தடுப்பதற்காக நிராயுதனாக (அங்கே) நுழைந்தான். பீமன் உயிரைவிரும்பி ரதம் செல்லக்கூடாததான யானைக்குவியலில் சென்று நுழைந்துகொண்டு கர்ணனை எதிர்க்காம லிருந்தான். பகைவர்களுடைய பட்டணங்களை ஜயிப்பவனான பீமன், பிறகு தன்னைக் காத்துக்கொள்ள விரும்பித் தனஞ்சயனுடைய அம்பு களால் கொல்லப்பட்ட ஒரு யானையை, சிறந்த ஔஷதிகளோடு கூடின பர்வதத்தை அநுமான் தூக்கியதுபோல் தூக்கிக்கொண்டு நின்றான். கர்ணன் இந்தப் பீமனுடைய அந்த யானையை அம்புகளால் மறுபடியும் அடித்தான். பிறகு, பாண்டுநந்தனன் யானைகளினுடைய அங்கங்களை யும் சக்கரங்களையும் குதிரைகளையும் அவ்வாறேபூமியில் (தான்) காணும் (மற்றப்) பொருள்களையும் கையிலெடுத்துக் கர்ணன்மீது கோபத்தோடு எறிந்தான். அவ்வாறு பீமன் எறிய எறியக் கர்ணன் அவைகளெல்லா வற்றையும் கூர்மையான அம்புகளால் துண்டாக்கினான். பீமனும் கட்டைவிரலை உள்ளே மடக்கிக்கொள்வதான மிக்க பயங்கரமான முஷ் டியைப்பிடித்து ஸூதபுத்ரனைக் கொல்வதற்கு விரும்பினான். ஸமர்த்த னும் பாண்டுநந்தனனுமான பீமன் வல்லமையுள்ளவனாயிருந்தும் அந்த க்ஷணத்திலேயே அர்ஜுனனை நினைத்து அவனால் செய்யப்பட்ட பிர திஜ்ஞையைக் காப்பவனாகிக் கர்ணனைக் கொல்லவில்லை. ஸூதபுத்ரன், இவ்வாறு துன்பமுற்றவனாயிருக்கின்ற அந்தப்பீமனை அடிக்கடி கூர்மை

யான பாணங்களால் (அடித்து) மூர்ச்சையினால் கவரப்பட்ட அங்கங்களுள்ளவனாகச் செய்தான். கர்ணன் ஆயுதமற்றவனான பீமஸேனனைக் குந்தியின் சொல்லை நினைத்துக் கொல்லவில்லை. ஆனால், அந்தக் கர்ணன் விரைவாக அருகிற்சென்று பீமனை உக்ரமான வில்லினால் குத்தினான். வில்லினால் குத்தப்பட்டவுடனே, கோபமுள்ளவனான பீமன் ஸர்ப்பம்போல் பெருமூச்சு விட்டுக்கொண்டு கர்ணனுடைய வில்லைப் பிடுங்கி அவனுடைய தலையில் அடித்தான். பீமனால் அடிக்கப்பட்ட ராதேயன் கோபத்தினால் கண்கள் மிகச் சிவந்து அட்டஹாஸத்துடன் 'நபும்ஸக! மூட! பெருந்தீனிக்காரனே! ஆயுதப் பழக்கமற்றவனே! பாலா! யுத்தத்தில் பயந்தவனே! நீ யுத்தஞ்செய்யாதே. பாண்டவ! துஷ்டபுத்தியுடையவனே! பலவிதமான ஆகாரங்களும் பக்ஷணங்களும் குடிக்கத்தக்கவைகளும் இருக்குமிடத்தில் நீ இருக்கத்தகுந்தவன். ஒருபொழுதும் யுத்தங்களில் நிற்கத்தகுந்தவனல்லை. பீமா! நீ காட்டில் மூலங்களையும் புஷ்பங்களையும் பழங்களையும் ஆகாரமாகக்கொண்டு விரதங்களிலும் நியமங்களிலும் நிலைபெற்றிருக்கத் தகுந்தவன். யுத்தத்தில் நீ ஸமர்த்தனல்லை. விருகோதர! யுத்தமெங்கே? ரிஷித்தன்மையெங்கே? காட்டிற்குச் செல். அப்பா! நீ யுத்தஞ்செய்யத்தக்கவனல்லை. நீ வனவாஸத்தில் பிரியமுள்ளவன். விருகோதர! நீ வீட்டிலுள்ள சமையற்காரர்களையும் சம்பள ஆட்களையும் அடிமைக்காரர்களையும் மிகவும் விரைவுபடுத்திக்கொண்டு போஜனத்தின்பொருட்டுக் கோபத்தினாலே அவர்களையடிப்பதற்குத்தகுந்தவன். துர்ப்புத்தியுடைய பீம! அல்லது, நீ ரிஷியாகவிருந்துகொண்டு பழங்களைப் புஜி. கௌந்தேய! நீ காட்டிற்குச் செல். நீ யுத்தத்தில் சமர்த்தனல்லை. விருகோதர! நீ மூலபலங்களைப் புஜிப்பதிலும் அவ்வாறே அதிதிபூஜையிலும் சக்தியுடையவன். விருகோதர! ஆயுதத்தையெடுத்து யுத்தம்செய்யும் விஷயத்தில் தகுதியுள்ளவனாக உன்னை நான் எண்ணவில்லை' என்று இவ்வாறான வார்த்தையைத் திரும்பத் திரும்பக் கூறினான். அரசரே! இவ்வாறு ரதத்தை இழந்தவனாயிருக்கிற அந்தப் பீமனைக் கண்டு கர்ணன் பால்யத்தில் நடந்த அப்ரியமான செய்கைகளெல்லாவற்றையும் நினைத்துக் கடுஞ்சொற்களைச் சொன்னான். பிறகு, கர்ணன் அந்த இடத்தில் பதுங்கியிருக்கின்ற பீமனை வில்லினால் மறுபடியுங் குத்தினான். கர்ணன் அப்பொழுது உரக்கச் சிரித்துக்கொண்டு பீமனைப் பார்த்து மறுபடியும் (பின்வருமாறு) உரைக்கலானான். 'மரியாதைக்குரியாய்! நீ மற்றவரிடத்தில் யுத்தஞ் செய்யவேண்டும். என்னைப்போன்றவர்களுடன் யுத்தஞ்செய்யக் கூடாது. என்னைப்போன்றவர்களோடு

யுத்தஞ்செய்கின்றவர்களுக்கு இதுவும் இன்னும் மற்றதும் ஸம்பவிக்கும். கிருஷ்ணனும் அர்ஜுனனும் இருக்குமிடத்துக்காவது செல். அவ்விருவரும் உன்னை யுத்தத்தில் ரக்ஷிப்பார்கள். கௌந்தேய! பாலகா! அல்லது, வீட்டிற்காவது போ. யுத்தத்தால் உனக்கு யாது பயன் ?' என்று கூறினன்.

பீமஸேனன், மிகக் கடுமையான கர்ணனுடைய வார்த்தையைக் கேட்டு அட்டஹாஸஞ்செய்துகொண்டு எல்லோரும் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே கர்ணனைப் பார்த்து, 'துஷ்டா! நீ பலமுறை ஜயிக்கப்பட்டாய்; வீணாக ஏன் நீயே தற்புகழ்ச்சிசெய்துகொள்ளுகிறாய்? முன்னோர்களால் உலகத்தில் மகேந்திரனுக்குக்கூட ஜயாபஜயங்கள் காணப்பட்டிருக்கின்றன. இழிகுலத்தில் பிறந்தவனே! என்னுடன் மல்லயுத்தஞ்செய். மகாபலசாலியும் மகாபோகமுடையவனுமான கீசகனைக் கொன்றதுபோலவே, எல்லா அரசர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே உன்னை நான் கொல்வேன்' என்கிற வசனத்தை உரைத்தான். புத்திசாலிகளுள் சிறந்தவனான கர்ணன் பீமனுடைய அபிப்பிராயத்தை யறிந்து எல்லா வில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அந்த யுத்தத்தினின்றும் விலகினன். அரசரே! கர்ணன் இவ்வாறு அந்தப் பீமனை ரதத்தை இழந்தவனாகச் செய்துவிட்டு, விருஷ்ணிகளுள் உத்தமரான வாஸுதேவருக்கும் மகாத்மாவான அர்ஜுனனுக்கும் எதிரில் தற்புகழ்ச்சி செய்துகொண்டான். பயங்கரமான பராக்ரமமுள்ள அந்தப் பீமன் அர்ஜுனனுடைய பெரிய பலத்தை நினைத்து, அவ்வாறு சொல்லுகின்ற கர்ணனைக் கொல்லவில்லை. பராக்ரமசாலியான அந்தப் பீமன் விரைவாக அவன் வில்லை வளைத்து முறித்தான். மகாராஜரே! பிறகு, மகா தேஜஸ்வியான வாஸுதேவர் பார்த்து, 'அர்ஜுன! அர்ஜுன! கர்ணனாலே பிடிக்கப்பட்டிருக்கின்ற இந்தப் பீமனைப் பார்' என்று சொன்னார். மகாராஜரே! மகாத்மாவான கேசவரால் அப்பொழுது இவ்வாறு சொல்லப்பட்ட அர்ஜுனன், பீமன் அந்நிலைமையை யடைந்ததைப்பற்றிக் கோபத்தினால் கண்கள் நன்குசிவந்து கர்ணனைக் கண்ணால் எரிப்பவன் போன்று பொறாமை மிக்கவனானன் வேந்தரே! பிறகு, கேசவரால் தூண்டப்பட்ட வானரத்வஜனான அர்ஜுனன், சாணைபிடிக்கப்பட்ட அம்புகளை ஸூதபுத்ரன்மீது பிரயோகித்தான். பிறகு, பார்த்தனுடைய கையினால் விடப்பட்டவைகளும் காண்டீவத்தினின்றும் தோன்றியவைகளும் பொன்னலங்காரமுள்ளவைகளுமான அம்புகள், அன்னப்பறவைகள் க்ரௌஞ்ச பர்வதத்தில் பிரவேசிப்பதுபோலக் கர்ணனிடத்தில் பிர

வேசித்தன. அந்தத் தனஞ்சயன் கோபாவேசங்கொண்ட ஸர்ப்பங்கள் போல் காண்டீவத்தினின்று விடுபடும் அம்புகளாலே பீமஸேனனிடத்தினின்று கர்ணனை விலக்கினான். பீமனாலே வில் முறிக்கப்பட்டவனும் தனஞ்சயனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டவனுமான அந்தக் கர்ணன் பெரிய ரதத்தோடு விரைவாகப் பீமனிடத்தினின்றும் விலகிச் சென்றான். நரசிரேஷ்டனான பீமனும் ஸாத்யகியினுடைய ரதத்தின் மீதேறி யுத்தகளத்தில் பிராதாவும் பாண்டுநந்தனனுமான ஸவ்யஸாசியைப் பின்தொடர்ந்தான். பிறகு, தனஞ்சயன் விரைபவனும் கோபத்தினாலே சிவந்த கண்களையுடையவனுமாகிக் கர்ணனை உத்தேசித்து, அந்தகன் மிருத்யுவை அனுப்புவதுபோல நாராசத்தை அனுப்பினான். காண்டீவத்தினால் எய்யப்பட்ட அந்த நாராசமானது, ஆகாயத்தில் கருடன் சிறந்த ஸர்ப்பத்தை விரும்பிக்கொண்டுவருவதுபோல விரைவாகக் கர்ணனை எதிர்த்து வந்தது. மகாரதரான துரோணபுத்ரர், தனஞ்சயனிடத்திலிருந்துண்டான பயத்தினின்று கர்ணனை ரக்ஷிக்க எண்ணி ஆகாயத்திலேயே அந்த அம்பை அம்பினால் துண்டாக்கினார். மகாராஜரே! பிறகு, கோபங்கொண்ட அர்ஜுனன் துரோணபுத்ரரை அறுபத்துநான்கு பாணங்களால் அடித்து, 'நீர் போகாதீர்; நில்லும்' என்றும் சொன்னான். தனஞ்சயனுடைய அம்புகளாலே பீடிக்கப்பட்ட அந்தத் துரோணபுத்திரரோ, மதங்கொண்ட யானைகளாலே நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டதும் ரதங்களாலே வியாபிக்கப்பட்டதுமான படையில் விரைவாகப் பிரவேசித்தார். பிறகு, பலவானான கௌந்தேயன் யுத்தத்தில் சப்திக்கின்றவையும் பொன்வேய்ந்த பின்புறமுள்ளவையுமான விற்களுடைய சத்தத்தைக் காண்டீவத்தின் ஒலியினால் கீழ்ப்படுத்தினான். அவ்வாறு சென்றுகொண்டிருக்கின்ற துரோணபுத்திரரை அர்ஜுனன், அம்புகளால் சேனையை மிகப் பயமடையும்படி செய்துகொண்டு சொஞ்சதூரம் பின்தொடர்ந்தான். அர்ஜுனன் கழுகிறகுகள் பூண்ட நாராசங்களாலே மனிதர்கள், யானைகள், குதிரைகள் இவைகளினுடைய சரீரங்களைப் பிளந்து கௌரவ ஸைனியத்தை நாசஞ்செய்தான். பரதசிரேஷ்டரே! இந்திர குமாரனான அந்தப் பார்த்தன் முயற்சியுள்ளவனாகிக் குதிரைகளோடும் யானைகளோடும் காலாட்களோடுங்கூடின அந்தச் சேனையைக் கொன்றான்" என்று கூறினான்.

---

## நூற்றுநாற்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி அலம்புஸனைக் கொன்றது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பாண்டவர்களுக்கு அவர்களைச் சேர்ந்த ராஜ்யமானது கொடுக்கத்தக்கதென்று இப்பொழுது நான் எண்ணுகிறேன். பலவானோடு சண்டைசெய்வதானது எவ்விதத்தாலும் நன்மையடையக் காரணமாகாது. சத்துருவினுடைய கால்களில் வணங்கியாவது உண்ட எச்சிலைப் புஜித்தாவது இன்னும் வேறெந்தக் காரியத்தைச் செய்தாவது உலகத்தில் மனிதன் ஜீவிக்கவேவேண்டும். எவ்விதத்தினாலும் ஜீவித்திருக்கின்ற மனிதனாலேயே பரலோகமானது அடையப்படுகிறது. அதுபோலவே ஜீவிக்காமற்போன மனிதனுக்கு ஸ்வர்க்கமும் பரலோகமும் உண்டாகா. ஸர்வவிதத்தினாலும் விநாசம் நேர்ந்திருக்குங்காலத்தில் பாலனான (என் குமாரன்) காரியத்தை அறியவில்லை. வீணான அபிமானத்தினால் எரிக்கப்பட்டு, செய்யத்தக்கதையும் தகாததையும் அறியவில்லை. ஸஞ்சய! பிரகாசிக்கின்ற என் புகழானது நாளுக்குநாள் குறைந்துபோகின்றது. என்னைச் சேர்ந்த அனேக யுத்தவீரர்கள் கொல்லப்பட்டார்கள். (இது) காலவித்யாஸமென்று எண்ணுகிறேன். துரோணபுத்ராலும் கர்ணனாலும் ரக்ஷிக்கப்பட்டுத் தேவராலுங்கூடப் பிரவேசிக்கமுடியாததான என்னுடைய ஸேனையில் அர்ஜுனன் பலமுள்ளவர்களான கிருஷ்ணனாலும் பீமனாலும் விருத்திசெய்விக்கப்பட்ட பராக்கிரமமுள்ளவனாகி, கிருஷ்ணனோடும் பீமனோடும் சினிகுலத்தவர்களுள் உத்தமனான ஸாத்யகியோடும் மிகுந்த கோபத்துடன் நுழைந்தது முதற்கொண்டே அக்கினிபோன்ற சோகமானது என்னுள்ளத்தை எரிக்கிறது. ஸைந்தவனோடு கூடின அரசர்களை விழுங்கப்பட்டவர்களைப்போலப் பார்க்கிறேன். ஸிந்துராஜன் கிரீடிக்கு மிகவும் பெரிதான அப்பிரியத்தைச் செய்துவிட்டமையால், தேவராஜாவான இந்திரன்போன்ற மகாதேஜஸ்வியும் கோபங்கொண்டவனுமான அர்ஜுனனுடைய கண்ணிற்கெதிர்ப்பட்டு எவ்வாறு உயிர்தரித்திருப்பான்? ஸஞ்சய! அநுமானத்தினாலும் ஸைந்தவன் தொலைந்தானென்றே எண்ணுகிறேன். அந்த யுத்தம் எவ்வாறு நடந்ததோ அதனை உள்ளபடி எனக்கு நீ சொல்லவேண்டும். ஸஞ்சய! கோபித்துக்கொண்டிருக்கின்ற ஒரு யானையானது தாமரை ஓடையில் பிரவேசிப்பதுபோலப் பெரிதான சேனையை அடிக்கடி கலக்கி உள்ளே

பிரவேசித்தவனும் தனஞ்ஜயன்நிமித்தமாக முயற்சிசெய்பவனும் விருஷ்ணிவீரனுமான ஸாத்யகியினுடைய யுத்தத்தை உள்ளபடி சொல். நீ ஸமர்த்தனாயிருக்கிறாய்" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

அரசரே! அவ்வாறு கர்ணனாலே பீடிக்கப்பட்டுச் செல்லுகின்ற புருஷசிரேஷ்டனான பீமனைக் கண்டு சினிகளுள் சிறந்த வீரனான ஸாத்யகி யுத்தவீரர்களுடைய மத்தியில் அவனை ரதத்தோடு பின்தொடர்ந்தான். க்ரீஷ்மருதுவினுடைய முடிவில் வஜ்ரதரனான பர்ஜன்ய தேவன் எவ்வாறு கர்ஜிப்பானோ, வர்ஷாகாலத்தின் முடிவில் சூரியன் எவ்வாறு விளங்குவானோ அவ்வாறே அந்த ஸாத்யகி கர்ஜித்துக்கொண்டும் பிரகாசித்துக்கொண்டும் உறுதியான வில்லினாலே பகைவர்களை நாசஞ்செய்துகொண்டும் உமது புத்திரனுடைய சேனையை நடுங்கச் செய்துகொண்டும் பிரவேசித்தான். பாரதரே! யுத்தகளத்தில் வெள்ளி போல் பிரகாசிக்கின்ற குதிரைகளுடன் செல்லுகின்றவனும் மிக்க வீர்யமுடையவனும் ஸிம்மநாதஞ் செய்கின்றவனும் மதுவம்சத்தார்களில் சிறந்தவனுமாகிய ஸாத்யகியை உம்மைச்சேர்ந்த எல்லா ரதிகர்களும் தடுக்கச் சக்தியற்றவர்களானார்கள். கோபத்தால் நிரம்பினவனும் பின்வாங்காமல் போர்புரிகின்றவனும் வில்லைக் கையில்கொண்டவனும் பொற்கவசத்தை அணிந்தவனுமான அலம்புஸனென்கிற ராஜசிரேஷ்டன் மதுகுலத்தவரிற் சிறந்த ஸாத்யகியை எதிர்த்துத் தடுத்தான். பாரதரே! அவ்விருவருக்கும் நேர்ந்த யுத்தம்போல ஒரு யுத்தமும் நேர்ந்ததில்லை. யுத்தரங்கத்தில் பிரகாசிக்கின்ற அவ்விருவரையும் உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களெல்லோரும் எல்லாச் சத்துருக்களும் பார்த்துக்கொண்டே நின்றார்கள். ராஜசிரேஷ்டனான அலம்புஸன் ஸாத்யகியைப் பத்துப் பாணங்களாலே செம்மையாக அடித்தான். சினிபுங்கவனும் அவ்வம்புகளைத் தன்னிடம் வருவதற்குள்ளாகவே பாணங்களால் அறுத்தான். மறுபடியும், அலம்புஸன் நெருப்புக்கொப்பானவையும் காதுவரையிலும் இழுத்துவிடப்பட்டவையும் மிகுந்த கூர்மையுள்ளவையும் நல்ல கட்டுக்களுள்ளவையுமான மூன்று பாணங்களினாலே ஸாத்யகியை அடித்தான். அந்த அம்புகள் கவசத்தையுடைத்து ஸாத்யகியின் தேகத்தில் பிரவேசித்தன. அக்னிக்கும் காற்றுக்கும் நிகரான வல்லமையுள்ளவையும் கூர்மையுள்ளவையும் ஜ்வலிக்கின்றவையுமான அந்த அம்புகளாலே அந்த ஸாத்யகியின் தேகத்தைப் பிளந்து, பிறகு, நான்கு பாணங்களாலே வெள்ளிபோலப் பிரகாசிக்கிற நான்கு

ரைகளையும் வலிந்து கொன்றான். அவ்வாறு அந்த அலம்புஸனாலே அடிக்கப்பட்டவனும் ஸ்ரீ சக்ரபாணியான கிருஷ்ணனுடைய மகிமை போன்ற மகிமையுடையவனும் பலசாலியுமான சினியினுடைய பௌத்திரன் சிறந்த வேகமுள்ள நான்கு பாணங்களாலே அலம்புஸனுடைய குதிரைகளையும் கொன்றான். பிறகு, பிரளயகால நெருப்புக்கொப்பான பலத்தினாலே இந்த ஸூதனுடைய தலையை அறுத்துக் குண்டலங்களை அணிந்ததும் பூர்ணசந்திரன்போலப்பிரகாசிக்கின்றதும் மகாதேஜஸுள்ளதுமான அவன்முகத்தைச் சரீரத்தினின்றும் அறுத்தான். அரசரே! பிறகு, பகைவர்களைக் கொல்லுகின்றவனும் யாதவர்களுள் உத்தமனுமான அந்த வீரன் ராஜவம்சத்தில் பிறந்தவனான அந்த அலம்புஸனை யுத்தத்தில் கொன்றுவிட்டு உம்முடைய சைனியங்களைத் தடுத்துக்கொண்டு அர்ஜுனனையே நோக்கிச் சென்றான். அவ்வாறு வருகின்றவனும் சத்துருக்களுடைய மத்தியில் பார்த்துக்கொண்டு ஸஞ்சாரஞ்செய்கின்றவனும் மேகக் கூட்டங்களை வாயுவானது அழிப்பதுபோலக் கௌரவ சைனியங்களை அம்புகளாலே அடிக்கடி அழிப்பவனுமான அந்த ஸாத்யகியைப் புருஷசிரேஷ்டனான அவன் போகக்கருதிய இடங்களுக்கெல்லாம் பொன்விரிப்பினாலே மூடப்பட்டவையும் ஸிந்துதேசத்தில் தோன்றியவையும் நன்றாகப் பழக்கப்பட்டவையும் பசுவின்பாலையும் குருக்கத்திப்பூவையும் சந்திரனையும்போலப் பிரகாசிக்கின்றவையுமான நல்ல குதிரைகள் இழுத்துச்சென்றன. அஜமீடவம்சத்தில் தோன்றியவரே! பிறகு, ஒன்றுசேர்ந்தவர்களான உம்முடைய குமாரர்களும் மற்றுமுள்ள உம்மைச்சேர்ந்த யுத்தவீரர்களும் விரைவுள்ளவர்களாகி, பாரத யுத்தவீரர்களுள் முக்கியனும் உமது புத்திரனுமான துச்சாஸனனை முன்னிட்டுக்கொண்டு விரைவாக ஸாத்யகியை எதிர்த்தார்கள். ஸேனையின் வேகத்தை ஸகிக்கிறவர்களான அவர்கள் யுத்தரங்கத்தில் நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டு சைனேயனை அடித்தார்கள். ஸாத்வதர்களுள் மிகச் சிறந்தவனும் வேகத்துடன் சத்துருக்களைக் கொல்லும் தன்மையுடையவனும் சினியினுடைய பௌத்திரனுமான அந்த வீரனும் அவர்களைப் பாணசமூகத்தால் தடுத்து அக்கினிக்கொப்பான அம்புகளால் மனத்தைக்காட்டிலும் அதிக வேகம் பொருந்திய துச்சாஸனனுடைய குதிரைகளை அடித்தான். பிறகு, அர்ஜுனனும் வாஸுதேவரும் புருஷசிரேஷ்டனான ஸாத்யகியைக் கண்டு களிப்புற்றார்கள்.

---

## நூற்றுநாற்பத்தோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி அர்ஜுனனைக் கண்டதும் பூரிஶ்ரவஸோடு போர்புரிந்ததும்.)

அரசரே! துச்சாஸனன் ரதத்தைநோக்கி முயற்சிகொண்டவ னும் மகாபாகுபலமுள்ளவனும் விரைவுடன் செய்யவேண்டிய காரியங்க ளில் விரைவுள்ளவனும் தனஞ்சயனுக்கு ஜயத்தை விரும்புகின்றவ னும் அளவற்ற ஸேனாஸமுத்திரத்தில் புகுந்தவனுமான அந்த ஸாத்ய கியைப் பெரிய வில்லைக் கையிலேந்தியவர்களும் பொன்னால் அலங்கரிக் கப்பட்ட துவசமுள்ளவர்களுமான திரிகர்த்தர்கள் சூழ்ந்துகொண்டார் கள். சிறந்த விற்களையுடைய அந்தத் திரிகர்த்தவீரர்கள், பிறகு, கோபங்கொண்டு ரதஸமூகத்தால் நான்குபுறத்திலும் ஸாத்யகியைச் சூழ்ந்துகொண்டு அம்புத்திரள்களை இறைத்தார்கள். ஸத்யவிக்கிரம னான ஸாத்யகி ஒருவனாயிருந்துகொண்டே மகா யுத்தத்தில் பிரகாசிக் கின்றவர்களும் பகைவர்களுமான அந்த ஐந்நூறு ராஜகுமாரர்களையும் ஜயித்தான். பரதரிற்சிறந்தவரே! கைதட்டும் சப்தங்களாலே நிறைந்த தும் கத்திகளாலும் சக்திகளாலும் கதைகளாலும்நிரம்பியதும் கப்பலில் லாத கடல்போன்றதுமான பாரதசேனையின்மத்தியை அடைந்து,பிறகு, திரிகர்த்த வீரர்கள் தொடர்ச்சியாக ஒன்றுசேர்ந்து மிக நீண்ட விற்களை நாணொலியிடும்படி செய்துகொண்டு மிகப் பெரிய தேர்க்கூட்டத்தால் ஸாத்யகியை நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். அந்த யுத்த களத்தில் சைனேயனுடைய ஆச்சரியகரமான செய்கையைக்கண்டோம். அந்தச் சைனேயனை மேற்குத்திக்கில் கண்டு லாகவத்தினாலே கிழக் குத்திக்கிலும் கண்டேன். அவ்வாறே வடக்கிலும் தெற்கிலும் கிழக்கி லும் மேற்கிலும் கோணத்திசைகளிலும் கண்டேன் சௌர்யமுடைய வனும் யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவனும் மகா பலசாலியுமான அந்த ஸாத்யகி மறுபடியும் போர்க்களத்தின் நடுவையடைந்து ஒருவ னாயிருந்துகொண்டே யுத்தபூமியில் பலவாறாக உலாவினான். நூறு ரதி கர்கள் ஸஞ்சரித்தாலெப்படியோ அப்படியே சூரனான ஸாத்யகி நர்த்த னஞ் செய்கின்றவன்போல் யுத்தபூமியில் ஸஞ்சரித்தான். ஸிம்மம் போன்ற பராக்கிரமத்துடன் செல்லுகின்ற அந்த ஸாத்யகியினுடைய அந்தச் செய்கையைக் கண்டு திரிகர்த்தர்கள் மனவருத்தத்தையடைந்து ஸ்வஜனங்களைக்குறித்துத் திரும்பி ஓடினார்கள். வேறான சூரஸேனவீரர் கள் மதங்கொண்ட யானையை மாவெட்டிகளாலே அடக்கித் தடுப்பது போலப் பாணஸமூகங்களாலே அந்த ஸாத்யகியை 'யுத்தகளத்தில்

அடக்கித் தடுத்தார்கள். பெருந்தன்மைவாய்ந்த ஸாத்யகி ஒரு முகூர்த் தகாலம் அவர்களோடு போர்புரிந்தான். நினைப்பதற்குத் தகாத பலத் தையும் விக்கிரமத்தையுமுடைய அந்த ஸாத்யகி, பிறகு, களிங்கர்க ளோடு போர்புரிந்தான். மிக்க தோள்வலியுள்ளவனான ஸாத்யகி தாண்ட முடியாத அந்தக் களிங்கசேனையையுங் கடந்து, பிறகு, குந்திபுத்திர னான தனஞ்சயனை அடைந்தான். ஜலத்தில் நீந்திக் களைப்படைந்த வன் கரையையடைந்து மனத்தேறுதலடைவதுபோல ஸாத்யகி புருஷ சிரேஷ்டனான அந்த அர்ஜுனனைக் கண்டு மனத்தேறுதலை அடைந் தான். அந்த ஸாத்யகி அருகில் வருகின்றதைப் பார்த்துக் கேசவர் பார்த்தனைநோக்கிக் கூறலானார்.

'பார்த்த! இதோ சைனேயன் நீ இருக்குமிடத்தை நாடி வந்து கொண்டிருக்கிறான். உனக்குச் சிஷ்யனும் நண்பனும் ஸத்ய பராக்கிரம னும் புருஷச்ரேஷ்டனுமான இந்த ஸாத்யகி எல்லா யுத்தவீரர்களை யும் துரும்பாக எண்ணி ஜயித்துவிட்டான். அர்ஜுன! உனக்குப் பிராணனைக்காட்டிலும் அதிகப் பிரியனான இந்த ஸாத்யகி கௌரவ யுத்தவீரர்களுக்குக் கோரமான உபத்திரவத்தைச் செய்துவிட்டு வரு கிறான். பல்குன! இவன் துரோணரையும் போஜனான கிருதவர்மா வையும் பாணங்களாலே பீடித்துவிட்டு அருகில் வருகிறான். பல்குன! சூரனும் அஸ்திரங்களில் பயிற்சியுள்ளவனும் தர்மராஜருக்குப் பிரி யத்தைத் தேடுகிறவனுமான ஸாத்யகி சிறந்த போர்வீரர்களையெல்லாம் கொன்றுவிட்டு நம்மைநோக்கி வருகிறான். பாண்டவ! மிக்க பலசாலி யான ஸாத்யகி ஸைனியமத்தியில் செய்யமுடியாதகாரியத்தைச் செய்து விட்டு உன்னைப்பார்க்கும் விருப்பத்துடன் வருகிறான். பார்த்த! இந்த ஸாத்யகி யுத்தகளத்தில் ஆசார்யரைமுதன்மையாகக்கொண்டவர்களான அனேக மகாரதர்களைத் தன் ஒரே ரதத்துடன் போர்புரியச் செய்து விட்டு வருகிறான். பார்த்த! இந்த ஸாத்யகி தர்மராஜரால் அனுப்பப் பட்டுத் தன் புஜபலத்தினால் இந்தச் சேனையைப் பிளந்துகொண்டு எதிரில் வருகிறான். பார்த்த! உனக்குப் பிரியனும் சிஷ்யனும் உன் னோடொத்த பராக்கிரமமுள்ளவனுமான இந்த ஸாத்யகி பெரிதான சேனையை ஓடும்படி செய்துவிட்டு வருகிறான். கௌந்தேய! எவனுக் குச் சமனான யுத்தவீரன் கௌரவர்களுள் எவ்விதத்திலும் இல்லையோ யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவனான அப்படிப்பட்ட இந்த ஸாத் யகி இதோ வருகிறான். பார்த்த! இவன் அனேக சைனியங்களைக் கொ ன்றுவிட்டுப்' பசுக்களுடைய மத்தியினின்று சிங்கம் வருவதுபோலக்

கௌரவ ஸைனியத்தினின்று விடுபட்டு வருகிறான். பார்த்த! இந்த ஸாத்யகி ஆயிரக்கணக்கான அரசர்களுடைய தாமரை மலர்போன்ற முகங்களாலே பூமியைப் பரப்பிவிட்டு விரைவாக வருகிறான். இந்த ஸாத்யகி யுத்தகளத்தில் ஸகோதரர்களோடுகூடின துரியோதனனை ஜயித்தும் ஜலஸந்தனையும் கொன்றும் விரைவாக வருகிறான்.' இந்த ஸாத்யகி இரத்தச்சேறுள்ளதும் இரத்தவெள்ளமுள்ளதுமான நதியை உண்டுபண்ணிக் கௌரவர்களைத் துரும்புபோலப் பறக்க அடித்துவிட்டு வருகிறான்' என்று கூறினார். பிறகு, கௌந்தேயன் சந்தோஷமடைந்து கேசவரைப்பார்த்து, 'மகா பாகுபலமுள்ளவரே! ஸாத்யகி என்னிடம் வருவது எனக்குப் பிரியமானதன்று. கேசவரே! ஸாத்வதனால் பிரிக்கப்பட்ட அந்தத் தர்மராஜர் ஜீவித்திருக்கிறாரோ; இல்லையோ. அவருடைய விருத்தாந்தத்தை நான் அறியேன். மிக்க தோள்வலியுள்ளவரே! இவன் அந்த அரசரைக் காப்பாற்றவேண்டியவனல்லனோ? மாதவரே! அவரை விட்டுவிட்டு இவன் எவ்வாறு என்னை நாடிவருகிறான்? தர்மராஜர் துரோணரின்பொருட்டு விடப்பட்டுவிட்டார். ஸைந்தவனும் கொல்லப்படவில்லை. யுத்தகளத்தில் இதோ பூரிஸ்ரவஸும் சைனேயனை எதிர்த்துவருகிறான். ஸைந்தவன் நிமித்தமாக மிக்க பெரிதான அந்தக் காரியபாரமானது என்மீது வைக்கப்பட்டிருக்கின்றது. தர்மராஜரைப்பற்றி நான் தெரிந்துகொள்ளவேண்டும்; ஸாத்யகியையும் காப்பாற்றவேண்டும்; ஜயத்ரதனையும் கொல்லவேண்டும். சூரியனோ சாய்கிறான். மகா பாகுபலமுள்ள இந்த ஸாத்யகியோ களைத்து இப்பொழுது பலங்குறைந்தவனாகியிருக்கிறான். மாதவரே! இவனுடைய குதிரைகளும் களைத்துவிட்டன; குதிரையோட்டுபவனும் களைத்துவிட்டான். கேசவரே! பூரிஸ்ரவஸோ களைப்படையாதவனும் உதவியுடன் கூடினவனுமாக இருக்கிறான். இந்தச் சண்டையில் இந்த ஸாத்யகிக்கு க்ஷேமமுண்டாகுமா? ஸத்யவிக்கிரமனும் மிக்க பிரதாபமுடையவனும் சினிகளுள் உத்தமனுமான ஸாத்யகி (முன்பு) கடலைத்தாண்டி (இப்பொழுது) பசுவின் குளப்படியை அடைந்து வாடாமலிருப்பானா? ஸாத்யகி கௌரவர்களுள் முக்கியனும் அஸ்திரவித்தையில் பாண்டித்யமுள்ளவனும் மகாத்மாவுமான பூரிஸ்ரவஸோடு எதிர்த்து க்ஷேமமுடையவனாவானா? கேசவரே! ஆசாரியரிடத்திலிருந்து பயத்தைவிட்டு ஸாத்யகியை அனுப்பினது தர்மராஜருடையதவறென்றே நான் எண்ணுகிறேன். ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற பருந்தானது மாம்ஸத்தை விரும்புவதுபோலத் துரோணர் தர்மராஜரைப் பிடிப்பதற்கு எப்பொ

மூதும் விரும்பிக்கொண்டிருக்கிறார். அரசரான தர்மபுத்திரர் க்ஷேமமுடையவராக இருப்பாரா?' என்று கூறினான்.

---

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகிக்கும் பூரிஸ்ரவஸுக்கும் யுத்தமும் பூரிஸ்ரவஸினுடைய கையை அர்ஜுனன் அறுத்ததும்.)

அரசரே! அர்ஜுனனிடத்தில் வருகின்றவனும் போரிலடங்கா மதங்கொண்டவனுமான அந்த ஸாத்யகியைப் பூரிஸ்ரவஸ் கோபத்துடன் விரைவாக எதிர்த்துவந்தான். மகாராஜரே! கௌரவ்யனான பூரிஸ்ரவஸ் அந்தச் சினிபுங்கவனைப்பார்த்து, 'பாக்யவிசேஷத்தினாலே இப்பொழுது என்னுடைய கண்ணுக்கு இலக்காயிருக்கும் நிலைமையை அடைந்தவனாயிருக்கிறாய். நான் நெடுநாளாக விரும்பியிருக்கிற மனோபீஷ்டத்தை யுத்தத்தில் அடையப்போகிறேன். யுத்தத்தைவிட்டு விலகாமல்போனால் நீ உயிரோடு விடுபடப்போகிறதில்லை. தாசார்ஹ! எப்பொழுதும் யுத்தத்தில் சூரனென்று கர்வங்கொண்ட உன்னை இப்பொழுது யுத்தத்தில் கொன்று குருராஜனான துரியோதனனை ஆனந்தமடையும்படி செய்யப்போகிறேன். இப்பொழுது என் பாணத்தால் எரிக்கப்பட்டு யுத்தத்தில் பூமியில் விழுந்திருக்கின்ற உன்னை வீரர்களான கேசவனும் அர்ஜுனனும் சேர்ந்து பார்க்கப்போகிறார்கள். உன்னை இங்கே வரச்செய்த ராஜாவான தர்மநந்தனன் இப்பொழுது நான் உன்னைக் கொன்றதாகக் கேட்டு உடனே வெட்கமுடையவனாகப் போகிறான். நீ அடிக்கப்பட்டும் இரத்தத்தால் நனைக்கப்பட்டும் யுத்தபூமியில் படுத்திருக்கும்பொழுது பிருதாபுத்திரனான தனஞ்சயன் என் விக்ரமத்தை இன்று நன்றாயறியப்போகிறான். உன்னுடன் நேர்ந்த இந்த யுத்தத்தை நெடுநாளாக விரும்பியிருந்தேன். ஸாத்வத! முன்பு தேவாஸுரயுத்தத்தில் பலியோடு இந்திரனுக்கு யுத்தம் நேர்ந்தது போல மகாகோரமான யுத்தத்தை இப்பொழுது நான் உனக்குக் கொடுக்கப்போகிறேன். பிறகு, உண்மையாக என்னுடைய வீர்யத்தையும் பலத்தையும் ஆண்மையையும் அறிவாய். (முன்பு) ராமருக்குத் தம்பியான லக்ஷ்மணனால் யுத்தத்தில் ராவணகுமாரனான இந்திரஜித்து கொல்லப்பட்டதுபோல நீ என்னால் இப்பொழுது யுத்தத்தில் கொல்லப்பட்டு ஸம்யமனியென்னும் யமபட்டணத்தை அடையப்போகிறாய். மாதவ!

நீ கொல்லப்பட்டால் இப்பொழுது கிருஷ்ணனும் பார்த்தனும் தர்ம ராஜனும் உத்ஸாஹத்தையிழந்து ஸந்தேகமின்றி யுத்தத்தை விட்டுவிடுவார்கள். மாதவ! இப்பொழுது கூர்மையுள்ள அம்புகளால் உனக்கு அழிவைச்செய்து (முன்பு) யுத்தத்தில் உன்னால் கொல்லப்பட்ட வீரர்களுடைய ஸ்திரீகளை ஆனந்தப்படுத்தப்போகிறேன். மாதவ! சிங்கத்துக்கெதிர்ப்பட்ட அற்ப மிருகமானது விடுபடாததுபோல என் கண்ணிற்கெதிர்ப்பட்டவனாகிய நீ விடுபடமாட்டாய்' என்று கூறினன். அரசரே! யுயுதானனோ சிரித்துக்கொண்டு பூரிஸ்ரவஸைப் பார்த்து, 'கௌரவேய! எனக்கு யுத்தத்தில் பயம் இல்லை. வீண்பேச்சினால்மாத்திரம் நான் பயமடைவிக்கத்தக்கவனல்லன். எவன் என்னை நிராயுதனாகச் செய்வானோ அவன் என்னை யுத்தத்தில் கொல்வான். எவன் என்னை யுத்தத்தில் கொல்வானோ அவன் நெடுங்காலம் (பகைவரைக்) கொன்று கொண்டிருப்பான். வீணாகச் சொல்லப்படும் அதிக வார்த்தையினால் யாதுபயன்? செய்கையினால் நடத்திக்காட்டு. சரத்காலமேகத்தின் முழக்கம்போல உனது கர்ஜனையானது பயனற்றதே. வீர! உன் கர்ஜனையைக்கேட்டு எனக்குச் சிரிப்புண்டாகிறது. கௌரவ! உலகத்தில் நெடுநாளாக விரும்பப்பட்ட யுத்தமானது இப்பொழுது உண்டாகட்டும். அப்பா! உன்னோடு யுத்தம்செய்வதில் விருப்பமுள்ளதாகி என் புத்தி விரைவுடனிருக்கிறது. மனிதருள் மிக இழிந்தவனே! இப்பொழுது நான் உன்னைக் கொல்லாமல் திரும்பமாட்டேன்' என்று கூறினன். அவ்வாறு ஒருவரையொருவர் வாக்குக்களாலே மனவருத்தமடையும்படி செய்கின்றவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும (ஒருவரையொருவர்) கொல்ல எண்ணங்கொண்டவர்களாகி மிகுந்த கோபங்கொண்டு யுத்தத்தில் அடித்தார்கள். பெரியவில்லைத் தாங்கினவர்களும் மிக்கபலமுள்ளவர்களும் யுத்தத்தில் ஒருவரையொருவர் மிஞ்சும்விருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் ஒரு பெண்யானையினிமித்தமாக மிக்க கோபங்கொண்ட இரண்டுமதயானைகள் எதிர்த்ததுபோல எதிர்த்தார்கள். பகைவரையடக்குபவர்களான பூரிஸ்ரவனும் ஸாத்யகியும் இரண்டுமேகங்கள்போலப் பரஸ்பரம் கோரமான பாணவர்ஷங்களைப் பொழிந்தார்கள். பரதஸ்ரேஷ்டரே! ஸோமதத்தகுமாரனான பூரிஸ்ரவஸோ விரைவாகச்செல்லுகின்ற அம்புகளாலேசைனேயனைமூடிக் கொல்லவெண்ணிக் கூர்மையுள்ள அம்புகளால் அடித்தான். ஸோமதத்தகுமாரன் பத்துப் பாணங்களால் ஸாத்யகியை அடித்துச் சினிபுங்கவனை அவனைக் கொல்ல எண்ணிப் பின்னும் கூர்மையுள்ள வேறு பாணங்களைப் பிரயோகஞ்செய்தான். பிரஜைகளுக்கு நாதரே! பிரபுவே! ஸாத்

பூரிஸ்ரவஸினுடைய அந்தக் கூர்மையான அம்புகளைத் தன்னை அடைவதற்குள்ளாகவே ஆகாயத்தில் அஸ்திரமாயைகளினாலே பக்ஷித்துவிட்டான். சிறந்த குலத்தில் தோன்றினவர்களும், கௌரவர்களுக்கும் விருஷ்ணிவீரர்களுக்கும் கீர்த்தியையுண்டுபண்ணுகிறவர்களுமான அந்த இருவீரர்களும் தனித்துச் சஸ்திரவர்ஷங்களால் ஒருவர்மீது ஒருவர் பொழிந்துகொண்டார்கள். அவ்விருவரும் புலிகள் நகங்களாலும் பெரியயானைகள் தந்தங்களாலும் கிழித்துக்கொள்வதுபோல ரதசக்திகளாலும் பாணங்களாலும் ஒருவரையொருவர் கிழித்துக்கொண்டார்கள். பிராணனைப் பந்தயம்வைத்து விளையாடுகிறவர்களும், பரஸ்பரம் அங்கங்களைப் பிளக்கின்றவர்களும், ரக்தத்தைப் பெருக்குகின்றவர்களுமான அவ்விருவரும் அசைவற்றிருக்கும்படி செய்துகொண்டார்கள். இவ்வாறு உத்தமமான செய்கையையுடையவர்களும், கௌரவர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் கீர்த்தியை விளைவிக்கின்றவர்களுமான அவ்விருவரும் யூதபதிகளான இரண்டுயானைகள்போல் ஒருவரோடொருவர் யுத்தஞ்செய்தார்கள். பிராம்மணர்களுடைய ஸமூகத்தினால் கொண்டாடப்பட்டவர்களான அவ்விருவர்களும் சீக்ரத்தில் உத்தமமான ஸ்தானத்தையடைய எண்ணங்கொண்டவர்களாக ஒருவரையொருவர் பார்த்துக் கர்ஜித்தார்கள். உம்முடைய குமாரர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஸாத்யகியும் ஸௌமதத்தியும் ஸந்தோஷமுடையவர்கள்போல அம்புமழையினால் பரஸ்பரம் பொழிந்துகொண்டார்கள். ஜனங்கள், யுத்தஞ்செய்கிறவர்களுள் சிரேஷ்டர்களும் போர்புரிகின்றவர்களுமான அவ்விருவரையும் ஒரு பெண்யானைநிமித்தமாக நன்றாக யுத்தஞ்செய்கின்ற யூதபதிகளான இரண்டு யானைகளைப்போலக் கண்டார்கள். அரசரே! கோபமிகுந்தவர்களான அவ்விருவரும் அடிக்கடி அம்புகளால் அடித்துக்கொண்டு காட்டில் இரண்டுசிங்கங்கள் சண்டையிடுவதுபோலப் பெரிதான யுத்தரங்கத்தில் சண்டைசெய்தார்கள். மர்மஸ்தானத்தையறிந்தவர்களும் மிகுந்த கோபத்துடன் வதஞ்செய்யக் கருதியவர்களுமான அவ்விருவரும், பலனும் வஜ்ரதரனான இந்திரனும்போல ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு கர்ஜித்தார்கள். பிறகு, ஒருவரையொருவர் எதிர்த்துவருகின்ற அவ்விருவரும் படிந்தகணுக்களுள்ள அம்புகளாலே அந்யோன்யம் கொடிகளையும் ரதத்திலுள்ள எல்லா உபகரணங்களையும் நன்றாக அறுத்தார்கள். பின்னும் அவ்விருவரும் அம்புமழைகளால் ஒருவரையொருவர் வர்ஷித்துக்கொண்டு விரைவாக ஒருவர் மற்றொருவருடைய ஸாரதிகளைக் கொன்றார்கள்; அந்யோன்யம் குதிரைகளைக்கொன்று விற்களையும் அறுத்து ரதத்தையிழந்தவர்களாகி மகா

யுத்தத்தில் கத்திச்சண்டையின்பொருட்டு எதிர்த்தார்கள். அகன்ற வையும் மங்களகரமானவையும் விசித்ரமாயிருப்பவையுமான காளையின் தோலினால்செய்யப்பட்ட இரண்டு கேடகங்களை எடுத்துக்கொண்டும் உறையினின்று இரண்டு கத்திகளை உருவிக்கொண்டும் யுத்தபூமியில் அவ்விருவரும் ஸஞ்சாரஞ்செய்தார்கள். கத்தியுள்ளவர்களும் சித்ரமான கவசத்தையணிந்தவர்களும் பொன்னாலாகிய தோள்வளைகளைப் பூஷணமாகக் கொண்டவர்களும் சத்ருக்களைத் துகைப்பவர்களுமான அவ்விருவரும் கோபம்கொண்டு பலவிதமான யுத்தகதிகளிலும் தனித்தனியாக மண்டலாகாரகதிகளிலும் திரிபவர்களாகி அடிக்கடி ஒருவரையொருவர் அடித்தார்கள். பகைவர்களை அடக்குகிறவர்களும் தவறும்ஸமயத்தை எதிர்பார்ப்பவர்களும் கீர்த்திமான்களுமான அவ்விருவீரர்களும், [1] ப்ராந்தம், உத்பிராந்தம், ஆவித்தம், ஆப்லுதம், விப்லுதம், ஸ்ருதம், ஸம்பாதம், ஸமுதீர்ணம் என்னும் கத்தி சுழற்றும் வகைகளைக் காண்பித்துக்கொண்டும், கத்திகளால் பரஸ்பரம் வெட்டிக்கொண்டும் ஆச்சரியகரமாக ஸஞ்சாரஞ்செய்தார்கள். யுத்தஞ்செய்கிறவர்களுள் சிறந்தவர்களான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் சிக்ஷையையும் லாகவத்தையும் அவ்வாறே தேர்ச்சியையும் காண்பித்துக்கொண்டு ஒருவரையொருவர் குத்திக்கொண்டார்கள். ராஜேந்திரரே! அவ்வீரர்கள் ஒருமுகூர்த்தகாலம் பரஸ்பரம் அடித்துக்கொண்டு எல்லாஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மறுபடியும் ஆறுதலடைந்தார்கள். அரசரே! புருஷசிரேஷ்டர்களான அவ்விருவரும் விசித்ரமானவைகளும் அநேகம் சந்திரவடிவமான புள்ளிகளுள்ளவையுமான இரண்டு கேடகங்களையும் இரண்டு கத்திகளாலும் அறுத்துவிட்டுக் கைச்சண்டை செய்தார்கள். அகன்ற மார்பையும் நீண்டகைகளையுமுடையவர்களும் மற்போரில் ஸமர்த்தர்களுமான அவ்விருவரும் இரும்புமயமான பரிகாயுதங்கள்போன்ற கைகளினால் ஒருவரையொருவர் கட்டினார்கள். வேந்தரே! பயிற்சியினாலும் பலத்தினாலும் உண்டான அவ்விருவருடைய தோள்தட்டலும், கைபிடித்தலும், கழுத்தில் கைகொடுத்துத்தள்ளலும்,எல்லாயுத்தவீரர்களையும் ஸந்தோஷமடையும்படிசெய்தன. அரசரே! நரசிரேஷ்டர்களான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் போர்புரியுங்காலத்தில் வஜ்ராயுதமும் மலையும் மோதிக்கொண்டதுபோலப் பெரிதும் பயங்கரமுமானசப்தம் உண்டாயிற்று. மகாத்மாக்களும், கௌரவர்களுள்ளும் ஸாத்வதர்களுள்ளும் சிறந்த

[1] பீஷ்மபர்வம், 207 - வது பக்கம், குறிப்பிற்காண்க

வர்களுமான அவ்விருவரும் தந்தமுனைகளாலே இரண்டு யானைகள் சண்டையிடுவதுபோலவும் கொம்புகளால் இரண்டு காளைகள் சண்டை செய்வதுபோலவும் பூட்டாங்கயிறுபோலக் கைகளால் கட்டுவதாலும், தலைகளால்மோதுவதாலும், காலையிழுப்பதாலும், காலோடுகால் சேர்ப்பதாலும், வலிய அடிகளாலும், பரஸ்பரம் கிள்ளிக்கொள்ளுதலாலும், ஒருவரையொருவர் கட்டுதல்களாலும், கால்களால் வயிற்றை இறுகக் கட்டுதலாலும் அவ்வாறே பூமியின்மேலாகச் சுழலுதலாலும் போக்கு வரவுகளாலும் தோள்தட்டிக்கொள்ளுதலாலும் கீழே தள்ளுதலாலும் மேலே எழுந்திருத்தலாலும் [1] துள்ளல்களாலும் யுத்தஞ்செய்தார்கள். பாரதரே! அந்த யுத்தபூமியில் போர்புரிகின்றவர்களும் மகா பலசாலிகளுமான அவ்விருவரும் முப்பத்திரண்டுவிதமான செய்கைகளுள்ள யுத்தங்களைக் காண்பித்தார்கள். யுத்தஞ்செய்கின்ற ஸாத்வதன் ஆயுதங்களையிழந்திருக்குந்தருணத்தில் அப்பொழுது வாஸுதேவர் அர்ஜுனனைப்பார்த்து, 'எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவனும் ரதத்தையிழந்தவனும் யுத்தஞ்செய்கின்றவனுமான இந்த ஸாத்வதனைப் பார்' என்று சொல்லிக் கிருஷ்ணர் மறுபடியும் ஸிந்துராஜனுடைய வதத்தில் ஆவல்கொண்டவனை பார்த்தனைநோக்கி, 'அர்ஜுன! ஸாத்யகி களைத்துப்போனதைப்பார். இவனை நீ காப்பாற்றவேண்டும். பாண்டவ! இவன் பாரதசேனையை உடைத்துக்கொண்டு உன் பின்புறத்திலே நுழைந்துவிட்டான்: பாரத! மிக்க வீர்யமுடையவர்களான எல்லாப் பாரதர்களாலும் போர்புரியும்படி செய்யப்பட்டான். கௌரவசேனையில் முக்கியர்களும் தலைமையானவர்களுமான மகாரதர்கள நூறு நூறுகவும் ஆயிரமாயிரமாகவும் (இந்த) விருஷ்ணிவீரனால் கொல்லப்பட்டார்கள். அர்ஜுன! யுத்தஞ்செய்கிறவர்களுள் சிறந்தவனும் களைப்படைந்தவனும் இங்கு வருகின்றவனுமான இந்த ஸாத்யகியை மிக்க தக்ஷிணை கொடுப்பவனான பூரிஸ்ரவஸ் யுத்தத்தில் விருப்பமுள்ளவனாக எதிர்த்தான். இது ஸமமானதன்று' என்றார். மன்னரே! பிறகு யுத்தத்திலடங்காதமதங்கொண்ட பூரிஸ்ரவஸ் கோபங்கொண்டு மதங்கொண்ட யானை மதங்கொண்டயானையைத் தூக்கியடிப்பதுபோல் ஸாத்யகியைத் தூக்கிக்கீழேயடித்தான். அரசரே! பரதஸ்ரேஷ்டரே! பிறகு, யுத்தத்தில் கோபங்கொண்டவர்களும் வீரர்களுள் தலைவர்களும் ரதத்தில் வீற்றிருப்பவர்களுமான கேசவரும் அர்ஜுனனும் யுத்தகளத்தில் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே மிக்க புஜபலமுள்ளவனான பூரிஸ்ரவஸ் ஸாத்

---

[1] 'ஓயாத இரைச்சல்களாலும்' என்பது பழைய உரை.

யஷியைத் தூக்கிப் பூமியிலடித்தமையால் பக்கத்திலுள்ள ஸைனிகர்களுக்கும் மேகத்தின் இடிமுழக்கம்போன்ற பெரிதான ஆரவாரம் உண்டாயிற்று. பிறகு, புஜபலமிக்க ஸ்ரீ கிருஷ்ணர் அர்ஜுனனைப்பார்த்து, 'விருஷ்ணிகளுள்ளும் அந்தகர்களுள்ளும் சிறந்தவனான ஸாத்யகி செய்ய முடியாத காரியத்தைச் செய்துமிருந்த களைப்புற்று ஸௌமதத்திக்கு வசப்பட்டுப் பூமியிலிருப்பதைப் பார். அர்ஜுன! உனது சிஷ்யனும் வீரனுமான ஸாத்யகியைக் காப்பாற்று. அர்ஜுன! உத்தமனான இந்த ஸாத்யகி உன்னிமித்தமாக யஜ்ஞசீலனான பூரிஸ்ரவஸின் வசத்தை அடையவேண்டாம். பிரபுவே! புருஷசிரேஷ்ட! விரைவாக அவனைக் காப்பாற்றவேண்டும்' என்று சொன்னார். கௌரவர்களுள் சிறந்தவனான பூரிஸ்ரவஸ், யானையைச் சிங்கமானது இழுப்பதுபோல ரணகளத்தில் ஸாத்வதசிரேஷ்டனான ஸாத்யகியை இழுத்துக்கொண்டு மிகவும் பிரகாசித்தான். பிறகு, தனஞ்சயன் தைரியமுற்ற மனத்துடன் வாஸுதேவரைப்பார்த்து, 'காட்டில் மதங்கொண்ட பெரியயானையோடு விளையாடுகின்ற யூதபதியான ஸிம்மம்போல் விருஷ்ணிவீரனோடு விளையாடுகின்ற குருசிரேஷ்டனைப் பாரும். மிக்க புஜபலமுள்ளவரே! ஜனார்த்தனரே! மகாரதர்கள் சக்திக்குத்தகுந்தபடி முயற்சிசெய்பவர்களும் என்னை (எதிர்த்துப்) போர்புரிகின்றவர்களுமாக நான்குபுறங்களிலும் செல்லுகிறார்கள். யான், அனர்த்தத்தைத் தேடுவதில் முயற்சியுள்ளவர்களான இவர்களோடு நிச்சயமாகப் போர்புரிகிறேன். ஸௌமதத்தியின் வசத்தையடைந்துள்ள ஸாத்யகியையும் நான் ரக்ஷிக்கிறேன். கிருஷ்ணரே! இந்த யுத்தகளத்தில் பூரிஸ்ரவஸ் என்னால் எதிர்க்கப்படவில்லை. வேறொருவனோடு எதிர்த்துப் போர்புரிந்துக்கொண்டிருக்கிற இந்தப் பூரிஸ்ரவஸைக் கொல்ல என்மனம் துணியவில்லை. பிரபுவே! என்னிமித்தமாகச் சண்டைசெய்கின்ற விருஷ்ணிவீரனுடைய ரக்ஷணத்தைப் பிராணனைவிட்டாவது நான் அவசியம் செய்யவேண்டும். மாதவரே! எனக்கு அதர்மம்தான் உண்டாகட்டும்; அல்லது, தர்மம்தான் உண்டாகட்டும். மகாரதனான ஸாத்யகி சத்துருவினால் அடிக்கப்பட்டுப் பிராணனைவிடாமல் இருக்கவேண்டும்' என்று கூறினான். அர்ஜுனன் இவ்வாறு கிருஷ்ணரைநோக்கிச் சொல்லிவிட்டுக் கோபங்கொண்டவனாகிப் பகைவர்களைக் கூர்மையான அம்புகளாலே விரைவாக மூடினான். பகைவர்களும் தனஞ்சயனை மூடினார்கள். புருஷசிரேஷ்டனும் வீரனுமான அர்ஜுனன் யுத்தஞ்செய்துகொண்டு அடிக்கடி ஸாத்யகியையும் பூரிஸ்ரவஸையும் பார்த்தான். யுத்தகளத்தில் அந்த ஸாத்யகி அவ்வாறு இழுக்கப்படுவதைக்கண்டு ஸ்ரீ வாஸுதேவர் அப்பொழுது

மறுபடியும் அர்ஜுனனைநோக்கி, 'மகா பாகுபலமுள்ளவனே! உனக்குச் சிஷ்யனும் வில்வித்தையில் உன்னைக்காட்டிலும் குறைவற்றவனும் விருஷ்ணிகளுள்ளும் அந்தகர்களுள்ளும் சிறந்தவனுமான ஸாத்யகி ஸௌமதத்தியினுடைய வசத்தையடைந்திருப்பதைப் பார். பார்த்த! யுத்தரங்கத்தில் பூரிஸ்ரவஸ் விருஷ்ணிகுலத்தில் தோன்றியவனும் ஸத்யவிக்ரமனுமான ஸாத்யகியை மீறுவதால் பலமானது நிலையற்றது. இந்த ஸாத்யகி பராக்ரமசாலிகளும் யுத்தம்செய்ய எண்ணங்கொண்டவர்களுமான அனேக மகாரதர்களோடு போர்புரிந்து ஆயுதங்களையும் மற்ற உபகரணங்களையுமிழந்துவிட்டு மிகவும் களைப்படைந்துவிட்டான்' என்று கூறினர். மகாராஜரே! வாஸுதேவர் இவ்வாறு சொல்லியதைக் கேட்ட பாண்டவன், 'யுத்தத்தில் கௌரவர்களுக்கு ஆனந்தத்தை விருத்திபண்ணுகிறவனான இந்தப் பூரிஸ்ரவஸ் யுத்தத்தில் விளையாடுகிறவன் போல ஸாத்வதர்களுள் ஸ்ரேஷ்டனான ஸாத்யகியை இழுப்பவனாகி என்னையும் ஸந்தோஷிக்கச்செய்கிறான்' என்று மனத்தினால் பூரிஸ்ரவஸைக் கொண்டாடினன். வனத்தில் பெரிய யானையை அதிகமாக இழுத்து அடிக்கின்ற ஸிம்மம்போல் விருஷ்ணிவீரர்களுள் மிகச் சிறந்தவனான ஸாத்யகியை இவன் அடிக்கிறான். அரசரே! இவ்வாறு வீரனான பார்த்தன் கௌரவனை மனத்தில்புகழ்ந்து பகைவர்களோடு யுத்தம் செய்தான்; அந்தப் பூரிஸ்ரவஸையும் அடிக்கடி பார்த்தான். பிறகு, பூரிஸ்ரவஸ் கூர்மையுள்ள கத்தியை உறையிலிருந்து வெளியே உருவி (ஸாத்யகியை) குடுமியில் பிடித்துக் காலால் மார்பிலும் உதைத்தான். பிறகு, சிறந்த கைகளுள்ள பூரிஸ்ரவஸ் ஸாத்யகியை மிதித்துக்கொண்டு கத்தியுடன்கூடின கையை உயரத் தூக்கினன். அவ்வாறு தூக்கப்பட்டதும் பொன்னணிகளோடு கூடியதுமான பூரிஸ்ரவஸினுடைய கையானது தேர்க்கூட்டத்திடையில் தூக்கிநிறுத்தப்பட்ட இந்திரத்வஜம் போல் விளங்கியது. பாண்டவர்களுடைய பெரிதான சேனைமுழுதும் ஆ! ஆ! என்னும் ஒலியுள்ளதாயிற்று. உம்மைச்சேர்ந்தவர்கள் ஸந்தோஷத்துடன் ஸிம்மநாதஞ்செய்தார்கள். யுத்தத்தில் பயமுள்ள ஜனங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். பராக்ரமத்தையிழந்த ஸாத்யகி அவ்வாறு பூரிஸ்ரவஸினால் கவரப்பட்டபொழுது, மகா பாகுபலமுள்ளவனான அர்ஜுனன் ஸ்ரீ வாஸுதேவரைப்பார்த்து, 'கிருஷ்ண! ஸைந்தவனிடத்தில் கண்களை வைத்திருத்தலால் யான் ஸாத்யகியைக் காக்கவில்லை. இதோ அவன்நிமித்தமாகப் பிறர் செய்யமுடியாத காரியத்தை நான் செய்கிறேன். கிருஷ்ண! எனது சிஷ்யன் எனது நிமித்தமாக எனது சத்துருக்களோடு போர்புரிகிறான். அந்தச் சூரனைக் காட்டுத்

தீயினிடமிருந்து சிங்கக்குட்டியை வெளிப்படுத்துவதுபோல (சத்துரு வினிடமிருந்து) விடுவிக்கப்போகிறேன்' என்று கூறினன். பாண்டவன் இவ்வாறு சொல்லிவிட்டுப் பிறகு, ஸ்ரீ வாஸுதேவருடைய கட்டளையைச் செய்யப்போகிறவனுகிக் காண்டீவத்தில் கூர்மையுள்ள க்ஷுரப்ரத்தைப் பூட்டினன். பார்த்தனுடைய கையினல்விடப்பட்டுள்ளதும் ஆகாயத்தினின்று நழுவிவிழுகின்ற பெரிய உற்கைபோன்றதுமான அந்த க்ஷுரப்ரமானது யஜ்ஞசீலனன பூரிஸ்ரவஸின் கத்தியுடன் கூடிய வலக்கையை அறுத்தது.

---

## நூற்றுநாற்பத்துமூன்றுவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(பூரிஸ்ரவஸ் அர்ஜுனனை நிந்தித்துக்கொண்டு பிராயோபவேசஞ்செய்ததும் ஸாத்யகி பூரிஸ்ரவஸின் தலையை அறுத்ததும்.)

உத்தமமானதும் கத்தியுடன்கூடினதும் மங்களகரமான தோள்வளையுள்ளதுமான அந்தக் கையானது பிராணிக் கூட்டத்துக்குத் துக்கத்தையும் ஆச்சரியத்தையும் உண்டுபண்ணிக்கொண்டு உத்ஸவ முடிந்து யந்திரத்தினல் தள்ளப்பட்ட இந்திரத்வஜம்போலப் பூமியில் விழுந்தது. அடிக்கப்போன (பூரிஸ்ரவஸினுடைய) கையானது (அவனல்) காணப்படாத கிரீடியினலேயறுக்கப்பட்டு ஐந்துதலைநாகம்போல் வேகத்தோடு பூமியில் விழுந்தது. கௌரவனன பூரிஸ்ரவஸ் பார்த்தனலே தான் பயனற்றவனக்கப்பட்டதையறிந்து ஸாத்யகியை விட்டுவிட்டுக் கோபத்தினல் பாண்டவனை நிந்திக்கத்தொடங்கினன். மகாராஜரே! கையையிழந்த அந்தப் பூரிஸ்ரவஸ், ஒரு சிறகுள்ள பக்ஷிபோலவும் ஒருசக்கரமுள்ள ரதம்போலவும் யுத்தபூமியில் நின்றுகொண்டு எல்லா க்ஷத்திரியர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பாண்டவனைப்பார்த்துப் பின்வருமாறு சொல்லலானன். 'கௌந்தேய! ஆ! ஆ! உன்னைப்பாராமலும், (மற்றொருவனேடு) போர்புரிந்துகொண்டும் இருக்கிற எனது கையை நீ அறுத்தமையால் குரூரமான இந்தக் காயரித்தைச் செய்தவனுகிருய். பார்த்த! மனிதன் யார்யாரிடத்தில் பற்றுடன் பழகுகிருனே அவரவர்களுடைய தன்மையை விரைவாக அடைகிருன். அவ்விஷயமானது உன்னிடத்தில் காணப்படுகிறது. அரசனும் தர்மநந்தனனுமான யுதிஷ்டிரனைநோக்கி நீ யுத்தகளத்தில் எந்தக்காரியத்தைச் செய்துகொண்டிருந்த பூரிஸ்ரவஸ், 'என்னல் கொல்

லப்பட்டான்' என்று சொல்லுவாய்? பார்த்த! உனக்கு இந்த அஸ்திர மானது, மகாத்மாவான ஸாக்ஷாத் இந்திரனாலேயா, ருத்திரராலேயா, துரோணராலேயா, கிருபராலேயா, யாரால் உபதேசிக்கப்பட்டது? அர்ஜுன! நீ அஸ்திரமுறைகளையறிந்தவன்; உலகத்தில் மற்றவர்களைக் காட்டிலும் மேலானவன். அப்படிப்பட்ட நீ யுத்தரங்கத்தில் (உன்னோடு) யுத்தஞ்செய்யாதவனான என்னை எவ்வாறு அடித்தாய்? கற்றறிந்தவர்கள் மயங்கினவனையும் பயந்தவனையும் ரதத்தையிழந்தவனையும் கெஞ்சுகின்றவனையும் வியஸனத்தில் இருக்கின்றவனையும் அடிக்கமாட்டார்கள். பார்த்த! இழிவானவர்களால் செய்யப்படுவதும் கெட்ட மனிதர்களால் அநுஷ்டிக்கப்படுவதும் (நல்லோர்கள்) செய்யச் சிறிதும் துணியாததுமான இப்படிப்பட்ட பாபச்செயலானது ஏன் உன்னால் செய்யப்பட்டது? தனஞ்சய! உத்தம புருஷனாலே சிறந்தகாரியமே செய்யத்தக்கதென்று (பெரியோர்கள்) சொல்லுகிறார்கள். சிறந்தவன் புவியில் இழிந்த செய்கையை எப்போதும் செய்யலாகாது. நன்னடையுள்ளவனும் விரதங்களை அநுஷ்டித்தவனும் ராஜவம்சத்தில் அவதரித்தவனும் (அதிலும்) விசேஷமான குருவம்சத்தில் தோன்றியவனுமான நீ க்ஷத்ரியதர்மத்தினின்று எவ்வாறு விலகினாய்? அப்பா! இவ்விஷயத்தில் உன்மீது குற்றம் சிறிதே. உன்னை நான் நிந்திக்கவில்லை. அபசதனை ஸாத்யகியைப்பற்றி இந்த அற்பகாரியத்தை நீ செய்தாய். விருஷ்ணிவீரன் நிமித்தமாக நீ செய்த இந்த மிகவும் அற்பமான காரியம் நிச்சயமாக வாஸுதேவனுடைய யோசனையே. (இல்லாவிடில்) இது உன்னிடத்தில் நேரக்கூடியதில்லை. கிருஷ்ணனுக்கு நண்பனல்லாத எந்த மனிதன்தான், வேறொருவனோடு சண்டைசெய்துகொண்டு (மற்ற விஷயத்தில்) அஜாக்கிரதையாயிருக்கிற ஒரு மனிதனுக்கு இத்தகைய துன்பத்தைக் கொடுப்பான்? பார்த்த! [1]விராத்யர்களும் மிகவும் இகழத்தக்க செய்கையையுடையவர்களும் இயற்கையாகவே நிந்திக்கப்பட்டவர்களுமான விருஷ்ணிகளும் அந்தகர்களும் உன்னால் எவ்வாறு நிர்ணயம் சொல்லுகிறவர்களாகச் செய்யப்பட்டார்கள்?' என்று கூறினான்.

(பூரிஶ்ரவஸ்) போர்க்களத்தில் இவ்வாறு சொல்ல, பார்த்தன் அவனைநோக்கி, 'பூரிஶ்ரவஸே! முதுமையடைந்த மனிதன் தன்புத்தியையும் முதுமையடையச் செய்துகொள்ளுகிறான்; இது வெளிப்படை. பிரபுவே! நீ சொல்லிய இந்தவார்த்தையெல்லாம் பயனற்றவை. யுத்தங்களுடைய முறையையறிந்தவனும், எல்லாச் சாஸ்திரார்த்தங்க

---

[1] உபநயனமுதலிய ஸம்ஸ்காரமில்லாதவர்கள்.

ளுடைய அக்கரையையுங் கண்டவனுமான நீ தெரிந்தவனாகவே யிருந்தும், ஹ்ருஷீகேசரையும் பாண்டு புத்ரனான என்னையும் நிந்திக்கிறாய். நான் அதர்மத்தைச் செய்யேன். தெரிந்திருந்தும் ஏன் நீ புத்திமயக்கங்கொள்ளுகிறாய்? க்ஷத்திரியகுலத்திற்பிறந்த் மனிதர்கள் தங்களுடைய கைவன்மையை ஆஶ்ரயித்துத் தங்கள் தங்களுடைய பிராதாக்களாலும், பிதாக்களாலும், புத்திரர்களாலும், அவ்வாறே ஸம்பந்திகளாலும், பந்துக்களாலும், தோழர்களாலும், மித்திரர்களாலும் சூழப்பட்டவர்களாகிப் பகைவர்களோடு சண்டைசெய்கிறார்கள். அரசனே! (எதற்காகவும்) விடக்கூடாததான பிராணனை எங்களுக்காக விடத்துணிந்த யுத்தஞ்செய்கிறவனும் சிஷ்யனும் அநுகூலனான ஸம்பந்தியும் யுத்தத்தில் எனக்கு வலக்கைபோன்றவனும் போரிலடங்காமதங்கொண்டவனும் உன்னால் இழுக்கப்படுகின்றவனும் செய்கையற்றிருக்கின்றவனுமான ஸாத்யகியை நான் எப்படிபார்த்துக்கொண்டிருப்பேன்? யுத்தபூமியை அடைந்திருக்கின்ற நான் தனிமையாயிருக்கின்ற உன்னைக் காக்கவேண்டியதில்லை. அரசனே! எவன் எவனுடைய பிரயோஜனத்தைக்கருதி யுத்தஞ்செய்கிறானோ அவனை அவன் நன்கு காக்கவேண்டும். அவ்வாறு காக்கப்பட்ட வீரர்களும் மகாயுத்தத்தில், அப்படிக்காத்த அரசனைக் காப்பாற்றவேண்டும். நான் யுத்தகளத்தில் ஸாத்யகியைப்பார்த்துச் சும்மாவிருப்பேனாகில் அவனை விட்டுப்பிரிதலையும் அதனால் உண்டாகத்தக்க நரகத்தையும் அடைவேன். அவன் என்னால் காக்கப்படத்தக்கவனாயிருத்தலால், நான் அவனைக் காப்பதற்காகவே அடைந்தேன், நண்பனைக் காத்தலால் என்னைச் சார்ந்த வகுப்பினர்களிடமிருந்து கீர்த்தியும் பலனாக அடையப்பட்டது. அரசே! கிருஷ்ணனோடு சேர்ந்திருக்கின்ற என்னைக்குறித்து நிந்திக்கிறாயே; அந்தக் கிருஷ்ணனோடு எவன்தான் சேர்க்கையை விரும்பமாட்டான்? அவ்விஷயத்தில் உனக்குப் புத்திமயக்கமுண்டாயிருக்கிறது. குதிரைகளாலும் காலாட்களாலும் நெருங்கியதும், தேர்ப்படைகளும் யானைப்படைகளுமுள்ளதும், ஸிம்மநாதத்தினால் அதிகமான சப்தத்துடன்கூடியதும், ஆழ்ந்திருக்கின்றதுமான இந்த ஸேனாஸமுத்திரத்தில் கவசம்பூண்டவனும், தேரின்மீதேறியிருக்கின்றவனும், எல்லா ஆயுதங்களையும் உடையவனும், எதிர்த்துப் போர்செய்யும்வீரனை எதிர்பார்த்திருக்கின்றவனும், தன்னைச்சேர்ந்த வீரர்களோடு கூடியவனும், அவ்வாறே ரணகளத்தில் பராக்ரமமிக்கவனுமான உனக்கு ஸாத்யகியோடு சண்டையிடுவது எவ்வாறு தகுந்ததாகும்? மகாரதனான ஸாத்யகி அனேக வீரர்களோடு யுத்தஞ்செய்து மகாரதர்களைத் தோல்வி

யடையும்படிசெய்து களைப்புற்ற குதிரைகளுள்ளவனும் எல்லா ஆயுதங்களுங் குறைந்துபோனவனும் களைப்படைந்தவனுமாகி யுத்தத்தில் உன்னுடன் எதிர்த்து ஜயிக்கப்பட்டான். மகாரதனான இப்படிப்பட்ட ஸாத்யகியை யுத்தத்தில்வென்று உன் வீரியத்துக்கு (அவன்) வசப்பட்டு விட்டதாகவும் (நீ அவனிலும்) மேற்பட்டிருப்பதாகவும் நினைக்கிறாய். கத்தியினால் யுத்தத்தில் அவனுடையதலையை அறுப்பதற்காக நீ இச்சித்தாய் அவ்வாறு கஷ்டத்தையடைந்திருக்கின்ற ஸாத்யகியைப் பார்த்து எவன் ஸகிப்பான்? அரசனே! யுத்தத்தில் கத்தியினால் அவனுடையதலையை வெட்ட ஆரம்பித்தாயே; அவ்வாறு கஷ்டநிலைமையை யடைந்திருக்கின்ற ஸாத்யகியைப்பார்த்து எவன் பொறுப்பான்? ஒருவனுக்கு ஒருவனோடு யுத்தம் எவ்வாறு ஸம்பவிக்கும்? உன் தர்மத்தைக் காப்பாற்றாமையால் உன்னையே நிந்தித்துக்கொள். வீர! உன்னை அண்டியிருக்கிறஜனங்களை நீ எவ்வாறு ரக்ஷிக்கப்போகிறாய்? கையில் கத்தியைஎடுத்து யுத்தத்தில் விருஷ்ணிபுத்திரனைக்கொல்ல எண்ணங்கொண்டவனான உன்னுடையகையை யான் அறுத்தேனென்பது உலகத்தாரால் நிந்திக்கத்தக்கதன்று. அப்பா! ஆயுதத்தை இழந்தவனும் கவசமுடைந்தவனும் மனத்தளர்ச்சியுற்றவனுமான அபிமன்யுவினுடையவதத்தை எந்தத்தார்மிகன்தான் கொண்டாடுவான்?' என்று மறுமொழியுரைத்தான்.

அர்ஜுனன் இவ்வாறு சொல்லியதைக்கேட்டு, நீண்ட கைகளுள்ளவனும், யூபத்தைக் கொடியாகவுடையவனும், மிக்க புகழுள்ளவனுமான பூரிஸ்ரவஸ், யுயுதானனைவிட்டுவிட்டு யுத்தத்தில் பிராயோபவேசஞ்செய்யலானான். புண்யமான லக்ஷணங்களையுடைய பூரிஸ்ரவஸ் இடக்கையினாலே அம்புகளைப் பரப்பிப் பிரம்மலோகத்தையடைய எண்ணங்கொண்டு பிராணன்களை வாயுக்களில் ஒடுக்கிச் சூரியனிடத்தில் கண்ணைச் செலுத்திப் பிரஸன்னமானமனத்தை ஜலத்தில்சேர்த்து மகோபநிஷத்தைத் தியானஞ்செய்துகொண்டு யோகாப்பியாஸத்துடன் பிரம்மத்தை மனனம்செய்யலானான். பிறகு, உம்முடைய எல்லாச்சேனைகளிலுமுள்ள ஜனங்களும், இந்தக் கிருஷ்ணனையும் அர்ஜுனனையும் நிந்தித்தார்கள்; பூரிஸ்ரவஸைப் புகழ்ந்தார்கள். அவ்வாறு நிந்திக்கப்படுகின்ற கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஒருவிதமான அப்ரியவசனத்தையும் சொல்லவில்லை. புகழப்படுகின்ற யூபக்கொடியுள்ளவனான பூரிஸ்ரவஸும் ஸந்தோஷமடையவில்லை. அரசரே! பாரதரே! பாண்டுகுமாரனும் தனஞ்சயனுமான அர்ஜுனன் அவ்வாறுசொல்லுகின்ற உம்முடைய அந்தப் புத்ரர்களைப்பார்த்து அவர்களும் பூரிஸ்ரவஸும்

சொன்னவார்த்தையை மனத்தில் பொறுமல் உள்ளத்தில் கோபமின்றி (அவர்களைத் தாங்கள்சொன்ன) வார்த்தைகளை நினைக்கச்செய்து (அவற்றை) மறுத்துக்கூறலானன். 'என்னுடைய பாணங்கள் செல்லும் தூரத்துக்குள்ளிருக்கிற என்னைச்சேர்ந்த ஒரு வீரனைப் பகைவர் கொல்வது முடியாது' என்கிற என்னுடைய மகாவிரதத்தை எல்லா அரசர்களும் அறிவார்கள். இந்த யூபக்கொடியோனைப்பார்த்து என்னை நீங்கள் நிந்திக்கலாகாது. தர்மத்தையறியாமல் பிறரை நிந்திப்பது நியாயமன்று. ஆயுதங்களையிழந்தவனும், ரதத்தையிழந்தவனும், கவசத்தையிழந்தவனும், பாலனுமான அபிமன்யுவினுடையவதத்தை நீங்கள் அப்பொழுது ஏன் நிந்திக்கவில்லை? அற்பனும் சாஸ்திரப்பிரமாணத்தில் கட்டுப்படாதவனுமான துரியோதனனுக்கு எல்லாவிதத்தாலும் உபகாரத்தைச்செய்கின்ற ஸோமதத்தகுமாரனை பூரிஸ்ரவஸுக்கு இது நியாயமே. என் முன்னிலையில் அடிக்கப்படுகின்ற எங்களைச்சேர்ந்த வீரர்களுக்குப் பிராணஹிம்ஸை நேரிடுங்காலத்தில் நான் காப்பாற்றவேண்டுமென்பது என்னுடைய எண்ணம். மகாபலசாலியான கௌரவனாலே ஸாத்யகி வசப்படுத்தப்பட்டான்; ஆதலால், பிரதிஜ்ஞையைக் காப்பதற்காக இவ்வாறான காரியத்தை நான் செய்தேன்' என்றான். பின்னும் இரக்கத்தையடைந்த அர்ஜுனன் சோகத்தினால் பீடிக்கப்பட்டவனாகி அதை அதைப் பலவாறு சிந்தித்துக்கொண்டு அந்தப் பூரிஸ்ரவஸைப்பார்த்து, 'குருநந்தன! எதனால் புருஷசிரேஷ்டனும், சரண்யனும், (அடுத்தவர்களுக்கு) அபயங்கொடுப்பவனுமான நீ இவ்வித நிலைமையை அடைந்தாயோ, அந்த க்ஷத்திரியதர்மத்தை இகழவேண்டும். சாஸ்திரத்துக்குச் சிறிதும் ச்ரமமில்லை. அதனால், புருஷசிரேஷ்டனை நீயன்றோ இந்தக் கெட்ட நிலைமையை அடைந்தாய்? கௌரவர்களில் சிறந்தவனே! ராஜசிரேஷ்டனே! நீ இந்தக் கஷ்டநிலைமையை அடைந்ததனால் உன்னுடைய ஸுகிருதத்திற்கும் பயனில்லாமற்போயிற்று. புருஷசிரேஷ்டனாகிய நீ எவன் நிமித்தமாக இந்தக் கெட்டநிலைமையை அடைந்தாயோ அந்தத் துரியோதனன் பயங்கரமான ரௌரவநரகத்தை அடையப்போகிறான். புருஷோத்தம! இப்பொழுது எங்களுடைய பிரதிஜ்ஞை இல்லாவிடில் உலகத்தில் என்னைப்போன்ற எந்த வீரன்தான் உன்னைப்போன்றவனை அடிப்பான்' என்று கூறினான்.

பார்த்தன் இவ்வாறு சொல்லக்கேட்ட அந்தப் பூரிஸ்ரவஸ் தலையினால் பூமியைத்தொட்டான். இடக்கையினால் வலக்கையை அர்ஜுனனெதிரி லெறிந்தான். மகாராஜரே! மகாதேஜஸ்வியான யூபகேதுவென்

னும் பூரிஶ்ரவஸ் பார்த்தனுடைய இந்தவார்த்தையைக்கேட்டு, பிறகு, தலைகுனிந்து பேசாமலிருந்தான். அர்ஜுனன்,'சலனுக்கு மூத்தோனே! தர்மராஜரிடத்திலும், பலவான்களுள் சிரேஷ்டனான பீமனிடத்திலும், நகுலனிடத்திலும், ஸகதேவனிடத்திலும் உள்ளதுபோன்ற பிரீதியானது* எனக்கு உன்னிடத்திலும் உண்டு. என்றாலும் மகாத்மாவான ஸ்ரீவாசுதேவராலும் அனுமதிகொடுக்கப்பட்டவனாகி நீ உசீனர தேசாதிபதியான சிபிசக்ரவர்த்திபோலப் புண்ணியம் செய்தவர்களுக்குரிய உலகங்களை அடைவாயாக' என்று சொன்னான். வாஸுதேவர், 'எப்பொழுதும் அக்னிஹோத்ரங்களாலே தேவர்களைப் பூஜித்தவனே! பிரம்மாதிகளான தேவசிரேஷ்டர்களாலே விரும்பப்படுகின்றவைகளும், பரிசுத்தமானவைகளும், எப்பொழுதும் (தேஜஸினாலே) ஜ்வலிக்கின்றவைகளுமான என்னுடைய உத்தமலோகங்களைக் கருடாரூடனாகி எனக்குச் சமானனாக அடைவாயாக' என்று சொன்னார். கருணையே விட்ட தனஞ்சயன் இவ்வாறு சொல்லும்பொழுது உம்முடைய ஸைனிகர்களெல்லோரும் தலைகுனிந்தவர்களானார்கள். ஸௌமதத்தியினால் நிராகரிக்கப்பட்ட அந்த ஸாத்யகி அவனால் விடப்பட்டு ஒரு முகூர்த்த காலம் இளைப்பாறிக் கோபத்துக்கு வசப்பட்டவனாகிக் கத்தியை எடுத்து மகாத்மாவான அந்தப் பூரிஶ்ரவஸின்தலையை அறுக்க எண்ணங்கொண்டு எழுந்திருந்தான். மிகுந்த மனவருத்தமடைந்த ஸாத்யகி பாண்டுபுத்திரனாலே அடிக்கப்பட்டவனும், வேறுவிஷயத்தில் பற்றுதலுள்ளவனும், பாபமில்லாதவனும், சலனுக்கு மூத்தவனும், கை அறுக்கப்பட்டவனும், துதிக்கையறுக்கப்பட்ட யானைபோன்றவனுமான பூரிஶ்ரவஸை ஸைனிகர்களெல்லாம் அலறும்பொழுதே கொல்ல விரும்பினான். (அவனுடைய இந்தச் செய்கைக்காக) அவனை எல்லாரும் நிந்தித்தார்கள். ஸாத்யகி கிருஷ்ணனாலும், மகாத்மாவான பார்த்தனாலும், பீமனாலும், சக்ரரக்ஷகர்களாலும், அஶ்வத்தாமாவினாலும், கிருபாசாரியராலும், கர்ணனாலும், விருஷஸேனனாலும், அவ்வாறே ஸைந்தவனாலும் தடுக்கப்பட்டும் படைவீரர்கள் அலறும்பொழுதே விரதத்தைத் தரித்தவனான அந்தப் பூரிஶ்ரவஸைக் கொன்றான். ரணகளத்தில் பிராயோபவேசஞ்செய்தவனும் பார்த்தனாலே கை அறுக்கப்பட்டவனுமான பூரிஶ்ரவஸினுடையதலையை ஸாத்யகி கத்தியினால் அறுத்தான். அர்ஜுனனால் முன்பு அடிக்கப்பட்ட கௌரவசிரேஷ்டனான பூரிஶ்ரவஸை அடித்ததாகிய அவ்விதச் செய்கையால் அந்த ஸாத்யகியைச் சேனையிலுள்ளவர்கள் புகழவில்லை. ஸித்தர்களும், சாரணர்களும், மனிதர்களும், தேவர்களும், யுத்தத்தில் இந்திரனுக்கொப்பான

வனும் பிராயோபவேசஞ்செய்தவனும் கொல்லப்பட்டவனுமான அந்தப் பூரிஸ்ரவஸைக்கண்டு அவனுடைய செய்கைகளால் ஆச்சரியமடைந்து அவனைக் கொண்டாடினர். உமது ஸைனிகர்கள், 'விருஷ்ணி குலத்தில் பிறந்த ஸாத்யகியினிடத்தில் ஒரு குற்றமுமில்லை. அது அவ்விதமே ஆகவேண்டியது. ஆதலால், உங்களுக்குக் கோபம்வேண்டாம். கோபமே மனிதர்களுக்குப் பெருந்துக்கம். இந்தப் பூரிஸ்ரவஸ், வீரனால் கொல்லப்படத்தக்கவனே.. இவ்விஷயத்தில் விசாரணை செய்யத்தக்கதன்று. பிரம்மதேவராலேயே இவனுக்கு யுத்தத்தில் ஸாத்யகி மிருத்யுவாக ஏற்படுத்தப்பட்டான். எல்லாரும், பிந்தியோ முந்தியோ இறக்கவேவேண்டும். (அப்படியே) இவன் மாண்டான் என்று எண்ணுங்கள். உங்களுக்குப் புத்திக்குறைவு உண்டாகவேண்டாம்' என்று பலவிதமான ஒரு கக்ஷியைச்சார்ந்த வசனங்களை உரைத்தார்கள். மிக்க கைவன்மையுள்ளவனும், யூபத்தைக் கொடியாகக் கொண்டவனும், மகாபுருஷனுமான அந்தப் பூரிஸ்ரவஸ் கொல்லப்பட்டவுடன் க்ஷத்திரியர்கள் கோபமுண்டவர்களாகி, 'இந்த ஸாத்யகியை நிந்திக்கவேண்டும்' என்று கூச்சலிட்டார்கள். மற்றவர்கள், 'இது தகுந்ததன்று. அது அவ்வாறாகத் தக்கதுதான்' என்று சொன்னார்கள். சிலர் மனவெறுப்புற்றார்கள். சிலர் துக்கத்தில் மூழ்கினார்கள். ஸாத்யகி, 'புத்திஹீனர்களே! அதர்மிஷ்டர்களும், தர்மமாகிற அங்கியை மேலேதரித்துக்கொண்டிருக்கிறவர்களுமான நீங்களெல்லோரும், 'கொல்லத்தகாதவன்; கொல்லத்தகாதவன்' என்று தர்மவாதங்களைப் பேசுகிறீர்களே. சஸ்திரங்களையிழந்தவனும் பாலனுமான ஸுபத்ராபுத்ரன் உங்களால் யுத்தத்தில் கொல்லப்பட்டபொழுது உங்களுடைய தர்மம் எங்கே போயிருந்தது? (என்னை) இகழ்ந்துபேசிய ஒருகாலத்தில் நானே இந்தப் பிரதிஜ்ஞையைச் செய்துவிட்டேன். இதனை முழுமனத்துடன் கேட்டால் பின்பு அர்ஜுனனை நிந்திக்கமாட்டீர்கள். ஓ! மனிதர்களே! எல்லாவற்றையும் இப்பொழுது கேளுங்கள், கேட்டுப் பின் நிந்தியுங்கள். யுத்தரங்கத்தில் உயிரோடிருக்கும் என்னைக் கோபத்தால் காலால் தேய்த்துக்கொல்ல முயற்சிசெய்த பகைவன் மகரிஷிவ்ரதத்தையனுஷ்டிக்கின்றவனுயிருந்தாலும் கொல்லப்படத்தக்கவனே. கையோடிருப்பவனும் பிரதிசெய்வதில் முயற்சியுள்ளவனுமான என்னை, நீங்கள் கண்ணுடையவர்களாயிருந்தும் 'இந்த ஸாத்யகி மாண்டான்' என்று, எண்ணினீர்களே. இதுதான் உங்கள் புத்தியினுடைய அற்பத்தனம். குருபுங்கவர்களே! என்னால் இவன் கொல்லப்பட்டது தகுந்ததே. ஆனால், என்னைப்பார்த்துப் பிரதிஜ்ஞையைக் காப்பாற்றுவதில் நோக்கமு

கொண்ட பார்த்தனாலே கத்தியுடன்கூடின பூரிஸ்ரவஸினுடைய கை யானது அறுக்கப்பட்டதனால் நான் வஞ்சிக்கப்பட்டுவிட்டேன். எது நேரக்கூடியதோ அது நேரவே நேரும். தெய்வமானது அதை அவ் விதமே நடத்துகிறது. அப்படிப்பட்ட இந்தப் பூரிஸ்ரவஸ் இந்த யுத்தத்தில் கொல்லப்பட்டான். இவ்விஷயத்தில் அதர்மமானசெய்கை என்ன இருக்கிறது? மேலும், முன்பு வால்மீகியினாலே, 'ஓ! வானா! 'மாதர்கள் கொல்லத்தக்கவர்களல்லர்' என்று சொல்லுகிறாயே; முயற்சி யுள்ளமனிதன் சத்துருக்களுக்கு எப்பொழுதும் துன்பத்தை விளைவிக் கக்கூடிய காரியத்தையே எக்காலத்திலும் செய்யவேண்டுமன்றோ' என்று சொல்லப்பட்ட இந்த ஸ்லோகமானது புவியில் கூறப்பட்டிருக்கிறது. நான் அவ்வாறேசெய்தேன். ஏன் அறியாதவர்கள்போல் நிந்திக்கிறீர்கள்?' என்று சொன்னான். மகாராஜரே! இவ்வாறு ஸாத்யகி சொல்லியதைக் கேட்டவுடன், கௌரவசிரேஷ்டர்களெல்லோரும் ஒன்றும் பேசவில்லை. மனத்தினால் மெச்சினார்கள். மகாயாகங்களில் மந்திரங்களால் பரிசுத்த னானவனும், கீர்த்தியுடையவனும், அனேக ஆயிரக்கணக்காகக் கொடுத் தவனுமான அந்தப் பூரிஸ்ரவஸினுடைய வதத்தை, காட்டில் வஸிக் கும் ரிஷியின்வதம்போல ஒருவனாவது அவ்விடத்தில் கொண்டாட வில்லை. மிகவுங் கறுப்பான கூந்தலையுடையதும், புறாவின்கண்கள்போலச் சிவந்தகண்களுள்ளதுமான வரங்கொடுப்பவனும் சூரனுமான அந்தப் பூரிஸ்ரவஸினுடைய தலையானது ஹவிஸ்வைக்கும் அறைநடுவில் அறுத்துவைக்கப்பட்டிருக்கிற யாகக்குதிரையின் தலைபோல விளங் கியது. (தனது) சக்தியினாலும் சஸ்திரத்தினால் உண்டுபண்ணப்பட்ட (மாணத்தினாலும்) பரிசுத்திபெற்றவனும், வரங்கொடுப்பவனும், வரங் களைப் பெறத்தகுந்தவனுமான அந்தப் பூரிஸ்ரவஸ் உத்தமமான தேகத்தை மகாயுத்தத்தில்விட்டு ஆகாயத்தையும் பூமியையும் (தனது) சிறந்த தர்மத்தினால் வியாபிக்கச்செய்து மேலுலகத்தை அடைந்தான்" என்று கூறினான்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகிக்குப் பூரிஸ்ரவஸினாலே அவமானம் நேர்ந்ததற்குக் காரணமும் யாதவர்களுடைய பெருமையும்.)

திருதராஷ்டிரன், 'துரோணராலும் கர்ணனாலும் விகர்ண னாலும் க்ருதவர்மாவினாலும் ஜயிக்கப்படாதவனும், என்னுடைய சேனை

முழுமையும் ஜயிக்க வல்லமையுள்ளவனும், வீரனும், யுதிஷ்டிரனிடத்தில் பிரதிஜ்ஞைசெய்து கடல்போன்ற கௌரவசேனையை (எளிதில்) தாண்டினவனும், யுத்தங்களில் தடுக்கப்படாதவனுமான ஸாத்யகி பூரிஸ்ரவஸினாலே பலத்தினால் அடக்கப்பட்டு எவ்வாறு பூமியில் தள்ளப்பட்டான்?'' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! மனிதர்களை ரக்ஷிப்பவரே! உமக்குச் சந்தேகம்வந்த விஷயத்தில், முற்காலத்தில் சைனேயன்பிறப்பையும் பூரிஸ்ரவஸின் பிறப்பையும் கேளும். மிக்க தவத்தையுடைய அத்ரிமகரிஷி பிரம்ம தேவருடைய மானஸபுத்திரராக ஜனித்தார். அத்திரியினிடத்திலிருந்து ஸோமனென்னும் புத்திரன் பிறந்தான். ஸோமனுக்குப் புத்திரன் புதன்; புதனுக்கு இளாதேவியினிடத்திலிருந்து மிக்க புஜபலமுள்ளவனான புரூரவஸ் என்னும் புத்திரன் பிறந்தான்; புரூரவஸினுடைய புத்திரன் ஆயு; ஆயுவினுடைய புத்திரன் நகுஷன்; நகுஷனுக்குத் தேவர்களாலும் ரிஷிகளாலும் ஒப்பத்தக்க யயாதிராஜன் பிறந்தான்; யயாதிக்குத் தேவயானியிடத்தில் யதுஎன்னும் மூத்தபுத்திரன் பிறந்தான்; யதுவினுடைய வம்சத்தில் அஜமீடன் தோன்றினான்; அஜமீடனுக்கு மூவுலகங்களாலும் மதிக்கத்தக்க சூரன்என்கிற புத்திரன் உண்டானான்; சூரனுக்கு மனிதர்களுள் சிறந்தவரும் மிக்க கீர்த்தியுடையவரும் சௌரியென்பவருமான வஸுதேவர் பிறந்தார். வில்வித்தையில் குறைவற்றவனான அந்தச்சூரன் யுத்தத்தில் கார்த்தவீர்யார்ஜுனனுக்குச் சமானனாயிருந்தான். அரசரே! அந்தச் சூரனுடைய குலத்திலேயே சூரனுக்குச் சமமானவீர்யமுள்ள சினி பிறந்தான். அரசரே! இந்த ஸமயத்திலேயே மகாத்மாவான தேவகனுடைய புத்திரியான தேவகியினுடையஸ்வயம்வரநிமித்தமாக எல்லா அரசர்களும் ஒன்று கூடியிருக்கும் ஸமயத்தில், சினி எல்லாஅரசர்களையும் ஜயித்து வஸுதேவருக்காகத் தேவகிதேவியை விரைவாக ரதத்தில் ஏற்றிவைத்தான். மன்னரே! ரதத்திலிருப்பவளான அந்தத் தேவகியைப்பார்த்துச் சௌர்யமுடையவனும் புருஷசிரேஷ்டனும் மகாதேஜஸ்வியுமான ஸோமதத்தன் சினியினுடைய (அச்செய்கையைப்) பொறுக்கவில்லை. அரசரே! மகாபலசாலிகளான அவ்விருவருக்கும் விசித்திரமும் ஆச்சரியகரமுமான கைச்சண்டையானது அரைப் பகல்வரையிலும் நடந்தது. சினியானவன் புருஷசிரேஷ்டனை ஸோமதத்தனைப் பலாத்காரமாகப் பூமியில்தள்ளிக் கத்தியை எடுத்துத் தலைமயிரைப் பிடித்து நான்குபக்கங்களிலும் பார்த்துக்கொண்டிருக்கிற ஆயிரக் கணக்கான அரசர்களின்நடுவில் காலால் உதைத்தான். பின்பு,

அந்தச் சினி தனையினாலே, 'நீ பிழைத்துப்போ' என்று சொல்லி விட்டு விட்டான். ஐயா! அந்தச் சினியினாலே அந்த நிலைமையை அடைவிக் கப்பட்ட ஸோமதத்தன், பிறகு, மிக்க பொறுமைகொண்டு மகாதே வரை ஸந்தோஷமடையும்படிசெய்தான். வேண்டுபவர்களுக்கு வேண்டும் வரங்களையளிக்கின்ற பிரபுவான மகாதேவர் ஸோமதத்தன் விஷயத்தில் சந்தோஷமடைந்து, 'என்னவரம்வேண்டும்?' என்று கேட்டார். ராஜா வான ஸோமதத்தனே, 'பகவானே! சினியினுடைய[1] (புத்ரனுடைய) புத் ரனை யுத்தத்தில் தள்ளி ஆயிரக்கணக்கான அரசர்களுடைய மத்தியில் காலால் உதைக்கத்தக்க புத்ரனை நான் விரும்புகிறேன்' என்கிற வார்த்தை வேண்டினான். ஓ! வேந்தரே! ஸோமதத்தனுடைய அவ்வித மான வார்த்தையைக்கேட்டு ருத்ரர், 'அவ்வாறே ஆகுக' என்று சொல் லிவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார். அவன், அந்தவரதானத்தி னாலே மிக்க தக்ஷிணைகொடுப்பவனான புத்திரனைப் பெற்றான். (அந்த) ஸோமதத்த குமாரனான பூரிஸ்ரவஸ் யுத்தத்தில் சினியினுடைய[2] பேர னான இந்த ஸாத்யகியைக் கீழேதள்ளி எல்லா ஸைநிகர்களும் பார்த் துக்கொண்டிருக்கும்பொழுதே காலால் உதைத்தான். அரசரே! நீங் கள் என்னைக் கேட்ட விஷயத்தை நான் உமக்குச் சொன்னேன். ஸாத் வதன் புருஷசிரேஷ்டர்களாலே யுத்தத்தில் ஜயிக்கவேமுடியாதவன். விருஷ்ணிகுலத்தில் தோன்றியவர்களெல்லோரும் யுத்தத்தில் லக்ஷ்யந் தவறாதவர்கள்; பலவாறு சித்ரயுத்தம் செய்கின்றவர்கள்; (யுத்தத்தில்) தேவர்களையும் அஸுரர்களையும் கந்தர்வர்களையும் ஜயிக்கின்றவர்கள்; கர்வமற்றவர்கள்; தம்முடைய வீர்யத்தினாலேயே பகைவர்களைவெல்லுந் திறமையுடையவர்கள்; பிறருக்கு வசப்படாதவர்கள். பிரபுவே! பரத சிரேஷ்டரே! இவ்வுலகில் பலத்தினாலே விருஷ்ணிகளுக்குச் சமமான ஒருவஸ்து சென்றகாலத்திலுமில்லை; வருங்காலத்திலுமில்லை; இக்காலத் திலுமில்லை. விருஷ்ணிவீரர்களெல்லோரும் தம் ஞாதியை அவமதிக் கிறதில்லை. பெரியோர்களுடைய ஆஜ்ஞையில் பற்றுதலுள்ளவர்கள். தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் யுத்தரங்கத்தில் விருஷ்ணிவீரர்களை ஜயிக்கமாட்டார் கள். அப்படியிருக்க, மனிதர்கள் ஜயிக்கச் சக்தியற்றவர்களென்பதில் சந்தேகமென்ன? பிராம்மணனுடைய தனத்திலும் குருத்ரவ்யத்திலும் ஞாதிகளுடைய தனத்திலும் இவர்கள் ஒரு தீங்கையும் விளைவிக்கிற தில்லை. ஆபத்து வந்தால் இவர்களைக் காத்தலையும் செய்கிறார்கள். இவர் கள் செல்வமுள்ளவர்கள்; கர்வமற்றவர்கள்; பிராம்மணர்களுக்கு நன்மை

[1] 'ஸூதம்' என்பது மூலம். [2] 'ஸூதம்' என்பது மூலம்.

யைச் செய்கின்றவர்கள்; ஸத்யவாதிகள்; ஸமர்த்தர்களை அவமதிக்கிறதில்லை; தீனர்களைக் கைதூக்கியும் விடுகிறார்கள். அவர்கள் எப்பொழுதும் தேவதைகளை உபாஸிக்கின்றவர்கள்; இந்திரியங்களை அடக்கினவர்கள்; ஜனங்களை ரக்ஷிக்கின்றவர்கள்; தற்புகழ்ச்சியில்லாதவர்கள். ஆதலால், சிறந்த விருஷ்ணிவீரர்களுடைய பிரதாபமானது தடைசெய்யப்படுகிறதில்லை. அரசரே! ஒருவன் மகாமேருவைத் தாங்கினாலும் தாங்குவான். கடலை (நீந்தித்) தாண்டினாலும் தாண்டுவான், விருஷ்ணி வீரர்களோடெதிர்த்துப் போர்புரிந்து யுத்தமுடிவை அடையமாட்டான். பிரபுவே! எந்த விஷயத்தில் உங்களுக்கு ஸம்சயம் நேர்ந்ததோ அது முழுதும் உமக்குச் சொல்லப்பட்டது. குருராஜரே! நரசிரேஷ்டரே! (இவையெல்லாவற்றிற்கும்) பெரிதான உமது அநியாயமே காரணம்'' என்று கூறினான்.

---

### நூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸம்வாதமும் கர்ணனுக்கும் ஸாத்யகிக்கும் யுத்தமும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! அவ்வித நிலைமையை அடைந்த கௌரவனான பூரிஸ்ரவஸ் கொல்லப்பட்டவுடனே, மறுபடியும் யுத்தம் நடந்தவிதத்தை எனக்குச் சொல்'' என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதரே! பூரிஸ்ரவஸ் பரலோகத்தை அடைந்தவுடன், மகா பாகுபலமுள்ள அர்ஜுனன் வாஸுதேவனைத் தூண்டினான். அவன் 'கிருஷ்ணா! ராஜாவான ஜயத்ரதனிருக்குமிடத்திற்கு வேகமாகக் குதிரைகளை நடத்தும். புண்டரீகாக்ஷரே! அந்த ஜயத்ரதன் [1]மூன்று தர்மங்களில் இருப்பதாகக் கேட்கிறேன். குற்றமற்றவரே! என்னுடைய பிரதிஜ்ஞையை நீர் பயனுள்ளதாகச் செய்யவேண்டும். மிக்க புஜபலமுள்ளவரே! சூரியன் விரைவாக அஸ்தமனத்தையடைகிறான். புருஷப்புலியே!

---

[1] யுத்தம்செய்து கொல்லப்பட்டால் ஸ்வர்க்கத்தை அடைவது; பயந்தோடிக் கொல்லப்பட்டால் நரகத்தையடைவது; பயந்து தன்னூர்சென்றால் புகழுடம்புமாய்வது. இவற்றில், முதற்செய்கையிலிருக்கையிலேயே கொல்லவேண்டுமென்பது.

நான் இந்தப் பெரிய காரியத்தை ஆரம்பித்துவிட்டேன். இந்த ஜயத்ரதனே, கௌரவசேனையிலுள்ள மகாரதர்களால் பாதுகாக்கப்படுகிறான். கண்ணபிரானே! சூரியன் அஸ்தமயத்தையடைவதற்குள் என் வார்த்தை உண்மையாகும்படியும் நான் ஜயத்ரதனைக் கொல்லும்படியும் நீர் குதிரைகளை நடத்தவேண்டும்' என்று வேண்டினான். பிறகு, குதிரைகளுடைய மனத்தையறிந்தவரும் மிக்க கைவன்மையுள்ளவருமான ஸ்ரீ வாஸுதேவர் வெள்ளிபோன்ற குதிரைகளை ஜயத்ரதனைக் கொல்வதற்காக நடத்தினார். மகாராஜரே! காற்றுப்போலப் பாய்கின்ற குதிரைகளுடன் போகிறவனும் பழுதற்ற கணைகளுள்ளவனுமான அந்த அர்ஜுனனைக் கௌரவசேனையில் முக்கியர்களாயிருக்கிற துரியோதனனும் கர்ணனும் விருஷஸேனனும் மத்ரராஜனும் அஸ்வத்தாமாவும் கிருபாசாரியரும் ஸைந்தவனும் மேலே பாய்கின்றவைகள்போன்ற குதிரைகளுடன் விரைவுள்ளவர்களாகி எதிர்த்து ஓடிவந்தார்கள். பீபத்ஸு அருகிலிருக்கின்ற ஸைந்தவனை எதிர்த்து விறகுகளாலே ஜ்வலிக்கின்ற அக்கினிபோலக் கோபமாகிற விறகினாலே விருத்தியடைந்தவனாகிக் கோபத்தினால் ஜ்வலிக்கின்ற கண்களால் எரிக்கிறவன்போலப் பார்த்தான் கர்ணன் ஸைந்தவனுக்கு முன்நிற்பதை விட்டுவிட்டு ஸாத்யகியை எதிர்த்தான். கர்ணன் ஸாத்யகியை நெருங்கி எதிர்த்துவருவதை மஹாரதனான பார்த்தன்கண்டு உரக்கச் சிரித்துக்கொண்டு தேவகீபுத்திரரைப் பார்த்து, 'இந்தக் கர்ணன் ஸாத்யகியினுடைய ரதத்தைநோக்கிச் செல்லுகின்றான். யுத்தத்தில் கொல்லப்பட்ட பூரிஸ்ரவஸின்வதத்தை நிச்சயமாகவே இவன் பொறுக்கவில்லை. ஜனார்த்தனரே! இவன் செல்லுமிடத்திற்கு நீர் குதிரையை நடத்தும். கர்ணன் ஸாத்யகியை ஸோமதத்தகுமாரனை பூரிஸ்ரவஸினுடைய வழியை அடையச்செய்யவேண்டாம்' என்று கூறினான். ஸவ்யஸாசி இவ்வாறு உரைக்கக்கேட்டவரும் மகாபாகுபலமுள்ளவரும் மிக்க தேஜஸையுடையவருமான ஸ்ரீ கேசவர் (பார்த்தனைக்குறித்து), 'பாண்டவ! அதிக பாகுபலமுள்ள இந்த ஸாத்யகியொருவனே கர்ணனை ஜயிப்பதற்குப் போதுமானவன். துருபதகுமாரரிருவரோடு சேர்ந்திருக்கிற ஸாத்வதபுங்கவனான ஸாத்யகி கர்ணனை ஜயிப்பானென்பதில் யாது ஸந்தேகம்? சத்துருவீரர்களைக் கொல்லுகிறவனே! பார்த்த! உனக்குக் கர்ணனோடு யுத்தம் ஸரியன்று. ஏனென்றால், இந்தக் கர்ணனிடத்தில் நன்றாக ஜ்வலிக்கின்ற எரிநட்சத்திரம்போன்றதான இந்திரனாலே கொடுக்கப்பட்ட சக்தியாயுதமானது பூஜிக்கப்பட்டு உன்னிமித்தமாகப் பாதுகாக்கப்பட்டுவருகின்றது. கர்ணனை நான் சாதாரணமனிதனாக நினைக்

கவில்லை. அவனுடன் யுத்தஞ்செய்வது தகுதியன்று. பலசாலியான இந்தக் கர்ணன் பராக்ரமத்தால் நம்மை வெல்லும் சக்தியுடையவன்; அடிக்கடி அஜாக்ரதையினாலும் கருணையினாலும் பரிதாபமடைகிறான்; அதனால், வருத்தமடைகிறான். இது இவனிடத்திலுள்ள பெரிதான குற்றம். அதனால், என் மனம் சோகத்தை அடைகிறது. ஆதலால், கர்ணன் இந்தஸமயத்தில் ஸாத்வதனிடத்தில் எப்படியாவது செல்லட்டும். கௌந்தேய! யான் துராத்மாவான இந்தக் கர்ணனுடைய முடிவுக் காலத்தை அறிவேன். பார்த்த! கூர்மையான அம்புகளாலே யுத்த பூமியில் இந்த ஜயத்ரதனைத் தள்ளினபிறகு நீ துராத்மாவான கர்ணனோடு போர்புரியப் போகலாம்' என்ற ஸமயோசிதமான வார்த்தையை மறுமொழியாகக் கூறினார்" என்றான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பூரிஸ்ரவஸ் கொல்லப்பட்டவுடனே, விருஷ்ணிவீரனுக்குக் கர்ணனோடு நேரிட்ட யுத்தம் எவ்வாறு நடந்தது? தேரையிழந்தவனான ஸாத்யகியும் சக்ரரக்ஷகர்களான இரண்டு பாஞ்சாலகுமாரர்களும் எந்த ரதத்தின்மீதேறிக்கொண்டார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான். "எல்லாச் சைனிகர்களும் கேசவரும் அர்ஜுனனும் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது மகாயுத்தத்தில் நடந்ததை உள்ளபடி உமக்குச் சொல்வேன். உம்முடைய கெட்டநடையை ஸ்திரமாயிருந்து கொண்டு கேளும். பிரபுவே! ஸோமதத்தகுமாரனை பூரிஸ்ரவஸினால் வீரனான ஸாத்யகி ஜயிக்கப்படுவானென்னும் இவ்விஷயமானது நேற்றே ஸ்ரீ கிருஷ்ணருக்குத் தெரியும். அரசரே! ஜனார்த்தனர் நடந்ததையும் வரப்போகின்றதையும் அறிவார். மன்னரே! ஆகையால், மகாபலமுள்ள ஸ்ரீ வாஸுதேவர் ஸாரதியான தாருகனையழைத்து, 'என்னுடைய தேரை அதிகாலையில் பூட்டவேண்டும்' என்று கட்டளையிட்டார். கேசவரையும் அர்ஜுனனையும் தேவர்களாவது கந்தர்வர்களாவது யக்ஷர்களாவது உரகர்களாவது ராக்ஷஸர்களாவது மனிதர்களாவது ஒருவரும் ஜயிப்பவரில்லை. பிரம்மாமுதலான தேவர்களும் ஸித்தர்களும் அவர்களை அறிவார்கள். அவ்விருவருடைய ஒப்பற்ற பிரதாபத்தையும் அவ்வாறு நடந்த யுத்தத்தையும் கேளும். ஸாத்யகி ரதமில்லாமலிருக்கிறதையும் கர்ணன் போருக்கு முயற்சிசெய்வதையுங் கண்டு ஸ்ரீமாதவர் ரிஷபஸ்வரத்தோடு பேரொலியுள்ள சங்கத்தை ஊதினார். தாருகன் சங்கமுழக்கத்தைக்கேட்டு (அவருடைய) ஆஜ்ஞையையறிந்து தூக்கிக்கட்டப்பட்ட கருடக்கொடியுள்ள ரதத்தை ஸாத்யகிக்காகக் கொண்டுவந்தான். சினியினுடைய பௌத்ரனான ஸாத்யகி, அக்

னியும் சூரியனும் போன்றதும் தாருகனோடுகூடியதுமான ஸ்ரீ கிருஷ்ணருடைய ரதத்தில் அவருடைய அனுமதியின்மேல் ஏறினான். இஷ்டப்படி ஸஞ்சரிக்கின்றவைகளும் மகா வேகமுடையவைகளும் பொன் அணிகளால் அலங்கரிக்கப்பட்டவைகளுமான சைப்யம், ஸுக்ரீவம், மேகபுஷ்பம், வலாஹகம் என்கிற சிறந்த குதிரைகள் கட்டியதும் விமானத்திற்கொப்பானதுமான அந்த ரதத்தின்மீது ஸாத்யகி ஏறி அனேக பாணங்களை அபரிமிதமாக வர்ஷித்துக்கொண்டு ராதேயனை எதிர்த்தான். அப்பொழுது, சக்ரரக்ஷகர்களான யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் தனஞ்சயனுடைய தேரைவிட்டு ராதேயனை எதிர்த்துச் சென்றார்கள். மகாராஜரே! ராதேயனும் மிக்க கோபத்துடன் அம்புமழையைப் பொழிந்துகொண்டு சினியின் பௌத்ரனும் போரிற் பின் வாங்காதவனுமான யுயுதானனை ரணகளத்தில் எதிர்த்தான். அவ்வித யுத்தமானது பூமியிலாவது ஸ்வர்க்கத்திலாவது கேட்கப்பட்டதேயில்லை. தேவயுத்தமும் கந்தர்வயுத்தமும் அஸுரயுத்தமும் ராக்ஷஸயுத்தமும் அவ்விதம் இருந்தே இரா என்று எண்ணி, ரதங்களோடும் குதிரைகளோடும் மனிதர்களோடும் யானைகளோடுங்கூடின அந்தச் சேனையானது யுத்தஞ்செய்யாமலிருந்தது. மகாராஜரே! புருஷசிரேஷ்டர்களான அவ்விருவருஞ்செய்யும் அதிமானுஷமான அந்த யுத்தத்தையும் தாருகனுடைய ஸாரத்யத்தையும் பார்த்து அனைவரும் மதிமயக்கம் கொண்டனர். ரதத்திலிருப்பவனும் ஸாரதியுமான தாருகனுடைய (தேரினது) போக்கினாலும் வரவினாலும் சுற்றுவதாலும் முன்போவதாலும் பின்வருவதாலும் ஆச்சரியமடைந்தார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் அஸுரர்களும் ஆகாயத்தையடைந்தவர்களாகிக் கர்ணன், சைனேயன் இவ்விருவருடைய யுத்தத்தையும் பார்ப்பதற்கு மிக்க ஜாக்கிரதையுடன் கூடினார்கள். மகாராஜரே! மித்திரர்களுக்காகப் பராக்கிரமத்தை வெளிப்படுத்துகின்றவர்களும் கோபமுடையவர்களும் யுத்தத்தில் ஸ்பர்த்தையுள்ளவர்களுமான தேவதைபோன்ற கர்ணன் ஸத்யகபுத்ரனை யுயுதானன் இவ்விருவரும் பரஸ்பரம் அம்புமழைகளைப் பொழிந்தார்கள். கர்ணன், பூரிஸ்ரவஸ் ஜலஸந்தன் இவர்களுடைய வதத்தைப் பொறுவதனைச் சினியினுடைய பௌத்ரனை அம்புமழைகளாலே கலங்கச்செய்தான். பகைவர்களை அடக்குகிறவனே! சோகமிஞ்சிய கர்ணன் கோபத்துடன் பெரிய ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு யுத்தத்தில் கண்ணினால் சைனேயனை எரிக்கிறவன்போல வேகத்துடன் அடிக்கடி எதிர்த்துவந்தான். அவன் கோபத்துடனிருத்தலைக்கண்டு ஸாத்யகி ஒரு யானையை வேறொரு யானை எதிர்ப்பதுபோ

லப் பெரிதான அம்புமழையினால் அவனையெதிர்த்துப் போர்புரிந்தான். யுத்தத்தில் ஒப்பற்ற பராக்ரமமுள்ளவர்களும் புருஷசிரேஷ்டர்களு மான அவ்விருவரும் எதிர்த்து, பலமுள்ள இரண்டு புலிகள்போலப் பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். சத்துருக்களை அடக்குகிறவனே! பிறகு, சினியினுடைய பௌத்ரனான ஸாத்யகி கர்ணனை எல்லா அங் கங்களிலும் முழுதும் உருக்குமயமான அம்புகளாலே மறுபடியும் மறு படியும் பிளந்து பல்லத்தினாலே அவனுடைய ஸாரதியைத் தேர்த்தட்டி னின்று தள்ளிக் கூர்மையான அம்புகளாலே வெண்ணிறமுள்ள நான்கு குதிரைகளையும் கொன்றான். புருஷஸ்ரேஷ்டரே! ஸாத்யகி உம்முடைய புத்திரனான துரியோதனன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே கொடிமரத்தையும் ரதத்தையும் நூறு துண்டுகளாக வெட் டிக் கர்ணனை ரதத்தையிழந்தவனாகச் செய்தான். அரசரே! பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களும் மகாரதிகர்களுமான கர்ணபுத்திரனான விரு ஷஸேனனும் மத்ரதேசாதிபதியான சல்யனும் துரோணபுத்ரரும் மனவருத்தமடைந்தவர்களாகிச் சைனேயனை நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, எல்லாம் மனக்கலக்கமடைந்தன. (ஒருவ ராலும்) ஒன்றும் அறியப்படவில்லை. அரசரே! பிறகு, ஸாத்யகியினாலே வீரனான ஸூதபுத்ரன் அவ்வாறு ரதத்தை இழந்தவனாக்கப்பட்ட பொழுது எல்லாச் சைனியங்களிலும், ஆ! ஆ! என்னும் பேரொலி உண் டாகியது. அரசரே! ஸாத்வதனாலே அம்புகளால் ரதத்தையிழக்கும் படி செய்யப்பட்ட கர்ணனும் பால்யந்தொடங்கி உமது புத்ரனான துரி யோதனனுடைய நேசத்தைக் கௌரவிக்கின்றவனும், 'ராஜ்யத்தைக் கொடுக்கிறேன்' என்று செய்த பிரதிஜ்ஞையைக் காப்பாற்றுபவனுமா கிப் பெருமூச்சுடன் துரியோதனனுடைய ரதத்தின்மீது விரைவாக ஏறினான். பார்த்திவரே! ஜிதேந்திரியனான ஸாத்யகி அவ்வாறு ரதத் தையிழந்தவனான கர்ணனையும் வீரர்களான துச்சாஸனன் முதலான உம்முடைய குமாரர்களையும் கொல்லவில்லை. அவன் பீமனாலும் பார்த் தனாலும் முன்புசெய்யப்பட்ட பிரதிஜ்ஞையைப் பாதுகாத்துக்கொண்டு அவர்களை ரதத்தையிழந்தவர்களாகவும் மனவருத்தத்தையடைந்தவர் களாகவும் செய்தானேயொழியக் கொல்லவில்லை. பீமஸேனனாலே உம் முடைய புத்ரர்களுடையவதம பிரதிஜ்ஞைபண்ணப்பட்டது. மறுபடி யும் ஏற்பட்டசூதாட்டத்தில், பார்த்தனாலே கர்ணனுடையவதம் பிரதிஜ் ஞைபண்ணப்பட்டது. அப்பொழுது, சிறந்த ரதிகர்களான கர்ணன் முதலானவர்கள் அந்த ஸாத்யகியைக் கொல்வதில் முயற்சிசெய்தும் கொல்வதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பரலோகத்தையும் தர்ம

ராஜருக்குப் பிரியத்தையும் விரும்புகின்ற அந்த ஸாத்யகியினால் ஒரு வில்லினாலே துரோணபுத்ரரும் கிருதவர்மாவும் மற்ற க்ஷத்ரிய சிரேஷ்டர்களான மகாரதர்களும் நூறு நூறாக ஜயிக்கப்பட்டார்கள். வீர்யத்தில் கிருஷ்ணார்ஜுனர்களுக்குச் சமானனும் பகைவர்களை வாட்டுகின்றவனுமான ஸாத்யகி மந்தஹாஸத்துடன் உம்முடைய எல்லாச் சேனைகளையும் ஜயித்தான். நரசிரேஷ்டரே! உலகத்தில் கிருஷ்ணரும் பார்த்தனும் சைனேயனுமே வில்லாளிகள். நான்காவது வில்லாளி இல்லை" என்று கூறினான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! யுத்தத்தில் வாஸுதேவனுக்கொப்பானவனும் தன் புஜபலத்தினாலே கர்வங்கொண்டவனுமான ஸாத்யகி தாருகனோடு சேர்ந்து (ஒருவராலும்) ஜயிக்கமுடியாத வாஸுதேவனுடைய ரதத்தின்மீதேறிக்கொண்டு கர்ணனை ரதத்தையிழந்தவனாகச் செய்தானே; சத்துருக்களை வாட்டுபவனான ஸாத்யகி வேறு ரதத்தில் ஏறினானா? இதனைக்கேட்க ஆவலுள்ளவனாயிருக்கிறேன். சொல்வதற்கு நீ ஸமர்த்தனன்றோ? அந்த ஸாத்யகியை (பிறரால்) ஸகிக்கத்தகாதவனென்றே நான் எண்ணுகிறேன். அதனை எனக்குச் சொல்லவேண்டும்" என்று வினவ, ஸஞ்சயன், "அரசரே! நடந்தபடி கேளும். பிரஜைகளுக்கு நாதரே! மகா புத்திசாலியான தாருகனுடைய இளையசகோதரன் யுத்தத்திற்குரிய முறைகளோடு ஸித்தஞ்செய்யப்பட்டதும், இரும்புப்பட்டங்களாலும் பொற்பட்டங்களாலும் நன்றாகக் கட்டப்பட்ட ஏர்க்காலுள்ளதும், ஆயிரம் நக்ஷத்திரப்புள்ளிகள் அமைக்கப்பட்டதும், சிங்கக்கொடியையும் பதாகையையுமுடையதும், பொன்னணிகளால் அலங்கரிக்கப்பட்டதும், காற்றுப்போல் வேகத்தையுடையவைகளும் ஸிந்துதேசத்தில் தோன்றியவைகளும் சந்திரன்போன்றவைகளும் எல்லாச் சப்தங்களையும் அடக்கி மேற்செல்லுகின்றவைகளும் உறுதியுள்ளவைகளும் விசித்திரமான பொற்கடிவாளமுதலியவைகளுள்ளவைகளுமான சிறந்த குதிரைகள் கட்டியதும், திரளான மணிகளால் நெருங்கினசப்தமுள்ளதும், மின்னல்போன்ற சக்திகளும் தோமரங்களுமுள்ளதும், போருக்கான பொருள்களும் பலவித ஆயுதங்களுமுள்ளதும், மேகம்போலக் கம்பீரமான சப்தமுள்ளதுமான வேறொரு தேரை விரைவாக ஸித்தஞ்செய்தான். சைனேயன் அந்த ரதத்தின்மீதேறி உமது சைனியத்தினுடைய அருகில்வந்தான். தாருகனும் தன்னிஷ்டப்படி கேசவருடைய சமீபத்தில் சென்றான். வேந்தரே! கர்ணனுக்கும் சங்கம்போலும் பசுவின்பால்போலும் வெண்ணிறம் பொருந்தியவைகளும் விசித்ரமும்

பொன்மயமுமான கடிவாளமுதலியனவுள்ளவைகளும் மிக்க வேகமுள்ளவைகளுமான சிறந்த குதிரைகள் கட்டியதும், ஸ்வர்ணமயமான கச்சைக்கொடியுள்ளதும், யந்திரங்களும் கொடித்துணிகளும் அமைக்கப்பெற்றதும், நல்ல ஸாரதியுள்ளதும், அனேக சஸ்திரங்களை உபகரணங்களாகக் கொண்டதுமான சிறந்த ரதத்தை ஸமீபத்தில் கொண்டுவந்தார்கள், கர்ணனும் அந்த ரதத்தின்மீதேறிச் சத்துருக்களை எதிர்த்தான். தாங்கள் என்னைக் கேட்டதையெல்லாம் தங்களுக்கு நான் சொல்லிவிட்டேன். இன்னமும் உம்முடைய அநீதியினாலே ஸம்பவித்த இந்த நாசத்தைத் தெரிந்துகொள்ளும். எப்பொழுதும் சித்ரயுத்தம் செய்யுந் தன்மையுள்ள துர்முகனை முன்னிட்டு உமது முப்பத்தொரு பிள்ளைகள் பீமஸேனனால் கொல்லப்பட்டார்கள். பாரதரே! அரசரே! ஸாத்வதனாலும் அர்ஜுனனாலும் நூற்றுக்கணக்காகச் சூரர்கள் பீஷ்மரையும் பகதத்தனையும் எதிரில் வைத்துக்கொண்டு கொல்லப்பட்டார்கள். உமது துராலோசனையால் கௌரவர்களுக்கு இவ்வாறான நாசம் நேர்ந்தது" என்று கூறினான்.

---

## நூற்றுநாற்பத்தாறாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

**(பீமன் தன்னைக் கர்ணன் நிந்திப்பதை அர்ஜுனனுக்குத் தெரிவித்ததும், அர்ஜுனன் கர்ணனை இகழ்ந்து அவனது புத்திரனைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞைசெய்ததும், கர்ணனும் துரியோதனனும் ப்ரபசிக்கொண்டதும், ஸங்குலயுத்தமும்.)**

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! நம்முடைய சூரர்களும் அவர்களைச் சேர்ந்த சூரர்களும் அவ்விதமான நிலைமையையடைந்தபிறகு, பீமனும் அர்ஜுனனும் சாத்யகியும் அப்பொழுது யாதுசெய்தனர்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"மகாராஜரே! ரதத்தையிழந்தவனும் கர்ணனுடைய குரூரமான வாக்கினாலே பீடிக்கப்பட்டவனுமான பீமஸேனன் கோபத்திற்கு வசப்பட்டவனாகிப் பல்குனனைப்பார்த்து, 'தனஞ்சய! நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கர்ணன் என்னைப்பார்த்து அடிக்கடி 'நபும்ஸக! மூட! வயிற்றைநிரப்புகிறவனே!' என்றும், 'ஆயுதப்பயிற்சியில்லாதவனே! பால! யுத்தத்தில் பயந்தவனே! நீ யுத்தம்செய்யாதே' என்றும் சொன்னான். மிக்க புஜபலமுள்ளவனே! இவ்வாறு பேசுகிறவனை

நான் கொல்லவேண்டும். அந்தக் கர்ணனாலே நான் இவ்வாறு சொல்லப்பட்டேன். இந்த விரதமானது உன்னோடுசேர்ந்து என்னால் செய்யப்பட்டிருக்கிறது. கௌந்தேய! (இது) உனக்கு எப்படியோ அப்படியே எனக்கும்; சம்சயமில்லை. நரசிரேஷ்ட! அவனைக் கொல்வதின் பொருட்டு என்னுடைய இந்த வார்த்தையை நீ நினைவில் வைத்துக் கொள். தனஞ்சய! இந்தப் பிரதிஜ்ஞைவிரதமானது ஸத்யமாகும்படி நீ செய்' என்று சொன்னான். அளவற்ற பராக்கிரமமுள்ள அர்ஜுனன் அந்தப் பீமனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, யுத்தரங்கத்தில் கர்ணனைநோக்கி, சிறிது அருகில் நெருங்கி, 'கர்ண! கர்ண! வீண் எண்ணங்கொண்டவனே! ஸூதபுத்ர! தற்புகழ்ச்சி செய்பவனே! அதர்மத்தில் புத்தியுள்ளவனே! யான் இப்பொழுது உன்னைநோக்கிச் சொல்வதைக் கேள். கர்ண! சூரர்களுக்கு யுத்தத்தில் ஜயம் அபஜயம் இரண்டுமே காணப்படுகின்றன. ராதேயா! யுத்தஞ்செய்பவன் இந்திரனாயிருந்தாலும் (அவனுக்கும்) அவைகளிரண்டும் நிலையற்றவை. வெட்கமற்றவனே! யுத்தத்தை விட்டுவிட்டு அடிக்கடி ஓடுகிறாய். பீமனுடைய மகிமையையும் செய்கையையும் உயர்குடிப்பிறப்பையும் நீ பார். (யுத்தத்தைவிட்டு) ஓடுகின்ற உன்னைப்பார்த்து அவன் கடுஞ்சொல்லைச் சொல்லவில்லை. ஸூதபுத்ர! நீ மறுபடியும் ஒரேதடவை பீமனுடன் போர்புரிந்து தற்செயலாக வீரனான பாண்டவனை ரதத்தையிழந்தவனாகச் செய்துவிட்டாய். ராதேய! உன் குலத்திற்குத்தகுந்த காரியத்தைச் செய்தாய். யுத்தத்தில் இந்திரனுக்கும் ஜபமே நிச்சயமாக உண்டாகாது. ரதத்தையிழந்தவனும் களைத்த இந்திரியங்களுள்ளவனும் மரிக்கும் நிலைமையை அடைந்தவனுமான உன்னை நான் கொல்லவேண்டும் என்று அறிந்து ஸாத்யகி வென்றும் உயிரோடு விட்டான். போர்புரிகின்றவனும் மஹாபலசாலியுமான பீமனை நீ போரில் தற்செயலாக மிக்க பிரயாஸத்தால் ரதத்தையிழந்தவனாகச்செய்து மிகக் குரூரமாகப் பேசினாயென்பது மிகப்பெரிய அநீதி. அது கெட்டவர்களுடைய செய்கை. ஸாதுக்களும் புருஷசிரேஷ்டர்களுமான சூரர்கள் சத்துருவைஜயித்து அதிகமாகத் தற்புகழ்ச்சிசெய்யமாட்டார்கள்; கெட்டவார்த்தையையும் பிதற்றமாட்டார்கள்; ஒருவரையும் இகழமாட்டார்கள். ஸூதபுத்ர! அற்பபுத்தியுள்ளவனான நீயோ அற்பத்தன்மையினால் பொருத்தமில்லாததும் காதால் கேட்கத்தகாததும் நன்றாகப் பரியாலோசனை செய்யப்படாததுமான பலவாறான அவ்வவ்விதமான வார்த்தையைப்பேசுகிறாய். யுத்தஞ்செய்கின்றவனும் பகைவர்களை ஆக்கிரமிக்கின்றவனும் சூரனும் பெரியோர்களின் விரதத்தில் பற்றுள்ளவனுமான

பீமனைப்பற்றிச் சொல்லிய உனது இந்த அப்பிரியமான பேச்சானது, பார்த்துக்கொண்டிருக்கும் எல்லா ஸைனிகர்களுக்கும் ஸ்ரீகேசவருக்கும் என்க்கும் உண்மையாகாது. நீ யுத்தத்தில் பீமஸேனனால் பல தடவை தோற்றவனாகச் செய்யப்பட்டிருக்கிறாய். பாண்டுநந்தனன் உன்னைப்பற்றிக் குரூரமான ஒருவார்த்தையையும் சொன்னதில்லை. நீ விருகோதரனைக் குரூரமான அநேக வார்த்தைகளைக் கேட்கும்படி செய்ததனாலும் மேலும் ஸுபத்திரா புத்திரனை அபிமன்யுவை எனக்குத்தெரியாத இடத்தில் அனேகர்களான நீங்கள் கொன்றதனாலும் அவ்விதமான கர்வத்துக்குரிய பலனை நீ உடனே அடைவாயாக. துர்ப்புத்தியுடையவனே! நீ உன்னுடைய நாசத்தின்பொருட்டே அந்த அபிமன்யுவினுடையவில்லை அறுத்தாய். மூடனே! ஆதலால், நீ வேலைக்காரர்களுடனும் புத்திரர்களுடனும் பந்துக்களுடனும் கொல்லப் படத்தக்கவனாகிறாய். நீ எல்லாக் காரியங்களையும் செய்துகொள். பெரியபயம் உன்னை வந்து அடைந்துவிட்டது. யுத்தத்தில் நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே விருஷஸேனனைக் கொல்லப்போகிறேன். மேலும், வேறு எந்த அரசர்கள் புத்திமயக்கத்தால் என்னை எதிர்ப் பார்களோ அவர்களனைவரையும் கொல்லப்போகிறேன். ஸத்தியத்தினால் ஆயுதத்தைத் தொடுகிறேன். மூட! புத்தியில்லாதவனும் யுத்தத்தில் அதிக அகங்காரம் கொண்டவனும் தள்ளப்பட்டவனுமான உன்னை மந்தனான துர்யோதனன் பார்த்து மிக்க மனவருத்தமடையப் போகிறான்' என்று சொன்னான். அர்ஜுனனால் கர்ணகுமாரனை விருஷஸேனனுடைய வதமானது பிரதிஜ்ஞை செய்யப்பட்டவுடனே, அப்பொழுது ரதிகர்களுடைய மிகநெருங்கிய ஒரு பேராரவாரமானது உண்டாயிற்று. மகாபயங்கரமான அந்த ஸங்குலயுத்தமானது நடக்குங்காலத்தில், சூரியன் உஷ்ணந்தணிந்த கிரணங்களோடு அஸ்தகிரியினுடைய பக்கத்தில் செல்லத்தொடங்கினான். பரதசிரேஷ்டரே! பிறகு, ஜயத்ரதனைக் கொல்வதற்காகச் சென்றுகொண்டிருக்கிற அர்ஜுனனைப் பார்த்து மனிதரால்செயற்கரிய காரியங்களைச் செய்கின்றவர்களும் மிகுந்த யுத்தமுயற்சியுடையவர்களுமான அந்த ஸாத்யகியையும் பீமஸேனனையும் காண்பித்துக்கொண்டு ராஜாவான துரியோதனன் விரைவுடன் ராதேயனைக்குறித்து, 'வைகர்த்தன! இதுதான் யுத்தகாலம். மகாத்மாவே! உன்பலத்தைக் காண்பி. கர்ண! யுத்தத்தில் அர்ஜுனனால் ஜயத்ரதன் கொல்லப்படாதபடி காரியத்தைச்செய். இப்பொழுது பகலோ கொஞ்சம் மிகுந்திருக்கிறது. இப்பொழுது, நீ பாணஸமூகங்களாலே சத்துருவை இச்சமயத்தில் தடுத்துவிடு. ஈர

சிரேஷ்ட! கர்ண! பகல் சென்றுவிட்டால் நிச்சயமாக நமக்கு ஜயம் உண்டாகும். சூரியாஸ்தமயகாலம்வரையில் ஸைந்தவன் ரக்ஷிக்கப் படுவனேயாகில் கௌந்தேயன் சபதம்பொய்த்தவனாகித் தீயில் விழு வான்.' பகைவரின் செருக்கை அழிப்பவனே! அர்ஜுனனையிழந்த பூமியில் அவனுடைய ஸகோதரர்கள் பரிவாரங்களோடு ஒரு முகூர்த்த காலங்கூட ஜீவித்திருக்கச் சக்தியுள்ளவர்களாகார்கள். கர்ண! பாண்ட வர்கள் நாசமடைந்த பிறகு, மலைகளோடும் பூஞ்சோலைகளோடும் காடு களோடுங்கூடின இந்தப் பூமண்டலத்தை நிஷ்கண்டகமாக நாம் அனு பவிப்போம். (சத்துருக்களுடைய) கர்வத்தை அடக்குகிறவனே! பார்த்தன் தெய்வத்தால் கெடுக்கப்பட்டு விபரீதபுத்தியைப்பெற்றுக் கார்யாகார்யங்களை அறியாதவனாகி யுத்தத்தில் பிரதிஜ்ஞையைச் செய் திருக்கிறான். 'பாண்டுபுத்திரனை கிரீடியினாலே நிச்சயமாகத் தான் அழிவதற்காகவே ஜயத்ரதனுடைய வதத்தைப்பற்றி வீண்பிரதிஜ் ஞையே செய்யப்பட்டது. ராதேய! ஒருவராலும் அவமதிக்கமுடி யாதவனானநீ உயிரோடிருக்கையில், சூரியன் அஸ்தமயத்தையடைவதற் குள்ளாகப் பல்குனன் ராஜாவான ஸைந்தவனை எவ்வாறு கொல்வான்? மத்ரராஜனாலும் மகாத்மாவான கிருபாசாரியராலும் காக்கப்பட்டிருக் கிற ஜயத்ரதனைத் தனஞ்சயன் யுத்தமுனையில் எவ்வாறு கொல்வான்? காலத்தினால் தூண்டப்பட்ட பீபத்ஸுவானவன் துரோணபுத்ரரா லும் என்னாலும் துச்சாஸனனாலும் பாதுகாக்கப்படுகின்ற ஸைந்த வனை எவ்வாறு அடைவான்? பகைவர்களுடைய கர்வத்தை அழிப்ப வனே! சூரர்கள் அனேகர் யுத்தஞ்செய்கின்றார்கள். சூரியனும் சாய்ந்து விட்டான். பார்த்தன் ஜயத்ரதனை அடையவேமாட்டானென்று நான் எண்ணுகிறேன். கர்ண! என்னோடும் சூரர்களான மற்ற மகாரதர்க ளோடும் துரோணபுத்ரரோடும் மத்ரராஜனோடும் கிருபாசாரியரோடும் சேர்ந்து மிகுந்த முயற்சியுடன் பார்த்தனோடு யுத்தகளத்தில் நீ போர் புரியவேண்டும்' என்று கூறினான். ஐயா! உமது குமாரனாலே இவ்வாறு சொல்லப்பட்ட ராதேயன் கௌரவசிரேஷ்டனான துரியோதனனை நோக்கி, 'பகைவரின் கர்வத்தை அடக்குபவனே! திடமாகலக்ஷ்யத்தை அடிக்கின்றவனும் வீரனும் வில்லாளியுமான பீமஸேனனாலே யுத்தத் தில் பாணஸமூகங்களால் பலவாறாகப் பிளக்கப்பட்ட சரீரமுள்ள யான் இப்பொழுது யுத்தத்தில் நிற்கவேண்டுமென்று நிற்கிறேன். பெரிய பாணங்களினாலே மிகத் தவிக்கும்படி செய்யப்பட்ட என்னங்கம் கொஞ்சமேனும் அசையவில்லை. ஆனாலும், இயன்றவரையில் போர் புரிகிறேன். நான் பிழைத்திருப்பது உனக்காகவே. துரியோதன!

பாண்டவர்களுள் முக்யனுன அர்ஜுனன் ஸைந்தவனைக்கொல்லாவண்ணம் நான் அதிக வல்லமையுடன் முயற்சிசெய்யப்போகிறேன். நான் கூர்மையான அம்புகளைப் பிரயோகித்துக்கொண்டு யுத்தஞ்செய்யும் பொழுது இருகைகளாலும் கணைதொடுப்பவனும் வீரனுமான தனஞ்சயன் ஸிந்துராஜனை அடையப்போகிறதில்லை. கௌரவனே! பக்தியுடையவனும் எப்பொழுதும் நன்மையை விரும்புகிறவனுமான ஒருவன் எதைச் செய்யவேண்டுமோ அதை யான் செய்யப்போகிறேன். ஜயம் அதிர்ஷ்டத்தைச்சார்ந்திருக்கிறது. மகாராஜனே! யுத்தத்தில் இப்பொழுது உனக்குப் பிரியத்தைச்செய்வதற்காக ஸைந்தவன்நிமித்தம் அதிக முயற்சியைச் செய்வேன். ஜயம் தெய்வத்தைச்சார்ந்திருக்கிறது. புருஷசிரேஷ்டனே! யான் என்னுடைய ஆண்மையைக் கடைப்பிடித்து இப்பொழுது உனக்காக அர்ஜுனனோடு போர்புரியப்போகிறேன். ஜயம் தெய்வத்தைச்சார்ந்தது. கௌரவசிரேஷ்ட! இப்பொழுது நான்பார்த்தன் எங்களிருவருக்கும் நடக்கப்போகின்றதும் பயங்கரமாயுள்ளதும் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணக்கூடியதுமான இந்த யுத்தத்தை எல்லாஸைன்யங்களும் பார்க்கட்டும்' என்று மறுமொழி கூறினன்.

ரணகளத்தில் கர்ணனும் துரியோதனனும் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்பொழுதே அர்ஜுனன் கூர்மையான அம்புகளாலே உம்முடைய சேனையைக் கொன்றான். மகாபாகுபலமுள்ளவனுன அர்ஜுனன் யுத்தத்தில் பரிகாயுதங்கள்போன்றவைகளும் யானைத் துதிக்கைகளுக்கொப்பானவைகளுமான பின்வாங்காதவர்களான சூரர்களுடைய கைகளையும் தலைகளையும் கூர்மையுள்ள அம்புகளாலே அறுத்தான். பீபத்ஸு க்ஷுரங்களாலே யானைகளினுடைய துதிக்கைகளையும் பிடரிகளையும் நாற்புறத்திலுமுள்ள தேர் அச்சுக்களையும் இரத்தத்தினல் நனைக்கப்பட்டவர்களும் ஈட்டிகளையும் உலக்கைகளையும் கையில் பிடித்தவர்களுமான குதிரைவீரர்களையும் குதிரைகளையும் உத்தமமான யானைகளையும் நான்குபக்கங்களிலுமுள்ள காலாட்களையும் கொடிமரங்களையும் குடைகளையும் விற்களையும் சாமரங்களையும் தலைகளையும் ஒவ்வொன்றையும் இவ்விரண்டாகவும் மும்மூன்றாகவும் துண்டாக்கினன். மூண்டெரிகின்ற தீயானது உலர்ந்தகாட்டை எரிப்பதுபோலப் பார்த்தன் உம்முடைய சேனையை நன்றாக எரித்தான். பார்த்தன் சிறிது நேரத்திற்குள் யுத்தபூமியை இரத்தத்தால் மேவிட்டதாகச் செய்தான். பலசாலியும் பகைவர்களால் ஜயிக்கமுடியாதவனும் ஸத்யபராக்ரமனுமான அந்த அர்ஜுனன் உம்முடையதான அந்தச்சேனையைப் பெரும்

பான்மையாக யுத்தவீரர்கள் கொல்லப்பட்டதாகச் செய்துவிட்டு ஸைந்தவனை அடைந்தான். பரதசிரேஷ்டரே! பீமஸேனனாலும் ஸாத்யகியினாலும் காக்கப்பட்ட பீபத்ஸுவானவன் ஜ்வலிக்கிற நெருப்புப்போல் நன்றாக ஜ்வலித்தான். அவ்வாறு அந்த அர்ஜுனன் நிலைபெற்றுநிற்பதைக் கண்டு வீரர்களாலே ஒப்புக்கொள்ளப்பட்டவர்களும் மகா வில்லாளிகளும் புருஷசிரேஷ்டர்களுமான உமது போர்வீரர்கள் பாண்டவனைப் பொறுக்கவில்லை. துரியோதனனும் கர்ணனும் விருஷஸேனனும் மத்ரராஜனான சல்யனும் அஸ்வத்தாமாவும் கிருபரும் ஸைந்தவனும் ஸன்னத்தர்களாகி, தேர்செல்லும் வழிகள்தோறும் வில்லொலியோடும் நாணொசையோடும் தலத்வனியோடும் நர்த்தனம்செய்கின்ற கிரீடியை ஸைந்தவன்நிமித்தமாக நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். யுத்தத்தில் ஸமர்த்தர்களான எல்லாக் கௌரவவீரர்களும பயமற்றவர்களாகி யுத்தத்தை அறிந்தவனும் வாயைத்திறந்திருக்கும் அந்தகன் போன்றவனுமான பார்த்தனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். ஸூர்யன் சிவந்துகாணப்படுந்தருணத்தில் அவர்கள் ஸைந்தவனைப் பின்புறத்தில் வைத்துக்கொண்டு அச்சுதனையும் அர்ஜுனனையுங்கொல்ல எண்ணினவர்களும் சூரியனுடைய அஸ்தமயத்தை விரும்புகிறவர்களுமாகிச் சர்ப்பத்தினுடைய உடல்போல விளங்குகின்ற கைகளினாலே விற்களைவளைத்துச் சூரியரஸ்மிபோல் பிரகாசிக்கின்ற அம்புகளைப் பல்குனனைக்குறித்து நூறு நூறாகப் பிரயோகஞ்செய்தார்கள். பிறகு, யுத்தத்தில் அடங்காத மதங்கொண்ட அர்ஜுனன் பிரயோகஞ்செய்யப்படுகின்ற அந்த அம்புகளை ஒவ்வொன்றையும் இவ்விரண்டாகவும் மும்மூன்றாகவும் எவ்வெட்டாகவும் அறுத்து அந்த ரதிகர்களையும் அடித்தான். அரசரே! சிங்கத்தினுடையவாலைக் கொடியாகக் கொண்டவரும் கிருபிபுத்திரருமான அஸ்வத்தாமா அர்ஜுனனை எதிர்த்து அவனைப் பத்துப்பாணங்களாலும் வாஸுதேவரை ஏழம்புகளாலும் அடித்து ஸைந்தவனைப் பாதுகாத்துக்கொண்டு ரதமார்க்கங்களில் நின்றார். பிறகு, மகாரதர்களான கௌரவசிரேஷ்டர்களெல்லோரும், இந்தத் தனஞ்சயனைப் பெரிய தேர்க்கூட்டத்துடன் நான்கு பக்கத்திலும் சூழ்ந்துகொண்டு வில்லில் நாணொலிசெய்து பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு உமது புத்திரனுடைய கட்டளையினால் ஸைந்தவனைப் பாதுகாத்தார்கள். பிறகு, சூரனான பார்த்தனுடைய தோள்வலிமையும், அம்புகளினுடைய அக்ஷயமான தன்மையும், காண்டீவமென்னும் வில்லினுடைய அழியாமையும் (எல்லாராலும்) பார்க்கப்பட்டன. பல்குனன், துரோணகுமாரர் சாரத்வதரான கிருபர் இவர்களின் அஸ்

திரங்களனைத்தையும் அஸ்திரங்களால் தடுத்து எல்லாரையும் பப்பத்துப் பாணங்களால் தனித்தனி அடித்தான். அந்த அர்ஜுனனைத் துரோணபுத்திரர் இருபத்தைந்து பாணங்களாலும், விருஷஸேனன் ஏழுபாணங்களாலும், துரியோதனன் இருபதுபாணங்களாலும், கர்ண னும் சல்லியனும் மும்மூன்று பாணங்களாலும் அடிக்கடி அடித்துக் கொண்டும் கர்ஜித்துக்கொண்டும் விற்களை அசைத்துக்கொண்டும் நான்கு புறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். விரைவுள்ளவர்களான அந்த மகாரதர்கள் சூரியாஸ்தமயத்தை விரும்புகின்றவர்களாகி விரை வாக ரதசமூகத்தை நான்கு பக்கமும் நெருங்கச் செய்தார்கள். அவர்கள் எதிரில் சிங்கநாதஞ்செய்கின்றவர்களும் விற்களை அசைப் பவர்களுமாயிருந்துகொண்டு மேகங்கள் ஜலங்களாலே மலையின்மீது இறைப்பதுபோலப் பார்த்தன்மீது கூர்மையான அம்புகளாலே இறைத் தார்கள். வேந்தரே! அச்சமயத்தில் பரிகாயுதம்போன்ற கைகளை யுடையவர்களான அந்தச்சூரர்கள் தனஞ்சயனுடைய சரீரத்தில் அற் புதமான மகாஸ்திரங்களை விசேஷமாகப் பிரயோகித்தார்கள். பலவா னும் அவமதிக்க முடியாதவனும் ஸத்யமான விக்ரமமுள்ளவனுமான அர்ஜுனனும் அம்புக்கூட்டங்களால் அவைகளைத்தடுத்துத் திவ்ய மான அஸ்திரங்களை வெளிப்படுத்திக்கொண்டு உமது அந்தச் சேனை யைப் பெரும்பான்மையாகப் போர்வீரர்கள் கொல்லப்பட்டதாகச் செய்து ஸைந்தவனை அடைந்தான். அரசரே! பாரதரே! யுத்தத்தில் கர்ணன், பீமஸேனனும் ஸாத்யகியும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அர்ஜுனனை அம்புகளால் தடுத்தான். மிக்க புஜபலமுள்ள வனை பார்த்தன் எல்லா ஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே யுத்தகளத்தில் சூதபுத்ரனைப் பத்துப்பாணங்களால் திருப்பி யடித்தான். ஐயா! கர்ணனை ஸாத்யகி மூன்று பாணங்களாலும், பீம ஸேனன் மூன்று பாணங்களாலும், அர்ஜுனன் ஏழுபாணங்களாலும் அடித்தார்கள். மகாரதனனகர்ணன் அவர்களை அறுபது அறுபதுபாண ங்களால் திருப்பியடித்தான். மன்னரே! கர்ணனுக்கு அனேக வீரர்க ளோடு அப்படிப்பட்டயுத்தம் நேர்ந்தது. ஐயா! யுத்தகளத்தில் கர்ணன் ஒருவன் கோபங்கொண்டு மூன்றுரதிகர்களைத் தடுத்ததாகிய அவனு டைய ஆச்சரியமான யுத்தத்தை அவ்விடத்தில் கண்டோம். தோள்வலி மிக்கபல்குனனோ ரணகளத்தில் சூரியகுமாரனனகர்ணனை நூறுபாணங் களால் எல்லா மர்மஸ்தானங்களிலும் அடித்தான். அங்கங்களெல் லாம் ரக்தத்தால் நனைக்கப்பட்டவனும் பிரதாபசாலியும் வீரனுமான ஸூதபுத்ரன் பல்குனனை ஐம்பதுபாணங்களால் திருப்பியடித்தான்.

குந்திபுத்திரனை தனஞ்சயன் ரணகளத்தில் அவனுடைய அவ்விதமான லாகவத்தைக்கண்டு ஸகிக்காமல் அவனுடைய வில்லையறுத்து விரைபவனாகி ஒன்பது பாணங்களால் அவன் மார்பிலடித்தான். பிறகு, பிரதாபசாலியான ஸூதபுத்ரன் வேறு வில்லை எடுத்து எண்ணாயிரம் பாணங்களாலே பாண்டவனை மூடினான். அர்ஜுனன் கர்ணனுடைய வில்லினின்று உண்டாகின்ற ஒப்பற்ற அந்தச்சரமாரியைக் காற்றானது விட்டில்களை அழிப்பதுபோலப் பாணங்களால் அழித்து எல்லாயுத்த வீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கைச்சுறுசுறுப்பை வெளிப்படுத்திக்கொண்டு அம்புகளாலே ரணகளத்தில் கர்ணனை அப்பொழுது மூடினான். தனஞ்சயன் அவசரப்படக்கூடிய அந்தச் சமயத்தில் விரைவுள்ளவனாகி யுத்தத்தில் கர்ணனைக் கொல்வதற்காகச் சூரியன்போற் பிரகாசிக்கின்ற பாணத்தை (அவன்மீது) பிரயோகஞ்செய்தான். வேகத்தோடுவருகின்ற அந்த அம்பைத் துரோணபுத்ரர் கூர்மையுள்ள பிறைவாயம்பினால் அறுத்தார். அறுக்கப்பட்ட அவ்வம்பானது பூமியில் விழுந்தது. சத்துருக்களைக் கொல்லுகின்றவனான கர்ணனும் செய்ததற்குப் பிரதிசெய்யும் விருப்பத்தோடு அனேகவாயிரம் அம்புகளாலே பல்குனனை மறைத்தான். மகாரதர்களும் நரசிரேஷ்டர்களுமான அவ்விருவரும் விருஷபப்போலக் கர்ஜிப்பவர்களாகவும், பாணசமூகங்களாலே கண்ணுக்குப் புலப்படாதவர்களாகவும், ஒருவரையொருவர் அடிப்பவர்களாகவும், 'கர்ண! நான் பார்த்தன்; நீ நில்' என்றும், 'பல்குன! நான் கர்ணன்! நீ நில்' என்றும் சொல்லுகிறவர்களாகவும் நேராகச்செல்லுகின்ற அம்புகளாலே ஆகாயத்தை நன்றாக மூடினார்கள். யுத்தத்தில் இவ்வண்ணம் முட்போன்ற வார்த்தைகளாலே பரஸ்பரம் அதட்டுகின்றவர்களான அவ்விருவீரரும், விசித்ரமாகவும் சுறுசுறுப்பாகவும் நன்கு அடித்தார்கள்; எல்லா யுத்தவீரர்களும் சேர்ந்துள்ள யுத்தத்தில் (வியப்புடன்) பார்க்கத்தக்கவர்களானார்கள். மகாராஜரே! யுத்தபூமியில், ஸித்தர்களாலும் சாரணர்களாலும் பன்னகர்களாலும் புகழப்படுகின்ற அவ்விருவரும் பரஸ்பரம் வதத்தை விரும்பிக்கொண்டு யுத்தஞ்செய்தார்கள். மன்னரே! பிறகு, துரியோதனன் உம்மைச் சேர்ந்தவர்களைப்பார்த்து, 'வீரர்களே! ராதேயனை முயற்சியினால் காப்பாற்றுங்கள். அவன் இப்பொழுது அர்ஜுனனைக் கொல்லாமல் அல்லது ஜயிக்காமல் திரும்பமாட்டான்' என்றான். அரசரே! இந்தச் சமயத்தில் அர்ஜுனன் கர்ணனுடைய விக்ரமத்தைக் கண்டு காதுவரையில் இழுத்துவிடப்பட்ட நான்கு அம்புகளாலே அவனுடைய நான்கு குதிரைகளையும் யமலோகத்திற்கனுப்பினான். அந்த

அர்ஜுனன் பல்லத்தினாலே அவனுடைய ஸாரதியையும் தேர்த்தட்டி னின்று தள்ளி (அவனை) உமது புத்ரன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே அம்புகளால் மூடினான். யுத்தத்தில் குதிரைகளையிழந்த வனும் ஸாரதியையிழந்தவனும் (அர்ஜுனனுடைய) பாண ஸமூகத் தினால் மூடப்பட்டவனுமான கர்ணன் புத்திமயக்கங்கொண்டு செய்ய வேண்டியதை அறியவில்லை. மகாராஜரே! அவ்வாறு கர்ணன் ரதத்தை இழந்ததைக்கண்டு அஸ்வத்தாமா அப்பொழுது அவனை ரதத்தில் ஏறும்படிசெய்வித்து, மறுபடியும், அர்ஜுனனோடு போர்புரியச் செய் தார். பாரதரே! மத்ரராஜனும், முப்பது பாணங்களினால் கௌந் தேயனையடித்துப் பாணஸமூகத்தினால் அவனுடைய மார்க்கத்தையும் தடுத்தான். கிருபரோ இருபது பாணங்களால் வாஸுதேவரை யடித் துத் தனஞ்சயனைப் பன்னிரண்டு பாணங்களால் அடித்தார். மகா ராஜரே! ஸிந்துராஜன் நான்கு பாணங்களாலும், விருஷஸேனன் ஏழு பாணங்களாலும், தனித்தனியாகக் கிருஷ்ணனையும் பாண்டவனையும் யும் அடித்தார்கள். குந்திபுத்திரனான தனஞ்சயன் அவர்களை அவ் வாறே திருப்பியடித்தான். துரோணபுத்திரரை அறுபத்துநாலு பாணங்களாலும் மத்ரராஜனை நூறுபாணங்களாலும் ஸைந்தவனைப் பத்துப்பாணங்களாலும் விருஷஸேனனை மூன்றுபாணங்களாலும் சரத் வானுடைய குமாரரான கிருபரை இருபதுபாணங்களாலும் அடித்துப் பார்த்தன் ஸிம்மநாதஞ்செய்தான். உம்மைச்சேர்ந்தவர்களான அவர்கள் ஸவ்யஸாசியினுடைய பிரதிஜ்ஞையைக் கெடுக்கவிரும்பி ஒன்றுகூடி விரைவாக அவனை எதிர்த்தார்கள். பிறகு, அர்ஜுனன் நான்குபக்கங் களிலும் உம்மைச்சேர்ந்தவர்களைப் பயப்படும்படி செய்துகொண்டு வாருணாஸ்திரத்தை வெளிப்படுத்தினான். கௌரவர்கள் அம்புமழை யைப் பொழிந்துகொண்டு சிரேஷ்டமான ரதங்களோடு அந்தப் பாண்டு புத்திரனை எதிர்த்தார்கள். பிறகு, நெருங்கியதும் மிக்க பயங்கரமான தும் பாரதவீரர்களை மோகிக்கச்செய்கிறதும் விருத்தியடைகின்றது மான அந்த யுத்தத்தில் ராஜபுத்ரனான கிரீடியானவன் மதிமயக்கத் தையடையாமல் பாணஸமூகங்களைப் பிரயோகித்தான். எண்ணமுடி யாத மகிமையுள்ளவனும் மகாத்மாவுமான ஸவ்யஸாசி பன்னிரண்டுவரு ஷகாலம் அனுபவிக்கப்பட்ட துன்பங்களை நினைத்துக்கொண்டு கௌர வர்களைக் கொல்லக்கருதிக் காண்டீவத்தினின்றுவிடப்படும் அம்புக ளால் எல்லாத் திக்குக்களையும் மூடினான். கிரீடி கோபங்கொண்டு மஞ்சள்நிறமுள்ள நாண்கயிற்றோடுகூடின காண்டீவத்தினாலே பகை வர்களை அடித்தபொழுது ஆகாயம் ஜ்வலிக்கின்ற எரிநக்ஷத்திரத்

தோடுகூடியதாயிற்று. மரித்த ஸைனிகர்களுடைய சரீரங்களில் பக்ஷி
கள் விழுந்தன. பிறகு, மிக்க கீர்த்தியுள்ளவனும் பகைப்படைகளை
வெல்லுகின்றவனுமான கிரீடி பெரிதான வில்லினாலே அம்புகளைப் பிர
யோகித்து, உத்தமமான குதிரைகளின்மீதும் யானைகளின்மீதும் ஏறிச்
சுற்றிவருகின்ற கௌரவவீரர்களைப் பாணங்களால் கீழேதள்ளினான்.
பயங்கரமான காட்சியுள்ள அரசர்கள் யுத்தத்தில் பெரிய கதாயுதங்களை
யும் இரும்பினாலாகிய பரிகங்களையும் கத்திகளையும் வேல்களையும் (மற்
றும்) பெரிய ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு விரைவாகப் பார்த்தனை
நோக்கி ஓடிவந்தார்கள். யமனுடைய ராஜ்யத்தை விருத்திசெய்கின்ற
வனும் உமது வீரர்களைக் கொளுத்துகின்றவனுமான பார்த்தன், பிறகு,
ஊழிக்காலத்து மேகத்தின் ஒலிபோன்ற ஒலியுள்ளதும் பெரிதும்
மகேந்திரனுடைய வில்லைப்போன்றதுமான காண்டீவத்தை இருகைகளி
னாலும் இழுத்துக்கொண்டு அதிகமான அட்டஹாஸத்துடன் சென்
றான். பெரிய வில்லை ஏந்திய வீரனான அர்ஜுனன் பலத்தினால் மீறி
னவர்களும் ரதங்களுடனும் யானைகளுடனும் கூடியவர்களுமான அவர்
களையும் (மற்றும்) காலாட்களுடைய கூட்டங்களையும் எல்லா ஆயுதங்
களையுமிழந்தவர்களாகவும் உயிரையிழந்தவர்களாகவும் யமனுடைய ராஜ்
யத்தை விருத்திபண்ணுகின்றவர்களாகவும் செய்தான்.

---

## நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன் இருளுண்டுபண்ணியதும், ஜயத்ரதன் வெளிப்பட்டதும்,
அர்ஜுனன் ஜயத்ரதனுடைய தலையை அறுத்ததும், கிருஷ்ணன்
ஜயத்ரதனது தலையைத் தரையில் வீழ்த்தலாகாதென்பதும்,
அர்ஜுனன் அதற்குக் காரணங்கேட்டதும்.)

அரசரே! தனஞ்சயனாலே இழுக்கப்படுகின்ற அந்த வில்லினின்
றுண்டாகின்றதும் யமன் உரக்கக் கூவியழைப்பதுபோன்றதும் இந்திர
னுடைய வஜ்ராயுதத்தின் ஒலிபோன்றதும் மிக்க கோரமாயுள்ளதுமான
சப்தத்தைக்கேட்டுப் பயத்தினால் மனக்கலக்கமுற்றதும் அவ்வாறாக
நிலைதவறி அலைகின்றதுமான உமது அந்தச் சேனையானது ஊழிக்காற்
றினால் கலக்கப்பட்டதும் வீசுகின்ற அலைகளாலே அலைக்கப்படுகின்ற
தும் (ஆழத்தில்) மறைந்திருக்கிற மீன்களையும் முதலைகளையுமுடையது

மான ஸமுத்திரஜலம்போலாயிற்று. எல்லாப் பிராணிகளும் ஆகாயத்தில் வருகின்றவனும் உச்சிக்காலத்தை அடைந்தவனுமான சூரியனைப்போல் அர்ஜுனனைப் பார்ப்பதற்குச் சக்தியற்றவைகளாயின. பிருதையின் புத்திரனான அந்தத் தனஞ்சயன் எல்லாத்திக்குக்களிலும் ஒரே ஸமயத்தில் காணப்படுகின்றவனாகி எல்லா அஸ்திரங்களையும் காண்பித்துக்கொண்டு யுத்தத்தில் ஸஞ்சரித்தான். மகாராஜரே! லாகவத்தால் அர்ஜுனன் (அம்புகளை) எடுப்பதையும் பூட்டுவதையும் நாண்கயிற்றையிழுப்பதையும் (பாணங்களைப்) பிரயோகிப்பதையும் நாங்கள் காணவில்லை. மகாராஜரே! பிறகு, மிக்க பாகுபலமுள்ளவனான அர்ஜுனன் கோபங்கொண்டு எல்லாப் பாரதர்களையும் நடுங்கச்செய்துகொண்டு ஒருவராலும் நெருங்கமுடியாத ஐந்திராஸ்திரத்தை வெளிப்படுத்தினான். அதிலிருந்து திவ்யாஸ்திர மந்திரங்களால் மந்திரிக்கப்பட்டவைகளும் நெருப்பை முனையில்கொண்டு மிக ஜ்வலிக்கின்றவைகளுமான அம்புகள் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் வெளிப்பட்டன. காதுவரையில் இழுத்துவிட்டவைகளும் அக்னி சூரியன் இவற்றின் கிரணங்கள் போன்றவைகளுமான அம்புகளால் ஆகாயமானது எரிநக்ஷத்திரங்களால் சூழப்பட்டதுபோலப் பார்க்கமுடியாததாயிற்று. பிறகு, கௌரவர்களாலே உண்டுபண்ணப்பட்டதும் மற்றவர்களாலே மனத்தினால் நினைக்கவும் முடியாததுமான சஸ்திராந்தகாரத்தை, பாண்டவன், மிக்க சுறுசுறுப்புடன், பகலினுடைய தொடக்கத்தில் சூரியன் கிரணங்களாலே ராத்திரியிலுண்டான இருளை விரைவாகப் போக்குவதுபோல, திவ்யாஸ்திரங்களால் அபிமந்திரணஞ்செய்யப்பட்ட அம்புகளாலே பராக்ரமத்தை முன்னிட்டு நாசஞ்செய்தான். பிறகு, பிரபுவான அர்ஜுனன் சிறிய குட்டைகளிலுள்ள தண்ணீரைக் கோடைக்காலத்துச் சூரியன் போல ஜ்வலிக்கின்ற கிரணங்கள்போன்ற பாணங்களால் உமது ஸைனியத்தை நாசஞ்செய்தான். பிறகு, திவ்யாஸ்திரங்களை யறிந்தவனான அர்ஜுனனாலே விடப்படும் பாணங்களுடைய கிரணங்கள் உலகத்தைச் சூரியகிரணங்கள் வியாபிப்பதுபோலப் பகைவர்களுடைய ஸைனியத்தை வியாபித்தன. பிறகு, அர்ஜுனனாலே விடப்பட்டவைகளும் உக்ரமான தேஜஸுள்ளவைகளுமான பாணங்கள் பிரியமான பந்துக்கள்போல வீரர்களுடைய ஹிருதயங்களில் விரைவாக நுழைந்தன. சூரரென்று எண்ணங்கொண்டவர்களான உம்முடைய வீரர்கள் யுத்தத்தில் அந்த அர்ஜுனனை எதிர்த்து ஜ்வலிக்கின்ற நெருப்பை எதிர்த்து விட்டிற்பூச்சிகள் நாசமடைவதுபோல நாசம் அடைந்தார்கள். இவ்வாறு அந்தப் பார்த்தன் பகைவர்களுடைய உயிர்களையும் புகழ்களையும்

அழித்துக்கொண்டு சரீரமெடுத்துவந்த மிருத்யுவைப்போல யுத்தத்தில் ஸஞ்சாரஞ்செய்தான். அவன் அம்புகளாலே சில வீரர்களுடைய கிரீடங்களையும் வஸ்திரங்களையும் தோள்வளைகளுடன்கூடிய பெரிய புஜங்களையும் குண்டலங்களணிந்த இரண்டு காதுகளையும் அறுத்தான். பாண்டவன் யானையின்மீதுள்ள வீரர்களின் தோமரமேந்திய கைகளையும் குதிரையின்மீதுள்ள வீரர்களுடைய ஈட்டிபிடித்த கைகளையும் காலாட்களுடைய கேடகங்கள்தாங்கிய கைகளையும் தேராளிகளினுடைய விற்களுடன்கூடிய கைகளையும் ஸாரதிகளுடைய கொறடாக்கள் பிடித்த கைகளையும் அறுத்தான். அந்த யுத்தகளத்தில் தனஞ்சயன் நன்றாக ஜ்வலிக்கின்ற உக்ரமான பாணாக்னியுடன் கூடியவனாகி ஜ்வாலையின் நுனியில் நெருப்புப்பொறிகளுடன்கூடின ஜ்வலிக்கின்ற அக்னி போல விளங்கினான். தேவராஜனுக்கொப்பானவனும் ஆயுததாரிகளனைவருள்ளுஞ்சிறந்தவனும் ஒரேஸமயத்தில் எல்லாத்திக்குக்களிலும் ரதத்திலிருப்பவனும் புருஷசிரேஷ்டனும் மகாஸ்திரங்களைப் பிரயோகிக்கின்றவனும் பார்க்கத்தக்கவனும் ரதமார்க்கங்களில் நர்த்தனஞ்செய்கின்றவனும் வில்லின்நாணொலியும் தலத்வனியும் செய்பவனுமான அந்தத் தனஞ்சயனை அந்த அரசர்கள் முயற்சியுடையவர்களாகவிருந்தும் ஆகாயத்தில் நடுப்பகலில் நன்றாகத் தபிக்கின்ற சூரியனைப்போலப் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். ஜ்வலிக்கின்றவைவையும் உக்கிரமானவையுமான அம்புகளைத்தரித்த கிரீடியானவன் மாரிக்காலத்தில் மழைகளைப் பொழிகின்றதும் வானவில்லுடன் கூடியதுமான பெரிய மேகம்போல் பிரகாசித்தான். ஜிஷ்ணுவினால் உண்டுபண்ணப்பட்டதும் எவ்விதத்தினாலும் தாண்டமுடியாததும் மிகவுங் கோரமாயிருப்பதுமான அந்தமகாஸ்திரப்பிரவாஹத்தில் சிறந்தவர்களான யுத்தவீரர்கள் மூழ்கினார்கள். அரசரே! முகங்களறுக்கப்பட்டவைகளும் கைகளறுக்கப்பட்டவைகளுமான சரீரங்களாலும் மணிக்கட்டுவரையிலும் அறுக்கப்பட்டகைகளாலும் விரலில்லாமல் செய்யப்பட்ட முன்கைகளாலும் துதிக்கைநுனிகளறுக்கப்பட்டவைகளும் தந்தங்களறுக்கப்பட்டவைகளும் மதமிஞ்சியவைகளுமான யானைகளாலும் கழுத்துப்போனகுதிரைகளாலும் உடைக்கப்பட்டரதங்களாலும் அவ்வாறே நரம்பறுபட்டவர்களும் காலறுபட்டவர்களும் பூட்டுக்களறுபட்டவர்களும் அசைவற்றவர்களும் துடிக்கின்றவர்களுமான நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவுமுள்ள மற்றவர்களாலும் பயந்தவர்களுக்குப் பயத்தைவிருத்திபண்ணுகின்றதும் பிராணிஹிம்ஸையினால் மிருத்யுவுக்குப் பிரியமானதும் பெரிதுமான அந்தப் பார்த்தனுடைய யுத்தரங்

கத்தை முற்காலத்தில் ஜீவன்களை ஸம்ஹரிக்கின்ற ருத்ருடைய உத்யானத்தைப்போலக் கண்டோம். அந்த யுத்தபூமியானது ஓரிடத்தில் கத்திகளால் அறுத்துத்தள்ளப்பட்ட யானைகளுடைய துதிக்கைகளாலே ஸர்ப்பத்தோடு கூடியதுபோலவும் மற்றோரிடத்தில் வீரர்களுடைய பத்மம்போன்ற முகங்களாலே நிறைக்கப்பட்டு மாலைகளோடுகூடியதுபோலவும் விளங்கியது. நானாவிதமான தலைப்பாகைகளாலும் கிரீடங்களாலும் [1]கேயூரங்களாலும் [2]அங்கதங்களாலும் குண்டலங்களாலும் ஸ்வர்ணத்தினால் சித்திரிக்கப்பட்ட கவசங்களாலும் யானை குதிரைகளினுடைய பூஷணங்களாலும் இறைக்கப்பட்டிருக்கின்ற அனேக கிரீடங்களாலும் ஆங்காங்கு நிறைக்கப்பட்டு மிக்க ஆச்சரியகரமாயிருக்கின்ற அந்த யுத்தபூமியானது புதிய மணமகள்போல விளங்கியது. தனஞ்சயன், மஜ்ஜையும் மேதஸுமாகிற சேற்றையுடையதும் ரக்தவெள்ளத்தால் பிரவகிக்கின்றதும் பூட்டுக்களாலும் எலும்புகளாலும் ஆழ்ந்ததும் மயிர்களாகிற பாசிக்கொத்துக்களும் புல்தரைகளுமுள்ளதும் தலைகளும்கைகளுமாகிற கற்களைக்கரைகளிலுடையதும் நொறுக்கித்தள்ளப்பட்ட மார்பெலும்புகளால் நெருங்கியதும் நானாவிதமான கொடிமரங்களாலும் பதாகைகளாலும நிரம்பியதும் குடைகளும் விற்களுமாகிற பெரிய அலைவரிசைகளோடுகூடியதும் மரித்தவர்களுடைய பெரியவுடல்களையுடையதும் யானைகளுடைய தேகங்களால் நான்குபக்கமும்நிரம்பியதும் ரதங்களாகிற அனேகமதெப்பங்களால் நான்குபக்கத்திலும் வியாபிக்கப்பட்டதும் குதிரைக்கூட்டமாகிய கரையுள்ளதும் தேருருளைகளாலும் நுகத்தடிகளாலும் ஏர்க்கால்களாலும் அச்சுக்களாலும் மூக்கணைகளாலும மிகவும் உட்செல்ல முடியாததும் ஈட்டிகளும கத்திகளும் சக்திகளும் கோடாலிகளும் பாணங்களுமாகிற ஸர்ப்பங்களால் எவ்விதத்தாலும் நெருங்க முடியாததும் காக்கைகளும் கழுகுகளுமாகிற பெருமுதலைகளுள்ளதும் நரிகளாகிற சுறுமீன்களால் நிறைந்ததும் பருந்துகளாகிற அதிகபலமுள்ள முதலைகளையுடையதும் நரிகளுடைய ஊளைகளால் பயங்கரமானதும் ஆயிரக்கணக்காகக் கூத்தாடுகின்ற பிரேதம் பிசாசம் முதலான பூதங்களால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டதும் உயிரையிழந்த யுத்தவீரர்களுடைய அசைவற்ற அனேக சரீரங்களையடித்துக்கொண்டுபோகின்றதும் மிக்க பயங்கரமானதும் வைதரணீநதிபோல மிக்க கோரமாயிருக்கின்றதும் பயந்தவர்களுக்குப் பயத்தையுண்டுபண்ணுகிறதுமான ஒரு நதியை உண்டுபண்ணினான். ரணகளத்தில் வடிவமெடுத்துவந்த யமன்போன்ற அந்த

[1] [2]. தோளணியின் வகைகள்.

அர்ஜுனனுடைய அந்தப் பராக்கிரமத்தைக்கண்டு கௌரவர்களை இதற்குமுன் உண்டாகாதபயம் வந்தடைந்தது. பிறகு, பயங்கரமானசெய்கையில் நிலைபெற்றபாண்டவன் வீரர்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால் துண்டாக்கிக்கொண்டு தன்னைப் பயங்கரனாகக்காண்பித்தான். அரசரே! பிறகு அர்ஜுனன் சிறந்தரதிகர்களை விரைவாகத் தாண்டிச்சென்றான். உச்சிப்பொழுதில் ஆகாயத்தில் நன்றாகத்தபிக்கின்ற சூரியனைப்போல் பாண்டவனை எல்லாப்பிராணிகளும் பார்ப்பதற்குச் சக்தியற்றவையாயின. மகாத்மாவான அர்ஜுனனுடைய காண்டீவத்தினின்று தொடர்ச்சியாக யுத்தரங்கத்தில் வெளிப்படுகின்ற பாணசமூகங்களை ஆகாயத்தில் அன்னபக்ஷிகளினுடைய வரிசையைப்போல் கண்டோம். அரசரே! உக்கிரமானசெய்கையில் நிலைபெற்றவனான அர்ஜுனன் நான்குபக்கங்களிலும் வீரர்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால் தடுத்துத் தன்னைப் பயங்கரனாகக் காண்பித்துக்கொண்டு ஜயத்ரதனைக்கொல்லும் விருப்பத்தினால் நாராசங்களாலே மயங்கச்செய்துகொண்டு அந்தரதிகசிரேஷ்டர்களை அப்பொழுது தாண்டிச்சென்றான். அசசுதரை ஸாரதியாகக்கொண்ட தனஞ்சயன் எல்லாத்திக்குக்களிலும் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு இனியதோற்றமுள்ளவனாக ரதத்துடன் விரைவாக ஸஞ்சரித்தான். நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் ஆகாயத்தை அடைந்திருக்கின்ற மஹாத்மாவான (அந்தச்) சூரனுடைய பாணஸமூகங்கள், சுற்றுகின்றவைகள்போலக் காணப்பட்டன. அப்பொழுது மகாவில்லாளியான அர்ஜுனன் அம்பை எடுப்பதையும் தொடுப்பதையும் விடுப்பதையும் நாங்கள் காணவில்லை. ராஜரே! கௌந்தேயன் ரணகளத்தில் எல்லாத்திக்குக்களையும் அவ்வாறே எல்லாரதிகர்களையும் கலக்கிவிட்டு ஜயத்ரதனுடைய அருகில்சென்று அவனைப் படிந்தகணுக்களுள்ள அறுபத்துநாலுபாணங்களால் அடித்தான். அர்ஜுனன் ஸைந்தவனை எதிர்த்துச் செல்கின்றதைப்பார்த்து யுத்தவீரர்கள் ஸைந்தவனுடைய உயிரில் ஆசையற்றவர்களாகி யுத்தத்தினின்று திரும்பினார்கள். பிரபுவே! கதறஅடிக்கும் சண்டையில் உம்மைச்சேர்ந்தவன் எவனெவன் அர்ஜுனனையெதிர்த்தானோ அவனவனுடைய சரீரத்தில் உயிரைவாங்குகின்ற அர்ஜுனனுடைய அம்புகள் விழுந்தன. மகாரதனும் ஜயிக்கின்றவர்களுள் சிரேஷ்டனுமான அர்ஜுனன் அக்னிஜ்வாலைக்கொப்பான அம்புகளாலே உம்முடைய சைனியத்தைக் கபந்தங்களால் நிறைந்ததாகச் செய்தான். ராஜேந்திரரே! குந்திபுத்திரன், அப்பொழுது உம்முடைய நால்வகைச் சேனையையும் இவ்வாறு துன்பமடையும்படிசெய்து ஜயத்ரதனை நெருங்கியெதிர்த்

தான். கௌந்தேயன் துரோணபுத்திரரை ஐம்பதுபாணங்களாலும் விருஷஸேனனை மூன்றுபாணங்களாலும் அடித்தான்; கிருபரைத் தயையுடன் ஒன்பதுபாணங்களால் அடித்தான்; சல்யனைப் பதினாறுபாணங்களாலும் கர்ணனை முப்பத்திரண்டுபாணங்களாலும் ஸைந்தவனை அறுபத்துநாலுபாணங்களாலுமடித்துச் சிங்கம்போல் கர்ஜித்தான். காண்டீவமென்னும் வில்லேந்திய அர்ஜுனனால் அவ்வாறு அம்புகளால் அடிக்கப்பட்ட ஸைந்தவனோ, ஈட்டியினால் குத்தப்பட்டு மிக்ககோபங்கொண்டயானைபோல் அதனைப்பொறுக்கவில்லை. பன்றிக்கொடியையுடையவனான அந்தஸைந்தவன் கழுகிறகுகள் பூண்டவைகளும் நேராகச் செல்லுகின்றவைகளும் கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போன்றவைகளும் கருமானால் நன்றாகச் சாணைபிடிக்கப்பட்டவைகளுமான அம்புகளைக் காதுவரையிலுமிழுத்துப் பல்குனனுடையரதத்தின்மீது பிரயோகித்தான். அந்தஸைந்தவன் கோவிந்தரை மூன்றுநாராசங்களாலும் அர்ஜுனனை ஆறுநாராசங்களாலும் குதிரைகளை எட்டுநாராசங்களாலும் கொடியை ஓரம்பினாலுமடித்து மறுபடியும் யுத்தரங்கத்தில் அர்ஜுனன்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். அந்த அர்ஜுனன் ஸைந்தவனால் எய்யப்பட்ட அம்புகளை விரைவாக அழித்துவிட்டு ஒரே சமயத்தில் இரண்டு பாணங்களைப் பிரயோகித்துச் சரீரத்தினின்று ஸைந்தவனுடைய ஸாரதியின் தலையையும் நன்றாக அலங்கரிக்கப்பட்ட அவனுடைய துவஜத்தையும் அறுத்தான். தனஞ்சயனுடைய அம்புகளால் அடிக்கப்பட்டதும் கொடிமரம் அறுக்கப்பட்டதும் சந்திரன் போன்ற காந்தியுள்ளதும் மிகப்பெரியதுமான ஸிந்துராஜனுடைய அந்தப்பன்றிக்கொடியானது (பூமியில்) விழுந்தது. சூரியனைப்பார்ப்பவனும் கடைவாய்களை நக்கிக்கொள்பவனுமான அர்ஜுனன் காப்பவர்களாலே சூழப்பட்டிருக்கிற அந்த ஜயத்ரதனுக்கு (வதத்தை யுண்டுபண்ணக் கூடிய) ஸமயத்தைக்காணாமல் கோபத்தினால் கண்கள் சிவந்தவனும் வாயைத்திறந்திருப்பவனுமான யமன்போலானான்.

வாஸுதேவர் குந்திபுத்திரனான தனஞ்சயனைநோக்கி, 'பார்த்தசிரேஷ்டனே! ஒருவிதவியாஜமின்றி உன்னால் ஜயத்ரதன் கொல்லப்படவேமாட்டான். நான் சூரியனைமறைக்கும்விஷயத்தில் அதற்குரிய ஓர் உபாயத்தைச் செய்யப்போகிறேன். பிறகு, இங்கே ஸிந்துராஜன் 'சூரியன் மறைந்துவிட்டான்' என்றெண்ணுவான். பார்த்தா! பிறகு, இந்த ஸைந்தவனுக்குத் தனக்கு உயிர்கிடைத்ததாலும் (உன்) பிரதிஜ்ஞை அழிந்துபோவதாலும் ஆச்சரியமும் சந்தோஷமும் உண்டாகும். மூர்க்கனான அவன் அறியாமையாலே சூரியனை அஸ்தமயத்தை யடைந்தது

போல நினைத்துப் பிறகு உண்டாகும் சந்தோஷத்தினால் தன்னைக்காப் பாற்றிக்கொள்ளச் சக்தியுள்ளவனாகான். தனஞ்சய! அந்தஸமயத்திலே யே ஸூர்யனைப்பார்க்க விரும்புகின்ற அற்பனான ஜயத்ரதனை அவசியம் நீ அடிக்கவேண்டும்' என்றுகூறினார். கண்ணபிரான் பார்த்தனைநோக்கி இவ்வாறு சொல்லி, பிறகு, வெளிச்சத்தை விரைவாகவே [1] கவர்ந்தார். ஜனார்த்தனராலே ஸூர்யனை மறைக்கின்ற இருள் உண்டுபண்ணப்பட்டது. அரியாமையால் இருளைப்பார்த்துப் பாண்டவருடைய ஸைன்ய மானது மிக்கதுயரத்தை அடைந்தது. உம்முடைய யுத்தவீரர்கள் ஸந் தோஷத்தினால் நிரம்பின உள்ளத்தையுடையவர்களானார்கள். அரசரே! அப்பொழுது அந்தப்போர்வீரர்கள் அதிக ஸந்தோஷமுள்ளவர்களாகி ரணகளத்தில் முகங்களை உயரத்தூக்கிக்கொண்டு ஸூர்யனைப் பார்த்தார் கள். ராஜாவான அந்த ஜயத்ரதனும் ஸூர்யனைப் பார்த்தான். பிறகு, ஸூர்யனை அந்தஸிந்துராஜன் பார்க்கும்பொழுது கேசவர், 'ஸிந்துராஜன் தலையையும் கழுத்தையும் உயரத்தூக்கி ஸூர்யமண்டலத்தைப் பார்க் கிறான். அவனுடைய தலையை ஓர் அம்பினால் விரைவாக அரிந்துவிடு' என்று இவ்வாறுசொல்ல, அதனைக்கேட்ட அர்ஜுனன் கோபத்தினால் கண்கள் சிவந்து, கூர்மையுள்ளதும் தேவர்களாலுந் தாங்கமுடியாததும் அம்புப்பெட்டியில் படுத்திருப்பதும் கோரமானதும் இந்திரனுடைய வஜ்ரத்துக்கு ஸமமான ஒளிபொருந்தியதும் அதிகமாகக் கவசங்களைப் பிளக்குந்தன்மையுடையதும் எப்பொழுதும் சந்தனத்தாலும் புஷ்ப மாலைகளாலும் அர்ச்சிக்கப்பட்டதுமான ஓரம்பையெடுத்து ஸைந்தவன் ரதத்தைக்குறித்து உடனே விரைவாகப் பிரயோகம்செய்தான். காண் டீவத்தினின்று விடுபட்டு விரைவாகச்செல்லுகின்ற அவ்வம்பானது ஸைந்தவனுடைய தலையை, பருந்தானது மரத்தின் உச்சியிலிருந்து (வேறொரு) பறவையைக்கவர்வதுபோலக் கவர்ந்தது. தலை கீழேவிழுவ தற்குள், வாஸுதேவர் அர்ஜுனனைப்பார்த்து, 'பார்த்த! பார்த்த! இந் தத்தலையானது பூமியில் விழாதபடி நீ செய். குருச்ரேஷ்டனே! அதற் கும் காரணத்தைச் சொல்லுகிறேன்' என்றுசொன்னார். அவருடைய வசனத்தைக்கேட்டு அர்ஜுனன் விரைபவனாகிப் பகைவர்களுக்குத் துக்கமுண்டாவதற்காகவும் நண்பர்களுக்கு ஸந்தோஷமுண்டாவதற் காகவும் அஸ்த்ரமாலையுடன்கூடின அம்புகளால் அந்தஸைந்தவனு டையதலையை அவ்வாறே மேலேபோகும்படி செய்தான். அந்த அர்ஜு

[1] இங்கே சில புஸ்தகங்களில் பல பாடபேதங்கள் காணப்படுகின்றன. 'வாஸுதேவர் சக்ரத்தினால ஸூர்யனை மறைத்தார்' என்பது அவைகளுள் முக் கியமானது.

னன் அரசர்களை எதிர்த்துப் போர்புரிந்துகொண்டே நன்றாகவிளையாடு கின்றவன்போல் அந்தத்தலையை நெடுங்காலம் குறுக்கிலும் மேலும் கீழும் மறுபடி மேலும் கீழும் ஸஞ்சரிக்கச்செய்ததாகிய பெரிய ஆச்சரி யத்தை நாற்புறத்திலுமுள்ள அந்தச்சேனையானது வியப்புடன் பார்த் தது. பாண்டவன் அந்தஸைன்யம் பார்ப்பதின்பொருட்டு அந்த்தலை யை அம்புகளால் பந்துபோலத்தள்ளிக்கொண்டு ஸமந்தபஞ்சகத்திற்கு வெளியில் கொண்டுபோனான். அர்ஜுனனுடையபாணமாகிற காமபுள் ளதும் ரக்தமாகிறஜலத்தினால் நனைக்கப்பட்டதும் ஆகாயமார்க்கத்தில் இருக்கின்றதுமான ஜயத்ரதனுடைய முகத்தாமரையானது வித்யாதர னால் எறியப்பட்ட ஒருதாமரைமலர்போல் ஜனங்களால் பார்க்கப்பட் டது. வீரனான அந்தக்கிரீடி பிரதிஜ்ஞையை நிறைவேற்றிவிட்டு உதிக் கின்றசூரியன் இருளைநாசஞ்செய்வதுபோலவும் தேவராஜன் தேவசத் துருக்களை நாசஞ்செய்வதுபோலவும் (தன்) சத்துருக்களை நாசஞ்செய் தான். பிறகு பாண்டுபுத்ரன் கேசவரைநோக்கி, 'எவ்வளவுதூரம் இந் தத்தலையை நான் கொண்டுபோவேன்? ஏன் இந்தத்தலையைப் பூமியில் தள்ளக்கூடாது. இதனை எவ்விடம்போகும்படி செய்யவேண்டும்? சொல் லும். எந்தஇடத்தில் (போகும்படி) நீங்கள் சொல்லுகிறீர்களோ அந்த இடத்தில் இந்தத்தலையைச் சேர்ப்பிப்பதற்கு நான் வல்லமையுடைய வன்' என்று கூறினான்.

---

## நூற்றுநாற்பத்தெட்டாவது அத்யாயம்.

### ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு ஸைந்தவனுடைய தலையைக் கீழேதள்ளக் கூடாததன் காரணங்கூறியதும், அர்ஜுனன் அதனைக் கிருஷ்ண னுடைய கட்டளையினால் விருத்தக்ஷத்திரனுடையமடியில் தள்ளியதும், விருத்தக்ஷத்ரன் எழுந்திருக்க, ஸைந்தவ னுடைய தலைகீழேவிழுந்தவுடனே விருத்தக்ஷத்திர னுடைய தலை வெடித்துப்போதலும்.)

இந்தச் சமயத்திலேயே ஸூர்யன் வேகமாகச்செல்லும்பொழுது ஜனார்த்தனர் பரபரப்புடன் பாண்டவனைநோக்கி, 'பார்த்த! பார்த்த! இந்தத்தலையானது பூமியில் விழக்கூடாது. இதற்குக் காரணமான ஸைந்தவனைப்பற்றிய வரலாற்றை நீ உள்ளபடிகேள். ஸைந்தவனுடைய பிதா விருத்தக்ஷத்திரன் என்று உலகத்தில் பிரஸித்திபெற்றவன்.

அவன்கோரமான தவத்தினால் ஸைந்தவனைப் புத்திரனாக அடைந்தான். பகைவர்களைக் கொல்பவனான ஜயத்ரதனைப்பற்றி அசரீரவாக்கானது மறைந்துகொண்டு மேகம் துந்துபிவாத்தியம் இவற்றின்சப்தம்போன்ற சப்தத்தோடுகூடியதாக விருத்தக்ஷத்திரராஜனைநோக்கி, (பின்வருமாறு) கூறியது. 'பிரபுவே! ராஜனே! உன்னுடைய புத்திரன், குலம் சீலம் ஐம்பொறி அடக்கமுதலான நற்குணங்களாலே இரண்டு வம்சங்களுக்கும் தகுந்தவனாவான். உலகத்தில் எக்காலத்திலும் சூரர்களால் கொண்டாடப்பட்டவனும் மிக்க கோபங்கொண்டவனும் க்ஷத்திரிய சிரேஷ்டனும் பூமியில் பிரஸித்தனுமான ஒருசத்துருவானவன் இவன் தலையை அறுப்பான்' என்று சொல்லிற்று. பகைவரை அடக்குபவனான ஸிந்துராஜன் இந்த வார்த்தையைக்கேட்டு நெடுங்காலம் மனத்தில் ஆலோசித்துப் புத்திரசிநேகத்தினால் தூண்டப்பட்டவனாகி உறவினர்களனைவரையும்பார்த்து, 'எனக்குத் தவத்தின்பலனாவது மனஅடக்கத்தின் பலனாவது இருக்குமாகில் யுத்தரங்கத்தில் பெரிதான பொறுப்பை ஏற்றுப் போர்புரிகின்ற என்புத்திரனுடைய தலையை எவன் பூமியில் தள்ளுவனோ அவன்தலையும் நூறுதுணுக்காகச் சிதறப்போகிறது; ஸம்சயமில்லை' என்று சொன்னான். விருத்தக்ஷத்திரன் இவ்வாறு சொல்லிய பிறகு, ஜயத்ரதனை ராஜ்யத்தில் இருக்கச்செய்து, வனம் சென்று கடுந்தவம் புரிந்தான். வானரக்கொடியை யுயர்த்தியவனே! தேஜஸ்வியான அந்த விருத்தக்ஷத்திரன் இந்த ஸ்யமந்தபஞ்சகத்திற்கு வெளியில் கோரமானதும் ஒருவராலும் செய்யமுடியாததுமான தவத்தைச் செய்துகொண்டிருக்கிறான். வாயுபுத்திரனான பீமனுக்குத் தம்பியே! பாரத! பகைவர்களைக் கொல்லுகிறவனே! ஆதலால், நீ கோரமானதும் ஆச்சரியகரமான செய்கையுள்ளதுமான திவ்யாஸ்திரத்தினாலே சிந்துராஜனான ஜயத்ரதனுடைய குண்டலங்களோடுகூடிய தலையை மகாயுத்தத்தில் அறுத்து இந்த விருத்தக்ஷத்திரனுடைய மடியில் தள்ளு. அப்படியின்றி நீ இவனுடையதலையைப் பூமியில் தள்ளுவாயானால் உன்னுடையதலையும் நூறுதுண்டாகப் பிளந்து போகும்; ஸம்சயமில்லை. குருசிரேஷ்ட! திவ்யமான அஸ்திரத்தைக் கொண்டு நீ தவத்தில்நிற்கின்ற அந்த விருத்தக்ஷத்ரன் என்னுமரசன் இதனை அறியாதபடி செய். இந்திரநந்தன! மூவுலகங்களிலும் உன்னால் நிறைவேற்றத்தகாததும் செய்யத்தகாததும் யாதொன்றுமில்லை. தனஞ்சய! இந்த ஸைந்தவனுடைய தலையானது அம்புகளாலேயே விருத்தக்ஷத்திரன்மீது விழும்படியான உபாயத்தை நீ செய்யவேண்டும்' என்றுகூறினர்.

பாரதரே! பிறகு, அர்ஜுனன் ஜயத்ரதனுடையதலையைப் பாணத்தினால் அறுத்து ஸமந்தபஞ்சகத்திற்குவெளியில் கொண்டுபோனதாகிய பெரிதான ஆச்சரியத்தை நாங்கள் அங்குக்கண்டோம். ஐயா! தேஜஸுள்ளவனும் உமக்கு ஸம்பந்தியுமான விருத்தக்ஷத்திரராஜன் அந்த ஸமயத்தில் மாலையில்செய்யும் உபாஸனைகளைச் செய்துகொண்டிருந்தான். ஸந்தியோபாஸ்தி செய்துகொண்டிருக்கிற அந்த விருத்தக்ஷத்திரனுடையமடியில் கறுத்தமயிர்களுள்ளதும் குண்டலங்களோடுகூடியதுமான ஸிந்துராஜனுடையதலையைத் தள்ளினான். பகைவர்களை அடக்குகிறவரே! விருத்தக்ஷத்ரராஜன் அழகியகுண்டலங்களையணிந்த அந்தத்தலை தன்னுடையமடியில்விழுந்ததைப் பார்க்கவில்லை. பாரதரே! பிறகு, ஜபங்களைச்செய்து எழுந்திருக்கின்ற அந்த விருத்தக்ஷத்ரனுடையமடியினின்று அந்தத் தலையானது விரைவாகப்பூமியில்விழுந்தது. சத்துருக்களை அடக்குகின்றவரே! பிறகு, புத்திரனுடையதலை பூமியில்விழுந்தவுடனே, ராஜாவான அந்த விருத்தக்ஷத்திரனுடையதலையும் நூறுதுண்டாக வெடித்துச் சிதறிப்போய்விட்டது. பிறகு, எல்லாச் சேனைகளும் மிக்க ஆச்சரியத்தையடைந்தன. ஸ்ரீவாஸுதேவரும் மகாரதனான அர்ஜுனனைப் புகழ்ந்தார். பிறகு, ஸிந்துராஜனான ஜயத்ரதன் கொல்லப்பட்டதைப்பார்த்துப் பார்த்தனுடைய அந்தச் செய்கையினாலே எல்லாத்தேவர்களும் வியப்படைந்தார்கள். 'ஜனார்த்தனர் யுத்தரங்கத்தில் எவனுக்கு எப்பொழுதும் ரக்ஷகராகவிருக்கிறாரோ அந்த அர்ஜுனனுக்கு ஏன் எப்பொழுதும் ஜயமுண்டாகாது?' என்று பிராணிகள் எண்ணின. இதற்காகவே பாண்டவன் ஜயத்ரதனுடையதலையை முறைதவறாமல் அம்புகளாலேயே, ஸமந்தபஞ்சகத்திற்குவெளியில் கொண்டுபோய்த் தள்ளினான். பார்த்தன் அத்தகைய பெரிய காரியத்தைச்செய்து ஜயத்ரதனையுங்கொன்று பாசுபதாஸ்திரத்தை [1] உபஸம்ஹாரஞ்செய்வதற்கு ஆரம்பித்தான். பாரதரே! அந்த அஸ்திரத்தைக் கௌந்தேயன் உபஸம்ஹாரம் செய்யுங்காலத்திலும் குளிர்ச்சியுடையதும் நல்லவாஸனைபொருந்தியதுமான காற்று அங்கே ஆனந்திக்கும்படி செய்வதுபோல வீசியது. தேவர்கள் அந்த யுத்தத்தில் (அஸ்திரத்தினுடைய) பிரயோகத்தையும் உபஸம்ஹாரத்தையுங்கண்டு அதிகமான ஆச்சரியத்தையடைந்தார்கள்; பாண்டவனையும் புகழ்ந்தார்கள். வீரனும் பாண்டுபுத்திரனுமான தனஞ்சயன் அஸ்திரத்தினால் அந்தச்சூரர்களோடு இவ்வாறு போர்புரிந்து, பிறகு, ஜயத்ரதனுடையதலையைக் கவர்ந்துவிட்டான். 'அரசரே! ஸவ்யஸாசியினால்

---

[1] திருப்பி யழைத்தல்.

அந்தத்தலை தள்ளப்படுவதை யுத்தரங்கத்திலுள்ளவர்களும் உம்மைச் சேர்ந்தவர்களுமான சல்லியனும் கர்ணனும் கிருபரும் மதிமயக்கங் கொண்டு பார்த்தார்கள். ஸர்ப்பங்கள்போன்ற அம்புகளாலே அவன் தலை தள்ளப்பட்டவுடனே சரீரமானது எல்லா அரசர்களையும் துக்க மடையும்படிசெய்துகொண்டு பூமியில் விழுந்தது. யுத்தபூமியில் மகா ரதனை ஸிந்துராஜன் கொல்லப்பட்டதைப்பார்த்து உமது புத்திரர்க ளுடைய கண்களிலிருந்து துக்கத்தினால் கண்ணீர்வடிந்தது. மன்னரே! பாதரில் சிறந்தவரே! பிறகு, கிரீடியினாலே ஸிந்துராஜன் கொல்லப் பட்டவுடன், வாஸுதேவராலே அந்த இருளானது போக்கப்பட்டது. அரசரே! ராஜசிரேஷ்டரே! பரிவாரங்களோடுகூடின உமது புத்திரர் களாலே, 'இது வாஸுதேவன் செய்தமாயை' என்று பிறகு அறியப் பட்டது. அரசரே! அளவற்ற தேஜஸுள்ள பார்த்தன் எட்டு அக்ஷௌஹிணிகளைக்கொன்று உமது மருமகனாகிய ஸிந்துராஜனையும் இவ்வாறு கொன்றான். வேந்தரே! கொல்லப்பட்ட ஜயத்ரதனைக்கண்டு உமது புத்திரர்கள் துக்கத்தால் கண்ணீரை விடுத்தார்கள்; ஜயத்தில் ஆசையை ஒழித்தவர்களுமானார்கள். பாரதரே! ராஜரே! பார்த்த னால் ஜயத்ரதன் கொல்லப்பட்ட பிறகு, கேசவரும், மகாபாகுபலமுள் ளவனும் சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவனுமான தனஞ்சயனும், பீமனும், விருஷ்ணிகளுள் உத்தமனான ஸாத்யகியும், யுதாமன்யுவும், பராக்ரமசாலியான உத்தமௌஜஸும் தனித்தனியாகச் சங்கங்களை ஊதினார்கள். தர்மராஜாவான யுதிஷ்டிரர் பெரிதான அந்தச் சப்தத் தைக்கேட்டு, 'மகாத்மாவான அர்ஜுனனாலே ஸைந்தவன் கொல்லப் பட்டான்' என்று எண்ணினார்; பிறகு, (நால்வகை) வாத்யங்களுடைய கோஷத்தினாலும் தம்முடைய யுத்தவீரர்களை ஸந்தோஷிக்கச்செய்து கொண்டு யுத்தகளத்தில் யுத்தம்பண்ணும் விருப்பத்தால் பாரத் வாஜரை எதிர்த்தார். அரசரே! பிறகு, சூரியன் அஸ்தமித்தவுடனே துரோணருக்கு, ஸோமகர்களோடு மயிர் சிலிர்க்கும்படியானபோர் நடக்க ஆரம்பித்தது. வேந்தரே! ஸைந்தவன் கொல்லப்பட்ட பிறகு, எல்லா மகாரதர்களும், முயற்சியோடு பாரத்வாஜரைக் கொல்லவிரும்பிப் போர் புரிந்தார்கள். பாண்டவர்களோ ஸைந்தவனைக்கொன்று ஜயத்தை யடைந்து ஜயத்தினால் கர்வங்கொண்டு ஆங்காங்கு துரோணரை யெதிர்த்துப் போர்புரிந்தார்கள். பிறகு, மிக்க புஜபலமுள்ளவனான அர்ஜுனனும் ஸிந்துராஜனைக் கொன்றுவிட்டு ரதிகசிரேஷ்டர்களான உம்மைச்சேர்ந்த போர்வீரர்களோடு போர்புரிந்தான்" என்று கூறினான்.

---

## நூற்றைம்பத்தொன்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)



(அர்ஜுனன் தன்பாணத்தால் அடிக்கப்பட்டு மூர்ச்சித்த கிருபரைப்பற்றித் துக்கித்ததும் கிருஷ்ணார்ஜுனர்கள் யுதிஷ்டிரரிடம்வந்து ஜயத்ரத வதத்தைக் கூறியதும் பீமஸேனன் முதலானவர்கள் யுதிஷ்டிரரிடம் வந்ததும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! ஸவ்யஸாசியினால் வீரனான அந்த ஸைந்தவன் கொல்லப்பட்ட பிறகு, என்னைச் சேர்ந்தவர்கள் என்ன செய்தார்களென்பதை எனக்குச் சொல். என்னைச்சேர்ந்த எல்லா ஸைனிகர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஸவ்யஸாசியினால் ஸைந்தவன் எவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்டான்? மகாயுத்தத்தில் துரோணபுத்திரராலும், கிருபாசாரியராலும், கர்ணனாலும் நன்றாக ரக்ஷிக்கப்பட்டிருந்த ஸைந்தவன் கோரமான பல்குனனாகிற நெருப்பின் வாயில் எவ்வாறு பிரவேசித்தான்? ஸூத! சிறந்த வில்லாளியான ஸைந்தவன் கொல்லப்பட்ட பிறகு, மதிகெட்டவனான துரியோதனன், ஸகோதரர்களோடுசேர்ந்து என்ன செய்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினான்.

"பாரதரே! பார்த்தனால் யுத்தத்தில் ஸைந்தவன் கொல்லப்பட்டதைப்பார்த்து, சாரத்வதரான கிருபாசார்யர் கோபமீறினவராகி, பிறகு, பெரிதான பாணவர்ஷத்தைப் பாண்டவன்மீது இறைத்தார். அரசரே! துரோணகுமாரரும் ரதத்தின்மீதேறிப் பல்குனனை எதிர்த்தனர். ரதிகர்களுள் சிரேஷ்டவர்களான அவ்விரண்டு ரதிகர்களும் கூர்மையான அம்புகளாலே இருபக்கத்திலும் பல்குனன்மீது பொழிந்தார்கள். ரதிகர்களுள் உத்தமனும் மகாபாகுபலமுள்ளவனுமான தனஞ்சயன் மிகவும் பெரியவையான (அந்த) இரண்டு பாணவர்ஷங்களாலும் பீடிக்கப்பட்டுப் பெரிய துன்பத்தை அடைந்தான். குந்திபுத்திரனான அந்தத் தனஞ்சயன் யுத்தத்தில் குருவையும் குருபுத்திரரையும் கொல்லவிரும்பாமல் அப்பொழுது ஆசார்யருக்குரிய மரியாதையைச் செய்தான். அர்ஜுனன், துரோணபுத்திரர் கிருபர் இவர்களுடைய அஸ்திரங்களை அஸ்திரங்களால் தடுத்துக் கொல்வதில் நோக்கமற்றவனாகி ஸ்வல்பவேகமுள்ள பாணங்களை அவ்விருவரின்மீதும் பிரயோகித்தான். அதனால், அதிக பயங்கொள்ளாதவர்களான அவ்விருவரும் பாணங்களால் அதிகமாகப் பீடிக்கப்பட்டவர்களாகி, பாணங்கள் பலவா

யிருப்பதால் அதிகமான துன்பத்தை அடைந்தார்கள். அரசரே! பிறகு, சாரத்வதர் கௌந்தேயனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டு ரதமத்தியில்உட்கார்ந்து மூர்ச்சையடைந்தார். ஸாரதியானவன் யஜமான ரான கிருபர் பாணங்களால் பீடிக்கப்பட்டு நிலைதவறியிருப்பதை அறிந்து, 'இவர் மாண்டார்' என்றும் எண்ணி அவரை வேறிடத்திற் குக் கொண்டுசென்றான். மகாராஜரே! யுத்தரங்கத்தில் சாரத்வதரான அந்தக் கிருபர் தோல்வியடைந்தபொழுது, அச்வத்தாமாவும் அர்ஜு னனைவிட்டுவிட்டு வேறு ரதத்தைநோக்கிச் சென்றார். பார்த்தன் அம்புகளால் பீடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்திருக்கின்ற சாரத்வதரைக் கண்டு, 'என்னை இகழவேண்டும்; இகழவேண்டும்' என்று சொல்லிக் கொண்டே தீனமாகப் புலம்பினான். அர்ஜுனன் கண்ணீரினால் நிரம் பினமுகத்துடன் இரக்கமுற்றவனாகிப் பின்வரும் வார்த்தையை உரைக் கலானான். 'வம்சநாசத்தை உண்டுபண்ணுகின்றவனும் பாபியுமான துரியோதனன் பிறந்தவுடனே பேரறிவாளரானவிதுரர் இதனை அறிந்து அரசரைப்பார்த்து, 'குலத்தில் பாபியான இவனைப் பரலோகத்திற்கு அனுப்புவது நல்லது. இவனால்தான் கௌரவசிரேஷ்டர்களுக்குப் பெரிதானபயம் உண்டாகப்போகிறது' என்று சொன்னார். ஸத்திய வாதியான விதுரருடைய அவ்வசனமானது இப்பொழுது பலித்து விட்டது. ஆசாரியர் அவன் நிமித்தமாக இப்பொழுது சரதல்பத்தை யடைந்திருக்கின்றதைப் பார்க்கிறேன். க்ஷத்திரியர்களுடையமுறையை நிந்திக்கவேண்டும்; பலத்தையும் ஆண்மையையும் நிந்திக்கவேண்டும். என்னைப்போன்ற எவன்தான் ஆசார்யரானபிராம்மணருக்குத் துரோகத் தைச் செய்வான்? ரிஷிபுத்ரரும் எனக்கு ஆசாரியரும் துரோணருக்கு மிக்க நண்பருமான இந்தக் கிருபாசாரியர் என் பாணங்களால் பீடிக்கப் பட்டு ரதமத்தியில் படுத்திருக்கிறார். விருப்பமில்லாதவனான என்னால் அம்புகளால் மிக்க துன்பம்செய்யப்பட்டு ரதமத்தியில் மூர்ச்சையடை கின்ற இந்தக் கிருபாசாரியர் என் பிராணனைத்தொந்தரவு செய்கிறார் போலும். புத்திரசோகத்தினால் தபிக்கப்பட்டவனும், அம்புகளால் பீடிக்கப்பட்டுக் கஷ்டநிலைமையை அடைந்தவனுமான என்னாலே அவர் அனேக அம்புகளாலே அடிக்கடி அடிக்கப்பட்டார். என்னால் பாணங் களால் பீடிக்கப்பட்டவரும் மகாதேஜஸ்வியும் பார்ப்பவருமான இந்தக் கிருபாசாரியர் என்னைப் புத்ரவதம் துக்கிக்கச்செய்ததைவிட அதிக மாகத் துக்கிக்கச்செய்கிறார்; இது நிச்சயம். கோவிந்தரே! தமது தேரில் களைத்திருப்பவரும் பரிதாபநிலைமையடைந்தவருமான கிருபர் எவ்வித நிலைமையை அடைந்திருக்கிறாரென்பதைப் பாரும். அந்தப்

புருஷசிரேஷ்டர்கள் ஆசாரியரிடத்தினின்று வித்தையை அப்பியாசஞ் செய்து இவ்வுலகத்தில் அவர்களுக்கு வேண்டியவைகளைக் கொடுக்கிறார் களோ அவர்கள் தேவத்தன்மையை யடைகிறார்கள். எந்தப் புருஷாத மர்கள் ஆசார்யர்களிடத்தினின்று வித்தையைக் கற்றுக்கொண்டு அவர்களையே கொல்லுகிறார்களோ அந்தக் கெட்டநடையுள்ளவர்கள் நரகத்தையே அடைகிறார்கள். ரதத்தில் பாணவர்ஷத்தாலே ஆசாரிய ரான கிருபரை மூர்ச்சையடையும்படி செய்கின்ற என்னாலே நரகத்தின் பொருட்டு இப்பொழுது பாவகாரியம் நிச்சயமாகச் செய்யப்பட்ட முதலில், அஸ்திரத்தை உபதேசிக்கையில் கிருபாசாரியர் என்னைநோக்கி, 'கௌரவ்ய! எவ்விதத்தினாலும், ஆசாரியரிடத்தில் அம்புகளைப் பிர யோகிக்கலாகாது' என்று சொல்லியிருக்கிறார். ஸாதுவும் மகாத்மாவும் ஆசார்யருமான கிருபருடைய அப்படிப்பட்ட இந்த வாக்கியமானது யுத்தத்தில் அவர்மீதே பாணங்களைப் பிரயோகிக்கின்ற என்னால் அனுஷ்டிக்கப்படவில்லை. மிகவும் பூஜிக்கத்தக்கவரும் யுத்தத்தில் பின் வாங்காதவருமான அந்தக் கௌதமருக்கு வந்தனம். வார்ஷ்ணேயரே! இந்த ஆசாரியரான கிருபரை நான் அடித்தமையால என்னை இகழ வேண்டும்' என்று கூறினான்.

அரசரே! ஸவ்யஸாசி அந்தக் கிருபரைப்பற்றி அவ்வாறு புலம் பும்பொழுது ஹ்ருஷீகேசர் யுத்தமுனையில் நிற்கின்றவனும் பிரதிஜ் ஞையைத் தாண்டினவனுமான அர்ஜுனனைக் கட்டிக்கொண்டு, பிறகு, அவனைநோக்கி, 'ஜிஷ்ணுவே! பாக்யவிசேஷத்தினாலே உன்னால் பெரிய பிரதிஜ்ஞையானது நிறைவேற்றப்பட்டது. பாபியான விருத்த க்ஷத்திரன் புத்திரனோடுகூட விதிவசத்தினால் கொல்லப்பட்டான். ஜிஷ்ணுவே! பாரத! தார்த்தராஷ்டிரசேனையை எதிர்த்து யுத்தத்தில் தேவதைகளுடைய சேனையுந் தோல்வியடையும். இந்த விஷயத்தில் ஆலோசனைவேண்டாம். புருஷசிரேஷ்ட! உன்னைத்தவிர இந்தக் கௌரவசேனையோடு போர்புரியக்கூடிய ஒரு மனிதனை நான் ஆலோசித் தும் உலகங்களில் ஓரிடத்திலாவது காணவில்லை. திருதராஷ்டிர புத்திரனான துரியோதனன் நிமித்தமாக மகாபிரபாவமுள்ளவர்களும் அனேகர்களும் (பராக்கிரமத்தில்) உனக்குச் சமமானவர்களும் உன்னை மிஞ்சினவர்களுமான அரசர்கள் கூடியிருக்கிறார்கள். கவசமணிந்தவா களும் கோபங்கொண்டவர்களுமான அவர்கள் யுத்தத்தில் உன்னை யடைந்து ருத்ரன், இந்திரன், யமன் இவர்களுக்கொப்பான உன்னுடைய பலத்தையும் வீர்யத்தையும் எதிர்க்கமுடியவில்லை. இப்பொழுது சத்ருக்களை வாட்டுகிறவனை நீ தனிமையாயிருந்து செய்ததுபோன்ற

பராக்கிரமத்தை யுத்தத்தில் செய்வதற்கு ஒருவனும் சக்தியுடையவ னல்லன். இவ்வாறாகவே, துராத்மாவான கர்ணன் பரிவாரங்களுடன் கொல்லப்பட்டபொழுது சத்துருக்களை ஜயித்தவனும் சத்துருக்களைக் கொன்றவனுமான உன்னை மறுபடியும் உத்ஸாகப்படுத்துவேன்' என்று சொன்னார். அர்ஜுனன் கிருஷ்ணனைப்பார்த்து, 'மாதவரே! தேவர் களாலுந்தாண்டமுடியாததான இந்தப் பிரதிஜ்ஞையானது உமது அனுக்ரஹத்தால் என்னால் தாண்டப்பட்டது. கேசவரே! எவர்களுக்கு நீர் நாதராகவிருக்கிறீரோ அவர்களுக்கு ஜயமுண்டாவது ஆச்சரியம் அன்று. உம்முடைய அனுக்ரஹத்தினால் யுதிஷ்டிரர் அகண்ட பூமண் டலத்தையும் அடையப்போகிறார் விருஷ்ணிகுலத்தில் தோன்றினவரே! இந்தப்பாரம் உம்மைச்சேர்ந்தது. பிரபுவே! ஜயம் உம்முடையதே. மதுஸூதனரே! தேவரீர் எங்களை விருத்தியடையும்படி செய்யவேண் டும். நாங்கள் உமது கிங்கரர்கள்' என்று மறுமொழிகூறினான்.

இவ்வாறு சொல்லக்கேட்ட மாதவர், மெதுவாகக் குதிரைகளை நடத்திக்கொண்டு பார்த்தனுக்குக் குரூரமாயும் பெரியதாயுமுள்ள யுத்தகளத்தைக் காண்பித்தார். அவர் யுத்தத்தில் ஜயத்தையும் பிர சித்தமான பெரிய கீர்த்தியையும் விரும்புகின்றவர்களும் சூரர்களு மான அரசர்கள் உன்பாணங்களால் அடிக்கப்பட்டுப் பூமியில் படுத் திருக்கின்றார்கள். சஸ்திரங்களும் ஆபரணங்களும் சிதறினவர்களும், குதிரைகளும் ரதங்களும் யானைகளும் நாசமடைந்தவர்களும், உயிர் நிலைகள் நன்றாக அறுக்கவும் உடைக்கவும் பட்டவர்களும், மிக்க அதைர் யத்தை அடைந்தவர்களுமான வீரர்கள் உயிர்மட்டுமுள்ளவர்களும் அதுவுமற்றவர்களுமாயினர். உயிரிழந்த அரசர்களும் உயிருள்ளவர் கள்போல மிக்க காந்தியுள்ளவர்களாகக் காணப்படுகிறார்கள். அரசர் களுடைய பொன்னாலமைந்த குதைகளுள்ள அம்புகளாலும் கூர்மை யுள்ள பலவிதசஸ்திரங்களாலும் வாகனங்களாலும் ஆயுதங்களாலும் நிரம்பியிருக்கின்ற பூமியைப் பார். பாரத! கவசங்களாலும் கேடகங் களாலும் ஹாரங்களாலும் குண்டலங்களுடன்கூடின தலைகளாலும் தலைப்பாகைகளாலும் கிரீடங்களாலும் பூமாலைகளாலும் தோள் வளைகளாலும் சூடாமணிகளாலும் வஸ்திரங்களாலும் கழுத்தணி களாலும் ஒளிபொருந்திய பொன் அலங்காரங்களாலும் மற்றப் பலவித ஆபரணங்களாலும் யுத்தபூமி விளங்குகிறது. பரதஸ்ரேஷ் டனே! யுத்தத்தில் பலவாறான இருசுக்கட்டைகளாலும் அம்புத் தூணிகளாலும் பதாகைகளாலும் கொடிமரங்களாலும் (தேரிலுள்ள மற்ற) ஸாமக்கிரிகளாலும் பீடங்களாலும் அழகிய ஏர்க்கால்களாலும்

நொறுக்கப்பட்ட பலவிதவேலைப்பாடமைந்த சக்ரங்களாலும் அச்சுக்களாலும் நுகத்தடிகளாலும் பூட்டாங்கயிறுகளாலும் பூஷணங்களாலும் விற்களாலும் அம்புகளாலும் விரிப்புக்களாலும் ரத்னகம்பளங்களாலும் பரிகங்களாலும் அங்குசங்களாலும் சக்திகளாலும் பிண்டிபாலங்களாலும் அம்புப்பெட்டிகளாலும் சூலங்களாலும் கோடாலிகளாலும் ஈட்டிகளாலும் தோமரங்களாலும் குந்தங்களாலும் தடிகளாலும் சதக்னிகளாலும் புசுண்டிகளாலும் கத்திகளாலும் பாசுக்களாலும் உலக்கைகளாலும் முத்கரங்களாலும் கதைகளாலும் [1] குணபங்களாலும் ஸ்வர்ணத்தினால் சித்திரவேலை செய்யப்பட்ட சாட்டைகளாலும் சிறந்த யானைகளின் மணிகளாலும் பற்பலபூஷணங்களாலும் மாலைகளாலும் நானாவிதமான ஆபரணங்களாலும் அதிகவிலைபெற்றவஸ்திரங்களாலும் புரட்டித்தள்ளப்பட்ட அனேக வஸ்துக்களாலும் அந்த யுத்தபூமியானது ஜ்யோதிர்மண்டலங்களாலே சரத்காலத்திலுள்ள ஆகாயம்போல விளங்கியது. பூமியிலுள்ள அரசர்கள் பூமிநிமித்தமாகக் கொல்லப்பட்டுப் பிரியமான பிராணநாயகியைப்போலப் பூமியை அங்கங்களால் கட்டிக்கொண்டு தீர்க்கநித்திரைசெய்கிறார்கள். மலைகளினுடைய கொடுமுடிகள்போலப் பிரகாசிக்கின்றவைகளும் ஐராவதம்போன்றவைகளும் குகைத்துவாரங்கள்போன்ற புண்களிலிருந்து அதிகமான ரக்தத்தைப் பெருக்குகின்றவைகளும் குகைமுகங்களாலே உலோகப்பொடிகலந்த ஜலத்தைப் பெருக்குகின்ற மலைகள்போன்றவைகளும் பாணங்களால் அடிக்கப்பட்டுக் கீழேவிழுந்து வீரிடுகின்றவைகளுமான இந்த யானைகளைப்பார். பொன்னணிகளால் அலங்கரிக்கப்பட்டவைகளும் விழுந்து கிடப்பவைகளுமான இந்தக் குதிரைகளையும் பார். பிரபுவே! [2] கந்தர்வநகரத்தின் வடிவமுள்ளவைகளும் தேராளிகள்கொல்லப்பட்டவைகளும் கொடிமரங்களும் கொடித்துணிகளும் அச்சுக்களும் அறுக்கப்பட்டவைகளும் சக்கரத்தையிழந்தவைகளும் ஸாரதியையிழந்தவைகளும் ஏர்க்காலும் நுகத்தடியும் அறுக்கப்பட்டவைகளும் நொறுக்கப்பட்டவைகளும் அழகியவைகளும் விமானம்போன்ற தோற்றமுடையவைகளுமான போர்க்களத்தில் புரட்டித்தள்ளப்பட்ட தேர்களையும் பார். வீர! மஹாபாஹுவே! நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் கொல்லப்பட்டவர்களும் வில்லைக் கையிலுடையவர்களும் கேடகம்பிடித்தவர்களும் இரத்தத்தால் நனைக்கப்பட்டவர்களும் எல்லா அங்கங்களாலும் பூமியைக் கட்டிக்கொண்டு படுத்திருப்பவர்களும் புழுதிபடர்ந்

---

[1] ஒருவகை ஈட்டி.

[2] துரோணபர்வம் 72-வது பக்கம் குறிப்பிற்காண்க.

திருக்கின்ற தலைமயிரையுடையவர்களும் உன்னுடைய அம்புகளால் பிளக்கப்பட்ட சரீரமுள்ளவர்களும் வீரர்களுமான காலாட்களையும் பார். நரசிரேஷ்ட! கீழேதள்ளப்பட்டிருக்கிற யானைகளாலும் தேர்களாலும் குதிரைகளாலும் நெருங்கியதும், ரக்தத்தாலும் ஊனீராலும் மாம்ஸத்தினாலும் நிறைந்தசேறுள்ளதும், ராக்ஷஸர்களுக்கும் நாய்களுக்கும் செந்நாய்களுக்கும் பிசாசங்களுக்கும் ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறதும், கண்ணால் பார்க்கமுடியாததுமான ரணபூமியைப் பார். பிரபுவே! ரணகளத்தில் பெரிதும் கீர்த்தியை விருத்திபண்ணக்கூடியதுமான இப்படிப்பட்ட செய்கையானது உன்னிடத்திலும் மகாயுத்தத்தில் தைத்யர்களையும் தானவர்களையும் கொல்லுகின்றவனும் தேவசிரேஷ்டனுமான இந்திரனிடத்திலும் பொருந்தியிருக்கிறது' என்று கூறினார்.

இவ்வாறு வாஸுதேவர் யுத்தபூமியை அர்ஜுனனுக்குக் காண்பித்துக்கொண்டு கூடியிருக்கிற தம்மவர்களுடன் சேர்ந்து (பிறகு) பாஞ்சஜன்யத்தை ஊதினார். ஸாத்யகியும் பாண்டுபுத்திரனான பீமஸேனனும் பாஞ்சாலராஜகுமாரர்களான யுதாமன்யு, உத்தமௌஜஸ் இருவரும் பார்த்தனுக்கு எதிரில் வந்தார்கள். அந்த ரதிகர்கள் (மற்ற) அரசர்களுடன் சேர்ந்து துரோணபுத்திரரையும் கர்ணனையும் பாணங்களால் தடுத்து ராஜாவானயுதிஷ்டிரர் இருக்குமிடத்திற்கு வந்துசேர்ந்தார்கள். சத்துருக்களை ஸம்ஹரிக்கின்ற ஜனார்த்தனர் கிரீடியின்பொருட்டுச் சத்துருக்களால் (நிறைந்திருக்கின்ற) அந்த யுத்தபூமியைக் காண்பித்துக்கொண்டே பாண்டுபுத்திரரும் அஜாதசத்ருவுமான யுதிஷ்டரரிடம் விரைவாக வந்து ஜயத்ரதன் கொல்லப்பட்டதைத் தெரிவித்தார்.

---

## நூற்றைம்பதாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் தம்மை வணங்கிய கிருஷ்ணனையும் பீமனையும் அர்ஜுனனையும் ஸாத்யகியையும் தழுவியதும், கிருஷ்ணனுக்கும் யுதிஷ்டிரருக்கும் ஸல்லாபமும்.)

பார்த்தனாலே ஸைந்தவன் கொல்லப்பட்டபிறகு, மிக்க மனமகிழ்ச்சியுற்ற ஸ்ரீ வாசுதேவர் தர்மராஜனுக்குப் புத்திரரும் அரசருமான யுதிஷ்டிரரிடம் வந்து வந்தனஞ்செய்து, 'புருஷோத்தமரே! ராஜசிரேஷ்டரே! நீர் பாக்கிய விசேஷத்தினால் சத்துருக்களைக் கொன்று மேன்மையடைகின்றீர். உமது இளைய ஸகோதரனான அர்ஜுனன்

பாக்யவிசேஷத்தினால் பிரதிஜ்ஞையைத் தாண்டினான்' என்று கூறினார். பாரதரே! கிருஷ்ணனால் இவ்வாறு சொல்லப்பட்டவரும் சந்தோஷத்தையடைந்தவரும் சத்துரு பட்டணங்களை ஜயிப்பவருமான யுதிஷ்டிரராஜர், பிறகு கண்களில் ஆனந்தபாஷ்பம்ததும்ப ரதத்தினின்று குதித்து ஸ்ரீ வாஸுதேவரையும் தனஞ்சயனையும் அப்பொழுது கட்டிக்கொண்டு தாமரைமலருக்கு ஒப்பான ஒளியுள்ள பரிசுத்தமான தம்முகத்தைத் துடைத்து வாஸுதேவரையும பாண்டுபுத்திரனை தனஞ்சயனையும் நோக்கிக் கூறலானார். 'தாமரைக்கண்ணரே! உம்மிடத்தினின்று பிரியமான இந்த வார்த்தையைக்கேட்டு, கடலைக்கடக்க எண்ணங்கொண்ட மனிதன்போல் நான் ஸந்தோஷத்தினுடைய முடிவைக் காணவில்லை. மாதவரே! புத்திமானான பார்த்தனாலே மிக்க ஆச்சரியகரமான இந்தக் காரியம் செய்யப்பட்டது. யுத்தத்தில் மேற்கொண்ட கார்யத்தைச் செய்துமுடித்த மகாரதர்களான உங்களிருவரையும் பாக்ய விசேஷத்தால் யான் காண்கிறேன். பாபியும் மனிதரில் இழிந்தவனுமான ஸைந்தவன் பாக்கியத்தால் கொல்லப்பட்டான் பகைவர்களுடைய கூட்டங்களும் பாக்யவிசேஷத்தினால் துக்கசமுத்திரத்தில் அமிழ்ந்தன. கிருஷ்ணரே! கோவிந்தரே! உம்மால் காக்கப்பட்டு, பாபியான ஜயத்ரதனைக் கொன்ற அர்ஜுனன் எனக்கு அதிகமான பிரீதியைப் பாக்யவிசேஷத்தினால் உண்டாக்கினான். ஆனால் உம்மை அடுத்த எங்களுக்கு இது அதிக ஆச்சரியமன்று. மதுஸூதனரே! ஸர்வலோக குருவான உம்மை நாதராகக் கொண்டவர்களுக்கு மூவுலகங்களிலும் செய்ய முடியாதது எதுவுமில்லை. கோவிந்தரே! முற்காலத்தில் இந்திரன் உமதருளால் அஸுரர்களை ஜயித்ததுபோல நாங்களும் உமதருளாலேயே பகைவர்களை ஜயிக்கப்போகிறோம். விருஷ்ணிவம்சத்தில் தோன்றியவரே! கௌரவத்தைக் கொடுப்பவரே! எவர்கள்விஷயத்தில் நீர்மகிழ்ச்சியுடனிருக்கிறீரோ அவர்களுக்குப் பூமியினுடைய விஜயமானாலும், அல்லது, மூவுலகங்களினுடைய விஜயமேயானாலும் நிச்சயமே. தேவநாதரே! மாதவரே! நாதராயுள்ள தேவரீர் எவர்கள்விஷயத்தில் ஸந்தோஷமடைகிறீரோ அவர்களுக்குப் பாவமாவது யுத்தத்தில் தோல்வியாவது உண்டாவதில்லை. ஹ்ருஷீகேசரே! உம்முடைய அனுக்கிரஹத்தினாலேயே தேவகணங்களுக்கெல்லாம் நாதனும் ஸ்ரீமானுமான இந்திரன் யுத்தமுனையில் மூவுலகங்களின் வெற்றியையும் பெற்றான். வாஸுதேவரே! உமது அனுக்கிரஹத்தினாலேயே தேவர்களும் தேவர்களின் தலைவர்களும் மரணமில்லாமலிருக்கும் தன்மையைப்பெற்று அழிவற்ற உலகங்களையும் அடைந்திருக்கிறார்கள். தேவரீர் எல்லா

விதத்தாலும் எங்களுக்குப் பிரியங்களிலும் ஹிதங்களிலும் நிலைபெற்றிருக்கிறீர். உபேந்திரரே! அஸுரர்களைக் கொல்வதற்காக இந்திரனை அடுத்துத் தேவர்களால் ஆயுதமெடுக்கப்பட்டதுபோல உம்மை ஆதாரமாகக்கொண்டே எங்களால் யுத்தத்தில் ஆயுதமெடுக்கப்பட்டது. ஜநார்த்தனரே! இந்தப் பல்குனன் உம்முடைய புத்திபலத்தாலும் வீர்யத்தாலும் இந்தக்காரியத்தைச்செய்தான். இது தேவர்களாலும் செய்ய முடியாதது. மாதவரே! பால்யம்தொடங்கி மனிதர்கள் செயற்கரியவைகளும் தேவர்களுக்குரியவைகளுமான உமது பெருஞ்செய்கைகள் பலவற்றை நான் கேட்டிருக்கிறேன். சத்துருக்களையழிப்பவரே! உமது அநுக்ரஹத்தினால் உண்டான வல்லமையினாலே அப்பொழுதே சத்துருக்கள் கொல்லப்பட்டார்களென்றும் பூமி அடையப்பட்டதென்றும் அறிந்துகொண்டேன். இந்திரன் ஆயிரக்கணக்கான அஸுரர்களைக் கொன்று தேவராஜாவாயிருக்கும் நிலைமையைப்பெற்றான். ஹ்ருஷீகேசரே! வீரரே! உம்முடைய அநுக்கிரஹத்தால் ஜங்கமஸ்தாவரங்களடங்கிய உலகமானது தன்வழியில் நிலைபெற்று ஜபங்களிலும் ஹோமங்களிலும் தவறாமலிருந்துவருகிறது. மிக்கபுஜபலமுள்ளவரே! நரோத்தமரே! முற்காலத்தில் இவ்வுலகம்முழுவதும் ஒரே ஸமுத்ரமாகவும் இருள்நிறைந்ததாகவுமிருந்தது. தேவரீருடைய அநுக்கிரஹத்தினால் உலகமானது படைக்கப்பட்டது. ஹ்ருஷீகேசரே! எல்லாவுலகங்களையும் படைப்பவரும் அழிவற்றவரும் பரமாத்மாவுமான தேவரீரைப் பார்க்கிறவர்கள் ஒருபொழுதும் மதிமயக்கமடையார்கள். ஆதிகால முதலிருக்கின்றவரும் உத்தமானதேவரும் தேவதேவரும் அழிவில்லாதவரும் ஸுரகுருவுமான தேவரீரைச் சரணமடைந்தவர்கள் ஒருபொழுதும் புத்திமயக்கமடையார்கள். ஹ்ருஷீகேசரே! ஆதி அந்தமில்லாதவரும் தேவரும் உலகத்தைப் படைத்தவரும் அழிவற்றவருமான தேவரீரிடத்தில் பக்திசெய்கிறவர்கள் ஆபத்துக்களைத் தாண்டுகிறார்கள். புராணரும் பரமபுருஷரும் மேலானவர்களுக்கெல்லாம் மேலானவரும் ஸர்வோத்தமருமான தேவரீரைச் சரணமடைகிறவனுக்கு உத்தமமான ஐஶ்வர்யமானது உண்டாகிறது. நான்குவேதங்களும் யாரைக் கானம்பண்ணுகின்றனவோ, எவர் வேதங்களில் கானம்பண்ணப்படுகிறாரோ அந்தப் பரமாத்மாவான தேவரீரை நான் சரணம் அடைந்து ஸர்வோத்தமமான ஐஶ்வர்யத்தை அடைகிறேன். பரமேஶ்வரரே! சிறந்த ஈசர்களுக்கும் ஈசரே! விலங்குகளுக்கும் மனிதர்களுக்கும் நாதரே! ஸர்வேசுவரர்களுக்கெல்லாம் ஈஶ்வரரே! ஈஶ்வரருக்கும் ஈசரே! புருஷோத்தமரே! உமக்கு வந்தனம். ஈசருக்கு ஈசரே! அர

சர்களுக்கு ஈஶ்வரரே! பிரபுவே! மாதவரே! எல்லாவற்றையும் படைத்து அழிக்கிறவரே! ஸர்வஸ்வரூபரே! விசாலமான கண்களை யுடையவரே! நீர் மேன்மையடையவேண்டும். எவர் தனஞ்சயனுக்குத் தோழரோ, எவர் தனஞ்சயனுக்கு ஹிதரோ, எவர் தனஞ்சயனுக்கு ரக்ஷகரோ அவரைச் சரணமடைந்தவன் ஸுகமாக விருத்தியடைகிறான். குற்றமற்றவரே! தேவரீருடைய சரித்திரத்தையறிந்தவரும் புராண ரிஷியுமான மார்க்கண்டேயர் முன்பு உமது மாஹாத்மியத்தையும் செய்கையையும் கூறியிருக்கிறார். அஸிதரும் தேவலரும் மகாதபஸ்வியான நாரதரும் எனக்குப் பாட்டனரான வியாஸரிஷியும் தேவரீரை உத்தமமான தேவதையென்று கூறுகிறார்கள். தேவரீர் தேஜஸ்; தேவரீர் பரபிரம்மம்; தேவரீரே ஸத்யம்; தேவரீரே பெருந்தவம்; தேவரீரே சிரேயஸ்; தேவரீரே சிறந்த கீர்த்தி; அவ்வாறே தேவரீர் உலகத்திற்குக் காரணமானவஸ்து; தேவரீரால் ஸ்தாவரஜங்கம வடிவமான இவ்வுலகம் அனைத்தும் படைக்கப்பட்டது. பிரளய காலம்வந்தவுடன் மீண்டும் உம்மையே அடைகிறது. உலகங்களுக்குத்தலைவரே! வேதங்களையறிந்த ஜனங்கள், தேவரீரை ஆதியந்தமற்றவரென்றும் தேவரென்றும் உலகத்துக்கு நாதரென்றும் படைத்தவரென்றும் பிறப்பற்றவரென்றும் அவ்யக்தஸ்வரூபியென்றும் சொல்லுகின்றனர். பஞ்சபூதஸ்வரூபியும் மகாத்மாவும் முடிவற்றவரும் நான்கு பக்கங்களிலும் முகங்களுள்ளவரும் ரஹஸ்யமான ரூபமுள்ளவரும் ஆதியானஜகந்நாதரும் நாராயணரும் பரரும் தேவரும் பரமாத்மஸ்வரூபியும் ஈஶ்வரரும் ஞானத்திற்குக் காரணரும் பாவங்களை அபகரிக்கின்றவரும் உலகமனைத்தும் வியாபித்திருக்கின்றவரும் முமுக்ஷுக்களுக்கு முக்கியகதியாயிருப்பவரும் பரமரும் புராணபுருஷரும் புராணபுருஷர்களுள்ளும் சிறந்தவருமான தேவரீரைத் தேவர்கள்கூட அறியவில்லை. ஸ்வர்க்கத்திலும் இவ்வுலகிலும் சென்றவைகளும் வருபவைகளுமான தேவரீருடைய இவைமுதலான குணங்களையும் செய்கைகளையும் கணக்கிடுபவன் ஒருவனுமில்லை. எல்லாக் குணங்களோடும் கூடினவரான தேவரீர் எங்களுக்கு ஸுஹிருத்தாக ஏற்படுத்தப்பட்டமையால் இந்திரன் தேவர்களைக் காப்பதுபோலத் தேவரீர் எங்களை எல்லா விதத்தாலும் காக்கவேண்டும்' என்று கூறினர்.

மிக்க புகழுள்ளவரும் ஜனார்த்தனரும் ஹரிஸ்வரூபியுமான ஸ்ரீகிருஷ்ணர், தர்மராஜர் இவ்வாறு சொல்லியதைக்கேட்டுத் தகுந்ததான இவ்வாறான வசனத்தை மறுமொழியாகக்கூறலானர். 'உம்மு

டைய கடுந்தவத்தாலும் உத்தமமான தர்மத்தினாலும் ஸாதுத் தன்மையாலும் கபடமின்மையாலும் பாவியான ஜயத்ரதன் கொல்லப்பட்டான். புருஷசிரேஷ்டரே! இந்த ஜிஷ்ணுவானவன் உம்முடைய தியான (மாஹிறகவச) த்தினால் மூடப்பட்டவனாகி ஆயிரக்கணக்கான வீரர்களைக்கொன்று ஜயத்ரதனைக்கொன்றான். திறமையிலும் கைவன்மையிலும் அவ்வாறே கலங்காமையிலும் சுறுசுறுப்பிலும் வீணாகாத புத்திசாலித்தனத்திலும் ஓரிடத்திலும் பார்த்தனுக்கு ஸமமானவன் இல்லை. பரதசிரேஷ்டரே! ஆதலால், உம்முடைய தம்பியான இந்த அர்ஜுனன் இப்பொழுது யுத்தத்தில் கௌரவசைனியத்தை நாசஞ்செய்து ஸைந்தவனுடைய தலையை அறுத்தான்' என்றார். அரசரே! பிறகு பிரபுவான தர்மபுத்திரர் அர்ஜுனனைக் கட்டிக்கொண்டு அவன் முகத்தைத் துடைத்துக் களைப்பாறச்செய்தார். 'பல்குன! சகிக்கமுடியாததும் இந்திரனோடுகூடின தேவர்களாலும் சிறிதும் பொறுக்கமுடியாததுமான மிக்கபெரிதான காரியத்தைச் செய்தாய். பகைவரைக் கொல்பவனே! பாக்யவிசேஷத்தினால் பகைவரைக்கொன்று பெரும்பாரத்தைத் தாண்டினாய். பாக்யவிசேஷத்தினால் ஜயத்ரதனைக்கொன்று பிரதிஜ்ஞை ஸத்தியமாகச் செய்யப்பட்டது' என்றார். பூபதியும் மிக்க புகழுள்ளவருமான தர்மராஜர் அர்ஜுனனைப்பார்த்து இவ்வண்ணம் சொல்லிவிட்டு நல்ல வாஸனையுள்ள சுத்தமான கையினாலே அவன் முதுகைத் தடவிக் கொடுத்தார். இவ்வாறு சொல்லியதைக் கேட்டு மஹாத்மாக்களான அந்தக் கேசவ பாண்டவரிருவரும் அப்பொழுது பூமிக்கு நாதரான தர்மராஜரைப்பார்த்து, 'அரசரே! உமது கோபத்தீயால் பாவியான ஜயத்ரதன் எரிக்கப்பட்டான். யுத்தகளத்தில் மிகவும் பெரிதான தார்த்தராஷ்டிரர்களுடைய ஸேனையும் தாண்டப்பட்டது' என்றுசொல்ல, யுதிஷ்டிரர், 'கேசவரே! சத்துருக்களை அழிப்பவரே! இந்தக்கௌரவர்கள் உம்முடைய குரோதத்தினால் அடிக்கப்பட்டவர்களாகிக் கொல்லப்பட்டார்கள்; கொல்லப்படுகிறார்கள்; அழியவும் போகிறார்கள். வீரரே! கோபமுடைய கண்பார்வையினாலேயே சத்துருக்களைக் கொல்கிறவரான உம்மைத் துர்ப்புத்தியுடையவனான துரியோதனன் கோபிக்கச் செய்து மித்ராகளுடனும் பந்துக்களுடனும் யுத்தத்தில் பிராணனை விட்டுப் போகிறான். முன்பு தேவர்களாலும் ஜயிக்கமுடியாத கௌரவர்களுக்குப் பிதாமகரான பீஷ்மாசாரியர் உம்முடைய குரோதத்தால் அடிக்கப்பட்டுச் சரதல்பத்தில் படுத்திருக்கிறார். மாதவரே! எவர்கள் விஷயத்தில் தேவரீர் கோபங்கொள்ளுகிறீரோ அவர்கள் சத்துருக்களை ஸம்

ஹாரம் செய்யும் வலிமைபொருந்தியவர்களாயிருந்தாலும் அவர்களை ஜயம் அணுகாது. அவர்கள் மிருத்யுவசத்தையடைந்தவர்களே. கர்வத்தை யழிக்கிறவரே! எவர்கள் விஷயத்தில் தேவரீர் கோபங்கொள்ளுகிறீரோ அவர்களுடைய ராஜ்யமும் உயிரும் ஐசுவரியமும் பிள்ளைகளும் பலவித ஸௌக்யங்களும் அதிசீக்ரத்தில் அழிந்துவிடுகின்றன' என்று கூறினார். பகவான், 'பகைவர்களைத் தவிக்கச்செய்பவரே! எப்பொழுதும் ராஜதர்மத்தில் நிலைபெற்றவராகியநீர் கோபமடைந்ததனாலேயே புத்திரர்களோடும் பசுக்களோடும் பந்துக்களோடும் கூடின கௌரவர்களை அழிந்தவர்களென்றே நான் எண்ணுகிறேன்' என்று சொன்னார். பிறகு, மகாபாகுபலமுள்ளவனான பீமனும் மகாரதனான ஸாத்யகியும, பாணங்களால் காயப்படுத்தப்பட்டவர்களும் பெரிய வில்லைக் கையில்பிடித்தவர்களும் பாஞ்சால்யர்களால் சூழப்பட்டவர்களுமாக மூத்தவரும் குருவுமான தர்மராஜரை அபிவாதனஞ்செய்து பூமியில் நின்றார்கள். அஞ்சலிபந்தம் செய்துகொண்டு முன்னிலையில் நிற்கின்ற அந்தப்பீமன் ஸாத்யகியென்ற இரண்டு வீரர்களையுங்கண்டு சந்தோஷமடைந்தவரான கௌந்தேயர் அவ்விருவரையும் புகழ்ந்தார். துரோணராகிற முதலையிருப்பதினால் நெருங்கமுடியாததும் கிருதவர்மாவாகிற சுறாமீனுக்கிருப்பிடமாயுள்ளதுமான கௌரவஸைனியமாகிற சமுத்திரத்தினின்று விடுபட்ட சூரர்களான உங்களிருவரையும் நான் பாக்யவிசேஷத்தால் கண்டேன். யுத்தத்தில் பூமியிலுள்ள எல்லா அரசர்களும் பாக்யத்தினால் ஜயிக்கப்பட்டார்கள். யுத்தத்தில் வெற்றிபெற்றவர்களான உங்களிருவரையும் பாக்யத்தினால் நான் பார்க்கிறேன். யுத்தத்தில் துரோணரும் மகாபலயாலியான க்ருதவர்மாவும் பாக்யவிசேஷத்தால் ஜயிக்கப்பட்டார்கள். கர்ணன் விகர்ணிகளென்கிற பாணங்களாலே பாக்யவிசேஷத்தினால் யுத்தத்தில் அவமானத்தையடையும்படி செய்யப்பட்டான். புருஷசிரேஷ்டர்களே! உங்களிருவராலும் சல்யனும் யுத்தரங்கத்தில் வெல்லப்பட்டான். ரதிகர்களுள் உத்தமர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களும க்ஷேமமாக யுத்தத்தினின்று மீண்டுவந்தவர்களுமான உங்களிருவரையும் பாக்யத்தால் நான் கண்டேன. என் சொல்லைச் செய்கிறவர்களும் வீரர்களும் என்னிடத்திலுள்ள கௌரவத்தினால் கட்டுப்படுத்தப்பட்டவர்களும கௌரவசேனையாகிற ஸமுத்திரத்தைத் தாண்டியவர்களுமான உங்களிருவரையும் பாக்யவிசேஷத்தினால் நான் பார்க்கிறேன். யுததத்தில் புகழ்பெற்றவர்களும் வீரர்களும் யுத்தங்களில் (பகைவர்களால்) ஜயிக்கப்படாதவர்களும் என்னுடைய சொற்படி நடக்கின்றவர்களுமான உங்களிருவரையும் நான் பாக்

யத்தால் பார்க்கிறேன்' என்றார். மன்னரே! பாண்டுகுமாரரான தர்ம நந்தனர் இவ்வாறு சொல்லிவிட்டுப் புருஷசிரேஷ்டர்களான யுயுதானன் விருகோதரன் இருவரையும் தழுவிக்கொண்டார். ஆனந்தத்தால் கண்ணீரையும் விட்டார். வேந்தரே! பிறகு, பாண்டவர்களுடைய சேனைமுழுதும் யுத்தத்தில் அதிகமான ஸந்தோஷமடைந்து போர்செய்வதற்கு உத்ஸாகத்துடன் மனத்தைச் செலுத்தியது.

---

## நூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸைந்தவன்வதத்தால் வருந்திய துரியோதனன் துரோணரிடம்சென்று தன்னை இகழ்ந்துகொண்டு துக்கித்தது.)

அரசரே! ஸைந்தவன் கொல்லப்பட்டவுடனே, எல்லாருக்கும் தீங்கிழைப்பவனும் உமது புத்திரனுமான துரியோதனன் கண்ணீரால் நிரம்பினமுகமுள்ளவனும் எளிமையுற்றவனும் சத்ருஜயத்தில் உத்ஸாகமற்றவனும் மனவருத்தமடைந்தவனும் விஷப்பல்லுடைக்கப்பட்ட துஷ்டஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிடுகின்றவனுமாகி மிகுந்த துன்பத்தை அடைந்தான். ஐயா! ஜிஷ்ணுவினாலும் பீமஸேனனாலும் ஸாத்வதனாலும் யுத்தத்தில் தன்சேனையில் செய்யப்பட்ட கோரமும் பெரிதுமான அப்படிப்பட்ட ஹிம்ஸையைப்பார்த்து உமது குமாரனான துரியோதனன் நிறமாறினவனும் இளைத்தவனும் மனந்தளர்ந்தவனும் கண்களில் நீர்ததும்புகின்றவனுமாகி, 'அர்ஜுனனுக்குச் சமானனானபோர்வீரன் உலகத்தில் இல்லை; துரோணரும் ராதேயனும் அஸ்வத்தாமாவும் கிருபருங்கூட அர்ஜுனனையெதிர்த்து நிற்கச் சக்தியற்றவர்களே. பார்த்தன் யுத்தரங்கத்தில் நம்மைச்சேர்ந்த எல்லா மஹாரதர்களையும்வென்று யுத்தத்தில் ஸைந்தவனைக் கொன்றான். ஒருவனாவது அவனைத் தடுக்கவில்லை. எவ்விதத்தாலும் இந்தப் பெரிதான கௌரவசேனை அழிந்ததுதான். ஸாக்ஷாத் இந்திரனேயானாலும் இந்தச்சைனியத்தை ரக்ஷிப்பதற்குச் சக்தியுள்ளவனாகான். எவனை ஆதாரமாகக் கொண்டு யுத்தத்தில் கௌரவர்களால் ஆயுதமெடுப்பதில் முயற்சிசெய்யப்பட்டதோ அந்தக் கர்ணனும் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டான்; ஸைந்தவனும் கொல்லப்பட்டான். எவன் சபைநடுவில் பாண்டவர்களை நோக்கிக் கொடியசொற்களைச் சொன்னானோ அந்தக் கர்ணனும் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டான்; ஸைந்தவனும் வீழ்த்தப்பட்டான். சமாதா

ணத்தை வேண்டின அந்த அச்சுதனை எவனுடைய வீர்யத்தை ஆதாரமாகக்கொண்டு த்ருணம்போல் நான் எண்ணினேனோ அந்தக் கர்ணன் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டான்' என்று எண்ணினான். அரசரே! 'பரத சிரேஷ்டரே! இவ்வாறு வாடினமனத்தையுடையவனும் எல்லா ஜனங்களுக்கும் தீங்கிழைப்பவனுமான உமது புத்திரன் துரோணரைப் பார்ப்பதற்கு அவர் சமீபத்தில் சென்றான். பிறகு, அவன், சத்துருக்களுடைய விஜயமும் உம்மைச்சேர்ந்தவர்கள் (ஆபத்தில்) முழுகினதும் அவர்களுக்கு நேர்ந்திருக்கின்ற பெரிய அழிவும் ஆகிய அந்த எல்லாவற்றையும் துரோணரிடம் தெரிவித்தான். அவன், 'ஆசார்யரே! சூரரும் எனக்குப் பிதாமகருமான பீஷ்மரை முன்னிட்டு அரசர்களுக்கு நேர்ந்திருக்கும் பெரிய அழிவைப் பாரும். அதிக வஞ்சகனை இந்தச் சிகண்டி அந்தப் பீஷ்மரைக்கொன்று விருப்பம் நிறைவேறினவனாகி எல்லாப் பாஞ்சாலர்களோடும் சேனையின் முன்னிலையில் எதிர்த்து வருகிறான். ஜயிக்கமுடியாதவனும் உம்முடைய சிஷ்யனும் ராஜாவுமான ஜயத்ரதன் ஸவ்யஸாசியினாலே ஏழு அக்ஷௌஹிணிகளைக் கொன்று கொல்லப்பட்டான். நமக்கு விஜயத்தில் விருப்பமுள்ளவர்களும் உபகாரத்தைச்செய்து யமலோகத்தையடைந்தவர்களுமான சிநேகிதர்களின் விஷயங்களில் கடனாளியாகாதிருத்தலை நான் எவ்வாறு அடைவேன்? எந்த அரசர்கள் என்நிமித்தமாகப் பூமியை அடைய விருப்பம் கொண்டார்களோ அவர்கள் பூமிபதியாயிருத்தலை இழந்து பூமியில் படுத்திருக்கிறார்கள். அற்பனான நான் மித்ரர்களுக்கு இவ்விதமான நாசத்தை உண்டுபண்ணியமையால் ஆயிரம் அஸ்வமேதம் செய்தாலும் (என்னைப்) பரிசுத்தனாக்கிக்கொள்வதற்குச் சக்தியற்றவனாயிருக்கிறேன். பேராவலுள்ளவனும் பாவியும் அவ்வாறே தர்மத்தைக்கெடுக்கின்றவனுமான என்னிமித்தம் யுத்தஞ்செய்து ஜயிக்கக் கருதினவர்களான இந்த அரசர்கள் யமலோகத்தை அடைந்தார்கள். நல்லொழுக்கத்தினின்று தவறினவனும் மித்திரர்களுக்குத் துரோகம் செய்கின்றவனுமான என் விஷயத்தில் பூமியானவள் ராஜசபையில் பிளந்து என்னை உட்கொள்ள ஏன் சக்தியுள்ளவளாகவில்லை. யுத்தத்தில் அரசர்களுடையமத்தியில் அடிக்கப்பட்டு ரக்தத்தினால் நனைக்கப்பட்ட அங்கங்களுடன் படுத்திருக்கிற பிதாமகரான பீஷ்மரை ரக்ஷிப்பதற்குச் சக்தியற்றுப்போனவனும் இழிவானமனிதனும் மித்ரத்ரோகியும் அதார்மிகனுமான என்னை ஸந்தித்தால் பரலோகத்தை ஜயித்தவரும் (பிறரால்) அவமதித்தற்கரியவருமான பீஷ்மாசாரியர் என்ன சொல்வார்? என்னிமித்தம் உயிரையிழக்கத் துணிந்தவனும் யுத்த

முயற்சிகொண்டவனும் சௌரியமுடையவனும் மகாரதனும் பெரிய வில்லைப்பிடித்தவனுமான ஜலஸந்தனும் ஸாத்யகியினால் கொல்லப்பட்டான்; பாரும். காம்போஜனும் அவ்வாறே அலம்புஸனும் மற்ற அனேகம் சினேகிதர்களும் கொல்லப்பட்டதைப் பார்த்தபின்னும் ஜீவித்திருப்பதினால் எனக்கு இப்பொழுது யாதுபயன்? சத்துருக்களைத் தவிக்கச்செய்பவரே! புறங்காட்டாதவர்களும் என்னிமித்தமாக என் பகைவர்களை ஜயிப்பதற்காக அதிகவலலமையுடன் முயற்சிசெய்து போர்புரிந்து கொல்லப்பட்டவர்களுமான சூரர்கள்விஷயத்தில் சக்திக்குத்தக்கபடி கடனுளியாகாதிருத்தலை அடைநது பமுனைநதிக்குச் சென்று தீர்த்தத்தினாலேயே அவர்களைத் திருப்திசெய்யப்போகிறேன. சஸ்திரதாரிகளான எல்லா வீரர்களுள்ளும் உத்தமரே! யாகங்களின் மீதும் தடாகாதி நிர்மாணங்களின்மீதும் பராக்கிரமத்தின்மீதும் புத்திரர்கள்மீதும ஆணையிட்டு நான் ஸத்தியமாகத் தேவரீரிடம் பிரதிஜ்ஞை செய்கிறேன். அந்த எல்லாப்பாஞ்சாலர்களையும் பாண்டவர்களோடு யுத்தத்தில்கொன்று மன ஆறுதலையடைவேன்; அல்லது யுத்தத்தில் (அவர்களாலடிக்கப்பட்டு இறந்த) என்னைச சேர்ந்தவர்கள்சென்ற உலகத்துக்காவது செல்வேன். என்னிமித்தமாக ரணகளத்தில் போர்புரிந்து கிரீடியினால் கொல்லப்பட்டவர்களான அநதப் புருஷச்ரேஷ்டர்கள்சென்ற உலகத்துக்கு நான் செல்வேன். மகாபாகுபலமுள்ளவரே! என்னால் (யுத்தத்தில்) உதவிசெய்யப்படாமலிருக்கின்ற மித்ரர்கள் இப்பொழுது என்னை அடையப் பிரியமற்றவர்களாயிருக்கிறார்கள்; பாண்டவர்களை விசேஷமாகமதிப்பதுபோல நம்மை மதிக்கவில்லை. ஸத்தியஸநதரான பீஷ்மர் யுததகளத்தில் தாமே தமக்கு மிருத்யுவை ஏற்படுததிக்கொண்டாரன்றோ? தேவரீர் அர்ஜுனன் விஷயததில், சிஷ்யனாயிருப்பதால் உபேக்ஷை செய்கிறீரல்லவா? ஆதலால், நமக்கு ஜயத்தைத்தேடிக் கொடுப்பதில் எவாகள் பிரியமுளளவர்களோ அவாகளெல்லோரும் கொல்லப்பட்டாாகள். இபபொழுது கர்ணன் ஒருவனையே நம்முடைய ஜயத்தில் விருப்பமுள்ளவனாகக் காண்கிறேன். மநத புத்தியான எவன், உண்மையான மித்ரனென்று தெரிந்துகொள்ளாமல் ஒருவனைமித்திரன் செய்யவேண்டியகாரியத்தில் ஏவுகிறானோ அவனுடைய அநதக்காரியம அழிந்துவிடுகிறது. மோகத்தினாலே பேராவல்கொண்டவனும் பாபியும் கோணலான தன்மையுள்ளவனும் தனத்தை விருமபுகின்றவனுமான என்னுடைய இந்தக் காரியமானது மிக்க சினேகமுள்ளவர்களாலே அவ்விதமாகச் செய்யப்பட்டுவிட்டது. கபடமான நடையுள்ளவர்களுடன் சேர்ந்து யுத்தகாரியத்திற்குச் சென்றவர்களான அநத ஜயத்ரதனும்

வீர்யமுடையவனை ஸோமதத்தகுமாரனும் கொல்லப்பட்டார்கள். அபீஷாஹர்களும் சூரஸேனர்களும் சிபிகளும் வஸாதிகளும் மாண்டார்கள். அப்படிப்பட்ட நான், என் நிமித்தமாகப் போர்புரிந்து யுத்தத்தில் கிரீடியினால் கொல்லப்பட்டவர்களான புருஷசிரேஷ்டர்கள் சென்ற வீட்டிற்கு இப்பொழுது செல்லப்போகிறேன். புருஷசிரேஷ்டர்களான அவர்களைவிட்டுப் பிழைத்திருப்பதினால் எனக்கு யாதொரு பயனுமில்லை. பாண்டவர்களுக்கு ஆசார்யரானதேவரீர் எனக்கு அனுமதிகொடும்' என்று கூறினான்" என்றான்.

---

## நூற்றைம்பத்திரண்டாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணர், துரியோதனனை நிந்தித்துப் போருக்குச் சென்றது.)

திருதராஷ்டிரன், "அப்பா! ஸவ்யஸாசியினாலே ஸிந்துராஜனும் அவ்வாறே பூரிஸ்ரவஸும் யுத்தத்தில் கொல்லப்பட்ட பிறகு, அப்பொழுது உங்களுடையமனம் எந்தநிலைமையை அடைந்திருந்தது? ஸஞ்சய! கௌரவஸபையில் துரியோதனன் அவ்வாறு சொல்லியதைக் கேட்ட த்ரோணர் அதற்குமேல் என்ன சொன்னார்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதரே! ஸைந்தவனும் பூரிஸ்ரவஸும் கொல்லப்பட்டதைக் கண்டு உமது ஸைனிகர்களுள் பெரிதான துன்பக்கூக்குரல் உண்டாயிற்று. எந்த ஆலோசனையினால் க்ஷத்திரிய சிரேஷ்டர்கள் நூறுநூறாகக் கொல்லப்பட்டார்களோ உமது புத்திரனுடைய அந்த ஆலோசனை முழுமையையும் அவர்கள் அலக்ஷியம்செய்தார்கள். துரோணரோ உமது புத்திரனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு மனவருத்தமுடையவராகி ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து மிகுந்த வருத்தத்துடன் வசனிக்கலானார்: 'துரியோதன! எப்பொழுதும் ஸவ்யஸாசி யுத்தத்தில் (பிறரால்) ஜயிக்கமுடியாதவனென்று சொல்லிக்கொண்டிருக்கிறஎன்னை ஏன் இவ்வாறு வார்த்தைகளாகிற அம்புகளால் அறுக்கிறாய்? கௌரவ! அர்ஜுனனால் பாதுகாக்கப்பட்ட சிகண்டி பீஷ்மரைக் கொன்றதனாலேயே அர்ஜுனனை நீ யுத்தத்தில் அறிந்துகொள்ளலாம். தேவர்களாலும் அஸுரர்களாலும் யுத்தத்தில் கொல்லத்தகாதவரான பீஷ்மர் கொல்லப்பட்டதைப்பார்த்து அப்பொழுதே

இந்தப் பாரதஸேனையானது அழிந்துவிட்டதென்று நான் அறிந்து கொண்டேன். மூவுலகங்களிலும் புருஷர்களுள்சிறந்த சூரரென்று நாமெண்ணியிருந்த பீஷ்மர் சாய்ந்தபிறகு மிகுந்திருக்கின்ற வேறெந்த வீரனை நாம் அடைவோம்? அப்பா! சகுனி கௌரவஸபையில் உருட்டிச்சூதாடியகாய்கள் பாச்சிகைகளல்ல; அவைகள் பகைவர்களைவாட்டுகின்ற கூர்மையான பாணங்கள். அப்பா! பாச்சிகைகளை, சாணையில் தீட்டப்பட்டு விளங்குபவையும் பகைவரைப் பிளப்பவையுமான பாணங்களாக நினை. அப்பா! அந்தப் பாச்சிகைகளே பாணங்களாகிப் பார்த்தனால் போடப்பட்டு நம்மைக் கொல்லுகின்றன. விதுரரால் அப்பொழுது சொல்லப்பட்ட அவ்விதவார்த்தைகளை நீ அறிந்துகொள்ளவில்லை. (உன்னுடைய) க்ஷேமத்தின்பொருட்டு நல்லவாக்குக்களைச் சொல்லுகின்றவரும் கற்றறிந்தவரும் புலம்புகின்றவரும் மகாத்மாவுமான விதுரருடையவார்த்தைகளை நீ கேளாமல் அவமதித்ததாலும் துச்சாஸனனுடைய செய்கையாலும் கோரமும் பெரிதுமான இந்தக்கஷ்டம் உனக்கு நேர்ந்திருக்கிறது. நன்மையைச் செய்கின்றவர்களான நண்பர்களுடைய நல்லவார்த்தைகளை அவமதித்துத் தன்மனம்போனபடி செய்கிறமூடன் சீக்கிரத்தில் துக்கிக்கப்படத்தக்கவனாகிறான். காந்தாரிபுத்திர! மேலும், நற்குலத்தில் பிறந்தவளும் எல்லாத் தர்மங்களையும் அனுஷ்டிக்கின்றவளும் (அவமதிக்கத்) தகாதவளுமான திரௌபதியை அந்தக் கௌரவஸபையில் அழைத்துவரச்செய்து நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே நீ செய்த அக்ரமத்தினுடைய பெரிதான பலமானது அடையப்பட்டது. நீ இவ்விதமான கஷ்டத்தையடையாவிட்டால் பரலோகத்தில் இதைக்காட்டிலும் பெரிதான துன்பத்தை அடைவாய். மேலும், சூதாட்டத்தில் கபடமான உபாயத்தினாலே அந்தப் பாண்டவர்களைஜயித்து மான்தோலை வஸ்திரமாக உடுத்துக்கொள்ளச்செய்து அப்பொழுது காட்டிற்குத் துரத்தினாய். எப்பொழுதும் தர்மத்தை அனுஷ்டிக்கின்றவர்களும் புத்திரர்கள்போலிருக்கின்றவர்களுமான இந்தப் பாண்டவர்களுக்கு உலகில் என்னைத் தவிர, பிராம்மணன் என்று சொல்லப்படுகிறவன் வேறு எவன்தான் துரோகம்செய்வான்? கௌரவஸபையில் திருதராஷ்டிரனுடைய ஸம்மதத்தின்மேல் சகுனியுடன் கூடின உன்னாலே பாண்டவர்களுக்கு இவ்விதமான கோபமானது உண்டாக்கப்பட்டது. துச்சாஸனனால் ஒன்று சேர்க்கப்பட்டதும் கர்ணனால் விருத்திபண்ணப்பட்டதுமான அந்தக் கோபமானது (தடுக்கின்ற) விதுரருடைய வாக்கியத்தை அலக்ஷியம் செய்து உன்னால் அடிக்கடி பலமடங்காக்கப்பட்டது. அரசே! மிக்க

வலிமையுடையவனே! மகாத்மாக்களுக்கு நம்மால் உண்டுபண்ணப் பட்ட கோபமென்னும் மரமானது வேரூன்றிவிட்டது. அதனுடைய புஷ்பத்தையும் பலத்தையும் நீ அனுபவிப்பாயாக. [1] ஸிந்துராஜனை ஆஶ்ரயித்து முயற்சியுடன் எல்லோரும் அர்ஜுனனை எதிர்த்தீர்களே; ஏன் தோற்றுப்போனீர்கள்? உங்கள் நடுவிலிருந்தும் அவன் ஏன்கொல் லப்பட்டான்? கௌரவனே! நீயும் கர்ணனும் க்ருபரும் சல்யனும் அஶ் வத்தாமாவும் பிழைத்திருக்கும்போது ஸைந்தவன் எவ்வாறு நாசத்தை யடைந்தான்? ஸமர்த்தர்களான எல்லா அரசர்களும் ஸிந்துராஜனைக் காப்பாற்றுவதற்காகப் போர்புரிந்துகொண்டு அவனருகிலிருந்தீர்களே, உங்களுடைய மத்தியிலிருந்த அவன் எவ்வாறு கொல்லப்பட்டான்? துரியோதன! ராஜாவாகிய அந்த ஸைந்தவன் அர்ஜுனனிடத்தி னின்று தன்னைப்பாதுகாத்தலை விசேஷமாக என்னிடத்திலும் உன் னிடத்திலும் விரும்பியிருந்தான். அவன் அந்தப் பல்குனனிடத்தினி ன்று (நம்மால்) காக்கப்படுதலை அடையாமலிருக்கும்பொழுது எனக்குச் சிறிதும் பிழைத்திருக்க இடத்தை நான் பார்க்கவில்லை. அந்தச்சிகண்டி யோடுகூடப் பாஞ்சாலர்களைக் கொல்லாமல் திருஷ்டத்யும்னனுடைய யுத்தத்தில் முழுகுகிறவனைப்போல நான் என்னை நினைக்கிறேன். பாரத! தவித்துக்கொண்டிருக்கும் என்னை ஸிந்துராஜனைக் காப்பாற்று வதில் நீ வல்லமையற்றவனாகிச் சொற்களாகிற அம்புகளால் ஏன் அறுக் கிறாய்? ஸத்யஸந்தரும் உத்தமமான செய்கைகளுள்ளவருமான பீஷ்ம ருடைய தங்கமயமான கொடியை யுத்தரங்கத்தில் காணாமலிருந்து கொண்டு எவ்விதம் ஜயத்தை விரும்புகிறாய்? மகாரதர்களுடைய மத் தியில் ஸைந்தவனும் பூரிஶ்ரவஸும் கொல்லப்பட்டவிடத்தில் எது மிகுதியிருக்கும் என்று எண்ணுகிறாய்? வேந்தே! ஆனால், பகைவரால் நெருங்கமுடியாதவரான க்ருபர் ஒருவரே ஜீவித்திருக்கிறார். அவர் ஸிந் துராஜனுடைய வழியை அடையவில்லை; அவரை நான் பூஜிக்கிறேன். கௌரவனே! மன்னவ! நீயும் உன்னுடைய இளைய சகோதரனான துச் சாஸனனும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே செய்யமுடியாத காரி யத்தைச் செய்கின்றவரும் இந்திரனோடுகூடின தேவர்களாலும் யுத்தத் தில் கொல்லத்தகாதவருமான பீஷ்மர் கொல்லப்பட்டதைக் கண்ட பொழுதே பூமி உனக்கு இல்லையென்று நான் எண்ணினேன். பாரத! பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்கள் இவர்களுடைய இந்தச் சேனைகள் இப் பொழுது ஒன்றுசேர்ந்து என்னை எதிர்த்தோடிவருகின்றன. பாரத! திருதராஷ்டிரபுத்திர! எல்லாப் பாஞ்சாலர்களையுங் கொல்லாமல்

[1] வேறுபாடம்.

நான் கவசத்தை அவிழ்க்கப்போகிறதில்லை; யுத்தத்தில் உனக்கு ஹித மான காரியத்தையே செய்யப்போகிறேன். அரசனே! யுத்தத்தில் என் குமாரனை அஸ்வத்தாமாவைப்பார்த்து, '(அஸ்வத்தாமாவே!) நீ உயிரைப் பாதுகாத்துக்கொண்டு ஸோமகர்களை விட்டுவிடாதே. மேலும் பிதாவினால் கட்டளையிடப்பட்ட வார்த்தையை நீ காப்பாற்று. தயையிலும் இந்திரியங்களை அடக்குவதிலும் ஸத்யத்திலும் கபடமற்ற தன்மையிலும் நிலைபெற்றிரு. தர்மார்த்தகாமங்களில் ஸமர்த்தனான நீ தர்மார்த்தங்களைக் கெடுக்காமலிருந்துகொண்டு தர்மத்தைப் பிரதானமாகக் கொண்ட காரியங்களை அடிக்கடி செய்வாயாக'என்றுசொல்லக்கடவாய். பிராம்மணர்களைச் சக்திக்குத்தக்கபடி பூஜிக்கவேண்டும்; கண்ணாலும் மனத்தாலும் மகிழ்விக்கவேண்டும். அவர்களுக்கு அப்பிரியமான காரியம் செய்யலாகாது. ஏனெனில், அவர்கள் நெருப்பு ஜ்வாலைக்குச் சமமானவர்கள். சத்துருக்களை நாசஞ்செய்பவனே! அரசனே! நான் உன் வாக்காகிற அம்புகளால் பீடிக்கப்பட்டுப் பெரிய யுத்தஞ்செய்வதன் பொருட்டு இதோ சத்துருசேனைகளில் பிரவேசிக்கிறேன். துரியோதனா! நீயும் கூடுமானால் சேனையைக் காப்பாற்று. யுத்தமுயற்சியுள்ள கௌரவர்களும் ஸ்ருஞ்சயர்களும் இராத்திரியில்கூடப் போர்புரியக்கூடியவர்கள்' என்று சொல்லினர். துரோணர் இவ்வாறு சொல்லிவிட்டுப் பிறகு, நக்ஷத்திரங்களுடைய ஒளிகளைச் சூரியன் கவர்வதுபோல க்ஷத்திரியர்களுடைய ஒளிகளைக் கவர்ந்துகொண்டு பாண்டவர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் எதிர்த்துச்சென்றார்.

---

## நூற்றைம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## ஜயத்ரதவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரியோதனன் ஜயத்ரதனுடைய வதத்துக்கு த்ரோணருடைய உதாஸீனமே காரணமென்ன, கர்ணன் அதனை மறுத்து அத்ருஷ்டமே காரணமென்றதும், இராத்திரியுத்தத்தொடக்கமும்.)

பிறகு, ராஜாவான துரியோதனன் துரோணராலே இவ்வாறு தூண்டப்பட்டவனாகிக் கோபத்திற்கு வசப்பட்டு யுத்தத்தின்பொருட்டே மனத்தைச் செலுத்தினான். அப்பொழுது உமது புத்திரனான துரியோதனன் கர்ணனைப்பார்த்து, 'கர்ண! போர்புரிகின்ற நீயும் மகாத்மாவான துரோணரும் உத்தமர்களான போர்வீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, கிருஷ்ணனைத் துணையாகக்கொண்ட

பாண்டுபுத்திரனை கிரீடியினாலே தேவர்களாலும் உடைக்கமுடியாத தும் ஆசாரியரால் ஏற்படுத்தப்பட்டதுமான வ்யூகத்தை உடைத்து ஸைந்தவன் கொல்லப்பட்டான்; பார். ராதேய! ஸிம்மத்தினாலே மற்ற மிருகங்கள் கொல்லப்படுவதுபோலப் பார்த்தன் ஒருவனாலே பூமியிலுள்ள உத்தமர்களான அரசர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள்; பார். சத்துருவை யழிப்பவனே! யுத்தகளத்தில் போர் புரிகின்ற என்னுடைய ஸேனையானது இந்திரபுத்திரனாலே கொஞ்சமே மிகுந்திருக்கும்படி செய்யப்பட்டுவிட்டது. பல்குனன் யுத்தத்தில் முயற்சியை யுடைவனாயிருந்தாலும் போர்புரிகின்ற துரோணருடையதான எவ்விதத்தாலும் உடைக்கமுடியாத வ்யூகத்தை யுத்தரங்கத்தில் எவ்வாறு உடைத்தான்? அர்ஜுனன் (எவ்வாறு) ஸைந்தவனைக் கொன்று பிரதிஜ்ஞையை நிறைவேற்றினான்? ராதேய! பார்த்தனாலே யுத்தத்தில் அடித்துத் தள்ளப்பட்டவர்களும் மகேந்திரன் போன்ற வல்லமையுள்ளவர்களுமான அநேக அரசர்களை நீ பார். வீர! துரோணர் விரும்பாமலிருப்பாராகில் யுத்தத்தில் பலிஷ்டரும் முயற்சியுடையவருமான அவருடையதான எவ்விதத்திலும் உடைக்கமுடியாத வ்யூகத்தைப் பாண்டவன் எவ்விதம் உடைப்பான்? சத்துருக்களையழிப்பவனே! மகாத்மாவான ஆசாரியருடைய தயைக்கு அர்ஜுனன் எப்பொழுதும் உரியவன். ஆதலால், இந்த அர்ஜுனனுக்கு யுத்தம்செய்யாமலே வழியைக் கொடுத்துவிட்டார். சத்துருக்களைத் தபிக்கச்செய்யும் துரோணர் ஸிந்துராஜனுக்கு அபயமளித்து என்னிடத்தில் குணமில்லாமலிருப்பதைப்பார்த்து அர்ஜுனனுக்கு வழியைக் கொடுத்துவிட்டார். அந்தத் துரோணர் முன்பே வீட்டிற்குப்போவதற்கு அனுமதி கொடுத்திருந்தால் ஸிந்துராஜனுக்கு மரணம் நேர்ந்திராது. உயிரை விரும்பி வீட்டைக்குறித்துச் செல்வதற்கு முயற்சிசெய்கின்ற ஜயத்ரதனை, யுத்தத்தில் துரோணரிடத்தினின்று, 'நான் ஸைந்தவனை யுத்தத்தில் ரக்ஷிக்கிறேன். இவனைப் பல்குனன் அடையமாட்டான்' என்று (அவர்சொல்லிய) அபயத்தைப்பெற்றுப் பாபியான நான் தடுத்தேன். என் ஸைன்யம் அழிவதற்காகப் பிராம்மணரால் ஸைந்தவன் தடுக்கப்பட்டான். பாக்யஹீனனும் யுத்தத்தில் முயற்சிசெய்கின்றவனுமான அப்படிப்பட்ட என்னுடைய எல்லாச் சைனியங்களும் கொல்லப்பட்டன. ராஜாவான ஜயத்ரதனும் கொல்லப்பட்டான். கர்ண! பார்த்தனுடையபேரால் அடையாளமிடப்பட்ட அம்புகளாலே உத்தமர்களான யுத்தவீரர்களனைவரும் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் யமன்வீட்டுக்கனுப்பப்பட்டிருப்பதைப் பார். யுத்தகளத்தில் நாமனைவ

ரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஒரே ரதத்தை உதவியாகக் கொண்ட அர்ஜுனனாலே எவ்வாறு ராஜாவான ஸைந்தவன் கொல்லப் பட்டான்? ஆயிரமாயிரமாக யுத்தவீரர்களும் எவ்வாறு கொல்லப்பட் டார்கள்? இப்பொழுது துராத்மாக்களான நாம் பார்த்துக்கொண்டிருக் கையிலேயே யுத்தத்தில் பீமஸேனனையெதிர்த்துச் சித்ரசேனன்முத லான என்னுடைய ப்ராதாக்கள் மாண்டார்கள்' என்று சொன்னான்.

கர்ணன், 'நீ ஆசார்யரை நிந்திக்காதே. அந்தப் பிராம்மணர் தம் உயிரையிழக்கத்துணிந்து தமது பலத்திற்கும் உத்ஸாஹத்திற்கும் தகுந்தபடி சக்தியுள்ளவரையில் யுத்தஞ்செய்கிறார். துரோணரை அர் ஜுனன் மீறி நுழைந்துவிட்டானாதலால் இவ்விஷயத்தில் ஆசாரியர் மீது எவ்விதத்தாலும் சிறிதும் குற்றமில்லை. ஸமர்த்தனும் புத்திசாலி யும் யௌவனமுள்ளவனும் சூரனும் அஸ்திரங்களில் தேர்ச்சியுள்ளவ னும் மிக்க ஆற்றலுள்ளவனும் வீர்யமுடையவனுமான அர்ஜுனன் உடைக்கமுடியாத கவசத்தினால் மூடப்பட்டவனாகித் திவ்யாஸ்திரங்க ளுடன்கூடினதும் வானரத்தை அடையாளமாகக்கொண்டதும் கிருஷ் ணனாலே பிடித்து ஓட்டப்பட்ட குதிரைகளுள்ளதுமான ரதத்தின்மீ தேறி உறுதியானதும் தேவஸம்பந்தம்பெற்றதுமான காண்டீவம் என் கிற வில்லைக் கையில்பிடித்துக் கூர்மையான பாணங்களைப் பொழிந்து கொண்டு பாகுபலத்தினாலே கர்வங்கொண்டவனாகித் துரோணரை எதிர்த்துச்சென்றது அவனுக்குத் தகுந்ததே. அரசனே! ஆசாரியர் விருத்தர்; அவ்வாறே விரைவாகச்செல்லும் விஷயத்தில் சக்தியற்றவர். வேந்தே! கையினால் யுத்தம்செய்வதில் சக்தியற்றவர். ஆதலால், கிருஷ்ணனை ஸாரதியாகக்கொண்ட அர்ஜுனன் இவரை மிஞ்சினான். இக்காரணத்தினால் துரோணரின்மீது குற்றத்தை நான் காணவில்லை. அவரை மிஞ்சி அர்ஜுனன் ஸேனையில் பிரவேசித்ததினால், 'அஸ்திரங் களையறிந்தவரான துரோணரால் யுத்தத்தில் பாண்டவர்கள் ஜயிக்கமுடி யாதவர்கள்' என்று எண்ணுகிறேன். எப்பொழுதும் வஞ்சனையினா லும் விக்கிரமத்தினாலும காரியங்களைச் செய்கிறவர்களுக்கு வெற்றி நேரிடுவது தெய்வத்தினுடைய கட்டளை; ஒருவரால் நேருவதில்லை யென்று எண்ணுகிறேன். துரியோதன! மிகுந்த வல்லமையோடு நாம் போர்புரிந்துகொண்டிருக்கும்பொழுது யுத்தத்தில் ஸைந்த வன் கொல்லப்பட்டதினால் தெய்வமே இந்த விஷயத்தில் பிரதா னமென்று எண்ணுகிறேன். உன்னுடன் சேர்ந்து யுத்தாங்கத்தில் அதிக முயற்சியைச்செய்கின்றவர்களான நம்முடைய வல்லமையை

நாசஞ்செய்து தெய்வம் நம்மைப் பின்னிடச்செய்கிறது. துரதிர்ஷ்ட முடையமனிதன் எப்பொழுதாவது செய்கிறகாரியமும் செய்யச்செய்யத் தெய்வத்தால் அழிக்கப்படுகிறது. எப்பொழுதும் முயற்சியுடையமனித ஞலே எந்தக்காரியம் செய்யத்தக்கதோ அந்தக்காரியத்தை ஸந்தேக மின்றிச் செய்யவேவேண்டும். ஸித்தியானது தெய்வத்தினிடத்தில் நிலை பெற்றிருக்கிறது. பாரத! பார்த்தர்கள் கபடத்தாலும் விஷமிடுதல் முதலான உபாயங்களாலும் வஞ்சிக்கப்பட்டார்கள்; அரக்குமாளிகை யில் எரிக்கவும்பட்டார்கள்; சூதாட்டத்தால் வெல்லவும்பட்டார்கள்; ராஜநீதியைக் கடைப்பிடித்துக் கானகத்திற்கு ஓட்டவும்பட்டார்கள்; முயற்சியோடுசெய்யப்பட்ட ஒவ்வொருகாரியமும் தெய்வத்தால் கெடுக் கப்பட்டுவிட்டது. தெய்வத்தைப்பிரயோசனமற்றதாகச்செய்து முயற்சி யுடன் நீ யுத்தஞ்செய். முயற்சிசெய்கின்ற நீ அவர்கள் ஆகிய உங்க ளுடைய அதிர்ஷ்டமானது வழியோடுசெல்லும். வீரனே! கௌரவ சிரேஷ்ட! அவர்கள் ஒருவிஷயத்திலும் யோசித்து (வெற்றிக்கனுகூல மான) நல்லகாரியத்தைச் செய்திருப்பதாகக் காணப்படவில்லை. நீயும் யோசியாமல் தோல்விக்குக்காரணமான கெட்டகாரியத்தைச்செய்ததாகக் காணப்படவில்லை. எல்லாப் பிராணிகளுடைய நன்மை தீமைகளுக்கும் தெய்வமே பிரமாணம். பிராணிகள் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுதும் தெய்வமானது வேறுகாரியமின்றி விழித்துக்கொண்டே யிருக்கிறது. அந்தத் தெய்வத்தோடுகூடிய மனிதன் காரியாகாரியங்களில் ஏவப்படு கிறான். உனக்குச்சேனைகளும்எண்ணிறந்தவை. உனக்குயுத்தவீரர்களும் அனேகர்கள். பாண்டுபுத்திரர்களுக்கு அவ்வளவில்லை. இந்நிலைமையில் போர் தொடங்கியது. குறைந்தவர்களான அவர்களால் அடிக்குந்திறமை யுள்ளவர்களும் அனேகர்களுமான நீங்கள் நாசத்தையடைவிக்கப்பட் டீர்கள். பௌருஷம் அழிக்கப்பட்டது தெய்வச்செயலாலென்றே நான் எண்ணுகிறேன்' என்று கூறினன். அரசரே! இவ்வாறு அனேகமான அந்தந்த விஷயங்களை ஸம்பாஷித்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்த களத்தில் பாண்டவர்களுடைய சேனைகள் காணப்பட்டன. அரசரே! உம்முடையதுராலோசனையால், பிறகு, ஒன்றோடொன்று நெருங்கியிருக் கின்ற தேர்களோடும் யானைகளோடுங்கூடின யுத்தமானது உம்மைச் சேர்ந்த வீரர்களுக்குப் பகைவர்களோடு நேர்ந்தது," என்று கூறினர்.

ஜயத்ரதவதபர்வம் முற்றிற்று.

---

## நூற்றைம்பத்துநான்காவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம்.

(யுதிஷ்டிரர் துரியோதனனை வென்றது.)

அரசரே! அவ்விதமாக விருத்தியடைந்திருக்கும் தேர்கள் குதிரைகள் இவற்றின் கூட்டத்துடன் சேர்ந்த உமது சேனையானது பாண்டவசேனையை மீறி நான்குபக்கங்களிலும் யுத்தம் செய்தது. யமனுடைய ராஜ்யத்தையும் மிகப் பெரிதான பரலோகத்தையும் அடைவதில் தீக்ஷைபெற்றவர்களாகிப் பாஞ்சாலர்களும் கௌரவர்களும் ஒருவரோடொருவர் போர்புரிந்தார்கள். சூரர்கள் சூரர்களோடு யுத்தம் செய்வதற்காக எதிர்த்து அம்புகளாலும் தோமரங்களாலும் சக்திகளாலும் யுத்தத்தில் பரஸ்பரம் அடித்துக்கொண்டு யமலோகத்தை அடைவித்தார்கள். ஒருவரையொருவர் அடிக்கின்றவர்களான தேராளிகளுக்குத் தேராளிகளோடுசேர்ந்து இரத்தப்பெருக்குள்ளதும் பயங்கரமுமான பெரிய யுத்தம் நடந்தது. மகாராஜரே! மதப்பெருக்குள்ள யானைகள் மிக்க கோபங்கொண்டு ஒன்றை மற்றொன்று தாக்கிக் கொம்புகளால் பிளந்தன. குதிரைவீரர்கள் நெருங்கின யுத்தத்தில் பெரிய கீர்த்தியை விரும்பி ஈட்டிகளாலும் வேல்களாலும் கோடாலிகளாலும் குதிரைவீரர்களைப் பிளந்தார்கள். மிக்க புஜபலமுள்ளவரே! பகைவரை மிஞ்சுவதில் எப்பொழுதும் முயற்சியை யுடையவர்களான காலாட்களும் ஆயுதங்களைக் கையிற்பிடித்து நூறுநூறாகப் பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். ஐயா! கௌரவர்களையும் பாஞ்சாலர்களையும் கோத்திரங்களையும் பேர்களையும் குலங்களையும் கேட்டதினால் அறிந்தோம். அந்த யுத்தவீரர்கள் யுத்தரங்கத்தில் பயமற்றவர்கள் போல் ஸஞ்சரித்துக்கொண்டு அம்புகளாலும் சக்திகளாலும் கோடாலிகளாலும் ஒருவரையொருவர் (அடித்துப்) பரலோகத்திற்கு அனுப்பினார்கள். அரசரே! அவர்களால் ஆயிரக்கணக்காக விடப்பட்ட அம்புகளாலே சூரியன் மறைந்தபடியால் முன்போலப் பத்துத்திக்குகளும் பிரகாசிக்கவில்லை. பாரதரே! பாண்டவர்களுடைய படைவீரர்கள் அவ்வாறு போர்புரியும்போது துரியோதனன் அந்தச் சேனையில் பிரவேசித்தான். ஸைந்தவனுடைய வதத்தினாலேயே மிக்க மனவருத்தமுற்றவனான துரியோதனன் இறக்கவேண்டுமென்று உறுதியாக நிச்சயம்பண்ணிக்கொண்டு சத்துருவினுடைய சேனையில் பிரவேசித்தான். உமது புத்திரன் ரதத்தின் சப்தத்தினால் ஒலியிடும்படி செய்துகொண்டு

பூமியை நடுங்கும்படி செய்கின்றவன்போலப் பாண்டவர்களுடைய சேனையை எதிர்த்தான். பாரதரே! எல்லாச் சேனைகளுக்கும் நாசத்தை யுண்டுபண்ணுகிறதும் பெரிதும் நெருங்கியதுமான அந்த யுத்தமானது துரியோதனனுக்கும் அந்தப் பாண்டவவீரர்களுக்கும் நேர்ந்தது" என்று கூறினான்.

திருதராஷ்டிரன், "ஸூத! அவ்வாறு ஸைனியங்கள் கொல்லப்பட்டபிறகு, அப்படிப்பட்ட கஷ்டநிலைமையை அடைந்திருக்கிற துரியோதனன் பின்புறத்தில் தான் யுத்தஞ்செய்யாமலிருந்தானா? ஒருவனுக்கும் பலருக்கும் பெரிதான யுத்தம் உண்டாவதே தகாதது. அதிலும், அரசனுக்கு இப்படி நேர்வது சிறிதும் தகாததென்றே எனக்குத் தோன்றுகிறது. அந்தத் துரியோதனன் மிக்க சுகமாக வளர்ந்தவன்; பாதுகாக்கப்படத்தக்கவன். உலகத்திற்கு ஈஶ்வரன். அவன் ஒருவனாயிருந்துகொண்டு அநேகம்பேர்களை எதிர்த்துப் புறங்கொடாமலிருந்தானா? ராஜ்யத்தைக் கொடுப்பதில் விருப்பமுள்ளவர்களான துரோணரும் கர்ணனும் கிருபரும் ஸாத்வதனான கிருதவர்மாவும் யுத்தத்தில் ராஜாவான துரியோதனனை ஏன் தடுக்கவில்லை? யுத்தங்களில் எல்லா உபாயங்களாலும் அரசன் பாதுகாக்கத்தக்கவனன்றோ? கற்றறிந்தவர்களாலே 'யுத்தசாஸ்திரத்தில் இந்தச் சிறந்த நீதியானது அறியப்பட்டிருக்கிறது.' ஸஞ்சய! பகைவர்களுடைய பெரிய சேனையில் என்னுடைய புத்திரன் பிரவேசித்தவுடனே ரதிகர்களுள் சிரேஷ்டர்களான என்னைச் சேர்ந்தவர்கள் என்னசெய்தார்கள்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பாரதரே! உம்முடைய குமாரன் ஒருவனுக்கும் (பகைவர்கள்) பலருக்கும் நடந்த ஆச்சரியகரமான யுத்தத்தை நிச்சயமாகச் சொல்லுகின்றேன்; அதனைக் கேளும். துரோணராலும் கர்ணனாலும் கிருபராலும் தடுக்கப்பட்டும் இந்தத் துரியோதனன் மகரமானது ஸமுத்திரத்தில் பிரவேசிப்பதுபோலப் பாண்டவசேனையில் பிரவேசித்தான். ஆங்காங்கு அவ்வவ்விதமாக ஆயிரக்கணக்கான அம்புகளை இறைத்துக்கொண்டு கூர்மையுள்ள பாணங்களால் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் அடித்தான். மகா பலசாலியான உம்முடைய புத்திரன் உதித்த சூரியன் கிரணங்களால் இருளை நாசஞ்செய்வதுபோல அந்தச்சேனையை நாசஞ்செய்தான். நடுப்பகலில் கிரணங்களால் நன்றாகத் தபிக்கின்ற சூரியனைப்போலப் பாணஜ்வாலைகளாலே சேனைமத்தியில் பகைவர்களைவாட்டுகின்ற பாரதகுலத்தில் உதித்தவனான உம்முடைய குமாரனைப் பாண்ட

வர்கள் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். மகாத்மாவான துரி யோதனனால் கொல்லப்படுகின்ற பாஞ்சாலர்கள் ஓடுவதில் உத்ஸாகமுள் ளவர்களும் சத்துருக்களை ஜயிக்கும் விஷயத்தில் உத்ஸாகத்தை இழந் தவர்களுமாக நான்குபுறங்களிலும் ஓடினார்கள். வில்லைக் கையில் கொண்ட உமது குமாரனாலே பொன்கட்டிய புங்கமுள்ளவைகளும் நன்கு தீட்டப்பட்ட முனையுள்ளவைகளுமான அம்புகளாலே அடிக்கப் படுகின்ற பாண்டவவீரர்கள் விரைவாகக் கீழேவிழுந்தார்கள். வாயைத் திறந்துகொண்டு உயிர்களைக் கவரவந்த அந்தகனைப்போலிருக்கின்ற அவனை அந்த மகாயுத்தத்தில் கண்டு யுத்தவீரர்கள் பயத்தால் ஓடினார் கள். அரசரே! ராஜாவான உமது குமாரன் செய்ததுபோன்ற செய் கையை யுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவர்களில் ஒருவரும் செய்ய வில்லை. நான்குபக்கங்களிலும் மலர்ந்திருக்கின்ற தாமரைமலர்களோடு கூடின தாமரை ஓடையானது யானையினால் கலக்கப்படுவதுபோலப் போரில் உமது புத்திரனாலே பாண்டவசேனையானது கலக்கப்பட்டது. உமது புத்திரனுடைய தேஜஸினாலே பாண்டவசேனையானது காற்றி னாலும் சூரியனாலும் ஜலங்குறைந்து காந்தியிழந்திருக்கின்ற தாமரை ஓடைபோலாயிற்று. பாரதரே! உமது புத்திரனாலே நாசம்பண்ணப் பட்ட பாண்டவசேனையைப் பார்த்துப் பீமஸேனனைத் தலைவனாகக் கொண்ட பாஞ்சாலர்களோ நன்றாக அருகில் ஓடிவந்தார்கள். அந்தத் துரியோதனன் பீமஸேனனைப் பத்துப்பாணங்களாலும் மாத்ரீபுத்திரர் களை மும்மூன்று பாணங்களாலும் விராடனையும் துருபதனையும் அவ் வாறு பாணங்களாலும் சிகண்டியை நூறு பாணங்களாலும் திருஷ்டத் யும்னனை எழுபது பாணங்களாலும் தர்மபுத்திரரை ஏழு பாணங்களா லும் கேகயவீரர்களையும் சேதிதேசத்தவர்களையும் கூர்மையுள்ள அனேக பாணங்களாலும் ஸாத்வதனை ஐந்துபாணங்களாலும் த்ரௌபதிகுமா ரர்களையும் கடோத்கசனையும் மும்மூன்று பாணங்களாலும் யுத்தத்தில் அடித்து ஸிம்மம்போலக் கர்ஜித்தான். பின்னும் துரியோதனன் கோபித்துக்கொண்டிருக்கிற அந்தகன் பிரஜைகளை நாசஞ்செய்வது போல உக்கிரமான அம்புகளாலே மகாயுத்தத்தில் யானைகளோடு கூடின மற்றுமுள்ள யுத்தவீரர்களை நூறுநூறாக அறுத்தான். நராதி பரே! உமது புத்திரனை அந்தத் துரியோதனனால் அம்புகளால் வதைக்கப்படுகிற அந்தப் பாண்டவசேனையானது யுத்தத்தில் ஓடி யது. அரசரே! மகாயுத்தத்தில் சூரியனைப்போல் ஜ்வலிக்கின்ற அந் தக் குருராஜனைப் பாண்டுபுத்திரனுடைய படைவீரர்கள் பார்ப்பதற் குச் சக்தியற்றவர்களானார்கள். ராஜசிரேஷ்டரே! பிறகு, கோபங்

கொண்ட யுதிஷ்டிரராஜர் குருராஜனுன உம்முடைய குமாரனைக் கொல்லும் எண்ணத்துடன் எதிர்த்துவந்தார். சத்துருக்களை அடக்கு கிறவர்களும் குருகுலத்தில் தோன்றியவர்களும் பராக்ரமசாலிகளு மான துர்யோதனன் யுதிஷ்டிரர் இருவரும் யுத்தத்தில் தத்தம் பிர யோஜனத்தைக்கருதி எதிர்த்தார்கள். பிறகு, துரியோதனன் கோபங் கொண்டு உட்படிந்தகணுக்களுள்ள பத்தம்புகளாலே (தர்மபுத்திரரை) அடித்து ஒருபாணத்தினுல் விரைவாகக் கொடியையும் அறுத் தான். மன்னரே! மகாத்மாவும் அரசருமான பாண்டவருக்குப் பிரிய மான ஸாரதியான இந்திரஸேனனை மூன்றுபாணங்களால் நெற்றியில் அடித்தான். மகாரதனுன துரியோதனன் வேறொரு பாணத்தால் அவ ருடைய வில்லையும் அறுத்து நான்குபாணங்களால் அவருடைய நான்கு குதிரைகளையும் அடித்தான். பிறகு, யுதிஷ்டிரர் கோபங்கொண்டு ஒரு நிமிஷத்திற்குள் வேறுவில்லைக் கையிலெடுத்து வேகத்தோடு கௌர வனை எதிர்த்தார். ஐயா! அந்தச் சத்துருக்களை அடிக்கின்ற அந்தத் துரியோதனனுடைய பொன்வேய்ந்த பின்புறமுள்ள பெரிதான வில்லை மூத்தவரான பாண்டவர் இரண்டுபல்லங்களால் மூன்றாகத் துண்டாக்கி நன்றாகப் பிரயோகிக்கப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளுமான பத் துப் பாணங்களால் துரியோதனனையும் அடித்தார். அவ்வம்புகளெல் லாம் லக்ஷியத்தில்பாய்ந்து மர்மஸ்தானத்தைப் பிளந்துகொண்டு பூமி யிற் பிரவேசித்தன. பிறகு, தேவர்கள், விருத்திராஸுரனுேடு யுத்தஞ் செய்கின்ற இந்திரனைச் சூழ்ந்துகொண்டதுபோல யுத்தவீரர்கள் யுதிஷ் டிரரைச் சூழ்ந்துகொண்டார்கள். ஐயா! பிறகு, ராஜாவானயுதிஷ்டிரர், சூரியகிரணம்போலப் பிரகாசிக்கிறதும் மிகக்கொடியதும் ஒருவராலும் தடுக்கமுடியாததுமான ஓரம்பை உமது புத்ரனைக்குறித்து, 'ஆ! நீ மாண்டாய்' என்று ராஜாவான அவனைப்பார்த்துச் சொல்லிவிட்டுப் பிரயோகித்தார். காதுவரையில் இழுத்துவிடப்பட்ட அந்த அம்பி னலே அடிக்கப்பட்டு அந்தக் கௌரவன் புத்தி மிகமயங்கி ரதத்தின் மத்தியில் உட்கார்ந்தான். ராஜேந்திரரே! பிறகு, 'ஆ! அரசன் கொல்லப்பட்டான்' என்று நான்கு பக்கங்களிலும ஸந்தோஷமடைந்த பாஞ்சாலசேனைகளினுடைய பெரிய ஆரவாரம் தோன்றியது. ஐயா! அவ்விடத்தில் உக்ரமான பாணத்தின்சப்தமும் கேட்கப்பட்டது. பிறகு, அந்த யுத்தகளத்தில் துரோணரும் விரைவாகக் காணப்பட் டார். துரியோதனனும் ஸந்தோஷமுடையவனுகித் திடமானவில்லைக் கையிலெடுத்து, 'நில், நில்' என்று சொல்லிக்கொண்டு பாண்டவ அர சரை எதிர்த்தான். ஜயத்தில் விருப்பமுள்ளவர்களான பாஞ்சாலர்கள்

துரியோதனனை விரைவுடன் எதிர்த்தார்கள். வேகத்துடன் புறப் பட்ட பெருங்காற்றானது ஜலத்தைப் பொழிகின்றமேகங்களை யெதிர்ப் பதுபோலக் குருராஜாவான துரியோதனனைப் பாதுகாக்க எண்ணங் கொண்டு துரோணர் அவர்களை எதிர்த்தார். வேந்தரே! பிறகு, யுத் தஞ்செய்யும் விருப்பத்தோடு ஒன்றுசேர்ந்திருக்கின்ற உம்முடைய படைவீரர்களுக்கும் பகைவர்களுக்கும அனேகம்பேர்களுடைய மா ணத்திற்குக்காரணமான பெரும்போர் நடந்தது" என்று கூறினான்.

---

## நூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருடைய யுத்தத்தை வர்ணித்தது.)

திருதராஷ்டிரன், "கட்டளையைமீறினவனும் புத்தியில்லாதவ னும் என்புத்திரனுமான துரியோதனனைப் பார்த்துச் சொல்லிவிட்டுப் பலசாலியான துரோணாசாரியர் கோபத்துடன் பாண்டவர்களைநோக்கி அப்பொழுது பிரவேசித்தாரன்றோ? (அவ்வாறு) பிரவேசித்து ஸஞ் சரிக்கின்றவரும் ரதத்திலிருக்கின்றவரும் சூரரும் சிறந்தவில்லாளியு மான துரோணரைப் பாண்டவர்கள் எவ்வாறு தடுத்தார்கள்? பெரும் போரில் பல பகைவரைக்கொல்லுகின்ற ஆசாரியருடைய வலப்பக்கத்தி லுள்ளசேனையை எவர்கள் பாதுகாத்தார்கள்? இடப்பக்கத்திலுள்ள சேனையை எவர்கள் பாதுகாத்தார்கள்? வீரரும் யுத்தஞ்செய்கின்ற வருமான அந்தத் துரோணருடைய பின்புறத்தில் எந்தவீரர்கள் இருந் தார்கள்? தோராளியான அந்தத் துரோணருக்கு எதிரில் எந்தச் சத் துருக்கள் நின்றார்கள்? சிறந்தவில்லாளியும் பகைவர்களால் ஜயிக்கப் படாதவரும் ரதமார்க்கங்களில் நர்த்தனஞ்செய்கின்றவரும் ஆயுததாரி களான எல்லா வீரர்களுள்ளும் உத்தமருமான துரோணாசாரியர் பாஞ் சாலர்களைநோக்கிப் பிரவேசித்ததனால், அவர்களை, அகாலத்தில் ஸம்ப வித்ததும் மிதமிஞ்சியதுமான குளிரானது தொட்டிருக்குமென்று நான் நினைக்கிறேன். குளிர்காலத்தில் பசுக்கள் நடுங்குவதுபோல அவர்கள் நடுக்கமுற்றிருப்பார்களென்று நான் எண்ணுகிறேன். பாஞ் சாலர்களுடைய எல்லாஸைனியங்களையும் தகிப்பவரும் அக்னிபோலக் குரோதமுடையவரும் ரதிகர்களுள் உத்தமருமான துரோணாசாரியர் எவ்வாறு மரணத்தையடைந்தார்?" என்று வினவ, ஸஞ்சயன சொல்ல லானான்.

"ஸாயங்காலத்தில் ஸைந்தவனைக்கொன்று அரசரோடுசேர்ந்த பிறகு, பார்த்தனும் மகாவில்லாளியான ஸாத்யகியும் துரோணரையே எதிர்த்துச்சென்றார்கள். அவ்வாறே யுதிஷ்டிரரும் பாண்டவனான பீமஸேனனும் தனித்தனியாகச் சேனையுடன் மிக்க முயற்சிகொண்டு விரைவாகத் துரோணரையே எதிர்த்தார்கள். அவ்வாறே புத்திசாலியான நகுலனும் ஜயிக்கமுடியாத ஸஹதேவனும் திருஷ்டத்யும்னனும் சதானீகனும் கேகயர்களும் விராடனும் சேனைகளுடன்கூடின மச்சநாட்டினர்களும் ஸால்வர்களும் துரோணரையே யுத்தத்தில் எதிர்த்தார்கள். அரசரே! அவ்வாறே, திருஷ்டத்யும்னனுடைய பிதாவான துருபதராஜனும், பாஞ்சாலர்களால் நான்குபுறமும் ரக்ஷிக்கப்பட்டவனாகித் துரோணரையே எதிர்த்தான். பெரிதானவில்லைக் கையிற்கொண்டவர்களான த்ரௌபதிகுமாரர்களும் ராக்ஷஸனான கடோத்கசனும் ஸைனியங்களோடுகூடி மிக்க காந்தியுள்ள துரோணரையே எதிர்த்தார்கள். ப்ரபத்ரகர்களும் (பகைவர்களை) அழிக்கும் தன்மையுள்ளவர்களான ஆறாயிரம் பாஞ்சாலவீரர்களும் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு துரோணரையே எதிர்த்தார்கள். அவ்வாறே, பாண்டவவீரர்களுள் மகாரதர்களான மற்றப் புருஷசிரேஷ்டர்களும் ஒன்றுசேர்ந்து பிராம்மணோத்தமரான துரோணரையே எதிர்த்தார்கள். அரசரே! அந்தச் சூரர்கள் யுத்தத்திற்குச் சென்றபொழுது, பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிறதும், கோரமானதும், யுத்தவீரர்களுக்கு அமங்களகரமாயுள்ளதும், பயங்கரமானதும், யமனிடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கிறதும், யானைகள் குதிரைகள் காலாட்கள் இவைகளுடைய பிராணனை மாய்க்கின்றதுமான இராத்திரியானது அப்பொழுது தோன்றியது. கோரமான அந்த இரவில் நரிகள் ஜ்வாலையோடுகூடின கொள்ளிகளையுடைய முகங்களால் நாற்புறமும் ஊளையிட்டுக் கோரமான பயத்தைத்தெரிவித்தன. அதிபயங்கரமான கோட்டான்களும் கௌரவர்களுக்கு அதிகமானபயத்தை விசேஷித்துச் சொல்லிக்கொண்டு கௌரவர்களுடையசேனையில் காணப்பட்டன. ராஜேந்திரரே! பிறகு, ஸைனியங்களில் பேரிவாத்யங்களுடைய பெரிய சப்தத்தினாலும், மிருதங்கங்களினுண்டாய சப்தத்தினாலும், யானைகளுடைய பிளிறுதல்களாலும், குதிரைகளுடைய கனைப்புக்களாலும், குளப்படிவைப்பதினால் உண்டாகும் சப்தத்தினாலும் நெருங்கின ஒரு பேரொலியானது எங்கும் உண்டாகியது. வேந்தரே! பிறகு, துரோணருக்கும் ஸ்ருஞ்சயர்களனைவருக்கும் மாலைப்பொழுதில் அதிபயங்கரமானயுத்தம் நேர்ந்தது. இருட்டினாலும் நான்குபக்கங்களிலும் உண்டாயிருக்கின்ற சேனை

யின் புழுதியினாலும் உலகமே மூடப்பட்டபொழுது ஒரு வஸ்துவும் அறியப்படவில்லை. பிறகு, மனிதர்கள் குதிரைகள் யானைகள் இவற்றின் ரக்தமானது நன்றாகச்சேர்ந்து பெருகியது. மனக்கலக்கமடைந்த நாங்கள் பூமியிலுண்டான புழுதியைப் பார்க்கவில்லை. மலையில் எரிக்கப்படுகின்ற மூங்கிற்காட்டினுடைய சப்தம்போல இரவில் ஆயுதங்களுடைய சடசடவென்னும் ஒலியானது கோரமாக உண்டாகியது. மிருதங்கங்கள் ஆனகங்கள் இவைகளினுடைய சப்தங்களாலும், அவ்வாறே ஜர்ஜரங்களாலும், படகங்களாலும், [1] யானைகளுடைய பிளிறுதல்களாலும், குதிரைகளைக்கும் சப்தங்களாலும் எல்லாமே குழப்பமுள்ளதாக விளங்கியது. அரசரே! இருளால்மூடப்பட்ட ஸாயங்காலத்தில் நம்மவர்களாவது பிறர்களாவது அறியப்படவேயில்லை. அந்த (ஸைந்யம்) எல்லாம் பைத்தியம் பிடித்ததுபோலாகியது. ராஜேந்திரரே! பிறகு,பூமியிலிருந்து உண்டானதூளி ரக்தத்தினாலே அடக்கப்பட்டது. பொன்னாலாகிய கவசங்களாலும் பூஷணங்களாலும் இருள் நீங்கியது. பாதரிற் சிறந்தவரே! பிறகு, ரத்தினங்களாலும் ஸுவர்ணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பாரதசேனையானது இரவில் நக்ஷத்திரங்களோடுகூடின ஆகாயம்போல விளங்கியது; நரிகள் ஊளையிடுவதும் காக்கைகள் கத்துவதும் வேலாயுதங்களாலும் கொடிகளாலும் நிறைந்ததும் யானைகளினுடையபிளிறலால் நிரம்பியதும் சிங்கநாதத்தினாலுண்டான பெருஞ்சத்தத்தால் எதிரொலிகொண்டதும் கோரமும் ஆகியது. அந்த இடத்தில் நெருங்கியதும் மயிர்புளகிக்கச்செய்வதும் எல்லாத்திக்குக்களையும் நன்றாகமூடுகின்றதும் மஹேந்திரனுடைய வஜ்ராயுதத்திற்குச் சமமானசப்தமுள்ளதுமான பெரிய சப்தமானது உண்டாகியது. மகாராஜரே! அந்தப் பாரதசேனையானது அர்த்தராத்திரியில் தோள்வளைகளாலும் குண்டலங்களாலும் பொன்னாபரணங்களாலும் ஆயுதங்களாலும் விளக்கப்பட்டதாகக் காணப்பட்டது. அந்தச் சேனையில் பொன்னால் அலங்கரிக்கப்பட்ட யானைகளும் தேர்களும் இரவில் மின்னலுடன்கூடின மேகங்கள்போல் காணப்பட்டன. விழுகின்றவைகளான ரிஷ்டிகளும் சக்திகளும் கதைகளும் பாணங்களும் உலக்கைகளும் ஈட்டிகளும் பட்டாக்கத்திகளும் பிரகாசிக்கின்ற அக்னிபோல் காணப்பட்டன. யுத்தத்தைச் செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொண்டவர்களான எல்லா வீரர்களும் துரியோதனனாகிற எதிர்க்காற்றுள்ளதும் தேர்களும் யானைகளுமாகிறமேகங்களுள்ளதும் வாத்யங்களுடைய கோஷமாகிற இடிமுழக்கமுள்ளதும் விற்களும் துவசங்களுமா

[1] 'பேத்காரை:' என்பது மூலம்.

கிற மின்னல்களால் சூழப்பட்டதும் துரோணரும் பாண்டவர்களுமாகிற [1] பர்ஜன்ய தேவதையோடுகூடியதும் கத்திகளும் சக்திகளும் கதைகளுமாகிற இடிகளோடுகூடியதும் அம்புகளாகிறநீர்வீழ்ச்சியுள்ளதும் அஸ்திரங்களாகிற காற்றுள்ளதும் ஆயுதங்களின் வீழ்ச்சியாகிற உஷ்ணத்தால் நிறைந்ததும் கோரமானதும் ஆச்சரியத்தை உண்டுபண்ணத்தக்கதும் உக்கிரமாயுள்ளதும் உயிரைப்போக்குகின்றதும் தெப்பமில்லாததும் அதிபயங்கரமாயுள்ளதுமான அந்த யுத்தநதியில் பிரவேசித்தார்கள். அஸ்தமயகாலத்தில் தொடங்கப்பட்டதும் கோரமானதும் உரத்த சத்தங்களால் எதிரொலியுள்ளதாகச் செய்யப்பட்டதும் பயமுள்ளவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணுகின்றதும் சூரர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்தி பண்ணுகின்றதும் மகாகோரமானதும் மிக்கபயங்கரமாயுள்ளதுமான அந்த ராத்திரி யுத்தமானது நடக்கும்பொழுது பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஒன்றுசேர்ந்து கோபங்கொண்டு துரோணரைஎதிர்த்து வந்தார்கள். அரசரே! (துரோணர்) தம் எதிரில்வந்த மகாரதர்களை யெல்லாம் முதுகுகாட்டி யோடும்படிசெய்தார்; சிலரை யமலோகத்திற்கனுப்பினார். இரவின் தொடக்கத்தில் துரோணர் ஒருவராலே நாராசங்களால் ஆயிரம் சிறந்தயானைகளும் பதினாயிரம் ரதங்களும் பத்துலக்ஷம் காலாட்களும் பத்துக்கோடி குதிரைக்கூட்டங்களும் அழிக்கப்பட்டன" என்று கூறினான்.

---

## நூற்றைம்பத்தாறுவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன், துர்மதன் துஷ்கர்ணன் முதலானவர்களை வதஞ்செய்தது.)

திருதராஷ்டிரன், அவமதிக்கமுடியாதவரும் எல்லையற்ற வல்லமையுள்ளவரும் கோபங்கொண்டவரும் முயற்சியுள்ளவருமான அந்தத் துரோணர் ஸ்ருஞ்சயர்களுள் பிரவேசித்தவுடன் அப்பொழுது உங்களுக்கு என்ன எண்ணம் உண்டாயிற்று? சாஸ்திரவரம்பைக் கடந்தவனும் என்புத்திரனுமான துரியோதனனைப்பார்த்து அவ்வாறு சொல்லிவிட்டு எண்ணமுடியாத வல்லமையுள்ள துரோணர், பாண்டவருடைய படையில் பிரவேசித்தபொழுது பார்த்தன் என்னசெய்தான்? வீரனான ஸைந்தவனும் பூரிஸ்ரவஸும் கொல்லப்பட்ட பிறகு, மிக்க தேஜஸுள்ளவரும் ஜயிக்கப்படாதவருமான துரோணர் பாஞ்சாலர்களை எதிர்த்துச்

[1] மழைக்கடவுள்.

சென்றபொழுது பார்த்தன் என்னசெய்தான்? அவமதிக்கக்கூடாதவரும் சத்துருக்களை வாட்டுகிறவருமான துரோணர் சேனையில் பிரவேசித்தவுடனே பார்த்தன் என்ன எண்ணினன்? துரியோதனனும் எந்தச் செய்கையை அக்காலத்திற்குத் தகுந்ததென்று எண்ணினன்? விரும்பியவற்றைக் கொடுக்கின்றவரும் வீர்யமுள்ளவருமபிராம்மணோத்தமருமான துரோணரை எவர்கள் பின் தொடர்ந்தார்கள்? யுத்தம் செய்கின்ற சூரரான துரோணருக்கு எந்தவீரர்கள் உதவியாகப் பின்தொடர்ந்தார்கள்? யுத்தத்தில் பகைவர்களைக் கொல்லுகின்ற அந்தத்துரோணருக்கு எந்தவீரர்கள் முன்னே நின்றார்கள்? பிரபுவே! பாரத்வாஜருடைய அம்புகளால் பீடிக்கப்பட்ட எல்லாப்பாண்டவர்களையும் குளிர்காலத்தில் நடுக்கமுற்ற இளைத்த பசுக்கள்போல நான் நினைக்கிறேன். சத்துருக்களைத் துகைப்பவரும் பெரியவில்லை யேந்தியவரும் புருஷசிரேஷ்டருமான அந்தத் துரோணாசாரியர் பாஞ்சாலர்களுள் புகுந்து எவ்வாறு மரணமடைந்தார்? இரவில் எல்லா யுத்தவீரர்களும் ஒன்றுசேர்ந்து மகாரதர்களும் ஒன்றுகூடி ஸைந்யங்களும் தனித்தனி கலக்கப்படும் அந்தச்சமயத்தில் உங்களுள் எவர்கள் (கலங்காத) அறிவுள்ளவர்களாயிருந்தார்கள்? யுத்தங்களில் நம்மைச்சேர்ந்த ரதிகர்களை யுத்தத்தில் நெருங்கியிருப்பவர்களாகவும் கொல்லப்பட்டவர்களாகவும் அவமதிக்கப்பட்டவர்களாகவும் ரதத்தை யிழக்கும்படி செய்யப்பட்டவர்களாகவும் சொல்லுகிறாய். பாண்டவர்களாலே நன்றாகக் குழப்பப்படுகின்றவர்களும் புத்தியையிழந்தவர்களும் பேரிருளில் அமிழ்ந்தவர்களுமான நம்முடைய வீரர்களுக்கு அப்பொழுது என்ன எண்ணமுண்டாயிற்று? பாண்டவர்களை ஸந்தோஷமடைந்தவர்களாகவும் பலத்தால் அதிகரித்தவர்களாகவும் ஊக்கமுள்ளவர்களாகவும் சொல்லுகிறாய். என்னைச்சேர்ந்தவர்களை இப்பொழுது ஸந்தோஷத்தை யிழந்தவர்களாகவும் தோல்வியை அடைந்தவர்களாகவும் சொல்லுகிறாய் ஸஞ்சய! அப்பொழுது அந்தயுத்தத்தில் ஓடாமலிருக்கிற பார்த்தர்களுக்கு இராத்திரியில் எவ்வாறு கௌரவர்களைக் காணும்விஷயத்தில் பிரகாசம் ஏற்பட்டது?" என்று வினவ, சஞ்சயன் சொல்லலானன்.

"அரசரே! அப்பொழுது மிக்கபயங்கரமான இராத்திரியுத்தம் நடக்கும்காலத்தில், பாண்டவர்களனைவரும் ஸோமகர்களோடுசேர்ந்து துரோணரை எதிர்த்தார்கள். பிறகு, துரோணர் எல்லாக் கேகயர்களையும் திருஷ்டத்யும்னனுடைய குமாரர்களையும் விரைவாகச்செல்லுகின்ற அம்புகளால் பிரேதலோகத்திற்கு அனுப்பினர். பாரதரே! எந்த மகாரதர்கள்

அவருக்கு முன்னிலையில் நின்றார்களோ அவர்களெல்லோரையும் அவர் பிதிர்லோகத்திற்கனுப்பினார். வீரர்களை நாசஞ்செய்கின்ற மகாரதரான பாரத்வாஜரைப் பிரதாபசாலியும் ராஜாவுமான சிபி அப்பொழுது கோபங்கொண்டு எதிர்த்தான். எதிர்த்துவருகின்ற பாண்டவர்களைச்சேர்ந்த மகாரதனான அந்தச் சிபியைப்பார்த்துத் துரோணர் முழுதும் எஃகினாற்செய்த கூர்மையுள்ள பத்துப்பாணங்களால் அடித்தார். சிபியும் புன்சிரிப்புடன் கூர்மையுள்ள முப்பதுபாணங்களால் அவரைத் திருப்பியடித்து ஒரு பல்லத்தால் அவருடைய ஸாரதியையும் தள்ளினான். துரோணர் மகாபலசாலியான அந்தச்சிபியினுடைய குதிரைகளையும் ஸாரதியையுங்கொன்று, பிறகு, தலைப்பாகையுடன்கூடிய அவன் தலையையும் சரீரத்தினின்றும் தள்ளினார். பிறகு, துரியோதனன் விரைவாக அந்தத்துரோணருக்கு வேறு ஸாரதியைக்கொடுத்தான். அவர் அந்த ஸாரதியினால் கடிவாளம்பிடிக்கப்பட்ட குதிரைகளுள்ளவராகி மறுபடியும் பகைவர்களை எதிர்த்தார். களிங்கதேசத்தரசனுடைய குமாரன் முன்னமே தன்பிதா கொல்லப்பட்டபடியால் கோபங்கொண்டவனாகிக் களிங்கர்களுடைய படையோடுகூடி யுத்தத்தில் பீமஸேனனையெதிர்த்தான். அந்தக் களிங்கராஜகுமாரன் பீமனை ஐந்துபாணங்களால் அடித்து மறுபடியும் ஏழுபாணங்களால் அடித்தான். விசோகனை மூன்றுபாணங்களாலடித்து ஒருபாணத்தால் த்வஜத்தையும் அடித்தான். கோபங்கொண்ட அந்தக் களிங்கதேசத்துவீரனை, கோபங்கொண்ட விருகோதரன் தன் ரதத்தினின்று அவன் ரதத்தில் பாய்ந்து முஷ்டியினால் குத்தினான். பலவானான பாண்டவனால் யுத்தத்தில் முஷ்டியினால் கொல்லப்பட்ட அவனுடைய எல்லா எலும்புகளும் உடனே தனித்தனியாக விழுந்தன. மகாராஜரே! அப்பொழுது அவனால் அந்தக்காளிங்கன் கொல்லப்பட்டவுடனே, பாண்டவனைக்குறித்து 'நல்லது; நல்லது' என்கிற பாஞ்சாலர்களுடைய பெரிதான ஸிம்மநாதமானது உண்டாயிற்று. பகைவரை வாட்டுபவரே! அதைக் கர்ணனும் அவனுடைய ஸகோதரர்களும் ஸகிக்கவில்லை. அவர்கள் ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளாலே பீமஸேனனை அடித்தார்கள். பிறகு, பீமன் அந்தச் சத்ருரதத்தைவிட்டுத் துருமனுடைய ரதத்தையடைந்து அம்புகளை ஓயாமல் தொடுக்கிற துருமனையும் முஷ்டியினால் நன்றாகக் குத்தினான். எல்லாவிதத்தாலும் நசுக்கப்பட்ட அந்தத்துருமன் இரத்தத்தைக் கக்கினான். (கீழே) வைக்கப்பட்டிருக்கின்ற [1] காசமணியானது ஒருகுத்தினாலே விளையாட்டாக நொறுக்கப்படுவது

---

[1] மண்ணை உருக்கிச் செய்யப்படும் கண்ணாடி முதலியன.

போலக் கர்ணபிராதாவான துருமனும் அவ்விடத்தில் நொறுக்கப்பட்டான். பலவானுன பாண்டுபுத்திரனுலே கொல்லப்பட்ட அந்தத்துருமன் அப்பொழுது விழுந்தான். மகாராஜரே! மகாபலசாலியான பீமன் அவனைக்கொன்று ஜயராதனுடைய ரதத்தையடைந்து ஸிம்மம்போல் அடிக்கடி கர்ஜித்தான். அரசரே! மகாபலசாலியும் நீண்டகைகளுள்ளவனுமான அந்தப்பீமன் வீரர்களான அந்தஜயராதனையும் அவனுடைய ஸாரதியையும் இரண்டு கால்களையும் பிடித்துச்சுழற்றிக் கர்ணன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பூமியில் அடித்தான். அவ்விருவரும் பிராணனைவிட்டார்கள். கர்ணனே பொன்மயமான ஒருசக்தியைப் பாண்டவன்மீது பிரயோகித்தான். பிறகு, பாண்டுநந்தனன் அட்டகாஸம்செய்து அந்தச்சக்தியையே பிடித்துக்கொண்டான். அவமதிக்க முடியாதவனுன விருகோதரன் அதனை யுத்தத்தில் கர்ணன்மீதே எறிந்தான். வருகின்ற அந்தச் சக்தியாயுதத்தைச் சகுனியானவன் எண்ணெயிட்டுத்தீட்டிய அம்புகளால் அறுத்தான். ஆச்சரியகரமான பராக்ரமமுள்ள பீமஸேனன் யுத்தத்தில் பெரிதான இந்தக்காரியத்தைச்செய்து மறுபடியும் தன் ரதத்தையடைந்து உமது ஸேனையைக் குறித்து விரைவாகச்சென்றான். அரசரே! கோபங்கொண்டிருக்கிற யமன்போலக் கொல்லவேண்டுமென்கிற எண்ணங்கொண்டுவருகின்ற மகாபாகுபலமுள்ள அந்தப் பீமனை மகாரதர்களான உம்முடைய புத்திரர்கள் பெரிய அம்பு மழையினுல் மறைத்துத் தடுத்தார்கள். பிறகு, பீமன் யுத்தத்தில் அட்டஹாஸஞ்செய்துகொண்டு துர்மதனுடைய ஸாரதியையும் குதிரைகளையும் அம்புகளால் யமலோகத்திற்கனுப்பினுன். பிறகு, துர்மதனே துஷ்கர்ணனுடைய ரதத்தின்மீது ஏறிக்கொண்டான். ஒரே ரதத்தில் ஏறினவர்களும் பகைவர்களை வாட்டுகிறவர்களும் சகோதரர்களுமான அவ்விருவரும் யுத்தமுனையின்மத்தியில் வருணனும் சூரியனும் அஸுரசிரேஷ்டனுன தாரகனை எதிர்த்ததுபோலப் பீமனை எதிர்த்தார்கள். பிறகு, உமது புத்ரர்களான துர்மதனும் துஷ்கர்ணனும் ஒரே ரதத்திலிருந்துகொண்டு பாணங்களால் பீமனை அடித்தார்கள். பிறகு, சத்துருக்களை அடக்குகிறவனுன பாண்டவன் கர்ணனும் துரோணபுத்திரனும் துரியோதனனும் கிருபரும் ஸோமதத்தனும் பாஹ்லீகனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே துர்மதனும் துஷ்கர்ணனும் இருக்கும் அந்த ரதத்தைக் கால் உதையினுல் பூமியில் வீழ்த்தினுன். பிறகு, பலமுடையவர்களும் சூரர்களும் உம்முடைய குமாரர்களுமான துஷ்கர்ணன் துர்மதன் இருவரையும் பீமன் மிகுந்த கோபங்கொண்டு முஷ்டியினுல் குத்திக் காலால் துகைத்தான். பிறகு, ஸைனியமானது

ஹாஹாகாரம் கொண்டிருக்கையில், அரசர்கள், 'இதோ ருத்திரர் பீம ஸேனஉருவத்தோடு கௌரவர்களுடன் யுத்தம்செய்கிறார்' என்று பீமனைப் பற்றிக்கூறினார்கள். பாரதரே! அரசர்களெல்லோரும் இவ்வாறு சொல்லி விட்டுப் பிரஜ்ஞையை இழந்தவர்களாகி வாகனங்களை ஓட்டிக்கொண்டு ஓடினார்கள். இருவர்சேர்ந்து ஓடவில்லை. பிறகு, இரவின் தொடக் கத்தில் ஸேனையானது அதிகமாக நாசஞ்செய்யப்பட்டபொழுது ராஜ சிரேஷ்டர்களாலே நன்குபுகழப்பட்டவனும் பெரும்படையுள்ளவனும் பலமுடையவனுமான விருகோதரன் தாமரைமலர்போல மலர்ந்தகண்களை யுடையவனாகி ராஜாவான யுதிஷ்டிரரைப்பூஜித்தான். பிறகு, நகுலஸஹ தேவர்களும் துருபதனும் விராடனும் கேகயர்களும் யுதிஷ்டிரரும் அதிஸந்தோஷத்தை யடைந்து அந்தகாஸுரன் கொல்லப்பட்டவுடன் தேவர்கள் ருத்திரரைக் கொண்டாடியதுபோல விருகோதரனை மிகவும் கொண்டாடினார்கள். பிறகு, வருணகுமாரனுக்கொப்பானவர்களும் கோபமுண்டவர்களும் மகாத்மாவான குருவோடுகூடச்சேர்ந்தவர்களு மான உம்முடையகுமாரர்கள் ரதங்களுடனும் காலாட்களுடனும் யானை களுடனும் சேர்ந்து யுத்தம்செய்ய எண்ணி விருகோதரனை நான்குபக் கங்களிலும் சூழ்ந்து தடுத்தார்கள். பிறகு, இரட்டைப் பிள்ளைகளான நகுலஸகதேவர்களும் ஸைனிகர்களோடுகூடின துருபதகுமாரர்களும் யுதிஷ்டிரரும் துருபதனும் விராடனும் ஸாத்யகியும கடோத்கசனும் ஜயவிஜயர்களும் [1] துருமனும் விருகனும் ஸ்ருஞ்சயர்களோடுசேர்ந்து உமதுபுத்திரர்களைத் தடுத்தார்கள். ராஜசிரேஷ்டரே! பிறகு, இருளாகிற மேகத்தால் சூழப்பட்டதும் மகாபயங்கரமுமான இரவின் தொடக் கத்தில் மகாபலசாலிகளான கௌரவபாண்டவ வீரர்களுக்குப் பயங்கர மானதும் மிகவும் உக்கிரமானதும் செந்நாய்க் கூட்டங்களுக்கும் கழுகு களுக்கும் சந்தோஷத்தை உண்டுபண்ணுகின்றதுமான அற்புதமான யுத்தம நேர்ந்தது.

---

## நூற்றைம்பத்தேழாவது அத்யாயம்

## கடோத்கசவதபர்வம் (தொ. ர்ச்சி.)

(ஸாத்யகி ஸோமதத்தனை வென்றதும், அஸ்வத்தாமாவுக்கும் கடோத் கசனுக்கும்யுத்தமும், அஸ்வத்தாமாவின் பராக்கிரமமும்.)

அப்பொழுது, தன் புத்திரனும் பிராயோபவேசம் செய்தவனு மான பூரிஸ்ரவஸ் ஸாத்யகியினால் கொல்லப்பட்டவுடன் ஸோமதத் தன் மிக்க கோபங்கொண்டு ஸாத்யகியைநோக்கி, 'ஸாத்வத! மகாத்மாக்

---

[1] இவன் வேறு; இது அதிகபாடம்.

களான தேவர்களாலே எது உத்தமமான க்ஷத்திரியதர்மமென்று காணப் பட்டிருக்கிறதோ அந்தத் தர்மத்தை நீ விட்டுவிட்டுத் திருட்டுத்தொழி லில் எப்படிப் பற்றுதலுள்ளவனுனாய்? க்ஷத்திரியதர்மத்தில் பற்றுத லுள்ள ஒரு விவேகியானவன் பின்வாங்கினவனையும் தளர்ச்சியுற்றவனை யும் ஆயுதங்களை வைத்துவிட்டவனையும் யாசிக்கிறவனையும் எவ்வாறு யுத்தத்தில் அடிப்பான்? ஸாத்வத! மிக்க தோள்வலியமைந்தநீயும் பிர த்யும்னனுமாகிய இருவருமே விருஷ்ணிகளுள் யுத்தத்தில் மகாரதர்க ளென்று பிரஸித்திபெற்றவர்களன்றோ? பிராயோபவேசம் செய்தவனும் பார்த்தனாலே கைஅறுக்கப்பட்டவனுமான பூரிஸ்ரவஸின்விஷயத்தில் இரக்கப்படத்தக்க அவ்விதக் கொடியசெய்கையை எவ்வாறு செய்தாய்? ஆ! ஆ! கெட்டநடையுள்ளவனே! அந்தச் செய்கைக்குப் பலனை நீ யுத்தத்தில் அனுபவி. மூட! இப்பொழுது ஆண்மையை வெளிப்படுத்தி அம்பினாலே உன் தலையை அறுக்கப்போகிறேன். ஸாத்வத! இரண்டு புத்திரர்கள்மீதும் இஷ்டமான புண்யத்தின்மீதும் நான் ஆணையிடுகி றேன். விருஷ்ணிகுலத்திற்பிறந்த பாபி! வீரனென்று கர்வங்கொண்ட வனும் பிருதாபுத்திரனை அர்ஜுனனாலே ரக்ஷிக்கப்படாதவனுமான உன்னை இவ்விரவு கழிவதற்குள் புத்திரர்களோடும் இளையஸகோதரர் களோடுஞ்சேர்த்து நான்கொல்லாமற்போவேனாகில் கோரமானநரகத்தில் விழுவேன்' என்று கூறினான். மிக்கபலசாலியான ஸோமதத்தன் அதிக கோபங்கொண்டு இவ்வாறு சொல்லிவிட்டுச் சங்கத்தை ஊதி ஸிம்மநாதத்தையும் செய்தான். பிறகு, தாமரையிதழ்போன்ற கண்களை யுடையவனும் ஸிம்மம்போன்ற கோரப்பற்களையுடையவனும் அணுக முடியாதவனுமான ஸாத்யகி மிகவும் கோபங்கொண்டு ஸோமதத்தனைப் பார்த்து, 'கௌரவனே! உன்னோடாவது இன்னும் மற்ற வீரர்களோடா வது போர்புரிகின்றஎனக்கு எவ்விதத்தாலும் மனத்தில்கொஞ்சமேனும் ஒருவிதபயமும் கிடையாது. கௌரவ! எல்லா ஸைனியத்தினாலும் ரக்ஷிக்கப்பட்டு நீ என்னுடன் போர்புரிந்தாலும் உன்னிடத்தில் எனக்கு ஒருவிதமான மனவருத்தமும் இல்லை. க்ஷத்திரியதர்மத்தில் நிலைபெற்றி ருக்கின்ற நான் உன்னால் சண்டையைப் பிரதானமாகக்கொண்டதும் அயோக்யர்களுக்கு ஸம்மதமாயிருக்கின்றதுமான வாக்கியத்தால் பயப் படுத்தத் தக்கவனல்லேன். அரசனே! என்னோடு போர்புரிவதற்கு உனக்கு இப்பொழுது எண்ணமிருக்குமாகில் தயையில்லாமல் கூர்மையுள்ள அம்புகளால் (என்னை நீ) அடி; உன்னையும் நான் அடிக்கிறேன்., மகாராஜனே! வீரனும் மகாரதனுமான உனது புத்திரனான பூரிஸ்ரவஸ் கொல்லப்பட்டான். பிராதாவினுடைய (பிரி

வின்) துக்கத்தால் பீடிக்கப்பட்ட சலனும் கொல்லப்பட்டான். புத்திரர்களோடும் பந்துக்களோடும்கூடின உன்னையும் இப்பொழுது ஸம்ஹாரம் செய்யப்போகிறேன். இப்பொழுது யுத்தத்தில் முயற்சியுடையவனாக நில். நீ குருவம்சத்தில்பிறந்த மகாரதனல்லையோ? எந்த யுதிஷ்டிரராஜரிடத்தில் கொடை இந்திரியநிக்ரஹம் பரிசுத்தம் கொல்லாமை (அகாரியத்தில்) வெட்கம் தைரியம் பொறுமை ஆகிய எல்லாம் அழிவற்றவைகளாக எப்பொழுதும் இருக்கின்றனவோ அந்த [1] முரசத்தைக் கொடியாகக்கொண்ட அவருடைய தேஜஸினால் முன்பே நீ கொல்லப்பட்டவன். இனி, கர்ணனோடும் சகுனியோடும் யுத்தத்தில் அவசியம் மரணத்தையடையப்போகிறாய். நான் ஸ்ரீகிருஷ்ணார்ஜுனர்களுடைய சரணங்களின்மீதும் யாகங்களின்மீதும் புண்யதீர்த்தங்களின்மீதும் ஆணையிடுகிறேன் யுத்தத்தில்கோபமூட்டப்பட்டவனான நான் பாபியான உன்னைப் புத்திரர்களோடு கொல்லாமல் இருக்கப்போகிறதில்லை. யுத்தத்தைவிட்டுப்போவாயாகில் விடுபட்டவனாவாய்' என்று சொன்னான். ஒருவருக்கொருவர் இவ்வாறு சொல்லிவிட்டு, கோபத்தினால் சிவந்த கண்களையுடையவர்களும் ஆண்மையிற் சிறந்தவர்களுமான இருவரும் பாணப்பிரயோகம்செய்ய ஆரம்பித்தார்கள். பிறகு, துரியோதனன் ஆயிரம் தேர்களோடும் பதினாயிரம் யானைகளோடும் ஸோமதத்தனைச் சூழ்ந்து யுத்தத்தில் ஸன்னத்தனாக நின்றான். மிக்க கோபங்கொண்டவனும் சஸ்திரதாரிகளான எல்லா வீரர்களுள்ளும் சிறந்தவனும் நீண்டகைகளையுடையவனும் வஜ்ரம்போன்றதேகமுடையவனும் யௌவனமுள்ளவனும் உமக்கு மைத்துனனுமான சகுனியும் புத்ரபௌத்ரர்களாலும் இந்திரனுடைய பராக்ரமம்போன்ற பராக்ரமமுடைய ப்ராதாக்களாலும் சூழப்பட்டவனானான். புத்திசாலியான அந்தச் சகுனியினுடைய லக்ஷத்திற்குமேற்பட்ட குதிரைகள் மகாவில்லாளியான ஸோமதத்தனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்து பாதுகாத்தன. பலவான்களாலே காக்கப்படுகின்ற அந்த ஸோமதத்தன் ஸாத்யகியை அம்புகளால் மூடினான். ஸத்யவிக்ரமனான ஸாத்யகி படிந்தகணுக்களுள்ள அம்புகளாலே மூடப்படுவதைக்கண்டு, மஹாபாகுபலமுள்ள திருஷ்டத்யும்னன் கோபமிக்கவனாகிப் பெரிய சேனையை அழைத்துக்கொண்டு அவனைக் காப்பாற்றினான். அரசரே! அன்யோன்யம் அடித்துக்கொள்ளுகின்ற ஸேனாஸமூகங்களில் பெருங்காற்றினால் கலக்கப்பட்ட ஸமுத்திரங்களில் உண்டாகிற சப்தம்போலச் சப்தம் உண்டாயிற்று. ஸோமதத்தனே ஸாத்வதனை ஒன்பதுபாணங்களால் அடித்தான். ஸாத்யகியும்

---

[1] 'ம்ருதங்கம்' என்பது மூலம்.

குருபுங்கவனான அந்த ஸோமதத்தனை ஒன்பதுபாணங்களால் அடித்தான். பலமுடையவனும் திடமான வில்லைக் கையில்தாங்கியவனுமான ஸாத்யகியினால் யுத்தத்தில் நன்றாக அடிக்கப்பட்ட ஸோமதத்தன் ரதமத்தியை அடைந்து பிரஜ்ஞையை இழந்தவனாகி மூர்ச்சையடைந்தான். மூர்ச்சையடைந்திருக்கின்ற அந்த ஸோமதத்தனைப் பார்த்து ஸாரதி விரைபவனாகி வீர்யமுடையவனும் மகாரதனுமான அந்த ஸோமதத்தனை யுத்தரங்கத்தினின்று வெளியிற்கொண்டுசென்றான். யுயுதானனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டு அந்த ஸோமதத்தன் மதிமயங்கியதைக் கண்டு, பிறகு, துரோணர் யதுவீரனான ஸாத்யகியைக் கொல்லவெண்ணி எதிர்த்துவந்தார். வருகின்ற அந்தத் துரோணரைக் கண்டு யுதிஷ்டிரர் முதலானவர்கள் மகாத்மாவான யதுவீரனைப் பாதுகாக்க எண்ணி அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, மூவுலகங்களையும் ஜயிக்கவேண்டுமென்ற எண்ணத்தினாலே முற்காலத்தில் தேவர்களோடே பலிசக்ரவர்த்திக்கு யுத்தம நேர்ந்ததுபோலத் துரோணருக்குப் பாண்டவர்களோடு யுத்தம் தொடங்கியது. பிறகு, மகாதேஜஸ்வியும் மிக்க புஜபலமுள்ளவருமான பாரத்வாஜர் பாணசமூகத்தினால் பாண்டவ ஸைனியத்தைச் சூழ்ந்து யுதிஷ்டிரரையுமடித்து ஸாத்யகியைப் பத்துப்பாணங்களாலும் பார்ஷதனை இருபதுபாணங்களாலும் பீமஸேனனை ஒன்பதுபாணங்களாலும் நகுலனை ஐந்துபாணங்களாலும் ஸஹதேவனை எட்டுப்பாணங்களாலும சிகண்டியை நூறுபாணங்களாலும் த்ரௌபதி குமாரர்களை ஐந்தைந்துபாணங்களாலும மத்ஸ்யதேசத்தரசனான விராடனை எட்டுப்பாணங்களாலும் துருபதனைப் பத்துப்பாணங்களாலும யுதாமன்யுவை மூன்றுபாணங்களாலும் உத்தமௌஜஸை ஆறுபாணங்களாலும் அடித்து யுத்தரங்கத்திலுள்ள இன்னும் மற்ற ஸைனிகர்களையும அடித்து யுதிஷ்டிரருக்கு அருகில் விரைவாகச் சென்றார். அரசரே! துரோணராலே கொல்லப்படுகின்ற அந்தப் பாண்டுபுத்திரருடைய படைவீரர்கள் அழுகைக்குரலுடன் பயத்தினால் பத்துத்திக்குக்களிலும் ஓடினார்கள். குந்திபுத்திரனான பல்குனன் துரோணராலே துரத்தப்படுகின்ற அந்தச் சேனையைக்கண்டு சிறிது பரபரப்புடன் ஆசாரியரைநோக்கி விரைவாக எதிர்த்துவந்தான். யுத்தரங்கத்தில் துரோணரை எதிர்த்துச் செல்லுகின்ற பீபத்ஸுவைக்கண்டு அந்த யுதிஷ்டிரருடைய ஸேனையானது மறுபடியுமதிரும்பியது. பிறகு, பாரத்வாஜருக்குப் பாண்டவர்களோடு மறுபடியும யுத்தம்நேர்ந்தது. மன்னரே! உமது புத்திரர்களாலே நான்குபக்கங்களிலும் சூழப்பட்டிருக்கின்ற துரோணர் பஞ்சுக்குவியலை நெருப்பு எரிப்பதுபோலப்

பாண்டவ ஸைனியங்களை எரித்தார். வேந்தரே! ஜ்வலிக்கின்ற சூரியன் போன்றவரும் பிரகாசிக்கின்ற நெருப்புப்போன்ற காந்தியுடையவரும் எப்பொழுதும் அதிகமான பாணஜ்வாலையுள்ளவரும் வட்டமாகச் செய்யப்பட்ட வில்லையுடையவரும் சூரியன்போல வாட்டுகிறவரும் சத்துருக்களைக் கொளுத்துகிறவருமான அந்தத் துரோணரைக்கண்டு ஒருவரும் தடுக்கவில்லை. அந்தத் துரோணருக்கு எதிரில் எந்த எந்த மனிதன் நின்றானோ அவனவனுடைய தலையை அறுத்துக்கொண்டு துரோணருடைய அம்புகள் பூமியிற் பிரவேசித்தன. இவ்வாறு மகாத்மாவான துரோணரால் கொல்லப்படுகின்ற அந்தப் பாண்டவசேனை மறுபடியும் பயந்து ஸவ்யஸாசி பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஓடியது. பாரதரே! துரோணராலே இரவில் சேனையானது மிகவும் நாசம் செய்யப்பட்டதைக்கண்டு அர்ஜுனன் கோவிந்தரைநோக்கி, 'துரோணருடைய ரதத்தைக்குறித்துச் செல்லும்' என்று சொன்னான். பிறகு மாதவர், வெள்ளியும் பசுவின்பாலும் குருக்கத்திப்பூவும் சந்திரனும் போன்ற காந்தியுள்ள குதிரைகளைத் துரோணருடைய ரதத்தைநோக்கி ஓட்டினார். பீமஸேனனும், அந்தப் பல்குனன் துரோணரைக்குறித்துச் செல்லுகின்றதைக்கண்டு தன் ஸாரதியைநோக்கி, 'நீ துரோணருடைய சேனையிருக்கும் பக்கத்தைக்குறித்து என்னைக் கொண்டுபோ' என்று சொன்னான். பரதர்களிற் சிறந்தவரே! விசோகன் என்கிற அந்த ஸாரதியும் பீமஸேனனுடைய வார்த்தையைக்கேட்டு ஸத்யஸந்தனான அர்ஜுனனுக்குப் பின்புறத்தில் குதிரைகளை நடத்தினான். மகாராஜரே! பிராதாக்களான பீமனும் அர்ஜுனனும் முயற்சியுடன் துரோணருடைய படையைக்குறித்து எதிர்த்துச் செல்வதைக்கண்டு பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் மாத்ஸ்யர்களும் சைத்யர்களும் காரூசர்களும் கோஸலர்களும் மகாரதர்களான கேகயர்களும் பின்தொடர்ந்தார்கள். மன்னரே! பிறகு, மயிர்சிலிர்க்கச்செய்கிற கோரமான யுத்தம் நேர்ந்தது. உம்முடைய படையினுடைய தென்பக்கத்தை அர்ஜுனனும் வடபக்கத்தைப் பீமனும் பெரிய இரண்டு தேர்க்கூட்டங்களால் பிடித்துக்கொண்டார்கள். அரசரே! புருஷசிரேஷ்டர்களான அந்தப் பீமசேனனையும் தனஞ்சயனையும் பார்த்துத் திருஷ்டத்யும்னனும் மிக்க பலசாலியான ஸாத்யகியும் (நம்மவர்களை) எதிர்த்தார்கள். வேந்தரே! அப்பொழுது பரஸ்பரம் அடித்துக்கொள்ளுகின்ற ஸேனாஸமூகங்களுடைய சப்தமானது புயற்காற்று வீசப்பெற்ற மகாஸமுத்திரங்களுடைய சப்தம்போல் தோன்றியது. ராஜரே! ஸோமதத்த குமாரனை பூரிஸ்ரவஸைக் கொன்றதால் கோபங்கொண்ட துரோணபுத்திர

யுத்தத்தில் ஸாத்யகியைப்பார்த்துக் கொல்லநிச்சயித்து எதிர்த்தோடி வந்தார். சைனேயனுடைய ரதத்தைக்குறித்து வருகின்ற அஸ்வத்தாமாவைப்பார்த்துப் பீமஸேனனுடையகுமாரன் மிகுந்தகோபங்கொண்டு உருக்குமயமானதும் அதிக பயங்கரமானதும் கரடித்தோல்களால் உறைபோடப்பட்டதும் [1] முப்பதுநல்வம் அளவுள்ள உட்புறத்தோடு கூடியதும் பலவிதமாக ஸஜ்ஜம்செய்யப்பட்ட யந்திரங்களோடுகூடியதும் பெரிய மேகக்கூட்டங்களின் முழக்கம்போன்ற முழக்கமுள்ளதும் [2] யானைகள்போன்ற வாகனங்கள் கட்டப்பெற்றதும் குதிரைகள் அல்லது யானைகள் கட்டப்படாததும் கால்களையும் சிறகுகளையும் விரித்துக்கொண்டும் கண்களைப்புரட்டிவிழித்துக்கொண்டும் சப்திக்கின்ற உயர்ந்த கொடிமரத்திலுள்ள சிறந்த கழுகினாலே விளங்குகின்றதும் இரத்தத்தால் நனைந்திருக்கின்ற கொடித்துணியுள்ளதும் நரம்பின்மாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும் எட்டுச்சக்கரங்களுள்ளதும் பெரிதுமான ரதத்தின்மீதேறிக்கொண்டு சூலங்களையும் உலக்கைகளையும் மலைகளையும் விருக்ஷங்களையும் கையில்கொண்ட கோரமான ராக்ஷஸர்களுடைய ஓர் அக்ஷௌஹிணியினால் சூழப்பட்டவனாகி அந்த அஸ்வத்தாமாவைச் சத்துருக்களுக்கெதிரில் தடுத்தான். யுகாந்தகாலத்தில் தண்டத்தைக் கையிற்கொண்ட யமன்போல் பெரிதானவில்லைக் கையிற்கொண்ட அந்தக் கடோத்கசனைக்கண்டு அரசர்கள் மனவருத்தமுற்றார்கள். பிறகு, மலையின் கொடுமுடிபோல் விளங்குகின்றவனும் பயங்கரமான உருவமுள்ளவனும் பயத்தையுண்டுபண்ணுகிறவனும் கோரப்பற்களாலே உக்கிரமாயும் பயங்கரமாயுமுள்ள முகமுள்ளவனும் முளைபோன்றகாதுகளுள்ளவனும் பெரியமோவாயுள்ளவனும் மேல்நோக்கிநிற்கின்ற மயிர்களையுடையவனும் விகாரமானகண்களையுடையவனும் ஜ்வலிக்கின்ற முகத்தையுடையவனும் ஆழ்ந்தவயிறுள்ளவனும் பெரியகுகைபோன்ற தொண்டையுள்ளவனும் கிரீடத்தால் தலைமயிர்கள் மறைக்கப்பட்டவனும் எல்லாப் பிராணிகளையும் பயப்படுத்துகிறவனும் வாயைத்திறந்திருக்கும் அந்தகன் போன்றவனும் ஜ்வலிக்கின்றவன்போல எதிர்த்து வருகின்றவனும் சத்துருக்களுக்குக் கலக்கத்தைச்செய்கிறவனும் பெரியவில்லைக் கையிலெடுத்தவனும் ராக்ஷஸர்களுள் சிறந்தவனுமான அந்தக் கடோத்கசனைப் பார்த்து உமது புத்திரனுடைய சேனையானது காற்றினாலே குழப்பப்பட்டுச் சுழலுகின்றதும் உயர்ந்த அலைகளுடன்கூடியதுமான கங்கை

---

[1] நானூறு முழம அளவுள்ளது.

[2] 'பிசாசங்கள்' என்பது பழைய உரை.

போலப் பயத்தினால் பீடிக்கப்பட்டுக் கலங்கிற்று. கடோத்கசன்செய்த சிம்மநாதத்தினால் பயமுறுத்தப்பட்ட யானைகள் மூத்திரத்தைச்சொரிந்தன. மனிதர்களும் மிக்க துன்பத்தை யடைந்தார்கள். பிறகு, ஸந்தியா காலத்தால் பலமிகுந்தியராக்ஷஸர்களாலே பிரயோகிக்கப்பட்ட கல்மாரியானது அந்தப்பூமியில் நான்குபக்கங்களிலும் அதிகமாயிற்று. இருப்புச் சக்கரங்களும் புசுண்டிகளும் ஈட்டிகளும் தோமரங்களும் சூலங்களும் சதக்னிகளும் அவ்வாறே பட்டாக்கத்திகளும் ஓய்வின்றி விழுந்தன. உக்கிரமும் அதிபயங்கரமுமான அந்த யுத்தத்தைக்கண்டு அரசர்களும் உமது புத்திரர்களும் காணனும் துன்பத்தையடைந்து திக்குக்களில் ஓடினார்கள். அந்தப்படையில் அஸ்திரபலத்தினால் புகழ்பெற்றவரும் கௌரவமுள்ளவருமான அஸ்வத்தாமா ஒருவர்மாத்திரமே மனவருத்தமடையாமல் அம்புகளாலே கடோத்கசனால் உண்டுபண்ணப்பட்ட மாயையை நாசஞ்செய்தார். மாயையானது நாசஞ்செய்யப்பட்டவுடன் அந்தக் கடோத்கசன் அதிக கோபமுள்ளவனாகிக் கோரமான பாணங்களைப் பிரயோகித்தான். அவைகள் வேகத்தோடு புற்றில் நுழைகின்ற கோபமிகுந்தஸர்ப்பங்களபோல அஸ்வத்தாமாவினுள் நுழைந்தன. பொன்னாலாகிய புங்கமுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளும் சீக்கிரமாகச்செல்லுகின்றவைகளுமான அந்த அம்புகள் அஸ்வத்தாமாவைப் பிளந்துகொண்டு ரக்தத்தால் அங்கங்கள் நனைக்கப்பட்டுப் பூமியில் பிரவேசித்தன. ஹஸ்தலாகவமுள்ளவரும் பிரதாபசாலியுமான அஸ்வத்தாமாவோ மிக்ககோபங்கொண்டு, கோபத்துடன் எதிர்த்து வருகின்ற கடோத்கசனைப் பத்துப்பாணங்களால் பிளந்தார். துரோணபுத்திரராலே மர்மஸ்தானங்களில் அதிகமாக அடிக்கப்பட்ட கடோத்கசன் மிகவும் துன்பமடைந்து லக்ஷம்ஆர்களுள்ள சக்கரத்தைஎடுத்தான். அந்தப் பீமஸேனகுமாரனான கடோத்கசன் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தாலே அஸ்வத்தாமாவின்மீது கூரியமுனையுள்ளதும் பாலசூரியன்போல விளங்குகின்றதும் மணிகளாலும் வஜ்ரங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தச்சக்கரத்தைப் பிரயோகித்தான். அதிவேகத்துடன் செல்லுகின்றதும் துரோணபுத்திரராலே அம்புகளால் விலக்கித்தள்ளப்பட்டதுமான சக்கரமானது பாக்யஹீனனுடைய எண்ணம்போல வீணாகிப் பூமியில் விழுந்தது. பிறகு, சக்கரமானது தள்ளப்பட்டதைக் கண்டு கடோத்கசன் சூரியனை ராகு மறைப்பதுபோலத் துரோணபுத்திரரை அம்புகளால் மறைத்தான். விள்ளப்பட்ட மைக்கட்டிக்கு ஒப்பானவனும் காந்தியுள்ளவனுமான கடோத்கசபுத்திரன் காற்றை மேருமலை தடுப்பதுபோல எதிர்த்துவருகின்ற துரோணபுத்திரரைத் தடுத்தான்.

பீமஸேனன்பௌத்ரனை அஞ்சனபர்வாவின் அம்புகளால் சூழப்பட்ட அச்வத்தாமா, மழைத்தாரைகளால் சூழப்பட்ட மேருமலைபோல விளங்கினார். ருத்திரனும் உபேந்திரனும் இந்திரனும்போன்ற பராக்ரமமுள்ள அச்வத்தாமாவோ கலங்காமல் அஞ்சனபர்வாவினுடைய த்வஜத்தை ஒருபாணத்தால் அறுத்து இரண்டுபாணங்களால் ரதத்திலுள்ள இரண்டு ஸாரதிகளையும், மூன்றுபாணங்களால் அந்த ரதத்தினது [1] திரிவேணுவையும், ஒருபாணத்தினால் வில்லையும் அறுத்து, நான்கு பாணங்களால் நான்கு குதிரைகளையும் வெட்டினார்; இரதத்தை இழந்தவனை அஞ்சனபர்வாவினுடைய கையினால் ஓங்கப்பட்டதும் தங்கப்பொட்டுக்களால் நிறைக்கப்பட்டதுமான கத்தியை மிக்ககூர்மையுள்ள அம்பினால் இரண்டாகச்செய்தார். அரசரே! தங்கவளையங்களுள்ள கதாயுதமானது கடோத்கசனுடைய புத்திரனால் விரைவாகச்சுழற்றி உயரத்தூக்கப்பட்டது. அதுவும் துரோணபுத்திரரால் அம்புகளால் அடிக்கப்பட்டுக் கீழே விழுந்தது. பிறகு, அந்த அஞ்சனபர்வா ஆகாயத்தில் கிளம்பிக் காளமேகம்போலக் கர்ஜித்துக்கொண்டு ஆகாயத்தினின்று மரங்களை வர்ஷித்தான். பிறகு, துரோணபுத்திரர் ஆகாயத்தில் மாயையைத் தரித்துக்கொண்டிருக்கிற கடோத்கசனுடைய புத்திரனை, சூரியன் கிரணங்களால் மேகத்தை அடிப்பதுபோலப் பாணங்களால் அடித்தார். அந்த அதிக உக்கிரனை அஞ்சனபர்வா, கீழே இறங்கித் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட ரதத்தின்மீது காந்தியுள்ளதும் பூமியை அடைந்திருக்கின்றதுமான மைம்மலைபோல எதிரில் நின்றான். எஃகினாலாகிய கவசம்பூண்டவனும் பீமகுமாரனுக்குக் குமாரனுமான அந்த அஞ்சனபர்வாவைத் துரோணகுமாரர், மஹேசுவரர் அந்தகாஸுரனைக் கொன்றதுபோலக் கொன்றார். பிறகு, அச்வத்தாமாவினால் கொல்லப்பட்ட மஹாபலசாலியும் புத்திரனுமான அஞ்சனபர்வாவைப் பார்த்துக் கடோத்கசன் துரோணபுத்திரருக்கருகில்வந்து கோபத்தினால் உதடுகள் மிகத் துடிக்க மனந்தடுமாறுதவனாகி, மூண்டெரிகின்ற தீயானது காட்டைக் கொளுத்துவதுபோலப் பாண்டவஸேனையைக் கொளுத்துகிறவீரரான அச்வத்தாமாவைப்பார்த்து, 'துரோணபுத்திர! நில், நில். என்னிடமிருந்து உயிரோடு நீ போகப்போகிறதில்லை. அக்னிகுமாரரான ஷண்முகர் க்ரௌஞ்சபர்வதத்தைப் பிளந்ததுபோல் யான் உன்னைப் பிளக்கப்போகிறேன்' என்ற வாக்கியத்தைச் சொன்னான். அச்வத்தாமா, 'குழந்தாய்! போ; தேவதைக்கு ஸமமானவிக்கிரமமுள்

[1] தேர், வண்டி முதலியவற்றில் ஸாரதியுட்காருவதற்கு முக்கவையாகச் சட்டம் தைத்த இடம்.

ளவனே! நீ வேறு வீரர்களோடு யுத்தம்செய். ஹிடிம்பாபுத்திர! புத்திரனால் பிதா ஹிம்ஸிக்கப்படுவது நியாயமன்று. ஹிடிம்பாபுத்திரனை உன்னிடத்தில் எனக்குக் கோபம் இல்லையன்றோ? ஆயினும், ரோஷத்துடன்கூடிய பிராணியானது தன்னைக்கூட ஹிம்ஸித்துக் கொள்ளுமல்லவா' என்று சொன்னார். அஸ்வத்தாமாவினுடைய இவ்விதமான வார்த்தையைக்கேட்டு, பீமஸேனகுமாரன் கோபத்தினால் கண்கள் சிவந்து புத்திரசோகத்துடன் யுத்தமுயற்சியுள்ளவனாகி அஸ்வத்தாமாவைப்பார்த்து, 'துரோணகுமார! பாமரன்போல் நான் யுத்தத்தில் பயந்தவனா? வார்த்தைகளைச்சொல்லி என்னைப் பயப்படுத்துவது தீது. கௌரவர்களுடைய பெரியவம்சத்தில் பீமஸேனரிடத்திலிருந்தன்றோ நான்பிறந்தவன்? யுத்தங்களில் புறங்காட்டாதவர்களான பாண்டவர்களுக்கு நான் புத்திரன். ராக்ஷஸ அரசர்களுக்கு நான் அரசன். பலத்தில் ராவணனுக்கு ஒப்பானவன். துரோணபுத்திர! நில், நில். உயிரோடு என்னிடத்திலிருந்து போகமாட்டாய். நான் யுத்தரங்கத்தில் உனக்குப் போரிலுள்ள ஊக்கத்தை இப்பொழுது தொலைக்கப் போகிறேன்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லிவிட்டுக் கோபத்தினால் சிவந்த கண்களையுடையவனும் அதிக பலசாலியுமான ராக்ஷஸன் அதிக கோபங்கொண்டு சிறந்த யானையைச் சிங்கம் எதிர்ப்பதுபோல் துரோணபுத்திரரை எதிர்த்துச்சென்றான். கடோத்கசன் தேராளிகளுள் உத்தமரான துரோணகுமாரரை, மேகமானது நீர்த்தாரைகளால் பொழிவதுபோல ரதத்தின் அச்சுப்போலப் பருத்திருக்கின்ற அம்புகளால் வர்ஷித்தான். துரோணகுமாரர் அந்த அம்புமழையைத் தம்மிடம் வருவதற்குள்ளாகவே பாணங்களால் நாசஞ்செய்தார். பிறகு, ஆகாசத்தில் பாணங்களுக்கு வேறுயுத்தம் உண்டானதுபோலிருந்தது. பிறகு, ராத்திரியின் தொடக்கத்தில் ஆயுதங்களின் மோதுதலாலுண்டு பண்ணப்பட்ட நெருப்புப்பொறிகளால் ஆகாயமானது அப்பொழுது மின்மினிப்பூச்சிகளால் சித்திரிக்கப்பட்டதுபோல் விளங்கியது. யுத்தத்தில் சூரர் என்ற எண்ணம்கொண்ட துரோணகுமாரரால் தன் மாயை நாசம்பண்ணப்பட்டுவிட்டதைக் கண்டு, பிறகு, கடோத்கசன் மறைந்துகொண்டு மறுபடியும் வேறுமாயையை உண்டுபண்ணினான். அவன் சூலங்களும் ஈட்டிகளும் கத்திகளும் உலக்கைகளுமாகிற அருவிகளுள்ளதும் மரங்களால் நெருங்கிய சிகரங்களோடுகூடியதுமான ஒரு பெரிய மலையாக ஆனான். துரோணகுமாரர் மைம்மலைபோன்ற அம்மலையைப்பார்த்தும், அனேக சஸ்திர ஸமூகங்கள் மிகுதியாகவந்து விழப்பெற்றும் துன்பத்தை அடையவில்லை. பிறகு, துரோணகுமாரர் சிரித்துக்

கொண்டு வஜ்ரம் என்கிற அஸ்திரத்தைப் பிரயோகித்தார். அந்த அஸ்திரத்தினால் விலக்கித்தள்ளப்பட்ட அந்தப் பெருமலையானது சீக்கிரமாக நசித்தது. பிறகு, அந்த ராக்ஷஸன் இந்திரவில்லுடன் கூடின கறுத்தமேகமாக ஆகாசத்திலாகி அதிக உக்கிரமாக யுத்தரங்கத்தில் கல்மழைகளால் துரோணபுத்திரரைமூடினான். பிறகு, அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்த துரோணபுத்திரர் வாயுஸம்பந்தமான அஸ்த்ரத்தை வில்லிற்பூட்டி ஆகாயத்தில் தோன்றிய நீலமேகத்தை நாசம்செய்தார். மனிதர்களுள் சிரேஷ்டரான அந்தத்துரோணபுத்ரர் பாணஸமூகங்களால் எல்லாத்திக்குக்களையும்மூடி லட்சம்தேராளிகளையும் கொன்றார். மறுபடியும், ரதத்தோடு வருகின்றவனும், நீண்ட வில்லையேந்தியவனும், கலங்காதவனும், சிங்கமும் புலியும் போன்றவர்களும் மதித்தயானையின் பராக்ரமம்போன்ற பராக்கிரமத்தையுடையவர்களும் யானையின் மீதும் ரதத்தின்மீதும் குதிரையின்மீதும் ஏறியிருக்கின்றவர்களும் விகாரமானமுகமும் தலையும் கழுத்துமுள்ளவர்களும் ஹிடிம்பனுடைய வேலைக்காரர்களும் புலஸ்த்யவம்சத்தில் தோன்றியவர்களும் தமோகுணத்தினால் மூடப்பட்டவர்களும் இந்திரனுடைய விக்கிரமம்போன்ற விக்கிரமத்தையுடையவர்களும் பற்பல சஸ்திரங்களைக் கையில் ஏந்தினவர்களும் வீரர்களும் பற்பல கவசங்களும் பூஷணங்களுமுள்ளவர்களும் மஹாபலசாலிகளும் பயங்கரமான சப்தத்துடன் கூடியவர்களும் கோபத்தினால் கண்களைப்புரட்டி விழிப்பவர்களும் யுத்தத்தில் அடங்காத மதமுடையவர்களும் ஸன்னத்தர்களாயிருக்கின்றவர்களுமான அனேகராக்ஷஸர்களால் சூழப்பட்டவனுமான கடோத்கசனைப்பார்த்து யுத்தத்தில் விசனமுற்றிருக்கின்ற உம்முடைய புத்திரனைநோக்கி அந்தத் துரோணகுமாரர் சொல்லலானார்.

'துர்யோதன! நீ நில். இப்பொழுது இந்த ஸஹோதரர்களோடும் இந்திரனுடைய வல்லமைபோன்ற வல்லமைபொருந்திய சூரர்களான அரசர்களோடும் கூடிய நீ கலங்கவேண்டாம். உன்னுடைய சத்துருக்களை யான் கொல்வேன்; உனக்குத் தோல்வி உண்டாகாது; ஸத்தியமாக நான் உனக்குப் பிரதிஜ்ஞைசெய்கிறேன்; ஸேனையைத் தேறுதலடையும்படிசெய்' என்று சொன்னார். துர்யோதனன், 'கௌதமீநந்தனரே! உமக்குப் பெரியமனமும் எங்களிடம் அதிகபக்தியுமிருப்பதால் இதை யான் ஆச்சரியமாக நினைக்கவில்லை' என்றான். இவ்வாறு துரியோதனன் அசுவத்தாமாவைப்பார்த்துச் சொல்லிவிட்டு, பிறகு, யுத்தத்தில் பிரகாசிக்கின்ற குதிரைகளுடன்கூடின ஆயிரம் ரதங்களால் சூழப்பட்ட ஸௌபலனைக்குறித்து, '(மாமா!) நீ தனஞ்சயனைநோக்கி அறுபதினாயி

ரம் ரதங்களோடுசேர்ந்து யுத்தத்துக்காக புறப்பட்டுப்போ. கர்ணன், விருஷஸேனன் கிருபர் நீலன் வடநாட்டு அரசர்கள் கிருதவர்மா புருமித்திரன் ஸுதாபனன் துச்சாஸனன் நிகும்பன் குண்டபேதி பராக்கிரமன் புரஞ்சயன் திருடரதன் பதாகி ஹேமகம்பனன் சல்யன் ஆருணி இந்திரஸேனன் ஸஞ்சயன் விஜயன் ஜயன் கமலாக்ஷன் பரக்ராதி ஜயவர்மா ஸுதர்சனன் இவர்களும் அறுபதினாயிரம் காலாட்களும் உன்னைத்தொடர்ந்துவருவார்கள். மாமா! தேவேந்திரன் அஸுரர்களை ஸம்ஹரிப்பதுபோலப் பீமனையும் இரட்டைப்பிள்ளைகளான நகுலஸஹதேவர்களையும் தர்மராஜனையும் நாசஞ்செய். எனக்கு ஜயத்திலுள்ள விருப்பம் உன்னையே சார்ந்திருக்கின்றது. மாமா! அக்னிகுமாரரான ஷண்முகர் அஸுரர்களைக்கொல்வதுபோல த்ரோணபுத்திரரால் பாணங்களால் பிளக்கப்பட்டவர்களும் மிக்க காயப்படுத்தப்பட்ட சரீரமுள்ளவர்களுமான குந்திபுத்திரர்களை நாசஞ்செய்' என்று சொன்னான். அரசரே! இவ்வாறு உம்முடையபுத்திரனால் சொல்லப்பட்ட ஸௌபலனான சகுனி உம்முடைய குமாரர்களைத் திருப்தி அடையும்படி செய்யக்கருதியவனாகவும் பாண்டவர்களைக்கொல்லுத்த எண்ணங்கொண்டவனாகவும் (யுத்தத்துக்கு) விரைவாகச் சென்றான். பிறகு, முற்காலத்தில் இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்கும் யுத்தம் நேர்ந்ததுபோலத் துரோணபுத்திரருக்கும் ராக்ஷஸனுக்கும் இரவில் ரணகளத்தில் கைகலந்தயுத்தம் நடந்தது. பின்பு, கடோத்கசன், அதிக கோபங்கொண்டவனாகி விஷம்போலவும் அக்னிபோலவும் இருக்கின்றவைகளும் உறுதியுள்ளவைகளுமான பத்துப் பாணங்களால் கௌதமீபுத்திரரை மார்பிலடித்தான். பீமபுத்திரனால் பிரயோகிக்கப்பட்ட அந்த அம்புகளால் நன்றாக அடிக்கப்பட்ட ரதத்தின் நடுவிலிருக்கும் அந்த அஸ்வத்தாமா காற்றினால் அலைக்கப்பட்ட மரம்போலச் சலித்தார். பிறகு, கடோத்கசன் மறுபடியும் அஞ்சலிகம் என்கிற பாணத்தினால் அதிக பிரகாசத்துடன்கூடிய அஸ்வத்தாமாவின் கையிலுள்ள வில்லை விரைவாக அறுத்தான். பிறகு, அஸ்வத்தாமா பாரத்தை ஸஹிக்கத்தக்கதும் பெரிதுமான வேறு வில்லைக் கையில் எடுத்து மேகமானது நீர்த்தாரைகளைப் பொழிவதுபோலக் கூர்மையுள்ளபாணங்களைப் பொழிந்தார். பாரதரே! பிறகு, சாரத்வதீபுத்திரர் புங்கத்தில் பொன்கட்டியவைகளும் பகைவர்களை நாசஞ்செய்கின்றவைகளும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றவைகளுமான பாணங்களை ஆகாசத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற ராக்ஷஸப்படையின்மீது பிரயோகித்தார். அந்தத் துரோணகுமாரருடைய பாணங்களால் பீடிக்கப்பட்ட விசாலமான மார்பையுடைய ராக்ஷஸர்களுடைய சேனையானது சிங்கங்

களால் (பிளக்கப்படுகின்றதும்) குழப்பமுள்ளதுமான மதங்கொண்ட யானைக்கூட்டம்போலத் துன்பத்தையடைந்தது. அஸ்வத்தாமா யுகாந்தத்தில் வீர்யமுள்ள நெருப்பானது பிராணிகளைக் கொளுத்துவதுபோல, ராக்ஷஸர்களைக் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் தேர்களோடும் யானைகளோடும் சேர்த்துப் பாணங்களால் ஊதிக் கொளுத்தினார். அரசரே! முற்காலத்தில் தேவலோகத்தில் தேவரான மஹேசுவரர் திரிபுரத்தை எரித்துப் பிரகாசித்ததுபோலத் துரோணபுத்திரர் பாணங்களால் ராக்ஷஸர்களுடைய நிரம்பிய படையை எரித்துவிட்டுப் பிரகாசித்தார். ஜயசீலர்களுள் சிறந்தவரான துரோணபுத்திரர் யுகாந்தகாலத்தில் மூண்டெரிகிற தீயானது எல்லாப் பிராணிகளையும் கொளுத்துவதுபோல் உம்முடைய பகைவர்களைக் கொளுத்திப் பிரகாசித்தார். பிறகு, கடோத்கசன் கோபங்கொண்டு பயங்கரமான செய்கைகளுள்ள ராக்ஷஸர்களுடைய பெரிய சேனையை, 'துரோணபுத்திரனைக் கொல்லுங்கள்' என்று ஏவினான். பிறகு, கடோத்கசனுடைய அந்த ஆஜ்ஞையை ஏற்றுக்கொண்டு கோரப்பற்களால் பிரகாசிக்கின்றவர்களும் பெரிய வாயுள்ளவர்களும் கோரரூபமுள்ளவர்களும் பயங்கரர்களும் திறக்கப்பட்ட வாயையுடையவர்களும் கோரமான நாக்கையுடையவர்களும் கோபத்தால் மிகச்சிவந்த கண்களையுடையவர்களுமான ராக்ஷஸர்கள் யுத்தத்துக்குவேண்டிய ஆயுதங்களுடன் பெரிய ஸிம்மநாதத்தினால் பூமியை எதிரொலியிடும்படி செய்துகொண்டு துரோணபுத்திரரைக் கொல்வதற்கு எதிர்த்துச்சென்றார்கள். மிகக் கொடியவைகளும் யுத்தத்தில் சத்துருக்களைப் பிளக்கின்றவைகளுமான சக்திகளையும் சதக்னிகளையும் பரிகங்களையும் அசனிகளையும் சூலங்களையும் பட்டாக்கத்திகளையும் கத்திகளையும் கதாயுதங்களையும் பிண்டிபாலங்களையும் உலக்கைகளையும் கோடாலிகளையும் பிராஸங்களையும் சிறுகத்திகளையும் தோமரங்களையும் கணபங்களையும் கூர்மையுள்ள கம்பனங்களையும் பருமனனபுசுண்டிகளையும் கற்களையும் கதைகளையும் அவ்வாறே உருக்குமயமான தூண்களையும் முத்கரங்களையும், பயங்கரமான விக்கிரமமுள்ள ராக்ஷஸர்கள், பயமற்றவர்களும் கோபத்தினால் கண்கள் சிவந்தவர்களுமாகி; நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் துரோணபுத்திரருடைய தலையில் எறிந்தார்கள். பிறகு, துரோணபுத்திரருடைய தலையில் விழுகின்றதும் மிகப் பெரிதுமான அந்தச் சஸ்திரவர்ஷத்தைக் கண்ணுற்று உம்முடைய யுத்தவீரர்கள் மனக்கவலையையடைந்தார்கள். துரோணபுத்திரரோ விக்ரமத்தை, வெளியிட்டுக்கொண்டு கோரமாயுள்ளதும் விருத்தியடைகின்றதுமான அந்தச் சஸ்திரவர்ஷத்தை வஜ்ராயுதம்போன்றவையும்

சாணையில் தீட்டப்பட்டவையுமான பாணங்களால் நாசம்பண்ணினார். பெரிய மனமுள்ள அஸ்வத்தாமா, பிறகு, பொற்புங்கமுள்ளவைகளும் திவ்யாஸ்திர மந்த்ரங்களால் ஜபிக்கப்பட்டவைகளுமான மற்றப் பாணங்களால் ராக்ஷஸர்களை விரைவாக அடித்தார். பருத்தமார்பையுடையவர்களான ராக்ஷஸர்களுடைய கூட்டமானது அந்தத் துரோணியினுடைய பாணங்களாலடிக்கப்பட்டு ஸிம்மங்களால் அடிக்கப்பட்ட மதயானைகளின் நெருங்கிய கூட்டம்போல விளங்கியது. மகா பலசாலிகளான அந்த ராக்ஷஸர்கள் துரோணபுத்திரரால் அடிக்கப்பட்டு அதிக கோபம் கொண்டவர்களாகி அவரைக் கொல்லக்கருதி எதிர்த்து ஓடிவந்தார்கள். பாரதரே! எல்லாப்பிராணிகளுள்ளும் வேறொருவரால் செய்ய முடியாததான ஆச்சரியகரமான விக்கிரமத்தை அஸ்வத்தாமாவானவர் (செய்து) காண்பித்தார். மஹாஸ்திரங்களை அறிந்தவரான துரோணகுமாரர் ஒருவராயிருந்துகொண்டு ராக்ஷஸேந்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஜ்வலிக்கின்ற பாணங்களால் அரக்கர்கள் படையை க்ஷணத்திற்குள் கொளுத்தினார். அந்த அஸ்வத்தாமாவானவர் யுகாந்த காலத்தில் பிரளயகாலாக்னியானது எல்லாப்பிராணிகளையும் அழிப்பது போல் யுத்தத்தில் எல்லாராக்ஷஸஸேனையையும் அழித்துவிட்டு விளங்கினார். பாரதரே! ஸர்ப்பங்களுக்கொப்பான பாணங்களால் ஸேனைகளைக் கொளுத்துகின்ற அந்த அஸ்வத்தாமாவைப் பாண்டவஸேனையிலுள்ள ஆயிரக்கணக்கான அந்த அரசர்களுள் மஹாபலசாலியும் வீரனும் ராக்ஷஸேந்திரனுமான கடோத்கசனைத்தவிர வேறு ஒருவனுவது பார்ப்பதற்கு யுத்தகளத்தில் வல்லமையுள்ளவனாகவில்லை பரதசிரேஷ்டரே! அந்தக் கடோத்கசன் கோபத்தினால் அதிகமாகச் சுழற்றப்பட்ட கண்களுள்ளவனாகிக் கைகளைக் கொட்டிக்கொண்டும் உதட்டைநன்றாகக்கடித்துக்கொண்டும் தன் ஸாரதியைநோக்கி, 'துரோணபுத்திரனருகில் என்னைக்கொண்டுபோ' என்று குரோதத்துடன் சொன்னான். பகைவர்களை அழிப்பவனான அவன், பயங்கரமான உருவமுள்ளதும் பிரகாசிக்கின்றதும் அழகிய கொடித்துணியுடன்கூடியதுமான ரதத்தோடு அஸ்வத்தாமாவினருகில் இரண்டுதேர்கள் ஒன்றையொன்று எதிர்த்துச்செய்யும் போரைச்செய்தற்கு மறுபடியும் சென்றான். பயங்கரமானவல்லமையுள்ள அந்தக் கடோத்கசன் ஸிம்மம்போல உரக்கக்கர்ஜித்துக்கொண்டு எட்டு மணிகளுடன் கூடியதும் மஹாகோரமானதும் தேவர்களால் செய்யப்பட்டதுமான அசனியை யுத்தத்தில் சுழற்றித் துரோணபுத்திரரின்மீது எறிந்தான். அவர் வில்லைத் தேரில் வைத்துவிட்டுப் பாய்ந்து அதனைப் பிடித்து அதனையே அந்த ராக்ஷஸனமீது பிரயோகித்தார். அவன் ரதத்

தினின்று துள்ளிக் குதித்துவிட்டான். அதிக காந்தியுள்ளதும் மிக்க பயங்கரமாயுள்ளதுமான அந்த அசனியானது குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடியோடும்கூடிய ரதத்தைச் சாம்பலாகச்செய்து பூமியைப் பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தது. சங்கரரால் செய்யப்பட்டதும் கோரமாயுள்ளதுமான அந்த அசனியைத் துரோணபுத்திரர் கீழேயிறங்கிப் பிடித்ததாகிய அவருடைய செய்கையைக்கண்டு எல்லாப் பிராணிகளும் புகழ்ந்தன. அரசரே! பிறகு, பீமஸேனபுத்திரன் திருஷ்டத்யும்னனுடைய ரதத்தை அடைந்து கோரமானதும் பெரிதும் இந்திராயுதம் போன்றதுமான ஒரு வில்லை எடுத்துக் கூர்மையுள்ள பாணங்களைப் பூட்டி மறுபடியும் அஸ்வத்தாமாவினுடைய விசாலமான மார்பில் எய்தான். திருஷ்டத்யும்னனோ மனங்கலங்காதவனாகித் துரோணபுத்திருடைய மார்பில் ஸர்ப்பங்களுக்குஒப்பானவைகளும் பொற்புங்கமுள்ளவைகளுமான பாணங்களைப் பிரயோகித்தான். பிறகு, துரௌணியானவர் நாராசங்களைப் பிரயோகித்தார். ஆயிரக்கணக்கான அவருடைய அம்புகளை அக்னிஜ்வாலைபோன்ற அம்புகளால் அவ்விருவரும் நாசஞ்செய்தார்கள். பாதரிற்சிறந்தவரே! அதிதீவிரமானதும் யுத்தவீரர்களுக்குப் பிரீதியை உண்டுபண்ணுகிறதும் பெரிதுமான யுத்தமானது அந்தப் புருஷசிரேஷ்டர்களுக்கும் அஸ்வத்தாமாவுக்கும் நடந்தது. பிறகு, பீமன் ஆயிரம் தேர்களோடும் முந்நூறு யானைகளோடும் ஆறுயிரம் குதிரைகளோடும்கூடி அவ்விடம் வந்துசேர்ந்தான். பிறகு, தர்மாத்மாவும் குறைவற்ற ஆற்றலுள்ளவருமான துரௌணியானவர் பீமகுமாரனை ராக்ஷஸனையும் பரிவாரங்களுடன்கூடின திருஷ்டத்யும்னனையும் எதிர்த்துப் போர்புரிந்தார். பாரதரே! துரௌணியானவர் எல்லாப் பிராணிகளுள்ளும் வேறொருவனால் செய்வதற்கரியதும் அதியாச்சரியகரமாயுள்ளதுமான விக்கிரமத்தை அந்தயுத்தரங்கத்தில் காண்பித்துப் பீமஸேனனும் ஹிடிம்பாபுத்திரனும் திருஷ்டத்யும்னனும் நகுலஸஹதேவர்களும் தர்மபுத்திரரும் விஜயனும அச்சுதரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே குதிரைகளோடும் ஸாரதிகளோடும் ரதங்களோடும் யானைகளோடும்கூடிய ராக்ஷஸர்களுடைய ஓர் அக்ஷௌஹிணி சேனையைக் கூர்மையுள்ள பாணங்களால் இமைகொட்டுவதற்குள்ளாகவே நாசம்செய்தார். வேகமாகச் செல்பவைகளான நாராசங்களால் நான்குபக்கத்திலும் நன்றாக அடிக்கப்பட்ட யானைகள் கொடுமுடிகளுடன்கூடிய மலைகளபோலப் பூமியில் விழுந்தன. (கத்திகளால்) அறுக்கப்பட்டு இங்கும் அங்குமாகத் துடிக்கின்ற யானைத்துதிக்கைகளால் சூழப்பட்ட போர்க்களமானது நெளிந்துகொண்டிருக்கின்றபாம்பு

களால் சூழப்பட்டதுபோல் விளங்கியது. சித்திரிக்கப்பட்டவையும் பொற் காம்புகளுள்ளவையுமான அரசர்களுடைய குடைகளால் அந்த யுத்த பூமியானது யுகம் முடியுங்காலத்தில் உதித்திருக்கின்ற சந்திரஸூரியர்களுடன்கூடினதும் ஜ்யோதிர்க்ரஹங்களால் நான்குபுறத்திலும் வியாபிக்கப்பட்டதுமான ஆகாயம்போல் விளங்கியது. அச்வத்தாமா மிக உயர்ந்த கொடிமரங்களாகிற தவளைகளுள்ளதும் பேரிவாத்தியங்களாகிற விசாலமான ஆமைகளையுடையதும் குடைகளாகிற அன்னப்பறவைகளின் வரிசையினால் அடையப்பட்டதும் சாமரங்களாகிற நுரைகளின் வரிசைகளையுடையதும் கழுகுகளும் பருந்துகளுமாகிற பெரிய முதலைகளுள்ளதும் பற்பலவிதமான ஆயுதங்களாகிற மீன்களால் சூழப்பட்டதும் யானைகளாகிற விசாலமான கற்களையுடையதும் கொல்லப்பட்ட குதிரைகளாகிற சுறாமீன்களால் அடர்ந்ததும் புரண்டுகிடக்கின்ற ரதங்களாகிற பெரிய கரைகளையுடையதும் கொடிச்சீலைகளாகிற அழகிய மரங்களையுடையதும் அம்புகளாகிற சிறுமீன்களுள்ளதும் மஹாபயங்கரமாக இருக்கின்றதும் ஈட்டிகளும் சக்திகளும் ரிஷ்டிகளுமாகிற நீர்ப்பாம்புகளோடுகூடியதும் ஊனீரும் மாம்ஸங்களுமாகிற பெருஞ்சேறுள்ளதும் தலையில்லா முண்டங்களாகிற தெப்பங்களுள்ளதும் மயிர்களாகிற பாசிக்கொத்துக்களால் பற்பல நிறமுள்ளதும் பயப்படுபவர்களுக்கு மதிமயக்கத்தை உண்டுபண்ணுகின்றதும் சிறந்தயானைகள் குதிரைகள் போர்வீரர்கள் இவர்களின் சரீரநாசத்தினாலுண்டாகியதும் ரக்த வெள்ளத்தினால் மிகப் பயங்கரமாயிருக்கிறதும் யுத்தவீரர்களுடைய அழுகுரலாகிற பேரொலியுள்ளதும் இரத்தமாகிற அலைகளால் கலங்குவதும் மிகவும் கோரமானதும் யமனுடைய ராஷ்டிரமாகிற பெருங்கடலைக்குறித்து விரைவாகச் செல்லுகின்றதுமான ஒரு நதியை உண்டுபண்ணினார். துரோணபுத்திரர் பாணங்களால் ராக்ஷஸர்களைக் கொன்றுவிட்டு ஹிடிம்பாபுத்திரனை கடோத்கசனை ஹிம்ஸித்தார். மஹா பலசாலியும் பிரபுவுமான அச்வத்தாமா மீண்டும் அதிக கோபங்கொண்டு பீமனையும் த்ருஷ்டத்யும்னனையும் (மற்றப்) பாண்டவர்களையும் நாராச ஸமூகங்களால் அடித்து ஸுரதனென்கிற த்ருபதனுடைய புத்திரனைக் கொன்றார்; பின்னும், ரணகளத்தில் சத்ருஞ்சயனென்கிற த்ருபதனுடைய புத்திரனையும் பலானீகன் ஜயானீகன் ஜயாச்வன் இவர்களையும் கொன்றார். ஐயா! துரௌணியானவர் சுருதனென்கிற பெயருள்ள அரசனையும் யமலோகத்துக்கனுப்பிக் கூர்மையுள்ளவைகளும் நல்ல கட்டுக்களுள்ளவைகளுமான வேறு மூன்று அம்புகளால் பொன் மாலையணிந்த பிருஷத்ரனையும் சந்திரஸேனனையும் கொன்று பத்துப்

பாணங்களால் குந்திபோஜனுடைய பத்துக் குமாரர்களையும் கொன்றார். அச்வத்தாமா மிக்க கோபங்கொண்டு உக்ரமானதும் கோரகச் செல்லுகின்றதும் யமதண்டத்துக்கு ஒப்பானதும் சிறந்ததுமான ஒருபாணத்தை வில்லிற்பூட்டிக் காதுவரையில் நாண்கயிற்றை இழுத்துக் குரூரனை கடோத்கசனைக்குறித்து விரைவாகப் பிரயோகித்தார். ராஜரே! அந்த மஹிமைபொருந்திய பாணமானது அந்த ராக்ஷஸனுடைய மார்பைப்பிளந்து புங்கமுள்படப் பூமியில் விரைவாகப் பிரவேசித்தது. மஹாராஜரே! மஹாரதனை திருஷ்டத்யும்னன் அந்தக் கடோத்கசனை இறந்து கீழேவிழுந்தவனாக அறிந்து, உடனே துரோணபுத்திரரின் அருகிலிருந்து உத்தமமான தன்ரதத்தை விலக்கிக்கொண்டு போய்விட்டான். அரசரே! பிறகு, வீரரான துரோணபுத்திரர் புறங்காட்டி ஓடுகின்ற அரசர்களோடுகூடியதான தர்மபுத்திரருடைய ஸைன்யத்தை யுத்தத்தில் தோல்வியடையச்செய்து எல்லாப்பிராணிகளாலும் உம்முடைய புத்திரர்களாலும் பூஜிக்கப்பட்டவராக ஸிம்மநாதம்செய்தனர். பிறகு, அனேக அம்புகளால் தேகங்கள் பிளக்கவும் அறுக்கவும் பட்டவர்களும் நான்குபக்கங்களிலும் அடித்துத் தள்ளப்பட்டவர்களும் நாசத்தை அடைந்திருக்கிறவர்களுமான மலைச்சிகரங்கள்போன்ற ராக்ஷஸர்களால் ரணபூமியானது பிரவேசிக்க முடியாததாகவும் அதிபயங்கரமாகவும் செய்யப்பட்டதாயிற்று. ஸித்தர்கள் கந்தர்வர்கள் பிசாசர்கள் இவர்களுடைய கூட்டங்களும் நாகர்களும் ஸுபர்ணர்களும் பிதிருக்களும் பட்சிகளும் ராக்ஷஸக்கூட்டங்களும் பூதகணங்களும் அப்ஸரஸுகளும் தேவர்களும் அந்தத் துரௌணியைப் புகழ்ந்தார்கள்.

---

## நூற்றைம்பத்தேட்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமன், பாஹ்லிகனையும் துர்யோதனன்தம்பியர் பதின்மரையும் சகுனியின் ஸஹோதரர் ஐவரையும் கொன்றது.)

துரோணபுத்திரரால் துருபதராஜகுமாரர்களும் அவ்வாறே குந்திபோஜனுடைய குமாரர்களும் ஆயிரம் ஆயிரமாக ராக்ஷஸர்களும் கொல்லப்பட்டதைப் பார்த்து, யுதிஷ்டிரரும் பீமஸேனனும் பார்ஷதனை திருஷ்டத்யும்னனும் யுயுதானனும் நல்லமுயற்சியுடன் யுத்தத்தின்பொருட்டே மனத்தைச் செலுத்தினார்கள். பாரதரே! ஸோமதத்தன் மீண்டும் கோபம்கொண்டு யுத்தத்தில் ஸாத்யகியைப்பார்த்துப் பெரி

தானை. அம்புமழையினால் அவனை மூடினான். பிறகு, வெற்றியை விரும்புகின்றவர்களான உம்மைச் சேர்ந்தவர்களுக்கும் பகைவர்களுக்கும் மிக்கபயத்தை விருத்திபண்ணுகிறதும் கோரமுமான யுத்தம்நடந்தது. அருகில் வருகின்ற அந்த ஸோமதத்தனைக்கண்டு பீமன் ஸாத்வதன் நிமித்தமாக அவனைப் பொன்மயமான புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான பத்துப் பாணங்களாலடித்தான். ஸோமதத்தனும் அந்தவீரனை நூறுபாணங்களால் திருப்பி அடித்தான். ஸாத்வதனோ மிக்க கோபமுண்டு புத்திரசோகத்தில் மூழ்கினவனும் வயது முதிர்ந்தவனும் விருத்தர்களுக்குரிய குணங்களோடுகூடியவனும் நஹுஷகுமாரனை யயாதிபோன்றவனுமான ஸோமதத்தனைக் கூர்மையுள்ளவைகளும் இடிபோல் விழுகின்றவைகளுமான பத்துப் பாணங்களால் அடித்தான். பின்பு, இவனைச் சக்தியினாலும் பிளந்து ஏழுபாணங்களால் மறுபடியும் அடித்தான். பிறகு, பீமஸேனன் ஸாத்யகி நிமித்தமாகப் புதிதும் உறுதியானதும் கோரமாயிருப்பதுமான பரிகத்தை ஸோமதத்தனுடைய தலையில் பிரயோகித்தான். ஸாத்யகியும் யுத்தத்தில் கோபங்கொண்டு ஸோமதத்தனுடைய மார்பில் நெருப்புக்கு ஒப்பானதும் நல்ல சிறகுகள் கட்டியதும் கூர்மையுள்ளதுமான உத்தமமான பாணத்தைவிட்டான். வீரரே! கோரமான அந்தப்பரிகமும் பாணமும் ஸோமதத்தனுடையசரீரத்தில் ஒரேஸமயத்தில் விழுந்தன. அந்த மஹாரதனும் கீழேவிழுந்தான். புத்திரன் மூர்ச்சையடைந்து கீழேவிழவே, பாஹ்லீகனென்பவன் கார்காலத்தில் பொழிகின்ற மேகம்போல் அம்புமழைகளைப் பொழிந்துகொண்டு அந்த ஸாத்யகியை நெருங்கி எதிர்த்தான். பிறகு, பீமன் யுத்தமுனையில் மிக்கமனோதைரியமுள்ளவனும் பிரதிபபுத்திரனுமான பாஹ்லீகனை ஸாத்வதன் நிமித்தமாக ஒன்பது பாணங்களால் அடித்தான். மஹாபாகுபலமுள்ள பிரதிபபுத்திரனும் மிக்க கோபங்கொண்டவனாகி இந்திரன் வஜ்ராயுதத்தைப் பாய்ச்சுவது போலப் பீமனுடையமார்பில் சக்தியைப் பாய்ச்சினான். அவ்வாறு அடிக்கப்பட்ட அந்தப்பீமன் நடுங்கி மூர்ச்சையை அடைந்தான். பின்பு, பலவானானபீமன் (சற்றுநேரத்துக்குள்) பிரஜ்ஞையை அடைந்து அந்தப் பாஹ்லீகன்மீது கதாயுதத்தைப் பிரயோகித்தான். பாண்டவனால பிரயோகிக்கப்பட்ட அந்தக் கதையானது பாஹ்லீகனுடைய தலையைக் கவர்ந்தது. அவன் வஜ்ரத்தினால் அடிக்கப்பட்ட பெரியமலைபோல் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தான். புருஷசிரேஷ்டரே! வீரனான அந்தப் பாஹ்லீகன் கொல்லப்பட்டவுடனே, தசரதபுத்திரரான ஸ்ரீராமர்போன்றவர்களான நாகதத்தன், த்ருடரதன், மஹாபாகு, அயோபுஜன், த்ரு

டன, ஸுபாஹஸ்தன், விரஜஸ், பிரமாதி, உக்ரன், அநுயாயி என்கிற உம்முடைய பத்துக்குமாரர்களும் பீமனை அடித்தார்கள். அவர்களைப் பார்த்துப் பீமன் கோபங்கொண்டு பெரியகாரியத்தைச் செய்யக்கூடிய பாணங்களையெடுத்து ஒவ்வொருவனையும் நோக்கி உயிர்நிலைகளில் அடித்தான். அடிக்கப்பட்ட அந்த வீரர்கள் உயிரையும் பலத்தையும் இழந்து பெருங்காற்றினால் முறிக்கப்பட்டு மலையுச்சியிலிருந்து மரங்கள் விழுவதுபோல ரதங்களினின்று விழுந்தார்கள். பீமன் உம்முடைய அந்தக்குமாரர்களைப் பத்து அம்புகளாலடித்துக் கொன்று கர்ணனுடைய பிரியபுத்திரனை விருஷஸேனன்மீது (அம்புகளை) இறைத்தான். பிறகு, விருகரதன் என்று ப்ரஸித்திபெற்ற கர்ணனுடைய பிராதாவானவன் பீமனை நாராசங்களால் அடித்தான். பலசாலியானபீமன் அவனையும் எதிர்த்தான். பாரதரே! பிறகு, வீரனான பீமன் உம்முடைய மைத்துனர்களுள் ஏழு ரதிகர்களைக்கொன்று நாராசங்களால் சதசந்திரனையும் அடித்து நாசஞ்செய்தான். மஹாரதனான சதசந்திரன் கொல்லப்பட்டதைப்பொறுதவர்களும் வீரர்களுமான கவாக்ஷன், சரபன், விபு, ஸுபகன், பானுதத்தன் என்கிற சகுனியின் பிராதாக்களும் வீரர்களுமான ஐந்துமஹாரதர்கள் பீமஸேனனைஎதிர்த்து ஓடிவந்து கூர்மையுள்ள அம்புகளால் பீமனை அடித்தார்கள். மழையின் வேகத்தினால் மலை அடிக்கப்படுவதுபோல் நாராசங்களால் அடிக்கப்பட்ட பலவானான அந்தப்பீமன் ஐந்துபாணங்களால் (அந்த) ஐந்து அதிரதர்களையும் கொன்றான். அந்த வீரர்கள் கொல்லப்பட்டதுகண்டு ராஜசிரேஷ்டர்கள் நிலைதவறினார்கள். தோஷமற்றவரே! பிறகு, கும்பத்திற் பிறந்தவரான துரோணரும் உம்முடைய குமாரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, யுதிஷ்டிரர் கோபமுள்ளவராகி உம்முடைய சேனையை நாசஞ்செய்தார். யுத்தத்தில் கோபங்கொண்ட யுதிஷ்டிரர் அம்பஷ்டர்களையும் மாலவர்களையும் சிபிகளையும் சூரர்களான திரிகர்த்தர்களையும் மிருத்யுலோகத்துக்கு அனுப்பினார். ராஜாவான யுதிஷ்டிரர் அபீஷாஹர்களையும் சூரஸேனர்களையும் வஸாதிகளையும் பாஹ்லீகர்களையும் கொன்று பூமியை ரக்தச்சேறுள்ளதாகச் செய்தார். அரசரே! யுதிஷ்டிரர் சூரர்களான யௌதேயர்களையும் மாலவர்களையும் மத்ரகர்களுடைய கூட்டங்களையும் யுத்தத்தில் பாணங்களால் மிருத்யுலோகத்துக்கு அனுப்பினார். யுதிஷ்டிரருடைய ரதத்தை நோக்கி, 'கொல்லுங்கள்; கொண்டுவாருங்கள்; பிடியுங்கள்; துன்பப்படுத்துங்கள்; அறுத்திடுங்கள்' என்கிற ஓயாதசப்தம உண்டாயிற்று. அந்த யுதிஷ்டிரர் ஸைனியங்களை இம்மடிசெய்வதைப் பார்த்து உம்முடைய புத்திரனால் தூண்டப்பட்டவராகிய துரோணர் பாணங்களை

இழைத்தார். மிக்க கோபங்கொண்டவரான துரோணரோ ராஜாவான தர்மநந்தனரை வாயுஅஸ்திரத்தினால் அடித்தார். அவரும் அந்தத் திவ்யாஸ்திரத்தை அஸ்திரத்தால் நாசஞ்செய்தார். அந்த வாயவ்யாஸ்திரம் நாசஞ்செய்யப்பட்டவுடனே, பாரத்வாஜர் கோபங்கொண்டு பாண்டுநந்தனரைக்கொல்ல எண்ணி அவர்மீது வாருணம் யாம்யம் ஆக்நேயம் த்வாஷ்டரம் ஸாவித்ரம் என்னும் அஸ்திரங்களைப் பிரயோகித்தார். மிக்க கைவன்மையுள்ள தர்மநந்தனர் துரோணரிடமிருந்து பயப்படாதவராகி (அவரால்) பிரயோகிக்கப்படுகின்ற அந்த அஸ்திரங்களை அஸ்திரங்களால் நாசஞ்செய்தார். பாரதரே! உம்முடைய புத்திரனுக்கு ஹிதத்தைச்செய்வதில் பற்றுள்ளவரும் தர்மநந்தனரைக்கொல்லவேண்டுமென்கிற எண்ணங்கொண்டவருமான துரோணர் பிரதிஜ்ஞையை ஸத்தியமாகச்செய்ய எண்ணி ஐந்திராஸ்திரத்தையும் பிராஜாபத்யத்தையும் வெளிப்படுத்தினார். கௌரவர்களுக்கு அரசரும் யானைபோலவும் ஸிம்மம்போலவும் நடப்பவரும் அகன்றமார்பையுடையவரும் பெரியசிவந்த கண்களையுடையவரும் குறைவில்லாத தேஜஸ்ஸையுடையவருமான தர்மபுத்திரர் மாஹேந்திராஸ்திரத்தை வெளியிட்டு அந்த அஸ்திரத்தினால் (துரோணருடைய அஸ்திரத்தை) நாசஞ்செய்தார். அஸ்திரங்கள் நாசஞ்செய்யப்படும்பொழுது, துரோணர் கோபங்கொண்டு யுதிஷ்டிரரை வதஞ்செய்ய எண்ணிப் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்தார். மன்னரே! பிறகு, கோரமான இருளால் மூடப்படவே, யாதொன்றையும் நான் அறியவில்லை. எல்லாப்பிராணிகளும் அதிகமான பயத்தையடைந்தன. ராஜேந்திரரே! பிரம்மாஸ்திரம் எடுக்கப்பட்டதைக்கண்டு குந்தீபுத்திரரான யுதிஷ்டிரர் பிரம்மாஸ்திரத்தினாலேயே அந்த அஸ்திரத்தைத் தடுத்தார். பிறகு, போர்வீரர்களுள் தலைவர்களான வீரர்கள் புருஷசிரேஷ்டர்களும் பெரியவில்லைக் கையில்கொண்டவர்களும் எல்லாயுத்தங்களிலும் ஸமர்த்தர்களுமான துரோணரையும் யுதிஷ்டிரரையும் புகழ்ந்தார்கள். பாரதரே! பிறகு, துரோணர் கோபத்தினால் கண்கள் சிவந்து கௌந்தேயரைவிட்டுத் துருபதனுடைய ஸேனையை வாயுஸம்பந்தமான அஸ்திரத்தினால் நாசஞ்செய்தார். துரோணரால் கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்கள் பீமஸேனனும் மஹாத்மாவான பார்த்தனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பயத்தால் ஓடினார்கள். பிறகு, கிரீடியும் பீமனும் ஸைன்யத்தைச் சேர்த்துக்கொண்டு அப்பொழுது இரண்டுவகுப்பான பெரிய தேர்க்கூட்டங்களோடு திரும்பினார்கள். பீபத்ஸு தென்புறத்திலும் விருகோதரன் வடபுறத்திலும் பாரத்வாஜர்மீது பெரிய இரண்டு அம்புவெள்ளங்களை வர்ஷித்தார்கள். மஹாராஜரே! கேகயர்

களும் ஸ்ருஞ்சயர்களும் மஹாபராக்கிரமசாலிகளான பாஞ்சாலர்களும் ஸாத்வதர்களும் மச்சநாடர்களும் (அவ்விருவரையும்) பின்தொடர்ந்தார்கள். பிறகு, கிரீடியினால் கொல்லப்படுகின்ற அந்தப் பார்த்தசேனையானது இருளாலும் நித்திரையினாலும் மறுபடியுமே பீடிக்கப்பட்டது. மஹாராஜரே! துரோணராலும் உம்முடைய குமாரனாலும் நேரில்தடுக்கப்பட்டும் அந்த யுத்தவீரர்கள் அப்பொழுது தடுத்து நிறுத்தப்படக்கூடாதவர்களானார்கள்.

---

## நூற்றைம்பத்தோன்பதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி)

(கர்ணன் பாண்டவர்களைக் கொல்வதாக ப்ரதிஜ்ஞைசெய்ததும், கிருபர் கர்ணனை அவமானப்படுத்திக் கூறியதும், அவன் அவருடைய நாக்கை அறுப்பதாக ப்ரதிஜ்ஞை செய்ததும்.)

மிக்கவலிமைபொருந்தியதும் ஸஹிக்கமுடியாததும் பெரிதுமான அந்தப்பாண்டவஸேனையைப் பார்த்துத் துரியோதனன் கர்ணனை நோக்கி, 'நண்பர்களிடத்து அன்புள்ளவனே! மித்திரர்களுக்கு என் விஷயத்தில் உபகாரம் செய்வதற்குரிய அப்படிப்பட்டகாலம் வந்துவிட்டது. கர்ண! மிகுந்த கோபம்கொண்டவர்களும் ஸர்ப்பங்கள்போல் பெருமூச்சுவிடுகின்றவர்களுமான பாஞ்சாலர்களாலும் மாத்ஸ்யர்களாலும கேகயர்களாலும் மஹாரதர்களான பாண்டவர்களாலும் நாலுபக்கத்திலும் சூழப்பட்டிருக்கிற மஹாரதர்களான எல்லா யுத்தவீரர்களையும் யுத்தத்தில் காப்பாற்று. இதோ ஜயத்தினால் பிரகாசிக்கின்ற பாண்டவர்களும் இந்திரனுக்கு நிகரான அனேகபாஞ்சால ரதிகர்களுடைய கூட்டங்களும் சந்தோஷத்துடன் அட்டஹாஸம்செய்கின்றனர்' என்று சொல்ல, கர்ணன், 'பார்த்தனைக் காப்பதற்காக இங்கு இந்திரனே வந்தாலும் அவனையும் விரைவாகத் தோற்கச்செய்து பிறகு அந்தப் பாண்டவனைக் கொல்வேன். பாரத! நான் ஸத்தியமாக உன்னிடம் பிரதிஜ்ஞை செய்கிறேன். தேறுதலடை. ஒன்று சேர்ந்திருக்கின்ற பாண்டுபுத்திரர்களையும் பாஞ்சாலர்களையும் கொல்வேன். அக்னிகுமாரரான சுப்பிரமணியர் இந்திரனுக்கு ஜயத்தைக்கொடுத்ததுபோல உனக்கு ஜயத்தைக் கொடுப்பேன். அரசே! நான் உன் விருப்பத்தைச் செய்வதற்கே ஜீவித்திருக்கிறேன். எல்லாப் பார்த்தர்களுள்ளும் பல்குனன் அதிக பலசாலி. இந்திரனால் அமைக்கப்பட்

டதும் வீணாகாததுமான சக்தியை அவன்மீது பிரயோகிக்கப்போகி றேன். பகைவர்களுடைய கர்வத்தை அழிப்பவனே! பலமுள்ள வில் லைக் கையில்பிடித்தவனான அவன் கொல்லப்பட்டவுடனே, அவனுடைய ஸோதரர்கள் உனக்கு வசமாகிவிடுவார்கள்; அல்லது, மறுபடியும் காட் டுக்குச்செல்வார்கள். கௌரவனே! யான் உயிரோடிருக்குங்காலத்தில் நீ ஒரு விஷயத்திலும் வியஸனப்படவேண்டாம். நான் யுத்தத்தில் ஒன் றுகூடியிருக்கிற எல்லாப் பாண்டவர்களையும் ஜயிப்பேன். பாஞ்சாலர் களையும் கேகயர்களையும் ஒன்றுகூடியிருக்கிற விருஷ்ணிகளையும் பாண ஸமூகங்களால் துண்டுகளாக்கிப் பூமியை உனக்குக் கொடுப்பேன்' என்று கூறினான். இவ்வாறுசொல்லுகின்ற ஸூதபுத்ரனான கர்ணனைப் பார்த்து மகா பாகுபலமுள்ள சாரத்வதரான கிருபர் மந்தஹாஸத் துடன் பின்வருமாறு சொல்லலானார். 'கர்ண! நல்லது; நல்லது; ராதா புத்திர! உன் சொற்படி குருபுங்கவன் கார்யஸித்தியை யடைவா னானால் நாதனான் உன்னால் ஸஹாயமுடையவனாவான். கர்ண! துரியோ தனனிடத்தில் பலவாறாகத் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகிறாய். உன்னு டைய மிகுந்த வல்லமையாவது அல்லது அதின் பலனாவது ஒரு சிறி தும் காணப்படவில்லை. யுத்தத்தில் பாண்டுபுத்திரர்களோடு நீ பல முறை எதிர்த்ததை நாங்கள் கண்டிருக்கிறோம். தேர்ப்பாகன் மகனே! எல்லா யுத்தங்களிலும் பாண்டவர்களால் நீ ஜயிக்கப்பட்டாய். கர்ண! அப்பொழுது கந்தர்வர்களால் திருதராஷ்டிர புத்திரன கவரப்பட்ட காலத்தில் எல்லாச் சேனைகளும போர்புரிந்தன. அப்பொழுது, நீ ஒரு வன்மாத்திரம் முந்தி ஓடிவிட்டாய். கர்ண! விராடநகரத்திலும் (உத்தர கோகிரஹண) யுத்தத்தில் ஒன்றுசேர்ந்திருந்த எல்லாக் கௌரவர்களும் பார்த்தனால் வெல்லப்பட்டார்கள். நீயும் ஸஹோதரனுடன் தோல்வி யடைந்தாய். யுத்தரங்கத்தில் பார்த்தன் ஒருவனைக்கூட ஜயிக்க நீ வல் லமையற்றவன. அவ்வாறிருக்க, கிருஷ்ணனோடுகூடின எல்லாப் பாண்டவர்களையும் ஜயிப்பதற்கு எவ்வாறு நீ வல்லமையுள்ளவனாவாய்? கர்ண! (வாயினால்) சொல்லாமல் யுத்தமசெய். ஸூதபுத்திர! பலவாறு தற்புகழ்ச்சிசெய்கிறாய். சொல்லாமல் பராக்கிரமத்தைக காட்டுவதன்றோ உத்தமர்களின் விரதம? ஸூதபுத்திர! நீ ஜலமில்லாத சரத்காலமேகம் போலக் கர்ஜித்துவிட்டுப் பயனற்றவனாகக் காணப்படுகிறாய். கர்ண! அதனையும் அரசனான துரியோதனன் தெரிந்துகொள்ளவில்லை. பார்த் தனை நீ பார்க்குமுன்னரோ கர்ஜித்துவிடு. ஸமீபத்தில் பார்த்தனைப் பார்த்தபிறகு கர்ஜனமானது மறுபடி உனக்குக் கிடைப்பது அரிது. பல்குனனுடைய அப்படிப்பட்ட பாணங்கள் வந்துவிழாமையால் நீ கர்

னிக்கிறாய். பார்த்தனுடைய அம்புகளால் அடிக்கப்படும்பொழுது உனக்குக் கர்ஜனம் துர்லபமாகும். க்ஷத்திரியர்கள் கைகளால் சூரர்கள்; பிராம்மணர்கள் வாக்குக்களால் சூரர்கள்; பார்த்தன் வில்லினால் சூரன்; கர்ணன் எண்ணுவதில்மட்டும் சூரன். பரமசிவனையும் மகிழ்வித்த பார்த்தனை எவன் எதிர்த்து யுத்தம்செய்வான்?' என்று கூறினார்.

இவ்வாறு, அப்பொழுது அந்த க்ருபரால் கோபமூட்டப்பட்டவனும் அடிப்பவர்களுள் உத்தமனுமான கர்ணன், பிறகு க்ருபரைநோக்கி, 'சூரர்கள் மழைக்காலத்தில் மேகங்கள் கர்ஜிப்பதுபோல் எப்பொழுதும் கர்ஜிப்பார்கள்; நல்லநிலத்தில் போடப்பட்ட விதைபோல விரைவாகப் பலனையும் கொடுப்பார்கள். யுத்தமுனையில் அவ்வவ்விதமாகத் தற்புகழ்ச்சிசெய்கின்றவர்களும் யுத்தத்தில் கார்யபாரத்தைப் பொறுக்கின்றவர்களுமான சூரர்களுக்கு இவ்விஷயத்தில் குற்றமிருப்பதாக நான் காணவில்லை. எந்தப் பாரத்தைச் சுமப்பதற்கு மனிதன் மனத்தினால் முயற்சிசெய்கிறானோ அவ்விஷயத்தில் தெய்வம் அவனுக்கு உதவிசெய்வதன்பொருட்டு ஸன்னத்தமாகிறது. பிராம்மணரே! நான் விடா முயற்சியைக் கைக்கொண்டும் மனத்தினால் கார்யபாரத்தை ஏற்றுக் கொண்டும் க்ருஷ்ணனோடும் ஸாத்வதனோடுங்கூடின பாண்டுகுமாரர்களை யுத்தத்தில் வென்று கர்ஜித்தேனேயானால் அந்த விஷயத்தில் உமக்கு என்ன குறைந்துவிட்டது? சூரர்கள் வீணாகக் கர்ஜிக்கமாட்டார்கள். கற்றறிந்தவர்கள் தம் வல்லமையை அறிந்து நீருண்ட மேகம் போல் கர்ஜிப்பார்கள். கௌதமரே! அப்படிப்பட்ட யான் யுத்தத்தில் முயற்சியுடையவர்களும ஒன்றுசேர்ந்தவர்களுமான க்ருஷ்ணன் பாண்டவன் இருவரையும் இப்பொழுது யுத்தத்தில் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவனாயிருக்கிறேன். ஆதலால், நான் கர்ஜிக்கிறேன் பிராம்மணரே! நீர் என் கர்ஜனையினுடைய பலனைப் பாரும். நான் பரிவாரங்களுடனும் க்ருஷ்ணனோடும் ஸாத்வதனோடுங்கூடின பாண்டுபுத்திரர்களை யுத்தத்தில் கொன்று பகைவரற்றதான பூமியைத் துரியோதனனுக்குக் கொடுக்கப் போகிறேன்' என்று சொன்னான். க்ருபர், 'ஸூதபுத்திர! உன்னுடைய எண்ணமட்டான புலம்பல்களை நான் ஒப்பமாட்டேன். எப்பொழுதும் நீ க்ருஷ்ணார்ஜுனர்களையும் பாண்டுபுத்திரனான தர்மராஜனையும் இகழ்கிறாய். ஓ! கர்ண! கவசம்பூண்டவர்களான தேவர்களாலும் கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் மனிதர்களாலும் உரகர்களாலும் ராக்ஷஸர்களாலும் யுத்தத்தில் ஜயிக்கக்கூடாதவர்களும் யுத்தத்தில் ஸாமர்த்தியமுடையவர்களுமான க்ருஷ்ணனும் அர்ஜுனனும் எந்த இடத்திலிருக்கிறார்களோ அந்த இடத்தில் ஜயம் நிச்சயம். தர்மபுத்திரனான யுதிஷ்

டிரன் பிராம்மணர்களிடத்திலும் வேதத்தினிடத்திலும் பிரீதியுள்ளவன்; ஸத்பவாதி; ஜிதேந்திரியன்; ஆசாரியர்களையும் தேவதைகளையும் பூஜிப்பவன்; எப்பொழுதும் தர்மத்தில் பற்றுதலுள்ளவன்; விசேஷமாக அஸ்திரவித்தையில் பயிற்சியுள்ளவன்; தைரியமுள்ளவன்; நன்றியறிவுள்ளவன். இவனுடையதம்பியரும் பலசாலிகள்; எல்லா அஸ்திரங்களிலும் உழைப்புடையவர்கள்; பெரியோர்களுடைய செய்கையில் பற்றுள்ளவர்கள்; வித்வான்கள்; எப்பொழுதும் தர்மத்தைநாடினவர்கள்; புகழுள்ளவர்கள்; ஒருவரிடத்தொருவர் பற்றுள்ளவர்கள்; இந்திரனுடைய வீர்யம்போன்ற வீர்யமுடையவர்கள்; விசேஷமாக அன்புள்ளவர்கள்; (சத்துருக்களை) அடிக்குந் தன்மையுள்ளவர்கள். எவர்களுடைய கார்யத்தில் திருஷ்டத்யும்னன், சிகண்டி, [1] தௌர்முகி, ஜனமேஜயன், சந்திரஸேனன், ருத்திரஸேனன், கீர்த்திதர்மா, துருவன், தரன், வஸுசந்திரன், தாமசந்திரன், ஸிம்மசந்திரன், ஸுதேஜனன், துருபதனுடைய குமாரர்கள், மஹாஸ்திரங்களை அறிந்தவனான துருபதன் ஆகிய இவர்கள் முயற்சியுள்ளவர்களாயிருக்கிறார்களோ, எவர்களுடைய கார்யத்தின்பொருட்டு ஸஹோதரர்களுடன்கூடின விராடன், சதானீகன், சூரியதத்தன், சுருதானீகன், சுருதத்வஜன், பலானீகன், ஜயானீகன், ஜயாஸ்வன், ரதவாஹனன், சந்திரோதயன், ஸமரதன் ஆகிய சிரேஷ்டர்களான விராடனுடைய ஸஹோதரர்கள், நகுலஸஹதேவர்கள், துரௌபதீ குமாரர்கள், ராக்ஷஸனான கடோத்கசன் ஆகிய இவர்களெல்லோரும் போர்புரிகிறார்களோ அவர்களுக்குக் குறைவுகிடையாது. இவர்களும் மற்ற அனேகவீரர்களுடைய கூட்டங்களும் பாண்டுபுத்ரனைச் சேர்ந்தவர்களாயிருக்கிறார்கள். பீமார்ஜுனர் இருவரும் தேவர்களோடும் அஸுரர்களோடும் மனுஷியர்களோடும் கூடியதும் யக்ஷ ராக்ஷஸகணங்களோடுகூடியதும் பூதங்களுடனும் ஸர்ப்பங்களுடனும் யானைகளுடனுங் கூடியதுமான உலகமனைத்தையும் அஸ்திர வீர்யத்தினால் மிச்சமில்லாமல் செய்யும் திறமையுடையவர்கள். யுதிஷ்டிரனும் கோரமான கண்ணால் பூமியை எரிப்பான். கர்ண! அளத்தற்கரிய பலத்துடன்கூடின ஸ்ரீ சௌரியானவர் எவர்களுடைய கார்யத்துக்காகக் கவசமணிந்திருக்கிறாரோ அந்தச் சத்துருக்களை யுத்தத்தில் ஜயிப்பதற்கு எவ்வாறு நீ வல்லமையுடையவனாவாய்? ஸூதபுத்ர! நீ எப்பொழுதும் கிருஷ்ணனுடன் போர்புரிவதற்கு முயற்சிசெய்கிறாயென்பது உன்னிடத்திலுள்ள பெரிதான தவறு' என்று கூறினர். பரதசிரேஷ்டரே! இவ்வாறு சொல்லியதைக்கேட்ட ராதாபுத்திரனான

[1] 'துர்முகபுத்ரனான ஜனமேஜயனென்பது பழையவுரை.

கர்ணன் அப்பொழுது உரக்கச் சிரித்துக்கொண்டு ஆசார்யரும் சரத்வானுடைய குமாரருமான கிருபரைநோக்கி, 'பிராம்மணரே! பாண்டவர்களைப்பற்றி நீர் சொல்லிய வார்த்தை உண்மையே. இந்தக் குணங்களும் இன்னும் மற்றும் அனேககுணங்களும் பாண்டுபுத்திரர்களிடத்தில் இருக்கின்றன. பார்த்தர்கள் யுத்தத்தில் இந்திரனோடுகூடின தேவர்களாலும் தைத்தியர்களோடும் யக்ஷர்களோடும் கந்தர்வர்களோடும்கூடின பிசாசர்களாலும் உரகர்களாலும் ராக்ஷஸர்களாலும்கூட ஜயிக்கத்தகாதவர்களே. ஆனாலும், இந்திரனால் கொடுக்கப்பட்ட சக்தியினால் பார்த்தர்களை ஜயிப்பேன். பிராம்மணரே! இந்திரனால் எனக்கு வீணாகாத இந்தச் சக்தியாயுதமானது கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆயுதத்தினால் யுத்தத்தில் ஸவ்யஸாசியைக் கொல்லப்போகிறேன். பாண்டுபுத்திரனை அர்ஜுனன் கொல்லப்பட்டபிறகு, அவனுடைய பிராதாக்கள் அர்ஜுனனில்லாமல் எவ்விதத்தினாலும் பூமியை அனுபவிப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார்கள். கௌதமரே! அவர்களனைவரும் நசித்துப்போனபிறகு, ஸமுத்திரம் சூழ்ந்த இந்தப்பூமியானது எளிதில் கௌரவேந்திரனை துர்யோதனனுடைய வசத்தில் இருக்கப்போகின்றது. கௌதமரே! நல்லநீதிகளால் எல்லாக்கார்யங்களும் இப்பொழுது ஸித்திக்கின்றன. இதுவிஷயத்தில் ஸம்சயம்இல்லை. இந்தவிஷயத்தை அறிந்தே யான் கர்ஜிக்கிறேன். நீரோ பிராம்மணர்; பிராயமுதிர்ந்தவர்; யுத்தத்தில் சக்தியற்றவர்; பார்த்தர்களிடத்திலும் அன்புடையவர். ஆகையால், அறியாமையினால் என்னை அவமதிக்கிறீர். துர்புத்தியுள்ளபிராம்மணரே! இவ்வாறு எனக்கு அப்பிரியமானவார்த்தையை என்முன்னிலையில் மறுபடியும் சொல்வீரேயாகில் அப்பொழுது கத்தியையெடுத்து உமது நாவை அறுப்பேன். துர்ப்புத்தியுள்ள பிராம்மணரே! எல்லாச்சேனைகளையும் கௌரவர்களையும் பயமடையும்படிசெய்துகொண்டு யுத்தத்தில் பாண்டவர்களை ஸ்தோத்திரம் செய்வதற்கு விரும்புகிறீர். அந்த விஷயத்திலும் உள்ளபடி சொல்லுகிறவனை என்வார்த்தையைக் கேளும். யுத்தத்தில் ஸமர்த்தர்களான துர்யோதனன், துரோணர், சகுனி, துர்முகன், ஜயன், துச்சாஸனன், விருஷசேனன், மத்திரராஜன், நீர், ஸோமதத்தன், பூரி, துரோணபுத்திரர், விவிம்சதி ஆகிய எல்லோரும் கவசம் தரித்தவர்களாகநிற்கிற இடத்தில் இந்த வீரர்களை இந்திரனுக்குஒப்பான பலமுள்ளவனானாலும் எந்த மனிதன்தான் எதிர்த்துநின்று ஜயிப்பான்? சூரர்களும் அஸ்திரத்தில் நல்ல தேர்ச்சியடைந்தவர்களும் பலசாலிகளும் ஸ்வர்க்கத்தை அடையவிருப்பமுள்ளவர்களும் தர்மத்தை அறிந்தவர்களும் யுத்தத்தில் ஸமர்த்தர்களுமான

இந்த வீரர்கள் யுத்தத்தில் தேவர்களையும் கொல்வார்கள். இவர்கள் கவசம்பூண்டவர்களும் கௌரவராஜனுக்கு ஜயத்தை விரும்புகின்றவர்களும் பாண்டவர்களைக் கொல்வதில் விருப்பமுள்ளவர்களுமாக யுத்தத்தில் நிற்கப்போகிறார்கள். மிக்க புஜபலமுள்ளவரான பீஷ்மர் நூறு அம்புகளால் நான்கு பக்கத்திலும் நிறைக்கப்பட்டுப் படுத்திருத்தலால், மிக்க பலசாலிகளுக்கும் ஜயமானது தெய்வாயத்தமென்றே நான் நினைக்கிறேன். விகர்ணன், சித்திரஸேனன், பாஹ்லீகன், ஜயத்ரதன், பூரிசிரவஸ், ஜயன், ஜலஸந்தன், ஸுதக்ஷிணன், ரதிகர்களுள் சிறந்தவனான சலன், வீர்யமுடையவனான பகதத்தன் இவர்களும் மற்ற அரசர்களும் தேவர்களாலும் எவ்விதத்தினாலும் ஜயிப்பதற்கு அரியவர்களே. புருஷோத்தமரே! மிக்க பலசாலிகளான இந்தச் சூரர்களே யுத்தத்தில் பாண்டவர்களால் கொல்லப்பட்டார்கள். தெய்வச்செயலைத்தவிர வேறு என்ன இருக்கிறதென்று நீர் எண்ணுகிறீர்? பிராம்மணரே! துர்யோதனசத்துருக்களாகிய எவர்களை நீர் எப்பொழுதும் புகழ்கிறீரோ அவர்களிலும் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் சூரர்கள் கொல்லப்பட்டார்கள். கௌரவர்களுடைய எல்லாச் சேனைகளும் பாண்டவர்களுடைய ஸைன்யங்களோடேயே குறைகின்றன. இந்த விஷயத்தில் பாண்டவர்களுக்குப் பெருமையிருப்பதாக எவ்விதத்தினாலும் நான் காணவில்லை. பிராம்மணரில் இழிந்தவரே! நீர் எவர்களை எப்பொழுதும் பலசாலிகளென்று நினைத்துக்கொண்டிருக்கிறீரோ அவர்களோடு நான் யுத்தத்தில் வல்லமையுள்ளவரையில் துர்யோதனனுடைய நன்மைக்காகப் போர்புரியப்போகிறேன். ஜயம் தெய்வத்தினிடத்தில் நிலைபெற்றிருக்கிறது' என்று கூறினான்.

---

## நூற்றறுபதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(கிருபரை நிந்தித்ததைப் பொறாமல் அச்வத்தாமா கர்ணனைக் கொல்லக் கிளம்பியதும், கிருபரும் துர்யோதனனும் தடுத்ததும், அர்ஜுனனால் கர்ணன் தோற்றதும், துர்யோதனன் அச்வத்தாமாவைப் போருக்கு ஏவியதும்.)

தீமதி அம்மானான கிருபர் அவ்வாறு ஸூதபுத்திரனால் மனவருத்தமடையும்படி செய்யப்பட்டதைக் கண்டு, துரோணபுத்திரர் கத்தியை எடுத்துக்கொண்டு வேகமாகக் கர்ணனை எதிர்த்துவந்தார். பிறகு,

அதிக கோபங்கொண்ட ஒரு சிங்கமானது ஒரு மதயானையை எதிர்த்துச் செல்வதுபோலத் துரோணபுத்திரர், குருராஜன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கர்ணனை எதிர்த்துச்சென்றார். அவர், 'மனிதர்களுள் இழிவானவனே! துர்ப்புத்தியுடையவனே! அர்ஜுனனுடைய உண்மையான குணங்களைச் சொல்லுகின்றவரும் சூரருமான எனதுமாதுலரை நீ துவேஷத்தால் வெருட்டுகிறாய். நீ சூரனென்று தற்புகழ்ச்சி செய்துகொள்கின்றவனும் கொழுப்பினாலுண்டான அதிக கர்வங்கொண்டவனுமாகி யுத்தத்தில் எல்லா உலகங்களிலும் பிரதான வில்லாளியாயிருப்பவனை மதிக்கவில்லை. காண்டீவத்தை வில்லாகக்கொண்ட அர்ஜுனன் யுத்தத்தில் உன்னை ஜயித்து நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஜயத்ரதனைக் கொன்றானே! உன்னுடைய வீரியம் எங்கே? உன்னுடைய அஸ்திரங்கள் எங்கே? தேர்ப்பாகர்களில் தாழ்ந்தவனே! முன்பு, யுத்தத்தில் ஸாக்ஷாத் மகாதேவரையே எதிர்த்துப் போர்புரிந்த அவனை வீணான எண்ணங்களால் ஜயிப்பதற்கு விரும்புகிறாய். ஸூத! வாஸுதேவரோடுகூடினவனும் ஆயுதம்பிடித்தவர்களனைவருள்ளும் சிறந்தவனும் உலகத்தில நிகரில்லாத வீரனும் யுத்தத்தில் ஜயிக்கப்படாதவனுமான அர்ஜுனனை இந்திரனோடுகூடின தேவாஸுரர்கள் ஒன்றுசேர்ந்தாலும் ஜயிப்பதற்குச் சக்தியற்றவர்கள். துர்ப்புத்தியுடையவனே! அவ்வாறிருக்க, இந்த அரசர்களோடுகூடின நீ எவ்வாறு ஜயிக்கப்போகிறாய்? கர்ண! பார். மிகுந்த கெட்டபுத்தியுள்ளவனே! மனிதரில் இழிவானவனே! இப்பொழுது நில். மிக்க துர்ப்புத்தியுடையவனே! இதோ நான் உன் தலையைத் தேகத்திலிருந்து எடுத்துவிடுகிறேன்' என்று கூறினார். வேகத்தோடு முயற்சிசெய்கின்ற அந்த அசுவத்தாமாவை ராஜாவான துர்யோதனனும், மகாதேஜஸுள்ளவரும் மனிதர்களுள் உத்தமருமான கிருபரும் தடுத்தார்கள். கர்ணன், 'கௌரவசிரேஷ்ட! இவனை விட்டுவிடு. சூரனும் யுத்தத்தைக் கொண்டாடுகின்றவனும் கெட்டபுத்தியையுடையவனுமான இந்தப் பிராம்மணாதமன் என் வீரியத்தை எதிர்த்துவரட்டும்' என்று சொல்ல, அசுவத்தாமா, 'ஸூதபுத்திர! மிக்க கெட்டபுத்தியுள்ளவனே! உன்னுடையதான இந்தச் செய்கை நம்மால் பொறுக்கப்படுகிறது. பல்குனன் கர்வமுள்ளவனான உன்னுடைய இந்தக் கொழுப்பை நாசஞ்செய்யப்போகிறான்' என்று சொல்ல, துர்யோதனன், 'அசுவத்தாமாவே! நீர் கருணைபுரியவேண்டும். (சத்துருக்களுடைய) கர்வத்தை நாசஞ்செய்பவரே! நீர் பொறுக்கவேண்டும். ஸூதபுத்திரன்விஷயத்தில் எவ்விதத்தாலும் கோபிக்கவேண்டாம். பிராம்மணோத்தமரே! உமமிடத்திலும் கர்ணனிடத்தி

னும் கிருபரிடத்திலும் துரோணரிடத்திலும் மத்திரதேசாதிபதியான சல்லியனிடத்திலும் சகுனியிடத்திலும் பெரிய காரியம் சுமத்தப்பட்டிருக்கிறது. கிருபைசெய்யும். பிராம்மணரே! இதோ எல்லாப் பாண்டவர்களும் ராதேயனோடு போர்புரிய விரும்பி நான்கு பக்கங்களிலும் யுத்தத்துக்காக அழைத்துக்கொண்டே எதிர்த்துவருகிறார்கள்' என்று சொன்னான். மஹாராஜரே! கோபவேகமுள்ளவரும் பெரிய மனமுள்ளவருமான துரோணபுத்திரரோ, பிறகு, அரசனால் ஸமாதானப்படுத்தப்பட்டு மனம் தெளிந்தார். ராஜேந்திரரே! பிறகு, பெரியமனமுள்ளவரான கிருபாசார்யரும் இனிய குணமுள்ளவராயிருப்பதால் விரைவாகக் கோபசாந்தியை அடைந்து, 'ஸூதபுத்திர! மிக்க கெட்டபுத்தியுள்ளவனே! உன்னுடைய இந்த அநீதியானது நம்மால் பொறுக்கப்படுகிறது. உன்னுடைய கொழுப்பையும் கர்வத்தையும் பல்குனன் நாசம்செய்வான்' என்று சொன்னார். அரசரே! பிறகு, அந்தப் பாண்டவர்களும் கீர்த்தியுள்ளவர்களான பாஞ்சாலர்களும் ஒன்றுசேர்ந்து நான்குபக்கத்திலும் கர்ணனை அதட்டிக்கொண்டுவந்தார்கள். தோளிகளுள் சிறந்தவனும் வீர்யமுள்ளவனும் தேஜஸுள்ளவனுமான கர்ணனும் வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு இந்திரன் தேவகணங்களால் சூழப்படுவதுபோல் கௌரவவீரர்களால் சூழப்பட்டுத் தன் கைவன்மையை ஆதாரமாகக் கொண்டு நின்றான். மஹாராஜரே! பிறகு, கர்ணனுக்குப் பாண்டவர்களோடு பயங்கரமானதும் ஸிம்மநாதங்களால் விளங்குகின்றதுமான போர் நடக்க ஆரம்பித்தது. மன்னரே! பிறகு, பாண்டவர்களும் புகழுள்ளவர்களான பாஞ்சாலர்களும் மிக்க புஜபலமுள்ளவனான கர்ணனைக்கண்டு, 'இதோ கர்ணன்; எங்கே கர்ணன்? கர்ண! மஹாயுத்தத்தில் நில். துராத்மாவே! புருஷாதம! எங்களுடன் எதிர்த்து யுத்தம்செய்' என்று உரத்த சப்தத்துடன் கர்ஜித்தார்கள். இன்னும் மற்றவர்கள் ராதேயனைப்பார்த்துக் கோபத்தினால் கண்கள்சிவந்தவர்களாகி, 'கர்வம் கொண்டவனும் அல்பபுத்தியையுடையவனுமான இந்த ஸூதபுத்திரனை எல்லா ராஜஸ்ரேஷ்டர்களும் கொல்லவேண்டும். இவன் ஜீவித்திருப்பதனால் ஒரு பிரயோஜனமுமில்லை. இவன் பார்த்தர்களுக்கு எப்பொழுதும் கொடிய பகைவன்; பாவி. துர்யோதனனுடைய கொள்கைக்கு இணங்கினவனான இவனே அனர்த்தங்களுக்குக் காரணம்' என்று சொன்னார்கள். பாண்டுபுத்திரனால் ஏவப்பட்ட மஹாரதர்களான சில க்ஷத்திரியர்கள், 'இவனைக் கொல்லுங்கள்' என்று சொல்லிக்கொண்டும் பெரிதான அம்புமழையினால் மறைத்துக்கொண்டும் ஸூதபுத்திரனைக் கொல்வதற்காக எதிர்த்து ஓடிவந்தார்கள். அவ்வாறு எதிர்த்து ஓடிவருகின்ற

அந்த எல்லா மஹாரதர்களையுங்கண்டும் ஸூதபுத்திரன் மனவருத்த மடையவில்லை; பயத்தையும் அடையவில்லை பாரதரிற்சிறந்தவரே! கடல்போலப் பொங்கியெழுகின்ற அந்தஸேனாஸமுத்திரத்தைப்பார்த்து, யுத்தங்களில் தோல்வியடையாதவனும் பலசாலியும் சுறுசுறுப்புள்ளவனும் மிக்க வன்மையுடையவனுமான அந்தக் கர்ணன் உம்முடைய புத்திரர்களைத் திருப்தியடையச்செய்பவனாகி அம்புக்கூட்டத்தினால் அந்தப் படையை நான்குபுறத்திலும் சூழ்ந்து தடுத்தான். பிறகு, அரசர்கள், நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் விற்களை அசைத்துக்கொண்டும் அம்புமழையினால் அவனைத் தடுத்துக்கொண்டும், இந்திரனோடு அஸுரர்களுடைய கூட்டங்கள் போர்புரிந்ததுபோல அவனோடு போர்புரிந்தார்கள். பிரபுவே! கர்ணன் அரசர்களால் பிரயோகிக்கப்படும் அந்த அம்புமழையைப் பெரிதான பாணமழையினால் நாற்புறங்களிலும் சிதற அடித்தான். செய்ததற்குப் பிரதிசெய்ய விருப்பமுள்ளவர்களான அந்த வீரர்களுக்கு, தேவாஸுரயுத்தத்தில் இந்திரனுக்கும் அஸுரர்களுக்கும் யுத்தம் நேர்ந்ததுபோல் யுத்தம் நேர்ந்தது. யுத்தத்தில் நான்குபக்கங்களிலும் பகைவர்கள் முயற்சிசெய்தும் கர்ணனை அணுகச் சக்தியற்றவர்களானார்களென்றும் அத்புதமான கர்ணனுடைய லாகவத்தை நாங்கள் அவ்விடத்தில் கண்டோம். மஹாரதனான கர்ணன் மன்னர்களுடைய அந்தப் பாணஸமூஹங்களைத் தடுத்துத் தன் பெயரால் அடையாளமிடப்பட்ட கோரமான அம்புகளை நுகத்தடிகளிலும் ஏர்க்கால்களிலும் குடைகளிலும் கொடிமரங்களிலும் குதிரைகளிலும் பிரயோகித்தான். பிறகு, கர்ணனால் பீடிக்கப்பட்ட அந்த அரசர்கள் மனக்கலக்கம்கொண்டு, குளிரினால் பீடிக்கப்பட்ட பசுக்கள்போல ஆங்காங்கு நிலைதவறிச் சுழன்றார்கள். கர்ணனால் அடிக்கப்பட்டுக் கீழேதள்ளப்படுகின்ற குதிரைக்கூட்டங்களையும் யானைக்கூட்டங்களையும் தேராளிகளின் ஸங்கங்களையும் அங்கு அங்கு நாங்கள் கண்டோம். வேந்தரே! பின்வாங்காதவர்களான சூரர்களுடைய நான்குபுறத்திலும் விழுந்திருக்கின்ற தலைகளாலும் கைகளாலும் யுத்தபூமியானது முழுமையும் பரப்பப்பட்டது. கொல்லப்பட்டவைகளும் கொல்லப்படுகின்றவைகளும் நான்குபக்கத்திலும் வீரிடுகின்றவைகளுமான பிராணிகளால் பயங்கரமான யுத்தபூமியானது யமபுரம்போன்றதாகியது. பிறகு, துர்யோதனராஜன் கர்ணனுடைய பராக்கிரமத்தைக் கண்டு அஸ்வத்தாமாவை வந்து அடைந்து, 'அஸ்வத்தாமாவே! கவசம்பூண்டவனான இந்தக் கர்ணன் யுத்தத்தில் எல்லா அரசர்களோடும் போர்புரிகிறான். சுப்பிரமணியரால் நாசம்பண்ணப்பட்ட அஸுரசேனை

போலக் கர்ணனுடைய பாணங்களால் பீடிக்கப்பட்டு ஓடுகின்ற இந்தப் பாண்டவசேனையைப் பாரும். யுத்தத்தில் புத்திசாலியான கர்ணனால் ஜயிக்கப்பட்டிருக்கிற இந்தப் படையைக்கண்டு அர்ஜுனன் ஸூதபுத்திரனைக் கொல்லுகிற எண்ணத்துடன் இவனை எதிர்த்துவருகிறான். நாமெல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மகாரதனான கர்ணனை யுத்தத்தில் பாண்டவன் கொல்லாதபடியான நீதியை நீர் செய்யக்கடவீர்' என்று கூறினான். பிறகு, அஸ்வத்தாமா, கிருபர், சல்லியன், மஹாரதனான கிருதவர்மா இவர்கள், அஸுரஸேனையை இந்திரன் எதிர்த்து வருவதுபோல எதிர்த்துவருகின்ற கௌந்தேயனைப்பார்த்து ஸூதபுத்திரனைப் பாதுகாக்கும் எண்ணத்தினால் அப்பொழுது அர்ஜுனனை எதிர்த்துவந்தார்கள். ராஜேந்திரரே! பாஞ்சாலர்களால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டவனான பீபத்ஸுவும் அப்பொழுது இந்திரன் விருத்திராசுரனை எதிர்த்துவருவதுபோலக் கர்ணனை எதிர்த்து வந்தான்" என்று சொன்னான்.

திருதராஷ்டிரன், "ஸூத! காலனும் அந்தகனும் யமனும்போன்றவனும் பரபரப்புள்ளவனுமான பல்குனனைப்பார்த்து ஸூர்யகுமாரனான கர்ணன், மேலே எந்தக் கார்யத்தைச் செய்தான்? மஹாரதனும் எப்பொழுதுமே பார்த்தனோடு பகைப்பவனும் யுத்தத்தில் அதிபயங்கரனான அர்ஜுனனை வெல்ல விரும்புகிறவனும் விகர்த்தனன்குமாரனுமான கர்ணன், திடீரென்று எதிர்த்துவருகின்றவனும் எப்பொழுதுமே தனக்கு அதிக வைரியாயிருப்பவனுமான அந்த அர்ஜுனனைக் கண்டு, பிறகு என்ன கார்யத்தைச் செய்தான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "எதிர்த்துவருகின்ற பாண்டுகுமாரனான தனஞ்சயனைப் பார்த்து ஒரு யானையை மற்றொரு யானை எதிர்ப்பதுபோல் கர்ணன் பயமில்லாதவனாக யுத்தத்தில் எதிர்த்தான். வேகத்தோடு வருகின்ற அந்தக் கர்ணனைப் பார்த்தன் அம்புகளால் மறைத்தான். கர்ணனும் விஜயனை அம்புகளால் மூடினான். (மறுபடியும்) அந்தப் பாண்டவன் பாணஸமூகத்தால் கர்ணனை மூடினான். பிறகு, கர்ணன் மிக்க முயற்சியுடன் மூன்று அம்புகளால் அர்ஜுனனை அடித்தான். மஹாபலசாலியான பார்த்தன் அவனுடைய அந்த் லாகவத்தைப் பொறுக்கவில்லை. பகைவர்களை வாட்டுந் திறமையுள்ளவனான அர்ஜுனனே அந்த ஸூதபுத்திரன்மீது சாணையில் தீட்டப்பட்டவையும் நேராகச் செல்லுகின்றவையும் பிரகாசிக்கின்ற முனைகளுள்ளவையுமான முந்நூறு பாணங்களைப் பிரயோகித்தான். மேலும், பலசாலியும்

வீர்யமுடையவனுமான அர்ஜுனன் நகைத்துக்கொண்டு கர்ணனுடைய இடக்கை முஷ்டியில் ஒரு பாணத்தால் அடித்தான். பாணத்தால் அடிக்கப்பட்ட அந்தக் கர்ணனுடைய கையிலிருந்து வில்லானது கீழேவிழுந்துவிட்டது. மஹாபலசாலியான கர்ணன் அரைநிமிஷத்தில் மறுபடியும் அந்த வில்லைக் கையில் எடுத்துக் கைத்தேர்ச்சியுள்ளவனானதால் பாணஸமூகங்களால் பல்குனனை மூடினான். பாரதரே! ஸூதபுத்திரனால் விடப்பட்ட அந்தப் பாணவர்ஷத்தைத் தனஞ்சயன் புன்னகை செய்துகொண்டே பாணவர்ஷத்தால் நாசஞ்செய்தான். பார்த்திவரே! சிறந்த வில்லாளிகளும் செய்ததற்குப் பிரதிசெய்வதில் விருப்பமுள்ளவர்களுமான அவ்விருவரும் ஒருவரை ஒருவர் நெருங்கிப் பாணவர்ஷத்தினால் மறைத்தார்கள். ஒரு பெண்யானைநிமித்தமாகக் கோபங்கொண்ட காட்டிலுள்ள இரண்டு ஆண்யானைகளுக்கு யுத்தம்நேர்வதுபோல் யுத்தரங்கத்தில் கர்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஆச்சர்யகரமான பெரிய யுத்தம் நேர்ந்தது. பிறகு, மஹாவில்லாளியும் சத்துருக்களைத் தவிக்கச்செய்பவனுமான பார்த்தன் கர்ணனுடைய அளவுகடந்த சக்தியைக்கண்டு விரைபவனாகி அவனுடைய வில்லைக் கைப்பிடியில் அறுத்துப் பல்லங்களால் நான்கு குதிரைகளையும் யமலோகத்துக்கனுப்பி ஸாரதியின் தலையையும் உடலிலிருந்து அறுத்துத்தள்ளினான். பிறகு, பாண்டுநந்தனனான பார்த்தன், வில் அறுக்கப்பட்டவனும் குதிரைகள் கொல்லப்பட்டவனும் ஸாரதியை இழந்தவனுமான இந்தக் கர்ணனை நான்கு பாணங்களால் அடித்தான். நரசிரேஷ்டனான கர்ணன் பாணங்களால் பீடிக்கப்பட்டவனாகிக் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று விரைவாகக் கீழேகுதித்து முள்ளம்பன்றிபோல் அர்ஜுன பாணஸமூகங்களால் நிறைக்கப்பட்டவனாகி உயிரைவிரும்பிக்கொண்டு கிருபருடைய ரதத்தின்மீது விரைவாக ஏறினான். பரதரில் சிறந்தவரே! உம்மைச் சேர்ந்தவர்கள் கர்ணன் ஜயிக்கப்பட்டதைக் கண்டு (பயமடைந்து) அர்ஜுனனுடைய பாணங்களால் துரத்தியடிக்கப்பட்டவர்களாகிப் பத்துத் திக்குக்களிலும் ஓடினார்கள். அரசரே! ராஜாவான துர்யோதனன் ஓடுகின்ற அந்தப் போர்வீரர்களைப்பார்த்துத் திருப்பி, அப்பொழுது பின்வரும் வாக்கியத்தை உரைக்கலானான்.

'சூரர்களே! நீங்கள் ஓடவேண்டாம். க்ஷத்திரிய சிரேஷ்டர்களே! நில்லுங்கள். இதோ பார்த்தனைக் கொல்வதற்கு நானே யுத்தத்துக்குச் செல்லுகிறேன். நான் பாஞ்சாலர்களோடும் ஸோமகர்களோடுங்கூடின பார்த்தர்களைக் கொல்லப்போகிறேன். இப்பொழுது, காண்டீவத்தை

வில்லைக்கொண்ட அர்ஜுனனோடு போர்புரிகின்ற என்னுடைய பராக்கிரமத்தை யுகாந்தகாலத்தில் காலனுடைய பராக்கிரமத்தைப்போலப் பார்த்தார்கள் பார்க்கப்போகிறார்கள். இப்பொழுது, யுத்தகளத்தில் ஆயிரம் ஆயிரமாக விடப்படும் என்னுடைய அம்புக்கூட்டங்களை யுத்த வீரர்கள் விட்டிற்பூச்சிகளுடைய கூட்டங்களைப்போலப் பார்க்கப்போகிறார்கள். இப்பொழுது, யுத்தகளத்திலுள்ள வீரர்கள் கோடைக்காலத்தின் முடிவில் மேகத்தினுடைய வர்ஷதாரையைப்போல் வில்லாளியும் பாணங்களை விட்டுக்கொண்டிருக்கிறவனுமான என்னுடைய அம்பு மழையைப் பார்க்கப்போகிறார்கள். இப்பொழுது, படிந்தகணுக்களுள்ள பாணங்களால் யுத்தத்தில் பார்த்தனை வெல்வேன். சூரர்களே! யுத்தத்தில் நில்லுங்கள். பல்குனனிடத்திலிருந்து பயத்தை விட்டுவிடுங்கள். மகரங்களுக்கு இருப்பிடமான கடலானது கரையை அடைந்து எவ்வாறு மீறாதோ அவ்வாறே பல்குனன் என் வீர்யத்தை எதிர்த்து மீறப்போகிறதில்லை' என்று சொன்னான். பகைவர்களால் ஜயிப்பதற்கரியவனான துர்யோதனராஜன் கோபத்தினால் சிவந்த கண்களுள்ளவனாகி இவ்வாறு சொல்லிவிட்டுப் பெரிய சேனையினால் சூழப்பட்டவனாகிப் பல்குனனைநோக்கி எதிர்த்துச்சென்றான். அப்பொழுது, க்ருபர் பல்குனனைநோக்கிச் செல்லுகின்றவனும் மிக்க தோள்வலியுள்ளவனுமான அந்தத் துர்யோதனனைப்பார்த்து அஸ்வத்தாமாவிடம் சென்று, 'அஸ்வத்தாமாவே! மிக்க புஜபலமுள்ளவனும் (பகைவரைப்) பொறாதவனுமான அரசன் கோபமூண்டவனாகி விட்டிற்பூச்சியின் நிலைமையையடைந்து அர்ஜுனனோடு போர்புரியவிரும்புகிறான். ஆண்மையிற் சிறந்தவனான இந்தத் துரியோதனன் நாம் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பார்த்தனோடு போர்புரிந்து பிராணனை இழக்காதபடி அவனைத் தடுத்துவிடு. யுத்தத்தில் இப்பொழுது கௌரவராஜன் பல்குனனுடைய பாணங்களுக்கு எதிர்ப்படுமுன்னரே (அவனைத்) தடுத்துவிடு. சட்டை உரித்த பாம்புக்கு ஒப்பானவையும் கோரமாயிருப்பவையுமான பார்த்தனுடைய பாணங்களால் அரசன் சாம்பலாக்கப்படுமுன்னரே யுத்தத்தினின்று (அவனைத்) தடுக்கவேண்டும். கர்வத்தை அடக்குகிறவனே! நாமெல்லோரும் இருக்கும்பொழுது ராஜா ஸஹாயமற்றவனாகித் தானே நேரில் பார்த்தனைநோக்கி யுத்தத்துக்குச் செல்வதென்பது தகாததென்று எண்ணுகிறேன். புலியோடு சண்டைசெய்கின்ற யானைக்கு உயிர் தப்புவது அரிதாவதுபோலக் குந்திபுத்திரனான கிரீடியோடு யுத்தஞ்செய்கின்ற கௌரவராஜனுக்கு உயிர் தப்புவது அரிதென்று நான் எண்ணுகிறேன்' என்று சொன்னார்.

ஆயுதம்பிடித்த வீரர்களுள் உத்தமரான துரோணபுத்திரர், மூது லர் இவ்வாறு சொல்லியதைக்கேட்டு விரைவுடன் துர்யோதனனைநோக்கி, 'காந்தாரி புத்திர! கௌரவனே! உனக்கு எப்பொழுதும் ஹிதத்தை விரும்புகின்ற என்னை அலட்சியஞ்செய்துவிட்டு நான் உயிரோடிருக்குங் காலத்தில் நீ யுத்தஞ்செய்யச் செல்வதற்குத் தகுந்தவனல்லை. பார்த் தனை ஜயிக்கும் விஷயத்தில் உனக்குப் பரபரப்புவேண்டாம். ஸுயோ தன! நான் பார்த்தனை எதிர்த்துத்தடுப்பேன். நீ நில்' என்று சொல்ல, துர்யோதனன், 'பிராம்மணோத்தமரே! ஆசார்யர் பாண்டுபுத்திரர்களைத் தம் புத்திரர்களைப்போலப் பாதுகாக்கிறார். நீரும் அவர்கள்விஷயத்தில் எப்பொழுதும் பராக்காயிருக்கிறீர். என்னுடைய பாக்கியக்குறைவினு லோ தர்மராஜனுக்குப் பிரியத்தைச் செய்வதற்காகவோ திரௌபதிக்காக வோ யாதுகாரணத்தாலோ யான் அறியேன். உம்முடைய பராக்கிரமமா னது யுத்தத்தில் மந்தமாகிவிட்டது. ஆசைகொண்டவனான என்னை நிந்தி க்கவேண்டும். ஸுகத்துக்குத் தகுந்தவர்களும் சத்துருக்களால்ஜயிக்கப் படாதவர்களுமான உறவினர்களெல்லோரும் என்னிமித்தமாக அதிக மான துக்கத்தை அடைகிறார்கள். சஸ்திரத்தை யறிந்தவர்களுள் உத்த மரும் யுத்தத்தில் மஹேசுவரருக்கு ஒப்பானவரும் வல்லமையுடைய வருமான கௌதமீகுமாரரல்லாத வேறு எந்த வீரன்தான் சத்துருவை நாசஞ்செய்யாமலிருப்பான்? அஸ்வத்தாமாவே! கருணைபுரிவீராக. என்னுடைய பகைவர்களை நாசம்செய்வீராக. உம்முடைய அஸ்திரத் துக்கு எதிரில் தேவர்களும் அஸுரர்களும் நிற்கச் சக்தியற்றவர்கள். துரோணபுத்திரரே! பரிவாரங்களுடன்கூடின பாஞ்சாலர்களையும் ஸோமகர்களையும் நாசஞ்செய்யக்கடவீர். நாங்கள் உம்மாலேயே காப்பாற் றப்பட்டவர்களாகி மிகுதியுள்ளவர்களைக் கொல்லுவோம். பிராம்மணரே! இதோ ஸோமகர்களும் கீர்த்தியுள்ளவர்களான பாஞ்சாலர்களும் மிக்க கோபங்கொண்டு என்னுடைய படைகளில் காட்டுத்தீயைப்போல ஸஞ் சரிக்கின்றார்கள். மஹாபாஹுபலமுள்ள புருஷசிரேஷ்டரே! அந்தக் கேகயர்களையும் தடுப்பீராக. கிரீடியினால் காக்கப்பட்டவர்களான அந்தக் கேகயர்கள் (நம்முடைய சேனையை) மிகுதியின்றி நாசஞ்செய்யப்போகி றார்கள். பகைவர்களை அடக்குகிறவரே! அஸ்வத்தாவே! நீர் விரை வாகச் செல்வீராக. ஐயா! முந்தியோ பிந்தியோ இது நீர் செய்யவேண் டியகாரியம். மஹாபாகுபலமுள்ளவரே! பாஞ்சாலர்களுடைய வதத் தின் பொருட்டே நீர் தோன்றியிருக்கிறீர். நீர் முயற்சிசெய்து உலக மனைத்தையும் பாஞ்சாலர்களை இழந்ததாகச் செய்யப்போகிறீர். இவ்வித வார்த்தைகளை ஸித்தர்கள் (முன்பே) சொன்னார்கள். அது அவ்விதமே

ஆகப்போகிறது. புருஷசிரேஷ்டரே ! ஆதலால், பரிவாரங்களுடன் கூடின பாஞ்சாலர்களை நீர் நாசம்செய்வீராக. இந்திரனோடுகூடின தேவர்களும் உம்முடைய பாணங்களுக்கிலக்கான இடத்தில் நிற்கச் சக்தியற்றவர்களே. அவ்வாறிருக்க, பாஞ்சாலர்களுடன் கூடின பார்த்தர்கள் எவ்வாறு நிற்கப்போகிறார்கள் ? உமக்கு நான் ஸத்தியமாகச் சொல்லுகிறேன். வீரரே ! நான் உம்மிடம் உண்மையைச் சொல்லுகிறேன். ஸோமகர்களோடு கூடின பாண்டவர்கள் யுத்தத்தில் உம்மோடு பலத்தினால் எதிர்த்துப் போர்புரிவதற்குச் சக்தியற்றவர்களே. மஹாபாகுபலமுள்ளவரே ! போம், போம்; நமக்குக் காலவிளம்பம் ஆகக்கூடாது. இதோ நம்முடைய சேனையானது பார்த்தனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டு ஓடுகிறது. தோள்வலிமிக்கவரே ! கர்வத்தை நாசஞ்செய்கிறவரே ! உம்முடைய திவ்ய தேஜஸினால் பாண்டுபுத்திரர்களையும் பாஞ்சாலர்களையும் அடக்குவதில் நீர் ஸமர்த்தராயிருக்கிறீர்' என்றான்.

---

## நூற்றறுபத்தோராவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி)

(அஸ்வத்தாமாவுக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் யுத்தமும் அஸ்வத்தாமாவின் பராக்கிரமமும்.)

துர்யோதனன் இவ்வாறு சொல்லியதைக்கேட்டு, யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவரான அஸ்வத்தாமா, அசுரர்களை வதஞ்செய்யும் விஷயத்தில் இந்திரன் முயற்சிசெய்ததுபோலப் பகைவர்களைக் கொல்லும் விஷயத்தில் முயற்சியைச் செய்தார். மஹாபாகுபலமுள்ளவரான அவர் உம்முடைய புத்திரனைநோக்கி, 'புஜபலமுள்ளவனே ! கௌரவ ! நீ சொல்லுகிறபடி இது உண்மையே. எனக்கும் என் தகப்பனாருக்கும் பாண்டவர்கள் எப்போதும் பிரியர்களே. குருபுங்கவ ! அப்படியே நாங்களிருவரும் அவர்களுடைய பிரீதிக்குப் பாத்திரமானவர்கள். ஆனால், யுத்தத்தில் நாங்கள் அவ்வாறு இருக்கமாட்டோம் அப்பா! பயமற்றவர்களாகி நாங்கள் உயிரை இழக்கத்துணிந்து சக்தியுள்ளவரையில் யுத்தம் பண்ணுகிறோம். ராஜசிரேஷ்டனே ! நானும் கர்ணனும் சல்யனும் கிருபரும் க்ருதவர்மாவும் ஒரு நிமிஷத்தில் பாண்டவஸேனையை நாசம்செய்வோம். குருகுலோத்தம ! மஹாபாகுபலமுள்ளவனே ! நாங்கள் யுத்தத்தில் இல்லாவிட்டால் அந்தப் பாண்டவர்களும் கௌரவஸேனையை

அனைநிமிஷத்தில் நாசஞ்செய்வார்கள். பாரத! நாங்கள் சக்தியுள்ள வரையில் பாண்டவர்களை எதிர்த்துச் சண்டைசெய்கிறோம். அவர்களும் தங்கள் பலத்துக்குத் தக்கபடி எங்களை எதிர்த்து யுத்தஞ்செய்யப்போகிறார்கள். பலமானது பலத்தை எதிர்த்துத் தணியட்டும். பாண்டுபுத்திரர்கள் உயிரோடிருக்குங் காலத்தில் பாண்டவர்களுடைய ஸேனையானது (ஒருவராலும்) பலத்தால் ஜயிக்கமுடியாதது. அது உண்மையென்றும் உனக்கு நான் சொல்லுகிறேன். பாரத! ஆத்மார்த்தமாக யுத்தஞ்செய்கிறவர்களும் ஸமர்த்தர்களுமான அந்தப் பாண்டுநந்தனர்கள் ஏன் உன்னுடைய சேனைகளை நாசஞ்செய்யமாட்டார்கள்? கௌரவவேந்தனே! நீயோ மிக்க பேராசைகொண்டவன்; வஞ்சனையில் பண்டிதன்; எல்லாரிடத்திலும் ஸந்தேகமுள்ளவன்; கர்வங்கொண்டவன். அக்காரணத்தினால் எங்களைப்பற்றி ஸந்தேகிக்கிறாய். ராஜனே! நீ நிந்தைக்குரியவன்; பாவத்தில் மனம்பற்றினவன்; பாபபுருஷன். அற்பனே! பாவத்தினால் கவரப்பட்டவனான நீ அவ்விதமில்லாத எங்களை அவ்வாறாகவே ஸந்தேகிக்கிறாய். குருநந்தன! நானோ முயற்சியைக்கைக்கொண்டு உன்னிமித்தமாக உயிரை இழக்கத்துணிந்து உனக்காக இதோ யுத்தத்துக்குப் போகிறேன். யான் பகைவர்களோடு போர்புரிவேன்; சிறந்தவர்களை எல்லாம் ஜயிப்பேன். பகைவரையடிப்பவனே! உனக்குப் பிரியத்தைச்செய்வதின்பொருட்டு யுத்தத்தில் பாஞ்சாலர்களோடும் ஸோமகர்களோடும் கேகயர்களோடும் பாண்டவர்களோடும் போர்புரிவேன். இப்பொழுதுஎன் பாணங்களால் எரிக்கப்பட்டுப் பாஞ்சாலர்களும் அவ்வாறே ஸோமகர்களும்ஸிம்மத்தினால் பீடிக்கப்பட்ட பசுக்கள்போல்நான்குதிக்குக்களிலும் ஓடப்போகிறார்கள். இப்பொழுது, ஸோமகர்களோடு சேர்ந்த அரசனான தர்மநந்தனன் என்பராக்கிரமத்தைக்கண்டு உலகத்தை அஸ்வத்தாமமயமாக எண்ணப்போகிறான். ஸோமகர்களோடு யுத்தத்தில் கொல்லப்படும் பாஞ்சாலர்களைக்கண்டு தர்மநந்தனனான யுதிஷ்டிரன் ஒழிவை அடையப் போகிறான். பாரத! யுத்தத்தில் என்னை எதிர்த்துப்போர்புரிபவர்களை நான் கொல்வேன். வீர! என்னுடைய கையிலகப்பட்டவர்கள் விடுபடமாட்டார்கள்' என்று மறுமொழிகூறினார். மிக்கதைரியமுள்ளவரும் பலமுடையவர்களுள் சிறந்தவருமான அஸ்வத்தாமா உமமுடைய புத்திரனான துர்யோதனனைப்பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு உம்முடைய குமாரர்களுக்குப் பிரியத்தைத்தேட எண்ணி எல்லா வில்லாளிகளையும் பயமடையும்படி செய்துகொண்டு யுத்தத்துக்காகப் பகைவர்களை எதிர்த்தார். பிறகு, கௌதமீபுத்திரரான அஸ்வத்தாமா கேகயர்களையும் பாஞ்சாலர்களையும் பார்த்து, 'மஹாரதர்களே! நீங்களனைவ

ரும் இங்கு என்னுடைய சரீரத்தில் அடியுங்கள். அஸ்திரலாகவத்தைக் காண்பித்துக்கொண்டு ஸ்திரமாக இருந்து யுத்தம்செய்யுங்கள்' என்று கூறினர். மஹாராஜரே! இவ்விதமாகச்சொல்லியதைக்கேட்ட அவர்கள் எல்லோரும், மேகங்கள் ஜலத்தைப் பொழிவதுபோல் துரோணபுத்திரரின்மீது அம்புமழைகளைப் பொழிந்தார்கள். பிரபுவே! துரோணபுத்ரர் பாண்டுபுத்திரர்களுக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் எதிரில் அந்தப்பாணங்களை நாசம்பண்ணிப் பத்துவீரர்களைக்கொன்றார். யுத்தத்தில் அடிக்கப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்களும் ஸோமகர்களும் யுத்தத்தில் துரோணபுத்திரரை விட்டுவிட்டுப் பத்துத்திக்குக்களிலும் ஓடினர்கள். மஹாராஜரே! ஓடுகின்ற சூரர்களான பாஞ்சாலர்களையும் ஸோமகர்களையும் பார்த்து, திருஷ்டத்யும்னன் யுத்தத்தில் துரோணபுத்திரரை எதிர்த்து வந்தான். பிறகு, பொன்னலங்காரமுள்ளவர்களும் நீருண்டமேகம் போலக்கர்ஜிக்கின்றவர்களும் பின்வாங்காதவர்களும் சூரர்களுமான அனேக ரதிகர்களால் சூழப்பட்டவனும் மஹாரதனும் பாஞ்சாலராஜகுமாரனுமான திருஷ்டத்யும்னன், தள்ளப்பட்டிருக்கிற யுத்தவீரர்களைக் கண்டு துரோணபுத்திரரைநோக்கி, 'ஆசார்யபுத்திரரே! உமக்கு மங்களம் உண்டாகுக. மற்றவர்களைக் கொல்வதினால் உமக்கு என்னபயன்? யுத்தத்தில் நீர் சூரராயிருந்தால் என்னுடன் போர்புரிவதற்கு வருவீராக. யான் உம்மைக்கொல்வேன். இப்பொழுது என் முன்னிலையில் நில்லும்' என்று சொன்னான். பரதரிற் சிறந்தவரே! பிறகு, பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் அந்த ஆசார்யபுத்திரரைக் கூர்மையுள்ளவைகளும் மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றவைகளுமான அம்புகளால் அடித்தான். வரிசை வரிசையாகத் தொடுக்கப்பட்டவைகளும் பொற்புங்கமுள்ளவைகளும் முனைபளபளப்பானவைகளும் எல்லா வீரர்களுடைய சரீரங்களையும் பிளக்கின்றவைகளுமான அந்த அம்புகள், தேனைவிரும்பிக்கொண்டு தடையற்று வெளிப்பட்டுவருகின்ற வண்டுகள் பூத்தமரத்தை வந்தடைவதுபோல் அஸ்வத்தாமாவின் தேகத்தில் வந்து பிரவேசித்தன. (அம்புகளால்) மிக அடிக்கப்பட்டவரும் காலால் மிதிக்கப்பட்ட ஸர்ப்பம்போல மிக்க கோபங்கொண்டவரும் கௌரவமுள்ளவருமான துரோணகுமாரர் மனம் கலங்காமல் பாணங்களைக்கையில் எடுத்துக்கொண்டு (திருஷ்டத்யும்னனைப்பார்த்து,) 'திருஷ்டத்யும்ன! நான் உன்னைக் கூர்மையுள்ள பாணங்களால் யமலோகத்துக்கு அனுப்பும்வரையில் உறுதியாயிருந்துகொண்டு ஒரு முகூர்த்தகாலம் எதிர்பார்த்திரு' என்று சொன்னார் சத்துருவீரர்களைக் கொல்லுகிற அஸ்வத்தாமா, பார்ஷதனைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டு, 'பிறகு, கைத்

தேர்ச்சியுள்ளவராதலால் நான்குபக்கங்களிலும் பாணக்கூட்டங்களால் மூடினார். யுத்தத்தில் கெட்ட மதமுடையவனான அந்தப் பாஞ்சாலராஜ குமாரன் துரோணபுத்திரரால் யுத்தத்தில் பீடிக்கப்பட்டு அப்பொழுது அவரைப்பார்த்து, 'மிக்க கெட்டபுத்தியுள்ளவரே! பிராம்மணரே! என்னுடைய பிரதிஜ்ஞையையும் அவ்வாறே என்னுடைய பிறப்பையும் நீர் அறியவில்லை. துரோணரைக் கொன்றுவிட்டல்லவோ உம்மை நான் கொல்லவேண்டும்? அந்தக் காரணத்தினால் துரோணர் உயிரோடிருக்குங்காலத்தில், யுத்தத்தில் உம்மை நான்கொல்லவில்லை. கெட்டபுத்தியுள்ளவரே! இந்த இரவு விடிவதற்குள்ளாகவே யுத்தத்தில் இப்பொழுது உம்முடைய பிதாவைக்கொன்று பிறகு உம்மையும் யமலோகத்துக்கு அனுப்பப்போகிறேன். இஃது என்மனத்தில் இருக்கிறது. உமக்குப் பார்த்தர்களிடமுள்ள பகைமையையும் கௌரவர்களிடமுள்ள பக்தியையும் உறுதியாயிருந்துகொண்டு காண்பிப்பீராக. நீர் உயிரோடு என்னிடத்திலிருந்து விடுபடமாட்டீர். புருஷோத்தமரான உம்மைப்போல் பிராம்மணர்தொழிலைவிட்டு க்ஷத்திரியர்தொழிலில் பற்றுள்ளவனாக இருக்கும் பிராம்மணன் எல்லா ஜனங்களாலும் கொல்லப்படத்தக்கவன்' என்னும் சொற்களால் அதட்டினான். இவ்வாறு த்ருஷ்டத்யும்னனால் கடுஞ்சொற் சொல்லப்பட்ட பிராம்மணோத்தமர் உக்கிரமான கோபத்தை அடைந்து, 'நில், நில்' என்று சொன்னார். அந்தத் துரோணபுத்ரர் எரிப்பவர்போல் இரண்டு கண்களாலும் பார்ஷதனைப்பார்த்தார். ஸர்ப்பம்போலச் சீறிக்கொண்டு அவனை அம்புகளாலும் மூடினார். ராஜசிரேஷ்டரே! எல்லாப் பாஞ்சால ஸேனைகளாலும் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்டவனும் தோள்வலியமைந்தவனும் ரதிகர்களுள் உத்தமனுமான அந்த த்ருஷ்டத்யும்னன் யுத்தத்தில் அஸ்வத்தாமாவினால் மூடப்பட்டும் தன்வல்லமையையே பற்றினவனாகி நடுங்காமலிருந்தான். அஸ்வத்தாமாவின்மீது பலவிதமான பாணங்களையும் பிரயோகித்தான். பாணஸமூகங்களால் ஒருவரை யொருவர் பீடிக்கின்றவர்களும் கோபங்கொண்டவர்களும் பெரிய வில்லைக் கையில்கொண்டவர்களும் நான்குபக்கங்களிலும் அம்பு மழைகளைப் பொழிகின்றவர்களுமான அவ்விருவர்களும் பிராணனைப்பந்தயமாகவைத்து ஆடப்படும் போராகிற சூதாட்டத்தில் மறுபடியும் நன்றாக எதிர்த்தார்கள். ஸித்தர்களும் சாரணர்களும் வந்திகளும், கோரமும் பயங்கரமுமான அஸ்வத்தாமா த்ருஷ்டத்யும்னன் இவ்விருவர்களுடைய யுத்தத்தையும் பார்த்து மிகப்புகழ்ந்தார்கள். அவ்விருவர்களும் பாணஸமூகங்களால் ஆகாசத்தையும் திக்குக்களையும் நிரப்பிக்கொண்டும் அம்புகளால் பேரிருளை உண்டுபண்ணிக்கொண்டும் கண்ணுக்குப் புலப்படா

தவர்களாக நன்றாக யுத்தம் செய்தார்கள். நர்த்தனஞ் செய்கின்றவர்கள் போன்றவர்களும் வட்டவடிவமாகச் செய்யப்பட்ட வில்லுள்ளவர்களும் ஒருவரையொருவர் கொல்வதில் முயற்சிசெய்கின்றவர்களும் எல்லாப் பிராணிகளுக்கும் பயத்தை உண்டுபண்ணுகின்றவர்களும் மிக்க புஜ பலமுள்ளவர்களுமான அவ்விருவரும் ஆயிரக்கணக்கான யுத்தவீரர்க ளாலே யுத்தத்தில் புகழப்பெற்று விசித்திரமாயும் விரைவாயும் அழகா யும் போர்புரிந்தார்கள். அரண்யத்தில் இரண்டுகாட்டுயானைகள்சண்டை இடுவதுபோல் மிக்க தைர்யத்துடன் போர்புரிகின்ற அவ்விருவரையும் யுத்தத்தில்கண்டு இருதிறத்துச்சேனைகளிலும் மிகுதியான ஸந்தோஷ முண்டாயிற்று. நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் ஸிம்மநாத த்வனிகளும் தோன்றின. சேனையிலுள்ளவர்கள் சங்கங்களையும்ஊதினார் கள். நான்குவித வாத்தியங்களும் வாசிக்கப்பட்டன. அப்பொழுது, பய முள்ளவர்களுக்குப் பயத்தை விருத்திபண்ணுகிறதான நெருங்கிய அந்த யுத்தத்தில் ஒரு முகூர்த்தகாலம் ஸமமான யுத்தம் நடந்தது. மகாராஜரே! பிறகு, துரோணகுமாரர் மகாபலவானான பார்ஷதனுடைய த்வஜத்தையும் வில்லையும் குடையையும் இரண்டு பக்கங்களிலிருந்த இரண்டு ஸாரதிகளையும் நான்குகுதிரைகளையும் ஸாரதியையும் அடித் து யுத்தகளத்தில் பார்ஷதனை எதிர்த்து ஓடிவந்தார். மனத்தினால்எண் ணமுடியாத பலமுள்ளவரான த்ரௌணியானவர் கணுக்கள் பதிவா யுள்ள பாணங்களால் நூறு நூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் பாஞ்சால ர்களை ஓடும்படி அடித்தார். ஓ! பரதரிற் சிறந்தவரே! பிறகு, பாண் டவஸேனையானது யுத்தத்தில் இந்திரன்போன்ற அஸ்வத்தாமாவினு டைய பெரிதானகார்யத்தைக்கண்டு மனவருத்தமடைந்தது. மஹாரத ரான துரோணபுத்திரர் நூறுபாணங்களால் நூறுபாஞ்சாலர்களையும் கூர்மையுள்ள மூன்று பாணங்களால் மூன்று மஹாரதர்களையும்கொன்று த்ருஷ்டத்யும்னனும் அர்ஜுனனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழு தே யுத்தத்தில் முயற்சி செய்பவர்களான மற்றப் பாஞ்சாலர்களையும் பெரும்பான்மையாக நாசஞ்செய்தார். யுத்தத்தில் த்ரௌணியினால் கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்கள் ஸ்ருஞ்சயர்களுடன் ரதங்க ளும் த்வஜங்களும் சிதறினவர்களாகி அஸ்வத்தாமாவை விட்டுவிட்டு ஓடினார்கள். மஹாரதரான அந்தத் துரோணபுத்திரர், யுத்தத்தில் சத்து ருக்களை ஜயித்துக் கோடைக்காலத்தின்முடிவில் மேகம்போலப் பெரிய ஸிம்மநாதத்தைச் செய்தார். அவர், அக்நியானது யுகாந்தத்தில் எல்லாப் பிராணிகளையும் சாம்பலாக்கிவிட்டுப் பிரகாசிப்பதுபோல் அனேக சத் துருக்களைக்கொன்று விளங்கினார். பிரதாபசாலியான துரோணபுத்திரர்

யுத்தத்தில் ஆயிரக்கணக்கான சத்துருக்களுடைய கூட்டங்களை ஜயித்துக் கௌரவர்களால் யுத்தத்தில் நன்றாகப் பூஜிக்கப்படுகின்றவராகி, பகைவர்களுடைய கூட்டங்களைக் கொன்று இந்திரன் பிரகாசித்தது போல் விளங்கினார்.

---

## நூற்றறுபத்திரண்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தத்தை வர்ணித்தது.)

மஹாராஜரே! பிறகு, பாண்டுகுமாரர்களான யுதிஷ்டிரரும் பீமஸேனனும் துரோணபுத்திரரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, துர்யோதனராஜன் பாரத்வாஜரால் நன்கு சூழ்ந்து காக்கப்பட்டவனாகி யுத்தத்தில் பாண்டவர்களை எதிர்த்தான். மஹாராஜரே! பிறகு, கோரரூபமுள்ளதும் பயமுள்ளவர்களுக்குப் பயத்தை விருத்தி பண்ணுகின்றதுமான யுத்தம் நடந்தது. கோபங்கொண்டவனான விருகோதரன் கூட்டமான அம்பஷ்டர்களையும் மாலவர்களையும் வங்கர்களையும் சிபிகளையும் திரிகர்த்தர்களையும் மிருத்யுலோகத்துக்கு அனுப்பினான். அவன் யுத்தத்தில் அடங்காத மதமுடையவர்களான அபீஷாஹர்கள் சூரஸேனர்கள் ஆகிய க்ஷத்திரியர்களை அறுத்துப் பூமியை ரத்தச்சேறுள்ளதாகச் செய்தான். அரசரே! கிரீடியானவன் யௌதேயர்களையும் மலைநாட்டு வீரர்களையும் மத்ரகர்களையும் மாலவர்களையும் கூர்மையுள்ள அம்புகளால் மிருத்யுலோகத்துக்கு அனுப்பினான். அதிவேகமாகச் செல்லுகின்ற நாராசங்களால் நன்றாக அடிக்கப்பட்ட இரண்டு தந்தங்களுள்ள யானைகள் இரண்டு கொடுமுடிகளுடன்கூடிய மலைகள்போலப் பூமியில் விழுந்தன. அறுக்கப்பட்டு இங்கும் அங்குமாகப் புரளுகின்ற யானைகளின் துதிக்கைகளால் வியாபிக்கப்பட்ட ரணகளமானது நெளிகின்றஸர்ப்பங்களால் சூழப்பட்டதுபோல் விளங்கியது. புரட்டித்தள்ளப்பட்டவையும் ஸ்வர்ணத்தினால் விசித்திரமாயிருப்பவையுமான அரசர்களுடைய குடைகளால், யுத்தபூமியானது, யுகாந்தகாலத்தில் சூரியன் சந்திரன் முதலிய சோதிமண்டலங்களால் நிரம்பிய ஆகாயம்போல் விளங்கியது. சிவப்புக்குதிரைகளையுடைய் துரோணருடைய ரதத்தைநோக்கி, 'கொல்லுங்கள்; அடியுங்கள்; பயமற்றவர்களாக அடியுங்கள்; நன்றாக அறுமின்கள்' என்கிற இடைவிடாதசப்தம் தோன்றியது. மிகுந்த கோபங்கொண்டதுரோணரோபெருங்

காற்றானது மேகங்களை நாசஞ்செய்வதுபோல் ஒருவராலும் தாண்ட முடியாதவராயிருந்துகொண்டு யுத்தத்தில் வாயுவைத் தேவதையாகக் கொண்ட அஸ்திரத்தினால் அந்தச் சத்துருக்களை நாசஞ்செய்தார். துரோணரால் கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்கள் பீமஸேனனும் மகாத்மாவான தர்மபுத்திரரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பயத்தினால் மிகஓடினார்கள். பிறகு, அர்ஜுனனும் பீமனும் பெரிதான தேர்க்கூட்டத்தோடு பெரும்படையைச் சேர்த்துக்கொண்டு விரைவாக யுத்தத்துக்குத் திரும்பினார்கள். அவர்கள் பாரத்வாஜர்மீது தென்பக்கத்திலும் வடபக்கத்திலுமிருந்து இரண்டுபெரிய அம்புவெள்ளத்தால் வர்ஷித்தார்கள். மஹாராஜரே! அவ்வாறு அவ்விருவரையும் மஹா பராக்கிரமமுள்ளவர்களான ஸ்ருஞ்சயர்களும் பாஞ்சாலர்களும், மச்சர்களோடும் ஸோமகர்களோடும் சேர்ந்து அனுசரித்துச்சென்றார்கள். மன்னரே! அவ்வாறாகவே, பகைவர்களை அடிக்கும் திறமையுள்ளவர்களும் மகாரதிகர்களுமான உமது புத்திரனைச்சேர்ந்த வீரர்கள் துரோணருடைய ரதத்தைநோக்கிப் பெரிதான சேனையுடன் சேர்ந்து சென்றார்கள். பிறகு, கிரீடியினால் கொல்லப்படுகின்ற இந்தப் பாரதசேனையானது இருளாலும் தூக்கத்தாலும் மிகுந்த துன்பத்தை அடைவிக்கப்பட்டது. மஹாராஜரே! துரோணராலும் நேரே உம்முடைய புத்திரனாலும் தடுக்கப்பட்டும், அந்த யுத்தவீரர்கள் அப்பொழுது திரும்ப இயலாதவராயினர். இருளால் உலகம் மூடப்பட்டிருக்கும்பொழுது பாண்டுபுத்திரனுடைய அம்புகளால் பிளக்கப்படுகின்ற அந்தப் பெரிய சேனையானது புறங்காட்டி நான்குபக்கங்களிலும் ஓடத்தலைப்பட்டது. மஹாராஜரே! அந்த யுத்தபூமியில் சில அரசர்கள் பயமடைந்தவர்களாகி நூற்றுக்கணக்காக வாகனங்களை விட்டுவிட்டு நான்குபக்கங்களிலும் ஓடினார்கள்.

---

## நூற்றறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி ஸோமதத்தனைக் கொன்றதும், துரோணரும் யுதிஷ்டிரரும் போர்புரிந்ததும்.)

பெரிதான வில்லை அசைக்கின்ற ஸோமதத்தனைப்பார்த்து ஸாத்யகி தன் ஸாரதியைநோக்கி, 'ஸோமதத்தனிடத்திற்கு என்னைக் கொண்டுபோ. ஸூத! மஹாபலசாலியும் சத்துருவுமான ஸோமதத்தனை

யுத்தத்திற் கொல்லாமல் யுத்தத்தினின்று நான் திரும்பப்போகிற தில்லை. என்னுடைய இந்த வசனம் உண்மையே' என்று சொன்னான். பிறகு, ஸாரதியானவன் மனத்தின்வேகம்போன்ற வேகமுள்ளவைக ளும் சங்குபோன்ற வெண்மைநிறமுள்ளவைகளும் யுத்தகளத்தில் எல் லாச் சப்தங்களையும் தாண்டிச செல்லுபவைகளுமான அந்தக் குதிரை களை நன்றாக ஓட்டினான். வேந்தரே! முற்காலத்தில் தைத்யர்களை வதஞ்செய்வதில் முயற்சியுள்ள இந்திரனைக் குதிரைகள் தாங்கியது போல் மனமும் காற்றும்போன்ற வேகமுள்ள அக்குதிரைகள் யுயுதா னனைப் பொறுத்தன. ரணகளத்தில் அந்த ஸாத்வதன் பரபரப்புடன் வருகிறதைக்கண்டு மஹாபாகுபலமுள்ள ஸோமதத்தன் கலங்காதவ னாகித் திரும்பினான். அவன் மழையைப்பொழிகின்ற மேகம்போல் அம்புமழைகளைப் பொழிந்துகொண்டு, மேகமானது சூரியனை மறைப் பதுபோல ஸாத்யகியை மூடினான். பரதசிரேஷ்டரே! ஸாத்யகியும் கலங்காமலேயிருந்துகொண்டு யுத்தத்தில் குருபுங்கவனான ஸோமதத் தனை நான்குபக்கங்களிலும் பாணஸமூஹங்களால் மூடினான். ஸோம தத்தனோ அந்த யுயுதானனை அறுபதுபாணங்களால் மார்பிலடித்தான். அரசரே! ஸாத்யகியும் கூர்மையுள்ள பாணங்களால் அவனை அடித் தான். நரசிரேஷ்டர்களான அவ்விருவரும் பாணங்களால் (அன்யோன் யம்) அடித்துக்கொண்டு வஸந்தகாலத்தில் பூத்திருக்கின்ற நல்ல புஷ் பங்களுள்ள இரண்டுபலாசவிருக்ஷங்கள்போல் விளங்கினார்கள். கௌரவர் களுக்கும் விருஷ்ணிகளுக்கும் கீர்த்தியை உண்டுபண்ணுகிறவர்களான அவ்விருவரும் ரக்தத்தினால் எல்லா உறுப்புக்களும் நனைக்கப்பட்டவர்க ளாகிக் கண்களால் ஒருவரை ஒருவர் எரிப்பவர்போலப்பார்த்துக்கொண் டார்கள். பகைவரை அடிப்பவர்களான அவ்விருவரும் பயங்கரமான தோற்றத்துடன ரதங்களுடைய மண்டலாகாரமான கதிகளில் ஸஞ் சரித்துக்கொண்டு மழைபொழிகின்ற இரண்டு மேகங்கள்போல அம்பு மழைகளைப் பொழிந்துகொண்டிருந்தார்கள். ராஜேந்திரரே! பாணங்க ளால் உடல்கள் மிகப் பிளக்கப்பட்டவர்களும் எல்லா அவயவங்களி லும் அறுக்கப்பட்டவர்களும் அம்புகளால் துளைக்கப்பட்டவர்களு மான அவ்விருவர்களும் முள்ளம்பன்றிகள்போல் காணப்பட்டார்கள். அரசரே! பொன்கட்டிய புங்கமுள்ள அம்புகளால் நான்குபக்கங்களி லும் நிறைக்கப்பட்டவர்களான அவ்விருவரும வர்ஷாகாலத்தில் மின் மினிப்பூச்சிகளால் சூழப்பட்ட இரண்டு மரங்கள்போல் விளங்கினார் கள். அம்புகளால் நன்குவிளக்கப்பட்ட எல்லா அங்கங்களுடனும் கூடியவர்களும் மஹாரதர்களுமான அவ்விருவரும் கோபம்கொண்ட

வர்களாகிக் கொள்ளிக்கட்டைகளால் நான்குபக்கத்திலும் சூழப்பட்ட இரண்டு யானைகள்போல் யுத்தத்தில் காணப்பட்டார்கள். மஹாராஜரே! பிறகு, மகாரதனான ஸோமதத்தன் யுத்தத்தில் யுயுதானனுடைய பெரிய வில்லை ஓர் அர்த்தசந்திரபாணத்தால் அறுத்துப் பிறகு இருபத்தைந்து பாணங்களால் அவனையும் அடித்தான். விரைய வேண்டியஸமயத்தில் விரைந்து மறுபடியும் பத்துப்பாணங்களாலும் அடித்தான். பிறகு, ஸாத்யகி அதிக வேகமுள்ளதான வேறு வில்லை எடுத்து ஐந்து பாணங்களைப் பிரயோகித்து ஸோமதத்தனை விரைவாக அடித்தான். மன்னரே! பிறகு, ஸாத்யகி உரக்கச் சிரித்துக்கொண்டு வேறு ஒரு பல்லத்தால் பாஹ்லீகனுடைய பொன்மயமான கொடியையும் அறுத்தான். ஸோமதத்தனும் கொடி தள்ளப்பட்டதைக் கண்டும் மனங்கலங்காமலே சைனேயனை இருபத்தைந்து பாணங்களால் நிரப்பினான். ஸாத்வதனும் யுத்தத்தில் கோபங்கொண்டு வில்லாளியான ஸோமதத்தனுடைய வில்லைக் கூர்மையுள்ள பல்லத்தினாலும் க்ஷுரப்ரத்தினாலும் அறுத்தான். அரசரே! பிறகு, தந்தங்கள் ஒடிந்த யானைபோன்ற அந்த ஸோமதத்தனுடையதேகத்தில் பொற்புங்கமுள்ளவைகளும் படிந்த கணுக்களுள்ளவைகளுமான நூறு பாணங்களால் பலவாறு நிறைத்தான். பிறகு, மஹாரதனும் மஹாபலசாலியுமான ஸோமதத்தன் வேறுவில்லைக் கையில் எடுத்து அம்புமழையினால் ஸாத்யகியைை மூடினான். ஸாத்யகியும் அதிக கோபங்கொண்டு யுத்தத்தில் ஸோமதத்தனை அடித்தான். ஸோமதத்தனும் ஸாத்யகியைப் பாணஸமூகத்தினால் பீடித்தான். பீமன் ஸாத்வதனுக்காகப் பத்துப்பாணங்களால் பாஹ்லீகனுடைய குமாரனான ஸோமதத்தனை அடித்தான். ஸோமதத்தனும் மனங்கலங்காதவனாகிக் கூர்மையுள்ள அம்புகளால் பீமனை அடித்தான். பிறகு, பீமஸேனன் ஸாத்வதனுக்காகப் புதிதும் உறுதியுள்ளதும் கோரமுமான பரிகாயுதத்தை ஸோமதத்தன்மார்பில் பிரயோகித்தான். வேகத்தோடு வருகின்றதும் பயங்கரமானகாட்சியுள்ளதுமான அந்தப் பரிகாயுதத்தைக் கௌரவன் சிரித்துக்கொண்டே யுத்தத்தில் இரண்டாகவெட்டினான் இரண்டாக அறுக்கப்பட்டதும் இரும்பினாற்செய்ததும் பெரிதுமான அந்தப் பரிகாயுதமானது வஜ்ராயுதத்தினால் பிளக்கப்பட்ட மலையினுடைய பெரியசிகரம்போலக் கீழேவிழுந்தது. அரசரே! பிறகு, ஸாத்யகியானவன், யுத்தத்தில் ஸோமதத்தனுடைய வில்லை ஒரு பல்லத்தினாலும கையுறையை ஐந்து பாணங்களாலும் அறுத்தான். ஓ! பாரதரே! பிறகு, சிறந்த குதிரைகளையும் நான்கு பாணங்களால் பிரேதராஜனுடைய ஸமீபத்துக்கு அனுப்பி

ஞன், புருஷஶ்ரேஷ்டனான சினிபுங்கவன் நன்றாகச் சிரித்துக்கொண்டே கணுக்கள்பதிவாயுள்ள பல்லத்தினால் ஸாரதியினுடையதலையை அவன் சரீரத்தினின்று கொய்தான். அரசரே! பிறகு, ஸாத்வதன் (ஸோமதத்தனை லட்சியம்வைத்து) மஹாகோரமானதும் ஜ்வலிக்கின்ற அக்நிபோன்றதும் புங்கத்திற் பொன்கட்டியதும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டதுமான ஓரம்பைப் பிரயோகித்தான். பாரதரே! பலசாலியான சைனேயனால் விடப்பட்டதும் கோரமானதும் சிறந்ததுமான அந்த அம்பானது அந்த ஸோமதத்தனுடைய மார்பில் விரைவாக விழுந்தது. மஹாராஜரே! ஸாத்வதனால் அதிகமாக அடிக்கப்பட்டவனும் மஹாரதனும் மஹா பாகுபலமுள்ளவனுமான அந்த ஸோமதத்தன் கீழேவிழுந்தான்; உயிரையும் இழந்தான். அந்த ரணகளத்தில் அந்த ஸோமதத்தன் கொல்லப்பட்டதைக்கண்டு மஹாரதர்கள் பெரிய அம்புமழையினால் யுயுதானனை எதிர்த்து அருகில் நெருங்கினார்கள்.

மஹாராஜரே! யுயுதானன் அம்புகளால் மூடப்படுவதைக் கண்டு யுதிஷ்டிரரும் மற்றப் பாண்டவர்களும் எல்லா ப்ரபத்ரகர்களும் பெரிய ஸேனையுடன் துரோணருடைய ஸேனையின் அருகில் ஓடிவந்தார்கள். பிறகு, யுதிஷ்டிரர் கோபம்கொண்டு பாரத்வாஜர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உம்மைச்சேர்ந்தவர்களுடைய பெரிய சேனையைப் பாணங்களால் துரத்தியடித்தார். யுதிஷ்டிரர் ஸைன்யங்களைத் துரத்தியடிப்பதைப் பார்த்துத் துரோணர் கோபத்தினால் கண்கள் மிகச் சிவந்தவராகி யுதிஷ்டிரரை வேகத்துடன் எதிர்த்துச்சென்றார். பிறகு, அந்தத் துரோணர் அதிகக் கூர்மையுள்ள ஏழு அம்புகளால் யுதிஷ்டிரரை அடித்தார். யுதிஷ்டிரரும் மிக்ககோபங்கொண்டு ஐந்துபாணங்களால் (அவரை) திருப்பியடித்தனர். நன்றாக அடிக்கப்பட்ட மிக்க பாகுபலமுள்ள துரோணர் இரண்டு கடைவாய்களையும் நக்கிக்கொண்டு யுதிஷ்டிருடையகொடியையும் வில்லையும் அறுத்தார். வில் அறுக்கபபட்டவரும் ராஜசிரேஷ்டருமான யுதிஷ்டிரரும் விரையவேண்டியகாலத்தில் விரைபவராகி வேகத்துடன் யுத்தரங்கத்தில் திடமான வேறொரு வில்லைக் கையில் எடுத்தார், பிறகு, யுதிஷ்டிரராஜர் ஆயிரம் பாணங்களால் குதிரைகளோடும் ஸாரதியோடும் த்வஜத்தோடும் ரதத்தோடும் கூடின துரோணரை அடித்தார். அது ஆச்சர்யமாயிருந்தது. பரதஶ்ரேஷ்டரே! பிறகு, பாணங்களுடைய வீழ்ச்சியால் நன்றாகப் பீடிக்கப்பட்ட துரோணர் ஒருமுகூர்த்தகாலம் துன்பத்தை அடைந்து ரதத்தின் நடுவில் உட்கார்ந்தார். பிராம்மணோத்தமரான அவர், பிறகு ஒரு முகூர்த்தகாலத்திற்குள் பிரஜ்ஞையை அடைந்து மிக்க கோபாவேசங்

கொண்டவராகி வாயு அஸ்திரத்தைப் பிரயோகித்தார். பாரதரே! வீர் யமுள்ள யுதிஷ்டிரர் யுத்தத்தில் கலங்காமல் அந்த வாயவ்யாஸ்திரத்தை வாயவ்யாஸ்திரத்தினாலேயே அசையாமலிருக்கச்செய்தார். யுதிஷ்டிரர் பிராம்மணரான துரோணருடைய நீண்ட வில்லையும் அறுத்தார். க்ஷத் திரியர்களைத் துகைப்பவரான துரோணர் பிறகு வேறொரு வில்லைக் கையில் எடுத்தார். குருபுங்கவரான யுதிஷ்டிரர் அதனையும் கூர்மை யுள்ள பல்லங்களால் அறுத்தார். பிறகு, வாஸுதேவர் குந்திபுத்திர ரான யுதிஷ்டிரரைப்பார்த்து, 'யுதிஷ்டிரரே! மஹாபாகுபலமுள்ள வரே! யான்சொல்வதைக் கேளும். பரதசிரேஷ்டரே! நீர் துரோண ருடன் யுத்தஞ்செய்வதை நிறுத்திவிடும். எப்பொழுதும் உம்மைப் பிடிக்கும்விஷயத்தில் யுத்தரங்கத்தில் இவர் முயற்சிசெய்துகொண் டிருக்கிறார். உமக்கு இவருடன் யுத்தமானது தகுந்ததென்று யான் எண்ணவில்லை. இவரைக் கொல்வதற்கென்றே ஸ்ருஷ்டிக்கப்பட்ட வனே இவரைக் கொல்வான். ஆதலால், ஆசார்யரை விட்டுவிட்டு ராஜா வான துரியோதனனிருக்குமிடத்திற்கு நீர் செல்லவேண்டும். அரசன் அரசனோடன்றோ போர்புரியவேண்டும்? அரசனல்லாதவனோடு போர் புரிவதென்பது ஒருவராலும் விரும்பப்படுவதில்லை. கௌந்தேயரே! ஸஹாயனான என்னுடன்கூடின தனஞ்சயனும் ரதிகசிரேஷ்டனான பீம னும் கௌரவர்களோடு போர்புரியும்பொழுதே, நீர் யானைகளாலும் குதி ரைகளாலும் ரதங்களாலும் சூழப்பட்டவராகி அங்குபோய்ச் சேரும்' என்று சொன்னார். தர்மராஜாவான யுதிஷ்டிரர் வாஸுதேவருடைய வார்த்தையைக்கேட்டு ஒருமுகூர்த்தகாலம் ஆலோசித்து, பிறகு, பகை வரைக் கொல்பவனான பீமன் உம்மைச்சேர்ந்தவர்களான யுத்தவீரர் களை அழித்துக்கொண்டு வாயைத்திறந்திருக்கும் அந்தகன்போல் விளங்குமிடத்துக்கு விரைவாகச் சென்றார். அவர் பெரிதான ரதத்தின் ஒலியினால் பூமியை எதிரொலியடையும்படி செய்துகொண்டும் முது வேனிற்காலத்தின்முடிவில் மேகம்போல் (தம் ஸிம்மநாதத்தினால்) பத்துத் திக்குக்களையும் முழங்கச்செய்துகொண்டும் சத்துருக்களை நாசஞ்செய்கின்ற பீமனுடைய பின்பக்கத்தைப் பற்றிக்கொண்டார். ஐயா! துரோணரும் இரவின் தொடக்கத்தில் நாண் கையில்உரையும் ஒலியினால் உம்முடைய ஸைன்யங்களை ஒலியுள்ளவைகளாகச் செய்து கொண்டு பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் நாசஞ்செய்தார்.

---

## நூற்றறுபத்துநான்காவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(இரண்டு சேனைகளிலும் விளக்குகள் ஏற்றியது.)

அரசரே! கோரமானதும் பயத்தை உண்டுபண்ணுகிறதுமான யுத்தம்நேர்ந்து, உலகமானது இருளாலும் புழுதியினாலும் மூடப்பட்டிருக்கவே, யுத்தத்தில் நிற்கின்ற யுத்தவீரர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்ள முடியவில்லை. அநுமானத்தாலும் குறிப்புக்களாலும் மனிதர்கள் யானைகள் குதிரைகள் இவைகளுடைய நாசத்துடன் கூடியதும் மயிர்பொடிக்கச் செய்வதுமான அவ்விதயுத்தம் விருத்தியடைந்தது. அரசருள் மிகச்சிறந்தவரே! வீரர்களான துரோணர், கர்ணன், கிருபர் இவர்களும் பீமன், திருஷ்டத்யும்னன், ஸாத்யகி இவர்களும் ஒருபக்ஷத்தார் மற்றொருபக்ஷத்தாருடைய சேனைகளைக் குழப்பினார்கள். அந்த மஹாரதர்களால் நான்குபக்கங்களிலும் வதம்செய்யப்படுகின்ற சேனைகள் இருளால் மூடப்பட்ட அந்தயுத்தகளத்தில் நான்கு பக்கங்களிலும் ஓடின. மஹாராஜரே! எல்லாப்பக்கங்களிலும் ஓடுகின்றவர்களும மனநிலைதவறினவர்களுமான அந்த யுத்தவீரர்கள் யுத்தரங்கத்தில் ஓடும்பொழுதும் கொல்லப்பட்டார்கள். உமதுபுத்திரனுடைய ஆலோசனையினால் நடந்தயுத்தத்தில் மிகநெருங்கின இருளில் ஆயிரம் மஹாரதர்கள் பகுத்தறிய முடியாதவர்களாகி ஒருவரையொருவர் கொன்றுகொண்டார்கள். பாரதரே! பிறகு, எல்லாச்சேனைகளும் சேனைக்காவலாளர்களும், அநதயுத்தரங்கமானது இருளால் மூடப்பட்டபொழுது, மதிமயக்கமுற்றார்கள்" என்றுசொன்னான். திருதராஷ்டிரன், "ஸஞ்சய! குழப்பப்படுகின்றவர்களும் பாண்டவர்களால் பராக்ரமமழிக்கப்பட்டவர்களும் நெருங்கின இருளில் முழுகுகின்றவர்களுமான உங்களுடையமனம் அப்பொழுது எந்த நிலைமையிலிருந்தது? ஸஞ்சய! அவ்வாறு உலகம் இருளால் மூடப்பட்டிருக்கும் ஸமயத்தில், சத்துருக்களுக்காவது நம்முடையஸைனியத்துக்காவது எவ்வாறு பிரகாசம் உண்டாயிற்று?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"பிறகு, துரோணர், மரித்ததுபோக மிகுந்திருக்கின்ற படைகளெல்லாவற்றையும் ஸேனாபதிகளையும்பார்த்துக் கட்டளையிட்டு மறுபடியும் அணிவகுத்தார். அரசரே! ராத்திரியில், முற்புறத்தில் துரோணரும் பின்பக்கத்தில் சல்யனும் துரோணபுத்திரரும் கிருதவர்மாவும்

ஸௌபலனும் நிற்க, ராஜாவான துர்யோதனன் தானே எல்லாச்சேனைகளையும் பாதுகாத்துக்கொண்டு சுற்றிவந்தான். அரசரே! துர்யோதனன் இனிமையானவார்த்தையை முன்னிட்டு எல்லாக்காலாட்படைகளையும் பார்த்து, 'நீங்களெல்லோரும் உத்தமமான ஆயுதங்களைக் கீழே வைத்துவிட்டுக் கைகளால் ஜ்வலிக்கின்ற பந்தங்களைப் பிடியுங்கள்' என்று கட்டளையிட்டான். ராஜசிரேஷ்டனால் ஏவப்பட்ட அவர்கள் பிறகு களிப்புடன் தீவர்த்திகளைப் பிடித்தார்கள். தேவர்களும் ரிஷிகளும் கந்தர்வர்களும் தேவரிஷிகளுடைய கூட்டங்களும் வித்யாதரர்களும் அப்ஸரஸுகளுடைய கூட்டங்களும் யக்ஷர்களும் உரகர்களும் கின்னரர்களும் நாகர்களும் ஸந்தோஷத்துடன்கூடி ஆகாசத்திலிருந்துகொண்டு தீபங்களைப் பிடித்தார்கள். கௌரவ பாண்டவர்கள்நிமித்தமாக நாரதரிஷியினாலும் பர்வதரிஷியினாலும் விசேஷமாக அழைக்கப்பட்டிருக்கிற திக்குத்தேவதைகளிடமிருந்து வருகின்ற நல்ல வாஸனையுள்ள தைலத்துடன்கூடின தீபங்களும் காணப்பட்டன. மறுபடியும், அணிவகுக்கப்பட்ட அந்தச் சேனையானது இரவில் அக்னியின் ஒளியினாலும் அதிக விலைமதிப்புள்ள திவ்யமான ஆபரணங்களாலும் ஜ்வலித்துக்கொண்டு வந்துவிழுகின்ற ஆயுதங்களாலும் விளங்கியது. அந்த ராத்திரியுத்தத்தில் அந்தப் பாண்டவர்களாலும் கௌரவர்களாலும் ஒவ்வொரு ரதத்திலும் ஐந்து ஐந்து தீபங்களும் ஒவ்வொரு யானையின்மீதும் மூன்று மூன்று தீபங்களும் ஒவ்வொரு குதிரையின் மீதும் ஒவ்வொரு பெரிய தீபமும் அமைக்கப்பட்டன. உம்முடைய சேனையைச் சீக்கிரமாகப் பிரகாசிக்கச்செய்கின்ற எல்லாத் தீபங்களும் ஒரு க்ஷணத்தில ஏற்றப்பட்டன. தீபங்களையும் எண்ணெயையும் கையில்கொண்டவர்களான காலாட்களால் பிரகாசிக்கும்படி செய்யப்படுகின்றவைகளும் ஒன்றுக்கொன்று உதவுகின்றவைகளுமான எல்லாச் சேனைகளையும் ஆகாயத்தில் மின்னல்களால் விளங்குகின்ற மேகங்கள் போல் இரவில் கண்டார்கள். ராஜேந்திரரே! சேனையானது பிரகாசிப்பிக்கப்பட்டிருக்கும்ஸமயத்தில் பொற்கவசமபூண்ட துரோணர் அக்னி போல் சத்துருக்களைத் தவிக்கச்செய்துகொண்டு நடுப்பகலை அடைந்திருக்கிற சூரியன்போல் விளங்கினார். அந்த யுத்தத்தில் பொன்னாபரணங்களிலும் (அணிந்துள்ள) பொற்காசுகளிலும் சுத்தமான விற்களிலும் தலைவந்த ஆயுதங்களிலும் தீபாக்கினியினுடைய பிரதிபிம்பங்கள் அப்பொழுது உண்டாயிருந்தன. அஜமீடனுடைய வம்சத்தில்பிறந்தவரே! உறிகட்டித் தூக்கிக்கொண்டுவரப்பட்ட கதைகளும் மாசற்ற பரிகங்களும் அங்கும் இங்குமாக ஸஞ்சரிக்கின்ற ரதங்களும் பாணங்

களும் சக்திகளும் பிரதிபலிக்கின்ற தீயஜ்வாலைகளால் மறுபடியும் மறு படியும் தீபங்களை உண்டுபண்ணின. அரசரே! அந்த யுத்தரங்கத்தில் யுத்தம்செய்கின்ற வீரர்களுடைய குடைகளும் சாமரங்களும் கத்தி களும் அவ்வாறே பிரகாசிக்கின்ற பெரிய கொள்ளிகளும் அசைகின்ற பொன்மாலைகளும் அப்பொழுது விளங்கின. அரசரே! அப்பொழுது சஸ்திரங்களுடைய காந்திகளாலும் தீபங்களுடைய காந்திகளாலும் விளங்குவதும் ஆபரணங்களுடைய காந்திகளால் விளக்கப்பட்டுள்ளது மான அந்த ஸைன்யமானது மிக்க ஒளியுடன் கூடியதாயிருந்தது. அந்தரணகளத்தில் துவைந்தவைகளும் இரத்தத்தினால்நனைந்தவைகளு மான ஆயுதங்களும் வீரர்களால் அசைக்கப்பட்ட கவசங்களும் மாரிக் காலத்தின் தொடக்கத்தில் மின்னல் ஆகாயத்தில் ஒளியை உண்டுபண் ணுவதுபோலப் பிரகாசமான ஒளியை உண்டுபண்ணின. (ஆயுதங்க ளால்) விரைவாக அடிக்கப்படுவதினால் மிக நடுக்கமுற்றவர்களும் கொல்லுகின்றவர்களும் வேகத்தோடு வருகின்றவர்களுமான யுத்தவீரர் களுடைய முகங்கள் அப்பொழுது காற்றினால் அலைக்கப்பட்ட பெரிய தாமரைப் புஷ்பங்கள்போல் விளங்கின. பாரதகுலத்தில் தோன்றின வரே! மரங்களால் அடர்ந்த பெருங்காடானது பற்றியெரியும்பொழுது சூரியனுடைய ஒளியும் நசிக்கும்படி பிரகாசிப்பதுபோல அந்தச் சேனையானது அப்பொழுது மிக்க பயங்கரமாகவும் பயங்கரமான ரூபமுள்ளதாகவும் பிரகாசித்தது. நன்றாக ஜ்வலிக்கின்ற நம்முடைய சேனையைக்கண்டு பார்த்தர்கள் விரைவுடன் எல்லாப் படைகளிலும் இருக்கிற காலாட்கூட்டங்களையும் தீபம்பிடிப்பதின்பொருட்டு ஏவினார் கள். அந்தக் கூட்டங்களும் அவ்வாறே தீபங்களைப் பிடித்தன. ஒவ் வொரு யானையின்மீதும் ஏழு ஏழு தீபங்கள் அமைக்கப்பட்டன. ஒவ் வொரு ரதத்திலும் பப்பத்துத் தீவர்த்திகள் வைக்கப்பட்டன. குதி ரைகளின்மீது இரண்டு இரண்டு பந்தங்கள் போடப்பட்டன. நான்கு பக்கங்களிலும விலாப்புறங்களிலும் கொடிகளிலும் பின்பக்கங்களி லும் வேறு விளக்குக்களும் போடப்பட்டன. முழுச்சேனைகளிலும் இரண்டு விலாப்பக்கங்களிலும் சிலரும பின்புறத்திற சிலரும் முன் புறத்திற் சிலரும் நான்குபக்கங்களிலும சிலரும் அவ்வாறே நடுவிற் சிலரும் பிரகாசிக்கின்ற விளக்கைக் கையில்கொண்டு அந்தப் பாண்டுபுத் திரருடைய சேனையைப் பிரகாசிக்கசசெய்தார்கள். இரண்டு சேனை களிலும் வேறுமனிதர்கள் ஜ்வலிக்கின்ற தீபங்களைக் கையில்கொண்டு மத்தியில் ஸஞ்சரித்தார்கள். யானைகளோடும் ரதங்களோடும் குதிரைக் கூட்டங்களோடும் சேர்ந்திருக்கின்ற எல்லாச் சேனைகளிலுமுள்ள

காலாட்கூட்டங்கள் ஜ்வலிக்கின்ற தீபங்களைக் கையிற்பிடித்தவர்களாக உம்முடைய சேனையையும் அவ்வாறே பாண்டவ வீரர்களால் நான்கு பக்கத்திலும் காக்கப்பட்டிருக்கிற சேனையையும் பிரகாசிக்கச்செய்தார்கள். காந்திகளைப் பரப்புகின்றதும் கிரணங்களுள்ளதுமான சூரியகிரகத்தினால் காக்கப்பட்ட அக்னிபோல் தீபத்துடன் அவ்வாறு ஜ்வலிக்கின்ற அந்தப் பாண்டவசேனையுடன் கூடிய பலமுள்ள உம்முடைய சேனையும் மிக்க ஒளிபொருந்தியதாயிற்று. அந்த இருதிறத்துச் சேனைகளுடைய தீபகாந்திகளும் பூமியையும் ஆகாயத்தையும் எல்லாத் திக்குக்களையும் தாண்டி விருத்தியடைந்தன. அந்தப் பிரகாசத்தினால் பாண்டவர்களுடைய சேனையும் உம்முடைய சேனையும் மிக்க ஒளி பொருந்தினவாயின. அரசரே! தேவலோகத்தை அளாவுகின்ற அந்தப் பிரகாசத்தினால் அறிவிக்கப்பட்டவர்களான தேவர்களுடைய கூட்டங்களும் கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் இவர்களுடைய கூட்டங்களும் எல்லா அப்ஸரஸ்திரீகளும் வந்தடைந்தார்கள். தேவர்களாலும் கந்தர்வர்களாலும் யக்ஷர்கள் அஸுரசிரேஷ்டர்கள் அப்ஸரஸுகள் இவர்களுடைய கூட்டங்களாலும் கொல்லப்பட்டு வீரஸ்வர்க்கத்தில் ஏறுகின்ற சூரர்களாலும் நிறைக்கப்பட்ட அந்த யுத்தகளமானது தேவபூமிக்கு ஒப்பாயிற்று. ரதங்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் சூழப்பட்டதும் தீபங்களால் பிரகாசிக்கின்றதும் கோபமுள்ள வீரர்களோடுகூடியதும் அடிக்கப்பட்டு ஓடுகின்ற குதிரைகளோடுகூடியதும் அணிவகுக்கப்பட்ட தேர்களையும் குதிரைகளையும் யானைகளையுமுடையதுமான அந்தப் பெரிய சேனையானது அணிவகுக்கப்பட்ட தேவாஸுர ஸைன்யம்போலிருந்தது. சக்தியாயுதங்களுடைய கூட்டங்களாகிற பெரிய சுழல்காற்றுள்ளதும் மஹாரதங்களாகிற மேகங்களையுடையதும் யானை குதிரைகளுடைய சப்தங்களாகிற இடிமுழக்கமுள்ளதும் சஸ்திர ஸமூஹங்களாகிற மழையுள்ளதும் இரத்தமாகிற நீர்த்தாரையையுடையதுமான அத்தகைய ரத[1] துர்த்தினமானது இரவில் உண்டாயிற்று. நரேந்திரரே! அந்த ரதுதுர்த்தினத்தில் பிராம்மணமுக்கியரும் மகாபலசாலியுமான துரோணர் நெருப்புப்போலப் பாண்டவர்களைத் தவிக்கச்செய்துகொண்டு வர்ஷாகாலத்து முடிவில் நடுப்பகலையடைந்து கிரணங்களால் ஜ்வலிக்கும் சூரியன்போல இருந்தார்.

---

[1] மேகங்களால் சூரியன் மறைக்கப்பட்ட தினம்.

## நூற்றுஅறுபத்தைந்தாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தம்.)

புழுதியினாலும் இருளாலும் மூடப்பட்டிருந்த உலகமானது அப்பொழுது பிரகாசப்படுத்தப்பட்டபிறகு, வீரர்கள் பரஸ்பரம் வதஞ் செய்வதில் விருப்பமுள்ளவர்களாக வந்தார்கள். ராஜரே! அவர்கள் ரணகளத்தில் ஒன்றுசேர்ந்து சஸ்திரங்களையும் ஈட்டிகளையும் வாட்களையும் தரித்து ஒருவருக்கொருவர் தீங்கிழைத்து ஒருவரையொருவர்பார்த்துக்கொண்டார்கள். பாரதரே! அப்பொழுது நான்குபக்கங்களிலும் ஜ்வலிக்கின்றவைகளும் மணிகளிழைக்கப்பட்டவைகளும் பொற்பிடிகளுள்ளவைகளும் கந்த தைலங்களால் நனைக்கப்பட்டவைகளும் காந்தியினால அதிகமாகப் பிரகாசிக்கின்றவைகளுமான தேவகந்தர்வர்களுடைய தீபமுதலான ஆயிரக்கணக்கான தீபங்களால் ரணபூமியானது நவக்ரஹங்களால் ஆகாயம் விளங்குவதுபோல் விளங்கியது. ஊழிக்காலத்திலே எரிக்கப்படுகின்ற பூமிபோல் நன்றாக ஜ்வலிக்கின்ற கொள்ளிக்கட்டைகளால் ரணபூமியானது விளங்கிற்று. மழைக்காலத்து ராத்திரியில் மின்மினிப்பூச்சிகளால் சூழப்பட்ட மரங்கள்போல நான்குபக்கங்களிலும் அநதத் தீவட்டிகளால எல்லாத் திக்குக்களும பிரகாசிப்பிக்கப்பட்டு விளங்கின. பிறகு, தனித்தனியாகக் காலாட்கள்காலாட்களோடும யானைவீரர்கள் யானைவீரர்களோடும் குதிரைவீரர்கள் குதிரைவீரர்களோடும் ரதிகர்கள் சிறநத ரதிகர்களோடும் ஊக்கத்துடன் போர் புரிவதற்காக எதிர்த்தார்கள். கோரமான அத்தகைய ராத்திரியின் தொடக்கத்தில் உமது புத்திரனுடைய கட்டளையினால் சதுரங்கஸேனைக்கும் பெரிதான யுத்தம் நேர்நதது. மஹாராஜரே! பின்பு, அர்ஜுனன் விரைபவனாகி எல்லா அரசர்களையும் நாசஞ்செய்துகொண்டு கௌரவர்களுடைய சேனையை நாசமசெய்தான்" என்று சொன்னான். திருதராஷ்டிரன், "ஸஞ்சய! கோபங்கொண்டவனும் ஒருவராலும ஜயிக்கமுடியாதவனும் (பகைவரைப்) பொறுவதனுமான அந்த அர்ஜுனன் என் புத்திரனுடைய சேனையில் பிரவேசித்தவுடன் உங்களுடைய மனம் எந்த நிலைமையிலிருந்தது? பகைவர்களைப் பீடிக்கிறவனான அர்ஜுனன் கௌரவசேனைகளில் பிரவேசித்தவுடன் போர்வீரர்கள் என்னசெய்தார்கள்? துர்யோதனனும் அச்சமயத்துக்கு எந்தச்செய்கையைத் தகுந்ததென்று எண்ணினான்? சுவேதவாஹனன் பிரவேசித்தவுடன் யுத்தத்

தில், அந்த வீரனைப் பகைவர்களை அடக்குகிற எந்த வீரர்கள் எதிர்த் தார்கள்? துரோணரை எவர்கள் பாதுகாத்தார்கள்? வீரர்களைக் கொல் லுகின்ற துரோணருடைய வலப்பக்கத்திலுள்ள ஸைன்யத்தை எவர் கள் ரக்ஷித்தார்கள்? இடப்பக்கத்திலுள்ள ஸைன்யத்தை எவர்கள் ரக்ஷித்தார்கள்? வீரர்களை விசேஷமாக வதம்செய்கின்ற துரோணருக்கு எந்த வீரர்கள் பின்புறத்தில் இருந்தார்கள்? யுத்தத்தில் சத்துருக்களை நாசஞ்செய்கின்ற அவருடைய முன்பக்கத்தில் எவர்கள் சென்றார்கள்? ஜயிக்கப்படாதவரும் பெரிதான வில்லைப்பிடித்தவரும் நரசிரேஷ்டரும் வீர்யமுள்ளவரும் ரதமார்க்கங்களில் நர்த்தனம்செய்கின்றவர்போன்றவ ரும் பாஞ்சாலர்களுள் நுழைந்தவரும் கோபமுற்று அக்கினிபோலப் பாஞ்சால ரதிகர்களுடைய கூட்டங்களை அம்புகளால் எரித்தவருமான துரோணர் எவ்வாறு மரணமடைந்தார்? ஸூத! நீ பகைவர்களையே மனக்கவலையற்றவர்களும் ஜயிக்கப்படாதவர்களும் ஸந்தோஷமுள்ளவர் களும் யுத்தத்தில் ஸாமர்த்தியமுள்ளவர்களுமாகச் சொல்லுகிறாய். என்னைச்சேர்ந்தவர்களை அவ்வாறு சொல்லவில்லை. யுத்தங்களில் என் னைச்சேர்ந்தவர்களைக் கொல்லப்பட்டவர்களென்றும் பிளக்கப்பட்டவர்க ளென்றும் சிதற அடிக்கப்பட்டவர்களென்றும் ரதிகர்களை ரதங்களை இழந்தவர்களாகச் செய்யப்பட்டவர்களென்றும் சொல்லுகிறாய்" என்று கேட்க, ஸஞ்சயன் சொல்லலானான்.

"மஹாராஜரே! அன்று இரவு முழுவதும் யுத்தம்செய்வதில் விருப் பமுற்றிருக்கிற துரோணரின் அபிப்பிராயத்தையறிந்து துர்யோதனன் தனக்கு ஸ்வாதீனப்பட்டவர்களாயிருக்கிற பிராதாக்களையும் கர்ணனை யும் விருஷஸேனனையும் மத்ரராஜனையும் துர்த்தர்ஷனையும் தீர்க்கபாகு வையும் இன்னும் அவர்களை அநுஸரித்துவந்தவர்களையும் நோக்கி, 'பராக்கிரமசாலிகளான நீங்கள் அனைவரும் முயற்சியுடன் துரோண ரைப் பின்புறத்தில் காக்கக்கடவீர். கிருதவர்மா வலப்பக்கத்திலுள்ள சேனையையும் அவ்வாறே சல்லியன் இடப்பக்கத்திலுள்ள சேனையையும் காப்பாற்றவேண்டும்' என்று சொன்னான். திரிகர்த்தர்களுள் மரித்தவர் கள்போக மிகுந்திருக்கிற மஹாரதர்களான சூரர்களனைவரையும் உம் முடைய குமாரன் முன்னின்று காக்கும்படி ஏவினான். அவன், 'ஆசார் யர் மிகுந்த முயற்சியுள்ளவராக இருக்கிறாரன்றோ? பாண்டவர்களும் அதிக முயற்சியுள்ளவர்களாக இருக்கிறார்கள். சத்துருக்களைக்கொல்லு கின்ற அவரை யுத்தத்தில் மிகுந்த முயற்சியோடு காக்கக்கடவீர். அவரோ பலசாலி; யுத்தத்தில் கைச்சுறுசுறுப்புள்ளவர்; பிரதாபசாலி;

தேவர்களையும் யுத்தத்தில் வெல்வர்; ஸோமகர்களோடுகூடின பாண்டவர்களை ஜயிப்பதில் ஸந்தேகம் என்ன இருக்கிறது? மஹாரதர்களான நீங்களெல்லோரும் ஒன்றுகூடி அதிகமுயற்சியுள்ளவர்களாகி, மஹாரதனும் பாஞ்சாலராஜகுமாரனுமான திருஷ்டத்யும்னனிடத்திலிருந்து துரோணரைக் காப்பாற்றுங்கள். பாண்டவ சேனாவீரர்களுள் திருஷ்டத்யும்னனைத்தவிரத் துரோணரை யுத்தத்தில் எதிர்த்துப்போர்புரியக் கூடிய வேறு ஒருவனை நாம் காணவில்லை. ஆதலால், எல்லாவிதத்தாலும் பாரத்வாஜரைக் காப்பதையே கருதுகிறேன். அவர் நன்றாகப் பாதுகாக்கப்படுவரேயாகில் பாண்டவர்களையும் ஸோமகர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் கொல்வார். பிறகு, படைமுகத்தில் எல்லா ஸ்ருஞ்சயர்களும் கொல்லப்பட்டார்களாகில் யுத்தத்தில் திருஷ்டத்யும்னனைத் துரோணபுத்திரர் கொல்வார். ஸம்சயம் இல்லை. அவ்வாறே, மஹாரதனான ராதேயன் அர்ஜுனனைக்கொல்வான். தீக்ஷைகொண்டவனான நான் யுத்தத்தில் பீமஸேனனை ஜயிப்பேன். சக்தி குறைந்தவர்களான மிகுந்திருக்கிற பாண்டவர்களை (நமது) போர்வீரர்கள் வலிந்து கொன்றுவிடுவார்கள். அப்படிப்பட்ட இந்தஜயமானது நெடுங்காலம் பிரகாசமாயிருக்கும். ஆதலால், யுத்தத்தில் மஹாரதரான துரோணரையே காப்பாற்றுங்கள்' என்று கூறினான். பரதசிரேஷ்டரே! உம்முடைய புத்திரனான துரியோதனன் இவ்வாறு சொல்லிவிட்டு அந்தப் பயங்கரமான இருளில் ஸைன்யத்தைக் கட்டளையிட்டான். பரதர்களிற் சிறந்தவரே! பிறகு, ராத்திரியில் இரண்டு சேனைகளுக்கும் பரஸ்பரம் ஜயிக்க வேண்டுமென்கிற விருப்பத்தோடு கோரமானயுத்தம் நடந்தது. அர்ஜுனன் கௌரவசேனையையும் கௌரவர்கள் அர்ஜுனனையும் பற்பல விதமான ஆயுதக்குவியல்களால் பரஸ்பரம் நன்றாக அடித்தார்கள். யுத்தத்தில் துரோணபுத்திரர்களுக்கள் படிந்துள்ள அம்புகளால் பாஞ்சாலராஜனையும் துரோணர் ஸ்ருஞ்சயர்களையும் மூடினார்கள். பாரதரே! ஒருவரையொருவர் கொல்லுகின்ற பாண்டவ பாஞ்சால ஸைன்யங்கள் கௌரவர்கள் இவர்களின் துன்பத்தாலுண்டாகிய பெரிய சப்தமானது தோன்றியது. அந்த இரவு முழுவதும் அதிபயங்கரமாக நடந்த யுத்தம்போன்ற யுத்தமானது நம்மாலும் அவ்வாறே முன்னோர்களாலும் முன்பு பார்க்கப்பட்டதேயில்லை.

---

## நூற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(க்ருதவர்மா யுதிஷ்டிரரை வென்றது.)

அரசரே! அப்பொழுது எல்லாப் பிராணிகளுக்கும் நாசத்தை உண்டுபண்ணுகிறதான பயங்கரமான அந்த ராத்திரி யுத்தமானது நடக்கையில், தர்மநந்தனரான யுதிஷ்டிரர் பாண்டவர்களையும் பாஞ்சாலர்களையும் ஸோமகர்களையும் பார்த்து, 'நான்குபுறத்திலும் ஓடுங்கள். துரோணரைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடனேயே எதிர்த்துச் செல்லுங்கள்' என்று சொன்னார். அரசரே! அரசரான யுதிஷ்டிரருடைய வார்த்தையினாலே அந்தப் பாஞ்சாலர்களும் அவ்வாறே ஸ்ருஞ்சயர்களும் பயங்கரமான சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு துரோணரையே எதிர்த்துச்சென்றார்கள். அந்த யுத்தவீரர்களை நாங்கள் ஸந்தோஷத்துடன் எதிரில் ஸிம்மநாதம்செய்துகொண்டு சக்திக்கும் உத்ஸாகத்துக்கும் பலத்துக்கும் தக்கபடி யுத்தத்தில் எதிர்த்தோம். ஹ்ருதிகனுடைய குமாரனான கிருதவர்மாவோ துரோணரைக்குறித்து எதிர்த்து வருகின்ற யுதிஷ்டிரரை மதயானையை மதயானை எதிர்ப்பதுபோல் எதிர்த்து அருகில் சென்றான். மன்னரே! நான்கு பக்கங்களிலும் அம்பு மழைகளைப்பொழிகின்ற ஸாத்யகியைக் கௌரவனான பூரி யுத்தமுனையில் எதிர்த்தான். வேந்தரே! பிறகு, துரோணரை எதிர்க்க எண்ணமுள்ளவனும் மகாரதனும் பாண்டுபுத்திரனுமான ஸஹதேவனை ஸூர்யகுமாரனான கர்ணன் தடுத்தான். பிறகு, வாயைத்திறந்துகொண்டிருக்கும் யமன்போல வருகின்றவனும் (தனக்கு) ம்ருத்யுவுமான பீமஸேனனைத் துரியோதனராஜன் தானே எதிர்த்தான். அரசரே! யுத்தம்செய்கிறவர்களுள் சிறந்தவனும் எல்லா யுத்தங்களிலும் ஸமர்த்தனுமான நகுலனை ஸுபலபுத்திரனான சகுனி விரைவுடன் தடுத்தான். அரசரே! பிறகு, ரதிகர்களுள் உத்தமனும் ரதத்தோடு வருகின்றவனுமான சிகண்டியைச் சரத்வானுடைய குமாரரான கிருபாசாரியர் யுத்தத்தில் எதிர்த்தார். மகாராஜரே! பிறகு, மயிலுக்கு ஒப்பான நிறமுள்ள குதிரைகளுடன் வருகின்றவனும் முயற்சியுடையவனுமான பிரதிவிந்தியனைத் துச்சாஸனன் முயற்சியுடன் தடுத்தான். மகாராஜரே! பிறகு, அஸ்வத்தாமாவானவர், எதிர்த்துவருகின்றவனும் அனேகமான மாயைகளை அறிந்தவனும் பீமஸேனகுமாரனும் ராக்ஷஸனுமான கடோத்கசனை எதிர்த்துத் தடுத்தார். விருஷஸேனனே யுத்தரங்கத்தில் துரோணரை அடைய

விரும்பிய மகாரதனை துருபதனை ஸைநியங்களோடும் உதவிக்காக வந்துகொண்டிருக்கிறவர்களோடும் தடுத்தான். பாரதரே! துரோணரைக்கொல்வதின்பொருட்டு வேகமாக வருகின்ற விராடனை மத்ரராஜனை சல்யன் அதிக கோபங்கொண்டு தடுத்தான். பிறகு, யுத்தத்தில் துரோணரை எதிர்க்க வேண்டுமென்கிற எண்ணத்தோடு வேகமாகவருகின்ற நகுலகுமாரனை சதானீகனைச் சித்ரஸேனன் அம்புகளால் விரைவாகத் தடுத்தான். மகாராஜரே! யுத்தம்பண்ணுகிறவர்களுள் சிரேஷ்டனும் விரைவாக எதிர்த்துவருகின்றவனும் மகாரதனுமான அர்ஜுனனை ராக்ஷஸேந்திரனை அலாயுதன் தடுத்தான். அவ்வாறே, பெரிதானவில்லைக்கையில்தாங்கியவரும் யுத்தகளத்தில் பகைவர்களைக் கொல்லுகிறவருமான துரோணரைப் பாஞ்சாலகுமாரனை திருஷ்டத்யும்னன் மிக்க மனக்களிப்புடனே தடுத்தான். அரசரே! அவ்வாறே எதிர்த்து வருகின்ற மகாரதர்களான மற்றப் பாண்டவஸேனாவீரர்களை உம்மைச் சேர்ந்தவர்களான ரதிகர்கள் பராக்கிரமத்தினால் தடுத்தார்கள். யானைமீதுள்ளவீரர்கள் பெரும்போரில் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் யானைகளுடனே விரைவாக எதிர்த்து யுத்தம் செய்கிறவர்களாகக் காணப்பட்டார்கள். வேந்தரே! அர்த்தராத்திரியில் ஒன்றை ஒன்று துரத்துகின்ற குதிரைகள் வேகத்தினாலே சிறகுகளுள்ள மலைகள்போல் காணப்பட்டன. மகாராஜரே! குதிரைவீரர்கள், ஈட்டிகளையும் சக்திகளையும் ரிஷ்டிகளையும் கையிற்கொண்டும் தனித்தனியாக ஸிம்மநாதஞ்செய்துகொண்டும் குதிரைவீரர்களுடன் எதிர்த்தார்கள். அந்த யுத்தகளத்தில் அனேக மனிதர்கள் கதாயுதங்களோடும் உலக்கைகளோடும் பற்பல சஸ்திரங்களோடும் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். ஹ்ருதிககுமாரனை கிருதவர்மாவோ மிக்க கோபங்கொண்டு பொங்கிவருகின்ற கடலைக் கரைதடுப்பதுபோலத் தர்மநந்தனரான யுதிஷ்டிரரைத் தடுத்தான். யுதிஷ்டிரரோ (அவனை) ஐந்துபாணங்களால் அடித்து மறுபடியும் இருபதுபாணங்களாலடித்து, 'நில், நில்' என்றும் சொன்னார். பெரியவரே! கிருதவர்மாவோ மிக்க கோபங்கொண்டு ஒருபல்லத்தினால் தர்மபுத்திரருடையவில்லை அறுத்து ஏழுபாணங்களால் அவரையும் அடித்தான். பிறகு, மகாரதரான தர்மபுத்திரர் வேறுவில்லை யெடுத்துக் கிருதவர்மாவைப் பத்துப்பாணங்களால் இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தார். பெருமானே! ரணகளத்தில் தர்மபுத்திரராலடிக்கப்பட்ட கிருதவர்மாவோ நடுக்கமுற்றுக் கோபத்துடன் ஏழுபாணங்களால் (அவரை) அடித்தான். அரசரே! யுதிஷ்டிரர் அந்தக் கிருதவர்மாவினுடைய வில்லையும் கையுறையையும் அறுத்துச் சாணையில் தீட்டப்பட்ட கூர்மையுள்ள

ஐந்துபாணங்களையும் அவன்மீது பிரயோகம் செய்தார். அவ்வம்புகள் பொன்னால் சித்திரவேலைசெய்யப்பட்டதும் மிக்க விலைபெற்றதுமான அவனுடைய கவசத்தை உடைத்துப் புற்றில் ஸர்ப்பங்கள் நுழைவது போலப் பூமியைப்பிளந்துகொண்டு பிரவேசித்தன. அந்தக் கிருதவர்மா கண்ணிமைப்பொழுதுக்குள் வேறுவில்லைக் கையிலெடுத்துத் தர்மபுத்திரரை அறுபதுபாணங்களாலும் ஸாரதியை ஒன்பது பாணங்களாலும் அடித்தான். பரதஶ்ரேஷ்டரே! அளவிடமுடியாதபராக்கிரமமுள்ள பாண்டவர் பெரியவில்லை ரதத்தில் வைத்துவிட்டு ஸர்ப்பத்துக்கொப்பான சக்தியாயுதத்தை அந்தக் கிருதவர்மாவின்மீது பிரயோகித்தார். பாண்டு புத்திரராலே எறியப்பட்டதும் ஸ்வர்ணத்தினால் சித்திரவேலை செய்யப்பட்டதுமான அந்தப் பெரிய சக்தியானது வலக்கையைப்பிளந்துகொண்டு பூமியிற் பிரவேசித்தது. இச்சமயத்திலேயே யுதிஷ்டிரர் மீண்டும் வில்லையெடுத்துக் கணுக்கள் உட்படிந்துள்ள அம்புகளாலே ஹார்திக்யனை மூடினார். பிறகு, யுத்தத்தில் சூரனும் விருஷ்ணிகளுள் சிறந்த தேராளியுமான கிருதவர்மா யுதிஷ்டிரரை அரைநிமிஷத்தினுள் குதிரைகளையும் ஸாரதியையும் தேரையுமிழந்தவராகச்செய்தான். பிறகு, மூத்தவரான பாண்டவர் கத்தியையும் கேடகத்தையும் கையிலெடுத்தார். அவருடைய கத்தியையும் கேடகத்தையும் யுத்தரங்கத்தில் கிருதவர்மா கூர்மையான பாணங்களால் ஒழித்தான். பிறகு, யுதிஷ்டிரர் பொற்காம்புள்ளதும் ஒருவராலும் நெருங்கமுடியாததுமான தோமரத்தை யுத்தத்தில் கையிலெடுத்து விரைவாக அவன்மீது பிரயோகித்தார். தர்மராஜருடைய கையினின்று விடுபட்டு விரைவாக வருகின்றஅந்தத் தோமரத்தைக் கைத்தேர்ச்சியுள்ளவனான கிருதவர்மா புன்சிரிப்புடன் இரண்டாக அறுத்தான். பிறகு, அவன் மிக்ககோபங்கொண்டு யுத்தரங்கத்தில் அனேக அம்புகளைத் தர்மபுத்திரர்மீது வாரியிறைத்துக் கூர்மையுள்ள அம்புகளாலே அவருடைய கவசத்தையும் உடைத்தான். அரசரே! அவனுடைய அம்புகளால் மூடப்பட்டதும் மிக்க விலைபெற்றதுமான தர்மபுத்திரருடைய கவசமானது ஆகாயத்தினின்று நக்ஷத்திரக்கூட்டம் சிதறிவிழுவதுபோல் யுத்தரங்கத்தில் சிதறிவிழுந்தது. தர்மநந்தனரான யுதிஷ்டிரர் வில் அறுக்கப்பட்டும் ரதத்தை யிழந்தும் கவசஞ்சிதறியும் பாணங்களால் அடிக்கப்பட்டும் யுத்தரங்கத்தைவிட்டு விரைவாக ஓடினார். கிருதவர்மாவோ தர்மாத்மாவான யுதிஷ்டிரரை ஜயித்து மகாத்மாவான துரோணருடைய சேனையையே மறுபடியும் பாதுகாத்தான்.

---

## நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி பூரியைக் கொன்றதும், அச்வத்தாமா கடோத்கசனை வென்றதும் பீமஸேனன் துரியோதனனை அவமானம் செய்ததும்.)

அரசரே! யுத்தரங்கத்தில், பூரியானவன் எதிர்த்துவருகின்றவனும் ரதிகர்களுள் சிறந்தவனுமான ஸாத்யகியை, யானையைப் பிரயாணத்தினின்று தடுப்பதுபோலத் தடுத்தான். பிறகு, ஸாத்யகி கோபங்கொண்டு கூர்மையுள்ள ஐந்துபாணங்களாலே பூரியை மார்பில் அடித்தான். அவன் மார்பினின்றும் இரத்தம்பெருகியது. அவ்வாறே, கௌரவன் யுத்தத்தில் அடங்காதமதங்கொண்ட சைனேயனைக் கூர்மையுள்ள பத்துப்பாணங்களால் மார்பிலடித்தான். மகாராஜரே! அவ்விருவரும் கோபத்தால் கண்கள் மிகச்சிவந்து குரோதத்தினால் விற்களிலிருந்து நாணொலியுண்டாக்கிப் பாணங்களால் ஒருவரையொருவர் மிகவும் அடித்தார்கள். மகாராஜரே! கோபமுள்ளவர்களும் பாணங்களைப் பிரயோகிக்கின்றவர்களும் யமனுக்கும் அந்தகனுக்கும் ஒப்பானவர்களுமான அவ்விருவருடைய அம்புமழையானது மிக்கபயங்கரமாயிருந்தது. அரசரே! அவ்விருவரும் அம்புகளாலே ஒருவரையொருவர் மூடிக்கொண்டு நின்றார்கள். அந்த யுத்தமானது ஒருமுகூர்த்தகாலம் ஸமமாயிருந்தது. மகாராஜரே! பிறகு, கோபங்கொண்ட யுயுதானன் உரக்கச்சிரித்து யுத்தத்தில் மகாபலசாலியான பூரியினுடையவில்லை அறுத்தான். பிறகு, வில்அறுக்கப்பட்ட அந்தப்பூரியை ஸாத்யகி கூர்மையுள்ள ஒன்பதுபாணங்களால் மார்பில் விரைவாக அடித்து, 'நில், நில்' என்றும்சொன்னான். பகைவரை வாட்டுகின்ற அந்தப்பூரியானவன் பலவானான பகைவனால் நன்றாகஅடிக்கப்பட்டு வேறுவில்லையெடுத்து ஸாத்வதனைத் திருப்பியடித்தான். வேந்தரே! அந்தப்பூரி ஸாத்வதனை மூன்றுபாணங்களால் அடித்து நகைத்துக்கொண்டு மிக்க கூர்மையுள்ள ஒருபல்லத்தினால் அவன்வில்லையும் அறுத்தான். மகாராஜரே! வில்அறுக்கப்பட்டவனும் கோபமுண்டவனுமான ஸாத்யகி அவனது விசாலமானமார்பில் மகாவேகமுள்ள சக்தியை எறிந்தான். சக்தியினால் தேகம் நன்றாகப்பிளக்கப்பட்ட அந்தப்பூரி பிரகாசிக்கின்ற கிரணங்களுடன் ஆகாயத்தினின்று தற்செயலாகவிழுகின்ற அங்காரகன்போல உத்தமமானரதத்தினின்று கீழேவிழுந்தான். சூரனான அந்தப்பூரி கொல்லப்பட்டதைக்கண்டு மகாரதரான அச்வத்தாமா யுத்தத்

தில் ஸைனேயனைக்குறித்து வேகத்தோடு எதிர்த்துவந்தார். மன்னரே! அந்தத் துரோணகுமாரர் ஸைனேயனைப்பார்த்து, 'நில், நில் என்று சொல்லிக்கொண்டு மேகம் மேருவின்மீது மழையைப்பொழிவதுபோல பாணஸமூகத்தை அவன்மீது பொழிந்தார். அரசரே! ஸைனேயனுடைய ரதத்தைக்குறித்து மிகுந்த பராபரப்புடன்வருகின்ற' அந்த அஸ்வத்தாமாவைப்பார்த்து மகாரதனான கடோத்கசன் ஸிம்மநாதம் செய்துகொண்டு, 'துரோணபுத்ரரே! நில்லும்; நில்லும்; என்னிடத்தினின்று உயிரோடு மீண்டுபோகமாட்டீர். இதோ யான் உம்மை ஸிம்மம கடாமாட்டைக்கொல்வதுபோலக் கொல்லப்போகிறேன். யுத்தரங்கத்தில், போரில் உமக்குள்ள ஊக்கத்தை இப்பொழுது நான் போக்குவேன்'' என்று கூறினான். சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனான ராக்ஷஸன் கோபத்தால் சிவந்தகண்களுடன் இவ்வாறு சொல்லிவிட்டு ஸிம்மமானது சிறந்தயானையை எதிர்த்துவருவதுபோலக் கோபத்தோடு துரோணபுத்திரரை எதிர்த்துவந்தான். அவன் மேகமானது நீர்த்தாரைகளைப்பொழிவதுபோல ரதிகர்களுள் சிறந்தவரான அஸ்வத்தாமாவின் மீது ரதத்தின் அச்சுக்கள்போன்ற பெரியபாணங்களைப் பொழிந்தான் துரோணபுத்திரர் அந்த அம்புமழையைச் சிரித்துக்கொண்டு ஸர்ப்பங்களுக்கொப்பான அம்புகளால் யுத்தரங்கத்தில் விரைவாக நாசம்செய்தார்; பிறகு, கூர்மையுள்ளவைகளும மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றவைகளும் விரைவாகச்செல்கின்றவைகளுமான அனேகஅம்புகளாலே பகைவர்களை அடக்குகிறவனும ராக்ஷஸஸ்ரேஷ்டனுமான கடோத்கசனை நிரப்பினார். மகாராஜரே! யுத்தமுனையில் பாணங்களால் நான்கு பக்கங்களிலும நிறைக்கப்பட்ட அந்த ராக்ஷஸன், முள்ளம்பன்றி முட்களோடுவிளங்கியதுபோல விளங்கினான். பிறகு, பிரதாபசாலியான பீமஸேனகுமாரன் கோபமூண்டவனாகி உக்ரமானவைகளும் வஜ்ராயுதமும் இடியும்போன்ற காந்தியுள்ளவைகளுமான அம்புகளால் துரோணபுத்திரரைப்பிளந்தான். க்ஷுரப்ரங்களாலும் அர்த்தசந்திரபாணங்களாலும் மிக்ககூர்மையுள்ள நாராசங்களாலும் வராஹகர்ணங்களாலும் நாளீகங்களாலும் விகர்ணங்களாலும த்ரோணகுமாரர்மீது வர்ஷித்தான். ஒப்பற்றதும வஜ்ராயுதமும இடியும்போன்ற ஒலியுள்ளதும மேலே விழுகின்றதும் மிகவும ஸகிக்கமுடியாததுமான அந்தச்சரமாரியைக் கோபங்கொண்டவரும பொறிகள் கலக்கமடையாதவரும் அதிகதேஜஸுள்ளவருமான துரோணபுத்திரர், காற்று மகாமேகங்களை நாசஞ்செய்வதுபோலக் கோரமானவையும் திவ்யாஸ்திரமந்திரங்களால் ஜபிக்கப்பட்டவையுமான அம்புகளால் நாசம்செய்தார். மகாராஜரே! பிறகு,

கொடியகாட்சியுள்ளதும் போர்வீரர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்தி பண்ணுகிறதுமான வேறொருயுத்தம் ஆகாயத்தில் பாணங்களுக்கு நேர்ந்ததுபோலாயிற்று. பிறகு, நான்குபக்கங்களிலும் அஸ்திரங்கள் மோதுவதினால் உண்டுபண்ணப்படும் நெருப்புப்பொறிகளால் அந்த யுத்தபூமியானது ராத்திரியின் துவக்கத்தில் மின்மினிப்பூச்சியினால் சூழப்பட்ட ஆகாயம்போல் விளங்கியது. அந்தத்துரோணகுமாரர் பாணஸமூகங்களாலே திக்குக்களை நான்குபக்கங்களிலும்மூடி உமது புத்திரர்களுக்குப் பிரியத்தைச்செய்வதின்பொருட்டு ராக்ஷஸன்மீது வர்ஷித்தார். பிறகு, யுத்தகளத்தில் முன்பு இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்கும் யுத்தம்நடந்ததுபோலத் துரோணபுத்ரருக்கும் ராக்ஷஸனுக்கும் மிகஇருண்டுள்ள நடுநிசியில் யுத்தம் தொடங்கியது. பிறகு, கடோத்கசன் கோபங்கொண்டு யுத்தரங்கத்தில் காலாக்னிக்கொப்பான பத்துப்பாணங்களால் அஸ்வத்தாமாவை மார்பிலடித்தான். ராக்ஷஸனால் நீண்டபாணங்களால் அடிக்கப்பட்ட மகாபலசாலியான அந்த அஸ்வத்தாமா போர்க்களத்தில் காற்றால் அசைக்கப்பட்ட மரம்போல் நடுங்கினார். அவர் யுத்தத்தில் மூர்ச்சையடைந்து கொடிமரத்திலும் சாய்ந்தார். ராஜரே! பிறகு, உமது சைனியமுழுமையும், 'ஆ! ஆ!' என்று அலறியது. அரசர்களெல்லாரும், 'த்ரோணபுத்திரர் மாண்டார்' என்றே எண்ணினார்கள். யுத்தத்தில் அஸ்வத்தாமா அவ்விதநிலைமையடைந்ததைக்கண்டு பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் ஸிம்மநாதம் செய்தார்கள். சத்துருக்களை ஹிம்ஸிப்பவனும் மஹாபலசாலியுமான அஸ்வத்தாமா பின்பு நினைவையடைந்து இடக்கையினால் வில்லை உறுதியாகப்பிடித்துக் கடோத்கசனை லக்ஷ்யம்வைத்துக் காதுவரையில் நாண்கயிற்றை இழுத்து யமதண்டம்போன்றதும் கோரமானதும் சிறந்ததுமான ஓரம்பை விரைவாகப் பிரயோகித்தார். ராஜரே! புங்கமுள்ள உக்கிரமான அந்த உத்தமமான அம்பானது அந்தராக்ஷஸனுடைய மார்பைப்பிளந்துகொண்டு பூமியிற்பிரவேசித்தது. மகாராஜரே! யுத்தத்தில் ஸமர்த்தரான துரோணபுத்திரரால் நன்றாகஅடிக்கப்பட்டவனும் மஹாபலசாலியுமான அந்தராக்ஷஸஸ்ரேஷ்டன் ரதமத்தியில் உட்கார்ந்தான். ஹிடிம்பையின்மகன் மயங்கியிருப்பதைக்கண்டு ஸாரதி விரைபவனாகி யுத்தரங்கத்தில் அஸ்வத்தாமாவின் ஸமீபத்தைவிட்டு வேறிடத்திற்குக் கொண்டுபோனான். மகாரதரான துரோணபுத்திரர் ராக்ஷஸஸ்ரேஷ்டனான கடோத்கசனை யுத்தத்தில் அவ்வாறு அடித்துவிட்டுப் பெரிய ஸிம்மநாதத்தோடு கர்ஜித்தார். பாரதரே! உமதுபுத்திரர்களாலும் எல்லாயுத்தவீரர்களாலும் பூஜிக்கப்பட்ட அஸ்வத்தாமாவினுடைய தேக

மானஃது மத்யான்னகாலத்தில் சூரியன்போல அதிகமாக ஜ்வலித்தது. பாரத்வாஜருடையரதத்தை எதிர்த்துயுத்தம்செய்கின்ற பீமஸேனனைத் துரியோதனராஜன் கூர்மையுள்ள அம்புகளால் நேரில்எதிர்த்து அடித்தான். ஐயா! பீமஸேனன் அந்தத்துரியோதனனைப் பத்துப்பாணங்களால்அடித்தான். துரியோதனனும் இருபதுபாணங்களால் (அவனை) திருப்பியடித்தான். யுத்தபூமியில் அம்புகளால் மூடப்பட்டிருக்கிற அவ்விருவரும் ஆகாயத்தில் மேகஸமூகங்களாலே மூடப்பட்ட சந்திரனும் சூரியனும்போலக் காணப்பட்டார்கள். பரதசிரேஷ்டரே! பிறகு, துரியோதனராஜன் பீமனை ஐந்துபாணங்களால் அடித்து, 'நில்; நில்' என்றும் சொன்னான். பீமன் பத்தம்புகளாலே துரியோதனனுடைய வில்லையும் கொடியையும் அறுத்துக் கணுக்கள்படிவாயுள்ள தொண்ணூறு பாணங்களால் அவனையும் அடித்தான். பிறகு, பரதசிரேஷ்டனான துரியோதனன் கோபங்கொண்டு மிகப்பெரிதான வேறுவில்லையெடுத்து எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தமுனையில் கூர்மையான அம்புகளால் பீமஸேனனை அடித்தான். பீமஸேனன் துரியோதனனுடைய வில்லிலிருந்து விடுபட்டுவருகின்ற அந்த அம்புகளை நாசம்செய்து துரியோதனன்மீது இருபத்தைந்து க்ஷுத்ரகங்களைப் பிரயோகித்தான். ஐயா! துரியோதனனோ மிகுந்தகோபங்கொண்டு பீமஸேனனுடையவில்லை க்ஷுரப்ரத்தினால் அறுத்துப் பத்துப்பாணங்களால் திருப்பியடித்தான். பிறகு, மகாபலசாலியான பீமஸேனன் வேறுவில்லையெடுத்துக் கூர்மையுள்ள ஏழுபாணங்களால் விரைவாக ராஜாவான துரியோதனனை அடித்தான். மகாராஜரே! ஐபத்தினால் பிரகாசிக்கின்றவனும் மதம்பிடித்தவனுமான உம்முடைய குமாரன் கைதேர்ந்தவன்போலப் பீமஸேனனுடைய அந்தவில்லையும் விரைவாக அறுத்தான். அவ்வாறே இரண்டாவதையும் மூன்றாவதையும் நான்காவதையும் ஐந்தாவதையும் அறுத்தான். இவ்வாறு எடுக்கஎடுக்கப் பீமனுடையவில்லை அறுத்தான். அப்படி அடிக்கடி விற்கள் அறுக்கப்படுங்காலத்தில், அந்தப்பீமன் யுத்தகளத்தில முழுதும உருக்கினாலாகியதும் சிறந்ததுமான ஒருசக்தியைஎறிந்தான். கௌரவன் மிருத்யுவுக்கு ஸகோதரிபோன்றதும் ஜ்வலிக்கின்ற அக்னிஜ்வாலைபோன்றதும் ஆகாயத்தின் மத்தியைப்பிளந்துகொண்டு வருவதுபோன்றதும் அக்னிக்குச்சமானமான காந்தியுள்ளதுமான அந்தச்சக்தியைத் தன்னிடம்வருதவற்குள்ளேயே எல்லாஜனங்களும் மகாபலசாலியான பீமஸேனனும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே மூன்றாகத்துண்டாக்கினான். மகாராஜரே! பிறகு, பீமன் துரியோதனனுடைய ரதத்தைக்குறித்துப் பெரி

தும் மிக்க ஒளிபொருந்தியதுமான ஒருகதாயுதத்தை வேகத்தோடு சுழற்றியெறிந்தான். பிறகு, அந்தப்பெரிதான கதாயுதமானது யுத்தரங்கத்தில் உமதுபுத்திரனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் மறுபடியும் அவனுடைய ரதத்தையும் விரைவாக நாசஞ்செய்தது. ராஜேந்திரரே! உமதுபுத்திரனோ பீமனிடத்திலிருந்து பயந்து ஒளிந்து மகாபலசாலியான நந்தகனுடைய வேறொரு ரதத்தின்மீது ஏறிக்கொண்டான். பிறகு, பீமன் மகாரதனான உம்முடைய புத்திரன் மாண்டானென்று எண்ணி இரவில் கௌரவர்களை வெருட்டிக்கொண்டு பெரிய ஸிம்மநாதம்செய்தான். உம்முடைய ஸைனிகர்களும், 'அரசன் மாண்டான்' என்றே எண்ணினார்கள். பிறகு, அங்குள்ள எல்லாவீரர்களும் நான்குபக்கங்களிலும், 'ஆ! ஆ!' என்று பெருங்கூச்சலிட்டார்கள். அரசரே! பயந்தவர்களான அவ்வெல்லா வில்லாளிகளுடைய கூச்சலையும் மகாபலசாலியான பீமஸேனனுடைய ஸிம்மநாதத்தையுங்கேட்டு ராஜாவான யுதிஷ்டிரர் துரியோதனன் மாண்டானென்று எண்ணி, பிறகு, குந்தீபுத்திரனை விருகோதரனிருக்குமிடத்திற்கு விரைவாக வந்தார். மன்னரே! பாஞ்சாலர்களும் கேகயர்களும் மச்சதேசத்தார்களும் ஸ்ருஞ்சயர்களும் யுத்தஞ்செய்யவேண்டுமென்கிற விருப்பத்தினால் எல்லாவிதமான முயற்சியுடனும் துரோணரையே எதிர்த்தார்கள். பிறகு, அவ்விடத்தில் துரோணருக்குச் சத்துருக்களோடு பெரிதான யுத்தம் நேர்ந்தது. கோரமான இருளில்மூழ்கி ஒருவரையொருவர்வதஞ்செய்கின்ற இருதிறத்து வீரர்களுக்கும் பெரும்போர் நடந்தது.

---

## நூற்றறுபத்தெட்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(கர்ணன் ஸஹதேவனைவென்று அவனைப் பரிகஸித்ததும், சல்யன் விராடனை ஜயித்ததும், அர்ஜுனன் அலாயுதனை வென்றதும்.)

ஓ! அரசரே! பிறகு, துரோணரை எதிர்க்கவேண்டுமென்று வருகின்ற ஸஹதேவனை யுத்தத்தில் சூரியகுமாரனான கர்ணன் தடுத்தான். ஸஹதேவனோ ராதேயனை ஒன்பது பாணங்களால் அடித்துப் படிந்த கணுக்களுள்ள பத்துப் பாணங்களால் மறுபடியும் அடித்தான். கைத்தேர்ச்சியுள்ளவனான கர்ணன் கணுக்கள்படிந்துள்ள அனேகம் அம்புகளால் அவனைத் திருப்பியடித்து நாணேற்றப்பட்டிருக்கிற அவ

னுடைய வில்லையும் சீக்கிரமாகத் துண்டித்தான். பிறகு, பிரதாபசாலியான மாத்ரீபுத்திரன் வேறுவில்லைக் கையிலெடுத்து இருபது பாணங்களால் கர்ணனை அடித்தான். அஃது ஆச்சரியமாயிருந்தது. கர்ணன் படிந்த கணுக்களுள்ள அம்புகளாலே அவனுடைய குதிரைகளைக் கொன்று அவனுடைய ஸாரதியையும் ஒரு பல்லத்தால் விரைவாக யமலோகத்திற்கனுப்பினான். ரதத்தையிழந்தவனான ஸஹதேவனோ கத்தியையும் கேடகத்தையும் கையிலெடுத்தான். கர்ணன் சிரித்துக்கொண்டு அம்புகளாலே அவன் கத்தியையும் கேடகத்தையும் நாசஞ்செய்தான். பிறகு, மிகுந்த கோபமூண்டவனான ஸஹதேவன் கனமானதும் மகாகோரமானதும் பொன்னால் சித்திரவேலைசெய்யப்பட்டதும் பெரிதுமான ஒரு கதாயுதத்தைச் சூரியகுமாரனான கர்ணனுடைய ரதத்தைக்குறித்துப் பிரயோகித்தான். ஸஹதேவனாலே பிரயோகிக்கப்பட்டு விரைவாக வருகின்ற அந்தக்கதையைக் கர்ணன் அம்புகளால் தடுத்துப் பூமியில் தள்ளினான். ஸஹதேவன் கதாயுதம் நாசஞ்செய்யப்பட்டதைக்கண்டு விரைவுடன் கர்ணன்மீது ஒரு சக்தியைப் பிரயோகித்தான். அதனையும் அவன் அம்புகளால் அறுத்தான். மகாராஜரே! பிறகு, ஸஹதேவன் எதிர்த்துநிற்கின்ற கர்ணனைக்கண்டு பரபரப்புடனே உத்தமமான ரதத்தினின்று விரைவாகப் பாய்ந்து யுத்தரங்கத்தில் ஒரு தேருருளையைக் கையிலெடுத்து ஸூதனான அந்தக் கர்ணன் மீது பிரயோகஞ்செய்தான். வேகத்துடன் வருகின்றதும் பிரயோகிக்கப்பட்ட காலசக்கரம்போன்றதுமான ரதசக்ரத்தை ஸூதபுத்திரன் அனேகமாயிரம் அம்புகளால் அறுத்தான். மகாத்மாவான ஸூதபுத்திரனாலே அந்தச் சக்ரம் நாசஞ்செய்யப்பட்டவுடன் ஸஹதேவன் கர்ணன்மீது ஏர்க்காலையும் பூட்டாங்கயிறுகளையும் பலவிதமான நுகத்தடிகளையும் யானைகளுடைய அங்கங்களையும் அவ்வாறே குதிரைகளையும் மரித்த அனேக மனிதர்களையும் எறிந்தான். அவைகளைக் கர்ணன் அம்புகளால் நாசஞ்செய்தான். அவனுடைய அம்புகளால் தடுக்கப்படுகின்ற மாத்ரீபுத்திரனான அந்த ஸஹதேவன் தான் ஆயுதமற்றவனாயிருத்தலை அறிந்து யுத்தத்தை விட்டுவிட்டான். பரதசிரேஷ்டரே! ராதேயன் ஸஹதேவனை க்ஷணத்திற்குள் பின்தொடர்ந்தோடி நகைத்து (பின்வரும்) சில வார்த்தையை உரைக்கலானான்: 'பயந்தவனே! மாத்ரீபுத்ர! ரணகளத்தில் சிரேஷ்டர்களான ரதிகர்களோடு நீ போர்புரியாதே. ஸமானர்களோடு நீ போர்புரி. என்னுடைய வார்த்தையில் நீ ஸந்தேகப்படாதே' என்று சொல்லிவிட்டு, மேலும் உக்ரமான வில்லினாலே அந்த ஸஹதேவனைக் குத்திக்கொண்டு மறுபடியும் சொல்லலானான். 'மாத்ரீ

புத்திர! இதோ அர்ஜுனன் ரணகளத்தில் கௌரவர்களோடு விரைவாகப் போர்புரிகிறான். அங்கு நீ செல். அல்லது இஷ்டமுண்டானால் வீட்டிற்கே செல்' என்றான். ரதிகர்களுள் சிறந்த கர்ணன் ஸஹதேவனைப் பார்த்து இவ்வாறு சொல்லிவிட்டுப் பாஞ்சாலர்கள் பாண்டவர்கள் இவர்களின் சேனைகளை எரிப்பவன்போலிருந்துகொண்டு ரதத்தோடு சென்றான். அரசரே! யுத்தத்தில் சத்ருக்களைக் கொல்லுகின்றவனும் ஸத்யஸந்தனும் மிக்க புகழுள்ளவனுமான கர்ணன், கொல்லப்படக்கூடிய நிலைமையை அடைந்திருக்கும் ஸஹதேவனைக் குந்தியின் வார்த்தையை நினைத்துக் கொல்லவில்லை. வேந்தரே! பிறகு, கர்ணனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டவனும் அவனுடைய சொல்லம்புகளால் தவிக்கும்படி செய்யப்பட்டவனுமான ஸஹதேவன் மனமநொந்து உயிரை வைத்திருப்பதில்கூட வெறுப்புற்றான். ஜனங்களை நடுங்கச்செய்கிறவனான அந்தக் கர்ணனுடைய யுத்தத்தில் மகாரதனான ஸஹதேவன் விரைந்து மகாபலசாலியான பாஞ்சாலகுமாரனுடைய ரதத்தின்மீதேறினான். துரோணரை உத்தேசித்துச் சேனையோடு விரைவாக வருகின்ற வில்லாளியான விராடனை மத்ரதேசாதிபதியான சல்யன் பாணஸமூகங்களால் மூடினான். அரசரே! யுத்தத்தில் திடமான வில்லைக் கையில் தாங்கினவர்களான அவ்விருவருக்கும் முற்காலத்தில் ஜம்பாஸுரனுக்கும் இந்திரனுக்கும் நடந்ததுபோன்ற யுத்தம் உண்டாயிற்று. மகாராஜரே! மத்ரராஜன் விரைபவனாகி ஸேனாபதியான விராடனைப் படிந்த கணுக்களுள்ள அநேக அம்புகளால் விரைவாக அடித்தான். அரசரே! அந்த விராடராஜனும் அந்தச் சல்யனைக் கூர்மையுள்ள ஒன்பது பாணங்களால் திருப்பியடித்து மறுபடியும் எழுபத்துமூன்று பாணங்களாலும் மறுபடியும் நூறு பாணங்களாலும் அடித்தான். மத்ரதேசாதிபன் விராடனுடைய ரதத்தில் பூட்டியுள்ள நான்குகுதிரைகளையும் ஸாரதியையுங் கொன்று யுத்தத்தில் இரண்டம்புகளால் அவன் கொடியையும் அறுத்துத் தள்ளினான். மகாரதனான விராடன் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று விரைவாகத் துள்ளிக் குதித்து வில்லில் நாணொலியெழுப்பிக் கூர்மையுள்ள அம்புகளைப் பிரயோகித்துக்கொண்டு நின்றான். பிறகு, சதாநீகன் தன் ஸகோதரனான விராடன் வாகனங்களையிழந்ததைக்கண்டு எல்லா ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே (சல்யனை) ரதத்தோடு விரைவாக எதிர்த்துவந்தான். பிறகு, எதிர்த்துவருகின்ற சதாநீகனை மகாயுத்தத்தில் மத்ரராஜன் அநேக அம்புகளாலடித்து யமலோகத்திற்கனுப்பினான். வீரனான அந்தச் சதாநீகன் கொல்லப்பட்டவுடனே, ரதிகசிரேஷ்டனான விராடன் கொடியும

மாலைகளும் கட்டியுள்ள அந்த ரதத்தின்மீதே விரைவாக ஏறினன். பிறகு, விராடன் கோபத்தினால் இருகண்களையும் புரட்டிவிழித்து இரு மடங்கான விக்கிரமத்துடன் பாணங்களால் மத்ரராஜனுடைய ரதத்தை விரைவாக மூடினன். பிறகு, மத்ரதேசாதிபன் கோடங்கொண்டு படிந்த கணுக்களுள்ள பாணத்தினால் ஸேனைத்தலைவனன விராடனை மார்பில் தைக்கும்படி அடித்தான். பரதசிரேஷ்டரே! நன்றாயடிக்கப்பட்ட அந்த விராடன் ரதமத்தியிலுட்கார்ந்து மிக்க மூர்ச்சையை அடைந்தான். யுத்தத்தில் அம்புகளால் அடிக்கப்பட்ட அவ்விராடனை ஸாரதி யுத்த களத்தினின்று வேறிடத்திற்குக் கொண்டுசென்றான். பாரதரே! பிறகு போரில் விளங்குந்தன்மையுள்ள சல்லியனால் அனேக அம்புகளால் கொல்லப்படுகின்ற அந்தப் பெரிய சேனையானது இராக்காலத்தில் ஓடியது. ராஜேந்திரரே! அந்தச் சேனை ஓடுவதைக்கண்டு வாஸுதேவரும் தனஞ்சயனும் சல்யனிருக்குமிடத்திற்குச் சென்றார்கள். ராஜரே! ராக்ஷஸசிரேஷ்டனன அலாயுதன் எட்டுச் சக்கரங்களுள்ளதும் குதிரை முகங்களும் பயங்கரமான காட்சியுமுள்ள பிசாசங்களோடுகூடியதும் சிவந்தவையும் நனைந்திருக்கின்றவையுமான கொடித்துணிகளுள்ளதும் சிவந்தமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும் உருக்குமயமானதும் கோர வடிவமுள்ளதும் கரடித்தோலால் மூடப்பட்டதுமான உத்தமமான ரதத்தின்மீதேறிக்கொண்டு அவ்விருவரையும் எதிர்த்தான். அரசரே! வில்ளப்பட்ட மைக்கொப்பான அந்த ராக்ஷஸன், பயங்கரமானதும் விசித்ரமான சிறகுகளுள்ளதும் கண்களைத் திறந்திருப்பதும் சப்திக்கின்றதுமான சிறந்த கழுகினால் பிரகாசிக்கின்றதும் தூக்கிநிறுத்தப்பட்ட கொடிமரமுள்ளதுமான கொடியினாலே விளங்கினன். அரசரே! அலாயுதன் அர்ஜுனனுடைய தலையில் நூற்றுக்கணக்கான அம்புத்திரள்களைப் பொழிந்துகொண்டு எதிர்த்துவருகின்ற அர்ஜுனனைக் காற்றை மலைதடுப்பதுபோலத் தடுத்தான். பாரதரே! அப்பொழுது பார்த்துக் கொண்டிருந்த எல்லாப்பிராணிகளுக்கும் பிரீதியையுண்டுபண்ணுகின்றதும் கிருத்ரங்கள், காக்கைகள், அண்டங்காக்கைகள், கோட்டான்கள், கங்கங்கள், நரிகள் இவைகளுக்கு ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறதும் மிகக்குரூரமாயிருக்கின்றதுமான மகாயுத்தமானது அப்பொழுது நரனுக்கும் ராக்ஷஸனுக்கும் நடந்தது. பாரதரே! அர்ஜுனன் அந்த அலாயுதனை நூறுபாணங்களாலடித்துக் கூர்மையுள்ள ஒன்பதுபாணங்களால் அவன் கொடியையுமறுத்து மூன்றுபாணங்களால் ஸாரதியையுங்கொன்று பின்னும் மூன்றுபாணங்களால் (ஸாரதி உட்காருமிடமாகிய) திரிவேணுகத்தையுமறுத்து ஒருபாணத்தால் வில்லையுமறுத்து

நான்குபாணங்களால் நான்கு குதிரைகளையும் நாசம்செய்தான். அலாயுதன் மறுபடியும் வேறுவில்லை எடுத்து நாணேற்றினான். அதனையும் அர்ஜுனன் இரண்டாகத் துண்டாக்கினான்; ரதத்தையிழந்தவனான அலாயுதனாலே கையிலெடுக்கப்பட்ட கத்தியையும் ஒரு பாணத்தினால் இரண்டாகத் துண்டாக்கினான். பாரதர்களில் சிறந்தவரே! பிறகு, பார்த்தன் கூர்மையுள்ள நான்குபாணங்களாலே ராக்ஷஸசிரேஷ்டனான அந்த அலாயுதனை அடித்தான். அடிக்கப்பட்ட அந்த அலாயுதன் பயத்தினால் ஓடினான். அரசரே! அர்ஜுனன் அந்த அலாயுதனை ஜயித்து வீரர்கள்மீதும் யானைகுதிரைகளின்மீதும் பாணசமூகங்களை வாரியிறைத்துக்கொண்டு விரைவாகத் துரோணருகில் வந்தான். மகாராஜரே! புகழ்பெற்ற பாண்டவனாலே, கொல்லப்படுகின்ற ஸைனிகர்கள் காற்றினால் முறிக்கப்பட்ட மரங்கள்போலப் பூமியில் விழுந்தார்கள். அரசரே! மகாபலசாலியான பல்குனனாலே அந்தக் கௌரவ வீரர்கள் நாசம்செய்யப்படும்பொழுது உமது புத்திரனுடைய சைனியம் முழுதும் புறங்காட்டி ஓடியது.

---

## நூற்றுயைத்தொன்பதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தத்தை வர்ணித்தது.)

பாரதரே! உம்முடைய சேனையை அம்புகளால் விரைவாக எரிக்கின்ற சதாநீகனை உமது குமாரனான சித்ரஸேனன் தடுத்தான். நகுலகுமாரனும் ஐந்துபாணங்களால் சித்ரஸேனனை அடித்தான். மகாராஜரே! அந்தச் சித்திரஸேனனும் கூர்மையுள்ள பத்துப்பாணங்களாலே யுத்தத்தில் சதாநீகனைத் திருப்பியடித்து மறுபடியும் கூர்மையுள்ள ஒன்பது பாணங்களாலே அவனை மார்பிலடித்தான். நகுலகுமாரனான சதாநீகன் மிகப் பதிவான கணுக்களுள்ள அம்புகளாலே அந்தச் சித்திரஸேனனுடைய கவசத்தைத் தேகத்தினின்று நன்றாக நழுவிவிழும்படி செய்தான். அது ஆச்சரியமாயிருந்தது. அரசரே! கவசத்தையிழந்த உமது புத்திரனை அந்தச் சித்திரஸேனன் காலத்தில் சட்டையுரித்த ஸர்ப்பம்போல் மிகவும் பிரகாசித்தான். மகாராஜரே! பிறகு, நகுலகுமாரன் யுத்தத்தில் முயற்சியுள்ள சித்திரஸேனனுடைய த்வஜத்தையும் வில்லையும் கூர்மையுள்ள பாணங்களால் அறுத்தான். மகாராஜரே! யுத்தரங்கத்தில் வில் அறுக்கப்பட்டவனும் கவசத்தை இழந்தவனு

மான அந்த மகாரதன் சத்துருக்களைப் பிளக்குந் திறமையுள்ள வேறு வில்லைக் கையிலெடுத்தான். பிறகு, பரதர்களுள் மகாரதனுன அந்தச் சித்ரஸேனன் யுத்தத்தில் கோபங்கொண்டு ஒன்பதுபாணங்களால் நகுலகுமாரனை அடித்தான். பெரியவரே! பிறகு, நரோத்தமனுன சதாநீகனும் மிகுந்த கோபங்கொண்டு சித்திரஸேனனுடைய நான்கு குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றான். மகாரதனும் பலசாலியுமான சித்திரஸேனன் அந்த ரதத்தினின்று துள்ளிக்குதித்து இருபத்தைந்துபாணங்களால் நகுலகுமாரனை அடித்தான். யுத்தரங்கத்தில் அவ்விதமான கார்யத்தைச் செய்கின்ற அந்தச் சித்திரஸேனனுடைய ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட வில்லை நகுலகுமாரன் ஓர் அர்த்த சந்திரபாணத்தால் அறுத்தான். வில் அறுக்கப்பட்டவனும் ரதத்தையிழந்தவனும் குதிரையையிழந்தவனும் ஸாரதியை யிழந்தவனுமான அந்தச் சித்ரசேனன் மகாத்மாவான கிருதவர்மாவினுடைய ரதத்தில் விரைவாக ஏறிக்கொண்டான். துரோணரை எதிர்க்கக்கருதினவனும் பெரியசேனையுடன் கூடியவனும் மகாரதனுமான துருபதனை விருஷஸேனன் அப்பொழுது அனேக பாணங்களை (அவன்மீது) இறைத்துக்கொண்டு விரைவாக எதிர்த்தான். குற்றமற்றவரே! யஜ்ஞஸேனனே மகாரதனுன கர்ணபுத்ரனை யுத்தத்தில் அறுபதுபாணங்களால் இரண்டுகைகளிலும் மார்பிலும் அடித்தான். விருஷஸேனனே மிகுந்தகோபங்கொண்டு ரதத்திலிருக்கின்ற யஜ்ஞஸேனனைக் கூர்மையுள்ள அனேகஅம்புகளாலே மார்பிலடித்தான். மகாராஜரே! அம்புகளால் துன்புறுத்தப்பட்ட அங்கங்களுள்ளவர்களும் அம்புகளால் நிறைக்கப்பட்ட மேனியையுடையவர்களுமான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் முட்களால்நிறைந்துள்ள இரண்டு முள்ளம்பன்றிகள்போல் விளங்கினார்கள். மகாயுத்தத்தில் பொற்கட்டுள்ளவைகளும் பளபளப்பான முனையுள்ளவைகளுமான அம்புகளாலே கவசங்களுடைக்கப்பட்டவர்களும் ரத்தவெள்ளத்தால் நனைக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் மிகவும் பிரகாசித்தார்கள். ஸ்வர்ணம்போன்றவர்களும் விசித்திரமானவர்களும் கல்பகவிருக்ஷங்கள்போல ஆச்சரியகாரர்களுமான அவ்விருவரும் பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷங்கள்போல் யுத்தகளத்தில் மிகவும் பிரகாசித்தார்கள். அரசரே! பிறகு, விருஷஸேனன் துருபதராஜனை ஒன்பதுபாணங்களாலடித்து மறுபடியும் எழுபது பாணங்களாலடித்துத் திரும்பத்திரும்ப மும்மூன்று பாணங்களாலும் அடித்தான். மகாராஜரே! பிறகு, ஆயிரக்கணக்கான அம்புகளைப் பிரயோகிக்கின்ற கர்ணபுத்திரன் அப்பொழுது வர்ஷிக்கின்ற மேகம்போல் பிரகாசித்தான். பிறகு, துருபதனே கோபங்

கொண்டு விருஷஸேனனுடைய வில்லைத் துவைந்ததும் கூர்மையுள்ளது மான பல்லத்தால் இரண்டாகஅறுத்தான். அந்த விருஷஸேனன் பொற் பூண்கட்டப்பட்டதும் புதியதும் உறுதியாயிருக்கின்றதுமான வேறு வில்லைக்கையிலெடுத்துப் பளபளப்புள்ளதும் துவைந்ததும் நீட்டப்பட் டதும் உறுதியாயிருப்பதுமான ஓரம்பை அம்புப்பெட்டியினின்று உருவி வில்லிற்பூட்டித் துருபதனைக் குறிவைத்து ஸோமகர்களெல்லோ ரையும் பயமடையும்படி செய்துகொண்டு காதுவரையிலுமிழுத்துப் பிர யோகம்செய்தான். அவ்வம்பானது அவன் மார்பைப்பிளந்துகொண்டு பூமியில் பிரவேசித்தது. விருஷஸேனனுடைய அம்பினலடிக்கப்பட்ட துருபதராஜன் மூர்ச்சையடைந்தான். ராஜேந்திரரே! பாஞ்சாலர்களுள் மகாரதனை துருபதராஜன் தோல்வியடைந்தவுடனே ஸாரதியானவன் தன்கடமையை நினைத்துக்கொண்டு யுத்தபூமியினின்று அவனை வேறி டத்திற்குக் கொண்டுசென்றான். வேந்தரே! பிறகு, பயங்கரமான அர்த்த ராத்திரிவேளையில் துருபதனுடையசேனை அம்புகளால் கவசங்களுடை க்கப்பட்டவையாகி விரைவாக யுத்தரங்கத்தினின்றோடியது. அந்த நடு நிசியில் யுத்தபூமியானது நான்குபக்கங்களிலும் போர்வீரர்களால் பிடிக் கப்பட்டு ஜ்வலிக்கின்ற தீபங்களாலே மேகங்களற்ற ஆகாயமானது ஜ்யோதிர்மண்டலங்களால் விளங்குவதுபோல விளங்கியது. மகாராஜரே! அவ்வாறே கீழேவிழுந்திருக்கின்ற தோள்வளைகளாலே யுத்தபூமியானது வர்ஷாகாலத்தில் மின்னல்களால் மேகம் விளங்குவதுபோல விளங்கியது. தாரகாசுரனுடையயுத்தத்தில் இந்திரனிடமிருந்துபயந்து அசுரர்கள் ஓடி னதுபோல ஸோமகர்கள் கர்ணபுத்திரனிடமிருந்து பயந்து நான்குபக்கங் களிலும்ஓடினார்கள். மகாராஜரே! யுத்தகளத்தில் அவனால் பீடிக்கப்பட்டு ஓடுகின்ற ஸோமகர்கள் தீபங்களால் விளக்கப்பட்டு விளங்கினார்கள். பாரதரே! கர்ணபுத்திரன் யுத்தத்தில் அவர்களைவென்று உச்சிப்பொழு தையடைந்த சூரியன்போல விளங்கினான். உம்மைச்சேர்ந்தவர்களும் பிறரைசசேர்ந்தவர்களுமான ஆயிரக்கணக்கான அரசர்களுள் பிரதாப சாலியான விருஷஸேனன் ஒருவனே ஜ்வலித்துக்கொண்டுநின்றான். அந்த விருஷசேனன் ஸோமகர்களுள் சூரர்களான மகாரதர்களை யுத்த த்தில் ஜயித்துவிட்டு யுதிஷ்டிரராஜரிருக்குமிடத்திற்கு விரைவாகச் சென்றான். பிறகு, கோபங்கொண்டவனும் பகைவரையெரிப்பவனுமான பிரதிவிந்தியனை மகாரதனும் உமது புத்திரனுமான துச்சாஸனன் ரண களத்தில் எதிர்த்தான். அரசரே! மேகங்களில்லாத ஆகாயத்தில் புத னுக்கும் சூரியனுக்கும் எதிர்ப்பு உண்டாவதுபோல அவ்விருவருக்கும் ஆச்சரியமான தோற்றமுள்ள போர் உண்டாயிற்று. மகாராஜரே! யுத்த

த்தில் செய்யமுடியாதகாரியத்தைச் செய்கின்றவனை பிரதிவிந்தியனை உமது ஸைன்யத்திலுள்ள மகாரதர்களும் கொண்டாடினார்கள். துச்சாஸனன் மூன்றுபாணங்களால் அவன் நெற்றியில் அடித்தான். பலசாலியும் வில்லாளியுமான உமதுபுத்திரனாலே மிகவும் அடிக்கப்பட்டிருக்கின்ற மகாபாகுபலமுள்ள பிரதிவிந்தியன் சொடுமுடிகளுடன்கூடின மலைபோல் விளங்கினான். மகாரதனான பிரதிவிந்தியன் யுத்தத்தில் துச்சாஸனனை ஒன்பது பாணங்களாலடித்து மறுபடியும் ஏழுபாணங்களால் அடித்தான். பாரதரே! உமது குமாரன் அந்தயுத்தகளத்தில் ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்தான். பிரதிவிந்தியனுடைய குதிரைகளை உக்கிரமான அம்புகளாலே அடித்துக் கீழேதள்ளி அவனுடைய ஸாரதியையும் கொடிமரத்தையும் ஒருபல்லத்தினால் கீழேதள்ளினான். வில்லாளியான அந்தப்பிரதிவிந்தியனுடைய தேரினையும் எள்ளளவெள்ளளவாக நாசஞ்செய்தான். பிரபுவே! கோபங்கொண்ட துச்சாஸனன் பதிவானகணுக்களுள்ள அம்புகளாலே கொடித்துணிகளையும் அம்பறாத்தூணிகளையும் கடிவாளங்களையும் பூட்டாங்கயிறுகளையும் எள்ளளவெள்ளளவாகத் துண்டாக்கினான். தர்மாத்மாவான அந்தப்பிரதிவிந்தியன் ரதத்தையிழந்து வில்லைக்கையில்பிடித்து நின்றுகொண்டும் நூற்றுக்கணக்காக அனேகம் அம்புகளை யிறைத்துக்கொண்டும் உமது புத்திரனோடு போர்புரிந்தான். அவனுடையவில்லை உம்முடையகுமாரன் ஒரு க்ஷுரப்ரத்தினால் அறுத்தான். பிறகு, வில் அறுக்கப்பட்ட பிரதிவிந்தியனைப் பத்துப்பாணங்களால் அடித்தான். பிரதிவிந்தியன் தேரிழந்ததைக்கண்டு அந்தயுத்தகளத்தில் மகாரதர்களான அவனுடையசகோதரர்கள் பெரியசேனையுடன் உதவிசெய்வதின்பொருட்டு அவனை அனுஸரித்தார்கள். மகாராஜரே! பிறகு, பிரதிவிந்தியன் பிரகாசிப்பதான ஸுதஸோமனுடைய ரதத்தின்மீதேறி (வேறு) வில்லைக்கையில்பிடித்து உமதுபுத்திரனை அடித்தான். பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களெல்லாரும் உம்முடைய புத்திரனைச் சூழ்ந்துகொண்டு பெரியசேனையினால் சூழப்பட்டவர்களாகி வேகத்தோடு எதிர்த்தார்கள். பாரதரே! பிறகு, பயங்கரமான அர்த்தராத்திரிகாலத்தில் யமனுடைய ராஜ்யத்தை விருத்திபண்ணுகிறதான யுத்தமானது உம்மைச்சேர்ந்தவர்களுக்கும் பிறருக்கும் நடக்க ஆரம்பித்தது.

---

## நூற்றெழுபதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(நகுலன் சகுனியையும் கிருபர் சிகண்டியையும் வென்றது.)

அரசரே! உம்முடைய சைனியத்தைக் கொல்லுகிறவனும் யுத்தத்தில் வேகமுள்ளவனுமான நகுலனைச் சகுனி கோபங்கொண்டு எதிர்த்தான்; 'நில், நில்' என்றும் சொன்னான். பகைமையையுடையவர்களும் அன்னியோன்னியம் வதத்தைவிரும்புகின்றவர்களும் வீரர்களுமான அவ்விருவரும் காதுவரையில் இழுத்து நன்றாகவிடப்பட்ட அம்புகளாலே பரஸ்பரம் அடித்தார்கள். அரசரே! எவ்வாறு நகுலன் பாணவர்ஷங்களைப்பொழிந்தானோ அவ்வாறே ஸௌபலனும் யுத்தத்தில் ஆயுதப்பயிற்சியைக் காண்பித்துக்கொண்டு பாணவர்ஷங்களைப் பொழிந்தான். மகாராஜரே! யுத்தத்தில் அம்புகளாகிற முட்களைத்திருக்கிற சூரர்களான அவ்விருவரும் அப்பொழுது இரண்டு முள்ளம்பன்றிகள் முட்களோடு விளங்குவதுபோல விளங்கினார்கள். மகாயுத்தத்தில் பொற்புங்கமுள்ளவைகளும் நேரானமுனையுள்ளவைகளுமான அம்புகளால் கவசங்களுடைக்கப்பட்டவர்களும் இரத்தவெள்ளத்தினால் நனைக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் மிகப்பிரகாசித்தார்கள். பொன்போலவிளங்குகிறவர்களும ஆச்சரியகார்களுமான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் கல்பகவிருக்ஷங்கள்போலவும் பூத்திருக்கின்ற பலாசவிருக்ஷங்கள்போலவும் விளங்கினார்கள். மகாராஜரே! சூரர்களும் யுத்தத்தில அம்புகளால் தேகங்கள் துளைக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் அப்பொழுது முட்களால்நிறைந்த இலவமரங்கள்போல விளங்கினார்கள். மன்னரே! அவ்விருவரும் கண்களைவிழித்துக் குறுக்காகப்பார்க்கின்றவர்களாகவும் கோபத்தால் கண்கள் மிகச்சிவந்தவர்களாகவும் ஒருவரையொருவர் எரிப்பவர்களாகவும் காணப்பட்டார்கள். உமது மைத்துனனான சகுனியோ மிகுந்தகோபமுற்றுச் சிரித்துக்கொண்டு கூர்மையுள்ள கர்ணியென்கிற பாணத்தினால் மாத்ரிபுத்ரனை மார்பிலடித்தான். நகுலனோ வில்லாளியான உம்முடையமைத்துனனாலே நன்கு அடிக்கப்பட்டு ரதமத்தியில் உட்கார்ந்து அதிக மூர்ச்சையை அடைந்தான். அரசரே! மிக்கபகையாளியும் கொழுப்புடையவனுமான சத்துரு அவ்வித நிலைமையையடைந்ததைக் கண்டு சகுனி கிரீஷ்மகாலத்தின்முடிவில மேகம்கர்ஜிப்பதுபோலக் கர்ஜித்தான். பாண்டுபுத்திரனானநகுலன் பிறகு நினைவையடைந்து மறுபடியும் வாயைத்திறந்திருக்கும் அந்தகன்போல ஸௌபலனை எதிர்த்தான்.

பரதஸ்ரேஷ்டரே! நகுலன் அதிககோபங்கொண்டு சகுனியை மார்பில் அறுபதுபாணங்களாலும் மறுபடியும் நூறுபாணங்களாலும் அடித்தான். பிறகு, அம்புடன்கூடிய சகுனியினுடையவில்லைக் கைபிடிக்குமிடத்தில் அறுத்தான். விரைவாக அவனுடைய கொடியையுமறுத்து ரதத்திலிருந்து பூமியில்தள்ளினன். பாண்டுபுத்திரனைநகுலன் கூர்மையுள்ளதும் துவைந்ததும் தீட்டப்பட்டதுமான ஓரம்பினாலே இரண்டு தொடைகளையும்பிளந்து சிறகுகளுள்ள ஒருகழுகை வேடன் ஓரம்பினால் அடித்துத்தள்ளுவதுபோல அப்பொழுது கீழேதள்ளினன். மகாராஜரே! அதிகமாக அடிக்கப்பட்ட அந்தச் சகுனி காமுகன் காமினியைத் தழுவுவதுபோலக் கிலேசத்தோடு கொடிமரத்தைத் தழுவிக்கொண்டு தேர்நடுவில் உட்கார்ந்தான். மாசற்றவரே! நினைவற்றுக் கீழேவிழுந்திருக்கின்ற உமதுமைத்துனனைப்பார்த்து ஸாரதி விரைவாக ஸேனாமுகத்திலிருந்து ரதத்தோடு அவனை வேறிடத்திற்குக் கொண்டுபோனன். பிறகு, பார்த்தர்களும் அவர்களுடன் யுத்தத்தில் உதவிக்காக வந்திருக்கின்றமற்றவர்களும் ஆரவாரித்தார்கள். சத்துருக்களைத்தவிக்கச்செய்பவனனநகுலன் கோபங்கொண்டு யுத்தத்தில் பகைவனைவென்று ஸாரதியைநோக்கி, 'என்னைத் துரோணருடைய சேனையைநோக்கிக் கொண்டு செல்' என்று சொன்னன். அரசரே! அந்த மாத்ரீபுத்திரனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு ஸாரதி அப்பொழுது துரோணர் இருக்கின்ற இடத்திற்கு ரதத்தோடுசென்றான்.

அரசரே! யுத்தத்தில் துரோணரையே அணுக விரும்பிய சிகண்டியைச் சாத்வானுடைய குமாரரான கிருபர் வேகத்துடனும் முயற்சியுடனும் எதிர்த்தார். துரோணருடைய படையிலிருப்பவரும் (தன்னை) வேகமாக எதிர்த்துவருகிறவரும் சத்துருக்களையடக்குகிறவருமான கௌதமரைச் சிகண்டி நகைத்துக்கொண்டு ஒன்பது பல்லங்களாலடித்தான். மகாராஜரே! உமது புத்திரர்களுக்குப் பிரியத்தைச் செய்பவரான கிருபாசாரியர் அந்தச் சிகண்டியை ஐந்துபாணங்களாலடித்து மறுபடியும் இருபதுபாணங்களால் அடித்தார். அவ்விரு வீரர்களுக்கும் தேவாஸுரயுத்தத்தில் சம்பராஸுரனுக்கும் தேவராஜனுக்கும் யுத்தம் நடந்ததுபோலக் கோரமும் பயங்கரமுமான பெரிய யுத்தமானது நேர்ந்தது. வீரர்களும் யுத்தத்தில் அடங்காதமதங்கொண்டவர்களுமான அம்மகாரதர்களிருவரும் கிரீஷ்மருதுவினுடைய முடிவுக்காலத்தில் இரண்டு மேகங்கள்போல் ஆகாயத்தைப் பாணஸமூகங்களால் மூடப்பட்டதாகச் செய்தார்கள். இயற்கையாகவே கோரமா

யிருக்கும் அந்த யுத்தமானது பின்னும் மிக்ககோரமாயிற்று. பரத ஸ்ரேஷ்டரே! யுத்தஞ்செய்கின்ற யுத்தவீரர்களுக்கு அன்றிரவானது கோரவடிவமுள்ளதும் பயங்கரமானதும் காலராத்திரிபோன்றதுமா யிற்று. மகாராஜரே! அப்பொழுது சிகண்டியோ நாணேற்றப்பட்டுள்ளதும் அம்போடுகூடியதுமான கௌதமருடைய பெரியவில்லை அர்த்த சந்திரபாணத்தினால் அறுத்தான். வேந்தரே! கிருபர் கோபங்கொண்டு பொற்காம்புள்ளதும் முனைமழுங்காததும் கருமானால் நன்றாகத் தீட்டப்பட்டதும் பயங்கரமாயுள்ளதுமான ஒருசக்தியைப் பிரயோகித்தார். வருகின்ற அந்தச் சக்தியாயுதத்தைச் சிகண்டி அனேக பாணங்களால் அறுத்தான். பிரகாசிக்கின்றதும் அதிகமான காந்தியுள்ளதுமான அந்தச் சக்தியானது அறுக்கப்பட்டுப் பூமியில்விழுந்தது. மகாராஜரே! ரதிகர்களுள் உத்தமரானகௌதமரும், பிறகு, வேறுதனுஸைக்கையி லெடுத்துச் சிகண்டியைக் கூர்மையுள்ள பாணங்களாலே மூடினார். யுத்த ரங்கத்தில் கீர்த்திமானான கௌதமராலே மூடப்படுகின்ற ரதிகசிரேஷ்டனானசிகண்டி தேர்நடுவில் உட்கார்ந்தான். பாரதரே! சாரத்வதரான கிருபாசாரியர் யுத்தத்தில் சிகண்டி களைத்துப்போனதைக்கண்டு (அவனை) கொல்லக்கருதி அநேக அம்புகளாலே அவனை அடித்தார். யுத்தத்தில் மகாரதனான சிகண்டி புறங்காட்டியதைக்கண்டு பாஞ்சாலர் களும் ஸோமகர்களும் நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். அவ்வாறே, பிராம்மணோத்தமரான கிருபாசாரியரையும் பெரிய சேனை யுடன் உம்முடைய குமாரர்கள் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, யுத்தம் தொடங்கியது. மன்னரே! யுத்தத்தில் ஒருவரையொருவர் எதிர்த் தோடிவருகின்ற ரதிகர்களுடைய நெருங்கிய ஒலியானது கர்ஜிக்கின்ற மேகங்களினுடைய முழக்கம்போலத் தோன்றியது. அரசரே! ஒரு வரையொருவர் எதிர்த்து ஓடிவருகின்ற குதிரைவீரர்களுக்கும் யானை களுக்கும் குரூரமான யுத்தமானது நடந்தது. பிரஜைகளுக்கு நாதரே! மன்னரே! ஓடுகின்ற காலாட்களுடைய காலோசையாலே பூமியானது பயத்தால் நடுக்கமுற்ற ஸ்திரீயைப்போல் நடுங்கியது. வேந்தரே! அனேக ரதிகர்கள் ரதத்திலேறி அதிவேகமாகவோடிக் காக்கைகள் விட்டிற் பூச்சிகளைப்பிடிப்பதுபோல (பகைவர்களைக்) கவர்ந்துகொண்டார்கள். பாரதரே! முயற்சியுள்ளவைகளும் மதப்பெருக்குள்ளவைகளுமான பெரியயானைகள் அவ்வாறே மதப்பெருக்குள்ளயானைகளை அதே இடத் தில் வென்றன. போர்க்களத்தில் மிகுந்த பரபரப்புள்ளவர்களான குதிரைவீரர்கள் குதிரைவீரர்களையும் காலாட்கள் காலாட்களையும் எதிர்த்து ஒருவரையொருவர் மீறாமலிருந்தார்கள். அந்த யுத்தரங்கத்

தில் ஓடுகின்றவர்களும் விரைவாகச் செல்லுகின்றவர்களும் மறுபடியுந் திரும்புகின்றவர்களுமான படைவீரர்களுடைய பெரிதான ஒலியானது இரவில் தோன்றியது. மகாராஜரே! இரதங்களிலும் யானைகளிலும் குதிரைகளிலும் ஜ்வலிக்கின்ற தீவட்டிகள், ஆகாயத்தினின்று கீழே நழுவிவிழுகின்ற பெரிய உற்கைகள்போலக் காணப்பட்டன. அரசரே! பாரதசிரேஷ்டரே! பெரிய தீபங்களாலே காந்தியுடையதாகச் செய்யப் பட்ட அந்த இரவானது யுத்தமுனையில் பகலுக்கொப்பாக விருந்தது. உலகத்தில் சூழ்ந்திருக்கிற இருளானது எவ்வாறு சூரியனால் அழியுமோ அவ்வாறே இங்குமங்கும் ஜ்வலிக்கின்ற தீபங்களாலே கோரமான இருளானது அழிந்துவிட்டது. புழுதியினாலும் இருளா லும் வியாபிக்கப்பட்ட ஆகாயமும் பூமியும் திக்குக்களும் திக்குக் கோணங்களும் ஒளியினால் விளக்கப்பட்டன. அந்தத் தீபங்களாலே விளக்கப்பட்டவைகளான மகாத்மாக்களுடைய அஸ்திரங்கள் கவசங்கள் ரத்னங்கள் இவற்றின் ஒளிகளெல்லாம் மறைந்தன. பாரதரே! அந்த இரவின் தொடக்கத்தில் பெரிய ஆரவாரத்துடனகூடின யுத்தம் நடக்கும்பொழுது, ஒரு பிராணியாவது, 'யான் இங்கு இருக்கிறேன்' என்று தன்னிலைமையைத் தெரிந்துகொள்ளவில்லை. பாரதசிரேஷ் டரே! அந்த யுத்தகளத்தில் அறியாமையால் பிதா புத்திரனைக் கொன் றான்; புத்திரனும் பிதாவைக் கொன்றான்; மித்திரன் மித்திரனைக் கொன்றான்; மருமகனை அம்மான் கொன்றான்; அம்மானை மருமகன் கொன்றான். தம்மவர்கள் தம்மவர்களையும், பிறர்கள் பிறர்களையும் ஒரு வரையொருவர் கொன்றார்கள். இராக்காலத்தில் அந்த யுத்தமானது பயந்தவர்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணுகிறதும் வரம்புகடந்தது மாயிருந்தது.

---

## நூற்றெழுபத்தோராவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருக்கும் திருஷ்டத்யும்னன் முதலானவர்களுக்கும் ஸங்குல யுத்தம்.)

மகாராஜரே! மிகவும் கைகலந்ததும், பயங்கரமுமான அந்த யுத்தமானது நடக்கும்பொழுது, திருஷ்டத்யும்னன் துரோணரையே எதிர்த்தான். சிறந்த வில்லில் பாணங்களைப் பூட்டிக்கொண்டும் அடிக்

கடி நாண்கயிற்றை யிழுத்துக்கொண்டும் பொன்னால் அலங்கரிக்கப் பட்ட துரோணருடைய ரதத்தைக்குறித்து எதிர்த்துவந்தான். மஹாராஜரே! துரோணரை வதஞ்செய்யவிரும்பி எதிர்த்துவருகின்ற திருஷ்டத்யும்னனைப் பாஞ்சாலர்கள் பாண்டவர்களுடன் நான்குபுறத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். ஆசாரிய சிரேஷ்டரான துரோணர் யுத்தகளத்தில் அவ்வாறு சூழப்பட்டதைக்கண்டு உமதுடைய புத்திரர்கள் முயற்சியுடன் நான்குபுறத்திலும் நின்று பாதுகாத்தார்கள். பிறகு, முன்னிரவில அந்தச் சேனைசமுத்திரங்களிரண்டும், காற்றினால் கொந்தளிப்புற்றவையும் அலைக்கப்பட்ட ஜலஜந்துக்களுள்ளவையும் அச்சந்தருபவையுமான இரண்டு கடல்கள்போல எதிர்த்தன. மகாராஜரே! பிறகு, பாஞ்சாலராஜகுமாரனான திருஷ்டத்யும்னன் ஐந்துபாணங்களாலே துரோணரை மார்பிலடித்து விரைவாக ஸிம்மநாதத்தைச் செய்தான். துரோணர் யுத்தரங்கத்தில் திருஷ்டத்யும்னனை இருபத்தைந்து பாணங்களாலடித்து வேறு ஒருபல்லத்தினாலே பேரொலியுள்ளதான அவனுடைய வில்லையும் அறுத்தார். பரதசிரேஷ்டரே! துரோணராலே மிகவும் அடிக்கப்பட்ட திருஷ்டத்யும்னன் உதட்டைக் கடித்துக்கொண்டு அந்த வில்லை விரைவாகக் கீழே எறிந்தான். மஹாராஜரே! பிறகு, பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் கோபங்கொண்டவனாகித் துரோணரை நாசம்செய்யும் விருப்பத்துடன் வேறொரு சிறந்த வில்லைக் கையிலெடுத்தான். பகைவர்களைக் கொல்பவனான திருஷ்டத்யும்னன் ஆச்சரியகரமானவில்லை இழுத்துத் துரோணருடைய உயிரைமாய்க்கக்கூடிய் கோரமான ஒருபாணத்தைப் பிரயோகித்தான். மகாயுத்தத்தில் பலசாலியான திருஷ்டத்யும்னனால் விடப்பட்ட கோரமான அம்பானது அச்சைனியத்தை உதித்த சூரியன்போல் விளங்கச்செய்தது. அரசரே! கோரமான அவ்வம்பைக்கண்டு தேவர்களும் கந்தர்வர்களும் மனிதர்களும் யுத்தத்தில், 'துரோணருக்கு மங்களம் உண்டாகவேண்டும்' என்கிறவார்த்தையைச் சொன்னார்கள். வேந்தரே! ஆசாரியருடைய ரதத்தைநோக்கிவருகின்ற அந்த அம்பைக் கைதேர்ந்தவனானகர்ணன் பன்னிரண்டாகத் துண்டாக்கினான். அரசரே! வில்லாளியான ஸூத புத்திரனாலே பலவாகத்துண்டிக்கப்பட்ட அவ்வம்பானது விஷத்தை யிழந்தஸர்ப்பம்போல விரைவாக விழுந்தது. யுத்தரங்கத்தில் கர்ணன் படிவானகணுக்களுள்ள பாணங்களாலே அவ்வம்பைத் துண்டாக்கிவிட்டுப் பிறகு, பத்துப்பாணங்களால் திருஷ்டத்யும்னனை அடித்தான். மகாரதர்களான துரோணபுத்ரர், துரோணர், சல்யன், துச்சாஸனன், துரியோதனன், சகுனி இவர்களெல்லோரும் விரைவுடன் பாஞ்சால

ராஜகுமாரனான திருஷ்டத்யும்னனை முறையே ஐந்துபாணங்களாலும் ஏழுபாணங்களாலும் பத்துப்பாணங்களாலும் மூன்றுபாணங்களாலும் இருபதுபாணங்களாலும் ஐந்துபாணங்களாலும் அடித்தார்கள். அரசரே! மகாயுத்தத்தில் துரோணர் நிமித்தமாகக் கோரஸ்வரூபிகளான ஏழுவீரர்களாலே அடிக்கப்பட்டவனான திருஷ்டத்யும்னன் மனங்கலங்காமலே எல்லாரையும் மும்மூன்றுபாணங்களால் திருப்பியடித்தான்; துரோணரையும் துரோணபுத்திரரையும் கர்ணனையும் உம்முடைய குமாரனையும் பின்னும் அடித்தான். வில்லாளியான திருஷ்டத்யும்னனாலே பிளக்கப்படுகின்றவர்களும் ரதிகர்களுள் சிரேஷ்டர்களுமான ஒவ்வொருவரும் யுத்தத்தில் ஐந்து ஐந்து பாணங்களால் மறுபடியும் விரைவாக அவனை அடித்தார்கள். அரசரே! துருமஸேனனோ அதிக கோபங்கொண்டு திருஷ்டத்யும்னனை ஒருபாணத்தினாலும் மற்றும் மூன்றுபாணங்களாலும் விரைவாக அடித்து, 'நில், நில்' என்றும் சொன்னான். அந்தத் திருஷ்டத்யும்னனோ அந்த த்ருமஸேனனைக் கூர்மையுள்ளவைகளும் நேராகப்பாய்கின்றவைகளும் பொன்னாலமைந்த புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளும் யுத்தத்தில் பிராணன்களை வாங்குகின்றவைகளுமான மூன்றுபாணங்களாலே திருப்பியடித்தான். வீர்யமுடையவனான திருஷ்டத்யும்னன் வேறு ஒரு பல்லத்தினாலே ஸ்வர்ணத்தினால் பிரகாசமான குண்டலங்களணிந்த த்ருமஸேனனுடைய தலையை அவர் சரீரத்தினின்று அறுத்தான். யுத்தத்தில் உதடுகளை நன்குகடித்துக்கொண்டிருக்கும் அந்தத் துருமஸேனனுடைய தலையானது பெருங்காற்றால் உதிர்க்கப்பட்ட பழுத்த பனம்பழம்போல் பூமியில் விழுந்தது. வீரனான திருஷ்டத்யும்னன் மிக்க கூர்மையுள்ள அம்புகளாலே அந்த வீரர்களை மறுபடியும் அடித்துவிட்டு விசித்ரமாக யுத்தஞ்செய்கின்ற கர்ணனுடைய வில்லையும் பல்லங்களாலே அறுத்தான். பெரிய ஸிம்மமானது அதிக கொடுமையான தன் வாலறுத்தலைப்பொறுக்காததுபோலக் கர்ணன் தன் வில்லை அறுத்தலைப் பொறுக்கவில்லை. கர்ணன் வேறொரு வில்லைக் கையிலெடுத்துக் கோபத்தால் கண்கள்சிவந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு மகாபலசாலியான திருஷ்டத்யும்னனைப் பாணஸமூகங்களோடு எதிர்த்தான். ரதிகர்களுள் சூரர்களான அவ்வாறு வீரர்களும் யுத்தமுயற்சியுடையவனான கர்ணனைக்கண்டு பாஞ்சால ராஜகுமாரனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தோடு விரைபவர்களாகி நான்குபுறத்திலும் சுற்றிக்கொண்டார்கள். யுத்தவீரர்களுள் மிக்க மேன்மைபெற்றவர்களான உம்மைச்சேர்ந்த ஆறு வீரர்களும் எதிரில்நிற்கின்ற திருஷ்டத்யும்னனை யமனுடைய

வாயை அடைந்தவனாகவே நாங்கள் எண்ணினேனும், இச்சமயத்தில் தாசார்ஹகுலத்திற் பிறந்தவனான ஸாத்யகி அம்புகளாயினறத்துக்கொண்டு, பராக்ரமத்தைச்செலுத்துகின்ற திருஷ்டத்யும்னனை வந்தடைந்தான். வருகின்றவனும் பெரியவில்லைக் கைபிலேந்தியவனும் யுத்தத்தில் கெட்ட மதங்கொண்டவனுமான ஸாத்யகியை ராதேயன் நேராகச் செல்லுகிற பத்துப்பாணங்களாலே எதிர்த்தடித்தான். மகாராஜரே! அக்கர்ணனை ஸாத்யகியானவன் எல்லா வீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பத்துப்பாணங்களாலடித்து, 'போகாதே, நில்' எனவும் சொன்னான். அரசரே! பலசாலியான ஸாத்யகிக்கும் மகாத்மாவான கர்ணனுக்கும், பலிசக்கரவர்த்திக்கும் மகேந்திரனுக்கும் யுத்தத்தின்பொருட்டு எதிர்ப்பு உண்டானதுபோல எதிர்ப்பு உண்டாயிற்று. க்ஷத்திரிய சிரேஷ்டனான ஸாத்யகி ரதத்தினுடைய சப்தத்தினாலே க்ஷத்திரியர்களைப் பயப்படுத்திக்கொண்டு தாமரைமலர்போன்ற கண்களையுடைய கர்ணனைத் திருப்பியடித்தான். மகாராஜரே! பலசாலியான ஸூதபுத்திரன் வில்லினுடைய சப்தத்தினாலே பூமியை நடுங்கச்செய்துகொண்டு ஸாத்யகியை எதிர்த்துப் போர்புரிந்தான். கர்ணன் ஸாத்யகியை விபாடங்களாலும் கர்ணிகளாலும் நாராசங்களாலும் வத்ஸதந்தங்களாலும் க்ஷுரங்களாலும் இன்னும் அநேக அம்புகளாலும் திருப்பியடித்தான். அவ்வாறே விருஷ்ணிகளுள் உத்தமனான ஸாத்யகியும் யுத்தகளத்தில் போர்புரிந்துகொண்டு அம்புகளைக் கர்ணன்மீது பொழிந்தான். அந்த யுத்தம் ஸமமாகவேநடந்தது. மகாராஜரே! உம்மைச்சேர்ந்த வீரர்களும் கவசம்பூண்ட கர்ணபுத்திரனும கூர்மையான அம்புகளாலே ஸாத்யகியை நான்குபக்கத்திலும் விரைவாக அடித்தார்கள். பிரபுவே! ஸாத்யகி கோபங்கொண்டு அந்த வீரர்களுடையனவும் கர்ணனுடையனவுமான அஸ்திரங்களை அஸ்திரங்களாலேயடித்து விருஷஸேனனை மார்பிலடித்தான். பிரஜைகளுக்கு நாதரே! வீர்யவானான விருஷஸேனன் அந்தப் பாணத்தாலடிக்கப்பட்டு மூர்ச்சையையடைந்தவனாகி வில்லை விட்டுவிட்டு ரதத்தில் விழுந்தான். பிறகு, கர்ணன், 'மகாரதனான விருஷஸேனன் மாண்டான்' என்று எண்ணிப் புத்திரசோகத்தால் பீடிக்கப்பட்டவனாகி ஸாத்யகியை எதிர்த்துத் துன்பமடையும்படி செய்தான். மகாரதனான யுயுதானன் கர்ணனாலே பீடிக்கப்பட்டு அடிக்கடி விரைவுடன் கர்ணனை அனேக அம்புகளால் அடித்தான். அந்த ஸாத்வதன் கர்ணனையும் விருஷஸேனனையும் பத்துப்பாணங்களாலும் ஏழுபாணங்களாலும் அடித்து அவ்விருவருடைய கையுறைகளையும் விற்களையும் அறுத்தான். அவ்விருவரும் பகைவருக்குப் பயத்தை உண்டுபண்ணு

வனவான வேறிரண்டு விற்களை ஸன்னத்தஞ்செய்து கூர்மையுள்ள பாணங்களாலே யுயுதானனை நாற்புறங்களிலும் அடித்தார்கள். அரசரே! சிறந்த வீரர்களுக்கு அழிவைச்செய்வதான அந்த யுத்தம் நடந்துகொண்டிருக்குந்தருணத்தில், காண்டீவத்தினுடைய பேரொலியானது மிகுதியாகக் கேட்கப்பட்டது. வேந்தரே! கர்ணன், ரதத்தினுடைய ஓசையையும் காண்டீவத்தினுடைய சப்தத்தையுங்கேட்டுத் துரியோதனனைப்பார்த்து இந்த வசனத்தைக் கூறலானான்.

கர்ணன், 'மகா வில்லாளியான இந்தப் பார்த்தன் எல்லாச் சேனையையும் முக்கியர்களான சிறந்த மனிதர்களையும் பௌரவர்களையுங் கொன்று உத்தமமான வில்லை நாணொலிசெய்துகொண்டு ஜயிக்கிறான். அந்த இடத்தில் காண்டீவத்தினுடைய பேரொலியும் ரதத்தினுடைய முழக்கமும் கர்ஜிக்கின்ற மேகத்தினுடைய ஒலிபோலக் கேட்கின்றன. மன்னு! பாண்டவன் தனக்குத் தக்க காரியத்தை வெளிப்படையாகச் செய்கிறான். இந்தப் பாரதஸேனையானது பலவாறு பிளக்கப்படுகின்றது. மேகமண்டலமானது காற்றினால் நன்றாகத் தள்ளப்பட்டுச் சிதற அடிக்கப்படுவதுபோலச் சேனைகள் சிதற அடிக்கப்படுகின்றன; ஓரிடத்திலும் நிலைபெறவில்லை. இந்தச் சேனை ஸவ்யஸாசியை எதிர்த்து ஸமுத்திரத்தில் கப்பல் உடைவதுபோல உடைந்துவிட்டது. அரசனே! காண்டீவத்தினின்று விடுபட்ட அம்புகளாலே நூற்றுக்கணக்காக அடிக்கப்பட்டு ஓடுகின்ற முக்கியர்களான யுத்தவீரர்களுடைய பெரிய சப்தம் கேட்கிறது. அரசப்புலியே! நடுராத்திரியில் ஆகாயத்தில் மேகத்தினுடைய இடிமுழக்கம்போல அர்ஜுனனுடைய ரதமிருக்குமிடத்திலுண்டாகும் துந்துபிவாத்யத்தினுடைய கோஷத்தைக்கேள். அர்ஜுனனுடைய ரதமிருக்குமிடத்திலுண்டாகின்ற 'ஆ! ஆ!' என்னும் ஒலிகளையும் உரத்த ஸிம்மநாதங்களையும் மற்றும் பலவித சப்தங்களையும் கேள். ஸாத்வதர்களுள் உத்தமனான இந்த ஸாத்யகி நம்முடைய மத்தியில்நிற்கின்றான். இவனிடத்தில் (நமது) உத்தேசம் பலிக்குமானால் எல்லாப் பகைவர்களையும் நாம் ஜயிப்போம். இதோ பாஞ்சாலராஜனுடைய குமாரன் துரோணரோடு எதிர்த்துச் சூரர்களும் ரதிகசிரேஷ்டர்களுமான யுத்தவீரர்களால் நான்குபக்கங்களிலும் சூழப்பட்டிருக்கிறான். மகாராஜனே! ஸாத்யகியையும் பார்ஷதனான திருஷ்டத்யும்னனையும் கொல்வோமாயின் ஸம்சயமில்லாமல் நமக்குவெற்றி நிச்சயமாக உண்டாகும். மகாராஜனே! அபிமன்யுவைச் சூழ்ந்ததுபோலச் சூரர்களும் மகாரதர்களுமான அந்த விருஷ்ணிவீரனையும் பார்ஷதனையும் சூழ்ந்துகொண்டு கொல்வதற்கு நாம் முயற்சிசெய்வோம். பாரத! ஸாத்

யகி குருபுங்கவர்களனேகர்களோடு சண்டைசெய்வதையறிந்து ஸவ்ய ஸாசியானவன் துரோணருடைய படையின்முன்பு வந்துகொண்டிருக்கிறான். பார்த்தன், ஸாத்யகி அனேக வீரர்களாற் சூழப்பட்டிருப்பதை அறியாதபடி (பார்த்தனிருக்கும்) அந்த இடத்திற்கு உத்தமர்களான அனேக ரதிகர்கள் போகவேண்டும். அப்படிப்பட்ட சூரர்கள் பாணங்களைவிடும விஷயத்தில் அதிக விரைவுள்ளவர்களாக இருக்கவேண்டும். மகாராஜனே! நன்றாக உபயோகிக்கப்பட்ட தந்திரத்தினால், இங்கிருக்கின்ற ஸாத்யகியைப் பரலோகத்தையடையும்படி செய்' என்றான். அரசரே! கர்ணனுடைய அபிப்பிராயத்தையறிந்து உம்முடைய குமாரன் சகுனியைநோக்கி, யுத்தத்தில் தேவராஜன் கீர்த்திசாலியான உபேந்திரனைநோக்கிச் சொல்லியதுபோலச் சொல்லலானான்.

'புறங்காட்டாதவைகளான பதினாயிரம் யானைகளாலும் பதினாயிரம் தேர்களாலும் சூழப்பட்டவனாகித் தனஞ்சயனைநோக்கி நீ விரைவாகச்செல். துச்சாஸனனும் துர்விஷஹனும் ஸுபாகுவும் துஷ்பிரதர்ஷணனும் அனேக காலாட்படைகளால் சூழப்பட்டு உன்னைப் பின்தொடர்ந்துவருவார்கள். பாகுபலமுள்ளவனே! மாதுல! கிருஷ்ணார்ஜுனர்களையும் தர்மராஜனையும் நகுலனையும் ஸஹதேவனையும் அவ்வாறே பீமஸேனனையும் ஸம்ஹாரம்செய். தேவர்களுக்குத் தேவேந்திரனிடத்தில் ஜயிப்பானென்னும் ஆசையிருப்பதுபோல எனக்கு உன்னிடத்தில் பாண்டவர்களை ஜயிப்பையென்ற ஆசையிருக்கிறது. மாதுல! அக்கினிகுமாரரான ஸுப்ரம்மண்யர் அசுரர்களைக் கொன்றதுபோலக் குந்திபுத்திரர்களை நாசம்செய்' என்றான். பிரபுவே! உமது புத்திரனான துரியோதனனால் இவ்வாறு சொல்லப்பட்ட ஸௌபலன் பெரிய சேனையுடனும் உமது புத்திரர்களுடனும் உமது புத்திரர்களுக்குப் பிரியத்தைச் செய்வதற்காகப் பாண்டுபுத்திரர்களை யெரிக்கஎண்ணிச் சென்றான். பிறகு, உம்மைச்சேர்ந்தவர்களுக்குச் சத்துருக்களோடு யுத்தம் நடக்க ஆரம்பித்தது. அரசரே! ஸௌபலன் பாண்டவர்களுடைய சேனையைநோக்கிச் சென்றவுடன் ஸூதபுத்திரனும் விரைபவனாகிப் பெரியசேனையுடன் சேர்ந்து யுத்தத்தில் அனேகபாணங்களை இறைத்துக்கொண்டு ஸாத்யகியை எதிர்த்தான். அவ்வாறே எல்லா அரசர்களும ஸாத்யகியைச் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, பாரத்வாஜர் திருஷ்டத்யும்னனுடைய ரதத்தைக்குறித்து எதிர்த்துச்சென்றார். பாரதரே! இராக்காலத்தில் துரோணருக்கு வீரனான திருஷ்டத்யும்னனோடும் பாஞ்சாலர்களோடும் ஆச்சரியகரமான பெரிய யுத்தமானது அப்பொழுது உண்டாகியது.

---

## நூற்றெழுபத்திரண்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸங்குலயுத்தமும், திருஷ்டத்யும்னன் முதலான வீரர்கள் ஸந்தோஷத்தால் ஸிம்மநாதம் செய்ததும்.)

பிறகு, யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களும் பொறுமையற்றவர்களும் கோபமுள்ளவர்களுமான அவர்களெல்லோரும் விரைபவர்களாகி யுயுதானனுடைய ரதத்தைநோக்கி ஓடினார்கள். வேந்தரே! அவ்வீரர்கள் ஸன்னத்தமாகச் செய்யப்பட்டவையும் தங்கத்தாலும் வெள்ளியாலும் அலங்கரிக்கப்பட்டவையுமான ரதங்களோடும் குதிரைவீரர்களோடும் யானைகளோடும் நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். பிறகு, மகாரதர்களான அவ்வீரர்கள் அந்த ஸாத்யகியை நடுவில்நிறுத்தி நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு ஸிம்மநாதங்களைச்செய்து அவனை வெருட்டினார்கள். அவனைக் கொல்வதில் விருப்பமுள்ளவர்களான அம்மகாவீரர்கள் விரைவுடன் கூர்மையுள்ள அம்புகளை ஸத்யவிக்கிரமனான ஸாத்யகியின்மீது வர்ஷித்தார்கள். சத்துரு வீரர்களைக் கொல்லுகிறவனும் தோள்வலிமிக்கவனுமான சைனேயன் விரைவாகவருகின்ற அந்தவீரர்களைக்கண்டு அனேக பாணங்களைப் பிரயோகித்துத் தடுத்தான். அந்த யுத்தகளத்தில் வீர்யமுள்ளவனும் மகிமைபொருந்திய வில்லைக் கையில்கொண்டவனும் யுத்தத்திலடங்காத மதங்கொண்டவனுமான ஸாத்யகி உக்ரமானவைகளும் படிந்த கணுக்களுள்ளவைகளுமான அம்புகளால் அவர்களுடைய தலைகளை அறுத்தான். மதுகுலத்தில் தோன்றியவனான யுயுதானன் யானைத்துதிக்கைகளையும் குதிரைக் கழுத்துக்களையும் உம்மைச்சேர்ந்த வீரர்களுடைய ஆயுதங்களுடன்கூடின கைகளையும் க்ஷுராப்ரங்களாலே அறுத்துத் தள்ளினான். பாரதரே! விழுந்திருக்கின்ற சாமரங்களாலும் வெண்மையான குடைகளாலும் நிறைந்த யுத்தபூமியானது நக்ஷத்திரங்களால் நிறைந்த ஆகாயம்போல் ஆகியது. பாரதரே! யுத்தரங்கத்தில் யுயுதானனோடு போர்புரிகின்ற இந்த வீரர்களுடைய நெருங்கின சப்தமானது அலறுகின்ற பிசாசங்களுடைய சத்தம்போல உண்டாகியது. பெரிதான அந்தச் சப்தத்தினாலே பூமி நிறைக்கப்பட்டதாகியது. ராத்திரியானது கோரமான தோற்றமுள்ளதும் பயத்தையுண்டுபண்ணுகின்றதுமாயிருந்தது. அரசரே! மயிர்புளகித்தலையுண்டுபண்ணக்கூடிய

தான அர்த்தராத்திரியில் யுயுதானனுடைய அம்புகளாலே அடிக்கப் பட்டுப் பிளக்கப்படுகின்ற சேனையைப்பார்த்தும் பெரிதான சப்தத் தைக்கேட்டும் ரதிகர்களுள் சிரேஷ்டனான உம்முடைய குமாரன் ஸார தியைநோக்கி, 'இந்தச் சப்தம் உண்டாகிறவிடத்தைநோக்கிக் குதிரை களையோட்டு' என்று அடிக்கடி சொன்னான். துரியோதனனால் தூண் டப்படுகின்ற அந்த ஸாரதி உத்தமமான குதிரைகளை யுயுதானனுடைய ரதத்தைக்குறித்து ஓட்டினான். பிறகு, திடமானவில்லைக் கையிற்கொண் டவனும் சிரமத்தை ஜயித்தவனும் கைதேர்ந்தவனும் விசித்திரயுத்தம் செய்பவனுமான துரியோதனன் கோபத்துடன் யுயுதானனை எதிர்த் தான். பிறகு, ஸாத்யகி காதுவரையும் இழுத்துவிடப்பட்டவைகளும் இரத்தத்தைக் குடிப்பவைகளுமான பன்னிரண்டுபாணங்களால் துரி யோதனனையடித்தான். அவனால் அவ்விதமாக முந்தியே பாணங்களால் அடிக்கப்பட்ட துரியோதனன் கோபங்கொண்டு பத்துப்பாணங்களால் ஸாத்யகியைத் திருப்பியடித்தான். பரதரிற்சிறந்தவரே! பிறகு, பாஞ் சாலர்களுக்கும் எல்லாப் பாரதர்களுக்கும் பயங்கரமான கைகலந்தயுத் தம் நடந்தது. பாரதரே! சைனேயன் யுத்தகளத்தில் கோபங்கொண்டு மகாரதனான உம்முடைய புத்திரனை எண்பதுபாணங்களாலே மார்பில் அடித்தான்; பிறகு, அவனுடைய குதிரைகளை யுத்தகளத்தில் அம்புக ளால் யமலோகத்திற்கனுப்பினான். அவனுடைய ஸாரதியையும் ஓரம் பினால் விரைவாக ரதத்தினின்றும் கீழேதள்ளினான். அரசரே! உம் முடைய குமாரன் குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தில் நின்றுகொண்டு சைனேயனுடைய ரதத்தைநோக்கிக் கூர்மையுள்ள பாணங்களைப் பிர யோகித்தான், மன்னரே! உம்முடைய புத்திரனாலே யுத்தகளத்தில் ஸாத்யகியைக்குறித்துப் பிரயோகிக்கப்பட்ட ஐந்நூறுபாணங்களையும் சைனேயன் கைச்சுறுசுறுப்புள்ளவனாகித் துண்டாக்கினான். பிறகு, யுயுதானன் வேறொரு பல்லத்தினாலே யுத்தத்தில் உமது புத்திர னுடைய பெரியவில்லைக் கைபிடிக்குமிடத்தில் விரைவாகத் துண்டாக்கி னான். ரதத்தையிழந்தவனும் வில்லையிழந்தவனும் ஸர்வலோகேஶ்வர னும் பிரபுவுமான உம்முடைய குமாரன், கிருதவர்மாவினுடைய பிர காசிக்கின்ற ரதத்தின்மீது விரைவாக ஏறினான். வேந்தரே! துரியோ தனன் திரும்பிப்போனவுடன் சைனேயன் உம்முடைய சேனையை அர்த்தராத்திரிகாலத்தில் பாணங்களால் துரத்தியடித்தான். அரசரே! சகுனி அனேக ஆயிரம் ரதங்களோடும் ஆயிரம் யானைகளோடும் ஆயி ரம் குதிரைகளோடுங்கூடினவனாகி அர்ஜுனனை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டு பற்பல சஸ்திரங்களை இறைத்தான். காலனாலே

தூண்டப்பட்ட அந்த க்ஷத்திரியர்கள் எல்லா மஹாஸ்திரங்களையும் அர்ஜுனன்மீது இறைத்துக்கொண்டு அவனோடு யுத்தம்செய்தார்கள். கோபமூட்டப்பட்ட அர்ஜுனன் அதிகமான நாசத்தையுண்டுபண்ணிக் கொண்டு ஆயிரக்கணக்கான தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் தடுத்தான். பிறகு, யுத்தத்தில் சூரனும் ஸுபலபுத்திரனுமான சகுனி அப்பொழுது அட்டஹாஸத்துடன் கூர்மையான பாணங்களால் அர்ஜுனனை அடித்து மறுபடியும் நூறுபாணங்களால் அவனுடைய பெரிய ரதத்தையும் தடுத்தான். பாரதரே! அர்ஜுனனோ அந்தச் சகுனியை யுத்தத்தில் இரண்டுபாணங்களாலடித்து மற்றுமுள்ள பெரிய வில்லாளிகளையும் மும்மூன்றுபாணங்களால் அடித்தான். மன்னவரே! தனஞ்சயன் உம்மைச்சேர்ந்தவர்களான அந்த வீரர்களனைவரையும் வஜ்ரபாணியான இந்திரன் அஸுரர்களைக் கொல்வதுபோல எதிர்த்தடித்து நாசம்செய்தான். இறைவரே! ரணகளத்தில் அறுத்துத்தள்ளப்பட்ட யானைத்துதிக்கைகள்போன்ற கைகளாலே நான்குபக்கமும் வியாபிக்கப்பட்ட பூமியானது ஐந்துதலை நாகங்களால் சூழப்பட்டது போல் விளங்கியது. கிரீடங்களையும் நல்ல மூக்கையும் அழகிய குண்டலங்களையுமுடையவைகளும் நன்றாகக் கடிக்கப்பட்ட உதடுகளுள்ளவைகளும் கோபங்கொண்டவைகளும் கண்களைப் புரட்டி விழித்தவைகளும் பொற்பணிகளையும் சூடாமணிகளையும் தரித்தவைகளும் பிரியமானவார்த்தைகளைச் சொல்லுகின்றவைகளுமான க்ஷத்ரியர்களுடைய தலைகளாலே பூமியானது தாமரைமலர்களால் அலங்கரிக்கப்பட்ட மலைகளால் விளங்குவதுபோல் விளங்கியது. உக்கிரமான பராக்கிரமமுள்ள பீபத்ஸு உக்கிரமான அக்காரியத்தைச்செய்து படிந்த கணுக்களுள்ள ஐந்துபாணங்களால் சகுனியை மறுபடியும் அடித்தான். பெரும்புகழுள்ளவனான அர்ஜுனன் அவ்வாறே உலூகனை மூன்றுபாணங்களாலடித்து அவனையே மறுபடியும் மூன்றுபாணங்களால் அடித்தான். அந்த உலூகன் அந்த அர்ஜுனனால் நன்றாக அடிக்கப்பட்டுக் கோபத்தால் இருமடங்காக்கப்பட்ட விக்ரமமுள்ளவனாகி அனேக ஆயிரம் அம்புகளாலே அர்ஜுனனைத் திருப்பியடித்தான். உலூகன் அந்த அர்ஜுனனை அவ்வாறு அடித்துவிட்டு வாஸுதேவரையுமடித்துப் பூமியை நிரப்புகின்றவன்போல் பெரிதான ஸிம்மநாதத்தைச் செய்தான். அர்ஜுனன் அம்புகளாலே ரணகளத்தில் சகுனியின் வில்லையறுத்து அவனுடைய நான்குகுதிரைகளையும் யமனுடையவீட்டிற்கு அனுப்பினான். பாரதச்ரேஷ்டரே! பிறகு, ஸௌபலன் ரதத்தினின்று கீழேகுதித்து உலூகனுடைய ரதத்தின்மீது விரைவாக ஏறிக்கொண்டான். ஒரு ரதத்

தில் ஏறினவர்களும் மகாரதர்களும் தகப்பன் பிள்ளைகளுமான அவ்விருவரும் இரண்டு மேகங்கள் ஒரு மலையின்மீது ஜலத்தைப் பொழிவதுபோலப் பார்த்தன்மீது பாணங்களைப் பொழிந்தார்கள். மகாராஜரே! பாண்டவன் கூர்மையுள்ள அம்புகளாலே அவ்விருவரையுமடித்து உமது சேனையைத் தூரத்தியடித்து நூறுநூறாக அம்புகளால் நாசஞ்செய்தான். பிரஜைகளுக்கு நாதரே! காற்றினாலே மேகங்கள் நான்குபுறங்களிலும் சிதற அடிக்கப்படுவதுபோலச் சேனைகள் சிதற அடிக்கப்பட்டவையாயின. பரதரிற்சிறந்தவரே! அப்பொழுது ராத்திரியில் கொல்லப்படுகின்ற அந்தச் சேனையானது பயத்தால் பீடிக்கப்பட்டு நான்குதிக்குக்களையும் பார்த்துக்கொண்டு ஓடியது. அந்தப் பயங்கரமான இருட்டில் அவ்வாறே மற்ற வீரர்கள் யுத்தத்தில் வாகனங்களை இழந்துவிட்டு நான்குபக்கங்களிலும் ஓடினார்கள். சிலர் வாகனங்களை ஓட்டிக்கொண்டே பரபரப்புடன் நான்குபுறத்திலும் ஓடினார்கள். பரதஸ்ரேஷ்டரே! யுத்தத்தில் உம்மைச் சேர்ந்தவர்களான யுத்தவீரர்களை ஜயித்துவிட்டு வாஸுதேவரும் தனஞ்சயனும் ஸந்தோஷத்தோடு சங்கவாத்தியங்களை ஊதினார்கள். மகாராஜரே! திருஷ்டத்யும்னன் துரோணரை மூன்று பாணங்களாலடித்துக் கூர்மையான ஓரம்பினால் வில்லிலுள்ள நாண்கயிற்றைச் சீக்கிரமாக அறுத்தான். க்ஷத்ரியரை அடிக்கின்றவரும் சூரருமான துரோணர் அந்த வில்லைப் பூமியில் எறிந்துவிட்டு வேகமுள்ளதும் மிக்க உறுதியுள்ளதுமான வேறுவில்லைக் கையிலெடுத்தார். வேந்தரே! பிறகு, துரோணர் யுத்தத்தில் ஏழுபாணங்களால் திருஷ்டத்யும்னனையடித்து அவனது ஸாரதியையும் ஐந்துபாணங்களால் அடித்தார். மகாரதனான திருஷ்டத்யும்னன் அம்புகளாலே அவரை விரைவாகத் தடுத்து அஸுரஸேனையை இந்திரன் நாசஞ்செய்ததுபோலக் கௌரவ ஸேனையை நாசஞ்செய்தான். ஐயா! உமது புத்திரனுடைய அந்த ஸைனியம் கொல்லப்படும்பொழுது, கோரமானதும் ரக்தவெள்ளத்துடன் பெருகுகின்றதுமான ஒரு நதியானது உண்டாயிற்று. அரசரே! இரண்டுபடைகளுக்கும் மத்தியில் யமராஜனுடைய புரத்தை நோக்கி மனிதர்களையும் யானைகளையும் குதிரைகளையும் இழுத்துச்செல்லுகின்ற வைதரணீநதியானது பெருகி ஓடியது. பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் அந்த ஸைனியத்தை ஓடும்படி செய்துவிட்டுத் தேஜஸ்வியான இந்திரன் தேவகணங்களினுடைய மத்தியில் விளங்குவதுபோல் விளங்கினான். பிறகு, திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் நகுலஸஹதேவர்களும் யுயுதானனும் பாண்டுபுத்திரனான பீமனும் பெரிய சங்கங்களை ஊதினார்கள். அரசரே! மகாரதர்களும் ஜயத்தோடு

விளங்குகின்றவர்களும் யுத்தத்தில் மதங்கொண்டவர்களுமான பாண்டவர்கள் உம்முடைய புத்திரனும் கர்ணனும் சூரரான துரோணரும் துரோணபுத்திரரும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே உம்மைச் சேர்ந்த யுத்தவீரர்களுள் ஆயிரக்கணக்கான ரதிகர்களை ஜயித்து ஸிம்ம நாதங்களைச் செய்தார்கள்.

---

## நூற்றெழுபத்துமூன்றாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருக்கும் கர்ணனுக்கும் முறையே ஸாத்யகியோடும் திருஷ்டத்யும்னனோடும் யுத்தம்.)

அரசரே! மகாபலசாலிகளான பாண்டவர்களால் ஹிம்ஸிக்கப் படுகின்றதும் ஓடுகின்றதுமான தன்னுடைய ஸேனையைக்கண்டு பேசத் தெரிந்தவனான உம்முடைய புத்திரன் அதிக கோபாவேசங்கொண்டு மிக்க பொறுமையை அடைந்து ஜயசாலிகளுள் உத்தமர்களான கர்ணனையும் துரோணரையும் விரைவாகவந்தடைந்து (பின்வருமாறு) வசனிக்கலானான். 'ஸவ்யஸாசியினால் யுத்தத்தில் ஸைந்தவன் கொல்லப் பட்டதைப் பார்த்துக் கோபங்கொண்டவர்களான உங்களிருவராலும் இப்பொழுது யுத்தம் நன்றாய்த் தொடங்கப்பட்டது. நீங்களிருவரும் அவனை ஜயிப்பதில் சக்தியுள்ளவர்களாயிருந்தும் பாண்டவர்களுடைய ஸேனையினால் கொல்லப்படுகின்ற என்னுடைய ஸேனையை அசக்தர்கள் போலப் பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள். நீங்களிருவரும் என்னைக் கைவிடுவதானால், 'பகைவர்களுடைய கர்வத்தை நாசஞ்செய்கிறவர்களான நாங்களிருவரும் யுத்தத்தில் பாண்டுபுத்திரர்களை ஜயிப்போம்' என்று, அப்பொழுதே நீங்கள் என்னிடம் சொல்லியிருக்கவேண்டாம். அப்பொழுதே நான் உங்களிருவருடைய வசனத்தையுங் கேட்டுக் குந்தீ புத்திரர்களோடு யுத்தவீரர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணக்கூடியதும் உங்களால் ஸம்மதிக்கப்பட்டதுமான இந்த வைரத்தை உண்டுபண்ணிக் கொள்ளாமலிருப்பேன். நீங்கள் என்னைக் கைவிடாமலிருப்பதானால், நல்ல விக்கிரமத்துடன்கூடின புருஷஸ்ரேஷ்டர்களான நீங்கள் உங்களுக்குரிய பராக்ரமத்துடன் அர்ஜுனனோடு யுத்தம்செய்யுங்கள்' என்றான். சூரர்களான அவ்விருவரும் உமது புத்திரனாலே வாக்காகிற குறடாவினால் அதிகமாகத் தூண்டப்பட்டவர்களாகி அடிக்கப்பட்ட இரண்டு

ஸர்ப்பங்கள்போல யுத்தம்செய்யத்தொடங்கினார்கள். பிறகு, ரதிகர்களுள் சிறந்தவர்களும் எல்லா உலகங்களிலுமுள்ள வில்லாளிகளுள்ளும் சிரேஷ்டர்களுமான அவ்விருவரும் யுத்தாங்கத்தில் சைனேயனை முன்னிட்ட பார்த்தர்களை எதிர்த்துச்சென்றார்கள். அவ்வாறே ஒன்றுசேர்ந்தவர்களான பார்த்தர்கள் எல்லாச் சேனையினாலும் சூழப்பட்டவர்களாகி அடிக்கடி கர்ஜிக்கின்ற அந்த இரண்டு வீரர்களையும் எதிர்த்தார்கள். பிறகு, பெரிய தனுஸையுடையவரும் எல்லாச் சஸ்திரதாரிகளுள்ளும் சிரேஷ்டருமான துரோணர் கோபங்கொண்டு சினிபுங்கவனைப் பத்துப் பாணங்களாலே விரைவாக அடித்தார். கர்ணன் பத்துப்பாணங்களாலும் உம்முடைய புத்திரன் ஏழுபாணங்களாலும் விருஷஸேனன் பத்துப்பாணங்களாலும் சகுனி ஏழுபாணங்களாலும் ஸாத்யகியை அடித்தார்கள். கௌரவரே! யுத்தத்தில் இவர்கள் அவன்மீது இப்படி இறைத்தார்கள். யுத்தத்தில் பாண்டவசேனையை நாசஞ்செய்கின்ற துரோணரைக்கண்டு ஸோமகர்கள் நான்குபக்கங்களிலும் அம்புமழைகளாலே அவரை விரைவாக அடித்தார்கள். மன்னரே! நான்குபக்கமுமுள்ள இருளைச் சூரியன் கிரணங்களாலே கவர்வதுபோல அந்த யுத்தகளத்தில் துரோணர் க்ஷத்திரியர்களுடைய உயிர்களைக் கவர்ந்தார். வேந்தரே! துரோணரால் கொல்லப்படுகின்றவர்களும் ஒருவரைக் குறித்து ஒருவர் அழுகின்றவர்களுமான பாஞ்சாலர்களுடைய நெருங்கிய சப்தமானது கேட்கப்பட்டது. உயிர்தப்பியோடுவதில் எண்ணங்கொண்டவர்களான சிலர் புத்திரர்களையும் சிலர் தகப்பன்மார்களையும் சிலர் ஸகோதரர்களையும் சிலர் மாதுலர்களையும் சிலர் மருகர்களையும் சிலர் சினேகிதர்களையும் அவ்வாறே ஸம்பந்திகளையும் பந்துக்களையும் விட்டுவிட்டு வேகத்தோடு ஓடினார்கள். மற்றவர்கள் புத்திமயக்கங்கொண்டு அறியாமையாலே அந்தத் துரோணரை எதிர்த்தேசென்றார்கள். யுத்தத்தில் பாண்டவர்களுடைய யுத்தவீரர்கள் பரலோகத்தை அடைந்தார்கள். அரசரே! மகாபலசாலியான துரோணராலே அவ்வாறு பீடிக்கப்படுகின்ற அந்தப் பாண்டவசேனையானது இராக்காலத்தில் ஆயிரக்கணக்கான பந்தங்களை யெறிந்துவிட்டுப் பீமஸேனனும் விஜயனும் ஸ்ரீ கிருஷ்ணனும் நகுலஸஹதேவர்களும் தர்மபுத்திரரும் திருஷ்டத்யும்னனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே ஓடியது. உலகமானது இருளால் மூடப்பட்டிருக்குங்கால், ஒரு வஸ்துவும் அறியப்படவில்லை. கௌரவர்களுடைய வெளிச்சத்தினால் ஓடுகின்ற பகைவர்கள் கண்ணுக்குப் புலப்பட்டார்கள். வேந்தரே! ஓடுகின்ற அந்தச் சேனையை மகாரதர்களான துரோணர் கர்ணன் இருவரும் அனேக

பாணங்களை இறைத்துக்கொண்டு பின்புறத்தில் அடித்தார்கள். பாஞ்சாலர்கள் அடிக்கப்பட்டு எல்லாவிடங்களிலும் தோற்று நாசமடையும்பொழுது, ஜனார்த்தனர் மனந்தளர்ந்தவராகிப் பல்குனனைநோக்கி, 'மகாவில்லாளிகளான இந்தத் துரோணரும் கர்ணனும் ஒன்றுசேர்ந்துகொண்டு திருஷ்டத்யும்னனையும் ஸாத்யகியையும் பாஞ்சாலர்களையும் அம்புகளால் அதிகமாக ஹிம்ஸிக்கின்றனர். இவர்களுடைய அம்புமழையினால் நமது மகாரதர்கள் தோல்வியடைவிக்கப்பட்டார்கள். கௌந்தேய! சேனையானது தடுக்கப்பட்டும் யுத்தரங்கத்தில் நிலைபெறவில்லை' என்று சொன்னார். ஓடுகின்ற படையைப் பார்த்துக் கேசவர் அர்ஜுனன் இருவரும், 'பாண்டவ பக்ஷத்து வீரர்களே! நீங்கள் பயந்து ஓடாதீர்கள். பயத்தை விட்டுவிடுங்கள். அப்படிப்பட்ட நாங்களிருவரும் நன்றாக ஆயுதங்களைக் கையில் எடுத்தவர்களும் அணிவகுக்கப்பட்டவர்களுமான எல்லா ஸைனிகர்களோடும் துரோணரையும் ஸூதபுத்திரனையும் ஹிம்ஸிப்பதற்கு முயற்சிசெய்கிறோம். இவர்கள் பலசாலிகள்; சூரர்கள்; அஸ்திரத்தில் மிக்க தேர்ச்சியுடையவர்கள்; ஜயத்தினால் பிரகாசிக்கின்றவர்கள். (இவ்விருவரும்) உபேக்ஷிக்கப்படுவார்களாகில் இந்த ஓரோராத்திரிக்குள் (நமது) ஸைனியத்தை விரைவாக நாசம்செய்துவிடுவார்கள்' என்று கூறினார்கள்.

அவ்விருவரும் இவ்வாறு சொல்லிக்கொண்டிருக்கும்பொழுதே, பயங்கரமான செய்கையையுடையவனும் மகாபலசாலியுமான விருகோதரன் சேனையை விரைவாக மறுபடியுந் திருப்பிக்கொண்டு அவ்விடம் வந்தான். அரசரே! பிறகு, அந்த இடத்தில் வருகின்ற விருகோதரனைப்பார்த்து ஜனார்த்தனர் அர்ஜுனனைச் சந்தோஷிக்கச் செய்துகொண்டு மறுபடியுமே, 'யுத்தத்தில் புகழ்ச்சிபெற்ற பீமன் பாண்டவவீரர்களாலும் ஸோமகர்களாலும் சூழப்பட்டு மகாரதர்களான கர்ணனையும் துரோணரையும் விரைவாக எதிர்த்துவந்துவிட்டான். பாண்டுநந்தன! எல்லா ஸைனிகர்களுக்கும் தேறுதலுண்டாகும்பொருட்டு இந்தப் பீமனோடும் மகாரதர்களான பாஞ்சாலர்களோடும் சேர்ந்துகொண்டு யுத்தம்செய்' என்று சொன்னார். பிறகு, புருஷசிரேஷ்டர்களான அம்மாதவ பாண்டவரிருவரும் துரோணரையும் கர்ணனையும் எதிர்த்துப் போர்முனையில் நின்றார்கள். பிறகு, பெரிதான அந்த யுதிஷ்டிரசேனையானது மறுபடியும் திரும்பியது. பின்பு, துரோணரும் கர்ணனும் யுத்தத்தில் சத்துருக்களை நொறுக்கினார்கள். அரசரே! சந்திரோதயத்தினாலே பொங்கியெழுந்த இரண்டு கடல்களுக்குப் போர் நேர்ந்

ததுபோல இரண்டு சேனைகளுக்கும் இரவில் கைகலந்த பெரும்போர் நடந்தது. பிறகு, உமது ஸேனையானது பித்துப்பிடித்ததுபோலக் கைகளினின்றும் தீவட்டிகளை எறிந்துவிட்டு ஒன்றோடொன்று சேராமல் பாண்டவவீரர்களோடு போர்புரிந்தது. அந்த யுத்தரங்கமானது புழுதியாலும் இருளாலும் மூடப்பட்டு மிக்க பயங்கரமாயிருக்குங்காலத்தில், ஜயத்தில் விருப்பமுள்ள வீரர்கள் பெயரினாலும் கோத்திரத்தினாலுமாத்திரம் ஒருவரையொருவர் தெரிந்துகொண்டு போர்புரிந்தார்கள். மகாராஜரே! அடித்துக்கொள்ளுகின்ற அரசர்கள் பிறர் கேட்கும்படி சொல்லுகிற பெயர்கள் ஸ்வயம்வரத்தில்போல யுத்தத்தில் கேட்கப்பட்டன. அந்த யுத்தகளம் திடீரென்று சப்தமில்லாததாயிற்று. கோபத்துடன் யுத்தம்செய்கின்றவர்களும் ஜயிக்கப்படுகின்றவர்களும் ஜயிக்கின்றவர்களுமான சூரர்களுடைய பெரிய சப்தம் மறுபடியும் உண்டாயிற்று. தீவட்டிகள் காணப்படுமிடந்தோறும் சூரர்கள் விட்டிற்பூச்சிகள்போல வந்துவிழுந்தார்கள். ராஜேந்திரரே! எல்லாக் கௌரவர்களும் பாண்டவர்களும் அவ்வாறு நன்றாக யுத்தஞ்செய்துகொண்டிருக்கும்பொழுது (அந்தப்) பெரிய ராத்திரியானது (மிக்க இருளால்) மூடப்பட்டதாகியது.

---

## நூற்றெழுபத்துநான்காவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(கர்ணனோடு போர்புரியக்கருதிய அர்ஜுனனை வாஸுதேவர் காரணங் கூறித் தடுத்ததும், கிருஷ்ணார்ஜுனர்களுடைய தூண்டுதலால் கடோத்கசன் கர்ணனோடு போர்தொடங்கியதும்.)

பிறகு, சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனான கர்ணன் யுத்தத்தில் பார்ஷதனைப்பார்த்து மர்மஸ்தானங்களைப் பிளக்கின்ற பத்தம்புகளாலே அவன் மார்பிலடித்தான். பெரியவரே! திருஷ்டத்யும்னனும் ஸந்தோஷமுடையவனாகிப் பத்துப்பாணங்களாலே அந்தக் கர்ணனை விரைவாகத் திருப்பியடித்து, 'நில், நில்' என்றும் சொன்னான். மகாரதர்களோடு (சேர்ந்த) அவ்விருவரும் யுத்தகளத்தில் அம்புகளால் ஒருவரையொருவர் மூடிக்கொண்டு மறுபடியும் பூர்ணமாக இழுத்துவிடப்படும் அம்புகளாலே பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். பிறகு, கர்ணன் யுத்தத்தில் பாஞ்சாலர்களுள் முக்கியனான திருஷ்டத்யும்னனுடைய ஸாரதியையும் நான்குகுதிரைகளையும் அம்புகளாலடித்துக்

கூர்மையான பாணங்களாலே சிறந்த வில்லையும் அறுத்தான். ஒரு பல்லத்தினாலே ஸாரதியையும் தேர்த்தட்டினின்று கீழேதள்ளினான். ரதத்தையும் குதிரைகளையும் ஸாரதியையும் இழந்த திருஷ்டத்யும்னனோ கோரமான பரிகாயுதத்தைக் கையிலெடுத்துக் கர்ணனுடைய குதிரைகளை அடித்தான். அந்தக் கர்ணனாலே ஸர்ப்பங்களுக்கொப்பான அனேக அம்புகளால் அடிக்கப்பட்ட திருஷ்டத்யும்னன், பிறகு யுதிஷ்டிரருடைய சேனையைநோக்கிக் கால்களாலேயே நடந்து சென்றான். ஐயா! திருஷ்டத்யும்னன் தர்மபுத்திரராலே தடுக்கப்படும் கர்ணனை எதிர்த்துச்செல்ல விரும்பி ஸஹதேவனுடைய ரதத்தின்மீது ஏறினான். மிகப் பெரிய வல்லமையுள்ளவனான கர்ணனோ ஸிம்மநாதத்தையும் பெரிதான வில்லொலியையும் செய்து சங்கத்தையும் உரக்க ஊதினான். யுத்தத்தில் திருஷ்டத்யும்னன் தோல்வியடைவிக்கப்பட்டதைப் பார்த்து, மகாரதர்களான பாஞ்சாலர்களும் ஸோமகர்களும் கோபத்துக்கு வசப்பட்டவர்களாகி, எல்லா ஆயுதங்களையும கையிலேந்தி, மரிக்கிற வரையில் போரினின்று நீங்குவதில்லையென்று நிச்சயித்து, ஸூதபுத்திரனைக் கொல்வதின்பொருட்டு அவனைநோக்கி எதிர்த்தார்கள். கர்ணனுடைய ஸாரதி சங்கத்தின் நிறம்போன்ற நிறமுடையவைகளும் மகாவேகமுள்ளவைகளும் நன்றாகத்தேரையிழுக்கும் தன்மையுடையவைகளும் ஸிந்துதேசத்தில் தோன்றினவைகளுமான வேறு குதிரைகளை ரதத்தில்பூட்டினான். மிகுந்த முயற்சியுடையவனும (தான்) குறித்தவர்களை அடைந்தவனுமான ராதேயன், மேகம் மலையின் மீதுபொழிவதுபோல மகாரதர்களானபாஞ்சாலர்களின்மீது அம்புகளைப் பொழிந்து அவர்களைப் பீடித்தான். கர்ணனாலே துன்புறுத்தப்படுகின்ற பாஞ்சாலர்களுடைய அந்தப் பெரும் சேனையானது ஸிம்மத்தினாலே பீடிக்கப்பட்டுப் பயந்து ஓடுகின்ற பெண்மான்போல ஓடியது. குதிரைகளினின்றும் யானைகளினின்றும் ரதங்களினின்றும் பூமியில் விரைவாக விழுந்திருக்கின்ற மனிதர்கள் ஆங்காங்கு காணப்பட்டார்கள். கர்ணன் அம்மஹாயுத்ததில ஓடுகின்ற ஒரு யுத்தவீரனுடைய இரு கைகளையும் குண்டலங்களோடுகூடின தலையையும் க்ஷுரப்ரங்களாலே அறுத்தான். மன்னரே! யானையின்மீதுள்ள வேறு வீரனுடைய இரண்டு தொடைகளையும் குதிரையின்மீதிருக்கின்றவன் பூமியிலுள்ளவன் ஆகிய இவர்களுடைய தொடைகளையும் அறுததான். யுத்தத்தில் ஓடுகின்ற அனேக மகாரதர்கள் தங்களுடைய அங்கங்களும் வாகனங்களும் அறுக்கப்பட்டதை அறியவில்லை. யுத்தத்தில் ஸ்ருஞ்சயர்களோடுகூடக் கொல்லப்படுகின்ற அந்தப் பாஞ்சாலர்கள் துரும்பு அசை

தாலுங்கூடப் பயத்தினால் ஸூதபுத்திரனென்றே எண்ணினார்கள். யுத்தத்தில் மனநிலைதவறி யோடுகின்ற தங்களைச்சேர்ந்த யுத்தவீரனைக் கண்டும் கர்ணனேயென்றெண்ணி அவனிடத்தினின்று அவர்கள் பயந்தோடினார்கள். பாரதரே! தோல்வியடைவிக்கப்பட்டு ஓடுகின்ற அந்தச் சேனைகளைக் கர்ணன் பின்புறத்தில் பாணங்களை இறைத்துக்கொண்டு விரைவாகத் துரத்தினான். மகாபலசாலியான கர்ணனாலே துரத்தியடிக்கப்படுகின்றவர்களும் முழுதும் விவேகத்தை இழந்தவர்களும் பிரஜ்ஞையற்றவர்களுமான அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நிலைபெற்றுநிற்பதற்கும் சக்தியற்றவர்களானார்கள். அரசரே! கர்ணனாலும் துரோணராலும் சிறந்த அம்புகளாலே அடிக்கப்பட்ட பாஞ்சாலர்கள் எல்லாத்திக்குக்களையும் பார்த்துக்கொண்டே ஓடினார்கள். பிறகு, யுதிஷ்டிரராஜர் தம் ஸேனை ஓடுவதைக்கண்டு தாமும் ஓடுவதில் மனத்தைச் செலுத்திப் பல்குனனைநோக்கி, 'உக்கிரமான தன் கிரணங்களால் தபிக்கச்செய்கின்றசூரியன்போலப்பயங்கரமான நடுராத்திரியில வில்லைக் கையில்கொண்டுநிற்பவனும் மகிமைதங்கினவில்லை யுடையவனுமான கர்ணனைப்பார். பார்த்த! கர்ணனுடைய பாணங்களாலே யடித்துத்தள்ளப்பட்டு அநாதர்கள்போல அலறுகின்ற உன்சுற்றத்தார்களுடையசப்தமானது இடைவிடாமல் கேட்கிறது. கர்ணன் பாணங்களைப்பூட்டுவதற்கும் விடுவதற்கும் இடைநேரத்தை நான்பார்க்கவில்லை. நம்மை இவன் அவசியம் நாசஞ்செய்துவிடுவான். தனஞ்சய! இப்பொழுது அடுத்துச் செய்யவேண்டியதென்றும் இசசமயத்திற்கு உரியதென்றும் நீ எண்ணுகிறதும் கர்ணனுடைய வதத்தைப்பற்றியதுமான காரியத்தை நீ செய்' என்று சொன்னார். மகாராஜரே! இவ்வாறு சொல்லியதைக்கேட்டபார்த்தன் பிறகு வாஸுதேவரைப்பார்த்து, 'அரசரானகுந்திபுத்திரர் ராதேயனுடைய பராக்கிரமத்தைக்கண்டு இப்பொழுது பயந்துவிட்டார். இவ்வண்ணம் அடிக்கடி நேர்ந்தபின்பு, கர்ணனுடையசேனையில் இப்பொழுது ஸமயத்திற்கேற்றபடி செய்யத்தக்கதை நீர் செய்யவேண்டும். ஸேனையானது விரைவாக ஓடுகின்றது. மதுஸூதனரே! துரோணருடையபாணங்களால் விலக்கித்தள்ளப்பட்டவர்களும் தோல்வியடைந்தவர்களும் கர்ணனால் பயமுறுத்தப்படுகின்றவர்களுமான நமது படைவீரர்கள் நிலைபெறவில்லை. அவ்வாறே, கர்ணன் ஓடுகின்றரதிகசிரேஷ்டர்களைக் கூர்மையான அம்புகளாலே அடித்துக்கொண்டு பயமற்றுத்திரிவதையும் பார்க்கிறேன். விருஷ்ணிகளுள் சிறந்தவரே! யுத்தமுனையில் பிரத்யக்ஷமாக ஸஞ்சரிக்கின்ற இந்தக்கர்ணனை ஒருஸர்ப்பமானது ஒருவன் காலால்தீண்டுவதைப் பொறுததுபோல நான் பொறுக்கச்சக்தியற்

றவனாயிருக்கிறேன் மதுஸூதனரே! ஆதலால், அப்படிப்பட்ட தேவரீர் மகாரதனான கர்ணனிருக்குமிடத்திற்குப் போம். நானாவது அவனைக் கொல்வேன்; அல்லது அவனாவது என்னைக் கொல்லட்டும்' என்று சொன்னான்.

ஸ்ரீ வாஸுதேவர், 'கௌந்தேய! கர்ணனை யுத்தகளத்தில் தேவராஜனைப்போல் ஸஞ்சரிக்கின்றவனும் நரஸ்ரேஷ்டனும் மனிதருக்குமேற்பட்ட வல்லமையுள்ளவனுமாகப் பார்க்கிறேன். தனஞ்சய! புருஷப்புலியே! உன்னையும் ராக்ஷஸனான கடோத்கசனையும் தவிர இவனை யுத்தத்தில் வேறொருவன் எதிர்க்கச்சக்தியுள்ளவனில்லை. மாசற்றவனே! மிக்கபாகுபலமுள்ளவனே! போரில் நீ ஸூதபுத்திரனோடு எதிர்ப்பது இச்சமயத்திற்கு ஏற்றதன்றென நினைக்கிறேன். ஸூதபுத்திரனிடத்தில் பிரகாசிக்கின்ற பெரிதான எரிநக்ஷத்திரம்போல இந்திரனால் கொடுக்கப்பட்ட ஒருசக்தியாயுதம் இருக்கின்றது. புஜபலமிக்கவனே! யுத்தத்தில் உன்னைக்கொல்வதற்காகவே இந்தச்சக்தியாயுதமானது கர்ணனால் காப்பாற்றப்பட்டுவருகின்றது. அது பயங்கரமான உருவமுள்ளது. மகாபலசாலியான கடோத்கசன் ராதேயனை எதிர்த்துப்போகட்டும். அந்தக் கடோத்கசன் பலசாலியானபீமனாலே உண்டுபண்ணப்பட்டவன்; தெய்வத்தினுடைய பராக்கிரமம்போன்ற பராக்ரமத்தையுடையவன். அவனிடத்தில் தேவாஸ்திரங்களும் ராக்ஷஸாஸ்திரங்களும் அஸுராஸ்திரங்களும் நிலைபெற்றிருக்கின்றன. அவன் எப்பொழுதுமே உங்களிடத்தில் அன்புள்ளவன்; உங்களுக்கு நன்மையைத்தேடுவதில் விருப்பமுள்ளவன். கர்ணனை யுத்தத்தில் ஜயிப்பானென்பதில் எனக்கு ஸம்சயமில்லை' என்றுகூறினான். இவ்வாறு உரைக்கக்கேட்டு, மகாபாகுபலமுள்ளவனும் செந்தாமரைபோன்ற கண்களையுடையவனுமான பார்த்தன், பிறகு, அந்தராக்ஷஸனை அழைத்தான். அவனும் எதிரிலே தோன்றினான். அரசரே! கவசமணிந்தவனும் அம்புகளுடன்கூடியவனும் கத்தியையுடையவனும் வில்லையுடையவனுமான அந்தக்கடோத்கசன் கிருஷ்ணனையும் பாண்டுநந்தனனான தனஞ்சயனையும் அபிவாதனம் செய்து, பிறகு, அப்பொழுது கிருஷ்ணனைநோக்கி, 'இதோ இருக்கிறேன்; என்னைக் கட்டளையிடவேண்டும்' என்று தெரிவித்துக்கொண்டான். பிறகு, மாதவர் சிரித்துக்கொண்டு மேகம்போன்றவனும் விளங்குகின்றமுகத்தையுடையவனும் பிரகாசிக்கின்ற குண்டலங்களுள்ளவனுமான அந்த ஹிடிம்பாபுத்திரனைநோக்கிச் சொல்லலானார். 'கடோத்கச! குழந்தாய்! உன்னைநோக்கி யான்சொல்வதைத் தெரிந்துகொள். உனக்

குப் பராக்ரமத்தை வெளியிடும்ஸமயம் வந்திருக்கிறது; வேறொருவ
னுக்கும் இல்லை. அப்படிப்பட்டநீ யுத்தத்தில் முழுகுகின்ற பந்துக்
களுக்குப் பந்துவாவாயாக. ராக்ஷஸ! உன்னிடத்திலுள்ள அஸ்திரங்
களுக்கும் ராக்ஷஸர்களுக்குரியமாயைகளுக்கும் இதுதான் ஸமயம்.
ஹிடிம்பாபுத்திர! ஸிம்மத்தினாலே மற்றமிருகங்கள் ஓட்டப்படுவது
போல யுத்தரங்கத்தில் கர்ணனாலே ஓட்டப்படுகின்ற பாண்டவர்களு
டையஸேனையைப்பார். மகாவில்லாளியும் புத்திசாலியும் திடமானவலி
மையுள்ளவனுமான இக்கர்ணன் பாண்டவர்களுடையஸேனைகளிலுள்ள
க்ஷத்திரியசிரேஷ்டர்களைக் கொல்லுகிறான். உறுதியானவில்லைக்கையில்
பிடித்தவர்களும் பெரியசரமாரிகளை அவன்மீது பொழிகின்றவர்களு
மான பாண்டவஸேனாவீரர்கள் அவனுடையபாணாக்னியினாலே பீடிக்
கப்பட்டு நிற்பதற்குஞ் சக்தியற்றவர்களாய்விட்டார்கள். பாஞ்சாலர்கள்
ஸிம்மத்தாலே பீடிக்கப்பட்ட மிருகங்கள்போல நடுராத்திரியில் ஸூத
புத்திரனால் பாணவர்ஷத்தினால் பீடிக்கப்பட்டு ஓடுகிறார்கள். பயங்கர
மானவல்லமையுள்ளவனே! இவ்வாறுவளர்கின்ற இந்தஸூதபுத்திர
னுடையயுத்தத்தில் உன்னைத்தவிர வேறொருவனும் அவனை எதிர்த்துத்
தடுக்கச் சக்தியுள்ளவனில்லை. மிக்கபாகுபலமுள்ளவனே! உன்னுடைய
மாமன்மார்களுக்கும் பிதிர்க்களுக்கும் உனதுவல்லமைக்கும் அஸ்திர
பலத்துக்கும் தகுந்தகாரியத்தை நீ செய். ஹிடிம்பாபுத்ர! 'நம்மைத்துக்
கத்தினின்று எப்படியாவது கரையேற்றுவான்' என்பதற்காகவன்றோ
மனிதர்கள் புத்திரர்களை இச்சிக்கிறார்கள்? அப்படிப்பட்டநீ பந்துக்
களைக் கரையேறும்படிசெய், கடோத்கச! புத்திரர்களைப் பிதிருக்கள்
தம்காரியத்தின்பொருட்டே விரும்புகிறார்கள். எவர்கள் இவ்வுலகத்தி
லும் பரலோகத்திலும் (பித்ருக்களைக்) கரையேறச்செய்கிறார்களோ அவர்
களே ஹிதத்தைச்செய்பவர்கள். பீமநந்தன! யுத்தகளத்தில் போர்
புரிகின்ற உன்னுடையபலமானது எப்பொழுதும் பயங்கரமானது. உன்
னுடையமாயைகளும் (ஒருவராலும்) தாண்டமுடியாதவைகள். பகை
வரைவாட்டுபவனே! இரவில் கர்ணனால் அம்புகளால் நாசம்பண்ணப்
பட்டவர்களும் தார்த்தராஷ்டிரர்களுள் முழுகுகின்றவர்களுமான பாண்
டவர்களுக்கு நீ கரையாகவேண்டும். இராக்காலத்தில் ராக்ஷஸர்கள் மீண்
டும் அளவுகடந்த விக்ரமமுள்ளவர்களும் பலமுள்ளவர்களும் ஒருவரா
லும் அவமதிக்கத்தகாதவர்களும் சௌர்யமுடையவர்களும் பராக்ரம
சாலிகளின்மீது பராக்ரமத்தைக்காண்பிக்கின்றவர்களும் ஆகிறார்களல்
லரோ? மஹாவில்லாளியானகர்ணனை யுத்தத்தில் மாயையால் கொல்.
திருஷ்டத்யும்னனை முன்னிட்டவர்களான பார்த்தர்கள் துரோணரைக்

கொல்வார்கள்' என்றுகூறினர். கௌரவரே! கேசவருடையவார்த்தை யைக்கேட்டுப் பீபத்ஸுவும் பகைவரைக்கொல்பவனும் ராக்ஷஸனுமான கடோத்கசனைநோக்கி, 'கடோத்கச! நீயும் நீண்டகைகளையுடையவனான ஸாத்யகியும் எல்லாச்சைனிகர்களுள்ளும் என்னால்மதிக்கப்பட்டவர்கள். பாண்டவனான பீமஸேனனும் அவ்வாறே. ஆதலால், நீ கர்ணனோடு த்வந்த்வயுத்தத்தினபொருட்டுச்சென்று இரவில் போர்புரியவேண்டும். மகாரதனானஸாத்யகி உன்பின்பக்கத்தைத ரக்ஷிக்கிறவனாவான். இந்திரன் முற்காலத்தில் ஸுப்ரமண்யரோடுகூடித் தாரகாஸுரனைக் கொன்றதுபோல நீ ஸாத்வதனைத் துணையாகக்கொண்டு யுத்தத்தில் சூரனான கர்ணனைக் கொல்'என்றுசொல்ல, கடோத்கசன், 'மகாபாகுபலமுள்ளவரே! பிரபுவே! நீங்கள் என்னைப்பார்த்துச் சொல்லுகிறபடியே நான் செய்கிறேன். தேவரீரால் நியமிக்கப்பட்டுக் கர்ணனைக்கொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடன் போகிறேன். பாரதரே! நான் கர்ணனையும், துரோணரையும், அஸ்திரப்பயிற்சியுள்ளவர்களும் மகாபலசாலிகளுமான மற்றுமுள்ள க்ஷத்திரியர்களையும் கொல்வதில் வல்லமையுள்ளவன். பூமியுள்ளவரையில் ஜனங்கள்சொல்லிக்கொண்டிருக்கக்கூடிய யுத்தத்தை இப்பொழுது இரவில் ஸூதபுத்ரனுக்குக் கொடுக்கப்போகிறேன். இந்த யுத்தகளத்தில் சூரர்களையும பயந்தவர்களையும் கைகூப்பிக்கும்பிடுகிறவர்களையும் நான்விடப்போகிறதில்லை ராக்ஷஸர்களுக்குரியயுத்தமுறையைப்பின்பற்றி நான் எல்லோரையுமே கொல்லப்போகிறேன்' என்று விடைகூறினன். மிக்கதோள்வலியுள்ளவனும் சத்துருவீரர்களைக்கொல்பவனுமான ஹிடிம்பாபுத்திரன் இவ்வாறுசொல்லிவிட்டு உம்முடைய சேனையைப் பயமுறுத்திக்கொண்டு நெருங்கின அந்தயுத்தத்தில் கர்ணனைஎதிர்த்தான். (அவ்வாறு) வருகின்றவனும் மிகுந்தகோபமுடையவனும் ஜ்வலிக்கின்றவாயையுடையவனும் பிரகாசிக்கின்ற தலைமயிர்களுள்ளவனுமான அந்தக்கடோத்கசனைப் புருஷசிரேஷ்டனானஸூதபுத்திரன் அட்டஹாஸஞ்செய்துகொண்டே எதிர்த்தான். அரசரிற்சிறந்தவரே! இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்கும் யுத்தம்நேர்ந்ததுபோல இரவில் கர்ஜிக்கின்றவர்களான கர்ணன் ராக்ஷஸனான கடோத்கசன் இருவருக்கும் யுத்தம் நேர்ந்தது.

---

## நூற்றேழுபத்தைந்தாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)



(கடோத்கசன் ஜடாஸுரனுடைய புத்திரனைக் கொன்றது.)

அரசரே! யுத்தத்தில் கர்ணனைக் கொல்ல எண்ணங்கொண்டு அவ்விதமுயற்சியுடனே ஸூதபுத்திரனுடைய ரதத்தைநோக்கிவருகின்ற கடோத்கசனைக்கண்டு உமது குமாரனான துரியோதனன் துச்சாஸனனை நோக்கி, 'இந்தராக்ஷஸன் யுத்தத்தில் கர்ணனுடைய பராக்ரமத்தைக் கண்டு கர்ணனை விரைவாக எதிர்த்துவருகிறான். மகாரதனான இந்த ராக்ஷஸனைத்தடுத்துவிடு. எந்தவிடத்தில் மகாபலசாலியும் வைகர்த்தனனுமானகர்ணன் யுத்தத்தில் ராக்ஷஸனோடு போர்புரிய விரும்புகிறானோ அவ்விடத்திற்கு நீ பெரிதானசேனையினால் சூழப்பட்டுச் செல். (பகைவரின்) கர்வத்தையழிப்பவனே! நீ சேனையாற் சூழப்பட்டவனாகி முயற்சியுடனே யுத்தத்தில் கர்ணனைக் காப்பாற்று. கோரனான ராக்ஷஸன் (கர்ணனுடைய) அஜாக்கிரதையினால் அவனைக் கொல்லாமலிருக்கவேண்டும்' என்றுசொன்னான். அரசரே! இச்சமயத்தில், அடிக்கிறவர்களுள் சிறந்தவனும்பலசாலியுமானஜடாஸுரனுடைய புத்திரன் துரியோதனனுடைய அருகில்சென்று, 'துரியோதன! நான் உன்னால்கட்டளையிடப்பட்டவனாகி உனக்குச்சத்துருக்களாயிருக்கின்றவர்களும் மிகவும் பிரசித்திபெற்றவர்களும் யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவர்களுமான பாண்டவர்களைத் துணைவீரர்களோடுகூடக் கொல்ல விரும்புகிறேன். முற்காலத்தில் ராக்ஷஸஶ்ரேஷ்டரும் என்பிதாவுமானஜடாஸுரர் அற்பர்களானபார்த்தர்களால் ராக்ஷஸர்களை நாசம் செய்யக்கூடிய ஒருகாரியத்தைச்செய்து கொல்லப்பட்டார். ராஜேந்திர! பகைவர்களுடைய ரக்தபலியினாலும் சத்துருமாம்ஸங்களாலும் அந்த என்பிதாவுக்குப் பூஜையைச்செய்ய விரும்புகிறேன். எனக்கு நீ அநுமதிகொடுக்கவேண்டும்' என்று சொன்னான். பிறகு, ராஜாவான துரியோதனன் அடிக்கடி பிரீதியடைந்தவனாகி அந்த ஜடாஸுரபுத்திரனைப் பார்த்து, 'துரோணர் கர்ணன்முதலானவர்களோடுகூடி நான் பகைவர்களைக் கொல்லும் விஷயத்தில் போதுமானவனாயிருக்கிறேன். நீ என்னால் கட்டளையிடப்பட்டுச் செல். குரூரமான செய்கையுடையவனும் ராக்ஷஸியினிடத்தில் மனிதனுக்குப் பிறந்தவனும் ராக்ஷஸனுமான கடோத்கசனை யுத்தத்தில் கொல். பாண்டவர்களுக்கு எக்காலத்திலும் ஹிதத்தைச் செய்கின்றவனும் யானைகளையும் குதிரைகளையும் ரதங்

களையும் நாசம்செய்கின்றவனும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்றவனுமான கடோத்கசனை யுத்தத்தில் யமலோகத்திற்கனுப்பிவிடு' என்று கூறினான். பருத்த சரீரமுள்ள ஜடாஸுரபுத்திரன், 'அங்ஙனமே ஆகட்டும்' என்றுசொல்லிப் பீமஸேனகுமாரனை கடோத்கசனை அழைத்துப் பலவித சஸ்திரங்களை இறைத்தான். ஹிடிம்பாபுத்திரன் ஒருவனாக இருந்துகொண்டு பெருங்காற்று மேகங்களை நாசஞ்செய்வதுபோல அலம்பலனையும் கர்ணனையும் தாண்டமுடியாத கௌரவசேனையையும் மிகக்கலக்கினான். பிறகு, ராக்ஷஸனான அலம்பலன் மாயாபலத்தைக் கண்டு கடோத்கசனைப் பற்பல அடையாளங்களுள்ள பாணஸமூகங்களாலே விரைவாக அடித்தான். மகாபலசாலியான அலம்பலன் அனேக பாணங்களாலே பீமஸேனன்புத்திரனையடித்துப் பாண்டவர்களுடைய சேனையைப் பாணஸமூகங்களாலே துரத்தினான். பாரதரே! அந்த அலம்பலனாலே ஓட்டப்படுகின்றபாண்டவஸைனியங்கள் காற்றினால் தள்ளப் பட்டமேகங்கள்போல அர்த்தராத்திரியில் சிதறின. அரசரே! அவ்வாறே கடோத்கசனுடைய அம்புகளாலே துரத்தப்பட்ட உம்முடைய சேனையானது நடுராத்திரியில் ஆயிரமாயிரமாகப் பந்தங்களை எறிந்து விட்டு ஓடியது. பிறகு, அலம்பலன் கோபங்கொண்டு பெரிய யானையை ஈட்டிகளால் குத்துவதுபோல மகாயுத்தத்தில் பீமஸேனனுடைய குமாரனைப் பத்துப்பாணங்களால் அடித்தான். கடோத்கசன் அதிபயங்கரமாகச் சப்தித்துக்கொண்டு அந்த அலம்பலனுடைய வாகனத்தையும் ஸாரதியையும் எல்லா ஆயுதங்களையும் எள்ளளவெள்ளளவாக நாசஞ்செய்தான். பிறகு, கடோத்கசன், மேருமலையின்மீது மேகம் வர்ஷிப்பதுபோலக் கர்ணன்மீதும் ஆயிரக்கணக்கான மற்றக்கௌரவர்களின்மீதும் அலம்பலன்மீதும் பாணஸமூகங்களால் பொழிந்தான். பிறகு, ராக்ஷஸனால் பீடிக்கப்பட்ட கௌரவசேனையானது மிகக் கலங்கியது. சதுரங்கஸேனையும் மேல்மேல் ஒன்றையொன்று அடித்தது. மகாராஜரே! யுத்தத்தில் ரதத்தையும் ஸாரதியையுமிழந்த ஜடாஸுரபுத்திரன் கோபங்கொண்டு முஷ்டியினாலே கடோத்கசனைத் திடமாகக் குத்தினான். அந்தஅலம்பலனால் முஷ்டியினால்குத்தப்பட்ட அந்தக்கடோத்கசன் பூமி அசையுங்காலத்தில் மரங்களும் புற்களும் புதர்களுமுள்ளமலையசைவதுபோல நன்றாக அசைந்தான். பிறகு, அந்தக்கடோத்கசன் பரிகம்போலப் பிரகாசிக்கின்றதும் சத்துருக்களுடையகூட்டத்தை நாசம்செய்கின்றதுமான முஷ்டியினாலே ஜடாஸுரபுத்திரனை நன்றாகக்குத்தினான். பிறகு, கோபங்கொண்ட ஹிடிம்பாபுத்திரன் விரைவாக அவனை அடித்து இந்திரத்வஜம்போல் விளங்கு

கின்ற இரண்டுகைகளாலும் இழுத்துத் தூரஎறிந்தான். ஜடாஸுரபுத்திரன் கடோத்கசனிடத்தினின்றுந் தன்னை விடுவித்துக்கொண்டு மறுபடியும் எழுந்திருந்து வேகத்தோடு கடோத்கசனை விரைவாக எதிர்த்து வந்தான். அலம்பலனும் யுத்தத்தில் ராக்ஷஸனான கடோத்கசனை மேலேதூக்கிப் பூமியில் போட்டுக் கோபத்தாலே தேய்த்தான். கர்ஜிக்கின்றவர்களும் பருத்ததேகமுள்ளவர்களுமான அந்தக்கடோத்கசன் அலம்பலனிருவருக்கும், கைகலந்ததும் மயிர்பொடிக்கச்செய்கிறதுமான யுத்தம் நடந்தது. மகாவீர்யமுடையவர்களும் அதிகமான மாயைகளுள்ளவர்களுமான அவ்விருவரும் மாயைகளாலே ஒருவரையொருவர் அதிகரித்தவராகவிருந்துகொண்டு இந்திரனும் மஹாபலியும் போர்புரிந்ததுபோலப் போர்புரிந்தார்கள். அலம்பலனும் கடோத்கசனும், நெருப்பும் சமுத்திரமுமாகிப் பின்னும் கருடனும் தக்ஷகனுமாகவும், மறுபடியும் மேகமும் பெருங்காற்றுமாகவும், பின்னும் வஜ்ரமும் பெருமலையுமாகவும், மறுபடியும் யானையும் புலியுமாகவும், மறுபடியும் ராகுவும் சூரியனுமாகவும் தோன்றி, இவ்விதமாக அனேக மாயைகளை உண்டுபண்ணுகின்றவர்களாகவும் ஒருவரையொருவர் கொல்வதில் விருப்பங் கொண்டவர்களாகவும் மிக்க விசித்ரமாகப் போர்புரிந்தார்கள். அவ்விருவரும் பரிகாயுதங்களாலும் கதைகளாலும் ஈட்டிகளாலும் முத்கரங்களாலும் பட்டாக்கத்திகளாலும் உலக்கைகளாலும் மலைகளின் கொடுமுடிகளாலும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். மகாமாயையுடையவர்களும் ராக்ஷஸஶ்ரேஷ்டர்களுமான அவ்விருவரும் யுத்தரங்கத்தில் குதிரைகளின்மீதேறியும் யானைகளின்மீதேறியும் தேர்களின்மீதேறியும் காலாட்களாயிருந்தும் போர்புரிந்தார்கள். அரசரே! பிறகு,கடோத்கசன் மிகுந்த கோபங்கொண்டு அலம்பலனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினாலே பருந்துபோல மேலேகிளம்பிக் கீழேகுதித்துப் பெரியசரீரமுள்ள ராக்ஷஸஶ்ரேஷ்டனான அலம்பலனைப்பிடித்து மேலேதூக்கி யுத்தத்தில் விஷ்ணுவானவர் மயனை அடித்ததுபோல் பூமியில் அடித்தான். மகாராஜரே! பிறகு, எல்லையற்றவல்லமையுள்ள கடோத்கசன் அற்புதமான காட்சியுள்ளகத்தியை உருவி யுத்தகளத்தில் ரௌத்ராகாரமுள்ளவனும் துடிக்கின்றவனும் அதிபயங்கரமாக அலறுகின்றவனும் சத்ருவுமான அந்தஅலம்பலனுடையதான விகாரமானதோற்றமுள்ளதும் பயங்கரமாயிருப்பதுமானதலையை உடலினின்று அறுத்தான். கடோத்கசன் ரக்தத்தால் நனைக்கப்பட்ட அந்தத்தலையை மயிர்களில்பிடித்துத் தூக்கிக்கொண்டு துரியோதனனுடைய ரதத்தைநோக்கி விரைவாகச்சென்றான்.

அதிகப்லசாலியும் மகாபாகுபலமுள்ளவனுமான அந்தராக்ஷஸன் துரோணரையும் கர்ணனையும் கிருபரையும் (மற்ற) யுத்தவீரர்களையுந்தாண்டித் துரியோதனனுடைய ரதத்தினருகில்சென்று புன்சிரிப்புடையவனுகி விகாரமானமுகமும் தலைமயிருமுள்ள அலம்பலனுடையதலையை அவன் ரதத்தில்வைத்து வர்ஷாகாலத்தில் மேகம்கர்ஜிப்பதுபோல் பயங்கரமாகக் கர்ஜித்தான். வேந்தரே! பிறகு, துரியோதனனைப்பார்த்துப் பின் வரும்வார்த்தையையும் சொல்லலானுன். 'இதோ உன்பந்து கொல்லப் பட்டான். உன்னுலே இவனுடையவல்லமையானது பார்க்கப்பட்டது. பின்னும், இவ்வாருகக் கர்ணனுடைய முடிவையும் அவ்வாறே உன்னுடைய முடிவையும் பார்க்கப்போகிருய். தனக்குரிய தர்மம் அர்த்தம் காமம் இம்மூன்றையும் விரும்புகிறமனிதன்,வெறுங்கையோடு பிராமணனையும் அரசனையும் ஸ்திரீயையும் பார்க்கலாகாது. நான் கர்ணனைக்கொல்லும்வரையில் நீ மிக்கசந்தோஷமுள்ளவனுக இருப்பாயாக' என்று கூறினுன். பிறகு, இவ்வாறுசொல்லிவிட்டுக் கடோத்கசன் கோபங்கொண்டு யுத்தமுனையில் கூர்மையுள்ளபாணங்களை இறைத்துக்கொண்டு கர்ணனைஎதிர்த்தான். மகாராஜரே! பிறகு, கோரஸ்வரூபமுள்ளதும் பயங்கரமானதும் ஆச்சரியத்தை உண்டுபண்ணக்கூடியதுமான யுத்தமானது யுத்தகளத்தில் நரனுக்கும் ராக்ஷஸனுக்கும் நடந்தது' என்று கூறினுன்.

---

## நூற்றெழுபத்தாருவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(கர்ணனுக்கும் கடோத்கசனுக்கும் யுத்தம்.)

திருதராஷ்டிரன், "வைகர்த்தனனுன கர்ணனும் ராக்ஷஸனுன கடோத்கசனும் அர்த்தராத்திரியில் (பரஸ்பரம்) எதிர்த்தார்களே, அந்த யுத்தம் எவ்வாறு நடந்தது? எவனுல் வைகர்த்தனனுனகர்ணன் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டானே அந்தக்கோரனுன ராக்ஷஸனுடைய ரூபம் எவ்வாறிருந்தது? மாயைகளும் எல்லாஆயுதங்களும் எப்படிப் பட்டவை? அவனுடைய குதிரைகள் எவ்வுளவு உயரமும பருமனுமுள்ளவைகள்? ரதத்தின்கொடியானது எத்தன்மையது? வில் எப்படிப் பட்டது? அவனுடைய கவசமும் தலைப்பாகையும் எவ்விதமானவை? ஸஞ்சய! நான்கேட்கிறேன். நீ இவற்றைச் சொல்வாயாக. நீ சொல்வதில் திறமையுள்ளவனன்றோ?" என்று வினவ, ஸஞ்சயன்சொல்லலானுன்.

'மகாராஜரே! அந்தராக்ஷஸன் சிவந்தகண்களையுடையவன்; பெரிய சரீரமுள்ளவன்; சிவந்த முகமுடையவன்; ஒட்டினவயிறுள்ளவன்; மேல்நோக்கி நிற்கின்ற மயிர்களையுடையவன்; பசுமையான மீசையுடையவன்; முளைபோன்ற காதுகளையுடையவன்; பருத்த மோவாயுள்ளவன்; காதுவரையில் திறக்கப்பட்ட வாயையுடையவன்; கூர்மையான கோரப்பற்களுள்ளவன்; உயர்ந்திருக்கின்ற நான்கு பற்களையுடையவன்; அதிகமாக நீண்டு சிவந்திருக்கின்ற நாவும் உதடுகளுமுள்ளவன்; தொங்குகின்ற புருவமுடையவன்; பருத்த மூக்குடையவன்; கறுத்த சரீரமுள்ளவன்; சிவந்த கழுத்தையுடையவன்; மலைபோன்ற சரீரமுடையவன்; பயங்கரன்; பெரிதானஉடலுடையவன்; நீண்டகைகளுள்ளவன்; பெரிய தலையுடையவன்; அதிகபலமுள்ளவன்; விகாரமான வடிவுடையவன்; தொடுதற்கு மென்மையில்லாத தேகமுடையவன்; பருத்து உறுதியாயிருக்கும் அங்கங்களும் தலையுமுள்ளவன்; பருத்த இடையுள்ளவன்; ஆழ்ந்த நாபியுடையவன்; (இடையின்பக்கம்) மிகப் பருக்காதவன்; பருத்த உருவமுள்ளவ்ன்; ஹஸ்தாபரணங்களையணிந்தவன்; மகாமாயையுள்ளவன்; அவ்வாறே தோள்வளைகளுடன் கூடியவன்; ஒருமலை அக்கினிமாலையைத் தரிப்பதுபோல் மார்பிலே பொன்மாலையைத்தரித்தவன். ஸ்வர்ணமயமானதும் விசித்ரமானதும் பலவித உறுப்புக்களால் விளங்குகின்றதும் (அரண்மனையின்) தலைவாயிலுக் கொப்பானதும் வெண்மையுள்ளதுமான கிரீடமானது அவன் முடியில் பிரகாசித்தது. அவன் பாலசூரியனுடைய காந்திபோன்ற காந்தியையுடைய இரண்டு குண்டலங்களையும் ஸ்வர்ணமயமாயும் மங்களகரமாயுமுள்ள மாலையையும் நக்ஷத்திரசமூகங்களுக்கொப்பானதும் பூர்ணசந்திரனுக்குச் சமமான காந்தியுடையதும் பெரிதானதும் அதிக காந்தியுள்ளதும் வெண்கலத்தாற் செய்ததுமான கவசத்தையணிந்தவன். பெரிதும் ஸ்வர்ணமயமுமான கண்டசூத்திரத்தைத்தரித்த அந்தக் கடோத்கசன் அந்தக் கண்டசூத்திரத்தினால் மின்னலுடன்கூடின மேகம்போல் விளங்கினான். அனேக கிண்கிணிகளுடைய சப்தங்களோடுகூடியதும் சிவந்த கொடித்துணியுள்ளதும் கரடித்தோலால் நான்குபுறத்திலும் அங்கங்கள் மூடப்பட்டதும் நானூறுமுழம் சதுர அளவுள்ளதும் உத்தமமான எல்லா ஆயுதங்களுடனுங்கூடியதும் கொடிமரங்களும் மாலைகளுமுள்ளதும் எட்டுச் சக்கரங்களுள்ளதும் மேகம்போலக் கம்பீரமான சப்தத்துடன் கூடியதும் கோரமாயுள்ளதுமான ராக்ஷஸனுடைய பெரியரதத்தை மதயானைபோன்றவைகளும் சிவந்த கண்களுடையவைகளும் மிக்க பயங்கரமான உருவமுள்ளவைகளும் கறுத்தநிறமுடையவைகளும் பலமுள்

ளவைகளும் சிறந்த வாலுள்ளவைகளும் சிரமத்தைப்பொறுக்குந் திற மையுடையவைகளும் நீண்ட பிடரிமயிருள்ளவைகளும் அடிக்கடி கனைக் கின்றவைகளுமான நூறு குதிரைகள் இழுத்துச்சென்றன. வேக முடையவைகளும் நாநாவிதமான உருவத்துடன்கூடின முகத்தையுடை யவைகளுமான உத்தமமான குதிரைகள் இவனுடைய ரதத்தில் பூட் டப்பட்டுக் கர்ஜித்துக்கொண்டு ராக்ஷஸாதிபனைத் தாங்கிச்சென்றன. விரூபமான கண்களையுடையவனும் பிரகாசிக்கின்ற முகத்தையுடையவ னும் குண்டலங்களையணிந்தவனும் கோரரூபத்தையுடையவனும் பரு த்த சரீரத்தையுடையவனும் கோரப்பற்களுள்ளவனும் விகாரமான முக முள்ளவனும் ராக்ஷஸனுமான ஒரு ஸாரதியானவன் யுத்தகளத்தில் இவனுடைய குதிரைகளைச் சூரியனுடைய கிரணங்கள்போன்ற கடிவா ளங்களைப்பிடித்து நடத்தினான். அந்தக் கடோத்கசன் அந்த ஸாரதியோடு கூடி அருணனோடுகூடின சூரியன்போலவும் பெரிய மேகத்துடன்கூடின பெரிய மலைபோலவும் இருந்தான். அந்தக் கடோத்கசனுடைய ரதத் தில் சிவந்த தலையுள்ளதும் மிக்க பயங்கரமானதும் மாம்ஸத்தைப் பக்ஷிக்கின்ற கழுகு உருவமுள்ளதும் உயரத்தூக்கிக் கட்டப்பட்டிருக் கிறதும் பெரிதுமான ஒரு கொடியானது ஆகாயத்தை அளாவிக்கொண் டிருந்தது. இந்திரனுடைய வஜ்ராயுதத்தின் சப்தம்போன்ற சப்த முடையதும் உறுதியான நாண்கயிற்றையுடையதும் ஒரு முழம் சுற்றள வுள்ளதும் பன்னிரண்டு[1] அரத்னி நீளமுள்ளதுமான வில்லிலுள்ள நாண் கயிற்றை யிழுத்துக்கொண்டும் ரதத்தின் அச்சளவு பருமனுள்ள அம் புகளாலே எல்லாத்திக்குக்களையும் நிரப்பிக்கொண்டும் வீரர்களுடைய உயிரைவாங்குகின்றதான அவ்விரவில் கர்ணனைஎதிர்த்தான். இரதத்தில் காலை நன்றாக உதைந்து நிற்கின்றவனும் வில்லை (நாணைப்) பற்பலவித மாக இழுக்கின்றவனுமான அவனுடைய வில்லோசையானது இடிமுழ க்கம்போல் கேட்கப்பட்டது. பாரதரே! அந்தச் சப்தத்தினாலே பயப் படுத்தப்படுகின்ற உம்முடைய ஸைனியங்களெல்லாம் கடலின் பெரிய அலைகள்போல நடுக்கமுற்றன. எதிர்த்துவருகின்றவனும் விகாரமான கண்களையுடையவனும் மிகவும்பயங்கரனுமானகடோத்கசனைப்பார்த்து, ராதேயன் உரக்கச்சிரித்துக்கொண்டு வேகத்துடனே அவனைத் தடுத் தான். பிறகு, கர்ணன் ஸமீபத்தில் பாணங்களைப் பிரயோகிக்கின்ற கடோத்கசன்மீது பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டே யானையை யானை எதிர்ப்பதுபோலவும் காளையைக் காளையெதிர்ப்பதுபோலவும் எதிர்த்தான். அரசரே! கர்ணனுக்கும் ராக்ஷஸனுக்கும், இந்திரனுக்

[1] முழங்கையிலிருந்து சுண்டுவிரல்நுனிவரை நீட்டி அளக்கும் முழம்.

கும் சம்பானுக்கும் யுத்தம்நடந்ததுபோலக் கைகலந்த யுத்தம் நடந்தது. அவ்விருவரும் மகா வேகமுள்ளவைகளும் பயங்கரமான சப்தமுள்ளவைகளுமான இரண்டு விற்களைக் கையிற்கொண்டும் அன்னியோன்யம் புண்களையுண்டுபண்ணிக்கொண்டும் பெரிய அம்புகளாலே மூடிக்கொண்டார்கள். பிறகு, காதுவரையில் இழுத்துவிடப்பட்டவைகளும் கணுக்கள்படிந்தவைகளுமான அம்புகளாலே ஒருவர் மற்றொருவருடைய வெண்கலத்தாற்செய்த கவசங்களையுடைத்துத் தடுத்துக் கொண்டார்கள். அவ்விருவரும் நகங்களால் இரண்டு புலிகள்போலவும் தந்தங்களால் இரண்டு யானைகள்போலவும் அன்னியோன்யம் தாமரைமடல்போன்ற நுனிகளுள்ள சக்திகளாலும் அம்புகளாலும் செதுக்கினார்கள். அங்கங்களை வெட்டுகின்றவர்களும் அம்புகளைப் பூட்டுகிறவர்களும் அம்புகளாகிற கொள்ளிகளாலே கொளுத்துகின்றவர்களுமான அவ்விருவரும் பார்ப்பதற்கு முடியாதவர்களாயிருந்தார்கள். நன்றாகக் காயப்படுத்தப்பட்ட எல்லா அங்கங்களையுமுடையவர்களும் இரத்தவெள்ளத்தால் நனைக்கப்பட்டவர்களுமான அவ்விருவரும் அருவிகளைப் பெருக்குகின்றவைகளும் மலையிலுண்டாகும் (உலோகமுதலிய) தாதுப்பொருள்களால் நிறைந்தவைகளுமான இரண்டு மலைகள் போல் விளங்கினார்கள். அம்புகளின் நுனிகளாலே அங்கங்கள் பிளக்கப்பட்டவர்களும் ஒருவரையொருவர் பிளக்கின்றவர்களும் முயற்சியுடையவர்களும் மகா தேஜஸுள்ளவர்களுமான அவ்விருவரும் ஒருவரையொருவர் அசைக்கக்கூடவில்லை. அரசரே! யுத்தத்தில் பிராணனைப் பந்தயமாகவைத்து விளையாடுகின்ற கர்ணனுக்கும் ராக்ஷஸனுக்கும் நடக்கின்ற அந்த ராத்திரியுத்தமானது நெடுநேரம் சமமாகவேயிருந்தது. அப்பொழுது கூர்மையான அம்புகளைப்பூட்டித் தடையற்றுவிடுக்கின்ற அந்தக்கடோத்கசனுடைய வில்லின்சப்தத்தினால் அவனைச் சேர்ந்தவர்களும் பகைவர்களும் விசேஷமான பயமடைந்தார்கள். அரசரே! கர்ணன் கடோத்கசனை மீறமுடியாமற்போனபொழுது அஸ்திரங்களை அறிந்தவர்களுள் உத்தமனான அவன் தேவலோகத்து அஸ்திரத்தை வெளிப்படுத்த ஆரம்பித்தான். பாண்டுபுத்திரர்களுக்கு ஆனந்தத்தையுண்டுபண்ணுகிறவனான கடோத்கசன், கர்ணன் திவ்யாஸ்திரத்தைத் தொடுத்ததைக்கண்டு, சூலங்களையும் முத்காங்களையும் தரிக்கின்றதும் மலைகளையும் மரங்களையும் கையில்கொண்டதுமான கோரரூபிகளான ராக்ஷஸர்களுடைய பெரும்படையால் சூழப்பட்டவனாகி, ராக்ஷஸர்களுக்குரிய பெரிதான மாயையை வெளியிடலானான். கையிலெடுக்கப்பட்ட பெரிய வில்லையுடையவனும் உக்கிரமான காலதண்டத்

தைக் கையிலேந்திப் பிராணிகளை அழிக்கவருகின்ற யமன்போன்றவனுமான அந்தக் கடோத்கசனைக்கண்டு அந்த அரசர்கள் துயரமுற்றார்கள். கடோத்கசனால் வெளியிடப்படும் ஸிம்மநாதத்தினாலே பயமடையும்படி செய்யப்பட்ட யானைகள் மூத்திரத்தைவிட்டன. மனிதர்கள் மிகவும் துன்பத்தையடைந்தார்கள். பிறகு, அர்த்தராத்திரியில் அதிக பலசாலிகளான அரக்கர்களுடைய படைகளால் விடப்பட்டதும் மிகவும் உக்கிரமானதும் பெரிதுமான கல்மழை நான்குபக்கங்களிலும் தோன்றியது. இருப்புச்சக்கரங்களும் புசுண்டிகளும் சக்திகளும் தோமரங்களும் சூலங்களும் சதக்னிகளும் அவ்வாறே பட்டாக்கத்திகளும் தொடர்ச்சியாக விழுந்தன. வேந்தரே! உக்கிரமானதும் அதிபயங்கரமாயுள்ளதுமான அந்த யுத்தத்தைக்கண்டு உம்முடைய புத்திரர்களும் மற்றுமுள்ள யுத்தவீரர்களும் துன்பமுற்று ஓடினார்கள். அந்த யுத்தகளத்தில் அஸ்திரபலத்தினால் புகழ்ச்சிபெற்றவனும் அகங்காரங்கொண்டவனுமான கர்ணன் ஒருவன்மாத்திரம் துன்பத்தையடையாமலிருந்துகொண்டு கடோத்கசனால் உண்டாக்கப்பட்ட அந்த மாயையை அம்புகளால் நாசஞ்செய்தான். மாயையானது முழுதும் நாசம்பண்ணப்பட்டபொழுது கடோத்கசன் கோபத்தினால் உக்கிரமான பாணங்களைப் பிரயோகித்தான். அவைகள் கர்ணன்மீது பாய்ந்தன. பிறகு, அந்த அம்புகள் மகாயுத்தத்தில் கர்ணனைப் பிளந்து இரத்தத்தால் நனைக்கப்பட்டவைகளாகி மிகுந்த கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போல் பூமியிற் பிரவேசித்தன. அதிக கோபங்கொண்டவனும் கைச்சுறுசுறுப்புள்ளவனும் பிரதாபசாலியுமான கர்ணனோ கடோத்கசனை மீறிப் பத்தம்புகளால் பிளந்தான். சூதபுத்திரனால் மர்மஸ்தானங்களில் பிளக்கப்பட்ட கடோத்கசன் மிகுந்த துன்பத்தையடைந்து ஆயிரம் ஆரங்களுள்ள திவ்யமான சக்கரத்தைக் கையில் எடுத்தான். கோபங்கொண்ட பீமஸேனபுத்திரன் கர்ணனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தால் அதிரதபுத்ரனான அவன்மீது கத்திகளை நுனியில்கொண்டதும் பாலசூரியன்போல் பிரகாசிக்கின்றதும் மணிகளாலும் இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்டதுமான அந்தச் சக்கரத்தை எறிந்தான். அதிவேகத்தோடு சுழற்றியெறியப்பட்ட அந்தச் சக்கரமானது கர்ணனுடைய அம்புகளால் சின்னபின்னஞ்செய்யப்பட்டு அதிர்ஷ்டமில்லாதவனுடைய மனோரதம்போல் பிரயோஜனமற்றதாகிப் பூமியில்விழுந்தது. கடோத்கசனோ சக்கரம் தள்ளப்பட்டதைக் கண்டு, ராகு சூரியனை மூடுவதுபோல் பாணங்களால் கர்ணனை மூடினான். ருத்திரன் இந்திரன் உபேந்திரன் இவர்களுடைய விக்ரமம்போன்ற விக்ரமத்தையுடையவனான

ஸூதபுத்திரன் பரபரப்பற்றவனாகி அம்புகளால் கடோத்கசனுடைய ரதத்தை விரைவாக மூடினான். கோபமுற்ற கடோத்கசன் அப்பொழுது பொற்பூண்கட்டிய ஒரு கதாயுதத்தைச் சுழற்றியெறிந்தான். அதுவும் கர்ணனாலே அம்புகளால் அடிக்கப்பட்டு விழுந்தது. பிறகு, பருத்த உடலுள்ள கடோத்கசன் ஆகாயத்தில் கிளம்பிக் காளமேகம்போலக் கர்ஜித்துக்கொண்டு ஆகாயத்தினின்று மரமழையைப் பொழிந்தான். பிறகு, கர்ணன் ஆகாயத்தில் மாயாவியான பீமசேனபுத்திரனை, ஸூர்யன் கிரணங்களால் மேகத்தைப் பிளப்பதுபோலப் பாணங்களால் பிளந்தான். கர்ணன் அவனுடைய எல்லாக் குதிரைகளையுங் கொன்று ரதத்தை நூறாகத் துண்டாக்கி மழையைப்பெய்யும் மேகம்போல அம்புகளை அவன்மீது இறைத்தான். அவனுடைய சரீரத்தில் இரண்டு அங்குலஇடங்கூடக் காயப்படுத்தப்படாமல் இருக்கவில்லை. அவன் ஒரு முகூர்த்தகாலத்திற்குள் முட்களால் நிரம்பின முள்ளம்பன்றிபோலக் காணப்பட்டான். யுத்தத்திலுள்ளவர்கள் கர்ணனுடைய பாணக் கூட்டங்களாலே நான்குபக்கங்களிலும் சூழப்பட்டிருக்கின்ற குதிரைகளையும் அவனுடையதேரையும் துவசத்தையும் கடோத்கசனையும் காணவில்லை. மாயாவியான அந்தக்கடோத்கசனே கர்ணனுடைய அந்தத்திவ்யாஸ்திரத்தை அஸ்திரத்தினால் நாசஞ்செய்துகொண்டுமாயாயுத்தத்தினாலே ஸூதபுத்திரனை எதிர்த்துப் போர்புரிந்தான். அந்தக்கடோத்கசன் அப்பொழுது கர்ணனையெதிர்த்து மாயையாலும் லாகவத்தாலும் போர்புரிந்தான். கண்ணிற்குப்புலப்படாமல் ஆகாயத்தினின்று அனேகஅம்புத்திரள்கள் கீழேவிழுந்தன. பாரதரே! மிக்கமாயையுடையவனும் பருத்த சரீரமுள்ளவனுமான பீமஸேனபுத்திரன் மாயையினால் கர்ணனை மோகிக்கச்செய்துகொண்டு ஸஞ்சரித்தான். அவன் விகாரமான உருவமுள்ளவையும் அமங்களகரமானவையுமாயுள்ள முகங்களையெடுத்துக்கொண்டு கர்ணனுடைய திவ்யாஸ்திரங்களை மாயையால் விழுங்கினான். மறுபடியும், பருத்ததேகமுள்ள அந்தக்கடோத்கசன் பலத்தையிழந்தவனும் உத்ஸாகத்தையிழந்தவனும் யுத்தத்தில் நூறுதுண்டமாக வெட்டப்பட்டவனும் ஆகாயத்தினின்று கீழேவீழ்ந்தவனுமாகக் காணப்பட்டான். குருபுங்கவர்கள், 'அவன் மாண்டான்' என்று எண்ணிக் கர்ஜித்தார்கள். பிறகு, புதியவையான வேறுசரீரங்களுள்ளவனாக எல்லாத்திக்குக்களிலும் காணப்பட்டான். திரும்பவும் பருத்ததேகத்தையுடையவனும் நூறுதலைகளையுடையவனும் நூறுவயிறுகளையுடையவனும் பருத்தகைகளையுடையவனுமாக மைநாகபர்வதம்போற் காணப்பட்டான். மறுபடியும் அவ்விராக்ஷஸன் கட்டைவிரல் அளவுள்ளவனாகிப்

பொங்கிக்கிளம்பிய ஸமுத்திர அலைபோலக் குறுக்காகவும் உயரமாகவும் இருந்தான். அப்பொழுது அந்தயுத்தகளத்தில் அந்தக்கடோத்கசன் பூமியைப்பிளந்து மறுபடியும் ஜலத்தில் அமிழ்ந்து மறுபடியும் வேறிடத்தில் மேலேகிளம்பினவனுகக் காணப்பட்டான். அந்தக்கடோத்கசன் (கீழே) இறங்கிக் கவசம்பூண்டவனுகி மாயையினுல் பூமியையும் ஆகாயத்தையும் திக்குக்களையும் ஆக்ரமித்துக்கொண்டு பொன்னுல் அலங்கரிக்கப்பட்ட தேரில் மறுபடியும் நின்றுன். மன்னரே! குண்டலங்களணிந்த முகமுள்ளவனை கடோத்கசன் கர்ணனதுதேரருகில் வந்து மனங்கலங்காமல் அந்த ஸூதபுத்திரனைப்பார்த்து வார்த்தைசொல்லலானுன். 'சூதபுத்திர! இப்பொழுது நில்; என்னிடத்தினின்று உயிரோடு எங்கேபோகப்போகிருய்? போர்க்களத்தில் உனக்குப்போரிலுள்ள ஊக்கத்தை நான் இப்பொழுது போக்கப்போகிறேன்' என்றுன். இவ்வாறு சொல்லிவிட்டு ரோஷத்தால் சிவந்தகண்களுள்ளவனும் கொடிய பராக்கிரமமுள்ளவனுமான அந்தராக்ஷஸன் ஆகாயத்திற்கிளம்பி அட்டஹாஸம்செய்து சிறந்தயானையைச் சிங்கம் அடிப்பதுபோலக் கர்ணனை அடித்தான். கடோத்கசன் மேகம் மழைகளாலே பொழிவதுபோல ரதிகர்களுள்சிறந்த கர்ணன்மீது தேரச்சுக்கள்போன்ற அம்புகளைப்பொழிந்தான். கர்ணன் அவ்விதமான பாணவர்ஷத்தைத் தூரத்தில்வரும்போதே நாசஞ்செய்தான். பாரதரே! கர்ணனுலே மாயை நாசஞ்செய்யப்பட்டதைக்கண்டு கடோத்கசன் மறுபடியும்மறைந்துகொண்டு மாயையைப் பிரயோகித்தான். அவன் மிகஉயரமானதும் மரங்களடர்ந்த கொடுமுடியுள்ளதும் சூலாயுதங்களும் ஈட்டிகளும் கத்திகளும் உலக்கைகளுமாகிற ஜலப்பெருக்குள்ளதும் பெரிதுமான ஒருமலையானுன். கர்ணன் மைக்குவியல்போன்ற நிறமுடையதும் தாழ்வரைகளாலே உக்ரமான ஆயுதங்களை வகித்துக்கொண்டிருக்கிறதுமான மலையைக்கண்டும் மனக்கலக்கமடையவில்லை. பிறகு, கர்ணன் புன்னகைசெய்துகொண்டு திவ்யாஸ்திரத்தைப் பிரயோகம்செய்தான். அந்தச்சிறந்தமலை அந்த அஸ்திரத்தினுலே அடிக்கப்பட்டு அழிந்தது. பிறகு, அந்தக்கடோத்கசன் ஆகாயத்தில் இந்திரதனுசுடன்கூடின அதிகோரமான கார்மேகமாகத் தோன்றிச் சூதபுத்திரன்மீது கல்மாரியைப் பொழிந்தான். பிறகு, அஸ்திரங்களையறிந்தவர்களுள் உத்தமனும் ஸூதபுத்திரனுமான கர்ணன் வாயுவாஸ்திரத்தை ஸந்தானம்செய்து அந்தக்காளமேகத்தை நாசம் செய்தான். மகாராஜரே! அந்தக்கர்ணன் பாணஸமூகங்களாலே எல்லாத்திக்குக்களையும்மூடிக் கடோத்கசனுல் பிரயோகிக்கப்பட்ட அஸ்திரத்தை நாசஞ்செய்தான். பிறகு, மகாபலசாலியான பீமஸேனபுத்திரன்

ரணகத்தில் அட்டஹாஸஞ்செய்து மகாரதனுன கர்ணனைக்குறித்து மகாமாயையை வெளியிட்டான். அந்தக்கர்ணன் மறுபடியும் ரதத்தோடு வருகின்றவனும், தேரோளிகளுள் உத்தமனும், மனங்கலங்காதவனும், சிங்கங்களும் புலிகளும் போன்றவர்களும் மதங்கொண்ட யானையின் பராக்கிரமம்போன்ற பராக்கிரமமுள்ளவர்களும் யானைகளின்மீதும் ரதங்களின்மீதும் குதிரைகளின்மீதும் ஏறியிருக்கின்றவர்களும் பலவிதமான சஸ்திரங்களைத்தரித்தவர்களும் கோரமான உருவமுள்ளவர்களும் பலவிதமானகவசங்களையும் பூஷணங்களையுமுடையவர்களும் குரூரர்களுமான அனேகராக்ஷஸர்களாலே தேவர்களால் இந்திரன் சூழப்பட்டிருப்பதுபோலச் சூழப்பட்டிருக்கிறவனும், ராக்ஷஸனுமான கடோத்கசனைக்கண்டு பெரியவில்லைக் கையில்தாங்கியவனுன கர்ணன் அவனுடன் போர்புரிந்தான். பிறகு, கடோத்கசன் ஐந்துபாணங்களால் கர்ணனையடித்து எல்லா அரசர்களையும் பயப்படும்படிசெய்துகொண்டு பயங்கரமான ஸிம்மநாதத்தைசசெய்தான். மறுபடியும், அவன் அஞ்சலிகமென்னும் பாணத்தினுல் பெரிதான பாணஸமூகத்தை நாசஞ்செய்து கர்ணனுடைய கையிலிருக்கின்ற வில்லையும் விரைவாக அறுத்தான். பிறகு, கர்ணன் திடமானதும் பாரத்தைத்தாங்குகின்றதும் பெரிதும் இந்திராயுதம்போன்றதும் உயரமுள்ளதுமான வேறுவில்லைக்கையிலெடுத்துப் பலத்தோடு (நாண்கயிற்றை) இழுத்தான். மகாராஜரே! பிறகு, கர்ணன் பொன்னுலமைந்த புங்கமுள்ளவைகளும் பகைவர்களையழிக்கின்றவைகளுமான அம்புகளை ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற ராக்ஷஸர்களைக்குறித்துப் பிரயோகம் செய்தான். வனத்திலுள்ள நெருங்கின யானைக்கூட்டமானது ஸிம்மத்தினுல் பீடிக்கப்படுவதுபோலப் பருத்த மார்பையுடைய ராக்ஷஸர்களுடைய கூட்டமானது கர்ணனுடைய பாணங்களால் பீடிக்கப்பட்டது. பிரபுவானகர்ணன், யுகம்முடியுங்காலத்தில் அக்கினிபகவான் பிராணிகளைக் கொளுத்துவதுபோலப் பாணங்களாலே ராக்ஷஸர்களைக் குதிரைகளோடும் ஸாரதிகளோடும் யானைகளோடும் சின்னபின்னமாகச்செய்து கொளுத்தினுன். முற்காலத்தில் தேவரான மகேஶ்வரர் திரிபுரத்தையெரித்துத் தேவலோகத்தில் பிரகாசித்ததுபோல் சூதபுத்திரன் ராக்ஷஸசேனையைக் கொன்று பிரகாசித்தான். பெரியவரே! பாண்டவர்களைச்சேர்ந்த ஆயிரக்கணக்கான மன்னர்களுள் ராக்ஷஸஶ்ரேஷ்டனும் மகாபலசாலியும் பீமனுக்குரிய வீர்யபலங்களோடு கூடியவனும் கோபங்கொண்ட யமன் போன்றவனுமான கடோத்கசனைத்தவிர வேறு ஒருவனுவது இவனைப் பார்ப்பதற்கும் சக்தியுள்ளவனுகவில்லை. அரசரே! எரிகின்ற இரண்டு

பெரிய பந்தங்களினின்று எரிகின்ற எண்ணெய்ச்சொட்டுக்கள் கீழே விழுவதுபோல் கோபங்கொண்டிருக்கின்ற அவனுடைய இரண்டுகண்களினின்றும் தீஎழுந்தது. அந்தக்கடோத்கசன் கோபங்கொண்டு இரண்டுகைகளையுங்கொட்டி உதட்டைக்கடித்துக்கொண்டு மறுபடியும் அப்பொழுது மாயையினால் ஏற்படுத்தப்பட்டதும் யானைகள்போன்றவைகளும் பிசாசங்களின் முகத்தோடுகூடினவைகளும் பாரத்தைவகிக்கும் திறமைபொருந்தியவைகளுமான கோவேறுகழுதைகள் கட்டினதுமான ரதத்தின்மீதுஏறி ஸாரதியைநோக்கி, 'ஸூதபுத்திரனைநோக்கி என்னைக்கொண்டுபோ' என்றுசொன்னான். வேந்தரே! மறுபடியும் ரதிகர்களுள் உத்தமனான அந்தக்கடோத்கசன் கோரரூபமுடையவனும் தேராளியுமான ஸூதபுத்திரனோடு த்வந்த்வயுத்தம் செய்யலானான். அந்தராக்ஷஸன் கோபங்கொண்டு எட்டுச்சக்கரங்களுள்ளதும் மிக்க கோரமான உருவமுள்ளதும் ருத்திரரால் ஏற்படுத்தப்பட்டதுமான அசனியை ஸூதபுத்திரன்மீது எறிந்தான். இரண்டுயோசனை உயரமுள்ளதும் ஒருயோசனை பருமனுள்ளதும் உருக்கால் செய்யப்பட்டதும் கடப்பமலரானது கிஞ்சல்கங்களாலே நிறைந்திருப்பதுபோலச் சூலங்களால் நிறைந்திருக்கின்றதுமான அந்தஅசனியைக் கர்ணன் பெரியவில்லைக் கீழேவைத்துவிட்டு ரதத்தினின்றுதாவிக் கையில்பிடித்தான்; அவ்வாறு பிடிக்கப்பட்ட அந்தஅசனியை அவன்மீதே திருப்பியெறிந்தான். அவன் தேரிலிருந்து துள்ளிக்குதித்துவிட்டான். அதிக ஒளிபொருந்திய அந்த அசனியானது குதிரைகளோடும் ஸாரதியோடும் கொடியோடுங்கூட அந்த ரதத்தைச் சாம்பலாகச்செய்து பூமியைப் பிளந்துகொண்டு சென்றது. அந்தவிஷயத்தில் தேவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். தேவர்களால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பெரிதான அசனியைக் கர்ணன் விரைவாகப் பாய்ந்து பிடித்தமையால் எல்லாப்பிராணிகளும் அவனைப்புகழ்ந்தன. பகைவரைவாட்டுபவனும் ஸூதபுத்திரனுமானகர்ணன் யுத்தத்தில் இவ்வாறுசெய்து மீண்டும் ரதத்திலேறிப் பிறகு நாராசங்களைப் பிரயோகித்தான். கர்வத்தைப்போக்குகின்றவரே! பயங்கரமானகாட்சியுள்ள யுத்தத்தில் கர்ணன் அப்பொழுது செய்தது போன்ற காரியத்தை எல்லாப்பிராணிகளுள்ளும் வேறுஒருவனும்செய்ய இலாது. வர்ஷதாரைகளால் மலைஅடிக்கப்படுவதுபோல் அம்புகளாலே அடிக்கப்படுகின்ற அந்தராக்ஷஸன் [1] கந்தர்வ நகரம்போலத் தோன்றி மறுபடியும் மறைந்தான்; பகைவர்களை அழிப்பவனும் பருத்ததேக

[1] பீஷ்மபர்வம் 402-ம்பக்கம் குறிப்பிலும், துரோணபர்வம், 72 வது 566-வது பக்கங்களின் குறிப்பிலும் காண்க.

முள்ளவனுமான அந்தராக்ஷஸன் இவ்வாறு மாயையினாலும் லாகவத்தி னாலும் அந்தத் திவ்யாஸ்திரங்களை நாசஞ்செய்தான். ராக்ஷஸனால் மாயையினால் அஸ்திரங்கள் நாசம்பண்ணப்படும்பொழுது கர்ணன் நிதானமுள்ளவனாகவே அந்தராக்ஷஸனை எதிர்த்துப் போர்புரிந்தான். மகாராஜரே! பிறகு, கோபங்கொண்டவனும் மகாபலசாலியுமான பீம ஸேனகுமாரன் மகாரதர்களைப் பயமுறுத்திக்கொண்டு தன்வடிவத்தைப் பலவாறாகச்செய்துகொண்டான். பிறகு, திக்குக்களினின்று ஸிம்மங் களும் புலிகளும் சிறுத்தைகளும் வந்துசேர்ந்தன. அக்னிமயமான நாக் குக்களுள்ள ஸர்ப்பங்களும் இருப்புமயமான மூக்குள்ளபக்ஷிகளும் வந்துவிழுந்தன. கர்ணனுடையவில்லினின்றுவிடப்படும் அம்புகளால் நிறைக்கப்படுகின்ற அந்தராக்ஷஸன் ஸர்ப்பராஜனைப்போலப்பார்க்கமுடி யாதஉருவமுள்ளவனாகி அந்தஇடத்திலேயே மறைந்தான். அந்தராக்ஷ ஸர்களும் பிசாசங்களும் அவ்வாறே யாதுதானர்களும் [1] ஸாலாவிருகங் களும் விகாரமானமுகத்துடன்கூடிய அனேகசெந்நாய்களும், கர்ணனை நாசம்பண்ணுவதற்காக நான்குபக்கங்களிலும் அருகில் ஓடிவந்தன. பிறகு, அவைகள் அப்பொழுது உக்ரமான வாக்குக்களாலும் உயரத் தூக்கப்பட்டவைகளும் கோரமானவைகளும் இரத்தத்தால் நனைக்கப்பட் டவைகளுமான பலஆயுதங்களாலும் கர்ணனைப் பயமுறுத்தின. கர்ணன் அவைகளில் ஒவ்வொன்றையும் அனேகஅம்புகளாலே அடித்து, ராக்ஷஸ னுடைய அந்தமாயையைத் திவ்யாஸ்திரத்தினால் அடித்து, படிவான கணுக்களுள்ள அம்புகளால் அவன்குதிரைகளையும் அடித்தான். அடிக் கப்பட்டு நன்றாகக்காயப்படுத்தப்பட்ட மேனியுள்ளவைகளும் அம்பு களால் பிளக்கப்பட்ட முதுகுள்ளவைகளுமான அந்தக்குதிரைகள் அந்தராக்ஷஸன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பூமியில்விழுந் தன. அப்பொழுது மாயையழிக்கப்பட்டவனான ஹிடிம்பாபுத்திரன் சூரியகுமாரனான கர்ணனைநோக்கி, 'இதோ உனக்கு மரணத்தையுண்டு பண்ணுகிறேன்' என்றுசொல்லிவிட்டு அந்தர்த்தானமடைந்தான்.

---

[1] குரங்கு, நரி, நாய்.

## நூற்றெழுபத்தேழாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)



[பகன்முதலியோரின் வதத்தினால் பீமனிடம் நெடுநாளாக வைரங்கொண்ட அலாயுதன் துரியோதனனிடம் அனுமதிபெற்றுக் கடோத்கசனை எதிர்த்தது.)

கர்ணனுக்கும் ராக்ஷஸனுக்கும் அந்தயுத்தம் அவ்விதம் நடக்கையில், வீர்யமுடையவனான அலாயுதனென்கிற ராக்ஷஸத்தலைவன் பெரிய சேனையுடன் விகாரமான ரூபமுள்ளவர்களும் பற்பலரூபத்தைத்தரித்தவர்களுமான ஆயிரக்கணக்கான ராக்ஷஸர்களால் சூழப்பட்டவனாகி முன்னுள்ள பகைமையை நினைத்துக்கொண்டு துரியோதனனிடம் வந்தான். பராக்ரமமுடையவனும் பிராம்மணர்களைப் பக்ஷிக்கின்றவனும் தனக்கு ஞாதியுமானபகனும் மிக்ககாந்தியுள்ள கிர்மீரனும் தோழனான ஹிடிம்பனும் முன்பு கொல்லப்பட்டார்களல்லரோ? நெடுநாளாகவே உள்ளத்தில் ஊன்றியிருந்த பழம்பகைமையை நினைத்துக்கொண்டும் இந்தராத்திரியுத்தம் நடப்பதைத்தெரிந்துகொண்டும் யுத்தத்தில் பீமனைக்கொல்லக்கருதி அலாயுதன் துரியோதனனருகே வந்தான். யுத்தத்தில் மிக்கவிருப்பமுடையவனான அவன் மதங்கொண்ட யானைபோலவும் மிக்க கோபங்கொண்ட ஸர்ப்பம்போலவுமிருந்துகொண்டு துரியோதனனைநோக்கி இந்தவாக்கியத்தை உரைக்கலானான். 'மகாராஜனே! முற்காலத்தில் என்பந்துக்களான ஹிடிம்பன், பகன், கிர்மீரன்என்கிறராக்ஷஸர்கள் பீமனால் கொல்லப்பட்டவிஷயம் உனக்குந்தெரிந்ததே. அந்தப் பீமன் மற்றராக்ஷஸர்களையும் எங்களையும் அலக்ஷியம்செய்து கன்னிகையாயிருந்த ஹிடிம்பையையும் முன்புஅநுபவித்தான். வேறு என்ன வேண்டும்? அரசே! குதிரைகளோடும் ரதங்களோடும் யானைகளோடும் பரிவாரங்களோடும் மந்திரிகளோடுங்கூடின அந்தப் பீமனையும் ஹிடிம்பாபுத்திரனையும் கொல்வதற்காக நானே வந்திருக்கிறேன். இப்பொழுது கிருஷ்ணனை முதன்மையாகக்கொண்ட குந்திபுத்திரர்களனைவரையுங் கொன்று எல்லா அநுசரர்களோடும் நன்றாகப் பக்ஷிக்கப்போகிறேன். எல்லாச் சேனையையும் தடுத்துவிடு. நாங்கள் பாண்டவர்களுடன் யுத்தம் செய்யப்போகிறோம்' என்று சொன்னான்.

அந்த அலாயுதனுடைய இந்த வசனத்தைக்கேட்டு அப்பொழுது துரியோதனன் மகிழ்ந்து தம்பியரால் சூழப்பட்டவனாகி (அவனைப்) புகழ்ந்து, '(அலாயுத!) உன்னை முன்னிட்டு நாங்கள் சேனையுடன்

சேர்ந்து சத்துருக்களோடு போர்புரியப்போகிறோம். பகையை மூடிப் பதில் மனமுள்ளவர்களான என்னுடைய போர்வீரர்கள் யுத்தம்செய்யாமல் நிற்கமாட்டார்கள்' என்கிற வாக்யத்தை உரைத்தான். ராக்ஷஸஸ்ரேஷ்டனான அலாயுதன், 'அவ்வாறே ஆகட்டும்' என்று அரசனை நோக்கிச் சொல்லிவிட்டு மனிதர்களைத் தின்பவர்களான ராக்ஷஸர்களுடன்கூடிப் பீமஸேனகுமாரனை விரைவாக எதிர்த்தான். ராஜஸ்ரேஷ்டரே! கடோத்கசன் ஜ்வலிக்கின்ற எவ்விதமான சரீரத்தோடும் சூரியன்போலப் பிரகாசிக்கின்ற எவ்வித ரதத்தோடும் இருந்தானோ அலாயுதனும் அவ்விதசரீரத்தோடும் ரதத்தோடுமே இருந்தான். அந்த அலாயுதனுடைய பெரிய தேரும் நிகரற்ற ஒலியுள்ளதாகவும் அனேக தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டதாகவும் கரடித்தோலால் கட்டப்பட்ட உறுப்புக்களுள்ளதாகவும் நானூறுமுழம் அளவுள்ளதாகவுமிருந்தது. அந்த அலாயுதனுடைய ரதத்திலும் விரைவாகச் செல்லுகின்றவைகளும் யானைபோன்ற தேகமுடையவைகளும் கழுதைபோலக் கத்துகின்றவைகளும் பெரிய தேகமுடையவைகளும் மாம்ஸங்களையும் ரக்தங்களையும் புஜிக்கின்றவைகளுமான நூறு குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. அவனுடைய ரதத்தின் முழக்கமும் பெரிய மேகத்தினுடைய இடிமுழக்கத்துக்கொப்பாக இருந்தது. அவனுடைய வில்லும், மிகப் பெரியதும் உறுதியான நாண்கயிறுள்ளதும் பொன்னால் விளங்குவதுமாயிருந்தது. அவனுடைய பாணங்களும் தேரச்சுப்போன்றவைகளும் பொற்புங்கமுள்ளவைகளும் சாணைபிடிக்கப்பட்டவைகளுமாயிருந்தன. புஜபலமிகுந்த அந்த அலாயுதனும் அந்தக் கடோத்கசனைப்போலவே வீரனாக இருந்தான். அவனுடைய கொடியும் நரிக்கூட்டங்களால் நான்குபுறத்திலும் காக்கப்பட்டதாகவும் நெருப்புக்கும் சூரியனுக்கும் ஒப்பாகவுமிருந்தது. யமன்போன்ற அந்த அலாயுதனும் உருவத்தினாலே கடோத்கசனைக்காட்டிலும் மிகச்சிறந்த காந்தியுடையவனாயிருந்தான். அலாயுதன் ஜ்வலிக்கின்ற தோள்வளைகளணிந்தவனும் ஜ்வலிக்கின்ற கிரீடத்தையணிந்தவனும் பூமாலையைத் தரித்தவனும் தலைப்பாகையைத் தரித்தவனும் கத்தியைக் கட்டிக்கொண்டவனும் கதை, புசுண்டி, உலக்கை, கலப்பை, வில் இவைகளையுடையவனும் யானைக்குச் சமமான மேனியுள்ளவனுமாக விளங்கினான். அப்பொழுது அக்னிபோல் ஜ்வலிக்கின்ற அந்த ரதத்தினாலே அந்தப் பாண்டவசேனையைத் துரத்திக்கொண்டு யுத்தத்தில் அங்குமிங்கும் ஸஞ்சரிக்கின்றவனான அலாயுதன் ஆகாயத்தில் மின்னற்கூட்டங்களுடன் கூடின மேகம்போல் விளங்கினான். அரசரே! எல்லாவீரர்களுள்ளும் சிறந்தவர்களும் புருஷஸ்ரேஷ்

டர்களும் மஹாபலசாலிகளும் கவசத்தையணிந்தவர்களும் கேடகத்தைக் கையில்தாங்கியவர்களுமான அந்தப் பாண்டவ யுத்தவீரர்களும் சந்தோஷமுடையவர்களாகி நான்குபுறத்திலும் அவனை (எதிர்த்துப்) போர்புரிந்தார்கள்.

---

## நூற்றெழுபத்தேட்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(பீமனுக்கும் அலாயுதனுக்கும் யுத்தம்.)

யுத்தத்தில் பயங்கரமான செய்கையுள்ள அந்த அலாயுதன் வந்ததைப்பார்த்து அந்தக்கௌரவர்களெல்லோரும் சந்தோஷத்தை அடைந்தார்கள். தெப்பமில்லாதவர்களும் கடலைத்தாண்டக் கருதினவர்களுமான ஜனங்கள் தெப்பத்தைப்பெற்று எவ்வாறு ஸந்தோஷிப்பார்களோ அவ்வாறே துர்யோதனனை முதலாகக்கொண்ட உம்முடைய அந்தப் புத்திரர்களும் ஸந்தோஷத்தை அடைந்தார்கள். புருஷசிரேஷ்டர்கள் தங்களை மறுபடியும் பிறந்தவர்கள்போல எண்ணி ராக்ஷஸேந்திரனை அலாயுதனை நல்வரவுகூறிக் கௌரவித்தார்கள். கர்ணனுக்கும் ராக்ஷஸனுக்கும் இரவில் உக்கிரமான காட்சியுள்ளதும் மிக்க பயங்கரமானதும் மனிதரால் செயற்கரியதுமான அந்த யுத்தம் நடந்துவருகையில் அந்த அரக்கனோடு துரோணபுத்திரராவது கிருபராவது துரோணராவது சல்யனாவது கிருதவர்மாவாவது போர்புரியவில்லை. யுத்தத்தில் புருஷசிரேஷ்டனான கர்ணனொருவனே போர்புரிபவனானான். அரசர் கூட்டங்களுடன்கூடிய பாஞ்சாலர்கள் புன்னகையுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். உம்மைச்சேர்ந்த வீரர்களும் ஆங்காங்கு சுழன்று கொண்டு மிக்க மதிமயக்கங்கொண்டார்கள். போர்க்களத்தில் ஹிடிம்பா புத்திரனான கடோத்கசனுடைய அந்தச் செய்கையைப் பார்த்துத் துரோணர், துரோணபுத்திரர், கிருபர்முதலானவர்கள் நடுக்கமுற்றவர்களாகி, 'இச்சைனியம் மீளாது' என்று பெருங்கூச்சலிட்டார்கள். மகாராஜரே! உமது சேனைமுழுதும் மனவருத்தமடைந்தது; பிரஜ்ஞை இழந்து கூக்குரலிட்டது; கர்ணனுடைய உயிரில் ஆசையற்றதாகியது. துரியோதனனோ கர்ணன் அதிகத் துன்பத்தையடைந்ததைக் கண்டு, ராக்ஷஸேந்திரனை அலாயுதனை அழைத்து, 'இதோ வைகர்த்தனனான கர்ணன் ஹிடிம்பாபுத்திரனோடு எதிர்த்து யுத்தத்தில் தன் சக்திக்கும் பராக்ரமத்துக்கும் தக்க காரியத்தைச் செய்கிறான். யானையினால் முறிக்கப்பட்ட மரங்கள்போலப் பீமஸேனபுத்திரனாலே கொல்லப்பட்டவர்

களும் சூரர்களும் பலவித சஸ்திரங்களாலடிக்கப்பட்டவர்களுமான இந்த அரசர்களைப் பார். வீரனே! உன் ஸம்மதத்தின்மேல் என்னால் ஞாதிகளுடைய மத்தியில் யுத்தத்தில் இந்தப் பாரமானது உன்மீது வைக்கப்பட்டது. நீ பராக்கிரமத்தை வெளியிட்டு அவனை நாசம்செய். சத்துருக்களை நாசஞ்செய்பவனே! இந்தப் பாபியான கடோத்கசன் மாயாபலத்தையடைந்து சூரியபுத்திரனான கர்ணனை நாசஞ்செய்துவிடு வான்' என்று கூறினான். இவ்வாறு அரசன் சொல்லக்கேட்டு, பயங் கரமான, பராக்கிரமமுள்ளவனும் மிக்க புஜபலமுள்ளவனுமான அந்த ராக்ஷஸன் 'அப்படியே ஆகுக' என்று சொல்லிவிட்டுக் கடோத்கசனைக் குறித்து ஓடிவந்தான். பிரபுவே! பிறகு, பீமஸேனபுத்திரனும் கர்ண னைவிட்டுவிட்டுச் சத்துருவுக்கு எதிராக வந்துகொண்டிருக்கின்ற அலா யுதனைப் பாணங்களால் பீடித்தான். கோபங்கொண்டவர்களான அந்த ராக்ஷஸசிரேஷ்டர்களிருவருக்கும் காட்டில் ஒரு பெண்யானைநிமித்த மாக மதங்கொண்ட இரண்டு ஆண்யானைகளுக்குச் சண்டைநேர்ந்தது போலச் சண்டைநேர்ந்தது. ரதிகர்களுள் உத்தமனான கர்ணனும் ராக்ஷ ஸனான கடோத்கசனால் விடப்பட்டு, சூரியன்போல் ஜ்வலிக்கின்ற ரதத் தோடு பீமஸேனனைக்குறித்து எதிர்த்துவந்தான். அழிக்கிற வீரர்க ளுள் உத்தமனான பீமன் யுத்தத்தில் ஸிம்மத்தினாலே காளைகவரப்படு வதுபோல அலாயுதனாலே கடோத்கசன் கவரப்பட்டதைக் கண்டு எதிர்த்துவருகின்ற கர்ணனை அலக்ஷியம்செய்துவிட்டு அலாயுதனு டைய ரதத்தின்மீது பாணஸமூகங்களை இறைத்துக்கொண்டு சூரியன் போன்ற மேனியையுடைய ரதத்தோடு அவனைநோக்கிச்சென்றான். பிர புவே! வருகின்ற பீமஸேனனைப்பார்த்து அப்பொழுது அந்த அலா யுதன் கடோத்கசனை விட்டுவிட்டுப் பீமஸேனனை அழைத்தான். பிர புவே! ராக்ஷஸர்களுக்கு நாசத்தையுண்டுபண்ணுகிறவனான பீமன் அந்த அலாயுதனை விரைவாக எதிர்த்துப் பரிவாரங்களுடன் கூடின அந்த ராக்ஷஸேந்திரன்மீது சரமாரிகளைப் பொழிந்தான். பகைவர்களை அடக்குகிறவரே! அவ்வாறே அலாயுதன் சாணையில் தீட்டப்பட்ட அம்புகளைப் பீமன்மீது திரும்பத்திரும்ப வர்ஷித்தான். அவ்வாறே, உமது குமாரர்களுடைய ஜயத்தில் விருப்பமுள்ளவர்களும பயங்கர மானவர்களும் பற்பல ஆயுதங்களுள்ளவர்களுமான அந்த ராக்ஷஸர்க ளெல்லாரும் பீமஸேனனை எதிர்த்துவந்தார்கள். அனேக ராக்ஷஸர்க ளாலே அடிக்கப்படுகின்றவனும் மஹாபலசாலியுமான பீமஸேனன் அவர்களை எல்லோரையும் கூர்மையுள்ள ஐந்து ஐந்து பாணங்களால் அடித்தான். குரூரபுத்தியுடைய அந்த ராக்ஷஸர்கள் பீமனாலே அடிக்

கப்படுகின்றவர்களாகிக் குரூரமான சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு பத்துத்திக்குக்களிலும் ஓடினார்கள். பீமனாலே அந்தச் சேனாவீரர்கள் பயமுறுத்தப்படுவதைக் கண்டு மிக்க வலிமையுள்ள ராக்ஷஸன் பாணங்களை அவன்மீது இறைத்துக்கொண்டு வேகமாக எதிர்த்து ஓடிவந்தான். பீமஸேனன் யுத்தத்தில் அவனைக் கூர்மையான முனையுள்ள அம்புகளாலே அடித்தான். அலாயுதனோ பீமனாலே விடப்பட்ட அந்த அம்புகளில் சிலவற்றை ரணகளத்தில் விரைவாகத் துண்டாக்கினான்; சிலவற்றைக் கையினால் பிடித்தான. பயங்கரமான பராக்கிரமமுள்ள அந்தப்பீமன் அந்த ராக்ஷஸஸ்ரேஷ்டனைக் கண்டு அப்பொழுது இடி விழுவதுபோல விழும் கதாயுதத்தை வேகத்தோடு எறிந்தான். பிறகு, வேகத்துடன் வருகின்றதும் நெருப்பு ஜ்வாலைகளால் நிரம்பியதுமான அந்தக் கதாயுதத்தை அலாயுதன் தன்கதையினாலே அடித்தான். அந்தக் கதை பீமனிடம் திரும்பிவந்தது. குந்திபுத்திரனான அந்தப் பீமஸேனன் ராக்ஷஸேந்திரன்மீது அம்புமழைகளை இறைத்தான். ராக்ஷஸன் கூர்மையான பாணங்களாலே பீமனுடைய அந்த அம்புகளைப் பயனற்றவைகச் செய்துவிட்டான். பயங்கரமான உருவமுள்ள அந்த ராக்ஷஸர்களெல்லாரும் இரவில் ராக்ஷஸேந்திரனுடைய கட்டளையினாலே ரதங்களையும் யானைகளையும் நாசம்செய்தார்கள். அந்த யுத்தரங்கத்தில் ராக்ஷஸர்களாலே மிகவும் பீடிக்கப்பட்ட பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும குதிரைகளும் உத்தமமான யானைகளும் மனத்தில் ஆறுதலை அடையவில்லை. மகாகோரமாக நடக்கிற அந்தப் பெரிய யுத்தத்தைக் கண்டு வாஸுதேவர் தனஞ்சயனைநோக்கி, 'பாண்டவ! மிக்க கைவன்மையுள்ள பீமன் ராக்ஷஸேந்திரனுடைய வசத்தையடைந்திருப்பதைப் பார். நீ இவனைத் தொடர்ந்துசெல். ஆலோசியாதே. திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் மகாரதர்களான த்ரௌபதிகுமாரர்களும் கர்ணனை எதிர்த்துச்செல்லட்டும். பாண்டவ! உன்னுடைய கட்டளையினால் நகுலனும் ஸஹதேவனும் வீர்யமுடையவனான யுயுதானனும் மற்ற ராக்ஷஸர்களைக் கொல்லட்டும். மிக்க தோள்வலிமையுள்ளவனே! நீயும் துரோணரை முன்னிட்டுக்கொண்டிருக்கிற இந்தச்சேனையைக் கொல். பெரியபயம் வந்துவிட்டதன்றோ?' என்கிற இந்த வசனத்தைச் சொன்னார். கிருஷ்ணனாலே இவ்வாறு சொல்லப்பட்டவுடன், கட்டளைப்படியே மகாரதர்கள் யுத்தத்தில் சூரிய குமாரனான கர்ணனையும் ராக்ஷஸர்களையும் எதிர்த்துச்சென்றார்கள். பிறகு, பிரதாபசாலியும் மகாபலசாலியுமான ராக்ஷஸேந்திரன் காதுவரையில் இழுத்துவிடப்படுகின்றவையும் ஸர்ப்பம்போன்றவையுமான

அம்புகளாலே பீமனுடைய வில்லையறுத்து அவன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே யுத்தத்தில் கூர்மையான அம்புகளாலே அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் கொன்றான். குதிரையையும் ஸாரதியையுமிழந்தவனான அந்தப் பீமன் தேர்நடுவினின்றும் இறங்கி ஸிம்மநாதஞ்செய்துகொண்டு கோரமும் பெரிதுமான கதாயுதத்தை அந்த ராக்ஷஸன்மீது பிரயோகித்தான். பிறகு, கோரஸ்வரூபியான ராக்ஷஸன் பயங்கரமான சப்தத்துடன் வருகின்ற அந்த மகாகதையைக் கதையினாலே நாசஞ்செய்து ஸிம்மநாதஞ்செய்தான். ராக்ஷஸேந்திரனுடைய கோரமும் பயங்கரமுமான அந்தச் செய்கையைக்கண்டு பீமஸேனன் மனமகிழ்ச்சிகொண்டு வேகத்துடன் கதையைக் கையிலெடுத்தான். கதைகளுடைய மோதுதலால் உண்டாகின்ற சப்தங்களாலே பூமியை மிக நடுங்கச்செய்கின்றவர்களான அந்த நரனுக்கும் ராக்ஷஸனுக்கும் கைகலந்தயுத்தம் நடந்தது. கதையை எறிந்துவிட்டு அவ்விருவரும் மறுபடியும் ஒருவரையொருவர்கிட்டி இடிமுழக்கம்போன்ற சப்தமுள்ள கைக்குத்துக்களால் ஒருவரையொருவர் குத்திக்கொண்டார்கள். கோபங்கொண்டவர்களான அவ்விருவரும் தேருருளைகளாலும் நுகத்தடிகளாலும் அச்சுக்களாலும் ஆஸனங்களாலும் (மற்றுமுள்ள) உபகரணங்களாலும் இன்னும் எவையெவை அருகேயுள்ளனவோ அவையவைகளை எடுத்து (அவைகளாலும்) பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். ஒருவரையொருவர் தாக்கி அடித்துக்கொண்டு இரத்தத்தைப் பெருக்குகின்ற இருவரும் மதங்கொண்ட இரண்டு பெரிய யானைகள்போல மறுபடியும் மறுபடியும் இழுத்தார்கள். பாண்டவர்களுக்கு நன்மைசெய்வதில் முயற்சியுள்ளவரான கண்ணபிரான் அவ்விருவரையும் பார்த்துப் பீமஸேனனைக் காப்பாற்றும்பொருட்டு ஹிடிம்பாபுத்திரனான கடோத்கசனை ஏவினார்.

---

## நூற்றெழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(கடோத்கசன் அலாயுதனைக் கொன்றது.)

வேந்தரே! ஸமீபத்தில் ராக்ஷஸனாலே யுத்தத்தில் பீமஸேனன் கவரப்பட்டதைக் கண்டு ஸ்ரீ வாஸுதேவர் கடோத்கசனைப்பார்த்து, 'மிக்க புஜபலமுள்ளவனே! மிக்க காந்தியுடையவனே! யுத்தத்தில் எல்லா ஸைனியங்களும் நீயும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமன் அலாயுதனாலே கவரப்பட்டிருப்பதைப்பார். மகா பாகுபலமுள்ள

வனே! அப்படிப்பட்ட நீ கர்ணனை விட்டுவிட்டு ராக்ஷஸேந்திரனை அலாயுதனை விரைவாகக் கொல். பிறகு, கர்ணனைக் கொல்வாய்' என்று சொன்னார். வீர்யமுடையவனான கடோத்கசன் மாதவருடைய வார்த்தையைக்கேட்டுக் கர்ணனை விட்டுவிட்டு ராக்ஷஸஸ்ரேஷ்டனும் பகனுடைய ஸகோதரனுமான அலாயுதனோடு போர்புரியலானான். பாரதரே! இராத்திரிகாலத்தில் அலாயுதனும் கடோத்கசனுமாகிய இரண்டுராக்ஷஸர்களுக்கும் பயங்கரமான கைகலந்தயுத்தம் நேர்ந்தது. ஆயுதங்களை எடுத்தவர்களும் மிக்க கோபங்கொண்டவர்களுமான மகாரதனான யுயுதானனும் நகுலனும் ஸஹதேவனும், வேகத்துடன் வருகின்றவர்களும் பயங்கரமான காட்சியுடையவர்களும் சூரர்களும் விற்பிடித்தவர்களுமான அலாயுதனுடைய ராக்ஷஸப்போர்வீரர்களைக் கூர்மையான அம்புகளாலே நாசஞ்செய்தார்கள். அரசரே! கிரீடதாரியான பீபத்ஸு நான்குபக்கங்களிலும் அம்புகளையிறைத்துக்கொண்டு யுத்தத்திலுள்ள எல்லா க்ஷத்திரிய சிரேஷ்டர்களையும் நான்குபுறங்களிலும் ஓடும்படி செய்தான். மன்னரே! கர்ணனும் யுத்தகளத்தில் பாஞ்சாலவீரர்களுள் மகாரதர்களான திருஷ்டத்யும்னன் சிகண்டிமுதலான அரசர்களை ஓடும்படிசெய்தான். பிறகு, பயங்கரமான பராக்கிரமமுள்ள பீமன் யுத்தத்தில் கொல்லப்படுகின்ற அந்த வீரர்களைக்கண்டு பாணங்களை வாரி இறைத்துக்கொண்டு வேகத்துடன் கர்ணனை எதிர்த்தான். நகுலனும் ஸஹதேவனும் மகாரதனான ஸாத்யகியும் கர்ணனிருக்குமிடத்திலுள்ள ராக்ஷஸர்களைக்கொன்று திருப்தியடைந்து, பிறகு, கர்ணனையும் எதிர்த்தார்கள். பாஞ்சாலர்கள் துரோணரையே எதிர்த்தார்கள். அலாயுதனோ மிகுந்த கோபங்கொண்டு பகைவரையடிப்பவனான கடோத்கசனைப் பெரிதான பரிகாயுதத்தினால் தலையிலடித்தான். மகாபலசாலியும் வீர்யமுள்ளவனுமான பீமஸேனபுத்திரனோ அந்த அடியினாலே சிறிது மூர்ச்சையடைந்து பின்பு தன்னை நிலைநிறுத்திக்கொண்டான். பிறகு, ஜ்வலிக்கின்ற அக்கினிபோன்றதும் அனேக மணிகளாலே அலங்கரிக்கப்பட்டதும் ஸ்வர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டதுமான கதாயுதத்தை ரணகளத்தில் அந்த அலாயுதன்மீது பிரயோகித்தான். பயங்கரமான செய்கையுள்ள கடோத்கசனாலே விரைவாகவிடப்பட்ட அந்தக் கதையானது பெரிய ஒலியுள்ளதாகி அலாயுதனுடைய குதிரைகளையும் தேரினையும் ஸாரதியையும் பொடிப்பொடியாகச் செய்தது. அந்த அலாயுதன் குதிரைகளும் சக்கரங்களும் அச்சுக்களும் அழிக்கப்பட்டதும் கொடியும் ஏர்க்காலும் சிதறினதுமான ரதத்தினின்று ராக்ஷஸர்களுக்குரிய மாயையைப் பின்பற்றி விரை

வாக மேலேகிளம்பினன். அவன் மாயையை அடைந்து ரக்தத்தை மிகுதியாக வர்ஷித்தான். ஆகாயம் மின்னல்களுடன் விளங்குவதும் நெருங்கியமேகங்களால் நிரம்பியதுமாகியது. பிறகு, அந்த மகாயுத்தத்தில் இடிவீழ்ச்சியும் இடிமுழக்கத்துடன்கூடியமேகங்களும் பெரிய சடசடவென்னுமொலியும் தோன்றின. ராக்ஷஸனான ஹிடிம்பாபுத்திரன் ராக்ஷஸனான அலாயுதனுடைய பெரிதான அந்த மாயையைக் கண்டு ஆகாயத்திற்கிளம்பி மாயையால் அவனுடையமாயையை நாசம் செய்தான். மாயாவியான அந்த அலாயுதன் மாயையினாலே தன்மாயை அழிக்கப்பட்டதைக்கண்டு கடோத்கசன்மீது மிகவும்நெருங்கிய கல்மாரியைப்பொழிந்தான். வீர்யமுடையவனான கடோத்கசன் கோரமான அந்தக்கல்மாரியைப் பாணவர்ஷத்தால் திசைகளில் (விலகும்படி) அழித்தான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, நானாவிதமான ஆயுதங்களாலே ஒருவர்மீது ஒருவர் வர்ஷித்தார்கள். பாரதரே! பிறகு, அந்த யுத்தத்தில் அவ்விருவீரர்களும் இரும்பினாற்செய்த பெரியபரிகங்களாலும் சூலங்களாலும் கதைகளாலும் உலக்கைகளாலும் முத்கரங்களாலும் பினாகங்களாலும் கத்திகளாலும் தோமரங்களாலும் ஈட்டிகளாலும் கம்பனங்களாலும் கூர்மையானநாராசங்களாலும் பல்லங்களாலும் அம்புகளாலும் சக்கரங்களாலும் கோடாலிகளாலும் இருப்புத்தடிகளாலும் பிண்டிபாலங்களாலும் கோசிர்ஷங்களாலும் உரல்களாலும் வேரோடு பிடுங்கப்பட்ட பெரியகிளைகளுள்ள பலவிதமரங்களாலும் வன்னிமரங்களாலும் பீலுவிருக்ஷங்களாலும் கடப்பமரங்களாலும் சம்பகவிருக்ஷங்களாலும் இங்குதமரங்களாலும் இலந்தைமரங்களாலும் பூத்துள்ள கோவிதாரமரங்களாலும் பலாசவிருக்ஷங்களாலும் அரிமேதமரங்களாலும் கல்லிச்சிமரங்களாலும் ஆலமரங்களாலும் அரசமரங்களாலும் பலவிததாதுவர்க்கங்களால் நிறைந்த பெரியமலைச்சிகரங்களாலும் பரஸ்பரம் அடித்துக்கொண்டார்கள். பிளக்கப்படுகின்ற வஜ்ரங்களுடைய சப்தம்போல அம்மரங்களுடைய சப்தமானது பெரிதாகத் தோன்றியது. மனிதர்களை ரக்ஷிப்பவரே! பீமனுடைய புத்திரனுக்கும் அலாயுதனுக்கும் முற்காலத்தில் வானரசிரேஷ்டர்களான வாலிசுக்ரீவர்களுக்கு யுத்தம்நடந்ததுபோலக் கோரமானயுத்தம் நடந்தது. அவ்விருவரும் பற்பலவித கோரமானஆயுதங்களாலும் அவ்வாறே பாணங்களாலும் யுத்தம்செய்து கூர்மையானகத்திகளை எறிந்துவிட்டு ஒருவரையொருவர் எதிர்த்துத் தாக்கினார்கள். மிகுந்தபலமுள்ளவர்களும் பருத்தசரீரமுள்ளவர்களும் மஹாபலசாலிகளுமான அவ்விருவரும் ஒருவர்மீது ஒருவர் பாய்ந்து இருகைகளாலும் மயிர்களைப்பிடித்துக்கொண்

டார்கள். மன்னரே! பெரியதேகமுள்ளவர்களும் வேர்த்திருக்கின்ற தேகமுடையவர்களுமான அவ்விருவரும் அதிகமாக வர்ஷிக்கின்ற இரண்டுமேகங்கள்போல வேர்வையையும் ரக்தத்தையும் வடித்தார்கள். பிறகு, ஹிடிம்பாபுத்திரன் வேகத்தோடெதிர்த்து அந்தராக்ஷஸனைச் சுழற்றிப் பலத்தினாலேஎறிந்து பெரிதான அவனுடைய தலையையும் அறுத்தான். அதிகபலசாலியான கடோத்கசன் அப்பொழுது இரண்டு குண்டலங்களால் அலங்கரிப்பட்ட அவனுடைய தலையை அறுத்து மிகப்பெரிய ஸிம்மநாதம்செய்தான். பருத்தஉடலுடையவனும் பகைவர்களை அடக்குகின்றவனும் பகனுக்கு ஞாதியுமான ராக்ஷஸன் கொல்லப்பட்டதைக்கண்டு பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் ஸிம்மநாதம் செய்தார்கள். பிறகு, யுத்தத்தில் அந்தராக்ஷஸன் கொல்லப்படவே, பாண்டவஸேனாவீரர்கள் ஆயிரம் ஜயபேரிகளையும் பதினாயிரம் சங்கங்களையும் முழக்கினார்கள். அந்தஇரவானது அவர்களுக்கு அதிகஜயத்தை உண்டுபண்ணுகின்றதாகவும் நான்குபக்கங்களிலும் தீபங்களுடையவரிசையுள்ளதாகவும் பிரகாசித்தது. மகாபலசாலியான பீமஸேனபுத்திரன் அலாயுதனுடைய தலையை அறிவுமயங்கியிருக்கும் துரியோதனனுக்கெதிரில் எறிந்தான். பாரதரே! பிறகு, துரியோதனராஜன் அலாயுதன் கொல்லப்பட்டதைக்கண்டு, ஸைனியத்துடன் அதிகமனவருத்தமுற்றவனானான். ஏனெனில், மிக்க வைரத்தைநினைத்த அந்த அலாயுதனென்கிறராக்ஷஸன் தானே துரியோதனனிடம்வந்து, 'நான் யுத்தத்தில் பீமஸேனனைக் கொல்வேன்' என்று பிரதிஜ்ஞைசெய்தான். நிச்சயமாக அந்த அலாயுதனாலே பீமஸேனன் கொல்லப்படத்தக்கவனென்றே அரசன் எண்ணினான்; தன்பிராதாக்களுடைய வாழ்நாள் நெடுங்காலமுளதெனவும் எண்ணியிருந்தான். அப்படிப்பட்ட அலாயுதன் பீமஸேனனுடைய புத்திரனால் கொல்லப்பட்டதைக்கண்டு பீமஸேனனுடைய பிரதிஜ்ஞை நிறைவேறிவிட்டதென்றே துரியோதனன் எண்ணினான்.

---

## நூற்றெண்பதாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)



(கர்ணன் கடோத்கசனைக் கொன்றது.)

அலாயுதனென்கிற ராக்ஷஸனைக்கொன்று, மிக்க மனமகிழ்ச்சி கொண்ட கடோத்கசன் உமது படையினெதிரில் பலவிதசப்தங்களைச் செய்தான். மகாராஜரே! மனத்தை நடுக்கமுறச்செய்கின்ற அந்தக்

கடோத்கசனுடைய நெருங்கின அந்தச்சப்தத்தைக்கேட்டு உம்மைச் சேர்ந்தவர்களுக்கு மிகுதியானபயம் வந்தது. மிக்கவலிமையுள்ள பீம ஸேனகுமாரன் அலாயுதனேடு போருக்காக எதிர்த்திருப்பதைக்கண்டு மகாபாகுபலமுள்ள கர்ணன் பாஞ்சாலர்களைக்குறித்துச் சென்றான். கர்ணன் திடமானவைகளும் காதுவரையில் இழுத்து விடப்பட்டவை களும் படிந்தகணுக்களுள்ளவைகளுமான பத்துப்பத்துப்பாணங்களா லே திருஷ்டத்யும்னனையும் சிகண்டியையும் அடித்தான். பிறகு, உத்தம மான நாராசங்களாலும் பாணங்களாலும் யுதாமன்யுவையும் உத்தமௌ ஜஸையும் ரதிகர்களுள் சிறந்தவனான ஸாத்யகியையும் நடுங்கும்படி செய்தான். அரசரே! யுத்தகளத்தில் இடமாகவும் வலமாகவும் பாணங் களைப்பிரயோகிக்கின்ற அவர்களனைவருடைய விற்களும் வட்டவடிவ மாகவே காணப்பட்டன. இரவில் அவர்களுடைய நாண்கயிற்றின்னோசை யும் தலத்வனியும் தேருருளைகளின் நேமியொலியும் முதுவேனிற் காலத்தின்முடிவில் மேகங்களின் நெருங்கிய இடிமுழக்கம்போல் உண் டாயின. அரசரே! நாணொலியும் தேருருளைகளின் ஒலியுமாகிற இடி முழக்கமுள்ளதும் விற்களாகிற மின்னல் வரிசையுடன் கூடியதும் கொடிமரங்களாகிற சிகரங்களுள்ளதும் அம்புத்திரள்களின் வர்ஷங்க ளாகிற நெருங்கினமழையுள்ளதுமான அந்தயுத்தமாகிற மேகமானது அப்பொழுது தோன்றியது. வேந்தரே! பகைவர்கூட்டங்களை அழிக் கின்றவனும் பெரியமலைபோல உறுதியுள்ளவனும் வைகர்த்தனனுமான கர்ணன் மலைபோல அசையாமலிருந்துகொண்டு அந்த ஆச்சரிய கரமான அம்புமழையை நாசஞ்செய்தான். உம்முடைய புத்திர னுக்கு நன்மையைத்தேடுவதில் பற்றுள்ளவனும் மகாபலசாலியுமான கர்ணன் யுத்தகளத்தில் ஒப்பற்றவைகளும் இடிவிழுவதுபோல விழு கின்றவைகளும் கூர்மையுள்ளவைகளும் ஸ்வர்ணத்தினால் விசித்ரமான புங்கமுள்ளவைகளுமான அம்புகளாலே பகைவர்களை நாசம்செய்தான். அவனால் சிலர் நன்றாயறுக்கப்பட்டும் உடைக்கப்பட்டுமிருக்கின்ற த்வ ஜத்தையுடையவர்களும் சிலர் அம்புகளாலே அடித்துப்பிளக்கப்பட்ட தேகங்களுள்ளவர்களும் சிலர் ஸாரதிகளையிழந்தவர்களும் சிலர் குதி ரைகளையிழந்தவர்களுமாக விரைவில் செய்யப்பட்டார்கள். பிறகு, யுத்த களத்தில் ஸுகத்தையடையாதவர்களான அந்தப்பாஞ்சாலர்கள் யுதிஷ் டிரஸேனையை வந்தடைந்தார்கள். தோல்வியடைவிக்கப்பட்டும் புறங் காட்டியோடும்படி அடிக்கப்பட்டுமுள்ள அவர்களைக்கண்டு கடோத் கசன் அதிகமான ரோஷத்தைப் பாராட்டினான். பொன்னாலும் மணி யாலுமிழைக்கப்பட்ட அந்த உத்தமமான ரதத்தின்மேலேறிக் கடோத்

கசன், சிங்கம்போலக்கர்ஜித்துச் சூரியகுமாரனை கர்ணனுக்கருகில் வந்து வஜ்ராயுதத்துக்கொப்பான அம்புகளாலே அவனைப் பிளந்தான். அவ்விருவரும் கர்ணிகளாலும் நாராசங்களாலும் சிலீமுகங்களாலும் நாளீகங்களாலும் தண்டங்களாலும் அஸனங்களாலும் வத்ஸதந்தங்களாலும் வராஹகர்ணங்களாலும் விபாடங்களாலும் சிருங்கங்களாலும் க்ஷுராப்ரங்களாலும் ஆகாயத்தை எதிரொலியிடும்படி செய்தார்கள். யுத்தரங்கத்தில் அவர்களுடைய பாணதாரைகளால் சூழப்பட்ட ஆகாயமானது குறுக்காகச்செல்லுகின்றவைகளும் பொற்புங்கங்களில் ஒளிர்கின்ற காந்தியுள்ளவைகளுமான பாணங்களுடைய வரிசைகளால் பல நிறமுள்ள மலர்களையணிந்த மனிதர்களால் விளங்குவதுபோல் விளங்கியது. அதிகஜாக்கிரதையுள்ளவர்களும் ஒப்பற்றமகிமையுள்ளவர்களுமான அவ்விருவரும் உத்தமமான அஸ்திரங்களால் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். அந்தயுத்தத்தில் வீரஸ்ரேஷ்டர்களான அவ்விருவருள்ளும் வேற்றுமையை ஒருவனுவது காணவில்லை. அதிக ஆச்சரியகரமானதும் ஒப்பற்றகாட்சியுள்ளதும் மனக்குழப்பத்தை உண்டுபண்ணுகிறதும் ஆயுதங்கள் விழுதலால் கோரமாயுள்ளதுமான சூரியன் பீமன் இவர்களுடைய குமாரர்களான கர்ணகடோத்கசர்களுடைய யுத்தமானது, ஸ்வர்க்கத்தில் ராகுவுக்கும் சூரியனுக்கும் நேர்ந்த யுத்தம் போல் நடந்தது. அரசரே! அஸ்திரங்களை யறிந்தவர்களுள் உத்தமனை கர்ணன் கடோத்கசனை மீறமுடியாமற்போனபொழுது உக்கிரமான அஸ்திரத்தை வெளிப்படுத்தினுன். அந்தஅஸ்திரத்தினுலே குதிரைகளோடும் ஸாரதியோடுங்கூடின அவனுடையரதத்தை நாசஞ்செய்தான். ரதத்தையிழந்தவனை ஹிடிம்பாபுத்திரன் சீக்கிரமாக அந்தர்த்தானம் அடைந்தான்" என்று சொன்னுன்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சயா! கபடயுத்தஞ்செய்கிற அந்த அரக்கன் மறைந்தவுடன் என்னைச்சேர்ந்தவர்கள் என்னசெய்தார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானுன். "ராக்ஷஸேந்திரன் மறைந்துகொண்டதையறிந்து எல்லாக்கௌரவர்களும், 'கபடயுத்தம் செய்கின்றவனும் யுத்தத்தில் கண்ணுக்குப்புலப்படாதவனுமான அந்தராக்ஷஸன் ஏன் கர்ணனைக்கொல்லமாட்டான்?' என்று கூச்சலிட்டார்கள். பிறகு, லாகவத்தோடு விசித்திரமாக அஸ்திரயுத்தம்செய்கின்ற கர்ணன் பாணஸமூகங்களால் எல்லாத்திக்குக்களையும் மூடினுன். ஆகாயம் இருண்டிருக்கும்பொழுது அந்தஇடத்தில் ஒருபிராணியும் நாடவில்லை. விரல்களால் லாகவத்தோடு பாணங்களை

எடுக்கின்றவனும் அவைகளை வில்லில் தொடுக்கின்றவனும் அம்பறாத் தூணிகளைத் தொடுகின்றவனும் ஆகாயத்தை முழுவதையும் அம்புகளால் மூடுகின்றவனுமான கர்ணன் காணப்படவில்லை; பிறகு, ஆகாயத்தில் ராக்ஷஸனால் செய்யப்பட்டதும் கோரமானதும் பயங்கரமானதும் குரூரமானதும் செம்மேகம்போற்பிரகாசிக்கின்றதும் உக்கிரமான அக்னிஜ்வாலைபோல மிக்கவொளியை வீசுகின்றதுமானமாயையைக் கண்டோம். கௌரவேந்திரரே! பிறகு, அந்தமாயையில் மின்னல்கள் தோன்றின; ஜ்வலிக்கின்றஉற்கைகளும் தோன்றின. அந்தமாயையினின்று ஆயிரமாயிரமாக முழங்குகின்ற துந்துபிவாத்யங்களுடைய மிக்க கோரமான சப்தமும் தோன்றியது. பின்னும் பொன்னாலானபுங்கமுள்ள அம்புகளும் சக்திகளும் ரிஷ்டிகளும் பிராஸங்களும் உலக்கைகளும் (மற்ற) ஆயுதங்களும் கோடாலிகளும் எண்ணெய்போட்டுத்தீட்டப்பட்ட கத்திகளும் முனைபளபளப்பான தோமரங்களும் பட்டாக்கத்திகளும் காந்தியுள்ளவைகளும் இருப்புக்கட்டுக்களுள்ளவைகளுமான பரிகங்களும் விசித்ரமானகதைகளும் முனைகூர்மையான சூலாயுதங்களும் பொற்பட்டங்கட்டப்பட்டபெரியகதைகளும் சதக்னிகளும் நான்குபக்கங்களிலும் தோன்றின. ஆங்காங்கு பெரியகற்களும் ஆயிரக்கணக்கான இடிகளோடுகூடின வஜ்ராயுதங்களும் விழுந்தன. அனேகநூற்றுக்கணக்கான கத்திகளுள்ளவைகளும் நெருப்புப்போலப் பிரகாசிக்கின்றவைகளுமான சக்கரங்களும் தோன்றின. கர்ணன் விழுகின்ற சக்திகள், கற்கள், கோடாலிகள், ஈட்டிகள், கத்திகள், வஜ்ராயுதங்கள், அசனிகள், முத்கரங்கள் இவைகளுடைய ஜ்வலிக்கின்ற பெரியமழையை அம்புக்கூட்டங்களால் அழிப்பதற்குச் சக்தியற்றவனானான். அம்புகளாலடிக்கப்பட்டு விழுகின்றகுதிரைகள், அவ்வாறே வஜ்ரத்தாலடிக்கப்பட்ட யானைகள், கற்களால் அடிக்கப்பட்டு விழுகின்றமகாரதங்கள் இவற்றின்பேரொலியானது தோன்றியது. மிக்கபயங்கரமான நானாவித ஆயுதங்களின் வீழ்ச்சிகளாலே நான்குபுறத்திலும் கடோத்கசனால்அடிக்கப்பட்ட துரியோதனனுடையசேனையானது அதிகமாகத் துன்பத்தையடைந்ததும் திரும்புவதும் மயங்குகின்றதும் கூகூவென்று கதறுவதும் நன்றாகச் சுழலுகின்றதும் பதுங்குகின்றதும் அதிகவ்யஸனத்தை அடைந்ததுமாகக் காணப்பட்டது. அப்பொழுது, அந்தப்புருஷசிரேஷ்டர்கள் (யுத்தத்தில் புறங்காட்டலாகாதென்னும்) மேலோர்களின் கொள்கைப்படி புறங்காட்டினவர்களாகவில்லை. பயங்கரமான தோற்றமுள்ளதும் மிக்கபயங்கரமானதும் மகாசஸ்திரமயமானதும் கீழேவிழுகின்றதும் ராக்ஷஸனுடையதுமான மழையையும் கீழேதள்ளப்படுகின்ற ஸேனாஸமூகங்களையும்

கண்டவுடன், உமது புத்திரர்களைப் பெரியபயம் வந்தடைந்தது. அரசரே! நெருப்பினால் ஜ்வலிக்கின்ற நாவோடுகூடியவைகளும் மிக்கபயங்கரமான சப்தமுள்ளவைகளும் நூறுநூறாக ஊளையிடுகின்றவைகளுமான நரிகளையும் கர்ஜிக்கின்ற ராக்ஷஸர்களுடைய கூட்டங்களையுங்கண்டு யுத்தவீரர்கள் மனவருத்தமுற்றார்கள். பிரகாசிக்கின்றநாவையுடையவர்களும், தணல்போல உக்கிரமானவைகளும் கூர்மையுள்ளனவைகளுமான கோரப்பற்களையுடையவர்களும், மிகவும்பயங்கரர்களும், பர்வதங்களுக்கொப்பான சரீரங்களுள்ளவர்களும், சக்தியாயுதத்தைக்கையிற்கொண்டவர்களுமான ராக்ஷஸர்கள் ஆகாயத்தையடைந்து மேகங்கள் மழையைப்பொழிவதுபோல உக்கிரமான ஆயுதமழையைப் பொழிந்தார்கள். அவர்களாலே அம்புகளாலும் சக்திகளாலும் சூலங்களாலும் கதைகளாலும் உக்கிரஸ்வரூபமுள்ள ஜ்வலிக்கின்ற பரிகங்களாலும் அடிக்கப்பட்டும் வஜ்ரங்களாலும் பிநாகங்களாலும் அசனிகளின் அடிகளாலும் சதக்னிகளாலும் சக்கரங்களாலும் நொறுக்கப்பட்டும் கீழேவிழுந்தார்கள். அந்தராக்ஷஸர்கள் சூலங்களையும் புஸுண்டிகளையும் கற்களையும் தடிகளையும் பெரியவைகளும் எஃகுப்பட்டங்கள் போடப்பட்டவைகளுமான சதக்னிகளையும் உமதுபுத்திரனுடைய படையின்மீது இறைத்தார்கள். பிறகு, பயங்கரமான மூர்ச்சையானது உண்டாயிற்று. அந்தச் சேனையிலுள்ள சூரர்கள் நரம்புகள்வெளியில்சிதறியவர்களாகவும் தலைகளுடைக்கப்பட்டவர்களாகவும் உறுப்புக்கள் நன்றாகவெட்டப்பட்டவர்களாகவும் படுத்தார்கள். குதிரைகளும் அறுக்கப்பட்டன. யானைகளும் நாசம்பண்ணப்பட்டன. அதிகபயங்கொண்டு வேண்டுகின்றவர்களும் விடப்படவில்லை. இவ்வாறு கோரரூபிகளான அந்தராக்ஷஸர்கள் பூமியில் பெரிதான சஸ்திரவர்ஷத்தை உண்டுபண்ணினார்கள். அவ்விடத்தில் கடோத்கசனாலே உண்டுபண்ணப்பட்ட மாயைகள் கெஞ்சுகிறவனையும் பயந்தவனையும் விடவில்லை. க்ஷத்திரியர்களே இல்லாமற்போவதற்காகக் காலனால் ஏற்படுத்தப்பட்டதும் கோரமாயுள்ளதுமான அந்தக்குருவீரர்களுடைய யுத்தத்தில் அத்தகைய எல்லாக்கௌரவர்களும் சீக்கிரமாகப் பங்கமடைந்து அலறிக்கொண்டே ஓடினார்கள். எல்லோரும், 'கௌரவர்களே! ஓடுங்கள். இனி இந்தக்கௌரவஸேனை மிஞ்சாது. பாண்டவர்களுடைய பிரயோஜனத்தைக்கருதி இந்திரனோடுகூடின தேவர்களல்லவோ நம்மை அடிக்கிறார்கள்?' என்றார்கள். அவ்வாறு அந்த யுத்தமாகிற (கடலில்)மூழ்குகின்ற அந்தப்பாரதர்களுக்கு ஸூதபுத்திரன் திட்டுப்போலானான். நெருங்கின அந்தயுத்தமானது, நடக்குந்தருணத்தில் கௌரவர்களுடையசேனையும் பங்கமடைந்து பதுங்கியிருக்க

வும் படையின் அணிவகுப்புக்கள் பிரகாசமாயிருக்கவும் குருக்களாவது மற்றவர்களாவது அறியப்படவில்லை. வரம்புகடந்ததும் கோரமாயுள்ளதுமான அந்தயுத்தத்தில் எல்லாத்திக்குக்களும் சூன்யமாகக்காணப்பட்டன. அரசரே! அந்தயுத்தகளத்தில் அந்த அப்புமழையை மார்பினால் எதிர்த்துத்தாங்கச் செல்லுகின்றகர்ணன் ஒருவனையே கண்டார்கள். பிறகு, வெட்கமடைந்தவனான ஸூதபுத்திரன் பாணங்களாலே ஆகாயத்தைமூடி ராக்ஷஸனுடைய திவ்யமானமாயையை எதிர்த்துப் போர்புரிந்துகொண்டும் ஒருவராலும் செய்யமுடியாத உத்தமமான காரியத்தைச்செய்துகொண்டும் யுத்தத்தில் மயங்காமலிருந்தான். அரசரே! பிறகு, யுத்தத்தில் இவனுடைய மயக்கமின்மையைப் புகழ்கின்றவர்களும் ராக்ஷஸனுடையவிஜயத்தைப் பார்க்கின்றவர்களுமான எல்லா ஸைந்தவர்களும் பாஹ்லீகர்களும் பயந்தவர்களாகிக் கர்ணனை நன்றாகப் பார்த்தார்கள். கடோத்கசனால் விடப்பட்ட சக்கரத்துடன்கூடின சதக்னியானது ஒரேஸமயத்தில் நான்குகுதிரைகளையும் ஒன்றுவிடாமல் கொன்றது. அந்தக்குதிரைகள் பற்களும் கண்களும் நாக்களும் சிதறினவைகளாகி உயிரைஇழந்து முழங்கால்களால் மண்டியிட்டுப்பூமியில்விழுந்தன. பிறகு, கௌரவர்கள் ஓடவும், திவ்யமான அஸ்திரமும் மாயையால் கெடுக்கப்படவும மனவருத்தமடைந்தகர்ணன், குதிரைகள் கொல்லப்பட்ட ரதத்தினின்று கீழேஇறங்கி அந்தஸந்தர்ப்பத்தை நினைத்துக்கொண்டு மதிமயக்கங்கொள்ளவில்லை. பிறகு, கௌரவர்களெல்லாரும் கர்ணனைக்கண்டு கோரரூபமானமாயையையும்பார்த்து, 'கர்ண! இப்பொழுது சக்தியாயுதத்தினாலே விரைவாகக் கடோத்கசனைக் கொல். திருதராஷ்டிர மகாராஜனைச்சேர்ந்த இந்தக்கௌரவர்கள் ஓடுகிறார்கள். பீமன், பார்த்தன் இருவரும் நமதுவிஷயத்தில் என்னசெய்யப்போகிறார்கள்? அர்த்தராத்திரியில் தாக்கச்செய்கின்ற இந்தப் பாபியைக் கொல். நமக்குள் எவன் மிக்ககோரமான (இந்த) யுத்தத்தினின்று விடுபடுவானோ அவன் சேனையுடன்கூடின பார்த்தர்களை எதிர்த்துப் போர்புரிவான். ஆதலால், இந்தக் கோரரூபியான ராக்ஷஸனை இந்திரனாலே கொடுக்கப்பட்ட சக்தியினாலே நீ கொல்லவேண்டும். கர்ண! இந்திரனுக்கொப்பான எல்லாக்கௌரவர்களும் போர்வீரர்களுடன் ராத்திரியுத்தத்தில் நசிக்கவேண்டாம்' என்று சொன்னார்கள். வேந்தரே! பாதிராத்திரியில் கடோத்கசனாலே பீடிக்கப்படுகின்ற அந்தக்கர்ணன் பயமுறுத்தப்படுகின்ற ஸைனியத்தைக்கண்டும் கௌரவர்களுடைய பேரொலியைக் கேட்டும் சக்தியைப் பிரயோகிக்கும்பொருட்டுப் புத்தியைச்செலுத்தினான். கோபங்கொண்டவனும் ஸிம்மம்போல் அடங்காத பொறுமை

யுள்ளவனுமானகர்ணன் யுத்தகளத்தில் துன்பத்தைப்பொருமல் அவனைக்கொல்ல எண்ணங்கொண்டு சிறந்ததும் தாங்கமுடியாததுமான வைஜயந்தியென்கிற சக்தியைக் கையிலெடுத்தான். மன்னரே! யுத்தத்தில் பல்குனனைக் கொல்வதின்பொருட்டே பலவருஷங்களாகவைத்துப் பூஜிக்கப்பட்டுவருவதும், இந்திரன் (கர்ணனுடைய) இரண்டு கர்ணகுண்டலங்களையும் பெற்றுக்கொண்டு அவற்றிற்குப்பிரதியாக அவனுக்குக்கொடுத்ததும், சிறந்ததும், [1] தேஜஸினால் நான்குபுறத்திலும் வியாபிக்கின்றதும், மிகஜ்வலிக்கின்றதும், பாசங்களோடுகூடினதும், அந்தகனுடைய நாக்குப்போன்றதும், மிருத்யுவுக்குச் சகோதரிபோன்றதும், எரிகின்ற விண்வீழ்கொள்ளிபோன்றதுமான சக்தியாயுதத்தைச் சூரியகுமாரனானகர்ணன் ராக்ஷஸன்மீது பிரயோகித்தான். அரசரே! உத்தமமானதும் பகைவர்களுடைய சரீரத்தைப் பிளக்கின்றதும் கர்ணனுடையகையில் ஜ்வலிக்கின்றதுமான சக்தியைக்கண்டு ராக்ஷஸன் பயந்து தன்தேகத்தை விந்தியபர்வதம்போன்ற உயரமும் பருமனுமுள்ளதாகச்செய்துகொண்டு ஓடினான். அரசரே! கர்ணனுடையகையிலிருக்கின்ற சக்தியைக்கண்டு ஆகாயத்தில் பிராணிகள் அலறின. நெருங்கின பெருங்காற்று வீசத்தொடங்கியது. முழக்கத்துடன்கூடின இடியும் பூமியில்விழுந்தது. ஜ்வலிக்கின்ற அந்தச்சக்தியானது அந்தமாயையைச் சாம்பலாகச்செய்து ராக்ஷஸனுடைய மார்பை நன்றாகப்பிளந்து பிரகாசத்தோடு மேலேசென்று இரவில் நக்ஷத்திரங்களுடைய நடுவை அடைந்தது. அந்தக்கடோத்கசன் தேவர்கள், நாகர்கள், மனிதர்கள், ராக்ஷஸர்கள் இவர்களுக்குரிய பற்பலஅஸ்திரஸமூகங்களாலே பிளக்கப்பட்டவனாகிப் பயங்கரமான சப்தங்களைவெளியிட்டுக்கொண்டு இந்திரசக்தியால் பிரியமான உயிரையிழக்கும்படி செய்யப்பட்டான். அரசரே! அந்தக்கடோத்கசன், சத்துருவினுடைய நாசத்தின் பொருட்டு இந்தக் காரியத்தையும் விசித்ரமும் மிக்க ஆச்சரியமுமான வேறு காரியத்தையும் செய்தான்; அந்த ஸமயத்தில் சக்தியினால் உயிர்நிலைபிளக்கப்பட்ட அவன் மலைபோலவும் மேகம்போலவும் பிரகாசிக்கின்ற (உருவத்துடன்) விளங்கினான். பிறகு, அந்த ராக்ஷஸேந்திரனான கடோத்கசன் பிளக்கப்பட்ட தேகமுள்ளவனாகவும் சரீரம் அசைவற்றவனாகவும் நாவை இழந்தவனாகவும், பெரிய உருவத்தைஎடுத்து உயிரைவிட்டு ஆகாயத்தினின்று தலைகீழாக விழுந்தான். வேந்தரே! பயங்கரமான செய்கையுள்ள பீமஸேனபுத்திரன் பயங்கரமான அந்த ரூபத்தை எடுத்துக்

[1] 'லேலிஹாநாம்' என்பது மூலம்; 'ரத்தத்தைச்குடிப்பதில்விருப்பமுள்ளதும்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

கொண்டு விழுந்தான். கொல்லப்பட்டவனாயிருந்தும் தன்தேகத்தினாலே உமது சைனியத்தினுடைய ஒருபாகத்தை இவ்வாறு நாசம்செய்தான். அளவுகடந்திருக்கின்றதும் விசேஷமாகவிருத்தியடைகின்றதுமான தன்சரீரத்துடன் விரைவாகக் கீழேவிழுகின்ற அந்த ராக்ஷஸன் உயிரையிழந்தவனாயிருந்தும் பாண்டவர்களுக்குப் பிரியத்தைச்செய்கின்றவனாகி உமது ஓர் அக்ஷௌஹிணிசேனையை விரைவாக நாசம் செய்தான். பிறகு, ஸிம்மநாதங்களுடன்கூடின சங்கங்களும் பேரிவாத்தியங்களும் முரஜங்களும் ஆனகங்களும் முழங்கின. மாயை நாசம்பண்ணப்பட்டதையும் ராக்ஷஸன் கொல்லப்பட்டதையும் கண்டு கௌரவர்கள் மகிழ்ந்து ஸிம்மநாதம்செய்தார்கள். பிறகு, விருத்திராசுரன் கொல்லப்பட்டவுடன், இந்திரன் தேவர்களால் புகழப்பட்டது போலக் கர்ணன் கௌரவர்களால் கொண்டாடப்பட்டு, உம்முடைய குமாரனை துர்யோதனனுடைய ரதத்தில் துரியோதனனோடுசேர்ந்து ஏறிக்கொண்டு, மகிழ்ச்சியுடன் உமது சேனையில் பிரவேசித்தான்" என்றுகூறினான்.

---

## நூற்றெண்பத்தோராவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.

(கடோத்கசனிறந்ததற்காக எல்லோரும் துக்கிக்க, கிருஷ்ணன்மட்டும் மகிழ்ந்ததும், வினவிய அர்ஜுனனுக்குக் கிருஷ்ணன் மகிழ்ந்ததற்குக் காரணங்கூறிக் கர்ணனைப் புகழ்ந்ததும்.)

திருதராஷ்டிரன், "மகாமாயாவியும், மகாதேஜஸ்வியுமான அந்த ராக்ஷஸன் கொல்லப்பட்டவுடன், கோபங்கொண்டவர்களான பாண்டவ வீரர்கள் மகாயுத்தத்தில் என்னசெய்தார்கள்? ஸஞ்சய! யுத்தத்தில் மிகவும் அடிக்கப்பட்டவர்களான அந்தப்பாண்டவர்கள் என்னசெய்தார்கள்? அடிக்கும்திறமையுள்ளவர்களும் அணிவகுக்கப்பட்டபடையையுடைய துரோணரை எதிர்த்தவர்களுமான ஸ்ருஞ்சயர்கள் பாஞ்சாலர்களுடனகூடி மகாயுத்தத்தில் என்னசெய்தார்கள்? ஸோமதத்த குமாரனை பூரிஸ்ரவஸைக்கொன்றதாலும் ஸைந்தவனுடையவதத்தினாலும் பொறுமையினாலே உயிரையிழக்கத்துணிந்து சேனையில் பிரவேசிக்கின்றவரும் ஸன்னத்தராயிருப்பவரும் கொட்டாவிவிடுகின்ற புலிபோன்றவரும் வாயைத்திறந்திருக்கும் அந்தகன்போன்றவரும் பிறரால் ஜயிக்கமுடியாதவருமான துரோணரைப் பாண்டவர்களும் ஸ்ருஞ்

சயர்களும் எவ்வாறு எதிர்த்தார்கள்? அப்பா! துரியோதனனை முன்னிட்டவர்களும் ஆசாரியரைக் காத்தவர்களுமான அஸ்வத்தாமாவும் கர்ணனும் க்ருபரும் யுத்தத்தில் என்னசெய்தார்கள்? ஸஞ்சய! பாரத்வாஜரைக்கொல்ல எண்ணங்கொண்டவர்களான ஸவ்யஸாசியும் விருகோதரனும் யுத்தத்தில் நம்மைச்சேர்ந்தவர்களை எவ்வாறு எதிர்த்தார்கள். அதனை எனக்குச் சொல்வாயாக. ஸிந்துராஜனுடைய வதத்தினாலே கோபங்கொண்டவர்களான நம்மைச்சேர்ந்தவர்களும் கடோத்கசவதத்தினாலே கோபங்கொண்டவர்களான அந்தப்பாண்டவர்களும் ஏவ்வாறு ரணகளத்தில் போர்புரிந்தார்கள்?'' என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

''சிதறிவிழுகின்ற மலைபோலக் கொல்லப்பட்டுக்கிடக்கின்ற ஹிடிம்பாபுத்திரனைப் பார்த்துப் பாண்டவர்களனைவரும் துக்கத்தாலுண்டான கண்ணீரால் கண்கள் கலங்கினவர்களாயினர். பாரதரே! வாஸுதேவரோ மகிழ்ச்சிமிகமேலிட்டு, தம்மவருக்கு வருத்தத்தை யுண்டு பண்ணுகிறவர்போல ஸிம்மநாதம்செய்தார். பிரதாபசாலியான வாஸுதேவர் கடோத்கசன் கொல்லப்பட்டதையறிந்து பெரியஸிம்மநாதம் செய்து பல்குனனைக் கட்டிக்கொண்டனர். அந்தவாஸுதேவர் பெரிய ஸிம்மநாதத்தைச்செய்து கடிவாளங்களைப்பிடித்து இழுத்துக்கொண்டு ஸந்தோஷத்தோடு காற்றினால் அசைக்கப்பட்ட மரம்போலக் கூத்தாடினார். பிறகு, சிறந்தபுத்தியுள்ள அச்சுதர் மீண்டும் பார்த்தனைக்கட்டிக் கொண்டும் அடிக்கடிதட்டிக்கொடுத்துக்கொண்டும் ரதமத்தியையடைந்து மறுபடியும் ஸிம்மநாதஞ்செய்தார். அரசரே! மகாபலசாலியான அர்ஜுனன் வாஸுதேவர் மனத்தில் மிக்கஸந்தோஷமடைந்திருத்தலை அறிந்து அதிகஸந்தோஷமில்லாத மனமுள்ளவனாகி வினவலானான்.

'மதுஸூதனரே! கடோத்கசனுடைய வதத்தினாலே துக்கப்படவேண்டியகாலம் நேர்ந்திருக்க, அஸமயத்தில் உமக்கேன் இவ்வளவு ஸந்தோஷமுண்டாயிருக்கிறது? கடோத்கசன் கொல்லப்பட்டதைக்கண்டு இப்பொழுது ஸைனியங்கள் திரும்புகின்றன. அவனுடைய மரணத்தினாலே நாங்களும் மிகுதியான மனவருத்த மடைந்திருக்கிறோம். ஸத்தியவாதிகளுள் உத்தமரான ஜநார்த்தனரே! இது சிறுகாரணமுள்ளதாயிராதன்றோ? என்னால் கேட்கப்பட்டதேவரீர் அந்தக்காரணத்தை இப்பொழுது எனக்கு உண்மையாகச் சொல்லவேண்டும். பகைவர்களை அடக்குகிறவரே! இது ரகஸ்யமில்லாவிடில் எனக்குத் தேவரீர் சொல்ல வேண்டும். மதுஸூதனரே! நீர் இப்பொழுது விபரீதமாகத்தைர்யமடை

ந்ததன் காரணத்தைச்சொல்லும். ஜனார்த்தனரே! உம்முடைய இந்தச் செய்கையை நான் இப்பொழுது ஸமுத்திரவறட்சியைப்போலவும் மேருவினுடைய சிதறுதலைப்போலவும் எண்ணுகிறேன்'என்றுவினவ, வாஸுதேவர்,'தனஞ்சய! எனக்குஇப்போதுஉண்டாயிருக்கிறதும் மனத்திற்கு உடனே தெளிவையுண்டுபண்ணுகின்றதும் உத்தமமுமான இந்தப் பெரிய ஸந்தோஷத்தை நீ என்னிடத்தினின்று கேள். மிக்ககாந்தியுடையவனே! தனஞ்சய! இந்தச்சக்தியைக் கடோத்கசனிமித்தம் நழுவச் செய்துவிட்டதனால் இப்பொழுதே கர்ணன் கொல்லப்பட்டானென்று நீ அறிந்துகொள். யுத்தத்தில் கிருத்திகாகுமாரரான ஸுப்ரம்மண்யரைப்போன்ற சக்தியைக்கையில்கொண்ட கர்ணனுக்கு எதிரில் நிற்கின்ற மனிதன் எவன் இந்தஉலகத்தில் இருக்கிறான்? பாக்யத்தினால் கர்ணன் கவசத்தையிழந்தான்; பாக்யத்தினால் குண்டலங்களையும் இழந்தான். வீணாகாததான கர்ணனுடைய இந்தச்சக்தியானது பாக்யத்தினால் கடோத்கசன்விஷயமாகச் செலவிடப்பட்டது. கர்ணன் கவசத்தோடும் அவ்வாறே குண்டலங்களோடுங் கூடியிருந்தால் போர்க்களத்தில் தேவர்களோடுகூடின மூவுலகங்களையும் ஒருவனாகவே ஜயிப்பான். இந்திரனாவது குபேரனாவது ஜலதேவதையானவருணனாவது யமனாவது கர்ணனை யுத்தகளத்தில் எதிர்த்துநிற்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார். அவ்விதமான சக்தியுடன்கூடியவனும் புருஷசிரேஷ்டனுமான கர்ணனைக் காண்டீவத்தைக் கையில்கொண்டவனானநீயும் சுதர்சனம்என்கிற சக்கரத்தைக் கையில்கொண்டவனான நானும்கூட ரணகளத்தில் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவர்களல்லோம். சத்துருப்பட்டணங்களை ஜயிப்பவனானகர்ணன், உனக்கு நன்மைக்காகவே இந்திரனாலே கபடமாகக் கவச குண்டலங்களை இழக்கும்படி செய்யப்பட்டான். அவன் கவசத்தையும் நிர்மலமான அத்தகைய இரண்டுகுண்டலங்களையும் இந்திரனுக்கு அறுத்துக்கொடுத்தமையால் வைகர்த்தனன் (அறுத்துக்கொடுத்தவன்) என்று எண்ணப்பட்டான். இப்பொழுது, அவன், கோபங்கொண்டதும் மந்திரசக்தியினாலே ஸ்தம்பிக்கச்செய்யப்பட்டதுமான ஸர்ப்பம்போலவும் எரிதல்தணிந்த நெருப்புப்போலவும் எனக்கு விளங்குகிறான். மிக்க புஜபலமுள்ளவனே! மகாத்மாவான இந்திரன் (கர்ணனுடைய) இரண்டு குண்டலங்களையும் திவ்யமானகவசத்தையும் பெற்றுக்கொண்டு அவற்றுக்குப்பிரதியாக அவன் கர்ணனுக்குக் கொடுத்ததும் (இப்பொழுது) கடோத்கசன்மீது பிரயோகிக்கப்பட்டதுமான சக்தியைத் தர்மவானான கர்ணன் அடைந்தநாள்முதல் யுத்தத்தில் உன்னைக்கொல்லப்பட்டவனாகவே எப்பொழுதும் எண்ணியிருந்தான். ஆண்மையிற்சிறந்தவனே!

குற்றமற்றவனே ! இவ்விதமான நிலைமையை அடைந்திருந்தாலும் இந்தக்கர்ணனை உன்னைத்தவிர வேறெவனும் கொல்லத்தக்கவனல்லன். நான் ஸத்தியத்தின்மீது ஆணையிடுகிறேன். இந்தக்கர்ணன் பிராம்மணப் பிரியன்; உண்மையேசொல்லும் தன்மையுடையவன்; தவமுள்ளவன்; உறுதியான விரதங்களை அநுஷ்டிக்கிறவன்; பகைவர்களிடத்திலுங் கருணையுள்ளவன்; ஆதலால், கர்ணன் தர்மப்பிரதானனென்றெண்ணப் பட்டிருக்கிறான். யுத்தத்தில்ஸமர்த்தனும் மிக்ககைவன்மையுள்ளவனும் எப்பொழுதும் வில்லைக்கையிலெடுத்தவனுமான கர்ணன் காட்டில் கர்ஜிக்கின்ற சிங்கமானது மதங்கொண்டவையும் கூட்டத்துக்குத் தலைமையானவையுமான யானைகளை நாசஞ்செய்வதுபோல யுத்தமுனையில் ரதிக சிரேஷ்டர்களை அடித்துக்கொண்டு விளங்குகிறான். புருஷசிரேஷ்ட! மகாபலசாலிகளும் உன்னைச்சேர்ந்தவர்களும் முக்கியர்களுமான யுத்த வீரர்கள் பாணக்கூட்டங்களாகிற ஆயிரம்கிரணங்களுள்ள சரத்கால சூரியன்போன்ற கர்ணனை உச்சியில்வந்திருக்கின்ற சூரியனைப்போலப் பார்க்க இயலாதவராயினர். கோடைக்காலத்தினுடைய முடிவில் மேகமானது எவ்வாறு அடிக்கடி நீர்த்தாரைகளைப்பொழியுமோ அவ்வாறு மழையோடுகூடின மேகம்போலவே திவ்யாஸ்திரங்களாகிற ஜலங்களைப் பொழிகின்றவனான இந்தக்கர்ணன், நான்குபுறத்திலும் பாணவர்ஷத்தைப்பொழிகின்றவர்களும் இரத்தத்தையும் மாம்ஸங்களையும் பெருகச் செய்கின்றவர்களுமானதேவர்களாலும் ஜயிக்கமுடியாதவன். பாண்டவ! கவசத்தாலும் குண்டலங்களாலும் விடுபட்டவனான அந்தக்கர்ணன் இந்திரனாலே கொடுக்கப்பட்ட சக்தியினாலும் விடுபட்டவனாகி இப்பொழுது மனிதத்தன்மையை அடைந்துவிட்டான். இவனைக்கொல்லும் விஷயத்தில் ஓருபாயம் உண்டு. நீ மிக்கஜாக்கிரதையோடிருந்துகொண்டு ரதத்தினுடையசக்கரம் அமிழ்ந்து பலம் குறைந்திருக்குங்காலத்தில் கஷ்டதசையையடைந்தவனும் ஜாக்கிரதையினின்று தவறியிருக்கின்றவனுமான இந்தக்கர்ணனை முதலில் என்னால்காட்டப்படும் குறிப்பை அறிந்து கொல்வாயாக; அஸ்திரங்களைக் கையிலெடுத்தவனும் யுத்தத்தில் பிறரால்ஜயிக்கமுடியாதவனுமான இந்தக்கர்ணனை ஒப்பற்றவீரனும் வஜ்ரபாணியுமான இந்திரன்கூட ஜயிக்கமுடியாது. மகாபலசாலியான ஜராஸந்தன் சேதிதேசத்தரசனான சிசுபாலன் மகாபாகுபலமுள்ள வேடனான ஏகலவ்யன் ஆகிய இவர்கள் அனைவரும் உன்னுடைய நன்மையின்பொருட்டே அந்த அந்த உபாயங்களால் என்னாலேயே ஒவ்வொருவராகக் கொல்லப்பட்டார்கள். மேலும், ஹிடிம்பன், கிர்மீரன் பகன்முதலான மற்றராக்ஷஸசிரேஷ்டர்களும் பகைவர்களுடைய

சேனையை அழிக்கின்றவனான அலாயுதனும் உக்கிரமான செய்கையுள்ளவனும் சிறந்தவேகமுள்ளவனுமான கடோத்கசனும் கொல்லப்பட்டார்கள்' என்றுகூறினார்.

---

## நூற்றெண்பத்திரண்டாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(மாதவர், ஜராஸந்தன்முதலியவர்களைப்புகழ்ந்து அவர்கள் ஜயிக்க முடியாதவர்களாயிருந்தமையால் தாம் முன்னரே அவர்களை உபாயத்தாற் கொன்றமை கூறியது.)

அர்ஜுனன், 'ஜனார்த்தனரே! எங்களுக்கு நன்மைசெய்வதின் பொருட்டு ஜராஸந்தன்முதலான அந்த அரசர்கள் எந்த உபாயங்களால் எவ்வாறு கொல்லப்பட்டார்கள்? என்றுவினவ, ஸ்ரீவாஸுதேவர் சொல்லலானார்.

'ஜராஸந்தனும் சேதிராஜனும் மிக்கபலசாலியும் நிஷாதபுத்திரனுமான ஏகலவ்யனும் முந்தியேகொல்லப்படாமலிருந்தால் இப்பொழுது (நமக்குப்)பயத்தைச் செய்பவர்களாயிருப்பார்கள். துரியோதனன் ரதிகசிரேஷ்டர்களான அவர்களை அவசியம் (துணையாக) வேண்டுவான். நம்மிடம் நித்யத்வேஷிகளாயிருக்கின்ற அவர்களும் கௌரவர்களை அடைவார்கள். மகிமைதங்கிய வில்லைக் கையிற்பிடித்தவர்களும் அஸ்திரத்தில் நல்லதேர்ச்சியுள்ளவர்களும் திடமாகப் போர்புரிகின்றவர்களுமான அந்தவீரர்கள் திருதராஷ்டிர குமாரர்களுடைய சேனைமுழுவதையும் தேவர்கள்போலப் பாதுகாப்பார்கள். ஸூதபுத்திரனும் ஜராஸந்தனும் சிசுபாலனும் ஏகலவ்யனும் துரியோதனனை அடுத்து இந்தப்பூமண்டலத்தைத் தபிக்கச்செய்வார்கள். தனஞ்சய! அவர்கள்கொல்லப்பட்ட உபாயங்களை என்னிடத்திலிருந்து கேள். அவர்கள் உபாயமில்லாவிடில் தேவர்களாலும் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவர்களன்றோ? (அவர்களுள்) ஒவ்வொருவனும் லோகபாலர்களால் நான்குபுறங்களிலும் பாதுகாக்கப்பட்டதாயினும் பகைவர்படையனைத்தையும் யுத்தத்தில் தனித்தனி எதிர்த்துப் போர்புரிவான். ரோஹிணீபுத்திரரான பலராமராலே மிக அவமதிக்கப்பட்டுக் கோபமடைந்த ஜராஸந்தன், எங்களைக்கொல்வதின் பொருட்டு எல்லோரையுங் கொல்லுந்திறமையுள்ள ஒருகதாயுதத்தை எறிந்தான். ஆகாயத்தை இரண்டாகப்பிளந்துகொண்டு வருகின்றதும் அக்னிபோல் ஜ்வலிக்கின்றதுமான அந்தக்கதாயுதமானது இந்திரனால்

விடப்பட்ட வஜ்ராயுதம்போலக் காணப்பட்டது. ரோஹிணீபுத்திரர் அந்தக்கதைவருகின்றதைக்கண்டு அதனை அழிப்பதற்காக ஸ்தூணாகர்ணமென்கிற அஸ்திரத்தைப் பிரயோகித்தார். அஸ்திரவேகத்தினால் அடிக்கப்பட்ட அந்தக்கதாயுதமானது பூதேவியைப்பிளந்துகொண்டும் பர்வதங்களை நடுங்கச்செய்துகொண்டும் பூமியில் விழுந்தது. மிக்கவலிமையுள்ளவளும் கோரரூபமுள்ளவளுமான ஜரையென்னும்பேர்கொண்ட ஒருராக்ஷஸி இருந்தாள். அவள் பகைவர்களை அடக்குபவனான ஜராஸந்தன்பிறந்தவுடனே, ஒன்றுசேர்த்தாள். அவன் இரண்டு தாய்களால் தனித்தனியாக இரண்டு பகுதியான தேககண்டங்களாகப் பிறந்தவனல்லனோ? ஜராதேவியினால் ஒன்றுசேர்க்கப்பட்டவனாதலால் 'ஜராஸந்தன்' என்று பேருள்ளவனானான். பார்த்த! பூமியை அடைந்திருக்கின்ற அந்தராக்ஷஸியோ கதையினாலும் ஸ்தூணாகர்ணமென்கிற அந்த அஸ்திரத்தினாலும் புத்திரர்களோடும் பந்துக்களோடும் கொல்லப்பட்டாள். தனஞ்சய! பெரியயுத்தத்தில் கதையில்லாமலிருந்த அந்த ஜராஸந்தன் நீ பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமஸேனனால் கொல்லப்பட்டான். புருஷசிரேஷ்ட! பிரதாபசாலியான ஜராஸந்தன் கதாபாணியாயிருப்பானானால் அவனை இந்திரனோடுகூடின தேவர்களும் யுத்தத்தில் கொல்லுதற்குச் சக்தியற்றவர்களே. உண்மையான பராக்ரமத்தையுடைய நிஷாதபுத்திரனும் துரோணரால் ஆசார்யத்தன்மையை முன்னிட்டு உனக்கு நன்மையை உண்டாக்கவேண்டியதற்காகக் கபடத்தினால் கட்டைவிரலையிழந்தவனாகச் செய்யப்பட்டான். விரலுறைகட்டிக்கொண்டவனும் திடமானபராக்ரமமுள்ளவனும் அதிககர்வமுள்ளவனும் நிஷாதபுத்திரனுமான அந்தவனசரன் வேறொரு ராமனைப்போல விளங்கினான். பார்த்த! ஏகலவ்யன் கட்டைவிரலுடனிருந்தால் அவனை ராக்ஷஸர்களோடும் உரகர்களோடுங்கூடின தேவர்களும் தானவர்களும் யுத்தத்தில் ஒருகாலும் ஜயிப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார். (அவ்வாறு இருக்க) திடமானகைப்பிடியுள்ளவனும் ஸமர்த்தனும் இரவிலும் பகலிலும் ஓயாமல் (பாணங்களை) பிரயோகிக்கின்றவனுமான ஏகலவ்யன் மனிதர்களால்மட்டும் எதிரிட்டுப்பார்ப்பதற்குக் கூடியவனாயிருப்பனா? உன் நன்மைக்காகவே அவன் யுத்தமுனையில் என்னால் கொல்லப்பட்டான். பராக்ரமசாலியான சிசுபாலனும் உனக்கு எதிரில்கொல்லப்பட்டான். அவனும் தேவாஸுரர்களனைவராலும் யுத்தத்தில் ஜயிக்கமுடியாதவன். புருஷசிரேஷ்ட! உலகங்களுக்கு ஹிதத்தைச்செய்யும் விருப்பத்தினால் அவனையும் மற்றத்தேவசத்துருக்களையும் கொல்வதற்காக நான் உனக்குத் தோழனாகத் தோன்றினேன். ராவணனுக்குச் சம

மான பலத்தையுடையவர்களும் வேதங்களையும் பிராம்மணர்களையும் யாகங்களையும் அழிக்கின்றவர்களுமான ஹிடிம்பனும் பகனும் கிர்மீரனும் பீமஸேனனால் மாளும்படிசெய்யப்பட்டார்கள். மாயாவியான அலாயுதனும் அவ்வாறே ஹிடிம்பாபுத்திரனால் கொல்லப்பட்டான். ஹிடிம்பாபுத்திரனும் உபாயத்தினாலே கர்ணனால் சக்தியினால் மாளும்படி செய்யப்பட்டான். கர்ணன் மகாயுத்தத்தில் சக்தியினால் அவனைக்கொல்லாமலிருந்தால் பீமஸேனபுத்திரனை அந்தக்கடோத்கசன் என்னால் கொல்லத்தக்கவனாவான். இவன் உங்களுக்குப் பிரியத்தைச் செய்யவேண்டுமென்கிறஎண்ணத்தால் என்னால் முன்பு கொல்லப்படவில்லை. இவனோ பிராம்மணத்வேஷி; யஜ்ஞத்வேஷி; ராக்ஷஸன்; தர்மத்தையழிப்பவன்; பாபி. ஆதலால், இவன் மாளும்படிசெய்யப்பட்டான். குற்றமற்றவனே! இந்திரனால் கொடுக்கப்பட்டதான இந்தச்சக்தியும் என்னால் உபாயத்தால் வீணாக்கப்பட்டது. பாண்டவ! எவர்கள் தர்மத்தையழிக்கிறார்களோ அவர்கள் என்னால் கொல்லப்படத்தக்கவர்களே. இந்த என்னுடைய அழிவற்ற பிரதிஜ்ஞையானது தர்மத்தை நிலைநாட்டுவதின் பொருட்டே (செய்யப்பட்ட)தன்றோ? அர்ஜுன! எந்தஇடத்தில் வேதாத்யயனமும் ஸத்யமும் ஐம்பொறியடக்கமும் பரிசுத்தியும் தர்மமும் (அகார்யத்தில்) வெட்கமும் ஐசுவரியமும் தைரியமும் பொறுமையுமிருக்கின்றனவோ அந்தஇடத்தில் நான் எப்பொழுதும் விளையாடுகிறேன். நான் உனக்குச் சத்தியத்தில் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ஸூர்யகுமாரனான கர்ணனைப்பற்றி நீ துயரப்படவேண்டாம். நீ அவனை ஜயிக்கக்கூடிய உபாயத்தை நான் உனக்கு உபதேசிக்கப்போகிறேன். பாண்டவ! விருகோதரன் துரியோதனனையும் யுத்தத்தில் கொல்லப்போகிறான். அந்தத்துர்யோதனனைக் கொல்லும் உபாயத்தையும் நான் உனக்குச் சொல்வேன். இதோ பகைவர்களுடைய சைனியமிருக்குமிடத்தில் நெருங்கியசப்தம் அதிகப்படுகிறது. உன்னுடைய சைனியங்கள் பத்துத்திக்குக்களிலும ஓடுகின்றன. அஸ்திரவித்தையில் தேர்ச்சியுள்ளவர்களான கௌரவர்கள் உன்னுடையசேனையை நாசம்செய்கிறார்கள்; அடிப்பவர்களுள் உத்தமரான துரோணரும் உங்களுடைய சைனியத்தை இதோ கொளுத்துகிறார்' என்றுகூறினார்" என்றான்.

---

## நூற்றெண்பத்துமூன்றாவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன், கர்ணன் அர்ஜுனன்மீது சக்தியைப்ரயோகியாததின் காரணங்கேட்டதும், அதே விஷயமாகக் கிருஷ்ணனும் ஸாத்யகியும் பேசிக்கொண்டதை ஸஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியதும்.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! சூதபுத்திரனிடத்திலுள்ள சக்தியானது ஒரே ஒருவீரனைக்கொல்லுவதில் தடையற்ற ஸாமர்த்தியமுள்ளதாக இருந்ததே. அந்தச்சக்தியை (மற்ற) எல்லாவீரர்களையும் விட்டுவிட்டு ஏன் பார்த்தன்மீது பிரயோகிக்கவில்லை? அந்த அர்ஜுனன் கொல்லப்பட்டால், பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்கள் எல்லோரும் கொல்லப்பட்டவர்களே. (அந்த) ஒருவீரனைக்கொன்று அவன் ஏன் யுத்தத்தில் ஜயம்பெறவில்லை? அழைக்கப்பட்டால் யுத்தத்திற்குப்போகாமல் தான் திரும்புவதில்லையென்பது அந்த அர்ஜுனனுடைய மகாவிரதம். ஸூதபுத்திரன் அந்தப் பல்குனனை வலியவே தேடவேண்டும். ஸஞ்சய! பிறகு, த்வந்துவயுத்தத்தின்பொருட்டுப் பல்குனனையழைத்துத் தார்மிகனுனகர்ணன் இந்திரனாலேகொடுக்கப்பட்ட சக்தியினாலே ஏன் அவனைக்கொல்லவில்லை? அதனை எனக்குச்சொல்வாயாக. நிச்சயமாகவே என்புத்திரன் புத்தியில்லாதவன்; ஸகாயமற்றவன்; பகைவர்களாலே வீணாக்கப்பட்டவன்; பாபி; அவன் எவ்வாறு சத்துருக்களை ஜயிப்பான்? இந்தக் கர்ணன்வசத்திலிருந்ததும் சிறந்ததும் ஜயத்திற்கு முக்கிய ஸாதனமுமான சக்தியானது வாஸுதேவனால் கடோத்கசன்மீது பிரயோகிக்கும்படி செய்யப்பட்டு வீணாக்கப்பட்டது. கைநொண்டியான ஒருமனிதனுடைய கையிலிருக்கிற [1] பில்வக்கனி பலசாலியால் எவ்வாறு அபகரிக்கப்படுமோ அவ்வாறே வீணாகாத அந்தச்சக்தியானது கடோத்கசன்மீது (பிரயோகிக்கப்பட்டு) வீணாக்கப்பட்டது. வித்வானே! பன்றியும் நாயும் சண்டைசெய்து இரண்டும் அழிந்துபோமேயாயின் ச்வபாகனுக்கு எப்படி லாபமோ அப்படியே கர்ணன் ஹிடிம்பாபுத்திரனை கடோத்கசன் இவ்விருவரும் யுத்தம்செய்து மாண்டால் வாஸுதேவனுக்குலாபமென்றெண்ணுகிறேன். கடோத்கசன் கர்ணனைக் கொன்றால் அஃது பாண்டவர்களுக்குப் பெரியலாபமாகும். அல்லது, கர்ணனாவது அந்தக்கடோத்கசனைக்கொன்றால் அப்பொழுதும் சக்தியி

---

[1] 'பழம்' என்பது வேறுபாடம்.

னுடையநாசத்தினுலே செய்யவேண்டியகாரியம் செய்யப்பட்டதாகும். இவ்வாறுன ரகஸ்பத்தைப் புத்திசாலியும் புருஷோத்தமனுமான க்ருஷ்ணன் புத்தியினுல் நன்குஆராய்ந்து பாண்டவர்களுக்குப் பிரியத்தையும் நன்மையையும் செய்வதற்காகக் கடோத்கசனை ஸூதபுத்திரனுலே யுத்தத்தில் கொல்லும்படி செய்தான்" என்றுகூற, ஸஞ்சயன், "அரசரே! மதுவென்ற அஸுரனைக்கொன்றவரும் மகாபுத்திசாலியுமான ஸ்ரீஜநார்த்தனர் உம்முடைய துராலோசனையில் (அர்ஜுனனைக்கொல்வதற்காகச் சக்தியைக்காப்பாற்றுவதென்னும்) இந்த எண்ணம் கர்ணனிடத்திலிருப்பதையறிந்து, பயனற்றதாகாத அந்தச்சக்தியை நாசம்பண்ணுவதற்காகவே மகாவீர்யவானும் ராக்ஷஸேஸ்வரனுமான கடோத்கசனை அப்பொழுது கர்ணனேடு த்வந்த்வயுத்தத்திற்கு ஏவினுர். குருபுங்கவரே! மகாரதனுன கர்ணனிடமிருந்து வாஸுதேவர் அந்த அர்ஜுனனைப் பாதுகாவாமலிருந்தால் அப்பொழுது நாம் செய்யவேண்டியதைச்செய்தவர்களாவோம். திருதராஷ்டிரரே! பார்த்தன், யோகங்களுக்கெல்லாம் ஈஸ்வரரும் பிரபுவுமான ஜநார்த்தனரில்லாவிடில் கொடியோடும் ரதத்தோடும் குதிரைகளோடும் யுத்தத்தில் விழுந்திருப்பான். வேந்தரே! கிருஷ்ணனுல் பார்த்தன் பலவாறுன அவ்வவ்வுபாயங்களால் காக்கப்படுகிறுன். காக்கப்பட்டுப் பகைவர்களை எதிர்த்து ஜயிக்கிறுன். எண்ணமுடியாத மகிமைபொருந்திய ஸ்ரீகிருஷ்ணபகவான் பல்குனனை விசேஷமாகப் பாதுகாவாமலிருந்தால் இடியானது மரத்தை நாசம்செய்வதுபோலச் சக்தியானது குந்திபுத்ரனுன அவனை விரைவாகக் கொன்றிருக்கும்" என்று கூறினுன்.

திருதராஷ்டிரன், "எவனுக்கு ஜயத்திற்குக்காரணமான அர்ஜுனனுடைய வதோபாயமானது முழுதும் விலகிப்போய்விட்டதோ அந்த என்குமாரன் (எல்லாருக்கும்) விரோதி. கெட்டமந்திரிகளையுடையவன், மிகத்தெரிந்தவனென்ற அகங்காரங்கொண்டவன். ஸூத! மகாபுத்திசாலியும் சஸ்திரதாரிகளுள் உத்தமனுமான அந்தக்கர்ணனுவது அமோகமான அந்தச்சக்தியைத் தனஞ்சயன்மீது ஏன் பிரயோகிக்கவில்லை? கவல்கணகுமார! மகாபுத்திசாலியே! நீயும் கர்ணனுக்கு இந்தவிஷயத்தைத்தெரிவிக்கவில்லையே. இந்தவிஷயம் எவ்வாறு உனக்குக்கூடத் தவறிப்போய்விட்டது?" என்றுவினவ, ஸஞ்சயன்சொல்லலானுன். "(ஐயா!) 'கர்ண! நாளைத்தினத்தில் எல்லாவீரர்களையும் விட்டுவிட்டுத் தனஞ்சயனைக்கொல். பிறகு, நாம் பாஞ்சாலர்களையும் பாண்டவர்களையும் அடிமைக்காரர்களைப்போல் அனுபவிப்போம்; அல்லது, பார்த்தன் கொல்லப்பட்டால் விருஷ்ணிகுலத்தில்தோன்றின கிருஷ்ணன், பிறகு, பாண்டவர்க

னுள் ஒருவனை நிலைநிறுத்தினாலும் நிறுத்துவான். ஆதலால், கிருஷ்ண னையே கொல்லவேண்டும். கிருஷ்ணனல்லவோ பாண்டவர்களுக்கு ஆணிவேர்; பார்த்தன் உயர்ந்துவளர்ந்துள்ள அடிக்கட்டைபோன்ற வன்; மற்றப்பாண்டவர்கள் கிளைபோன்றவர்கள்; பாஞ்சாலர்கள் இலை களாகச்சொல்லப்பட்டிருக்கிறார்கள்; பாண்டவர்கள் கிருஷ்ணனை அடு த்தவர்கள். கிருஷ்ணனைப் பலமாகக்கொண்டவர்கள். கிருஷ்ணனை நாத னாகக்கொண்டவர்கள். நக்ஷத்திரங்களுக்குச் சந்திரன்போல இந்தப் பாண்டவர்களுக்குக் கிருஷ்ணனே கதி. ஸூதபுத்திர! ஆதலாலே, இலை களையும் கிளைகளையும் அடிக்கட்டையையும் விட்டுவிட்டு எல்லா இடத்தி லும் எக்காலத்திலும் கிருஷ்ணனையே பாண்டவர்களுக்கு வேரென்று நீ அறிந்துகொள்'என்கிற இந்தவிஷயஆலோசனையானது துர்யோதனனுக் கும் சகுனிக்கும் எனக்கும் துசசாஸனனுக்கும் இராவுதோறும் நித்யமே இருந்தது. அரசரே! கர்ணன் யாதவநந்தனரான கிருஷ்ணரைக்கொன் றிருந்தால் ஸமஸ்தமானபூமியும் அவன்வசத்தில் வந்திருக்கும்; ஸந் தேகமில்லை. மன்னரே! யதுகுலத்தையும் பாண்டவர்களையும் ஆனந்த மடையும்படி செய்கின்றவரும் மகாத்மாவுமான அந்த வாஸுதேவர் கொல்லப்பட்டுப் பூமியில்படுத்திருந்தால் மலைகளோடும் சமுத்ரங்க ளோடும் கானகங்களோடுங்கூடின அகண்டபூமண்டலமும் உமதுவசத் தையடைந்திருக்கும். தேவர்களும் எண்ணமுடியாத மகிமைதங்கிய வரும் இந்திரியங்களுக்கு அதிஷ்டானதேவதையாக விளங்குகின்ற வருமான கேசவர் ஊக்கமுள்ளவராயிருந்ததனால் (கர்ணனுக்கு) அவ் விதமான எண்ணம் இவ்வாறு (எங்களால்) ஏற்படுத்தப்பட்டிருந்தும் யுத்தகாலத்தில் மயங்கிவிட்டது. கேசவர் அர்ஜுனனை ராதேயனிட மிருந்து எப்பொழுதுமே பாதுகாத்தார். இந்த அர்ஜுனனை யுத்தரங் கத்தில் ஸூதபுத்திரனுக்கெதிரில் நிறுத்துவதற்கு அவர் பிரியப்பட வில்லை. பிரபுவே! தவறாத விரதமுள்ளவரான ஸ்ரீவாஸுதேவர், 'வீணா காத அந்தச்சக்தியை எப்படி நான் வீணாக்குவேன்?' என்று எண்ணி மற்றச்சிறந்த ரதிகர்களைக் கர்ணனுடையஸமீபத்தில் வாசசெய்துகொண் டிருந்தார். வேந்தரே! பெரியமனமுள்ள புருஷோத்தமரான ஸ்ரீகிரு ஷ்ணர் பார்த்தனையே கர்ணனிடத்திலிருந்து இவ்வாறு பாதுகாப்ப ரானால் தம்மை எவ்வாறு பாதுகாத்துக்கொண்டிருக்கமாட்டார்? பகை வர்களை அடக்குகிறவரும் சக்காயுதத்தைக் கையில்தாங்கியவருமான ஸ்ரீகிருஷ்ணரைப்பற்றி ஆலோசிக்குங்கால அவரைவெல்லக்கூடிய மனி தன் மூவுலகங்களிலும் ஒருவனுமில்லையென்றே நான் எண்ணுகிறேன். அப்பொழுது ஸத்யவிக்ரமனும் மகாரதனும் ரதிகர்களுள் சிறந்தவனு

மான ஸாத்யகி கர்ணனுடைய வரலாற்றைக்குறித்து மஹாபாகுவான கிருஷ்ணரைப்பார்த்து வினவலானன். 'அர்ஜுனனைக்கொல்வதென்கிற எண்ணமோ கர்ணனிடமிருந்தது. அவனிடத்திலிருந்த சக்தியோ அளத்தற்கரிய ஆற்றலுள்ளது. இவ்வாறிருக்க, ஏன் ஸூதபுத்திரனலே அந்தச்சக்தி பல்குனன்மீது விடப்படவில்லை?' என்றுவினவ, வாஸுதேவர், 'துரியோதனனை முதன்மையாகக்கொண்ட துச்சாஸனனும் கர்ணனும் ஸைந்தவனேடுகூடின சகுனியும் எப்பொழுதும் ஆலோசித்துவந்தார்கள். (மற்றவர்கள் கர்ணனைநோக்கி,) 'கர்ண! கர்ண! மகாவில்லாளியே! யுத்தத்தில் மிக்கபராக்கிரமமுள்ளவனே! ஜயசீலர்களுள் உத்தமனே! கர்ண! மகாரதனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயனைத்தவிர வேறொருவன்மீதும் இந்தச்சக்தியை நீபிரயோகிக்கக்கூடாது. அந்த அர்ஜுனன் தேவர்களுள் இந்திரன்போல அந்தப்பாண்டவர்களுள் மகாகீர்த்திபொருந்தியவன். அந்தப்பார்த்தன் கொல்லப்பட்டவுடன், (மற்றப்) பாண்டவர்கள் ஸ்ருஞ்சயர்களோடுசேர்ந்து அக்னியையிழந்ததேவர்கள்போலப் பலத்தையிழந்தவர்களாவார்கள்' என்று கேட்டுக்கொண்டார்கள். சினிபுங்கவ! கர்ணனாலும், 'அவ்வாறே ஆகட்டும்' என்று அங்கீகரிக்கப்பட்டது. காண்டீவத்தைவில்லாகக்கொண்ட அர்ஜுனனுடையவதமானது கர்ணனுடையமனத்தில் எப்பொழுதும் குடிகொண்டிருந்தது. யுத்தம்செய்கிறவர்களுள் உத்தமனே! நானே ராதேயனை மோகிக்கச் செய்துகொண்டிருந்தேன். ஆதலால், பாண்டுபுத்திரனை அர்ஜுனனிடத்தில் கர்ணன் சக்தியைப் பிரயோகிக்கவில்லை. யுத்தம்செய்பவர்களுள் உத்தமனே! 'பல்குனனுக்கு அந்தச்சக்தி ம்ருத்யு' என்று எப்பொழுதும் ஆலோசிக்கின்ற எனக்கு நித்திரையுமில்லை. மனத்துக்கு ஸந்தோஷமுமில்லை. சினிபுங்கவ! அந்தச்சக்தியானது கடோத்கசன்மீது பிரயோகிக்கப்பட்டு வீணாக்கப்பட்டதைக்கண்டு நான் தனஞ்சயனை இப்பொழுதுதான் ம்ருத்யுவினுடைய வாய்நடுவினின்று விடுபட்டவனாகப் பார்க்கிறேன். யுத்தத்தில் நான் அர்ஜுனனைக் காப்பாற்றவேண்டுவதுபோல என் தகப்பனையும் தாயையும் உங்களையும் பிராதாக்களையும் காப்பாற்றவேண்டுவதில்லை; அவ்வாறே என் உயிரையுங் காப்பாற்ற வேண்டுவதில்லை. ஸாத்வத! இம்மூவுலகங்களுள்ளும் எது அடைவதற்கு மிகஅரிதானதோ அதுகிடைப்பதாயிருந்தாலும் நான் பிருதாபுத்ரனை அர்ஜுனனைவிட்டு அடையவிரும்பமாட்டேன். யுயுதான! ஆதலால், இப்பொழுது செத்தவன் மறுபடியும் பிழைப்பதுபோலப் பிருதாபுத்ரனை தனஞ்சயனைக்கண்டு அதிகஆனந்தம் உண்டாகியது. ஆதலால், என்னல் கர்ணன்பொருட்டு யுத்தத்தில்

ராக்ஷஸன் அனுப்பப்பட்டான். ராத்திரியுத்தத்தில் கர்ணனைப் பீடிப்ப தற்கு வேறு ஒருவனும் சக்தியுள்ளவனுகான்' என்றுகூறினர். தனஞ் சயனுக்கு ஹிதத்தைவிளைவிப்பதில் முயற்சியுள்ளவரும் அவனுக்குப் பிரியத்தைத்தேடும்விஷயத்தில் எப்பொழுதும் பற்றுதலுள்ளவருமான தேவகிநந்தனர் அப்பொழுது ஸாத்யகியைநோக்கி இவ்வாறுகூறினர்'' என்று சொன்னன்.

---

## நூற்றெண்பத்துநான்காவது அத்யாயம்.

## கடோத்கசவதபர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் கர்ணனுடையசக்தி வீணனதற்காகவருந்தியதும், யுதிஷ்டிரர் கிருஷ்ணனிடத்தில் கடோத்கசனது உபகாரத்தைக்கூறித் துக்கித்ததும், கர்ணனைக் கொல்லப்புறப்பட்ட யுதிஷ்டிரரை வியாஸர் வந்து தடுத்து மறைந்ததும்.)

திருதராஷ்டிரன், "அப்பா! இந்தப் பெரிய அநீதியானது கர்ணன் துரியோதனன் முதலான வீரர்களுடையதும் ஸௌபலனுன சகுனி யுடையதும் விசேஷமாக உன்னுடையதுமே. ஸஞ்சய! அந்தச்சக்தியை நீங்களனைவரும் எப்பொழுதுமே யுத்தத்தில் ஒருவீரனைக் கொல்லுந் திறமையுள்ளதென்றும், ஒருவராலுந்தடுக்கமுடியாததென்றும், இந்திர னுடன்கூடின தேவர்களாலும் தாங்கமுடியாததென்றும் அறிந்திருக் கிறீர்களேயாகில் அந்தச்சக்தியானது யுத்தத்தில் முதலிலேயே கர்ண னுல் தேவகிபுத்திரன்மீதாவது பல்குனன்மீதாவது ஏன் போடப்பட வில்லை? என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானன்.

"அரசரே! குருகுலஸ்ரேஷ்டரே! யுத்தத்தினின்று திரும்பிவந்த வர்களான எங்களனைவருக்கும் இரவில், 'கர்ண! கர்ண! நாளைக்காலை விடிந்தவுடனே இந்தச்சக்தியைக் கேசவன்பொருட்டாவது அர்ஜு னன்பொருட்டாவது பிரயோகிக்கவேண்டும்' என்று இவ்விதப்பேச்சு ஒவ்வொருநாளும் நடந்துகொண்டேயிருந்தது. மன்னரே! பிறகு, விடி ந்தவுடனே, கர்ணனுடைய அவ்விதபுத்தியும் மற்ற யுத்தவீரர்க ளுடையபுத்தியும் அடிக்கடி தெய்வசக்தியினுல் அழிக்கப்பட்டுவிட் டன. கர்ணன் தன்கையிலுள்ள சக்தியினுலே யுத்தகளத்தில் பார்த் தனையாவது தேவகிபுத்திரனை கிருஷ்ணனையாவது கொல்லாம லிருந்தவிஷயத்தில் தெய்வத்தையே முக்கியகாரணமென்று நான் எண்ணுகிறேன். அந்தக்கர்ணனுடைய கையிலுள்ள சக்தியானது

னைம்பின காளராத்திரிக்கு ஒப்பானது. பிரபுவே! கர்ணன் விதியினால் புத்திகெடுக்கப்பட்டவனானதால், இந்திரனால் கொடுக்கப்பட்ட அந்தச்சக்தியைத் தேவமாயையால் மயக்கமுற்றுத் தேவகிபுத்திரனான கிருஷ்ணன்மீதாவது இந்திரனுக்கு நிகரான பார்த்தன்மீதாவது வதத்தை உத்தேசித்துப் பிரயோகிக்கவில்லை" என்றுகூறினான். திருதராஷ்டிரன், "இந்திரனுடைய சக்தியானது துரும்புபோன்ற கடோத்கசனைக்கொன்றுவிட்டுப் போய்விட்டமையால் நீங்கள் தெய்வத்தாலும் கேசவனுடைய சொந்தப்புத்தியினாலும் கெடுக்கப்பட்டீர்கள். கர்ணனும் என்னுடையபுத்திரர்களும் இன்னும் மற்றெல்லா அரசர்களும் அந்த அநீதியினால் யமனுடையவீட்டை நாடிவிட்டார்கள். அந்த ஹிடிம்பாபுத்திரன் கொல்லப்பட்டபிறகு, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் மறுபடியும் யுத்தம நடந்தவிதத்தை எனக்குச்சொல். அணிவகுக்கப்பட்ட சேனையையுடையவர்களும் பகைவர்களையடிக்குந் திறமையுள்ளவர்களும் பாஞ்சாலர்களோடு சேர்ந்துவந்து துரோணரையெதிர்த்து யுத்தத்திற்காகச் சென்றவர்களுமான ஸ்ருஞ்சயர்கள் எவ்வாறு யுத்தம்செய்தார்கள்? ஸோமதத்தகுமாரனான பூரிஸ்ரவஸின் வதத்தாலும் ஸைந்தவனுடைய வதத்தாலும் கோபங்கொண்டு உயிரில் ஆசையைவிட்டுப் பாண்டவசைனியத்தில் பிரவேசித்துவருகின்றவரும் கொட்டாவிவிடுகின்ற வேங்கைபோன்றவரும் வாயைத்திறந்திருக்கும் அந்தகன் போன்றவரும் பாணங்களைப் பிரயோகிக்கின்றவருமான துரோணரைப் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும எவ்வாறு எதிர்த்தார்கள். ஐயனே! துரியோதனனைத் தலைவனாகக்கொண்டவர்களும் யுத்தத்தில் ஆசார்யரைப்பாதுகாத்தவர்களுமான துரோணபுத்திரரும் கர்ணனும கிருபரும் என்னசெய்தார்கள்? ஸஞ்சய! பாரத்வாஜரைக் கொல்லக்கருதிய பீமார்ஜுனனிருவரையும் நம்மைச்சேர்ந்தவர்கள் யுத்தத்தில் எவ்வாறு எதிர்த்தார்கள்? அதனை எனக்குச் சொல். ஸிந்துராஜனுடைய வதத்தினாலும் கடோத்கசனுடையவதத்தினாலும் மிக்க கோபம்கொண்டவர்களான அவர்கள் இராத்திரிகாலத்தில் எவ்வாறு போர்புரிந்தார்கள்?" என்றுவினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! இரவில் கடோத்கசனென்கிற ராக்ஷஸன் கர்ணனால் கொல்லப்பட்டவுடன், போர்புரியவிரும்பிய உங்களைச் சேர்ந்தவர்கள் ஸிம்மநாதஞ்செய்துகொண்டு வேகத்தோடுவரவும் ஸேனையுங்கொல்லப்படவும் இரவும் பாதிக்குமேற்பட்டபொழுது, அரசரான தர்மபுத்திரர் மிக்க தளர்ச்சியை அடைந்தார். மிக்க கைவன்மையுள்ளவரான தர்ம

புத்திரர் பீமஸேனனைப்பார்த்து, 'மிக்க தோள்வலியமைந்தவனே! தார்த்தராஷ்டிரனுடைய ஸேனையைத் தடு. ஹிடிம்பாபுத்திரனுடைய வதத்தினாலே எனக்கு அதிகமான மயக்கம் வந்துவிட்டது' என்று சொன்னார். இவ்வாறு பீமனைப்பார்த்துக் கட்டளையிட்டுவிட்டு, அரசரான அவர் கண்ணீரால் நிறைந்தமுகத்துடன் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு தமதுதேரிலுட்கார்ந்தார். கோரமான கர்ணனுடைய பராக்கிரமத்தைக்கண்டு மோகத்தையுமடைந்தார். அங்ஙனம் மன வருத்தமுற்ற தர்மபுத்திரரைப் பார்த்து ஸ்ரீவாஸுதேவர், 'கௌந்தேயரே! நீர் மனவருத்தமடையாதீர். இஃது உமக்குத் தகாது. பரதஶ்ரேஷ்டரே! அற்பமனிதனிடத்திற்போல் உம்மிடத்தில் மனத் தளர்ச்சி தகாது. வேந்தரே! பிரபுவே! எழுந்திரும்; யுத்தம்செய்யும்; பெரிதான யுத்தபாரத்தைத் தாங்கும். நீர் மனவருத்தமடைந்திருந்தால் வெற்றிபெறுவதில் ஸம்சயமுண்டாகும்' என்றுகூறினர். தர்மராஜரான யுதிஷ்டிரர் மாதவருடைய வார்த்தையைக்கேட்டு இரண்டு கைகளாலும் இரண்டுகண்களையும் துடைத்துக்கொண்டு அவரைப் பார்த்து, 'மிக்க புஜபலமுள்ளவரே! தர்மங்களுடைய உத்தமமான கதியானது என்னால் அறியப்பட்டிருக்கின்றது. பிறர்செய்த நன்றியை அறியாதவனுக்குப் பிரம்மஹத்தி செய்வதனால் வரும் பலனானது ஸம்பவிக்கிறது. ஜனார்த்தனரே! வனத்தில் வசிக்கின்ற எங்களுக்கு மகாத்மாவான அந்த ஹிடிம்பாபுத்திரன் பாலனாகவிருந்தும் உதவியைச் செய்தான். வாஸுதேவரே! பாசுபதாஸ்திரத்திற்காகப் பாண்டவனான அர்ஜுனன் சென்றிருப்பதை அறிந்து கடோத்கசன் பெரிதான வில்லைக்கையிற்கொண்டு காம்யகவனத்தில் என்னிடம்வந்தான்; தனஞ்சயன் இல்லாமலிருந்த காலமுழுவதும் எங்களுடன்சேர்ந்தே வாஸம் செய்தான். கந்தமாதன பர்வதத்தைக்குறித்து யாத்திரைசெய்தகாலத்தில் பிரவேசிக்கமுடியாத இடங்களிலிருந்து நாங்கள் (அவனால்) தாண்டுவிக்கப்பட்டோம். களைத்துப்போனவளான பாஞ்சாலியும் மகாபலசாலியான கடோத்கசனால் முதுகினால் சுமக்கப்பட்டாள். பிரபுவே! இந்தக் கடோத்கசன் யுத்தங்களுடைய காரியங்களையும் செய்தான். கடோத்கசனாலே பெரும்போரில் என்னிமித்தமாக ஒருவராலும் செய்ய முடியாதகாரியம் செய்யப்பட்டது. ஜனார்த்தனரே! ஸகதேவனிடத்தில் இயற்கையாக எனக்குள்ள பிரீதியே இரண்டுமடங்காக ராக்ஷஸேந்திரனான கடோத்கசனிடத்தில் எனக்கு இருந்தது. தோள்வலிமிக்கவனான கடோத்கசன் என்னுடையபக்தன். அவனுக்கு நான் பிரியன். எனக்கும் அவன் பிரியன். விருஷ்ணிகுலத்திலுதித்தவரே! ஆதலால்,

துக்கத்தால் வாட்டப்பட்டு நான் மயக்கத்தையடைகிறேன். விருஷ்ணி குலத்தவரே! கௌரவர்களாலே ஸேனைகள் துரத்தப்படுவதைப் பாரும். மஹாரதர்களான துரோணரும் கர்ணனும் யுத்தத்தில் மிகுந்த முயற்சி யுள்ளவர்களாயிருப்பதைப் பாரும். மாதவரே! மதங்கொண்டிருக்கிற இரண்டுயானைகளாலே பெரியகோரைக்காடு அழிக்கப்படுவதுபோல நடு நிசியில் இவ்விருவராலும் பாண்டவஸைனியம் நாசம்செய்யப்பட்டு விட்டது. மாதவரே! பீமஸேனனுடைய புஜபலத்தையும் அர்ஜுனனுடைய ஆச்சரியகரமான அஸ்திரஸாமர்த்தியத்தையும் அலக்ஷ்யம் செய்துவிட்டுக் கௌரவர்கள் விக்ரமத்தைக் காண்பிக்கிறார்கள். இதோ துரோணரும் கர்ணனும் அரசனான துரியோதனனும் யுத்தத்தில் ராக்ஷஸனைக்கொன்றுவிட்டு ஸந்தோஷமுள்ளவர்களாகி யுத்தகளத்தில் கர்ஜிக்கின்றார்கள். ஜனார்த்தனரே! நாங்களும் நீரும் உயிரோடிருக்கையில், ஹிடிம்பாபுத்திரன் சூதபுத்திரனோடு போர்புரிந்து எவ்வாறு மரண மடைந்தான்? நம்மனைவரையும் துன்புறுத்திவிட்டு ஸவ்யஸாசி பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமஸேனபுத்திரனும் மகாபலசாலியுமானராக்ஷஸன் கொல்லப்பட்டான். கோவிந்தரே! துஷ்டர்களான திருதராஷ்டிரபுத்ரர்களாலே அபிமன்யுகொல்லப்பட்டபொழுது, அந்த ரண களத்தில் மகாரதனான ஸவ்யஸாசி இருக்கவில்லை. நாங்களெல்லோரும் துராத்மாவான ஸைந்தவனால் தடுக்கப்பட்டுவிட்டோம். அந்த அபிமன்யுவதத்தில் புத்திரருடன்கூடிய துரோணர் காரணமாகவிருந்தார். ஆசார்யரானதுரோணர் (அபிமன்யுவைக்) கொல்வதற்குரிய உபாயத்தைத் தாமே கர்ணனுக்கு உபதேசித்தார். போர்புரிகின்ற அந்தஅபிமன்யுவினுடைய கத்தியையும் துரோணர் தம்கத்தியினால் இரண்டாகத் துண்டாக்கினார். விசனத்தில் அகப்பட்ட அந்த அபிமன்யுவினுடைய குதிரைகளைக் கிருதவர்மா குரூரனாகிக் கொன்று விரைவாக இருபக்கத்திலுமுள்ள ஸாரதிகளையும் கொன்றான். அவ்வாறே மற்ற மகாவில்லாளிகளும் ஸுபத்ராபுத்ரனை யுத்தத்தில் அடித்துத் தள்ளினார்கள். மாதவரே! (இப்படியிருக்க) அற்பகாரணத்தால் காண்டீவத்தையுடைய அர்ஜுனனாலே ஸைந்தவன் கொல்லப்பட்டான். யாதவசிரேஷ்டரே! அந்த விஷயத்தில் எனக்கு அதிகப்பிரியமில்லை. பாண்டவர்கள் பகைவர்களைக் கொல்வது நியாயமாயிருக்குமாகில் கர்ணன் துரோணர் இருவரையும் முதலில் யுத்தத்தில் கொல்லவேண்டுமென்பது என்னுடைய கருத்து. புருஷசிரேஷ்டரே! இவ்விருவருமல்லவோ நம்முடைய துக்கங்களுக்குக் காரணம். இவ்விருவரையும் யுத்தத்தில் உதவியாகப்பெற்றுத் துரியோதனன் மனத்தில் தைரியமடைந்திருக்

கின்றான். எந்த விஷயத்தில் துரோணரும் பரிவாரங்களுடன்கூடின ஸூதபுத்திரனும் கொல்லத்தக்கவர்களோ அந்த விஷயத்தில் புஜபல மிகுந்த அர்ஜுனன் தூரத்திலிருந்த ஸைந்தவனைக் கொன்றான். வீரரே! நான் அவசியம் ஸூதபுத்திரனை அடக்கவேண்டும். ஆத லால், கர்ணனைக் கொல்லும் எண்ணத்தோடு நானே நேரில் எதிர்த்துச் செல்வேன். தோள்வலிமை மிகுந்த பீமஸேனன் துரோணருடைய சேனையோடு யுத்தஞ்செய்ய எதிர்த்திருக்கிறான்' என்று சொன்னார். யுதிஷ்டிரர் சொல்லிவிட்டு விரைவுடன் பெரிதானவில்லை நாணொலி செய்துகொண்டும் பயங்கரமாகச் சங்கத்தை ஊதிக்கொண்டும் வேக மாகச் சென்றார் பிறகு, சிகண்டி ஆயிரம் ரதங்களாலும் முந்நூறு யானைகளாலும் ஐயாயிரம் குதிரைகளாலும் பிரபத்திரகர்களோடுகூடின பாஞ்சாலர்களாலும் சூழப்பட்டு விரைவுடனே யுதிஷ்டிரராஜரைப் பின் தொடர்ந்துசென்றான். பிறகு, யுதிஷ்டிரரைத் தலைமையாகக்கொண்ட பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் கவசமணிந்துகொண்டு பேரிவாத் தியங்களையும் பணவங்களையும் ஆனகங்களையும் கோமுகங்களையும் முழக்கினார்கள்; சங்கங்களையும் ஊதினார்கள். கைகளையும் கொட்டி னார்கள். பிறகு, மகாபாகுபலமுள்ளவரான வாஸுதேவர் தனஞ்சய னைப் பார்த்து, 'இதோ யுதிஷ்டிரர் கோபமுண்டு ஸூதபுத்திரனைக் கொல்லக்கருதி விரைவாகச் செல்லுகிறார். அவரை உபேக்ஷிப்பது தகாதது' என்று சொன்னார். இவ்வாறு சொல்லிவிட்டு, ஹ்ருஷீகேசர் விரைவாகக் குதிரைகளை ஓட்டினார். தூரத்தில் சென்றுகொண்டிருக் கின்ற அரசரான தர்மபுத்திரரை ஜனார்த்தனர் பின்தொடர்ந்தார். ஸூதபுத்திரனைக் கொல்லவேண்டுமென்கிற விருப்பத்தோடு விரைவா கச் சென்றுகொண்டிருக்கின்ற தர்மபுத்திரரைப் பார்த்து வியாஸமா முனிவர், துக்கத்தால் எண்ணம் அழிக்கப்பட்டவரும், அக்னியினால் தகிக்கப்படுகிறவர்போலிருக்கின்றவரும், தர்மராஜனுக்குப் புத்திரரு மான யுதிஷ்டிரரருகில்வந்து பின்வருமாறு சொல்லலானார்.

'யுத்தத்தில் கர்ணனை எதிர்த்துப் பாக்யத்தால் பலகுனன் ஜீவித் திருக்கிறான். ஏனெனில், அந்தக் கர்ணன் ஸவ்யஸாசியைக் கொல்ல நினைந்து சக்தியைக் காப்பாற்றிவந்தான். ஜிஷ்ணுவானவன் பாக்கியத் தாலே மகாயுத்தத்தில் அந்தக் கர்ணனோடு (தேரோடுதேர் எதிர்த்துச் செய்வதாகிய) த்வைரதயுத்தத்தை அடையவில்லை. விரோதமுள்ளவர் களான இவ்விருவரும், எல்லாவிதத்தினாலும் திவ்யாஸ்திரங்களைப் பிர யோகிப்பார்கள். யுதிஷ்டிர! அஸ்திரங்கள் நாசம்செய்யப்பட்ட

பொழுது, துன்புறுத்தப்பட்டவனான ஸூதபுத்திரன் யுத்தத்தில் நிச்சயமாக இந்திரனால் கொடுக்கப்பட்ட சக்தியைப் பிரயோகித்திருப்பான். பரதசிரேஷ்ட! அப்பொழுது உனக்குக் கோரமானவிசனம் வந்திருக்கும். பகைவர்களுடைய கர்வத்தை யழிக்குந்திறமையுள்ளவனே! ஸூதபுத்திரனால் பாக்கியத்தால் ராக்ஷஸன் யுத்தத்தில் கொல்லப்பட்டான். இந்திரனால் கொடுக்கப்பட்ட சக்தியைக் காரணமாகக்கொண்டு அந்தக் கடோத்கசன் கர்ணனால் கொல்லப்பட்டான் அப்பா! உனது க்ஷேமத்துக்காகவே ராக்ஷஸன் யுத்தத்தில் கொல்லப்பட்டான். பரதசிரேஷ்ட! நீ கோபமடையாதே. துக்கத்தில் மனத்தைச் செலுத்தாதே. யுதிஷ்டிர! இவ்வுலகில் எல்லாப்பிராணிகளுக்கும் இவ்விதமான முடிவு உண்டு. அரசனே! பாரத! நீ பிராதாக்களோடும் மஹாத்மாக்களான எல்லா அரசர்களோடும்சேர்ந்து கௌரவர்களையெதிர்த்து யுத்தத்தில் போர்புரிவாயாக. அப்பா! ஐந்தாவதுநாளில் பூமியானது உனக்கு வசப்படப்போகிறது. புருஷஶ்ரேஷ்ட! எப்பொழுதும் தர்மத்தையே நீ சிந்தித்துவா. பாண்டவ! நீ கொடுமையின்மையையும் தவத்தையும் தானத்தையும் பொறுமையையும் ஸத்தியத்தையும் அதிப்ரீதியுடன் அனுஷ்டித்துக்கொண்டிரு. எங்கு தர்மமோ அங்கு ஜயம்' என்றார். இவ்வாறு பாண்டவரைப்பார்த்துச் சொல்லிவிட்டு வியாஸபகவான் அவ்விடத்திலேயே மறைந்தார்.

கடோத்கசவதபர்வம் முற்றிற்று.

---

## நூற்றெண்பத்தைந்தாவது அத்யாயம்.

## துரோணவதபர்வம்.

(தூக்கத்தால் நிலைமைதப்பின போர்வீரர்கள் அர்ஜுனனுடைய கட்டளையினாலே தூங்கி ஶ்ரமத்தைப் போக்கிக்கொண்டு சந்திரோதயமானபின்பு போர்தொடங்கியது.)

பரதர்களிற் சிறந்தவரே! பிறகு, வியாஸர் இவ்வாறு சொல்லக் கேட்ட வீரரும், தர்மராஜருமான யுதிஷ்டிரரோ தாம் கர்ணனைக்கொல்லும் முயற்சியிலிருந்து திரும்பினார். ஸூதபுத்திரனாலே கடோத்கசன் கொல்லப்பட்டபொழுது, தர்மராஜரான யுதிஷ்டிரர் அன்று இரவு முழுதும் துக்கமும் கோபமும் மேலிட்டவரானார். அவர், உம்முடைய பெரியஸேனை பீமனாலே தடுக்கப்படுவதைக்கண்டு, திருஷ்டத்யும்னனை நோக்கி, 'நீ கும்பத்தில் தோன்றினவரான துரோணாசாரியரைத் தடு,

நீ துரோணரைக் கொல்வதின்பொருட்டே அக்னியிலிருந்துதோன்றிய வனன்றோ? பகைவர்களைவாட்டுகிறவனான நீ அம்புகளோடும் கவசத்தோடும் கத்தியோடும் வில்லோடும்கூடியவனாகி யுத்தரங்கத்தில் ஊக்கத்துடன் துரோணரை எதிர்த்துச்செல். எவ்விதத்தாலும் உனக்குப் பயம்வேண்டாம். [1]ஜனமேஜயனும் சிகண்டியும் [2]துர்முககுமாரனான யசோதரனும் மகிழ்ச்சியுள்ளவர்களாகித் துரோணரைக்குறித்து நான்கு பக்கங்களிலும் எதிர்த்துச் செல்லட்டும். நகுலனும் ஸஹதேவனும் திரௌபதிகுமாரர்களும் பிரபத்ரகர்களும் புத்திரர்களோடும் பிராதாக்களோடுங்கூடியவர்களான துருபதன் விராடன் இருவரும் ஸாத்யகியும் கேகயர்களும் பாண்டவனான தனஞ்சயனும் ஆகிய எல்லோரும் துரோணரைக்கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தால் விரைவாக எதிர்க்கட்டும். அவ்வாறே எல்லாரதிகர்களும் யானை குதிரைகள் எவ்வளவுண்டோ அவ்வளவும் காலாட்களும் மகாரதரான துரோணரை யுத்தத்தில் கீழேவிழும்படி செய்யட்டும்' என்று கட்டளையிட்டார். மகாத்மாவான பாண்டவரால் அவ்வாறு கட்டளையிடப்பட்ட அவர்களெல்லோரும் துரோணரைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தோடு அதிவேகத்துடன் எதிர்த்தார்கள். சஸ்திரதாரிகளுள் உத்தமரான துரோணர் தம்மைநோக்கிவருகின்ற பாண்டவர்களை ஸர்வவிதமுயற்சியோடும் யுத்தத்தில் விரைவாக எதிர்த்தார். பிறகு, ராஜாவான துரியோதனன் துரோணருடையஉயிரை ரக்ஷிக்கவிரும்பி மிக்ககோபங்கொண்டு எல்லா முயற்சியோடும் பாண்டவர்களை எதிர்த்தான். பிறகு, ஒருவரையொருவர் பார்த்துக் கர்ஜிக்கின்றவர்களான பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் களைத்துப்போயிருக்கின்ற வாகனங்களோடும் ஸைனியங்களோடும்கூடினயுத்தம் தொடங்கியது. மகாராஜரே! யுத்தத்தில் களைப்படைந்தவர்களும் நித்திரையினால் மயங்கினவர்களுமான அந்த மஹாரதர்கள் ரணகளத்தில் ஒருவிதச்செய்கையையும் செய்யவில்லை. மூன்று சாமநேரமுள்ள அவ்விரவு கோரமாகவும் பயங்கரமாகவும ஆயிரம் சாமங்களுள்ள இரவுக்கு ஸமமாகவும பிராணன்களை அபகரிக்கின்றதாகவும் இருந்தது. அவ்வாறே கொல்லப்படுகின்றவர்களும் விசேஷமாகக் காயப்படுத்தப்பட்டவர்களும் அதிகமாக நித்திரையினால் மயக்கமுற்றவர்களுமான அந்த வீரர்களுக்கு அவ்விரவானது கோரஸ்வரூபமுள்ளதாகியது. எல்லா க்ஷத்திரியர்களும ஊக்கத்தையிழந்தவர்களும் மனத்தளர்

[1] இவன் வேறு.

[2] துர்முகனும் யசோதரனும் என்று வெவ்வேறாகக்கொள்வது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

ச்சியுற்றவர்களுமானார்கள். உம்மைச் சேர்ந்தவீரர்களும் பிறர்களுடைய வீரர்களும் அஸ்திரங்களும் பாணங்களுமற்றவர்களானார்கள். ஸாமர்த்தியமுள்ளவர்களும் விசேஷமாக நிலைதவறினவர்களுமான அந்த வீரர்கள் தங்கள் கடமையைநினைந்து தங்களுடைய சேனையைவிட்டு விலகாமலிருந்தனர். பாரதரே! சிலஜனங்கள் அஸ்திரங்களை யெறிந்துவிட்டுத் தூக்கமயக்கமுற்றுப் படுத்துறங்கினார்கள். சிலர் தேர்களிலும் சிலர் யானைகள்மீதும் சிலர் குதிரைகள்மீதும் படுத்துறங்கினார்கள். அரசரே! யுத்தவீரர்கள் தூக்கத்தினால் மயக்கமடைந்தவர்களாகி ஒரு விதச்செய்கையையும் அறியவில்லை. அப்படிப்பட்ட வீரர்களைச் சில போர்வீரர்கள் யுத்தகளத்தில் யமலோகத்திற்கு அனுப்பினார்கள். பிரஜ்ஞையற்றுத் தூங்குகின்ற பகைவர்களை மற்றவர்கள் அடித்தார்கள். மகாயுத்தத்தில் நித்திரையினால் மயக்கமுற்றவர்களான அந்த யுத்தவீரர்கள் போர்க்களத்தில் பற்பல சொற்களைச்சொல்லிக்கொண்டு தம்மையும் தம்மைச்சேர்ந்தவர்களையும் பிறரையும் கொன்றார்கள். மஹாராஜரே! யுத்தம்செய்யவேண்டுமென்று நிற்கின்றவர்களும் நித்திரையினால் மிகச்சிவந்த கண்களுள்ளவர்களுமான நம்முடைய அனேக ஜனங்கள் சத்துருக்களுடைய வீரர்களிடமிருந்து துன்பத்தை அடைந்தார்கள். சிலர் யுத்தத்தில் சென்றுகொண்டிருக்கும்பொழுதே நித்திரையினால் மயக்கமுற்றார்கள். அந்தச் சூரர்கள் பயங்கரமான அந்த இருளில் ரணகளத்தில் சூரர்களான சத்துருக்களைக் கொன்றார்கள். யுத்தத்தில் தூக்கத்தால் அதிக மயக்கமுற்றவர்களான அனேக ஜனங்கள் தாங்கள் சத்துருக்களால் கொல்லப்படுவதைத் தெரிந்துகொள்ளவில்லை. புருஷசிரேஷ்டனான அர்ஜுனன் அவர்களுடைய இவ்விதமான செய்கையையறிந்து திக்குக்களை எதிரொலியிடும்படி செய்துகொண்டு உரக்க ஒருவார்த்தையைக் கூறலானான். 'ஸைனிகர்களே! இருளாலும் அதிகமான புழுதியினாலும் மூடப்பட்டிருக்கிற ஸேனையில் நீங்களனைவரும் வாகனங்களுடன் களைப்படைந்தவர்களும் நித்திரையினால் மயக்கமுற்றவர்களுமாயிருக்கிறீர்கள். அப்படிப்பட்ட நீங்கள் விரும்பினால் யுத்தத்தை நிறுத்திவிடுங்கள். இந்த யுத்தபூமியிலேயே ஒரு முகூர்த்தகாலம் உறங்குங்கள். பாண்டவகௌரவ வீரர்களே! பிறகு, நீங்கள் நித்திரையைவிட்டு விடாய்தீர்ந்தவர்களாகிச் சந்திரோதயமானவுடனே ஸ்வர்க்கத்தை அடைவதின்பொருட்டு மறுபடியும் ஒருவரோடொருவர் யுத்தத்திற்காக எதிர்த்துச் செல்லுங்கள்' என்றான். அரசரே! ஸர்வ தர்மங்களையும் அறிந்தவர்களான அங்குள்ளவீரர்கள் தார்மிகனான அர்ஜுனனுடைய அவ்வார்த்தையை அன்புடன் ஏற்றுக்கொண்டார்கள்.

அவ்வாறே (அந்த) வீரர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள். கௌரவஸேனாவீரர்களெல்லோரும், 'கர்ண! கர்ண! துரியோதன! நீங்கள் யுத்தத்தை நிறுத்திவிடுங்கள். பாண்டவஸைனியம் யுத்தத்தை நிறுத்திவிட்டது' என்று கூச்சலிட்டார்கள். பாரதரே! பல்குனன் ஆங்காங்கு அவ்வாறு உரக்கச்சொன்னவுடன், பாண்டவர்களுடைய சேனையும் உம்முடைய சேனையும் யுத்தத்தினின்று ஓய்ந்தன. மகாத்மாவான அந்த அர்ஜுனனுடைய கௌரவம்பொருந்திய அந்த வார்த்தையைத் தேவர்களும் ரிஷிகளும் எல்லாவீரர்களும் ஸந்தோஷமடைந்து புகழ்ந்தார்கள். பாரதரே! களைத்த எல்லா ஸைனியங்களும் நயமான அந்த வார்த்தையைப்புகழ்ந்து ஒரு முகூர்த்தகாலம் உறங்கின. பாரதரே! உம்முடைய அந்தச்சேனையானது விடாய்தீர்ந்து சுகத்தையடைந்து வீரனான அர்ஜுனனைப்பார்த்து, 'மிக்க புஜபலமுள்ளவனே! மாசற்றவனே! உன்னிடத்தில் வேதங்களும் அவ்வாறே அஸ்திரங்களுமுள்ளன. உன்னிடத்தில் புத்தியும் பராக்கிரமமுமுள்ளன. உன்னிடத்தில் தர்மமும் பூததயையுமுள்ளன. பார்த்த! தேறுதலடைந்தவர்களான நாங்கள் விரும்புகிற ஸுகம் உனக்கு உண்டாகட்டும். வீரனே! உன் மனத்திற்கு விருப்பமான விஷயங்களைச் சீக்கிரம் அடைவாயாக' என்று புகழ்ந்தது. நரசிரேஷ்டனான அர்ஜுனனை மஹாரதர்கள் இவ்வாறு புகழ்ந்து நித்திரையினால் கவரப்பட்டவர்களாகிப் பேசாமலிருந்தார்கள். சிலர் குதிரையின் முதுகுகளிலும் சிலர் ரதமத்தியங்களிலும் சிலர் யானைகளினுடைய பிடர்களிலும் சிலர் பூமியிலும் படுத்து உறங்கினார்கள். சிலமனிதர்கள் ஆயுதங்களையுடையவர்களாகவும் கதைகளையுடையவர்களாகவும் கத்திகளையும் கோடாலிகளையும் ஈட்டிகளையுமுடையவர்களாகவும் கவசங்களை யணிந்தவர்களாகவும் தனித்தனி உறங்கினார்கள். தூக்கத்தால் மயக்கமுற்ற அந்த யானைகள் ஸர்ப்பங்களுடைய உடல்கள் போன்றவைகளும் பூமியிலுள்ள புழுதிபடர்ந்தவைகளுமான துதிக்கைகளால் பூமியை மூக்கோட்டையினின்று வெளிவரும் காற்றினால் குளிரச்செய்தன. அந்த யுத்தத்தில் பூமியில் பெருமூச்சுவிட்டுக்கொண்டு உறங்குகின்றயானைகள் சீறுகின்ற பெரும்பாம்புகளோடு கீழே சிதறிக்கிடக்கின்ற மலைகள்போல் விளங்கின. பொன்மயமான பூட்டாம்வார்களுள்ள அந்தக் குதிரைகள் பிடரிமயிர்களுடன் தொங்குகின்ற நுகத்தடிகளுள்ளவைகளாகி ஸமமானதரையைக் குளம்பின் நுனிகளால் பறித்து மேடுபள்ளமாகச்செய்தன. ராஜசிரேஷ்டரே! வாகனங்களின்மீதிருந்தவரெல்லாம் அவற்றின்மீதே உறங்கினார்கள். பரதரிற் சிறந்தவரே! இவ்வாறு குதிரைகளும் யானைகளும் யுத்தவீரர்களும் அதிக

ஶ்ரமத்தையடைந்து யுத்தத்தை நிறுத்தித் தூங்கினார்கள். அவ்வாறு நித்திரையினாலே ஓய்வுற்று ஒலியடங்கியிருக்கின்ற அந்தச்சேனையானது ஸமர்த்தர்களான சிற்பிகளாலே சித்திரப்படத்தில் எழுதப்பட்ட அற்புதமான சித்திரம்போல் விளங்கியது. குண்டலங்கள் தரித்தவர்களும் யௌவனமுள்ளவர்களுமான அந்தக்ஷத்திரியர்கள் ஒருவராலொருவர் அம்புகளால் அங்கங்கள் காயம்பண்ணப்பட்டவர்களாகிக் காமினிகளுடைய கொங்கைகளில் படுத்துறங்குகிறவர்கள்போல் யானைகளினுடைய மத்தகங்களில் படுத்துறங்கினார்கள். பிறகு, ஆம்பல்களுக்குநாதனும் காமினியினுடைய கன்னம்போல் வெளுத்திருக்கின்றவனும் நேத்திரங்களுக்கு ஆனந்தத்தை யுண்டுபண்ணுகின்றவனுமான சந்திரனாலே கீழ்த்திசையானது அலங்கரிக்கப்பட்டது. ஆயிரங்கண்களுள்ள இந்திரனுடைய திக்காகிற குகையினின்று வெளிப்புறப்பட்டதும் கிரணங்களாகிற மஞ்சள்நிறமுள்ள பிடரிமயிர்களால் பிரகாசிக்கின்றதும் இருட்டாகிறயானைக்கூட்டங்களைப் பிளக்கின்றதுமான உதயபர்வதத்தில் வஸிக்கின்ற (சந்திரனாகிற) ஒரு ஸிம்மமானது தோன்றியது. மஹேஶ்வரருடைய உத்தமமான விருஷபத்தின் தேககாந்திபோன்ற காந்தியையுடையதும் வளைத்துக்கட்டப்பட்ட மன்மதனுடைய விற்போல விளங்குவதும் புதியமணமகளது புன்னகைபோலழகியதும் மனத்திற்கு இன்பமானதும் ஆம்பலோடைக்குப் பந்துவுமான சந்திரன் வெளியில் புறப்பட்டது. பிறகு, ஒரு முகூர்த்தகாலத்திற்குள் கீழ்த்திசையில் காந்தியையுடையவனும் முயலை அடையாளமாகக்கொண்டவனும் பிரபுவுமான சந்திரன் பிரகாசகரமான (தன்) ஒளியை அடக்கிக்கொண்டு சிவப்புநிறமுள்ள காந்தியைக்காட்டினான். சிவப்பானகாந்தியை வெளிப்படுத்திய பிறகு, சந்திரன் பொன்போன்ற காந்தியுள்ள பெரிய கிரணங்களுடைய ஸமூகத்தை மெல்லமெல்லப் பரப்பினான். அந்தச் சந்திரகிரணங்கள் ஒளியினால் இருளைவிலக்கிக்கொண்டு மெதுவாக எல்லாத்திக்குக்களையும் ஆகாயத்தையும் அவ்வாறே பூமியையும் வியாபித்தன. பிறகு, ஒரு முகூர்த்தகாலத்திற்குள் உலகம் ஒளிமயமாகியது. அவ்வாறே இருளும் விரைவாக மறைந்து பெயரையிழந்ததுமாகியது. அரசரே! உலகம் விளக்கப்பட்டுப் பகல்போலாகிச் சந்திரனும் பிரகாசிக்கவே, அப்பொழுது இரவில் சஞ்சரிக்கும் பிராணிகளில் சில சஞ்சரித்தன; சில சஞ்சரியாமலுமிருந்தன. அரசரே! சந்திரனுடைய கிரணங்களாலே விழிப்பை யுண்டுபண்ணப்பட்ட அந்தச்சேனை சூரியகிரணங்களாலே மலரச்செய்யப்பட்ட தாமரைக்காடுபோல் விளங்கியது. எவ்வாறு கடலானது சந்திரோதயத்தினால் பொங்கிக்குழம்புமோ அவ்

வாறே, அந்த ஸேனைக்கடலானது சந்திரோதயத்தினாலே பொங்கிக் குழம்பியது. வேந்தரே! பிறகு, பரலோகத்தையடைய எண்ணங் கொண்டவர்களான வீரர்களுக்குப் பூலோகத்தில் எல்லாஜனங்களும் அழிவதின்பொருட்டு மறுபடியும் போர்தொடங்கியது.

---

## நூற்றெண்பத்தாறுவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரியோதனன் துரோணரை யிகழ்ந்ததும், கோபமூட்டப்பட்ட அவர் அர்ஜுனனைப் புகழ்ந்தும் துரியோதனனையிகழ்ந்தும் போருக்குப் புறப்பட்டதும்.)

பிறகு, துரியோதனன் துரோணரை அடைந்து, கோபத்துக்கு வசப்பட்டு ஊக்கத்தையும் பராக்கிரமத்தையும் விருத்திபண்ணும்படி பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான். 'யுத்தகளத்தில் சிரமத்தை யடைந்து களைப்பாறுகின்றவர்களும் மனம்வாடினவர்களும் மேலும் லக்ஷ்யத்தை (ஜயத்தை) அடைந்தவர்களுமான சத்துருக்களை மன்னிக்கலாகாது. உமக்குப்பிரியத்தைவிரும்பி நாங்கள் பொறுத்திருந்ததனால் மிக்க பலசாலிகளான இந்தப் பாண்டவவீரர்கள் நன்றாகக் களைதீர்ந்து விட்டார்கள். நாம் தேஜஸினாலும் பலத்தினாலும் எல்லாவிதத்திலும் குறைவுபட்டவர்களாயிருக்கிறோம். பாண்டவவீரர்கள் உங்களால் பாது காக்கப்பட்டுத் திரும்பவும் திரும்பவும் விருத்தியடைகிறார்கள். பிரம்மாஸ்திரமுதலான திவ்யாஸ்திரங்களெல்லாம் தேவரீரிடத்திலேயே விசேஷமாக நிலைபெற்றிருக்கின்றன. யுத்தஞ்செய்கின்ற தேவரீருக்குப் பாண்டவர்களாவது நாங்களாவது உலகத்திலுள்ள மற்ற வில்லாளிகளாவது ஒப்பாகோம். இந்த உண்மையை உமக்குச் சொல்லுகிறேன். பிராம்மணோத்தமரே! எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவரான தேவரீர், தேவர்களோடும் அஸுரர்களோடும் கந்தர்வர்களோடுங்கூடின இவ்வுலகங்களைத் திவ்யாஸ்திரங்களால் நாசம் செய்வீர். ஸந்தேகமில்லை. அப்படிப்பட்டதேவரீர் சிஷ்யர்களாயிருத்தலையோ அல்லது என்னுடைய துர்ப்பாக்கியத்தையோ முன்னிட்டு இந்தப் பாண்டவர்களைத் தேவரீருக்குச் சமானர்களென்று எண்ணிப் பொறுக்கின்றீர்' என்று சொன்னான். மன்னரே! உமது குமாரனாலே இவ்வாறு அவமதிக்கப்பட்டவரும் கோபமூட்டப்பட்டவருமான துரோணர் கோபத்துடன் அவனைப்பார்த்து, 'துரியோதன! பிராயமுதிர்ந்தவனான நான் யுத்தத்தில் இயன்றவரையி

னும் போர்புரிகிறேன். இதற்குமேல் வெற்றியில் பேராசைகொண்டால் நான் இழிவான காரியத்தைச்செய்யவேண்டி யிருக்கும்; அஸ்திரங்களை யறிந்தநான் அஸ்திரங்களை யறியாத எல்லா ஜனங்களையும் கொல்ல வேண்டியிருக்கும். கௌரவனே! சுபமோ அசுபமோ எதனை நீ எண்ணுகிறாயோ அதனை நீ சொல்லுவதற்காகச்செய்வேன். வேறுவிதமாகநான் செய்யப்போகிறதில்லை. ராஜனே! யுத்தத்தில் பராக்கிரமத்தை வெளியிட்டு எல்லாப் பாஞ்சாலர்களையும் கொன்றுவிட்டுக் கவசத்தைக்கழற்றப் போகிறேன். ஸத்தியம்செய்து ஆயுதத்தைத் தொடுகிறேன். குந்திபுத்திரனை அர்ஜுனனை யுத்தத்தில் சிரமமடைந்தவனென்று எண்ணுகிறாய். மிக்க புஜபலமுள்ளவனே! கௌரவ! அவனுடைய வீர்யத்தை உண்மையாகக்கேள். கோபங்கொண்டிருக்கின்ற ஸவ்யஸாசியை யுத்தத்தில் தேவர்களாவது கந்தர்வர்களாவது யக்ஷர்களாவது ராக்ஷஸர்களாவது ஜயிக்க வல்லமையுள்ளவர்களாகார். அந்த மகாபுருஷன் காண்டவவனத்தில் வீர்யமுள்ளவனான தேவராஜனை எதிர்த்தான். மழைகளைப்பொழிகின்ற அந்த இந்திரனை அம்புகளால் தடுத்தான். அந்தப் புருஷசிரேஷ்டனாலேயே யக்ஷர்களும் நாகர்களும் அவ்வாறே தைத்யர்களும் மற்றுமுள்ள சிறந்த பலசாலிகளும் கொல்லப்பட்டார்கள். அந்த விஷயமும் உனக்குத் தெரியும். [1] கோஷயாத்திரையில் சித்ரஸேனன்முதலான கந்தர்வர்கள் ஜயிக்கப்பட்டார்கள். அந்தக் கந்தர்வர்களாலே கவரப்பட்ட நீங்களும் திடமான வில்லைக்கையிற்பிடித்த ஸவ்யஸாசியினாலே விடுவிக்கப் பட்டார்கள். அவ்வாறே தேவர்களால் கொல்லமுடியாத நிவாதகவசர்களென்னும் தேவசத்துருக்களும் யுத்தத்தில் அந்த வீரனாலே ஜயிக்கப் பட்டார்கள். அந்தப் புருஷஶ்ரேஷ்டன் ஹிரண்யபுரத்தில் வஸிக்கின்ற ஆயிரம் அஸுரர்களை ஜயித்தான். அவன் மனிதர்களால் எவ்வாறு ஜயிக்கத்தக்கவன்? அரசனே! நாம் போர்புரிந்துகொண்டிருக்கும் பொழுதே உன்னுடைய இச்சேனைமுழுதும் அவனால் நாசம்செய்யப் பட்டதென்பது உனக்குப் பிரத்தியக்ஷம்' என்று சொன்னார்.

வேந்தரே! அப்பொழுது அர்ஜுனனைப் புகழ்கின்ற துரோணரைப்பார்த்து உம்முடைய குமாரனான துரியோதனன் கோபமுண்டு மறுபடியும் இந்தவார்த்தையை உரைக்கலானான். 'ஆசார்யரே! யானும் துச்சாஸனனும் கர்ணனும் எனக்குமாமனான சகுனியும் பாரதசேனையை இரண்டாகச்செய்துகொண்டு இப்பொழுது யுத்தத்தில் அர்ஜுனனைக் கொல்வோம். மகா பாகுபலமுள்ளவரே! அப்படிப்பட்ட நீர் நில்

[1] பசுக்களைப்பார்த்தற்காக இடைச்சேரிக்குப் போவது.

னும். எப்பொழுதுமே அர்ஜுனன் உமக்குப் பிரியமானசிஷ்யன்' என்றான். அந்தத் துரியோதனனுடைய அந்த வார்த்தையைக்கேட்டு, பாரத்வாஜர் நகைத்துக்கொண்டு துரியோதனராஜனுக்கு இணங்கினார். 'உனக்கு மங்களமுண்டாகுக' என்றும் கூறினார். அவர், தேஜஸ்ஸினாலே ஜ்வலிக்கின்றவன்போன்றவனும் அழிவற்றவனும் க்ஷத்திரியசிரேஷ்டனுமான காண்டீவத்தை வில்லாகவுடையவனை எந்த க்ஷத்திரியன்தான் நாசம் செய்வான்? ஆயுதங்களுடன்கூடின அந்த அர்ஜுனனைக் குபேரனும் இந்திரனும் யமனும் வருணனும் அஸுரர்களும் உரகர்களும் ராக்ஷஸர்களும் நாசம்செய்யார்கள். பாரத! நீசொல்லுகிற இவ்வார்த்தைகளை மூடர்கள் சொல்லுவார்கள். யுத்தத்தில் அர்ஜுனனை எதிர்த்து எவன் க்ஷேமமுள்ளவனாக வீட்டுக்குச் செல்வான்? குரூரனும் பாபத்தில் நிச்சயமுடையவனுமான நீயோ எல்லாரிடத்திலும் ஸம்சயமுள்ளவனாக இருத்தலால் உனக்கு மேன்மையை விளைவிப்பதிலும் உனக்கு ஹிதத்தைத்தேடுவதிலும் முயற்சியுடையவர்களையும் அவ்வவ்வார்த்தைகளைச் சொல்ல இச்சமயத்தில் விரும்புகிறாய். நீயும் யுத்தத்திற்குப்போ. உன் காரியத்துக்காகக் கௌந்தேயனை நாசம்செய். தாமதிக்காதே. நீயும் யுத்தஞ்செய்ய விரும்புகிறாய். நற்குலத்தில் பிறந்த க்ஷத்திரியனல்லவோ? குற்றமற்றவர்களான இந்த எல்லா க்ஷத்திரியர்களையும் ஏன் கொல்லப் போகிறாய்? நீயே இந்த வைரத்திற்கு மூலம். ஆதலால், அர்ஜுனனை எதிர்த்துச்செல். காந்தாரிபுத்திரா! இதோ கற்றறிந்தவனும் க்ஷத்திரிய தர்மத்தை அனுஸரிக்கின்றவனும் கெட்ட சூதாட்டத்தை விளையாட்டாகக் கொண்டவனுமான உன்மாமனிருக்கிறான். இவன் யுத்தத்தில் அர்ஜுனனை எதிர்க்கட்டும். இவன் பாச்சிகையுருட்டுவதில் ஸமர்த்தன்; கோணலானதன்மையுள்ளவன்; சூதை நடத்துகிறவன்; சூதாடுபவன்; வஞ்சகன்; சூதாடியே காலம்போக்குகின்றவன்; வஞ்சனையில் பாண்டித்யமுள்ளவன்; யுத்தத்தில் பாண்டவர்களை ஜயிப்பான். திருதராஷ்டிரன் கேட்டுக்கொண்டிருக்கும்பொழுதே கர்ணனோடுகூடிய நீ மயக்கத்தால் மதிகெட்டு அடிக்கடி மிக்க ஸந்தோஷத்தை யடைந்தவன் போல், 'ஐயா! நான், கர்ணன், என்னுடைய பிராதாவான துச்சாஸனன் ஆகிய மூவரும் ஒன்றுசேர்ந்து பாண்டுபுத்திரர்களை யுத்தத்தில் கொல்வோம்' என்று சொல்லியிருக்கிறாய். இவ்விதம் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுகின்ற உன்னுடைய வார்த்தையை ஒவ்வொரு ஸபையிலும் கேட்டிருக்கிறேன். அந்தக் கர்ணன் முதலியவர்களுடன்கூடி அந்தப் பிரதிஜ்ஞையை நிறைவேற்று. நீ ஸத்தியவாக்காகிவிடு. இதோ உனக்குச் சத்துருவான பாண்டவன் பயமற்று எதிரில் நிற்

கிறான்: க்ஷத்திரியதர்மத்தை ஆலோசி. உனக்கு ஜயத்தைக்காட்டி லும் வதமே சிறந்தது. (பொருள்களைக்) கொடுத்தாய்; நீயும் அனுப வித்தாய்; அத்யயனத்தையும் செய்தாய். நீ விரும்பிய அதிகாரம் உன்னால் அடையப்பட்டது. நீ கிருதகிருத்யனாகவும் கடனில்லாத வனாகவுமிருக்கிறாய். பயப்படாதே. பாண்டவனைக்குறித்து யுத்தம் செய்' என்றார். யுத்தத்தில் இவ்வாறு சொல்லிவிட்டு, அவர். சத் துருக்களிருக்குமிடத்துக்குத் திரும்பினார் பிறகு, சேனை இரண்டா கப் பகுக்கப்பட்டு, அப்பொழுது யுத்தம் நடந்தது.

---

## நூற்றெண்பத்தேழாவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணர், துருபதன் விராடன் முதலான அரசர்களைக் கொன்றதும், பீமன் த்ருஷ்டத்யும்னனை யுத்தஞ்செய்யத் தூண்டித் தான் துரோணருடைய படையை எதிர்த்ததும்.)

அரசரே! ராத்திரியானது மூன்றில் ஒருபாகம் மிகுந்திருக்கும் பொழுது ஊக்கமுள்ளவர்களான கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக் கும் யுத்தம் நடந்தது. பிறகு, சந்திரனுடைய ஒளியைக் கவர்கின்றவ னும் ஆதித்யனுக்கு முந்திச்செல்லுகின்றவனுமான அருணன் ஆகாத்ய த்தைச் சிவப்பாகச்செய்கின்றவன்போல உதித்தான். அருணன் உலகத் தை நன்றாக ரஞ்சனம் செய்பவன்போல ஆகாயத்தைப் பிரகாசமுள்ள தாகச் செய்தான். கிழக்குத்திக்கில் அருணனாலே சிவப்பாகச்செய்யப் பட்ட சூரியமண்டலமானது பொன்மயமான சக்கரம்போல்விளங்கியது. பிறகு, கௌரவபாண்டவஸேனாவீரர்களனைவரும் தேர்களையும் குதிரை களையும் மனுஷ்யவாகனங்களையும் விட்டுவிட்டுச் சூரியனுக்கு எதிராக நின்றுகொண்டு கைகளைக்குவித்து ஸந்தியோபாஸ்திசெய்து ஜபம்செய் தார்கள். பிறகு, சேனை இரண்டாகவகுக்கப்பட்டவுடன், துரோணர் துரி யோதனனை முந்தினவனாகக்கொண்டு பாஞ்சாலர்களுடன்கூடின ஸோம கர்களையும் பாண்டவர்களையும் எதிர்த்துச் சென்றார். கௌரவசேனை இரண்டாக வகுக்கப்பட்டதைக்கண்டு மாதவர் அர்ஜுனனைப் பார்த்து, 'ஸவ்யஸாசியே! பகைவர்களான இந்தக் கௌரவர்களை இடப்பக்கத்தில் விட்டுச் செல்' என்று சொன்னார். தனஞ்சயன் மாதவரைநோக்கி, 'அப்படியே செய்யும்' என்று அனுமதிகொடுத்து, மகாவில்லாளிகளான துரோணர், கர்ணன் இவ்விருவரையும் இடமாகச் சுற்றிவந்தான்,

வாஸுதேவருடைய அபிப்ராயத்தையறிந்து சத்துருபட்டணங்களை ஜயிப்பவனான பீமஸேனன் யுத்தமுனையில்நிற்கின்ற பார்த்தனைநோக்கி, 'அர்ஜுன! பீபத்ஸுவே! என்னுடைய இந்த வார்த்தையைக் கேள். எதற்காக க்ஷத்திரியஸ்திரீ புத்திரனைப்பெறுகிறாளோ அதற்குரிய காலம் இதோ வந்துவிட்டது. நேர்ந்திருக்கின்ற இந்த ஸமயத்தில் நீ நன்மையைச் செய்யாவிடில் மதிக்கப்படாதவனும் கொடுமைசெய்த வனுமாவாய். நீ (உனது)வீர்யத்தினாலே ஸத்தியம், ஐஸ்வர்யம், தர்மம், கீர்த்தி இவைகளுக்குக் கடனாளியாகாமலிருத்தலை அடைவாயாக. யுத்தம் செய்கிறவர்களுள் சிறந்தவனே! சேனையைச் சின்னபின்னஞ்செய். பிரதிஜ்ஞையை நிறைவேறச்செய்' என்று சொன்னான். அந்த ஸவ்ய ஸாசி பீமனாலும் கேசவராலும் ஏவப்பட்டவனாகிக் கர்ணனையும் துரோணரையும் மீறிச்சென்று நான்குபக்கங்களிலும் தடுத்தான். பிறகு, க்ஷத்திரிய சிரேஷ்டர்கள், யுத்தமுனையில் வருகின்றவனும் க்ஷத்திரிய சிரேஷ்டர்களை எரிக்கின்றவனும் பகைவர்களை ஆக்கிரமிக்கின்றவனும் நெருப்புப்போல் விருத்தியடைகின்றவனுமான தனஞ்சயனைப் பராக்கிரமத்தை வெளிப்படுத்தித் தடுப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பிறகு, துரியோதனனும் கர்ணனும் ஸௌபலனான சகுனியும் பாணஸமூகங்களைக் குந்திபுத்திரனான தனஞ்சயன்மீது வர்ஷித்தார்கள். ராஜேந்திரரே! அஸ்திரங்களை யறிந்தவர்களுள் உத்தமனான தனஞ்சயன் அவர்களனைவருடைய அஸ்திரங்களையும் நாசஞ்செய்து அவர்கள்மீது அம்புமழைகளைப் பொழிந்தான். ஹஸ்தலாகவமுள்ளவனான தனஞ்சயன் அஸ்திரங்களால் அஸ்திரங்களைத்தடுத்து எல்லா வீரர்களையும் கூர்மையுள்ள பத்துப் பத்தம்புகளால் அடித்தான். அப்பொழுது, புழுதிமழையும் அவ்வாறே அம்புமழையும் கோரமான இருளும் பெரிதான சப்தமும் தோன்றின. அந்த யுத்தரங்கமானது அவ்வாறான நிலைமையை யடைந்திருக்கையில் ஆகாயமாவது பூமியாவது திக்குக்களாவது அறியப்படவில்லை. படையிலுண்டான புழுதியினாலே மூடப்பட்டு எல்லாம் குருடுபோலாயிற்று. அரசரே! அவர்களும் நாங்களும் ஒருவரையொருவர் தெரிந்துகொள்ளவில்லை. நாங்களும் அவர்களும் சப்தமாத்திரத்தாலே ஒருவரையொருவர் அறிந்துகொண்டோம். அரசர்கள் அவ்விதமான உத்தேசத்தோடு போர்புரிந்தார்கள். மன்னரே! ரதிகர்கள் ரதத்தையிழந்தவர்களாக ஒருவரையொருவர் எதிர்த்துவந்து மயிர்களிலும் கவசங்களிலும் புஜங்களிலும் நன்றாகப் பிடித்துக்கொண்டார்கள். அந்த யுத்தரங்கத்தில் குதிரையையிழந்தவர்களும் ஸாரதியை யிழந்தவர்களும் பயத்தால் பீடிக்கப்பட்டவர்

களும் (கைகால்) அசைவற்றவர்களும் கொல்லப்பட்டவர்களுமாயிருக்கின்ற ரதிகர்கள் உயிரோடிருப்பவர்கள்போலக் காணப்பட்டார்கள். அவ்வாறே கொல்லப்பட்டு மலைகள்போல விழுந்திருக்கிற யானைகளின் மீது குதிரைவீரர்களோடுகூடவே குதிரைகள் உயிரையிழந்துகிடப்பனவைகளாகக் காணப்பட்டன. பிறகு, துரோணர் யுத்தகளத்தின் வடதிசையை அடைந்து புகைதணிந்த அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு யுத்தத்தில் நின்றார். வேந்தரே! யுத்தமுனையிலிருந்து தனியாகப்புறப்பட்ட அந்தத் துரோணரைக்கண்டு பாண்டவர்களுடைய படைகள் நடுக்கமுற்றன. பாரதரே! பிரகாசிக்கின்றவரும் அழகியவரும் தேஜஸினால் விளங்குகின்றவருமான துரோணரைக்கண்டு பகைவர்கள் நடுங்கினார்கள்; ஓடினார்கள்; வாடவும் வாடினார்கள். பகைவர்களுடைய படையை யுத்தத்திற்கு அழைக்கின்றவரும் மதப்பெருக்குக்கொண்ட யானைபோலிருப்பவருமான அந்தத் துரோணரை ஜயிப்பதில் அஸுரர்கள் இந்திரனை ஜயிப்பதில் நம்பிக்கையற்றவர்களாவதுபோல நம்பிக்கையற்றவர்களாயினர். சிலர் ஊக்கத்தையிழந்தார்கள். உதாரமான மனத்தையுடையவர்களான சிலர் கோபங்கொண்டார்கள். சிலர் வியப்புற்றார்கள். சிலர் யுத்தத்தில் ஸந்தோஷமுடையவர்களானார்கள். மற்ற அரசர்கள் தங்கள் கைகளாலே கைகளின் நுனியைப் பிசைந்தார்கள். கோபத்தால் விருத்தியடைந்தவர்களான சிலர் பற்களால் உதடுகளைக் கடித்துக்கொண்டார்கள். சிலர் ஆயுதங்களை எறிந்தார்கள். சிலர் தோள்களைத் தேய்த்தனர். மிக்க காந்தியுள்ள சிலர் உயிரையிழக்கத் துணிந்தவர்களாகித் துரோணரை எதிர்த்துச் சென்றார்கள். ராஜேந்திரரே! பாஞ்சாலர்களோ துரோணருடைய அம்புகளால் மிகவும் பீடிக்கப்பட்டவர்களும் அதிக வேதனையுற்றவர்களுமாகி யுத்தத்தில் முயற்சி செய்தார்கள். பிறகு, அவ்வாறு யுத்தத்தில் ஸஞ்சரிக்கின்றவரும் யுத்தத்தில் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவருமான துரோணரை நோக்கி யுத்தகளத்தில் விராடனும் துருபதனும் எதிர்த்தார்கள். அரசரே! பிறகு, துருபதனுடைய மூன்றுபேரன்மார்களும் மகாவில்லாளிகளான சேதிதேசத்துவீரர்களும் யுத்தத்தில் துரோணரையே எதிர்த்தார்கள். அந்த துருபதன்பேரன்மார்மூவரின் பிராணன்களையும் துரோணர் கூர்மையுள்ள மூன்றம்புகளாலே அபகரித்தார். அவர்கள் கொல்லப்பட்டுப் பூமியில் வீழ்ந்தார்கள். பிறகு, பாத்வாஜபுத்ரரான துரோணர் சேதிதேசத்தவர்களையும கேகயர்களையும் ஸ்ருஞ்சயர்களையும் மச்சதேசத்தார்களையும் இன்னும் மற்றுமுள்ள எல்லாமகாரதர்களையும் யுத்தத்தில் ஜயித்தார். மகாராஜரே! பிறகு, துருபதன் கோபத்

தினாலே துரோணரின்மீது அம்புமழையைப் பொழிந்தான். அவ்வாறே, விராடனும் யுத்தத்தில் அம்புமழையைப் பொழிந்தான். க்ஷத்திரியர்களை அடிக்கின்றவரான துரோணர் அந்த அம்புமழையை நாசம் செய்து அந்த விராடனையும் த்ருபதனையும் அம்புகளால் மூடினார். யுத்தமுனையில் துரோணராலே மூடப்படுகின்ற அவ்விருவரும் அதிக கோபங்கொண்டு துரோணரை அம்புகளால் அடித்தார்கள். மகாராஜரே! பிறகு, துரோணர் கோபமும் பொறுமையுமுள்ளவராகி மிக்க கூர்மையுள்ள இரண்டுபல்லங்களால் அவ்விருவருடைய விற்களையும்வெட்டினார். பிறகு, விராடன் கோபங்கொண்டு துரோணரைக் கொல்லும் விருப்பத்தோடு யுத்தத்தில் பத்துத்தோமரங்களையும் பத்துப்பாணங்களையும் பிரயோகித்தான். த்ருபதன் கோபங்கொண்டு கோரமானதும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் ஸர்ப்பராஜன்போல் விளங்குகின்றதும் இரும்பினாலாகியதுமான ஒருசக்தியைத் துரோணருடைய ரதத்தின்மீது எறிந்தான். பிறகு, துரோணர் அந்தப் பத்துத் தோமரங்களையும் மிக்க கூர்மையுள்ள அர்த்தசந்திரபாணங்களாலறுத்து ஸ்வர்ணங்களாலும் வைடூர்யங்களாலும் இழைக்கப்பட்ட அந்தச் சக்தியையும் பாணங்களால் துண்டாக்கினார். பிறகு, சத்ருக்களை அடிக்கின்றதுரோணர் நன்கு துவைநதவைகளான இரண்டுபல்லங்களாலே த்ருபதனையும் விராடனையும் யமனிடத்திற்கனுப்பினார். விராடனும் த்ருபதனுங்கொல்லப்பட்டு அவ்வாறே கேகயர்களும் சேதிதேசத்தார்களும் மத்ஸ்யதேசத்தார்களும் அவ்வாறே பாஞ்சாலர்களும் வீரர்களான த்ருபதனுடைய மூன்று பௌத்ரர்களும் கொல்லப்பட்டபொழுது, துரோணருடைய அந்தச்செய்கையைக்கண்டு கோபத்துடனும் துக்கத்துடனும் கூடியவனும் உதாரமான மனத்தையுடையவனுமான திருஷ்டத்யும்னன் ரதிகர்களுடைய மத்தியில் நின்றுகொண்டு, 'எவனிடத்தினின்று இப்பொழுது துரோணர் விடப்படுவரோ அல்லது எவனைத் துரோணர் அவமதிப்பரோ அவன் [1] இஷ்டாபூர்த்தங்களுடைய பலனிலிருந்தும் [2] க்ஷத்திரியதேஜஸினின்றும் [3] பிராமண்யத்தினின்றும் நசித்துப்போகக்கடவன்' என்று சபதம் செய்தான். சத்ருவீரர்களைக்

---

[1] இஷ்டம்=யாகம் ஹோமம் முதலானவைகள்; பூர்த்தம்=கிணறு தோட்டம் முதலானவைகள். சாந்திபர்வமோக்ஷதர்மம் 946 - ஆவது பக்கம் குறிப்பிற் காண்க.

[2] ராஜாவான த்ருபதனுடைய வம்சத்தில் தோன்றியிருத்தலால்.

[3] யாஜோபயாஜர்களுடைய தவத்தினால், பிராம்மணரூபமான அக்னியினிடத்தினின்று தோன்றினதால்.

கொல்லுந்திறமையுடையவனான பாஞ்சால்யன் எல்லா வில்லாளிகளுக்கும் மத்தியில் இவ்வாறு பிரதிஜ்ஞைசெய்துவிட்டுச் சேனையுடன்கூடத் துரோணரை எதிர்த்துச் சென்றான். ஒருபக்கத்தில் துரோணரைப் பாஞ்சாலவீரர்கள் பாண்டவர்களுடன்சேர்ந்து அடித்தார்கள். (மற்றொருபக்கத்தில்) துரியோதனனும் கர்ணனும் ஸௌபலனான சகுனியும் அவனுடைய சகோதரர்களும் இன்னும் முக்கியவீரர்களும் யுத்தத்தில் துரோணரை ரக்ஷித்தார்கள். மகாரதர்களான அவர்களெல்லோராலும் அவ்வாறு ரக்ஷிக்கப்படுகின்ற துரோணரைப் பாஞ்சாலர்கள் முயற்சிசெய்தும் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். பெரியவரே! அந்தச் சமயத்தில் புருஷஸ்ரேஷ்டனான பீமஸேனன் திருஷ்டத்யும்னன்மீது கோபங்கொண்டு அவனைநோக்கிக் கடுஞ்சொற்களாலே மனம் புண்படும்படி பேசத்தொடங்கினான். பீமஸேனன், 'நீ துருபதனுடைய குலத்தில் தோன்றியவன்; அஸ்திரங்களை அறிந்தவர்களுள் சிறந்தவன். தன்னை வீரனென்று எண்ணுகிற எந்த க்ஷத்திரியன் எதிரில்நிற்கின்ற சத்துருவைப் பார்ப்பான்? எந்தமனிதன்தான் தகப்பன் பிள்ளைகளுடைய வதத்தையடைந்து ராஜஸபையில் விசேஷமாகப் பிரதிஜ்ஞையையும் செய்துவிட்டு, தன் ஆண்மையைப்பற்றி ஸந்தோஷிப்பான்? தன்னுடைய தேஜஸினால் நிரம்பி ஜ்வலிக்கின்ற அக்னிபோல அம்புகளும் விற்களுமாகிற விறகுகளோடுகூடின இந்தத் துரோணாக்னியானது க்ஷத்திரியக்கூட்டத்தைத் தன் தேஜஸினால் கொளுத்துகிறது. இவர் பாண்டவர்களுடைய சேனையை மிச்சமில்லாமற்செய்துவிடுவார். நீங்கள் நின்றுகொண்டு என்னுடைய செய்கையைப் பாருங்கள். நான் துரோணரையே எதிர்த்துப் போகிறேன்' என்றான். இவ்வாறு சொல்லிவிட்டு விருகோதரன் கோபங்கொண்டு பூர்ணமாக இழுத்துவிடப்படும் பாணங்களாலே உமது சேனையைத்துரத்தியடித்துக்கொண்டு துரோணருடைய சேனையில் புகுந்தான். பாஞ்சாலகுமாரனான திருஷ்டத்யும்னனும் பெரிய சேனையில் நுழைந்து யுத்தத்தில் துரோணரை எதிர்த்தான். அப்பொழுது கைகலந்த பெரிய யுத்தம் நடந்தது. அரசரே! சூரியோதயத்தில் நடந்த பெரிதான ஸங்குலயுத்தம்போன்ற யுத்தமானது நம்மால் முன்பு பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. ஐயா! தேர்க்கூட்டங்கள் நெருங்கிநிற்கின்றவைகளாகவே காணப்பட்டன. கொல்லப்பட்ட யுத்தவீரர்களுடைய அங்கங்கள் சிதறின. சிலர் வேறிடத்திற்குச் செல்லுகையில் அன்னியர்களால் வழியில் பிடிக்கப்பட்டார்கள். முதுகுகாட்டி ஓடுகின்ற சிலர் பின்புறத்தில் அடிக்கப்பட்டார்கள். சிலர்விலாப்புறங்களில் அடிக்கப்பட்

டார்கள். அவ்வாறாக அந்த யுத்தமானது மிக்க கைகலந்ததாகவும், மிக உக்ரமாகவுமிருந்தது. பிறகு, க்ஷணத்திற்குள் சூரியன் ஸந்தியா காலத்தை அடைந்தான்.

பதினான்காம்நாள் இராத்திரியுத்தம் முடிந்தது.

---

## நூற்றெண்பத்தெட்டாவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(பதினைந்தாநாள் போர்தொடங்கியதும், ஸங்குலயுத்தமும், நகுலனுக்குத் துரியோதனன் தோற்றதும்.)

மகாராஜரே! யுத்தமுனையில் கவசம்பூண்டவர்களான அந்த வீரர்கள் அவ்வண்ணமே ஸந்தியாஸமயத்தை யடைந்திருக்கின்றவனும், ஆயிரங்கிரணங்களுள்ளவனுமான சூரியனை வழிபாடுசெய்தார்கள். புடமிட்ட பொன்போன்ற நிறமுடைய சூரியன் உதித்தவுடன், உலகங்கள் பிரகாசிக்கவே, மறுபடியும் யுத்தம் நடந்தது. பாரதரே! சூரியோதயத்திற்குமுன் இருவர் இருவராக த்வந்த்வயுத்தம் செய்தவர்கள் சூரிய உதயமானபின்பும் அவ்வாறே எதிர்த்தனர். பரதரிற்சிறந்தவரே! ரதங்களோடு குதிரைகளும், குதிரைகளோடு யானைகளும், காலாட்களோடு யானைகளும், குதிரைகளோடு குதிரைகளும், காலாட்களோடு காலாட்களும், ரதங்களோடு ரதங்களும், அவ்வாறே யானைகளோடு யானைகளும் போர்புரிவதற்காக எதிர்த்தன. யுத்தவீரர்கள் ரணகளத்தில் யுத்தத்திற்காக முதலில் சேர்ந்தும் பிறகு பிரிந்தும், மறுபடியும் யுத்தத்தின்பொருட்டு வந்தார்கள். ராத்திரி யுத்தம் செய்தவர்களும், சூரியதேஜஸினால் களைப்படைந்தவர்களும், பசிதாகத்தால் சோர்ந்த அங்கங்களையுடையவர்களுமாக அந்த யுத்தவீரர்களனேகர் பிரஜ்ஞையற்றவர்களானார்கள். அரசரே! சங்கவாத்தியங்கள், பேரீவாத்தியங்கள், மிருதங்கங்கள், கர்ஜிக்கின்றயானைகள், நாண்கயிறுகளை இழுத்துவிடுவதினால் ஒலிக்கின்றவிற்கள் இவற்றின் ஒலியானது ஆகாயத்தை அளாவியது. ஓடுகின்றகாலாட்கள், விழுகின்ற சஸ்திரங்கள், கனைக்கின்றகுதிரைகள், திரும்புகின்றதேர்கள், பிளிறுகின்றயானைகள், நானாவித ஆயுதங்களால் அறுக்கப்பட்டுப் புரளுகின்றவீரர்கள் இவர்களின் தீனமான சப்தமானது ஒன்றுசேர்ந்து நெருங்கி விருத்தியடைந்து மிகப் பெரிதாக அப்பொழுது ஆகாயத்தை எட்டியது. அப்பொழுது விழுகின்றவைகளும் வீழ்த்தப்படுகின்றவைகளுமான காலாட்கள்,

குதிரைகள், ரதங்கள், யானைகள் இவைகளுடைய பெரிதாயும் அதிதீனமாயுமுள்ள சப்தமானது யுத்தபூமியில் கேட்கப்பட்டது. அந்த எல்லாச் சேனைகளும் பலவாறாக ஒன்றோடொன்று எதிர்த்துப்போர்புரியுமளவில் நம்மவர்கள் நம்மவர்களையும், பிறர்கள் தம்மவர்களையும், நம்மவர்கள் பிறரைச்சேர்ந்தவர்களையும், பிறர்கள் எதிரிகளான நம்மவர்களையும் கொன்றார்கள். யுத்தவீரர்களின்மீதும் யானைகளின்மீதும் வீரர்களுடையகைகளாலே பிரயோகிக்கப்பட்ட கத்திகளினுடைய குவியல்கள் வண்ணான்துறைகளிலுள்ள வஸ்திரங்களுடைய குவியல்கள்போலக்காணப்பட்டன. வீரர்களுடைய கைகளாலே யெடுக்கப்பட்டுச் சத்துருக்களாலே நொறுக்கப்படுகின்ற கத்திகளுடைய சப்தமானது துவைக்கப்படுகின்ற ஆடைகளுடைய சப்தம்போலத் தோன்றியது. ஒரு கூருள்ளகத்திகளாலும் கத்திகளாலும் தோமரங்களாலும் கோடாலிகளாலும் மிக்க குரூரமும் பெரிதுமான இழிவானயுத்தம் தொடர்ச்சியாகநடந்தது. வீரர்கள், யானை குதிரைகளின் சரீரத்தினின்று உண்டாகிறதும் மனுஷ்ய தேகங்களோடு பெருகியோடுகின்றதும் சஸ்திரங்களாகிற மீன்களால் நன்றாக நிறைந்ததும் மாம்ஸ ரக்தங்களாகிற சேறுள்ளதும் துனபுற்றவர்களின் அலறுதலாகிற சப்தத்துடன்கூடியதும் அனேக கொடித்துணிகளும் சஸ்திரங்களுமாகிற நுரையுள்ளதும் பரலோகத்தைக் குறித்துப் பெருகிச் செல்லுகின்றதுமானநதியை உண்டுபண்ணினார்கள். அம்புகளாலும சக்திகளாலும் அடிக்கப்பட்டவைகளும் வாட்டமடைந்தவைகளும் ராத்திரி யுத்தத்தினால் மயங்கி மதிகுன்றினவைகளுமான யானைகளும் குதிரைகளும் எல்லா அவயவங்களையும் அசைக்காமல் ஸ்தம்பித்து நின்றன. வீரர்கள் நன்றாக வாய்வறண்டவர்களாகி அழகிய குண்டலங்களோடுகூடின தலைகளோடும் இன்னும் மற்ற யுத்தத்திற்குரிய பொருள்களோடும் ஆங்காங்கு விளங்கினார்கள். மாம்ஸம்புஜிக்கும் ஜந்துக்களுடையகூட்டங்களால் நான்குபக்கமும் சூழப்பட்ட அந்த யுத்தபூமிமுழுதும் மரித்தவர்களாலும், அரைகுறையாக மாண்டவர்களாலும் ரதங்கள் செல்வதற்குரியவழி இல்லாததாக இருந்தது. யுத்தபூமியில் ரதசக்கரங்கள் அமிழ்ந்துபோகுந்தருணத்தில் பாணங்களாலடிக்கப்பட்டவைகளும் நடுக்கமுற்றவைகளும் களைத்தவைகளும் நற்குலத்தில் பிறந்தவைகளும் தேகபலத்தோடும் மனோபலத்தோடும் கூடியவைகளும் யானைபோன்றவைகளுமான குதிரைகள் அதிக பிரயாஸத்தோடு பலத்தைவெளியிட்டு ரதங்களை இழுத்தன. பாரதரே! அப்பொழுது, அந்தத் துரோணர், அர்ஜுனன் இருவரையுந்தவிர மற்றங்குள்ள ஸைனியம்முழுமையும் மனத்தளர்ச்சியடை

ந்ததும் அதிக பிரமங்கொண்டதும் பயமடைந்ததும் வருத்தமுற்றது மாகியது. அவ்விருவருமே எல்லா வீரர்களுக்கும் புகலிடமானார்கள். அவ்விருவருமே தீனர்களான தத்தம் யுத்தவீரர்களுக்குப் பயத்தைப் போக்குகின்றவர்களுமானார்கள். அவ்விருவரையுமே பகைவர்கள் வந்தெதிர்த்து யமலோகத்தை அடைந்தார்கள்; ஒன்றோடொன்று கைகலந்திருக்கின்ற கௌரவ பாஞ்சாலர்களுடைய பெரிய சேனையானது முழுமையும் நான்குபக்கங்களிலும் துன்பமுற்றுப் பயத்தையடைந்தது. ஒன்றும் அறியப்படவில்லை. பூமியிலுண்டான ராஜவம்சத்தில் தோன்றியவர்களான எல்லா அரசர்களுக்கும் பெரிய அழிவுநேர்ந்திருக்கும்பொழுது அந்த யுத்தபூமியானது யமனுடைய உத்யானவனம் போன்றதும் பயப்படுகிறவர்களுக்குப் பயத்தை அதிகப்படுத்துவதுமாகியது. அரசரே! போர்புரிகின்றவர்களும் சேனையில்தோன்றினபுழுதியினால் மூடப்பட்டவர்களுமான கர்ணனையும் துரோணரையும் அர்ஜுனனையும் யுதிஷ்டிரரையும் பீமஸேனனையும் நகுலஸஹதேவர்களையும் திருஷ்டத்யும்னனையும் ஸாத்யகியையும் துச்சாஸனனையும் அஸ்வத்தாமாவையும் துரியோதனனையும் சகுனியையும் கிருபாசாரியரையும் மத்ரராஜனான சல்யனையும் கிருதவர்மாவையும் இன்னும் மற்ற யுத்தவீரர்களையும் அவ்வாறே எங்களுடைய ஸ்வரூபத்தையும் பூமியையும் திக்குக்களையும் நாங்கள் காணவில்லை. நெருங்கியதும் பயங்கரமுமான புழுதியாகிறமேகமானது நான்குபக்கங்களிலுந் தோன்றியபொழுது ராக்ஷஸர்கள் இரவு வந்துவிட்டதுபோலவே எண்ணினார்கள். கௌரவர்களும் பாஞ்சாலர்களும் பாண்டவர்களும் அறியப்படவில்லை. அவ்வாறே திக்குக்களும் ஆகாயமும் பூமியும் ஸமமானதரையும் மேடுபள்ளமுள்ளதரையும் காணப்படவில்லை. வெற்றியில் விருப்பமுள்ளவர்களான மனிதர்கள் அப்பொழுது யுத்தரங்கத்தில் பிறராலும் அல்லது தம்மைச் சேர்ந்தவர்களாலும் கையில் அகப்பட்டவர்களைக் கொன்றார்கள். மேலேகிளப்பப்பட்ட புழுதியானது இரத்தம் சிந்திப் பூமிநனைவதாலும் விரைவாகக் காற்றுவீசுவதாலும் தணிந்துவிட்டது. அந்த இடத்தில் யானைகளும் குதிரைகளும் ரதவீரர்களும் காலாட்களும் இரத்தத்தால் நனைக்கப்பட்டுப் பாரிஜாதவனங்கள்போல் விளங்கினார்கள். பிறகு, துரியோதனன் கர்ணன் துரோணர் துச்சாஸனன் ஆகிய இந்த நான்குரதிகர்களும் நான்கு பாண்டவவீரர்களோடு போர்புரிவதற்கு எதிர்த்தார்கள். துரியோதனன் தன் தம்பியான துச்சாஸனனோடுசேர்ந்து நகுலஸஹதேவர்களோடு போர்புரிந்தான். கர்ணன் விருகோதரனோடும் அர்ஜுனன்

துரோணரோடும் எதிர்த்துப் போர்புரிந்தார்கள். ரதிகர்கள் கோரமாயுள்ளதும் மிக்க ஆச்சரியகரமானதும் தேவாஸுராயுத்தத்திற் கொப்பானதும் உக்கிரர்களாயிருக்கிற ரதிகசிரேஷ்டர்களுடைய எதிர்ப்பினுலுண்டானதும் மனிதர்களாற்செய்ய இயலாததும் விசித்ரமான ரதகதிகளோடுகூடியதும் விசித்ர ரதங்களால் நெருங்கியதும் விசித்ரயுத்தம் செய்கிறவீரர்களால் நடத்தப்படுகின்றதுமான விசித்ரயுத்தத்தைக் கண்டார்கள். முயற்சியுடையவர்களும் ஒருவரையொருவர் ஜயிக்கக் கருதி வல்லமையை வெளிப்படுத்துகின்றவர்களுமான அந்த வீரர்கள் வர்ஷாகாலத்தில் மேகங்கள் பொழிவதுபோல் அம்புமழைகளைப் பொழிந்தார்கள். சூரியன்போலப் பிரகாசிக்கின்ற ரதங்களின்மீது வீற்றிருக்கும் அந்தப் புருஷசிரேஷ்டர்கள் சலிக்கின்ற மின்னல்களுடன்கூடின சரத்காலத்து மேகங்கள்போல் விளங்கினுர்கள். மகாராஜரே! கோபமும் (பகைவர்செயலைப்) பொருமையுங்கொண்டவர்களும் ஒருவரையொருவர் மிஞ்சவேண்டுமென்னும் நாட்டமுள்ளவர்களும் பெரிதானவில்லைக் கையில்தாங்கியவர்களும் முயற்சிசெய்பவர்களுமான விற்போரிற்சிறந்த அந்த யுத்தவீரர்கள் மதங்கொண்டயானைகள்போலவும் காளைகள்போலவும் ஒருவரையொருவருர் எதிர்த்துத்தாக்கினுர்கள். மன்னரே! யுத்தகளத்தில் எல்லாமகாரதர்களும் ஒரேஸமயத்தில் சிதறும்படி செய்யப்படவில்லையாதலால் ஒருவருக்கும் முடிவுக்காலம்வாமலிருக்கும் ஸமயத்தில் தேகம் அழிவதில்லையென்பது நிச்சயம். அறுத்துத் தள்ளப்பட்டகைகளாலும் கால்களாலும் குண்டலங்களோடுகூடினதலைகளாலும் விற்களாலும் பாணங்களாலும் ப்ராஸங்களாலும் கத்திகளாலும் கோடாலிகளாலும் பட்டாக்கத்திகளாலும் நாளீகங்களாலும் சிறுநாராசங்களாலும் நகரங்களாலும் சக்திகளாலும் தோமரங்களாலும் தீட்டப்பட்டவைகளும் பற்பலவித வடிவமுள்ளவைகளுமான மற்ற உத்தமமான ஆயுதங்களாலும் ஆச்சர்யகரமான பற்பலவிதவடிவமுள்ள கவசங்களாலும் உடைக்கப்பட்ட விசித்திரமானரதங்களாலும் கொல்லப்பட்டயானைகளாலும் குதிரைகளாலும் ரதிகர்களை இழந்தவைகளும் மலைபோன்றவைகளும் யுத்தவீரர்களும் த்வஜங்களுமழிக்கப்பட்டவைகளும் சூன்யமானவைகளும் பாகர்களையிழந்து பயந்து காற்றுப்போல் ஓடுகின்றகுதிரைகளால் ஆங்காங்கு அடிக்கடி இழுக்கப்படுகின்றவைகளுமானதேர்களாலும் அலங்கரிக்கப்பட்டவர்களும் கொல்லப்பட்டவர்களுமான வீரர்களாலும் விசிறிகளாலும் கவசங்களாலும் தள்ளப்பட்ட த்வஜங்களாலும் குடைகளாலும் ஆபரணங்களாலும் ஆடைகளாலும் நல்ல வாஸனையுள்ள மாலைகளாலும் ஹாரங்களாலும் கிரீடங்களாலும்

மகுடங்களாலும் தலைப்பாகைகளாலும் கிண்கிணிகளுடைய கூட்டங்களாலும் மார்பில் தரிக்கின்றமணிகளாலும் ஸ்வர்ணாபரணங்களாலும் சூடாமணிகளாலும் அந்த யுத்தபூமியானது அச்சமயத்தில் நக்ஷத்திரங்களுடையகூட்டங்களால் அலங்கரிக்கப்பட்ட ஆகாயம்போலிருந்தது. பிறகு, பொறுமையுள்ளவனும் கோபமுள்ளவனுமான நகுலனோடு பொறுமையுள்ளவனும் கோபமுள்ளவனுமான துரியோதனனுக்கு யுத்தநிமித்தமான எதிர்ப்பு உண்டானது. பிறகு, நகுலன் ஸந்தோஷத்துடன் நூற்றுக்கணக்கான பாணங்களை இறைத்துக்கொண்டு, உமது புத்திரனை இடப் [1] பக்கத்திலிருப்பவனாகச் செய்தான். அப்பொழுது பெரியசப்தம் உண்டாயிற்று. சத்துருக்களைத் தவிக்கச்செய்பவனான துர்யோதனன் அதிகுரோதமுள்ள சத்துருவினால் யுத்தத்தில்செய்யப்பட்ட அந்த அபஸவ்யமானகார்யத்தைப் பொறுக்கவில்லை. மகாராஜரே! உம்முடையகுமாரனான துரியோதனராஜன் நகுலன்செய்ததற்கு விரைவாகப் பிரதிசெய்யத்தொடங்கினான். பிறகு, செய்தகாரியத்திற்குப் பிரதிசெய்யஎண்ணங்கொண்டவனும் அபஸவ்யமாக (இடமாகச்) சுற்றி வருகின்றவனுமான உம்முடையபுத்திரனைச் சித்திரமானமார்க்கங்களையறிந்தவனும் ஒளியுள்ளவனுமானநகுலன் தடுத்தான். அந்த நகுலன் நான்குபக்கங்களிலும் பாணஸமூகத்தினால் தடுத்துத் துன்பம்செய்து அவனைப் புறங்காட்டியோடும்படி செய்தான். அதனைப் போர்வீரர்கள் கொண்டாடினார்கள். நகுலன் எல்லாத்துக்கங்களையும் உம்முடைய அவ்விதமான துராலோசனையையும் நினைத்து, உமது புத்திரனைப் பார்த்து, 'நில், நில்' என்று கூறினான்.

---

## நூற்றெண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணர் அர்ஜுனன் முதலானவீரர்களுக்கு ஸங்குலயுத்தம்.)

பிறகு, துச்சாஸனன் கோபங்கொண்டு அதிகமான ரதவேகத்தால் பூமியை நடுங்கும்படி செய்கின்றவன்போல் ஸஹதேவனை எதிர்த்து ஸமீபத்தில் ஓடினான். பகைவர்களை நாசம்பண்ணுகிறவனான மாத்ரீபுத்திரன், அவன் விரைவாக வந்துகொண்டிருக்கும்பொழுதே அவன்ஸாரதியினுடைய தலைப்பாகையை யணிந்ததலையை அறுத்தான்.

---

[1] சத்துருவை அப்பிரதக்ஷிணமாகச்சுற்றினால் சத்துரு தோல்வியடைந்ததாகக் குறிப்பு.

ஸஹதேவனால் ஸாரதியின் தலை வேகமாக அறுக்கப்பட்டதைத் துச்சா ஸனனாவது ஸைனிகன் ஒருவனாவது அறியவில்லை. இழுத்துப்பிடிக் கப்படாமையால் குதிரைகள் தம்மிஷ்டப்படி சென்றபொழுது துச்சா ஸனன் தேர்ப்பாகன் இறந்துவிட்டதை யறிந்துகொண்டான். தானே குதிரையோட்டுவதில் ஸமர்த்தனும் ரதிகர்களுள் ஸ்ரேஷ்டனுமான அந்தத்துச்சாஸனன் யுத்தத்தில் குதிரைகளைத் தானேயிழுத்துப் பிடித்து நடத்திக்கொண்டு சுறுசுறுப்பாகவும் விசித்திரமாகவும் அழ காகவும் யுத்தம்செய்தான்; ஸாரதிகொல்லப்பட்ட ரதத்தோடு பயமற்ற வன்போல் யுத்தபூமியில் ஸஞ்சரித்ததாகிய துச்சாஸனனுடைய செய் கையை யுத்தகளத்தில் நம்மைச்சேர்ந்தவர்களும் பிறரும் புகழ்ந்தார் கள். ஸஹதேவனோ அந்தக்குதிரைகளின்மீது கூர்மையான பாணங் களை இறைத்தான். அந்தக்குதிரைகள் அம்புகளால் பீடிக்கப்பட்டு ஆங்காங்கு விரைவாக ஓடின. அவன் கடிவாளங்களைக் கையில்பிடித் திருப்பதினால் வில்லைக் கீழேவைத்தான். தனுஸினாலே பாணப்பிர யோகம் செய்கின்றகாலத்தில் கடிவாளங்களை மறுபடியும் விட்டான். இவ்வாறானஸமயங்களில் மாத்ரீபுத்திரன் பாணங்களை அவன்மீது இறை த்தான். உம்முடைய குமாரனையடைந்து பாதுகாக்க எண்ணங்கொண்ட கர்ணன் அதனிடையில் வந்துசேர்ந்தான். விருகோதரன் பிறகு மிக்க அவதானத்துடன் காதுவரையில் இழுத்துவிடப்பட்ட மூன்றுபல்லங் களாலே கர்ணனை இருகைகளிலும் மார்பிலுமடித்து ஸிம்மநாதமும் செய்தான். பிறகு, அடிக்கப்பட்ட ஸர்ப்பம்போல அந்தக்கர்ணன் திரும்பிவந்து கூர்மையுள்ள அம்புகளை இறைத்துக்கொண்டு பீமனைத் தடுத்தான். அப்பொழுது பீமனுக்கும் ராதேயனுக்கும் கைகலந்தயுத் தம் நடந்தது. ரிஷபங்கள்போலக் கர்ஜிக்கின்றவர்களும் கண்களைப் புரட்டி விழிக்கின்றவர்களுமான அவ்விருவரும் பரபரப்புடனும் அதிக வேகத்துடனும் ஒருவரையொருவர் எதிர்த்தார்கள். அந்த யுத்தகளத் தில் போரில் வல்லவர்களான அவ்விருவரும் மிகநெருங்கி விட்ட பொழுது அம்புகளை எய்யமுடியாமையால் (அவர்களுக்குக்) கதாயுத்த மானது தொடங்கியது. அரசரே! பீமஸேனனோ கதையினாலே கர்ண னுடைய ரதத்தின்ஏர்க்காலை நூறுதுண்டாகச் சிதறும்படி அடித் தான். அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, வீர்யமுடையவனான ராதேயன் கதையைச்சுழற்றிப் பீமனுடைய ரதத்தின்மீது எறிந்தான். அந்தக்கதையைப் பீமன் தன்கதையினால் பிளந்தான். பிறகு, பீமன் மறுபடியும் பெரிதானகதையை அதிரதபுத்ரனான கர்ணன்மீது எறிந் தான். கர்ணன் அந்தக்கதையை உறுதியான புங்கமுள்ளவைகளும்

நல்ல வேகமுள்ளவைகளுமான அனேக பாணங்களால் திருப்பியடித்தான். அவ்வாறு கர்ணபாணங்களால் திருப்பி அடிக்கப்பட்ட அந்தக் கதை மந்திரங்களால் திருப்பிவிடப்பட்ட ஸர்ப்பம்போலப் பீமனையே மீண்டு வந்தடைந்தது. அந்தக்கதையானது திரும்பிவந்து அடித்ததினாலே பீமனுடைய பெரிய த்வஜமானது கீழேவிழுந்தது. பீமனுடைய ஸாரதியும் கதையினாலடிக்கப்பட்டு மூர்ச்சையடைந்தான். மகாபலசாலியான அந்தப்பீமஸேனன் கோபமேலிட்டுக் கர்ணன்மீது எட்டுப்பாணங்களைப் பிரயோகித்தான். பாரதரே! சத்துருவீரர்களைக் கொல்லுகின்றவனான பீமஸேனன் சிரித்துக்கொண்டே தீட்டப்பட்ட கூர்மையான அம்புகளாலே அவனுடைய த்வஜத்தையும் வில்லையும் அம்புப்பெட்டியையும் அறுத்தான். பிறகு, கர்ணனும் ஸ்வர்ணமயமான பின்புறமுள்ளதும் நாட்டமுடியாததுமான வேறுவில்லைக் கையிலெடுத்துப் பெரியபாணங்களாலே காடிநிறமுள்ள அவனுடைய குதிரைகளையும்கொன்று இருபக்கத்திலுமுள்ள ஸாரதிகளையும் விரைவாகக் கொன்றான். பகைவர்களை அடக்குபவனான அந்தப்பீமன் தேரிழந்தவனாகி மலையினுடைய சிகரத்தின்மீது ஸிம்மமானது பாய்ந்தேறுவது போல நகுலனுடைய ரதத்தின்மீது பாய்ந்து ஏறிக்கொண்டான். ராஜேந்திரரே! அவ்வாறே மகாரதர்களும் ஆசார்யசிஷ்யர்களுமான துரோணரும் அர்ஜுனனும் யுத்தத்தில் செய்ததற்குப் பிரதிசெய்துகொண்டு ஹஸ்தலாகவத்தினால் பாணத்தைத் தொடுப்பது விடுப்பது இவைகளாலும் ரதங்களுடைய ஸஞ்சாரத்தாலும் மனிதர்களுடைய கண்களையும் மனங்களையும் மயங்கச்செய்துகொண்டு விசித்திரமாக யுத்தம் செய்தார்கள். நம்மைச்சேர்ந்த எல்லா யுத்தவீரர்களும் அவ்வாறே சத்துருவீரர்களும் குருசிஷ்யர்களுக்கு ஏற்பட்டதும் முன்பார்க்கப் படாததுமான அந்தயுத்தத்தைப் பார்த்துக்கொண்டு (போர்புரியாமல்) ஓய்ந்திருந்தார்கள். சேனையின் மத்தியில் விசித்திரமான ரதகதிகளில் சென்றுகொண்டு அவ்வீரர்களிருவரும் அப்பொழுது ஒருவரையொருவர் இடமாகச்செல்வதற்கு விரும்பினார்கள். அங்குள்ள யுத்தவீரர்கள் ஆச்சரியத்துடன் அவ்விருவருடைய பராக்கிரமத்தையும் பார்த்தார்கள். மகாராஜரே! மாம்ஸத்தைப்பற்றி ஆகாயத்தில் இரண்டு கழுகுகளுக்குச் சண்டைநேர்ந்ததுபோல அந்தத்துரோணருக்கும் பாண்டவனுக்கும் பெரிதானயுத்தம் நேர்ந்தது. துரோணர் குந்திபுத்திரனை ஜயிக்கவேண்டுமென்கிற எண்ணத்தினால் எந்தஎந்தக் காரியத்தைச் செய்தாரோ அவருடைய அந்த அந்தச்செய்கையைப் பாண்டவன் சிரித்துக்கொண்டே விரைவாக நாசஞ்செய்தான். பிறகு, அஸ்திரமார்க்கங்

களில் ஸமர்த்தரான துரோணர் பாண்டவனை மீறுவதற்கு இயலாமற் போனபொழுது சிறந்த அஸ்திரத்தை வெளிப்படுத்தினார். துரோண ருடைய வில்லினின்று அடிக்கடி விடப்படுகின்ற ஐந்திராஸ்திரத்தை யும் பாசுபதாஸ்திரத்தையும் த்வாஷ்டிராஸ்திரத்தையும் வாயவ்யாஸ் திரத்தையும் வாருணாஸ்திரத்தையும் தனஞ்சயன் நாசஞ்செய்தான். பாண்டவன் தன் அஸ்திரங்களாலே அவருடைய அஸ்திரங்களை முறைப் படி நாசம்செய்தபொழுது அவர் சிறந்த திவ்யாஸ்திரங்களைப் பார்த் தன்மீது இறைத்தார். துரோணர் வெற்றியடைய வேண்டுமென்கிற விருப்பத்தோடு பார்த்தனின்பொருட்டு எந்தஎந்த அஸ்திரத்தைப் பிரயோகித்தாரோ அந்தஅந்த அஸ்திரத்தை நாசம் செய்யும்பொருட்டு அர்ஜுனன் அந்தஅந்தக் காரியத்தைச் செய்தான். முறைப்படி திவ் யாஸ்திரங்களும் அர்ஜுனனால் நாசம்செய்யப்படும்பொழுது அந்தத் துரோணர் அர்ஜுனனை மனத்தினாலே புகழ்ந்தார். பாரதரே! பகை வரைவாட்டுகின்ற துரோணர் அந்தச்சிஷ்யனால் பூமியிலுள்ள சஸ்திரங் களை அறிந்தவர்களான எல்லாச்சூரர்களையுங்காட்டிலும் தம்மை மேன் மைபெற்றவரென்று எண்ணினார். மகாவீர்யமுடையவர்களான சூரர்களு டைய மத்தியில் முயற்சியுடையவரான துரோணர் பிருதாபுத்திரனை அர்ஜுனனாலே அவ்வாறு தடுக்கப்பட்டும் அர்ஜுனன்விஷயத்தில் மிகுந்த பிரீதியைப் பாராட்டினார். பிறகு, ஆகாயத்தில் தேவர்களும் ஆயிரமாயிரமாகக் கந்தர்வர்களும் ரிஷிகளும் ஸித்தர்களுடைய கூட் டங்களும் (யுத்தத்தைப்) பார்க்கவேண்டுமென்ற விருப்பத்தோடுவந்து நின்றார்கள். அப்ஸரஸுகளால் நான்குபுறத்திலும் சூழப்பட்டதும் யக்ஷர்களாலும் கந்தர்வர்களாலும் நிரம்பியதும் காந்தியுடன் கூடியது மான ஆகாயமானது மறுபடியும் மேகத்தினாலே வியாபிக்கப்பட்டது போலாகியது. அரசரே! அந்தஇடத்தில் மறைவானசொற்கள் அடிக்கடி உண்டாயின; அவை துரோணபார்த்தர்களுடைய ஸ்தோத்திரத்தோடு கூடியவைகளாகக் கேட்கப்பட்டன. பிரயோகிக்கப்படுகின்ற அஸ்திரங் கள் பத்துத்திக்குக்களையும் பிரகாசிக்கச்செய்யும்பொழுது அந்த இடத் தில் வந்திருக்கின்ற ஸித்தர்களும் ரிஷிகளும், 'இந்த யுத்தமானது மனுஷ்யஸம்பந்தம்பெற்றதுமன்று; ஆஸுரமுமன்று; ராக்ஷஸமுமன்று; தெய்வமுமன்று; கந்தர்வஸம்பந்தமுமன்று; நிச்சயமாகவே இது உத் தமமான பிரம்மஸம்பந்தம்பெற்றது. இந்த யுத்தம் விசித்திரமானது; ஆச்சரியகரமானது; நம்மால் பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டது மில்லை. ஆசார்யர் பாண்டவனை அதிக்கிரமித்திருக்கிறார். பாண்டவனும் துரோணரை அதிக்கிரமித்திருக்கிறான். இவ்விருவருடைய தாரதம்மிய

மும் வேறொருவனாலும் காணவியலாதது. ருத்திரானவர் தம் தேகத்தை இரண்டாகச்செய்துகொண்டு தம்மோடு தாமே போர்புரிந்தால் அப்படிப்பட்ட யுத்தத்தோடு இது ஒப்பிடுவதற்குத் தகுந்தது. வேறு யுத்தத்தோடு இது ஒப்பிடத்தகாதது. ஆசார்யரிடத்தில் ஞானமொன்று நிலைபெற்றிருக்கின்றது. பாண்டவனிடத்தில் ஞானம் பலம் (இரண்டும்) இருக்கின்றன. ஆசார்யரிடத்தில் சௌர்யம் ஒன்று நிலைபெற்றிருக்கின்றது. பாண்டவனிடத்தில் பலம் சௌர்யம் (இரண்டும்) நிலைபெற்றிருக்கின்றன. மகாவில்லாளிகளான இவ்விருவரும் யுத்தத்தில் சத்துருக்களால் நாசம்செய்ய முடியாதவர்கள். விரும்புவார்களாயாகில் இவ்விருவரும் தேவர்களோடுகூடின உலகத்தையே நாசம்செய்வார்கள்' என்று சொன்னார்கள். மகாராஜரே! புருஷசிரேஷ்டர்களான அவ்விருவரையுங் கண்டு நான்கு பக்கங்களிலும் மறைந்து நிற்கின்ற பிராணிகளும் வெளிப்படையாக நிற்கின்ற பிராணிகளும் இவ்வாறே கூறின. மகாராஜரே! எப்பொழுது பாண்டவன் துரோணரை மீறினனோ அப்பொழுது மகா புத்திசாலியான துரோணர் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தார். ராஜரே! மகாயுத்தத்தில் பிரயோகிக்கப்பட்டதும் கோரரூபமாயுள்ளதுமான அந்தப் பிரம்மாஸ்திரம் யுத்தத்தில் பார்த்தனையும் மறைந்துகொண்டிருக்கின்ற பிராணிகளையுங்கூடத் தவிக்கச்செய்தது. பிறகு, பர்வதங்களோடும் வனங்களோடும் மரங்களோடும் கூடின பூமியானது நடுங்கியது. நதிகளும் ஒரு க்ஷணகாலம் எதிர்நோக்கி ஓடின. பெய்க்காற்றும் வீசியது. ஸமுத்ரங்களும் கலங்கின. மகாபலசாலியான துரோணராலே பிரம்மாஸ்திரம் எடுக்கப்பட்டவுடனே, கௌரவ பாண்டவ சேனைகளுக்கும் எல்லாப்பிராணிகளுக்கும் அதிகபயம் உண்டாகியது. ராஜேந்திரரே! பிறகு, பார்த்தனும் மதிமயங்காதவனாக அந்தப் பிரம்மாஸ்திரத்தைப் பிரம்மாஸ்திரத்தினாலேயே முறிய அடித்தான். பிறகு, எல்லாம் சாந்தமாகியது. அவ்விருவருள் ஒருவராலும் அந்த யுத்தத்தின் கரைகாணப்படாதபொழுது அந்த யுத்தம் ஸங்குலயுத்தத்தினால் குழப்பமடையும்படி செய்யப்பட்டது. அரசரே! துரோணர் பாண்டவன் இருவருக்கும் நெருங்கின கைகலந்தயுத்தம் மறுபடியும் உண்டாகவே, ஒரு வஸ்துவும் அறியப்படவில்லை. துரோணர் யுத்தத்தில் பார்த்தனைவிட்டுப் பாஞ்சாலர்களைக்குறித்து ஓடினார். அர்ஜுனனும் யுத்தத்தில் துரோணரைவிட்டுவிட்டுக் கௌரவர்களைத் துரத்தியடித்தான். அரசரே! பிறகு, மகாயுத்தத்தில் அவ்விருவராலும் விடப்பட்ட பாணஸமூகங்களாலே நிழலுள்ளதாக்கப்பட்ட கைகலந்த யுத்தமானது எல்லா உலகத்திற்கும் பயங்கரமாக விளங்கிற்று. ஆகாயம் மேகஸமூகங்கள்போன்ற பாணஸமூ

களாலே நான்கு பக்கத்திலும் வியாபிக்கப்படவே அப்பொழுது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஒரு பிராணியாவது ஸஞ்சரிக்கவில்லை.

---

## நூற்றுத்தொண்ணூறுவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகி துரியோதனன் முதலானவர்களுடைய ஸங்குலயுத்தம்.)

மகாராஜரே! யானைகளுக்கும் குதிரைகளுக்கும் மனிதர்களுக்கும் க்ஷயத்தை உண்டுபண்ணுகின்ற அந்த யுத்தம் அவ்வாறு நடக்கையில் துச்சாஸனன் திருஷ்டத்யும்னனோடு போர்புரிந்தான். [1] பொற்றேரில் வீற்றிருக்கின்றவனான அந்தத் திருஷ்டத்யும்னன் துச்சாஸனனுடைய அம்புகளால் பீடிக்கப்பட்டுக் கோபத்தால் உமது புத்திரனுடைய குதிரைகளின்மீது அம்புகளை இறைத்தான். மகாராஜரே! பார்ஷதனுடைய அம்புகளால் நிறைக்கப்பட்ட அவனுடைய அந்த ரதமானது ஒரு க்ஷணத்தில் துவஜத்தோடும் ஸாரதியோடும் கண்ணிற்குப் புலப்படவில்லை. ராஜேந்திரரே! துச்சாஸனனோ மகாபலசாலியான திருஷ்டத்யும்னனுடைய அம்புகளால் துன்பமடைவிக்கப்பட்டு அவனுடைய முன்னிலையில் நிற்பதற்குச் சக்தியற்றவனானான். அந்தப் பார்ஷதனும் பாணங்களால் துச்சாஸனனைப் புறங்காட்டி யோடும்படிசெய்து அனேக அம்புகளை வர்ஷித்துக்கொண்டு யுத்தத்தில் துரோணரையே எதிர்த்தான். பிறகு, ஹ்ருதிகனுடைய குமாரனான கிருதவர்மா பார்ஷதனை எதிர்த்தான். அந்த மூன்று ஸகோதரர்களும் இந்தக் கிருதவர்மாவைச் சூழ்ந்துகொண்டார்கள். புருஷசிரேஷ்டர்களான நகுல ஸஹதேவர்களிருவரும் அவனைப் பாதுகாத்துக்கொண்டு ஜ்வலிக்கின்ற அக்னிபோல் துரோணரைநோக்கி எதிர்த்துச்செல்லுகின்ற திருஷ்டத்யும்னனைப் பின்புறத்தில் அநுஸரித்துச்சென்றார்கள். மகாரதர்களான அவர்களெல்லோரும் (பகைவராக்கம்) பொறுதவர்களாகவும் பலத்துடன் கூடியவர்களாகவும் உயிரை விடத்துணிந்து யுத்தம் செய்தார்கள். வேந்தரே! சுத்தமான மனமுள்ளவர்களும் மாசற்றநடையுள்ளவர்களுமான அந்த வீரர்கள் ஸ்வர்க்கத்தை முன்னிட்டவர்களாக ஒருவரையொருவர் வெல்வதில் விருப்பங்கொண்டு சிறந்த யுத்தத்தைச்செய்தார்கள். ஜனாதிபரே!

---

[1] 'ருக்மரதாஸக்த:' என்பது மூலம். 'துரோணரை எதிர்க்க விரும்புகிறவன்' என்றும் சொல்லலாம்.

சுத்தமான வம்சமும் செய்கையுமுள்ளவர்களும் புத்தியுடையவர்களு மான அந்த வீரர்கள் உத்தமகதியை அடையஎண்ணித் தர்மயுத்தத் தைச் செய்தார்கள். அந்த ரணகளத்தில் முறைத்தவறும் இகழத்தக்க துமான யுத்தமே நடக்கவில்லை. இந்தயுத்தத்தில் (எதிர்ப்புறமாக வளை ந்துள்ள இரண்டு முட்களோடு கூடின) கர்ணியாவது (சிறியதாயிருப்ப தால் உடலில் பாய்ந்தபின் எடுக்கமுடியாததான) நாளீகமாவது (விஷத் தினால் நுனியில் பூசப்பட்ட) லிப்தகமாவது (முட்களும் கோலும் சேருமிடம் மெலிந்திருப்பதும் உடலில்பாய்ந்தபின் பிடுங்கினால் முட் கள் குடரில்தங்கக் கோல்மட்டும் வெளியே வருவதுமான) பஸ்திகமா வது ஸூசியாவது கபிசமாவது பசுவெலும்பினாலும் யானையெலும்பி னாலும் செய்யப்பட்ட அம்பாவது, சூளியாவது பலிசமாவது யமியா வது பாசகமாவது பிரயோகிக்கப்படவில்லை. மேலும், அந்த யுத்தத்தில் ஒன்றோடொன்று சேர்ந்ததாகவாவது துர்கந்தமுடையதாகவாவது வக்கிரமாகச் செல்லுகின்றதாகவாவது இருக்கின்றபாணம பிரயோகிக் கப்படவில்லை. எல்லாவீரர்களும நல்ல யுத்தத்தினாலே பரலோகங்களை யும் கீர்த்தியையுமடைய எண்ணங்கொண்டவர்களாக நேர்மையும் பரி சுத்தமுமான ஆயுதங்களை எடுத்துக்கொண்டார்கள். உம்முடைய நான்கு யுத்தவீரர்களுக்கும் அந்த மூன்று பாண்டவர்களோடு அப் பொழுது எல்லாத் தோஷங்களுமற்றதும் கைகலந்ததுமான யுத்தம் நடந்தது. அரசரே! திருஷ்டத்யும்னனே வீரர்களான உம்முடையரதிக ஸ்ரேஷ்டர்கள் நகுல ஸஹதேவர்களால தடுக்கப்பட்டதைப் பார்த்துச் சீக்கிரமாக அஸ்திரங்களைப் பிரயோகித்துக்கொண்டு துரோணரையெதி ர்த்தான். தடுக்கப்பட்ட அந்த நான்கு வீரர்களும் இரண்டு மலைக ளின் நடுவில் தடுக்கப்பட்டுச் சுழலுகின்ற காற்றுப்போலப் புருஷ ஸிம்மர்களான அவ்விருவருக்குமிடையில் தடைப்பட்டு நின்றார்கள். ரதிகசிரேஷ்டர்களான நகுல ஸஹதேவர்கள் (அவர்களுள்) இரண்டிர ண்டு ரதிகர்களோடு போர்புரிவதற்காக எதிர்த்தார்கள். பிறகு, திருஷ் டத்யும்னன் துரோணரை எதிர்த்தான். யுத்தத்தில் கெட்டமதங் கொண்டவனான த்ருஷ்டத்யும்னன் துரோணரைக்குறித்துச் செல்வ தையும் அந்தக் கௌரவபக்ஷத்து வீரர்கள் நகுல ஸஹதேவர்களால் தடுக்கப்பட்டதையுங்கண்டு அச்சமயத்தில் துரியோதனன் சத்துருக் களுடைய ரக்தங்களைப் பானம்பண்ணுகிற அம்புகளை இறைத்துக் கொண்டு அவர்களருகில் சென்றான். துரியோதனனை ஸாத்யகி மறு படியும் விரைவாக எதிர்த்தான். நரசிரேஷ்டர்களான அந்தக் கௌரவ னும் மாதவனும் பரஸ்பரம் அருகில்சென்று அட்டஹாஸம் செய்

இன்றவர்களும் பயமற்றவர்களும் பால்ய சரித்திரங்களை எல்லாவற்றையும் நினைத்துப் பிரீதியுள்ளவர்களுமாகி ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டும் அடிக்கடி மந்தஹாஸம் செய்துகொண்டும் போர்புரிய வாரம்பித்தார்கள். பிறகு, ராஜாவான துரியோதனன் தன்னுடைய நடையை அடிக்கடி நிந்தித்துக்கொண்டு பிரியஸகாவானஸாத்யகியைப் பார்த்து, 'சினிபுங்கவ! என்னைக்குறித்துநீயும் உன்னைக்குறித்துநானும் கணைகளைத் தொடுக்கிறோமாதலால் குரோதத்தையும் லோபத்தையும் மோகத்தையும் பொறுமையையும் க்ஷத்திரியர்களுடைய ஒழுக்கத்தையும் தேகபலத்தையும் நிந்திக்கவேண்டும். நீ எனக்குப் பிராணனைக் காட்டிலும் மிகப்பிரியமானவன். அவ்வாறே நானும் உனக்கு எப்பொழுதும் பிராணனைக்காட்டிலும் பிரியமானவன். நம்மிருவருக்கும் பால்யத்தில் நடந்த செய்கைகளெல்லாவற்றையும் நான் நினைக்கிறேன். அப்படிப்பட்ட நம்முடைய பால்ய சரிதங்களெல்லாம் இப்பொழுது ரணகளத்தில் பழையனவாகி விட்டன. ஸாத்வத! குரோதலோபங்களால் இப்பொழுது போரும் நடக்கிறது. வேறு என்னசொல்வது?' என்று கூறினான். ரணகளத்தில் அவ்வாறு சொல்லுகின்ற துரியோதனனைப் பார்த்து உத்தமமான அஸ்திரங்களை யறிந்தவனான ஸாத்யகி அட்டஹாஸம்செய்துகொண்டு கூர்மையான அம்புகளைக் கையிலெடுத்து, 'ராஜபுத்திர! இது ஸபையன்று; அரசனே! எந்த இடத்தில் நாமனைவரும் கூடி அப்பொழுது விளையாடினோமோ அந்த ஆசார்யருடைய வீடுமன்று' என்று சொல்ல, துரியோதனன், 'சினிபுங்கவ! பால்யத்தில்நடந்த நம்முடைய அப்படிப்பட்ட விளையாட்டு எங்கே சென்றுவிட்டது? பெரிதான இந்த யுத்தம் எங்கே வந்தது? காலமானது தாண்டத்தகாதது. இங்கு நாமெல்லோரும் ஒன்றுசேர்ந்து பொருளாசையால் யுத்தம்செய்கிறோம். பொருளாலும் பொருளாசையினாலும் நமக்கு யாதுபயன்?' என்று மொழிந்தான். அச்சமயத்தில் அவ்வண்ணம் பேசுகின்ற அரசனைப்பார்த்து ஸாத்யகி, 'துரியோதன! க்ஷத்திரிய தர்மம் எப்பொழுதும் இவ்வாறே ஏற்பட்டுவிட்டது. இச்சமயத்தில் ஆசார்யர்களைக்கூட (சிஷ்யர்கள்) எதிர்த்துப் போர்புரிகிறார்கள். ராஜனே! உனக்கு நான் பிரியனாகவிருந்தால் என்னைக் கொல். தாமதம்செய்யாதே. பரதரிற் சிறந்தவனே! உன்னிமித்தமாகப் புண்யமான லோகங்களை நானடைவேன். உனக்குள்ள சக்தியையும் பலத்தையும் என்னிடத்தில் விரைவாகக் காட்டு. நான் மித்திரர்களுக்கு நேரும் பெரிதான துயரத்தைப் பார்ப்பதற்கு விரும்பவில்லை' என்றான்.

இவ்வாறு ஸாத்யகி (துரியோதனனைப்பார்த்து) உரக்க அழைத்து வெளிப்படையாக மறுமொழிகூறி ஜாக்ரதையுள்ளவனுகி விரைவில் துரியோதனனை எதிர்த்தான். தன்விஷயத்தில் கருணையைப் பாராட்டவில்லை. அரசரே! வருகின்றவனும் மகா பாகுபலமுள்ளவனுமான சைனேயனை உம்முடைய குமாரன் அம்புகளை வாரியிறைத்துக்கொண்டு எதிர்த்தான். பிறகு, ஒன்றோடொன்று கோபங்கொண்டவைகளான யானைக்கும் ஸிம்மத்துக்கும் கோரமான யுத்தம் நேர்ந்ததுபோல, கௌரவசிரேஷ்டனுன துரியோதனனுக்கும் ஸாத்யகிக்கும் யுத்தம் தொடங்கியது. பிறகு, துரியோதனன் கோபங்கொண்டு யுத்தத்தில் கெட்டமதங்கொண்டவனுன ஸாத்யகியை முழுதும் இழுத்துவிடப்பட்ட பத்தம்புகளாலே திருப்பியடித்தான். ஸாத்யகியும் யுத்தத்தில் அந்தத் துர்யோதனனை அவ்வாருகவே ஐம்பது பாணங்களாலும் மறுபடியும் முப்பதுபாணங்களாலும் பத்துப்பாணங்களாலும் திருப்பியடித்தான். அரசரே! உம்முடைய புத்திரன் உரக்கச் சிரித்துக்கொண்டு யுத்தத்தில் ஸாத்யகியைப் பூர்ணமாக இழுத்துவிடப்பட்ட கூர்மையுள்ள முப்பதுபாணங்களால் அடித்தான். பிறகு இந்த ஸாத்யகியினுடைய பாணத்துடன்கூடிய வில்லை ஒரு க்ஷுராப்ரத்தினுல் இரண்டாக வெட்டியெறிந்தான். கைதேர்ந்தவனுன அந்த ஸாத்யகி பிறகு திடமான வேறுவில்லைக் கையிலெடுத்து உமது புத்திரன்மீது அம்பு வரிசையைத் தொடுத்தான். ராஜாவான துரியோதனன் தன்னைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தால் வேகத்துடன் வருகின்ற பாணஸமூஹத்தைப் பலவாருகத் துண்டாக்கினுன். பிறகு, ஜனங்கள் பெரிய கூச்சலிட்டார்கள். துரியோதனன் வேகமுள்ளவனுகிப் பொன்னுலமைந்த புங்கமுள்ளவைகளும் சாணைக்கல்லில் தீட்டப்பட்டவைகளும் காதுவரையில் இழுத்துவிடப்பட்டவைகளுமான எழுபத்துமூன்று பாணங்களால் துன்பமடையும்படி செய்தான். ஸாத்யகி பாணத்தைத் தொடுக்கின்ற அந்தத் துரியோதனனுடைய அம்புபூட்டிய வில்லை விரைவாக அறுத்து அம்புகளால் அவனையும் அடித்தான். மகாராஜரே! ஸாத்யகியினுடைய அம்புகளாலே பீடிக்கப்பட்ட துரியோதனன் மிக அடிக்கப்பட்டுத் துன்பத்தையடைந்து புறங்காட்டி ரதங்களினிடையில் திரும்பி ஓடினுன். உம்முடைய குமாரன் தேறுதல் அடைந்து பாணஸமூகங்களை ஸாத்யகியினுடைய ரதத்தின்மீது பிரயோகித்துக்கொண்டு அவனைநோக்கி மறுபடியும் எதிர்த்துவந்தான். அரசரே! அவ்வாறே ஸாத்யகியும் துரியோதனனுடைய ரதத்தின்மீது பாணங்களை ஓயாமல் பிரயோகம்செய்தான். அந்த யுத்தமானது மிக

நெருங்கிக் கைகலந்ததாக நடந்தது. அந்த யுத்தாங்கத்தில் பிராணிகளின்மேல் பிரயோகிக்கப்படுகின்றவைகளும் வந்து விழுகின்றவைகளுமான அம்புகளாலே பெரிய உலர்ந்த காடுகளில் காட்டுத்தீயினுடைய சப்தம் உண்டாவதுபோலப் பெரிய சப்தம் உண்டாகியது. அவ்விருவருடைய ஆயிரக்கணக்கான அம்புகளால் நன்றாக மூடப்பட்ட பூமியும் ஆகாயமும் அம்புகளால் உட்செல்லக் கூடாதவையாயின. தேராளிகளுட் சிறந்த ஸாத்யகி அந்தப் போரிலும் மீறியதைக் கண்டு கர்ணன் உம்முடைய குமாரனைப் பாதுகாக்க எண்ணி விரைவாக எதிர்த்தான். மகாபலசாலியான பீமஸேனன் அந்தக் கர்ணனை ஸகிக்காமல் அனேக பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு விரைவாக அவனை எதிர்த்தான். கர்ணன் சிரித்துக்கொண்டு கூர்மையுள்ள அவனுடைய பாணங்களை நாசஞ்செய்து, அம்புகளால் அவனுடையவில்லையும் அம்புகளையும் துண்டாக்கி, ஸாரதியையும் கொன்றான். பாண்டுபுத்திரனும் மகாபலசாலியுமான பீமஸேனனோ அதிக குரோதமுள்ளவனாகிக் கதையைக் கையிலெடுத்து யுத்தத்தில் பகைவனுடைய த்வஜத்தையும் வில்லையும் ஸாரதியையும் நன்றாக அடித்து அவனுடைய தேருருளையையும் பொடிசெய்தான். சக்கரம் உடைக்கப்பட்டரதத்தில் கர்ணன் சிறந்த மலைபோல் அசைவற்றிருந்தான். ஒருசக்கரத்துடன்கூடிய சூரியனுடைய ரதத்தை ஏழு குதிரைகள் இழுப்பதுபோல ஒரு சக்கரத்துடன்கூடிய கர்ணனுடைய அந்தரதத்தை நெடுநேரம் குதிரைகளிழுத்தன. கோபங்கொண்ட கர்ணனோ ரணகளத்தில் பற்பல பாணஸமூகங்களாலும் பற்பல சஸ்திரங்களாலும் பீமனையெதிர்த்துப் போர்புரிந்தான். பீமசேனனோ அதிக கோபங்கொண்டு கர்ணனோடு போர்புரிந்தான். அந்த யுத்தம் அவ்வாறு நடக்கும்பொழுது கோபங்கொண்ட தர்மபுத்திரர், புருஷசிரேஷ்டர்களான பாஞ்சாலர்களையும் புருஷசிரேஷ்டர்களான மாத்ஸ்யர்களையும் நோக்கி, 'எவர்கள் நமக்குப் பிராணன்களோ எவர்கள் நமக்குத்தலையோ எவர்கள் மகாரதர்களான நம்முடைய யுத்த வீரர்களோ அப்படிப்பட்ட இந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் தார்த்தராஷ்டிரர்களிடத்தில் விசேஷமாகப் போர்புரிகின்றனர். நீங்களெல்லோரும் மூடர்கள்போலப் புத்தியிழந்து ஏன் வீணாக நிற்கிறீர்கள்? நம்முடைய ரதிகர்கள் யுத்தம் செய்கிற இடத்திற்குச் செல்லுங்கள். நீங்கள் அனைவரும் மனக்கவலையற்று க்ஷத்திரியதர்மத்தை முன்னிட்டு ஜயிக்கின்றவர்களும் கொல்லப்படுகின்றவர்களுமாகி இஷ்டமானகதியை அடைவீர்கள். நீங்கள் ஜயித்து அதிக தக்ஷிணைகளுள்ள அனேக யாகங்களாலே தேவர்களைப் பூஜியுங்கள்; அல்லது, கொல்லப்பட்டுத் தேவர்களாகி நல்ல லோகங்களை அடையுங்கள்' என்று சொன்னார்.

அரசனால் ஏவப்பட்டு யுத்தஞ்செய்யப்போகிற மகாரதர்களான வீரர்கள் படையை நான்காகப்பங்கிட்டுக்கொண்டு விரைவாகத் துரோணரை எதிர்த்தார்கள். பாஞ்சாலர்களோ ஒரு பக்கத்தில் துரோணரைக் கூர்மையான பாணங்களாலே அடித்தார்கள். பீமஸேனனைத் தலைவனாக்கொண்ட மற்ற வீரர்களும் மற்றொருபக்கத்தில் துரோணரைச்சூழ்ந்துகொண்டார்கள். ஒழுங்கில்லாதவர்களும் மகாரதர்களுமான பீமன் நகுலன் ஸஹதேவன் என்கிற மூன்று பாண்டுபுத்திரர்கள் இருந்தார்களே அவர்கள் தனஞ்சயனைக்குறித்து, 'அர்ஜுன! விரைவாக ஓடிவா. கௌரவர்களைத் துரோணரிடத்தினின்று விலக்கித்தள்ளு. பிறகு, பாஞ்சாலர்கள், ரக்ஷகர்கள் கொல்லப்பட்ட இந்தத் துரோணரைக் கொல்லுவார்கள்' என்று உரக்கக்கூவினார்கள். பிறகு, பார்த்தன் கௌரவவீரர்களுக்கருகில் விரைவாக ஓடிவந்தான். துரோணர் திருஷ்டத்யும்னனைத் தலைவனாகக்கொண்ட பாஞ்சாலர்களையே எதிர்த்தார். பாரதரே! வீரர்கள் (துரோணருடைய சேனைத்தலைமையின்) ஐந்தாவது தினத்தில் பலத்தால் விரைவாக அடித்துக்கொண்டார்கள்.

---

## நூற்றுத்தொண்ணூற்றொராவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(வாஸுதேவர், துரோணரை வெல்லும் விஷயத்தில் தர்மபுத்திரருக்கு உபாயம் கூறியதும், பீமனால் அஸ்வத்தாமாவென்கிற யானை கொல்லப்பட்டதைத் தர்மபுத்திரர் அஸ்வத்தாமா கொல்லப்பட்டாரென்று துரோணரிடம் சொல்லியதும்.)

முற்காலத்தில், யுத்தத்தில் கோபங்கொண்டவனான இந்திரன் அஸுரர்களுக்கு அழிவை யுண்டுபண்ணினதுபோலத் துரோணரும் பாஞ்சாலர்களுக்கு அதிகமான அழிவை உண்டுபண்ணினார். மகாராஜரே! துரோணருடைய அஸ்திரத்தினால் யுத்தத்தில் பீடிக்கப்படுகின்ற பலசாலிகளான மற்ற மகாரதர்கள் துரோணரிடத்தினின்று யுத்தத்தில் பயப்படவில்லை. மகாராஜரே! துரோணராலே போர்புரிவிக்கப்படுகின்ற மகாரதர்களான பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் யுத்தஞ்செய்துகொண்டே யுத்தத்தில் துரோணரையே எதிர்த்தார்கள். அம்புமழைகளாலே மூடப்பட்டு ஹிம்ஸிக்கப்படுகின்றவர்களான அந்தப்பாஞ்சாலர்களுடைய பயங்கரமான சப்தமானது எல்லாப்பக்கங்களிலும் தோன்றியது. மகாபலசாலியான துரோணராலே பாஞ்சாலர்கள்

யுத்தத்தில் கொல்லப்படவும் துரோணருடைய அஸ்திரமும் பிரயோ கிக்கப்படவும்; பாண்டவர்களுக்குப் பயம் வந்துசேர்ந்தது. மகாராஜரே! யுத்தகளத்தில் குதிரைகளுக்கும் யுத்தவீரர்களுக்கும் நேர்ந்த பெரிய அழிவைக்கண்டு பாண்டவர்கள் அப்பொழுது, 'பின்பனிக்காலத்தின் முடிவில் மிகவிளங்குகின்ற நெருப்பானது உலர்ந்தகாட்டை எரிப்பது போல் உத்தமமான அஸ்திரங்களை யறிந்தவரான துரோணர் நம்மனைவ ரையும் நாசம் செய்யாமலிருப்பாரா? யுத்தத்தில் இந்தத் துரோணரை ஒருவனாவது எதிர்த்துப் பார்ப்பதற்குஞ் சக்தியுள்ளவனல்லன். தர் மத்தையறிந்தவனான அர்ஜுனன் ஒருகாலும் இவரை எதிர்த்துப் போர்புரியான்' என்று சொல்லிக்கொண்டு ஜயத்தை விரும்பினார்களி ல்லை. துரோணருடைய அம்பினாலே பீடிக்கப்பட்டுப் பயந்தவர்களான குந்திபுத்திரர்களைக்கண்டு புகழில் முயற்சியுடையவரும் உத்தமமான புத்தியுடையவருமான ஸ்ரீகேசவர் அர்ஜுனனைநோக்கி, 'விற்பிடித்த வர்களுள் சிரேஷ்டரான இந்தத் துரோணர் வில்லுடனிருந்தால் யுத்தகளத்தில் இந்திரனுடன்கூடின தேவர்களாலும் எவ்விதத்தாலும் யுத்தத்தால் ஜயிக்கமுடியாதவர். யுத்தத்தில் இவர் ஆயுதங்களைக் கீழே வைத்துவிடுவாராகில் மனிதர்களாலே கொல்லத்தக்கவராவார். பாண்டவர்களே! பொற்றேருள்ள இந்தத் துரோணர் எல்லோரையும் யுத்தத்தில் கொல்லாமலிருக்கத்தக்க ஜயோபாயத்தைத் தர்மத்தை விட்டும் நீங்கள் செய்யவேண்டும். அஸ்வத்தாமா கொல்லப்பட்டால் இவர் யுத்தம் செய்யமாட்டாரென்பது என்னுடைய எண்ணம். அந்த அஸ்வத்தாமா யுத்தத்தில் கொல்லப்பட்டானென்று ஒரு மனிதன் இவருக்குச் சொல்லவேண்டும்' என்று சொன்னார். அரசரே! இந்த விஷயத்தைப்பற்றிக் குந்திபுத்திரனான தனஞ்சயன் பிரியப்படவில்லை. மற்றவர்களனைவரும் பிரியப்பட்டார்கள். அதிக பிரயாஸத்தினாலே யுதிஷ்டிரர் ஸம்மதித்தார். அரசரே! பிறகு, மஹாபாகுபலமுள்ளவ னான பீமஸேனன், சேனையிலுள்ள அஸ்வத்தாமா என்கிற பேருடை யதும் பகைவர்களை நாசம்செய்வதும் கோரமானதும் மாலவதேசத் தரசனான இந்திரவர்மாவினுடையதுமான பெரிய யானையைக் கதை யினாலே நாசம்செய்தான். பீமஸேனன் வெட்கத்தோடு யுத்தத்தில் துரோணரருகில் வந்து, 'அஸ்வத்தாமா கொல்லப்பட்டான்' என்று உரக்கக்கூவினான். அஸ்வத்தாமா என்கிற பெயரால் பிரஸித்திபெற்ற ஒரு யானை கொல்லப்பட்டது. பீமன் அதை மனத்தில் வைத்துக் கொண்டு அப்பொழுது பொய்வார்த்தையைச் சொன்னான். துரோ ணர் மிக்க அப்பிரியமான அந்தப் பீமஸேனனுடைய வார்த்தை

யைக்கேட்டு மணற்குன்று நீரில் கரைவதுபோல் மனத்தினாலே கரைந்து சரீரத்தளர்ச்சியடைந்தார். தம்குமாரனுடைய வீர்யத்தை யறிந்தவரான அந்தத் துரோணர், 'இது பொய்' என்று ஸந்தேகப்பட்டு 'அஸ்வத்தாமா கொல்லப்பட்டான்' என்கிற வார்த்தையைக்கேட்டும் தைரியத்தினால் அசைவற்றிருந்தார். அந்தத் துரோணர் தம்புத்திரர் பகைவர்களால் ஸகிக்க முடியாதவரென்றெண்ணி மனந்தெளிந்து க்ஷணத்திற்குள் தேறுதலடைந்தார். அவர் தமக்குமிருத்யுவாயிருக்கின்ற பார்ஷதனைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடன் எதிர்த்தோடிக் கூர்மையுள்ளவைகளும் கழுகிறகுகள் பூண்டவைகளுமான ஆயிரம் அம்புகளை இறைத்தார். யுத்தத்தில் இஷ்டப்படி ஸஞ்சரிக்கின்ற துரோணர்மீது இருபதினாயிரம் பாஞ்சால வீரர்கள் நான்குபக்கங்களிலும் அம்புகளாலே இறைத்தார்கள். மன்னரே! வர்ஷாகாலத்தில் மேகங்களால் மூடப்பட்ட சூரியனைப்போல அம்புகளால் நான்குபக்கங்களிலும் நிறைக்கப்பட்ட மகாரதரான துரோணரை நாங்கள் காணவில்லை. பிறகு, மகாரதரும் சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவரும் மிக்க கோபங்கொண்டவருமான துரோணர் பாஞ்சாலர்களுடைய அந்தப்பாணஸமூகங்களை நாசம்செய்து சூரர்களான அந்தப்பாஞ்சாலர்களைக் கொல்லுவதின்பொருட்டுப் பிரம்மாஸ்திரத்தைவெளியிட்டார். பிறகு, அவர் எல்லாப்படைகளையும் கொன்று கொண்டு பிரகாசித்தார்; மகாயுத்தத்தில் பாஞ்சாலர்களுடைய தலைகளையும் கீழேவிழும்படிசெய்தார்; அவ்வாறே, பரிகாயுதங்கள்போன்றவைகளும் பொற்பணிகளணிந்தவைகளுமான பாஞ்சாலர்களுடைய கைகளையும் அறுத்துக் கீழேதள்ளினார். யுத்தத்தில் அந்தப்பாரத்வாஜராலே கொல்லப்படுகின்ற அரசர்கள் காற்றினால் முறிக்கப்பட்ட மரங்கள்போலப் பூமியில் சிதறும்படி செய்யப்பட்டார்கள். பாரதரே! கீழேவிழுகின்ற யானைகள் குதிரைக்கூட்டங்கள் இவற்றின் மாம்ஸங்களாலும் ரக்தங்களாலும் சேறுள்ளதாகச் செய்யப்பட்ட யுத்தபூமியானது செல்லமுடியாத தோற்றமுள்ளதாகியது. துரோணர் பாஞ்சாலர்களுடைய இருபதினாயிரம் ரதிகர்களின் கூட்டங்களைக்கொன்று புகை தணிந்த அக்னிபோல யுத்தத்தில் ஜ்வலித்துக்கொண்டு நின்றார். பிரதாபசாலியான துரோணர் மீண்டும் கோபித்துக்கொண்டு அவ்வாறே ஒரு பல்லத்தினாலே வஸுதானனுடைய தலையைச் சரீரத்தினின்று அறுத்துக் கீழேதள்ளினார். மீண்டும் ஐந்நூறு மாத்ஸ்யர்களையும் ஆறாயிரம் ஸ்ருஞ்சயர்களையும் பதினாயிரம் யானைகளையும் கொன்று மறுபடியும் பதினாயிரம் குதிரைகளையும் கொன்றார். அவர் க்ஷத்திரியர்

களே அழிந்துபோவதின்பொருட்டு நிலைபெற்றிருக்கின்றதைக்கண்டு ரிஷிகள் அக்னியைமுன்னிட்டுக்கொண்டு சீக்கிரமாக அங்குவந்தார்கள். துரோணரைப் பிரம்மலோகத்தை அடைவிக்க எண்ணங்கொண்டவர்களான விஸ்வாமித்திரர், ஜமதக்னி, பாரத்வாஜர், கௌதமர், வஸிஷ்டர், கஸ்யபர், அத்ரி, ஸிகதர்கள், ப்ருஸ்னிகள், கர்க்கர்கள், வாலகில்யர்கள், மரீசிபர்கள், பிருகுக்கள், அங்கிரஸர்கள், மெலிந்த மேனியுடையவர்களான இன்னும் மற்றமகரிஷிகள் ஆகிய இவர்களெல்லோரும் யுத்தத்தில் பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற துரோணரை வந்து அடைந்து, 'துரோணரே! அதர்மத்தினால் நீர் யுத்தம்செய்தீர். உமக்கு இது மரணஸமயம்; யுத்தகளத்தில் ஆயுதத்தை எறிந்துவிட்டு இங்கு வந்திருக்கின்ற எங்களைப்பாரும். இதற்குமேல் மிக்க குரூரமான இச்செய்கையை நீர் மறுபடியும் செய்யவேண்டாம். வேதவேதாங்கங்களையறிந்தவரும் ஸத்தியத்திலும் தர்மத்திலும் பற்றுள்ளவரும் மேலும் பிராம்மணருமான உமக்கு இச்செய்கை தகாது. வீணாகாத அம்புகளையுடையவரே! ஆயுதத்தை எறிந்துவிடும்; சாஸ்வதமான வழியில் நில்லும். மனுஷ்யலோகத்தில் உமக்கு வஸிக்கவேண்டியகாலம் இப்பொழுது பூர்ணமாயிற்று. பூமியில் அஸ்திரங்களை யறியாதமனிதர்கள் உம்மால் பிரம்மாஸ்திரத்தால் கொளுத்தப்பட்டார்கள். பிராம்மணரே! நீர் இப்படிப்பட்ட காரியஞ் செய்தது நல்லதன்று. பிராம்மணரே! யுத்தத்தில் ஆயுதத்தைக் கீழே எறிந்துவிடும். துரோணரே! நீர் காலதாமதம் செய்யவேண்டாம். பிராம்மணரே! மிக்க பாவமான செய்கையை மறுபடியும் செய்யவேண்டாம்' என்று கூறினார்கள். இவ்வாறான அந்தரிஷிகளுடைய வார்த்தையைக்கேட்டும் பீமஸேனனுடையவார்த்தையை நினைத்தும் திருஷ்டத்யும்னனைப் பார்த்தும் அந்தத்துரோணர் யுத்தத்தில் பிரியமற்ற மனமுள்ளவரானார். ஸந்தேகங்கொண்டவரும் மனவருத்த மடைந்தவருமாயிருக்கின்ற துரோணர் குந்திபுத்திரரான யுதிஷ்டிரரைத் தம்புத்திரர் கொல்லப்பட்டாரா, அல்லது கொல்லப்படவில்லையா என்றுகேட்டார். மூவுலகங்களினுடைய தலைமை கிடைப்பதானாலும் ப்ருதாபுத்ரரானயுதிஷ்டிரர் எவ்விதத்தினாலும் பொய்சொல்ல மாட்டாரென்றே துரோணருக்கு நிச்சயமான எண்ணம். ஆதலால், பிராம்மணோத்தமரான துரோணர் யுதிஷ்டிரரை வினவினார். வேறுஒருவரையும் கேட்கவில்லை. அந்தப்பாண்டவரிடத்தில் துரோணருக்குப் பால்யமுதற்கொண்டு ஸத்யமிருக்கிறது என்ற எண்ணமுண்டு. பிறகு, கோவிந்தர், துரோணர் பூமியைப் பாண்டவஸம்பந்தமற்றதாகச் செய்யப்போகிறவரும் யுத்தம்செய்கின்ற வீரர்

களுக்குத் தலைவருமாயிருப்பதை அறிந்து மனவருத்தமுற்றுத் தர்ம ராஜரைப்பார்த்து, 'துரோணர் கோபத்துடன் பாதிப்பகல் யுத்தம் பண்ணுவாரானால் உமதுசேனை நாசமாகிவிடும். நான் ஸத்யமாகச் சொல்லுகிறேன். எங்களைத் துரோணரிடத்தினின்று நீர் காப்பாற்றவேண்டும். இந்த ஸமயம் ஸத்தியத்தைக்காட்டிலும் பொய்யே சிறந்தது. உயிர் பிழைப்பதற்காகப் பொய்சொல்லுகின்றமனிதன் பொய்க்குரியதோஷங்களால் தொடப்படமாட்டான்' என்று சொன்னார். அவ்விருவரும் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும்பொழுதே பீமஸேனன், 'மகாராஜரே! மகாத்மாவான துரோணரின் இவ்வித வதோபாயத்தைக்கேட்டு, உமது படையில் பிரவேசிக்கின்ற மாளவதேசத்தரசனை இந்திரவர்மாவினுடைய அஸ்வத்தாமா என்று பிரஸித்திபெற்ற இந்திரகஜம்போன்ற யானையானது யுத்தத்தில் என் பராக்கிரமத்தால் கொல்லப்பட்டது. பிறகு, யான் துரோணரைப்பார்த்து, 'பிராம்மணரே! 'அஸ்வத்தாமா கொல்லப்பட்டான். யுத்தத்தினின்று திரும்பும்' என்று சொன்னேன். புருஷஸ்ரேஷ்டரான இந்தத்துரோணர் நிச்சயமாக என்வார்த்தையை நம்பவில்லை. அப்படிப்பட்ட நீர் ஜயத்தில் விருப்பமுள்ள கோவிந்தருடைய வாக்கியங்களைக் கௌரவப்படுத்தும். அரசரே! 'அஸ்வத்தாமா மாண்டான்' என்று துரோணருக்குச் சொல்லும். மன்னரே! நீர் சொன்னால் பிராம்மணோத்தமர் ஒருகாலும் போர்புரியார். ஜனாதிபரே! நீர் உண்மையே பேசுகிறவரென்று இவ்வுலகத்தில் பிரஸித்திபெற்றிருக்கிறீர்' என்றுசொன்னான். மகாராஜரே! பீமஸேனனுடைய அந்தவார்த்தையைக்கேட்டும் கிருஷ்ணனுடைய வாக்கியத்தால் தூண்டப்பட்டும் அது அவ்விதமே ஆகவேண்டியிருப்பதாலும் சொல்லத்தொடங்கினார். அரசரே! பொய்சொல்வதாலுண்டான பயத்தில் மூழ்கினவரும் ஜயத்தில் பற்றுதலுள்ளவருமான யுதிஷ்டிரர், ('அஸ்வத்தாமா ஹதஃ குஞ்சரஃ' என்கிறவாக்கியத்தில்) 'அஸ்வத்தாமா கொல்லப்பட்டான்' என்னும் பொருளுள்ள சப்தத்தை உரக்கக்கூறினர்; 'குஞ்சரம்' என்கிற சொல்லை மெல்லச்சொன்னார். முன் அந்தத்தர்மபுத்திரருடைய ரதமானது பூமியில் நாலங்குலத்திற்கு மேலாக இருந்துகொண்டிருந்தது. இவ்வாறு அந்தத்தர்மநந்தனர் சொல்லியவுடனே, அவருடையகுதிரைகள் பூமியைத்தொட்டன. மகாரதரான துரோணர் யுதிஷ்டிரரிடத்தினின்று அந்தவார்த்தையைக்கேட்டுப் புத்திரசோகத்தால் தபிக்கப்பட்டவராகி உயிரில் ஆசையற்றவரானார். அரசரே! பகைவரைக்கொல்பவராகியதுரோணர் ரிஷிகளுடைய வாக்யத்தினாலே மகாத்மாக்களான பாண்டவர்கள்விஷயத்தில் தம்மைக் குற்றவாளிபோல் எண்ணுகிறவ

ராகவும், புத்திரன் கொல்லப்பட்டான் என்பதைக்கேட்டும் திருஷ்டத்யும்னனைப்பார்த்தும் மிக்க மனவருத்தமுற்றவராகவும், புத்தியின் நல்ல நிலைமையையிழந்தவராகவும் முன்போல் யுத்தம்செய்வதற்குச் சக்தியற்றவரானார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(திருஷ்டத்யும்னன் துரோணரைக் கொல்லமுயன்று அவரால் தோற்கப்பட்டதும், ஸாத்யகி அவனை விடுவித்ததும்.)

வென் துருபதராஜனாலே தேவர்களைப்பூஜித்து மகாயாகத்தில் நன்றாக ஜ்வலிக்கின்ற அக்னியினிடமிருந்து துரோணரை நாசம்பண்ணும் பொருட்டு அடையப்பட்டானோ அந்தப் பாஞ்சால ராஜகுமாரனான திருஷ்டத்யும்னன் மிக்க மனவருத்தமுடையவரும் துக்கத்தால்கெடுக்கப்பட்ட மனமுள்ளவருமான துரோணரைக்கண்டு விரைவாக ஓடிவந்தான்: மிக்க ஜ்வாலையுடன் கூடின நெருப்புப்போன்ற துரோணரைக் கொல்ல எண்ணங்கொண்ட அந்தப்பாஞ்சாலராஜகுமாரன் ஜயசீலமாயுள்ளதும் கோரமானதும் மேகத்தினிடிமுழக்கம்போன்ற சப்தமுள்ளதும் திடமான நாண்கயிறுள்ளதும் புதிதுமான ஒருவில்லையும் ஸர்ப்பத்துக்கொப்பான ஓரம்பையும் எடுத்துப் பிறகு அந்தவில்லில் நெருப்புக்கொப்பான அந்த அம்பைப் பூட்டினான். வட்டமாயிருக்கின்ற வில்லுக்கழிக்கும் நாண்கயிற்றுக்கும் நடுவிலுள்ள அந்த அம்பினுடைய ஸ்வரூபமானது சரத்காலத்தில் [1] பரிவேஷத்துடன் கூடிப் பிரகாசிக்கின்ற சூரியனுடைய உருவம்போலிருந்தது. பார்ஷதனால் தொடப்பட்டதும் ஜ்வலிக்கின்றது போலிருக்கின்றதுமான அந்த வில்லைக் கண்டு போர்வீரர்கள் (தங்களுக்கு) முடிவுக்காலம் வந்துவிட்டதாக எண்ணினார்கள். பிரதாபசாலியான பாரத்வாஜர் அவனால் பூட்டப்பட்ட அந்தப் பாணத்தைப்பார்த்துத் தம் தேகத்தையழிக்கவந்திருக்கின்ற முடிவுக்காலமென்றே எண்ணினார். ராஜேந்திரரே! பிறகு, ஆசாரியர் அந்தப் பாணத்தைத் தடுக்கும்விஷயத்தில் தகுந்த முயற்சியைச்செய்தார். அப்படிச் செய்தும் மகாத்மாவான அவருக்கு அஸ்திரங்கள் தோன்றவில்லை. அந்தத் துரோணருக்கு அம்புகளைப் பொழிவதிலேயே நாலு பகலும் ஓர் இரவும் கழிந்தன. அவருடைய அம்புகள் அன்றைப்

---

[1] ஸூர்ய சந்திரர்களைச்சுற்றி விழுகின்ற வட்டமான ரேகை.

பகலின் மூன்றுபாகத்தோடு நாசமடைந்தன. அந்தத் துரோணர் பாணங்களுடைய க்ஷயத்தையடைந்து புத்திரசோகத்தாலும் பீடிக்கப் பட்டவராகிப் பலவிதமான திவ்யாஸ்திரமந்திரங்கள் தெளிவாகத் தோற்றாததாலும் ரிஷிகளின் வாக்யத்தால் தூண்டப்பட்டதனாலும் ஆயுதங்களை விட்டுவிட நினைந்து முன்போலப் பூர்ணபலத்துடன் யுத் தம் செய்யவில்லை. மறுபடியும், துரோணர் திவ்யமானதும் அங்கிரஸி னுடைய அநுக்கிரஹத்தினால் கிடைத்ததுமான வேறுவில்லையும் பிரம தண்டம்போல் விளங்குகின்ற அம்புகளையும் எடுத்துத் திருஷ்டத்யும் னனை நோக்கி யுத்தம்செய்தார். பிறகு, அவர் பெரிதான சரமாரியை அவன்மீது இறைத்துக்கொண்டு மிகுந்த கோபமுண்டவராகக் கோப மூண்ட திருஷ்டத்யும்னனையடித்து அவனால் விடப்பட்ட அம்புகளைப் பாணங்களாலே நூறுதுண்டுகளாக்கி நாசம்செய்தார்; கூர்மையுள்ள பாணங்களால் திருஷ்டத்யும்னனுடைய வில்லையும் கொடியையும் ஸார தியையும் தள்ளினார். திருஷ்டத்யும்னன் சிரித்துக்கொண்டு மறுபடி யும் வேறுவில்லை எடுத்துக் கூர்மையான பாணத்தினால் துரோணரை மார்பில் திருப்பியடித்தான். நன்றாக அடிக்கப்பட்ட மகாவில்லாளி யான துரோணர் யுத்தத்தில் மதிமயங்காதவராகிக் கூர்மையுள்ள பல் லத்தினாலே திருஷ்டத்யும்னனுடைய வில்லை மறுபடியும் அறுத்தனர். அரசரே! (பிறரால்) எவ்விதத்திலும நெருங்கமுடியாதவரான துரோ ணர் திருஷ்டத்யும்னனுடைய கதையையும் கத்தியையுந்தவிர மற்றப் பலவிதமான பாணங்களையும் விற்களையும் மற்றுமுளள எல்லாவற் றையும் அறுத்தார். பகைவர்களை வாட்டுகிறவரான அவர் கோபங் கொண்டு உயிருக்கு நாசத்தையுண்டுபண்ணுகின்றவையும் சாணைக்கல் லில் தீட்டப்பட்டவையும் கூர்மையுள்ளவையுமான ஒன்பது பாணங் களாலே திருஷ்டத்யும்னனை அடித்தார். பிறகு, மகாரதனும் அளவிட முடியாத பலமுள்ளவனுமான திருஷ்டத்யும்னன் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்துக்கொண்டு தன் ரதத்தில் பூட்டியிருக்கின்ற குதிரைகளை அவருடைய குதிரைகளோடு எதிர்த்து நெருங்கச்செய்தான். பார தரிற் சிறந்தவரே! மிக நெருங்கினவைகளும் காற்றுப்போல வேக முள்ளவைகளுமான மாடப்புறாநிறமுள்ள குதிரைகளும் செந்நிறமான குதிரைகளும் அதிகமாகவிளங்கின. மகாராஜரே! வர்ஷாகாலத்தில் மின்னல்களுடன் சேர்ந்தவைகளும் முழங்குகின்றவைகளுமான மேகங் கள்போலப் போர்முனையில் ஒன்றையொன்று நெருங்குகின்ற அந்தக் குதிரைகள் பிரகாசித்தன. அளவிடமுடியாத வல்லமையுள்ள அந்தப் பிராம்மணர் திருஷ்டத்யும்னனுடைய ரதத்திலிருக்கின்ற ஏர்க்காற்

கட்டையும் சக்கரத்தின் கட்டையும் தேர்க்கட்டையும் நாசம்செய்தார். வில்லும் கொடியும் அறுக்கப்பட்டவனும் ஸாரதி கொல்லப்பட்டவனும் வீரனுமான பாஞ்சாலராஜகுமாரன் பெரிய ஆபத்தையடைந்து கதாயுதத்தையெடுத்துப் பிரயோகித்தான். மகாரதரும் ஸத்தியபராக்கிரமருமான துரோணர் கோபங்கொண்டு திருஷ்டத்யும்னனால் பிரயோகிக்கப்பட்ட அந்தக் கதையைக் கூர்மையான அம்புகளாலே நாசம்செய்தார். நரசிரேஷ்டனான திருஷ்டத்யும்னன், அந்தக் கதை துரோணரால் அம்புகளாலேயடிக்கப்பட்டதைக்கண்டு பளபளப்புள்ள ஒரு கத்தியையும் காந்தியுள்ள ஒரு கேடகத்தையும் கையிலெடுத்தான். அவ்வாறு கத்தியையும் கேடகத்தையுங் கையிலெடுக்கின்ற பாஞ்சால ராஜகுமாரன் மகாத்மாவும் ஆசார்ய முக்கியருமான துரோணருடைய வதத்திற்கு ஸமயம் வந்ததென்று ஸம்சயமற்று நன்றாக எண்ணினான். அவன் கத்தியையும் தேஜஸுள்ள கேடகத்தையுங் கையிலெடுத்துத் தன் ரதத்தினுடைய ஏர்க்கால்வழியாக ரதமத்தியிலிருக்கின்ற துரோணரிடம் சென்றான். மகாரதனான திருஷ்டத்யும்னன் ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்ய எண்ணி யுத்தத்தில் பாரத்வாஜருடைய மார்பைப் பிளக்கவிரும்பினான். அந்தத் திருஷ்டத்யும்னன் நுகத்தடியின் மத்தியிலும் அதன் கட்டிலும் குதிரைகளுடைய முதுகின் பின்பாகங்களிலும் நின்றான். அந்தச்செய்கையை ஸைனிகர்கள் புகழ்ந்தார்கள். துரோணர் நுகங்களின் வரிசைகளில் நிற்பவனும் சிவப்பான குதிரைகளின்மீது பாய்கின்றவனுமான திருஷ்டத்யும்னனுடைய (செய்கைகளில்) இடைநேரத்தைக் காணவில்லை. அது ஆச்சரியமாயிருந்தது. மாம்ஸத்தைவிரும்பிச் செல்லும் கழுகு வேகமாகப் பாய்வதுபோல துரோணரும் திருஷ்டத்யும்னனும் (ஒருவரையொருவர் எதிர்த்துப்) பாய்ந்தனர். துரோணர் சிவப்பான குதிரைகளை விட்டுவிட்டுத் திருஷ்டத்யும்னனுடைய புறாநிறமுள்ள குதிரைகளெல்லாவற்றையும் தாழைமடல்போன்ற முனையுள்ள சக்தியினால் ஒவ்வொன்றாகப் பிளந்தார். வேந்தரே! திருஷ்டத்யும்னனுடைய குதிரைகள் கொல்லப்பட்டுப் பூமியில் விழுந்தன. சிவப்புக்குதிரைகளோ (திருஷ்டத்யும்னனுடைய) தேரின் சிக்கலிலிருந்து விடுவிக்கப்பட்டன. பிராம்மணோத்தமராலே குதிரைகள் கொல்லப்பட்டதைக் கண்டு யுத்தவீரர்களுள் சிரேஷ்டனும் மகாரதனும் யஜ்ஞஸேன குமாரனுமான பார்ஷதன் பொறுக்கவில்லை. மன்னரே! கத்திகளை யேந்துகின்றவர்களுள் உத்தமனான திருஷ்டத்யும்னன் ரதத்தையிழந்து கத்தியை எடுத்துக் கருடன் ஸர்ப்பத்தை எதிர்ப்பதுபோலத் துரோணரை எதிர்த்தான். அரசரே! பாரத்வாஜ

ரைக் கொல்லவேண்டுமென்று எண்ணுகின்ற அந்தத் திருஷ்டத்யும்ன னுடைய ரூபமானது முற்காலத்தில் ஹிரண்யகசிபுவைக் கொல்லுங் காலத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் ரூபம்போல் விளங்கியது. கௌரவரே! அந்தப் பார்ஷதன் அப்பொழுது ரணகளத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு நானுவிதமான சிறந்த வாட்போரின் இருபத்தொருமுறைகளையும் காண் பித்தான். அந்தப் பார்ஷதன் கத்தியையுங் கேடகத்தையுங் கையி லெடுத்துக்கொண்டு ப்ராந்தம், உத்ப்ராந்தம், ஆவித்தம், ஆப்லுதம், ப்ரஸ்ருதம், ஸ்ருதம், பரிவ்ருத்தம், நிவ்ருத்தம், ஸம்பாதம், ஸமுதீர் ணம் என்கிற மார்க்கங்களையும் காண்பித்தான். அவன் யுத்தத்தில் துரோணரைக் கொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடன் கைத்தேர்ச்சி யினால் பாரதம், கௌசிகம், ஸாத்வதம் என்கிற (கத்திசுழற்றும்) வகை களையுங் காண்பித்துக்கொண்டு ஸஞ்சரித்தான். அந்தத் திருஷ்டத்யும் னன் கத்தியையும் கேடகத்தையுந்தரித்தது விசித்ரமான அவ்வித மார் க்கங்களில் ஸஞ்சரிக்கையில், யுத்தகளத்திலுள்ள யுத்தவீரர்களும் ஒன்று சேர்ந்திருக்கின்ற தேவர்களும் ஆச்சரியமடைந்தார்கள். பிறகு, அந்தப் பிராம்மணர் திருஷ்டத்யும்னனுடைய யுத்தத்தில் ஆயிரம் அம்புகளாலே கத்தியையும் நூறுபுள்ளிகளுள்ள கேடகத்தையும் தள் ளினார். பாரதரே! நெருங்கிநின்று செய்யும்போரில் ஸமீபத்திலுள்ள பகைவர்களை நன்றாக அடிக்கும் திறமைவாய்ந்த பன்னிரண்டங்குல நீளமுள்ள 'வைதஸ்திகம்' என்னும் பாணங்கள் துரோணரிடம் உள் ளன. அவை; க்ருபர் பார்த்தன் அச்வத்தாமா கர்ணன் பிரத்யும்னன் ஸாத்யகி அபிமன்யு இவர்களைத்தவிர மற்ற வீரர்களுக்கு இல்லை. பிறகு, ஆசார்யர் புத்திரன்போன்ற சிஷ்யனைக்கொல்லக் கருதிச் சிறந்த தென்று ஒப்புக்கொள்ளப்பட்ட உறுதியான பாணத்தைத் திருஷ்டத் யும்னன்மீது பிரயோகித்தார். ஸாத்யகி உம்முடைய புத்திரனும் மகாத்மாவான கர்ணனும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே கூர்மை யுள்ள பத்தம்புகளாலே அந்தப்பாணத்தை யறுத்து ஆசார்ய முக்கிய ராலே கவரப்பட்ட திருஷ்டத்யும்னனை விடுவித்தான். பாரதரே! ரத மார்க்கங்களில் ஸஞ்சரிக்கின்றவனும் ஸத்தியவிக்ரமனும் துரோணர் கர்ணன் கிருபர் இவர்களுடைய மத்தியை யடைந்திருக்கின்றவனுமான ஸாத்யகியை மகாத்மாக்களான கிருஷ்ணார்ஜுனரிருவரும் பார்த்தார் கள். எல்லாவீரர்களுடைய திவ்யாஸ்திரங்களையும் யுத்தத்தில் ஸாத்யகி நாசஞ்செய்வதைப்பார்த்து 'நல்லது, நல்லது' என்று சொல்லிக்கொண்டு அவ்விருவரும் புகழ்ந்தார்கள். பிறகு, தனஞ்சயன் கிருஷ்ணனைப்பார் த்து,'கேசவரே! பாரும்; ஸாத்யகி ஆசார்யருக்கும் ரதிகசிரேஷ்டருக்கும்

இடையில் விளையாடுகிறான். சத்துருவீரர்களை அழிக்கின்ற ஸாத்யகி என்னையும் மாத்ரிபுத்திரர்களையும் பீமனையும் ராஜாவான யுதிஷ்டிரரை யும் அதிகமாக ஆனந்தப்படுத்துகிறான். விருஷ்ணிகளுக்குக் கீர்த்தியை விருத்திபண்ணுகிறவனும் மஹாரதர்களை அணுகி விளையாடுகின்ற வனும் கர்வமற்றவனும் நல்ல பயிற்சியினால் யுத்தத்தில் ஸஞ்சரிக்கின் றவனுமான ஸாத்யகியை ஆச்சரியமடைந்தவர்களான ஸித்தர்களும் இந்தப் போர்வீரர்களும் பார்த்து ஸந்தோஷிக்கிறார்கள். யுத்தத்தில் ஸாத்யகி ஜயிக்கத்தகாதவனென்பதைக்கண்டு அவனுடைய செய்கைகளி னாலே இருபக்கத்திலுமுள்ள எல்லா வீரர்களும், 'நல்லது, நல்லது' என்று புகழ்ந்தார்கள்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## துரோணவதபர்வம் (தொடர்ச்சி.)

(துரோணருக்கும் திருஷ்டத்யும்னனுக்கும் யுத்தமும், துரோணர் பீமன் நிந்தித்ததைக்கேட்டு ஆயுதம்பிடித்தலைவிட்டு யோகம்செய்து சரீரத்தைவிட்டதும், அவருடையதேஜோரூபம் வெளிப்புறப் பட்டதை ஸஞ்சயன்முதலானஐவர் பார்த்ததும், திருஷ்டத் யும்னன் துரோணருடையதலையை அறுத்ததும்.)

ஸாத்வதனுடைய அச்செய்கையைக்கண்டு துரியோதனன் முத லானவர்கள் கோபமூண்டு நான்குபக்கங்களிலும் விரைவாக அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். ஐயா! யுத்தகளத்தில், கிருபரும் கர்ணனும் உம் முடையபுத்திரர்களும் சைனேயனை விரைவுடன் எதிர்த்துவந்து கூர்மை யுள்ள அம்புகளால் அடித்தார்கள். பிறகு, யுதிஷ்டிரமகாராஜரும் மாத்ரீ புத்திரர்களான இரண்டு பாண்டவர்களும் பலசாலியான பீமஸேனனும் ஸாத்யகியை நான்குபக்கத்திலும் சூழ்ந்துகொண்டார்கள். கர்ணனும் மகாரதரான கிருபரும் துரியோதனன்முதலானவீரர்களும் சைனேய னைச்சூழ்ந்துகொண்டு சரமாரியைப்பொழிந்தார்கள். மன்னரே! சைனே யன் அந்த மகாரதர்களை யெதிர்த்துப் போர்புரிபவனாகித் திடீரென்று உண்டாயிருக்கிறதும் கோரரூபமாயுள்ளதுமான அந்தச் சரமாரியைத் தடுத்தான். அவ்வன், வில்லிற் பூட்டிவிடப்படுகிற மகாபலசாலிகளான வீரர்களுடைய திவ்யாஸ்திரங்களை மகாயுத்தத்தில் முறைப்படி திவ்யா ஸ்திரங்களாலே தடுத்தான். முற்காலத்தில் கோபத்துடனே பிராணி களை ஸம்ஹரிக்கின்ற ருத்திரருடைய போர்க்களம்போல அந்த அரசர் கள் எதிர்த்துப் போர்செய்கிற போர்க்களமானது குரூரமாகக் காணப்

பட்டது. பாரதரே! யுத்தபூமியில் ஆங்காங்கு கைகள், தலைகள், விற்கள், புரட்டித்தள்ளப்பட்ட குடைகள், சாமரங்கள் இவைகளின் குவியல்கள் காணப்பட்டன. யுத்தபூமியானது சக்கரங்களுடைக்கப்பட்ட ரதங்களாலும் கீழேதள்ளப்பட்டிருக்கின்ற பெரிய கொடிகளாலும் கொல்லப்பட்ட குதிரைவீரர்களாலும் சூரர்களாலும் நிரம்பியதாயிற்று. குருக்களிற் சிறந்தவரே! மகாயுத்தத்தில் பாணங்கள் வந்துவிழுவதினால் அறுக்கப்பட்ட உம்முடைய யுத்தவீரர்கள் பலவிதமான செய்கைகளைச் செய்கின்றவர்களாகக் காணப்பட்டார்கள். கோரமானதும் தேவாஸுர யுத்தம் போன்றதுமான யுத்தம் அவ்வாறாக நடந்துவரும்பொழுது தர்மராஜாவான யுதிஷ்டிரர் அங்குள்ள க்ஷத்திரியர்களைநோக்கி, 'மகாரதர்களே! நீங்களனைவரும் முயற்சியுள்ளவர்களாகிக் குடத்திற்பிறந்தவரான துரோணரை எதிர்த்துச்செல்லுங்கள். இதோ பார்ஷதவீரன் பாரத்வாஜரோடு எதிர்த்திருக்கிறான். பாரத்வாஜரை அழிக்கும் விஷயத்தில் சக்தியுள்ளவரையில் முயற்சிசெய்வான். மஹாயுத்தத்தில் இந்தப் பார்ஷதனுடைய ரூபங்கள் இவ்வாறு காணப்படுதலால் இவன் கோபங்கொண்டு துரோணரை இன்றே போர்க்களத்தில் கொல்லுவான். நீங்கள் ஒன்றுசேர்ந்து துரோணரை எதிர்த்துப் போர்புரியுங்கள்' என்று கட்டளையிட்டார். மகாரதர்களான ஸ்ருஞ்சயர்கள் யுதிஷ்டிரரால் கட்டளையிடப்பட்டுப் பாரத்வாஜரைக்கொல்ல எண்ணங்கொண்டு முயற்சியுடனே எதிர்த்துச் சென்றார்கள். மகாரதரான பாரத்வாஜர் எதிர்த்துவருகின்ற எல்லா வீரர்களையும் இறக்கவேண்டுமென்னும் நிச்சயமுள்ளவராக வேகத்துடன் எதிர்த்தார். ஸத்தியஸந்தரான துரோணர் புறப்பட்டவுடனே, பூமி நடுங்கியது. இடியுடன்கூடின காற்றும் படையை நடுங்கச்செய்துகொண்டு வீசிற்று. இரண்டு சேனைகளையும் விளக்கிக்கொண்டு பெரிய பயத்தை வெளிப்படுத்துகின்றதுபோலுள்ள பெரிய ஓர் உற்கை சூரியனிடத்தினின்று நழுவி விழுந்தது. ஐயா! பாரத்வாஜருடைய சஸ்திரங்கள் தீப்பற்றியெரிந்தன; ரதங்கள் மிகஒலித்தன; குதிரைகள் கண்ணீரைச் சொரிந்தன. மகாரதரான பாரத்வாஜர் பராக்ரமத்தை யிழந்தவர்போலானார். அவருடைய இடக்கண்ணும் அவ்வாறே இடக்கையும் துடித்தன. (துரோணர்) முன்னாலே பார்ஷதனைக் கண்டும் ஸ்வர்க்கத்தை அடைவதின்பொருட்டு ரிஷிகளால் சொல்லப்பட்ட வேதவாக்கியங்களைக் கேட்டும் யுத்தத்தில் மனோதைரியத்தை இழந்தார்; பிறகு, நல்லயுத்தத்தினால் பிராணனைவிடுவதற்கும்தொடங்கினார். பிறகு, துருபதனுடைய சேனைகளாலே நான்குபக்கத்திலும் சூழப்பட்டவராக அவர் யுத்தகளத்தில் க்ஷத்திரியர்களின்கூட்டங்களை எரித்துக்கொண்டு

நாற்புறங்களிலும் ஸஞ்சரித்தார். பகைவர்களை அழிக்கிறவராகிய அவர் கூர்மையுள்ள பாணங்களால் இருபதினாயிரம் க்ஷத்திரியர்களையும் லக்ஷம்யானைகளையும் கொன்றார். யுத்தத்தில் முயற்சியுடையவராகிய அவர் புகைதணிந்த அக்னிபோல் ஜ்வலித்துக்கொண்டு க்ஷத்திரியர்களுடைய நாசத்தின்பொருட்டுப் பிரம்மாஸ்திரத்தைத் தியானித்துக்கொண்டு நின்றார். ரதத்தை இழந்தவனும் எல்லா ஆயுதங்களும் அழிந்தவனும் வியஸனமுற்றவனும் மகாத்மாவுமான பாஞ்சால்யனிடம் பலசாலியான பீமன் விரைவுடன் ஓடிவந்தான். பிறகு, சத்துருக்களை அடிக்கின்றவனான பீமன் பாஞ்சால்யனைத் தன்ரதத்தின்மீது ஏற்றிக்கொண்டு துரோணர் ஸமீபத்தில் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டிருப்பதைக்கண்டு, 'இந்த யுத்தத்தில் உன்னைத்தவிர வேறு ஒருமனிதனும் ஆசார்யரை எதிர்த்துப் போர்புரியத்துணியான். நீ சீக்கிரப்படு. உன்னிடத்தில் முந்தியே துரோணரை வதம்செய்கிற இந்தக் காரியபாரமானது வைக்கப்பட்டிருக்கிறது' என்று சொன்னான். அவ்வாறு சொல்லப்பட்ட மஹாபாகுபலமுள்ள அந்தப் பாஞ்சாலகுமாரன் எல்லாப்பாரத்தையுந் தாங்கக்கூடியதும் ஆயுதங்களுள் உத்தமமானதும் உறுதியுள்ளதுமான ஒருவில்லை விரைவாக ஓடிக் கையிலெடுத்தான். மிகுந்த முயற்சியுள்ள பாஞ்சால்யன் பாணங்களைப் பிரயோகித்துக்கொண்டு யுத்தத்தில் எவ்விதத்தாலும் தடுக்கமுடியாதவரான துரோணாசாரியரைத் தடுக்கக்கருதிச் சரமாரியைப் பொழிந்தான். அதிக முயற்சியையுடையவர்களும் சிரேஷ்டர்களுமான அவ்விருவரும் யுத்தத்தில் பிரகாசிப்பவர்களாகி எதிர்த்தார்கள்; பிரம்மஸம்பந்தமாயும் தேவஸம்பந்தமாயுமுள்ள அனேக அஸ்திரங்களைப் பிரயோகித்தார்கள். மகாராஜரே! அந்தப் பார்ஷதன் யுத்தகளத்தில் பாரத்வாஜருடைய எல்லா அஸ்திரங்களையும் நாசஞ்செய்து மகாஸ்திரங்களாலே அவரை மூடினான். தவறாதவனான ஸாத்யகியும் துரோணரை ரக்ஷிப்பவர்களான வஸாதிகளையும் சிபிகளையும் பாஹ்லீகர்களையும் கௌரவர்களையும் யுத்தத்தில் துரத்தியடித்தான். அரசரே! சூரியன் கிரணங்களால் திக்குக்களை மூடுவதுபோலத் திருஷ்டத்யும்னனும் நான்குபக்கங்களிலும் திக்குக்களைப் பாணஸமூகங்களால் மறைத்துக்கொண்டு பிரகாசித்தான். துரோணர் பாணங்களாலே அவனுடைய வில்லையும் அறுத்து அவனையுமடித்து மீண்டும் அவனுடைய மர்மஸ்தானங்களில் அடித்தார். அவன் மிகவும் துன்பத்தை அடைந்தான். ராஜேந்திரரே! பிறகு, மிக்க கோபங்கொண்ட பீமன் துரோணருடைய ரதத்தினருகில்வந்து அவரைப்பார்த்து ஒரு வசனத்தை மெதுவாகச் சொல்ல வாரம்பித்தான்.

'தம்முடைய கர்மங்களாலே ஸந்தோஷமடையாதவர்களும் அஸ்திரவித்தை கற்றவர்களுமான ப்ரஷ்டப் பிராம்மணர்கள் யுத்தம் செய்யாமலிருப்பார்களாயின், க்ஷத்திரியஜாதியானது நாசமடையாது. எல்லாஜந்துக்கள்விஷயத்திலும் ஹிம்ஸை செய்யாமலிருப்பதே மிகப் பெரியதர்மமென்று பெரியோர்கள் அறிந்திருக்கிறார்கள். அந்தத் தர்மத்திற்குப் பிராம்மணனே ஆதாரம். நீரோ பிரம்மவித்துக்களுள் சிறந்தவர். அறிந்தவர்கள்கூட அவிவேகிகள்போல அஜ்ஞானத்தால் மோகித்தவர்களாகிச் சண்டாளன்போல் மிலேச்சர்களுடைய கூட்டங்களையும் பற்பலவகையான மற்றவர்களையும் கொன்று மக்களையும் மனைவியையும் போஷிக்கிறார்கள். பிராம்மணரே! நீர் மூடன்போல அறியாமையினாலே புத்திரன் மனைவி பொருள் இவற்றிலுள்ள ஆசையால் உமக்குரியனவல்லாதகாரியங்களில் நிலைபெற்று அதர்மவித்தையினால் உம்முடைய புத்திரன் ஒருவன் க்ஷேமமடைவதற்காகத் தமக்குரிய செய்கைகளில் நிலைபெற்றவர்களான அனேக வீரர்களைக்கொன்று ஏன் வெட்கமடையாமலிருக்கின்றீர்? ஒழுக்கங்கெட்டவரே! வெட்கங்கெட்டவரே! பிரஷ்டப்பிராம்மணரே! உத்தமமான ஆயுதத்தையுடையவரே! மதிகெட்டவரே! இப்பொழுது நில்லும். உயிரோடு என்னிடத்தினின்றும் நீர் விடுபடப்போகிறதில்லை. எவன் நிமித்தமாக ஆயுதமெடுத்து எவனை உத்தேசித்து நீர் பிழைத்திருக்கிறீரோ அவன் யுத்தகளத்தில் படுத்திருக்கிறான். உம்மால் கேட்கப்பட்ட தர்மராஜரும் இந்த விஷயத்தை உமக்கு வெளியிட்டிருக்கிறார். மிக்க மந்தபுத்தியையுடையவனை அப்படிப்பட்ட உம்முடையபுத்திரன் கொல்லப்பட்டுப் படுத்திருக்கிறான். தர்மராஜருடைய வார்த்தையில் நீர் ஸந்தேகிக்கவேண்டாம்' என்றான்.

பீமன் இவ்வாறுசொல்லியதைக் கேட்டவரும் பிராம்மணரும் தர்மாத்துமாவுமான துரோணர் வில்லை எறிந்துவிட்டுச் சரீரத்தை விடுவதற்காக யோகநிஷ்டையை அடையப்போகிறவராகவும் எல்லா அஸ்திரங்களையும் விட்டுவிட எண்ணங்கொண்டவராகவும் வசனிக்கலானார். மன்னரே! துரோணர் விரைபவராகிப் பகைவர்களையடக்குகிறவர்களான கர்ணனையும் துரியோதனனையும் பார்த்து, 'ஓ! கர்ண! கர்ண! பெரிதான வில்லைக் கையிற்கொண்ட கிருபரே! துரியோதன! நீங்கள் போரில் முயற்சிசெய்யவேண்டும். இதோ நான் மறுபடியும் மறுபடியும் சொல்லுகிறேன். பாண்டவர்களே! உங்களுக்கு மங்களமுண்டாகட்டும். நான் சஸ்திரங்களை விட்டுவிடுகிறேன்' என்றார். மகாராஜரே!

அந்த யுத்தரங்கத்தில் துரோணர் இவ்வாறு சொல்லிவிட்டு அச்வத்தாமாவைக்குறித்து அலறினர். யுத்தத்தில் சஸ்திரத்தையெறிந்துவிட்டு ரதமத்தியில் உட்கார்ந்து எல்லாப்பிராணிகளுக்கும் அபயங்கொடுத்தார்; யோகநிஷ்டையையும் அடைந்தார். பிரதாபசாலியான திருஷ்டத்யும்னன் துரோணருக்கு நேர்ந்திருக்கிற அந்த இடைவெளியை அறிந்து உடனே அம்புடன்கூடின கோரமானவில்லை ரதத்தில் வைத்துவிட்டுக் கத்தியைக் கையிலெடுத்து ரதத்தினின்று குதித்து விரைவாக அவரைநோக்கி ஓடினன். மகாரதனான அவன் துரோணரைக்குறித்து வேகமாக ஓடும்போது மனிதர்களும் மற்றுமுள்ள எல்லாப் பிராணிகளும் 'ஆ! ஆ!' என்று அலறினர்; அவ்விதமான நிலைமையிலிருக்கின்ற துரோணர் திருஷ்டத்யும்னனுடைய வசத்தையடைந்ததைப் பார்த்து 'ஆ! ஆ!' என்று மிகவும் அலறினர்கள்; அவனை, 'சீச்சீ! கெட்டான்' என்றும் சொன்னார்கள். மிக்க தவமுடையவரான துரோணரும் சஸ்திரங்களை விட்டுவிட்டு உத்தமமான ஸாங்கியவித்தையை நாடி (உரிய மந்திரத்தை) அவ்வாறு உச்சரித்து யோகத்தை அனுஷ்டித்து ஜ்யோதிர்மயமாகிவிட்டார். புராதனரும் ஸர்வாந்தர்யாமியும் பரமாத்துமாவுமான ஸ்ரீ மகாவிஷ்ணுவை மனத்திலே தியானித்தார். மிக்க தவத்தையுடையவரான துரோணர் முகத்தைச் சிறிதுதூக்கி மார்பை முன்பக்கத்தில் நிமிர்த்து இரண்டு கண்களையும் மூடிக்கொண்டு ஸத்வத்தில் நிலைபெற்று ஹ்ருதயத்தில் தாரணையை நிலைநிறுத்தி ஓர் அக்ஷரஸ்வரூபமான பிரணவத்துக்குப் பொருளாகிய ப்ரம்மத்தைத் தியானித்து ஜ்யோதிர்மயமானர். ஆசார்யர் தேவதேவர்களுக்கெல்லாம் நாதரும் அழிவற்றவரும் பிரபுவுமான பரமாத்மாவை ஸ்மரித்து ஸாதுக்களாலும் நாடமுடியாத ஆகாசத்தில் பிரத்யக்ஷமாகச் சென்றார். அரசரே! மகாத்மாவான அந்தத் துரோணருடைய தலையைப் பிளந்துகொண்டு ஜ்யோதியானது உத்தமமான ரதத்தில் அவருடைய தேகத்தைவைத்துவிட்டுப் பரமபதத்தை அடைந்தது. அந்த ஜ்யோதியானது அவ்வாறாக ஆகாயத்தில் கிளம்பியபொழுது இரண்டு சூரியோதயமாயிருக்கிறதென்றே எங்களுக்கு எண்ணமுண்டாயிற்று. ஜ்யோதிகளால் நிரப்பப்பட்ட ஆகாயமானது ஒரே ஜ்யோதிர்மயமாகவே விளங்கியது. துரோணர் மரணமடைந்த அந்த ஸமயத்தில் ஆகாயமானது உற்கையின் ஒளிபோன்ற ஒளியுள்ளதாயிற்று. ஒரு நிமிஷத்தினுள் அந்த ஜ்யோதியும் மறைந்தது. துரோணர் பிரம்மலோகத்தை அடைய, திருஷ்டத்யும்னனும் மயங்கியிருந்தபொழுது ஸந்தோஷமுள்ளவர்களான ஸ்வர்க்கவாஸிகளுடைய 'கிலகிலா' என்னும் பேரொலியானது

தோன்றியது. நான், பிருதாபுத்திரனான தனஞ்சயன், சரத்வானுடைய குமாரரும் பிராம்மணருமான கிருபாசாரியர், விருஷ்ணிகுலத்தில் தோன்றிய ஸ்ரீ வாஸுதேவர், பாண்டுபுத்திரரான தர்மராஜர் ஆகிய மனிதஜாதியைச்சேர்ந்த நாங்கள் ஐவருமே, யோகநிஷ்டையை அடைந்து உத்தமகதியை அடைகின்ற மகாத்மாவான துரோணரை அப்பொழுது பார்த்தோம். மகாராஜரே! மகிமைபொருந்தியதும் திவ்யமானதும் தேவரகஸ்யமாயுள்ளதும் உத்தம கதியாயிருக்கின்றதும் ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்புறப்பட்டதுமான அந்தப்பிரம்மலோகத்தைக்குறித்துச் செல்லுகின்றவரும் யோகத்துடன் கூடினவரும் புத்திமானுமான அந்தப் பாரத்வாஜருடைய மகிமையை மற்றவர்கள் அனைவரும் காணவில்லை. உத்தமகதியையடைந்தவராக அறியாதவர்களான மனிதர்கள் சத்ருக்களைச் சிக்ஷிப்பவரும் யோகத்தையடைந்து ரிஷிஸ்ரேஷ்டர்களுடன் பிரம்மலோகத்தைக்குறித்துச் செல்லுகின்றவருமான ஆசார்யரையும் காணவில்லை.

பார்ஷதன் கோபமும் பொறுமையு மிஞ்சினவனாகிக் கத்தியை உருவி எல்லாப்பிராணிகளாலும் பார்க்கப்படுகின்றவனாகவே, சரக்கூட்டங்களாலே பேனிபிளக்கப்பட்டவரும் ஆயுதங்களைக் கீழேவைத்தவரும் ரக்தத்தைப் பெருக்குகிறவருமான துரோணாசாரியரைத் தலைமயிரில் பிடித்துக்கொண்டான். ஒன்றும்பேசாதவரும் உயிர்போனவரும் தேகமாத்ரமாயிருப்பவருமான அந்தத் துரோணாசாரியருடைய தலையைப்பிடித்துக்கொண்டு கத்தியினால் அவர்தலையைச் சரீரத்தினின்று அறுத்தான். பாரத்வாஜர் கொல்லப்பட்டவுடனே, பார்ஷதன் அதிக சந்தோஷத்தோடு யுத்தகளத்தில் கத்தியைச் சுழற்றிக்கொண்டு ஸிம்மநாதம்செய்தான். காதுவரையில் நரைத்தமயிருள்ளவரும் கறுத்தநிறமுடையவரும் நானூறுபிராயஞ்சென்றவருமான துரோணாசாரியர் யுத்தத்தில் உமதுநிமித்தமாகப் பதினாறுவயதுள்ள யுவாவைப்போல ஸஞ்சரித்தார். மகாபலமுள்ளவனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயன், 'துருபதபுத்திர! ஆசார்யரை நீ கொல்லாதே; உயிருடனே கொண்டுவா' என்றுசொன்னான். ஸைனிகர்களும், 'ஆசார்யரைக்கொல்லலாகாது; ஆசார்யரைக் கொல்லலாகாது' என்று அலறினார்கள். அர்ஜுனனும் இளகியமனத்துடன் திருஷ்டத்யும்னனைப் பின்தொடர்ந்தான். அர்ஜுனனும் மற்ற அரசர்களும் நான்குபக்கங்களிலும் அலறும்பொழுதே திருஷ்டத்யும்னன் புருஷஸ்ரேஷ்டரான துரோணரை ரதமத்தியிலேயே கொன்றான். எவ்விதத்தாலும் அவமதிக்கமுடியாதவ

ரானதுரோணர் சிவந்த அங்கங்களுடன்கூடின சூரியன்போல. ரக்தத்தால் நான்குபக்கங்களிலும் நனைக்கப்பட்டவராக ரதத்தினின்று பூமியில் விழுந்தார். இவ்வாறு யுத்தத்தில் கொல்லப்பட்ட இந்தத்துரோணரை ஸேனையிலுள்ள அனைவரும் பார்த்தார்கள். அரசரே! மகாவில்லாளியான திருஷ்டத்யும்னனே அந்தப்பாரத்வாஜருடைய தலையை எடுத்துவந்து உம்மைச்சேர்ந்த ஸைனிகர்களுடைய முன்னிலையில் போட்டான். மன்னரே! உம்மைச் சேர்ந்தவர்கள் பாரத்வாஜருடைய சிரஸைப்பார்த்து ஓடுவதில் விருப்பமுள்ளவர்களாகி எல்லாத்திக்கிலும் ஓடினார்கள். துரோணரோ ஆகாயமார்க்கமாகச்சென்று நக்ஷத்திரவீதியில் பிரவேசித்தார். அரசரே! ஸத்தியவதிபுத்திரரும் மகர்ஷியுமான கிருஷ்ணத்வைபாயனருடைய அனுக்ரஹத்தினாலே அப்பொழுது நானே துரோணருடைய நிர்யாணத்தைக் கண்டேன். புகையில்லாமல் நன்றாக எரிந்துகொண்டு மேல்நோக்கிச்செல்லுகின்ற உற்கைபோல் ஆகாயத்தையடைந்து மகாதேஜஸ்வியான துரோணர் செல்வதைக்கண்டோம். துரோணாசாரியர் கொல்லப்பட்டவுடனே, கௌரவர்களும் பாண்டவர்களும் ஸ்ருஞ்சயர்களும் உத்ஸாகத்தையிழந்து அதிக வேகத்துடன் ஓடத்தலைப்பட்டார்கள். பிறகு, ஸைனியம் சிதறிவிட்டது. துரோணர் கொல்லப்பட்டவுடனே கூர்மையுள்ள அம்புகளால் யுத்தத்தில் பெரும்பான்மையாகக் கொல்லப்பட்டவர்கள்போக மிஞ்சினவர்களும் அடிக்கப்பட்டவர்களுமான உம்மைச்சேர்ந்தவர்கள் உயிரையிழந்தவர்கள்போலானார்கள். அவர்கள் தோல்வியையும் பரலோகவிஷயத்தில் பெரியபயத்தையுமடைந்து மண்ணுலகம் விண்ணுலகம் இரண்டினாலேயும் விடப்பட்டவர்களாகித் தங்களுடையபுத்தியை நிந்தித்துக் கொண்டார்கள். மகாராஜரே! அரசர்கள் பாரத்வாஜருடைய சரீரத்தைப் பார்க்க விருப்பமுற்றவர்களாயிருந்தும் பதினாயிரம் தலையில்லாமுண்டங்களாலே நெருங்கின யுத்தகளத்தில் அதனைத் தேடியும் காணவில்லை. பாரதரே! அந்தச்சேனையில்முயற்சியுள்ளவரான துரோணர்சாய்ந்தவுடன், இருபத்தோராயிரம் தலையில்லாமுண்டங்கள் எழுந்துகூத்தாடின. பாரதரே! இரத்தத்தினால் நான்குபக்கங்களிலும் நனைக்கப்பட்ட யுத்தபூமி அப்பொழுது இரத்தத்தால் நனைந்த சூரியமண்டலம்போலப் பார்க்கக் கூடாததாயிருந்தது. பாண்டவர்களோ ஜயத்தையும் பரலோகத்திற் பெரிதான கீர்த்தியையும்பெற்று உரத்த அம்பொலிகளையும் சங்கமுழக்கங்களையும் ஸிம்மநாதங்களையும் செய்தார்கள். வேந்தரே! பிறகு, பீமஸேனனும், பார்ஷதனை திருஷ்டத்யும்னனும் ஒருவரையொருவர் கட்டிக்கொண்டு ஸேனையுள் கூத்தாடினார்கள். அப்பொழுது, பீமன்

சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவனான பார்ஷதனைப்பார்த்து, 'பார்ஷத! பாபியான ஸூதபுத்திரனும் திருதராஷ்டிரபுத்திரனான துரியோதனனும் யுத்தத்தில் இவ்வாறு கொல்லப்பட்டபிறகு யான் உன்னை மறுபடியுங்கட்டிக்கொண்டு சொல்லுவேன்' என்று கூறினான். பாண்டு புத்திரனான பீமன் இவ்வளவுமாத்திரம் சொல்லிவிட்டு அதிக ஸந்தோஷமுள்ளவனாகிக் கைகொட்டும் சப்தத்தினாலே பூமியை நடுங்கச் செய்தான். யுத்தகளத்தில் அந்தப்பீமன்செய்தபேரொலியினாலே பயமுறுத்தப்பட்டவர்களான உம்மைச்சேர்ந்த போர்வீரர்கள் க்ஷத்திரிய தர்மத்தைவிட்டு ஓடுவதில் நோக்கங்கொண்டு ஓடினார்கள். அரசரே! பாண்டவர்களோ யுத்தத்தில் சத்துருநாசத்தையும் ஜயத்தையுமடைந்து மகிழ்ச்சியுள்ளவர்களானார்கள். அதனால், அவர்கள் ஸுகத்தையும் பெற்றார்கள்.

துரோணவதபர்வம் முற்றிற்று.

---

## நூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம்.

(துரியோதனனுடைய தூண்டுதலால் க்ருபர் துரோணருடைய வதத்தை அஸ்வத்தாமாவுக்குத் தெரிவித்ததும் அஸ்வத்தாமா கோபங்கொண்டதும்.)

அரசரே! துரோணர் கொல்லப்பட்டபிறகு, சஸ்திரங்களால் பீடிக்கப்பட்டவர்களும் சிறந்தவீரர்கள் கொல்லப்பட்டவர்களும் நாசம் பண்ணப்பட்டவர்களும் மிக்க சோகத்தை அடைந்தவர்களுமான கௌரவர்கள், பலத்தால் மிஞ்சியவர்களும் அடிக்கடி களிப்புறுகின்றவர்களுமான பகைவர்களைக்கண்டு நீர்ததும்புகின்ற கண்களுள்ளவர்களும் பயந்தவர்களும் தீனர்களுமானார்கள். மன்னரே! (அவர்கள்) புத்தியையிழந்தவர்களும் உத்ஸாகத்தை யிழந்தவர்களும் கலக்கத்தினால் பலம் அழிக்கப்பட்டவர்களுமாகி அதிக தீனஸ்வரத்துடன் உமது புத்திரனை நான்குபக்கங்களிலும் சுற்றிக்கொண்டார்கள். அவர்கள், முற்காலத்தில் ஹிரண்யாக்ஷன் கொல்லப்பட்டவுடனே, அஸுரர்கள் இருந்ததுபோலக் கண்ணீரால் தடைப்படுகின்ற குரலுள்ளவர்களும் துக்கத்தால் முகம்வாடினவர்களும் பத்துத்திக்குக்களையும் பார்ப்பவர்களும் தளர்ச்சியடைந்தவர்களும் ஆனார்கள். பயந்த அற்பமிருகங்கள் போன்ற அந்தக்கௌரவவீரர்களாலே சூழப்பட்டவனும் 'ராஜாவுமான

உம்முடைய்குமாரன் நிலைபெற்றிருப்பதற்குச் சக்தியற்றவனாகி அந்த யுத்தரங்கத்தைவிட்டு ஓடினான். பாரதரே! பசியினாலும் தாகத்தினாலும் மிக்கவாட்டமுற்ற உம்முடைய அந்த யுத்தவீரர்கள் சூரியனால் மிகவும் வாட்டப்பட்டவர்கள்போல மிக்க மனநிலைமையை யிழந்தார்கள். அரசரே! சூரியனது வீழ்ச்சிபோலவும் ஸமுத்ரத்தினுடைய வறட்சிபோலவும் மேருபர்வதத்தினுடைய சிதறுதல்போலவும் இந்திரனுடைய அபஜயம்போலவுமிருப்பதும் பார்க்கத்தகாததுமான பாரத்வாஜருடைய அவ்விதமான மரணத்தைக்கண்டு கௌரவர்கள் பயத்தால் சரீரம் மிகநடுங்கி ஓடினார்கள். காந்தாரராஜனான சகுனி பயந்தவனாகிப் பொற்றேராளியான துரோணர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு மிக்க பயமுற்றவர்களான ரதிகர்களுடன் சேர்ந்து ஓடினான். ஸூதபுத்திரனும், காவலுள்ளதும் வேகமுள்ளதும் ஓடுகின்றதும் கொடியுள்ளதும் பெரிதுமான சேனையைக் கூட்டிக்கொண்டு பயத்தால் ஓடினான். மத்ரதேசாதிபதியான சல்லியனும் ரதங்களாலும் யானைகளாலும் குதிரைகளாலும் நிறைந்திருக்கிற சேனையை முன்னிட்டுக்கொண்டு (பகைவர்களுடைய படையைப்) பார்த்துக்கொண்டே பயத்தால் ஓடினான். க்ருபரும் சிறந்த வீரர்கள் கொல்லப்பட்டவைகளும் அனேகங்கொடித்துணிகளோடு கூடியவைகளுமான அனேகம் படைகளாலே சூழப்பட்டவராக, 'கஷ்டம்! கஷ்டம்' என்றுசொல்லிக்கொண்டே (யுத்தத்தினின்றும்) விலகினார். அரசரே! கிருதவர்மாவும் (மாண்டது போக) மிகுந்திருக்கின்ற போஜசேனையினாலும் களிங்கர்களாலும் ஆரட்டர்களாலும் பாஹ்லிகர்களாலும் சூழப்பட்டவனாகி வேகமுள்ள குதிரைகளோடு யுத்தரங்கத்தினின்றும் ஓடினான். மன்னரே! உலூகனும், கொல்லப்பட்டிருக்கின்ற துரோணரை அந்த யுத்தகளத்தில் பார்த்து நடுங்கிப் பயத்தால் பீடிக்கப்பட்டுக் காலாட்படைகளுடன் ஓடினான். பார்ப்பதற்கு அழகியவனும் யௌவனமுள்ளவனும் சௌர்யத்தினாலே பிரஸித்திபெற்றவனுமான துச்சாஸனனும் மிக்க மனவருத்தமுற்றவனாகி யானைகளாலே சூழப்பட்டு ஓடினான். விருஷஸேனனும் துரோணர் கொல்லப்பட்டதைக் கண்டு பதினாயிரந் தேர்களையும் மூவாயிரம் யானைகளையும் கூட்டிக்கொண்டு விரைவாகச்சென்றான். மகாராஜரே! அந்த மகாயுத்தத்தில் மகாரதனான துரியோதனன், யானைகளோடும் குதிரைகளோடும் ரதங்களோடும்கூடியவனாகவும் காலாட்களால் சூழப்பட்டவனாகவும் ஓடிவிட்டான். ராஜரே! ஸுசர்மாவானவன், துரோணர் கொல்லப்பட்டதைக்கண்டு, கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருக்கின்ற ஸம்சப்தகர்களுடைய சேனைக்கூட்டங்களை அழைத்துக்

கொண்டு ஓடிவிட்டான். வீரர்கள், யுத்தகளத்தில் ஸ்வர்ணரதரான துரோணர் கொல்லப்பட்டாரென்பதைக் கண்டு, யானைகளின்மீதும் ரதங்களின்மீதும் ஏறிக்கொண்டும் குதிரைகளை விலக்கிக்கொண்டும் நான்குபக்கங்களிலும் விரைவாக ஓடினார்கள். அப்பொழுது கௌரவ வீரர்களுள் சிலர் தகப்பன்மார்களையும் சிலர் உடன்பிறந்தார்களையும் சிலர் மாமன்மார்களையும் சிலர் புத்திரர்களையும் சிலர் தோழர்களையும் வேகப்படுத்திக்கொண்டு விரைவாக ஓடினார்கள். அவ்வாறே, சிலர் தங்களுடைய படைகளையும் மருமான்களையும் விரைவாகப் போகும்படி செய்துகொண்டு ஓடினார்கள். சிலர், அவ்வாறே, ஸம்பந்திகளை வேகப்படுத்திக்கொண்டு பத்துத்திக்குக்களிலும் ஓடினார்கள். விரிந்த தலைமயிரையுடையவர்களும் அழிக்கப்பட்டவர்களும் ஊக்கத்தையும் வலிமையையுமிழந்தவர்களும் 'இது இனி இராது' என்று எண்ணிக்கொண்டவர்களுமாக ஓடினார்கள். ஓரிடத்திலாயினும் இருவர் சேர்ந்து ஓடவில்லை. 'பிரபுவே! உம்மைச்சேர்ந்தவர்களில் சிலர் கவசங்களையெறிந்துவிட்டு வேகமாக ஓடினார்கள். பாரதர்களிற் சிறந்தவரே! அந்த ஸைனிகர்கள் ஒருவரையொருவர் 'நில், நில்' என்று கூவி அழைத்தார்கள். அவர்கள் தாங்கள்மாத்திரம் அந்த யுத்தகளத்தில் நிலைபெறவில்லை. சில யுத்த வீரர்கள் ஸாரதியையிழந்ததும் நன்றாக அலங்கரிக்கப்பட்டதுமான தேரினின்று வாகனங்களையவிழ்த்துவிட்டு அவைகளின்மீது தாங்கள் ஏறிக்கொண்டு கால்களால் (உதைத்து) விரைவாக ஓட்டினார்கள். சிலர் விரைவாகக் கால்களாலேயே ஓடினார்கள். அவ்வாறு சேனையானது நடுக்கமுற்று வீர்யத்தையிழந்து ஓடும்பொழுது துரோணபுத்திரர் ஒரு முதலையானது வெள்ளத்தையெதிர்த்துச் செல்வதுபோலச் சத்துருக்களை எதிர்த்தார். அந்த அசுவத்தாமாவுக்குச் சிகண்டியை முதன்மையாகக்கொண்ட வீரர்களுடைய கூட்டங்களோடும் பிரபத்ரகர்களோடும் பாஞ்சாலர்களோடும் கேகயர்களோடும் சேதிதேசத்து வீரர்களோடும் பெரிதான யுத்தமானது உண்டாயிற்று. யுத்தத்தில் அடங்காத மதங்கொண்டவரும் மதயானைபோன்ற பராக்ரமமுடையவருமான துரோணபுத்திரர் பாண்டவர்களுடைய பலவிதப் படைகளைக் கொன்று, ஸங்கடத்தினின்று அதிக பிரயாஸத்தினால் விடுபட்டவராகி, ஓடுவதில் ஜாக்கிரதையுடன் ஓடுகின்ற சேனையைக்கண்டு, துரியோதனனிடம் வந்து, 'பாரத! ஏன் இந்தச் சேனையானது பயங்கொண்டதுபோல் ஓடுகிறது? ராஜேந்திர! ஓடுகின்ற இந்தச் சேனையை ஏன் யுத்தத்தில் நிலைநிறுத்தாமலிருக்கிறாய்? அரசே! நீயும் முன்போல் சரியானநிலைமையிலிருப்பதாகத் தோன்றவில்லையே. வேந்தனே! கர்ணன்முதலான இந்த யுத்த

வீரர்களும் நிலைபெற்றிருக்கவில்லை. மற்ற யுத்தங்களில் இவ்வாறு சேனை ஓடினதேயில்லையே. பாதகுலத்தில்பிறந்தவனே! மிக்க தோள் வலியமைந்தவனே! உனது ஸைனியத்திற்கு க்ஷேமமா? வேந்தே! கௌரவ! எந்த ரதிகசிரேஷ்டன் மாண்டதால் உனது சேனை இவ்வித நிலைமையடைந்திருக்கின்றது? அதனை எனக்குச் சொல்வாயாக' என்று வினவினர். பிறகு, ராஜஸ்ரேஷ்டனான துரியோதனன் துரோணபுத்திரருடைய அந்தவார்த்தையைகேட்டு, கோரமும் அப்பிரியமுமாயிருக்கின்ற (துரோணவதரூபமான) அந்த விருத்தாந்தத்தை அவரிடம் சொல்வதற்குச் சக்தியுள்ளவனாகவில்லை. உமது புத்திரன், ரதத்திலிருக்கின்ற துரோணபுத்திரரைக்கண்டு, கண்ணீரால் முகம் மூடப்பட்டவனாகி, உடைபட்ட மரக்கலம்போல் துக்கக்கடலில் மூழ்கிவிட்டான். பிறகு, துரியோதனராஜன் சாரத்வதரைப்பார்த்து, '(கிருபாசாரியரே!) உமக்கு ஸுகிருதமுண்டு. இச்சமயத்தில் இந்தச் சேனைமுழுவதும் ஓடுகிறதற்குரிய காரணத்தை இவருக்குச் சொல்லும்' என்று வெட்கத்துடன் கூறினான். அரசரே! பிறகு, சாரத்வதர் அடிக்கடி மனவருத்தத்தையடைந்து துரோணர் கொல்லப்பட்டவிதத்தைத் துரோணபுத்திரருக்குச் சொல்லலானார்.

'நாங்கள் உலகத்தில் தோராளிகளுட்சிறந்த துரோணரை முன்னிட்டுக்கொண்டு பாஞ்சாலர்களுடன்மாத்திரமே போர்புரிந்தோம். பிறகு, யுத்தம் தொடங்கப்படவே, ஒருவரோடொருவர் எதிர்த்தவர்களான கௌரவர்களும் ஸோமகர்களும் கர்ஜித்துக்கொண்டு சஸ்திரங்களாலே தேகங்களைக் கீழேதள்ளினார்கள். அவ்வாறு யுத்தம் நடந்துவருகையில், திருதராஷ்டிரபுத்ரர்கள். க்ஷீணிக்கும்பொழுது உன்னுடைய தந்தையார் மிகுந்த கோபமுமுண்டவராகி அஸ்திரத்தை வெளிப்படுத்தலானார். பிறகு, நரசிரேஷ்டரான துரோணர் பிரம்மாஸ்திரத்தை வெளிப்படுத்திக்கொண்டு பல்லங்களாலே நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் சத்துருக்களை ஸம்ஹாரம்செய்தார். பாண்டவர்களும் கேகயர்களும் மாத்ஸ்யர்களும் பெரும்பான்மையாகப் பாஞ்சாலர்களும் காலனால் தூண்டப்பட்டவர்களாகி யுத்தத்தில் துரோணருடைய ரதத்தை எதிர்த்து உயிரையிழந்தார்கள். துரோணர் பிரம்மாஸ்திரப் பிரயோகத்தினால் ஆயிரம் புருஷசிரேஷ்டர்களையும் இரண்டாயிரம் யானைகளையும் மிருத்யுவினிடத்திற்கு அனுப்பினார். காதுவரையில் நரைத்தவரும் கரியநிறமுடையவரும் நானூறுபிராயமுள்ளவரும் கிழவருமான துரோணர் பதினாறுவயதுள்ள வாலிபன்போல யுத்தத்தில் நான்குபுறத்திலும்

ஸஞ்சரித்தார். சேனைகள் துன்பப்படுத்தப்பட்டு அரசர்கள் கொல்லப் படும்பொழுது கோபமீறினவர்களான பாஞ்சாலர்கள் யுத்தத்தில் விருப் பமற்றவர்களானார்கள். அவர்கள் சிறிது தோற்றுப் புறங்காட்டிய பொழுது சத்துருக்களை ஜயிக்கின்றவராகிய (உன் பிதாவானவர்) திவ் யாஸ்திரத்தைப் பிரயோகித்துக்கொண்டு உதயமான ஸூரியன்போல் விளங்கினார். கிரணங்கள்போன்ற அம்புகளையுடையவரும் பிரதாபமுள் ளவரும் உன்னுடைய பிதாவுமான அந்தத் துரோணர் பாண்டவர்க ளுடைய மத்தியை அடைந்து ஆகாசமத்தியத்தையடைந்த ஸூரியன் போலப் பார்க்கக்கூடாதவரானார். ஸூர்யன்போல் விசேஷமாகப் பிரகா சிக்கின்ற துரோணராலே கொளுத்தப்படுகின்ற அந்த வீரர்கள் வீரத் தன்மை எரிக்கப்பட்டவர்களும் உத்ஸாகமற்றவர்களும் மனநிலைமை யிழந்தவர்களுமானார்கள். பாண்டுபுத்திரர்களுக்கு ஜயத்தைவிரும்பு கின்றவரான மதுஸூதனர் துரோணரால் அம்புகளால் பீடிக்கப் பட்ட அந்தப் பாஞ்சாலர்களைப் பார்த்து, 'ரதயூதபர்களுடைய கூட்டங்களை ரக்ஷிக்கின்றவரும் சஸ்திரங்களைத் தரிக்கின்றவர்களுள் உத்தமருமான இந்தத்துரோணர் ஒருபொழுதும் மனிதர்களால் ஜயிப்பதற்கு ஸாத்தியப்படாதவர்; யுத்தரங்கத்தில் இந்திரனும் ஜயிக்கமுடியாதவர். பாண்டவவீரர்களே! ஸ்வர்ணத்தேரையுடையவ ரான துரோணர் யுத்தத்தில் உங்கள் அனைவரையும் கொல்லாதபடி யான உபாயத்தைநாடி. நீங்கள் தர்மத்தைவிட்டும் ஜயத்தைரக்ஷியுங் கள். அஸ்வத்தாமா கொல்லப்பட்டால் இவர் யுத்தம்செய்யமாட்டா ரென்பது என்னுடைய எண்ணம். அவர் யுத்தத்தில் கொல்லப்பட்டா ரென்று ஒருமனிதன் பொய்யை இவருக்குச் சொல்லட்டும்' என்று இந்த வசனத்தைக் கூறினார். குந்திபுத்திரனான தனஞ்சயன் இந்த வாக்கியத்தைப் பிரியமாக ஏற்றுக்கொள்ளவில்லை. மற்றவர்களனைவரும் அந்த வார்த்தையில் பிரியத்தைக் காட்டினார்கள். யுதிஷ்டிரனோ அதிக பிரயாசத்தோடு அவ்வார்த்தையை ஒப்புக்கொண்டான். பீமஸேனனோ, 'அஸ்வத்தாமா கொல்லப்பட்டான்' என்று வெட்கத்தோடு உன்பிதா வைநோக்கிச் சொன்னான். உன்னுடையபிதா அதனை அறியவில்லை. புத்திரவாத்ஸல்யமுள்ளவரும் உனக்குப் பிதாவுமான அந்தத் துரோ ணர் அதனைப் பொய்யென்று ஸந்தேகித்து யுத்தத்தில் நீ கொல்லப் பட்டாயா, அல்லது இல்லையா என்று தர்மராஜனை வினவினார். ஜய த்தில் பற்றுள்ளவனான யுதிஷ்டிரன் பொய் சொல்வதினாலுண்டான பயத்தில் மூழ்கினவனாகிப் பீமனால் மலைபோன்ற வடிவமுள்ளதான மாலவராஜனுடைய இந்திரவர்மாவினுடைய அஸ்வத்தாமா என்கிற

பெரிய யானை யுத்தத்தில் கொல்லப்பட்டதென்பதைக்கண்டு அப்பொழுது துரோணருடைய அருகில்வந்து அவரை நோக்கி, '(ஆசார்யரே!) எவன் நிமித்தமாக நீர் சஸ்திரமெடுக்கிறீரோ, எவனை உத்தேசித்து நீர் பிழைத்திருக்கிறீரோ, எப்பொழுதும் உம்முடைய பிரீதிக்குப் பாத்திரனான அந்த அஸ்வத்தாமா என்கிற புத்திரன் அடித்துத்தள்ளப்பட்டுக் காட்டில் ஸிம்மக்குட்டிபோலப் பூமியில் படுத்திருக்கிறான்' என்று இரைந்து சொன்னான். பொய் சொல்வதினாலுண்டாகும் தோஷங்களை யறிந்தவனாக இருந்தும், யுதிஷ்டிரராஜன் பிராம்மணோத்தமரான துரோணரைப்பார்த்து, 'யானை கொல்லப்பட்டது' என்று மெதுவாகச்சொன்னான். யுத்தகளத்தில் நீகொல்லப்பட்டாயென்பதைக்கேட்டு, பரிதாபத்தினால் வாட்டப்பட்ட துரோணர் திவ்யாஸ்திரங்களை யடக்கிக்கொண்டு முன்போலப் போர்புரியவில்லை. அதிக மனக்கவலையுற்றவரும் சோகத்தினால் பீடிக்கப்பட்டவரும் பிரஜ்ஞை யிழந்தவருமான அந்தத் துரோணரைக்கண்டு குரூரமான செய்கையுள்ள பாஞ்சாலராஜகுமாரன் அருகில் ஓடிவந்தான். லோகதத்வங்களில் ஸமர்த்தரான துரோணர் தமக்குமிருத்யுவாக ஏற்படுத்தப்பட்டிருக்கிற அந்தத் திருஷ்டத்யும்னனைக்கண்டு யுத்தத்தில் திவ்யாஸ்திரங்களைவிட்டுவிட்டுப் பிராயோபவேசம் செய்தார். பிறகு, பார்ஷதன் இடக்கையினால் அவருடைய தலைமயிர்களைப் பிடித்துக்கொண்டு அப்பொழுது வீரர்களெல்லாரும் அலறும்பொழுதே அவருடைய தலையை அறுத்தான். அப்பொழுது நான்குபக்கத்திலுமுள்ள எல்லா வீரர்களும், 'துரோணர் கொல்லப்படத்தக்கவரல்லர்; கொல்லப்படத்தக்கவரல்லர்' என்று சொன்னார்கள். அவ்விதமாகவே தர்மங்களை அறிந்தவனான அர்ஜுனனும் ரதத்தினின்று கீழேயிறங்கி விரைவுடன் கையை உயரத்தூக்கிக்கொண்டு, 'ஆசார்யரைக்கொல்லாதே; அவரை உயிருடன் இங்கேகொண்டுவா' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டே இவனருகில் ஓடிவந்தான். நரசிரேஷ்ட! அவ்வாறு கௌரவர்களாலும் அர்ஜுனனாலும் தடுக்கப்படுகின்ற குரூரனான த்ருஷ்டத்யும்னனால் உன்னுடைய பிதா கொல்லவேபட்டார். குற்றமற்றவனே! உன்னுடைய பிதா கொல்லப்பட்டவுடனே, போர்வீரர்களனைவரும் பயத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி நாற்புறத்திலும் ஓடினார்கள். நாங்களும் உத்ஸாகத்தை இழந்தோம்' என்று சொன்னார். யுத்தத்தில் பிதாவினுடைய மரணத்தைக்கேட்டுத் துரோணபுத்திரர் தடியினாலடிக்கப்பட்ட ஸர்ப்பம்போல மிக்க கோபங்கொண்டார். ஐயா! அதிகமான விறகையடைந்து அக்னி எவ்வாறு ஜ்வலிக்குமோ அவ்வாறே துரோணபுத்திரர் யுத்தத்தில் கோபத்தி

ஞாலே மிக ஜ்வலித்தார்; அப்பொழுது உள்ளங்கையினால் உள்ளங்கையைப் பிசைந்துகொண்டும் பற்களால் பற்களைக் கடித்துக்கொண்டும் ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் சிவந்த கண்களையுடையவரானார்" என்று கூறினான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷ பர்வம் (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரன் துரோணருடைய வதத்தைக்கேட்டு அச்வத்தாமா என்ன சொன்னாரென்று வினவியது.)

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! முதியவரும் தமக்குப்பிதாவும் பிராம்மணருமான துரோணர் திருஷ்டத்யும்னனால் அதர்மத்தினால் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு அச்வத்தாமா யாது கூறினர்? எவரிடத்தில் மானவாஸ்திரம் வாருணாஸ்திரம் ஆக்னேயாஸ்திரம் வீர்யமுள்ள பிரம்மாஸ்திரம் ஐந்திராஸ்திரம் நாராயணாஸ்திரம் இவைகள் எப்பொழுதும் நிலைபெற்றிருந்தனவோ, குணங்களை விரும்புகின்ற எந்த மகாபுருஷர் இப்புவியில் பரசுராமரிடத்திலிருந்து தனுர்வேதத்தை அடைந்து புத்திரர்பொருட்டுத் திவ்யமான அஸ்திரங்களை உபதேசித்தாரோ தர்மிஷ்டரான அந்த ஆசார்யர் போர்க்களத்தில் திருஷ்டத்யும்னனால் அநீதியினால் கொல்லப்பட்டதைக்கேட்டு அந்த அச்வத்தாமா யாது கூறினர்? இவ்வுலகத்தில் மனிதர்கள் தம்புத்திரன் மட்டுமே தம்மைக்காட்டிலும் மிகுந்த குணசாலியாகவேண்டுமென்று விரும்புகிறார்கள். வேறொருவனையும் உலகத்திலெவ்விதத்தாலும் சிறக்க விரும்புகிறதில்லை. மகாத்மாக்களான ஆசார்யர்களுக்கு ரஹஸ்யங்கள் இருக்கவேஇருக்கின்றன. அவைகளைத் தம்புத்திரனுக்காவது அல்லது தம்மை அனுஸரிக்கின்ற சிஷ்யனுக்காவது கொடுப்பார்கள். ஸஞ்சய! சூரரான அந்த அச்வத்தாமா சிஷ்யராக இருந்து அவையனைத்தையும் விசேஷமாகப்பெற்று யுத்தத்தில் துரோணருக்கு அடுத்தவராக விளங்கிவந்தார். அவர் சஸ்திரமெடுப்பதில் பரசுராமரைப்போன்றவர்; யுத்தத்தில் இந்திரனுக்குச் சமானர்; வீர்யத்தில் கார்த்தவீர்யனுக்கு ஒப்பானவர்; புத்தியில் பிருஹஸ்பதிக்குத்துல்யர்; அசைவற்றுநிற்பதில் மலைக்குநேரானவர்; தேஜஸில் அக்னிக்கு நிகரானவர்; யௌவனமுடையவர்; ஆழ்ந்ததன்மையில் ஸமுத்திரம்போன்றவர்; குரோதத்

தில் ஸர்ப்பத்திற்கு நேரானவர்; உலகில் முதன்மையான தேராளி; திடமானவில்லைக் கையிற்கொண்டவர்; சிரமத்தைப்பொறுக்கும் சக்தியுடையவர்; வேகத்தில் காற்றுப்போன்றவர்; யுத்தத்தில் கோபங்கொண்டயமன்போல ஸஞ்சரிக்கிறவர்; யுத்தத்தில் பாணங்களைப்பிரயோகிக்கின்ற எவரால் பூமியானது பீடிக்கப்பட்டுப் பயத்தால் தளர்ச்சியடைந்து மேகத்தினுடைய இடிமுழக்கம்போன்ற சப்தத்தோடுநடுங்குகின்றதோ, ஸத்யபராக்கிரமரான எந்தவீரர் யுத்தத்தில் துன்பத்தையடைகிறதில்லையோ, எவர் [1] வித்யாஸ்நானமும் விரதஸ்நானமும் செய்தவரோ, எவர் தனுர்வேதத்தில் கரைகண்டவரோ, எவர் மகாஸமுத்ரம்போலக் கலக்கமுடியாதவரோ, எவர் தசரதகுமாரனான ராமன்போன்றவரோ அந்த அஸ்வத்தாமா, தார்மிகரான ஆசார்யர் அதார்மிகனான திருஷ்டத்யும்னனாலே யுத்தத்தில் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு யாது கூறினார்? யாகஸேனகுமாரனான த்ருஷ்டத்யும்னன் துரோணருக்கு மிருத்யுவாக ஏற்பட்டதுபோல மகாத்மாவான அந்தத் துரோணராலே திருஷ்டத்யும்னனுக்கு மிருத்யுவாக ஸ்ருஷ்டிக்கப்பட்ட அந்த அஸ்வத்தாமா, இரக்கமில்லாதவனும் பாபியும் குரூரனும் தீர்க்காலோசனையில்லாதவனுமான திருஷ்டத்யும்னனாலே ஆசார்யர் கொல்லப்பட்டாரென்பதைக் கேட்டு என்ன கூறினார்?" என்றுவினவினன்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுருவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)

(அஸ்வத்தாமா கோபத்துடன் யுதிஷ்டிரர்முதலானவர்களை நிந்தித்ததும், நாராயணாஸ்திரத்தின் வரலாறுமுதலியவற்றைக்கூறிப் பாண்டவர்களைக்கொல்வதாகச் சபதஞ் செய்ததும்.)

ஸஞ்சயன் சொல்லத்தொடங்கினன். "நரஸ்ரேஷ்டரே! பாபியான திருஷ்டத்யும்னனால் தமதுபிதா கபடத்தினால் கொல்லப்பட்டாரென்பதைக்கேட்டு அஸ்வத்தாமா கண்ணீராலும் ரோஷத்தாலும் நிரப்பப்பட்டார். ராஜேந்திரரே! கோபித்துக்கொண்டிருக்கிற அந்த அஸ்வத்தாமாவினுடைய தேகமானது பிரளயகாலத்தில் பிராணிகளுடைய உயிரைக்கவர விருப்பங்கொண்ட அந்தகனுடைய தேகம்போல் ஜ்வலிக்கின்றதாகக் காணப்பட்டது. பிறகு, அவர் கண்ணீரால் நிறைந்த

---

[1] வேதாத்யயனமுதலிய வித்தைகளையெல்லாம் கற்று, விரதங்களையெல்லாம் அனுஷ்டித்து முடித்தவர்.

இரண்டுகண்களையும் அடிக்கடி துடைத்துக்கொண்டும் கோபத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டும் துரியோதனனைப் பார்த்து இவ்விதமான வார்த்தைகளைச் சொல்லலானார். 'என்னுடைய பிதாவானவர், ஆயுதங்களைக் கீழேஎறிந்துவிட்டகாலத்தில், அற்பர்களால் விழும்படி செய்யப்படுதற்குக்காரணமான (பொய்ம்மொழிதலென்னும்) பாவமானது தர்மவேஷம்பூண்ட யுதிஷ்டிரனால் செய்யப்பட்டது. அது எனக்குத் தெரியும். நீசனுக்குரியதும் மிக்க குரூரமுமான தர்மபுத்திரனுடையசெய்கையானது என்னால் கேட்கப்பட்டது. யுத்தங்களில் முயற்சிசெய்கிறவர்களுக்கு வெற்றிதோல்வி என்னும் இவ்விரண்டும் நிச்சயமே. அரசனே! யுத்தகளத்தில் அவ்விரண்டினுள் வதமானது புகழப்படுகிறது. யுத்தம்செய்கிற ஒருவீரனுக்கு யுத்தகளத்தில் நியாயமாக ஏற்படும் வதமானது (பிறர்) துக்கிக்கத்தக்கதாகாது. அது அவ்விதம் பிராம்மணர்களால் (சாஸ்திரங்களில்) காணப்பட்டிருக்கிறது. புருஷசிரேஷ்ட! என்பிதா வீரலோகத்தை அடைந்துவிட்டார். ஸம்சயமில்லை. என்பிதா யுத்தகாலத்தில் மரணமடைந்தமையால் அவரைப் பற்றித் துக்கிக்கவேண்டியதில்லை. எல்லா வீரர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது தர்மத்தில் பிரவிர்த்தித்தவரான என்னுடையபிதா தம் தலைமயிரைப் (பிறர்) பிடித்தலை யடைந்தாரென்பது என்மர்மஸ்தானங்களை அறுக்கின்றது. நான் உயிருடனிருக்கும்பொழுதே என்னைப்பெற்றவரான துரோணர் மயிர்பிடிக்கப்படுதலை அடைந்தமையால் மற்றுள்ள புத்ரவான்கள் புத்ரர்களிடம் எவ்வாறு பிரியம்வைப்பார்கள்? மனிதர்கள் காமத்தினாலும் கோபத்தினாலும் அஜ்ஞானத்தாலும் சந்தோஷத்தாலும் பால்யத்தாலும் அதர்மங்களைச் செய்கின்றார்கள். அவ்வாறே (பிறரை) அவமதிக்கவும் செய்கிறார்கள். துராத்மாவும், குரூரனுமான திருஷ்டத்யும்னன் இச்சமயத்தில் நிச்சயமாக என்னை அலக்ஷியம்செய்துவிட்டு அவ்விதமான பெரிய அதர்மகாரியத்தைச் செய்தான். அந்தத் திருஷ்டத்யும்னன் அதிபயங்கரமான அதன் பலனையும் காணப்போகிறான். பொய்சொல்லியவனான பாண்டவனும் பெரிதான அகாரியத்தைச் செய்துவிட்டமையால் கொடியபலனைக் காணப்போகிறான். கபடத்தினால் ஆசார்யனை ஆயுதங்களைக் கீழேவைக்கும்படி அப்பொழுது செய்த தர்மராஜனுடைய ரக்தத்தைப் பூமி இப்பொழுது பானம்பண்ணப்போகிறது. கௌரவனே! நான் சத்தியத்தின்மீதும் [1] இஷ்டாபூர்த்தங்களின்மீதும் ஆணையிடுகிறேன். எல்லாப்

[1] சாந்திபர்வம் 946 - ஆவது பக்கம் குறிப்பிலும் இந்தப்பர்வம் 736 - ஆவது பக்கம் குறிப்பிலும் காண்க.

பாஞ்சாலர்களையுங் கொல்லாமல் எவ்விதத்தினாலும் நான் ஜீவித்திருக்க மாட்டேன். யான் பாஞ்சாலர்களைக் கொல்லும் விஷயத்தில் எல்லா வித உபாயங்களாலும் முயற்சிசெய்யப்போகிறேன். பாவத்தைச் செய்தவனான திருஷ்டத்யும்னனையும் யுத்தத்தில் நான் கொல்லப் போகிறேன். கௌரவ! மிருதுவாகவோ குரூரமாகவோ இருக்கின்ற ஏதாவதொரு செய்கையினால் பாஞ்சாலர்களுடைய வதத்தைச்செய்து நான் மனஆறுதலை அடையப்போகிறேன். ஆண்மையிற் சிறந்தவனே! மனிதர்கள், இந்த லோகத்திலும் பரலோகத்திலும் சம்பவிக்கின்ற பெரிய பயத்தினின்று காக்கின்றனரென்றே புத்ரர்களை விரும்புகிறார்கள். மலைபோன்றபிள்ளையும் சிஷ்யனுமாயிருக்கின்றயான் உயிரோடிருக்குங்காலத்தில் என்பிதா நாதனற்றவர்போல அவ்விதமான நிலைமையை அடைந்துவிட்டார். என்னைப் புத்ரனாக அடைந்து அவர் மயிர்பிடித்தலைப் பெற்றமையால் தேவஸம்பந்தம்பெற்றவைகளான என் அஸ்திரங்களையும் கைகளையும் பராக்கிரமத்தையும் நிந்திக்கவேண்டும். பாரதர்களுட்சிறந்தவனே! என்பிதா பரலோகத்தை யடைந்திருந்தாலும் அவருக்கு நான் கடனாளியாகாதிருக்கத்தக்க காரியத்தைச் செய்யப்போகிறேன். மேலானவன் ஒருகாலும் தற்புகழ்ச்சிசெய்யலாகாது. பிதாவினுடையவதத்தை ஸகிக்காதவனாயிருக்கின்றயான் பௌருஷத்தை இவ்விடத்தில் இப்பொழுது சொல்லிக்கொள்ளப்போகிறேன். பிரளயகாலத்தை யுண்டுபண்ணுகிறவன்போல் எல்லாவீரர்களையும் அழிக்கின்ற என்னுடைய வீர்யத்தை ஜனார்த்தனரும் பாண்டவர்களும் இப்பொழுது பார்க்கட்டும். தேவர்களாவது கந்தர்வர்களாவது அஸுரர்களாவது ராக்ஷஸர்களாவது மனுஷ்யர்களிற்சிறந்தவர்களாவது ரணகளத்தில் ரதத்தின்மீதிருக்கின்ற என்னை ஜயிப்பதற்குச் சக்தர்களாகார்கள். இவ்வுலகத்தில் நானும் அர்ஜுனனுமாகிய இருவரையுந் தவிர அஸ்திரங்களையறிந்த (வேறு) மனிதன் ஒருவனாவது ஓரிடத்திலுமில்லை. ஜ்வலிக்கின்ற கிரணங்களுடையமத்தியில் சூரியன்போல் நான் ஸேனையின்மத்தியை அடைந்தவனாகித் தேவர்களால் சிருஷ்டிக்கப்பட்ட அஸ்திரங்களைப் பிரயோகிக்கப்போகிறேன். மகாயுத்தத்தில் கணக்கில்லாமல் என்னுடைய வில்லினின்று இப்பொழுதே என்னால் பிரயோகிக்கப்படும் அம்புகள் பராக்கிரமத்தை வெளிப்படுத்திக்கொண்டு பாண்டவர்களை நாசம்பண்ணப்போகின்றன. அரசனே! இப்பொழுது வர்ஷதாரைகளால் மூடப்படுவதுபோலக் கூர்மையுள்ள என்னுடைய அம்புகளாலே நான்குபக்கத்திலும் நெருக்கமாக மூடப்பட்டிருக்கின்ற எல்லாத் திக்குக்களையும் பாண்டவர்கள் பார்க்கப்போகி

ரூர்கள். நான் சர்மாரிகளை நான்குபக்கங்களிலும் இறைத்துக்கொண்டு பெருங்காற்று மரங்களை முறிப்பதுபோல் பயங்கரமான சப்தத்துடன் கூடின சத்துருக்களை (யுத்தத்தில்) தள்ளப்போகிறேன். கௌரவனே! எவ்வித அஸ்திரம் என்னிடத்தில் பிரயோக உபஸம்ஹாரக்ரமங்களுடன் கூடியதாக இருக்கிறதோ அவ்விதமான அஸ்திரத்தைப் பீபத்ஸுவாவது ஜனார்த்தனராவது பீமஸேனனாவது நகுலஸஹதேவர்களாவது ராஜாவான யுதிஷ்டிரனாவது துராத்மாவான பார்ஷதனாவது சிகண்டியாவது ஸாத்யகியாவது அறியமாட்டார். முற்காலத்தில் ஸ்ரீமந்நாராயணருக்குச் சாஸ்திரத்தில் சொன்ன முறைப்படி என்பிதாவினால் நமஸ்காரம்செய்து நைவேத்யம் செய்யப்பட்டது. அந்தப் பகவான் பிராம்மணரூபத்துடன் ஸமீபத்தில்வந்து, பிறகு, அந்த உபஹாரத்தைத் தாமாகவே ஏற்றுக்கொண்டு வரத்தைக் கொடுக்க ஆரம்பித்தார். என் பிதா உத்தமமான நாராயணாஸ்திரத்தை அவரிடத்தினின்றும் வரமாகக் கேட்டார். ராஜனே! பிறகு, தேவநாதரான ஸ்ரீபகவான், 'பிராம்மணோத்தம! உனக்குச் சமமானமனிதன் ஒருவனாவது ஓரிடத்திலும் உண்டாகப்போகிறதில்லை. பிராம்மண! இந்த அஸ்திரமானது திடீரென்று எவ்விதத்தாலும் பிரயோகிக்கத்தக்கதன்று. இது பிரயோகிக்கப்பட்டால் சத்துருவைக் கொல்லாமல் திரும்பாது. பிரபுவே! இந்த அஸ்திரம் ஒருவராலும் ஜயிக்கமுடியாதது. இந்த அஸ்திரத்தினால் எவன் கொல்லப்படாமலிருப்பான்? கொல்லத்தகாதவனைக்கூட இது கொல்லுமன்றோ? ஆதலால், இதனைப் பிரயோகிக்கக்கூடாது. பகைவரைவாட்டுபவனே! யுத்தத்தில் ரதத்தையும் சஸ்திரங்களையும் விட்டுவிடுதலும் பகைவர்களை வேண்டுதலும் சரணமடைதலும் மகாஸ்திரங்களைத் தணிக்கும்விஷயத்தில் உபாயங்கள். யுத்தத்தில் (பகைவர்களை) பீடிக்கின்றவன் எல்லா விதத்தாலும் துன்பப்படுத்தப்பட்டானேயாகில் கொல்லத்தகாதவர்களையும் கொல்லலாம்' என்றார். அந்த நாராயணாஸ்திரத்தை என்னுடையபிதா பெற்றுக்கொண்டு எனக்கும் சொன்னார். அந்தப் பிரபுவான ஸ்ரீமந்நாராயணர், 'யுத்தத்தில் இந்த அஸ்திரத்தினாலே எல்லா அஸ்திரவர்ஷங்களையும் பலவாறாக நீ நாசம்செய்வாய். தேஜஸினாலும் ஜ்வலிக்கப்போகிறாய்' என்று அனுக்ரஹித்தார். பிரபுவான ஸ்ரீபகவான் இவ்வாறு சொல்லிவிட்டு ஸ்ரீவைகுண்டத்தைக் குறித்துச்சென்றார். நாராயணரிடத்தினின்றுகிடைத்த அப்படிப்பட்ட இந்த அஸ்திரமானது பிதாவுக்குப் பிரியனான என்னால் அடையப்பட்டது. அந்த அஸ்திரத்தினால் ரணகளத்தில் இந்திரன் அஸுரர்களைத் துரத்தியடிப்பதுபோலப் பாண்டவர்களையும் பாஞ்சா

லர்களையும் மாத்ஸ்யர்களையும் கேகயர்களையும் நான் ஓடும்படி செய்யப் போகிறேன். பாரத! என் அம்புகள் எப்படியெப்படி நான் விரும்பு வேனோ அப்படி அப்படி ஆகிச் சத்ருக்கள் பராக்கிரமத்தை வெளிப் படுத்துபவர்களாயிருந்தாலும் அவர்களின்மீது விழுந்து தாக்கும். நான் யுத்தத்திலிருந்துகொண்டு யதேஷ்டமான கல்மழையினாலும் ஈட் டிகளாலும் பாணங்களாலும் மகாரதர்களை ஓடும்படிசெய்வேன். கூர் மையுள்ள கோடாலிகளையும் நான் ஸம்சயமில்லாமல் பிரயோகிப்பேன். சத்துருக்களைத் தபிக்கச்செய்கிறவனான நான் மகிமைதங்கின நாராய ணாஸ்திரத்தினால் பகைவர்களான பாண்டவர்களைப் பயனற்றவர்களாக்கி அழிப்பேன். மித்ரத்துரோகியும் பிரம்மத்துரோகியும் குருத்துரோ கியுமாயிருக்கின்றவனும் மூர்க்கனும் 'மிகவும் நிந்திக்கப்பட்டவனும் பாஞ்சாலர்களுள் இழிந்தவனுமான திருஷ்டத்யும்னன் இப்பொழுது என்னிடமிருந்து உயிரோடு விடுபடப்போவதில்லை' என்று கூறினார். துரோணபுத்திரருடைய இந்த வார்த்தையைக்கேட்டுக் கௌரவசேனை யானது திரும்பியது. பிறகு, எல்லாப் புருஷசிரேஷ்டர்களும் மகாசங் கங்களை ஊதினார்கள்; பேரீவாத்தியங்களை அடித்தார்கள். ஸந்தோஷ முடையவர்களான வீரர்கள் ஆயிரக்கணக்கான டிண்டிமவாத்தியங்களை அடித்தார்கள். குதிரைக்குளம்புகளாலும் சக்கர நுனிகளாலும் நன்றாக அரைக்கப்பட்ட பூமியானது சப்தித்தது. நெருங்கிய அத்தகையசப்த மானது ஆகாயத்தையும் ஸ்வர்க்கலோகத்தையும் பூமியையும் எதிரொலி யடையும்படி செய்தது. மேகத்தின் சப்தம்போன்றதான அந்தச் சப் தத்தை ரதிகசிரேஷ்டர்களான பாண்டவர்கள் கேட்டு ஒன்றுசேர்ந்து ஆலோசித்தார்கள். பாரதரே! துரோணபுத்திரரோ அவ்வாறு சொல் லிவிட்டு ஜலத்தைத்தொட்டு ஆசமனீயம்செய்து அப்பொழுது திவ்ய மான நாராயணாஸ்திரத்தை வெளியிட்டார்.

---

## நூற்றத்தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)



(கௌரவசேனைகளுடைய சப்தத்தைக்கேட்டுப் பயந்த யுதிஷ்டிரர் ஓடுகின்ற கௌரவஸேனையைத் திருப்பிவருகிறவன் யாரென்றுகேட்க, அர்ஜுனன் அதனைச் சொல்லி த்ரோணவதத்தில் உதாஸீனமாயிருந்ததற்காகத் தங்களை நிந்தித்துக்கொண்டது.)

பிரபுவே! பிறகு, அந்த நாராயணாஸ்திரந் தோன்றியவுடனே, மேகமில்லாத ஆகாயத்தில் நீர்த்துளிகளுடனும் இடியுடனுங்கூடின காற்றுவீசியது; பூமியும் அசைந்தது; பெருங்கடலும் கலங்கியது. சமுத்திரத்தைநோக்கி ஓடுகின்ற நதிகள் அச்சமயத்தில் எதிர்நோக்கிச் செல்லத்தொடங்கின. பாரதரே! அந்தஸமயத்தில் மலைகளின் சிகரங்கள் சிதறின. மிருகங்கள் பாண்டவசேனையை அப்ரதக்ஷிணமாகச் சுற்றிவந்தன; திசைகளெல்லாம் இருளால் மூடப்பட்டன; சூரியனும் ஒளி மழுங்கினான். ஊனுண்பவைகளான பிராணிகள் ஸந்தோஷத்துடன் வந்தன. அரசரே! தேவர்களும் அஸுரர்களும் கந்தர்வர்களும் பயமடைந்தவர்களானார்கள். பெரிதான அந்த அனர்த்தத்தைக் கண்டு 'எப்படிச்செய்யலாம்? எப்படிச்செய்யலாம்?' என்கிற நெருங்கிய சப்தம் தோன்றியது. வேந்தரே! கோரஸ்வரூபமானதும் பயங்கரமாயுள்ளதுமான அந்த அஸ்வத்தாமாவினுடைய அஸ்திரத்தைக்கண்டு எல்லா அரசர்களும் பயந்தார்கள்; துன்பத்தையுமடைந்தார்கள்" என்று

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! பித்ருசோகத்தினால் மிக்க ஸந்தாபத்தையுடையவரும் பிதாவினுடைய வதத்தைப் பொறாதவருமான துரோணபுத்திரராலே யுத்தத்தில் ஸைனியங்கள் திருப்பப்பட்டவுடன் கௌரவர்கள் எதிர்த்துவருவதைக்கண்டு திருஷ்டத்யும்னனைப் பாதுகாக்கும் விஷயத்தில் பாண்டவர்கள் யாது ஆலோசனைசெய்தார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "முன்னே கௌரவர்கள் ஓடினதைக்கண்டும் பின்னே அஸாத்தியமான சப்தத்தைக்கேட்டும் யுதிஷ்டிரர் அர்ஜுனனைப்பார்த்து, 'அர்ஜுன! மகாஸுரனான விருத்திரன் வஜ்ரபாணியான இந்திரனால் கொல்லப்பட்டதுபோல் திருஷ்டத்யும்னனால் யுத்தத்தில் துரோணாசாரியர் கொல்லப்பட்டவுடன், யுத்தத்தில் ஜயத்தைவிரும்பாதவர்களும் தீனமான மனத்தையுடையவர்களுமான கௌரவர்கள் தத்தம் தேகத்தை ரக்ஷித்

துக்கொள்ளும் விஷயத்தில் புத்தியைச் செலுத்திக்கொண்டு யுத்தத்தை விட்டோடினார்கள். சில அரசர்கள் சுற்றுகின்றவைகளும் இரண்டுபக்கத்திலுமுள்ள ஸாரதிகள் கொல்லப்பட்டவைகளும் கொடித்துணிகளையும் கொடிமரங்களையும் குடைகளையுமிழந்தவைகளும் ஏர்க்கால்கள் சிதறிப்போனவைகளும் [1] நீடங்கள் உடைக்கப்பட்டவைகளும் மனங்கலங்கின குதிரைகளோடுகூடியவைகளுமான ரதங்களை விட்டுவிட்டு வேறு ரதங்களின்மீதேறிக்கொண்டு பயந்தவர்களாகவும் நல்ல மனநிலைமையையிழந்தவர்களாகவும் ஓடினார்கள். மற்றுஞ்சிலர் விரைவுடனே கால்களாலே குதிரைகளை வேகமாகத் தூண்டிக்கொண்டு ரதங்களைத் தாங்களே நடத்துகின்றவர்களாகி அச்சுக்களும் நுகத்தடிகளும் சக்கரங்களும் நொறுக்கப்பட்டமையால் ஆங்காங்கு ரதங்களால் இழுக்கப்பட்டார்கள். சிலர் சிதறின ரதங்களை விட்டுவிட்டுக் கால்களாலேயே ஓடினார்கள் சிலர் குதிரையின்மீதேறினவர்களாகவும் பாதி நழுவின சேணங்களுள்ளவர்களாகவும் இழுக்கப்பட்டார்கள். சிலர் யானைகளினுடைய கழுத்தில் அம்புகளால் தைக்கப்பட்டவர்களும் ஆஸனம் நழுவினவர்களுமாக அம்புகளாலே அடிக்கப்பட்டு ஓடுகின்ற யானைகளாலே பத்துத்திக்குக்களிலும் கொண்டுபோகப்பட்டார்கள். சிலர் சஸ்திரங்களையும் கவசங்களையுமிழந்தவர்களாக வாகனங்களிலிருந்து பூமியில் விழுந்தார்கள். மற்றவர்கள் வண்டியுருளைகளாலே நன்றாக அறுக்கப்பட்டவர்களும் குதிரைகளாலும் யானைகளாலும் துகைக்கப்பட்டவர்களும பயத்தினால், 'அப்பா' புத்திரா" என்று அலறுகின்றவர்களுமாக ஓடினார்கள். அவர்கள் துக்கத்தினால் சக்திகுன்றினவர்களாகி ஒருவரை ஒருவர் அறியவில்லை. வேறுசிலர் நன்கு காயப்படுத்தப்பட்ட மைந்தர்களையும் தந்தையர்களையும் நண்பர்களையும் உடன்பிறந்தார்களையும் தூக்கிவைத்துக் கவசங்களையுங் கழற்றிவிட்டு ஜலத்தினால் நனைத்தார்கள். லக்ஷக்கணக்கான மற்ற யுத்தவீரர்கள் ஓடுவதில் நோக்கங்கொண்டார்கள். துரோணர் கொல்லப்பட்டவுடன், அவ்வித நிலைமையை அடைந்து ஓடுகின்ற அந்தக் கௌரவஸேனையானது மறுபடி எவனால் திருப்பப்பட்டது? உனக்குத் தெரியுமானால் எனக்கு உரைப்பாயாக. கனைக்கின்ற குதிரைகளினுடைய சப்தமும் கர்ஜிக்கின்ற யானைகளுடைய சப்தமும ரதத்தின் நேமியொலிகளோடு கலந்து மிகுதியாகக் கேட்கப்படுகின்றன. கௌரவர்களுடைய சேனையாகிற மகாஸமுத்திரத்தில் மிக்க தீவ்ரமான சப்தங்கள் தோன்றிவிட்டன. அடிக்கடி சப்

[1] பீஷ்மபர்வம 280-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

தங்கள் தோன்றிக்கொண்டேயிருக்கின்றன; நம்மைச்சேர்ந்தவர்களை நடுங்கும்படிசெய்கின்றன. மயிர்க்கூச்சத்தையுண்டுபண்ணுகிறதும் நெருங்கினதாகக் கேட்கப்படுகிறதுமான இந்தச் சப்தமானது இந்திரனோடு கூடின மூவுலகங்களையும் விழுங்கிவிடுமென்பது என்னுடைய எண்ணம். இந்தப் பயங்கரமான சப்தமானது வஜ்ரதரனான இந்திரனுடைய சப்தமென்றே எண்ணுகிறேன். துரோணர் கொல்லப்பட்டவுடன், கௌரவர்களுக்கு உதவிசெய்வதன்பொருட்டு இந்திரனே வெளிப்படையாக வருகிறானென்று எண்ணுகிறேன். தனஞ்சய! அவ்விடத்திலுண்டாகின்ற மிக்க பயங்கரமும் பெரிதுமான அந்தச் சப்தத்தைக்கேட்டு நமக்கு மயிர்க்கூச்சமுண்டாகிறது. நமது தேராளிகளும் யானைகளும் நடுக்கமடைந்தனர். பிளக்கப்பட்ட இந்தக் கௌரவர்களை நிலைநிறுத்தி எந்த மகாரதன் தேவராஜன்போல் யுத்தரங்கத்தில் மறுபடியும் யுத்தம் செய்வதன்பொருட்டுத் திருப்புகிறான்?' என்று வினவினார்.

அர்ஜுனன், 'அரசரே! 'அஸ்திரங்களைக் கீழே வைத்துவிட்டவரான ஆசாரியர் கொல்லப்பட்டவுடன், தார்த்தராஷ்டிரர்களை நிலைநிறுத்திக்கொண்டு யார் கர்ஜிக்கின்றான்' என்று எவர்விஷயத்தில் உமக்கு ஸம்சயம் உண்டாயிருக்கிறதோ அந்த வீரரைப்பற்றி நான் சொல்லுவேன். அவருடைய வீர்யத்தை ஆதாரமாகப்பற்றியே கௌரவர்கள் தம்முயற்சிகொண்டு உக்ரமான கார்யத்தைச் செய்வதன்பொருட்டு வீர்யத்தை அடைந்தவர்களாகிச் சங்கங்களை ஊதுகின்றனர். அவர் அகார்யத்தில் வெட்கமுள்ளவர்; தோள்வலிமிக்கவர்; மதயானைபோல நடப்பவர்; வீர்யத்தில் இந்திரனுக்கும் உபேந்திரனுக்கும் ஒப்பானவர்; கோபத்தில் யமன்போன்றவர்; புத்தியில் பிருகஸ்பதிக்கு ஒப்பானவர்; நீதியோடுகூடியவர்; மஹாரதர்; உக்ரமான செய்கையுள்ளவர்; கௌரவர்களுக்கு அபயம்கொடுப்பவர். அவர் பிறந்தவுடன் துரோணர் உத்தமரான பிராம்மணர்களுக்கு ஆயிரம்பசுக்களைக் கொடுத்தார். அந்த அஶ்வத்தாமா இப்பொழுது கர்ஜிக்கிறார். அவர் பிறந்தவுடன், உச்சைஶ்ரவம் என்னும் அஶ்வரத்னம்போலக் கனைக்கின்ற அந்த வீரரால் பூமியும் மூவுலகங்களுமாகிய அனைத்துமே நடுங்கும்படி செய்யப்பட்டன. அந்த த்வனியைக்கேட்டு, கண்ணிற்குப்புலப்படாத ஒருபிராணியானது அப்பொழுது அவருக்கு 'அஶ்வத்தாமா' என்று பெயரிட்டது. பாண்டவரே! அப்படிப்பட்டசூரர் இப்பொழுது கர்ஜிக்கிறார். எவர் அநாதன்போல் பார்ஷதனால் ஆக்ரமிக்கப்பட்டு அவ்வாறு கொல்லப்பட்டாரோ அவருக்கு அப்படிப்பட்ட கொடியசெய்கையினாலேயே

(பழிக்குப்பழிவாங்க) நாதன் ஏற்பட்டுவிட்டான். யுத்தகளத்தில் என் ஆசாரியரைப் பாஞ்சாலராஜகுமாரன் தலைமயிரில் கைபோட்டதாகிய அப்படிப்பட்ட கெட்டசெய்கையைத் தமது பௌருஷத்தையறிந்தவரான துரோணபுத்திரர் ஒருகாலும் பொறுக்கமாட்டார். அந்த அஸ்வத்தாமா அந்த அக்கிரமமான செய்கையினால் நம்மனைவரையும் நாசம் செய்வாரென்பதே என்னுடையஎண்ணம். தர்மங்களையறிந்தவரும் ஸாதுவென்று பிரஸித்திபெற்றவருமான உம்மால் ராஜ்யநிமித்தமாக ஆசார்யர் வினைக வஞ்சிக்கப்பட்டார். உம்மால் செய்யப்பட்ட அந்தக் காரியம் மிகப்பெரிய அதர்மமாகும். வாலியைக் கொன்றதால் எவ்வாறு அபகீர்த்தி ராமனிடத்தில் நிலைபெற்றிருக்கிறதோ அவ்வாறே துரோணருடையவதத்தினால் நேர்ந்திருக்கிற இந்த அபகீர்த்தியானது சராசரங்களுடன்கூடின மூவுலகங்களிலும் ஸ்திரமாக இருக்கப்போகிறது. 'இவன் என்னுடைய சிஷ்யன்; பாண்டுநந்தனன்; எல்லாத் தர்மங்களோடுங்கூடினவன். இவன் பொய்சொல்லமாட்டான்' என்று அவர் உம்மிடத்தில் நம்பிக்கைவைத்திருந்தார். ஸத்தியமென்கிற அங்கிக்குள் நுழைந்தநீர் யானைகொல்லப்பட்டதென்னும் காரணத்தினால் ஆசார்யருக்கு அவ்விதமான பொய்யைச் சொன்னீர். அரசரே! ஆகலால், பிரபுவான ஆசார்யர் சஸ்திரத்தைவிட்டுவிட்டு எனதென்னும் பற்றுமற்று மதிமயங்கித் தளர்ச்சியடைந்தார். நீரும் பார்த்தீர். புத்ரரிடத்தன்புள்ளவரும் ஆசார்யருமான அந்தத் துரோணரோ சோகத்தையடைந்து போரில் நோக்கமற்றவராகிச் சிஷ்யரால் சாஸ்வததர்மத்தை விட்டுக் கொல்விக்கப்பட்டார். சஸ்திரஸந்யாஸம் செய்திருக்கின்ற ஆசார்யரை நீர் அதர்மத்தினாலே கொல்லும்படி செய்வித்தமையால், ஸமர்த்தராயிருந்தால் இப்பொழுது மந்திரிகளோடு சேர்ந்து பார்ஷதனைக் காப்பாற்றும். பந்துவையிழந்தவரும் கோபங்கொண்டவருமான ஆசார்யபுத்திரராலே விழுங்கப்படும் பார்ஷதனை இப்பொழுது நாமனைவரும் காப்பாற்றுவதற்குச் சக்தியற்றவர்களே. மனிதர்களுக்கு மேற்பட்டவரான எந்த அஸ்வத்தாமா எல்லாப் பிராணிகளிடத்திலும் நேசத்தைப் பாராட்டுகிறாரோ அவர் இப்பொழுது தம்பிதாவுக்கு நேர்ந்த குடுமிப்பிடித்தலைக்கேட்டு நம்மனைவரையும் யுத்தத்தில் தகிக்கப்போகிறார். ஆசார்யரிடத்தில் மிக்க விருப்பமுள்ளவனான நான் அலறிக்கொண்டிருக்கும்பொழுதே தர்மத்தை அலக்ஷியம்செய்து சிஷ்யனாலே ஆசாரியர் கொல்லப்பட்டார். நமக்கு வயது பெரும்பான்மையாகச் சென்றுவிட்டது. மிகுதியிருக்கிற நம்முடைய வாழ்நாளோ மிகச்சிலவே. அந்த நிலைமையில் விரோதமான இந்தப் பெரிய அதர்ம

மானது செய்யப்பட்டுவிட்டது. எந்த ஆசாரியர் எப்பொழுதும் அன்பினாலும் தர்மத்தினாலும் தந்தைபோலிருந்தாரோ அவர் அற்பகாலம் இருக்கக்கூடிய ராஜ்யநிமித்தமாக உயிரை இழக்கும்படி செய்விக்கப்பட்டார். அரசரே! பூமியில் அவாமிக்க புத்திரர்களையுடைய திருதராஷ்டிரராலே பூமண்டலம்முழுவதும் பீஷ்மரின் பொருட்டும் துரோணரின்பொருட்டும் விடப்பட்டது. ஆசார்யர் அப்படிப்பட்ட விருத்தியைப்பெற்று எப்பொழுதும் பிறரால் மரியாதை செய்யப்பட்டவராகவிருந்துகொண்டு புத்திரனைக்காட்டிலும் மேற்பட்டவனாக என்னையே எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருந்தார். உம்மையும் என்னையும் பார்த்துக்கொண்டு அஸ்திரங்களை வைத்துவிட்டவரான ஆசார்யர் யுத்தத்தில் கொல்லப்பட்டார். போர்புரிகின்ற இந்தத் துரோணரை இந்திரனும் கொல்வது முடியாது. இழிவானவர்களும் ராஜ்யநிமித்தமாகப் பேராசைகொண்ட புத்தியுள்ளவர்களுமான நம்மால் பிராயமுதிர்ந்தவரும் தினந்தோறும் உபகாரம்செய்யும் தன்மையுள்ளவருமான அப்படிப்பட்ட ஆசார்யருக்குத் துரோகம் செய்யப்பட்டுவிட்டது. ராஜ்யஸுகத்திலுள்ள பேராசையால் இந்தத் துரோணர் நன்றாகக்கொல்லும்படிசெய்விக்கப் பட்டமையால் பெரிதும் மிக்க குரூரமுமான பாவகாரியம் நம்மால் செய்யப்பட்டுவிட்டது. 'இந்திரகுமாரன் என்னிடத்திலுள்ள அன்பால் புத்திரர்களையும் சகோதரர்களையும் தந்தையர்களையும் பார்யைகளையும் உயிரையும் (மற்றும்) எல்லாவற்றையும் விடுவான்' என்று இப்படியல்லவோ என்னுடைய ஆசாரியர் எண்ணியிருந்தார். அரசரே! பிரபுவே! கொல்லப்படுகின்ற அந்தத் துரோணர் ராஜ்யத்தில் விருப்பமுள்ள என்னாலே உபேக்ஷிக்கப்பட்டார். ஆதலால், யான் தலைகீழாகத் தொங்குபவனாகி நரகத்தை யடைந்துவிட்டேன். பிராம்மணரும் பிராயமுதிர்ந்தவரும் ஆசார்யரும் அஸ்திரங்களைக் கீழேவைத்தவரும் பெருந்தவமுடையவருமான துரோணாசாரியரை ராஜ்யநிமித்தமாகக்கொன்றுவிட்டபிறகு, நமக்கு மரணமே சிறந்தது; பிழைத்திருப்பது சிறந்ததன்று' என்றுகூறினான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)



(பீமன் தனதுபலத்தைக்கூறித் தானே அஸ்வத்தாமாமுதலியோரை வெல்வதாகச் சபதஞ்செய்ததும், த்ருஷ்டத்யும்னன் க்ஷத்ரிய தர்மத்தைக்கூறித் தான் துரோணரைக்கொன்றது நியாயந்தான் என்றதும்.)

மகாராஜரே! அர்ஜுனனுடைய வார்த்தையைக்கேட்டு அந்த இடத்திலுள்ள மகாரதர்கள் அவனைநோக்கி அப்பிரியத்தையாவது பிரியத்தையாவது சொல்லவில்லை. பரதஸ்ரேஷ்டரே! பிறகு, மிக்க தோள்வலியமைந்த பீமஸேனன் கோபங்கொண்டு குந்திபுத்திரனை அர்ஜுனனை நிந்தித்துக்கொண்டு வசனிக்கலானான். 'அர்ஜுன! நீ அரண்யத்தில் வஸிக்கின்ற ரிஷிபோலவும் ஹிம்ஸையை விலக்கினவனும் கடுமையான விரதமுள்ளவனுமான பிராம்மணன்போலவும் தர்மத்துடன்கூடின வசனத்தை உரைக்கிறாய். துன்பத்திலிருந்து காப்பாற்றுகிறவனும் யுத்தத்தினால் ஜீவிக்கிறவனும் மாதர்களிடத்திலும் ஸாதுக்களிடத்திலும் பொறுமையுள்ளவனுமான க்ஷத்திரியன் சீக்கிரமாகப் பூமியையும் தர்மத்தையும் கீர்த்தியையும் ஐஸ்வர்யங்களையும் பெறுகிறான். அப்படிப்பட்ட நீ க்ஷத்திரியர்களுக்குரிய எல்லாக் குணங்களையுமுடையவன்; குடும்பத்தைத்தாங்குகிறவன். நீ கற்றறியாதவன்போலப் பேசுவதனால் இப்பொழுது சோபிக்கவில்லை. கௌந்தேய! இந்திராணிக்குப் பர்த்தாவான இந்திரனுடைய பராக்கிரமம் போன்றது உன்னுடைய பராக்கிரமம். பெருங்கடலானது கரையை எவ்வாறு தாண்டாதோ அவ்வாறே தர்மத்தை நீ தாண்டவில்லை. பதின்மூன்றுவருஷகாலம் பொறுமையைப் பாராட்டாமல் தர்மத்திலேயே விருப்பமுள்ளவனாகவிருந்த உன்னை யார்தான் இப்பொழுது பூஜிக்க மாட்டான்? அப்பா! உன்னுடைய மனமானது பாக்யவிசேஷத்தால் இப்பொழுது ஸ்வதர்மத்தை அனுஸரித்திருக்கிறது. தவறுதவனே! எப்பொழுதும் உன்னுடைய புத்தியானது பாக்கியாதிசயத்தினால் தயையில் நிலைபெற்றிருக்கிறது- தர்மத்தில் பிரவிர்த்தித்திருக்கின்ற தர்மராஜருடைய ராஜ்யம் அதர்மத்தினால் கவரப்பட்டது. மேலும், த்ரௌபதியும் சத்துருக்களால் சபையின்கண் கொண்டுவரப்பட்டுப் பலாத்காரமாகப் பிடிக்கப்பட்டாள். மரப்பட்டையும் மான்தோலும் உடுத்தவராக நாமனைவரும் பகைவர்களால் காட்டிற்கு ஓட்டப்பட்

டோம். பகைவர்களாலேற்படுத்தப்பட்ட அவ்விதமான நிலைமையை அடையத்தகாதவரான நாமனைவரும் ஸத்தியத்திலும் தர்மத்திலும் நிலைபெற்றவர்களாயிருந்துகொண்டு, தீயவழியில் நிற்பவர்களான சத்துருக்களுடைய அவ்விதமான அனேக அக்கிரமங்களையும் பதின்மூன்றுவர்ஷகாலம் பொறுத்தோம். தோஷமற்றவனே! உன்னாலும் இவ்விதமான கோபத்திற்குக் காரணமான அனேக அபராதங்கள் சகிக்கப்பட்டன. க்ஷத்திரியதர்மத்தில் பற்றுதலுள்ளவனான உன்னாலே இதெல்லாம் அனுஷ்டிக்கப்பட்டது. அவ்விதமான அநீதியைநினைத்து இப்பொழுது உன்னோடுகூடியவனாகவே நமது ராஜ்யத்தை அபஹரித்தவர்களும் அற்பர்களுமான எல்லாச் சத்துருக்களையும் பரிவாரங்களுடன் நான் கொல்லப்போகிறேன். இது உன்னால் முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது. 'நாம் யுத்தத்திற்காக வந்து சக்தியுள்ளவரையில் இப்பொழுது முயற்சி செய்வோம்' என்று உன்னால் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க, நீ எங்களை அருவருக்கிறாய். ஸ்வதர்மத்தை அறிவதற்கு நீ விரும்பவில்லை. உன் வசனமுழுவதும் பிரயோசனமற்றது. பகைவர்களை அழிப்பவனே! காயப்படுத்தப்பட்டவர்களுடைய புண்ணில் காரத்தை வார்ப்பவன்போலப் பயத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற எங்களுடைய மர்மஸ்தானங்களை வாக்கினால் அறுக்கிறாய். என்னுள்ளமானது உன்னுடைய வாக்காகிற முள்ளினால் பீடிக்கப்பட்டு இரண்டாகப் பிளக்கப்படுகிறது. புகழத்தக்க உன்னையும் எங்களையும் நீ புகழாமையால் தார்மிகனாயிருந்தும் இந்தப் பெரிய அதர்மத்தை நீ அறியவில்லை. தனஞ்சய! எவன் உன்னுடைய பதினாறில் ஒருபாகத்தைக்கூட முழுதும் அடைவதற்குத் தகுதியுள்ளவனன்றோ அப்படிப்பட்ட அஸ்வத்தாமாவை வாஸுதேவர் எதிரிலிருக்கும்பொழுதே புகழுகிறாய். நீயே உன்குற்றங்களை எடுத்து வெளியிட்டுக்கொள்வதில் ஏன் வெட்கமடையவில்லை? பார்த்த! என்னிருகைகளுக்கும் பதினாயிரம் யானைகளின் பலம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. குரோதத்தால் பூமியைப் பிளப்பேன்; பர்வதங்களைச் சிதறவடிப்பேன்; பயங்கரமானதும் ஸ்வர்ணமாலையுடன்கூடியதுமான இந்தப் பெரிய கதையைச்சுழற்றி மலைபோற் பிரகாசிக்கின்ற மரங்களைக் காற்றுமுறிப்பதுபோல முறிப்பேன். பார்த்த! இந்திரனோடுகூடினவர்களும் ராக்ஷஸகணங்களோடு கூடியவர்களும் அஸுரர்கள் உரகர்கள் மனிதர்கள் இவர்களோடுகூடினவர்களும் சேர்ந்து வந்தவர்களுமான தேவர்களையும் அம்புகளால் ஓடும்படிசெய்வேன். நரசிரேஷ்ட! அளவற்ற வலிமையுள்ளவனே! நீ பிராதாவான என்னை இவ்விதமான ஸ்வபாவமுள்ளவ

னென்று அறிந்திருந்தும் துரோணபுத்திரரிடத்தினின்று பயத்தைப் பாராட்டுவதற்குத் தகுந்தவனல்லை. பீபத்ஸுவே! இல்லாவிட்டால் எல்லா ஸகோதரர்களோடும் சும்மா இரு. யான் ஒருவனே கதையைக் கையில்கொண்டு மகாயுத்தத்தில் இந்த அஸ்வத்தாமாவை ஜயிப்பேன்' என்றான்.

பிறகு, பாஞ்சாலராஜகுமாரனை திருஷ்டத்யும்னன், மிக்க கோபங்கொண்டு கர்ஜிக்கின்ற ஹரியைநோக்கி ஹிரண்யகசிபு சொல்லியதுபோல, கோபங்கொண்டு கர்ஜிக்கின்ற பார்த்தனைநோக்கிச் சொல்லலானான். 'பீபத்ஸுவே! யாகம் செய்வித்தல், அத்யயனம்செய்வித்தல், தானம்செய்தல், யாகம்செய்தல், தானம்பெறுதல், ஆறாவதாகிய அத்யயனம்செய்தல் ஆகிய இவை பிராம்மணர்களுக்குரியவையென்று வித்வான்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இவைகளுள் துரோணர் எந்தக் கர்மாவில் நிலைபெற்றிருந்தார்? இவ்வாறிருக்க, துரோணரை நான்கொன்றால் நீ ஏன் என்னை நிந்திக்கிறாய்? துரோணர் தமக்குரிய தொழிலினின்றும்தவறி க்ஷத்திரியர்தொழிலை அடைந்து அஸ்திரத்தினால் இழிவானசெய்கைகளைச் செய்துகொண்டிருந்தார்; ஆதலால், அதர்மத்தினாலே கொல்லப்பட்டார். அவ்விதமாக மாயையைப் பிரயோகிக்கின்றவரும் ஸகிக்கமுடியாதவரும் இழிவான பிராம்மணருமான இந்தத் துரோணரை ஒருவன் ப்ரதிமாயையைச்செய்து கொன்றால் அது அவனிடத்தில் தகாதோ? அவர் அவ்வாறு என்னால் கொல்லப்பட்டிருக்கும்பொழுது துரோணபுத்திரர் கோபத்தினாலே பயங்கரமான சப்தத்தைச் செய்வாராகில் அதனால் எனக்கென்ன குறைவுவந்துவிடும்? துரோணபுத்திரர் இப்பொழுது கர்ஜிப்பரேயாகில் இது ஆச்சரியமென்று நான் நினைக்கவில்லை. இவர் கௌரவர்களைப் பாதுகாப்பதற்குச் சக்தியற்றவராகிப் பிராணனையிழக்கும்படி விடப்போகிறார். நீ தார்மிகனாயிருந்தும் என்னைக் குருஹத்திசெய்தவனென்று சொல்லுகிறாய். அந்தத் துரோணரைக் கொல்வதற்காகவே நான் அக்னியிடத்தினின்று பாஞ்சாலராஜருக்குப் புத்திரனாகத் தோன்றியவன். தனஞ்சய! யுத்தஞ்செய்கின்ற எவருக்கு ரணகளத்தில் செய்யத்தக்கவைகளும் செய்யத்தகாதவைகளும் ஸமமாயிருக்குமோ அவரைப் பிராம்மணரென்றாவது க்ஷத்திரியரென்றாவது நீ எப்படி சொல்லலாம்? புருஷோத்தம! எவர் கோபமூண்டு அஸ்திரங்களை யறியாதவர்களைப் பிரம்மாஸ்திரங்களால் கொல்வாரோ அவர் எல்லாவித உபாயங்களாலும் ஏன், கொல்லத்தக்கவராகமாட்டார்? மேலும் என் பிதாவைக் கொன்ற அவர் ஏன் என்னால் கொல்லத்தக்கவரல்லர்? எவர் பாபியோ,

மிக்க கெட்டபுத்தியுள்ளவரோ, யுத்தத்தில் பந்துக்களைக் கொன்றவரோ அப்படிப்பட்ட இழிவான பிராம்மணரைக் கொல்லும்விஷயத்தில் எனக்குப் பாவம் எப்படியுண்டாகும்? தர்மத்தைவிட்டு விலகின அவ்வித மனிதர்களுடைய வாழ்க்கையானது விஷத்துக்கு ஸமானமென்று தர்மங்களை அறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். தர்மார்த்தங்களுடைய தத்வங்களையறிந்தவனே! அர்ஜுன! (எல்லாம்) அறிந்தவனான நீ ஏன் என்னை நிந்திக்கிறாய்? அந்தக் குரூரரான துரோணர் என்னால் பிடிக்கப்பட்டு ரதத்திலேயே கொல்லப்பட்டார். பீபத்ஸுவே! ஆதலால், நிந்திக்கத்தகாதவனான என்னை நீ ஏன் புகழவில்லை? பார்த்த! காலாக்னிக்குச்சமமானதும் நெருப்புக்கும் சூரியனுக்கும் விஷத்துக்கும் ஒப்பானதும் பயங்கரமாயுள்ளதுமான துரோணருடைய தலையானது என்னால் அறுக்கப்பட்டது. என்னுடைய செய்கையை ஏன் நீ புகழவில்லை? எவர் யுத்தத்தில் என்னுடைய பந்துக்களையே கொன்றாரோ, பிறருடைய பந்துக்களைக் கொல்லவில்லையோ அவருடைய தலையை அறுத்துங்கூட நான் மனக்கவலையற்றவனாகவேயில்லை. ஜயத்ரதனுடைய தலைபோல அந்தத் துரோணருடைய தலையானது வேடர்கள்வஸிக்கும் நாட்டில் என்னால் எறியப்படவில்லையென்பது என் மர்மஸ்தானத்தை அறுக்கிறது. அர்ஜுன! சத்துருக்களைக்கொல்லாமலிருப்பது அதர்மமென்று கேட்கப்படுகிறது. கொல்லவேண்டும்; அல்லது கொல்லப்படவேண்டும். இஃதன்றோ க்ஷத்திரியனுக்குரிய தர்மம்? பாண்டவ! பிதாவுக்கு நண்பனாகவும் சூரனாகவுமிருந்த பகதத்தன் உன்னால் எவ்வாறு கொல்லப்பட்டானோ அவ்வாறு என்னால் யுத்தத்தில் சத்துருவானவர் தர்மத்தினால் கொல்லப்பட்டார். பாட்டனாரை யுத்தத்தில் கொன்றது உனக்குத் தர்மமென்று எண்ணுகிறாய். என்னால் பாபியான சத்துருகொல்லப்பட்டவுடன், ஏன் தர்மமென்று எண்ணவில்லை? பார்த்த! தன்சரீரத்தையே படியாகச்செய்துகொண்டு மண்டியிட்டுப் படுத்திருக்கின்ற யானையைப்போல ஸம்பந்தத்தினால் வணங்கியிருக்கிற என்னை நீ சொல்வதுதகாது. அர்ஜுன! த்ரௌபதி நிமித்தமாகவும் த்ரௌபதிகுமாரர்கள் நிமித்தமாகவும் உன்னுடைய வாக்கின் கடுஞ்சொற்கள் அனைத்தையும் பொறுக்கிறேன். வேறு காரணத்தால் அன்று. எனக்கு ஆசார்யரான துரோணரோடு வைரமானது வம்சபரம்பரையாக வந்திருக்கிறதென்பதை, உலகம் கேட்டிருக்கிறது; இவ்வுலகம் அவ்வாறு அறிந்துமிருக்கிறது; பாண்டுபுத்திரர்களான நீங்கள் அறியவில்லை. அர்ஜுன! பாண்டவஜ்யேஷ்டர் பொய்சொல்லுகிறவரல்லர். நானும் அதர்மத்தைச் செய்கிறவனல்லேன். யுத்தகளத்தில் எவன்

கொல்லவில்லையோ அவனை க்ஷத்திரியனென்று ஸாதுக்கள் சொல்லமாட்டார்கள். தகப்பனுலும் குருவாலும் தன்னைக் கொல்லவருகின்றவனை(முறையே) புத்திரனும் சிஷ்யனும் ஆலோசியாமல் ஒழுங்கற்ற செய்கையாலோ நேரானகார்யத்தினாலோ கொல்லவேவேண்டும். சத்துருக்களைக்கொல்லும்விஷயத்தில் க்ஷத்திரியர்களுக்கு இவ்விதம் பிரம்மதேவரால் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், நிகிருஷ்டபிராம்மணரான என்னுடைய பகைவர் சிஷ்யனான என்னால் கொல்லப்பட்டார். க்ஷத்திரிய புத்திரனான எந்த க்ஷத்திரியன் தந்தையோ குருவோ (தனக்கு) பகைவனாயிருப்பவனைக் கொல்லுகிறானோ அவன் தான் க்ஷத்திரியனென்று சொல்லப்படுகிறான். சிஷ்யத்துரோகியான பாவி கொல்லப்பட்டான். நீ யுத்தஞ்செய்; விஜயம் உன்னுடையது' என்று கூறினான்" என்றான்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேன்பதாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)

(ஸாத்யகியின் கடுஞ்சொற்களால் கோபங்கொண்ட திருஷ்டத்யும்னன் ரகஸ்யங்களை வெளியிட்டு ஸாத்யகியை இகழ்ந்ததும், திருஷ்டத்யும்னனைக்கொல்லவரும் ஸாத்யகியைக் கிருஷ்ணனேவலால் பீமன்தடுத்ததும், மறுபடியும் எல்லாரும் யுத்தத்திற்கு முயற்சி செய்ததும்.)

திருதராஷ்டிரன், "மஹாத்மாவான துரோணரால் முறைப்படி ஸாங்கமானவேதங்கள் அத்யயனம் பண்ணப்பட்டன. (அகாரியத்தில்) வெட்கமுடையவரான அந்தத் துரோணரிடத்தில் ஸாக்ஷாத் தனுர்வேதமானது நிலைபெற்றிருந்தது. அவருடைய அநுக்ரஹத்தினால் புருஷசிரேஷ்டர்கள் யுத்தத்தில் மனிதராற்றலுக்கு மேற்பட்டவையும் தேவர்களாலும் எளிதிற் செய்யமுடியாதவையுமான காரியங்களைச் செய்கிறார்கள். அப்படிப்பட்ட துரோணர் கதறும்பொழுதே முன்னிலையில் குருஹத்திசெய்பவனும் பாபகரமான செய்கையுள்ளவனுமான அந்த அற்பனான திருஷ்டத்யும்னனாலே (அவர் விஷயத்தில்) இழிவானகாரியம் செய்யப்பட்டது. (அங்குள்ளவீரர்கள்) அவ்விஷயத்தில் பொறுமையைப் பாராட்டவில்லை. க்ஷத்திரியஜாதியை நிந்திக்கவேண்டும். (அவர்களுடைய) கோபத்தை நிந்திக்கவேண்டும். ஸஞ்சய! பார்த்தர்களும் பூமியில் விற்பிடித்தவர்களான எல்லா அரசர்களும் பாஞ்

சாலராஜகுமாரனான திருஷ்டத்யும்னன் (இந்த அகாரியம்செய்ததைக்) கேட்டு என்னசொன்னார்கள்? அதனை எனக்குச் சொல்வாயாக" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான்.

"அரசரே! குரூரமான காரியத்தைச் செய்தவனான துருபத குமாரனுடைய அவ்விதமான சொற்களைக்கேட்டு எல்லா மன்னர்களும் பேசாமலிருந்தார்கள். அர்ஜுனனோ அவனைக் கடைக்கண்ணால் கோண லாகப்பார்த்துக் கண்ணீரோடு பெருமூச்சுவிட்டு, 'சீச்சீ' என்றேசொன் னான். வேந்தரே! யுதிஷ்டிரரும் பீமனும் நகுலஸஹதேவர்களும் கிரு ஷ்ணனும் மற்றவர்களும் மிக வெட்கினவரானார்கள். ஸாத்யகியோ பின்வரும் வாக்கியத்தைச் சொல்லலானான். 'அமங்களமான வார்த் தையைச் சொல்லுகின்றவனும் பாபபுருஷனும் மனிதரிலிழிந்தவனு மான இவனை விரைவில் கொல்லக்கூடியமனிதன் ஒருவனும் இங்கு இல்லை. இந்தப் பாண்டவர்களெல்லோரும் சண்டாளனைப் பிராம்மணர் கள் நிந்திப்பதுபோல அந்தப் பாவச்செயலால் (அதனை நீ செய்தா யென்பதை உனக்குத்) தெரிவிக்க வேண்டுமென்கிற விருப்பத்துடன் உன்னை நிந்திக்கிறார்கள். எல்லா ஸாதுக்களாலேயும் நிந்திக்கப்பட்ட வனான நீ இவ்விதமான பெரிய பாவத்தைச்செய்து நல்லசபையைநாடி இதைச் சொல்வதற்கு ஏன் வெட்கப்படவில்லை? அற்பனே! ஆசார்ய ரைநிந்திக்கின்ற உன்நாவும் தலையும் ஏன் நூறாகவெடிக்கவில்லை? அதர் மத்தினாலே நீ ஏன் தள்ளப்படவில்லை? பாவச்செய்கையைச் செய்து விட்டு ஜனங்களுடையஸபையில் தற்புகழ்ச்சி செய்துகொள்ளுதலால் நீ பார்த்தர்களாலும் எல்லா அந்தகர்களாலும் விருஷ்ணிகளாலும் நிந் திக்கத்தக்கவனாயிருக்கிறாய். அவ்விதமான அகார்யத்தைச் செய்து விட்டு மறுபடியும் ஆசார்யரை நிந்திக்கின்றவனான நீ அவசியம் கொல் லப்படத்தக்கவன், ஒரு முகூர்த்தகாலமும் நீ உயிரோடிருப்பதனால் பயனில்லை. புருஷாதம! தர்மாத்மாவும் ஸத்புருஷருமான ஆசார்யரை மயிரில்பிடித்து இவ்விதமான பாவமானவதத்தை உன்னைத் தவிர எவன் செய்வான்? குலத்தைக்கெடுக்கிற பாவியான உன்னை அடைந்து உன் வம்சத்தைச்சேர்ந்த முந்தினவர்களான ஏழு பிதிருக்களும் பிந் தினவர்களான ஏழு பிதிருக்களும் கீர்த்தியிழந்தவர்களாகி நரகத்தில் அமிழ்த்தப்பட்டார்கள். ஆண்மையிற் சிறந்தவனே! பீஷ்மரைப்பற்றிப் பார்த்தன்விஷயத்தில் எந்த வார்த்தையைச் சொன்னாயோ (அதைக் கேள்.) மகாத்மாவான பீஷ்மர் தாமே அப்படிப்பட்டமுடிவை ஏற் படுத்திக்கொண்டார். அவரைக் கொன்றவனும் அதிபாவியான உன் ஸகோதரனே. மண்டலத்தில் பாஞ்சாலபுத்திரர்களைக்காட்டிலும் வே

றொருவனும் பாவத்தைச் செய்யமாட்டான். அந்தச் சிகண்டியும் உன் பிதாவினாலே பீஷ்மருக்கு நாசத்தைச்செய்கிற பிள்ளையாக உண்டு பண்ணப்பட்டு மகாத்மாவான அவருக்கு மிருத்யுவாகவே அவனால் பாதுகாக்கப்பட்டானும். எல்லா ஸாதுக்களாலும் நிந்திக்கப்பட்டவனும் ஸஹோதரனோடு கூடியவனுமான உன்னையடைந்து பாஞ்சாலர்கள் தர்மத்தினின்று தவறினவர்களும் அற்பர்களும் மித்திரத்துரோகிகளும் குருத்துரோகிகளுமாகிவிட்டார்கள். மறுபடியும் இப்படிப்பட்ட வார்த்தையை என்னிடம் சொல்லுவாயாகில் வஜ்ரத்திற்குச் சமமான கதையினால் உன்தலையை உடைத்துவிடுவேன். உனக்கு ப்ரம்மஹத்தியென்னும் பாவம் நேர்ந்திருக்கிறது. பிராம்மணரைக்கொன்றவனான உன்னைக்கண்டு ஜனங்கள் தமக்குப் பிராயச்சித்தத்துக்காகச் சூரியனைப் பார்க்கிறார்கள். பாஞ்சாலகுமாரனே! மிக்க கெட்டநடையுள்ளவனே! என்முன்னிலையிலேயே என்னுடைய குருவையும் என் குருவுக்குக் குருவையும் மறுபடியும் நிந்திப்பவனான நீ வெட்கமடையவில்லை. நில்; நில். என்னுடைய கதையினுடைய ஓர் அடியை நீ பொறுத்துக் கொள். பலவாறாக உன்னால் பிரயோகிக்கப்படும் கதையினுடைய அடிகளை நானும் சகிப்பேன்' என்று சொன்னான். ஸாத்யகியினாலே இவ்வாறு குரூரமான சொற்களால் நிந்திக்கப்பட்ட பார்ஷதன் அதிக கோபங்கொண்டு உரக்கச்சிரித்து, மிக்க கோபங்கொண்ட ஸாத்யகியைப் பார்த்துக் கூறலானான். 'ஓ! மாதவ! 'கேட்டுக்கொண்டிருக்கிறான்; கேட்டுக்கொண்டிருக்கிறான்; பொறுத்துக்கொண்டிருக்கிறான்' என்கிற காரணத்தினாலே அயோக்யனும் தீயஒழுக்கமுள்ளவனுமான ஒருமனிதன் ஸத்புருஷனை எப்பொழுதுமே நிந்திக்க விரும்புகிறான். பொறுமை உலகத்தில் புகழப்படுகிறது. பாவியானவன் (பிறரால்) பொறுக்கப்படத்தக்கவனல்லன். பாபாத்மாவானவன் பொறுமையுள்ளவனை, 'இவன் என்னால் ஜயிக்கப்பட்டான்' என்று எண்ணுகிறான். அப்படிப்பட்டநீ இழிவான செய்கையுள்ளவன்; நீசமான எண்ணத்தையுடையவன்; பாவத்திலேயே உறுதியுள்ளவன். தலைமயிர்நுனிதொடங்கிக் கால்நகநுனிவரையில் நிந்திக்கத்தக்கவனாயிருக்கிறாய். நீ பிறரை நிந்திக்கவிரும்புகிறாய். பாவி! உனக்கு மரணமே சிறந்தது. உன் சித்தமானது இப்படி நிந்தையின் மூலத்தைக் கேட்பதாயிருக்கக்கூடாது. இழிவான ஒழுக்கமுள்ள மனிதர்கள் தங்கள் குற்றங்களைப் பாராமல் பிறரைத் தோஷத்தால் கீழ்ப்படுத்துகிறார்கள். கை அறுக்கப்பட்டவனும் பிராயோபவேசம் செய்தவனும் வீரனுமான பூரிஸ்ரவஸை நீ தடுக்கப்பட்டும் கொன்றாய். அதைக்காட்டிலும் மிக்க கொடுஞ்செயல்

ரது? 'லோகாந்தரத்தை அடைவதில் விருப்பமுள்ளவரும சஸ்திரங் களை வைத்துவிட்டவருமான துரோணர் என்னால் கொல்லப்பட்டார். குரூர! அந்தவிஷயத்தில் என்ன பாபமிருக்கிறது? ஸாத்யகியே! பகை வர்களால் கை அறுக்கப்பட்டவனும் யுத்தம் செய்யாதவனும் யுத்த பூமியில் அவ்வாறு ப்ராயோபவேசம்செய்தவனும் பிரம்மஸ்வரூபத்தை மனத்தினால் தியானம்செய்கின்றவனுமான ஒரு மகாபுருஷனைக் கொன்ற ஒருவன் எவ்வாறு பேசலாம்? வீர்யமுடையவனான பூரிஸ் ரவஸ் உன்னைக் காலால் உதைத்துப் பூமியில் இழுத்தபொழுது நீ உன் ஆண்மையைக்காட்டி ஏன் அவனைக் கொல்லவில்லை? பிரதாபசாலியும் சூரனுமான ஸோமதத்தகுமாரன் பார்த்தனாலே முதலில் ஜயிக்கப்பட்ட பிறகு, இழிந்தவனான உன்னால் கொல்லப்பட்டான். துரோணர் எந்த எந்தவிடங்களில் ஆயிரக்கணக்கான பாணங்களை இறைத்துக்கொண்டு பாண்டவர்களுடைய சேனையை ஓடும்படிசெய்தாரோ அந்த அந்த இடங்களில் யான்சென்றேன். நீயோ சண்டாளன்போல இவ்விதமான செய்கையைத் தானாகவே செய்துவிட்டு மிகவும் நிந்திக்கப்படத்தக்க வனாயிருந்தும் (பிறர்மீது) குரூரமான வார்த்தைகளைச் சொல்வதற்கு நீ எப்படி தகுதியுள்ளவன்? விருஷ்ணிகுலத்தில் பிறந்த அதம! இவ்வித மான செய்கையை நீ செய்கிறவன்; யான் செய்கிறவனல்லேன். பாவங் களுக்கு நீயன்றோ இருப்பிடம்? மறுபடியும் பேசாதே; வாயை மூடிக் கொண்டிரு. இதற்குமேல் என்னைப்பற்றி மறுபடியும் நீ சொல்லத் தக்கவனல்லை. நீ என்னைப்பற்றிச் சொல்லக்கூடிய மறுமொழி இழி வானதாகும். மூர்க்கத்தனத்தினாலே மறுபடியும் என்னைப்பற்றி இப் படிப்பட்ட குரூரமான வார்த்தையைச் சொல்லுவாயாகில் யுத்தத்தில் உன்னைப் பாணங்களால் யமலோகத்திற்கு அனுப்புவேன். மூர்க்க! கேவலதர்மத்தினாலேமாத்திரம் ஒருகாரியமும் முடியாது. துரியோ தனாதிகளுடைய அதர்மமான செய்கையையும் கேள். முன்பு, பாண்டு புத்திரரான யுதிஷ்டிரர் அதர்மத்தினாலேயே ஏமாற்றப்பட்டார். ஸாத்ய கியே! அவ்வாறு அதர்மத்தினாலேயே த்ரௌபதியும் மனவருத்தமடை யும்படி செய்யப்பட்டாள். மூர்க்க! பாண்டவர்களனைவரும் திரௌபதி யுடன் காட்டிற்குத் துரத்தப்பட்டார்கள். மூர்க்கனே! ஸர்வஸொத்துக் களும் அதர்மத்தினாலேயே அவ்வாறு கவர்ந்துகொள்ளப்பட்டன. மத்ர ராஜனான சல்யன் இவ்விடத்தினின்று அதர்மத்தினாலேயே துரியோ தனாதிகளாலே இழுக்கப்பட்டான். அவ்வாறே பால்னான ஸுபத்ரா புத்திரனும் அதர்மத்தால் கொல்லப்பட்டான். சத்துருபட்டணங்களை ஜயிக்கிறவரான பீஷ்மாசாரியரும் இங்குள்ளவர்களால் அதர்மத்தால்

கொல்லப்பட்டார். தர்மங்களையறிந்தவனான உன்னாலே அதர்மத்தினால் பூரிச்ரவஸும் கொல்லப்பட்டான். ஸாத்வத! இவ்வாறாக யுத்தத்தில் ஜயத்தைப்பார்த்துகாக்கின்றவர்களும் வீரர்களும் தர்மங்களையறிந்தவர்களுமான சத்துருக்களாலும் பாண்டவர்களாலும் காரியம் செய்யப்பட்டது. உத்தமமான தர்மமானது (ஒருவராலும்) அறியமுடியாதது; அவ்வாறே அதர்மமும் அறியமுடியாதது. கௌரவர்களுடன் யுத்தம்செய். பித்ருலோகம் போகாதே' என்றுசொன்னான். குரூரமாயும் கடினமாயுமுள்ள வாக்கியங்களைச் சொல்லக்கேட்ட ஸ்ரீமானான ஸாத்யகியானவன் நடுக்கமுற்றவன்போலானான். ஸாத்யகி அவ்வார்த்தையைக்கேட்டுக் கோபத்தால் கண்கள் சிவந்து ஸர்ப்பம் போலப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு ரதத்தில் வில்லைவைத்துவிட்டுக் கதையைக் கையிலெடுத்துக்கொண்டான். பிறகு, பாஞ்சால்யனைநோக்கி எதிர்த்தோடிவந்து கோபத்துடன், 'திருஷ்டத்யும்ன! உன்னைப்பற்றிக் குரூரமான வார்த்தையை யான் சொல்லப்போகிறதில்லை. கொல்லத்தக்கவனான உன்னை நான் கொல்லப்போகிறேன்' என்று சொன்னான். விரைவாக வருகின்றவனும் மகாபலசாலியும் (ஸாத்யகியின்சொல்லை) பொறுதவனும் யமன்போன்றவனுமான பாஞ்சால்யன்மீது மிக்க கோபங்கொண்டவனும் யமன்போன்றவனுமான ஸாத்யகியை வாஸுதேவரால் தூண்டப்பட்ட மகாபலசாலியான பீமஸேனன் ரதத்தினின்று கீழேகுதித்துச் சீக்கிரமாகக் கைகளாலே தடுத்தான். பலசாலியானபாண்டவன், அவ்வாறு கோபங்கொண்டு (எதிர்த்து) ஓடுகின்றவனும் அதிகமான படபடப்புள்ளவனும பலசாலியுமான ஸாத்யகியைப் பலாத்காரமாகக் கட்டித்தூக்கிச் சென்றான். பலசாலிகளுள் உத்தமனான சினிபுங்கவன பீமனால் கால்களை நன்றாக ஊன்றிநின்றுகொண்டு பலத்தினால் ஆறாவது அடியில் தடுக்கப்பட்டான். அரசரே! பலசாலியானபீமன் ரதத்தினின்று கீழேகுதித்து ஸாத்யகியை விரைவாகத்தடுத்ததைப்பார்த்து ஸஹதேவன் நயமான வார்த்தையினாலே சொல்ல ஆரம்பித்தான். ஐயா! அந்தகர்கள் விருஷ்ணிகள் பாஞ்சாலர்கள் இவர்களைக்காட்டிலும் நமக்கு வேறுமித்திரன் இல்லை. அவ்வாறே அந்தகர்களுக்கும் விருஷ்ணிகளுக்கும் முக்கியமாகக் கிருஷ்ணனுக்கும் நம்மைக்காட்டிலும் வேறுமித்திரன் இல்லை. ஸமுத்திரத்தை எல்லையாகவுடைய பூமியைத் தேடிப்பார்த்தாலும் பாஞ்சாலர்களுக்குப் பாண்டவர்கள் விருஷ்ணிகள் இவ்விருவரும்போன்ற சிறந்தமித்திரன் வேறொருவனுங்கிடையான். நீர் எவ்விதமாக நினைக்கிறீரோ அவ்விதமாகவே இவன் உமக்கு மித்திரன், எங்களுக்கு நீங்கள் எப்படியோ

அப்படியே உங்களுக்கும் நாங்கள் ஸ்நேகிதர்கள். ஸர்வதர்மங்களையும் அறிந்தவனே! சினிபுங்கவ! அப்படிப்பட்ட நீ மித்திரதர்மத்தை நினைத்துக்கொண்டு கோபத்தை அடக்கிக்கொள். பாஞ்சாலகுமாரனிடத்தில் கோபந்தணிந்துவிடு. நீயும் பார்ஷதனுடைய குற்றத்தை க்ஷமிக்கவேண்டும். உன்னுடையதைப் பார்ஷதனும் க்ஷமிக்கவேண்டும். நாங்கள் க்ஷமையை வேண்டுகிறோம். தணிதலைத்தவிர வேறு எந்தக்காரியம் இப்பொழுது ஸம்பவிக்கலாம்?' என்றான். ஐயா! ஸஹதேவனால் சைனேயன் ஸமாதானஞ்செய்யப்பட்டபொழுது பாஞ்சால ராஜகுமாரனான திருஷ்டத்யும்னன் மிகநகைத்து, 'பீம! யுத்தமதத்தையுடையவனான சினியினுடைய பௌத்திரனை விட்டுவிடு; விட்டுவிடு. காற்று மலையை எதிர்ப்பதுபோல என்னை இவன் எதிர்க்கட்டும். கௌந்தேய! யான் கூர்மையுள்ள பாணங்களாலே இவனுடைய பரபரப்பையும் யுத்தத்திலுள்ள ச்ரத்தையையும் இவனுடைய உயிரையும் யுத்தத்தில் போக்கப்போகிறேன். பாண்டுபுத்திரர்களுக்கு எந்தப்பெரிய காரியத்தை நான் செய்யவேண்டுமோ அதைச்சொல். இதோ கௌரவர்கள் வருகின்றார்களே. ஆனால், யுத்தத்தில் பல்குனன் எல்லோரையும் தடுப்பான். நானும் இவனுடையதலையைப் பாணங்களால் தள்ளுவேன். என்னையும் இந்தஸாத்யகி யுத்தத்தில் கையறுபட்ட பூரிச்ரவஸாக எண்ணுகிறான். இவனை விட்டுவிடு. யானாவது இவனைக் கொல்லுகிறேன்; இவனாவது என்னைக்கொல்லட்டும்' என்று சொன்னான். பாஞ்சாலனுடைய வாக்கியங்களைக் கேட்கின்ற பலசாலியான ஸாத்யகி ஸர்ப்பம்போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு பீமனுடைய இரண்டு கைகளின் நடுவிலும் அகப்பட்டு ஓயாமல்துடித்தான். பலசாலிகளும் புஜபலமுள்ளவர்களுமான அவ்விருவரும் காளைகள்போலக் கர்ஜித்தார்கள். ஐயா! வீரர்களான வாஸுதேவரும் தர்மராஜரும் விரைவுடனே அதிக முயற்சியோடு இருவரையும் தடுத்தார்கள். சிறந்த வில்லாளிகளும் கோபத்தால் கண்கள் மிகச்சிவந்தவர்களுமான அவ்விருவரையுந் தடுத்துவிட்டு க்ஷத்திரியச்ரேஷ்டர்கள் யுத்தகளத்தில் யுத்தஞ்செய்யும் விருப்பத்துடன் வருகின்ற பகைவர்களை எதிர்த்துச்சென்றார்கள்.

---

## இருநூறுவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி)



(அஸ்வத்தாமா பகைவர்களுடைய படையின்மீது நாராயணாஸ்திரத்தைப் பிரயோகித்ததும், அவ்வஸ்திரத்தால் பீடிக்கப்படுகின்றவர்களை வாஸுதேவர் வாகனங்களினின்று இறங்கவும் ஆயுதங்களை விட்டுவிடவும் செய்து காத்ததும், பீமன் மாத்திரம் ஆயுதமெடுத்து யுத்தம்செய்ய அவனுடையதலையில் அந்த அஸ்திரம் ஜ்வலித்ததும்.)

பிறகு, அந்தத் துரோணகுமாரர் யுகாந்தகாலத்தில் காலத்தால் சிருஷ்டிக்கப்பட்ட அந்தகனானவன் எல்லாப்பிராணிகளுக்கும் துன்பத்தை உண்டுபண்ணுவதுபோலப் பகைவர்களுக்குத் துன்பத்தை உண்டுபண்ணினார். கொடிமரங்களாகிற மரங்களையுடையதும் சஸ்திரங்களாகிற கொடுமுடிகளுள்ளதும் கொல்லப்பட்ட யானைகளாகிற பெருங்கற்களோடு கூடியதும் குதிரைகளாகிற கிம்புருஷர்களால் நான்குபுறத்திலும் வியாபிக்கப்பட்டதும் விற்களாகிற கொடிகளால் சூழப்பட்டதும் மாம்ஸத்தைப்புசிக்கும் பக்ஷிகளினுடைய சப்தங்களால் எதிரொலியிடுகின்றதும் பூதகணங்களாலும் யக்ஷகணங்களாலும் வியாபிக்கப்பட்டதுமான தேகபர்வதத்தைச் சத்துருக்களைப் பல்லங்களால்கொன்று விருத்திசெய்தார். பிறகு, நரசிரேஷ்டரான அந்த அஸ்வத்தாமா அதிவேகத்தோடு ஸிம்மநாதம்செய்து, 'இந்தயுத்தத்தில் தர்மமாகிற சட்டையை அணிந்தவனும் குந்தீபுத்திரனுமான யுதிஷ்டிரன் சஸ்திரத்தை விட்டுவிடுமென்று கபடத்தால் ஆசார்யரைப்பார்த்துச் சொன்னமையால், அவன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவனுடைய சேனையைத் துரத்தப்போகிறேன். அவ்வாறு துரத்திவிட்டு எல்லாவீரர்களையும் மூர்க்கனான பாஞ்சாலராஜகுமாரனையும் கொல்லப்போகிறேன். யுத்தத்தில் இவர்கள் என்னையெதிர்த்துப் போர்புரிவார்களேயாகில் இவர்களனைவரையும் கொல்வேன். ஸத்தியமாக உன்னிடம் பிரதிஜ்ஞை செய்கிறேன். சேனையைத் திருப்பு' என்கிற பிரதிஜ்ஞையை உம்முடைய புத்திரன் கேட்கும்படி மறுபடியும் செய்தார். அந்த வார்த்தையைக்கேட்டு உமது குமாரன் பெரிய ஸிம்மநாதத்தினாலே மிக்க பெரிதான பயத்தைவிலக்கித் தன்சேனையைத் திருப்பினான். அரசரே! பிறகு, நீர்நிரம்பிய இரண்டு பெருங்கடல்களுக்கு எதிர்த்தல் நேர்வதுபோலக் கௌரவபாண்டவ

சேனைகளுக்கு மறுபடியும் கடுமையான யுத்த எதிர்ப்பு உண்டா யிற்று. துரோணவதத்தினாலே கோபமூண்டவர்களான கௌரவர்கள் அஸ்வத்தாமாவால் நிலைநிறுத்தப்பட்டார்கள். பாண்டவர்களும் பாஞ் சாலர்களும் துரோணருடையவதத்தால் அதிக உத்ஸாகத்தை அடைந் தார்கள். மன்னரே! அதிக ஸந்தோஷத்தையடைந்தவர்களும் தங்க ளுக்கு ஜயத்தை எதிர்பார்ப்பவர்களும் பரபரப்புள்ளவர்களுமான அந்த இருதிறத்து வீரர்களுக்கும் அதிகவேகமுண்டாயிற்று. ராஜேந் திரரே! எவ்வாறு மலைகள் மலைகளாலும் கடல்கள் கடல்களாலும் திருப்பியடிக்கப்படுமோ அவ்வாறே கௌரவர்களும் பாண்டவர்களும் பரஸ்பரம் திருப்பியடிக்கப்பட்டார்கள். பூமிமுழுதும் நடுங்கிற்று. திக்குக்கள் எதிரொலியடைந்தன. பெரியவரே! ஜலத்திலுண்டான பிராணிகளும் பரபரப்புற்றன. அந்த யுத்தவீரர்களெல்லோரும் அப் பொழுது யுத்தம்செய்யவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தார்கள்; பிறகு, மிகுந்த ஸந்தோஷமடைந்த வர்களான கௌரவபாண்டவவீரர்கள் ஆயிரக்கணக்கான சங்கவாத்யங் களை ஊதினார்கள்; பதினாயிரக்கணக்கான பேரிவாத்யங்களையும் முழக் கினார்கள். கடையப்படுகின்ற ஸமுத்திரத்தில் தோன்றிய சப்தம் போன்றதும் மிகப்பெரியதும் ஆச்சரியப்படத்தக்கதுமான ஒலியா னது உம்முடைய சேனையினின்று தோன்றியது. பாரதரே! ரௌத்ர மானதும் பயங்கரமாயிருப்பதுமான அஸ்திரமானது அவ்வாறு தோன்றி உம்முடையவையும் பிறருடையவையுமான தேர்க்கூட்டங் கள் வந்தபிறகு, துரோணபுத்திரர், பாண்டவர்கள் பாஞ்சாலர்கள் இவர்களின் சேனையை லக்ஷியம்வைத்து அப்பொழுது நாராயணாஸ் திரத்தை வெளியிட்டார். பிறகு, ஜ்வலிக்கின்ற முனைகளுள்ள அம்பு கள் பாண்டவர்களை நாசம்செய்யப் போகின்றவைகளாகி ஜ்வலிக்கின்ற வாய்களுள்ள ஸர்ப்பங்கள்போல ஆகாயத்தில் ஆயிரக்கணக்காகத் தோன்றின. வேந்தரே! உலகத்தில் ஸூர்யனுடைய கிரணங்கள்போல அந்த அம்புகள் மகாயுத்தத்தில் ஒருமுகூர்த்தத்தினுள் திக்குக்களையும் ஆகாயத்தையும் படையையும் சூழ்ந்துகொண்டன. மகாராஜரே! அவ்வாறே, ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள்போலப் பிரகாசிக்கின்ற உரு க்குமயமான உருண்டைகள் தோன்றின. நான்கு சக்கரமுள்ளவைக ளும் இரண்டு சக்கரமுள்ளவைகளுமான சதக்னிகளும் அனேக கதா யுதங்களும் கத்திகளை நுனியிற்கொண்ட சக்கரங்களும் சூரியமண்ட லங்கள்போலத் தோன்றின. புருஷசிரேஷ்டரே! பாண்டவர்களும் பாஞ்சாலர்களும் ஸ்ருஞ்சயர்களும் சஸ்திரங்களுடைய வடிவங்களாலே

நான்குபக்கங்களிலும் ஆகாயம் அதிகமாக நிறைக்கப்பட்டிருப்பதைக் கண்டு மிகுந்தபயமடைந்தார்கள். அரசரே! பாண்டவசேனையிலுள்ள மகாரதர்கள் எவ்வளவுக்கெவ்வளவு யுத்தம் செய்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அந்த அஸ்திரமானது விருத்தியடைந்தது. அப்பொழுது அந்த நாராயணாஸ்திரத்தாலே கொல்லப்படுகின்ற வீரர்கள் நெருப்பினால் கொளுத்தப்படுகின்றவர்கள்போல நான்குபுறத்திலும் ரணகளத்தில் துன்புறுத்தப்பட்டார்கள். பிரபுவே! பின்பனிக்காலத்தின்முடிவில் நெருப்பு உலர்ந்தகாட்டைக் கொளுத்துவதுபோல அந்த அஸ்திரம் பாண்டவர்களுடைய படையைக் கொளுத்தியது. பிரபுவே! நான்குபக்கங்களிலும் வியாபிக்கின்ற அஸ்திரத்தினாலே சைனியமானது க்ஷீணிக்கும்பொழுது தர்மபுத்திரரான யுதிஷ்டிரர் அதிகமான பயத்தை அடைந்தார். மனவுறுதிகெட்டுநின்ற அந்தச் சைனியத்தையும் பார்த்தனுடைய நடுநிலைமையையுங்கண்டு தர்மபுத்திரர் பின்வருமவாக்கியத்தைச் சொல்லலானார். 'திருஷ்டத்யும்ன! பாஞ்சாலசேனையுடன் நீ ஓடு. ஸாத்யகியே! மகாரதனான நீயும் விருஷ்ணிகளாலும் அந்தகர்களாலும் சூழப்பட்டுப் போய்விடு. தர்மாத்மாவான வாஸுதேவரும் தமக்குத் தக்கதைச் செய்துகொள்வார். உலகத்துக்கே இவர் நன்மையை உபதேசிக்கிறார். அவ்வாறிருக்க, தம்விஷயத்தில் நன்மையைத்தேடிக்கொள்வாரென்பதில் ஸம்சயம் என்ன இருக்கிறது? இப்பொழுது யுத்தம் செய்யத்தக்கதன்று. சேனையிலுள்ள உங்களனைவரையும் பார்த்து நான் சொல்லுகிறேன். நான் ஸஹோதரர்களோடு அக்னியில் பிரவேசிக்கப்போகிறேன். யான் பயப்படுகின்றவர்களால் தாண்டமுடியாததான யுத்தத்தில் பீஷ்மரும் துரோணருமாகிற கருங்கடலைத்தாண்டிப் பரிவாரங்களோடு அசுவத்தாமாவாகிற மாட்டுக்குளப்படித்தண்ணீரில் மூழ்கப்போகிறேன். என்னைப்பற்றி இந்த அர்ஜுனனுக்குள்ள விருப்பமானது சீக்கிரம் நிறைவேறட்டும். நல்லசெய்கையுள்ள ஆசார்யர் என்னால் யுத்தத்தில் வீழ்த்தப்பட்டார். அவர், பாலனும் யுத்தங்களில் ஸாமர்த்தியமற்றவனும் பாதுகாக்கப்படாதவனுமான அந்த ஸுபத்திராபுத்திரனைச் சமர்த்தர்களான அனேககுரூரர்களாலே கொல்வித்தார்; அவர், அவ்வாறு அடிமைத்தன்மையை யடைந்து சபையில்வந்து (தர்மத்தைப்பற்றிக்) கேட்பவளான த்ரௌபதியைப் புத்திரரோடுசேர்ந்து உபேக்ஷித்தார். அவர், ஸைந்தவனைக் காப்பதற்காக யுத்தத்தில் பெரிதான முயற்சிசெய்தனர்; அர்ஜுனனுக்குத் தீங்குசெய்வதற்காகப் பிரதிஜ்ஞையைக் காத்தனர்; ஜயிக்க எண்ணங்கொண்டவர்களான நம்மை வ்யூகத்தினுடைய வாயிலில் தடுத்து நிறுத்தினர். சக்திக்குத்தக்கபடி

பிரவேசிக்கின்ற பெரிய ஸைன்யத்தையும் தடுத்தார். பகைவர்கள் சிரமத்தை அடைந்திருக்கும்சமயத்தில் பல்குனனைக்கொல்ல எண்ணங் கொண்ட துர்யோதனனை ஸைந்தவனை ரக்ஷிப்பதின்பொருட்டு அவ்வாறு கவசத்தால் காப்பாற்றினார். பிரம்மாஸ்திரத்தை யறிந்தவரான அந்த வீரர் எனக்குவரும் ஜயத்தில் முயற்சிசெய்கின்ற ஸத்யஜித்து முதலான பாஞ்சாலவீரர்களை அடியோடு நாசம்செய்தார். அந்தத்துரோணரால் என்னைப்பிடிக்கும்விஷயத்திலும் அதிகமுயற்சிசெய்யப்பட்டது. அவையெல்லாம் யுத்தம்செய்கின்றவர்களான உங்களனைவருக்கும் தெரிந்தவிஷயம். மகாரதர்களே! அதர்மமாக ராஜ்யத்தைவிட்டுத் துரத்தப்படும் எங்களுக்கு அக்காலத்தில் எவர் எங்களைச் சேர்ந்தவர்களால் தடுக்கப்பட்டும் வனம்செல்ல அனுமதிகொடுத்தாரோ, எவர் வனவாஸம் செய்து பிரதிஜ்ஞையை நிறைவேற்றித் திரும்பிவந்த எங்களிடம் எப்பொழுதும் நட்பைக் காண்பித்தாரோ அவருடைய அச்செய்கைகளும் உங்களுக்குத் தெரியும். எவர் நம்முடைய விஷயங்களில் அத்யந்தம் நேசத்தைப் பாராட்டுபவராயிருந்துகொண்டு என்னால் கொல்லப்பட்டாரோ அவர்நிமித்தமாகவே நான் பந்துக்களுடன் மரணத்தை அடையப் போகிறேன்' என்றுகூறினார். குந்திபுத்திரரான தர்மபுத்திரர் இவ்வாறு சொன்னவுடன் ஸ்ரீ வாஸுதேவர் வேகத்துடன் இரண்டு கைகளாலும் ஸைனியத்தை (சண்டைசெய்யாமல்) தடுத்துப் பின்வரும் வார்த்தையைச் சொல்ல ஆரம்பித்தார். 'வீரர்களே! சீக்கிரமாகச் சஸ்திரங்களைக் கீழேவைத்துவிடுங்கள்; வாகனங்களினின்று கீழே இறங்கிவிடுங்கள்.[1] மகாத்மாவான நாராயணனுடைய இந்த அஸ்திரத்தை எதிர்த்து அடிக்கும்விஷயத்தில் இதுதான் இச்சமயத்தில் உபாயமாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நீங்களெல்லாரும் யானைகளினின்றும் குதிரைகளினின்றும் தேரினின்றும் பூமியில் இறங்குங்கள். இப்படி நீங்களிருப்பீர்களாகில் பூமியில் நிராயுதர்களான உங்களை இந்த அஸ்திரம் கொல்லாது. இந்த அஸ்திரத்தைநோக்கி யுத்தவீரர்கள் எந்த எந்தவகையாக யுத்தம்செய்கிறார்களோ அந்த அந்தவகையில் இந்தக் கௌரவர்கள் மிகுந்த பலசாலிகளாகிறார்கள். வீரர்களே! எந்தமனிதர்கள் வாகனங்களினின்றுமிறங்கி ஆயுதங்களைப் போட்டுவிடுவார்களோ, எவர்கள் அஞ்சலிபந்தம் செய்கிறார்களோ, எவர்கள் வாகனங்களைவிட்டுக் கீழேஇறங்கி நமஸ்காரஞ்செய்கிறார்களோ அப்படிப்பட்டவர்களை இந்த அஸ்திரம் யுத்தத்தில் கொல்லாது. எந்தமனிதர்கள் மனத்தாலேயாவது இந்த

[1] 'மஹாத்மநா' என்பது வேறுபாடம்; 'மஹாத்மாவான நாராயணனால் ஏற்படுத்தப்பட்டது' என்பது அதன் பொருள்.

அஸ்திரத்தை எதிர்த்துப் போர்புரிவார்களோ அவர்களனைவர்களையும் பாதாளலோகத்தை அடைந்திருந்தாலுங் கொல்லும்' என்றார்.

பாரதரே! அவர்களெல்லாரும் அந்த வாஸுதேவருடைய அந்த வார்த்தையைக்கேட்டு ஆயுதங்களை மனத்தினாலும் செய்கையினாலும் விட்டுவிடுவதற்கு விரும்பினார்கள். ராஜரே! பிறகு, பாண்டுபுத்திரனை பீமஸேனன் அஸ்திரங்களைவிட எண்ணங்கொண்ட அந்த வீரர்களைக்கண்டு அவர்களைச் சந்தோஷிக்கச்செய்துகொண்டு பின்வரும் வார்த்தையைச்சொல்லத்தொடங்கினான். 'இந்தயுத்தரங்கத்தில் எவரும் எவ்விதத்தினாலும் அஸ்திரங்களை எறியவேண்டாம். நான் பாணங்களாலே துரோணபுத்திரருடைய அஸ்திரத்தைத் தடுக்கப்போகிறேன். பொன்மயமான வடிவமுள்ளதும் பெரிதுமான இந்தக் கதாயுதத்தினாலே யுத்தத்தில் அஸ்வத்தாமாவினுடைய அஸ்திரத்தை நாசஞ்செய்து யமன்போலக் கொல்லப்போகிறேன். சூரியனுக்குச் சமமான வேறு தேஜஸ் இவ்வுலகில் இல்லாததுபோலவே பராக்கிரமத்தில் எனக்குச் சமமான மனிதன் வேறொருவனும் இல்லை. சிறந்த யானையின் துதிக்கைக்கொப்பான என்னுடைய இவ்விரண்டு கைகளையும் பாருங்கள். இவைகள், பெரிதான ஹிமயமலையையும் தள்ளுவதில் திறமையுள்ளவைகள். தேவலோகத்தில் தேவர்களுள் எவ்வாறு இந்திரன் எதிராளியில்லாதவனாகப் பிரஸித்திபெற்றிருக்கிறானோ அவ்வாறே இவ்வுலகத்திலுள்ள மனிதர்களில் பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலமுள்ள யான் ஒருவனே எதிராளியில்லாதவனாகப் பிரஸித்தி பெற்றிருக்கிறேன். யுத்தத்தில் பிரகாசிக்கின்ற அஸ்வத்தாமாவினுடைய அஸ்திரத்தைத் தடுக்கும்விஷயத்தில் பருத்த தோள்களையுடைய என்னுடைய இரண்டு கைகளின் வலிமையையும் இப்பொழுது பாருங்கள். நாராயணாஸ்திரத்தைத் தடுப்பவன் இல்லாமலிருப்பானாகில் இப்பொழுது கௌரவர்களும் பாண்டவர்களும் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே இந்த நாராயணாஸ்திரத்தை நான் எதிர்த்துப் போர்புரிவேன். அர்ஜுனா! பீபத்ஸுவே! நீ காண்டீவத்தைக் கீழேவைக்கவேண்டாம். சந்திரனுடைய காந்தியைக் களங்கம் குறைப்பதுபோல இந்த அபகீர்த்தியானது நிர்மலமான உன் புகழைக் குறைக்கும்' என்று கூறினான். அர்ஜுனன், 'பீம! நாராயணாஸ்திரம், பசுக்கள், பிராம்மணர்கள் இவ் விஷயங்களில் காண்டீவம் கீழேவைக்கத்தக்கது. இது எனது உத்தமமான விரதம்' என்று சொன்னான். பிறகு, இவ்வாறு சொல்லக்கேட்ட பாண்டுநந்தனனான பீமன் பூமியனைத்தையும் உமது சேனையையும்

நடுங்கும்படி செய்துகொண்டு பெரிய சங்கநாதத்தைச்செய்து கைகளை யுங் கொட்டிச் சத்துருக்களைத் துன்புறுத்துபவரான அஸ்வத்தாமா வைநோக்கி மேகத்தினுடைய கர்ஜனம்போன்ற சப்தத்தோடுகூடியதும் சூரியன்போல் ஜ்வலிக்கின்றதுமான ரதத்தோடு எதிர்த்துச்சென்றான். அவனுடைய சங்கநாதத்தையும் தோள்தட்டும் சப்தத்தையுங்கேட்டு உம்மைச்சேர்ந்தவர்கள் நான்குபக்கங்களிலும் சுற்றிக்கொண்டு அம்புக் கூட்டங்களை இறைத்தார்கள். லாகவத்துடன்கூடின விக்ரமசாலியான அந்தக் குந்திபுத்திரன் லாகவத்தினாலே ஒருநிமிஷத்தினுள் அஸ்வத் தாமாவை எதிர்த்து அவர்மீது பாணஸமூகங்களை நான்குபக்கங்களி லும் இறைத்தான். பிறகு, துரோணகுமாரர் அட்டஹாஸஞ்செய்து கொண்டு ஓடிவருகின்ற அந்தப் பீமனை உரக்க அழைத்து நன்றாக ஜ்வலிக்கின்ற நுனிகளுள்ளவைகளும் மந்திரங்களால் அபிமந்திரணம் செய்யப்பட்டவைகளுமான அம்புகளால் இறைத்தார். யுத்தத்தில் ஸர்ப்பங்கள்போல் ஜ்வலிக்கின்றவாயுள்ளவைகளும் நெருப்பைக் கக்கு கின்றவைகளுமான அம்புகளாலே மூடப்பட்ட பீமஸேனன் பொன்மய மான நெருப்புப்பொறிகளாலே சூழப்பட்டவன்போலே இருந்தான். அரசரே! யுத்தத்தில் அந்தப் பீமஸேனனுடைய ரூபமானது சாயங் காலத்தில் மின்மினிப்பூச்சிகளால் சூழப்பட்ட ஒரு மலைபோல் காணப் பட்டது. மகாராஜரே! துரோணபுத்திரருடைய அந்த அஸ்திரத்தை அந்தப் பீமஸேனன் எதிர்க்கும்பொழுது, அந்த அஸ்திரமானது காற் றினால் விருத்திபண்ணப்பட்ட நெருப்புப்போல விருத்தியடைந்தது. பயங்கரமான பராக்ரமத்துடன் விருத்தியடைகின்ற அந்த நாராயணாஸ் திரத்தைக் கண்டு பீமனைத்தவிர மற்றப் பாண்டவஸைனிய முழுமை யும் மிக்க பெரிதான பயத்தை அடைந்தது. பிறகு, அவர்கள் எல்லா ரும் சஸ்திரங்களைப் பூமியில் எறிந்துவிட்டு ரதங்களினின்றும் யானை களினின்றும் குதிரைகளினின்றும் நான்குபக்கத்திலும் பூமியில் இறங் கினார்கள். அவர்கள், ஆயுதங்களைவைத்துவிட்டு வாகனங்களினின்று கிழேயிறங்கினபின்பு பெரிதான அந்த அஸ்திரவீர்யமானது பீமனு டைய தலையில் விழுந்தது. பிராணிகள், 'ஆ! ஆ!' என்று அலறின. பாண்டவர்களும் விசேஷித்து, 'கூ, கூ' என்று கூப்பிட்டார்கள். பீம ஸேனனைத் தேஜஸால் சூழப்பட்டவனாகவே எல்லாரும் கண்டார்கள்.

---

## இருநூற்றோராவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)

(பீமனை நாராயணாஸ்திரம் சூழ்ந்துகொண்டவுடன் கிருஷ்ணார்ஜுனரிருவரும் அவனுடைய கையிலிருந்த ஆயுதங்களைப் பிடுங்கியெறிந்து ரதத்தி லிருந்து கீழேயிறக்கிவிட்டதும், நாராயணாஸ்திரவேகம் தணிந்த தும், பிறகு ஸங்குலயுத்தம் தொடங்கியதும்.)

தனஞ்சயன், பீமஸேனன் நாராயணாஸ்திரத்தால் நான்குபக்கத் திலும் சூழப்பட்டிருப்பதைக்கண்டு அதன்வெப்பத்தைத் தணிப்ப தற்காக வாருணாஸ்திரத்தினாலே அவனை நன்றாக மூடினான். அர்ஜுன னுடைய லாகவத்தினாலும் நாராயணாஸ்திரத்தின் தேஜஸினுடைய மூட்டத்தினாலும் (பீமஸேனனை) வாருணாஸ்திரம் மூடியதை ஒருவ ருங் காணவில்லை. குதிரைகளோடும் ஸாரதியோடும் தேரோடும் துரோ ணபுத்திரருடைய அஸ்திரத்தினால் மூடப்பட்டிருக்கிற பீமன், அக்னி நடுவில் வைக்கப்பட்ட அக்னிபோல ஜ்வாலை வரிசைகளுடன்கூடப் (பிறரால்) பார்க்கக்கூடாதவனாகவிருந்தான். அரசரே! விடியற்காலத் தில் நக்ஷத்திரங்கள் அஸ்தகிரியைநோக்கிச் செல்லுவதுபோலவே பாணங்கள் பீமஸேனனுடைய ரதத்தின்மீதே வந்துவிழுந்தன. ஐயா! அந்தப் பீமனும் அவனுடைய தேரும் குதிரைகளும் ஸாரதியும் துரோ ணபுத்திரரால் நன்றாக மூடப்பட்டு அக்னிக்கு உள்ளாயினர். பிரளய காலத்தில் சராசரங்களுடன்கூடின உலகமனைத்தையும் பக்ஷித்துவிட் டுக் காலாக்னியானது ஸர்வவியாபியான ஸ்வாமியினுடைய முகத்தை அடைவதுபோல அந்த அஸ்திரமானது பீமனை அடைந்து சூழ்ந்தது. அக்னி சூரியனிடத்தில் பிரவேசிப்பதுபோலவும் சூரியன் அக்னியி னிடத்தில் பிரவேசிப்பதுபோலவும் அந்த நாராயணாஸ்திரத்தின் தேஜ ஸானது (பீமனிடம்) பிரவேசித்தது. (அப்பொழுது) பாண்டுபுத்ரனை பீமன் காணப்படவில்லை. அந்த அஸ்திரமானது பீமனுடைய ஹுங் காரத்தால் அடிக்கடி விலகுகிறது; அடிக்கடி அவனை நாடுகிறது; ஹுங்காரத்தால் (மறுபடியும்) அவனைவிட்டு விலகுகிறது. பிறகு, கந் தர்வர்களும் தேவர்களும் பீமனைக்கண்டு மிக்க ஆச்சரியமடைந்தார் கள். பீமனுடைய ரதத்தைப்பற்றி நான்குபக்கமும் சூழ்ந்திருக்கிற அந்த அஸ்திரத்தையும் யுத்தத்தில் நிகரில்லாமல் பலத்தால் அதி கரித்தவரான துரோணபுத்திரரையும் ஆயுதங்களைக் கீழேவைத்துப் பிரஜ்ஞையிழந்திருக்கின்ற பாண்டவர்களுடைய எல்லாச் சேனையையும்

யுத்தத்தில் ஷோக்கமற்றவர்களும் யுதிஷ்டிரரைத் தலைவராகக்கொண்டவர்களுமான மகாரதர்களையும் பார்த்து மகாதேஜஸ்விகளும் வீரர்களுமான அர்ஜுனனும் வாஸுதேவரும் ரதத்தினின்று கீழேகுதித்துப் பீமனிடம் ஓடிவந்தார்கள். பிறகு, துரோணபுத்திரருடைய அஸ்திர பலத்தினால் உண்டான அந்தத் தேஜஸை மிகவும் பலசாலிகளான இவ்விருவரும் மாயையினாலே தாண்டி உள்ளே நுழைந்தனர். நாராயணாஸ்திரத்தினால் உண்டான நெருப்பானது அந்தக் கிருஷ்ணார்ஜுனர்களை ஆயுதங்களைக்கீழே வைத்துவிட்டமையாலும் வாருணாஸ்திரப் பிரயோகத்தாலும் அவர்களுடைய வீர்யத்தாலும் கொளுத்தவில்லை. பிறகு, நாராயணஸ்வரூபிகளான கிருஷ்ணார்ஜுனரிருவரும் பலாத்காரமாக நாராயணாஸ்திரம் தணிவதின்பொருட்டே பீமனையும் எல்லாவித சஸ்திரங்களையும் ஆயுதங்களையும்பற்றி இழுத்தார்கள். இழுக்கப்படுகின்ற குந்திபுத்திரனான பீமன் பேரொலியுடன் கர்ஜித்தான். ஒருவராலும் ஜயிக்கமுடியாததான அந்தத்துரோணபுத்ரரின் அஸ்திரமோ கோரமாக விருத்தியடைந்தது. அந்தப்பீமனைக்கண்டு வாஸுதேவர், 'பாண்டுநந்தன! இதென்ன? குந்திபுத்திர! தடுக்கப்பட்டும் யுத்தத்தினின்று ஏன் திரும்பாமலிக்கிறாய்? இந்தக் கௌரவநந்தனர்கள் யுத்தத்தினாலே ஜயிக்கத்தக்கவர்களாயிருப்பார்களாகில், இப்பொழுது நாங்களும் இந்தப் புருஷசிரேஷ்டர்களும் யுத்தஞ்செய்வோமல்லவா? உன்னைச்சேர்ந்தவர்களான நாங்களனைவரும் ரதத்தினின்று கீழேயிறங்கிவிட்டோமல்லவா? குந்திபுத்திர! ஆதலால், நீயும் ரதத்தினின்று விரைவாகக் கீழே இறங்கு' என்று சொன்னார். ஸ்ரீ மாதவர் இவ்வாறு சொல்லிவிட்டு, ஸர்ப்பம்போலப் பெருமூச்சுவிடுகின்றவனும் கோபத்தால் கண்கள் மிகச் சிவந்தவனுமான அந்தப் பீமனை ரதத்தினின்று பூமியிலிறங்கும்படிசெய்தார். அவன் ரதத்தினின்று கீழேயிறக்கப்பட்டு ஆயுதத்தையும் கீழேவைக்கும்படி செய்யப்பட்டவுடனே, சத்துருக்களை வாட்டுகின்றதான அந்த நாராயணாஸ்திரமானது முழுதும் தணிந்துவிட்டது. ஸகிக்கமுடியாததான அந்த அஸ்திரதேஜஸ் அந்த முறையினால் தணியவே, எல்லாத்திக்குக்களும் திக்குக்கோணங்களும் மாசற்றவையாயின. மங்களகரமான காற்றும் வீசிற்று. மிருகங்களும் பக்ஷிகளும் மிகுந்த சாந்தமடைந்தன. ஒருவராலும் ஜயிக்கமுடியாததான அஸ்திரம் தணிந்தவுடனே வாகனங்கள் ஸந்தோஷமடைந்தன. பாரதரே! பிறகு, கோரமான அந்தத் தேஜஸ் விலக்கப்பட்டவுடன், புத்திசாலியானபீமன் காலையில் உதிக்கின்ற சூரியன்போல விளங்கினான். மரித்ததுபோக மிகுந்துள்ள பாண்டவசேனையானது அஸ்திர

வேகந் தணிந்ததால் ஸந்தோஷமடைந்ததாகி உமது புத்திரனைக்கொல்ல எண்ணங்கொண்டு நின்றது. மகாராஜரே! அந்தச்சேனையும்யுத்தத்திற்கு ஸன்னத்தமாகி அந்த நாராயணாஸ்திரமும் அவ்வாறு நாசம்செய்யப் படவே, துரியோதனன் துரோணபுத்திரரைநோக்கி, 'அஸ்வத்தாமாவே! மறுபடியும் விரைவாக இந்த அஸ்திரத்தைப் பிரயோகம்செய்யும். இந் தப் பாஞ்சாலர்களோ ஜயத்தில் விருப்பமுள்ளவர்களாகி எதிரில் நிற் கின்றார்கள்' என்று கூறினான். ஐயா! உமது புத்திரனால் அவ்வாறு சொல்லப்பட்ட அந்த அஸ்வத்தாமா மிக்க தளர்ச்சியுடன் பெருமூச்சு விட்டுக்கொண்டு அரசனைநோக்கி, 'மன்னவ! இந்தச் சஸ்திரம் திரும் பாது. இந்தச் சஸ்திரம் இரண்டுதரம் பிரயோகிக்கத்தகாதது; திருப் பப்பட்டால் பிரயோகித்தவன்மீதே திரும்பும்; ஸம்சயமில்லை. இந்த வாஸுதேவர் இந்த அஸ்திரத்திற்குத் தடையானகாரியத்தைச் செய்து விட்டார். இந்த அஸ்திரத்தைக் கொடுத்தவர் இவரே. மனிதர்களுள் வேறொருவனுமல்லன். உலகங்களுடைய பராபரதத்வங்களையறிந்தவ ரான இந்த ஸ்ரீ வாஸுதேவர் அறியாதது இல்லை. அப்படிப்பட்ட இந்த நாராயணாஸ்திரமானது மாதவருடைய ஆலோசனைகளால் தணிந் துவிட்டது. அரசரே! யுத்தத்தில் சத்துருவுக்குத் தோல்வியும் அல் லது மரணமுமாக, வதமானது இருவிதமாக விதிக்கப்பட்டிருக்கிறது. (அவ்விரண்டினுள்) மரணமே சிறந்தது; தோல்வி சிறந்ததன்று. இந்தச் சத்துருக்கள் ஆயுதத்தைக் கீழேவைத்ததால் தோல்வியடைவிக்கப்பட் டுச் செத்தவர்களை ஒத்தவர்களாயினர்' என்று கூறினார். துரியோதனன், 'ஆசார்யபுத்திரரே! அஸ்திரங்களையறிந்தவர்களுள்ளுத்தமரே! இந்த அஸ்திரம் இருமுறை பிரயோகிக்கக்கூடாததாயிருந்தால் குருவைக் கொன்றவர்களை வேறு அஸ்திரங்களாலே கொல்லக்கடவீர். உம்மிடத் திலும் அளவுகடந்த பராக்கிரமமுள்ள முக்கண்ணரிடத்திலும் இவ் யாஸ்திரங்கள் ஸான்னித்யம்செய்கின்றன. மிக்கவீர்யவானே! போரில் வல்லவரான நீர் இந்தச் சத்துருக்களைக் கொன்றுவிடும். நீர் கொல்ல விரும்பினால், உம்மிடத்தினின்று மிகுந்த கோபமுள்ள இந்திரனும் விடு படமாட்டான்' என்று சொன்னான்" என்றான்.

திருதராஷ்டிரன், "அந்த அஸ்திரம் நாசம்பண்ணப்பட்டு, துரோ ணரும் கபடத்தால் கொல்லப்படவே, அவ்வாறு துரியோதனன் சொல் லியதைக்கேட்ட அஸ்வத்தாமா, நாராயணாஸ்திரத்தால் விடுபட்டுப் படைமுகத்தில் ஸஞ்சரிக்கின்றவர்களும் போருக்கு ஸித்தமாயிருப் பவர்களுமான பாண்டவர்களைக்கண்டு மறுபடியும் என்னசெய்தார்?"

என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "ஸிம்மத்தினுடைய வாலைக் கொடியாகக்கொண்ட அந்த அஸ்வத்தாமா பிதாவினுடைய வதத்தை அறிந்து கோபமுற்றுப் பயமேயில்லாமல் பார்ஷதனையெதிர்த்து விரைவாகச்சென்றார். நரஸ்ரேஷ்டரே! புருஷஸ்ரேஷ்டரான அஸ்வத்தாமா எதிராக ஓடி இருபது க்ஷுரத்ரகங்களென்கிற பாணங்களாலும் ஐந்து பாணங்களாலும் அதிவேகத்தோடு திருஷ்டத்யும்னனை அடித்தார். வேந்தரே! பிறகு, திருஷ்டத்யும்னன் கொழுந்துவிட்டெரியும் தீப் போன்ற துரோணபுத்திரரை அறுபத்துமூன்று பாணங்களாலே துன்பமடையும்படி அடித்தான். அரசரே! பொற்புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான இருபது அம்புகளாலே இவருடைய ஸாரதியையும் அடித்துக் கூர்மையுள்ள நான்குபாணங்களாலே நான்கு குதிரைகளையும்அடித்தான். அவன் அஸ்வத்தாமாவை அடித்து அடித்துப் பூமியை நடுங்கச்செய்கிறவன்போல் கர்ஜித்தான். மகாயுத்தத்தில் பார்ஷதன் எல்லாப்பிராணிகளுடைய உயிரையும் வாங்குபவன் போலக் காணப்பட்டான். பூமிபாலரே! பலசாலியும் அஸ்திரங்களில் தேர்ச்சியடைந்தவனும் உறுதியுள்ளவனுமான அவன் மரணத்தை லக்ஷியம்செய்யாமல் துரோணபுத்திரரைக்குறித்தே ஓடிவந்தான். பிறகு, அளவிடமுடியாத மகிமையுள்ளவனும் தேராளிகளுள் உத்தமனுமான பாஞ்சால்யன் துரோணபுத்திரருடைய முடியில் சரமாரியைப் பொழிந்தான். துரோணகுமாரர் தம் தந்தையாரின் வதத்தை நினைத்து யுத்தரங்கத்தில் கோபங்கொண்டவனான திருஷ்டத்யும்னனைப் பாணங்களால் மூடினார்; பத்தம்புகளாலும் அடித்தார். அவர் பாஞ்சாலராஜனுடைய கொடியையும் வில்லையும் நன்றாக விடப்பட்ட இரண்டு க்ஷுரங்களாலறுத்து இன்னும் மற்றப்பாணங்களாலே அடித்தார். மகாயுத்தத்தில் துரோணபுத்திரர் கோபங்கொண்டவனான இந்தத் திருஷ்டத்யும்னனைக் குதிரைகள், ஸாரதிகள், ரதம் இவைகளையிழந்தவனாகச் செய்தார்; அவனையனுஸரித்துவந்த எல்லா வீரர்களையும் அம்புகளாலே ஓடும்படி செய்தார். அரசரே! பிறகு, பாஞ்சாலர்களுடைய ஸைனியமானது ஓடியது. பயந்த வடிவத்தையுடையதும் துன்புற்றதுமான அந்த ஸைனியம் பரஸ்பரம் பார்த்துக்கொள்ளவில்லை. புறங்காட்டியோடுகின்ற யுத்தவீரர்களையும் பீடிக்கப்பட்ட திருஷ்டத்யும்னனையும் பார்த்துச் சைனேயன் விரைவாகத் தன் ரதத்தைத் துரோணபுத்ரருடைய ரதத்தண்டை ஓட்டினான். கோபங்கொண்டவனான சைனேயன் அஸ்வத்தாமாவைக் கூர்மையுள்ள எட்டுப்பாணங்களாலடித்து மறுபடியும் பலவித உருவமுள்ள இருபது பாணங்களால் அடித்து அவ்வாறே ஸாரதியையும்

நான்கு குதிரைகளையும் நான்கு பாணங்களால் அடித்தான். கைப்பழக்கமுள்ளவன்போல மிக்க முயற்சியுள்ளவனாகி அவருடைய வில்லையும் கொடியையும் அறுத்தான். பொன்னால் அலங்கரிக்கப்பட்டதும் குதிரைகளோடுகூடியதுமான அவரது தேரையும் நாசம்செய்தான். யுத்தகளத்தில் முப்பதுபாணங்களாலே (அஸ்வத்தாமாவை) அதிகமாக மார்பில் அடித்தான். மன்னரே! மகாபலசாலியான அஸ்வத்தாமா இவ்வாறு தொந்தரவுசெய்யப்பட்டவரும் அம்புகளாகிறவலைகளால் நான்குபக்கமும் மூடப்பட்டவருமாகிச் செய்யவேண்டியதைத் தெரிந்துகொள்ளவில்லை. குருபுத்திரர் இவ்வாறான நிலைமையை அடைந்திருக்கும்பொழுது மகாரதனான உம்முடைய குமாரன், கிருபர் கர்ணன்முதலானவர்களோடு சேர்ந்து பாணங்களால் ஸாத்வதனை மூடினான். ஸாத்யகியைத் துரியோதனன் கூர்மையுள்ள இருபது பாணங்களாலும் சாரத்வதரான கிருபர் மூன்றுபாணங்களாலும் கிருதவர்மா பத்துப்பாணங்களாலும் கர்ணன் ஐம்பதுபாணங்களாலும் துச்சாஸனன் நூறுபாணங்களாலும் விருஷஸேனன் ஏழுபாணங்களாலும் விரைவாக அடித்தார்கள். அரசரே! பிறகு, அந்த ஸாத்யகி எல்லா மகாரதர்களையும் ஒருக்ஷணத்திற்குள் ரதத்தையிழந்தவர்களும் புறங்காட்டியோடுகின்றவர்களுமாகச் செய்தான். அரசரே! அஸ்வத்தாமாவோ துக்கத்தால் துன்பமுற்று அடிக்கடி பெருமூச்சுவிட்டு அறிவையடைந்து ஆலோசிக்கலானார். பிறகு, சத்துருக்களைத் தபிக்கச்செய்கின்றவரான துரோணபுத்திரர் வேறுரதத்திலேறிக்கொண்டு அனேகபாணங்களையிறைத்து ஸாத்யகியைத் தடுத்தார். மகாரதனான ஸாத்யகி யுத்தத்தில் எதிர்த்துவருகின்ற பாரத்வாஜகுமாரரைப் பார்த்து அவரை மறுபடியும் ரதத்தையிழந்து புறங்காட்டியோடும்படி செய்தான். அரசரே! பிறகு, அந்தப் பாண்டவர்கள் ஸாத்யகியினுடைய வல்லமையைக்கண்டு சங்கங்களை மிக முழக்கினார்கள்; ஸிம்மநாதத்தையும் செய்தார்கள். ஸத்யவிக்கிரமனான ஸாத்யகி இவ்வாறு அவரைத் தேரையிழந்தவராகச்செய்து விருஷஸேனனைச்சேர்ந்த மூவாயிரம் மகாரதர்களைக் கொன்றான். அந்த ஸாத்யகி கிருபருடைய பதினாயிரம் யானைகளையுங் கொன்று சகுனியைச் சேர்ந்த ஐம்பதினாயிரம் குதிரைகளையும் கொன்றான். மகாராஜரே! பிறகு, வீர்யமுடையவரான துரோணகுமாரர் மிக்க கோபமூண்டு ரதத்தின்மீதேறி ஸாத்யகியைக் கொல்லவேண்டுமென்னும் எண்ணத்தால் அவனைநோக்கி எதிர்த்துவந்தார். சத்துருக்களை அடக்குகிறவரே! சைனேயன் மறுபடியும் தன்னை எதிர்த்துவருகின்ற அஸ்வத்தாமாவைப் பார்த்து மிக்க குரூரமானவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்

புகளாலே அடிக்கடி பிளந்தான். பற்பலவிதமான சஸ்திரங்களால் யுயுதானனால் அதிகமாக அடிக்கப்பட்டவரும் கோபங்கொண்டவரும் மகா வில்லாளியுமான அஸ்வத்தாமா அட்டஹாஸம் செய்துகொண்டு, 'சைனேய! ஆசார்யரைக் கொன்றவன்மீது உனக்குள்ள கருணையை நான் அறிவேன். என் கையிலகப்பட்ட இந்தத் திருஷ்டத்யும்னனையும் உன்னையும் நீ ரக்ஷித்துக்கொள்ளப்போகிறதில்லை. சைனேய! யான் என்மீதும் ஸத்யத்தின்மீதும் தவத்தின்மீதும் ஆணையிடுகிறேன். எல்லாப் பாஞ்சாலர்களையுங் கொல்லாமல் நான் ஆறுதலையடைவேனா? பாண்டவர்களுக்குள்ள பலமும் விருஷ்ணிகளுக்குள்ள பலமும் முழுதும் இப்பொழுது வெளியிடப்படலாம். ஸோமகர்களை நான் கொல்லப்போகிறேன்' என்று சொன்னார். துரோணபுத்திரர் இவ்வாறு சொல்லிவிட்டு விருத்திராஸுரன்மீது இந்திரன் வஜ்ரத்தைப் பிரயோகித்ததுபோல ஸூர்யகிரணங்கள்போல் ஜ்வலிக்கின்றதும் அதிக கூர்மையுள்ளதுமான சிறந்த பாணத்தை ஸாத்வதன்மீது பிரயோகித்தார். அவரால் பிரயோகிக்கப்பட்ட அவ்வம்பானது கவசத்துடன்கூடிய ஸாத்யகியைப் பிளந்து சீறுகின்ற ஸர்ப்பம் பிலத்தில் நுழைவதுபோலப் பூமியைப் பிளந்துகொண்டு நுழைந்தது. கவசமுடைக்கப்பட்டவனும் சூரனுமான அந்த ஸாத்யகி காயங்களிலிருந்து மிகவும் பெருகுகின்ற இரத்தப்பெருக்கோடுகூடியவனாகியும் ஈட்டியினால் குத்தப்பட்ட யானைபோல வருந்துகின்றவனும் ரத்தத்தினால் நனைக்கப்பட்டவனும் வாடுகின்றவனுமாகியும் அம்புடன்கூடின வில்லைப் போட்டுவிட்டு ரதமத்தியில் உட்கார்ந்தான். அவன், ஸாரதியினாலே துரோணபுத்திரரிடத்தினின்று வேறு ரதத்துக்கு விரைவாகக் கொண்டுபோகப்பட்டான். பிறகு, பகைவரை வாட்டுபவரான அஸ்வத்தாமா உறுதியான புங்கமுள்ளதும் சிறிதுபடிந்த கணுக்களுள்ளதுமான வேறொருபாணத்தினாலே திருஷ்டத்யும்னனைப் புருவங்களுடைய நடுவில் அடித்தார். முன்னே அதிகமாக அடிக்கப்பட்டவனும் பின்னும் அதிகமாகத் துன்புறுத்தப்பட்டவனுமான அந்தப் பாஞ்சாலகுமாரன் களைப்படைந்து கொடிமரத்தைப் பிடித்துக்கொண்டான். அரசரே! ஸிம்மத்தினாலே அடிக்கப்பட்ட யானையைப்போலப் பாணங்களால் அடிக்கப்பட்ட பாஞ்சால்யனைக்கண்டு பாண்டவசேனையிலிருந்து சூரர்களான ஐந்து ரதிகர்கள் வேகத்தோடு எதிர்த்துவந்தார்கள். கிரீடி, பீமஸேனன், பௌரவனான விருத்தக்ஷத்திரன், சேதிதேசத்து யுவராஜன், மாலவதேசாதிபதியான ஸுதர்சனன் இவ்வீரர்களெல்லோரும் ஹா ஹாகாரங்கொண்டவர்களாகவும் வில்லைக் கையிற்பிடித்தவர்களாகவும் வீர

ரான துரோணகுமாரரை நான்குபக்கங்களிலும் சூழ்ந்துகொண்டார்கள். முயற்சியுள்ளவர்களான அவர்கள் இருபது அடி தூரத்திலிருந்துகொண்டு கோபங்கொண்ட குருபுத்திரரை ஐந்து ஐந்து பாணங்களாலே நான்குபுறத்தினின்றும் ஸமமாக அடித்தார்கள். துரோணபுத்திரரோ ஸர்ப்பங்களுக்கொப்பானவைகளும் கூர்மையுள்ளவைகளுமான இருபத்தைந்துபாணங்களாலே ஒரேஸமயத்தில் இருபத்தைந்து பாணங்களையும் அறுத்தார். அவர் கூர்மையுள்ள ஏழுபாணங்களாலே பௌரவனையும் மூன்றுபாணங்களால் மாலவனையும் ஒருபாணத்தால் பார்த்தனையும் ஆறுபாணங்களால் பீமனையும் அடித்தார். மன்னரே! பிறகு, அந்த எல்லா மகாரதர்களும் பொற்புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான அம்புகளாலே துரோணபுத்திரரை ஒன்றுசேர்ந்தும் தனித்தனியாகவும் அடித்தார்கள். யுவராஜன் இருபதுபாணங்களால் துரோணபுத்திரரை அடித்தான். பார்த்தனோ துரோணகுமாரரை எட்டுப்பாணங்களால் அடித்தான்; அவ்வாறே மற்றவர்களெல்லாரும் மும்மூன்றுபாணங்களால் அடித்தார்கள். பிறகு, துரோணபுத்திரர் அர்ஜுனனை ஆறுபாணங்களாலும் வாஸுதேவரைப் பத்துப்பாணங்களாலும் பீமனை ஐந்து பாணங்களாலும் யுவராஜனை நான்கு பாணங்களாலும் மாலவனையும் பௌரவனையும் இரண்டிரண்டு பாணங்களாலும் அடித்தார். துரோணபுத்திரர் பீமஸேனனுடைய ஸாரதியை ஆறுபாணங்களால் அடித்து இரண்டுபாணங்களால் வில்லையும் கொடியையும் அறுத்து மறுபடியும் பீமஸேனனைச் சரமாரியால் அடித்துக் கோரமான ஸிம்மநாதம் செய்தார். கூர்மையுள்ளவைகளும் துவைந்தவைகளுமான பாணங்களைப் பிந்தியும் முந்தியும் இறைக்கின்ற துரௌணியினுடைய கோரமான (அந்தப்) பாணங்களாலே பூமியும் ஆகாயமும் ஸ்வர்க்கலோகமும் மூலைத்திசைகளும் திக்குக்களும் மூடப்பட்டன. மிக்கவல்லமையுள்ளவரும் இந்திரனுக்குச் சமமானவீர்யமுள்ளவருமான துரோணபுத்திரர் தமது ரதத்திற்கு அருகேயிருக்கின்ற ஸுதர்சனனுடைய இந்திர த்வஜம்போலப் பிரகாசிக்கின்ற இருகைகளையும் தலையையும் மூன்றுபாணங்களால் ஒரேசமயத்தில் அறுத்தார். அவர் பௌரவனை வ்ருத்தக்ஷத்ரனைத் தாழைமடல்போன்ற நுனியுள்ள சக்தியினாலே அடித்து அவனுடைய ரதத்தையும் பாணங்களால் எள்ளளவெள்ளளவாக வெட்டிச் சிறந்த சந்தனத்தினால் பூசப்பட்ட இரண்டுகைகளையும் வெட்டி ஒருபல்லத்தினாலே சரீரத்தினின்று தலையையும் அறுத்தார். விரைவுள்ளவரான அந்தத் துரோணகுமாரர் கருநெய்தற்புஷ்பங்களால் தொடுக்கப்பட்டமாலை

போன்ற நிறமுடையவனும் யௌவனமுள்ளவனும் சேதிதேசத்தரசனுமான யுவராஜனைப் பலாத்காரமாக ஜ்வலிக்கின்ற நெருப்புக்கொப்பான பாணங்களாலடித்து அவனைக் குதிரைகளோடும் ஸாரதியோடும் மிருத்யுவினிடத்தில் கொடுத்தார். மாலவதேசத்தரசனும் பௌரவனும் சேதிதேசரக்ஷகனான யுவராஜனும் துரோணபுத்ரரால் தனக்கு எதிரிலேயே கொல்லப்பட்டதைக்கண்டு, பாண்டுபுத்திரனும் மகாபாகுபலமுள்ளவனுமான பீமஸேனன் அதிக கோபத்தை அடைந்தான். பிறகு, பகைவரைவாட்டுபவனான பீமஸேனன் கூர்மையுள்ளவைகளும் மிக்க கோபங்கொண்ட ஸர்ப்பங்கள்போன்றவைகளுமான அனேக அம்புகளாலே யுத்தத்தில் துரோணபுத்திரரை மூடினான். பிறகு, மகாதேஜஸ்வியும் கோபமுள்ளவருமான துரோணபுத்திரர் சரமாரியை நாசம் செய்து கூர்மையான அம்புகளாலே பீமஸேனனை அடித்தார். பிறகு, மகாபாகுபலமுள்ளவனும் அதிக தேகவன்மையுள்ளவனுமான பீமன் யுத்தரங்கத்தில் துரோணபுத்திரருடையவில்லை க்ஷுராப்ரத்தினலறுத்து அவரையும் பாணத்தால் அடித்தான். அதிக மனோதைரியமுள்ள துரோணபுத்திரர் அறுக்கப்பட்டவில்லை யெறிந்துவிட்டு, வேறு வில்லைக் கையிலெடுத்துப் பீமனைப் பாணங்களால் அடித்தார். யுத்தத்தில் பராக்கிரமமுள்ளவர்களும் மகாபலசாலிகளுமான அந்த அஸ்வத்தாமாவும் பீமனும் வர்ஷதாரையைப் பொழிகின்ற இரண்டுமேகங்கள் போலச் சரமாரியைப் பொழிந்தார்கள். பீமனுடைய பெயர் வெட்டப்பட்டவைகளும் பொற்புங்கமுள்ளவைகளும் சாணையில் தீட்டப்பட்டவைகளுமான பாணங்கள் மேகக்கூட்டங்கள் சூரியனைமறைப்பது போலத் துரோணபுத்திரரை மறைத்தன. அவ்வாறே, அவரால் விடப்பட்டவைகளும் படிந்தகணுக்களுள்ளவைகளுமான லக்ஷக்கணக்கான அம்புகள் பீமன்மீது விரைவாக இறைக்கப்பட்டன. மகாராஜரே! யுத்தத்தொழிலுடன்கூடின துரோணபுத்திரராலே யுத்தத்தில் மூடப்பட்டபீமன் மனவருத்தமடையவில்லை. அது ஆச்சரியமாயிருந்தது. பிறகு, மகாபாகுபலமுள்ளபீமன் ஸ்வர்ணத்தினல் அலங்கரிக்கப்பட்டவைகளும் யமதண்டத்துக்கொப்பானவைகளும் கூர்மையுள்ளவைகளுமான பத்துப்பாணங்களைப் பிரயோகித்தான். ஐயா! அவ்வம்புகள் துரோணபுத்திரருடைய தோள்பூட்டுகளையடைந்து பிளந்துகொண்டு புற்றில் பாம்புகள் நுழைவதுபோல் வேகமாகப் பிரவேசித்தன. மகாபலசாலியான பாண்டவனாலே மிகவும் அதிகமாக அடிக்கப்பட்ட அந்தத் துரோணபுத்திரர் கொடிமரத்தில்சாய்ந்து இரண்டுகண்களையும் மூடிக்கொண்டார். அரசரே! யுத்தத்தில் இரத்தத்தால் நனைக்கப்

பட்ட துரோணபுத்திரர் ஒருமுகூர்த்தகாலத்திற்குள் மறுபடியும் ப்ரஜ்ஞையடைந்து அதிக கோபங்கொண்டு யுத்தத்திற்கு ஸன்னத்தராக நின்றார். மகாத்மாவான அந்தப் பாண்டவனாலே நன்றாக அடிக்கப்பட்ட மிக்க பாகுபலமுள்ள துரோணபுத்திரர் அவனுடைய ரதத்தை நோக்கி வேகத்துடன் எதிர்த்துச் சென்றார். பிறகு, அவர் காதுவரை நாண்கயிற்றை இழுத்துவிடப்பட்டவைகளும் கொடிய சக்தியுள்ளவைகளும் ஸர்ப்பங்கள்போல் பிரகாசிக்கின்றவைகளுமான நூறு அம்புகளைப் பிரயோகித்தார். போரில் மகிழ்கின்றவனும் பாண்டுபுத்திரனுமான பீமனும் அந்த அச்வத்தாமாவினுடைய வீர்யத்தை ஆலோசியாமல் கடுமையான சரமாரிகளை வேகமாகப் பொழிந்தான். மகாராஜரே! பிறகு, துரோணபுத்திரர் பாணங்களாலே அந்தப் பீமனுடையவில்லை அறுத்துக் கோபத்துடன் கூர்மையுள்ள அம்புகளாலே பீமஸேனனை மார்பிலடித்தார். பிறகு, கோபங்கொண்டவனான பீமஸேனன் வேறு வில்லைக்கையிலெடுத்துக் கூர்மையான ஐந்தம்புகளாலே யுத்தத்தில் துரோணபுத்திரரை அடித்தான். வர்ஷாகாலத்தில் தோன்றிய இரண்டு மேகங்கள்போலக் கோபத்தினால் சிவந்தகண்களோடுகூடின அவ்விருவரும் சரமாரிகளைப் பொழிந்துகொண்டு யுத்தத்தில் ஒருவரையொருவர் மூடினார்கள். பிறகு, கோரமான தலத்வனிகளாலே பரஸ்பரம் பயமுறுத்துகின்றவர்களான அவ்விருவரும் மிக்க பரபரப்புடன் செய்ததற்குப் பிரதிசெய்வதில் விருப்பமுள்ளவர்களாக யுத்தம்செய்தார்கள். பின்பு, சரத்காலத்தில் நடுப்பகலையடைந்து பிரகாசிக்கின்ற கிரணங்களுடன்கூடிய ஸூரியன்போன்ற அந்தத் துரோணகுமாரர் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்ட பெரிதானவில்லை நாணொலியிடும்படிசெய்து, அருகில்நின்று பாணங்களைப் பிரயோகிக்கின்ற பீமனைப் பார்த்தார். விரைவாகச் செல்லுகின்ற பாணங்களை எடுத்தல் தொடுத்தல் விடுத்தலாகிய இவைகளின் இடைநேரத்தை ஜனங்கள் பார்க்கவில்லை. மகாராஜரே! அப்பொழுது பாணங்களைப் பிரயோகிக்கின்ற அந்தத் துரோணபுத்திரருடைய வட்டமான வில்லானது கொள்ளிவட்டம்போலிருந்தது. அந்தத் துரோணகுமாரருடைய வில்லினின்று நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் வெளிப்படுகின்ற அம்புகள் ஆகாயத்தில் வரும் விட்டிற்பூச்சிகள்போலக் காணப்பட்டன. அவரால் விடப்பட்டவைகளும் பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் கோரமாயுள்ளவைகளுமான அம்புகள் பீமனுடைய தேரைக்குறித்து ஒழிவற்று இறைக்கப்பட்டன. பாரதரே! அந்த யுத்தகளத்தில் ஆச்சரியகரமான பீமஸேனனுடைய பராக்ரமத்தையும் பலத்தையும் வீர்

யத்தையும் பிரபாவத்தையும் முயற்சியையும் பார்த்தோம். பயங்கரமான பராக்கிரமமுள்ளபீமன் நாற்புறங்களிலிருந்தும் உண்டாகிற மிக்க கோரமான அந்தப் பாணமழையை வர்ஷாகாலத்தில் மேகத்தினின்று தோன்றின ஜலமாரியைப்போல எண்ணித் துரோணபுத்திரரை வதம்செய்யநினைந்து வர்ஷாகால மேகம்போலச் சரமாரிகளைப் பொழிந்தான். பின்புறத்திற் பொன்னலங்காரமுள்ளதும் மகாயுத்தத்தில் இழுக்கப்படுவதும் பயங்கரமுமான பீமனுடைய வில்லானது வேறு இந்திரவிற்போல் விளங்கியது. அந்த வில்லினின்று நூறுநூறாகவும் ஆயிரம் ஆயிரமாகவும் வெளிப்படுகின்ற அம்புகள் யுத்தத்தில் பிரகாசிக்கின்ற துரோணபுத்திரரை யுத்தகளத்தில் நன்றாகமறைத்தன. பெரியவரே! இவ்வாறு பாணஸமூகங்களை அவ்விருவரும் பிரயோகித்துக்கொண்டிருக்கும்பொழுது இடையில் காற்றும் சஞ்சரிப்பதற்குச் சக்தியற்றதாகியது. மகாராஜரே! துரோணபுத்திரர் (பீமனை) கொல்லவேண்டுமென்கிற எண்ணத்தினாலே பொன்னால் அலங்கரிக்கப்பட்டவைகளும் எண்ணெயிட்டுத் தீட்டப்பட்டவைகளும் முனைபளபளப்பானவைகளுமான அம்புகளைப் பிரயோகித்தார். பீமன் ஆகாயத்திலேயே பாணங்கள் ஒவ்வொன்றையும் பாணங்களால் மும்மூன்றாகத் துண்டாக்கி நாசம்செய்தான். பிறகு, பாண்டவன் துரோணபுத்திரரை மீறினவனாகி, 'நில்; நில்' என்றும் சொன்னான். பலவானான பாண்டவன் கோபங்கொண்டு துரோணபுத்திரரைக் கொல்லும் எண்ணத்தினாலே கோரமும் உக்கிரமுமான சரமாரிகளை மறுபடியும் பொழிந்தான். பிறகு, மகாஸ்திரங்களையறிந்தவரான துரோணபுத்திரர் அஸ்திரமாயையினாலே அந்தச் சரமாரியை வேகமாகத்தடுத்துப் பீமனுடையவில்லை அறுத்தார்; யுத்தத்தில் கோபங்கொண்டு அனேக அம்புகளாலே அந்தப் பீமனையும் பிளந்தார். வில் அறுக்கப்பட்ட பலவானான பீமஸேனன் மிக்க பயங்கரமாயிருக்கின்ற ரதசக்தியை வேகத்தோடு சுழற்றித் துரோணபுத்திரரது தேரைநோக்கி எறிந்தான். அவர் கைத்தேர்ச்சியைக் காண்பித்துக்கொண்டு பெரிய உற்கைபோற் பிரகாசித்துக்கொண்டுவருகின்ற அந்தச் சக்தியாயுதத்தை யுத்தத்தில் கூர்மையான அம்புகளால் விரைவாக அறுத்தார். இச்சமயத்தில் விருகோதரனான பீமன் சிரித்துக்கொண்டு திடமான வில்லைக் கையிலெடுத்துப் பாணங்களாலே துரோணபுத்திரரை அடித்தான். மகாராஜரே! பிறகு, துரோணபுத்திரர் பீமஸேனனுடைய ஸாரதியைப் படிந்தகணுக்களுள்ள அம்பினால் நெற்றியைப் பிளந்தார். அரசரே! பலவானான துரோணபுத்திரராலே நன்றாக அடிக்கப்பட்ட அந்தஸாரதி குதிரைகளுடைய

கடிவாளங்களைவிட்டு அதிக மூர்ச்சையை அடைந்தான். ராஜேந்திரரே! பிறகு, இரதத்திலுள்ளஸாரதி மூர்ச்சையடைந்திருக்கும் ஸமயத்தில் எல்லாவில்லாளிகளும் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே பீமஸேனனுடைய குதிரைகள் விரைவாக ஓடிவிட்டன. குதிரைகள் யுத்தரங்கத்தினின்று பீமனை இழுத்துக்கொண்டோடுவதைக் கண்டு (பிறரால்) ஜயிக்கமுடியாதவரான அஸ்வத்தாமா ஸந்தோஷமடைந்து பெரிதான சங்கத்தை ஊதினார். பிறகு, எல்லாப் பாஞ்சாலர்களும் பாண்டுநந்தனனை பீமஸேனனும் பயந்துகொண்டு திருஷ்டத்யும்னனுடைய ரதத்தைவிட்டுத் திக்குக்களில் ஓடினார்கள். பிறகு, துரோணபுத்ரர், தோற்று ஓடுகின்ற அவர்களுக்குப்பின் பாணங்களை இறைத்துக்கொண்டும் வேகத்தோடு பாண்டவஸேனையைத் துரத்திக்கொண்டும் சென்றார். அரசரே! யுத்தத்தில் துரோணபுத்திரராலே கொல்லப்படுகின்ற அந்த அரசர்கள் அவரிடமிருந்துண்டானபயத்தாலே எல்லாத் திக்குக்களையும் அடைந்தார்கள்.

---

## இருநூற்றிரண்டாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)

(அஸ்வத்தாமா ஆக்னேயாஸ்திரத்தைப் பிரயோகித்ததும், அதுவும் வீணாக்கப்பட்டமையால் அவர் ஆயுதங்களை எறிந்துவிட்டுப் போர்க்களம் விட்டுச்சென்றதும், அவர் அங்குவந்த வியாஸரைத் தம்முடைய ஆயுதங்கள் வீணாவதன்காரணங் கேட்டதும், வியாஸர் கிருஷ்ணார்ஜுனர்கள் நரநாராயணரென்று சொல்ல அஸ்வத்தாமா திரும்பிவந்து சேனைகளைப் போர்நிறுத்தச் செய்ததும்.)

அளவிடமுடியாத பலத்தையுடையவனும் குந்திபுத்திரனுமான தனஞ்சயன் அந்தச்சேனை தோல்வியடைவிக்கப்பட்டதைக் கண்டு, துரோணபுத்திரரை ஜயிக்கும் விருப்பத்தினாலே (படைகளைத்) தடுத்து நிறுத்தினான். அரசரே! பிறகு, அந்தப் போர்வீரர்களெல்லாரும் கோவிந்தராலும் அர்ஜுனனாலும் முயற்சியோடு நிலைநிறுத்தப்பட்டு யுத்தபூமியில் நின்றார்கள். பீபத்ஸு ஒருவனே ஸோமகர்களைச் சேர்ந்த மண்டலாதிபர்களோடும் மச்சநாடர்களோடும் இன்னும்மற்றவர்களோடும்சேர்ந்து கௌரவர்களைக்குறித்து (யுத்தத்திற்கு) த்திரும்பினான். பிறகு, அவன் வேகமாகமுந்திச்சென்று ஸிம்மத்தினுடைய

வாலைக் கொடியாகக்கொண்டவரும் சிறந்த வில்லாளியுமான அஸ்வத்தாமாவைநோக்கி, 'ஓ! அஸ்வத்தாமாவே! உமக்குள்ளசக்தி, சிற்பங்களிலுள்ள ஞானம், வீர்யம், ஆண்மை, தார்த்தராஷ்டிரர்களிடமுள்ள அன்பு, எங்களிடமுள்ளபகை, இன்னும் அதிகமான வல்லமை ஆகிய எல்லாவற்றையும் என்னிடம் காண்பிப்பீராக. துரோணரைக்கொன்றவனை அந்தப் பார்ஷதனே உமது கர்வத்தைப் போக்கப்போகிறான். ஊழித்தீப்போல ஒளிர்கின்றவனும் பகைவர்களுக்கு யமன்போன்றவனுமான பாஞ்சாலராஜகுமாரனையும் கேசவரோடுகூடின என்னையும் வந்து எதிர்ப்பீராக. யுத்தத்தில் கர்வங்கொண்ட உமது கொழுப்பை இப்பொழுது நாசம்செய்வேன்' என்று சொன்னான்" என்றான்.

திருதராஷ்டிரன், "ஸஞ்சய! ஆசார்யபுத்திரரான அஸ்வத்தாமா பூஜிக்கத்தக்கவர்; மேலும், பலசாலி. அவருக்குத் தனஞ்சயனிடத்தில் பிரீதியுண்டு; மகாத்மாவான தனஞ்சயனுக்கும் அவர் பிரியர். இப்படிப்பட்ட குரூரமான வாக்கியமானது அர்ஜுனனிடத்தினின்று இதற்குமுன் வந்ததில்லை. இப்படி இருக்க, யாதுகாரணத்தினால் கௌந்தேயன் நண்பரான அஸ்வத்தாமாவைநோக்கிக் குரூரமானவார்த்தையைச் சொன்னான்?" என்று வினவ, ஸஞ்சயன் சொல்லலானான். "யுவராஜாவான சேதிதேசாதிபதியும், பௌரவனான விருத்தக்ஷத்திரனும், பாணங்களிலும் அஸ்திரங்களிலும் ஸமர்த்தனும் மாலவாதிபதியுமான ஸுதர்சனனும் கொல்லப்பட்டும், திருஷ்டத்யும்னனும் ஸாத்யகியும் பீமனும் வெல்லப்பட்டும், யுதிஷ்டிரருடைய அவ்விதமான வாக்கியங்களாலே தன்மர்மஸ்தானம் பிளக்கப்பட்டும் துக்கத்தைநினைத்து மனம்நொந்தபொழுது, பீபத்ஸுவுக்குத் துக்கத்தினாலே இதற்கு முன்னுண்டாகாதகோபம் உண்டாயிற்று. ஆதலால், பூஜிக்கத்தக்க ஆசார்யகுமாரரான அஸ்வத்தாமாவைநோக்கி அற்பனைப்பார்த்துப் பேசுவதுபோல அர்ஜுனன் குரூரமாயும் அருவருக்கத்தக்கதாயும் அப்பிரியமாயும் தகாததாயுமிருக்கின்ற வார்த்தையைச் சொன்னான். அரசரே! வில்லாளிகளுள் மிகச்சிறந்தவரான அஸ்வத்தாமா பார்த்தனாலே எல்லா மர்மஸ்தானங்களையும் பிளக்கின்றவாக்கினால் இவ்விதமாகக் கடுஞ்சொற்சொல்லப்பட்டுக் கோபத்தால் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பார்த்தன்மீதும் கிருஷ்ணன்மீதும் மிக்ககோபங்கொண்டார். வீர்யமுடையவரும் ஆசார்யநந்தனருமான அந்த அஸ்வத்தாமாவோ முயற்சியுடையவராகி ரதத்திலிருந்துகொண்டு தீர்த்தத்தைத்தொட்டு ஆசமனீயம்செய்து கண்ணிற்குப் புலப்பட்டவர்களும்

புலப்படாதவர்களுமான பகைவர்களுடையகூட்டங்களை உத்தேசித்துத் தேவர்களாலும் எதிர்க்கமுடியாத ஆக்னேயாஸ்திரத்தை எடுத்தார். சத்ருவீரர்களைக் கொல்லுகின்றவரான அந்தத் துரோணபுத்திரர் கோபங்கொண்டு ஜ்வலிக்கின்ற ஓரம்பை (மந்திரத்தால்) அபிமந்திரணம் செய்து புகைதணிந்த நெருப்புப்போன்ற அந்த அம்பை நான்கு பக்கங் களிலும் பிரயோகம்செய்தார். பிறகு, அக்னிஜ்வாலையால் சூழப்பட்ட சரமாரியானது நெருங்கியதாக ஆகாயத்தில் தோன்றியது. அந்தச் சரமாரியானது பார்த்தனைநோக்கியே எதிர்த்துவந்தது. கொள்ளிக கட்டைகள் ஆகாயத்தினின்று விழுந்தன. திக்குக்களும் பிரகாசிக்க வில்லை. பயங்கரமான இருளானது விரைவாக அந்தச் சேனையை வந் தடைந்தது. ராக்ஷஸர்களும் பிசாசங்களும் அதிகமாக ஒன்றுகூடிச் சப்தித்தனர். காற்றும் உஷ்ணமாகவீசிற்று. சூரியன் சுடவில்லை. எல்லாத் திக்குக்களிலும் காக்கைகளும் பயங்கரமாகக்கத்தின. ஆகா யத்தில் இரத்தத்தைப் பொழிந்துகொண்டு மேகங்களும் கர்ஜித்தன. பக்ஷிகளும் மிருகங்களும் கோக்களும் சப்தித்தன. நல்லவிரதங்களை அனுஷ்டிக்கிறவர்களும் பரிசுத்தமான சித்தவிர்த்தியுள்ள யோகிகளும் அதிகமான சாந்தியை அடையவில்லை. மூவுலகங்களும் சுழல்கின்ற எல்லாப் பிராணிகளையுமுடையவையும் சுழலுகின்ற சூரியனோடுகூடிய வையும் எங்கும் மிக்க தாபமுள்ளவையும் ஜ்வரத்தை அடைந்தவை போன்றவையுமாயின. அவ்வாறே பூமியில் படுத்திருக்கின்ற ஸர்ப்பங் களும் அஸ்திரதேஜஸினாலே நன்றாகத் தபிக்கப்பட்டுக் கோரமான (அஸ்த்ர) தேஜஸைவெளியில்விடக்கருதிப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு மேலேகிளம்பின. பாரதரே! அஸ்திரதேஜஸினால் எரிக்கப்படுகின்ற ஜலாதாரங்களால் காய்ச்சப்படுகின்ற ஜலத்திலுள்ள பிராணிகளும் ஆறுதலை அடையவில்லை. திக்குக்களினின்றும் திக்கோணங்களினின் றும் ஆகாயத்தினின்றும் பூமியினின்றும் நாற்புறங்களினின்றும் பற் பலவிதமான சரமாரிகள், கருடன் காற்று இவற்றின் வேகம்போன்ற வேகமுள்ளவைகளாக வந்து விழுந்தன. துரோணபுத்திரருடைய வஜ்ர வேகம்போன்ற வேகத்துடன்கூடின அம்புகளாலே அடிக்கப்பட்டும் எரிக்கப்பட்டுமிருக்கின்றபகைவர்கள் தீயினால் கொளுத்தப்பட்ட மரங் கள்போல விழுந்தார்கள். கொளுத்தப்படுகின்ற பெரிய யானைகள் மேககர்ஜனம்போலப் பயங்கரமான சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு நான்குபக்கத்திலும் பூமியில்விழுந்தன. அரசரே! வனத்தில் காட் டுத்தீயினால் சூழப்பட்டயானை திக்குக்களில் பயந்தோடுதுவபோல மற்ற யானைகள் முதலில் பயந்துநடுங்கித் திக்குக்களில் ஓடின. ஐயா! பார

தரே! காட்டுத்தீயினால் கொளுத்தப்பட்ட மரங்களுடைய நுனிகள் போலக் குதிரைக்கூட்டங்களும் தேர்க்கூட்டங்களும் காணப்பட்டன. ஆங்காங்கு ஆயிரக்கணக்கான தேர்க்கூட்டங்கள் கீழேவிழுந்தன. பாரதரே! யுகாந்தத்தில் பிரளயகாலநெருப்பு எல்லாப் பிராணிகளையும் கொளுத்துவதுபோல அந்த அஸ்திரஜ்வாலையானது பயத்தால் மனங் கலங்கிய அந்தச் சேனையை யுத்தத்தில் கொளுத்தியது. மன்னரே! மகா யுத்தத்தில் (அஸ்திர தேஜஸினால்) எரிக்கப்படுகின்ற பாண்டவசேனையைக்கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் மனக்களிப்படைந்து ஸிம்மநாதங்களைச் செய்தார்கள். பாரதரே! பிறகு, ஸந்தோஷமடைந்தவர்களும் ஜயத்தால் விளங்குகின்றவர்களுமான உம்மைச் சேர்ந்தவர்கள் பற்பல அடையாளங்களுடன் கூடின ஆயிரக்கணக்கான தூர்யவாத்யங்களை விரைவாக முழக்கினார்கள். வேந்தரே! மகாயுத்தத்தில் இருளால் உலகம் மூடப்பட்டபொழுது, எல்லாச் சேனையும் பாண்டுபுத்திரனை ஸவ்யஸாசியும் கண்ணுக்குப் புலப்படவில்லை. அரசரே! கோபங்கொண்ட துரோணபுத்திரர் உண்டுபண்ணிய அஸ்திரம்போன்ற அஸ்திரத்தை நாங்கள் இதற்குமுன் பார்த்ததுமில்லை; கேட்டதுமில்லை. மகாராஜரே! அர்ஜுனனோ பிரம்மதேவராலே எல்லா அஸ்திரங்களையும் அழிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதான பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். பிறகு, ஒரு முகூர்த்தத்திற்குள் அந்த இருள் தணிந்தது; காற்றும் குளிர்ந்து வீசிற்று. திசைகளும் மாசற்று விளங்கின. அந்த யுத்தாங்கத்தில் சேனைமுழுதும், அஸ்திரதேஜஸினாலே நன்றாக எரிக்கப்பட்டு உருவம் கண்ணுக்குப் புலப்படாதபடி நாசம்பண்ணப்பட்டதை நாங்கள் ஆச்சரியமாகக் கண்டோம். பிறகு, வீரமுடையவர்களும் பெரிய வில்லைக் கையில்கொண்டவர்களுமான கிருஷ்ணார்ஜுனர் இருவரும் அவ்வஸ்திரபந்தத்தினின்று விடுபட்டார்கள். பிறகு, காண்டீவமென்னும் வில்லையுடைய அர்ஜுனனும் கேசவரும் காயப்படாதவர்களாகி ஆகாயத்தில் சூரியசந்திரர்கள்போலச் சேர்ந்து காணப்பட்டார்கள். அர்ஜுனன் கொடியோடும் கொடிமரத்தோடும் குதிரைகளோடும் கூடினவனாகவும் இருசுக்கட்டையையும் உத்தமமான ஆயுதங்களையுமுடையவனாகவும் ரதத்துடன் கூடியவனாகவும் முயற்சியுள்ளவனாகவும் உம்மைச் சேர்ந்தவர்களுக்குப் பயங்கரனாகவும் விளங்கினான். பிறகு, ஒருக்ஷணத்தில் மகிழ்ந்தவர்களான பாண்டவர்களுடைய ஸந்தோஷ ஆரவாரமானது சங்கத்வனிகளுடனும் பேரிகையொலியுடனும் உண்டாகியது. வேகமாக எதிர்த்துவருகின்றவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான கேசவரையும் அர்ஜுனனையுங்கண்டு, 'இவர்கள் கொல்லப்பட்டார்கள்' என்றே அந்த இரண்டு

சேனைகளுக்கும் எண்ணமுண்டாயிருந்தது. மேனியில் காயப்படாதவர்களான அவ்விருவரும் மிக்க ஸந்தோஷத்தை யடைந்தவர்களாகி உத்தமமான சங்கங்களை ஊதினார்கள். களிப்படைந்தவர்களான பார்த்தர்களைக் கண்டு உம்மைச்சேர்ந்தவர்கள் மனவருத்தமுற்றார்கள். பெரியோரே! (அஸ்திரபந்தத்தினின்று) விடுபட்ட மகாத்மாக்களான அவ்விருவரையுங்கண்டு துரோணபுத்திரர் மிக்கமனவருத்தமுற்று இதென்னவென்று ஒருமுகூர்த்தகாலம் கவலையுற்றார். ராஜேந்திரரே! கவலையும் துயரமும் மேலிட்ட அஸ்வத்தாமா சிந்தித்துத் தீர்க்கமாயும் உஷ்ணமாயும் பெருமூச்சுவிட்டுக்கொண்டு பின்பு மனோதைரியமிழந்தவரானார். நராதிபரே! பிறகு, துரோணபுத்திரர் வில்லை யெறிந்து விட்டு ரதத்தினின்றும் கீழேகுதித்து வேகத்தோடு, 'இவையெல்லாம் கெட்டவை; கெட்டவை; பொய்' என்றுசொல்லிவிட்டு யுத்தத்தினின்று ஓடிவிட்டார். பிறகு, பளபளப்பான மேகம்போன்ற காந்தியுடையவரும் வேதங்களுக்கெல்லாம் இருப்பிடமானவரும் கல்மஷமற்றவரும் வேதங்களைப் பிரித்தவரும் வித்தைகளுக்கிருப்பிடமுமான வியாஸரைக் கண்டார். துரோணபுத்திரர் எதிரில்நிற்கின்றவரும் குருவம்சத்தை உத்தாரணம்செய்தவருமான அந்த வியாஸரைப்பார்த்து மெலிந்தகுரலுடன் மிக்க தீனன்போல அபிவாதனம்செய்து, 'ஐயா! ஐயா! இது மாயையா? அல்லது அஸ்திரசக்தி பலிப்பதென்கிற நியமமில்லையா? அல்லது தெய்வமா? எவ்விதமாக இருக்கலாம்? என்னால் போடப்பட்ட இந்த அஸ்திரமானது எவ்வாறு பொய்யாகலாம்? என்னிடத்தில் என்ன தவறுதல் உண்டாயிற்று? கீழ்மேலானது ஏன்? கிருஷ்ணனும் அர்ஜுனனும் ஜீவித்திருத்தலால், உலகம் அவர்களால் ஜயிக்கப்பட்டுவிட்டதா? காலம் ஒருவராலும் எவ்விதத்தாலும் தாண்டமுடியாதது. அஸுரர்களாவது கந்தர்வர்களாவது பிசாசங்களாவது ராக்ஷஸர்களாவது ஸர்ப்பங்களாவது யக்ஷர்களாவது பக்ஷிகளாவது மனிதர்களாவது என்னால் பிரயோகிக்கப்பட்ட இந்த அஸ்திரத்தை எவ்விதத்தாலும் தடுப்பதற்குச் சக்தியுள்ளவர்களாகார். அப்படிப்பட்ட இந்த அஸ்திரமானது ஜ்வலித்துக்கொண்டு சேனையைமாத்திரங் கொன்றுவிட்டுத் தணிந்துவிட்டது. எல்லாரையும் நாசம்பண்ணக்கூடியதும் அத்யந்தம் உக்கிரமுமான அஸ்திரம் என்னால் விடப்பட்டது. மனிதத்தன்மையுடையவர்களான கேசவர் அர்ஜுனன் இருவரையும் ஏன் இந்த அஸ்திரம் எரிக்கவில்லை? பகவானே! என்னால் கேட்கப்பட்ட தேவரீர் இதனை உள்ளபடி சொல்லும். மகரிஷியே! இவையெல்லாவற்றையும் உள்ளபடி கேட்க விரும்புகிறேன்' என்று வினவ, வியாஸர் சொல்லலானார்.

"பெரிதும் ஆச்சரியத்தினாலே என்னை நீ கேட்பதுமான இவ்விஷயத்தை முழுதும் நான் உனக்குச் சொல்வேன். மனத்தை ஒரே யிடத்தில் நிலைநிறுத்திக் கேள். எவர் நாராயணரென்று பிரஸித்தி பெற்றவரோ, பூர்வபுருஷர்களுக்கும் பூர்வத்தில் உண்டானவரோ, ஆதிதேவரோ, ஜகந்நாதரோ, உலகத்தைப்படைத்தவரோ, ஸ்வயம்பிரபுவோ, எல்லா உலகத்துக்கும் தலைவரோ, ஆதி அந்தமில்லாதவரோ, பக்தர்களை ரக்ஷிக்கிறதென்கிற விரதத்தினின்று தவறாதவரோ, எவருடைய உண்மையான ஸ்வரூபத்தைச் சுருதிகளும் மகரிஷிகளும் வெளியிடுகிறார்களோ அந்த லோகநாதர் அந்தக் காரணங்களாலேயே எல்லாப் பிராணிகளாலும் மனத்தினாலும் வெல்லப்பட இயலாதவர். ஆதலால், இந்த ஜகந்நாதரை ஜயிக்கக்கருதுகிறவன் அஜ்ஞானாந்தகாரத்தால் மூடப்பட்டவனே. புருஷப்புலியே! இப்பொழுது, இந்த அர்ஜுனனும் அந்தக் கிருஷ்ணனைப்போன்றவனென்றே அறிவாயாக. நீ துக்கப்படாதே. பார்த்தன் அந்தப் பரமாத்மாவினுடைய சக்தி. ஆதலால், இந்தச் சோகத்தை விட்டுவிடு. அந்தப் பகவான், எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரர்; லோகங்களுக்கெல்லாம ஆதி; பரமாத்மா. அடக்கப்பட்ட இந்திரிய ஜ்ஞானத்தையுடையவர்; ஸர்வோத்தமரான அவர் தேவர்களுக்கும் உலகங்களுக்கும் ஹிதத்தைச்செய்யவேண்டுமென்று எண்ணங்கொண்டு ஆயிர அம்சங்கள்கூடின (தம்முடைய) திவ்யரூபத்தினின்று ஓரம்சமாகத் தோன்றினார். உலகத்தைப் படைத்தவரான ஸ்ரீமந் நாராயணர் ஏதோ கார்யார்த்தமாகத் தர்மருக்குப் புத்திரராகப் பிறந்தார். அந்த நாராயணர் இமயமலையை அடைந்து கைகளை உயரத்தூக்கிக்கொண்டு நெருப்புக்கும் ஆதித்யனுக்கும் ஸமானராகவும் மஹா தேஜஸ்வியாகவும் அறுபதுலக்ஷத்தறுபதினாயிரம்வருஷம் உக்கிரமாகத் தவம்புரிந்தார். அப்பொழுது, அந்தப் புண்டரீகாக்ஷர் வாயுபக்ஷணம் செய்துகொண்டு தம் தேகத்தை உலர்த்திவிட்டார். பிறகு, முன்செய்த தவத்தைக்காட்டிலும் இரண்டுமடங்கான ஒரு பெரிய தவத்தைச்செய்து தேஜஸினால் ஆகாசம் பூமி இவைகளின் மத்தியிலுள்ள இடைவெளியை நிரப்பினார். அப்பா! அப்படிப்பட்ட தவத்தினாலே அந்த நாராயணர் எப்பொழுது பிரம்மஸ்வரூபியானாரோ அப்பொழுது உலகங்களுக்கெல்லாம் காரணரும் உலகங்களுக்கெல்லாம் நாதரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும் எல்லாத் தேவர்களாலும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டவருமான விஸ்வேஸ்வரரைக் கண்டார். அணுக்களைக்காட்டிலும் சிறிய அணுவாகவிருக்கின்றவரும் பெரிய பூதங்களைக்காட்டிலும் மிகவும் பெரியவராயிருக்கின்றவரும் ருத்ரரும் பிரம்மாதிகளுக்கும் சிறந்த

வரும் பக்தர்களுடைய பாபத்தை யபஹரிக்கின்றவரும் மங்களங்களுக்குக் காரணமாகவிருக்கின்றவரும் ஜடைதரித்தவரும் அந்தர்யாமியாக விருந்துகொண்டு பிராணிகளுக்கு அறிவையுண்டுபண்ணுகின்றவரும் ஸ்தாவரஜங்கமங்களுக்கு முக்கியகாரணரும் ஒருவராலுந் தடுக்கமுடியாதவரும் ஒருவராலும் அவமதிக்கமுடியாதவரும் பார்க்கமுடியாதவரும் ஒருவராலும் அடையமுடியாதவரும் துஷ்டர்களிடத்தில் அடக்கமுடியாத கோபமுள்ளவரும் பெரிய வடிவமுள்ளவரும் எல்லாப் பிராணிகளுடைய சுபாசுபங்களான கர்மங்களுக்கும் சாக்ஷியாகவிருக்கின்றவரும் வில்லையும் இரண்டு அம்புப்பெட்டிகளையுமணிந்தவரும் பொற்கவசம்பூண்டவரும் முடிவில்லாத வீர்யமுடையவரும் பிநாகமென்னும் வில், வஜ்ரம், பிரகாசிக்கின்ற சூலம், கோடாலி, கதை, நீண்ட வாள் இவைகளையுடையவரும் மஞ்சள்நிறமுள்ள ஜடாமண்டலத்தையும் சந்திரனையும் முடியில் தாங்கியவரும் புலித்தோல்தரித்தவரும் பரிகத்தையும் தண்டத்தையும் கையில்கொண்டவரும் மங்களகரமான தோள்வளைகளையணிந்தவரும் ஸர்ப்பத்தை யஜ்ஞோபவீதமாக அணிந்தவரும் எல்லாப் பிரமதகணங்களாலும் பூதகணங்களாலும் விளங்குகின்றவரும் ஒன்றுசேர்ந்திருக்கின்ற தவங்களின் நல்ல புதையல்போன்றவரும் பேசுவதில் ஸமர்த்தர்களான (பிரம்மாதிகளாலே) இஷ்டமான வாக்குக்களாலே நன்றாக ஸ்தோத்திரம்செய்யப்பட்டவரும் நீர், திசை, ஆகாயம், பூமி, சந்திரன், சூரியன் இவற்றின் வடிவமாயிருப்பவரும் தீயும்காற்றும்போன்றவரும் கெட்டநடையுள்ள ஜனங்களால் பார்க்க இயலாத தேவநாதரும் பிரம்மத்வேஷிகளை நாசம்செய்கின்றவரும் அழிவற்ற சுகத்திற்குக் காரணமானவரும் நன்னடையுள்ளவர்களும் பாவம் க்ஷீணித்தவுடன் மனத்தினாலே சோகத்தைவிட்டவர்களுமான பிரம்மநிஷ்டர்களால் நேரில் தரிசிக்கப்படுகின்றவரும் தர்மஸ்வரூபியும் ஸ்தோத்திரம்செய்யத்தக்கவரும் விஸ்வரூபியுமானவரைத் தவத்தினால் அவரிடத்திலேயே அசஞ்சலமாக மனத்தைச்செலுத்தி அவரிடத்திலுண்டான பக்தியினாலே கண்டார். அப்படிப்பட்ட ஈசானரைக்கண்டு வாஸுதேவர் வாக்கு மனம் புத்தி தேகம் இவைகளால் ஸந்தோஷமடைந்து பூரித்தார். நாராயணர், ஜபமாலைகளையணிந்தவரும் தேஜஸுக்களுக்கெல்லாம் உத்தமமான நிதியாகவிருக்கின்றவரும் உலகங்களுடைய சிருஷ்டிக்குக் காரணருமான ருத்திரரைக்கண்டு நமஸ்கரித்தார். பக்தர்களுக்கு வரத்தைக்கொடுக்கின்றவரும் பெரிய அழகான அங்கங்களையுடைய பார்வதியோடுகூடி விளையாடுகின்றவரும் பிரபுவும்மஹாபுருஷரும் பூதங்களுடைய கூட்டங்களாலும் பிரமதகணங்களாலும்

சூழப்பட்டவரும் பிறப்பில்லாதவரும் ஜகதீசரும் அவ்யக்தஸ்வரூபரும் காரணஸ்வரூபரும் உத்தமபதத்தினின்று எப்பொழுதும் நழுவாதவரும் அந்தகனென்ற அஸுரனை ஸம்ஹரித்தவரும் முக்கண்ணருமான ருத்திரரைப் புண்டரீகாக்ஷர் பக்தியுடன் நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்யலானார். 'தேவரே! ஸர்வோத்தமரே! ஆதிதேவரே! முற்காலத்தில் உம்முடைய புராண ஸிருஷ்டியான இந்தப் பூமியை அடைந்து எவர்கள் பாதுகாத்தார்களோ அப்படிப்பட்ட லோகரக்ஷகர்களும் பிராணிகளை ஸ்ருஷ்டித்தவர்களுமான தக்ஷன்முதலானவர்கள் உம்மிடத்தினின்றே உண்டானார்கள். தேவர்களையும் அஸுரர்களையும் நாகர்களையும் ராக்ஷஸர்களையும் பிசாசர்களையும் மனிதர்களையும் கருடர்களையும் கந்தர்வர்களையும் யக்ஷர்களையும் பற்பலவிதமான பூதஸங்கங்களையும் அவ்வாறே இன்னும் மற்ற எல்லா வஸ்துக்களையும் தேவரீரிடத்தினின்றே உண்டானவையாக நாங்கள் அறிகிறோம். இந்திரன், யமன், வருணன், குபேரன், பிதிருக்கள், த்வஷ்டா, ஸோமன் இவர்களைத் தேவதையாக உத்தேசித்து அனுஷ்டிக்கப்படுகிற கர்மாவானது உம்பொருட்டே. ரூபம், ஒளி, சப்தம், ஆகாயம், காற்று, ஸ்பர்சம், ரஸம், ஜலம், கந்தம், பூமி, காலம், வேதங்கள், யாகங்கள், பிராம்மணர்கள், ஸ்தாவரம், ஜங்கமம் ஆகிய அனைத்தும் உம்மிடத்தினின்றே உண்டாயிருக்கின்றன. ஸமுத்திரஜலத்தினின்று நீர்த்திவலைகள் எவ்வாறு வெளிப்பட்டு வேற்றுமையடைந்து பிரளயகாலத்தில் எவ்வாறு மறுபடியும் அந்த ஸமுத்திரஜலத்தோடேயே ஒன்றுசேர்கின்றனவோ அவ்வாறே கற்றறிந்தவர்கள் உம்மிடத்தினின்றே ப்ரபஞ்சத்தினுடைய உத்பத்தியையும் லயத்தையும் அறிகிறார்கள். இவ்வுலகமனைத்தும் உம்மிடத்திலேயே தோன்றி உம்மிடத்திலேயே ஸாயுஜ்யமடைகிறது. அதில் அத்புதமானவையும் அழிவற்றவையும் பிராணிகளுடைய ஹ்ருதயகமலத்தில் வஸிக்கிற ஸ்வபாவமுள்ளவையுமான இரண்டு பறவைகள் வஸிக்கின்றன. கீழாகப் பரவிச்செல்லுகின்ற கிளைகளோடுகூடிய ஸம்ஸாரரூபமான அரசமரமானது ரக்ஷகமான [1] ஏழு தோல்களுள்ளது. சொற்களும் பொருள்களும் தேவதைகளும் லோகபாலர்களும் முற்காலத்தில் இவ்வுலகங்கள் அனைத்தையுந்தரித்து உம்முடைய ஸாயுஜ்யம்பெற்றவர்களும் அவர்களைக்காட்டிலும் மேன்மையான வஸ்துவும் உம்மிடத்தினின்றே உண்டாயின. அவர்களைக்காட்டிலும் நீரே பரம்பொருள். லோகபிதாமஹரே! ஈசரே! நடந்தது நடக்கின்றது இனி நடப்பதுமுதலிய எல்லாவஸ்துக்களும் நீரே. தேவரீர் அவ

---

[1] வஸை மாம்ஸம் ருதிரம் மேதஸ் மஜ்ஜை அஸ்தி சுக்லம்.

மதிக்கமுடியாத பரம்பொருள். இந்த உம்மிடத்தினின்றே எல்லா உலகங்களும் உண்டாகின்றன. பக்தனாகவந்தடைகின்ற என்னிடத்தில் நீர் பக்ஷமுள்ளவராயிருக்கவேண்டும். தேவநாதரே! தேவரீரை ஆத்மாவுக்கு ஆத்மாவாக நான் அறியவில்லை. இவ்வாறு அறிகின்ற மனிதன் நிர்மலமான பிரம்மஸ்வரூபத்தை அடைகிறான். உம்முடைய நன்குமதித்தலையடையவிரும்பி உம்மைநாடி உமக்குத் தக்கபடி உம்மைத் துதித்தேன். என்னால் ஸ்தோத்திரம் பண்ணப்பட்டவரான தேவரீர் அடைவதற்கு மிகவும் அரியவையும் நான் விரும்புகின்றவைகளுமான வரங்களைக்கொடுக்கவேண்டும். கபடம் புரிதல் கூடாது' என்று வேண்டினார். பினாகமென்கிற வில்லைத்தரித்தவரும் மனத்தினாலே நினைக்கமுடியாத உருவமுள்ளவரும் [1] ரிஷிகளால் துதிக்கப்பட்டவருமான தேவதேவர் ஸ்தோத்திரம் செய்யப்பட்டு, தேவதைகளுள் தலைவராயிருக்கின்ற அந்த விஷ்ணுவின்பொருட்டு வரங்களைக்கொடுத்தார். பகவான், 'நாராயணரே! என் அனுக்கிரஹத்தினால், மனிதர்கள் தேவர்கள் கந்தர்வர்கள் இவர்களைக்காட்டிலும் மனத்தினால் சிந்திக்கமுடியாதபலம் ஸ்வரூபம் இவைகளோடுகூடியவராக நீர் ஆகப்போகிறீர். உம்மைத் தேவர்களும் அஸுரர்களும் ஸர்ப்பங்களும் பிசாசங்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் ஸுபர்ணர்களும் அவ்வாறே நாகர்களும் இன்னும் பற்பலஜாதிகளில் தோன்றின எல்லாப்பிராணிகளும் ஸஹிக்கமாட்டார்கள். உம்மை யுத்தங்களில் தேவனாகவிருந்தாலும் ஒருவனும் ஜயிக்கமாட்டான். என் அனுக்ரஹத்தினாலே ஒருவனாவது உம்மை ஆயுதத்தினாலும் வஜ்ரத்தினாலும் நெருப்பினாலும் நீரினாலும் ஈரமானதாலும் உலர்ந்ததாலும் ஜங்கமத்தாலும் ஸ்தாவரத்தாலும் கையினாலும் காலாலும் கட்டையினாலும் மண்ணாங்கட்டியினாலும் எவ்விதத்தாலும் ஹிம்ஸிக்கமாட்டான். மேலும், யுத்தத்தை நீர் அடைவீராயின் என்னைக்காட்டிலும் மேற்பட்டவராவீர்' என்று கூறினார். பிறகு, சூலபாணியான ருத்திரருடைய அனுக்ரஹத்தினாலே இவைமுதலான வரங்களைப்பெற்று அந்தத்தேவரே மாயையினால் உலகத்தை மயக்கிக்கொண்டு ஸஞ்சரிக்கிறார். அவருடைய தவத்தினாலே நரனென்று பிரஸித்திபெற்ற மகரிஷி தோன்றினார். இந்தத்தேவரோடு அர்ஜுனனை ஸமானனென்று எப்பொழுதும் நீ அறிவாயாக. பிரம்மா விஷ்ணு ருத்திரர் இவர்களுள் விஷ்ணுஸ்வரூபிகளான இந்த நரநாராயணரிஷிகளிருவரும் மிகுந்த

[1] 'ரிஷிஸம்ஸ்துதஃ' என்பது மூலம்; 'ரிஷியான நாராயணரால் துதிக்கப்பட்டவர்' என்பது பழையவுரை.

தவமுள்ளவர்கள்; உலகவியாபாரத்தை நடத்துவதற்கும் அஸுரர்களை நாசம்செய்வதற்கும் தர்மங்களை நிலைநிறுத்துவதற்கும் ஒவ்வொரு யுகத்திலும் அவதரிக்கின்றனர். வித்வானே! மகாபுத்திமானே! அவ்வாறே செய்கையினாலும் பெருந்தவத்தினாலும் தேஜஸினாலும் வாக்குக்களாலும் நீ முழுதும் ஒத்தவனாக அந்த ருத்திரரிடமிருந்தே தோன்றியிருக்கிறாய். நாராயணர்போலவே கற்றறிந்தவனான நீ உலகம் முழுமையும் ஈஸ்வரமயமென்றேயறிந்து அவருக்குப் பிரியத்தைச் செய்யும் எண்ணத்தோடு நியமங்களாலே தேகத்தை இளைக்கச்செய்தாய். சத்துருக்களுடைய கர்வத்தைப் போக்குகின்றவனே!' நிர்மலமான ஹவிஸைச்செய்து மகாபுருஷ ஸ்வரூபரான ஈஸ்வரரை ஜபஹோமாதிகளாலும் காணிக்கைகளாலும் நீ பூஜித்துவந்தாய். வித்வானே! அவ்வாறு, என்னால் பூஜிக்கப்பட்ட பூர்வதேவர் மிக்க ஸந்தோஷமடைந்து உன்மனத்திலிருக்கும் அபீஷ்டங்களான வரங்களனைத்தையும் கொடுத்தார். அவ்விருவர்களுக்கும் உனக்கும் பிறப்பு, செய்கை, தவம், யோகம் இவைகள் பரிபூர்ணமாயிருக்கின்றன. அவ்விருவராலும் ருத்திரர் லிங்கத்தில் அர்ச்சிக்கப்பட்டார். தேவதைகளுக்கெல்லாந்தேவரும் நினைத்தற்கரிய உருவமுள்ளவரும் ஒருவராலும் ஜயிக்கமுடியாதவரும் விஷ்ணுவுக்கு உத்பத்திஸ்தானமாயிருக்கின்றவருமான ருத்திரதேவர் உன்னால் யுகந்தோறும் விக்ரஹத்தில் பூஜிக்கப்பட்டிருக்கிறார். எவன் பிரபுவான ருத்திரரை ஸர்வரூபியென்றெண்ணி லிங்கத்தில் பூஜிக்கிறானோ அவனிடத்தில் ஆத்மயோகங்களும் சாஸ்வதமான சாஸ்திரயோகங்களும் நிலைபெற்றிருக்கின்றன. இவ்வாறு தேவர்களும் ஸித்தர்களும் பரமரிஷிகளும் பூஜித்துக்கொண்டு உலகத்தில் மேலானவரும் சாஸ்வதருமான ஸ்தாணுவைக்குறித்தே வேண்டுகிறார்கள். அப்படிப்பட்ட நீயோ ருத்திரபக்தன். கேசவரோ ருத்திரரிடத்திலிருந்து அவதரித்தவர். சாஸ்வதரான ஸ்ரீவாஸுதேவரே யஜ்ஞங்களால் பூஜிக்கத்தக்கவர். எவன் எல்லாப்பிராணிகளுக்கும் உத்பத்திஸ்தானமென்றே எண்ணி ப்ரபுவினுடைய லிங்கத்தை அர்ச்சிக்கிறானோ அந்தப்பக்தன்மீது அதிகமான பிரீதியை விருஷபத்வஜர் பாராட்டுகிறார்' என்று கூறினர்.

மகாரதரான துரோணபுத்திரர் அவருடைய அந்த வார்த்தையைக் கேட்டு ருத்திரரை நமஸ்காரம்செய்தார். கேசவரையும் நன்குமதித்தார். ஜிதேந்திரியரான அந்த அஸ்வத்தாமா ரோமாஞ்சங்கொண்டு வியாஸரை வந்தனம்செய்து சேனையைப்பார்த்துப் போரினின்று ஓய்ச்செய்தார்.

அரசரே! பிறகு, துரோணர் யுத்தத்தில் கொல்லப்பட்டவுடன், பாண்ட வர்களும் தீனர்களான கௌரவர்களும் யுத்தத்தை நிறுத்தினார்கள். மன்னரே! பிராம்மணரும் வேதங்களின் கரைகண்டவருமான துரோணர் ஐந்துநாள் யுத்தஞ்செய்து (பகைவர்) படையைக் கொன்று பிரம்ம லோகம் சென்றார்" என்று கூறினான்.

---

## இருநூற்றுமூன்றாவது அத்யாயம்.

## நாராயணாஸ்த்ரமோக்ஷபர்வம் (தொடர்ச்சி.)

(பிறருக்குத்தெரியாமல் தனக்கு அநுகூலமாக நின்று போர்புரியும் சூலபாணியைக்கண்டு அர்ஜுனன் அவர் யாரென்று வியாஸரைக் கேட்டதும், வியாசர் அவர் பசுபதியென்று சொல்லி அவர் மகிமைகளைக் கூறியதும்.)

திருதராஷ்டிரன், ஸஞ்சய! அந்த அதிரதரான துரோணர் கொல்லப்பட்டபிறகு, என்னைச் சேர்ந்தவர்களும் பாண்டவர்களும் அங்கே என்னசெய்தார்கள்?" என்று கேட்க, ஸஞ்சயன் சொல்ல லானான்.

"பாரதரிற் சிறந்தவரே! அந்த அதிரதரான துரோணர் பார்ஷதனால் கொல்லப்பட்டுக் கௌரவர்களும் அபஜயமடையவே குந்திபுத்திரனான தனஞ்சயன் தனக்கு ஜயத்தை உண்டுபண்ணக்கூடிய மிக்க பெரிதான ஓர் ஆச்சரியத்தைக்கண்டு தற்செயலாக அங்குவந்திருக்கின்றவரும் நீருண்ட மேகம்போலப் பிரகாசிக்கின்றவரும் தோஷமற்றவரும் வேதங்களை வகுத்தவருமான வியாஸரைப்பார்த்து வினவலானான். மகரிஷியே! யான் யுத்தத்தில் மாசற்ற அம்புக்கூட்டங்களால் பகைவர்களைக் கொன்றேன். முன்னிலையில் சென்றுகொண்டிருக்கின்றவரும் அக்னிபோலப் பிரகாசிக்கின்றவருமான ஒரு புருஷரை நான் காண்கிறேன். மஹாமுனிவரே! ஜ்வலிக்கின்ற சூலத்தைக் கையிலேந்தி எந்தத்திக்கைநோக்கிச் செல்கிறாரோ அந்தத்திசையில் என்னுடைய சத்துருக்கள் பிளக்கப்படுகிறார்கள். அவரால் நாசஞ்செய்யப்பட்ட எல்லா வீரர்களையும், என்னால் கொல்லப்பட்டவர்களாக ஜனங்கள் எண்ணுகிறார்கள். அந்தப் புருஷரால் நாசஞ்செய்யப்பட்ட சேனைகளை யான் பின்தொடர்ந்து செல்லுகிறேன். பகவானே! அதனை எனக்குச்சொல்ல வேண்டும். அந்தப்புருஷோத்தமர் யார்? அவர் சூலத்தைக் கையிற் கொண்டவரும் தேஜஸினாலே சூரியனுக்கு ஒப்பானவருமாக என்

ஞல் காணப்பட்டார்; கால்களால் பூமியைத் தொடவில்லை; சூலத்தையும் விடவில்லை. அவருடைய தேஜஸினாலே சூலத்தினின்றும் ஆயிரம் சூலங்கள் விழுகின்றன' என்று வினவ, வியாஸர் 'பார்த்த! பிரம்மாக்களுக்கு முதன்மையானவரும் தேஜஸ்வரூபியும் [1]புருஷரும் பிரபுவும் புவனஸ்வரூபியும் பூர்ப்புவஸ்வரூபியும் தேவரும் தேஜஸுகளுள் உத்தமரும் லோகநாதரும் ஈசானரும் வரங்கொடுப்பவருமான சங்கரரை நீ கண்டாய். தேவரும் வரத்தைக் கொடுக்கின்றவரும் புவனேஸ்வரரும் மஹாதேவரும் மகாத்மாவும் ஈசானரும் சடைமுடியுடையவரும் விபுவும் முக்கண்ணரும் பெரிய புஜங்களையுடையவரும் ஸம்ஹார கிருத்தியத்தால் உலகத்தை அலறும்படி செய்கின்றவரும் சிகையுள்ளவரும் மரவுரியைத் தரித்தவரும் மகாதேவரும் பக்தர்களுடைய பாபங்களை அபஹரிக்கின்றவரும் முக்காலத்திலும் ஸ்திரமாக இருக்கின்றவரும் வரதரும் லோகநாதரும் உலகத்தில் பிரதானரும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவரும் உலகத்தாருடைய அன்புக்கிடமானவரும் அதீஸ்வரரும் உலகத்துக்குக் காரணமானவரும் ஜகத்துக்கு வித்துப்போன்றவரும் ஜயசீலரும் ஜகத்துக்குக் கதியாயிருக்கின்றவரும் உலகமனைத்தையும் தம்ஸ்வரூபமாகக் கொண்டவரும் உலகத்தைப் படைத்தவரும் உலகத்தைச் சரீரமாகக்கொண்டவரும் கீர்த்தியுடையவரும் விஸ்வேஸ்வரரும் உலகத்தை நடத்துபவரும் கர்மாக்களுக்கு ஈஸ்வரரும் பிரபுவும் மங்களத்தையுண்டுபண்ணுகிறவரும் தாமாகவே தோன்றியவரும் பூதநாதரும் சென்றது, இனிவருவது, நடக்கிறது இம்மூன்றிற்கும் உத்பத்திஸ்தானமாயிருக்கின்றவரும் யோகஸ்வரூபரும் யோகேஸ்வரரும் ஸர்வஸ்வரூபரும் ஸர்வலோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரும் ஸர்வஸ்ரேஷ்டரும் ஜகச்சிரேஷ்டரும் மிகப் பெரிய வடிவமுடையவரும் உத்தமமான ஸ்தானத்திலிருக்கின்றவரும் மூவுலகங்களையும் சிருஷ்டிக்கின்றவரும் நிகரற்றவரும் மூவுலகங்களுக்கும் ஆதாரபூதரும் சுத்தாத்மஸ்வரூபியும் உலகங்களுக்கு உத்பத்திஸ்தானமாயிருக்கின்றவரும் துஷ்டர்களுக்குப் பயங்கரரும் சந்திரசேகரரும் சாஸ்வதரும் பூமியைத்தரிக்கின்றவரும் தேவரும் எல்லா வாகீஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரும் சத்துருக்களால் எவ்விதத்தாலும் ஜயிக்கமுடியாதவரும் ஜகந்நாதரும் பிறப்பு இறப்பு மூப்புக்களைத் தாண்டியவரும் ஞானஸ்வரூபியும் ஞானத்தினால் அடையத்தக்கவரும் ஞானத்தினால் மேன்மைபெற்றவரும் எவ்விதத்தாலும் ஒருவராலும் அறியமுடியாதவரும் பக்தர்களுக்கு அருளோடுகூடிய வரன்களைக் கொடுக்கின்றவரு

[1] பிராணிகளுடைய சரீரத்தில் அல்லது ஹிருதயகமலத்தில் வஸிக்கிறவர்.

மான பகவானை நீ சரணமடைவாயாக. அந்தப் பிரபுவினுடைய கிங்கரர்கள் திவ்யரூபமுள்ளவர்கள்; பற்பலவித உருவங்களையுடையவர்கள்; குள்ளர்கள்; சடையுள்ளவர்கள்; மொட்டைத்தலையர்கள்; குட்டைக்கழுத்துள்ளவர்கள்; பெரிய வயிறுடையவர்கள்; பருத்த தேகமுடையவர்கள்; அதிக உத்ஸாகமுள்ளவர்கள். அவ்வாறே சிலர் பெரிய காதையுடையவர்கள். பார்த்த! அவருடைய பரிஜனங்கள் விகாரமுள்ள முகங்களோடும் கால்களோடும் விகாரமான வேஷங்களோடும் கூடியவர்கள். அப்பா! இப்படிப்பட்டவர்களால் பூஜிக்கப்படுகின்றவரும் மகாதேவரும் மகேஶ்வரரும் தேஜஸ்வியுமான சங்கரர் கருணையினால் உன்னெதிரில் செல்லுகிறார். பார்த்த! எப்பொழுதும் கோரமாயிருக்கின்றதும் மயிர்புளகித்தலையுண்டுபண்ணுகிறதுமான அவ்விதமான யுத்தத்தில் பெரிய வில்லைக் கையில்தாங்கியவர்களும் அடிக்கும் திறமையுள்ளவர்களுமான துரோணபுத்திரர் கர்ணன், கிருபர் இவர்களாலே ரக்ஷிக்கப்பட்ட அந்தக் கௌரவஸேனையை மகா வில்லாளியும் அனேக ரூபங்களைத் தரித்தவரும் ஈஶ்வரர்களுக்கெல்லாம் ஈஶ்வரருமான மகாதேவரைத்தவிர வேறு எந்த மனிதன் மனத்தினாலாவது அவமதிப்பதற்குத் திறமையுடையவனாவான்? அந்த மகேஶ்வரர் எதிரில் நிற்குங்கால் ஒருவனாவது எதிரில்நிற்கவும் சக்தியுள்ளவனாகான். மூவுலகங்களினும் அவருக்குச் சமமானபிராணி இல்லை. யுத்தத்தில் கோபங்கொண்டிருக்கிற அவருடைய வாடையினாலேகூடச் சத்துருக்கள் பிரஜ்ஞையிழந்தவர்களும் பெரும்பான்மையாக மரித்தவர்களும் நடுக்கமுற்றவர்களும் கீழேவிழுகின்றவர்களும் ஆகிறார்கள். அவருக்கு வந்தனம்செய்துகொண்டு தேவர்கள் ஸ்வர்க்கத்தில் நிலைபெற்றிருக்கிறார்கள். உலகத்தில் இன்னும் எந்தமனிதர்களுண்டோ இன்னும் எந்தமனிதர்கள் ஸ்வர்க்கத்தை ஜயித்தவர்களோ எந்தப் பக்தர்கள் வரத்தைக்கொடுக்கின்றவரும் தேவரும் மங்களஸ்வரூபியும் உமாபதியும் ஸர்வேசருமான ருத்ரரை வேறிடத்தில் மனத்தைச்செலுத்தாமல் ஏகபாவனையோடு எப்பொழுதும் உபாஸிக்கின்றார்களோ அவர்கள் யுத்தங்களில் ஜயத்தைப்பெற்று இப்பூமியை ஆளுகிறார்கள். அம்மனிதர்கள் இம்மையில் ஸுகத்தை யடைந்து (மறுமையில்) உத்தமமானகதியை அடைகிறார்கள். கௌந்தேய! எப்பொழுதும் சாந்தஸ்வரூபியும் அழிப்பதால் உலகத்தை அலறும்படிசெய்கின்றவரும் நீலகண்டரும் நல்ல யௌவனமுள்ளவரும் நல்ல காந்தியுள்ளவரும் ஜடாமண்டலதாரியும் பயங்கரரும் [1] மஞ்சள்

[1] 'ஹர்யக்ஷவரதாய' என்பது மூலம். 'ஹர்யக்ஷன் = குபேரன்; வரதர் = (அவனுக்கு) வரத்தைக்கொடுப்பவர்' என்பது பழையவுரை.

நிறமான கண்களையுடையவரும் வரதரும் [1] யமனுக்குப் பிரியமான வரும் அப்பிரகாசமான கேசமுள்ளவரும் [2] நல்ல ஒழுக்கத்திலிருக்கின்றவரும் அடுத்தவர்களுக்கு மங்களத்தைச் செய்கின்றவரும் அனைவராலும் விரும்பத்தக்கவரும் ஸிம்மத்தினுடைய கண்போன்ற கண்களையுடையவரும் ஸ்தாணுவும் பிராணிகளுடைய ஹ்ருதயகமலத்தில் வஸிக்கின்றவருமான ஈச்வரரின்பொருட்டு நமஸ்காரம்செய். [3] பிராணிகளை அழிக்கின்றவருக்கு வந்தனம். ஸேனாபதியான ஈச்வரருக்கு வந்தனம். (ஹ்ருதய) மத்தியிலிருப்பவருக்கு வந்தனம். பச்சை நிறமான கேசங்களையுடையவரும் மயிரில்லாத சிரஸையுடையவரும் இளைத்தமேனியுடையவரும் ஆபத்தினின்று பக்தர்களைக் கரையேற்றுகின்றவரும் பாஸ்கரஸ்வரூபியும் நல்ல தீர்த்தஸ்வரூபியும் தேவதைகளுக்கெல்லாம் தேவரும் வேகஸ்வரூபியும் அனேகரூபங்களையுடையவரும் ஸர்வஸ்வரூபியும், ஸர்வப்பிரியரும் வஸ்திரத்தில் பிரியமுள்ளவரும் தலைப்பாகையையுடையவரும் அழகிய முகங்களையுடையவரும் ஆயிரங் கண்களையுடையவரும் பக்தர்களுடைய அபீஷ்டங்களைப் பெருக்குகின்றவரும் கைலையங்கிரியில் வசிக்கின்றவரும் மிக்க சாந்தஸ்வரூபியும் பதியாயிருக்கின்றவரும் மரப்பட்டைகளை வஸ்திரமாகவுடையவரும் ஸ்வர்ணமயமான கைகளையுடையவரும் உக்கிரஸ்வரூபியும் திக்குக்களுக்கெல்லாம் பதியாயிருக்கின்றவரும் மேகங்களுக்கெல்லாம் அதிதேவதையாக விளங்குகின்றவருமான பூதபதியின்பொருட்டு வந்தனம். விருக்ஷங்களுக்கும் கோக்களுக்கும் பதியாயிருக்கின்றவருக்கு வந்தனம். விருக்ஷங்களால் சூழப்பட்ட சரீரத்தையுடையவரும் ஸேனாபதியாக இருக்கின்றவரும் மத்தியமரும் ஸ்ருவம் என்கிற யஜ்ஞபாத்திரத்தைக் கையில்கொண்டவரும் வில்லையுடையவரும் பிருகுவுக்குப் பிரியரும் அனேகரூபங்களையுடையவரும் லோகநாதரும் முஞ்சப்புல்லை வஸ்திரமாக உடுத்தவரும் ஆயிரந் தலைகளையுடையவரும் ஆயிரங் கால்களையுடையவரும் ஆயிரம் கைகளையுடையவரும் ஆயிரம் முகங்களையுடையவருமான தேவருக்கு வந்தனம். கௌந்தேய! வரதரும் உலகங்களுக்கெல்லாம் ஈச்வரரும் உமாபதியும் பற்பலஸ்வரூபத்துடன் கூடின

---

[1] 'யாம்யாய' என்பது மூலம்; 'யாமத்தைச்செய்பவர்; அதாவது காலமாயிருப்பவர்' என்பது பழையவுரை.

[2] 'ஸத்வ்ருத்தேசங்கராய' என்று ஒன்றாகக்கொண்டு, நல்லொழுக்கமுள்ளவர்களுக்கு ஸுகத்தைச்செய்பவர்' என்பது பழையவுரை.

[3] 'வ்ருக்ஷாய' என்பது மூலம்; 'விருக்ஷரூபியாயிருப்பவர்' என்றும் கொள்ளலாம்.

கண்களையுடையவரும் தக்ஷனுடைய யாகத்தை நாசம் செய்தவரும் பிரஜைகளுக்கெல்லாம் பதியாயிருக்கின்றவரும் கவலையற்றவரும் பூதங்களுக்கெல்லாம் பதியும் அழிவற்றவரும் ஜடாதரரும் சிறந்தமயிர்ச்சுழிகளுள்ளவரும் சிரேஷ்டமான நாபிமண்டலத்தையுடையவரும் விருஷபத்தை வாகனமாகக்கொண்டவரும் விருஷபத்தினுடைய பெருமிதம் போன்ற பெருமிதமுடையவரும் சுகிருதங்களுக்கெல்லாம் நாதரும் சுகிருதத்தைப் பிரதானமாகக்கொண்டவரும் புண்யசாலிகளுள் உத்தமரும் விருஷபத்தைக் கொடியாகக்கொண்டவரும் விருஷபம்போல உதாரமூாயிருப்பவரும் விருஷபஸ்வரூபியும் விருஷபம்போன்ற கண்களையுடையவரும் சிரேஷ்டமான ஆயுதங்களையும் அம்புகளையும் தரித்தவரும் புண்யஸ்வரூபியாயிருப்பவரும் சுகிருதங்களுக்கு ஈச்வரரும் பெரிதானவயிறுள்ளவரும் பெரிதான மேனியையுடையவரும் புலித்தோலை ஆடையாக அணிந்தவருமான ஈச்வரரைச் சரணமடைவாயாக. லோகநாதரும் வரதரும் புண்ணியஸ்வரூபியும் வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்டவரும் பிராம்மணர்களிடத்தில் அன்புள்ளவரும் திரிசூலத்தைக் கையிலேந்தியவரும் பக்தர்களுக்கு வரத்தைக்கொடுக்கின்றவரும் கத்தியையும் கேடகத்தையுந் தரித்தவரும் பிரபுவும் பினாகமென்னும்வில்லைக் கையிலேந்தியவரும் கத்தியைக் காத்தினுடையவரும் உலகங்களுக்கு ரக்ஷகரும் உலகங்களுக்கு ஈச்வரரும் எல்லோருக்கும் சரண்யரும் மரவுரியைத்தரித்தவருமான தேவரீரைச் சரணம் அடைகிறேன். தேவதைகளுக்கெல்லாம் நாதராயிருப்பவருக்கு வந்தனம். பிரமதகணங்களுக்கெல்லாம் பதியாயிருப்பவருக்கு வந்தனம். நல்லவஸ்திரம் தரித்தவரும் நல்லவிரதமுள்ளவரும் நல்லவில்லாளிகளையுடையவரும் தனுஸைத்தரித்தவரும் தேவரும் பிரியமான தனுஸையுடையவரும் வில்லினால் எய்யப்படும் அம்பாயிருப்பவரும் வில்லிற்பூட்டிய நாணாயிருப்பவரும் வில்லாயிருக்கின்றவரும் வில்லுக்கு ஆசார்யராயிருக்கின்றவருமான உமக்கு வந்தனம். உக்கிரமான ஆயுதத்தையுடையவரும் தேவரும் தேவர்களுக்கெல்லாம் உத்தமருமானவருக்கு வந்தனம். அனேகவிதரூபத்தைத் தரித்தவருக்கு வந்தனம். அனேக விற்களையுடையவருக்கு வந்தனம். ஸ்தாணுவுக்கு வந்தனம். எப்பொழுதும் தபஸ்வியாயிருப்பவருக்கு வந்தனம். திரிபுரத்தை அழித்தவருக்கு வந்தனம். பகனென்னும் ஸூர்யனுடைய கண்ணைக் கவர்ந்தவருக்கு வந்தனம். வனஸ்பதிகளென்னும் பூவாமற்காய்க்கும் மரங்களுக்குப்பதியாயிருப்பவருக்கும் மனிதர்களுக்கெல்லாம் பதியாயிருப்பவருக்கும் வந்தனம். மாத்ருதேவதைகளுக்குப் பதியாயிருப்பவருக்கு வந்தனம்.

கணங்களுக்கெல்லாம் பதியாயிருப்பவருக்கு வந்தனம். எப்பொழுதும் பசுக்களுக்கெல்லாம் பதியாயிருப்பவருக்கு வந்தனம். யஜ்ஞங்களுக்கெல்லாம் பதியாயிருப்பவருக்கு வந்தனம். எப்பொழுதும் ஜனங்களுக்கும் தேவதைகளுக்கும் பதியாயிருப்பவருக்கு வந்தனம். பன்னிரண்டு சூரியமூர்த்திகளுள் ஒருவனான பூஷாவினுடைய பல்லையுடைத்தவரும் முக்கண்ணரும் பக்தர்கள் விரும்பினவற்றைக் கொடுக்கின்றவரும் நீலகண்டரும் மஞ்சள்வர்ணமுடையவரும் ஸ்வர்ணமயமான மயிருள்ளவருமான அந்த ஈஶ்வரருக்கு வந்தனம். புத்திமானான மகாதேவருடைய திவ்யமான செய்கைகளை என் அறிவுக்குத்தக்கபடியும் என் சாஸ்திரஞானத்திற்குத்தக்கபடியும் உனக்கு உரைப்பேன். அந்த மகானுபாவர் கோபிப்பாரேயாயின் பாதாளத்தை அடைந்திருந்தாலும் தேவர்களோ அஸுரர்களோ கந்தர்வர்களோ ராக்ஷஸர்களோ ஒருவரும் உலகத்தில் ஸுகத்தையடையமாட்டார்கள். முற்காலத்தில் சாஸ்திரத்தில் சொல்லியபடி செய்யப்பட்ட தக்ஷனுடையயாகத்தைக் கோபங்கொண்டவரான இந்த மகேஶ்வரர் அப்பொழுது தயையற்றவராகி நாசம்செய்தார். வில்லினால் பாணங்களைப் பிரயோகம்செய்து சப்தத்தோடுகூட ஸிம்மநாதத்தையும் செய்தார். யஜ்ஞதேவதையானது பயந்து விரைவாகஓட மஹேஶ்வரரும் கோபம்கொள்ளவே, அப்பொழுது அந்தத்தேவர்களனைவரும் ஸுகத்தை அடையவில்லை. ஆறுதலை எவ்வாறு அடைவார்கள்? பார்த்த! நாண்கயிற்றின் ஒலியினாலே உலகமனைத்தும் நன்றாகக் குழப்பமடைந்தன; அவருக்கு வசமுமாயின. தேவாஸுரர்கள் கீழேவிழுந்தார்கள். ஜலங்களெல்லாம் குழம்பின. பூமி நடுக்கமுற்றது. பர்வதங்களும் சிதறின. திக்குயானைகளும் மோகம் அடைந்தன. உலகம் காரிருளால் மூடப்பட்டுப் பிரகாசமற்றிருந்தது. சூரியனோடு எல்லாஜ்யோதிர்க்கணங்களுடைய ஒளிகளும் அழிந்தன. ரிஷிகள் எல்லாப்பிராணிகளுக்கும் தங்களுக்கும் ஸுகத்தை விரும்புகின்றவர்களாகிப் பயத்தால் நடுநடுங்கிக் கலக்கமுற்றார்கள். அவ்வாறே ரிஷிகள் எல்லாப்பிராணிகளுக்கும் தமக்கும் ஸுகத்தை விரும்பிச் சாந்தியைச்செய்தார்கள். சங்கரர் அட்டஹாஸத்தோடு சூரியனை எதிர்த்து ஓடிப் புரோடாசத்தைப்பக்ஷிக்கின்ற அவனுடையபற்களை நாசம்செய்தார். பிறகு, தேவர்கள் பயத்தால் பீடிக்கப்பட்டவர்களாகி நடுக்கத்தோடு வெளியில் புறப்பட்டார்கள். அந்த மகேஶ்வரர் புகையுடனும் நெருப்புப்பொறிகளுடனும்கூடியவையும மின்னல்களுக்கும மேகங்களுக்கும் ஒப்பாக ஜ்வலிக்கின்றவையுமான கூர்மையுள்ள அம்புகளைத் தேவர்களை லக்ஷ்யம்வைத்து மறுபடியும் ஸந்தானம்செய்

தார். அதைக்கண்டு எல்லாத்தேவதைகளும் மகேஸ்வரரை நமஸ்காரம் செய்து அவருக்கு ஸ்ரேஷ்டமான யஜ்ஞபாகத்தைக் கல்பித்தார்கள். அரசே! தேவர்கள் பயத்தால் சரணமடைந்தார்கள். கோபந்தணிந்த அவ ரால் அப்பொழுது அந்த யாகம் சேர்த்துவைக்கப்பட்டது. தேவர்கள் தோற்று இன்னமும் அவரைப்பற்றிப் பயமுடையவர்களாயிருக்கின் றார்கள். ஆகாயத்தில் வீர்யமுடையவர்களான அஸுரர்களுக்கு இரு ம்புமயமாகவும் வெள்ளிமயமாகவும் தங்கமயமாகவுமுள்ள மிகப்பெரிய மூன்றுபட்டணங்கள் இருந்தன. அவற்றுள், ஸுவர்ணமயமான நகர மானது கமலாக்ஷனுடையது; வெள்ளிமயமானது தாரகாக்ஷனுடை யது; இரும்புமயமான மூன்றாவது நகரமானது வித்யுன்மாலியினுடை யது. அந்த மூன்றுபட்டணங்களையும் இந்திரன் ஸர்வாயுதங்களாலும் பிளப்பதற்குச் சக்தியற்றவனானான். பிறகு, பீடிக்கப்பட்டவர்களான எல்லாத்தேவர்களும் ருத்ரரைச் சரணமடைந்தார்கள். இந்திரனோடு எல்லாத்தேவர்களும் மகாத்மாவான ருத்திரரைப்பார்த்து, 'மகேஸ் வரரே! மூன்றுபட்டணங்களிலும் வஸிக்கின்ற கோரர்களான இந்த அஸுரர்கள் பிரம்மாவினாலே கொடுக்கப்பட்ட வரங்களையுடையவர் களாயிருக்கின்றார்கள். இவர்கள் வரத்தினால் கர்வமடைந்திருக்கின்ற மையால் உலகத்தை அதிகமாகத் துன்புறுத்துகின்றார்கள். தேவதேவே சுரரே! மகாதேவரே! உம்மைத்தவிர இந்த அஸுரர்களை வேறொருவன் எவ்விதத்தாலும் கொல்வதற்குத் திறமையுள்ளவனல்லன். நீர் இந்தத் தேவசத்துருக்களை ஸம்ஹாரம்செய்யும். ருத்திரரே! புவனேஸ்வரரே! இந்த அஸுரர்களை நாசம்செய்வீராகில் எல்லாக்கர்மாக்களிலும் பசுக் கள் ருத்ரஸம்பந்தமுள்ளவைகளாகும்' என்று பிரார்த்தித்தார்கள். அவ் வாறுசொல்லப்பட்டவரும் பக்தர்களுடைய பாபங்களை அபகரிக்கின்ற வரும் மங்களத்தை உண்டுபண்ணுகிறவரும் மூன்றுகண்களையுடைய வரும் தேவர்களுக்கெல்லாந்தேவரும் பினாகத்தை வில்லாகக்கொண்ட வரும் சூரியன் சந்திரன் அக்னி இவர்களைக் கண்ணாகக்கொண்டவ ரும் சத்துருக்களை ஹிம்ஸிக்கின்றவரும் பிரதாபத்துடன்கூடியவரும் மகேஸ்வரரும் மூவுலகங்களுக்கும் ஈஸ்வரரும் ஈஸ்வரர்களுக்கெல்லாம் ஈஸ்வரராக விளங்குகின்றவருமான அந்தஹரர் தேவர்களுக்கு ஹிதத் தைச்செய்யவேண்டுமென்கிற எண்ணத்தினாலே, 'அவ்வாறே ஆகட் டும்' என்று சொல்லிவிட்டு, கந்தமாதனம் விந்தியம் என்னும் இரண்டு பர்வதங்களையும் இரண்டுபக்கங்களிலுமுள்ள த்வஜங்களாகவும் ஸமுத்திரங்களாலும் காடுகளாலும் அடர்ந்தபூமியை ரதமாகவும் ஸர்ப்பராஜாவான ஆதிசேஷனை அச்சாகவும் சந்திரசூரியர்களைச் சக்

காங்களாகவும் ஏலாபத்ரன் புஷ்பதந்தனென்கிற இரண்டு ஸர்ப்பங்களையும் கடைமுளைகளாகவும் மலயபர்வதத்தை நுகத்தடியாகவும் தக்ஷகனை நுகத்தடிகட்டும் கயிறாகவும் [1] பிராணிகளைப் பூட்டாம் கயிறுகளும் அவற்றின் அங்கங்களுமாகவும் நான்குவேதங்களையும் நான்கு குதிரைகளாகவும் உபவேதங்களைக் கடிவாளங்களாகவும் காயத்ரி ஸாவித்ரி இரண்டுதேவதைகளையும் கடிவாளக்கயிறுகளாகவும் ஓங்காரத்தைக் குறடாவாகவும் பிரம்மாவை ஸாரதியாகவும் மந்தர பர்வதத்தை வில்லாகவும் வாஸுகியை நாண்கயிறாகவும் விஷ்ணுவை உத்தமமான பாணமாகவும் அவ்வாறே அக்னியைப் பாணத்தின் நுனியிலுள்ள முள்ளாகவும் செய்துகொண்டும், பாணங்களின் இருபக்கத்திலுமுள்ள இரண்டு சிறகுகளிலும் வாயுவையும் அதனுடையகணுவில் சூரியபுத்திரனை யமனையும் ஸான்னித்யம் பண்ணும்படி செய்துகொண்டும், மின்னலை நுனிக்கூராகச்செய்துகொண்டும், மேருவை த்வஜமாக அமைத்துக்கொண்டும், ஸர்வதேவமயமான திவ்யரதத்தின்மீதேறி த்ரிபுரத்தை நாசஞ்செய்வதன்பொருட்டுப் பகைவர்களை ஸம்ஹரிக்கின்றவர்களுள் உத்தமரும் முக்காலத்திலும் அசஞ்சலமாயிருக்கின்றவரும் மங்களஸ்வரூபியும் அஸுரர்களுக்கு நாசத்தை யுண்டுபண்ணுகின்றவரும் ஐஸ்வர்யமுள்ளவரும் ஒப்பற்றவிக்ரமமுள்ளவரும் பிரபுவுமான பரமேஸ்வரர் தேவர்களாலும் ரிஷிகளாலும் தபஸ்விகளாலும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டு ஒப்பற்றதும் திவ்யமாயுள்ளதுமான மாஹேஸ்வரமென்னும் வ்யூகத்தை வகுத்துக்கொண்டு அசைவற்றவராகி ஆயிரம்வருஷங்கள் எதிர்த்துநின்றார். எப்பொழுது மூன்றுபட்டணங்களும் ஆகாயத்தில் ஒன்றுசேர்ந்திருந்தனவோ அப்பொழுது அந்தப் பட்டணங்களை அந்தப்பரமேஸ்வரர் மூன்றுகணுக்களுள்ளதும் மூன்றுமுட்களுள்ளதுமான அம்பினால் பிளந்தார். த்ரிபுரவாஸிகளான அஸுரர்கள், காலாக்னியோடும் விஷ்ணுவோடும் ஸோமனோடுங்கூடிய அந்தப் பாணத்தைக் கண்ணால்பார்ப்பதற்கும் சக்தியற்றவர்களானார்கள். த்ரிபுரங்களை எரித்தவரான அந்த ஈஸ்வரரைப் பார்ப்பதற்குப் பார்வதிதேவி சென்றாள். தனஞ்சய! தேவியினுடைய ஸ்வயம்வரகாலத்தில் நடந்த வேறொரு விருத்தாந்தத்தைக் கேள். ஐந்து சிகைகளுள்ளவனும் தானாகவேவந்து மடியில் உட்கார்ந்தவனுமான பாலனைப்பார்த்து உமையானவள் அவனுடைய வரலாற்றை அறிய எண்ணங்கொண்டு "இந்தப்பாலன் யார்?" என்று தேவர்களைக் கேட்டாள். (பார்வதியின் மடி

[1] 'ஸத்வானி' என்பது மூலம். 'ஸர்ப்பம், மலைமுதலியவை' என்பது பழையவுரை.

யில் உட்கார்ந்ததற்காக) அஸூயைகொண்டவனும் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தால் தம்மை அடிக்கவந்தவனுமான அந்த இந்திரனுடைய வஜ்ராயுதத்துடன்கூடினகையை மகிமையுடையவரும் ஸர்வலோகேஸ்வரரும் ஸர்வவ்யாபியும் பிரபுவுமான ஸ்ரீ பரமேஸ்வரர் சிரித்துக் கொண்டு விரைவாக ஸ்தம்பிக்கச்செய்தார். பிறகு, ஸ்தம்பிக்கும்படி செய்யப்பட்ட புஜத்தையுடையவனான இந்திரன் தேவகணங்களால் சூழப்பட்டு அவர்களோடு பிரபுவும் அழிவற்றவருமான பிரம்மதேவரிடம் விரைவாகச்சென்றான். இந்திராதிகளான தேவர்களனைவரும் அப்பொழுது பிரம்மதேவரைத் தலையால்வணங்கிக் கைகளைக் குவித்துக்கொண்டு பின்வருமாறு கூறினர். 'பிரம்மதேவரே! பாலவடிவந் தரித்துப் பார்வதியினுடைய மடியை அடைந்திருக்கின்ற அற்புதமான ஒருபுருஷனைக் கண்டோம். அந்தத் திவ்யபுருஷன் எங்களால் அறியப்படவில்லை. எந்தப் பாலனாலே இந்திரனோடுகூடின நாங்கள் யுத்தஞ்செய்யாமலே விளையாட்டாக ஜயிக்கப்பட்டோமோ அப்படிப்பட்ட புருஷனைப்பற்றி நாங்கள் உங்களைக் கேட்க விரும்புகிறோம்' என்றார்கள். பிரம்மவித்துக்களுள் உத்தமரும் பகவானும் மகிமைசாலியுமான பிரம்மதேவர் இந்திராதிகளான தேவஸ்ரேஷ்டர்களுடைய அந்த வார்த்தையைக்கேட்டு அவர்களைப் பார்த்துக் குழந்தையை அளவற்ற தேஜஸுள்ள சம்புவாக எண்ணிக் கூறலானார். 'ஷாட்குண்ய பரிபூர்ணரான அந்தப் பரமசிவன் ஜங்கமஸ்தாவரங்களான உலகத்துக்கு நாதர். அந்த மகேஸ்வரரைக்காட்டிலும் சிரேஷ்டமான வேறு வஸ்து யாதொன்றுமில்லை. உங்களால் அளவற்ற ஒளியுள்ள எந்தப் புருஷர் பார்வதியோடு பார்க்கப்பட்டாரோ அவர் ருத்திரர். பார்வதிநிமித்தமாகப் பாலவடிவத்தை அவர் தாங்கினார். அப்படிப்பட்ட நீங்கள் என்னுடன் சேர்ந்து அவரையே சரணமடையுங்கள். மஹிமைபொருந்தியவரான அவரே தேவர்; எல்லா உலகங்களுக்கும் ஈஸ்வரர்; பிரபு' என்று சொன்னார். அந்தப் பிரம்மதேவரோடு கூடினவர்களான எல்லாத் தேவர்களும் பாலசூரியனுக்கொப்பான காந்தியுள்ள அந்தப்பாலரை அந்தப் புவனேஸ்வரரென்று அறியவில்லை. பிறகு, பிதாமஹரான பிரம்மதேவர் பரமசிவன் அருகில்வந்து, 'இவரே ஸ்ரேஷ்டர்' என்று அறிந்து அவரை வணங்கினார். பிரம்மா, 'நீர் யஜ்ஞம். நீர் இவ்வுலகத்திற்கு ரக்ஷகர். நீரே லயஸ்தானம். நீர் உத்பத்திக்குக்காரணம். நீர் மகாதேவர். நீர் ஜ்யோதிஸ்; உத்தமமானபதம். ஸ்தாவரஜங்கமவடிவமான இவ்வுலகமுழுவதும் உம்மாலே வியாபிக்கப்பட்டிருக்கின்றது. பகவானே! சென்றதற்கும் வருவதற்கும் நாதரே! லோகநாதரே! ஜகந்நாதரே! உம்

முடைய குரோதத்தால் பீடிக்கப்பட்ட இந்திரனுக்கு நீர் அனுக்கிரகம் செய்யும் என்று பிரார்த்தித்தார். மகாவிஷ்ணுவினுடைய நாபிகமலத்தில் தோன்றியவரான பிரம்மதேவருடைய வார்த்தையைக் கேட்டுப் பிரீதியுடைய மகேஸ்வரர் அருள்புரிவதில் நோக்கமுற்றவராகிப் பிறகு அட்டஹாஸம்செய்தார். பிறகு, அந்தத் தேவர்கள் உமையையும் உருத்திரரையும் ஸ்தோத்திரத்தினால் மனந்தெளியச்செய்தார்கள். உடனே இந்திரனுடைய கையானது முன்போலாகியது. ஆறுகுணங்களால் நிறைந்தவரும் விருஷபத்தைக் கொடியாகக்கொண்டவரும் தேவஸ்ரேஷ்டரும் தக்ஷனுடைய யாகத்தை நாசம்செய்தவருமான ஈஸ்வரர் பத்னியுடன் கூடியவராக அந்தத் தேவர்களுடைய விஷயத்தில் அருளுள்ளவரானார். அவரே ருத்ரர். அவரே சிவன். அவரே அக்னி. எல்லாம அவரே. அவர் எல்லாவற்றையும் அறிந்தவர். அவரே இந்திரன். அவரே வாயு. அவர் அஸ்வினிதேவர்கள். அவரே மின்னல்கள். அவரே உலகம் உண்டாவதற்குக் காரணம். அவர் பர்ஜன்யம். அவரே சாஸ்வதரான மகாதேவர். அவர் சந்திரன். அவர் ஈசானர். அவர் சூரியன். அவர் வருணன். அவர் காலன். அவர் அந்தகன். அவர் மிருத்யு. அவர் யமன். அவரே இரவுபகல்கள். அவரே மாதங்கள்; பக்ஷங்கள்; ருதுக்கள்; இரண்டு ஸந்தியாகாலங்கள்; ஸம்வத்ஸரம். அவரே உலகத்தைப் போஷிக்கின்றவர். அவரே உலகத்தை உண்டுபண்ணுகிறவர். அவரே உலகத்தை வடிவமாகக்கொண்டவர். அவரே எல்லாக் காரியங்களையும் செய்கின்றவர். சரீரமில்லாதவரான அந்தப் பகவான் எல்லாத் தேவர்களுடைய சரீரத்தையும தரிக்கிறார். எல்லாத் தேவர்களாலும் அந்தத் தேவர் ஒருவிதமாகவும் பலவிதமாகவும் நூறுவிதமாகவும் ஆயிரவிதமாகவும் மறுபடியும லக்ஷவிதமாகவும் ஸ்தோத்திரம்பண்ணப்பட்டிருக்கிறார். வேதங்களை அறிந்தவர்களான ப்ராம்மணர்கள் அந்தத் தேவருக்கு இரண்டு சரீரங்கள் உண்டென்று அறிகிறார்கள். ஒன்று கோரஸ்வரூபம்; மற்றொன்று மங்களகரமானது. அவ்விரண்டு சரீரங்களும் பின்னும் பலவாறாக இருக்கின்றன. அந்த அக்னி, விஷ்ணு, அந்தப் பாஸ்கரன் இவர்கள் ராக்ஷஸஸ்வரூபியான பகவானுடைய கோரசரீரம். ஜலம் தேஜஸ் சந்திரன் இவைகளனைத்தும் அவருடைய ஸௌம்யமான சரீரம். அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனும் கூடின வேதங்களிலும் புராணங்களிலும் அத்யாத்ம சாஸ்திரங்களிலும் உத்தமமான ரகசியமாயிருப்பது தேவரான மகேஸ்வரரே. இப்படிப்பட்ட மகாதேவர் அதிகப் பெருமை தங்கியவர்; ஆறுகுணங்களால் நிறைந்தவர்; பிறப்பில்லாதவர். பாண்டுநந்தன! ஆயிரம வர்ஷகாலம் இடை

